# மகாத்மா காந்தி

## நூல்கள்

### ஏழாம் தொகுப்பு



முதல் பதிப்பு: 15, ஏப்ரல், 1961
இரண்டாம் பதிப்பு: 28, ஜனவரி, 1966

[ இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ள மகாத்மாவின் கட்டுரைகள் முதலியன நவஜீவன் டிரஸ்டின் அனுமதியின் பேரில் பிரசுரிக்கப்படுகின்றன. ]



விலை ரூ. 7-50

மாணிக்கம் பிரஸ், அமைந்தகரை, சென்னை - 29.

# மகாத்மா காந்தி நூல்கள்

# 7

இந்திய சமூக சீர்திருத்தத்தின் முக்கியத்தைக் குறித்தும், தீண்டாமை என்ற அநீதி அடியோடு ஒழிந்தாக வேண்டியதன் அவசியத்தைப்பற்றியும், குழந்தை மணங்கள், பால்ய விதவைகளின் துன்பம், பெண்களின் முன்னேற்றம், குடி தொலைய வேண்டியதன் அவசியம், குதிரைப் பந்தயம், விபசார ஒழிப்பு ஆகியவற்றைக் குறித்தும் மகாத்மா காந்தி எழுதிய ஏராளமான கட்டுரைகள், பிரசங்கங்களின் தொகுப்பு இந்நூல்.


*வெளியிடுவோர் :*

**காந்தி நூல் வெளியீட்டுக் கழகம்**

[*தமிழ் நாடு காந்தி நினைவு நிதி ஆதரவில்*]

சர்க்கார் எஸ்டேட், மவுண்ட் ரோடு,

சென்னை-2.

# பதிப்புரை

காந்தி அடிகளின் எழுத்துக்களில், இந்நூல் சமூக சீர்திருத்தத்தைப் பற்றியதாகும்.

சுதந்திரம் என்றால் என்ன? ராஜீய சுதந்திரம் மாத்திரம் சுதந்திரமாகுமா? வெள்ளைக்கார அரசாங்கத்தை மாற்றி அமைத்த மாத்திரத்திலேயே, நம் மக்கள் அனைவரும் சுதந்திர வாழ்க்கை பெற்றவர்களாகி விடுவார்களா? இவற்றைப் பற்றி காந்தி அடிகள் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்தார்கள்.

பசியிலிருந்தும், பிணியிலிருந்தும், பயத்திலிருந்தும் என்று மக்கள் விடுதலை பெறுகிறார்களோ அன்றுதான் சுதந்திரம் பெற்றவர்கள் ஆவார்கள். இவை அகன்று ஒவ்வொரு மனிதனும் தன் இயல்பிற்கு ஏற்றவாறு சந்தர்ப்பம் அடைய வாய்ப்பு இருக்கவேண்டும்.

இத்தகைய சமூகத்தை அமைக்க வொட்டாமல் செய்தது, அந்நிய ஆதிக்கம். எனவே, அதை ஒழிக்க வேண்டியதாயிற்று. ராஜீய சுதந்திரம், மற்ற சுதந்திரங்களை அடைவதற்கு முதல் படி. எனவே, அதை மாத்திரம் பெற்று, அத்துடன் நின்று விட்டால் நாம் முழு சுதந்திரமும் அடைந்தவர்களாகமாட்டோம். அதற்கு அடுத்தபடியாக நாம் நல்வாழ்வு நடத்துவதற்கு விரோதமாக இருக்கும் வறுமையை அகற்றவேண்டும். போதுமான அளவு உண்ண உணவும், ஒவ்வொருவருக்கும் வேலையும், மரியாதையான உடையும், இருக்க இருக்கையும், நம் குழந்தைகள் பயிலக் கல்வி வசதிகளும் அனைவருக்கும் ஏற்பட வேண்டும். இவற்றை ஏற்படுத்தக்கூடிய பொருளாதார நிலைமையை நாம் நிர்மாணிக்க வேண்டும். இது இரண்டாவது படி.

ஆனால், பொருளாதார உயர்வு ஏற்பட்டால் மாத்திரம் போதாது. மனிதன் தனியாக வாழ்வதில்லை. சமூகத்தின் ஒரு பாகமாக வளருகிறான். மற்றவர்கள் அவனை நடத்தும் போக்கு அவனைப் பாதிக்கிறது. மக்களுடைய மதிப்பும் அவமானமும் மனிதர்களிடையே இன்ப துன்பத்தை உண்டாக்கி, அவர்களுடைய வளர்ச்சியைப் பாதிக்கின்றன. எனவே, சமூக சமத்துவம் ஒவ்வொரு குழந்தையின் உண்மையான வளர்ச்சிக்கும்

அடிப்படையாக இருக்கிறது. சாதியின் பெயரிலும், தீண்டாமையின் பெயரிலும் எவ்வளவோ கொடுமைகள் சென்ற ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகக் கோடிக்கணக்கான மக்களுக்கு இழைக்கப்பட்டிருக்கின்றன. இதுவே இந்தியாவின் சாபமாக இருந்து வந்திருக்கிறது. இந்தக் கொடுமையைத் தவிர்த்து இந்திய சமூகத்தைப் புனிதப்படுத்துவதே காந்தி அடிகளின் முக்கியமான பணிகளில் ஒன்ருக இருந்தது.

இந்நாட்டில் தாழ்த்தப்பட்டவர்கள் இரண்டு சமூகத்தார். ஒன்று ஹரிஜனங்கள், இரண்டாவது பெண் குலத்தார். எந்த நாட்டில் பெண்கள் மதிக்கப்படுகிருர்களோ, அந்த நாட்டில்தான் மக்கள் மகிழ்ச்சியுடன் இருப்பார்கள் என்று நம் சாஸ்திரங்கள் கூறுகின்றன. எனவே, அவர்கள் விடுதலைக்காகவும் அவர் பாடுபட்டு வந்தார்.

இந்தத் தொகுதியில் சமூக சீர்திருத்தத்தின் பல அம்சங்களைப் பற்றியும் காந்தி அடிகள் சொன்ன வாக்குகள் தொகுக்கப் பட்டிருக்கின்றன. இதற்கு முன் வந்த தொகுதிகளை அன்புடன் வரவேற்ற தமிழ் மக்கள், இதையும் அன்புடன் ஏற்று அருள்வார்களாக.

சென்னை, — தி. சு, அவிஞசிலிங்கம்.
*10, ஏப்ரல், 1961.*

# பொருளடக்கம்

## முதல் பாகம்

பக்கம்

### பகுதி ஒன்று

#### சமூக சேவை



### பகுதி இரண்டு

#### தீண்டாமை ஒழிப்பு



### பகுதி மூன்று

#### தீண்டாமையும் சுயராஜ்யமும்



### பகுதி நான்கு

#### ஹரிஜன்

பக்கம்

## பகுதி ஐந்து

### தீண்டாமைக்கு மதத்தில் ஆதாரமில்லை



## பகுதி ஆறு

### தீண்டாமை, சாதி, வர்ணாச்சிரமம்

பக்கம்

## பகுதி ஏழு

### பலாத்காரம் பயன் தராது



## பகுதி எட்டு

### சமபந்தி போஜனமும் கலப்பு மணமும்

பக்கம்

## பகுதி ஒன்பது

### ஆலயப் பிரவேசம்



## பகுதி பத்து

### வைக்கம் சத்தியாக்கிரகம்

## பகுதி பதினொன்று



## பகுதி பன்னிரண்டு

### சமூகக் கொடுமைகள்

## இரண்டாம் பாகம்

## பெண்களும் சமூக அநீதியும்

### பகுதி ஒன்று

### பெண்கள் முன்னேற்றம்



### பகுதி இரண்டு

### குழந்தைக் கல்யாணமும் சீதனமும்

## பகுதி ஆறு

### பெண்களின் நிலைமை



## மூன்றும் பாகம்

### குடி, போதை வஸ்துக்கள், சூதாட்டத் தீமைகள்

# படங்களின் விளக்கம்

# தீண்டாமை சாபக்கேடு

மகாத்மா காந்தி
எழுதியது

தமிழாக்கம்:
ரா. வேங்கடராஜுலு
ஜெயமணி சுப்பிரமணியம்

பகுதி ஒன்று

# சமூக சேவை

## 1

## சேவைக்கான தகுதிகள் யாவை ?

[மக்கள் சமுதாயத்தின் எல்லாத் துறைகளிலும் சீர் திருத்தங்களைச் செய்ய அருந்தொண்டாற்றிய மகாத்மா காந்தி, சமூக சேவை செய்ய முற்படுகிறவர்களுக்கு வேண்டிய தகுதிகள் யாவை என்பதை 1916-ஆம் ஆண்டி லேயே தெளிவுற எடுத்துக் கூறியிருக்கிறார். 1916 பிப்ரவரி 10–ஆம் தேதி சென்னையில் நடந்த சமூக சேவைச் சங்கத்தின் ஆண்டு விழாவில் மகாத்மா, 'சமூக சேவை' என்பது பற்றிப் பேசினர். அவ்விழாக் கூட்டத்திற்கு ஸ்ரீமதி ஒயிட்ஹெட் தலைமை வகித்தார்- அப்பொழுது மகாத்மா செய்த பிரசங்கமே கீழே கொடுக்கப்பட்டிருக் கிறது.]

''இன்று மாலை, சமூக சேவை என்பது குறித்து உங் களிடம் பேசும்படி கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறேன். நான் இன்று மாலை சரியாகப் பேசவில்லை என்று நீங்கள் கருதுவீர் களாயின், அநேக அலுவல்களை யோசனையில்லாமல் நான் ஏற்றுக்கொண்டுவிட்டதுதான் அதற்குக் காரணம் என்று நீங்கள் கொள்ளவேண்டும். உங்களுக்குச் சொல்ல வேண்டியது என்ன என்பதைச் சிந்திப்பதற்குக் கொஞ்சம் அவகாசமாவது வேண்டும் என்பது என் ஆவல். ஆனல், அந்த அவகாசமும் எனக்குக் கிடைக்கவில்லை. என்ருலும், இக்கூட்டத்திற்குத் தலைமை வகிக்கும் சீமாட்டி கூறியதைப் போன்று, நமக்கு வேண்டியதெல்லாம் வேலையேயன்றிப் பேச்சு அல்ல. இன்று மாலை நீங்கள் என் பிரசங்கத்தைக் கேட்ட பிறகு, அதனல் நீங்கள் தெரிந்துகொண்டது சொற்பமே என்று எண்ண லாம். ஒரு வேளை இதனல் நீங்கள் ஏதாவது நஷ்டமடைந் தாலும், அந்த நஷ்டம் மிகக் குறைவானதே என்பதை நான் அறிவேன்.

''நண்பர்களே ! உலகத்தின் மற்றெல்லாச் சேவைகளுக்கும் வேண்டியிருப்பதைப் போன்றே சமூக சேவைக்கும் தவிர்க்க

முடியாததான ஒரு நிபந்தனை உண்டு. அச்சேவையைச் செய்வதற்கு வேண்டிய தகுதி வேண்டும் என்பதுதான் அது. சமூக சேவையோ, மற்றெந்த சேவையோ செய்ய விரும்புகிறவர்களுக்கு, அதற்கு வேண்டிய சரியான தகுதி தேவை. நாம் சமூக சேவை செய்ய வேண்டும் என்று ஆசைப்படுகிறோம். இது போன்ற சேவைகளிலும் மற்றவைகளிலும் ஈடுபட்டும் வருகிறோம். ஆனால், இச்சேவைகளில் ஈடுபட்டிருப்பவர்களாகிய நாம், இச்சேவைகளைச் செய்வதற்கு வேண்டியதான தகுதியைப் பெற்றிருக்கிறோமா? இக்கேள்வியை இன்று மாலை நமக்கு நாமே கேட்டுக்கொள்ளுவோம். ஏனெனில், சமூக சேவையில் நாம் காரியங்களை ஒழுங்குபடுத்த முடியும் என்றால், அதே போலக் காரியங்களைக் கெடுத்துவிடவும் கூடும். ஒரு சேவை எவ்வளவோ நல்லெண்ணத்தின் பேரில் செய்யப்படுவதாக இருக்கலாம். என்றாலும், அதைச் செய்கிறவர்கள் அச்சேவையைச் செய்வதற்கு வேண்டிய தகுதியைப் பெற்றில்லாது போனால், அவர்கள் சேவை செய்தவர்களாவதற்குப் பதிலாகத் தீமையைச் செய்தவர்களே ஆவார்கள். நான் கூறும் இதை நீங்களும் ஒப்புக் கொள்ளுவீர்கள். சேவை செய்வோருக்கு வேண்டிய தகுதிகள் தான் யாவை?

"இன்று காலை கிறிஸ்தவ இளைஞர் சங்கத்தின் மண்டபத்தில் மாணவர்களுக்கு நான் விவரித்த அதே தகுதிகளையே, அநேகமாக நான் உங்களுக்கு இப்பொழுது திரும்பவும் ஏன் சொல்ல வேண்டியிருக்கிறது என்பதைச் சிந்தியுங்கள். ஏனெனில், அந்தத் தகுதிகள் எல்லாவற்றிற்குமே பொருத்தமானவை. எந்தவிதமான வேலைக்கும் அவை அவசியமானவை. அதிலும், நம் அருமை நாட்டில் இன்று இருந்து வரும் நமது தேசீய வாழ்க்கைக்கான சேவைக்கு அவை இன்னும் அதிக அவசியமானவை. ஒரு பக்கத்தில் சத்தியமும், மற்றோர் பக்கத்தில் பயமின்மையும் அவசியமாகின்றன என்று நான் கருதுகிறேன். தீபத்தைக் கையில் நாம் ஏந்திச் சென்றாலன்றி நமக்கு முன்னால் இருக்கும் படிக்கட்டை நாம் காண முடியாது. அஞ்சாமை என்ற குணத்தை நம்முடன் நாம் கொண்டு சென்றாலன்றி, எந்த உபதேசத்தை நாம் பிறருக்கு அளிக்க விரும்புகிறோமோ, அதை அளித்துவிட நம்மால் ஆகாது, இந்த அச்சமின்மை நமக்கு இருந்தாலன்றி, மகத்தான முடிவுச் சோதனை வரும்போது அதற்கு நாம் தகுதியற்றவர்களாகவே இருப்போம் என்று நான் நிச்சயமாக உணருகிறேன். ஆகவே, இச்சேவையில் இப்பொழுதே ஈடுபட்டவர்களாக நீங்கள் இருந்தாலும், இச்சேவையில் இனி ஈடுபடுவது என்று நீங்கள் இருந்தாலும், உங்களுக்கு இவ்விரு தகுதிகளும் இருக்கின்றனவா என்று உங்களை நீங்களே கேட்டுக்கொள்ளும்படி உங்களுக்குச் சொல்லுகிறேன். இன்னுமொரு விஷயத்தையும் உங்களுக்கு ஞாபகப்படுத்துகிறேன். இந்தக் குணங்களை, நமக்கே கேட்டை விளைவிக்கும் வகையிலும், நம்முடன் தொடர்பு கொள்ளுகிறவர்களுக்குக் கேட்டை உண்

டாக்கிவிடும் வகையிலும் நம்முள் பயிற்சி செய்துகொண்டுவிட முடியும். சத்தியத்தை இவ்விதத்திலும் கையாள முடியும் என்று கூறுவது ஆபத்தான கூற்றே ஆகும். ஆனால், அவ்விதம் கூறுவதில் சத்தியம் என்பது சத்தியமாக வரவில்லை, சத்தியம் என்ற பெயரில் மாத்திரமே வருகிறது என்பதையும் நீங்கள் கவனிக்க வேண்டும் என்று விரும்புகிறேன். இந்திரஜித்திற்கும், அவனுக்கு எதிரியான லட்சுமணனுக்கும் ஒரே வகையான ஆற்றல்களே இருந்தன என்பதை இணையற்ற நூலான ராமாயணத்தில் காண்கிறோம். ஆனால், தருமத்தை அடிப்படையாகக் கொண்ட கொள்கை வழியில் சென்றது லட்சுமணனின் வாழ்க்கை. இந்திரஜித்தின் கொள்கைகளோ, அதருமத்தை அடிப்படையாகக் கொண்டவை. ஆகையால், இந்திரஜித்துக்கு இருந்த ஆற்றல்கள் ஒன்றுக்கும் உதவாதவையாகவே இருந்தன என்பதையும் காண்கிறோம். ஆனால், லட்சுமணனின் ஆற்றல்களோ, அவர் எந்தக் கட்சியின் சார்பாகப் போராடினாரோ அந்தக் கட்சிக்குப் பெரிய உதவியாக இருந்ததோடு, அவர் நமக்கு மதிப்பிற்குரிய பொக்கிஷத்தையும் விட்டுச் சென்றிருக்கிறார். இந்திரஜித்தைவிட லட்சுமணனிடம் அதிகப்படியாக இருந்த அந்தக் குணம் என்ன? ஆகவே, தருமம் இல்லாத வாழ்க்கை, கொள்கை இல்லாத வாழ்க்கை; கொள்கையில்லாத அந்த வாழ்க்கை சுக்கான் இல்லாத கப்பலுக்குச் சமமானது என்று நான் கருதுகிறேன். சுக்கான் இல்லாத நம் கப்பலை அதை ஓட்டிச் செல்லுபவன் என்ன முயன்றாலும், அது அங்குமிங்குமாகச் சென்று எவ்விதம் அது சேரவேண்டிய இடத்தைச் சேரவே முடியாதுபோகுமோ, அது போலவே தருமத்தைப் புரிந்துகொள்ளாத மனிதனும் அடைய வேண்டியதான லட்சியத்தை அடையாமல் என்றும் சுழன்றுகொண்டே இருப்பான். ஆகவே, சமூக சேவகர் ஒவ்வொருவருக்கும் ஒன்று கூறுகிறேன். அவர்கள், தருமத்தை அனுசரித்த வகையில் இவ்விரு தன்மைகளையும் பெற்று, தெய்வீகத்தை ஒட்டிய வாழ்க்கையைப் பின்பற்றினாலன்றி, நாட்டு மக்கள் எல்லோருக்கும் சேவை செய்துவிட முடியும் என்ற எண்ணத்தைக்கொண்டுவிட வேண்டாம்."

பிறகு காந்திஜி, நகரிலிருக்கும் சில பறையர் கிராமங்களில் சென்னை சமூக சேவைச் சங்கம் செய்திருக்கும் சிறந்த சேவைகளுக்காக அச்சங்கத்தைப் பாராட்டிவிட்டு, மேலும் கூறியதாவது :

"இந்தச் சேவையின் அவசியம் நம் கண் முன்னால் தினமும் இருந்து வருகிறது என்பதை நாம் அறிவோம். ஆகையால், இதை மெழுகிப் பூசிவிடுவதில் பயனில்லை. நமது பறையர் சகோதரர்கள் வசிக்கும் கிராமங்களைச் சுத்தப்படுத்துகிறோம் என்பது மாத்திரம் போதாது. அவர்கள் நியாயத்திற்குக் கட்டுப்படுகிறவர்கள் ; எடுத்துச் சொன்னால், அதற்கு உடன்படுவார்கள். மேல் சாதியினர் என்று சொல்லப்படுகிறவர்களும்

நியாயத்திற்குக் கட்டுப்படுகிறவர்கள்; எடுத்துச் சொன்னல் அதற்கு உடன்படுகிறவர்கள்; நகர வாழ்க்கை வாழ்வதற்கு அத்தியாவசியமான சுகாதார விதிகளை அனுசரிப்பதன் அவசியத்தை உணருகிறவர்கள் என்று நாம் சொல்லவும் வேண்டுமா? எவ்விதமான கெடுதல்களுக்கும் ஆளாகாமல் நாம் அநேக காரியங்களைச் செய்து வரலாம். ஆனல், சுவாசிப்பதற்குப் போதுமான காற்றுக்கூட இல்லாதபடி ஜன நெருக்கடி அதிகமாகவுள்ள தெருக்களுக்கு நாம் போய்விடும்போது, வாழ்க்கை மாறுபட்டதாக ஆகிவிடுகிறது. இதனல், உடனே தோன்றிவிடும் மற்ருேர் வகையான விதிகளுக்குப் பணிந்து நடக்க வேண்டியவர்களாக நாம் ஆகிவிடுகிருேம். ஆனல், நாம் அப்படிச் செய்கிருேமா? சென்னையின் மத்தியப் பகுதியில் இருக்கும் நிலைக்கு மாத்திரமல்ல, இந்தியாவின் ஒவ்வோர் முக்கியமான நகரங்களின் மத்தியப் பகுதியிலும் இருந்து வரும் மோசமான நிலைமைக்குப் பொறுப்பையெல்லாம் முனிசிபாலிடிகளின் தலைமீது போட்டுவிடுவதனல் மாத்திரம் பயனில்லை. தலைமுறை தலைமுறையாக வந்துகொண்டிருக்கும் மக்களின் ஒரு வகைப் பழக்க வழக்கங்களை உலகத்திலுள்ள எந்த முனிசிபாலிடியும் மாற்றிவிட முடியாது என்றே நான் கருதுகிறேன். சமூக சேவைச் சங்கங்களைப் போன்ற ஸ்தாபனங்களினுல்தான் அதைச் செய்ய முடியும். புதிய வாழ்க்கை ஒன்று நம்முள் உயிர்பெறுமாயின், சீக்கிரத்திலேயே புதிய கண்ணேட்டம் ஒன்று நமக்குத் தோன்றும். சரியான வாழ்க்கையாக இருக்கப்போகிற, நமது தேசீய இனத்திற்குப் புதிய கௌரவத்தை அளிக்கப்போகிற, முன்னேற்றத்தின் கொடியை ஏந்திச் செல்லப்போகிற புதிய வாழ்க்கை உயிர்பெறுகிறது என்பதற்கு அவையே அடையாளங்கள் என்று நான் கருதுகிறேன். ஆகையால், இப்பெரிய நகரங்களில் சுகாதார சீர்திருத்தங்களைச் செய்யவேண்டியது முக்கியம் என்று நான் யோசனை கூறுகிறேன். தனிப்பட்டவர்கள் வலிய வந்து இதற்காகச் சேவை செய்யாமல், முனிசிபாலிடிகளே இதைச் செய்துவிடும் என்று எதிர்பார்ப்பது வீண் வேலை. இதில் முனிசிபாலிடிகளுக்குப் பொறுப்பு இல்லை என்று நான் சொல்லுவதாகக் கருதிவிடக்கூடாது. முனிசிபாலிடிகள் செய்யவேண்டிய வேலைகள் இன்னும் எவ்வளவோ இருக்கின்றன என்றே நான் கருதுகிறேன். சில தினங்களுக்கு முன்புதான் பம்பாய் முனிசிபாலிடியின் நடவடிக்கைகளைப் பற்றிய செய்தியை மிகுந்த மனவேதனையுடன் படித்தேன். அதில் அதிகமாக வருந்தவேண்டிய விஷயம் என்னவென்ருல், அவர்கள் அனுவசியமான விஷயங்களைக் குறித்து நீண்ட நேரம் விவாதித்துக் காலத்தைப் போக்கிவிட்டு, முக்கியமானவைகளைக் கவனிக்கத் தவறியதேயாகும். மக்கள் தங்கள் காரியங்களைத் தாங்களே செய்து கொள்ள வேண்டியிருக்கும்போது, முனிசிபாலிடிகளால் அதிகமாக எதுவும் செய்துவிட முடியாது என்றே நான் நிச்சயமாகக் கூறுவேன்.

"பட்டணத்தின் சுகாதார நிலைமையை அபிவிருத்தி செய்வதில், முனிசிபாலிடிகளுக்குச் சமூக சேவைச் சங்கம் அதிக உதவி செய்யக்கூடிய காரியங்கள் இரண்டு இருக்கின்றன. அதில் ஒன்று, மக்களின் வாழ்க்கையோடு ஒன்றிப் போய்விட்டதான சில பழக்க வழக்கங்களை மாற்றுவதற்குப் பாடுபடுவது. அதன் மூலம் சுகாதார நிலைமையில் அபிவிருத்தி ஏற்படும்படி செய்ய முடியும். பழக்க வழக்கங்களை மாற்றிக்கொள்ள விரும்பாத மக்களை, எத்தனையோ காரியங்களைச் செய்துவிடும்படி செய்யமுடியும் என்று சில அதிகாரிகள் எண்ணுகிறார்கள். 'கத்தி முனைக்குப் பயந்துகொண்டு மக்கள் குடிகாரர்களாக இல்லாமலிருப்பதைவிட அவர்கள் என்றும் குடிகாரர்களாகவே இருப்பது மேல்' என்று கூறப்பட்டிருப்பதையும் இங்கே குறிப்பிடுகிறேன்.

"காசி கோயிலைப் பற்றிய அனுபவமும் எனக்கு உண்டு. அக்கோயிலைச் சுற்றிலுமுள்ள சந்துகளெல்லாம் மிகவும் மோசமான நிலைமையில் ஆபாசமாக இருக்கின்றன. மூலஸ்தானத்திற்கு அருகிலும் அழுக்கும் ஆபாசமும் இருந்து வருகின்றன. தரிசிக்க வரும் ஜனங்களும் ஒழுங்காக நடந்துகொள்ளுவதில்லை. பூசாரிகளோ பேராசைப் பிடித்தவர்களாக இருக்கிறார்கள்.* கோயில்களில் இருந்து வரும் இத்தகைய தீமைகளைப் போக்குவதற்குச் சேவைச் சங்கங்கள் பாடுபடவேண்டும். இப்பொழுது இருந்துவரும் இத்தகைய நிலைமைகளை எதிர்த்து மாணவர்கள் போராடுவது சாத்தியமாகும்படி செய்வதற்கு, இன்றுள்ள கல்வி முறையில் புரட்சிகரமான மாறுதல்களைச் செய்ய வேண்டும். இன்று பள்ளிக்கூடங்களிலிருந்து வெளிவரும் மாணவர்கள், தங்களுடைய பாரம்பரிய காரியங்களைக் குறித்து எதுவுமே தெரியாதவர்களாக இருப்பதோடு, மேற்கொண்டு எந்த வேலையும் செய்ய முடியாத நிலையில் மூளை களைத்துப் போனவர்களாகவும் இருந்து வருகிறார்கள். இந்தக் கல்வி முறையில் புரட்சிகரமான மாறுதல்களைச் செய்தாகவேண்டும்.

"கடைசியாக ரெயில்வே போக்குவரத்தைக் குறித்தும், மூன்றும் வகுப்புப் பிரயாணிகள் எந்த நிலைமையில் அவைகளில் பிரயாணம் செய்து வருகின்றனர்‡ என்பதைக் குறித்தும்

---

* மகாத்மா காந்தி, தென்னாப்பிரிக்காவில் இருந்தபோது இந்தியாவுக்கு வந்திருந்த சமயத்தில் காசிக்குச் சென்றார். அப்பொழுது தாம் கண்டவற்றையே அவர் இங்கே கூறியிருக்கிறார். காசியில் தமக்கு ஏற்பட்ட அனுபவங்களைக் குறித்து மகாத்மா தமது 'சுயசரிதை'யில் விவரமாகக் கூறியிருக்கிறார். அதன் விவரத்தை 'மகாத்மா காந்தி நூல்கள்'—மூன்றாம் தொகுப்பில் 324—326–ஆம் பக்கங்களில் காண்க.

‡காந்திஜி, 1918-19–இல் கடுமையாக நோயுற்றிருந்த சமயம் தவிர மற்ற சமயங்களிலெல்லாம் மூன்றாம் வகுப்பிலேயே ரெயில் பிரயாணம் செய்து வந்தார். அக்காலத்திற்கு முன்பும் அவர் மூன்றாம் வகுப்பில்தான் பிரயாணம் செய்து வந்தார். அவர் தென்னாப்பிரிக்காவிலிருந்த சமயம் இந்தியாவுக்கு வந்திருந்தபோது, மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்ததில் தமக்கு ஏற்பட்ட அனுபவங்களைக் குறித்து அவர்

நீங்கள் கவனிக்க வேண்டும். பிரயாணிகள் சுகாதாரத்திற்கு ஏற்றதான பழக்க வழக்கங்களை அனுசரிக்கும்படி செய்வதற்கான சமூக சேவையைச் செய்ய சமூக சேவா ஊழியர்கள் அவர்களிடம் போகும்போது, மேனாட்டு உடையில் ஆங்கிலம் பேசிக்கொண்டு போகக்கூடாது. பிரயாணிகளுக்குச் சுகாதார முறைகளை விளக்கித் துண்டுப் பிரசுரங்களை வழங்கலாம். அவர்களுக்கு அவற்றை எடுத்துக் கூறலாம்.''

[ஜி. ஏ. நடேசன் கம்பெனி வெளியிட்ட 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும் கட்டுரைகளும்' என்ற நூலிலிருந்து எடுத்தது.]

## 2

# செய்யவேண்டிய சீர்திருத்தங்கள்

[அகில இந்திய சமூக சேவை முதல் மகாநாடு 1917 டிசம்பர் 27-ஆம் தேதி கல்கத்தாவில் நடந்தது. அம்மகாநாட்டில் தலைமை வகித்து மகாத்மா காந்தி செய்த பிரசங்கம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

நண்பர்களே! எனக்கு நீங்கள் அளித்திருக்கும் இந்தக் கௌரவத்திற்காக நான் நன்றி செலுத்துகிறேன். இம்மகாநாட்டின் நடவடிக்கைகளுக்குத் தலைமை வகிப்பதற்கு நான் கொஞ்சமும் தயாராகவே இல்லை. இக்காரியத்திற்கு வேண்டிய தகுதி எனக்கு உண்டா என்பதையும் நான் அறியேன். தேசீயக் கூட்டங்களில் ஹிந்தியிலேயே பேச வேண்டும் என்பதில் நான் திடமான கருத்துடையவன். ஆகவே, ஆங்கிலத்தில் பேச நான் எப்பொழுதும் மறுத்துவிடுவது உண்டு. இம்மகாநாட்டிலும் என் தலைமைப் பிரசங்கத்தை ஹிந்தியிலேயே செய்ய அனுமதிக்க வேண்டும் என்று உங்களைக் கேட்பதற்கான காலப் பக்குவம் இன்னும் ஏற்பட்டுவிடவில்லை என்பதையும் நான் உணருகிறேன். மேலும், மகாநாடுகளை நடத்துவது என்பதில் எனக்கு அதிக நம்பிக்கையும் கிடையாது. சமூக சேவை அதிகப் பலனுள்ளதாக இருக்கவேண்டுமானால் அதிகச் சந்தடி எதுவும் இல்லாமல் அதைச் செய்ய வேண்டும். வலது கை செய்வது

---

'சுயசரிதை'யில் 'காசியில்' என்ற அத்தியாயத்தில் எழுதியிருக்கிறார். அதோடு அதே நூலில் 'மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளின் துயரம்' என்ற தலைப்பில் ஒரு தனி அத்தியாயமே எழுதியிருக்கிறார். இவற்றை 'மகாத்மா காந்தி நூல்கள்'—மூன்றாம் தொகுப்பில் முறையே 322-23, 493-95-ஆம் பக்கங்களில் காண்க. காந்திஜி தென்னாப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்குத் திரும்பி வந்து இரண்டரை ஆண்டுகளான பிறகு, இந்திய ரெயில்வேக்களின் மூன்றாம் வகுப்பைக் குறித்து 1917 செப்டம்பர் 25-ஆம் தேதி வெளியிட்ட அறிக்கையும் இத்தொகுப்பில் 'பின் சேர்க்கைப் பகுதி'யில் கொடுக்கப்பட்டிருக்கிறது.

இடது கைக்குத் தெரியாதபடி அதைச் செய்யும்போதுதான் அதில் நல்ல பலனைக் காணமுடியும். ஸர் கிப்பி செய்த வேலை யாருக்குமே தெரியாமலிருந்ததனாலேயே, அதனால் நல்ல பயன் உண்டாயிற்று. புகழ்வதனாலோ அல்லது குறை சொல்லுவதனாலோ அவருடைய வேலையைக் கெடுத்துவிட முடியாது. நாம் செய்யும் சேவையும் அத்தகைய தன்மையுடையதாக இருக்க வேண்டும். இவையே நான் கொண்டிருக்கும் கருத்துக்களாகையால், அதிக தயக்கத்தின் பேரிலும் சந்தேகத்தின் பேரிலுமே வரவேற்புக் கமிட்டியின் அழைப்பை நான் ஏற்றுக்கொண்டேன். ஆகையால், நம்பிக்கையுடனும் உறுதிமொழியோடும் இம்மகா நாட்டை அதன் லட்சியத்திற்குக்கொண்டு செல்லும் உற்சாகியாக இருப்பதற்குப் பதிலாக, மனம் விட்டுக் குறைகூறுபவனாகவே நான் இருப்பதை நீங்கள் காண்பீர்களாயின், அதற்காக என்னை மன்னியுங்கள்.

சமூக சேவை செய்ய வேண்டிய சில துறைகளை நாம் அநேகமாக அலட்சியம் செய்தே வந்திருக்கிறோம். அவற்றை இங்கே உங்கள் கவனத்திற்குக் கொண்டுவர வேண்டியது அவசியம் என்று எனக்குத் தோன்றுகிறது.

ஆங்கில பாஷையைக் கற்றுக்கொள்ளுவதற்கு அதிக மதிப்பைக் கொடுக்கும் மூட நம்பிக்கை நமக்கு ஏற்பட்டிருக்கிறது. இந்த மூடநம்பிக்கையிலிருந்து நாம் விடுதலைபெற்று சமுதாயத்தையும் அதிலிருந்து விடுவிப்போமாயின், அதுவே சமூகத்திற்கு நாம் செய்யக்கூடிய சிறந்த சேவையாகும். நமது பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் ஆங்கிலமே போதனை மொழியாக இருந்து வருகிறது. அதுவே நாட்டின் பொது மொழியாகவும் ஆகிக்கொண்டு வருகிறது. நமது சிறந்த கருத்துக்களையெல்லாம் அம்மொழியின் மூலமே வெளியிட்டு வருகிறோம். உயர்ந்த குடும்பங்களிலே தாய் மொழியின் இடத்தில் ஆங்கிலமே சீக்கிரத்தில் நிலைத்துவிடும் என்று லார்டு செம்ஸ்போர்டு நம்புகிறார். ஆங்கிலப் பயிற்சியின் அவசியத்தைப் பற்றிய இந்த நம்பிக்கை நம்மை அடிமைப்படுத்திவிட்டது. உண்மையான தேசீய சேவைக்கு நம்மைத் தகுதியற்றவர்களாகவும் அது செய்துவிட்டது. ஆங்கிலம் போதனை மொழியாக இருந்து வருவதால் நமது அறிவு தனியாகப் பிரிக்கப்பட்டுவிட்டது; பாமர மக்களிடமிருந்து நாம் தனியாகப் பிரிந்து போனவர்களாகிவிட்டோம். நாட்டின் சிறந்த அறிவாளிகளின் அறிவு, தடை செய்யப்பட்டதாகிவிட்டது. நாம் பெற்றிருக்கும் புதிய கருத்துக்களின் பலனை பாமர மக்கள் அடைய முடியாதபடியும் போயிற்று. பழகிப்போய்விட்ட காரணத்தினால் நாம் இதை உணராமல் இருந்து வருகிறோம். சென்ற அறுபது வருட காலமாக நாம் உண்மைகளைக் கிரகித்துக்கொள்ளுவதற்குப் பதிலாக, விசித்திரமான சொற்களையும் அவற்றின் உச்சரிப்புக்களையும் மனப்பாடம் செய்வதிலேயே நம் காலத்தைக் கழித்து வந்திருக்கிறோம். நமது

பெற்றோர்களிடமிருந்து பெற்ற பயிற்சியாகிய அடிப்படையின் மீது வளர்த்துக்கொண்டு போவதற்குப் பதிலாக, அதை அநேகமாக நாம் மறந்தே போய்விட்டோம். இது போன்றது சரித்திரத்தில் வேறு எதுவுமே இல்லை. இது தேசத்தைப் பொறுத்த துக்ககரமான விஷயமாகும். நாம் நமது சுய மொழிக்குத் திரும்ப வேண்டும். ஹிந்தி தேசீய மொழி என்ற வகையில், அதற்குள்ள இயல்பான ஸ்தானத்தை அது அடையும்படி செய்ய வேண்டும். நமது மாகாண நடவடிக்கைகளையெல்லாம் பிராந்திய மொழிகளிலேயே நடத்தி, நாட்டின் நடவடிக்கைகளை ஹிந்தியில் நடத்திவர வேண்டும். நாம் செய்யக்கூடிய முதல், பெரிய சமூக சேவை இதுவேயாகும். நமது தாய் மொழிகளிலேயே நமது பள்ளிக்கூடங்களும் கல்லூரிகளும் கல்வியளிக்கும் நிலை வரும்வரையில் நாம் ஓய்ந்து இருக்கவேகூடாது. நமது ஆங்கில நண்பர்களுக்காகவேனும் நாம் ஆங்கிலத்தில் பேசியாக வேண்டும் என்பது இருக்கக்கூடாது. ஆங்கில ஸிவில், ராணுவ அதிகாரிகளும் ஹிந்தி அறிந்திருக்க வேண்டும். வியாபாரத்திற்கு ஹிந்தி தெரிந்திருப்பது அவசியமாக இருப்பதால், அநேக ஆங்கில வியாபாரிகள் ஹிந்தியைக் கற்றுக்கொண்டிருக்கிறார்கள். நமது சட்ட சபைகள் நமது தேசீய காரியங்களைத் தாய் மொழியிலோ, ஹிந்தியிலோ விவாதிக்கும் காலம் சீக்கிரத்தில் வந்தாக வேண்டும். இதுவரையில் சட்டசபைகளின் நடவடிக்கைகள் பாமர மக்களுக்குப் புரியாததாகவே இருந்து வந்திருக்கிறது. இதனால் ஏற்பட்டிருக்கும் கஷ்டத்தைப் போக்குவதற்குத் தாய் மொழிப் பத்திரிகைகள் ஓரளவுக்கு முயற்சி செய்திருக்கின்றன. ஆனால், இக்காரியம் அவைகளாலும் முற்றிலும் முடியாதது. சிறந்த சிந்தனையாளர்களைக் கொண்டிருந்த இப்புராதனமான நாட்டில், நம்மிடையே ஒரு டாகுரோ, ஒரு போஸோ, ஒரு ரேயோ இருப்பதில் ஆச்சரியப்பட வேண்டியது எதுவும் இல்லை. எனினும், இதில் வருந்தத்தக்க உண்மை என்னவென்றால், இவர்கள் ஒரு சிலரே இருக்கின்றனர் என்பதுதான். நான் சொல்லிவந்த விஷயம் சமூக சேவையின் ஓர் அம்சம் என்று நீங்கள் கருதாமலிருக்கக்கூடும். எனினும், இதைக் குறித்து நான் அதிகம் கூறியதற்காக என்னை மன்னியுங்கள். நமது கல்வி முறையில் இருந்து வரும் இந்த மோசமான குறைபாட்டினால் தான், நமது தேசீய காரியங்கள் எல்லாமே அதிகமாகப் பாதிக்கப்பட்டு வருகின்றன என்பது என்னுடைய திடமான நம்பிக்கை. அதனாலேயே இதை நான் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியதாயிற்று.

எல்லோருக்கும் தெரிந்ததாகவுள்ள சமூக சேவை இனங்களுக்கு வந்தாலோ, அதன் பட்டியல் பயங்கரமானதாக இருக்கிறது. இந்த இனங்களில் நான் நன்றாக அறிந்திருப்பவைகளைப் பற்றி மாத்திரமே கூற விரும்புகிறேன்.

பஞ்சம், வெள்ளக் கஷ்டம் போன்றவைகளால் ஆங்காங்கே ஏற்பட்டு வரும் துன்பங்களை நிவர்த்திப்பதற்காகச் செய்யும்

வேலை அவசியமானது, மிகவும் பாராட்டத்தக்கது என்பதில் சந்தேகமில்லை. ஆனால், அந்த வேலை நிரந்தரமான பலனை அளித்துவிடுவது இல்லை. சமூக சேவையில் கீர்த்தியைக் கொடுத்துவிடாத துறைகளும் சில இருக்கின்றன. ஆனால், அத் துறைகளில் செய்யும் வேலையோ நிரந்தரமான பலனை அளிக்கக் கூடியதாக இருக்கும்.

*1914*-ஆம் ஆண்டில் நம் நாட்டில் காலரா, ஜுரங்கள், பிளேக் ஆகியவைகளினால் *46,49,663* பேர் மாண்டிருக்கிறார்கள். இப்பொழுது ஐரோப்பாவை நாசமாக்கி வருவதைப் போன்ற யுத்தத்தின் போர்க்களத்தில் இத்தனைபேர் மாண்டு மடிந்திருப்பார்களானால், நமக்குப் பெருங் கீர்த்தி உண்டாகியிருக்கும். சுயராஜ்யத்தை விரும்புகிறவர்களுக்கு, தங்கள் லட்சியத்தை ஆதரிப்பதற்கு அதைவிட மேற்கொண்டு எந்த வாதங்களும் அவசியமாகவும் இருந்திருக்காது. ஆனால், *46,49,663* பேர் உடல் நலிந்து, உயிருக்குப் போராடி நோயினால் மாண்டிருக்கிறார்கள். இதனால், நாம் அடைந்தது அவமானத்தைத் தவிர வேறு எதுவும் இல்லை. நாம் எதுவுமே செய்யாமல் சும்மா இருந்து வரும்போது, நமக்காக யோசிக்க வேண்டியவைகளையெல்லாம் ஆங்கிலேயரே யோசித்துச் செய்து வருவதாக ஒரு பிரபலமான ஆங்கிலேயர் சமீபத்தில் சொன்னார். தாங்கள் கண்டுபிடிக்கும் தீமைகளுக்குப் பெரும்பான்மையான ஆங்கிலேயர்கள், தங்கள் ஆங்கில நாட்டு அனுபவத்தின் மீது ஏற்பட்ட அபிப்பிராய அடிப்படையை வைத்துக்கொண்டு, அசாத்தியமான, அதிகச் செலவுள்ளதான பரிகாரங்களைக் கையாண்டு வருகிறார்கள் என்றும் அந்த ஆங்கிலேயர் கூறினார். அவர் இவ்விதம் கூறியிருப்பதில் அதிக உண்மை இருக்கிறது. மற்ற நாடுகளில் சீர்திருத்தவாதிகள், தொத்து நோய்களை வெற்றிகரமாகச் சமாளித்திருக்கிறார்கள். இங்கேயோ, ஆங்கிலேயர்கள் சோதனை செய்து தவறியே போயிருக்கின்றனர். இவர்கள் மேனாட்டு நோக்கத்திலேயே இதைக் கவனித்திருக்கின்றனர். ஐரோப்பாவுக்கும் இந்தியாவுக்கும் சீதோஷ்ண நிலைமையிலும் மற்றவைகளிலும் அதிக வித்தியாசங்கள் இருக்கின்றன என்பதை இவர்கள் அடியோடு மறந்துவிட்டார்கள். நமது டாக்டர்களும் வைத்தியர்களும் இது சம்பந்தமாக எதுவுமே செய்யவில்லை. முதல் தரத்தில் இருக்கும் டாக்டர்கள் அரை டசன் பேர்கள், முப்பெரும் சாபக்கேடுகளான காலரா, ஜுரங்கள், பிளேக் ஆகியவைகளை அடியோடு ஒழித்துவிடுவதற்காகத் தங்கள் வாழ்க்கையையே அர்ப்பணம் செய்துகொண்டு விடுவார்களாயின், இதில் ஆங்கிலேயர்கள் தோல்வியடைந்துவிட்ட போதிலும், இவர்கள் நிச்சயமாக வெற்றியை அடைவார்கள். இதற்கான வழி, இந்நோய்கள் ஏற்படாதவாறு தடுப்பதற்கான முறைகளைக் கண்டுபிடித்து அவற்றை அனுசரிப்பதில்தான் இருக்கிறதேயன்றி, நோய்கள் ஏற்பட்டதும் குணப்படுத்துவதற்கான மருந்துகளைக் கண்டுபிடிப்பதில் இல்லை என்று துணிந்து கூறுவேன். 'அனுசரிப்பது' என்ற சொல்லை நான்

முக்கியமாகக் குறிப்பிடுகிறேன். பிளேக் நோயையும், காலராவையும், மலேரியாவையும் கூட விரட்டியடித்து விடுவதற்கான முறை அவ்வளவு சாதாரணமானது என்பதை நான் ஆதாரத்துடன் கூற முடியும். தடுப்பு முறை பற்றிய விஷயத்தில் எந்தவிதமான கருத்து வேறுபாடும் இல்லை. ஆனால், அவற்றை நாம் அனுசரிப்பதுதான் கிடையாது. பாமர மக்கள் அவற்றை அனுசரித்து நடக்கமாட்டார்கள் என்று நாம் முடிவுகட்டிக் கொண்டுவிட்டோம். அப் பாமர மக்கள் மீது இதைவிட மோசமான பழி எதையும் சுமத்திவிட முடியாது. அவர்களை வெற்றிகொள்ளுவது என்று நாம் தீவிரமாக முனைந்துவிடுவோமாயின் அவர்களை வெகு எளிதில் வென்றுவிடலாம். இதில் உண்மை என்னவென்றால், இவ் வேலையை அரசாங்கம் செய்ய வேண்டும் என்று நாம் எதிர்பார்க்கிறோம். இவ் விஷயத்தில் அரசாங்கம், முன்னால் காரியத்தைச் செய்து கொண்டுபோக முடியாது என்பதே என் அபிப்பிராயம். நாம் முதலில் காரியத்தில் இறங்குவோமானால் அரசாங்கம் நம்மைப் பின்பற்றி வருவதோடு, வேண்டிய உதவியையும் நமக்குச் செய்யலாம். மேலும், இதில் நம் டாக்டர்களுக்குப் போதுமான வேலை இருக்கிறது. ஏராளமான சமூக சேவை ஊழியர்களும் அவர்களுக்கு உதவி செய்யலாம். வங்காளத்தில் நீங்கள் இத் துறையில் ஏதோ வேலை செய்து வருவதைக் காண்கிறேன். சிறு தொகையினரேயாயினும், ஊழியர் கூட்டத்தினர் பலர் இப்பொழுது சம்பாரணில் இத்தகைய வேலையில் ஈடுபட்டிருக்கின்றனர் என்பதையும் இப்பொழுது சொல்ல விரும்புகிறேன். அவர்கள் பல கிராமங்களிலும் இருந்து வேலை செய்து வருகின்றனர். அங்கே அவர்கள், கிராமக் குழந்தைகளுக்குக் கல்வி போதிக்கின்றனர். கிராம மக்களுக்கு அவர்கள் வைத்திய உதவி செய்து வருவதோடு, கிணறுகளையும் ரஸ்தாக்களையும் சுத்தம் செய்வதன்மூலம் சுகாதாரத்தோடு வாழும் விதத்தைக் குறித்து அனுபவபூர்வமாகப் போதித்தும் வருகின்றனர். மனிதரின் மலத்தை எப்படிப் பயன்படுத்திக் கொள்ளுவது என்பதையும் காட்டி வருகிறார்கள். இந்தச் சோதனை இன்னும் ஆரம்பக் கட்டத்திலேயே இருந்து வருவதால், இதனால் என்ன பலன்கள் ஏற்படும் என்பதை இப்பொழுதே சொல்லிவிடுவதற்கில்லை. இந்த மகாநாடு, டாக்டர்களைக்கொண்ட ஒரு கமிட்டியை நியமித்துக் கிராமங்களுக்குப் போய் அவர்கள் அங்குள்ள நிலைமையை ஆராயும்படி செய்யலாம். அதைக்கொண்டு சமூக சேவை ஊழியர்களும் பொது மக்களும் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதற்கான வழிமுறைகளையும் அக் கமிட்டி தயாரித்துப் பயனுள்ள வேலை செய்யலாம்.

ரெயில்களில் மூன்றாம் வகுப்புப் பிரயாணிகள் எவ்வளவோ துன்பங்களை அனுபவித்துக்கொண்டு வருகிறார்கள். அவர்களுக்கு நிவாரணம் ஏற்படும்படி செய்வது, முழு நேர ஊழியர்களுக்கும் மற்றவர்களுக்கும், வேறு எந்த வேலையும் அளிக்காத பெரிய

வாய்ப்பை அளித்திருக்கிறது. இந்தக் குறைபாட்டை அதிக முக்கியமானதாக நான் எண்ணுவதற்குக் காரணம், நானும் மூன்றும் வகுப்புப் பிரயாணியாக இருக்கிறேன் என்பதனால் மாத்திரம் அல்ல. இதை முக்கியமானதாக எண்ணுவதால், இதை நன்ருக நான் கவனித்திருக்கிறேன் என்பதனுலேயே சொல்லு கிறேன். இவ்விஷயம், நம் நாட்டு மக்களில் ஏழைகளாகவும் மத்தியதர வகுப்பினராகவுமுள்ள கோடிக்கணக்கானவர்களைப் பாதிக்கிறது. தாழ்த்தப்பட்ட வகுப்பினர் என்று சொல்லப் படுவோரை நாம் கொடுமையாக நடத்திவருவதைத் தவிர்ப்ப தற்குக் கதியே இல்லாமல் அவர்கள் சகித்துக்கொண்டு வருவதால், தாங்கள் சுத்தமாக இருக்க வேண்டும் என்ற உணர்ச்சியும் கூட அவர்களுக்கு இல்லாது போய்விட்டது. சுயமதிப்பு என்பதும் இருக்கிறது என்ற எண்ணம்கூட தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு இல்லாது போய்விட்டது. அதே போல மூன்றும் வகுப்புப் பிரயாணிகளும் எல்லாவிதமான அசௌகரியங்களையும் அவமதிப்புக்களையும் வேறு கதியில்லாமல் சகித்துக்கொண்டே போய், சுத்தமாக இருக்க வேண்டும் என்பதிலும் சுயமதிப்பிலும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் கவலைப்படாமலிருக்கும் அதே நிலைமைக்கு வந்துவிட்டார்கள். படுமோசமான நிலையிலிருக்கும் வண்டிக்குள் இடம் பிடிப்பதற்காக வெறிபிடித்த மிருகங்களைப் போல இப் பிரயாணிகள் இடித்துப்புடைத்துக் கொண்டு ஏறுகிருர்கள். வண்டிக்குள் நிற்பதற்காவது இடம் பார்ப்பதற்கு இவர்கள் சன்னல் வழியாக உள்ளே இருப்பவரைத் திட்டிச் சபிக்கிருர்கள். பிரயாணத்தின்போது அழுக்கில் புரளுகின்றனர். நாய்களுக்குப் போடுவதுபோல இவர்களுக்கு உணவுகளைப் போடுகின்றனர். இவர்களும் நாய்களைப் போலவே சாப்பிடுகிருர்கள். தங்களில் உடல் வலிவு அதிகமாக இருப்பவர்களிடம் எப்பொழுதும் பணிந்தும் போகின்றனர். புளி அடைத்தது போல் வண்டிக்குள் நெருங்கிக்கிடக்க வேண்டியிருக்கும் இப்பிரயாணிகள், பல இரவுகள் உட்கார்ந்தபடியே தூங்கிக்கொள்ளுகிருர்கள். இப்படியெல்லாம் பிரயாணம் செய்யும் இவர்களுக்கு மானமழிவதைத் தவிர வேறு என்ன இருக்க முடியும்? ரெயில்வே சிப்பந்திகள் இவர்களை மிரட்டுகிருர்கள்; இவர்களை ஏமாற்றுகிருர்கள். ஹௌரா-லாகூர் ரெயிலில், காபூலிலிருந்து வரும் நமது நண்பர்கள், இந்த மூன்றும் வகுப்புப் பிரயாணிகள் துன்பத்தை அளவு கடந்து அனுபவிக்கும்படி செய்துவிடுகின்றனர். தாங்கள் ஏறும் வண்டிக்கு அவர்களே எஜமானர்களாகிவிடுகின்றனர். அவர்கள் செய்வதை ஆட்சேபித்து எதிர்ப்பது என்பதே எவராலும் ஆவதில்லை. எடுத்ததற்கெல்லாம் மிரட்டக் கிளம்பிவிடுகின்றனர். ஹிந்தி மொழியிலிருக்கும் ஆபாசச் சொற்களையெல்லாம் பொழிந்து தீர்த்துவிடுகிருர்கள். பதிலுக்குத் திட்டிவிட்டாலோ, அவர்களை எதிர்த்துவிட்டாலோ அடித்துவிடுவதற்கும் அவர்கள் தயங்குவதில்லை. நல்ல இடத்தில் உட்கார்ந்துகொண்டு விடுகிருர்கள். வண்டிக்குள் என்ன ஜனநெருக்கமிருந்தாலும் பொருட்

படுத்தாமல் காலை நீட்டிப் படுத்துக்கொண்டு விடுகின்றனர். அதிகக் கூட்டமாக இருக்கிறது என்பதற்காக எந்த வண்டியிலும் அவர்கள் ஏறிவிடாமலிருப்பதில்லை. பிரயாணிகளுக்கு வேறு கதியில்லாததனால் இவர்களுடைய அட்டூழியங்களையெல்லாம் பொறுமையுடன் சகித்துக்கொள்கின்றனர். இந்தக் காபூலிகள் மிரட்டுவதைப் போல வேறு எந்தப் பிரயாணியாவது இவர்களை எதிர்த்து மிரட்டத் துணிந்துவிட்டால் அவரை அடித்தும் தள்ளிவிடுகிறார்கள். ஆனால், உடல் வலிவில் இப் பிரயாணிகள் காபூலிக்கு இணையானவர்கள் அல்ல. சமவெளிப் பகுதிகளில் இருந்து வருபவர்கள் எத்தனை பேரானாலும், தான் ஒருவனே அவர்களை அடித்து வீழ்த்திவிட முடியும் என்று காபூலி எண்ணிக்கொள்ளுகிறான். இது சரியே அல்ல. நம் மக்களின் நடத்தையில் இவ்விதமான பயமுறுத்தல் தன்மை இருந்து வருவது மானக்கேடானதாகும். மிருகத்தனமான இந்தத் துன்பத்திலிருந்து மூன்றும் வகுப்புப் பிரயாணிகளை, படித்த ஒரு சிலரான நாம் காப்பாற்றியாக வேண்டும். இல்லையானால், அவர்களுக்காகப் பாடுபடுகிறோம், அவர்களுக்கு நாம் வழிகாட்டுகிறோம் என்று நாம் சொல்லிக் கொள்வதையாவது விட்டுவிட வேண்டும். காபூலிகளும் நியாயத்திற்குக் கட்டுப்படக் கூடியவர்களே என்று நான் நம்புகிறேன். அவர்கள் கடவுளுக்குப் பயப்படுகிறவர்கள். அவர்களுடைய மொழி உங்களுக்குத் தெரிந்திருந்தால், அவர்களிடம் நியாயத்தை எடுத்துக் கூறி நீங்கள் அவர்களைச் சரியாக நடந்துகொள்ளும்படி செய்யமுடியும். ஆனால், அவர்கள் இயற்கையின் காரணத்தினால் செல்லப் பிள்ளைகள் போலாகிவிட்டவர்கள். நம்மில் கோழைகளாக இருப்பவர்கள், அவர்களுடைய சந்தேகத்திற்கிட மில்லாத சரீர பலத்தைத் தம்முடைய கேவலமான காரியங்களுக்கு உபயோகித்துக்கொள்ளுகின்றனர். இதனால் ஏழை மக்களைத் தங்கள் இஷ்டப்படியெல்லாம் செய்ய முடியும் என்று எண்ணிக் கொண்டு விடுகிறார்கள். நாட்டின் சட்டமும் தங்களை எதுவும் செய்ய முடியாது என்று நினைக்கிறார்கள். எனவே, சமூக சேவை செய்வதற்கு இதில் போதுமான வேலை இருக்கிறது. இந்த வகையான வேலையில் ஈடுபடும் தொண்டர்கள், ரெயில்களில்போய் மக்களுக்குக் கடமை உணர்ச்சியைப் புகட்டலாம். ஜன நெருக்கம் அதிகமாக இருப்பதைப் போக்கும்படி ரெயில் கார்டையும் மற்ற அதிகாரிகளையும் அழைத்துச் சொல்லலாம். பிரயாணிகள் வண்டிக்குள் அடித்துப்புடைத்துக் கொண்டு ஏறாமல் ஒழுங்காக ஏறும்படியும், இறங்கும்படியும் செய்யலாம். காபூலிகள் ஒழுங்காக நடந்துகொள்ளும்படி பொறுமையுடன் போதிக்கப்படும் வரையில், அவர்களுக்கென்றே ரெயிலில் தனியாக ஒரு வண்டி இருக்கும்படி செய்வது அவசியம் என்பது தெளிவானது. அந்த வண்டியைத் தவிர வேறு எந்த வண்டியிலும் ஏறுவதற்கு அவர்களை அனுமதிக்கக்கூடாது. அதிகப்படியாக வண்டி வசதியைச் செய்து கொடுப்பதைத் தவிர ரெயில் பிரயாணத்தில்

இருக்கும் மற்றெல்லாத் தீமைகளுக்கும் உடனே பரிகாரம் தேடியாக வேண்டும். இந்தக் குறைபாடுகளையெல்லாம் நீண்ட காலமாக அனுபவித்துக்கொண்டு வருகிறோமே என்பது இதற்குச் சரியான பதிலாகிவிடாது.

தாழ்த்தப்பட்ட மக்களின் விஷயம் எந்தவிதத்திலும் குறைந்த முக்கியத்துவமுள்ளதாக ஆகிவிடாது. ஹிந்து சமூகம் அவர்களைக்கொண்டுபோய் விட்டிருக்கும் மோசமான நிலையிலிருந்து அவர்களை உயர்த்துவது, ஹிந்து தருமத்திற்கு இருக்கும் இழுக்கைப் போக்கிக்கொள்ளுவதாகும். இவ்வகுப்பினர் இப்பொழுது நடத்தப்பட்டு வரும் விதம், சமய தருமத்திற்கும் மனித வர்க்கத்திற்கும் எதிராகச் செய்யப்படும் பாபச் செயலாகும்.

ஆனால், இந்த வேலைக்கு உயர்தரமான சேவை வேண்டும். அவர்களுக்குப் பள்ளிக்கூடங்களை வைத்துக்கொடுப்பதனால் நாம் இதில் அதிக தூரம் முன்னேறிவிட முடியாது. பாமர மக்களின், வைதீகர்களின் மனப்போக்கை நாம் மாற்றியாக வேண்டும். இந்த இரு தரப்பாரிடமிருந்தும் தொடர்பில்லாமல் நாம் ஒதுங்கிப் போய்விட்டோம் என்று நான் ஆரம்பத்திலேயே கூறினேன். நம்மைப் பின்பற்றி நடக்கும்படி நாம் செய்ய முடிவதில்லை. அவர்களுடைய சொந்த மொழியில் அவர்களுடன் நாம் பேசினால்தான், நாம் கூறுவதை அவர்கள் கேட்டு நடக்கும்படி செய்யமுடியும். ஆங்கில மயமாகிவிட்ட இந்தியர், பயன்படக் கூடிய வகையில் அவர்களுடன் பேச முடியாது. ஹிந்து தருமத்தில் நமக்கு நம்பிக்கை இருந்தால், ஹிந்து முறையில் அவர்களை அணுக வேண்டும். நாம் தவம் செய்து, அதன் மூலம் ஹிந்து தருமம் ஆபாசமடைந்துவிடாமல் நாம் காக்க வேண்டும். பரிசுத்தமான, புத்திசாலித்தனமான வைதீகம், மூடநம்பிக்கையோடுகூடிய, அறியாத்தனமான வைதீகத்தை எதிர்த்துப் போராடியாக வேண்டும். நமது மொத்த ஜனத்தொகையில் ஐந்தில் ஒரு பகுதியினரான தாழ்த்தப்பட்டோரை அவர்களுக்கு உரிய ஸ்தானத்திற்கு உயர்த்துவது, சமூக சேவை ஸ்தாபனங்கள் செய்வதற்கு ஏற்ற சிறந்த பணியாகும்.

கல்கத்தாவிலும் பம்பாயிலும் உள்ள சேரிகளுக்கு, நூற்றுக் கணக்கான சமூக ஊழியர்களின் சேவை மிகவும் அவசியமானதாகிறது. மோசமான நிலையில் இருந்து வரும் அந்தச் சேரிகள் நம் சிசுக்களைக் கொன்று வருவதோடு தீய ஒழுக்கங்களையும், அவமானங்களையும், ஆபாசங்களையும் அதிகரித்துக்கொண்டும் வருகின்றன.

நமது தவறான கல்வி முறையினால் ஏற்படும் தீமைகள் ஒரு புறமிருக்க, பாமர மக்களிடையே சேவை செய்து போக்க வேண்டியிருக்கும் தீமைகளைக் குறித்து இதுவரையில் சொல்லி வந்தேன். பாமர மக்களிடையே மாத்திரமின்றி, படித்த வகுப்பாரிடையேயும் அதே போலச் சேவை செய்தாக வேண்டியிருக்

கிறது. நோய்களைப் போன்றே இவர்களிடையே இருக்கும் தீமைகளுக்கும் அதே தீமை அல்லது நோய்தான் காரணம் என்பது என் கருத்து. அத்தீமைகள் வெவ்வேறு இடங்களி லிருந்து வெளிப்படுவதால் வெவ்வேறு விதமாகத் தோற்றமளிக் கின்றன. இவற்றிற்கெல்லாம் அடிப்படையான கெடுதல், உண் மையான ஆன்மிகப் பற்று இல்லாது போய்விட்டதுதான். அது அப்படி ஏன் ஆயிற்று என்பதற்கான காரணத்தைக் குறித்து இந்த மேடையிலிருந்துகொண்டு நான் விவாதிக்க முடியாது. நமது மூதாதைகள் சத்தியம், அகிம்சை, பிரம்மச்சரியம் ஆகிய வைகளின் அவசியத்தில் அதிக நம்பிக்கை வைத்திருந்தார்கள். அந்த நம்பிக்கையை நாம் இழந்துவிட்டோம். அவற்றின் ஆற்ற லில் நாம் ஓரளவுக்கு நம்பிக்கை வைத்திருக்கிறோம் என்பதில் சந்தேகமில்லை. அவைகளே சிறந்த கொள்கைகள். ஆனால்,பயிற்சி யில்லாத நம் பகுத்தறிவு அக்கொள்கையிலிருந்து மாறுபடு மாறு நம்மைத் தூண்டுவதால் நாம் மாறுபட்டுவிடுகிறோம். இப் பொழுது இருந்துவரும் மனப்போக்கு இருளடைந்ததாக இருந்த போதிலும், சத்தியம் அல்லது அன்பு அல்லது புலனடக்கத்தின் படி நாம் நடந்துகொண்டு வருவோமாயின், அதனால் சிறந்த பலனே ஏற்படும் என்பதை உணருவதற்குப் போதுமான நம்பிக்கை நமக்கு இல்லை. மனிதருக்கு ஆன்மிகக் கண் பார்வை மங்கிவிட்டது. ஆகையால், இன்றிருப்பதுதான் அவர்கள் கண்ணுக்குப் புலனாகிறதேயன்றி எதிர்கால நன்மை புலப்படுவ தில்லை. யார் ஒருவர், நமது புராதனமான ஆன்மிக உணர்வைத் தம்முள் திரும்ப அமைத்துக்கொள்ளுகிறாரோ அவராலேயே மிகப் பிரமாதமான சமூக சேவை செய்ய முடியும். ஆனால், நாமோ சாதாரணமானவர்கள். ஆகையால், நாம் அடைந்து விட்ட நஷ்டத்தை உணர்ந்துகொள்ள வேண்டும். அதோடு தம்முடைய சக்தி நமக்கும் பற்றும்படி செய்ய வல்லவருக்கு வழிசெய்து கொடுப்பதற்கான வகையில் நாம் நடந்துகொள்ள வேண்டும். நம் பகுத்தறிவினால் நாம் இன்று காண முடியாம லிருப்பவைகளை, நமது உள்ளங்களின் மூலம் நாம் தெளிவாக உணரும்படி அவர் செய்யவும் வேண்டும்.

உயர்ந்த நிலையில் இருப்பவர்களைப் பார்ப்போம். நமது ராஜாக் களும் மகாராஜாக்களும், வீணான வேட்டை விளையாட்டுகளிலும் குடிப்பதிலும் தங்கள் செல்வங்களையெல்லாம் வீணாக்கிக்கொண்டி ருக்கிறார்கள். அபினி தின்னும் பழக்கம் நம் மக்களின் சக்தியை யெல்லாம் உறிஞ்சிக்கொண்டு வருகிறது என்று சமீபத்தில் அறிந்தேன். குடிப் பழக்கத்தைப் போன்றே இதுவும் அதிகரித் துக்கொண்டு வருகிறதாம். இதன் விளைவு,குடிப் பழக்கத்தைவிட அபாயகரமானது. எந்தச் சமூக ஊழியரும் இத்தீமையைக் கண் டிக்காமல் சும்மா இருந்துவிட முடியாது. மேற்கத்திய நாட்டின ரைப்போல் நாம் நடந்துகொண்டு போகக்கூடாது. கௌரவத்தை யும், சுயமதிப்பையும் இழந்துவிட்ட நாட்டு மக்கள் நாம். நம் மக்களில் பத்தில் ஒரு பகுதியினர் பட்டினியால் சாகும் தறுவாயி

லிருக்கும்போது சுகபோகங்களை அனுபவித்துக்கொண்டிருக்க நமக்கு நேரமில்லை. மேற்கத்திய நாட்டினர் செய்யும் சில காரியங்கள், அவர்களுக்குத் தீமையாக இல்லாமலிருக்கலாம். ஆனால், அவைகளை நாம் செய்தால், அவை நம்மை நாசத்தில் கொண்டு போய் விட்டுவிடும். சமூகத்தில் உயர்ந்த நிலைமையில் இருந்து வருபவரிடம் உள்ள தீமைகளைச் சாதாரணமான ஓர் ஊழியர் சமாளித்து விடுவது என்பது கஷ்டமானது. அவர்கள் ஓரளவுக்கு மதிப்பைச் சம்பாதித்துக் கொண்டிருக்கிறார்கள். என்றாலும், இம்மகாநாடு கவனிக்க முடியாத விஷயமாக அவர்களுடைய நிலை இருந்துவிடக்கூடாது.

ஹிந்து,முஸ்லிம் பெண்களின் நிலைமையைப்பற்றிய விஷயமும் முக்கியமாகக் கவனிக்க வேண்டியதாகும். அவர்களுடைய கணவர்கள் பெற்றுவரும் புத்துயிரில் அவர்களுக்கும் முழுப்பங்கு இருப்பதா, இல்லையா? அவர்கள் வாக்குரிமையைப் பெற்றாகவேண்டும். இனியும் அவர்களைப் பொம்மைகளாகவோ, அடிமைகளாகவோ நடத்திக்கொண்டு போகக்கூடாது. அப்படி நடத்தி வந்தால், சமூகம் முடமானதாகவே ஆகிவிடும். இங்கும் சீர்திருத்தக்காரர்களுக்கு ஒன்று கூற விரும்புகிறேன். பெண்கள் சுதந்திரமடைவது, ஆண்களின் போக்கில் மாறுதல் ஏற்பட்டு அதற்கு ஏற்ற வகையில் காரியங்களைச் செய்வதில்தான் இருக்கிறதேயன்றி, அவர்களுக்குப் படிப்பை அளிப்பதில் இல்லை. அவர்களுக்குக் கல்வி அவசியம்தான். ஆனால், அவர்கள் சுதந்திரமடைந்த பிறகு, கல்வியைப் பெற வேண்டும். பெண்கள் தங்களுக்குரிய ஸ்தானத்தை, அவர்கள் பெறும் படிப்பினால் அடையட்டும் என்று அதுவரை காத்துக்கொண்டிருந்துவிட நாம் துணிய முடியாது. படிப்பு இல்லாமலேயே நம் பெண்கள், உலகத்தின் எப்பெண்களையும்விட சிறந்த பண்பாடுள்ளவர்களாக இருந்து வருகின்றனர். பெண்கள் முன்னேற்றமடைவதற்கான பரிகாரம், பெரும்பாலும் கணவர்களின் கையில்தான் இருக்கிறது.

நான் இந்நாடு முழுவதிலும் சுற்றிப் பார்த்து வருகிறேன். பார்க்குமிடங்களிலெல்லாம் நம் எருதுகள் கொஞ்சமும் சதை என்பதே இல்லாமல் தோலெல்லாம் எலும்போடு ஒட்டிப்போய் சுமைகளைச் சுமப்பதையோ, வயல்களில் உழுவதையோ காணும் போது என் ரத்தம் கொதித்துவிடுகிறது. நமது கால்நடைகளின் தரத்தை அபிவிருத்தியைச் செய்து, பசுக்களைப் பூசித்து வருபவர்களான இக்கால்நடைகளின் எசமானர்கள் அவற்றிற்குச் செய்யும் கொடுமைகளிலிருந்து அவற்றை மீட்டு, கசாப்புக்குக் கொண்டு போய்விடாமல் அவற்றைக் காப்பாற்றிவிட்டாலே, நமது ஏழ்மைப் பிரச்னை பாதி தீர்ந்துவிடும். கால்நடைகளிடம் ஜீவகாருண்யத்தோடு நடந்துகொள்ளும்படி நமது மக்களுக்கு நாம் போதிக்க வேண்டும். நாட்டின் மேய்ச்சல் நிலத்தைப் பத்திரமாக வைக்கும்படி அரசாங்கத்தையும் கேட்டுக்கொள்ள வேண்டும். பசுக்களைப்

பாதுகாப்பது நம் பொருளாதார நன்மைக்கு அவசியமானது. பலவந்தப்படுத்துவதனல் இதை நிறைவேற்றிவிட முடியாது. பசுக்களைக் கசாப்புக்குக் கொண்டு போய்விட வேண்டாம் என்று நமது ஆங்கில நண்பர்களையும், நமது நாட்டு முஸ்லிம்களையும், அவர்களுடைய சிறந்த உணர்ச்சிக்கு வேண்டுகோள் விடுப்பதன் மூலம் கேட்டுக்கொள்ளுவதனுலேயே அதைச் செய்ய முடியும். கிழட்டுக் கால்நடைகளைப் பராமரிக்கும் இடங்கள், பசுப் பாது காப்புச் சங்கங்கள் ஆகியவற்றின் நிர்வாகங்களைச் சீர்திருத்தியாக வேண்டியதும் இவ்விஷயத்தைச் சார்ந்தது. பசுப் பாது காப்பு மிகவும் கஷ்டமான பிரச்னை. இதற்குச் சரியான பரிகாரம், ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே சரியான ஒற்றுமை ஏற்படும்படி செய்து பக்ரீத் கலவரங்களை அடியோடு போக்கி விடுவதிலேயே இருக்கிறது.

பல சங்கங்கள் அற்புதமான சமூக சேவைகளைச் செய்து வருகின்றன. நான் கேட்டுக்கொண்டதன் பேரில், இவை செய் திருக்கும் வேலைகளைப் பற்றிய பிரசுரங்களையெல்லாம் அன்புடன் எனக்கு அளித்திருக்கிருர்கள். நான் கூறிய வேலைகள் பலவற்றைச் சில சங்கங்கள் தங்கள் வேலைத் திட்டத்தில் சேர்த்துக்கொண்டி ருப்பதைக் காண்கிறேன். எல்லாச் சங்கங்களுமே எந்த வகுப்புச் சார்பும் இல்லாதவை. இந்நாட்டின் முக்கியமான ஆண்களும் பெண்களும் அவைகளில் ஈடுபட்டிருக்கின்றனர். ஆகையால், சிறந்ததான சேவைகளைச் செய்வதற்கு வேண்டிய வாய்ப்புகள் அதிகம் இருக்கின்றன. ஆனல், இந்த வேலையின் பலனை நாட்டு மக்கள் சரியானபடி அடைய வேண்டுமானல், ஸ்ரீ கோகலே சொன்னது போல, இப்பணிக்குத் தங்கள் வாழ்க்கையையே அர்ப்பணம் செய்துகொள்ளும் ஊழியர்கள் தயாராயிருக்க வேண்டும். அப்படிப்பட்ட ஊழியர்களை எனக்கு அளியுங்கள்; இன்றும் நம் நாட்டைப் பாதித்து வரும் எல்லாத் தீமைகளையும் அவர்கள் போக்கிவிடுவார்கள் என்று நான் உங்களுக்கு உறுதி மொழி அளிக்கிறேன்.

['மகாத்மா காந்தியின் கட்டுரைகளும் பிரசங்கங்களும்' என்ற தலைப்பில் ஜி. ஏ. நடேசன் கம்பெனியார் வெளியிட்ட நூலிலிருந்து எடுத்தது.]

பகுதி இரண்டு

# தீண்டாமை ஒழிப்பு

## 1

## தீண்டாதார் பற்றிய பிரதிக்ஞை

*[1916 பிப்ரவரி 16-ஆம் தேதி சென்னை கிறிஸ்தவ இளைஞர் சங்கத்தின் மண்டபத்தில் மகாத்மா காந்தி பேசினர். அக்கூட்டத்திற்குச் சென்னை கிறிஸ்தவக் கல்லூரியைச் சேர்ந்த பூஜ்ய ஜி. பிட்டன்டிரிக் தலைமை வகித்தார். அப்பொழுது, இந்தியாவில் எங்கோ தாம் ஆரம்பிக்கப் போகும் ஆசிரமத்தைக் குறித்துப் பேசினர். சபர்மதி சத்தியாக்கிரக ஆசிரமம் அப்பொழுது ஆரம்பமாகவில்லை. தாம் ஆரம்பிக்கப் போகும் சத்தியாக்கிரக ஆசிரமத்தில் சேருபவர்கள் அனுசரிக்க வேண்டிய பிரதிக்ஞையைக் குறித்துக் காந்திஜி சொன்னர். அதில் தீண்டாதார் விஷயத்தில் ஆசிரமவாசிகள் எடுத்துக்கொள்ள வேண்டிய பிரதிக்ஞையைக் குறித்து மகாத்மா கூறிய பகுதியே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]*

ஹிந்து சமயம், அழிக்க முடியாததான ஒரு பெருங் களங்கத்தைத் தன்னிடம் வைத்துக் கொண்டிருக்கிறது. இது அனாதி காலந்தொட்டு நமக்கு வந்துகொண்டிருக்கிறது என்று கூறப்படுவதை நம்ப நான் மறுத்துவருகிறேன். 'தீண்டாமை' என்ற துக்ககரமான, அக்கிரமமான, அடிமையாக்கும் உணர்ச்சி, வாழ்வின் சுழலில் நாம் மிகவும் தாழ்ந்து போயிருந்த நிலையில் நமக்கு வந்திருக்க வேண்டும். அந்தத் தீமை நம்மை இன்னும் ஒட்டிக் கொண்டிருப்பதோடு அது இன்னும் நம்மிடம் நிரந்தரமாக இருந்துகொண்டும் வருகிறது. அது நமக்கு ஒரு சாபக்கேடு என்றே எனக்குத் தோன்றுகிறது. அந்தச் சாபக்கேடு நம்மிடம் இருந்துவரும் வரையில், இப் புண்ணிய பூமியில் நாம் அனுபவிக்க நேரும் ஒவ்வோர் துன்பமும், நாம் செய்துவரும் இப் பெரிய, மன்னிக்க முடியாத குற்றத்திற்கு ஏற்ற, சரியான தண்டனை என்றே நான் எண்ணுவேன். ஒருவர், அவர் செய்யும் தொழிலின் காரணமாகத் தீண்டப்படாதவராகிறுர் என்று சொல்லப்படுவது யாரும் புரிந்துகொள்ள முடியாத விஷயம். மாணவர் உலகத்தைச் சேர்ந்தவர்களான நீங்கள், எல்லா வகையான இக்காலக் கல்வி

யைப் பெற்றுவருகிறவர்கள். இப் பெருங் குற்றத்திற்கு நீங்களும் உடந்தையாகி விடுவீர்களானல், நீங்கள் படிப்பதைவிட கல்வி பெருமலே இருப்பது எவ்வளவோ மேல்.

எத்தனையோ சங்கடங்களுக்கிடையே நாம் இருந்து வருகிறோம் என்பது உண்மையே. தீண்டத்தகாதவர் என்று நினைக்கத் தக்கவர் யாருமே இல்வுலகில் இருக்க முடியாது என்பதை நீங்கள் உணரலாம். ஆனல், நீங்கள் உணருவதை உங்கள் குடும்பங்களும் உணரும்படி செய்ய உங்களால் முடியாது; உங்களுக்குச் சுற்றுப்புறங்களில் இருப்பவர்கள் உணர்ந்து கொள்ளும்படி செய்யவும் ஆகாது. ஏனெனில், உங்கள் எண்ணங்கள் அந்நிய மொழியின்மூலம் உங்களுக்குத் தோன்றியவை; உங்கள் சக்தியெல்லாம் அந்த அந்நிய மொழியைக் கற்பதிலேயே ஈடு படுத்தப்பட்டுவிடுகிறது......

[ஜி. ஏ. நடேசன் கம்பெனியார் வெளியிட்ட 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும் கட்டுரைகளும்' என்ற நூலிலிருந்து எடுத்தது.]

## 2

# எனது வாழ்வின் ஆர்வம்

ஏப்ரல் ஆறும் தேதி நான் நெல்லூரில் இருந்தேன். அங்கே 'தீண்டாதார்'களைச் சந்தித்தேன். இன்று நான் பிரார்த்தித்துக் கொண்டதைப் போன்றே அன்றும் நான் வருமாறு பிரார்த்தித்துக் கொண்டேன்: நான் மீண்டும் ஜென்மம் எடுப்பதானல், 'தீண்டாதவ'னுகவே நான் பிறக்க வேண்டும். இந்த மகாமோசமான நிலைமையிலிருந்து என்னையும் அவர்களையும் விடுவித்துக் கொள்ளுவதை முன்னிட்டும், அவர்களுக்கு இழைக்கப்பட்டு வரும் துன்பங்களையும் துயரங்களையும், அவர்களுக்குச் செய்யப்படும் அவமதிப்புகளையும் அவர்களுடன் சேர்ந்து நானும் பகிர்ந்து கொள்ளுவதற்காகவுமே நான் 'தீண்டாதவ'னுகப் பிறக்க வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொள்ளுகிறேன். என்னுடைய ஆசைகள் நிறைவேருமல், 'தீண்டாதா'ருக்கு நான் செய்யும் சேவை முற்றுப் பெருமல், என் ஹிந்து தருமம் பூரணமடையாமல் நான் இறந்துவிட நேருமாயின், என்னுடைய ஹிந்து தருமம் பூரணமாக நிறைவேறும்படி செய்வதற்காக, நான் 'தீண்டாதா'ரிடையே பிறக்க வேண்டும் என்றும் பிரார்த்தித்துக் கொண்டேன்.

[அகமதாபாத் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் மகாநாட்டில் செய்த பிரசங்கத்திலிருந்து எடுத்தது.]

—'எங் இந்தியா' - 4—5—1921

# 3

# என் கருத்தின் ஆரம்பம்

ஹிந்து சமயத்திற்குத் தீண்டாமை மிகப் பெரியதோர் களங்கம் என்று கருதுகிறேன். தென்னுப்பிரிக்கப் போராட்டத்தினுல் ஏற்பட்ட கடுமையான அனுபவத்தைக் கொண்டு எனக்கு ஏற்பட்ட கருத்தன்று இது. நான் ஒரு சமயம் கடவுள் நம்பிக்கை இல்லாதவனுக இருந்ததனுல் இந்தக் கருத்து எனக்கு ஏற்பட்டு விடவும் இல்லை. கிறிஸ்தவ சமய நூல்களை நான் ஆராய்ந்ததனுல் எனக்குத் தீண்டாமையைக் குறித்து இவ்வித அபிப்பிராயம் தோன்றிவிட்டது என்று சிலர் நினைக்கிருர்கள். அதுவும் முற்றிலும் தவருனதாகும். பைபிளிடமோ, பைபிளைப் பின்பற்றுபவர்களிடமோ எனக்குப் பழக்கம் ஏற்படுவதற்கும், அதைப் பெருமையாக நான் நினைப்பதற்கும் வெகு காலத்திற்கு முன்னுலேயே எனக்கு இக் கருத்து இருந்து வந்திருக்கிறது.

எனக்குப் பன்னிரண்டு வயதுகூட ஆவதற்கு முன்னுலேயே இந்த எண்ணம் எனக்குப் பிறந்துவிட்டது. உகா என்ற தோட்டி, ஒரு 'தீண்டாதவர்.' அவர் எங்கள் வீட்டுக் கக்கூசுகளைச் சுத்தம் செய்து வந்தார். அவரைத் தொட்டுக் கொள்ளுவதில் என்ன தவறு இருக்கிறது, நான் அவரைத் தொடக்கூடாது என்று ஏன் தடுக்கப்படுகிறேன் என்று என் அன்னையை அடிக்கடி கேட்டுவருவேன். அகஸ்மாத்தாக உகாவை நான் தொட்டுவிட்டாலோ, உடனே நான் நீராடும்படி செய்வார்கள். இயல்பாகவே இதற்கு நான் உடன்பட்டுவந்த போதிலும், தீண்டாமை சமய சம்பந்தமானது அல்ல, அது சமய சம்மதமானதாக இருக்கவே முடியாது என்று கூறி என் ஆட்சேபத்தைத் தெரிவித்துக் கொண்ட பிறகே அவர்கள் கூறுகிறபடி ஸ்நானம் செய்துவிட்டு வருவேன். பெற்ருேரிடம் கடமை உணர்வும் கீழ்ப்படிதலும் கொண்டிருந்த குழந்தை நான். பெற்ருேரிடம் மரியாதையோடு நடப்பதற்கு மாறுபடாத வகையில் தீண்டாமை சம்பந்தமாக என் பெற்ருேர்களுடன் எனக்கு எப்பொழுதும் தகராறு ஏற்படும். உகாவைத் தீண்டிவிடுவது பாவம் என்று நினைப்பது தவருனது என்று என் தாயாரிடம் கூறுவேன்.

நான் பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருந்தபோது நான் அடிக்கடி 'தீண்டாதா'ரைத் தொட்டுவிட நேரும். இந்த உண்மையை என் பெற்ருேரிடம் கூருமல் நான் மறைத்துவிடுவதே இல்லை. என்னை மீண்டும் பரிசுத்தம் செய்துகொள்ளுவதற்காக என் தாயார் குறுக்கு வழியான ஒரு யோசனையைக் கூறுவார். வழி நெடுகப்போய்க் கொண்டிருக்கும் ஒரு முஸ்லிமைத் தொட்டுவிட்டால் அந்தத் தீட்டு ரத்தாகிவிடும் என்பார் என் தாயார். என் தாயாரிடம் எனக்கு இருந்த மதிப்பினுலும் பக்தியினுலும் அவ்வாறே நான் செய்து வந்தேன். ஆனுல், இது சமயக்

கடமை என்று மாத்திரம் நான் என்றுமே எண்ணியது இல்லை. கொஞ்ச காலத்திற்குப் பிறகு நாங்கள் போர் பந்தருக்குக் குடி போய்விட்டோம். என்னை ஆங்கிலப் பள்ளிக் கூடத்திற்கு அனுப்புவதற்கு முன்னால், அங்கேதான் எனக்கு முதன் முதலில் சமஸ்கிருதப் பழக்கம் ஏற்பட்டது. சமஸ் கிருதம் கற்றுக்கொள்ளுவதற்காக என்னையும் என் சகோதர ரையும் ஒரு பிராம்மணரிடம் ஒப்படைத்தார்கள். அவர் எங்க ளுக்கு ராம ரட்சையும் விஷ்ணு பூஜையும் சொல்லிக் கொடுத் தார். 'ஜலே விஷ்ணு:', 'ஸ்தலே விஷ்ணு:', என்று படித்தது என் நினைவைவிட்டு என்றுமே போனதில்லை. 'கடவுள் நீரில் இருக்கிறார்', 'கடவுள் நிலத்தில் இருக்கிறார்' என்பதே அது. தாயன்போடு கூடிய ஒரு கிழ அம்மையாரும் எங்களுடன் இருந்து வந்தார். அப்பொழுது நான் அதிகமாகப் பயப்படுபவனாக இருந்ததால், விளக்கை அணைத்து இருளானதும் பிசாசும் பூதங் களும் வந்துவிடும் என்று எண்ணிக்கொள்வேன். அக் கிழ அம்மையார், எனக்கு இருந்த பயத்தைப் போக்குவதற்காக ராம ரட்சை மந்திரத்தை உச்சரிக்கும்படியும், அதை உச்சரித்ததும் பேய் பிசாசுகளெல்லாம் பறந்தோடிவிடும் என்றும் கூறினார். அப்படியே உச்சரித்தும் வந்தேன். இதனால் நல்ல பலன் இருப்ப தாகவும் எண்ணினேன். 'தீண்டாதாரை'த் தொட்டுவிடுவது பாபம் என்ற வாசகம் எதுவும் ராம ரட்சையில் இருப்பதாக நான் அப்பொழுது நம்பமுடியவே இல்லை. அதன் பொருளை அப் பொழுது நான் புரிந்துகொள்ளவில்லை; சரியாகத் தெரிந்து கொள்ளவுமில்லை. ஆனால், ஒரு விஷயத்தில் எனக்கு நிச்சயமான நம்பிக்கை உண்டு. பிசாசுகளிடம் கொள்ளும் பயத்தை யெல் லாம் போக்கிவிட வல்லதான ராம ரட்சை, 'தீண்டாதாரை'த் தொட்டுவிடுவது பற்றிய பயத்துக்கு ஒருபோதும் இடம் கொடுக்க முடியாது.

எங்கள் குடும்பத்தில் ராமாயணத்தைத் தவறாமல் படிப்பது வழக்கம். பதா மகராஜ் என்ற பிராம்மணர் வந்து அதைப் படிப் பார். அவருக்குக் குஷ்டநோய் இருந்தது. ராமாயணத்தைத் தொடர்ந்து படித்து வந்தால் குஷ்ட நோய் போய்விடும் என்று அவர் நம்பினார். உண்மையில் அவருக்கு அந் நோய் குணமாகி விட்டது. இன்று 'தீண்டாதார்' என்று யார் கருதப்படுகிறார் களோ அவர்களில் ஒருவர், ராமரைப் படகில் ஏற்றிக் கங்கையைக் கடந்துகொண்டு போய்விட்டார் என்று ராமாயணம் கூறுகிறது. அப்படியிருக்க, தீட்டாகிவிட்ட ஆன்மாக்கள் என்ற காரணத்திற் காக மனிதரில் எவரையும் 'தீண்டாதார்' என்று ராமாயணம் எவ்விதம் கொள்ள முடியும்?' என்று எனக்குள்ளேயே எண்ணிக் கொண்டேன். 'அசுத்தமாகிவிட்டவர்களைத் தூய்மைப்படுத்து கிறவர்' கடவுள் என்றும், அது போன்ற குணங்கள் அவருக்கு உண்டு என்றும் தோத்திரம் செய்கிறோம். அப்படியிருக்க, ஹிந்து மதத்தில் பிறந்த ஒருவரை அசுத்தமாகிவிட்டவர் என்றோ, 'தீண்டாதவர்' என்றோ கூறுவது பாபம், அப்படிச் சொல்லுவது

பேய்க் குணம் என்பது இதிலிருந்து தெரிகிறது. ஆகவே, அப்பிடிக் கூறுவது பெரிய பாபம் என்று சொல்லிக் கொண்டிருப்பதில் நான் எப்பொழுதும் களைப்படைவதே இல்லை. இது என் பன்னிரண்டாவது வயதிலேயே எனக்குத் திடநம்பிக்கையாக உருப்பெற்றுவிட்டது என்று நான் பாசாங்கு செய்யவில்லை. ஆனால். தீண்டாமை என்பது பாபம் என்று அப்பொழுதே நான் கருதினேன் என்றுதான் கூறுகிறேன். வைஷ்ணவர்களுக்கும் வைதீக ஹிந்துக்களுக்கும் தெரிந்திருக்க வேண்டும் என்பதற்காகவே இந்த விவரங்களை நான் இங்கே கூறுகிறேன்.

[அகமதாபாத்தில் நடந்து ஒடுக்கப்பட்டவர்கள் மகாநாட்டில் செய்த பிரசங்கத்திலிருந்து எடுத்தது.]

—'எங் இந்தியா' – 27—4—1921

# 4

# தீண்டாமை என்பது குற்றம்

தீண்டாமைக் குற்றத்தை நாம் செய்துள்ளோம். அந்த பாபத்தின் நியாயமான பலனை நாம் இப்பொழுது அனுபவித்துக் கொண்டு வருகிறோமல்லவா? எதை விதைத்தோமோ அதையே இன்று அறுவடை செய்து வருகிறோமல்லவா? நம் உற்றார் உறவினர்களிடத்திலேயே டயர், ஓட்வியர் கொடுமைகளை அனுசரித்து வந்திருக்கிறோமல்லவா? 'பறையர்'களை நாம் ஒதுக்கித் தூரத்தில் வைத்திருக்கிறோம். இதற்குப் பதிலாக நாம் பிரிட்டிஷ் காலனிகளில் ஒதுக்கித்தள்ளி வைக்கப்பட்டிருக்கிறோம். பொதுக் கிணறுகளில் தண்ணீர் எடுத்துக்கொள்ள அவர்களை அனுமதிக்க நாம் மறுக்கிறோம். நம் எச்சில் இலைகளில் மிஞ்சியதை அவர்களுக்குப் போடுகிறோம். 'பறையன்' நிழல் பட்டாலும் தீட்டு என்கிறோம். ஆங்கிலேயர் மீது நாம் என்னென்ன குற்றச் சாட்டுகளைக் கூறுகிறோமோ, அத்தனை குற்றச்சாட்டுகளையும் 'பறையர்'கள் நம்மீது சாட்ட முடியும்.

ஹிந்து மதத்திற்கு இருந்துவரும் இந்த மாசைப் போக்குவது எப்படி? 'மற்றவர்கள் உனக்கு என்ன செய்ய வேண்டும் என்று விரும்புகிறாயோ, அதையே நீ மற்றவர்களுக்குச் செய்.' ஆங்கில அதிகாரிகளுக்கு நான் அடிக்கடி ஒன்று கூறிவருகிறேன். அவர்கள் இந்தியாவின் நண்பர்களும் சேவகர்களும் என்றால், தாங்கள் உயர்வானவர்கள் என்று எண்ணிக் கொண்டிருப்பதிலிருந்து அவர்கள் இறங்கி வரவேண்டும்; இந்தியருக்குத் தாங்களே போஷகர்கள் என்பதை விட்டுவிட வேண்டும்; எல்லா வகையிலும் நாம் நண்பர்களே என்பதைக் காட்டிக் கொள்ளுவதற்காக அன்போடு கூடிய காரியங்களை அவர்கள் செய்ய

வேண்டும்; சகோதர ஆங்கிலேயர்களைத் தங்களுக்குச் சமமானவர்கள் என்று எவ்வாறு எண்ணுகிறார்களோ, அதேபோல இந்தியர்களும் தங்களுக்குச் சமமானவர்கள் என்பதை அவர்கள் நம்ப வேண்டும். பஞ்சாப், கிலாபத் சம்பவங்களின் அனுபவங்களுக்குப் பிறகு, நான் இன்னுமொரு படிமேலே போய், செய்துவிட்ட தவறுகளுக்காக அவர்கள் வருந்தி, தங்களுடைய மனப்போக்கையும் மாற்றிக் கொள்ளும்படி கேட்டிருக்கிறேன்.

அது போலவே, ஹிந்துகளாகிய நாமும் நாம் செய்த தவறுகளுக்காகப் பச்சாதாபப்பட்டு, அவர்கள் விஷயத்தில் நம்முடைய போக்கையும் நடவடிக்கைகளையும் மாற்றிக்கொள்ள வேண்டியது அவசியமாகியிருக்கிறது. ஆங்கிலேயர்கள் அனுஷ்டித்த இந்திய அரசாங்க முறை எவ்வளவு மோசமானதென்று நாம் நம்புகிறோமோ, அதே போன்ற பைசாசத்தனமான முறையால் நாம் தீண்டாதாரை அடக்கி ஒடுக்கி வந்திருக்கிறோம். முகத்தில் அறைவதுபோல் அவர்களுக்காக ஏதோ ஒரு சில படுமோசமான பள்ளிக்கூடங்களை ஏற்படுத்துவது கூடாது. அவர்களைவிட நாம் உயர்ந்தவர்கள் போல் நடந்துகொள்ளுவதும் கூடாது. நாம் ஒரே உதிரத்தில் ஊறிய சகோதரர்களைப் போல் அவர்களை நடத்த வேண்டும். உண்மையில் அவர்கள் அப்படித்தானே.

மற்றும், அவர்களிடமிருந்து நாம் பறித்துக்கொண்ட பரம்பரை உரிமைகளை அவர்களிடமே திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். இவ்விதம் செய்வது ஆங்கிலம் அறிந்த ஏதோ ஒரு சில சீர்திருத்தக்காரர்களின் நடவடிக்கைகளாக மாத்திரம் இருக்கக்கூடாது. ஆனால், மக்கள் தாங்களாகவே முன் வந்து மனப்பூர்வமாக அத்தகைய செய்கையில் ஈடுபட வேண்டும். முன்பே இந்தச் சீர்திருத்தம் ஏற்பட்டிருந்திருக்க வேண்டும். எனவே, இனியும் அதற்காக நாம் காலவரையின்றிக் காத்துக்கொண்டிருக்கும்படி நேரக்கூடாது. அநேகமாக இந்த ஆண்டிற்குள் அந்தச் சீர்திருத்தத்தை அமுலுக்குக் கொண்டுவர நாம் முயற்சிக்க வேண்டும். அதற்கான தவத்துக்கும் ஏற்பாடுகளுக்கும் பரிசோதனைகளுக்கும் இவ்வருடமே ஏற்றதாகும்.

—'எங் இந்தியா' – 19—1—1921

## 5

# மிருகங்களைவிடக் கேடுகெட்ட நிலை

ஹிந்துக்களில் ஒரு பெரும் பகுதியினரை மிருகங்களைக் காட்டிலும் கேவலமாகத் தாழ்த்தி வைத்துள்ள முறையை, எனது ஆன்மா அடியோடு வெறுக்கிறது. பஞ்சமன்—இங்கே தீண்டாதார் என்ற வார்த்தையை உபயோகிக்கவில்லை—

என்ற அந்த ஏழையை அவர் பாட்டை அவர் பார்த்துக் கொள்ளட்டும் என்று விட்டுவிட்டாலேயே, தொல்லையான அந்தப் பிரச்னை தீர்ந்துவிடும். ஆனால், துரதிர்ஷ்டவசமாக, அவர் தம்முடைய மனத்தையோ. அல்லது வேலையையோ தம்முடையதென்று சொந்தம் கொண்டாடுவதற்கில்லை. எங்கேயாவது மிருகத்துக்குத் தன் மனம் என்றும் தன் வேலை என்றும் சொந்தம் கொண்டாட முடியுமா? எஜமானனின் மனம்தான் அவரது மனம்; எஜமானனின் வேலைதான் அவருடைய வேலை. ஒரு பஞ்சமருக்குத் தனக்குச் சொந்தம் என்று சொல்லக்கூடிய இடம் உண்டா? தான் நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபட்டுச் சுத்தம் செய்யும் ரஸ்தாக்களில் நடக்கக்கூட அவருக்கு உரிமையில்லை. மற்றவர்களைப் போல் உடை உடுத்திக்கொள்ளவும் அவருக்கு உரிமையில்லை. இங்நிலையில், பஞ்சம சகோதரர்களிடம் நாம் சகிப்புத்தன்மை காட்டுகிறோம் என்று கூறுவது, பாஷையைத் துஷ்பிரயோகம் செய்வதாகும். நாம் அவர்களைக் கீழே அழுத்திவிட்டோம். அவ்விதம் செய்துவிட்டு, அவர்களுடைய தாழ்ந்த நிலையையே, அவர்களுக்கு விரோதமாக உபயோகிக்கும் நெஞ்சத் துணிச்சலும் நமக்கு ஏற்பட்டிருக்கிறது.

—'எங் இந்தியா' - 12—6—1924

6

# இறைவனின் அன்பும் அருளும்

**தா**ழ்த்தப்பட்ட வகுப்பினரை ராஜீய நோக்கத்துக்காகப் பயன்படுத்திக்கொள்ளும் மனப்பான்மை இன்று ஹிந்து சகோதரர்களிடையே நிலவி வருகிறது. அத்தகைய மனப்பான்மை வேண்டாமென ஹிந்து சகோதரர்களை எச்சரிக்கிறேன். சாதி ஹிந்துக்கள், தங்களுடைய நலனுக்காகவும் ஹிந்து மதத்தின் நலனுக்காகவும் ஒரு தவம் செய்யக் கடமைப்பட்டிருக்கிறார்கள். தீண்டாமையை ஒழிப்பதுதான் அந்தத் தவமாகும். இன்று தங்களைச் சுத்தம் செய்துகொள்ள வேண்டியவர்கள் தீண்டாதார் அல்ல; உயர்ந்த சாதியினர் என்று சொல்லுகிறார்களே அவர்கள் தான்.

தீண்டாதார்களிடையே பிரத்தியேகமாக எத்தகைய கெட்ட பழக்கமும் நிலவவில்லை; அழுக்கும் அசுத்தமும்கூட நிலவவில்லை. நமது மமதை, உயர்ந்த ஹிந்துக்களான நம்மிடையே உள்ள குற்றம் குறைகளைப் பார்க்க முடியாமல் நம் கண்களை மறைத்துவிடுகிறது; தலை தூக்க முடியாதவாறு நாம் தாழ்த்தி வைத்துள்ள சகோதரர்களின் குற்றம் குறைகளை மிகைப்படுத்திக் காட்டுகிறது.

மதங்களைப்போல் நாடுகளும் தராசு முனையில் மதிப்பிடப்படுகின்றன. இறைவனின் அன்பும் அருளும் எந்த ஒரு சமூகத்துக்கோ அல்லது நாட்டுக்கோ ஏகபோக பாத்தியமானவையல்ல. கடவுளுக்காகக் காத்துக் கிடக்கும் சகலருக்கும் சமமாக அவரது அன்பும் அருளும் கிடைக்கின்றன. அநீதியிலோ, அசத்தியத்திலோ அல்லது பலாத்காரத்திலோ நம்பிக்கை வைக்கும் மதமும் தேசமும் இந்த வையகத்திலிருந்து மறைந்தொழிந்துவிடும்.

**ஆண்டவன்தான் அருள் ஒளி, அந்தகாரமல்ல. ஆண்டவன்தான் அன்பு, துவேஷமல்ல. ஆண்டவன்தான் சத்தியம், அசத்தியமல்ல. ஆண்டவன் ஒருவர்தான் மாபெரும் மூர்த்தி.**

ஆண்டவன் சிருஷ்டித்த நாமெல்லோரும் தூசிக்கு ஒப்பானவர்கள். எனவே, நாம் அடக்கத்துடன் தலை வணங்கி, ஆண்டவன் சிருஷ்டிகளில் மிக மிகத் தாழ்ந்தவர்களுக்குக்கூட இடம் உண்டு என்பதை உணர்வோமாக. கந்தல் துணியை உடுத்திக் கொண்டிருந்த சுதாமாவை ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கௌரவித்தார்; வேறு எவரையும் அவ்வளவு கௌரவிக்கவில்லை.

அன்புதான் மதத்தின் ஆணிவேராகும்.

—'எங் இந்தியா' - 26—12—1924

# 7

# பூகம்பமும் தீண்டாமையும்

நான் திருநெல்வேலிக்குச் சென்றபோது முதன் முதலாக, பூகம்பத்தைத் தீண்டாமையுடன் இணைத்துப் பேசினேன். நான் மிகுந்த ஆலோசனையுடனும் நிறைந்த இதயத்திலிருந்தும் பேசினேன். நான் எதை நம்பினேனோ, அதையேதான் பேசினேன். இயற்கை உற்பாதங்கள் உடலிலும் உள்ளத்திலும் மாறுதல்களை உண்டாக்குகின்றன என்பது நீண்ட காலமாக எனது நம்பிக்கையாகும். அது போலவே, உள்ளத்தில் ஏற்படும் உற்பாதங்கள் இயற்கையில் மாறுதல்களை உண்டாக்குகின்றன என்பதும் உண்மை.

பூகம்பம், கடவுளின் தான்தோன்றித்தனமான செய்கையோ அல்லது வெறும் கண்மூடித்தனமான சக்திகளின் சந்திப்போ அல்ல என்பதே என் கருத்தாகும். கடவுள் விதித்துள்ள சட்டங்கள் யாவையுமோ, அல்லது அவை எவ்வாறு இயங்குகின்றன என்பதையோ நாம் அறியோம். மிகப் பிரபல விஞ்ஞானியின் அல்லது மிகப் பெரிய ஆன்ம ஞானியின் அறிவு ஒரு சிறு தூசிக்கு ஒப்பாகும். இந்தப் பூமியில் என் தந்தைக்கும் எனக்கும் உள்ள சம்பந்தம் கடவுளுக்கும் எனக்கும் இராமலிருக்கலாம். எனினும், கடவுள் தந்தையைக் காட்டிலும்

எவ்வளவோ அதிகம் என்பதில் ஐயமில்லை. என் வாழ்க்கையின் மிக மிகச் சிறிய அணுவுக்கொப்பான சம்பவமும் கடவுளின் கட்டளைப்படியே நடக்கிறது. அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்பது அப்படியே முற்றிலும் உண்மை என்பதே எனது நம்பிக்கையாகும். நான் விடும் ஒவ்வொரு மூச்சும் அவரது இஷ்டத்தையே பொறுத்திருக்கிறது.

கடவுளும் அவரது சட்டமும் ஒன்றே. சட்டம்தான் கடவுள். கடவுளுக்கு இருப்பதாகக் கூறப்படும் சக்தி வெறும் சக்தி அல்ல. அவரே சக்திதான். அவர்தான் சத்தியம், அன்பு, சட்டம், இன்னும் மானிடரின் அறிவு கண்டுபிடித்துக் கூறும் வார்த்தைகள் யாவும். 'உலக நியதி எக்காலத்திலும் எவராலும் தவிர்க்க முடியாதது. அது இயங்குவதில் கடவுள்கூடத் தலையிடுவதில்லை' என்ற குருதேவரின் கருத்தை நான் நம்புகிறேன். ஏனெனில், கடவுள்தான் உலக நியதி, உலகச் சட்டம். அந்தச் சட்டத்தையோ அல்லது சட்டங்களையோ நாம் பூரணமாக அறியோம் என்பதே நான் கூறுவதாகும். உலகம் இயங்கும் சட்டங்களை நாம் போதிய அளவு அறியாததாலேயே, உற்பாதங்கள் நமக்கு அப்படித் தோன்றுகின்றன.

உலகில் ஏற்படும் தண்ணீர்ப் பஞ்சங்கள், வெள்ளக் கொடுமைகள், பூகம்பங்கள் போன்றவை இயற்கை உற்பாதங்களாகத் தோன்றினும், மனிதனின் ஒழுக்கத்துக்கும் அவைகளுக்கும் எப்படியோ சம்பந்தம் இருக்கிறது என்பதே என் அபிப்பிராயம். எனவே, தீண்டாமைப் பாவத்துக்காகப் பூகம்பம் ஏவப்பட்டதாகவே எனது உள் உணர்வு அறிவுறுத்துகிறது, தீண்டாமையை எதிர்த்து நான் பிரசாரம் செய்யும் குற்றம்தான் பூகம்பத்துக்குக் காரணம் என்று சொல்லவும் சனாதனிகளுக்குப் பூரண உரிமை உண்டு. தீண்டாமைக்காக சாதி ஹிந்துக்கள் வருந்தி, ஆன்ம சுத்தி செய்துகொள்ள வேண்டும் என்பதற்காகவே பூகம்பம் உண்டாயிற்று என்பது என் நம்பிக்கை.

இயற்கையின் விதிகள் இயங்குவது பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். எனினும், கடவுள் இருப்பதை அவநம்பிக்கைவாதிகளுக்கு நான் நிரூபிக்க முடியாவிட்டாலும் கடவுளிடம் நம்பிக்கை வைப்பதை நான் தவிர்க்க முடியாதல்லவா? அது போலவே, பீகார் பூகம்பத்துக்கும் தீண்டாமைப் பாவத்துக்கும் சம்பந்தம் இருப்பது எனது உள் உணர்வுக்குத் தெரிந்தாலும், அந்தச் சம்பந்தத்தை நான் நிரூபிக்க முடியாது.

பின்னர் எனது நம்பிக்கை ஆதாரமற்றது என்று ஏற்பட்டால்கூட, அதனால் எனக்கும் என்னைப் போல் நம்பியவர்களுக்கும் நன்மையே உண்டாகும். எப்படியெனில், பிறகு தீண்டாமை கொடிய பாவம் என்பதற்காக ஆன்ம சுத்தி செய்து

கொள்ளும் விஷயத்தில், நாங்கள் இன்னும் அதிக தீவிர முயற்சிகள் எடுத்துக் கொள்ளுவதற்கு அது தூண்டுகோலாக இருக்கும்.

எங்கள் நம்பிக்கை ஆதாரமற்றது என்று ஏற்படலாம் எனக் கூறுவதில் உள்ள ஆபத்தை நான் முற்றிலும் நன்கு அறிவேன். ஆனால், எனக்கு நெருக்கமானவர்களும் அன்பானவர்களும் கஷ்டப்படும்போது, பிறரின் ஏளனத்துக்காகப் பயந்து நான் எனது நம்பிக்கையைக் கூரை மீது நின்று பிரகடனம் செய்யாவிடில், நான் பொய்யனாகவும் கோழையாகவும் ஆகிவிடுவேன்.

பூகம்பத்தின் வெளித் தோற்றமான கஷ்ட நஷ்டங்களைச் சீக்கிரத்தில் மறந்துவிடுவார்கள் ; சேதங்களை ஓரளவு சீர்திருத்தியும் விடுவார்கள். ஆனால், தீண்டாமைப் பாவத்துக்காகப் பூகம்பம் தெய்வத்தினுடைய கோபத்தின் அறிகுறியாக இருக்கலாம். அப்படியாயின், அச்சம்பவத்திலிந்து நாம் ஒழுக்க சம்பந்தமான படிப்பினையை அறிந்து கொள்ளாமலும் பாவத்துக்குப் பச்சாத்தாபப்படாமலும் இருந்து விடுவோமாயின் அதன் விளைவு பயங்கரமாக இருக்கும்.

நாம் செய்த பாவங்களும் குற்றங்களும் எவ்வளவு மகத்தானவையாயினும், அவற்றிற்குச் சிருஷ்டியின் அமைப்பைப் பாழாக்கிச் சீரழிக்கும் சக்தியில்லை என்று குருதேவ் நம்புகிறார். ஆனால், அதில் எனக்கு நம்பிக்கையில்லை. அதற்கு மாறாக, சிருஷ்டி அமைப்பைச் சின்னாபின்னமாக்க வெறும் இயற்கை உற்பாதங்களைக் காட்டிலும் நாம் செய்யும் பாவங்களுக்கு அதிகச் சக்தி உண்டென்பதில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது.

ஜடபதார்த்தத்துக்கும் ஆன்ம பலத்துக்கும் இடையே பிரிக்க முடியாத ஓர் இணைப்பு இருக்கிறது. அந்த இணைப்பின் பலாபலன்கள் என்ன என்பது பற்றி நமக்கு எதுவுமே தெரியாததால், அது ஒரு மாபெரும் மர்மமாக இருக்கிறது ; அது நம் மனத்தின் பீதியையும் ஆச்சரியத்தையும் உண்டாக்குகிறது. நமது அறியாமையால் அந்த அதிசயத்தின் மர்மத்தை நாம் விண்டு பார்க்க முடியவில்லை. ஆனால், அந்த இணைப்பை நிரந்தரமாக உணர்ந்தோர், வெளித் தோற்றமான ஒவ்வோர் உற்பாதத்தையும், தங்கள் ஒழுக்கத்தை உத்தாரணம் செய்து கொள்ளுவதற்கு ஏற்ற சாதனமாக உபயோகித்துக் கொண்டிருக்கிறார்கள்.

பிரபஞ்சத்தின் அசாதாரணமான நிகழ்ச்சிகளுக்கும் மானிடரின் நடவடிக்கைகளுக்கும் இடையே இணைப்பு இருக்கிறதென்பதே எனது நிரந்தரமான நம்பிக்கை. அந்த நம்பிக்கையே என்னை இறைவனின் அருகில் கொண்டு போய் அடி பணியும்படியும், அவரைத் தரிசிப்பதற்குத் தயாராக இருக்கும்படியும் செய்கிறது. எனது ஆழ்ந்த அறியாமை காரணமாக நான் அந்த நம்பிக்கையை, என் எதிரிகளைக் கண்டித்துத் தாக்குவதற்கு உபயோகிப்பேனாயின், அது இழிவான ஒரு மூடநம்பிக்கையாகவே முடியும்.

—'ஹரிஜன்'-16—2—1934

பகுதி மூன்று

# தீண்டாமையும் சுயராஜ்யமும்

## 1

## தீண்டாமை உண்டு எனில் சுயராஜ்யம் இல்லை

தீண்டாமை தங்கள் மதத்தின் ஓர் அம்சமென்று ஹிந்துக்கள் வேண்டுமென்று பிடிவாதமாகக் கருதும் வரையில், தங்கள் சகோதரர்களான ஒரு பகுதியினரைத் தொடுவது பாவமென்று ஹிந்துக்களில் பெரும்பாலோர் எண்ணும் வரையில், சுயராஜ்யம் பெறுவது அசாத்தியமான காரியம். யுதிஷ்டிரர், தம்முடைய நாயும் கூட வந்தாலன்றி, சுவர்க்கத்திற்குள் பிரவேசிக்க மறுத்து விட்டார். அப்படியிருக்க, யுதிஷ்டிரரின் சந்ததிகள் தீண்டாதாரை விட்டுவிட்டுச் சுயராஜ்யம் பெறக்கூடுமென எவ்வாறு எதிர்பார்க்க முடியும் ?

நமது சகோதரர்களை அடக்கி ஒடுக்கிய குற்றத்துக்கு நாம் ஆளாகியிருக்கிறோம். அவர்களைத் தரையில் ஊர்ந்து செல்லும் படி செய்திருக்கிறோம் ; அவர்கள் மூக்குகளைத் தரையில் அழுத்தி வணங்கிக் கஷ்டப்படும்படி செய்திருக்கிறோம். கோபத்தால் கண்கள் சிவக்க அவர்களை ரெயில் வண்டிகளிலிருந்து வெளியே பிடித்துத் தள்ளியிருக்கிறோம். இதைக் காட்டிலும் அதிகமாகப் பிரிட்டிஷ் ஆட்சி நமக்கு என்ன கொடுமைகளை இழைத்து விட்டது ? டயர் மீதும், ஓட்வியர் மீதும் நாம் என்ன குற்றம் சாட்டினோமோ, அதே குற்றத்தை மற்ற நாட்டினரும், நம் சொந்த நாட்டு மக்களும்கூட நம்மீது சாட்ட முடியாதா ?

நம்மிடையுள்ள இந்தக் களங்கத்தை நாம் ஒழித்துக் கட்ட வேண்டும். சக்தியற்றவர்களுக்கும், உதவியற்ற அனாதைகளுக்கும் நாம் பாதுகாப்பு அளித்துத் தீர வேண்டும். சுயராஜ்யம் கோருவோர்களில் ஒருவர்கூட, எந்த ஒரு தனி நபரின் உணர்ச்சிகளையும் புண்படுத்துவது சாத்தியம் என்ற நிலைமை இருக்கக் கூடாது. அதுவரையில் சுயராஜ்யத்தைப் பற்றிப் பேசுவது

வீணுகும். ஒரு ஹிந்துவுக்கோ அல்லது முஸ்லிமுக்கோ, தான் சாதுக்களான ஹிந்துக்களையோ அல்லது முஸ்லிம்களையோ கேள்வி முறையின்றி நசுக்க முடியும் என்ற மமதையான எண்ணம் ஒருபோதும் இருக்கக்கூடாது. இதுதான் சுயராஜ்யம் என்பதற்குப் பொருளாகும். இந்த நிபந்தனை நிறைவேற்றப் பட்டாலன்றி, நாம் பெறும் சுயராஜ்யம் அற்ப வாழ்வாக முடிந்து விடும். நம்மைக் காட்டிலும் பலவீனர்களான சகோதரர்களுக்கு விரோதமாக நாம் இழைத்த பாவங்களிலிருந்து நம்மை நாமே விடுவித்துக் கொண்டாலன்றி, நாம் காட்டுமிராண்டிகளுக்கு ஒப்பாவோம்.

ஆனால், என்னிடத்தில் எனக்கு இன்னும் நம்பிக்கை இருக்கிறது. அன்பு உணர்ச்சி பற்றி கவி துளசிதாஸ் மனம் உருகிப் பாடியிருக்கிருர். அன்பு உணர்ச்சிதான் ஜைன, வைஷ்ணவ மதங்களுக்கு அஸ்திவாரக் கல்லாகத் திகழ்கிறது. பாகவதத்தின் சாரமும் இதுதான். கீதையின் ஒவ்வொரு சுலோகத்திலும் அன்பு உணர்ச்சி ததும்புகிறது. இந்தத் தயாள குணம், இந்த அன்பு, இந்தத் தரும குணம் மெதுவாக, ஆனால் உறுதியாக, இந்நாட்டு மக்களின் இதயங்களில் வேரூன்றி வளர்ந்து வருகிறதென்பதை, இந்தியாவில் நான் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது உணர்ந்து கொண்டேன்.

—'எங் இந்தியா' - 4—5—1921

## 2

# கடக்க முடியாத முட்டுக்கட்டை

நம்மிடையே உள்ள தீண்டாமை, நமது முன்னேற்றப் பாதையில் கடக்க முடியாத ஒரு முட்டுக்கட்டையாக இருந்தே தீரும். எனவே, மகத்தான முயற்சியெடுத்து நாம் அதை உடைத்துத் தள்ள வேண்டும். நாம் சுயராஜ்யம் பெற்றுத் தீண்டாமையையும் வைத்துக் கொண்டிருக்க முடியும் என்ற எண்ணம், நம்மில் பலருடைய மனத்திலும் பதுங்கிக் கொண்டிருப்பது போல் தோன்றுகிறது. அத்தகைய எண்ணத்தில் உள்ள முரண்பாட்டை அவர்கள் உணரவில்லை. சுயராஜ்யம், தீண்டத் தகுந்தவரைப் போல் தீண்டத்தகாதவருக்கும் உண்டு.

நாராயணவரத்திலிருந்து ஒரு நிருபர் எழுதுகிருர்: "எங்கள் பக்கங்களில் பஞ்சமர்கள் ஹிந்துக்களாலும், குறிப்பாகப் பிராம்மணர்களாலும் மிகவும் மோசமாக நடத்தப்பட்டு வருகிருர்கள். கிராமங்களில் பிராம்மணர்கள் வசிக்கும் தெருக்களில் செல்ல அவர்கள் அனுமதிக்கப்படுவதில்லை. பிராம்மணர்களுடன் பேசும்போது பஞ்சமர்கள் வெகு தூரத்தில் நின்றுதான் பேச வேண்டும்."

மேலே பிராம்மணர்கள் என்று இருக்குமிடங்களில் ஆங்கில அதிகாரிகள் என்றும், பஞ்சமர்கள் என்று இருக்குமிடங்களில் இந்தியர்கள் என்றும் வைத்துக்கொண்டு வாசியுங்கள். அப்போது உங்கள் மனம் எப்படியிருக்கிறதென்று பாருங்கள். இருந்தாலும் சில ஆங்கில அதிகாரிகள் சில பிராம்மணர்களைக் காட்டிலும் மிகவும் நல்லவர்களாக இருக்கிறார்கள் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. பிறப்பு காரணமாக ஒரு சகோதரரை நாம் சாதிப்பிரஷ்டராக நடத்தும் வரையில், நாம் சுயராஜ்யம் பெறக் கடவுள் விடமாட்டார்.

—'எங் இந்தியா' – 22—9—1921

# 3

# சுயராஜ்யம்

நம்மிடையே இருக்கும் தீண்டாமையாகிற சாபக்கேட்டை ஒழித்தாலன்றி நாம் சுயராஜ்யம் பெற முடியாது. இதை நான் சிறிதும் சந்தேகத்துக்கு இடமின்றிப் பட்டவர்த்தனமாகக் கூறியிருக்கின்றேன். நமது சமூகத்தைச் சேர்ந்த ஐந்தில் ஒரு பகுதியினரைக் குஷ்டரோகிகளைப் போல் நாம் ஒதுக்கி வைத்ததால் தான், நம்மையும் சமுதாயத்தில் சேரக்கூடாத அந்த ரோகிகளைப் போல் உலகம் முழுதும் ஒதுக்கி வைத்து வருகிறார்கள். ஆங்கிலேயர்களிடம் மாத்திரமல்ல, நம்மிடத்திலும் மன மாற்றம் ஏற்பட வேண்டும் என்பதற்கான ஒரு வேண்டுகோளே ஒத்துழையாமையாகும். முதலில் நம்மிடத்தில் மன மாற்றம் ஏற்பட வேண்டும் என்றும், பிறகு இயல்பாக ஆங்கிலேயர்களிடத்திலும் மன மாற்றம் ஏற்பட வேண்டுமென்றும் நான் எதிர்பார்க்கிறேன்.

வெகு காலமாக இருந்துவரும் சாபக்கேட்டை ஒரு நாடு ஒரே வருடத்தில் ஒழித்துவிடக் கூடுமாயின், நாம் நமது உடைகளைக் களைவது போல் ஒரு நாடு குடிப் பழக்கத்தை உதறிவிடுமாயின், ஒரு நாடு திடீரென்று தனது புராதனமான கைத்தொழிலை மீண்டும் கைக்கொண்டு ஒரே வருட காலத்தில் தன் மக்களின் ஓய்வு நேரத்தை அறுபது கோடி ரூபாய் பெறுமானம் உள்ள உடைகளை உற்பத்தி செய்வதில் உபயோகித்துக் கொள்ளுமாயின், அத்தகைய நாடு அடியோடு உருமாறிய தேசமாகிவிடும். அந்த நாட்டினுடைய அதிசய உருமாற்ற பலன் உலகத்தின் மீதும் பிரதிபலிக்கும். அந்த மாற்றம், கடவுள் உண்டு என்பது பற்றியும் கடவுளின் அருள் பற்றியும் ஏளனவாதிகளும் நம்பும்படியான ஒரு பரிசோதனையாக அமையும். எனவே, நான் கூறுவது என்னவென்றால், இவ்விதம் இந்தியாவில் அதிசய மாறுதல் ஏற்பட்டுவிடுமாயின், பிறகு சுயராஜ்யத்தை ஸ்தாபித்துக் கொள்ள இந்தியாவுக்கு உள்ள உரிமையை இப்புவியில் உள்ள

எந்தச் சக்தியும் மறுக்க முடியாது. இந்திய வானில் மேன் மேலும் மேகங்கள் திரண்டு கவிழ்ந்துவரும் இச் சமயத்தில் கூட, நான் வரும் காலம் பற்றி ஒரு விஷயம் துணிந்து ஜோஸ்யம் கூற முடியும். அதாவது, எந்த விநாடி இந்தியா, தீண்டாதாரைத் தான் நடத்தி வந்தது பற்றி வருந்தி, அந்நியத் துணியையும் பகிஷ்காரம் செய்கிறதோ, அதே விநாடி, தங்கள் இதயங்களைக் கல்லாக்கிக் கொண்டிருப்பதாகத் தோன்றும் அதே ஆங்கில அதிகாரிகளால் துணிகரமான சுதந்திர நாடு என்று கொண்டா டப்படும்.

—'எங் இந்தியா' – 29—9—1921

# 4

# நாம் செய்த வினை

நமது சொந்த சமூகத்தின் ஆறில் ஒரு பகுதியினரைச் சுரண்டி, தெய்வீக மதத்தின் பெயரால் திட்டவட்டமாக யோசித்து வேண்டு மென்றே அவர்களை இழிவுபடுத்தி வந்தோம் அல்லவா? கடவுளால் முற்றிலும் நியாயமாக விதிக்கப்பட்ட அந்தக் கொடுமையின் வினையையே இப்போது நாம் அனுபவிக் கிறோம். அந்த வினைதான் அந்நிய ஆதிக்கமாகிற சாபக்கேடும், அதனால் நாம் சுரண்டப்படுதலும் ஆகும். அதனாலேயே, சுய ராஜ்யம் பெறுவதற்குத் தீண்டாமை ஒழிப்பை இன்றியமையாத ஒரு நிபந்தனையாக நான் வைத்திருக்கிறேன். நாமோ நம்மிடம் அடிமைகளை வைத்துக் கொண்டிருக்கிறோம். நம்மிடம் இருக்கும் அடிமைகளுக்கு நிபந்தனையின்றி விடுதலையளிக்க நாம் தயாராக இராவிடில், அந்நியரிடம் நம்முடைய அடிமைத்தனத்தைக் குறித் துச் சண்டையிட நமக்கு யோக்கியதை இல்லை. நம் எஜமானர் களின் கண்ணை மறைக்கும் துரும்பை அகற்ற நாம் முயற்சிக்கு முன், நமது கண்ணை மறைக்கும் உத்தரத்தை நாம் முதலில் அகற்ற முற்பட வேண்டும்.

—'எங் இந்தியா' – 13—10—1925

# 5

# அடிமை நுகத்தடி

நம் தேச மக்களில் மிக மிகத் தாழ்ந்த நிலையில் உள்ளவர் களும் விடுதலை பெறுவதுதான் சுயராஜ்யம் என்பது என் கருத் தாகும். நாம் எல்லோரும் துன்பத்திற்குள்ளாகி வரும்போது

பஞ்சமர்களின் நிலை அபிவிருத்தியடையாவிடில், சுயராஜ்யம் பெற்ற போதையில் அவர்களின் நிலை எவ்வாறு முன்னேற்றம் அடைய முடியும்? சுயராஜ்யத்திற்கு ஒரு நிபந்தனையாக முஸ்லிம் களுடன் சமாதானம் செய்துகொள்ள வேண்டியது அவசிய மாயின், அதுபோல் நீதி என்றும் சுயமதிப்பு என்றும் கூறிக் கொண்டு சுயராஜ்யத்தைப்பற்றி நாம் பேசுமுன், பஞ்சமர்களுடன் சமாதானம் செய்துகொள்ள வேண்டியதும் அவசியமாகும்.

ஆங்கில ஆதிக்கமாகிற நுகத்தடியிலிருந்து மாத்திரம் இந்தியா விடுதலை பெறும்படி செய்வதில் எனக்கு அக்கறை யில்லை. எந்த நுகத்தடியிலிருந்தும் இந்தியாவை விடுவிக்க நான் உறுதி கொண்டிருக்கிறேன். எரிகிற கொள்ளிகளில் ஒன்றை விட்டுவிட்டு மற்றொன்றை ஏற்றுக்கொள்ள நான் விரும்ப வில்லை. எனவே, என் சம்பந்தப்பட்ட வரையில் சுயராஜ்ய இயக்கமானது தன்னைத் தானே பரிசுத்தம் செய்துகொள்ளும் ஒரு புனித இயக்கமேயாகும்.

—'எங் இந்தியா' – 19—6—1924

# 6

# அரக்கத்தனத்திற்காகப் பிராயச்சித்தம்

அரக்கனாக மாறிய ஒரு மனிதன் தன் சகோதர மனிதனிடம் எவ்வாறு நடந்துகொள்ளுவானோ, அது போலவே நாம், இந்தத் துரதிர்ஷ்டசாலிகளான சகோதரர்களிடம் நடந்து வந்துள்ளோம். எனவே, இப்போது நம் முன் உள்ள தீண்டாமை ஒழிப்பு இயக்கம், அக்கொடிய தவறுக்கு நியாயமான சிறு பிராயச் சித்தமேயாகும். இவ்விஷயத்தைக் காங்கிரஸ் திட்டத்தின் முன் வரிசைக்குக் கொண்டுவந்தது நான்தான் என்பதை ஒத்துக் கொள்ளுகிறேன். என்னைக் கிண்டல் செய்யக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கும் எவரும் இத் திட்டத்தை, தீண்டாதாரை மயக்கும் கெட்டிக்காரத்தனமான ஓர் ஏமாற்று வித்தை என்று கூறலாம். ஆனால், அத்தகைய குற்றச்சாட்டுக்குச் சிறிதும் ஆதாரமில்லையென்று உடனடியாகக் கூற விரும்புகிறேன். தங்களை ஹிந்துக்கள் என்று நம்பிக்கொண்டிருப்போர், ஹிந்து மதத்தைப் பற்றிப் பெருமை கொள்ளுவதற்குமுன், தீண்டாமை யாகிற களங்கத்தைத் துடைத்தொழிக்கும் தவத்தை மேற் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் வாழ்க்கையின் ஆரம்பத்தி லேயே எனக்கு ஏற்பட்டுவிட்டது.

காங்கிரஸ்வாதிகளில் பெரும்பாலோர் ஹிந்துக்கள் ஆதலா லும், அப்போது தேசத்தின் முன் சமர்ப்பிக்கப்பட்ட திட்டத்தில் தன்னைப் பரிசுத்தம் செய்துகொள்ள வேண்டுமென்ற அம்சம்

இராததாலும், காங்கிரஸ் திட்டத்தின் முன்னணியில் இதை வைத்திருக்கிறேன். தீண்டாமைக் களங்கத்தை ஹிந்துக்கள் அடியோடு ஒழித்துக்கட்டத் தயாராக இருந்தாலன்றி, சுயராஜ்யத்திற்குத் தகுதியுள்ளவர்களாகத் தங்களைக் கருத முடியாது; இந்த உறுதியான கொள்கை காரணமாகவே இத்திட்டத்தை முன்னணியில் வைத்துள்ளேன். அக்கொள்கை தெளிவானதால் அதற்கு விளக்கம் தேவையில்லை. தீண்டாமைக் களங்கம் ஒழியாமல் நமக்கு அதிகாரம் வருமாயின், தீண்டாதாரின் நிலை இப்போதிருப்பதைக் காட்டிலும் மிகவும் மோசமாகிவிடும் என்பது நிச்சயம். ஏனெனில், அதிகாரத்தைக் கைக்கொள்ளுவதன் மூலம் நாம் நமது பலவீனத்துக்கும் தவறுகளுக்கும் சப்பைக் கட்டுகட்ட முற்பட்டுவிடுவோம்.

சுருக்கமாக இதுதான் எனது நிலைமையாகும். தன்னைத் தானே பரிசுத்தப்படுத்திக்கொள்ளுதல் சுயராஜ்யத்துக்கு இன்றியமையாத ஒரு நிபந்தனையென்பது, எப்போதுமே என் அபிப்பிராயமாக இருந்து வந்திருக்கிறது. இவ்விஷயமாக எனது நிலை இன்று ஏற்பட்டதல்ல. சுயராஜ்யத்தைப் பற்றி என்று நான் சிந்திக்கத் தொடங்கினேனோ, அன்றே அது ஏற்பட்டுவிட்டது.

—'எங் இந்தியா', - 6—8—1931

# 7

# எனது கனவு

தீண்டாமை சம்பந்தமாகக் காங்கிரஸ் தீர்மானத்தின் விளக்கம் எவ்விதம் இருக்கலாம் என்பது பற்றி என் அபிப்பிராயத்தை மகிழ்ச்சியுடன் கூறுகிறேன். நாட்டில் தீண்டாமையே இராது. மற்றவர்களுக்கு என்ன உரிமைகள் உண்டோ, அந்த உரிமைகள் தீண்டாதாருக்கும் இருக்கும். ஆனால், ஒரு பிராம்மணர் எவரையும் தொடும்படி வற்புறுத்தப்படமாட்டார். தம்மைத் தாமே தீண்டாதாராகச் செய்துகொள்ள, பிராம்மணருக்குச் சுதந்திரம் உண்டு! அவர் தமக்கென்று சொந்தமாகக் கிணறு, தமக்கென்று சொந்தமாகக் கோவில், தமக்கென்று சொந்தமாகப் பள்ளிக்கூடம் முதலியவற்றை வைத்துக்கொள்ளலாம். இன்னும் அவருக்கு என்னென்ன வைத்துக்கொள்ள வசதியிருக்கிறதோ அதையெல்லாம் வைத்துக்கொள்ளலாம். ஆனால், அண்டை வீட்டுக்குத் தொல்லை கொடுக்கும் விதத்தில் அவர் எதுவும் வைத்துக்கொள்ளக்கூடாது. எனினும், தெருக்களில் நடக்கவோ அல்லது பொதுக் கிணறுகளை உபயோகிக்கவோ துணியும் தீண்டாதாரை, இப்போது சிலர் தண்டிப்பதுபோல் தண்டிப்பதற்கும் அவருக்குச் சக்தி இராது. மற்ற எல்லா

ஹிந்துக்களும் பொதுக் கோவில்களுக்குள் செல்ல அனுமதிக்கப் படும்போது, தீண்டாதாரை மாத்திரம் அனுமதிக்க மறுக்கும் மானக்கேடான காரியம் சுயராஜ்யத்தின் கீழ் இராது. வேதங் கள், மற்ற சாஸ்திரங்கள் இவற்றின் கட்டளைகள் மறுக்கப்பட மாட்டா. ஆனல், அவற்றையொட்டி தனி நபர்கள் செய்யும் வியாக்கியானத்துக்கு மதிப்பு இராது. பொதுஜன நடவடிக்கை களை ஒழுங்குபடுத்த அந்த மத நூல்கள் எந்த அளவில் உபயோ கிக்கப்படுகின்றனவோ, அந்த அளவுக்கு அவற்றின் கட்டளைகள் நிறைவேறுவது சட்டங்களின் போக்கைப் பொறுத்தே இருக்கும். மனச்சாட்சி பூர்வமான ஆட்சேபணைகளுக்கு மதிப்புக் கொடுக்கப் படும். எனினும், அந்த ஆட்சேபணைகள், பொது ஒழுக்கத் திற்கோ, மற்றவர்களின் உரிமைகளுக்கோ தடையாக இருக்கக் கூடாது. அசாதாரணமான ஆட்சேபணைகளை உடையோர், தங்களுடைய பகட்டுக்கு விலையாகப் பல வசதிகளை இழந்து சங்கடத்திற்குள்ளாக நேரும். பழக்க வழக்கத்தின் பெயராலோ அல்லது மதத்தின் பெயராலோ எந்த நபரும், எந்தச் சமூகமும் உயர்வு கொண்டாடுவதைச் சட்டம் சகித்துக்கொண்டிராது. ஆனல், இதெல்லாம் எனது கனவுதான். நான் காங்கிரஸ் அல்ல. காங்கிரஸ் அவ்விதமெல்லாம் செய்யக்கூடாதென்று விரும்பு வோர், தாமதமின்றிக் காங்கிரசில் சேர்ந்துகொள்ளுவதும், தங்கள் அபிப்பிராயத்தை ஆதரிப்போரும் அதில் சேரும்படி செய்வதும் தான் சிறந்தது. காங்கிரஸ், பொது மக்களின் விருப்பத்தைப் பிரதிபலிக்கும் ஸ்தாபனமாகும். அதன் அமைப்புத் திட்டம் பொது ஜன விருப்பத்தைப் பிரதிபலிக்கும் அளவுக்குப் பரந்த முறையில் இருக்கிறது.

—'எங் இந்தியா'- 11—6—1931

பகுதி நான்கு

# ஹரிஜன்

## 1

## ஹரிஜன் என்ற பெயருக்குக் காரணம்

தீண்டாதாருக்கு 'அந்த்யஜன்' (கடைசியாகப் பிறந்தவன்) என்ற வார்த்தை உபயோகிக்கப்பட்டு வருகிறது. அந்த வார்த்தைக்குப் பதிலாக 'ஹரிஜன்' (இறைவனின் மனிதன்) என்ற வார்த்தையை உபயோகிக்க வேண்டுமென அன்ெருரு நாள் ஒரு நண்பர் எனக்கு யோசனை கூறினர். அந்த வார்த்தை மாபெரும் முனிவரான நரசிம்ம மேத்தாவினல் உபயோகிக்கப்பட்டதாகும். அவர், நாகர் பிராம்மண சமூகத்தைச் சேர்ந்தவர். 'தீண்டாதார்' தம்முடைய சொந்த மனிதர்கள் என்று கூறித் தமது சமூகம் முழுவதையும் எதிர்த்து நின்றவர். எனவே, அத்தகைய பெரிய மகானல் உபயோகிக்கப்பட்டுப் புனிதத் தன்மை அடைந்துள்ள அந்த வார்த்தையை, நான் மிக்க மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்ளுகிறேன். ஆனல், நீங்கள் கற்பனை செய்வதைக் காட்டிலும் அந்த வார்த்தை இன்னும் எனக்கு அதிக ஆழ்ந்த பொருள் கொண்டதாகும். நம்முடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது தீண்டாதார் உண்மையில் ஹரிஜனே, அதாவது கடவுளின் மனிதரேயாவார். நாம் 'துர்ஜன்' (தீயவர்) ஆவோம். ஏனெனில், தீண்டாதார், நாம் சுத்தமாகவும் சுகபோகங்களுடனும் வாழவேண்டும் என்பதற்காக, சேற்றிலும் சகதியிலும் உழைத்திருக்கிறார்கள்; கைகளையெல்லாம் அசிங்கமாக்கிக் கொண்டிருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களை அடக்கி ஒடுக்குவதில் நாம் ஆனந்தம் அடைந்து வந்துள்ளோம். நாம் 'தீண்டாதார்' மீது என்ன குற்றங்களையும் குறைகளையும் சுமத்துகிறேமோ, அவையெல்லாவற்றுக்கும் நாம்தான் முற்றிலும் பொறுப்பாளியாவோம். நாம் ஹரிஜனங்களாக விளங்க இன்னும் இடமிருக்கிறது. ஆனல், தீண்டாதார் விஷயத்தில் நாம் செய்த பாவத்துக்கு இதயபூர்வமாக வருந்தினல் மாத்திரமே நாம் ஹரிஜனங்களாக, அதாவது கடவுளின் மனிதர்களாக முடியும்.

—'எங் இந்தியா' 6—8—1931

# 2

# கடவுளும் சாதி ஹிந்துக்களும்

'ஹரிஜன்' என்பதற்குக் 'கடவுளின் மனிதன்' என்பது பொருளாகும். உலகத்தில் உள்ள எல்லா மதங்களும் கடவுளை, முக்கியமாக நண்பர் அற்றவர்களின் நண்பர் என்றும், அகதிகளின் துணைவர் என்றும், அனாதைகளின் ரட்சகர் என்றும் வருணிக்கின்றன. உலகத்தின் மற்றப் பகுதிகள் ஒருபுறமிருக்கட்டும். இந்தியாவில் 'தீண்டாதார்' என்று வகுத்து ஒதுக்கப்பட்டுள்ள நான்கு கோடிக்கு மேற்பட்ட ஹிந்துக்களைவிட அனாதைகள், உதவியற்றவர்கள், பலவீனமானவர்கள் வேறு யார் இருக்க முடியும்? மக்களின் ஒரு பகுதியினரைக் கடவுளின் மனிதர்கள் என்று பொருத்தமாக வருணிப்பதாயின், அப்படிப்பட்டவர்கள் நிச்சயமாகத் துணையற்ற, நாதியற்ற, வெறுக்கப்பட்ட இந்த மக்கள்தான். அதனாலேயே 'நவஜீவன்' பத்திரிகையில், தீண்டாதாரைக் குறிப்பதற்கு, நான் எப்போதும் ஹரிஜன் என்ற வார்த்தையையே உபயோகித்து வந்திருக்கிறேன். பெயரை மாற்றுவதால் அந்தஸ்தில் எதுவும் மாறுதல் ஏற்பட்டுவிடப் போவதில்லை. அவர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது இழிவான சொல்லை யாவது உபயோகிக்காமல் இருக்கலாம் அல்லவா? சாதி ஹிந்துக்கள் இதயபூர்வமான, உறுதியான கொள்கை காரணமாக தாங்களாக வலுவில் முன் வந்து இன்றைய தீண்டாமையை உதறித் தள்ளிவிடுவார்களாயின், அப்போது நாம் யாவரும் ஹரிஜனங்கள் என்றே அழைக்கப்படுவோம். அப்போதுதான் சாதி ஹிந்துக்கள் கடவுளின் அருள் பெற்றவர்களாகி, கடவுளின் மனிதர்கள் என்று வருணிப்பதற்குத் தகுதி வாய்ந்தவர் ஆவார்கள் என்பது எனது தாழ்மையான அபிப்பிராயமாகும்.

**—'ஹரிஜன்' - 11—2—1933**

பகுதி ஐந்து

# தீண்டாமைக்கு மதத்தில் ஆதாரமில்லை

## 1

## ஹிந்து மதமும் தீண்டாமையும்

[காந்திஜி திருவனந்தபுரத்தில் நிகழ்த்திய பிரசங்கத்தின் விவரம் வருமாறு :]

நாகர்கோயிலைப் போல் இங்கும் தீண்டாமைப் பிரச்னை பற்றி விவாதிப்பதிலேயே பெரும் பகுதி நேரம் சென்றுவிட்டது. எனது மரியாதையைத் தெரிவிப்பதற்காகவே நான் திவானைப் பார்க்கச் சென்றேன். எனினும், தொல்லையான இந்தப் பிரச்னை பற்றி நாங்கள் விவாதிக்கத் தொடங்கியது இயல்பேயாகும். ரீஜண்ட் மகாராணிக்கும் எனது மரியாதையைச் செலுத்த நான் சென்றிருந்தேன். அவருடனும் இதே பிரச்னை பற்றி விவாதிக்க நேர்ந்தது. அதனாலேயே இந்தக் கூட்டத்திற்கு வர சில நிமிஷங்கள் தாமதமாகிவிட்டன. முதல் தடவை நான் திருவாங்கூருக்கு விஜயம் செய்த பிறகு, மனத்தை வசீகரிக்கும் இந்தப் பிரதேசத்துக்கு அடிக்கடி வர வேண்டுமென்று எப்போதும் ஆவலுடன் எதிர்பார்த்தவண்ணம் இருந்து வந்துள்ளேன். நான் இங்கே முதன் முதலாக வந்தபோது, இதன் வனப்பு மிக்க இயற்கைக் காட்சியும், திருவாங்கூரில் உள்ள கன்யாகுமரியும், திருவாங்கூர் பெண்மணிகளின் எளிமையும், சுதந்திரமும் என்னை வசீகரித்துவிட்டன. ஆனால், இந்த எண்ணங்களும் தொடர்புகளும் எனக்கு எப்போதும் அளிக்கும் மகிழ்ச்சி, திருவாங்கூரில் தீண்டாமை பயங்கரமான உருவத்தில் இருந்து வருகிறதென்ற எண்ணத்தினால் மிகவும் குன்றிவிடுகிறது. இந்தியாவிலேயே கல்வி வளர்ச்சியில் முதல் ஸ்தானம் வகிக்கும் பாக்கியம் பெற்றுள்ள இந்த மிகப் புராதன ஹிந்து சமஸ்தானத்தில், இந்தத் தீமை பயங்கர உருவத்தில் நிலவி வருவதை நினைக்க என் மனம் மிகவும் வருந்துகிறது.

தீண்டாமையின் உக்கிரமான நிலை எனக்கு எப்போதுமே மிகுந்த வேதனையைக் கொடுத்து வந்திருக்கிறது. ஏனெனில், ஹிந்துமத தத்துவத்தில் ஊறித்திளைத்த ஹிந்துக்களுக்கெல்லாம் ஹிந்துவாக என்னை நான் கருதுவதே அதற்குக் காரணம்.



மதுரை மீனாட்சியம்மன் கோயிலுக்குச் சென்றுவிட்டு திரும்பிய காந்திஜி களைப்புடன் டாக்டர் சௌந்திரம் ராமச்சந்திரன் முதலியவர்களுடன் பேசிக்கொண்டிருக்கிறார்.



1934 ஜனவரியில் காந்திஜி தென்னாட்டில் ஹரிஜன யாத்திரை செய்தபோது கன்யாகுமரிக்குச் சென்றிருந்தார். அங்கே கடலில் ஸ்நானம் செய்கையில் காந்திஜி நீந்தியபோது எடுத்த படம்.

எந்தத் தீண்டாமையில் இன்று நாம் நம்பிக்கை வைத்துச் செயலில் காட்டி வருகிறோமோ, அதற்கு ஹிந்து சாஸ்திரங்கள் என்று நாம் கூறும் நூல்களில் எல்லாம் ஓர் ஆதாரத்தைக் கூட என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. மற்றவிடங்களில் நான் திரும்பத் திரும்பக் கூறி வந்திருப்பதுபோல், ஹிந்து மதம் உண்மையில் தீண்டாமையை ஆதரிக்கிறது என்பதை நான் அறிவேனாயின், பின்னர் ஹிந்து மதத்தையே விட்டுவிட நான் தயங்கமாட்டேன். ஏனெனில், மதமானது அதன் உயர்ந்த பெயருக்குத் தகுதியாக இருக்க வேண்டுமாயின், ஒழுக்கம், தருமம் இவற்றின் மூலாதாரமான உண்மைகளுக்கு முரணாக இருக்கக்கூடாது என்பது எனது கருத்தாகும். ஆனால், தீண்டாமை ஹிந்து மதத்தின் ஓர் அம்சம் என்பதை நான் நம்பாததால், ஹிந்து மதத்தை விடாப்பிடியாகப் பற்றிக்கொண்டிருக்கிறேன். எனினும், இந்தப் பயங்கரமான தவறைக் குறித்து நான் நாளுக்கு நாள் அதிகமாகப் பொறுமையிழந்து வருகிறேன்.

எனவே, இந்தப் பிரச்னை திருவாங்கூரை ஆட்டிவைத்து வருகிறதென்பதை நான் கண்டபோது, அதில் முழு மூச்சுடன் ஈடுபட நான் தயங்கவில்லை. எவ்விதத்திலாவது, இந்தச் சமஸ்தானத்தைத் தரும சங்கடத்திற்கு உள்ளாக்க வேண்டுமென்பதற்காக நான் இந்தப் பிரச்னையை எடுத்துக்கொள்ளவில்லை. ரீஜண்ட் மகாராணி தமது மக்களின் க்ஷேமத்தில் அக்கறை காட்டி வருகிறார் என்பதே எனது நம்பிக்கை. அவர், இவ்விஷயத்தில் தம்மை ஒரு சீர்திருத்தவாதி என்று உறுதி கூறுகிறார். அவர், அதிசீக்கிரத்தில் இந்தத் தவறை அகற்ற ஆர்வமுடையவராக இருக்கிறார் என்றும் நான் உங்களுக்குக் கூறுகிறேன். இவ்விதம் கூறுவது, அவர் என்னிடம் அந்தரங்கமாகக் குறிப்பிட்ட அபிப்பிராயத்தை வெளியிட்டதாகாது.

இருந்தாலும், சீர்திருத்த விஷயங்களில் சர்க்கார்கள் வழிகாட்டிகளாக இருக்க முடியாது. அவர்கள் தாங்கள் ஆளும் மக்களின் அபிலாஷையை விளக்கி, மக்களுடைய விருப்பத்தை நிறைவேற்றுபவர்களேயாவர். முற்றிலும் தான்தோன்றித்தனமாக ஆட்சிபுரியும் சர்க்கார்கூட, மக்கள் ஏற்றுக்கொள்ளாத ஒரு சீர்திருத்தத்தைத் திணிக்கமுடியாது. எனவே, நான் திருவாங்கூரைச் சேர்ந்த ஒரு பிரஜையாக இருப்பேனாயின், இந்தச் சீர்திருத்தத்தை மக்கள் எவ்வளவு துரிதமாக ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறார்களோ அவ்வளவு துரிதமாக அதை நிறைவேற்றச் சர்க்காரும் தயாராக இருக்கிறார்கள் என்பதை அறிந்து முற்றிலும் திருப்தியடைவேன். எனினும், அவ்விஷயத்தில் திருப்தியடைந்த நான், ஒரு விநாடிகூடப் பேசாமல் உட்கார்ந்திருக்கமாட்டேன். சீர்திருத்த சம்பந்தமான அந்தத் தகவலை வீடு வீடாகச் சென்று, கிராமம் கிராமமாகச் சென்று பறைசாற்றுவேன். ஒழுங்கான, இடைவிடாத கிளர்ச்சிதான் ஆரோக்கியமான, நியாயமான முன்னேற்றத்துக்கு உயிர்நாடியாகும்.

நான் உங்கள் ஸ்தானத்தில் இருந்தால், இந்தச் சீர்திருத்தம் அமுலுக்கு வரும் வரையில், சர்க்காரை ஓய்வெடுத்துக்கொள்ள விடமாட்டேன். சர்க்கார் ஓய்வெடுத்துக்கொள்ள அனுமதிக்கக் கூடாதெனில், சர்க்காரை எந்தவிதத்திலும் தருமசங்கடமான நிலைக்கு உட்படுத்துவது என்று அர்த்தமல்ல. விவேகமுள்ள ஒரு சர்க்கார் தாங்கள் விரும்பும் ஒரு சீர்திருத்தத்தை நிறைவேற்ற, அத்தகைய ஒரு கிளர்ச்சியின் ஆதரவையும், அன்பையும் உற்சாகத்தையும் விரும்பி வரவேற்பார்கள்.

நான் சென்ற தடவை இங்கே வந்தபோது, தீண்டாமை எத்தகைய உருவத்திலும் இருக்கக்கூடாதென்றும், அதை ஒழிக்கும் சீர்திருத்தம் ஏற்படும் விஷயத்தில் சவர்ண (சாதி) ஹிந்துக்கள் முற்றிலும் ஆர்வமுடையவர்களாயிருப்பதாகவும் என்னிடம் கூறினர்கள். தங்கள் விருப்பத்தை நிறைவேற்றும் விஷயத்தில் சவர்ண ஹிந்துக்கள் அக்கறை காட்டாது தூங்கிவிட்டார்கள் என்றே அஞ்சுகிறேன். தங்கள் விருப்பம் நிறைவேற அவர்கள் உருவான முறையில் எதுவும் செய்யவில்லை. எனவே, இந்த சமஸ்தானத்தில் உள்ள ஒவ்வொரு ஹிந்துவும் தங்கள் கடமையை உணருவதுடன், தூக்கத்தில் ஆழ்ந்திருக்கும் மற்ற சகோதரர்களையும் தட்டி எழுப்பி அவர்களும் கடமையை உணரும்படி செய்யவேண்டியது இன்றியமையாத பொறுப்பாகும். சவர்ண ஹிந்துக்கள் ஒரே குரலாகத் தங்கள் விருப்பத்தைத் தெரிவிப்பார்களாயின், இந்தத் தீண்டாமை அரக்கன் ஒழிந்துபோய்விடுவான் என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகமில்லை. எனவே, நமது அரைத் தூக்கத்தையும் சோம்பேறித்தனத்தையும் சர்க்கார்மீது சாட்டுவது தவருகும்.

ஒவ்வொரு சமூகத்திலும் உள்ள சீர்திருத்தக்காரர்களை விரல் முனையில் எண்ணிவிடலாம். அத்தகைய சீர்திருத்தத்தின் உக்ரமெல்லாம் சீர்திருத்தக்காரர்களான அந்தச் சிறு குழுவினரின் தலைகளிலேயே விடிகிறது. நீண்ட காலமாக இருந்து வரும் இந்தத் தீமையை எதிர்த்து, சீர்திருத்தக்காரர்கள் என்ன செய்ய வேண்டும்? இப்போது உண்மையில் தீர்க்கவேண்டிய பிரச்னை இதுதான். உலகம் முழுவதும் உள்ள சீர்திருத்தக்காரர்கள், நான் கூறப்போகும் இரண்டு முறைகளில் ஏதாவதொன்றையே கைக்கொண்டு வந்திருக்கிருர்கள். அவர்களில் மிகப் பெரும்பாலோர், மூர்க்கத்தனமான கிளர்ச்சியை உண்டாக்கியும், பலாத்காரத்தில் ஈடுபட்டும் தீமைகளையொட்டிக் கவனத்தை இழுத்திருக்கிருர்கள்; சர்க்காரையும் ஜனங்களையும் குழப்பத்திற்குள்ளாக்கி, மக்களின் அமைதி வாழ்வைச் சீர்குலைக்கும் கிளர்ச்சியை அவர்கள் கைக்கொண்டு வந்துள்ளனர். சீர்திருத்தக்காரர்களான மற்றெரு குழுவினரை, நான் சாத்விக முறையை அனுஷ்டிப்போர் என்று கூறுவேன். அவர்கள் அமைதியான முறையில் கிளர்ச்சி செய்கிருர்கள்; சிந்தனையிலோ, வார்த்தையிலோ அல்லது செயலிலோ பலாத்காரத்தைக் கைக்கொண்டு கவனத்தை ஈர்ப்பதை

அவர்கள் வெறுக்கிருர்கள். ஆனல், தாங்கள் துன்பத்துக்கு உள்ளாவதன் மூலம் அவர்கள் தீமையையொட்டி மற்றவர்களின் கவனத்தை இழுக்கிருர்கள். அவர்கள் ஒருபோதும் மிகைபடக் கூறுவதில்லை. சத்தியத்திலிருந்து ஒருபோதும் மயிரிழைகூட விலகுவதில்லை; தீமையை ஒழிக்கத் துடித்தாலும் தீமை செய்வோருக்கு எவ்விதத் தீங்கும் நினைப்பதில்லை. அதற்குத்தான் நான் சுருக்கமான ஒரு பெயர் கொடுத்திருக்கிறேன். சத்தியாக்கிரகம் என்ற பெயரில் முன்பு தென்னப்பிரிக்காவில் சமர்ப்பித்தது போல், இந்த நாட்டின் முன்னிலையிலும் அதை சமர்ப்பித்துள்ளேன்.

உங்களில், பொது வாழ்க்கையில் அனுபவமுள்ளவர்கள் இந்த இயக்கத்தில் ஈடுபட வேண்டுமென யோசனை கூற விரும்புகிறேன். இதை உங்கள் சொந்தப் பிரச்னையாகக்கொண்டு, இதில் அக்கறை கொண்ட, ஆனல் இதைத் தீர்ப்பது எப்படி என்று அறியாத இளைஞர்களின் உறுதியையும் சக்தியையும் துணையாகச் சேர்த்துக்கொள்ள வேண்டும். நீங்கள் இவ்விஷயமாக அதிகாரிகளுடனும் தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டுமென யோசனை கூறுகிறேன். இந்தச் சீர்திருத்தம் நிறைவேறும் வரையில், நீங்கள் அதிகாரிகளை தினந்தோறும் நச்சரித்து வர வேண்டும். மகாராணி மாத்திரமல்ல, திவானும்கூட இந்தச் சீர்திருத்தத்தை நிறைவேற்ற ஆர்வம் கொண்டவர்களாக இருக்கிருர்கள். சர்க்கார் சம்பந்தப்பட்ட வரையில் இந்தச் சீர்திருத்தத்தை விரும்புகிருர்கள் என்பதே என் அபிப்பிராயம். ஆனல், நீங்கள் தான் முதலில் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும்.

—'எங் இந்தியா' - 20—10—1927

## 2

# சாஸ்திரங்கள் கூறுவதென்ன?

ஹிந்து மதத்தில் தீண்டாமை இருக்கும் வரையில், அந்த மதத்தினிடமோ, அதைப் பின்பற்றுவோரிடமோ, முஸ்லிம்களுக்கு மதிப்பு ஏற்படுவது கஷ்டமாகுமென்று, மிகவும் தீர்க்காலோசனையுள்ள ஒரு முஸ்லிம் ஒரு சமயம் என்னிடம் கூறினர். தீண்டாதார் சமூகத்துக்குச் சாஸ்திரத்தில் ஆதாரமேயில்லை என்று நான் எண்ணிக்கையற்ற தடவை திரும்பத் திரும்பக் கூறி வந்திருக்கிறேன். நெசவாளி, தோட்டி இவர்களைத் தீண்டாதார் என்று சாஸ்திரங்கள் குறிப்பிடவில்லை. நான் ஒரு நெசவாளி; தோட்டியும்கூட. என் தாயார் நிச்சயமாக ஒரு தோட்டிதான். ஏனெனில் நான் குழந்தையாக இருந்தபோது, அவள் என்னைக் கழுவிவிட்டுச் சுத்தம் செய்யவில்லையா? ஆனல், அதற்காக அவள் தோட்டியாகிவிடவில்லை. அப்படியிருக்க, அதுபோன்ற அவசியமான

தொண்டு செய்யும் பங்கி, ஏன் ஒரு தீண்டாதாராகக் கருதப்பட வேண்டும்? சாஸ்திரிகளின் உலகமே என்னை எதிர்த்து நின்றால் கூட, தீண்டாமை ஹிந்து மதத்தின் ஓர் அம்சம் என்று அவர்கள் கருதுவது தவறு என்பதை நான் கூரை உச்சியிலிருந்து பிரகடனம் செய்வேன்.

[ராஜ்கோட் பிரதிநிதிச் சபையில் நிகழ்த்திய பிரசங்கம்]

—'எங் இந்தியா' - 26—2—1925

## 3

# சைத்தானின் தந்திரம்

தீண்டாமையை மதம் அனுமதிக்கவில்லை; அது சைத்தானின் ஒரு தந்திரமாகும். சைத்தான் எப்போதுமே வேத சாஸ்திரங்களிலிருந்து மேற்கோள்கள் எடுத்துக் கூறுவது உண்டு! ஆனால், வேத சாஸ்திரங்கள் நியாயத்திற்கும் உண்மைக்கும் அப்பாற்பட்டவையாக இருக்க முடியாது. நியாயத்துக்கு மாசு ஏற்படாமல் பாதுகாக்கவும், உண்மை பிரகாசிக்கும்படி செய்யவுமே வேத சாஸ்திரங்கள் ஏற்பட்டிருக்கின்றன. வேதங்கள் அசுவமேத யாகத்தில் அசுவபலி செய்யும்படி விதிக்கின்றன என்றும், அதைச் சகிக்கின்றன என்றும், அதை அனுமதிக்கின்றன என்றும் கூறப்படுவதற்காக, குற்றமில்லாத ஒரு குதிரையை நான் எரிக்க முற்படமாட்டேன். வேதங்கள் தெய்வீகமானவை, யாராலும் எழுதப்பட்டவையல்ல என்பதே என் கருத்தாகும். சில சமயங்களில் சொற்கள் விபரீதமாக இருக்கின்றன. ஆனால் அவற்றின் உள் தத்துவம் ஒளியைக் கொடுக்கிறது.

பரிசுத்தம், சத்தியம், கபடமின்மை, பதிவிரதா தருமம், அடக்கம், எளிமை, மன்னிக்கும் சுபாவம், தெய்வத் தன்மை இவையும், இன்னும் ஆடவரையோ, பெண்மணியையோ பெருந்தன்மை வாய்ந்தவராகவும் வீரராகவும் செய்யும் சகல குணங்களும்தான் வேதங்களின் தத்துவமாகும். தங்கள் நிலை குறித்துக் குற்றம் குறை கூறாமல் பெரும் தொண்டு புரியும் தேசத்தின் தோட்டிகளை வெறுத்து, காறி உமிழ்ந்து. நாய்களைக் காட்டிலும் இழிவாக நடத்துவதில் பெருந்தன்மையோ, வீரத்தனமோ எதுவுமில்லை.

—'எங் இந்தியா' – 19—1—1921

## 4

# ஹிந்து மதத்தின் தத்துவம்

என்னை ஒரு சனாதன ஹிந்து என்றே நான் எப்போதும் கூறிக்கொள்ளுகிறேன். நான் சமஸ்கிருதத்தில் பெரும் பண்டிதன்

அல்ல. வேதங்கள், உபநிடதங்களின் மொழி பெயர்ப்புக்களை மாத்திரமே நான் வாசித்திருக்கிறேன். எனவே, அவற்றில் ஆழ்ந்த அறிவு எவ் விதத்திலும் எனக்கு இல்லை. ஆனல், ஒரு ஹிந்து அவற்றை எவ்விதம் வாசித்து ஆராய்ச்சி செய்ய வேண்டுமோ, அவ்விதம் செய்திருக்கிறேன். எனவே, அவைகளின் உண்மையான உட்கருத்தை நான் நன்கு உணர்ந்து கொண்டிருப்பதாகக் கூறிக்கொள்ள எனக்கு உரிமையுண்டு.

ஹிந்து மதமானது தீண்டாமையை ஒரு பாவமாகக் கருதவில்லை என்பது உண்மையே. சாஸ்திரங்களின் வியாக்கியானம் பற்றிய எவ்வித வாக்குவாதத்திலும் ஈடுபட நான் விரும்பவில்லை. பாகவதத்திலிருந்தோ அல்லது மனுஸ்மிருதியிலிருந்தோ ஆதாரங்களை மேற்கோள் காட்டி எனது கருத்தை நிலைநிறுத்துவது எனக்குக் கஷ்டமாக இருக்கலாம். எனினும், ஹிந்து மதத்தின் உட் கருத்தை நான் நன்கு உணர்ந்துகொண்டிருக்கிறேன் என்று கூறிக்கொள்ள முடியும்.

—'எங் இந்தியா' – 27—4—1921

# 5

# சாஸ்திரம் அனுமதிக்கவில்லை

ஒரு தனி மனிதரையாவது தீண்டாதாராக நடத்த ஹிந்து மதத்தில் ஆதாரமில்லையென நான் உங்களுக்கு உறுதி கூறுகிறேன். தமது மதத்தை நன்கு அறிந்து அதன்படி வாழும் ஒரு பிராம்மணர், தம்மைப் போலவே ஒரு சூத்திரரையும் உயர்ந்தவராகக் கருத வேண்டும். ஒரு சண்டாளர், ஒரு பிராம்மணரைவிட எவ்விதத்திலாவது தாழ்ந்தவர் என்று பகவத்கீதை ஓரிடத்திலும் உபதேசிக்கவில்லை. ஒரு பிராம்மணர் எந்த விநாடி இறுமாப்புக் கொண்டு தம்மை உயர்ந்த ஒரு மனிதராகக் கருத முற்படுகிருரோ, அந்த விநாடியே அவர் தாழ்ந்துவிடுகிருர்.

எல்லோருடைய மேம்பாட்டுக்காகவும் தாங்களாக வலுவில் தியாகம் செய்துள்ள பிராம்மணர்களுக்கு இந்தியா ஆழ்ந்த கடன் பட்டிருக்கிறது. கடவுளை, அடியார்க்கு அடியவர் என்றும், பதித பாவனன் என்றும் கூறியது பிராம்மணர்கள்தான். சண்டாளருக்கோ அல்லது வேசிக்கோ இதய சுத்தி ஏற்பட்டுவிடுமாயின், அவர்கள் மோட்சம் பெறமுடியும் என்பதை உபதேசித்தவர்களும் பிராம்மணர்கள் தான்.

ஆனல், மானிட வர்க்கத்தைச் சேர்ந்த மற்ற எல்லோரையும் போல, பிராம்மணர்களும் குற்றம் குறைகளுக்கும் பலவீனத்துக்கும் ஆளாவது மனித சமூகத்தின் துரதிர்ஷ்டமே. மானிட வர்க்கத்தினருக்கு அறிவையூட்டுவதும், அவர்களை நேர்மையான, முற்றிலும் சத்தியமான பாதையில் நடத்திச் செல்லுவதுமே பிராம்

மணர்களின் கடமையாகும். ஆனால், மற்றவர்களைப் போல் அவர்களும் தங்கள் கடமையைப் புறக்கணித்துவிட்டார்கள். ஆங்கிலேயர்கள் கர்வமும் மமதையும் கொண்டு அலைகிறார்கள் என்று நாம் சுலபமாகக் குற்றம் சாட்டிவிடுகிறோம். பிறர் மீது குற்றம் சாட்டுமுன், நாம் நம்மைக் குற்றமற்றவர்களாகச் செய்துகொள்ள வேண்டும். முதலில் நாம் நமது நிலைமையைச் சீர்திருத்திக் கொள்ளுவோமாக.

[எல்லூரில் நிகழ்த்திய பிரசங்கம்]

—'எங் இந்தியா' – 11—5—1921

## 6

## முன் செய்த வினை

ஒரு மனிதரின் தற்போதைய நிலைக்கு அவரது கர்மாவே, அதாவது முன் பிறப்பில் செய்த வினையே காரணமென்று கூறுகிறார்கள். ஆனால், பாவம் செய்த ஒருவர்மீது கற்களை வீசியெறியும் படி எனது கர்மா என்னை வற்புறுத்தவில்லை. மதம் மனிதரை உத்தாரணம் செய்வதற்காக ஏற்பட்டதேயன்றி, கர்மாவின் பளுவால் அவர் நசுக்குண்டு போகும்படி செய்வதற்காக ஏற்பட்டதல்ல. தாழ்ந்த வகுப்பில் பிறந்த ஒருவரைச் சீரழிந்து போகும் படி விட்டுவிடுவது, கர்மா என்ற மேன்மையான சித்தாந்தத்தைப் பகிரங்கமாக இழிவு செய்வதாகும். ஒரு செம்படவரால் தாம் கௌரவிக்கப்பட்டதை ஸ்ரீ ராமபிரான் ஒரு பாக்கியமாகவே கருதினார். பெரிய மகான்கள், துரதிர்ஷ்டசாலிகளான தங்களுடைய சகோதரர்கள் படும் துன்பங்களிலிருந்து அவர்களை விடுவித்துத் தூக்கிவிட்டதற்கு ஹிந்து மதத்தில் எத்தனை எத்தனையோ உதாரணங்கள் கூறமுடியும். எனவே, நவீன ஹிந்துக்கள் தங்கள் சொந்த மதத்தில் தோன்றிய மகான்களைப் பின்பற்றி, அவ்விதம் ஹிந்து மதத்தை அசுத்தப்படுத்தும் தீண்டாமையாகிற களங்கத்தைத் துடைத்தொழிக்க முற்படமாட்டார்களா?

—'எங் இந்தியா' – 22—9—1921

## 7

## கடவுளையே மறுப்பதாகும்

தீண்டாமை விஷயத்தில் என் மனத்தைச் சமாதானப்படுத்திக்கொள்ள என்னால் ஒருபோதும் இயலவில்லை. அதை நான் ஹிந்து மதத்தில் படர்ந்துள்ள ஒரு புல்லுருவியாகவே கருதுகிறேன். தலைமுறை தலைமுறையாக அந்த வழக்கம் அனுஷ்டிக்

கப்பட்டு வந்திருக்கிறது என்பது உண்மையே. அது போலவே, மற்றும் பல தீய வழக்கங்களும்தான் இன்றுவரை அனுஷ்டிக்கப் பட்டு வந்திருக்கின்றன. அப்பட்டமான வேசித்தனத்துக்குச் சிறுமிகளே அர்ப்பணம் செய்யும் வழக்கத்தை நினைக்க எனக்கு வெட்கமாக இருக்கிறது. அப்படியிருந்தும், அந்த வழக்கம் இந்தியாவின் பல பாகங்களிலும் ஹிந்துக்களால் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. ஹிந்து மதம் பல்லாண்டு பல்லாண்டாக வளர்ந்து வந்துள்ளது. ஹிந்துஸ்தானில் உள்ள மக்களின் மதத்துக்கு அந்நியர்கள் ஹிந்து மதம் என்று பெயர் கொடுத்திருக்கிறார்கள்.

ஒரு காலத்தில் மதத்தின் பெயரால் மிருகங்களேப் பலி கொடுத்து வந்தார்கள் என்பது உண்மையே. ஆனல், அ செய்கை மதமே அல்ல; அதற்கும் ஹிந்து மதத்திற்கும் சம்பந்தமேயில்லே. நாம் கோ சம்ரக்ஷணத்தை ஒரு மத நம்பிக்கையாகக் கொண்டபோது, மாட்டிறைச்சி தின்பதில் பிடிவாதம் காட்டியவர்கள், சாதிப் பிரஷ்டம் செய்யப்பட்டார்கள். அதனுல், ஏற்பட்ட உள்நாட்டுக் கொந்தளிப்பு கோரமானதாக இருந்திருக்க வேண்டும். மத நம்பிக்கையை மீறியவர்கள் மாத்திரம் சமூகத்திலிருந்து பகிஷ்கரிக்கப்படவில்லே; அவர்கள் செய்த பாவத்துக்காக அவர்களுடைய குழந்தைகளும் துன்பத்துக்கு உள்ளாக நேர்ந்தது. இவ்வாருக, நல்ல எண்ணத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு வழக்கம் நாளடைவில் உரம்பெற்று விட்டது போலும். முற்றிலும் தகாத, நீதியற்ற அவ் வழக்கம் நிரந்தரமாகி, நமது புனித சாஸ்திர நூல்களின் சுலோகங்களிலும் இடம்பெற்று விட்டது.

எனது விளக்கம் சரியாயினும் தவருயினும், தீண்டாமை, பகுத்தறிவுக்கும், இரக்கம், அன்பு அல்லது அனுதாப உணர்ச்சிக்கும் முரணுக இருக்கிறது. கோ பூஜையை நிலே நிறுத்தியுள்ள ஒரு மதம், மனிதர்களேக் கொடுமையாகவும் மனிதத் தன்மையற்ற முறையிலும் பகிஷ்காரம் செய்வதை அனுமதித்து, அதற்கு இடம் கொடுக்காது, என்னேச் சின்னுபின்னமாகக் கிழித்து எறியட்டும் என்று இருப்பேனேயன்றி, ஒடுக்கப்பட்ட வகுப்பினரை நான் ஒருபோதும் கைவிடமாட்டேன். தீண்டாமைக் களங்கத்தை வைத்துக்கொண்டு தங்களுடைய உயர்ந்த மதம் இழிவு படுத்தப்படுவதை ஹிந்துக்கள் அனுமதிப்பார்களாயின், அவர்கள் ஒருபோதும் விடுதலேபெறத் தகுதி வாய்ந்தவர்களாகமாட்டார்கள்; அவர்களுக்கு விடுதலே கிடைக்கவும் கிடைக்காது. என் உயிரைக் காட்டிலும் அதிகமாக நான் ஹிந்து மதத்தை நேசிப்பதால், அந்தக் களங்கம் எனக்குச் சகிக்க முடியாத ஒரு சுமையாக இருக்கிறது. நமது சமூகத்தில் ஐந்தில் ஒரு பிரிவினருக்குச் சம உரிமை அளிக்க நாம் மறுப்பது, கடவுளேயே மறுப்பதாகும். அவ்விதம் நாம் மறுக்க முற்படாமல் இருப்போமாக.

—'எங் இந்தியா' – 6—10—1921

# 8

# எதிர்வாதத்திற்குப் பதில்

'எங் இந்தியா' ஆசிரியருக்கு,

இந்தியாவின் அரசியல் விடுதலையுடன் தீண்டாமைப் பிரச்னையை இணைப்பது நியாயமானதென்று காந்திஜி கருதுவதால், அப்பிரச்னையில் ஹிந்துக்கள் இது வரையில் இருந்ததைவிட அதிகக் கவனம் செலுத்த வேண்டியவர்களாக இருக்கிறார்கள். உயர்ந்த சாதி என்று சொல்லிக்கொள்ளுவோர் தாழ்ந்த சாதியினரை நியாயமாக நடத்த வேண்டுமென்று, காந்திஜி ஜீவகாருண்யத்தை அடிப்படையாகக் கொண்டே இதுவரை கூறி வந்தார். அக்கோரிக்கை நியாயமற்றதென்று எந்த ஹிந்துவும் கூறமுடியாது. ஆனால், இப்போது தேசபக்தரான அத்தலைவருக்கு யாரும் மறுக்க முடியாத செல்வாக்கும் மிகுந்த தொண்டு புரிந்ததன் பயனாக நியாயமான அந்தஸ்தும் ஏற்பட்டுவிட்டன. இந்நிலையில் அவர் மதத்தை அடிப்படையாகக் கொண்டும் தீண்டாமையை ஒழிக்க வேண்டுமென்று மக்களுக்குக் கட்டளை இடத் தொடங்கியிருக்கிறார். தாம் ஹிந்து மதத்தை ஆராய்ச்சி செய்த பெரும் பண்டிதர் அல்லவென்றும், மொழிபெயர்ப்புகளை வாசித்தே ஹிந்து மதத்தைப் பற்றிய அறிவைத் தாம் பெற்றிருப்பதாயும் அவர் கூறி அதிகக் காலமாகவில்லை. ஆனால், இப்போதோ அவர் தாம் ஒரு சனாதன ஹிந்து என்றும், தீண்டாமைக்குச் சாஸ்திரங்களில் ஆதாரமே இல்லை என்றும் துணிந்து கூற முன் வந்துள்ளார்.

காந்திஜியைப் போன்ற அந்தஸ்துள்ள கனவான்கள் மிகவும் தீர்க்காலோசனை செய்தே எந்த அறிக்கையும் விடுக்கவேண்டுமென்று எல்லோரும் எதிர்பார்ப்பார்கள். எனவே, ஒரு தரும சாஸ்திரத்தின் ஏடுகளைக் கூடப் புரட்டாமல் தம் இஷ்டப்படி அவர் அறிக்கைகள் வெளியிடுவது மிகவும் வருந்தத்தக்கதாகும். அவர் புரட்டிப் பார்த்திருந்தால், மிகவும் நிந்திக்கப்பட்ட 'தீண்டாமை'க்கு எண்ணிக்கையற்ற ஆதாரங்கள் இருப்பதை அவர் கண்டிருப்பார். தாழ்த்தப் பட்ட வகுப்பினருக்கு வாழ்க்கையின் வசதிகள் கிடைக்கப் பாடுபடுவதுடனும், உயர்ந்த சாதியினரின் இறுமாப்பை அகற்ற முற்படுவதுடனும் அவர் நின்றிருந்தால், சாஸ்திரங்களில் இன்னும் நம்பிக்கை வைத்துக் கொண்டுள்ள ஹிந்துக்கள் அவருடன் ஒத்துழைக்க முற்றிலும் விருப்பமுடையவர்களாக இருப்பார்கள். ஆனால், தங்கள் மதத்தில் தோன்றிய மனு, யாக்ஞவல்கியர், பராசரர் போன்ற மற்றும் பல நூல் ஆசிரியர்களைக் காட்டிலும் காந்திஜியை ஒரு பேராசிரியராக அவர்கள் அங்கீகரிப்பது முடியாத காரியம்.

அந்தப் பிரச்னை சம்பந்தமான எல்லா ஆதாரங்களையும் இங்கே மேற்கோள் காட்டுவது இயலாத காரியம். எனவே, இங்கே ஒரு சில மேற்கோள்களைக் காட்டுவதுடன், இவ்விஷயத்தில் அக்கறையுள்ள உங்கள் வாசகர்களைச் சாஸ்திரங்களைப் பார்க்கும்படியும் கேட்டுக்கொள்ளுகிறேன். சாஸ்திரங்களில் இவை போன்ற மேற்கோள்கள் ஏராளமாக இருக்கின்றன.

"ஒரு சண்டாளர், மாதவிடாய் உள்ள பெண், சாதிப் பிரஷ்டர், சமீபத்தில் பிரசவித்த பெண், பிரேதம் அல்லது பிரேதத்தைத் தொட்டவர் இவர்களைத் தீண்டியவர்கள் ஸ்நானம் செய்த பிறகே சுத்தமாவார்கள்."

—மனு 5-85. கௌதம தரும சாஸ்திரம் 14-29

"சண்டாளரும் சாதிப் பிரஷ்டரும் நமக்குச் சிறிது தூரத்திலேயே இருக்க வேண்டும். அவர் நிற்குமிடம் ஒரு பசுவாலை ஆட்டும் தூரத்துக்குக் குறைவாக இருக்குமாயின், நாம் இடுப்பில் கட்டிக்கொண்டிருக்கும் துணியுடன் ஸ்நானம் செய்யவேண்டும்."

—வியாக்ரபாதர்

"ஒரு சாதிப் பிரஷ்டர், மாதவிடாய் உள்ள பெண், சமீபத்தில் பிரசவித்த ஸ்திரீ, ஒரு சண்டாளர் இவர்கள் நம்மிடமிருந்து முறையே ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு நுகத்தடிகள் தூரத்தில் நிற்க வேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கிறது."

—பிருகஸ்பதி

"ஒருவர் சண்டாளரைத் தீண்டுவாராயின் அவர் ஸ்நானம் செய்ய வேண்டும்."

—பௌதாயனர்

சாஸ்திர விரோதமான காரியங்களைப் பிடிவாதமாக அடிக்கடி செய்து வருபவரையே சாதிப் பிரஷ்டர் என்று சாதாரணமாகக் கூறுகிறோம். அவர் கூட ஒரு தீண்டாதார்தான்.

அவரை மாத்திரமே சாதிப் பிரஷ்டர் என்று குறிப்பிடுவதில்லை. இதில் மற்றும் சில குறிப்பிட்ட சாதியினரும் சேர்ந்தவர்கள்தான்.

"உயர் சாதிப் பெண்களிடம் சூத்திரருக்குப் பிறந்த குழந்தைகளும் சாதிப் பிரஷ்டர்கள்தான். ஆனால், அவர்களில் சண்டாளர்களே மிகுந்த பாவம் செய்தவர்கள் ஆவர்."

—கௌதமர் 4-27, 28

சாதிப் பிரஷ்டர்கள் யார், அவர்களுடைய தொழில்கள் யாவை என்பதெல்லாம் மனு ஸ்மிருதியின் பத்தாவது அத்தியாயத்தில் விவரமாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. தீண்டாதாரைத் தொடுவோர், அவர்களுடன் பேசுவோர், அவர்கள் தொட்ட அல்லது அவர்களுக்குச் சொந்தமான அல்லது அவர்கள் வெட்டிய கிணறுகள், குளங்கள் இவைகளில் உள்ள தண்ணீரைக் குடிப்போர், அவர்கள் பார்த்த, தீண்டிய, அல்லது அவர்களுக்குச் சொந்தமான உணவை அருந்துவோர், இவர்கள் சுத்தமாவதற்கு என்னென்ன சடங்குகள் செய்ய வேண்டுமென்ற முழு விவரங்களும் ஸ்மிருதிகளில் காணப்படுகின்றன.

ஒருவருடைய சொந்த மனைவியாக இருந்தால்கூட அவள் சமீபத்தில் பிரசவித்திருந்தாலோ அல்லது மாதவிடாயாக இருந்தாலோ அவளையும் தீண்டாதாராகவே சாஸ்திரம் கருதுகிறது. எனவே, இந்த விதிகளை வாசிப்போர் ஒரு விஷயத்தைத் தெளிவாகத் தெரிந்துகொள்ளலாம். இறுமாப்பையோ, உயர்வையோ அடிப்படையாகக் கொண்டு அவ்விதிகளைச் சாஸ்திரங்கள்

ஏற்படுத்த வில்லை; ஆன்ம சுத்தியை அடிப்படையாகக் கொண்டே அவ்விதி கள் ஏற்பட்டிருக்கின்றன.

ஹிந்துக்கள் தங்கள் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்திக்கொள்ள சாஸ் திரங்கள் ஆன்ம சம்பந்தமான வழிகாட்டிகளாக இருந்து வரும் வரையில், தீண்டாமை மத சம்பந்தமான ஒரு பிரச்னையில்லை, சமுதாயப் பிரச்னையே என்று கூறுவது முற்றிலும் அறியாமையாகும். சாஸ்திரங்களில் என்னென்ன கூறப்பட்டிருக்கின்றன, என்னென்ன கூறப்படவில்லையென்பதைப் பிரகடனம் செய்ய முற்படுமுன், சாஸ்திரங்களை வாசிக்கும் சிரமத்தை மேற்கொள்ளும் படி நான் காந்திஜியைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

தீண்டாமை சாஸ்திர விரோதமாகும் என்று நிரூபிப்பதற்காக, ராம பிரானுக்கும் குகனுக்கும் உள்ள நட்பைப் பற்றி காந்திஜி தமது பிரசங்க மொன்றில் குறிப்பிட்டார். அவர் ராமாயணத்தை நன்கு வாசித்திருந்தால் குகன் நிஷாத சாதியைச் சேர்ந்தவர் (அனுலோம சாதிகளில் ஒன்று) என்பதை யும், எனவே அவர் தீண்டாதார் அல்ல என்பதையும் தெரிந்துகொண்டிருப் பார்.

திருநெல்வேலி.

—ஆர். கிருஷ்ணஸ்வாமி ஐய

தீண்டாமையை எதிர்ப்போரின் வாதத்தை 'எங் இந்தியா' வாசகர்கள் அறிந்துகொள்ள வேண்டும் என்பதற்காகவே மேற் கண்ட கடிதத்தை நான் மகிழ்ச்சியுடன் பிரசுரித்துள்ளேன். ஸ்ரீ ஐயர் கற்றறிஞரான ஒரு வக்கீல். எனவே, எனது நிலையை அவர் நன்கு அறிந்துகொண்டிருக்க வேண்டுமென்றே எவரும் எதிர் பார்ப்பார். ஆனால், அவர் அவ்விதம் அறிந்து கொள்ளவில்லை என்பதையே அவரது கடிதம் காட்டுகிறது.

நான் சென்னை மாகாணத்தில் நிகழ்த்திய பிரசங்கங்களில் எல்லாம், தீண்டாதாருக்கு விரோதமாக ஏற்பட்டுள்ள நியாய மற்ற, கொடுமையான, அர்த்தமில்லாத வெறுப்பை வற்புறுத்திக் கூறினேன். நமது தாய்மாரும், சகோதரிகளும் தீண்டத்தகாத வர்களாக இருக்கும்போது நாம் அவர்களை எவ்விதம் நடத்து கிறோமோ, அது போல் தீண்டாதாரான பஞ்சமர்களை நடத்து கிறோமா? சாஸ்திரங்களில் எனக்கு ஆழ்ந்த அறிவு இல்லையென் பதை இன்னும் ஒப்புக்கொள்ளுகிறேன். எனினும், ஹிந்து மதத்தின் இரகசியத்தை நான் அறிந்து கொண்டிருப்பதாகப் பறைசாற்றுகிறேன்.

நான் அடக்கமாக, ஆனால் என் பலம் கொண்டமட்டும் ஆணித்தரமாக ஒரு விஷயம் கூறத் துணிகிறேன். அதாவது, இப்போது நம்மிடையே நிலவிவரும் தீண்டாமை நீடித்து வருவது ஹிந்து மதத்துக்கே பெரும் களங்கமாகும்; ஸ்மிருதிகளை அநீதி யாகத் துஷ்பிரயோகம் செய்வதாகும்; ஹிந்து மதத்தின் அடிப் படையான அன்புக்கு முற்றிலும் முரணாகும். இன்று அனுஷ்டிக் கப்பட்டு வரும் தீண்டாமையைப் பேய்த்தனமான ஒரு செய்கை

என்று கூற நான் தயங்கவில்லை. ஸ்ரீ ஐயருக்குக் கடவுள் அளித்துள்ள திறமையை, அவரது தேச மக்களிடையேயுள்ள சாதிப் பிரஷ்டர்களுக்குத் தொண்டு புரிவதில் அர்ப்பணம் செய்யும்படி அவரை அழைக்கிறேன். அப்படியாயின், ஹிந்து சாஸ்திரங்களில் நான் காணும் வாழ்க்கையின் அர்த்தத்தை அவரும் காண்பார் என்று உறுதி கூறுகிறேன்.

—'எங் இந்தியா' – 20, 27—10—1921

## 9

# கீதோபதேசத் தத்துவம்

எல்லா வகுப்பு வேற்றுமைகளையும் ஒழித்துவிட முடியுமென நான் நம்பவில்லை. கீதையில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா உபதேசித்த சமத்துவக் கொள்கையில்* எனக்கு நம்பிக்கையிருக்கிறது. நான்கு சாதியைச் சேர்ந்த சகலரையும் சமமாக நடத்த வேண்டுமெனக் கீதை உபதேசிக்கிறது. 'பங்கி'க்கு என்ன தருமம் உண்டோ, அதே தருமத்தைக் கீதை பிராம்மணருக்கு விதிக்கவில்லை. எனினும், மிகவும் கற்றறிஞரான பிராம்மணர் எவ்வளவு அன்புக்கும் மதிப்புக்கும் உரியவரோ, அதே அளவுக்குப் பங்கியும் உரியவர் என்று கீதை வற்புறுத்துகிறது. எனவே, தங்களை வெறுக்கிறார்கள் அல்லது இழிவுபடுத்துகிறார்கள் என்று தீண்டாதார் நினைக்காமலிருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டியது நம்முடைய கடமையாகும். அவர்கள் தங்களுடைய ஜீவனத்துக்கு நம்முடைய எச்சில் இலைகளை எதிர்பார்க்கும்படி நாம் விட்டுவிடக் கூடாது.

ஒரே கடவுளைத் தொழுது, தமது உடலையும் உள்ளத்தையும் துப்புரவாகவும் பரிசுத்தமாகவும் வைத்துக் கொள்ளுவோரிடம், அவர் ஒரு பிராம்மணரோ, அல்லது 'பங்கி'யோ, யாராயினும் சரி, நான் எப்படி வேற்றுமை காட்ட முடியும்? சமையற் கட்டில் எறியப்பட்ட அசுத்த உணவை ஒரு 'பங்கி'க்கு நான் கொடுத்தாலோ, அல்லது அவர் அவசியமாகத் தேவைப்படும்போது அவருக்கு உதவி எதுவும் அளிக்க மறுத்தாலோ, நான் பாவம் செய்தவனாகவே கருதுவேன்.

எனது நிலையைச் சந்தேகத்துக்கு இடமின்றி முற்றிலும் தெளிவாகக் கூற விரும்புகிறேன். இன்று அமுலில் இருந்து வரும் தீண்டாமை வழக்கத்துக்கு ஹிந்து மதத்தில் ஆதாரமில்லை

* ஸமஸ்ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம்-18-54

இதன் பொருள் : எல்லா உயிர்களிடத்தும் சம புத்தியுள்ளவன் என்னிடம் ஒப்புயர்வற்ற பக்தியை அடைகிறான்; என்மீது மகத்தான பக்தி கொள்ளுகிறான்.

—பகவத் கீதை–18-ம் அத்தியாயம், 54-வது சுலோகம்.

யென நான் கருதுகிறேன். என்றுலும், சில சந்தர்ப்பங்களில் ஓரளவுக்கு ஹிந்து மதம் தீண்டாமையை அனுமதித்திருக்கிறது. உதாரணமாக, என் தாயார் அசுத்தமான பொருட்களைக் கையாளும் ஒவ்வொரு தடவையும் அவள் தீண்டாதவளாகி விடுகிருள். எனவே, மீண்டும் தன்னைச் சுத்தமாக்கிக் கொள்ள அவள் ஸ்நானம் செய்தாக வேண்டும். ஒருவரை, பிறப்புக் காரணமாகத் தீண்டாதாராகக் கருதலாம் என்பதை, நான் வைஷ்ணவன் என்ற முறையில் ஒப்புக்கொள்ளமாட்டேன். மதத்தினுல் அங்கீகரிக்கப்படும் தீண்டாமை தாற்காலிகமானது. அந்தத் தீண்டாமையை எளிதில் அகற்றிவிடலாம். அத்தீண்டாமை செய்கையைக் குறிப்பதேயன்றி, செய்தவரைக் குறிப்பதல்ல. அதுமாத்திரமல்ல. நாம் குழந்தையாக இருக்கும்போது, நமது தாயார் மலஜலங்களைத் துடைத்து நம் ஆரோக்கியத்துக்குத் தொண்டு புரிவதால், நாம் அவளிடம் பக்தி காட்டுகிருேம். அவளது தொண்டு எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக இருக்கிறதோ, அவ்வளவுக் கவ்வளவு அதிகமாக நமக்கு அவளிடம் அன்பும் மதிப்பும் ஏற்படுகின்றன. அதுபோல் சமுதாயத்தின் ஆரோக்கியத்துக்காகத் தொண்டு புரியும் 'பங்கி'கள், நமது மட்டற்ற அன்புக்கும் மதிப்புக்கும் உரியவராகிருர்கள்.

## 10

# தீண்டாமையின் அழிக்கும் சக்தி

[ஜம்புசார் முனிசிபாலிடி அளித்த வரவேற்பு உபசாரத்துக்குப் பதிலாகக் காந்திஜி கூறியதாவது :]

நீங்கள் உபசாரப் பத்திரத்தில் தீண்டாதாரைப் பற்றிக் குறிப்பிடவில்லை. அது தவருகும். தீண்டாதாரை அலட்சியம் செய்யும் ஒரு முனிசிபாலிடி, அந்தப் பெயருக்கே தகுதியற்றது. உண்மை யென்னவெனில், என்னை நீங்கள் கௌரவிப்பதாகப் பெருமை யடித்துக்கொள்ள விரும்புனீர்கள். எனவே, என் நடவடிக்கைகளின் ஒரு பகுதியை மட்டிலும் குறிப்பிட்டால் போதுமென்று எண்ணிவிட்டீர்கள். என் நடவடிக்கைகளில் ஒரு பகுதியை மாத்திரம் பிரித்துக் கூறுவது சாத்தியமாயின், அவ்விதம் குறிப்பிடுவது பற்றி எனக்கு ஆட்சேபணையில்லை. ஆனுல், தீண்டாமையை அகற்றும் விஷயமாக என் முயற்சி, எனது உயிரின் ஒரு முக்கியமான அம்சம் என்றும், எனவே எனது மற்ற நடவடிக்கைகளிலிருந்து அதைத் தனியாக ஒதுக்கிவைக்க முடியாதென்றும் நான் பல தடவைகளில் குறிப்பிட்டிருக்கிறேன். நான் வாழ்வதும், இருப்பதும், நடமாடுவதும் ஹிந்து மதத்திலிருந்து இந்தச் சாபக்கேட்டை ஒழிப்பதற்காகத்தான். அவ்விதமில்லையாயின், நான் உண்மையான ஹிந்துவாக இருக்க முடியாது.

எனவே, தீண்டாமை ஹிந்து மதத்தின் ஓர் அம்சம் என்று நம்புவோரோ, அல்லது அவ்விஷயத்தில் அக்கறையுள்ளவர் களோ, எனக்கு வரவேற்புப் பத்திரம் அளிக்க முடியாது. நான் ஒரு 'பங்கி' தோட்டி, நூற்போன், நெசவாளி, தொழிலாளி. அந்த முறையில் கௌரவிக்கப்படுவதையே நான் விரும்புகிறேன்.

ஹிந்து – முஸ்லிம் ஒற்றுமையின்றிச் சுயராஜ்யம் பெற முடியாது. அதை நாம் இன்று பெருவிட்டாலும், என்றைக்காவது பெற்றுத் தீருவோம். ஆனால், ஹிந்து – முஸ்லிம் ஒற்றுமை இராததற்காக ஹிந்து மதம் அழிந்துவிடாது. அந்த ஒற்றுமை ஏற்படுவதற்கு முன், நாம், சில கடுமையான போராட்டங்கள் நடத்தித் தீரும்படி நேரலாம். அது போலவே, கதர், ராட்டினம் இல்லையென்றால், ஹிந்து மதம் அழிந்துவிட்டதென்று அர்த்த மல்ல. ஆனால், தீண்டாமை ஹிந்து மதத்தை அழித்துவிடக் கூடியது. இந்தச் சாபக்கேட்டை நாம் கட்டியழுதுகொண்டிருப் போமாயின், மானிட வர்க்கம் நம்மைப் பார்த்து எள்ளி நகை யாடும். தீண்டாமைக்கு ஆக்கம் அளிக்கும் மதம், உலகத்தின் கண்டனத்துக்கு ஆளாகியே தீரும்.

—'எங் இந்தியா' 23—4—1925

# 11

# வேதங்களும் சனாதன ஹிந்துவும்

பாரபட்சமற்ற, ஆனால் சிநேக பாவமான ஓர் ஆட்சேபவாதி எழுதுகிறார் :

"நீங்கள், உங்களை ஒரு சனாதன ஹிந்து என்று பலதடவைகளில் பிரகடனம் செய்து கொண்டிருக்கிறீர்கள். வேதங்கள், ஸ்மிருதிகள் இவற்றில் நம்பிக்கையுள்ளவரே சனாதன ஹிந்து என்றும் விளக்கியிருக்கிறீர்கள். பிறப் பினால் சாதிகள் உண்டென்பதற்கு வேதங்களில் ஆதாரம் இருப்பதையும் வற்புறுத்தியிருக்கிறீர்கள். சாதிகளின் தொகையை நான்காக வரையறுத் திருக்கிறீர்கள். புராதன சாதிகள் நான்கு என்று கூறப்படுகின்றன அல்லவா? 'கூறப்படுகின்றன' என்று நான் சொல்லுவதன் காரணம் என்னவெனில், மனு ஸ்மிருதியும் மற்ற ஸ்மிருதிகளும் ஏற்பட்டபோதே நான்கைக் காட்டிலும் அதிகமாக எத்தனையோ சாதிகள் இருந்திருக்கின்றன. சாதிகளிடையே சம பந்தி போஜனமும், கலப்பு மணமும் பிற்காலத்தில்தான் தடுக்கப்பட்டன. முக் கிய சாதிகளில் நாலாவதாக அல்லது கடைசியாகவருவோர் சூத்திரர்தான். அவர் வேதங்களைக் கற்கக்கூடாதென்று வேத நூல்களே தடுத்துள்ளன.

ஒவ்வொரு சனாதன ஹிந்துவும் சாதி மத பேதமின்றி வேதங்கள் கற்றுப் பாராயணம் செய்யவேண்டியதும், காயத்ரி ஜபம் செய்ய வேண்டியதும் அவசியமென்று நீங்கள் கூறுகிறீர்கள். ஹிந்துமத வேதங்களை வாசிப்பது, ஜபம் செய்வது, அல்லது காதால் கேட்பதுகூட அபசாரம் என்று தடுக்கப்பட்

டிருக்கும் சூத்திரர், ஹிந்து மதத்தைச் சேர்ந்தவரென்று எவ்வாறு கூற முடியும் என்ற கேள்வி எழுகிறது. ஒருவர், தண்ணீரில் இறங்காமலே எவ்வாறு நீந்தக் கற்றுக்கொள்ள முடியும்? ஒன்று, சூத்திரர் நீங்கள் குறிப்பிடும் சனதன ஹிந்துவாக இருக்க முடியாது; அல்லது, சனதன ஹிந்து உங்கள் விளக்கத்துக்கு மாறுபட்டவராக இருக்க வேண்டும். உண்மையான சனதன தருமத்தின் உதாரண புருஷராகத் திகழும் தாங்கள், இவ்விதம் ஏராளமான முரண்பாடுகள் உள்ள ஒரு வார்த்தையை அனுமதிப்பதாயின், பிறவியில் பிராமணனான நான் 'ஹிந்து' என்ற பெயரைக்கொண்டு பெருமை அடைய முடியாது. காயத்ரியைப் பற்றி நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்களே; நீங்கள் உங்களுடைய இரண்டாவது பிறவியில்* ஒரு நாள்கூட உங்களுடைய தினசரிப் பிரார்த்தனைகளில் காயத்ரி ஜபத்தையும் சேர்த்துக் கொள்ளாமல் இருந்ததில்லையா? நான் தங்களைத் தாழ்மையுடன் இந்தக் கேள்வி கேட்கலாமா?''

நான் வாக்கியத்தின் மேலெழுந்தவாரியான அர்த்தத்தைப் பார்ப்பவனல்ல. உலகத்தில் உள்ள பல வேத நூல்களின் உட்கருத்தை அறிந்துகொள்ள முயற்சிக்கிறேன். சத்தியத்தையும் அகிம்சையையும் சோதனையாகக்கொண்டே அந்த வேத நூல்களின் வியாக்கியானத்தைக் கவனிப்பேன். அந்தச் சோதனைக்கு முரணாக இருப்பதைத் தள்ளிவிட்டு, அதற்கு உடன்பாடாக இருப்பதையே ஏற்றுக்கொள்ளுவேன். வேதங்கள் கற்கத் துணிந்ததற்காக, ஒரு சூத்திரருக்கு ராமபிரான் தண்டனை விதித்தார் என்ற கதையை இடைச் செருகல் என்று நான் நிராகரிக்கிறேன்.

அது எப்படியாயினும், ராமபிரானைச் சரித்திரப் புகழ்பெற்ற ஒருவராக அல்ல, எனது கற்பனையில் மாசற்ற பூரண அம்சங்கள் நிறைந்த ஒருவராக நான் தொழுது வணங்குகிறேன். புதிய சரித்திர ஆராய்ச்சிகளின் வளர்ச்சிக்குத் தகுந்தவாறு, ராமபிரானின் வாழ்க்கை பற்றிய உண்மைகளும் மாறுபடலாம். சரித்திர சம்பந்தமான ராமனுக்கும் துளசிதாஸ் ராமாயணத்துக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. சரித்திர சோதனையைக் கொண்டு தீர்ப்புக் கூறுவதாயின், துளசிதாஸ் ராமாயணத்தைக் குப்பைக் கூடையில் போடும்படியிருக்கும். ஆனால், ஆன்ம அனுபவத்தைக்கொண்டு பார்ப்பதாயின், என் சம்பந்தப்பட்ட வரையில் அந்த ராமாயணத்துக்கு ஈடே இல்லை. துளசிதாஸ் ராமாயணம் என்று பல பதிப்புகள் வெளியாகியுள்ளன. அவைகளில் உள்ள ஒவ்வொரு வார்த்தையும் சத்தியமென்று நான் கூறவில்லை. ஆனால், அந்த நூல் முழுவதும் அடங்கியுள்ள தத்துவமே என்னை மெய் மறக்கச் செய்துவிடுகிறது.

சூத்திரர்கள் வேதங்களைக் கற்கக்கூடாது என்ற தடையை நான் ஆதரிக்க முடியாது. நாம் அந்நியருக்கு அடிமைகளாக இருந்து வரும்வரையில், நாமெல்லோருமே உண்மையில் தற்

---

*பூணூல் போடுவதற்கு முன் முதற் பிறவியாகும்; பூணூல் போட்ட பிறகு இரண்டாவது பிறவியாகும்.

போது சூத்திரர்கள்தான் என்பது என் அபிப்பிராயமாகும். அறிவு, ஒரு வகுப்பு அல்லது பிரிவினரின் ஏகபோக பாத்திய மாக இருக்க முடியாது. காற்றின் கனம் குறைந்த மிக உயரத் தில் செல்லுவோர், பூர்வாங்கப் பயிற்சிகள் பெற்றிருந்தாலன்றி, அங்கே மூச்சுவிட முடியாமல் திணறுவார்கள். சாதாரண கணிதத் தில் பயிற்சி பெருதவர்கள் உயர்தர க்ஷேத்திர கணிதத்தையோ, பீஜ கணிதத்தையோ எவ்வாறு அறிந்துகொள்ள முடியும்? அது போலவே, எவரும் பூர்வாங்கப் பயிற்சி பெற்றிருந்தாலன்றி, உயர்ந்த அல்லது நுணுக்கமான உண்மைத் தத்துவங்களை அறிந்துகொள்ளுவது அசாத்தியமான காரியம்.

கடைசியாக, நன்மை பயக்கும் சில சம்பிரதாயங்களில் எனக்கு நம்பிக்கை உண்டு. காயத்ரி ஜபம் செய்வதற்கு ஒரு சம்பிரதாயம் உண்டு. அதாவது, குறிப்பிட்டபடி ஸ்நானம்செய்து சுத்தமாக இருந்துகொண்டு, சில குறிப்பிட்ட காலங்களில் மாத்திரமே காயத்ரி ஜபம் செய்ய வேண்டும். அந்தச் சம்பிர தாயங்களில் எனக்கு நம்பிக்கை இருப்பதாலும், எப்போதும் அவற்றை அனுஷ்டிக்க என்னல் இயலாததாலும், அவ்விஷயமாக நான் பிற்காலத்தில் தோன்றிய மகான்களைப் பின்பற்றி வந்திருக் கிறேன். அதாவது, பாகவதத்தில் உள்ள துவாதச மந்திரங்கள் அல்லது இன்னும் எளிமையான துளசிதாசரின் உபதேச விதி, கீதையிலிருந்தோ, வேறு நூல்களிலிருந்தோ சில சுலோகங்கள், பிராகிருத பாஷையில் *சில பஜனைகள் இவற்றுடன் நான் திருப்தி யடைந்து வந்துள்ளேன். இவைதான் தினசரி என் ஆன்ம உணவாக, எனது காயத்ரியாக இருந்து வந்திருக்கின்றன. அவை எனக்கு தினசரித் தேவையான மனச்சாந்தியையும் ஆறுதலையும் கொடுக்கின்றன.

—'எங் இந்தியா' – 27 – 8 – 1925

# 12

# சைவ உணவும் தீண்டாதாரும்

ஒரு திருவாங்கூர் நிருபர் எழுதுகிருர்:

"பிராம்மணர்களையும் அவர்களுடைய பழக்க வழக்கங்கள் அல்லது ஆசாரங்களையும் பற்றி ஒரு தவருன எண்ணம் இருந்து வருகிறதென்று தோன்றுகிறது. நீங்கள் அகிம்சையைப் புகழ்கிறீர்கள். ஆனல், பிராம்மண சமூகத்தினரான நாங்கள் மாத்திரமே அகிம்சையை மதத்தின் கடமையாக அனுஷ்டித்து வருகிறோம். எங்களில் அதை மீறும் எவரையும் நாங்கள் சாதிப் பிரஷ்டராகக் கருதுகிறோம். மிருகங்களைக் கொல்லுவோர் அல்லது மாமிசம் தின்போருடன் சம்பந்தம் வைத்துக் கொள்ளுவதுகூட, பாவமாக எங்களால்

---

*சமஸ்கிருதத்தில் உள்ள பேச்சு மொழி.

கூடியதே. அது ஒவ்வொரு மாகாணத்திலும் ஒவ்வொரு விதமாக இருந்தாலும், அதன் சாரமான தத்துவம் எங்கும் ஒரேவித மாகவே இருக்கிறது. பழக்க வழக்கம் மதம் அல்ல. பழக்க வழக்கம் மாறலாம். ஆனால், மதம் மாறுதலின்றி ஸ்திரமாக இருப்பதாகும்.

ஹிந்து மதத்தின் பரிசுத்தத் தன்மை, அம்மத பக்தர்களின் தன்னடக்கத்தையே பொறுத்திருக்கிறது. ஹிந்து மதத்துக்கு ஆபத்து வந்தபோதெல்லாம், ஹிந்துக்கள் உக்கிரமான தவம் புரிந்து, ஆபத்துக்குக் காரணங்களை ஆராய்ந்து, அவற்றை எதிர்த்து நிற்பதற்கான யுக்திகளைச் கையாண்டிருக்கிறார்கள்.

சாஸ்திரங்கள் எப்போதும் வளர்ச்சியடைந்து வருகின்றன. வேதங்கள், உபநிஷத்துக்கள், ஸ்மிருதிகள், புராணங்கள், இதி காசங்கள் இவையெல்லாம் ஒரே காலத்தில் ஏற்பட்டவையல்ல. குறிப்பிட்ட காலங்களின் அவசியத்துக்குத் தகுந்தவாறு ஒவ் வொன்றும் வளர்ந்துள்ளது. அதனாலேயே அவை ஒன்றுக் கொன்று முரணாக இருப்பதுபோல் தோன்றுகின்றன. இந்த நூல்கள் சாசுவதமான உண்மைகளைப் புதிதாகப் பிரகடனப்படுத் துவதில்லை. ஆனால், இந்த நூல்கள் எந்தக் காலத்திலேற்பட் டனவோ, அப்போது அவை எவ்விதம் அனுஷ்டிக்கப்பட்டன என் பதையே காட்டுகின்றன. ஒரு குறிப்பிட்ட காலத்தில் நல்லதாக இருந்த ஒரு வழக்கத்தை மற்றொரு காலத்தில் கண்மூடித்தன மாகப் பின்பற்றினால், மக்கள் நம்பிக்கையிழந்து சகதியில் உழல நேரும். ஒரு காலத்தில் மிருக பலி அனுஷ்டானத்தில் இருந்த தென்பதற்காக, அதை இன்று மீண்டும் கைக்கொள்ளலாமா? ஒரு காலத்தில் நாம் மாட்டிறைச்சி சாப்பிட்டு வழக்கம் என்ப தற்காக, இன்றும் அப்படிச் சாப்பிட முற்படலாமா? ஒரு காலத் தில் நாம் திருடர்களின் கால்களையும் கைகளையும் வெட்டிவிடு வது வழக்கம் என்பதற்காக, இன்றும் அந்தக் காட்டுகிராண்டித் தனத்தை அனுஷ்டிப்பதா? பல கணவர்களை மணம் செய்து கொள்ளும் வழக்கத்தை மீண்டும் அனுஷ்டிக்க முற்படலாமா? சிசு விவாகத்தை மறுபடியும் ஏற்படுத்தலாமா? ஒரு காலத்தில் மானிட வர்க்கத்தின் ஒரு பகுதியினரை வெறுத்து ஒதுக்கினோம் என்பதற்காக, இன்றும் அவர்களது சந்ததிகளுக்கு சாதிப் பிரஷ் டர்கள் என்று முத்திரை வைத்துவிடலாமா?

ஹிந்து மதம் தேக்கத்தை வெறுக்கிறது. அறிவு எல்லையற்ற கடல் போன்றது. சத்தியத்தை அனுஷ்டிப்பதும் அப்படித் தான். ஆன்மாவின் சக்தி பற்றிய நமது அறிவு நாளுக்கு நாள் வளர்கிறது. நாம் அந்த அறிவை எல்லையின்றி விருத்தி செய்து கொண்டே போவோம். புதிய அனுபவமானது நமக்குப் புதிய கடமைகளைக் கற்பிக்கும். ஆனால், உண்மை என்றென்றும் ஒரே விதமாகத்தான் இருக்கும். அதை எவராவது, எப்போதாவது முற்றிலும் உணர்ந்தது உண்டா?

வேதங்கள் உண்மையையே காட்டுகின்றன. அவற்றிற்கு எல்லையே இல்லை. வேதங்களை முற்றிலும் உணர்ந்தவர் யார்? இன்று வேதங்கள் என்ற பெயருடன் இருப்பவை உண்மையான வேதத்தின், அதாவது அறிவு நூலின் கோடியில் ஒன்றுகூட இல்லை. நம்மிடையேயுள்ள சில நூல்களின் முழு அர்த்தத்தை யாவது அறிந்தவர் யார்? இந்த எல்லையற்ற சிக்கல்களின் மத்தி யில் தட்டுத் தடுமாறிக் கொண்டு போவதற்குப் பதிலாக, நமது ரிஷிகள் ஒரு விஷயத்தைக் கற்றுக் கொள்ளும்படி நமக்கு உபதேசித்தார்கள்.

''தன்னைப் போல் உலகத்தையும் கருது'' என்பதுதான் அவர்களின் உபதேசமாகும். தன்னைச் சோதித்துக் கொள்ளுவது போல் வுலகத்தைச் சோதிப்பது சாத்தியமானதல்ல. நீங்கள் உங்களை அறிந்துகொண்டால், உலகத்தையும் அறிந்தவர்களா கிறீர்கள். தன்னைப் பற்றிய அறிவு பெறுவதற்குக்கூட இடை விடாது முயற்சிக்க வேண்டும். இடைவிடாத முயற்சி மாத்திர மல்ல, பரிசுத்தமான முயற்சியாகவும் இருக்க வேண்டும். இரு தயம் பரிசுத்தமாக இருந்தால்தான் முயற்சியும் பரிசுத்தமான தாக இருக்க முடியும். இதய சுத்தி ஏற்படுவது *யமங்கள், நியமங்களின் அதாவது, மூலாதாரமான ஒழுக்கங்கள், அன்றாட ஒழுக்கங்களின் அனுஷ்டானத்தையே பொறுத்திருக்கிறது. கடவுளின் அருளின்றி இவ்வழக்கம் முடியாத காரியம். கடவுளின் அருள் பெறுவதற்கு நம்பிக்கையும் பக்தியும் அத்தியாவசிய மானவை.

—'எங் இந்தியா' - 8—4—1926

# 14

# கீதையின் உபதேசத் தத்துவம்

தங்களைச் சனதனிகள் என்று கூறிக்கொள்ளுவோரிடமிருந்து எனக்குக் கடிதங்கள் வந்திருக்கின்றன. அவற்றில் சில கடிதங் கள் கோபத்துடன் எழுதப்பட்டிருக்கின்றன. அவர்களுக்கு, தீண்டாமைதான் ஹிந்து மதத்தின் சாரமாகும். அவர்களில் சிலர் என்னை ஒரு மதத் துரோகியாகக் கருதுகிறார்கள். கிறிஸ் தவ மதத்திலிருந்தும் இஸ்லாம் மதத்திலிருந்தும் தீண்டாமை

* யோக சாஸ்திரப்படி யமங்கள் அதாவது மூலாதாரமான ஒழுக்கங்களாவன: அகிம்சை, சத்தியம், அஸ்தேயப் (திருடாமை), பிரம்மச்சரியம், அபரிக்ரஹம் (உடைமை யின்மை).

நியமங்கள் அல்லது அன்றாட ஒழுக்கங்களாவன: சௌசம் (உடல் பரிசுத்தம்) சந்தோஷம் (போதுமென்ற மனம்), தவம் (பொறுமை). ஸ்வாத்யாயம் (வேத பாரா யணம்), ஈசுவரப்ரநிதனம் (இறைவன் சித்தபடி நடக்கட்டுமென்றிருத்தல்).

—மகாதேவ தேசாய்

முதலியவற்றிற்கு விரோதமான கருத்துக்களைக் கிரகித்துக் கொண்டுள்ளேன் என்று மற்றும் சிலர் எண்ணுகிறார்கள். சிலர், தீண்டாமைக்கு ஆதாரமாக வேத நூல்களிலிருந்து மேற்கோள் காட்டுகிறார்கள். இவர்களுக்குப் பகிரங்க அறிக்கைகள் மூலம் பதிலளிப்பதாக நான் உறுதி கூறியுள்ளேன்.

இந்த நிருபர்களுக்கு ஒன்று கூறத் துணிகிறேன். அதாவது, என்னை நான் ஒரு சனாதனி என்று சொல்லிக் கொள்ளுகிறேன் என்பதே. சனாதனி யார் என்பது பற்றி அவர்கள் கூறுவதற்கும் நான் கூறுவதற்கும் வேற்றுமை உண்டு. என் சம்பந்தப்பட்ட வரையில் சனாதன தருமம் ஜீவாதாரமான ஒரு நம்பிக்கையாகும். சரித்திர காலத்துக்கு முன்பிருந்துகூட அது தலைமுறை தலைமுறைகளாக வந்துகொண்டிருக்கிறது. அந்தத் தருமம் வேதங்களையும், அவற்றைப் பின்பற்றி வந்த மற்ற நூல்களையும் அடிப்படையாகக் கொண்டது.

கடவுளையும் ஹிந்து மதத்தையும் எப்படி வரையறுத்துக் கூற முடியாதோ, அது போலவே வேதங்களையும் வரையறுத்துக் கூற முடியாதென்பது என் கருத்தாகும். அச்சிடப்பட்டு நாம் பார்க்கும் நான்கு புத்தகங்கள்தான் வேதங்கள் என்று கூறுவது ஓரளவுதான் உண்மையாகும். யாருமறியாத ரிஷிகளால் விட்டுச் செல்லப்பட்ட உபதேச மொழிகளின் மிச்சமே இந்த வேத நூல்களாகும். பிற்காலத் தலைமுறையினர், தங்கள் அறிவுக்குத் தோன்றிய விஷயங்களை ஆதிப் பொக்கிஷங்களான வேதங்களில் சேர்த்துக் கொண்டார்கள்.

பிறகுதான் கீதையைச் சிருஷ்டிக்க மகா புருஷர் அவதரித்தார். அவர்தான் ஹிந்து உலகத்துக்கு ஹிந்து மத தத்துவத்தின் சாரத்தைப் பிழிந்து கொடுத்தார். கீதை, ஆழ்ந்த வேத தத்துவம் அடங்கியதாக இருந்தும்கூட, கல்மஷமற்ற மனத்துடன் உண்மையை நாடுவோர் எளிதில் அறிந்துகொள்ளக் கூடியதாகவும் இருக்கிறது. அக்கறை கொண்ட ஒவ்வொரு ஹிந்துவும் அதை எவ்விதத் தடையுமின்றி வாசிக்கலாம். மற்ற வேத நூல்கள் யாவும் எரிந்து சம்பலாகிவிட்டால் கூட, எழுநூறு சுலோகங்கள் அடங்கிய அழிவற்ற நூலான கீதை, ஹிந்து மதம் என்றால் என்ன, அதன்படி ஒருவர் எப்படி வாழ முடியும் என்பதை விளக்கிக் கூற முற்றிலும் போதுமானது.

அந்த நூலின் உபதேசங்களைப் பின்பற்றியே வாழ நான் சென்ற நாற்பது வருடங்களாக முயற்சித்து வருகிறேன். அதனாலேயே என்னை நான் ஒரு சனாதனி என்று சொல்லிக் கொள்ளுகிறேன். அதன் முக்கிய கருத்துக்கு முரணாக இருப்பதை, நான் ஹிந்து மதத்துக்கு முரணானதென்று தள்ளிவிடுகிறேன். அது எந்த சமயக்கோட்பாட்டையும், எந்தக் குருவையும் ஒதுக்கித் தள்ளவில்லை. கீதையை நான் எவ்வளவு பயபக்தியுடன் வாசித்

தேனே, அதுபோலவே பைபிள், குரான், *ஸெண்ட் அவெஸ்டா முதலிய உலகிலுள்ள மற்றும் பல வேத நூல்களையும் வாசித்திருக் கிறேனென்று கூற எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி ஏற்படுகிறது. இவ்விதம் பயபக்தியுடன் வாசித்தால்தான், கீதையில் எனக் குள்ள நம்பிக்கை பலமடைந்திருக்கிறது. அவை எனது மனத்தை விசாலமாக்கி, ஹிந்துமதக் கொள்கையிலும் எனக்குப் பரந்த மனப்பான்மை ஏற்படும்படி செய்திருக்கிறது. †ஸொரோஸ்டர், ஏசுநாதர், முகம்மது நபி இவர்களின் வாழ்க்கை வரலாறுகள், கீதையிலுள்ள பல வாக்கியங்களின் கருத்துக்களைத் தெளி வாக்கின.

எனவே, இந்தச் சனாதன நண்பர்கள் என்னைக் குத்திக் காட்டி ஏளனமாகப் பேசுவது எனக்கு ஆறுதலை அளிக்கிறதே யன்றி, வருத்தத்தைக் கொடுக்கவில்லை. என்னை நான் ஒரு ஹிந்து என்று சொல்லிக்கொள்வதில் பெருமையடைகிறேன். ஏனெனில், உலகம் முழுவதும் உள்ள தீர்க்கதரிசிகளின் உபதேசங்களைச் சகிப்பதற்கு மாத்திரமல்ல, ஏற்றுக் கொள்ளுவதற்கும் ஹிந்து மதம் பரந்தமுறையில் இடம்கொடுக்கிறது. இந்த வாழ்க்கை நூலில் தீண்டாமைக்கு எவ்விதத்திலும் ஆதாரமிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. அதற்கு மாறாக, அது என் பகுத்தறி வையும் இதயத்தையும் தொட்டு, எல்லா ஜீவனும் ஒன்று, அது கடவுளிடமிருந்தே வருகிறது. கடவுளிடமே திரும்பிச் சென்று தீரவேண்டும் என்பதை, மனத்தை வசீகரிக்கும் பாஷையில் எனக்கு வற்புறுத்திக் கூறுகிறது.

வணங்குவதற்குரிய பெரியோர் உபதேசித்துள்ள சனாதன தருமத்தின்படி, வாழ்க்கை புறச்சடங்குகளும் வெளி ஆசாரங் களும் அடங்கியதல்ல; அணுவளவும் களங்கமற்ற அந்தரங்க சுத்தியும் தெய்வீக தத்துவத்தில் உடல், உள்ளம், ஆன்மா யாவும் இரண்டறக் கலப்பதும்தான் வாழ்க்கையாகும்.

கீதையின் இந்த உபதேசமே நீராகி என் வாழ்க்கையில் இரண்டறக் கலந்திருக்கிறது. இந்த உபதேசத்துடனேயே நான் கோடிக்கணக்கான இந்திய மக்களிடம் சென்றேன். அவர்கள் நான் கூறுவதைக் கவனமாகக் கேட்டார்கள். எனது அரசியல் ஞானத்துக்காகவோ அல்லது பேச்சுத் திறனுக்காகவோ அல்ல; அவர்களுள் நானும் ஒருவன், அவர்களுடைய மதமே என் மதமும் ஆகும் என்பதை உணர்ந்தே அவர்கள் நான் கூறுவதைக் கேட் டார்கள். நாள் செல்லச் செல்ல எனது அந்த நம்பிக்கை மேன் மேலும் ஆக்கம் பெற்றிருக்கிறது. எனவே, நான் சனாதன தருமத் தைச் சேர்ந்தவன் என்று கூறுவது தவறாக இருக்க முடியாது. கடவுள் சித்தமிருந்தால், அந்த நம்பிக்கையை எனது மரணத் தினால் உறுதிப்படுத்தும்படி அவர் செய்வார்.

'எனது ஆன்மாவின் வேதனை' (1933) 4...11...1932

* பார்சிகளின் வேத நூல். †பார்சி மத கர்த்தா.

# 15

# இரட்டிப்புக் குற்றம்

சுயநல நோக்கம் காரணமாக நம்மை உயர்வாகவும் மற்றவர்களைத் தாழ்வாகவும் நினைப்பது தீய வழக்கமாகும். அதிலும் தீண்டாமை போன்ற தீமையை மதத்துடன் நாம் இணைப்பது, மோசமானது மாத்திரமல்ல, இரட்டிப்புக் குற்றமாகும். எனவே, கற்றறிஞர்களான பண்டிதர்கள், தீண்டாமையைப் போன்ற ஒளிவு மறைவற்ற தீமைக்குச் சாஸ்திரங்களிலிருந்து ஆதாரம் காட்ட முன்வருவதைக் காண எனக்கு வருத்தமாக இருக்கிறது. ஹிந்துக்களான நமக்கு இது ஒரு பரிசோதனைக் காலமென்று நான் கூறியிருக்கிறேன்; இன்றும் அதைத் திருப்பிக்கூறுகிறேன். நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் தீண்டாமை ஒழிந்து வருகிறது. இந்தப் பரிசோதனைக் காலத்தில் நாம் செய்த பாவத்திற்காக வருந்தி, நம்மை நாமே சீர்திருத்திச் சுத்தம் செய்து கொள்ள வேண்டும். அவ்வாறு செய்வோமாயின், அந்த ஒரு செய்கையை ஹிந்துக்கள் தங்களைத் தாங்களே பரிசுத்தம் செய்து கொண்ட ஒரு மாபெரும் செயலாகச் சரித்திரம் பதிவு செய்யும். ஆனால், கால மாறுதல் காரணமாக, நமது இஷ்டத்திற்கு விரோதமாக நாம் காரியங்களைச் செய்யும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டு ஹரிஜனங்கள் தங்கள் உரிமைகளைப் பெறுவார்களாயின், அது ஹிந்துக்களுக்கோ அல்லது ஹிந்து மதத்துக்கோ பெருமையளிக்காது. நான் இன்னும் ஒருபடி முன் சென்று ஒன்று கூறுகிறேன்; இந்தப் பரிசோதனையில் நாம் தவறிவிடுவோமாயின், ஹிந்து மதமும் ஹிந்துக்களும் அழிந்துபோக வேண்டியது தான்.

—'ஹரிஜன்' – 5—1—1934

# 16

# சர்வ மதங்களுக்கும் அஸ்திவாரம்

ஒரு நிருபர் எழுதுகிறார் :

(1) ஹரிஜனங்களுடைய க்ஷேமத்தில் உங்களுக்கு உண்மையிலேயே அக்கறையிருக்கிறதா, அல்லது ஹிந்துக்களின் ஜனத்தொகை அதிகமாக வேண்டுமென்ற உள் நோக்கத்தினால் தூண்டப்பட்டிருக்கிறீர்களா ?

(2) தீண்டாதார் ஹிந்துக்களின் பிரிக்க முடியாத ஓர் அம்சமாவர் என்று நீங்கள் உண்மையில் கருதினால், ஹிந்துக்களால் புனிதமானதென்று கருதப்படும் மனுஸ்மிருதியின் கீழ்க்கண்ட சுலோகங்களுக்கு அன்பு கூர்ந்து விளக்கம் கூறுவீர்களா ?

'கண்ணியம் வாய்ந்த ஒருவர் நடத்தும் ஏதாவதொரு தொழிலை, எந்தப் பஞ்சமராவது நடத்திச் செல்வம் திரட்டுவராயின், அவரது செல்வத்தைப் பறிமுதல் செய்வதுடன், அவரை நாட்டைவிட்டும் விரட்டிவிடவேண்டும்.'

—மனு ஸ்மிருதி, 10-96

'சூத்திரருக்கு யார் பாடம் சொல்லிக் கொடுத்தாலும் அவர் அந்தச் சூத்திரருடன் நரகத்துக்குச் செல்லுவார். எந்த சூத்திரராவது ஒரு பிராம்மணருக்கு மதக் கல்வி போதிக்க முயற்சிப்பாராயின், அத்தகைய சூத்திரருக்கு விதிக்கப்பட வேண்டிய தண்டனை என்னவெனில், அவரது வாயிலும் காதுகளிலும் கொதிக்கும் எண்ணெயை ஊற்றவேண்டும்.'

—மனு ஸ்மிருதி, 14-89

'எந்தச் சூத்திரராவது உரத்த குரலில் பேசுவராயின் பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கம்பிகளால் அவருக்குச் சூடுபோடவேண்டும். எந்தச் சூத்திரராவது, ஒரு பிராம்மணருடனே, க்ஷத்திரியருடனே, வைசியருடனே சம ஆசனத்தில் உட்காருவாராயின் பழுக்கக் காய்ச்சிய இரும்பால் அவரைச் சுட்டுவிட வேண்டும்.'

—மனு ஸ்மிருதி. 8-276, 8-271

"மனு ஸ்மிருதியைப் புனிதமான நூலாகக் கருதவேண்டுமென்றும், அதில் அடங்கியுள்ள விதிகளின்படி நடந்துகொள்ள வேண்டுமென்றும் ஹிந்துக்கள் கட்டளையிடப்பட்டிருக்கிறார்கள். இந்த நூல் புனிதமற்றதென்று நீங்கள் கருதினால், அவ்விதம் நீங்கள் ஏன் பிரகடனம் செய்யக்கூடாது? அதற்குப் பதிலாக, காந்தி ஸ்மிருதி என்ற புதிய விதிகள் அடங்கிய நூலை நீங்கள் ஏன் வெளியிடக் கூடாது?

(3) ஆரிய சமாஜத்தினர்கூட இந்தத் தீண்டாமையை அகற்றி வருகிறார்கள். அதை நிறைவேற்றுவதில் அவர்கள் கையாளும் முறை புதுமையானது. அதாவது சுத்தி என்ற சடங்கை அனுஷ்டித்த பிறகு, குறிப்பிட்ட நபரைத் தங்கள் கோஷ்டியில் சேர்த்துக்கொள்ளுகிறார்கள். தீண்டாதார் உண்மையிலே ஒரு ஹிந்து வாயின், இந்த அவசியத்துக்குக் காரணம் என்ன? இவ்விஷயத்தில் அவர்களது முறையை நீங்கள் அங்கீகரிக்கிறீர்களா?"

நிருபர் தம்மை ஆதித் திராவிடர் என்று கூறுகிறார். எனவே, எனது நோக்கத்தைச் சந்தேகிக்க அவருக்கு எவ்வித உரிமையும் உண்டு. அவ்விஷயத்தில் அவர் இறுதியான ஒரு முடிவுக்கு வர எனக்கு மரணம் ஏற்படும் வரையில் காத்திருக்க வேண்டும். இதுதான் அவரது முதல் கேள்விக்கு நான் அளிக்கும் சிறந்த விடையாக இருக்க முடியும். அதன் மத்தியில் அவர் என் வார்த்தையை ஒப்புக்கொள்ளத் தயாராக இருப்பாராயின், அவருக்கு ஓர் உறுதி கூறுவேன். ஹிந்துக்கள் என்று கூறப்படுவோரின் தொகை அதிகமாவதில் எனக்கு மதிப்பில்லை. ஒரு சமயத்தின் போலி ஆதரவாளர்கள் அதற்கு எவ்விதத் தொண்டும் செய்ய முடியாததுடன், அதைக் கொன்றும் விடுவார்கள். எனவே, ஹரிஜனங்களுக்காகப் பாடுபட எனக்கு வழிகாட்டியாக இருக்கும் ஒரே நோக்கம் என்னவெனில், தீண்டாமைச் சாபக்கேடு நீங்கி, ஹிந்து மதம் பரிசுத்தமாவதைக் காண வேண்டும் என்பதுதான். அவ்விதம் சுத்தமாகும் ஹிந்து மதத்தின்

பிரதிநிதியாக ஒரே ஒரு ஹிந்து மாத்திரம் இருந்தால்கூட நான் வருந்தமாட்டேன்; ஹிந்து மதம் செத்துவிடவில்லையென்று உண்மையான மகிழ்ச்சியே அடைவேன்.

நிருபரின் இரண்டாவது கேள்வி மிகவும் பொருத்தமான கேள்விதான். எனினும், அவர் 'ஹரிஜன்' பத்திரிகையை விடாது வாசித்து வந்திருந்தால், அந்தக் கேள்வி கேட்டிருக்கமாட்டார்; சாஸ்திரங்கள் பற்றி எனது விளக்கம் என்ன என்பதை அறிந்து கொண்டிருப்பார். எனினும், மனு ஸ்மிருதி என்று கூறப்படும் நூலில் அச்சாகியுள்ள ஒவ்வொரு சுலோகத்தையும் நான் சத்திய மாகக் கருதுகிறேன் என்று அர்த்தமல்ல. அச்சுப் புத்தகத்தில் முன்னுக்குப் பின் பல முரண்பாடுகள் இருக்கின்றன. நீங்கள் அதில் ஒரு பாகத்தை ஒப்புக்கொண்டால், அதற்கு முற்றிலும் முரணுக உள்ள பல பாகங்களை நீங்கள் நிராகரித்துத் தீரவேண்டி யிருக்கும்.

மனு ஸ்மிருதியில் உன்னதமான உபதேசங்கள் அடங்கி யிருப்பதால், அதை நான் ஒரு மத நூலாகவே கருதுகிறேன். நிருபர் குறிப்பிட்டுள்ள வாக்கியங்கள் மனு ஸ்மிருதியின் முக்கிய தத்துவத்துக்கு முற்றிலும் முரணுக இருக்கின்றன. அதன் மூலக் கிரந்தம் இப்போது யாரிடமும் இல்லையென்பதை நிருபர் அறிந்துகொள்ள வேண்டும். உண்மையில், மனு என்று ஒரு ரிஷி இருந்தார் என்பதை நிரூபிக்கக்கூட ஒரு சாட்சியமுமில்லை. மகத்தான உண்மைகளை எழுதியவர்களோ அல்லது உபதேசம் செய்த வர்களோ, எப்படியோ தாங்கள் இருந்தவிடமே தெரியாமல் செய்துகொண்டிருப்பது ஹிந்து மதத்தின் அற்புதமான ஓர் அம்ச மாகும். எனவே, உண்மையை நாடுவோருக்கு நான் ஒரு யோசனை கூறியிருக்கிறேன். அதாவது சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய் வோருக்கு வழிகாட்டும் பத்திரமான விதி என்னவெனில், சர்வ மதங்களுக்கும் உண்மை அஸ்திவாரங்களான சத்தியத்துக்கும் அகிம்சைக்கும் முரணுக உள்ள எதையும் நிராகரித்துவிட வேண்டு மென்பதுதான்.

நிருபரின் மூன்ருவது கேள்வி, நியாயமாக ஆரிய சமாஜத்தின ருக்கே அனுப்பப்பட்டிருக்க வேண்டும். ஆரிய சமாஜத்தில் சேரு முன் ஹரிஜனங்கள் சுத்திச் சடங்கு செய்தாக வேண்டும் என்பது எனக்குப் புதுமையாக இருக்கிறது. மாட்டிறைச்சி, செத்த கால் நடைகளின் மாமிசம், மதுபானம் முதலியவற்றைத் தொடுவதில்லை யென்ற விரதம் நிறைவேறுவதில் ஹரிஜனங்கள் உறுதியுடன் இருப்பதற்காகச் சுத்தி சடங்கு செய்வதை நான் பார்த்திருக் கிறேன். ஒரு தீண்டாதார் உண்மையில் ஒரு ஹிந்துவாக இருந் தால், அவருக்குச் சுத்திச் சடங்கு அவசியமில்லையென்று நிருபர் கூறுவது முற்றிலும் சரியாகும். சுத்திச் சடங்கு தேவை என்று கூறுவதாயின், தீண்டாமையில் நம்பிக்கை வைத்த பாவத்துக் காக, சாதி ஹிந்துக்கள் தான் தங்களைச் சுத்தி செய்துகொள்ள வேண்டும்.

—'ஹரிஜன்' - 6—4—1934

## 17

# உடலில் எந்தப் பாகம் உயர்வானது?

என்னை நான் ஒரு சனாதன ஹிந்து என்றே கருதுகிறேன். ஏனெனில், நானறிந்த சாஸ்திரங்களில் பொதிந்து கிடக்கும் நம்பிக்கையின் சாசுவதமான கட்டளைகளுக்கு, என் சக்திக்கு இயன்ற வரையில் கீழ்ப்படிந்து நடக்க நான் முயற்சிக்கிறேன். ஸ்மிருதிகள் என்ற பெயரில் அச்சாகியுள்ள நூலில் இருக்கும் வாக்கியங்களையெல்லாம் தெய்வீகமான அறிவிப்பாக நான் கருதவில்லை. ஸ்மிருதிகளிலும், மற்றுமுள்ள வேத, சாஸ்திர நூல்களிலும் இடைச் செருகல்கள் ஏராளமாக இருக்கின்றன என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை. ஸ்மிருதிகளிலும் மற்ற நூல்களிலும் சத்தியம், அகிம்சை, மூலாதாரமான உலக தருமம், நீதி இவற்றிற்கு முரணாக உள்ள எதையும் இடைச் செருகல்கள் என்று தள்ளிவிடுகிறேன் என்பதை ஹரிஜன் பத்திரிகையில் பல தடவை கூறியுள்ளேன்.

உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற எண்ணம், தருமம், ஒழுக்கம் இவற்றின் அடிப்படையான விதிகளுக்கு முற்றிலும் முரணாகும். கடவுள் சிருஷ்டித்த எந்த ஒரு பிராணியைக் காட்டிலும் தாம் உயர்ந்தவர் என்று கருதினாலும், அந்தப் பிராம்மணர் பிரம்மத்தை அறிந்தவராகமாட்டார். நாம் எல்லோரும் ஒரே கடவுளின் குழந்தைகளாக இருந்தால், நமக்குள் எப்படி உயர்வு, தாழ்வு இருக்கமுடியும்?

வேதங்களில் முதன் முதலில் வர்ணங்களைப் பற்றிக் குறிப்பிடும்போது, நான்கு வர்ணங்களும் உடலில் உள்ள நான்கு பாகங்களுக்கு ஒப்பாகக் கூறப்படுகின்றன. கைகள், வயிறு, கால்கள் இவற்றைவிட தலை உயர்வானதா? அல்லது கால்கள் மற்ற மூன்று பாகங்களைவிட உயர்வானவையா? அந்தப் பாகங்கள் உயர்வு, தாழ்வு பற்றிச் சச்சரவிடத் தொடங்குமாயின் உடலின் கதி என்னவாகும்? கடவுளின் சிருஷ்டிகளில் எல்லோரும் முற்றிலும் சமம் என்பதே வர்ண தருமமாகும். எனவே, சூத்திரர்களைப் பற்றி ஸ்மிருதிகளில் உள்ள வாக்கியங்களை, ஜீவகாருண்ய தத்துவத்துக்கு முரணானவையென்று உடனடியாகத் தள்ளிவிட வேண்டியதுதான்.

—'ஹரிஜன்' – 28 - 9 – 1934

# 18

# கடவுள் படைப்பில் யாவரும் சமம்

ஒரு பிராம்மணர், ஓர் எறும்பு, ஓர் யானை, நாயைத் தின்னும் ஒருவர் எல்லோரும் சமம் என்பதே களங்கமற்ற, பரிசுத்தமான ஹிந்து மதத்தின் தன்மையாகும். நம்முடைய வேதாந்த தத்துவம் மிகவும் சிரேஷ்டமானதாலும், அதற்கிணங்க வாழ்வதற்கு நாம் தவறிவிட்டதாலும், அதே தத்துவம் இன்று நமக்கு மிகவும் கசப்பாக இருக்கிறது.

மானிடவர்க்கம் முழுவதும் மாத்திரமல்ல, எல்லா ஜீவராசிகளுமே சகோதர பாவத்துடன் வாழ வேண்டுமென ஹிந்து மதம் வற்புறுத்துகிறது. அது நம்மைக் கிறுகிறுக்கச் செய்யும் மகோன்னதமான ஒரு தத்துவமாகும். எனினும், அதன்படி நாம் வாழச் சிறிது சிறிதாக முயற்சித்துத் தீரவேண்டும். மனிதருக்கு மனிதர் உண்மையான, நிரந்தரமான சமத்துவம் ஏற்படும்படி செய்துவிட்டால், அதே விநாடியில் நாம் மனிதருக்கும் மற்றச் சகல சிருஷ்டிகளுக்கும் இடையே சமத்துவத்தை ஸ்தாபித்துவிட முடியும். அந்த நாள் வரும்போது, உலகமெங்கும் அமைதியும் மனிதர்களிடையே நல்லெண்ணமும் நிலவுவதை நாம் பார்ப்போம்.

[ஒரு சம்பாஷணையிலிருந்து எடுத்தது]

—'ஹரிஜன்' - 28 - 3 - 1936

# 19

# டாக்டர் அம்பேத்காரின் குற்றச்சாட்டுகள்

## 1

சென்ற மே மாதம் லாகூர் ஜட்-பட்-தோடக் மண்டலத்தின் வருடாந்தர மகாநாட்டிற்கு டாக்டர் அம்பேத்கார் தலைமை வகிப்பதாக இருந்தார் என்ற உண்மை வாசகர்களுக்கு ஞாபகமிருக்கலாம். ஆனால், டாக்டர் அம்பேத்காரின் தலைமைப் பிரசங்கத்தை வரவேற்புக் கமிட்டியார் அங்கீகரிக்காததால், மகாநாட்டையே ரத்து செய்துவிட்டார்கள். எனினும், வரவேற்புக் கமிட்டியாரிடம் டாக்டர் அம்பேத்கார் தோல்வியடைந்துவிடுவாரா? பிரசங்கத்தை அவர்கள் நிராகரித்ததற்கு டாக்டர் அம்பேத்கார் சரியான பதில் கொடுத்திருக்கிறார். அதாவது தமது சொந்தச் செலவில் பிரசங்கத்தைப் பிரசுரித்திருக்கிறார்.

அப்பிரசங்கத்தை எந்தச் சீர்திருத்தக்காரரும் அசட்டை செய்ய முடியாது. வைதிகர்கள் அதை வாசிப்பதால் பலனடைவார்கள். எனினும், பிரசங்கத்தில் ஆட்சேபகரமான அம்சமே இல்லையென்று சொல்லிவிட முடியாது. அதில் கடுமையான ஆட்சேபணைக்கு இடமிருக்கிறது என்பதற்காகவே அதை வாசிக்க வேண்டும். டாக்டர் அம்பேத்கார் ஹிந்து மதத்துக்கு ஒரு சவாலாக இருந்து வருகிறார். அவர் ஒரு ஹிந்துவாக வளர்க்கப்பட்டார்; ஒரு ஹிந்து மகாராஜாவின் உதவியால் கல்வி கற்றார். அவரையும் அவரைச் சேர்ந்தவர்களையும் சவர்ண ஹிந்துக்கள் என்று கூறப்படுவோர் நடத்திய விதமானது அவருக்கு மிகுந்த வெறுப்பை உண்டாக்கியிருக்கிறது. அதன் விளைவாக டாக்டர் அம்பேத்கார், அவர்களை மாத்திரமல்ல, தமக்கும் அவர்களுக்கும் பொதுச் சொத்தான மதத்தையே விட்டுவிட உத்தேசித்திருக்கிறார். மதத்தைச் சேர்ந்த சிலர் மீதுள்ள வெறுப்பை, அவர் மதத்தின் மீதும் மாற்றிக்கொண்டிருக்கிறார்.

ஆனால், இதைச் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை. ஒரு ஒழுங்கு முறையையோ அல்லது ஸ்தாபனத்தையோ, அதன் பிரதிநிதிகளின் நடவடிக்கையைக்கொண்டுதானே தீர்மானிக்க முடியும். பெரும்பாலான சவர்ண ஹிந்துக்கள், தங்கள் மதத்தைச் சேர்ந்த சகோதரர்களைத் தீண்டாதார் என்று பிரித்து, அவர்களை ஜீவகாருண்யமின்றி நடத்தியது மாத்திரமல்ல, தாங்கள் அவ்விதம் நடத்துவதற்கு வேத நூல்களை ஆதாரமாகக் கொண்டிருக்கிறார்கள் என்பதையும் டாக்டர் அம்பேத்கார் அறிந்தார். அந்த நூல்களை டாக்டர் அம்பேத்கார் ஆராய்ச்சி செய்யத் தொடங்கிய போது, தீண்டாமையிலும் அதில் அடங்கியுள்ள எல்லா நுணுக்கங்களிலும் சவர்ண ஹிந்துக்கள் கொண்டுள்ள நம்பிக்கைக்கு ஏராளமான ஆதாரங்கள் இருப்பதை அவர் கண்டறிந்தார். அவரது மூன்றுவிதமான குற்றச்சாட்டுகளுக்கு ஆதாரமாக அவர் தமது பிரசங்கத்தில் மறுக்கமுடியாத மேற்கோள்களை எடுத்துக் காட்டியுள்ளார். அவரது குற்றச் சாட்டுகளாவன: 1. ஜீவகாருண்யமற்ற நடத்தை; 2. குற்றம் செய்தவர்கள் கூச்சமின்றித் தங்கள் நடவடிக்கைகளை நியாயமென்று ஸ்தாபித்தல்; 3. அவர்களுடைய கூற்றுக்கு வேத நூல்களில் தாம் கண்டுபிடித்த ஆதாரம்.

டாக்டர் அம்பேத்காரின் குற்றச்சாட்டுகளிலிருந்து எழும் கேள்விகளாவன:

1. வேத நூல்கள் என்றால் என்ன?

2. அச்சாகியுள்ள எல்லா நூல்களும் வேதங்களைச் சேர்ந்த பாகங்களா? அல்லது அவற்றில் எந்தப் பாகங்களையாவது ஆதாரமற்ற இடைச் செருகல்கள் என்று தள்ளிவிடலாமா?

3. தீண்டாமை, சாதி, சம அந்தஸ்து, சமபந்தி போஜனம், கலப்பு மணம் இவை பற்றி, இடைச் செருகல்களற்ற, அங்கீகரிக்கப்பட்ட வேத நூல்களின் பதில் என்ன?

—'ஹரிஜன்' - 11–7–1936

## II

ராமாயணம், மகாபாரதம் உள்பட வேதங்கள், உபநிடதங்கள், ஸ்மிருதிகள், புராணங்கள் எல்லாம் ஹிந்து வேத நூல்களே யாகும். இது இறுதியான ஜாபிதா அல்ல. ஒவ்வொரு யுகத்திலும், தலைமுறையிலுங்கூட அந்த ஜாபிதாவில் நூல்கள் சேர்க்கப்பட்டுள்ளன. எனவே, அச்சிடப்பட்ட ஒவ்வொன்றும், கையினால் எழுதப்பட்டதாகக் கண்டுபிடிக்கப்பட்ட ஒவ்வொன்றும் கூட, வேத நூல்கள் அல்ல என்று ஏற்படுகிறது. உதாரணமாக, இறைவனின் வாக்கு என்று ஒருபோதும் ஒப்புக்கொள்ள முடியாத பல வாக்கியங்கள் ஸ்மிருதிகளில் அடங்கியிருக்கின்றன. எனவே, டாக்டர் அம்பேத்கார் மேற்கோள் காட்டியுள்ள பல நூல்களும் நம்பத்தகுந்தவை என்று ஒப்புக்கொள்ள முடியாது.

ஒழுங்கான வேத நூல்கள் என்பது எக்காலத்திலும் மறுக்க முடியாத சாசுவதமான உண்மைகள் பற்றியவையாகவே இருக்கும். அவை எவருடைய மனச்சாட்சியும், அதாவது அறிவுக் கண் திறந்துள்ள எவருடைய இதயமும் ஏற்றுக்கொள்ளக் கூடியவையாக இருக்கும். பகுத்தறிவால் சோதித்துப் பார்க்க முடியாத, அல்லது ஆன்ம அனுபவத்தினால் உணர முடியாத எதையும் கடவுளின் வாக்கு என்று அங்கீகரிக்க முடியாது. இடைச் செருகல்கள் நீங்கிய வேத நூல்களின் பதிப்பு உங்களுக்குக் கிடைத்தால்கூட, அவற்றின் வியாக்கியானம் உங்களுக்குத் தேவையாக இருக்கும். சிறந்த வியாக்கியானகர்த்தா யார்? நிச்சயமாகக் கல்வியில் தேர்ச்சி பெற்றவர்கள் அல்ல. கல்வியில் தேர்ச்சி இருக்க வேண்டியதுதான். எனினும். கல்வித் தேர்ச்சியினால் மதம் உயிர் வாழவில்லை. ரிஷிகள், தீர்க்கதரிசிகள் இவர்களின் அனுபவங்களிலும், அவர்களுடைய வாழ்க்கையிலும், உபதேச மொழிகளிலும்தான் மதம் உயிர் வாழ்கிறது. மிகவும் கற்றறிஞர்களான வேத நூல்களின் வியாக்கியானகர்த்தாக்களை மக்கள் முற்றிலும் மறந்துவிடுவார்கள். ஆனால், ரிஷிகள், தீர்க்கதரிசிகள் இவர்களின் அனுபவக் களஞ்சியம் என்றென்றும் சாசுவதமாக இருந்து, யுகம் யுகமாக மானிட வர்க்கத்துக்கு ஊக்கமும் உத்வேகமும் அளித்து வரும்.

சாதிக்கும் மதத்துக்கும் எந்தவிதச் சம்பந்தமும் இல்லை. சாதி ஒரு பழக்க வழக்கமேயாகும். அதன் உற்பத்தி பற்றி எனக்கு எதுவும் தெரியாது. எனது ஆன்ம விசாரப் பசியைத் திருப்தி செய்துகொள்ளுவதற்கு, சாதியின் உற்பத்தி பற்றி

நான் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமில்லை. ஆனல். அது ஆன்ம, தேசீய வளர்ச்சிக்குக் குந்தகமாக இருக்கிறது என்பதை நான் அறிகிறேன். வர்ணம், ஆச்சிரமம் என்ற ஏற்பாடுகளுக்கும் சாதிகளுக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை.

நம்மில் ஒவ்வொருவரும், அவரவர் முன்னோர்களின் தொழிலைப் பின்பற்றி ஜீவனத்திற்குச் சம்பாதித்துக்கொள்ள வேண்டுமென்று வர்ணம் உபதேசிக்கிறது. அது நமது கடமைகளை வரையறுக்கிறதேயன்றி, உரிமைகளையல்ல. மானிட வர்க்கத்தின் க்ஷேமத்துக்கு அனுகூலமான தொழில்களைப் பற்றி அது முக்கியமாகக் குறிப்பிடுகிறதேயன்றி, வேறெதையும் பற்றிக் குறிப்பிடவில்லை. அதிலிருந்து மிக்கத் தாழ்ந்ததென்றோ, மிக்க உயர்ந்ததென்றோ ஒரு தொழிலும் இல்லை என்று ஏற்படுகிறது. எல்லாத் தொழில்களும் சிறந்தவை, சட்டபூர்வமானவை, அந்தஸ்தில் முற்றிலும் சமமானவை. ஆன்ம தத்துவ போதகரான ஒரு பிராம்மணரின் தொழிலும் ஒரு தோட்டியின் தொழிலும் சமமானவையே. அத்தொழில்கள் இறைவனின் முன்னிலையில் சமமான சிறப்புடையவை. மனிதனின் முன்னிலையிலும், ஒரு காலத்தில் அவ்விரு தொழில்களுக்கும் சமமான கைம்மாறு அளிக்கப்பட்டு வந்தது. இருவரும் ஜீவனத்துக்குப் போதிய கைம்மாறு பெற உரியவர்களாக இருந்தார்களேயன்றி, அதற்கு மேல் பெற அவர்களுக்கு உரிமையில்லை.

இன்றுகூட, கிராமங்களில் செயல்பட்ட இந்தச் சிறந்த நியதியின் மறைந்து வரும் சின்னங்கள் தென்படுகின்றன. 600 பேர் ஜனத்தொகையுள்ள சேவா கிராமத்தில் வாழ்ந்து வரும் எனக்கு, பிராம்மணர்கள் உள்பட பல்வேறு தொழில்வல்லுனர்களின் வருமானங்களுக்கிடையே அதிக வேற்றுமையிருப்பதாகத் தெரியவில்லை. சீர்கெட்டுக் கிடக்கும் இந்த நாட்களில்கூட உண்மையான பிராம்மணர்கள் இருப்பதை நான் அறிந்துள்ளேன். அவர்கள், மக்கள் இஷ்டப்பட்டு அளிக்கும் பிக்ஷையைக் கொண்டு வாழ்ந்து வருகிறார்கள். தங்களிடமுள்ள ஆன்மிகப் பொக்கிஷங்களை மக்களுக்கு இலவசமாகப் போதித்து வருகிறார்கள். வர்ணத்தின் ஒரே முக்கியமான தருமத்தைப் பகிரங்கமாக மீறிக்கொண்டு, தாங்கள் அந்த வர்ணத்தைச் சேர்ந்தவர்கள் என்று பசப்பிவருவோரின் வாழ்க்கை வெறும் கேலிக் கூத்தாகும். அதைக்கொண்டு வர்ண தருமத்தைத் தீர்மானிப்பது தவறும், ஒழுங்கற்றதுமாகும். எந்த வர்ணத்தவராயினும், மற்றொன்றைக் காட்டிலும் தாங்கள் உயர்ந்தவர்கள் என்று மமதை கொள்ளுவது வர்ண தரும விதியையே மறுப்பதாகும். தீண்டாமையில் நம்பிக்கை வைப்பதற்கு வர்ண தருமத்தில் ஆதாரமேயில்லை. ஒரே கடவுள் சத்யம் தான் என்று பிரகடனம் செய்வதிலும், மனித சமுதாயத்தின் தருமம் அகிம்சை என்பதைத் துணிந்து ஒப்புக்கொள்ளுவதிலும்தான் ஹிந்து மதத்தின் சாரம் அடங்கியிருக்கிறது.

ஹிந்து மதம் பற்றிய எனது விளக்கத்தை டாக்டர் அம்பேத்காரைத் தவிர மற்றும் பலரும் எதிர்ப்பார்கள் என்பதை நான் அறிவேன். அத்தகைய மறுப்பு எனது நிலைமையைப் பாதிக்காது. அந்த விளக்கத்தைப் பின்பற்றியே சற்றேறக் குறைய அரை நூற்றாண்டு காலமாக நான் வாழ்ந்து வருகிறேன்; அதன் படியே என் வாழ்க்கையைச் சீர்படுத்திக்கொள்ள நான் என் சக்திக்கு இயன்ற வரையில் முயற்சித்து வருகிறேன்.

டாக்டர் அம்பேத்கார் அவரது பிரசங்கத்தில், உண்மையிலும் மதிப்பிலும் சந்தேகத்திற்கிடமான நூல்களைப் பொறுக்கியெடுத்து மேற்கோள் காட்டியுள்ளார்; தங்கள் மதத்தின் பிரதிநிதிகளாக இருக்கச் சிறிதும் தகுதியற்ற இழிவான ஹிந்துக்களின் போக்கை அவர் சுட்டிக் காட்டியுள்ளார். அது பெரும் தவறுகுமென்பது என் அபிப்பிராயம். டாக்டர் அம்பேத்கார் காட்டியுள்ள உதாரணத்தைக் கொண்டு தீர்மானிப்பதாயின், உலகில் எல்லோருமறிந்த சாசுவதமான எந்த மதமும் சோதனையில் தேற முடியாது.

அறிஞரான டாக்டர், சாமர்த்தியமான தமது பிரசங்கத்தில் தம் கட்சியை நிரூபிப்பதில் அதிகப்படியாகப் போயிருக்கிறுர். சைதன்யர், ஞானதேவர், துகாராம், திருவள்ளுவர், ராமகிருஷ்ண பரமஹம்சர், ராஜாராம் மோகன்ராய், மகரிஷி தேவேந்திர நாத் தாகூர், விவேகானந்தர், இன்னும் எளிதில் குறிப்பிடக் கூடிய பலராலும் உலகமறிய ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு மதம், டாக்டர் அம்பேத்கார் தமது பிரசங்கத்தில் குறிப்பிட்டிருப்பது போல், முற்றிலும் அவ்வளவு தகுதியற்றதாக இருக்க முடியுமா? ஒரு மதத்தை, அது உற்பத்தி செய்துள்ள உதாரண புருஷர்களான சிறந்த மகான்களைக் கொண்டு தீர்மானிக்க வேண்டுமேயன்றி, மிகவும் மட்டரகமானவர்களைக் கொண்டு தீர்மானிக்கக் கூடாது; அதற்கு மேலே போகாவிட்டாலும், அதுதான் நாம் எட்டிப் பிடிக்கவிரும்பும் உயர்நிலையாக இருக்க வேண்டும்.

—'ஹரிஜன்' – 18—7—1936

# 20

# ஸ்மிருதிகள், புராணங்களின் உற்பத்திக்குக் காரணம்

வைக்கம் சத்தியாக்கிரகம் சம்பந்தமாக நான் இங்கிருந்த போது நிகழ்ந்த ஒரு சரித்திர உண்மையை எடுத்துக்காட்ட விரும்புகிறேன். இங்குள்ள சாஸ்திரிகளுக்கும் எனக்கும் பல தடவைகளில் விவாதங்கள் நடந்தன என்பது, உங்களில் சிலருக்கு ஞாபகமிருக்கலாம். அவர்கள் அப்போது கோவில் எல்லைக்கு

உள்ளேயே வசித்து வந்தார்கள். அவர்கள் கோவிலுடன் ஏதாவதொரு விதத்தில் சம்பந்தம் வைத்துக் கொண்டிருந்தார்கள் என்பதே என் ஞாபகம். இப்போது என் நினைவிற் கெட்டிய வரையில், அவர்களுக்கும் எனக்கும் நடந்த வாதத்தின் உண்மையான விவரத்தைக் கூற முயற்சிக்கிறேன்.

கோவில்களுக்குச் செல்லும் சாலைகளில்கூட அவர்ண ஹிந்துக்கள் செல்லக் கூடாதென்று தடை விதித்திருந்தார்கள். ஆனால், அந்த ரஸ்தாக்களில் ஹிந்துக்களல்லாதார் செல்லுவதற்குத் தடையில்லை. இந்த நிலைக்கு ஆதாரமாக சாஸ்திரிகள் சங்கர ஸ்மிருதி என்ற ஒரு நூலைக் கொண்டுவந்து காட்டினார்கள். வைக்கத்திற்கு வருமுன் நான் அந்த நூலைப் பற்றிக் கேள்விப் பட்டதேயில்லை; அதிலிருந்து மேற்கோள் காட்டுவதையும் நான் கேட்டதில்லை. எனக்காக அந்த ஸ்மிருதியை மொழி பெயர்க்கும்படி செய்தேன். ஆனால், ரஸ்தாக்களை மூடுவதற்கு அதில் எவ்வித ஆதாரத்தையும் நான் கண்டுபிடிக்க முடியவில்லை என்பதை அறிய நீங்கள் மிகவும் ஆச்சரியமடைவீர்கள். தங்களுடைய வாதத்திற்கு சங்கர ஸ்மிருதியில் ஆதாரம் இருக்கிறதென்ற நம்பிக்கை அவர்களுக்கு இருந்ததே போதுமானதென்பதை ஒத்துக்கொள்கிறேன்.

அப்போதிருந்த போலீஸ் கமிஷனர் மூலமும், மூத்த மகாராணியுடனும் நான் சமரசப் பேச்சுக்கள் நடத்தி வந்தபோது, சாஸ்திரிகளிடம் ஒரு கேள்வி கேட்டேன். சமரசப் பேச்சுக்களின் பலனாக, அவர்ண ஹிந்துக்களுக்கு ரஸ்தாக்களைத் திறந்துவிடும்படி மகாராணி உத்தரவு பிறப்பித்தால், அவர்கள் என்ன செய்வார்கள்? அப்போது அவர்கள் சிறிதும் தாமதமின்றி, "ஓ! அது முற்றிலும் வேறு விஷயம். ஒரு ஹிந்து மன்னருக்கோ அல்லது மகாராணிக்கோ அத்தகைய உத்தரவு பிறப்பிக்க எல்லாவித உரிமையும் உண்டு. அவர்களுடைய உத்தரவு ஸ்மிருதி போன்றதுதான்" என்று கூறினார்கள். ஹிந்து மன்னர்கள் ஹிந்து மதத்துக்கு உறைவிடமானவர்கள் என்றும், ஸ்மிருதிக்கு முரணின்றி கட்டளை பிறப்பிக்க அவர்களுக்கு எவ்வித உரிமையும் உண்டென்றும், அதற்கு ஹிந்துமதம் இடம் கொடுக்கிறது என்றும் குறிப்பிட்டார்கள்.

ஆலயங்களைத் திறந்துவிடும் விஷயமாகவும் அதே விதி பொருந்துமா என்று அவர்களைக் கேட்டேன். 'முற்றிலும் பொருந்தும்' என்று பதிலளித்தார்கள். அந்தச் சாஸ்திரிகள் மாத்திரம் அவ்விதம் பதில் கூறவில்லையென உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். கொச்சியிலும், தமிழ் நாட்டிலும் உள்ள சாஸ்திரிகளிடமும் அதே கேள்வி கேட்டேன். அவர்களும் அதே பதில்தான் கூறினார்கள். உண்மையில் ஸ்மிருதிகள், பதினெட்டு புராணங்கள் இவைகளின் சரித்திர பூர்வமான மலர்ச்சிக்குக் காரணம் இதுதான்; அக் காலங்களின் தேவைக்கிணங்க அவையெல்லாம் உற்பத்தி செய்யப்பட்டும், ஊக்குவிக்கப்பட்டும் வந்துள்ளன.

—'ஹரிஜன்' – 6—2—1937

பகுதி ஆறு

# தீண்டாமை, சாதி, வர்ணாச்சிரமம்

## 1

## எதை எதிர்க்க வேண்டும்?

[ஒருவர் எழுதிக் கேட்டிருந்த கேள்விகளுக்குக் காந்திஜி அளித்த பதில் வருமாறு]

வர்ணாச்சிரமத்திற்கும் தீண்டாமைக்கும் உள்ள வேற்றுமையை நான் பல தடவைகளில் சுட்டிக் காட்டியிருக்கிறேன். ஒன்றை, பகுத்தறிவுக்கு உடன்பாடான சாஸ்திரீய உண்மை என்று ஆதரித்திருக்கிறேன்; மற்றொன்றை, ஒரு காளான் என்றும், கலப்பற்ற தீமை என்றும் கண்டித்திருக்கிறேன். வேற்றுமையே இராத இடத்தில், என் மந்த புத்திகாரணமாக நான் வேற்றுமை காண்பதாக இருக்கலாம். அறியாமை அல்லது மூட பக்தி இருக்குமிடத்தில் நான் சாஸ்திரீய உண்மையைக் காண்பதாகவும் இருக்கலாம்.

எனினும், வர்ணாச்சிரமத்தை, நான் பிறப்பை அடிப்படையாகக் கொண்ட ஒரு சிறந்த பிரிவினையாகவே கருதுகிறேன். சாதி பற்றிய தற்போதைய எண்ணங்களெல்லாம் ஆதிக் கொள்கைக்கு நேர் வக்கிரமாக இருக்கின்றன. என் சம்பந்தப்பட்ட வரையில் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற கேள்விக்கே இடமில்லை. அது முற்றிலும் கடமையைப் பொறுத்த விஷயமாகும். வர்ணம், பிறப்பை அடிப்படையாகக் கொண்டதென்று நான் கூறியிருக்கிறேன் என்பது உண்மையே. ஆனால், உதாரணமாக ஒரு சூத்திரர் வைசியராவது சாத்தியமென்றும் கூறியிருக்கிறேன். எனினும், அவர் ஒரு வைசியரின் கடமையைச் செய்வதற்கு வைசியர் என்ற பட்டம் கட்டிக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. சுவாமி நாராயண குருவை, சமஸ்கிருத பண்டிதர் என்று கூறுகிறார்கள். சமஸ்கிருத பண்டிதராவதற்கு அவர் ஒரு பிராம்மணர் என்று அழைக்கப்பட வேண்டிய அவசியமில்லை. ஒரு பிராம்மணரின் கடமையைச் செய்பவர், அடுத்த ஜன்மத்தில் பிராம்மணராவது எளிதாகும். ஆனால், இந்த ஜன்மத்திலேயே

ஒரு வர்ணத்திலிருந்து மற்றொரு வர்ணத்துக்கு மாறுவதென்பது பெரும் மோசடியில் வந்து முடியும். வர்ணம் அடியோடு அழிவதே அதன் இயற்கையான விளைவாக இருக்கும். அதன் அழிவை நியாயமென்று கூறுவதற்கு எவ்விதக் காரணமும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. ஸ்தூலமான ஆசைக்கு அது ஒரு தடையாக இருக்கலாம். மத சம்பந்தமான காரணங்களை அடிப்படையாகக்கொண்ட ஓர் அமைப்பை, ஸ்தூல காரணங்களைக்கொண்டு பரிசீலனை செய்ய நான் விரும்பாததற்காக என்னை மன்னிப்பார்களாக.

ஒரு பஞ்சமரை சூத்திரராகவே கருத வேண்டுமென்று நான் கேட்டுக் கொண்டிருக்கிறேன். ஏனெனில், ஐந்தாவதான ஒரு சாதி உண்டென்ற நம்பிக்கைக்கு ஆதாரமில்லையென்பது எனது உறுதியான கருத்தாகும். ஒரு பஞ்சமர், ஒரு சூத்திரர் செய்யும் வேலையையே செய்கிறார். எனவே, அவர் ஒரு பஞ்சமர் என்ற எண்ணம் மறைந்துவிடுமாயின், அவர் இயற்கையாக சூத்திரர் என்ற பிரிவையே சேர்ந்தவராகிவிடுவார். தீண்டாமைக்கும் வர்ணாச்சிரமத்துக்குமிடையே உள்ள இந்த இடைவிடாத குழப்பமும், தீண்டாமையைத் தாக்கும் அதே மூச்சியில் வர்ணாச்சிரமத்தைத் தாக்குவதும், தீண்டாமை சம்பந்தமான சீர்திருத்தத்தின் முன்னேற்றத்துக்கே தடையாக இருக்கின்றன.

மாறுதல் நியதியை வர்ணாச்சிரமம் பாதிக்கவில்லையென்பது இப்போது தெளிவாகியிருக்கிறது. அது மாத்திரமல்ல. அந்த நியதிக்கு அது இடமும் அளித்திருக்கிறது. எனினும், வகுப்புகளின் தன்மையில் ஒரு சில வருடங்களிலோ, அல்லது சில தலைமுறைகளிலோகூட மாறுதல் ஏற்படுவதில்லை. ஒரு பிராம்மணருக்கும் ஒரு பறையருக்குமிடையே மூலாதாரமாக வேற்றுமை எதுவுமில்லை. எனினும், அந்தந்த வகுப்பையே எடுத்துக்கொண்டு பார்ப்போமாயின் பிராம்மணர்களுக்கும் பறையர்களுக்குமிடையே, அதுபோல் நான்கு சாதிகளுக்குமிடையே குறுப்பிடத்தக்க, தெளிவான வேற்றுமை இருப்பதை எவரும் பார்க்கலாம். நாம் விரும்புவது யாதெனில், பிராம்மணர்களாயினும் அல்லது மற்றவர்களாயினும், தாங்கள் உயர்வானவர்கள் என்று மமதை கொள்ளுவதை எதிர்த்துப் போராட என்னுடன் இந்த நிருபர் சேர்ந்துகொள்ள வேண்டுமென்பதே. வர்ணாச்சிரமம் துஷ்பிரயோகம் செய்யப்படுவதைத்தான் எதிர்த்து நிற்க வேண்டுமேயன்றி, வர்ணாச்சிரமத்தையே எதிர்ப்பது கூடாது.

—'எங் இந்தியா'-23—4—1925

# 2

# தொழில் பற்றிய தீண்டாமை

ஒருவர் கீழ்வருமாறு எழுதுகிறார்:

''பிறப்பை அடிப்படையாகக்கொண்ட தொழில் பிரிவினைக் கொள்கையை நீங்கள் அங்கீகரிக்கிறீர்கள். அந்தக்கொள்கை நமது சமுதாய அமைப்பின் அடிப்படையாக இருக்குமாயின், 'தீண்டாதார்' எப்போதுமே நம்முடன் இருந்து வருவார்களென்பது தெளிவாகவில்லையா? அப்படியாயின் தோட்டி வேலை, பிணம் தூக்குதல், சவக்குழி தோண்டுதல் போன்ற சமுதாயக் கடமைகளைப் பரம்பரையாகச் செய்து வருவோரை அசுத்தமானவர்களென்றும் தொடத்தகாதவர்ளென்றுமே சமூகத்தைச்சேர்ந்த மற்றவர்கள் கருதி வருவார்கள் என்று நினைப்பது நியாயந்தானே? மற்ற எல்லா நாடுகளிலும் தோட்டிகள், சக்கிலியர்கள், நாவிதர்கள், சலவைத் தொழிலாளர்கள், சவக்குழி தோண்டுவோர், சவம் சுமப்போர் முதலியவர்களை, அவர்கள் தனி நபர்களாயினும் ஒரு வகுப்பைச் சேர்ந்தவர்களாயினும், யாரும் தீண்டாதவராகக் கருதுவதில்லை. ஏனெனில், அந்த நாடுகளில் அத்தொழில்கள் பரம்பரையாக அனுஷ்டிக்கப்படுவதில்லை. எந்த வகுப்பைச் சேர்ந்த எவராயினும் எக்காலத்திலாயினும் ஒரு சிப்பாயாகவோ,வியாபாரியாகவோ, உபாத்தியாயராகவோ, அரசியல்வாதியாகவோ அல்லது குருமாராகவோ வரலாம். எனவே நமது தேசத்தில் மாத்திரம் விசித்திரமாக உள்ள தீண்டாமை தீமையின் ஆணி வேர், முற்றிலும் பரம்பரைக் கொள்கையை அடிப்படையாகக் கொண்ட அசாதாரணமான சமுதாய முறையையே சார்ந்திருக்கிறதென்று எனக்குத் தோன்றுகிறது. அந்தக் கொள்கையை நாம் விடாப்பிடியாகப் பற்றிக் கொண்டிருக்கும் வரையில், தீண்டாமையை ஒழித்துக்கட்ட முடியாதென்றும் எனக்குத் தோன்றுகிறது. ராமானுஜரைப் போன்ற மிக்க சக்தி வாய்ந்த சீர்திருத்த வாதிகளின் செல்வாக்கினாலோ அல்லது பலம் பொருந்திய அரசியல் எழுச்சியின் வேகத்தினாலோ, அப்போதைக்கப்போது தீண்டாமையின் உக்கிரம் தணியலாமேயன்றி அத்தீமையை அடியோடு அகற்றிவிட முடியாது. சாதி எண்ணத்துக்கு முற்றுப்புள்ளி வைக்காமல், தீண்டாமையை ஒழிக்க முற்படும் ஒவ்வொரு முயற்சியும், ஒரு மரத்தை வேருடன் வெட்டாமல் அதன் உச்சிக்கிளையை மாத்திரம் வெட்ட முயற்சிப்பது போல், வியர்த்தமாக முடியும் என்று நான் அஞ்சுகிறேன்.''

இக்கடிதம் ஒப்புக்கொள்ளக்கூடியதாகவே தோன்றுகிறது. சீர்திருத்தவாதி ஜாக்கிரதையாக இருந்தாலன்றி, இவர் அஞ்சும் ஆபத்து கொடிய உண்மையாகிவிடலாம். எனினும், இவரின் வாதத்தில் உள்ள சிந்தனைக் குழப்பம் தெளிவாகத் தெரிகிறது. ஒரு சக்கிலியர் அல்லது தோட்டி விஷயத்தில் அனுஷ்டிக்கப்படும் தீண்டாமை பிறப்பைப் பற்றியதா அல்லது தொழிலைப் பற்றியதா? அது பிறப்பைப் பற்றியதெனில் அது பயங்கரமானது; அதை அடியோடு ஒழித்துத்தான் தீரவேண்டும். அது தொழிலைப்

பற்றியதெனில், அது மிகவும் முக்கியமான ஓர் ஆரோக்கிய விதியாக இருக்கலாம். அது உலகமெங்கும் அனுஷ்டிக்கப்படுகிறது. நிலக்கரி தோண்டும் ஒருவர், அவர் அத்தொழிலில் ஈடுபட்டிருக்கும்போது முற்றிலும் தீண்டத்தகாதவராகவே இருக்கிறார். அன்புடன் கையை நீட்டினால் அவரே கை குலுக்க மறுத்து விடுகிறார். தாம் அழுக்காகவும் அசுத்தமாகவும் இருப்பதாகக் கூறுகிறார். ஆனால், அவர் வேலை முடிந்ததும், ஸ்நானம் செய்து உடையை மாற்றிக்கொள்ளுகிறார். பிறகு மிகவும் ஒழுங்காக நாட்டிலுள்ள மாபெரும் மனிதர்களுடனும் கலந்து பழகுகிறார், எனவே, பிறப்புக் களங்கத்தை நாம் அகற்றுவோமாயின், அதாவது பிறப்பு பற்றிய உயர்வு, தாழ்வு எண்ணத்தை அகற்றிவிடுவோமாயின், உடனடியாக நாம் வர்ணாச்சிரமத்தைப் பரிசுத்தம் செய்தவர்களாகிறோம்.

அவ்விதமாயின், தோட்டிகளின் குழந்தைகள் தாங்கள் இழிவுபடுத்தப்படாமலும். இழிவுபடுத்தப்படுகிறோம் என்று வருந்தாமலும் தோட்டிகளாகவே இருக்கலாம். பிராம்மணர்களை யாராவது தீண்டாதாராகக் கருதுவார்களா? அதுபோல் அவர்களும் தீண்டாதவராகக் கருதப்படமாட்டார்கள். எனவே, பரம்பரைத் தொழில் விதியையோ, தலைமுறை தலைமுறையாகக் குணங்கள் தொடர்ந்துவருவதையோ அங்கீகரிப்பதில் குற்றமில்லை; சமத்துவமின்மை பற்றிய தவறான மனோபாவமே குற்றமாகும்.

வர்ணாச்சிரமம், எத்தகைய குறுகிய நோக்கத்துடனும் உருவாக்கபபடவில்லை என்பதே என் அபிப்பிராயம். அதற்கு மாறாக அது, தொழிலாளியான சூத்திரருக்கும், சிந்தனையாளரான பிராம்மணருக்கும் சம அந்தஸ்து அளித்தது. யோக்கியதை அதிகமாவதற்கும், குற்றம் குறைகள் ஒழிவதற்கும் அது இடம் அளித்தது. வர்ணாச்சிரமம், மனிதனின் பொதுவான ஆசாபாசங்களை லோகாயதமான கோளத்திலிருந்து ஆன்மிகமான, சாசுவதமான மண்டலத்துக்கு மாற்றியது. பிராம்மணருடைய லட்சியமும் சூத்திரருடைய லட்சியமும் பொதுவானது—அதாவது மோட்சம் அடைதல், அல்லது தன்னைத் தானே அறிந்து கொள்ளுதல்; புகழோ, பணமோ, அதிகாரமோ பெறுவதல்ல. பிற்காலத்தில், வர்ணாச்சிரமத்தின் இந்த உன்னதமான கொள்கை இழிவான நிலையை அடைந்துவிட்டது. அர்த்தமற்ற வீண் சடங்குகளும், சிலர் தங்களை உயர்வானவர்கள் என்று நினைத்துக்கொள்ளுவதும், மற்றவர்கள்மீது இழிநிலை சுமத்தப்படுவதும்தான் வர்ணாச்சிரமம் என்று ஆகிவிட்டது.

இதற்குக் காரணம் வர்ணாச்சிரமத்தின் பலவீனமல்ல; மனித இயற்கை சுபாவத்தின் பலவீனமேயாகும். சிற்சில சந்தர்ப்பங்களில் மனிதரின் இயற்கை சுபாவம் மகோன்னத நிலைக்கு எழும் தன்மையுடையதாயிருக்கிறது. மற்றும் சில சந்தர்ப்பங்களில் அது இழிவான படுபாதாளத்தில் வீழ்ச்சியடையும் தன்மை

யுடையதாகவும் இருக்கிறது. எனவே, சீர்திருத்தவாதி முயற்சி செய்யவேண்டியது என்னவெனில், தீண்டாமைச் சாபக்கேட்டை ஒழித்துவிட்டு, வர்ணாச்சிரமத்தை அதன் நியாயமான ஸ்தானத் திற்குப் புனருத்தாரணம் செய்வதுதான். அவ்விதம் உத்தார ணம் செய்யப்பட்ட வர்ணாச்சிரமம், சீர்திருத்தத்துக்குப் பிறகு நீடிக்குமா அல்லது மறைந்துவிடுமா என்பது எதிர்காலத்தில் தான் தெரியவேண்டும். வர்ணாச்சிரமம் நீடிப்பதோ அல்லது மறைவதோ, இப்போது யாருமறியா வண்ணம் உருவாகி வரும் புதிய பிராம்மண வகுப்பையே பொறுத்ததாகும். அவ்வகுப் பினர் தங்கள் உடலையும், உள்ளத்தையும், ஆன்மாவையும் ஹிந்து மதப் பணிக்கும், தேசப் பணிக்கும் அர்ப்பணம் செய்து வரு கிறார்கள். அவர்களுக்கு லோகாயதமான ஆசை இல்லாவிடில், ஹிந்து மதத்துக்கும் க்ஷேமம்தான். அவர்களுக்கு அந்த ஆசை இருக்குமாயின், மற்ற தத்துவங்களைப் போல் ஹிந்து மதமும் பேராசைக்காரர்களின் கையில் சிக்குண்டு அழிந்து போகும். எனினும், ஹிந்து மதத்தில் படியும் அசுத்தங்களையெல்லாம் அப் போதைக்கப்போது நீக்கிக்கொள்ள, ஹிந்து மதத்துக்கு உள்ள சக்தியில் எனக்கு மாறாத நம்பிக்கை உண்டு. அந்தச் சக்தி இப் போது வற்றிவிட்டதென்று நான் நினைக்கவில்லை.

—'எங் இந்தியா' - 13—8—1925

## 3

# கேலிக் கூத்தை ஒழிக்கவேண்டும்

இந்தியாவின் மற்றப் பாகங்களைப்போல் கச் பிரதேசத்திலும் நான் பிரயாணம் செய்தபோதெல்லாம், தீண்டாதாருக்குள்ளேயே உயர்ந்த சாதியென்றும் தாழ்ந்த சாதியென்றும் இருப்பதைக் கவனித்தேன். இருவரும் தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவராக இருந்தும்கூட, உயர்ந்த சாதி அந்த்யஜர் தாழ்ந்த சாதி அந்த் யஜரைத் தொடமாட்டார்; தாழ்ந்த சாதிக் குழந்தைகள் இருக்கு மிடத்துக்கும் தங்கள் குழந்தைகளைக் கண்டிப்பாக அனுப்பமாட் டார்கள்! அவர்களுக்குள் சமபோஜனம், கலப்பு மணம் முதலியன நினைக்கவும் முடியாதவை. இந்த நிலை, சாதி பற்றிய படுமோச மான கேலிக் கூத்தாகும். இவ்விதம் ஒரு வகுப்பு மற்றொரு வகுப்பைக்காட்டிலும் உயர்வானதென்று மமதை கொள்ளுவதை எதிர்த்தே நான் என்னை ஒரு 'பங்கி', அதாவது ஒரு தோட்டி என்று கூறிக்கொள்ளுவதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன். எனக் குத் தெரிந்தவரையில் தோட்டியைக் காட்டிலும் தாழ்ந்த சாதி யினர் வேறு எவருமில்லை.

ஹிந்து மதத்திலிருந்து இயற்கைக்கு முரணான வேற்றுமை களை நாம் ஒழிக்கவேண்டுமாயின், அவற்றை எதிர்த்து நம்மில்

சிலர் இதயபூர்வமாக வீறு கொண்டு எழ வேண்டும். ஒருவர், தம்மை உயர்ந்தவர் என்று கூறிக்கொள்ளுவதிலிருந்தே உயர்வை இழந்தவராகிறார் என்பது என் கருத்தாகும். உண்மையான, இயற்கையான உயர்வு ஒருவர் தாம் சொல்லிக்கொள்ளாமல் தானாகவே வருகிறது. அத்தகைய உயர்வு மனமுவந்து எவராலும் அங்கீகரிக்கப்படுகிறது. ஆனால், உயர்ந்தவர் தமது உயர்வை ஏற்றுக்கொள்ளுவதில்லை; பகட்டுக்காக அல்ல, தாம் அடக்கமானவர் என்பதைக் காட்டிக்கொள்ளுவதற்காகவும் அல்ல; தாம் உயர்ந்தவர் என்பதையே அவர் உணர்வதில்லை. ஏனெனில், ஓர் உயர்ந்த மனிதர், தமது ஆன்மாவுக்கும், தம்மைவிடத் தாழ்ந்தவர் என்று நினைக்கும் ஒருவரின் ஆன்மாவுக்கும் வேற்றுமை எதுவுமில்லை என்பதை அறிகிறார். உயிர் வாழும் யாவரும் ஒருவரே, அவர்களுக்குள் முக்கிய அம்சங்களில் எவ்வித பேதமும் இல்லை என்பதை அங்கீகரிப்பது, உயர்வு தாழ்வு எண்ணத்தையே ஒதுக்கித் தள்ளுவதாகும்.

வாழ்க்கை என்பது கடமையாகும்; அது, உரிமைகளும் சலுகைகளும் அடங்கிய ஒரு மூட்டை அல்ல. உயர்வு, தாழ்வு என்ற வரிசை முறையை அடிப்படையாகக் கொண்ட மதம், அழிவதைத் தவிர வேறு வழியில்லை. என் சம்பந்தப்பட்ட வரையில் வர்ணாச்சிரமத்தின் பொருள் அதுவல்ல. அதை நான் ஏன் நம்புகிறேன் என்றால், பல்வேறு தொழில்களைச் சேர்ந்த மனிதர்களின் கடமைகளை அது வரையறுக்கிறது என்று எண்ணுகிறேன். பிராம்மணர், எல்லோருக்கும், சூத்திரர்களுக்கும், தீண்டாதாருக்கும்கூட ஊழியராவார். பிறருக்குத் தொண்டு புரியவே அவர் எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்கிறார். மற்றவர்களுடைய தயவிலும் அவர்கள் அளிக்கும் பிக்ஷையைக்கொண்டுமே அவர் வாழ்கிறார்.

பதவி, அதிகாரம், சலுகைகள் இவற்றிற்கு டம்பமாக உரிமை கொண்டாடுபவர் க்ஷத்திரியர் அல்ல. சமூகத்தின் கௌரவத்துக்காகவும் பாதுகாப்புக்காகவும் தம்மையே அர்ப்பணம் செய்பவர் மாத்திரமே க்ஷத்திரியராவார். தமக்காக மாத்திரமே சம்பாதித்துக்கொண்டு, செல்வம் சேகரிப்பதொன்றிலேயே நம்பிக்கை வைக்கும் ஒரு வைசியர், திருடராவார். சமூகத்தின் சார்பில் ஒரு சூத்திரர் சம்பளத்துக்காக வேலை செய்கிறார் என்பதற்காக, அவர் மற்ற மூன்று வகுப்பினரைவிட எவ்விதத்திலும் தாழ்ந்தவர் அல்ல.

நான் மனத்தில் கொண்டுள்ள ஹிந்து மதத்தின்படி, ஐந்தாவது சாதி அல்லது தீண்டாதார் என்பதே கிடையாது. சூத்திரர்களைப் போல் தீண்டாதார் எனப்படுவோரும் சகல உரிமைகளும் உள்ள சமுதாயத் தொழிலாளர்கள் ஆவர். சமுதாயத்தின் தலைசிறந்த நன்மைக்காக உருவாக்கப்பட்ட, குற்றம் குறைகளற்ற, மேன்மையான முறையே வர்ணாச்சிரமம் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால், இன்று நாம் காண்பது என்னவெனில், ஆதி முறையின் முற்றிலும் மாறுபட்ட ஒரு கேலிக் கூத்தாக

இருக்கிறது. வர்ணாச்சிரமம் நிலை பெற்றிருக்க வேண்டுமாயின், ஹிந்துக்கள் கேலிக் கூத்தை ஒழித்து, வர்ணாச்சிரமத்தை சிறப்பு வாய்ந்த பண்டைய நிலைக்குப் புனருத்தாரணம் செய்ய வேண்டும்.

—'எங் இந்தியா' - 5-11-1925

# 4

# கடினமான சோதனை

கேள்வி : சாதியின் நான்கு பிரிவுகள் பிறப்பை அடிப்படையாகக் கொண்டவை என்று நீங்கள் கருதுகிறீர்கள். ஒரு மனிதரின் சாதி, அவர் மற்ற சாதிகளைச் சேர்ந்த கடமைகளைச் செய்வதற்குத் தடையாக இல்லை என்றும், ஒருவர், அவரது பிறப்பு எவ்விதமாயினும், ஒரு பிராம்மணர், க்ஷத்திரியர் அல்லது சூத்திரரின் குணங்களுடையவராக இருக்கலாமென்றும் நீங்கள் நம்புகிறீர்கள். அது அப்படியாயின், இந்தப் பிரிவையும், இதன் விளைவான உயர்வு, தாழ்வு முறையையும் நீடித்து வைத்துக்கொண்டிருப்பதால் என்ன பலன்? அகஸ்மாத்தாக ஏற்பட்ட பிறப்பு, ஒரு மனிதரை ஒரு பிராம்மணராகவோ, ஒரு க்ஷத்திரியராகவோ அல்லது ஒரு சூத்திரராகவோ ஏன் செய்ய வேண்டும்? பிறப்புக்கு ஏன் அவ்வளவு முக்கியத்துவம் அளிக்க வேண்டும்?

பதில் : நான்கு விதமான பிரிவினையை நான் ஒப்புக்கொள்ளுவதன் மூலம், கேவலம் இயற்கையின் விதிகளையே ஒப்புக்கொண்டிருக்கிறேன். மனித இயற்கையின் இயல்பையும், பரம்பரை விதியையுமே ஒப்புக்கொண்டுள்ளேன். நமது பெற்றோர்களின் குணாதிசயங்களில் சில, பிறவியிலேயே நமக்கு ஏற்பட்டிருக்கின்றன. மானிட வர்க்கத்தில் மாத்திரமே மனிதர் ஜனிக்கிறார் என்ற உண்மை ஏதோ விசேஷத்தை, அதாவது பிறப்பினாலே சாதி நிர்ணயிக்கப்படுகிறதென்பதைக் காட்டுகிறது அல்லவா?

அதில் மன உறுதியை இஷ்டப்படி காட்டுவதற்கு இடமிருக்கிறது. பரம்பரையாக வந்த குணங்களில் சிலவற்றை ஓரளவு நாம் மாற்றிக்கொள்ளலாம். நமது முன் கர்ம வினைகளின் பலாபலன்களை ஒரு பிறப்பில் முற்றிலும் அகற்றி விடுவது இயலாத காரியம். இதை அனுசரித்துப் பார்ப்போமாயின், பிராம்மணப் பெற்றோர்களுக்குப் பிறந்த ஒருவரைப் பிராம்மணராகக் கருதுவது எவ்விதத்திலும் நியாயமும் ஒழுங்குமாகும். ஒரு பிராம்மணர், சூத்திரரின் செயல்களைப் புரிவதால் இந்த ஜன்மத்திலேயே சூத்திரராகி விடலாம். எனினும், தொடர்ந்து அவரைப் பிராம்மணராகவே

நடத்தி வருவதில் உலகத்துக்கு எவ்வித நஷ்டமும் ஏற்பட்டுவிடாது.

மனிதரின் வெவ்வேறு தொழில்களை வரையறுக்கவே நான்கு பிரிவான சாதிகள் ஏற்பட்டன. ஆனால், இன்றுள்ள சாதி ஆதி நோக்கத்துக்கு முற்றிலும் மாறுபட்ட கேலிக் கூத்தாகிவிட்டதென்பதில் ஐயமில்லை. அதை அசட்டை செய்ததே அதன் அழிவுக்குக் காரணமாகியிருக்கிறது. இருந்தாலும், அதற்காக நான், இயற்கையின் விதியை எப்படி நிராகரிக்க முடியும்? நாம் வைக்கும் ஒவ்வோர் அடியிலும் இயற்கையின் நியதி நிறைவேறி வருவதைக் காண்கிறேன். அதை உதறித் தள்ளிவிட்டால், பல சங்கடங்களை நான் தவிர்க்க முடியும் என்பதை அறிவேன். ஆனால், அது வியர்த்தமான ஒரு குறுக்குப் பாதையாகவே இருக்கும். ஒரு மனிதரின் சாதியில் பெருமை கொள்ளுவதற்கு எதுவுமில்லையென்றும், நான்கு பிரிவுகளுள் எதிலும் உயர்வு, தாழ்வுக்கு இடமேயில்லையென்றும் நான் கூரை மீதிருந்து பறைசாற்றியிருக்கிறேன். ஓர் உண்மையான பிராம்மணர், மிகமிகத் தாழ்ந்த சூத்திரர்களுக்குத் தொண்டு செய்வதை ஒரு கௌரவமாகக் கருதுவார். உண்மையில் ஒரு பிராம்மணர், பிராம்மணராக இருக்க வேண்டுமாயின், தமது சொந்த குணங்களுடன் ஒரு க்ஷத்திரியர், ஒரு வைசியர், ஒரு சூத்திரர் இவர்களுடைய குணங்களையும் பெற்றிருக்க வேண்டும். அவர் தெய்வீக அறிவு பெற்ற பிரபல மனிதராக விளங்குவார் என்பதைத் தவிர வேறெதுவுமில்லை. ஆனால், இன்று சாதி முறைக்குக் கடினமான சோதனை ஏற்பட்டிருக்கிறது. அதன் இறுதியான முடிவு என்ன என்பதைக் கடவுளே அறிவார்; அல்லது ஒருவேளை பிராம்மணர்களும் அறியலாம்.

—'எங் இந்தியா' - 21 – 1 – 1926

# 5

# 'என்னுடைய வர்ணாச்சிரமம்'

*[கடலூரில் நிகழ்த்திய பிரசங்கத்தில் காந்திஜி பிராம்மணர் – பிராம்மணரல்லாதார் பிரச்னைபற்றி நீண்டநேரம் பேசினர்; அதன் விவரம் வருமாறு]*

எனக்கு வாசித்து அளித்த முனிசிபல் உபசாரப் பத்திரத்தின் முக்கியமான பகுதிக்கு நான் உடனே வர வேண்டும். பிராம்மணர்களுக்கும் பிராம்மணரல்லாதாருக்கும் உள்ள வேற்றுமைகளை நீங்கள் என் கவனத்துக்குக் கொண்டு வந்து, அதற்கு ஒரு பரிகாரம் கண்டுபிடிக்கும்படியும் கேட்டிருக்கிறீர்கள். நானே ஒரு

பிராம்மணரல்லாதார் என்ற முறையில், என் உயிரை இழப்பதன் மூலம் அந்த வேற்றுமைகளை நான் அகற்ற முடியுமாயின், இந்த விநாடியே அவ்விதம் செய்துவிடுவேன். ஆனால், வேலை வாங்குவதில் கடவுள் மிகவும் கடுமையாக இருப்பவர். வாண வித்தை ஆடம்பரத்தைக்கொண்டு அவரை ஒருபோதும் திருப்திப்படுத்த முடியாது. அவரது யந்திரங்கள் நிச்சயமாகவும் இடைவிடாமலும் இயங்கி வருகின்றனவென்றாலும், அவை மிகுந்த வேதனையைக் கொடுக்கும் மந்த கதியில் மெதுவாகத்தான் இயங்குகின்றன. எனவே, அவசரப்பட்டு உயிரைப் பறி கொடுப்பதைக் கொண்டு அவரை எக்காலத்திலும் திருப்திப்படுத்த முடியாது. முற்றிலும் பரிசுத்தமானவரின் உயிர்த் தியாகத்தையே அவர் அதிகாரத்துடன் கோருகிறார். எனவே, நீங்களும் நானும், எவ்வளவு காலம் உயிர் வாழ வேண்டுமென்று விதிக்கப்பட்டுள்ளோமோ, அதுவரையில் கடவுளைப் பிரார்த்தித்தவண்ணம் காலம் தள்ள வேண்டியவர்களாக இருக்கிறோம். உங்களுடைய ஆலோசனைகளில் நான் பங்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று நீங்கள் எப்போது விரும்பினாலும், அல்லது எனது ஆலோசனையை நீங்கள் எப்போது நாடினாலும், நான் உங்கள் இஷ்டப்படி நடக்கத் தயாராக இருக்கிறேன் என்று மிகச் சமீபத்தில்தான் சென்னையில் கூறினேன். இந்தக் கஷ்டமான பிரச்னைக்குத் திட்டமான பரிகாரம் எதுவும் என்னிடம் இல்லை. அந்த இரு சாராருக்கும் எவ்விஷயத்தில் வேற்றுமை என்பது இப்போதுகூட எனக்குத் தெரியாதென்பதை, நான் உங்களிடம் ஒப்புக்கொள்ளுகிறேன்.

நந்திமலையில் என்னைப் பார்க்க வந்த பிராம்மணரல்லாதாரிடமிருந்து வேற்றுமைக்குக் காரணத்தைத் தெரிந்துகொள்ள முயற்சித்தேன். என்னுடைய பிரயாணத்தின்போது என்னைப் பார்த்து வேற்றுமைக்கான காரணங்கள் யாவையும் என் முன் கூறுவதாக அவர்கள் உறுதி கூறியுள்ளனர். பிராம்மணர்களின் புகார் என்னவென்பதும் எனக்குத் தெரியாது என்பதை நான் ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும். இந்த விஷயங்களையெல்லாம் குறித்து என் கருத்து எப்படி இருக்குமென்பதைப் பூரணமாக அறிந்துகொண்டே, வேற்றுமைகள் என்னவென்பதைத் தந்திரசாலிகளான பிராம்மணர்கள் என்னிடம் கூறவில்லை. நான் ஒரு பிராம்மணரல்லாதார் என்பது உங்களுக்குத் தெரியும். இருந்தாலும், நான் பிராம்மணரல்லாதாரைக் காட்டிலும் பிராம்மணர்களிடையேதான் அதிகமாக வாழ்ந்திருக்கிறேன்; அவர்களுடன்தான் அதிகமாகப் பழகியிருக்கிறேன். எனவே, பிராம்மண நண்பர்களிடமிருந்துதான் நான் இந்த வேஷமெல்லாம் எடுத்துக்கொண்டிருப்பதாகப் பிராம்மணரல்லாத நண்பர்கள் சந்தேகப்படுகிறார்கள். இந்தப் பிரச்னை ஒழுங்காகத் தீர என் மீது நம்பிக்கை வைப்பதில் பலனில்லையென்று பிராம்மணரல்லாதார் கருதுகிறார்கள் என்ற தீவிர சந்தேகமும் எனக்கு உண்டு. எனவே, இரு சாரராலும் ஒதுக்கிவைக்கப்பட்ட ஆனந்தமான நிலையில் நான் இருக்கிறேன். இந்த நிலை, எனது தற்போதைய

உடல் நிலைக்கு முற்றிலும் ஏற்றதாக இருக்கிறது. எனினும், என் சம்பந்தப்பட்ட வரையில், இரு சாராரின் அன்புக்கும் உரியவனாக நான் தயாராக இருந்து வருகிறேன் என்று உறுதி கூறுகிறேன். என் உடல் நலன் சரியாக இல்லையென்று அவர்களுக்குச் சாக்குச் சொல்லமாட்டேன் என்றும் உறுதி கூறுகிறேன்.

ஆனால், நான் இரு சாராருக்கும் குற்றம் குறையற்ற சிறந்த இரு ஆலோசனைகள் கூற முடியும்.

பிராம்மணர்களுக்கு நான் கூறுவது இதுதான்: "நீங்கள் அறிவுக்கெல்லாம் களஞ்சியங்களாக இருக்கிறீர்கள். தியாகமே உருக்கொண்டவர்களாக இருக்கிறீர்கள். யாசக வாழ்வையே நீங்கள் தேர்ந்தெடுத்துக் கொண்டிருக்கிறீர்கள். எனவே, பிராம்மணரல்லாதார் விரும்புவதை யெல்லாம் விட்டுவிடுங்கள். அவர்கள் உங்களுக்கு எதை மீதி வைக்கிறார்களோ, அதைக் கொண்டு மாத்திரம் திருப்தியடையுங்கள்.'' ஆனால், அவரது தருமத்தை யொட்டி எனது பிராம்மணரல்லாத விளக்கத்தை நவீன பிராம்மணர் உடனடியாக நிராகரித்துவிடுவார் என்பதை நான் அறிவேன்.

பிராம்மணரல்லாதாருக்கு நான் கூறுவது இதுதான்: "உங்கள் பக்கத்தில் அதிகத் தொகையினர் இருக்கிறார்கள். உங்கள் பக்கத்தில் செல்வமும் இருக்கிறது. அப்படியிருக்க, நீங்கள் எதைப் பற்றி அலட்டிக் கொள்ளுகிறீர்கள்? தீண்டாமையை நீங்கள் எதிர்த்து வருகிறீர்கள். அதை எதிர்க்கத்தான் வேண்டும். ஆனால், உங்களிடையே ஒரு புதிய தீண்டாமையைச் சிருஷ்டிக்கும் குற்றத்துக்கு ஆளாகிவிடாதீர்கள். நீங்கள் அவசரப்பட்டும், கண்மூடித்தனமாகவும், பிராம்மணர்கள் மீது உங்களுக்குள்ள கோபம் காரணமாகவும், பண்டைய காலத்திலிருந்து தலைமுறை தலைமுறையாக நீங்கள் பெற்றுவந்துள்ள பண்பாடு முழுவதையும் காலால் மிதித்து நசுக்கிவிட முயற்சித்து வருகிறீர்கள். பேனா முனையால், ஒருவேளை கத்தி முனையால்தானோ என்னவோ, ஹிந்து மதத்தின் அடித்தளத்தைத் தகர்க்கப் பொறுமையின்றித் துடித்து வருகிறீர்கள். ஹிந்து மதத்தின் புறத்தோற்றத்தில் நீங்கள் அதிருப்தி கொண்டிருக்கிறீர்கள். அந்த அதிருப்தி நியாயமானதே. ஆனால், நீங்கள் அதன் சாரத்தையே, உயிரையே இழந்துவிடக் கூடிய ஆபத்தில் இருக்கிறீர்கள். நீங்கள் பொறுமையின்மை காரணமாக, வர்ணாச்சிரமத்திற்கு ஆதாரமாக எதுவுமே சொல்லுவதற்கில்லை யென்று எண்ணுகிறீர்கள் போலும்."

இன்று வர்ணாச்சிரமம் என்ற பெயரில் உலவும் அரக்கனை எல்லாவிதத்திலும் எதிர்த்துப் போராடுங்கள். அவ்விஷயத்தில் உங்களோடு நான் தோளோடு தோள் நின்று தொண்டு புரிவதைக் காண்பீர்கள். எனக்கு யார் சுத்தமான உணவு அளிக்கிறாரோ, அவர் ஹிந்துவாயினும், முஸ்லிமாயினும், கிறிஸ்துவராயினும், பார்சியாயினும், வேறு எவராயினும் அவருடன் சாப்பிட

என்னுடைய வர்ணச்சிரமம் அனுமதிக்கிறது. ஒரு பறைச் சிறுமியை என் சொந்த மகள் போல் என் வீட்டில் வைத்துக்கொள்ள எனது வர்ணச்சிரமம் இடம் கொடுக்கிறது. பல பஞ்சமக் குடும்பங்களுக்கு என் வர்ணச்சிரமத்தில் இடம் உண்டு. அவர்களுடன் கூட சாப்பிடுவதில் நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். அதை ஓர் விசேஷ உரிமையாகவும் கருதுகிறேன். புவியில் உள்ள மாபெரும் மன்னருக்கும் தலைவணங்க என் வர்ணச்சிரமம் மறுக்கிறது. ஆனால், நான் கடவுளை நேரில் காணும் அறிவுக்கு முன், பரிசுத்தத் தன்மைக்கு முன், ஒவ்வொரு மனிதருக்கு முன் னிலையிலும் பணிவுடன் தலை வணங்கும்படி எனது வர்ணச்சிரமம் வற்புறுத்துகிறது.

எனவே, தற்போது முற்றிலும் அர்த்தமற்ற, துருப்பிடித்துப் போன வார்த்தைகளால் தூஷிக்காதீர்கள். விரும்பினால், நீங்கள் பிராம்மணர்களை நிந்தியுங்கள்; ஆனால், ஒருபோதும் பிராம்மணீயத்தை நிந்திக்காதீர்கள். நான் பிராம்மணரை ஆதரிப்பவன் என்று நீங்கள் நினைத்தாலும், தப்பெண்ணம் கொண்டாலும்கூட, உங்களுக்கு ஒரு விஷயத்தைப் பறைசாற்றத் துணிகிறேன். பிராம்மணர்கள் தாங்கள் செய்த பல பாவங்களுக்குப் பிராயச் சித்தம் செய்துகொள்ள வேண்டியவர்களாக இருக்கிறார்கள்; பல பாவங்களுக்கு, பிறருக்கு எடுத்துக்காட்டாக இருக்கும்படி கடுமையான தண்டனைகளையும் அவர்கள் அடைவார்கள்.

இருந்தாலும், ஹிந்து மதத்தின் முன்னேற்றத்தைக் கூர்ந்து கவனித்துக்கொண்டும், தங்கள் சக்திக்கு எட்டிய வரையில் தெய்வ பக்தியினாலும், அறநெறியினாலும் ஹிந்து மதத்தைப் பாதுகாக்க முயற்சித்துக்கொண்டும் இந்தியாவில் இன்று பல பிராம்மணர்கள் வாழ்ந்து வருகிறார்கள். அவர்களை நீங்கள் அறிந்திருக்கக்கூட மாட்டீர்கள். பிறர் தங்களை அறிந்துகொள்ள வேண்டுமென்று அவர்கள் கவலைப்படவில்லை. அவர்கள் எவ்விதக் கைம்மாறையும் எதிர்பார்க்கவில்லை; எவ்வித வெகுமதியும் கோரவில்லை. அவர்களுடைய தொண்டே அவர்களுக்கு வெகுமதியாகும். இவ்விதமாக அவர்கள் தங்கள் வேலையைச் செய்கிறார்கள். காரணம், அவர்கள் அதைச் செய்து தீர வேண்டும். அது அவர்களுடைய சுபாவம். நீங்களும் நானும் நம் சக்தி முழுவதையும் உபயோகித்து அவரை இஷ்டப்படி கண்டிக்கலாம். ஆனால், அது அவரைப் பாதிக்காது.

நான் பிராம்மணர்களின் சார்பில், வக்கீல்கள், மந்திரிகள், இந்தியாவில் உள்ள ஹைகோர்ட் நீதிபதிகளின் சார்பில் கூட நியாயம் பேசுவதாக நீங்கள் கருதிவிடாதீர்கள். நான் அவர்களை மனதிற்கொண்டு கூறவில்லை. எனவே, பிராம்மணர்களும் பிராம்மணரல்லாதாரும், ஏன், இந்தியாவின் முன்னேற்றத்தில் விருப்பம் உள்ள ஒவ்வொருவரும் என்ன செய்ய வேண்டுமெனில், தங்கள் சொந்த வீட்டைச் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்பதுதான். எனவே, தங்கள் மனவருத்தத்துக்குக்

காரணம் என்னவென்பதைத் தெளிவாகச் சிந்தித்து, ஒரு தீர்மானத்துக்கு வரும்படியும், தங்கள் குறைகளையும் கஷ்டங்களையும் அகற்றுவதற்குத் தங்கள் சக்தி முழுவதையும் உபயோகித்துப் போராடும்படியும், இன்னும் மதியிழந்து விடாத பிராம்மணரல்லாதாருக்கு யோசனை கூறுகிறேன்.

இன்று மாலை, இப்பிரச்னையைப் பேச்சளவில் மாத்திரம் பரிசீலனை செய்ய முற்பட்டேன் என்பதை உணருகிறேன். இரு சாராரிடையே உள்ள சச்சரவின் தன்மை எனக்குத் தெரியாததால், நான் வேறு எதுவும் செய்வதற்கில்லை. எனினும், இரு சாராரும் பின்பற்ற வேண்டிய செயல் முறைகளையும் குறிப்பிட்டுள்ளேன் என்பதே என் தாழ்மையான அபிப்பிராயம். உங்கள் சக்திக்கு இயன்றவரையில், அவற்றை நீங்கள் உங்கள் விருப்பப்படி எவ்வகையிலாயினும் அனுஷ்டானத்திற்குக் கொண்டு வருவது உங்கள் கையிலிருக்கிறது.

—'எங் இந்தியா' – 22—9—1927

# 6

# உலக மக்கள் யாவரும் சமம்

[பிராம்மண – பிராம்மணரல்லாதார் பிரச்னை பற்றிக் காந்திஜி தஞ்சாவூரில் நிகழ்த்திய பிரசங்கம் வருமாறு:]

இன்று தஞ்சாவூருக்கு வந்ததும் பிராம்மண-பிராம்மணரல்லாதார் பிரச்னை பற்றி விவாதிக்க வேண்டுமென எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். இன்று மாலை சில நண்பர்களுடன் அது பற்றிச் சுருக்கமாக விவாதிக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. நாங்கள் விவாதித்த விஷயங்களை உங்கள் முன்னிலையில் கூற உரிமையில்லை; அவற்றைக் கூற வேண்டிய அவசியமும் இல்லை. ஆனால், இந்த விவாதம் பற்றி நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். விவாதிப்பதற்கு முன் இருந்ததைக் காட்டிலும் இப்போது நான் இந்த இயக்கத்தை ஓரளவு நன்கு அறிந்துகொண்டுள்ளேன். இவ்விஷயமாக, எனது தாழ்மையான கருத்தை அந்த நண்பர்களிடம் கூறினேன். அவர்களுக்கு அதை இஷ்டம் போல் உபயோகித்துக்கொள்ள உரிமையுண்டு. ஆனால், விவாதத்தின் ஆரம்பத்திலிருந்து கடைசி வரையில், இந்த நண்பர்களுக்கு வேதனையளிக்கும் ஒரு விஷயத்தைக் கவனித்தேன். பரம்பரையான உயர்வு தாழ்வு அபிப்பிராயத்தை நான் ஆதரிப்பதாக அவர்கள் நினைப்பது போல் தோன்றியது. அந்த எண்ணம் எனக்கு அறவே கிடையாதென்று உறுதி கூறினேன். உயர்வு பற்றிய இந்தப் பிரச்னை சம்பந்தமாக அணுவளவும் சந்தேகம் இருக்கக்கூடாது. அதை அகற்றவே, வர்ணாச்சிரமம் பற்றி நான்

கொண்டுள்ள அர்த்தத்தை இதுவரையில் நான் விவரித்துக் கூறியதைக் காட்டிலும் இன்னும் அதிகமாக மகிழ்ச்சியுடன் விவரிப்பதாகவும் கூறினேன். என் அபிப்பிராயத்தில், பரம்பரை உயர்வென்ருே, அல்லது தேடிச் சம்பாதித்த உயர்வென்ருே எதுவுமில்லே.

அத்வைதக் கொள்கையின் அடித்தளத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு. அத்வைதமானது, எந்த நிலையிலும் உயர்வு மனப்பான்மையை அடியோடு புறக்கணிக்கிறது என்பதே எனது கருத்தாகும். பிறவியில் எல்லா மனிதர்களும் சமமே என்பதில் நான் பரிபூரண நம்பிக்கையுள்ளவன்; எல்லோரும்–இந்தியாவிலோ, இங்கிலாந்திலோ அல்லது அமெரிக்காவிலோ, எங்கே பிறந்தவர்களாயினும் சரி, எந்தச் சந்தர்ப்பத்தில் பிறந்தவராயினும் சரி-மற்றெவரையும் போல் ஒரே ஆன்மாவை உடையவர்கள்தான். எல்லா மனிதர்களும் சமம் என்ற இயல்பில் எனக்கு நம்பிக்கை இருப்பதாலேயே, நம்மை ஆள்வோரில் பலர் மமதையுடன் மேற்கொண்டுள்ள ஆதிபத்யக் கொள்கையை, உயர்வு மனப்பான்மையை எதிர்த்துப் போராடுகிறேன்.

தென்னுப்பிரிக்காவில், இந்த உயர்வு மனப்பான்மைக் கொள்கையை நான் அங்குலம் அங்குலமாக எதிர்த்துப் போராடியிருக்கிறேன். சகஜமான இந்த நம்பிக்கை காரணமாகவே, என்னே நான் ஒரு தோட்டி என்றும், நூல் நூற்பவன் என்றும், ஒரு நெசவாளி என்றும், ஒரு குடியானவன் என்றும் ஒரு தொழிலாளி என்றும் கூறிக்கொள்ளுவதில் ஆனந்தமடைகிறேன்.

பிராம்மணர்கள், தங்களுடைய பிறப்பு காரணமாகவோ அல்லது பிறகு தாங்கள் தேடிக்கொண்ட அறிவு காரணமாகவோ, உயர்ந்தோர் என்று உரிமை கொண்டாடும் இடங்களில் எல்லாம், நான் அவர்களே எதிர்த்து வந்திருக்கிறேன். யாராயினும், தம்மைப் போன்ற ஒரு சகோதரரைக் காட்டிலும் தாம் உயர்ந்தவரென உரிமை கொண்டாடுவது, மனிதத் தன்மையற்றதென்றே கருதுகிறேன். நான் பிரகடனம் செய்யும் நம்பிக்கைக்குப் பகவத் கீதையில் ஏராளமான ஆதாரங்கள் இருக்கின்றன. எனவே, தாம் உயர்ந்தவர் என்று உரிமை கொண்டாடுவோர் ஒரு பிராம்மணராயினும், அல்லது வேறு யாராயினும், இந்த உயர்வு மனப்பான்மை அரக்கனே எதிர்த்துப் போராடும் ஒவ்வொரு பிராம்மணரல்லாதாருக்கும் நான் பக்கபலமாக இருந்து அவரை முற்றிலும் ஆதரிக்கிறேன். உயர்வு அந்தஸ்து கோருவோர் உடனடியாக, தாம் மனிதர் என்று அழைக்கப்படும் உரிமையையே இழந்தவராகிருர்.

இப்படியெல்லாமிருந்தும்கூட வர்ணுச்சிரம தருமத்தில் எனக்கு இன்னும் நம்பிக்கை இருக்கிறது. என் மனத்துக்கு எட்டிய வரையில், வர்ணுச்சிரம தருமம் ஒரு சட்டமாகும். நீங்களும் நானும் எவ்வளவு மறுத்தாலும், அதை ஒழித்துவிட முடியாது. அந்தச் சட்டம் இயங்குவதை ஒப்புக்கொள்ளுவது

வாழ்க்கையில் எந்த லட்சியத்துக்காகப் பிறந்தோமோ அந்த ஒரே லட்சியத்தை அடைய நம்மை நாமே தடைகளிலிருந்து விடுவித்துக்கொள்ளுவதாகும்.

அடக்கமும் பணிவும் தான்வர்ணாச்சிரம தருமமாகும். பிறப்பில் எல்லா ஆடவர்களும் பெண்களும் சமமே என்று நான் கூறியுள்ளேன் என்றாலும், குணங்கள் பரம்பரையாக வருவதில்லை என்று சொல்ல நான் விரும்பவில்லை. அதற்கு மாறாக, ஒவ்வொருவரும் ஒரு குறிப்பிட்ட உருவத்தைப் பெறுவது போல, ஒவ்வொருவரும் அவரது மூதாதையரின் விசேஷ அம்சங்களையும் குணங்களையும் பெறுகிறார். இதை ஒத்துக்கொள்ளுவது, ஒருவருடைய சக்தியைப் பாதுகாத்துக்கொள்ளுவதாகும். அவ்விதம் வெளிப்படையாக ஒத்துக்கொண்டு அதன்படி நடந்துகொள்ளுவோமாயின், நம்முடைய ஸ்தூல ஆசைகளுக்கு அது ஒரு நியாயமான தடையாக அமையும். அதன் பயனாக, நமது சக்தியை ஆன்மிக ஆராய்ச்சி, ஆன்மஞான வளர்ச்சித் துறைகளில் உபயோகிப்பதற்கு வழி பிறக்கும். வர்ணாச்சிரமத்தின் இந்தச் சித்தாந்தத்தையே நான் எப்போதும் ஒத்துக்கொண்டிருக்கிறேன். வர்ணாச்சிரமத்திற்கு இக்காலத்தில் அவ்விதம் எவரும் பொருள் கொள்ளுவதில்லை என்று கூற உங்களுக்கு உரிமையுண்டு. இன்று எவரும் அறிந்து அனுஷ்டிக்கும் வர்ணாச்சிரமம். பண்டைய வர்ணாச்சிரமத்திலிருந்து மாறுபட்ட அரக்கத்தனமான கேலிக் கூத்து என்று நானே எண்ணிக்கையற்ற தடவை கூறியிருக்கிறேன். இந்தச் சிதைவைத் தகர்ப்பதற்காக நாம், ஆதியில் இருந்த சிதைவற்ற உருவத்தைத் தகர்க்க முற்பட்டுவிடக்கூடாது. நான் உங்கள் முன்னிலையில் சமர்ப்பித்துள்ள சிரேஷ்டமான வர்ணாச்சிரமம் முற்றிலும் சரியானதென்று நீங்கள் கூறினால், நீங்கள் எதையெல்லாம் ஒத்துக்கொள்ள வேண்டுமென நான் விரும்பினேனோ, அதையெல்லாம் நீங்கள் ஒத்துக்கொண்டு விட்டதாகும்.

எந்த நாடும், எந்த நபரும் நியாயமான உயர்ந்த லட்சியங்களின்றி வாழ முடியாதென்பது என் நம்பிக்கை. இதை நீங்களும் நம்ப வேண்டுமென நான் வற்புறுத்துவேன். குற்றம் குறையற்ற சிறந்த வர்ணாச்சிரமத்தில் என்னைப் போல் உங்களுக்கும் நம்பிக்கையிருந்தால், முடிந்த வரையில், நீங்களும் அந்த லட்சியத்தை அடைய என்னுடன் பெருமுயற்சி செய்வீர்கள். உண்மையில், உலகத்தில் எந்த இடத்திலும் இந்த விதியை எதிர்த்துப் போராட முடிந்ததில்லை. இந்த விதியை எதிர்த்துப் போராடுவதால் என்ன நேர்ந்துளது, என்ன நேர்ந்து தீரும் எனில், வீண் முயற்சியில் ஈடுபட்டு நமக்கு நாமே தீங்கு விளைவித்துக்கொள்ளுவோம்.

எனவே, நான் உங்களுக்குக் கூறும் யோசனை இதுதான்: அதாவது, நமது மூதாதையர்கள் நமக்கு விட்டுச் சென்றுள்ளதையெல்லாம் நீங்கள் அறிந்து, அந்த மகத்தான பரம்பரைச் சொத்

துக்களைச் சுற்றி வளர்ந்து தீங்கு விளைவிக்கும் காளான்களையெல்லாம் அகற்றும் போராட்டத்தில் ஈடுபடுவீர்களாயின், உங்களுடைய போராட்டம் பிரமாதமாக வெற்றி பெறும். நான் கூறத் துணிந்த இந்த யோசனையை நீங்கள் ஒப்புக்கொண்டால், மதச் சார்பு சம்பந்தப்பட்ட வரையில் பிராம்மண—பிராம்மணரல்லாத பிரச்னை தீருவதற்கான வழியும் எளிதாகிவிடும்.

நான் ஒரு பிராம்மணரல்லாதான் என்ற முறையில், ஒரு பிராம்மணரல்லாதாருக்கு எவ்வளவு இயலுமோ அவ்வளவுக்குப் பிராம்மணீயத்தைப் பரிசுத்தமாக்க நான் முயற்சிப்பேனேயன்றி, அதை அழித்துவிட முயற்சிக்கமாட்டேன். பிராம்மணரை, தாம் உயர்வானவர் என்று மமதை கொள்ளும் ஸ்தானத்திலிருந்தோ, லாபம் சம்பாதிக்கும் துறைகளிலிருந்தோ அப்புறப்படுத்திவிடுவேன். ஒரு பிராம்மணர், எந்த விநாடி லாபமடிக்கும் காரியத்தில் ஈடுபடுகிறாரோ, அதே விநாடி அவர் ஒரு பிராம்மணர் என்ற தன்மையை இழந்துவிடுகிறார். ஆனால், நான் எங்கே கண்டாலும் பிராம்மணரது மகத்தான கற்றறிவுக்கு யாதொரு தீங்கும் இழைக்கமாட்டேன். பிராம்மணர், தம்முடைய கற்றறிவு காரணமாக உயர்ந்தவர் என்று உரிமை கொண்டாடாமல் இருக்கலாம். எனினும், கற்றறிவு எங்கிருந்தாலும் அது மரியாதைக்கும் மதிப்புக்கும் உரியதாகும். எனவே, அவருக்கு நான் மரியாதை காட்டத் தவறக்கூடாது. எனினும், இது போன்ற பெரிய ஜனக்கூட்டத்தில் இவ்விஷயமாக இதைக் காட்டிலும் அதிக ஆழ்ந்த ஆராய்ச்சியில் இறங்கிவிடக்கூடாது.

அது எப்படியாயினும், நான் இறுதியில் ஒரு சர்வ நிவாரணியின் உதவியையே நாடவேண்டும். வாழ்க்கையின் எல்லா நோய்களுக்கும் அது உற்ற மருந்தென நினைக்கிறேன். அது என்னவெனில், நாம் எத்தகைய போராட்டத்தில் ஈடுபட்டாலும், தூய்மையாகவும் நேர்மையாகவும் இருக்கவேண்டும்; சத்தியத்திலிருந்தும், அகிம்சையிலிருந்தும் அணுவளவும் வழுவக்கூடாது. இந்த இரண்டு தண்டவாளங்களின் மீது நாம் நமது வண்டியைச் செலுத்தி வருவோமாயின், நாம் ஆயிரம் தவறுகள் செய்தாலும்கூட நமது போராட்டம் தூய்மையாகவும் எளிதாகவும் இருக்கும். தண்டவாளங்களை விட்டிறங்கிய ரெயில் வண்டி பெரும் விபத்துக்கு உள்ளாவது போல், சத்தியம், அகிம்சை என்ற இரு தண்டவாளங்களிலிருந்து வழுவிய நாம் பெரும் விபத்துக்கு உள்ளாவோம். சத்தியத்தைக் கடைப்பிடிப்பவரும், தமது விரோதிக்குத் தீங்கு நினைக்காதவருமான ஒருவர், தமது விரோதிகளுக்கு எதிராகக் கூறப்படும் குற்றச்சாட்டுகளைக்கூட நம்புவதற்குத் தயங்குவார். அவர் எப்போதும் தமது விரோதிகளின் கருத்துக்களையும் அறிந்துகொள்ள முயற்சிப்பார். எப்போதும் மனத்தில் விருப்பு வெறுப்பின்றி அவரது எதிரிகளுக்குத் தொண்டு புரிவதற்கு ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் நாடுவார்.

இந்த விதியை நான் தென்னுப்பிரிக்காவில் எனக்குச் சம்பந்தம் உள்ள ஆங்கிலேயர்கள், பொதுவாக ஐரோப்பியர்கள் விஷயத்திலும் இங்கேயும் அனுஷ்டிக்க முயற்சித்து வந்துள்ளேன். எனது முயற்சி ஓரளவு வெற்றி பெருமலும் இருந்ததில்லை. அப்படியிருக்க, இந்த விதியை நாம் நமது வீடுகளிலும், சுற்றத்தாரிடத்திலும், குடும்ப விவகாரங்களிலும், நமது சொந்த மக்களிடத்திலும் எவ்வளவு அதிகமாக அனுஷ்டிக்க வேண்டியது அவசியமாகும்?

—'எங் இந்தியா'–29—9—1927

# 7

# ஹிந்து மதத்தின் வெற்றி ரகசியம்

ஹிந்து மதத்தைப் பற்றி எனக்குத் தெரிந்தவரையில் வர்ணம் என்பதன் பொருள், நம்ப முடியாதவாறு மிகச் சாதாரணமானது. பரம்பரையாகத் தொன்று தொட்டு வரும் நமது மூதாதையர்களின் தொழில்களை நாம் எல்லோரும் பின்பற்ற வேண்டும் என்பதுதான் அதன் அர்த்தமாகும். ஆனால், தொன்று தொட்டு வரும் தொழில் மூலாதாரமான தருமத்துக்கு முரணுக இருக்கக்கூடாது; ஜீவனத்துக்கு மாத்திரமே போதிய அளவு சம்பாதிக்கும் நோக்கத்துடன் இருக்க வேண்டும். எல்லா மதங்களிலும் உள்ள மனிதனைப் பற்றிய வருணனையை நாம் ஒப்புக் கொள்ளுவதாயின், அதுதான் வாழ்க்கையின் நியதி என்று நான் கருதுகிறேன்.

கடவுள் சிருஷ்டித்த ஜந்துக்களிலெல்லாம் மனிதர் ஒருவர் தான் சிருஷ்டிகர்த்தாவை அறிந்துகொள்ளுவதற்காகச் சிருஷ்டிக்கப்பட்ட ஜந்துவாக இருக்கிருர். எனவே, வாழ்க்கையில் மனிதரின் லட்சியம், தினந்தோறும் செல்வத்தையோ, ஸ்தூல உடைமைகளையோ தேடிக் குவிப்பதல்ல. ஆனல், தம்மைச் சிருஷ்டித்தவரை நாடி நாளுக்கு நாள் அவர் அருகில் செல்லுவதுதான், மனிதர் செய்யவேண்டிய முக்கிய தொழிலாகும். இதிலிருந்துதான் பண்டைய ரிஷிகள் நமது வாழ்வின் இந்த நியதியைக் கண்டு பிடித்தார்கள். நாமெல்லோரும் வர்ணத்தின் இந்த நியதியைப் பின்பற்றி நடப்போமாயின், நாம் நமது ஸ்தூல ஆசைகளுக்கு வரம்பு ஏற்படுத்திக் கொள்ளுவோம் என்பதை நீங்கள் உணர்வீர்கள். பின்னர் எதனல், எதன் மூலம் நாம் கடவுளை அறிய முடியுமோ, அந்தப் பரந்த துறைகளை ஆராய்ச்சி செய்வதில் நமது சக்தியை இஷ்டப்படி உபயோகிக்க முடியும். அப்படியாயின், இன்று உலகம் முழுவதும் நம் கவனத்தையெல்லாம் ஆட்

கொண்டு இயங்கி வரும் அலுவல்களில் பத்தில் ஒன்பது மடங்கு வழக்கத்தில் இல்லாமல் ஒழிந்துவிடும். எனவே, இன்று அனுஷ்டிக்கப்படும் வர்ணமானது, நான் உங்களுக்கு விவரித்துக் கூறிய வர்ணத்தின் நேர்மாறுபாடான கூத்து என்று நீங்கள் ஐயமின்றிக் கூறலாம். ஆம், இன்றைய வர்ணத்துக்கும் பண்டைய வர்ணத்துக்கும் சம்பந்தமே இல்லையென்பது நிச்சயம்.

எனினும் அசத்தியம், சத்தியம் போல் டம்பமாகக் காட்சியளிக்கிறது என்பதற்காக நாம் சத்தியத்தை வெறுப்பதில்லை. ஆனால், சத்தியத்திலிருந்து அசத்தியத்தைச் சலித்து எறிந்து விட்டு, சத்தியத்தையே உறுதியுடன் கடைப்பிடிக்கிறோம். அது போலவே, வர்ணம் என்ற பெயரில் உலவும் வர்ணத்தின் உருமாற்றத்தை அழித்துவிட்டு, ஹிந்து சமூகம் இன்று தாழ்ந்துள்ள இழிநிலையைப் பரிசுத்தமாக்க முடியும்.

ஆச்சிரமம் என்பது, நான் உங்களுக்குக் கூறியதைத் தொடர்ந்து வரும் அவசியமான ஒரு முறைமையாகும். இன்று வர்ணம் சிதைந்து உருமாறியுள்ளதெனில், ஆச்சிரமம் அடியோடு மறைந்தே போய்விட்டது. ஆச்சிரமம், ஒருவருடைய வாழ்க்கையின் நாலு படிகளையே, பகுதிகளையே குறிப்பிடுகிறது. எனக்கு அன்புடன் பண முடிப்புகள் அளித்த மாணவர்கள்—கல்லூரி மாணவர்களும், சட்டக் கல்லூரி மாணவர்களும்—முதலாவது ஆச்சிரமத்தின் விதிகளின்படி தாங்கள் வாழ்ந்து வருவதாகவும் அவர்கள் எண்ணத்திலும், பேச்சிலும், செய்கையிலும் பிரம்மச்சாரிகளாக இருந்து வருவதாகவும் எனக்கு உறுதி கூறத் தகுதியுடையவர்களாக இருக்க வேண்டும். இதுதான் என் விருப்பம். குறைந்த பட்சம் 25 வயது வரையிலாவது பிரம்மச்சாரியாக வாழ்க்கை நடத்துவோரே, இரண்டாவது ஆச்சிரமத்தில், அதாவது கிருஹஸ்தாச்சிரமத்தில் பிரவேசிக்க உரிமையுடையவர்களாவர் என்று பிரம்மச்சரிய ஆச்சிரமம் கட்டளையிடுகிறது. மனிதனை மேலும் மேலும் சிறந்தவனாகச் செய்து, சிருஷ்டிகர்த்தாவின் அருகில் கொண்டு போவதே ஹிந்து மதத்தின் முழு தத்துவமாகும். அதனாலேயே ரிஷிகள் கிருஹஸ்தாச்சிரமப் பகுதிக்கும் எல்லையை நிர்ணயித்து, வானப்ரஸ்த, சன்னியாச ஆச்சிரமங்களையும் அடையவேண்டுமென்று விதித்திருக்கிறார்கள். இன்று இந்தியா முழுவதும்தேடித் தேடிப் பார்த்தாலும் ஓர் உண்மையான பிரம்மச்சாரியையோ, ஓர் உண்மையான கிருஹஸ்தரையோ கண்டுபிடிக்க முடியாது. இந்த நிலையில் ஓர் உண்மையான வானப்ரஸ்தரையும், ஓர் உண்மையான சன்னியாசியையும் கண்டுபிடிக்க முடியும் என்ற பேச்சிற்கே இடமில்லை.

நம்முடைய விவேகத்தைப் பெரிதாக நினைத்துக்கொண்டிருக்கும் நாம், இஷ்டப்பட்டால் இந்த வாழ்க்கை நியதியை எள்ளி நகையாடலாம். எனினும், ஹிந்து மதத்தினுடைய மகத்தான வெற்றியின் ரகசியம் இதுதான் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. பிரபல எகிப்திய, அசைரிய, பாபிலோ

னிய நாகரிகங்கள் செத்துவிட்டன. ஆனல், ஹிந்து நாகரிகம் அழிவின்றி இருந்து வருகிறது. கிறிஸ்தவ நாகரிகம் தோன்றி இரண்டாயிரம் ஆண்டுகள்தான் ஆகின்றன. இஸ்லாமிய நாகரிகம் நேற்று உண்டானதாகும். இவ்விரண்டும் மகத்தான நாகரிகங்களெனினும், அவை இன்னும் உருவாகிக்கொண்டிருக்கின்றன என்பதே என் தாழ்மையான அபிப்பிராயம். கிறிஸ்தவ ஐரோப்பா கிறிஸ்தவ தருமத்தைப் பின்பற்ருமல் இருளில் தடுமாறிக் கொண்டிருக்கிறது. அப்படியே இஸ்லாமும் அதன் மகத்தான ரகசியத்தைத் தேடிக்கொண்டிருக்கிறது. இந்த மூன்று மாபெரும் மதங்களுக்குள் இன்று போட்டியிருந்து வருகிறது. அந்தப் போட்டி ஒருபுறம் நன்மை பயக்கக்கூடியதாக இருக்கிறது. மற்ருெருபுறம், மிகுந்த வெறுப்பையும் விபரீதத்தையும் உண்டாக்கும் போட்டியாகவும் இருக்கிறது.

வருடங்கள் செல்லச் செல்ல, வர்ணம் மனிதனுடைய வாழ்க்கையின் நியதி என்ற உறுதியானது என் மனத்தில் நாளுக்கு நாள் வளர்ச்சி பெற்று வருகிறது. ஹிந்து மதத்துக்கு அது எவ்வளவு அவசியமோ, ஹிந்து மதத்துக்கு அது எவ்விதம் பாதுகாப்பாக இருந்துளதோ, அது போலவே கிறிஸ்தவ, இஸ்லாமிய மதங்களுக்கும் அதுபோன்ற நியதி அவசியமென்ற உறுதியும் வளர்ச்சி பெற்றுவருகிறது. எனவே, வர்ணுச்சிரமம் ஹிந்து மதத்தின் சாபக்கேடு என்பதை நம்ப நான் மறுக்கிறேன். ஆனல், தென்னிந்தியாவில் சில ஹிந்துக்கள் அதை ஒரு சாபக்கேடு என்று கூறுவது சம்பிரதாயமாக இருந்து வருகிறது.

எனினும், இன்று நம்மைச் சுற்றி நாம் காணும் வர்ணுச்சிரமத்தின் பயங்கரமான உருமாற்றத்தை நீங்களும் நானும் ஒரு விநாடிகூடச் சகித்துக்கொள்ள வேண்டுமென்ருே, அல்லது அவ்விஷயத்தில் பொறுமை காட்ட வேண்டுமென்ருே நான் கூறவில்லை. வர்ணுச்சிரமத்துக்கும் சாதிக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. சாதி, ஹிந்துக்களின் வளர்ச்சிக்குத் தடையாக இருந்து வருகிறதென்பதில் சிறிதும் சந்தேகமில்லை. தீண்டாமை, நான் ஏற்கெனவே குறிப்பிட்டிருப்பது போல, வர்ணுச்சிரமத்தின் மீது படர்ந்துள்ள புல்லுருவி ஆகும். கோதுமை வயல்களிலோ அல்லது நெல் வயல்களிலோ நாம் பார்க்கும் பயனற்ற பூண்டுகளைக் களைந்தெறிவது போல் வர்ணுச்சிரமத்தின் மீது வளர்ந்துள்ள களைகளையும் பிடுங்கி எறிய வேண்டும்.

வர்ணத்தின் இந்தத் தத்துவத்தில் உயர்வு, தாழ்வு எண்ணத்துக்கு இடமேயில்லை. நான் மீண்டும் ஹிந்து தத்துவத்தின் கருத்தைச் சரியாகக் கூறுவதாயின், எல்லா ஜீவனும் சமமாகும், ஒன்ருகும். எனவே, 'மற்ற மூன்று வர்ணங்களைவிட நான் உயர்ந்தவன்' என்று பிராம்மணர் கூறினல், அது இறுமாப்புத் துணிச்சலேயன்றி வேறல்ல. பண்டைய பிராம்மணர்கள் அவ்விதம் சொல்லவில்லை. அவர்களுக்கு எல்லோரும் தாங்களாகவே மரியாதை காட்டினர்கள். அவர்கள், தாங்கள் உயர்ந்தவர்கள்

என்று சொல்லிக் கொண்டதற்காக அல்ல; அவர்கள், சிறிதளவு கைம்மாறும் எதிர்பாராமல் பூரண தொண்டு புரியும் உரிமை கோரியதற்காகவே அவர்களுக்கு மரியாதை காட்டினார்கள். இன்று தாங்கள் பிராம்மணரின் கடமைகளைச் செய்வதாக அகந்தை கொண்டு மதத்தை உருக்குலைக்கும் புரோகிதர்கள், ஹிந்து மதத்தையோ அல்லது பிராம்மணீயத்தையோ பாதுகாக்கும் காவலர்கள் அல்ல. மனமாரத் தெரிந்தோ தெரியாமலோ, அவர்கள் தாங்கள் உட்கார்ந்திருக்கும் மரத்தின் வேரையே கோடரியால் வெட்டி வருகிறார்கள். சாஸ்திரங்கள் தீண்டாமையை விதித்திருக்கின்றன என்றும், தீட்டு என்றும், தூரத்தில் நிற்க வேண்டுமென்றும் அவர்கள் உங்களுக்குக் கூறும்போது, அவர்கள் தங்கள் கொள்கையைப் பொய்யாக்கி வருகிறார்கள் என்றும், ஹிந்து மதத் தத்துவத்திற்கு தவறான வியாக்கியானம் செய்கிறார்கள் என்றும் சொல்ல நான் தயங்க மாட்டேன்.

எனவே, இங்கே என் பிரசங்கத்தைக் கேட்டுக்கொண்டிருக்கும் ஹிந்துக்களான நீங்கள் ஊக்கமும் உற்சாகமும் கொண்டு, இந்தச் சாபக்கேட்டை ஒழிக்கவேண்டியது முற்றிலும் எவ்வளவு அவசியமென்பதை இப்போது உணர்ந்துகொள்ளுவீர்கள். நீங்கள் ஒரு பண்டைய ஹிந்து சமஸ்தானத்தைச் சேர்ந்தவர்கள் அல்லவா? எனவே, இந்தச் சீர்திருத்தத்திற்கு வழிகாட்டுவதில் நீங்கள் பெருமை கொள்ள வேண்டும். நீங்கள் அந்தரங்க சுத்தியுடனும் ஊக்கத்துடனும் இந்தச் சீர்திருத்தத்தைக் கைக்கொள்ள வேண்டும். உங்களைச் சுற்றிலுமுள்ள சூழ்நிலையை நான் அறிந்த வரையில், அவ்விதம் கைக்கொள்ளுவதற்கு இது உங்களுக்குச் சுப வேளை என்பது நிச்சயம்.

[இது திருவனந்தபுரத்தில் நிகழ்த்திய பிரசங்கத்திலிருந்து எடுத்தது]

—'எங் இந்தியா' - 20—10—1927

# 8

# உடல் உறுப்புக்கள் யாவும் சமமே

**கேள்வி:** வர்ண தருமத்தைத் தாங்கள் வற்புறுத்துவதை எங்களால் அறிந்து கொள்ள முடியவில்லை. தற்போதைய சாதி முறை நியாயமானதென்று நீங்கள் நிரூபிக்க முடியுமா? வர்ணத்தைப் பற்றி உங்களுடைய விளக்கம் என்ன?

**பதில்:** மனிதர் எந்தத் தொழிலில் ஈடுபடுவதென்பதை முன்கூட்டியே நிர்ணயிப்பதுதான் வர்ணத்தின் அர்த்தமாகும். ஒரு மனிதர், தம்முடைய ஜீவனத்துக்குத் தமது முன்னோர்

களின் தொழிலைப் பின்பற்ற வேண்டுமென்பது வர்ணத்தின் நியதியாகும். ஒவ்வொருவரும் இயற்கையாக அவரது தந்தையின் போக்கையே பின்பற்றுகிறார், அல்லது தந்தையின் தொழிலையே தேர்ந்தெடுத்துக் கொள்ளுகிறார். எனவே, வர்ணம் என்பது ஒரு விதத்தில் பரம்பரை நியதியே. அது ஹிந்துக்கள் மீது திணிக்கப்பட்ட ஒரு விஷயமல்ல; அவர்களுடைய க்ஷேமத்தைப் பாதுகாக்கும் தருமகர்த்தாக்களான மனிதர்களால் அவர்களுக்காகக் கண்டுபிடித்து அளிக்கப்பட்ட நியதியே. எனினும், அது மனிதர் கண்டு பிடித்ததல்ல; யாராலும் மாற்ற முடியாத இயற்கை நியதியாகும். நியூட்டனின் ஆகர்ஷண சக்தி விதியைப் போல், அந்த நியதி என்றென்றும் இருந்து கொண்டும், இயங்கிக் கொண்டும் இருக்கிறது. நியூட்டன் கண்டுபிடிப்பதற்கு முன்னரும் ஆகர்ஷண சக்தி இருந்தது போல, வர்ண தரும விதியும் இருந்திருக்கிறது. ஆனால், அந்த நியதியைக் கண்டுபிடிக்கும் வாய்ப்பு ஹிந்துக்களுக்குத்தான் கிடைத்தது. இயற்கையின் சில விதிகளைக் கண்டுபிடித்து உபயோகித்ததன் மூலம், மேனாட்டு மக்கள் தங்களுடைய ஸ்தூல உடைமைகளை எளிதாக அதிகப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். அதுபோலவே ஹிந்துக்கள், எதிர்க்க முடியாத இந்தச் சமுதாயத் தன்மையைக் கண்டுபிடித்ததன் மூலம். ஆன்மிகத் துறையில் உலகத்தில் உள்ள வேறெந்த நாடும் பெற முடியாத வெற்றி பெற்றிருக்கிறார்கள்.

வர்ணத்துக்கும் சாதிக்கும் சம்பந்தமேயில்லை. வர்ணம் என்ற மாறு வேஷத்தில் இருக்கும் சாதி அரக்கனை வீழ்த்துங்கள். வர்ணத்தின் இந்த உருவ மாறுதலே ஹிந்து மதத்தையும் இந்தியாவையும் இழிவுபடுத்தியிருக்கிறது. வர்ண நியதியை நாம் பின்பற்றத் தவறியதே, நம்முடைய பொருளாதார, ஆன்மிக அழிவுக்குப் பெரிதும் பொறுப்பாகும். அது மக்களின் வேலையில்லாக் கஷ்டத்துக்கும் வறுமைக்கும் ஒரு காரணம். அதுதான் தீண்டாமைக்கும், நமது மதத்தில் ஏற்பட்ட குற்றம் குறைகளுக்கும் காரணம்.

ஆதியில் ஏற்பட்ட நியதியானது, தற்போது அரக்க உருவத்திற்கும் அரக்கத்தனமான பழக்க வழக்கங்களுக்கும் இலக்காகியிருக்கிறது. ஆனால், அவற்றை எதிர்த்துப் போராடும் நாம், ஆதி நியதியையே எதிர்க்க முற்பட்டு விடக்கூடாது.

கே: வர்ணங்களில் எத்தனை இருக்கின்றன?

ப: நான்கு வர்ணங்கள் இருக்கின்றன. இருந்தாலும் அது வர்ணத்தில் உள்ளடங்கிய கண்டிப்பான பிரிவினையல்ல. ரிஷிகள் இடைவிடாது பரிசோதனையும் ஆராய்ச்சியும் செய்து இந்த நான்கு விதமான பிரிவை, அதாவது ஜீவனத்

திற்காகச் சம்பாதிக்கும் நான்கு வழிகளைத் தீர்மானித்தார்கள்.

கே: எனவே, எத்தனை தொழில்கள் இருக்கின்றனவோ அத்தனை வர்ணங்கள் இருக்கின்றன என்பது தர்க்கரீதியாகப் பொருத்தமானதுதானே?

ப: அவ்வாறு இருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. பல்வேறு தொழில்களையும் நான்கு முக்கிய பிரிவுகளின் கீழ்க்கொண்டு வருவது எளிதாகும். அவையாவன: போதித்தல், பாதுகாப்பு அளித்தல், செல்வம் உற்பத்தி செய்தல், சரீரத் தொண்டு புரிதல். எல்லா ஆச்சிரமங்களுக்குள்ளும் கிரஹஸ்தாச்சிரமம் எவ்வாறு அதிக ஆதிக்கம் வகிக்கிறதோ, அது போலவே உலகம் சம்பந்தப்பட்ட வரையில் செல்வம் உற்பத்தி செய்வதே ஆதிக்கம் வகிக்கும் தொழிலாக இருக்கிறது. வர்ணங்களுள் வைசியர்தான் முக்கிய ஸ்தானம் வகிக்கிறார். செல்வமும் சொத்தும் இராவிடில் பாதுகாப்பு அளிப்பவர் தேவையில்லை. மூன்றாவது பிரிவு காரணமாக, முதல் இரண்டு பிரிவுகளும் நாலாவது பிரிவும் தேவையாக இருக்கின்றன. மிகச் சிலரே முதல் பிரிவைச் சேர்ந்தவர்களாக இருப்பார்கள். அதற்குக் காரணம், இதற்குக் கடுமையான ஒழுங்கு முறை தேவையாக இருப்பதே. ஒழுங்காகவும் அமைதியாகவும் நிர்வகிக்கப்பட்டு வரும் சமுதாயத்தில், இரண்டாவது பிரிவினரும் சிலரே இருக்க முடியும். நாலாவது பிரிவினரும் அப்படித்தான்.

கே: பிறப்பால் தனக்குச் சொந்தமில்லாத ஒரு தொழிலை ஒருவர் அனுஷ்டித்தால், அவர் எந்த வர்ணத்தைச் சேர்ந்தவராகிறார்?

ப: ஹிந்து மத நம்பிக்கைக்கு இணங்க, அவர் எந்த வர்ணத்தில் பிறந்தாரோ, அந்த வர்ணத்தையே சேர்ந்தவராகிறார். எனினும், அந்த வர்ண விதிகளின்படி அவர் நடக்காததால் அவர் தனக்குத் தானே கேடு விளைவித்துக் கொண்டு, இழிநிலையை அடைகிறார்—ஒரு பதிதராகிவிடுகிறார்.

கே: பிறப்பால் பிராம்மணர் செய்யவேண்டிய ஒரு காரியத்தை ஒரு சூத்திரர் செய்கிறார். அதனால், அவர் பதிதராகிவிடுகிறாரா?

ப: அறிவைப் பெற ஒரு பிராம்மணருக்கு எவ்வளவு உரிமையுண்டோ அவ்வளவு உரிமை ஒரு சூத்திரருக்கும் உண்டு. எனினும், ஒரு சூத்திரர் போதிப்பதன் மூலம் தமது ஜீவனத்திற்குச் சம்பாதிக்க முயற்சிப்பாராயின், தமது நிலையிலிருந்து வழுவி விடுகிறார். பண்டைய காலத்தில், சுயேச்சையான வர்த்தகச்சங்கங்கள் இருந்தன. அவை, அத்தொழிலைச்

சேர்ந்த சகலருக்கும் ஆதரவளிக்க வேண்டுமென்பது புத்தகத்தில் எழுதப்படாத வாய்மொழி விதியாக இருந்தது. நூறு ஆண்டுகளுக்கு முன் ஒரு மரத்தச்சரின் மகன், தான் ஒரு வக்கீலாக வேண்டுமென்று ஒருபோதும் விரும்பியதில்லை. ஆனால், இன்று ஒரு தச்சரின் மகன் அவ்விதம் விரும்புகிறார். ஏனெனில், பணம் திருடுவதற்கு அந்தத் தொழில்தான் மிக்க எளிதான வழி என்பதை அவர் அறிந்துகொண்டிருக்கிறார், தம்முடைய மூளையை உபயோகிப்பதற்காக ரூ. 15,000 கட்டணம் விதிக்க வேண்டுமென்று வக்கீல் எண்ணுகிறார். *ஹக்கீம் சாகிப்பைப் போன்ற ஒரு வைத்தியர், வைத்திய சம்பந்தமான ஆலோசனை கூறுவதற்காக ஒரு நாளுக்கு ரூ. 1,000 கட்டணம் விதிக்க வேண்டுமென்று நினைக்கிறார் !

கே: ஆனால், ஒரு மனிதர் தன் மனத்துக்கு இசைந்த ஒரு தொழிலைப் பின்பற்றக் கூடாதா?

ப: அவர் மனத்துக்கு இசைந்த ஒரே தொழில் அவரது முன்னோர்களின் தொழிலாகவே இருக்க வேண்டும். முன்னோர்களின் தொழிலை எடுத்துக்கொள்ளுவதில் தவறு எதுவுமில்லை; அதற்கு மாறாக அவ்விதம் எடுத்துக்கொள்ளுவதுதான் உயர்வாகும். ஆனால், இன்று நாம் இயற்கைக்கு மாறான விபரீதங்களையே காண்கிறோம். அதனால்தான் சமூகத்தில் கொடுமையும் பிளவும் தாண்டவமாடுகின்றன. மேலெழுந்தவாரியான உதாரணங்களைக் கொண்டு நம்மை நாமே குழப்பிக்கொள்ளக்கூடாது. ஆயிரக்கணக்கான தச்சர்களின் பிள்ளைகள் தங்கள் முன்னோர்களின் தொழிலையே பின்பற்றி வருகிறார்கள். ஒரு நூறு தச்சர்களின் பிள்ளைகள் கூட வக்கீல்களாக இருக்கவில்லை. பண்டைக் காலத்தில், பிறர் தொழில்களை ஆக்கிரமித்துக் கொண்டு செல்வம் திரட்டும் பேராசை இருந்ததில்லை. உதாரணமாக, ஸிஸரோவின் காலத்தில் வக்கீல் தொழில் பணம் திரட்டும் தொழிலாக இருக்கவில்லை; ஒரு கௌரவத் தொழிலாகவே இருந்தது. சாமர்த்தியசாலியான எந்தத் தச்சரும் பணத்துக்காக அல்ல, பொது ஜனத் தொண்டிற்காக வக்கீலாவது முற்றிலும் நியாயமாக இருக்கும். பின்னர்தான் பெயருக்கும் பணத்துக்கும் பேராசை வந்து புகுந்துகொண்டது. அக்காலத்தில் வைத்தியர்கள் சமூகத்துக்குத் தொண்டு புரிந்தார்கள்; சமூகம் கொடுத்த ஊதியத்தைக் கொண்டு திருப்தியடைந்தார்கள். ஆனால், இப்போது அவர்கள் வியாபாரிகளாகி, சமூகத்துக்கு ஆபத்தாகக்கூட இருந்து வருகிறார்கள். பொது மக்களுக்கு உதவி புரிய வேண்டுமென்ற நோக்கம் நிலவிய போது, வைத்திய, வக்கீல் தொழில்கள் தாராள சித்த

---

* ஹக்கீம் அஜ்மல்கான் ஒரு மாபெரும் தேசீய முஸ்லிமாவர். அவர் 1921-ல் அகமதாபாத்தில் நடந்த இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபைக்கு அக்கிராசனராக இருந்தார்.

முள்ள தொழில்கள் என்று கூறப்பட்டு வந்தது நியாயமே யாகும்.

கே: சமுதாயம் குற்றம் குறையற்ற உன்னத நிலையிலிருக் கும்போது அவையெல்லாம் சரிதான். ஆனால், இன்று ஒவ் வொருவரும் பணம் திரட்டும் தொழில்களையே நாடிக்கொண் டிருக்கையில், தாங்கள் என்ன செய்ய உத்தேசிக்கிறீர்கள்?

ப: அவ்விதம் கூறுவது, எல்லோர் மீதும் ஒரேயடியாய்ப் பொதுவாகக் குற்றஞ்சாட்டுவதாகும். கல்விச்சாலைகளிலும் கல்லூரிகளிலும் வாசிக்கும் மாணவர்களின் தொகையைச் சேர்த்துக் கூட்டுங்கள். கல்வித் தேர்ச்சி பெற்ற தொழில் களை நாடும் மாணவர்களின் சதவிகிதம் எவ்வளவு என் பதை நிர்ணயம் செய்யுங்கள். வழிப்பறிக் கொள்ளையில் ஒவ் வொருவரும் ஈடுபடுவது முடியாத காரியம். அவ்விதம் ஈடுபட வேண்டுமென்ற கிளர்ச்சியே தற்போதைய நிலை என்று தோன்றுகிறது. எத்தனை பேர் வக்கீல்களாகவும், சர்க்கார் ஊழியர்களாகவும் வர முடியும்? செல்வம் சேர்க் கும் தொழில்களில் நியாயமாக ஈடுபட வேண்டியவர்கள் வைசியர்களாவர். அவர்களின் தொழில்கூட வழிப்பற்றிக் கொள்ளையாகிவிட்டால், அதை வெறுக்கும்படி நேருகிறது. லட்சாதிபதிகள் லட்சக்கணக்கில் இருக்க முடியாதல் லவா?

கே: தமிழ்நாடு சம்பந்தப்பட்ட வரையில், எல்லாப் பிராம்மண ரல்லாதாரும் பிறப்பினால் தங்களுக்கு ஏற்படாத தொழில் களிலேயே ஈடுபட விரும்புகிறார்கள்.

ப: 2 கோடியே இருபது லட்சம் தமிழர்களின் சார்பில் பேச உங்களுக்குள்ள உரிமையை நான் நிராகரிக்கிறேன். இந்தப் பிரச்னை தீர நான் உங்களுக்கு ஒரு விதி கூறுகிறேன்: மற்ற ஒவ்வொருவரும் எந்த நிலையில் இருக்க முடியாதோ, அந்த நிலையில் இருக்க நாம் விரும்பாமல் இருப்போமாக. நான் விளக் கிக் கூறியுள்ள வர்ணத்தின் அடிப்படையைக் கொண்டு மாத்திரமே நீங்கள் இந்த விதியை முற்றிலும் அறிந்து கொள்ள முடியும்.

கே: வர்ண நியதி, நம்முடைய லோகாயதமான ஆசையை அடக் கிக் கட்டுப்படுத்துகிறது என்று நீங்கள் கூறி வந்திருக்கி றீர்கள். அது எப்படி?

ப: நான் என் தந்தையின் தொழிலைப் பின்பற்றுமிடத்து அதைக் கற்றுக் கொள்ள நான் ஒரு பள்ளிக்கூடத்திற்குக் கூடச் செல்ல வேண்டிய அவசியமில்லை. அத்தொழிலால் என் சம்பாத்தியம் அல்லது ஜீவனம் உறுதிப்பட்டு விடுவ தால், என் மனத்தின் சக்தியை ஆன்மிகத் துறைகளில் உபயோகிப்பதற்கு வழி ஏற்படுகிறது. சந்தோஷவாழ்வுக்

கும் உண்மையான மத அனுஷ்டானங்களுக்கும் வர்ணம் சிறந்த உத்தரவாதம் அளிக்கும் முறையாகும். மற்றத் துறைகளில் என் மனச் சக்தியை நான் ஒன்றித்துவிட்டால், நான் என் ஆன்மானுபவ சக்தியை விற்றவனாகிறேன்; அல்லது அற்பமான ஸ்தூல ஆசைகளுக்காக எனது ஆன்மாவையே விற்றவனாகிறேன்.

கே: சக்தியைச் சிதறவிடாமல் ஆன்மிகத் துறைகளில் உபயோகிக்க வேண்டுமென்பது பற்றி நீங்கள் பிரஸ்தாபிக்கிறீர்கள். இன்று தங்கள் முன்னோர்களின் தொழில்களைப் பின்பற்றுவோருக்கு ஆன்மிகப் பண்பாடு அறவே இல்லை—அவர்களுடைய வர்ணமே, அவர்களை அந்தப் பண்பாட்டிற்குத் தகுதியற்றவர்களாகச் செய்திருக்கிறது.

ப: வர்ணம் பற்றி வக்கிரமான மனோபாவங்களுடன் நாம் பேசிக்கொண்டிருக்கிறோம். வர்ணமானது உண்மையில் அனுஷ்டிக்கப்பட்டபோது, ஆன்மிகப் பயிற்சிக்குப் போதிய ஓய்வு நேரம் நமக்கு இருந்தது. இப்போதுகூட நீங்கள் தொலைவிலுள்ள கிராமங்களுக்குச் சென்று, அவர்களுடைய ஆன்மிகப் பண்பாட்டை நகரங்களில் வாழும் மக்களின் ஆன்மிகப் பண்பாட்டுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். இவர்களுக்கு (நகரங்களில் வாழ்வோருக்கு) தன்னடக்கம் என்பதே தெரியாது.

எனினும், நீங்கள் காலத்தின் கோளாறைக் கண்டுபிடித்துக் காட்டியிருக்கிறீர்கள். மற்றவர்களால் எந்த நிலையில் இருக்க முடியவில்லையோ, அந்த நிலையில் இருக்க நாம் முயற்சி செய்யவேண்டாம். விரும்பும் ஒவ்வொருவரும் கீதையை வாசிப்பது சாத்தியமாக இருக்க வேண்டும். அவ்விதம் இராவிடில், நான்கூடக் கீதையைக் கற்கமாட்டேன். அதனால்தான், பணம் திரட்டுவதற்காக ஆங்கிலம் கற்பதை எதிர்த்து என் முழு ஆன்மாவும் திரண்டெழுகிறது. இன்று நம்மில் ஒரு சிறு பகுதியினருக்குக் கிடைக்கும் ஓய்வு நேரம் கோடிக்கணக்கானவர்களுக்கும் கிடைக்கும்படி செய்ய வேண்டும். அதற்கேற்ப, நாம் நமது வாழ்க்கை முறைகளை மாற்றி ஒழுங்குபடுத்த வேண்டும். வர்ண தருமத்தைப் பின்பற்றினாலன்றி, அவ்விதம் ஒழுங்குபடுத்துவது முடியாத காரியம்.

கே: அதே கேள்விக்குத் திரும்பத் திரும்ப நாங்கள் போவதைக் குறித்து, நீங்கள் எங்களை மன்னிக்க வேண்டும். அதை நாங்கள் சரிவரப் புரிந்துகொள்ள விரும்புகிறோம். வெவ்வேறு சமயங்களில் வெவ்வேறு தொழில்களை நடத்தும் ஒரு மனிதரின் வர்ணம் என்ன?

ப: அவர் தமது தந்தையின் தொழிலில் ஈடுபட்டுத் தமது ஜீவனத்துக்குச் சம்பாதித்து வரும் வரையில் அவரது வர்ணத்தில் எவ்வித வேற்றுமையும் ஏற்படுவதற்கில்லை. தொண்டில்

ஈடுபாடு காரணமாக அவர் தாம் விரும்பும் எந்தத் தொழிலேயும் செய்யலாம்.* எனினும், செல்வம் திரட்டுவதற்காக அப்போதைக்கப்போது தொழிலே மாற்றிக்கொள்ளும் ஒருவர் தம்மை இழிவுபடுத்திக் கொள்ளுவதுடன், வர்ணத்திலிருந்தும் வீழ்ச்சியடைந்தவராகிருர்.

கே: ஒரு சூத்திரருக்குப் பிராம்மணரின் சகல குண விசேஷங்களும் இருக்கலாம். அப்படியிருந்தும் அவரைப் பிராம்மணர் என்று யாரும் கூறுவதில்லே.

ப: இந்தப் பிறப்பில் அவர் பிராம்மணர் என்று அழைக்கப்படாமல் இருக்கலாம். தாம் பிறக்காத ஒரு வர்ணத்துக்குத் தாம் உரியவரென்று அவர் இறுமாப்புக்கொள்ளாதிருப்பது நன்மையே. அதுதான் உண்மையான அடக்கத்தின் அறிகுறியாகும்.

---

* காந்திஜியின் இதே கருத்தை விளக்கும் அவருடைய மற்ருேர் கட்டுரையானது:

தஞ்சாவூர் ஜில்லாவிலிருந்து ஒருவர் எழுதியுள்ள கடிதத்தில் தாமும் தமது சகோதாரும் பிராம்மணர்களெனினும், சோம்பேறித்தனமாக வாழ்க்கை நடத்துவதைக் காட்டிலும் ஏதாவது வேலே செய்ய வேண்டுமென்று கருதி, தாங்கள் கலப்பையை எடுத்துக்கொண்டதாகக் குறிப்பிட்டுள்ளனர். அவ்விதமாக, அவர்கள் விவசாயத்தில் ஈடுபடத் தொடங்கினர். அதன்மீது அவர்களுடைய கிராமத்திலுள்ள மற்றவர்கள் வெறுப்படைந்து, அவர்களேச் சாதிப்ரஷ்டம் செய்துவிட்டார்கள். எனினும், அவர்கள் தங்கள் தீர்மானத்தில் உறுதியுடனிருந்தனர். கும்பகோணம் சங்கராச்சாரியார் அந்தப் பக்கத்துக்கு விஜயம் செய்தபோது, அவர்கள் தங்கள் காணிக்கையுடன் அவரைத் தரிசிக்கச் சென்ருர்கள். ஆனுல், அவர்கள் தங்கள் ஜீவனத்துக்கு உழைத்த பாவத்துக்காக, அவர்களுடைய காணிக்கை நிராகரிக்கப்பட்டுவிட்டது. எனினும், சங்கராச்சாரியாரின் செய்கையால் தாம் சிறிதும் சோர்வடைந்துவிடவில்லேயென்று அந்த நிருபர் கூறுகிருர். அவர்களுடைய சேவை உணர்ச்சிக்காக அந்தச் சகோதரர்களேப் பாராட்டுகிறேன். ஒரு கொடுமையான சமூகத்திலிருந்து பகிஷ்காரம் செய்யப்படுவது, உண்மையில் யோக்கியதாம்சத்திற்ககக அளிக்கப்படும் வெகுமதியே. எனவே, அதை வரவேற்கவேண்டும். ஒரு பிராம்மணர் கலப்பையைத் தொடக்கூடாதென்று கூறுவது, வர்ணுச்சிரமத்தின் ஒரு கேலிக் கூத்தேயாகும்; பகவத் கீதையின் அர்த்தத்தை இழிவுபடுத்துவதாகும். வெவ்வேறு பிரிவினரிடம் பிரதானமாக உள்ள குணவிசேஷங்கள் மற்றவர்களுக்கு இருக்கக்கூடாது என்பதில்லே. பராக்கிரமம் க்ஷத்திரியர்களுக்கு மாத்திரமே, ஏகபோக பாத்தியமானதல்ல. அடக்கம் பிராம்மணருக்கு மாத்திரம் ஏகபோக பாத்தியமானதல்ல.

பிராம்மணர், க்ஷத்திரியர், சூத்திரர்கள் பசுவைப் பாதுகாக்க வேண்டியதில்லேயா? பசுவுக்காக உயிரைக் கொடுக்கத் தயாராக இராத எவரும் ஹிந்துவாக இருக்கமுடியுமா? அப்படியிருந்தும் சென்னே மாகாணத்திலிருந்து எனக்கு ஒரு விசித்திரமான கடிதம் வந்திருக்கிறது. கோ சம்ரட்சணம் (பசுவைப் பாதுகாப்பது) வைசியரைத் தவிர வேறெவருக்கும் எவ்வித சம்பந்தமுமில்லாத விஷயம் என்று அக்கடிதம் கூறுகிறது. அவ்வளவு துடுக்குடன் அறியாமையும் சேர்ந்து கொண்டிருக்கும்போது, எல்லா அபாயங்களேயும் ஏற்றுக்கொண்டும், ஒருவருடைய நிலே சத்தியமானதா என்பதைக் காலம் நிரூபித்துக் காட்டுமென்ற நம்பிக்கையுடன் சீர்திருத்தப் பாதையில் தொடர்ந்து செல்வதும்தான் சிறந்ததாகும். நாம் உறுதியுடனும் அன்புடனும் நடந்துகொண்டால், முடிவில் எல்லா எதிர்ப்பையும் நாம் அகற்றிவிட முடியும். சீர்திருத்தவாதிகள் தளர்ச்சியடைந்துவிடக்கூடாது; கோபம் கொள்ளவும் கூடாது.

— 'எங் இந்தியா' – 17—11—1921

கே: வர்ணத்தைச் சார்ந்த குணங்கள் பரம்பரையாக வருகின்றன என்பதும், முயற்சி செய்து அடையத்தக்கவை அல்ல என்பதும் உங்கள் நம்பிக்கையா?

ப: முயற்சியின்மீது அக்குணங்களை அடைய முடியும். பரம்பரையாக வரும் குணங்களைப் பலப்படுத்திக்கொள்ளவும் எப்போதும் முடியும். ஆனால், பண லாபத்திற்காகப் புதிய வழிகளை நாம் நாட வேண்டிய அவசியமில்லை; நாடுவதும் கூடாது. மாசின்றிப் பரிசுத்தமானவையாக இருக்கும் வரையில், நமது முன்னோர்களிடமிருந்து நாம் ஆர்ஜிதம் செய்த தொழில்களைக்கொண்டு திருப்தியடைய வேண்டும்.

கே: ஒருவர் அவருடைய குடும்பத்தின் தன்மைக்கு நேர் விரோதமான குணங்கள் உடையவராக இருப்பதை நீங்கள் கண்டதில்லையா?

ப: இது கஷ்டமான கேள்வி. நமது முன்னோர்களின் பூர்வ சரித்திரம் யாவும் நமக்குத் தெரியாது. நான் உங்களுக்கு விளக்கிக் கூறியுள்ளபடி வர்ணத்தின் விதியை அறிந்துகொள்ளுவதற்கு, நானும் நீங்களும் இப்பிரச்னையை ஆழ்ந்து பரிசீலனை செய்யவேண்டிய அவசியமில்லை. என் தந்தை ஒரு வர்த்தகராக இருந்து, நான் ஒரு சிப்பாயின் குணங்கள் உடையவனாக இருப்பேனாயின், நான் கைம்மாறு எதுவுமின்றி ஒரு சிப்பாய் என்ற முறையில் என் நாட்டிற்குத் தொண்டு புரியலாம். ஆனால், எனது ஜீவனத்துக்கு வியாபாரத்தின் மூலம் சம்பாதிப்பதைக்கொண்டே நான் திருப்தியடைய வேண்டும்.

கே: இன்று நாம் காணும் சாதி, சமபந்தி போஜனம், கலப்பு மணம் சம்பந்தமான கட்டுப்பாடுகள் மாத்திரமே அடங்கியதாக இருக்கிறது. வர்ணத்தைப் பாதுகாக்க வேண்டும் என்பதன் அர்த்தம், இந்தக் கட்டுப்பாடுகளை நிலைநிறுத்தி வருவதுதானா?

ப: இல்லவே இல்லை. கட்டுப்பாடுகள் எதுவும் இராமையே வர்ணத்தின் கலப்பற்ற முழுப் பரிசுத்த நிலையாகும்.

கே: அந்தக் கட்டுப்பாடுகளை விட்டுவிடலாமா?

ப: விட்டுவிடலாம். மற்ற வர்ணங்களில் திருமணம் செய்து கொள்ளுவதால்கூட, வர்ணம் பாதுகாக்கப்படுகிறது.

கே: அப்படியாயின், தாயாரின் வர்ணம் பாதிக்கப்படுமே.

ப: ஒரு மனைவி தன் கணவரின் வர்ணத்தையே பின்பற்றுகிறாள்.

கே: வர்ணாச்சிரம தருமம், நீங்கள் விளக்கியுள்ளபடி சாஸ்திரங்களில் காணப்படுகிறதா? அல்லது அது உங்களுடைய சொந்த விளக்கமா?

ப: என் சொந்த விளக்கமல்ல. நான் அதை பகவத் கீதையி லிருந்து உருவகப்படுத்திக்கொண்டேன்.

கே: மனுஸ்மிருதியில் காணப்படும் கொள்கையை நீங்கள் ஆதரிக்கிறீர்களா ?

ப: அந்தக் கொள்கை சரி. ஆனால், அதன் செயல் முறைகள் என் மனத்திற்கு முற்றிலும் உகந்தவையாக இல்லை. அந்த நூலின் பல அம்சங்கள் கடுமையான ஆட்சேபணைகளுக்கு இடம் அளிப்பவையாக இருக்கின்றன. அவை பிற்காலத்திய இடைச் செருகல்கள் என நம்புகிறேன்.

கே: மனுஸ்மிருதியில் ஏராளமான அநீதிகள் அடங்கியிருக் கின்றன அல்லவா ?

ப: ஆம். பெண்கள் சம்பந்தமாகவும் 'தாழ்ந்த சாதிகள்' சம்பந்த மாகவும் ஏராளமான அநீதிகள் அடங்கியிருக்கின்றன. சாஸ் திரம் என்ற பெயர் உள்ளதெல்லாம் சாஸ்திரமல்ல. எனவே, சாஸ்திரங்கள் என்று கூறப்படும் நூல்களை மிகுந்த எச்சரிக் கையுடன் வாசிக்க வேண்டியது அவசியம்.

கே: ஆனால், நீங்கள் பகவத் கீதையை ஆதாரமாகக் கொண் டிருக்கிறீர்கள். குணம், கருமம் இவற்றை அனுசரித்தே வர்ணம் இருப்பதாக அது கூறுகிறது. அப்படியிருக்க, இதனுடன் பிறப்பை ஏன் கொண்டு வந்து சம்பந்தப்படுத்து கிறீர்கள் ?

ப: பகவத் கீதையைத்தான் நான் பிரமாணமாகக் கொண் டிருக்கிறேன். ஏனெனில், குற்றம் கண்டுபிடிக்கக் கூடிய எதையும் நான் காணாதது அந்த ஒரு நூலில்தான். அது கொள்கைகளை விதிக்கிறது; அவற்றின் அனுஷ்டான முறை களை நீங்களே கண்டுபிடித்துக் கொள்ளும்படி விட்டுவிடு கிறது. குணம், கருமம் இவற்றை அனுசரித்தே வர்ணம் இருக்குமென்று கீதை கூறுகிறது, ஆனால், குணமும் கரும மும் பிறப்பின் மூலமே பரம்பரையாக வருகின்றன. 'எல்லா வர்ணங்களும் என்னால் சிருஷ்டிக்கப்பட்டவை' என்று கிருஷ்ண பரமாத்மா கூறுகிறார்—சாதுர் வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம்*— அதை, 'பிறப்பினால்' என்றே நான் கருது கிறேன். பிறப்பினால் இல்லையெனில், வர்ண விதிக்கு அர்த்தமேயில்லை.

கே: ஆனால், வர்ண சம்பந்தமாக உயர்வு எதுவுமில்லையா ?

---

* சாதுர் வர்ண்யம் மயாஸ்ருஷ்டம் குணகர்ம விபாகச:—கீதை:—4—13.

'குணத்துக்கும் கர்மத்துக்கும் ஏற்ப நான்கு
வர்ணங்கள் என்னால் சிருஷ்டிக்கப்பட்டன.'

—பகவத் கீதை 4-வது அத்தியாயம். 13-வது சுலோகம்.

ப: இல்லவே இல்லை. எனினும், தலை உடலின் உச்ச நிலையாக இருப்பது போலவே, பிராம்மணீயம் மற்ற வர்ணங்களின் உச்ச நிலை என்று நான் கூறுகிறேன். அது, உயர்ந்த தொண்டுபுரியும் சக்தியையே குறிக்கிறது. உயர்ந்த அந்தஸ்தைக் குறிக்கவில்லை. உயர்ந்த அந்தஸ்து கொண்டாடும் அதே விநாடியில், அது காலால் மிதிப்பதற்குரிய இழிநிலையை அடைந்துவிடுகிறது.

கே: குறளை நீங்கள் அறிவீர்கள். அந்தத் தமிழ் இலக்கியத்தின் ஆசிரியர், பிறப்பால் சாதியில்லை என்று கூறியிருப்பதை நீங்கள் அறிவீர்களா? *பிறப்பில் எல்லா ஜீவனும் சமம் என்று அவர் கூறுகிறார்.

ப: மிகைபடக் கூறும் தற்போதைய நிலைக்கு விடையாகவே அவர் அவ்விதம் கூறியுள்ளார். எந்த வர்ணமாவது உயர்வுக்கு உரிமை கொண்டாடிய போது, அவர் அதை எதிர்த்துத் தமது குரலை எழுப்ப வேண்டியிருந்தது. பிறப்பினால் வர்ணம் என்ற கொள்கையின் வேரை அது அறுத்துவிடவில்லை. அது சமத்துவமின்மைக் கொள்கையின் வேரை அறுக்க வேண்டுமென்ற சீர்திருத்த வாதியின் முயற்சியே யாகும்.

கே: தற்போதைய பழக்க வழக்கம் மிகவும் உருமாறிச் சிதைந்திருக்கிறது. எனவே, அதை அடியோடு ஒழித்துவிட்டுப் புதிதாக ஆரம்பிப்பது சிறந்ததல்லவா?

ப: நாம் சிருஷ்டி கர்த்தாக்களாக இருந்தால் மாத்திரமே அவ்விதம் செய்யலாம். ஹிந்துக்களின் இயற்கை சுபாவத்தைப் பேனா முனையால் மாற்றிவிட முடியாது. அந்த விதி செயல்படுவதற்கு—அதை அழித்துவிடுவதற்கல்ல—நாம் ஒரு வழியைக் கண்டுபிடிக்க முடியும்.

கே: சாஸ்திரங்களின் கர்த்தாக்கள் புதிய ஸ்மிருதிகளைச் சிருஷ்டித்திருக்கும் போது, நீங்களும் ஏன் சிருஷ்டிக்கக் கூடாது?

ப: நாம் ஒரு புதிய சிருஷ்டியைத் தோற்றுவிக்க முடியுமாயின், அப்போது என் நிலை விசுவாமித்திரரின் நிலையைக்காட்டிலும் மோசமாகிவிடும். ஆனால், விசுவாமித்திரர் என்னைவிட எவ்வளவோ மகோன்னதமானவர்.

கே: நீங்கள் வர்ணத்தை அழிக்காதவரையில், தீண்டாமையை அழிக்க முடியாது.

ப: நான் அவ்விதம் நினைக்கவில்லை. ஆனால், தீண்டாமையை அகற்றுவதில் வர்ணம் அழிந்து போகுமாயின் நான் அதற்

---

* 'பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.'—திருக்குறள்

காக ஒரு சொட்டுக் கண்ணீர்கூட விடமாட்டேன். எனினும், என்னால் விவரிக்கப்பட்டுள்ள வர்ணத்திற்கும் தீண்டாமைக்கும் என்ன சம்பந்தமிருக்கிறது?

கே: ஆனால், இந்தச் சீர்திருத்தத்தின் விரோதிகள், நீங்கள் கூறியவற்றிலிருந்தே மேற்கோள் காட்டுகின்றனர்.

ப: ஒவ்வொரு சீர்திருத்த வாதியின் கதியும் அதுதான். தப்பெண்ணம் ஏற்படும் வகையில் விரோதிகள் மேற்கோள் காட்டுவார்கள். நான் ஹிந்து மதத்தையே விட்டுவிட வேண்டுமென்று அவர்களில் சிலர் விரும்புகிறார்கள் என்பதும் உங்களுக்குத் தெரியும். மற்றும் சிலர், அவர்களால் முடியுமாயின், என்னை ஹிந்து சமூகத்திலிருந்தே ப்ரஷ்டம் செய்துவிடுவார்கள். வர்ண தருமத்தைப் பாதுகாப்பதற்காக நான் எந்தவிடத்துக்கும் வரவில்லை. தீண்டாமையை அகற்றுவதற்கே வைக்கத்துக்குச் சென்றேன். சுயராஜ்யத்தின் மூன்று தூண்களான கதர்ப்பிரசாரம், ஹிந்து—முஸ்லிம் ஒற்றுமை, தீண்டாமையை ஒழித்தல் இவை பற்றிய காங்கிரஸ் தீர்மானத்தின் கர்த்தா நான்தான். எனினும், வர்ணாச்சிரம தருமத்தை ஸ்தாபிப்பது சுயராஜ்யத்தின் நாலாவது தூண் என்று நான் எக்காலத்திலும் குறிப்பிட்டதில்லை. எனவே, வர்ணாச்சிரம தருமத்தை நான் தவறான முறையில் வற்புறுத்தி வருகிறேன் என்று நீங்கள் என்மீது குற்றஞ் சாட்ட முடியாது.

கே: உங்களுடைய சீடர்களில் பலர் உங்களுடைய உபதேசத்தைத் திரித்துக் கூறுகிறார்கள் என்பதை நீங்கள் அறிவீர்களா?

ப: அது எனக்குத் தெரியாதா? பெயரளவில் மாத்திரமே எனக்குப் பல சீடர்கள் இருக்கிறார்கள் என்பதை நான் அறிவேன்.

கே: புத்தமத ஸ்தாபனம் பிராம்மணர்களின் ஆதிக்கத்தில் இருந்ததாலேயே, இது இந்தியாவுக்கு வெளியே துரத்தப்பட்டது. அதுபோலவே, அவர்களுடைய சுயநலத்துக்கு ஹிந்துமதம் அனுகூலமாக இராவிடில், அவர்கள் ஹிந்து மதத்தையும் வெளியே துரத்திவிடுவார்கள்.

ப: துணிச்சல் இருந்தால் அவர்கள் அவ்விதம் செய்யட்டுமே. ஆனால், புத்தமதம் இந்தியாவுக்கு வெளியே போய்விடவில்லை என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயம். புத்தரின் தத்துவத்தில் பெரும் அளவை மனத்தில் இறுத்திக் கொண்டது இந்தியாதான். கிறிஸ்தவ தத்துவத்துக்கும் கிறிஸ்தவ மதத்துக்கும் உள்ள வேற்றுமையைப் போல், புத்தரின் தத்துவத்துக்கும் புத்த மதத்துக்கும் உள்ள வேற்றுமையை அறிந்துகொள்ள வேண்டும். புத்தரின் நடு நாயகமான

முக்கிய உபதேசத்தைப் பிராம்மணர்கள் ஸ்வீகரித்துக் கொண்டதால்தான், புத்த மதத்தை வெளியே விரட்டுவதில் அவர்கள் வெற்றி பெற்ருர்கள்.

கே: புத்த மதத்தின் சிறந்த விஷயங்களை நிரந்தரமாக மனத்தில் ஏற்றுக்கொண்ட அதே பிராம்மணர்கள்தான், தீண்டாதாரை ஆலயங்களுக்குள் அனுமதிக்க மறுத்தும், அவர்கள் மீது கொடிய நிபந்தனைகள் விதித்தும், அமிருதசரஸ் பாதகத்தைக் காட்டிலும் மோசமான பாதகங்களைப் புரிந்துள்ளனர்.

ப: நீங்கள் கூறுவது ஓரளவு சரியே. எனினும், குற்றத்தைப் பிராம்மணர்கள் மீது மாத்திரம் நீங்கள் சுமத்துவது தவறு. ஹிந்து மதம் முழுவதுமே அதற்குப் பொறுப்பாகும். வர்ண தருமம் உருச் சிதைந்ததால், தீண்டாமைக்கு இடமேற்பட்டது. யாரும் மனமறிந்து வேண்டுமென்று கொடுமை செய்யவில்லை. ஆனல், அது மனித வர்க்கத்தின் ஒரு துக்ககரமான விளைவாக முடிந்தது.

கே: ஆனல், நீங்கள் வர்ணுச்சிரம தருமம் என்ற வார்த்தையை உபயோகித்து வரும் வரையில், அதனுடன் இன்றைய தீய சேர்க்கைகளே முன்வந்து நிற்கின்றன.

ப: அதன் படிப்பினை என்னவெனில், தீய சேர்க்கையை ஒழித்து விட்டு, வருண தருமத்தைப் பரிசுத்த நிலைக்குப் புனருத்தாரணம் செய்வதுதான்.

## என் திட்டம் என்ன ?

கே: நிலைமை ஒரேயடியாக முற்றிலும் குழப்பமாக இருக்கிறது. எனவே, நாம் பழைய நிலைக்கு எவ்விதம் திரும்பிச் செல்லுவது ?

ப: உங்களுக்கு நான் கூற வேண்டியதெல்லாம் என்னவெனில், அஸ்திவாரத்தை அழித்துவிடாதீர்கள்; நாம் நிலைமையைப் பரிசுத்தமாக்க முயற்சிப்போம் என்பதுதான். அதற்குப் பதிலாக, நீங்கள் ஒரு புதிய மதத்தைக் கொண்டுவர முயற்சிக்கிறீர்கள். அதை ஏற்றுக்கொள்ள யாரும் தயாராக இல்லை. பிராம்மணீயமும் ஹிந்து மதமும் ஒன்றுதான். நம்மிடையே ஹிந்து மதத்தைக் குறிக்கும் ஒரே வார்த்தை பிராம்மணீயம் என்பதுதான்; அதாவது பிரம்ம வித்யை. அதை அழிக்க முயற்சிப்பதன் மூலம் நீங்கள் ஹிந்து மதத்தையே அழிக்க முயற்சிக்கிறீர்கள். பிராம்மணர் உங்கள் உரிமைகளை ஆக்கிரமித்துக் கொள்ளும்போது, அவரை அங்குலம் அங்குலமாக எதிர்த்துப் போராடி, அவரைச் சீர்திருத்த முயற்சி செய்யுங்கள். ஆனல், ஒவ்வொரு பிராம்மணரையும் தூஷிப்பதால் யாதொரு பலனும்

ஏற்படாது. பிராம்மணர்களில் நல்லவர்களும் இருக்கிருர்கள்; கெட்டவர்களும் இருக்கிருர்கள். ஒரு சாரார் முதல் தர சீர் திருத்தவாதிகளாக இருக்கிருர்கள். மற்றெரு சாரார் சீர் திருத்தத்தின் விரோதிகளாக இருக்கிருர்கள். சீர்திருத்தப் பிராம்மணர்களில் சிறந்தவர்களை நீங்கள் உங்கள் கட்சியில் சேர்த்துக்கொண்டு, அவர்களுடைய உதவியால் நீங்கள் உங்கள் திட்டத்தின் ஆக்க அலுவல்களை நிறைவேற்ற வேண்டும். அதன் பயனுக பிராம்மணர்கள், பிராம்மணரல்லாதார், இரு சாராருக்கும் கதி மோட்சம் ஏற்படும்.

சீர்திருத்தத்தின் விரோதிகளை எதிர்த்து நில்லுங்கள். "நீங்கள் கற்றறிஞர்களாக இராமலும், உண்மையான மதத்தை எங்களுக்கு உபதேசிக்கத் திறமையில்லாமலும், செல்வத்தையும் அதிகாரத்தையும் நாடிச் செல்லுவீர்களாயின், உங்களை நாங்கள் பிராம்மணர்கள் என்று அழைக்க மாட்டோம்" என்று அவர்களிடம் சொல்லுங்கள். அப்போது நீங்கள் அவர்களுடைய மனத்தில் எதிர்ப்பை உண்டாக்க மாட்டீர்கள். சீர்திருத்தம் ஏற்பட நீங்கள் உக்ரமான கிளர்ச்சியை நடத்துவீர்கள். பிராம்மணரல்லாதார் யாராயினும், வேற்றுமை காட்டும் பள்ளிக்கூடங்களையும் கோவில்களையும் நீங்கள் பகிஷ்காரம் செய்வீர்கள். லோகாயதமான ஆசையின்றி, பரிசுத்தமான ஒழுக்கமும், அறிவும் வாய்ந்த குருக்கள்மாரே வேண்டுமென்று நீங்கள் வற்புறுத்துவீர்கள். பழைய கோவில்களில் தீண்டாதாரை அனுமதிக்க மறுப்பார்களாயின், நீங்கள் புதிய கோவில்களை நிர்மாணிக்கலாம்.

அடுத்தபடியாக, சமபந்தி போஜனப் பிரச்னை இருக்கிறது. இந்தக் காரணத்துக்காக நான் எவருடனும் சச்சரவிட விரும்பவில்லை. ஆனுல், பிரித்துவைக்கும் எந்த வைபவத்தையும் நான் பகிஷ்காரம் செய்துவிடுவேன்.

அதன்பின், நான் தீண்டாதாருடன் உறவு கொண்டாடுவேன். சொந்த சகோதரரிடம் எவ்விதம் நடந்துகொள்ளுவேனே, அது போலவே தீண்டாதாருடனும் நடந்துகொள்ள முயற்சிப்பதுடன், சிறிய சாதிகளையும் பிரிவுகளையும் தூள் தூளாக உடைத்தெறிந்து விடுவேன். என் பையனுக்குக் கல்யாணம் செய்யும் போது, நான் சம்பிரதாய வழியிலிருந்து விலகி, மற்ற உட்பிரிவுகளைச் சேர்ந்த பெண்ணையே நாடிச் செல்வேன். இன்று நாம் உண்மையில் படுமோசமான வழக்கத்திஞல் கட்டப்பட்டு கண்மூடித்தனமாக இருந்து வருகிருேம். எனவே, குஜராத்தில் கல்யாணம் செய்துகொண்டு குடியேறுவதற்கு நீங்கள் ஒரு பெண்ணைத் தரமாட்டீர்கள். குஜராத்திலிருந்து தமிழ் நாட்டில் ஸ்தாபிக்க நீங்கள் ஒரு பெண்ணை எடுத்துக்கொள்ளவும் மாட்டீர்கள்.

அடுத்தபடியாக நான் தீண்டாதாருக்கு, ஹிந்து மத, ஒழுக்கக் கொள்கைகளில் அடிப்படையான அறிவு பெறுவதற்

-காக, மதக் கல்வி அளிப்பேன். அவர்கள் இன்று கலப்பற்ற மிருக வாழ்க்கையே நடத்தி வருகிறுர்கள். விலக்கப்பட்ட உணவைச் சாப்பிடாமலிருக்கவும், களங்க மற்ற, சுத்தமான வாழ்க்கை நடத்தவும் நல்வார்த்தைகள் கூறி அவர்களைத் தூண்டுவேன். இது போன்ற இன்னும் பல விஷயங்களை நீங்கள் எளிதில் சேர்த்துக்கொண்டு, ஒரு பெரும் ஆக்கத் திட்டத்தை உருவாக்க முடியும்.

—'எங் இந்தியா' – 24—11—1927

## 9

# ஹிந்து மதம் அளித்த பரிசு

**கேள்வி :** தீண்டாமையை ஒழிப்பதுடன் மாத்திரம் உங்கள் இயக்கத்தை ஏன் கட்டுப்படுத்திக் கொள்ளுகிறீர்கள்? சாதி முறையை ஏன் அடியோடு ஒழித்துவிடக் கூடாது? சாதிக்கும் சாதிக்கும், சாதிக்கும் தீண்டாமைக்கும், தரத்தில்தான் வேற்றுமையேயன்றி வேறென்றுமில்லை அல்லவா?

**பதில் :** இந்தியாவில் எண்ணிக்கையற்ற சாதிகள் இருக்கின்றன. அவை ஒரு சமுதாய ஏற்பாடேயாகும். அவை அனைத்தும் வர்த்தகச் சங்கங்களே என்று காலஞ் சென்ற சர் வில்லியம் வில்சன் ஹண்டர் கூறினர். அது முற்றிலும் சரியே. ஒரு காலத்தில் அவை மிகுந்த பலனளிக்கக் கூடியவையாக இருந்து வந்தன. இன்றும் அவை ஓரளவு பலன் அளித்து வருகின்றன என்றே கூறலாம். இந்த ஏற்பாட்டில் பல கட்டுப்பாடுகள் சேர்த்துக்கொள்ளப்பட்டுள்ளன. அவை விரும்பத் தக்கவையல்ல என்பதும், காலக்கிரமத்தில் அவை ஒழிந்துதான் தீரும் என்பதும் என் அபிப்பிராயம். எனினும், அவற்றில் பாவமான அம்சம் எதுவுமில்லை. ஆனல், அவற்றின் கீழ்க் கஷ்டப்படுவோரின் ஸ்தூல முன்னேற்றத்துக்கு அவை தடையாக இருக்கின்றன; அவர்களின் ஆன்மிக முன்னேற்றத்துக்கு அவை தடையாக இல்லை. எனவே, சாதிமுறைக்கும் தீண்டாமைக்கும் தரத்தில் வேற்றுமையில்லை. இனத்தில்தான் வேற்றுமை இருக்கிறது. ஒரு 'தீண்டாதார்' கண்ணியமான சமுதாயத்தின் எல்லைக்கு வெளியில் உள்ளவராக இருக்கிறுர். அவரை மனிதப் பிறவியாக எவரும் நடத்துவதில்லை. அவர் ஒரே மேடையில் உள்ள தமது சக மனிதர்களால் பாதாளத்தில் தள்ளப்பட்ட சாதிப் பிரஷ்டராக இருக்கிறுர். எனவே, சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் எவ்வளவு வேற்றுமையுண்டோ அவ்வளவு வேற்றுமை சாதிக்கும் தீண்டாமைக்கும் உண்டு.

சாதி முறை பற்றி மற்ருெரு விஷயத்தையும் நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். சாதி, வர்ணுச்சிரம தருமத்தைப் போன்றதல்ல என்பது என் கருத்து. சமுதாயத்தின் தேவைக்காகச் சாதிமுறை வகுக்கப்பட்டிருக்கிறது. ஆனல், வர்ணுச்சிரமமோ ஹிந்து வேத நூல்களை அடிப்படையாகக் கொண்டதாகும். சாதிமுறை அப்படியல்ல. சாதி எண்ணிக்கை யற்றிருக்கின்றன. (அவற்றில் சில செத்து வருகின்றன; புதியவையும் தோன்றி வருகின்றன) வர்ணங்களோ இன்றும், என்றும் நான்காகவே இருந்து வருகின்றன.

வர்ணுச்சிரமத்தில் நான் உறுதியான நம்பிக்கையுடையவன். அதை, மனித வர்க்கத்துக்கு ஹிந்துமதம் அளித்த ஒரு பரிசாகக் கருத இதற்கு முன்பும் நான் தயங்கவில்லை. எனக்குத் தெரிந்தவரையில், அந்தத் தருமத்தை ஒத்துக்கொள்ளுவது, ஆன்மிக வளர்ச்சியின் ஒரு நிலையேயாகும். அந்த நான்கும் தனித்தனியாகச் செங்குத்தாக நிற்பவையல்ல; சம மட்டமாக இருப்பவை. அவற்றின்மீது எல்லோரும் சம நிலையில் தங்கள் தங்களுக்கு விதிக்கப்பட்ட தொண்டுகளைச் செய்துகொண்டு நிற்கிருர்கள். இறைவனின் குறிப்புப் புத்தகத்தில், தமது கடமையை நன்ருகச் செய்யும் பிராம்மணருக்கு எத்தனை 'மார்க்கு'கள் கொடுக்கப்படுகின்றனவோ, அதே 'மார்க்கு'கள்தான் தமது கடமையை நன்கு செய்யும் 'பங்கி'க்கும் கொடுக்கப்படுகின்றன.

—'ஹரிஜன்' – 11—2—1933

# 10

# 'என் கனவு'

தீண்டாமை, சாதிமுறை உற்பத்தி செய்த சரக்கு அல்ல. ஆனல், ஹிந்து மதத்தில் புகுந்து அதை அரித்துத் தின்றுவரும் உயர்வு, தாழ்வு வேற்றுமை காரணமாக ஏற்பட்டதாகும். எனவே, தீண்டாமையைத் தாக்குவது உயர்வு, தாழ்வு வேற்றுமையைத் தாக்குவதாகும். தீண்டாமை ஒழிந்தால், அதே விநாடியில் சாதி முறை பரிசுத்தமாகிவிடும். சமுதாயத்தின் நான்கு பிரிவுகளான, உண்மையான வர்ண தருமத்தில் அது கலந்துவிடும் என்பதே என் கனவாகும். அந்த நான்கு பிரிவுகளும் ஒன்றுக்கொன்று துணையானவை; அவற்றில் ஒன்றைவிட ஒன்று உயர்வோ அல்லது தாழ்வோ அல்ல; ஒவ்வொன்றும் ஹிந்துமத உடலின் அவசியமான உறுப்பாகும்.

—'ஹரிஜன்' – 11—2—1933

# 11

# சாஸ்திரங்கள் கூறும் உண்மை

ஸ்ரீமதி வாடியா, அன்ெருரு நாள் நிகழ்த்திய தமது அறிவு செறிந்த பிரசங்கத்தில் கீழ்க்கண்ட மூன்று சுலோகங்களையும் குறிப்பிட்டார். அவை மறுபடியும் எடுத்துக் கூறுவதற்குத் தகுதி வாய்ந்தவை :

"மகாபாரதத்தின் வன பர்வத்தில் யுதிஷ்டிரர் கூறிய இந்த வார்த்தை களைக் கேளுங்கள் :

'ஓ ஸர்ப்ப ராஜனே! சத்தியம், தரும குணம், மன்னிக்கும் தன்மை, நல்ல நடத்தை, பொறுமை, புலனடக்கம், இரக்கம் இக்குணங்கள் எங்கே காணப் படுகின்றனவோ, அங்கே பிராம்மணர் இருக்கிறார். இக்குணங்கள் ஒரு சூத்திர ரிடம் இருந்து, ஒரு பிராம்மணரிடம் இல்லையாயின் அந்தச் சூத்திரர் சூத்திர ரல்ல; அந்தப் பிராம்மணர் பிராம்மணரல்ல.'

விஷ்ணு பாகவதத்தில் நாம் வருமாறு வாசிக்கிறோம் :

'ஒரு மனிதரின் சாதியைக் குறிக்கும் குணங்கள் என்னவோ, அவை வேறொரு மனிதரிடம் காணப்படுமாயின், அவரை அந்தக் குணங்களுக்குக் காரணமான சாதியைச் சேர்ந்தவராகக் கருதவேண்டும்.' (அதாவது அவரது உடலுக்கும் பிறப்புக்கும் காரணமான சாதியைச் சேர்ந்தவராக அவரைக் கருதக் கூடாது.)

உங்களில் சிலர் மனுஸ்மிருதியையே அதிகமாக விரும்புவீர்கள். நல்லது, அவர் கூறுவதைக் கேளுங்கள் :

'கற்றறிவற்ற ஒரு பிராம்மணர், மர யானை, தோலினால் செய்த மான் இவற்றிற்குச் சமமானவரே. மர யானையையும் தோல் மானையும் போல் கல்வியில்லாத பிராம்மணர் பெயரளவில்தான் பிராம்மணராவார். பிராம்மணர், வேதங்களைக் கற்காமல் வேறெங்காவது வேலை செய்வாராயின், அவர் தமது சந்ததிகளுடன் அந்த ஜன்மத்திலேயே சூத்திரராகிவிடுகிறார்.'".

இவையும், சாஸ்திரங்களில் உள்ள மற்றும் ஏராளமான வாக்கியங்களும் வெறும் பிறப்பினால் மாத்திரம் யாதொரு பலனு மில்லை என்பதைச் சந்தேகத்துக்கு இடமின்றிக் காட்டுகின்றன. ஒருவர், பிறப்பால் தமக்குள்ள உரிமையை நிலைநிறுத்திக் கொள்ள, பிறப்புக்கு உரிய அலுவல்களையும் குணங்களையும் காட்ட வேண்டும்.

—'ஹரிஜன்' – 15—4—1933

# 12

# ஓர் அமெரிக்கப் பாதிரியாரின் கேள்விகள்

**கேள்வி:** உங்கள் ஹிந்து மதத்தில், நீங்கள் சாதி முறையையும் அடிப்படையாகச் சேர்க்கிறீர்களா?

**பதில்:** நான் சேர்க்கவில்லை. சாதியில் ஹிந்து மதத்துக்கு நம்பிக்கையில்லை. நான் சாதியை உடனடியாக ஒழித்துக்கட்ட முற்படுவேன். ஆனால், வர்ண தருமத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு. அதுதான் வாழ்க்கை நியதியாகும். சிலர் பிறருக்குப் போதிக்கவும், சிலர் பாதுகாப்பு அளிக்கவும், சிலர் வியாபாரத்திலும் விவசாயத்திலும் ஈடுபடவும், சிலர் உடல் உழைப்பால் தொண்டு புரியவும் பிறவி எடுக்கிறார்கள். அதன் பலனாகவே, அத்தொழில்கள் பரம்பரையாக வந்து கொண்டிருக்கின்றன. சக்தியைச் சிதறடிக்காமல் சேமிக்கும் நியதியே வர்ண நியதியாகும். நான் ஒரு தோட்டியாக இருந்தால், என் மகனும் ஏன் ஒரு தோட்டியாக இருக்கக் கூடாது?

**கே:** அப்படியா? நீங்கள் அவ்வளவு தீவிரமாகப் போகிறீர்களா?

**ப:** ஆம். ஏனெனில், தோட்டியின் தொழில் ஒரு பாதிரியாரின் தொழிலைக் காட்டிலும் எந்த விதத்திலும் தாழ்ந்ததல்ல என்பது என் உறுதியான கருத்து.

**கே:** அப்படியே இருக்கட்டும். ஆனால், அப்ரகாம் லிங்கன்* அமெரிக்காவின் ஜனாதிபதியாவதை விட்டுவிட்டு விறகு வெட்டியாகவே இருந்திருக்க வேண்டுமா?

**ப:** ஒரு விறகு வெட்டி ஏன் அமெரிக்க ஜனாதிபதியாகக் கூடாது? கிளாட்ஸ்டன்† கூட விறகு வெட்டியாகத்தான் இருந்தார்.

**கே:** ஆனால், அவர் அதைத் தன் தொழிலாக ஏற்றுக்கொள்ளவில்லை.

---

* அப்ரகாம் லிங்கன் 1861-ல் அமெரிக்காவின் 16 – வது ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, அமெரிக்காவில் நீக்கிரோக்களின் அடிமைத்தனம் நீங்கப் பாடுபட்டவர். 1864-ல் மறுபடியும் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவரது உயர்ந்த கொள்கை காரணமாக 1865-ல் ஒரு வெறியனால் சுட்டுக் கொல்லப்பட்டார்.

† கிளாட்ஸ்டன், பதினாறு ஆண்டுகள் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்து உலகப் புகழ் பெற்றவர்.

ப : அவர் ஏற்றுக்கொண்டிருந்தால், அவரது கௌரவம் குறைந்து போய்விடாது. நான் கூறுவதென்னவெனில், தோட்டியாகப் பிறந்த ஒருவர் தோட்டியாகவே இருந்து கொண்டு தமது ஜீவனத்துக்குச் சம்பாதித்துக்கொள்ள வேண்டும். அதன் பின், அவர் விரும்பும் எத்தொழிலையும் செய்யலாம். ஒரு வக்கீலைப் போலவோ அல்லது உங்களுடைய ஜனாதிபதியைப் போலவோ, ஒரு தோட்டியும் அவர் பெறும் ஊதியத்துக்குத் தகுதியானவரே. அதுதான் ஹிந்து மதம் என்பது என் கருத்து. இந்தப் பூமியில் அதை விடச் சிறந்த பொது உடைமைக் கொள்கை வேறில்லை. இதற்கு உதாரணமாக, உபநிடதத்திலிருந்து ஒரு வாக்கியம் கூறுகிறேன். அதன் பொருள் இதுதான் : "உயிருள்ளவை, உயிரற்றவை எல்லாவற்றையும் இறைவன் வியாபித்துக் கொண்டிருக்கிறார். எனவே, எல்லாவற்றையும் தியாகம் செய்து இறைவனிடம் அர்ப்பணித்துவிட்டு, பிறகு வாழ்ந்திரு." தியாகத்திலிருந்துதான் வாழ்வதற்கு உரிமை ஏற்படுகிறது. "எல்லோரும் தங்கள் தங்களுக்குள்ள வேலையைச் செய்யும்போது, நானும் செய்வேன்" என்று அது கூறவில்லை. "மற்றவர்களைப் பற்றி நீ அலட்டிக்கொள்ள வேண்டாம். உன் வேலையை நீ முதலில் செய்; மற்றவைகளை அவனிடம் (இறைவனிடம்) விட்டுவிடு" என்று அது கூறுகிறது. ஆகர்ஷண சக்தி விதியைப் போலவே வர்ண தரும விதியும் இயங்குகிறது. ஆகர்ஷண சக்தி இயங்குவது நிற்கும் வரையில், தினந்தோறும் மேலே மேலே தாண்டிச் செல்ல முயற்சிப்பதன் மூலம் நான் அந்தச் சக்தியையோ அல்லது அது இயங்குவதையோ ரத்துச் செய்துவிட முடியாது. அவ்வித முயற்சி வீணாகவே முடியும். அது போலவே ஒருவர் மீது ஒருவர் குதிரையேற முயற்சிப்பதும் வியர்த்தமாகவே முடியும். வர்ண தருமம், அழிவையுண்டாக்கும் போட்டிக்கு நேர்மாறாகும்.

—'ஹரிஜன்' - 6—3—1937

## 13

# 125 வயதுவரை உயிர் வாழ்ந்தால்....

கேள்வி : சமீபத்தில் நீங்கள் ஸ்ரீ சியாம்லாலுக்கு எழுதிய கடிதங்களில், தீண்டாமையை முற்றிலும் ஒழிக்க வேண்டுமாயின், சாதியை அடியோடு வேருடனும் கிளைகளுடனும் களைந்தெறிய வேண்டுமென்று கூறியிருக்கிறீர்கள். அப்படியாயின், தீண்டாமை எதிர்ப்பு வேலையை, சாதி முறையையே எதிர்க்கும் பரந்த போராட்டத்தின் ஓர் அம்சமாக நீங்கள் ஏன்

செய்யவில்லை? நீங்கள் வேரைப்பிடுங்கி எறிந்துவிட்டால், கிளைகள் தாமாகக் காய்ந்து கருகிவிடும்.

பதில்: நான் சில கருத்துக்களை உறுதியாகக் கொண்டிருப்பது ஒரு விஷயமாகும். ஆனால், அந்தக் கருத்துக்களைப் பரந்த சமுதாயம் முற்றிலும் ஒத்துக்கொள்ளும்படி செய்வது முற்றிலும் வேறு விஷயம். என் மனம் இடைவிடாது வளர்ச்சி பெற்றுக்கொண்டும், இடைவிடாது முன் சென்று கொண்டும் இருக்கிறதென நம்புகிறேன். எல்லோரும் அந்த வேகத்தைத் தொடர்ந்து வர முடியாமலிருக்கலாம். எனவே, நான் மிகுந்த பொறுமையைக் கையாண்டு, அவசரமாகவும் ஆனால் நிதானமாகவும் முன் செல்வதுடன் திருப்தியடைய வேண்டியவனாக இருக்கிறேன். வர்ண வியவஸ்தை* சம்பந்தமாக சமீபத்திய 'நவஜீவன்' வெளியீட்டில் நான் எழுதிய விஷயங்கள் அடங்கியுள்ளன. அதில் உள்ள எனது முகவுரையிலிருந்து, கொள்கையளவில் நான் நீங்கள் கூறுவதை முற்றிலும் ஒத்துக்கொள்ளுகிறேன் என்பதை நீங்கள் அறிந்து கொண்டிருக்க வேண்டும். நான் 125 வயது வரையில் ஜீவதசையுடனிருந்தால், ஹிந்து சமுதாயம் முழுவதையும் என் அபிப்பிராயத்துக்கு இணங்க மாற்ற முடியுமென எதிர்பார்க்கிறேன்.

—'ஹரிஜன்' - 28—7—1946

* 'வர்ண வியவஸ்தை' குஜராத்தி வெளியீடு, நவஜீவன் பப்ளிஷிங் ஹவுஸ் அகமதாபாத்—9. விலை அணா 12. தபால் செலவு முதலியன அணா 5.

பகுதி ஏழு

# பலாத்காரம் பயன்தராது

## 1

## புனித லட்சியமும் சைத்தான் முறைகளும்

'தொடத்தகுந்தவர்கள்' உங்களை வெறுப்பதை எவ்விதம் நான் விரும்பவில்லையோ, அது போலவே நீங்களும் அவர்களிடம் துவேஷ உணர்ச்சியோ, விரோதமோ கொள்ளுவதை நான் விரும்பவில்லை. நீங்கள் பலாத்காரத்தினால் உங்கள் உரிமைகளைப் பறித்துக் கொள்ளுவதையும் நான் விரும்பவில்லை. உலக அபிப்பிராயத்தின் போக்கு அத்தகைய பலாத்காரத்துக்கு விரோதமாக இருக்கிறது. பலாத்காரத்தின் உதவி கொண்டு உரிமைகள் பெறுவது அசாத்தியம் என்ற காலம் உலகில் வந்துகொண்டிருப்பதை நான் தெளிவாகக் காண்கிறேன். எனவே, நீங்கள் உங்கள் லட்சியத்தை அடைய பலாத்காரத்தைக் கைக்கொள்ளுவீர்களாயின், நீங்கள் நிச்சயம் தோல்வியே அடைவீர்கள் என இன்று நான் உங்களுக்குக் கூறுகிறேன். உங்களுடனும், அல்லது எவருடனும் எனது நடவடிக்கைகளில் நான் அரசியல் தந்திரத்தைக் கையாள விரும்பவில்லை. ஜாலம் காட்டி உங்களை ஏய்க்கவோ, அல்லது ஆசை வார்த்தைகள் கூறி உங்களுடைய ஆதரவைப் பெறவோ நான் விரும்பவில்லை. என்னுடைய அரசியல் நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ளுவதற்காக உங்களை உபயோகப்படுத்திக் கொள்ளமாட்டேன். என் சம்பந்தப்பட்ட வரையில், இப்போதுள்ள பிரச்னை சுயராஜ்யத்தைவிடப் பெரியதாகும். தீண்டாமைக்கு முற்றுப்புள்ளி வைக்க நான் துடித்துக் கொண்டிருக்கிறேன். ஏனெனில், எனக்கு அது ஒரு பிராயச்சித்தமும் தவமுமாகும். இந்தத் தீமையை அனுமதித்ததன் மூலம், ஹிந்து மதம் ஒரு பெரும் பாவத்தைச் செய்திருக்கிறது. ஒருவர் செய்த பாவத்துக்காக மற்றொருவர் பிராயச்சித்தம் செய்வது சாத்தியமெனில், அந்தப் பாவத்துக்காக நானே பிராயச்சித்தம் செய்துகொண்டு, ஹிந்து மதத்தைப் பரிசுத்தமாக்க ஆர்வமுடையவனாக இருக்கிறேன்.

இந்நிலையில், எனது நோக்கத்தை நிறைவேற்றுவதற்குற்ற ஒரே வழி அகிம்சையும் சத்தியமும்தான். ஒரு 'தீண்டாதார்'

குழந்தையை நான் என் சொந்தக் குழந்தையாகச் சுவீகாரம் செய்துகொண்டிருக்கிறேன். முற்றிலும், என் கருத்துக்கு என் மனைவியை மாற்ற என்னுல் இயலவில்லை என்பதை ஒத்துக் கொள்ளுகிறேன். நான் அக்குழந்தையை நேசிப்பதுபோல் அவளால் நேசிக்க முடியவில்லை. எனினும், நான் கோபத்தினுல் என் மனைவியின் மனத்தை மாற்ற முடியாது; அன்பினுல் மாத்திரமே மாற்ற முடியும். என் ஜனங்களில் யாராவது உங்களுக்கு ஏதாவது தவறிழைத்திருந்தால், அதற்காக நான் உங்களிடம் மன்னிப்புக் கேட்கிறேன். உங்கள் விஷயத்தில் ஹிந்துக்கள் தங்களுடைய மனப்பான்மையை மாற்றிக்கொள்ளாவிடில், நீங்கள் பலாத்காரத்தைக் கையாளப் போவதாக, நான் புனுவிலிருந்தபோது தீண்டாதார் வகுப்பைச் சேர்ந்த சிலர் கூறினர். பலாத்காரத்தினுல் தீண்டாமையை அகற்றிவிட முடியுமா? இத்தகைய முறைகளால் தீண்டாதாரின் நிலை சீர்பட முடியுமா? நீங்களும் நானும், வைதிக ஹிந்துக்கள் அவர்களுடைய மூடநம்பிக்கையைக் கைவிடும்படி செய்வதற்கான ஒரே வழி, பொறுமையுடன் விவாதிப்பதும் நேர்மையாக நடந்து கொள்ளுவதும்தான். அவர்களுடைய மனம் மாருதிருக்கும் வரையில், நீங்கள் உங்கள் விதியைச் சகித்துக்கொண்டு பொறுமையுடனிருக்க வேண்டுமென்று மாத்திரமே நான் கூற முடியும். நான் உங்கள் கட்சியில் நின்று, உங்களுடைய துன்பங்களை உங்களுடன் மனமுவந்து பகிர்ந்துகொள்ளத் தயாராக இருக்கிறேன். மற்ற சாதியினர் அனுமதிக்கப்படும் எந்தக் கோவிலிலும் இறைவனை வணங்க உங்களுக்கும் உரிமையிருக்க வேண்டும். எவ்வித வேற்றுமையுமின்றி, மற்ற சாதிக் குழந்தைகளுடன் பள்ளிக்கூடங்களில் சேர உங்களுக்கும் வாய்ப்பு இருக்க வேண்டும். வைஸ்ராய் உள்பட எந்த மகோன்னதமான பதவிக்கும் வர நீங்கள் தகுதி வாய்ந்தவர்களாக இருக்கவேண்டும். தீண்டாமை ஒழித்தல் பற்றி எனது விளக்கம் அதுதான்.

ஆனுல், இவ்விஷத்தில் எனது மதம் சுட்டிக்காட்டும் வழியைப் பின்பற்றி மாத்திரமே நான் உங்களுக்கு உதவி புரிய முடியும்; மேனுட்டு முறைகளைப் பின்பற்றி உதவி புரிய முடியாது. ஏனெனில், அவ்வழியைக் கைக்கொண்டு நான் ஹிந்து மதத்தைக் காப்பாற்ற முடியாது. உங்களுடைய லட்சியம் புனிதமானது. ஒருவர் சைத்தானின் முறைகளைக் கைக்கொண்டு புனிதமான லட்சியத்துக்காகத் தொண்டு புரிய முடியுமா? எனவே, மிருக பலத்தினுல் உங்கள் நிலையைச் சீர்படுத்திக் கொள்ளும் எண்ணத்தை உங்கள் மனத்திலிருந்து உதறித் தள்ளிவிடும்படி வேண்டிக்கொள்ளுகிறேன். அந்தரங்கமான பக்தியுடன் ஒருவர் தமது இதயத்தில் அவனைத் தியானிப்பதால் மோட்சம் பெற முடியுமென்று கீதை* கூறுகிறது.

---

*பக்திம் மயிபராம் க்ருத்வா மாமேவைஷ்யத்யஸம்சய:- 'என்னிடத்தில் அந்தரங்க பக்தியுள்ளவன் ஐயமின்றி என்னையே அடைவான்.'

—பகவத் கீதை 18-வது அத்தியாயம்-68-வது சுலோகம்

தியானம் என்பது கடவுளின் அருளுக்காகக் காத்துக் கிடப்பதே. கடவுளுக்காகக் காத்துக் கிடப்பதால், ஈடு இணை யற்ற பேரின்பமான மோட்சத்தையே அடைய முடியுமெனில், கட வுளின் அருளால் அற்ப விஷயமான தீண்டாமை எவ்வளவு சீக்கி ரத்தில் ஒழிந்துவிடக்கூடும்? கடவுளுக்காகக் காத்துக் கிடப்ப தென்பதற்கு, பரிசுத்தத் தன்மை அதிகமாக வேண்டுமென்பதே பொருளாகும். எனவே, பிரார்த்தனையினல் நாம் நம்மைப் பரிசுத் தம் செய்துகொள்ளுவோமாக. அப்படியாயின், தீண்டாமையை அகற்றுவது மாத்திரமல்ல, சுயராஜ்ய உதயத்தையும் துரிதப் படுத்தியவர்கள் ஆவோம்.

[பெல்காமில் நடந்த தீண்டாமை எதிர்ப்பு மகாநாட்டில் நிகழ்த்திய பிரசங்கத்திலிருந்து எடுத்தது]

—'எங் இந்தியா' - 22 - 1 - 1925

## 2

# தீண்டாமையை நிலைநிறுத்த மிருக பலம்!

சாதி ஹிந்துக்கள் மிருக பலத்தினல் தீண்டாமையை நிலை நிறுத்த முடியாது. அது நசுக்கப்பட்ட வகுப்பினருக்குச் சாதக மாகவே மனமாற்றத்தை உண்டாக்கும். ஏழைகளான தீண்டா தாரைப் பாதுகாத்து நிற்க, ஒரு சில தொடத் தகுந்தவர்களாவது முயற்சித்தது காலப் போக்கின் அறிகுறியே. *மஹாடில், அது போல் மற்றும் பலர் தீண்டாதாருக்குப் பாதுகாப்பளிக்க முன் வந்திருக்கவேண்டுமென்றே எவரும் விரும்புவர். அத்தகைய சந்தர்ப்பங்களில் மௌனமான அனுதாபத்தினல் அதிக பலன் எதுவும் ஏற்படாது. தீண்டாமை ஒழித்தலை சர்வ முக்கியமாகக் கருதும் ஒவ்வொரு ஹிந்துவும் அத்தகைய சந்தர்ப்பங்களில், நசுக்கப்பட்ட வகுப்பினருக்குப் பகிரங்கமாகப் பாதுகாப்பு அளித்தும், அனாதைகளையும் தாழ்த்தப்பட்டவர்களையும் பாது காத்து நிற்பதால் தமது மண்டை உடைவதைக்கூட லட்சியம் செய்யாமலும், தம்முடைய அனுதாபத்தை நிரூபிக்க வேண்டும்.

—'எங் இந்தியா' - 28—4—1927

---

* பம்பாய் மாகாணத்தில் கொலபா ஜில்லாவைச் சேர்ந்த ஓர் ஊர்.

## 3

# வேலியே பயிரை மேய்கிறது!

[நாகர்கோவிலில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்தின் முழு விவரம் வருமாறு]

இந்தியாவைச் சேர்ந்த மிகவும் அழகான இந்தப் பிரதேசத்திற்கு இரண்டாவது முறையாக வர நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். எனினும், இந்தியாவின் வேறெந்தப் பாகத்திலும் இராதவாறு, இந்த அழகான பிரதேசத்தில் தீண்டாமை தாண்டவமாடி வருவது பற்றி எனது ஆழ்ந்த வருத்தத்தை நான் உங்களிடமிருந்து மறைக்க முடியாது. அறிவொளி வீசும் இந்த ஹிந்து சமஸ்தானத்தில், பாராமை, நெருங்காமை போன்ற மிகுந்த பயங்கரமான உருவத்தில் தீண்டாமை நிலவி வருவதைக் காண, ஹிந்து என்ற முறையில் நான் மிகவும் வெட்கமடைகிறேன்.

நான் எனது பொறுப்பை நன்கு உணர்ந்தே பேசுகிறேன். இந்தத் தீண்டாமை ஒரு சாபக்கேடாகும். இது ஹிந்து மதத்தின் உயிர் நிலையையே அரித்துத் தின்று வருகிறது. நாம் தகுந்த முன் ஜாக்கிரதையான முறைகளைக் கைக்கொண்டு, இந்தச் சாபக்கேட்டை நம்மிடையிருந்து அகற்றினலன்றி, ஹிந்து மதத்திற்கே அழிவு ஏற்பட்டு விடுமென நான் அடிக்கடி எண்ணுவது உண்டு. பகுத்தறிவு வளர்ந்துள்ள இக்காலத்தில், உலகம் முழுவதும் பிரயாணம் செய்யக்கூடிய இக்காலத்தில், பல மதங்களையும் ஒப்பிட்டு ஆராய்ச்சி செய்யும் வாய்ப்பு ஏற்பட்டுள்ள இக்காலத்தில், பிறப்பு காரணமாக ஒரு மனிதரைத் தீண்டாதாராக அல்லது நெருங்கத் தகாதவராக அல்லது பார்க்கத் தகாதவராக நடத்தும் மக்கள் இருக்கிருர்கள்; அவர்களில் சிலர் படித்தவர்களாகவும் இருக்கிருர்கள். இது என் அறிவுக்கே எட்டாத அதிசயமாக இருக்கிறது.

நான் ஹிந்து மதத்தின் ஒரு தாழ்மையான மாணவன். ஹிந்து மதத்தைப் பூரணமாக, சொற்பொருளைக் கொண்டும் தத்துவ ரீதியாகவும், அனுஷ்டிப்பதில் ஆர்வமுடையவன் என்றும் கூறிக் கொள்ளுகிறேன். இந்தப் பயங்கரமான கொள்கைக்கு ஆதாரமோ, பிரமாணமோ இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. சமஸ்கிருதத்தில் எழுதப்பட்டு, அச்சிடப்பட்டுள்ள ஒவ்வொன்றும் சாஸ்திரமென்றும், அதற்கு நாம் கட்டுப்பட வேண்டுமென்றும் நம்பி நம்மை நாமே ஏமாற்றிக்கொள்ளக் கூடாது. ஒழுக்க சம்பந்தமான மூலாதாரக் கொள்கைகளுக்கு விரோதமாயிருப்பதையும், அனுபவபூர்வமான பகுத்தறிவுக்கு முரணுக இருப்பதையும் சாஸ்திரமென்று—அது எவ்வளவு புராதனமானதாயினும் சரி—ஏற்றுக்கொள்ள முடியாது. இப்போது நான் கூறிய சித்தாந்தத்திற்கு வேதங்களிலும், மகாபாரதத்திலும், பகவத் கீதையிலும் போதிய ஆதாரமிருக்கிறது.

எனவே, அறிவும் ஆற்றலும் வாய்ந்த திருவாங்கூர் மகாராணி, தமது ஆட்சிக் காலத்தில் தீண்டாமைச் சாபக்கோட்டைதமது ராஜ்யத்திலிருந்து ஒழித்துவிடுவாரென்று நம்புகிறேன். வெகு காலமாக அடிமைப்பட்டுத் துன்பத்தில் ஆழ்ந்திருந்த இந்த மக்கள் பூரண விடுதலை பெறுவது; தமது ஆட்சியில் சாத்திய மாயிற்று என்று ஒரு பெண்மணி தமக்குள்ளும் தமது மக்களிடத் திலும் கூற முடிவதைக் காட்டிலும் பெருமை வேறு என்ன இருக்க முடியும்?

ஆனல், அதில் அவருக்குள்ள கஷ்டங்களையும், அவரது ஆலோசகர்களுக்குள்ள கஷ்டங்களையும் நான் அறிவேன். ஒரு சர்க்கார், எவ்வளவு எதேச்சாதிகாரம் உள்ளதாயினும், அத் தகைய சீர்திருத்தங்களையொட்டி அசைந்து கொடுப்பதில், எப்போதும் தைரியமற்றும், ஜாக்கிரதையாகவுமே இருந்து வரும். அத்தகைய சீர்திருத்தங்களையொட்டிய கிளர்ச்சியை விவேகமுள்ள ஒரு சர்க்கார் வரவேற்கும். விவேகமற்ற ஒரு சர்க் காரோ, பொதுஜன அபிப்பிராயத்தைக் கண்டு பொறுமை யிழந்து, அத்தகைய கிளர்ச்சிகளை நசுக்கப் பலாத்காரத்தை உப யோகிக்க முற்படும். இந்தச் சீர்திருத்தம் நிறைவேறுவதற்குத் தங்கள் கையைப் பலப்படுத்தும் கிளர்ச்சியைச் சகிப்பது மாத்திர மல்ல, அதை வரவேற்கும் ஒரு சர்க்காரை நீங்கள் பெற்றிருக் கிறீர்கள். இதை, வைக்கம் சத்தியாக்கிரகத்தில் நான் பெற்ற சொந்த அனுபவத்திலிருந்து தெரிந்துகொண்டேன். எனவே, இவ்விஷயத்தில் திருவாங்கூர் மக்கள்தான் முதற்படி எடுத்து வைக்க வேண்டும்; அதுவும் அவர்ண ஹிந்துக்கள் என்று தவருக அழைக்கப்படும் 'தீண்டாதார்' அல்ல, மற்றவர்களே முதலில் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். 'அவர்ண' ஹிந்து என்று கூறுவது தவருகும்; அந்தப் பெயர் ஹிந்து மதத்துக்கே இழிவானது. பல இடங்களிலும் தீண்டாமைக்குப் பரிகாரம் தேடுவது அல்லது பரிகாரம் தேட முதல் முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டியது, 'சவர்ண' ஹிந்துக்களையே சார்ந்திருக் கிறது. அவர்களே தீண்டாமைப் பாவத்தைக் களைய வேண்டிய வர்களாக இருக்கிருர்கள்.

தீண்டாமை ஒரு குற்றம் என்ற நம்பிக்கையிருந்தும், அதைச் சகித்துக்கொண்டு வாளாவிருப்பது போதாது என உங்களுக் குக் கூற விரும்புகிறேன். குற்றத்தை மௌனமாகப் பார்த்துக் கொண்டிருப்பவர், உண்மையில் சட்டப்படி அதில் தீவிரமாகப் பங்கு எடுத்துக்கொண்டவராகிருர். எனவே, நீங்கள் சட்டத் துக்கு உட்பட்டும், நியாயமாகவும் சகல முறைகளையும் கைக் கொண்டு, கிளர்ச்சியை ஆரம்பித்துத் தொடர்ந்து நடத்த வேண்டும், காலம் கடந்த இந்தச் சீர்திருத்தத்தை எதிர்க்கும் பிராம்மண புரோகிதர்களின் செவிகளில் என் வார்த்தைகள் விழுமாயின், அவர்கள் செவி கொடுக்கட்டும். புரோகிதர்களே, மதத்தின் உண்மையான காவலர்களாக இருக்க வேண்டியவர்

கள். ஆனல், தாங்கள் காவலர்களாக இருக்கும் மதத்தை அழிப்பதற்கு அவர்களே கருவியாக இருந்து வருகிருர்கள் என்பது வருந்தத்தக்க உண்மையாகும்; சரித்திர பூர்வமான உண்மையாகும். திருவாங்கூரிலும். மற்றவிடங்களிலும்கூட, மதத்தின் காவலர்கள் என்று கருதப்படும் பிராம்மணப் புரோகிதர்களே, அறியாமையினுலும் அல்லது இன்னும் மோசமான காரணத்தினுலும் மதத்தை அழித்து வருவதைநான் என் கண் முன் காண்கிறேன். அவர்களுடைய கற்றறிவெல்லாம், ஒரு பயங்கரமான மூடநம்பிக்கையையும், கொடுமையான தவறையும் நிலை நிறுத்துவதற்காக உபயோகிக்கப்படும்போது, மண்ணுகிவிடுகிறது. எனவே, நிலைமை எல்லை மீறிப் போகுமுன் காலப்போக்கின் அறிகுறிகளை அவர்கள் உணரவேண்டும்; நாம் அறிந்தோ, அறியாமலோ அவர்களையும் நம்மையும் சத்தியப் பாதையில் கொண்டு செல்லும் கால நிகழ்ச்சிகளுக்கு இணங்க முன் செல்ல வேண்டுமென்று விரும்புகிறேன். உலகத்தில் உள்ள எல்லா மதங்களுக்கும் மற்ற விஷயங்களில் வேற்றுமையிருந்தாலும், இந்த உலகில் சத்தியமே நிரந்தரமானது, வேறெதுவுமல்ல என்று எல்லாம் ஒருமிக்கப் பிரகடனம் செய்கின்றன.

சீர்திருத்தவாதி பொறுமையிழந்து அவசரப்படுவது நியாயமேயாகும். ஆனல், அவ்வாறு பொறுமையிழக்கும் சீர்திருத்தவாதியை எச்சரிக்க விரும்புகிறேன். அவர் சரியான, நேர்மையான, குறுகிய பாதையில் ஜாக்கிரதையாகச் சென்ருலன்றி, அவர் தமக்குத் தாமே தீங்கு விளைவித்துக்கொள்ளுவார். சீர்திருத்தவாதியின் கையிலே, சத்தியாக்கிரக உருவத்தில் ஓர் இணையற்ற, விலை மதிக்க முடியாத ஆயுதத்தை நான் கொடுத்துள்ளேன் என்று கூறத் துணிகிறேன். எனினும், வெற்றிகரமான சத்தியாக்கிரகத்தின் நிபந்தனைகள் ஓரளவு கடுமையானவை. அவருக்குக் கடவுளிடம் நம்பிக்கையிருந்தால், தம்மிடத்திலேயே நம்பிக்கையிருந்தால், தமது லட்சியத்தில் நம்பிக்கையிருந்தால், அவர் ஒரு போதும் பலாத்காரத்தில் ஈடுபடமாட்டார். அநீதியாகவும், அறியாமை காரணமாகவும், பலாத்காரமாகவும்கூட நடந்து கொள்ளுவதாகத் தாம் நியாயமாகக் குற்றஞ்சாட்டும் கொடிய விரோதியிடத்திலும் அவர் பலாத்காரத்தைக் கைக்கொள்ளமாட்டார். சத்தியம் எக்காலத்திலும் பலாத்காரத்தினுல் நிலைநிறுத்தப்பட்டதில்லையென்று நான் நிர்ப்பயமாகக் கூறுகிறேன். எனவே, ஒரு சத்தியாக்கிரகி தம்முடைய எதிரியை அல்லது எதிரி என்று தாம் நினைக்கும் ஒருவரை, பலாத்காரத்தின் சக்தியால் அல்ல, அன்பின் சக்தியால், அவரது மனத்தை மாற்றுவதால் வெற்றிகொள்ள வேண்டுமென்று எதிர்பார்க்கிருர். அவரது முறைகள் எப்போதுமே அமைதியாகவும் கண்ணியமாகவும் இருக்கும். அவர் ஒருபோதும் மிகைபடக் கூறமாட்டார். சாத்விகத்தை அன்பு என்று குறிப்பிடலாம். அதன் ஆயுதம் என்னவெனில், பிறரைத் துன்புறுத்தாமல், தம்மைத் தாமே துன்பத்திற்குள்ளாக்கிக் கொள்ளுவதுதான். அதிலும் குறிப்பாக,

தீண்டாமை போன்ற பெரிதும் மத சம்பந்தமான இயக்கத்தில், ஆன்ம பரிசுத்த இயக்கத்தில், துவேஷத்துக்கோ, அவசரத் துக்கோ, யோசனையின்மைக்கோ, மிகைபடக் கூறுதலுக்கோ இடமில்லை. மிகவும் சக்தி பொருந்திய நேரடியான நடவடிக்கை முறைகளில் சத்தியாக்கிரகமும் ஒன்றாதலால், ஒரு சத்தியாக் கிரகி தாம் சத்தியாக்கிரகத்தில் ஈடுபடுமுன், மற்றெல்லா விதமான பரிகார முறைகளையும் கைக்கொண்டு பார்த்துவிட வேண்டும்.

எனவே, அவர் இடைவிடாது எப்போதும் அதிகார வர்க் கத்தை அணுகித் தங்கள் கோரிக்கையைத் தெரிவித்துக் கொள்ளவேண்டும் : பொதுஜன அபிப்பிராயத்தைக் கோர வேண்டும் ; பொது மக்களின் அபிப்பிராயத்தை உருவாக்க வேண்டும் ; அவருக்குச் செவி கொடுக்க விரும்பும் ஒவ்வொரு வரிடமும் தமது கட்சியை அமைதியாகவும் நிதானமாகவும் எடுத் துக் கூறவேண்டும். இந்த முறைகளையெல்லாம் கைக்கொண்டு தீரவேண்டும். அதன் பிறகுதான், அவர் சத்தியாக்கிரகத்தில் ஈடு படவேண்டும். தவிர்க்கமுடியாத இதயக் குரலின் வற்புறுத்தலுக் கிணங்க அவர் சத்தியாக்கிரகத்தில் இறங்கிவிட்டால், பிறகு பின் தங்குவதென்ற பேச்சிற்கே இடமில்லை, எனினும், சந்தேகத் துக்கு இடமின்றிக் கண்முன் காணும் ஒரு தவறைத் திருத்துவ தற்காக, இங்குள்ள மக்கள் அந்தத் துன்பத்திற்கெல்லாம் ஆளாகவேண்டிய அவசியம் இராதென்றே நம்புகிறேன்.

இந்தச் சமஸ்தானத்தில் நான் பிரவேசித்த உடனேயே, போலீஸ் கமிஷனர் அன்புடன் என்னை வந்து பார்த்தார் என் பதை அறிய நீங்கள் மகிழ்ச்சியடைவீர்கள். இந்தப் பெரிய பிரச்னை பற்றி நாங்கள் விவாதித்தோம். எனக்குத் தெரிந்த வரையில், இப்போது இங்கே இரு பிரச்னைகள் தீராமலிருந்து வருகின்றன. ஒன்று, திருவார்ப்புவைச் சுற்றியுள்ள ரஸ்தாக்கள் பற்றியது ; மற்றொன்று சுசீந்திரம் சம்பந்தமானது. நான் அறிந்தவரையில், இந்த இரண்டு இடங்களிலும் சீர்திருத்தவாதி களின் பக்கத்திலேயே நியாயம் இருக்கிறது. முதலில் கூறப் பட்ட இடத்தில் சத்தியாக்கிரகிகள் ஏற்கெனவே போராட் டத்தை ஆரம்பித்துவிட்டார்களென்று அறிகிறேன். அது அவசரப்பட்டுக் கைக்கொண்டுள்ள ஒரு நடவடிக்கையென்றே எண்ணுகிறேன். எனவே, தாற்காலிகமாக அதை நிறுத்திவிட வேண்டுமென்றும், நாளை திருவனந்தபுரத்தில் என்னை வந்து பார்க்கும்படியும் கேட்டுக்கொண்டு அவர்களுக்கு ஒரு தந்தி கொடுத்திருக்கிறேன். எனக்குச் சந்தர்ப்பம் அளிக்கப்பட்டால்— சந்தர்ப்பம் அளிக்கப்படுமென்று நம்புகிறேன்—இந்த இரண்டு பிரச்னைகளையும் பற்றி நான் அதிகாரிகளுடன் விவாதிக்க உத்தேசித்துள்ளேன். கதரையும் கதர் வசூல்களையும் உத்தே சித்து மாத்திரமே நான் இப்போது திருவாங்கூருக்கு வந்தேன். நான் இங்கே வந்ததும் வராததுமாக விதி என்னைத் தீண்டாமை அமளியில் இழுத்துத் தள்ளிவிட்டது. நான் இங்கிருக்கும் குறுகிய

காலத்துக்குள் இப்பிரச்னையில் ஒரு கௌரவமான சமரசம் ஏற்பட, நான் அரசாங்கத்துக்கும் மக்களுக்கும் உதவி புரிவதற்குத் தாழ்மையுடன் முயற்சிக்கச் சிறிதும் அயரமாட்டேன்.

—'எங் இந்தியா' – 20—10—1927

# 4

# காலம் வரக் காத்திருக்க வேண்டாம்

தென்கோடியில், அதாவது கேரளத்தில் தீண்டாமை படு மோசமான, நாகரிகமற்ற முறையில் நிலவி வருகிறது. அப்படியிருந்தும் அந்தத் தீமையை ஒழிக்க, தெற்கேயுள்ள சீர்திருத்தக்காரர்கள் அதிக முயற்சியோ, போதிய முயற்சியோ எடுத்துக் கொள்ளவில்லை. எவ்வளவு அவசியமோ, அவர்களுக்கு எவ்வளவு சாத்தியமோ, அந்த அளவுகூட அவர்கள் இந்த இயக்கத்துக்குப் பண உதவி புரிய மறுக்கிறார்கள். கள்ளிக்கோட்டைக்கு நான் சென்றபோது, அங்கே உள்ள ஜனங்களிடம் வசூல் செய்யத் தொடங்கினேன். அப்போது, கள்ளிக்கோட்டையில் வசூலானதை விடத் தாங்கள் மிகவும் அதிகமாக, குறிப்பிடத் தகுந்த தொகை வசூல் செய்து, பம்பாய் வழியாக நான் செல்லும்போது கொடுக்க உத்தேசித்திருப்பதாக, பம்பாயில் உள்ள தென்னிந்தியக் காலனி வாசிகள் அறிவித்ததைக் கண்டு நான் மகிழ்ச்சியடைந்தேன். சமீபத்தில் நான் பம்பாய்க்குச் சென்றபோது, அவர்கள் தங்களுடைய உறுதி மொழியைத் தொடர்ந்து ஒரு கோஷ்டியாக என்னிடம் வந்தார்கள்; தாங்கள் அளித்த உறுதி மொழியை மறந்துவிட வில்லையென்றும், வசூல் செய்வதற்குச் சாதகமான காலத்தைத் தாங்கள் எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாயும் கூறினார்கள்.

அவர்களில் ஒருவர் இப்போது எழுதுகிறார்: "சொற்ப சம்பளமுள்ள பல இளைஞர்கள் தங்களுடைய பணத்தைக் குதிரைப் பந்தயங்களிலும், மற்றும் உள்ள பட்டணத்துக் கேளிக்கைகளிலும் வீண் விரயம் செய்து வருகிறார்கள். தற்போதைய போக்கிலிருந்து அவர்களை நாம் தடுக்கக் கூடுமாயின், அவர்களுடைய நன்மைக்காகவும் பம்பாய் நகரின் நன்மைக்காகவும் அவர்களிடமிருந்து அதிகம் எதிர்பார்க்க முடியும்."

இந்தச் சீர்திருத்த இயக்கமானது, தென்னிந்திய இளைஞர்களிடையே ஆழ்ந்து வேரூன்றுமென நம்புகிறேன். சாதகமான உற்ற காலத்துக்காகக் காத்திருக்க வேண்டாமென அவர்களுக்கு ஆலோசனை கூறுகிறேன். நல்ல வேலை செய்வதற்கோ, பிச்சையெடுப்பதற்கோ அல்லது நல்ல காரியத்திற்காகப் பண உதவி

செய்வதற்கோ எந்தக் காலமும் சாதகமான உற்றகாலம்தான். தீண்டாதார்கள், நெருங்கக் கூடாதவர்கள், பார்க்கக்கூடாதவர்கள், இவர்களுக்குச் செய்யும் உதவியைக் காட்டிலும் சிறந்தது வேறு என்ன இருக்க முடியும்? பம்பாயில் வாழும் தென்னிந்தியர்கள் புகை பிடித்தல், குதிரைப் பந்தயங்களில் ஈடுபடுதல், டீ கடைகளுக்குச் செல்லுதல் முதலிய சில ஆடம்பரச் செலவுகளைக் குறைத்துக்கொள்ளுவார்களாயின், கொழுத்த தொகை வசூலாகும். தரும காரியங்களுக்காக ஒருவருடைய வருமானத்தில் ஒரு பகுதியை ஒதுக்கிவைக்க வேண்டுமென ஒவ்வொரு மதமும் கட்டளையிடுகிறது. ஆனால், துரதிர்ஷ்டவசமாக, இக்காலத்தில் இளைஞர்கள் பெரும்பாலும் மதத்தை அசட்டை செய்து விடுகிறார்கள். தரும காரியங்களுக்காக ஒருவருடைய வருமானத்தின் ஒரு பகுதியை ஒதுக்கி வைப்பதென்ற வழக்கம் மீண்டும் உயிர்ப்பிக்கப்படுமாயின், தீண்டாதாருக்கு உதவி புரிவது போன்ற கைங்கரியங்கள், 'சாதகமான காலத்துக்காக' ஒரு போதும் காத்திருக்க வேண்டிய அவசியம் ஏற்படாது.

—'எங் இந்தியா' - 31—5—1928

# 5

# கண்டனமும் குழப்பமும் மறைந்த விந்தை

வார்தாவில் புகழ்பெற்ற, மிகவும் அழகாக அலங்கரிக்கப்பட்ட ஒரு கோவில் இருக்கிறது. அதில் ஸ்ரீ லக்ஷ்மிநாராயணனைப் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். அது, சேத் ஜம்னாலால்ஜியின் பாட்டனாரால் நிர்மாணிக்கப்பட்டதாகும். அது தனிப்பட்டவரின் சொந்தக் கோவிலாயினும், அங்கே பொது மக்கள் செல்லலாம். வார்தாவில் உள்ள கிணறுகளில் தண்ணீர் எடுக்கத் தீண்டாதாருக்கு உரிமை கிடைப்பதற்காக, ஜம்னாலால்ஜி செய்த முயற்சி மிகுந்த வெற்றியைக் கொடுத்திருக்கிறது. பொதுவாக மற்ற வகுப்பினருக்குள்ள சகல வசதிகளும் தீண்டாதாருக்குக் கிடைக்கும்படி செய்யவும் அவர் செய்த முயற்சி வெற்றியைக் கொடுத்திருக்கிறது. அது போலவே, வார்தா கோவிலுக்குச் செல்ல தீண்டாதாருக்கு உரிமையளிக்கவும் அவர் முயற்சி செய்து வந்துள்ளார். கண்மூடித்தனமான வைதீகத்தினால் ஒடுக்கப்பட்டுள்ள தீண்டாதாருக்கு, அந்தக் கோவிலைத் திறந்துவிட வேண்டுமென்ற அவரது அபிப்பிராயத்துக்கு தருமகர்த்தாக்கள் இணங்கும்படி செய்வது, அவருக்குக் கஷ்டமாக இருந்தது. ஆனால், அவரது முயற்சி இறுதியாக வெற்றியளித்திருக்கிறது. சென்ற 17-ந்தேதி தருமகர்த்தாக்கள் கீழ்க்கண்ட தீர்மானத்தை ஏகமனதாக நிறைவேற்றியுள்ளனர்:

"ஸ்ரீ லக்ஷ்மிநாராயணன் கோவிலுக்குள் தீண்டாதாரை அனு மதிக்கும் பிரச்னை பல தடவைகளில் கமிட்டியின் யோசனைக்கு வந்தது. ஆனால், கமிட்டி இதுவரை அவ்விஷயமாக உறுதியான ஒரு முடிவிற்கு வர இயலவில்லை. இந்தியாவில் மிகுந்த பிரதி நிதித்துவம் வாய்ந்த காங்கிரஸ் தீண்டாமை ஒழிப்பை வற்புறுத்தி வருகிறது. எல்லாப் பொதுக் கோவில்களையும் தீண்டா தாருக்குத் திறந்துவிட வேண்டியது அவசியமென்றும் நியாய மென்றும் ஹிந்து மகாசபையும் கருதுகிறது. இந்தியாவில் உள்ள பிரபல தலைவர்களும் அதே அபிப்பிராயத்தைத் தெரிவித் திருக்கிறார்கள். மேற்கூறிய உண்மைகளை மதித்தும், நாட்டின் மத, சமுதாய நிலைமையைப் பூரணமாக ஆலோசித்தும் வார்தா வில் ஸ்ரீ லக்ஷ்மிநாராயணனுக்கு அர்ப்பணம் செய்துள்ள கோவிலைத் தீண்டாதாருக்குத் திறந்துவிடுவதென்று தீர்மானித்துள்ளோம். இந்தத் தீர்மானத்தை, எப்படி அமுலுக்குக் கொண்டு வருவது சிறந்ததென்று அவருக்குத் தோன்றுகிறதோ அவ்வாறு செய்யும் படி, நிர்வாக தருமகர்த்தாவான சேத் ஜம்னாலால் பஜாஜுக்கு அதிகாரம் அளிக்கிறோம்."

அதற்கிணங்க, தீர்மானம் நிறைவேறிய இரண்டு நாட்க ளுக்குப் பிறகு, அதாவது 19-ந் தேதியிலிருந்து கோவில் தீண்டா தாருக்குத் திறந்துவிடப்படுமென்று வார்தாவில் அச்சடித்த அறிக்கைகள் ஏராளமாக விநியோகிக்கப்பட்டன. அந்த அறிக் கைகள் வழங்கப்பட்டதைத் தவிர வேறு கட்டுக்கோப்பான முயற்சி எடுக்காமலிருந்தும் கூட, சற்றேறக் குறைய தீண்டாதார் உட்பட ஆடவர்களும், பெண்களும், குழந்தைகளுமாக 1200 பேர்கள், எவ்வித அசம்பாவிதமும் நேராமல் கோவிலுக்கு விஜயம் செய்தார்களாம்! இதுவரையில் தடுக்கப்பட்டிருந்த புனிதமான கோவில் வாயிற்படியைத் தீண்டாதார் கடந்து சென்றபோது வைதீகத்தின் கண்டனக் குரல் எழவில்லை; சனாதன தருமத்தின் பெயரால் சிலர் குழப்பம் விளைவிக்கவுமில்லை. வார்தாவைப் போன்ற ஒரு முக்கியமான பகுதியில் குழப்பமோ, கண்டனக் குரலோ இல்லாமல் தீண்டாதாருக்குப் பிரபல கோவிலைத் திறந்துவிட முடிந்தது மிகவும் குறிப்பிடத் தக்கதாகும். தீண்டா மைக்கு விரோதமான இயக்கம் பிரமாதமான முன்னேற்றம் அடைந்திருக்கிறதென்பதற்கு அது ஓர் ஆச்சரியகரமான உதா ரணமாகும். ஓர் உண்மையான சீர்திருத்த இயக்கத்துக்கு ஆதரவாக, நியாயமான பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்க, அமைதியான உறுதியும், விடாமுயற்சியும் என்ன செய்ய முடியும் என்பதையும் அது காட்டுகிறது. சேத் ஜம்னாலால்ஜிக்கும் அவரது சகபாடிகளான தருமகர்த்தாக்களுக்கும், அவர்கள் எடுத்துக்கொண்ட தைரியமான காரியத்துக்காக வாழ்த்துக் கூறுகிறேன். இந்த உதாரணத்தை இந்தியா முழுவதும் பின் பற்றுவார்களென்றும் நம்புகிறேன்.

—'எங் இந்தியா' – 26—7—1928.

# 6

# சட்டத்துக்குச் சக்தியில்லை

சட்டத்தின் சக்தியினால் கூட தீண்டாமையை அகற்றிவிட முடியாது. தீண்டாமை, கடவுளுக்கும் மனிதருக்கும் விரோதமான குற்றம் என்பதைப் பெரும்பாலான ஹிந்துக்கள் உணர்ந்து, அதற்காக வெட்கப்பட வேண்டும். அப்போதுதான் தீண்டாமையை ஒழிக்க முடியும். வேறொருவிதமாகக் கூறுவதாயின், அது, ஹிந்துக்களின் மனத்தை மாற்றும், அதாவது ஹிந்துக்களின் இதயத்தைப் பரிசுத்தமாக்கும் ஒரு முறையாகும். தரும கர்த்தாக்களும், கோவிலுக்குச் செல்லும் பொது ஜனங்களும் விரும்பியும் கூட, குறிப்பிட்ட ஒரு கோவிலைத் திறந்துவிடுவதைச் சட்டம் தடுக்கும் போதுதான், அதாவது சீர்திருத்த முன்னேற்றத்தில் தலையிட்டு அதற்கு முட்டுக்கட்டையாக இருக்கும்போது தான், சட்டப்படி வழக்கின் உதவியை நாட வேண்டியிருக்கும்.

—'ஹரிஜன்' - 23—9—1939

# 7

# பிராயச்சித்த வழிகள்

பல நூற்றாண்டுகளாகப் புரிந்துவரும் தீண்டாமைப் பாவத்திற்குப் பிராயச்சித்தம் செய்துகொள்ள ஒரே ஒரு வழிதான் உண்டு. நீங்கள் ஹரிஜனங்கள் வசிக்கும் இடங்களுக்குச் சென்று அவர்களுடன் நட்புக்கொள்ள வேண்டும். உங்கள் குழந்தைகளை நீங்கள் அணைத்துக் கொள்ளுவதுபோல், அவர்களுடைய குழந்தைகளை அணைத்துக்கொள்ள வேண்டும். அவர்களுடைய க்ஷேமத்தில் நீங்கள் அக்கறைகாட்ட வேண்டும். நீங்கள் உரிமையுடன் அனுபவிப்பது போல், ஹரிஜனங்களுக்கு நல்ல வெளிச்சமும் காற்றும் கிடைக்கிறதா, குடிக்க அவர்களுக்குச் சுத்தமான தண்ணீர் கிடைக்கிறதா, அவர்களுக்குப் போதிய உணவு கிடைக்கிறதா என்பதையெல்லாம் கண்டுபிடிக்க வேண்டும். இந்தப் பாவத்துக்குப் பிராயச்சித்தமாக மற்றொரு வழி என்னவெனில், உங்களில் ஒவ்வொருவரும் நூற்புத் தியாகத்தை ஆரம்பித்து, கதரைத் தவிர வேறு எதுவும் உடுப்பதில்லையென்று பிரதிக்ஞை செய்துகொள்ள வேண்டும். கோடிக் கணக்கில் உள்ள இந்த ஒடுக்கப்பட்ட மனிதர்களின் ஜீவனத்திற்கு வழி செய்வது கதர்தான். நூற்புத் தியாகம் அவர்களுடன் நீங்கள் சிறிதளவாவது ஐக்கிய பாவத்துடனிருக்க உங்களுக்கு உதவியாக இருக்கும். நீங்கள் உடுக்கும் ஒவ்வொரு கெஜம்

கதர்த் துணியும், ஹரிஜனங்களுக்கும் ஏழைகளுக்கும் சில செப்புக் காசுகள் கிடைக்கும்படி செய்கிறது. கடைசியாக நீங்கள், ஹரிஜன் நிதிக்கு உங்களால் இயன்றதைக் கொடுத்து உதவலாம். ஹரிஜனங்களின் கஷ்டங்களுக்குப் பரிகாரம் அளிப்பது ஒன்றே ஹரிஜன் நிதியின் நோக்கமாகும்.

—'ஹரிஜன்' – 31—8—1934

# 8

# மனக்கசப்பு தீர வழி

மகாராஷ்டிரத்தில் உள்ள பிராம்மணரல்லாதார் பிரச்னை பற்றி நான் 'எங் இந்தியா'வில் எழுதியபோது, பிராம்மணரல்லாதாரின் வாதம், முற்றிலும் இல்லாவிட்டாலும் பெரிதும் ஓர் அரசியல் விஷயம் என்பதை உணரவில்லை. பிராம்மணரல்லாதார் சமூகம் பிராம்மண சமூகத்துக்கு விரோதமாகப் புகார் கூறவில்லை; சில படித்த பிராம்மணரல்லாதார் பெரும்பாலும் பிராம்மணர்களான தேசீயவாதிகளை எதிர்த்தே புகார் கூறியிருக்கிறார்கள் என்பதையும் நான் அப்போது உணரவில்லை. பிராம்மணரல்லாதார் என்றால், லிங்காயத்துகள், மகாராஷ்டிரியர்கள், ஜைனர்கள், தீண்டாதார் எல்லோரும் சேர்ந்தவர்களேயாவர். தீண்டாதார், பிராம்மணரல்லாதார் மீது தனியாகப் புகார் கூறுகிறார்கள். தங்களைப் பிராம்மணரல்லாதாரும் ஒதுக்கித்தான் வைத்திருக்கிறார்கள் என்பதே தீண்டாதாரின் புகாராகும். படித்த பிராம்மணரல்லாதார் கூறும் புகார்கள், எல்லாப் பிராம்மணரல்லாதாருக்கும் பொதுவானவை அல்ல. அவை வருமாறு:

1. பிராம்மணர்களுக்கு இருப்பது போல், படித்த பிராம்மணரல்லாதாருக்கு அவ்வளவு அரசியல் அதிகாரம் இல்லை. பிராம்மணர்களைக் காட்டிலும் பிராம்மணரல்லாதாரின் தொகை எவ்வளவோ மடங்கு அதிகமெனினும், பிராம்மணர்கள் தான் அதிகமாகச் சர்க்கார் உத்தியோகங்களில் இருக்கிறார்கள்; அவர்களுக்குத்தான் ஜனப்பிரதிநிதி ஸ்தாபனங்களிலும் அதிக ஸ்தானங்கள் இருக்கின்றன.

2. கோவில் மூலஸ்தானத்திற்குள் லிங்காயத்துகள் செல்லக்கூடாதென்றும், கோவில் தங்களுடைய சொந்தக் கோவிலென்றும் சில பிராம்மணர்கள் கூறுகிறார்கள். இந்தப் போலிக் கூற்றைப் பொதுவாக எல்லாப் பிராம்மணர்களும் ஆதரிக்கிறார்கள்.

3. பிராம்மணர்கள், எல்லாப் பிராம்மணரல்லாதாரையும் சூத்திரர்களாகக் கருதி நடத்துகிறார்கள்; பிரிட்டிஷார் எல்லா இந்தியர்களையும் எவ்விதம் நடத்துகிறார்களோ அதேவிதமாகத் தான் நடத்துகிறார்கள்.

பிராம்மணரல்லாதார் கூறும் வாதம் மிகவும் பலவீன மானது. எனவே, தேசீயக் கட்சியைச் சேர்ந்த பிராம்மணர்கள் காங்கிரசின் ஒத்துழையாமைத் திட்டத்தை முற்றிலும் நிறைவேற்றுவார்களாயின், மகாராஷ்டிரத்தின் பொது வாழ்க்கையிலிருந்து பிராம்மணரல்லாதாரின் இயக்கம் மறைந்துவிடும் என்பது நிச்சயம். மத அல்லது சமுதாயக் குறைபாடு காரணமாக அந்த இயக்கம் வலுப் பெறவில்லை; பிராம்மணர்களின் அரசியல் ஆதிபத்தியம் காரணமாகவே அது பலம் பெற்றுள்ளது. சந்தேகமின்றி யோக்கியதாம்சம் காரணமாகவே பிராம்மணர்கள் அரசியல் ஆதிபத்தியம் பெற்றிருக்கிறார்கள். சுயராஜ்யம் பற்றிப் பரந்த கருத்துக்கள் கொண்டுள்ள தேசீயப் பிராம்மணர்கள், சர்க்கார் உத்தியோகங்களை அறவே விலக்கிவிட வேண்டும்; சட்டசபைகளையும் முனிசிபாலிடிகளில் உள்ள நியமன ஸ்தானங்களையும் பகிஷ்கரித்துவிட வேண்டும். அவ்விதம் செய்தால் பிராம்மணரல்லாதாரின் புகார் அறவே மறைந்துவிடும். பிராம்மணரல்லாதாருக்குத் தெரியாமலேயே சர்க்கார் அவர்களை பிராம்மணர்களுக்கு எதிராகத் தூண்டி சூழ்ச்சி செய்வார்கள். அதுதான் சர்க்காரின் கொள்கை என்பது நிருபிக்கப்பட்டதாகும். இரு சாராருக்கும் அவ்விதம் சண்டையைத் தூண்டிவிட்டும், பிராம்மணரல்லாதாருக்கு அரசியல் சலுகைகள் அளித்து ஆசைகாட்டியும், சர்க்கார் தங்கள் ஆயுளை நீடித்துக் கொள்ள முயற்சிப்பார்கள்.

பிராம்மணர்கள் அதற்கெல்லாம் இடம் கொடுக்காமல், பிராம்மணரல்லாதாரின் எதிர்ப்பைத் தீங்கற்றதாகச் செய்துவிட வேண்டும். அதாவது, எந்த உருவத்திலும் அவர்கள் சர்க்கார் ஆதரவையோ, சலுகையையோ துறந்துவிட வேண்டும். இந்தப் பிரச்னை இவ்வளவு கடுமையாக முற்றியிருப்பதற்குக் காரணம் என்ன தெரியுமா? பிராம்மணரல்லாத தலைவர்கள், வாக்காளர்களைத் தங்கள் பக்கம் திருப்ப முயற்சித்து வருகிறார்கள்; பிராம்மணரல்லாதார் பலவீனமானவர்களென்றும், எனவே தாங்கள் பிரிட்டிஷாரின் உறவை நாட வேண்டுமென்றும் வாக்காளர்களிடம் கூறி வருகிறார்கள். பிராம்மணர்களும், அதே வாக்காளர்களை ஓட்டுப் போடாமலிருக்கும்படி செய்ய முயற்சித்து வருவது இயல்பேயாகும். இதனால் பகை ஏற்படுகிறது. தாங்கள் பாமர மக்களின் பிரதிநிதிகள் என்றும், அவர்களுக்காகத் தாங்கள் வருந்துவதாகவும் சொல்லிக்கொள்ளும் பிராம்மணரல்லாத தலைவர்கள், சர்க்காருடன் ஒத்துழைப்பதன் மூலமோ, அல்லது சர்க்கார் உதவியால் தங்கள் நிலைமையை அபிவிருத்தி செய்து கொள்ள முயற்சிப்பதன் மூலமோ, உண்மையில் பாமர மக்களின்மீது சர்க்காருக்கு உள்ள பிடியை இறுக்கியவர்களாகிறார்கள். இந்த நிலைமைதான் மிகவும் வருந்தத்தக்கதாக இருக்கிறது. அவர்கள் சர்க்கார் உதவியை நாடுவதால், பாஞ்சால, கிலாபத் தவறுகளுக்குப் பரிகாரம் கிடைப்பது அதிகக் கஷ்ட

மாகிவிடும். எனவே, பிராம்மணரல்லாதார் கொள்கை தற்கொலைக்கு ஒப்பாகும் என்பது நிதர்சனம்.

பாமர மக்களை ஆண்மையற்றவர்களாகச் செய்து, அவர்களது பொருளாதார நிலைமையைச் சீர்குலைத்துத் தங்களுக்குச் சாதகமாக உபயோகித்துக் கொள்வதே சர்க்காரின் கொள்கையாக இருக்கிறது. எனவே, பிராம்மணர்களுக்கோ அல்லது தேசீய வாதிகளுக்கோ விரோதமாக, பிராம்மணரல்லாதாருடைய புகார் எதுவாயினும், அவர்கள் சர்க்காருடன் ஒத்துழைப்பதன் மூலம் அதற்குப் பரிகாரம் பெறமுடியாது என்பது நிச்சயம். பாஞ்சால, கிலாபத் தவறுகளைத் திருத்த சர்க்கார் மறுப்பதற்கு அடிப்படையான காரணம், எப்படியாயினும் பிரிட்டிஷாரின் கௌரவத்தை நிலைநிறுத்த வேண்டும் என்ற கொள்கைதான். ஒரு லட்சம் ஆங்கிலேயர்கள், கேவலம் மிருக பலத்தினால் முப்பது கோடி மக்களை அடிமைத்தனத்தில் வைத்திருக்க முடியாது.

ஆனால், அவர்கள் மிகத் தந்திரமான முறையில் மக்களை நாளுக்கு நாள் திக்கற்றவர்களாகச் செய்து தங்களுடைய அதிகாரத்தை வலுப்படுத்திக் கொள்ள முடியும்; வலுப்படுத்தியும் வருகிறார்கள். எனவே, சர்க்காருடன் ஒத்துழைப்பது ஆபத்தாக முடியுமென நான் பிராம்மணரல்லாத தலைவர்களை எச்சரிக்கத் துணிகிறேன். அவர்கள் எந்தக் குறிக்கோளை நாடிவருகிறார்களோ அந்தக் குறிக்கோளுக்கு, சர்க்காருடன் ஒத்துழைப்பதால் பாதகமே ஏற்பட்டுத் தீரும். ஒரு சிலர் சர்க்கார் உத்தியோகங்களைப் பெறுவதாலோ அல்லது சட்டசபை அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுக்கப்படுவதாலோ, பாமர மக்களின் பொருளாதார நிலையை அவர்கள் உயர்த்திவிட முடியாது.

பொருளாதார அந்தஸ்தைக் கொண்டு தீர்மானிப்பதாயின், சென்ற முப்பத்தைந்து வருடங்களாக நாம் மேற்கொண்ட அரசியல் நடவடிக்கைகள் பேராபத்திலே முடிந்திருக்கின்றன. பஞ்சம், பிணி இவற்றின் சூறையாடல்களைச் சகித்து நிற்க இந்திய மக்களுக்கு ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னிருந்த சக்தி இன்று இல்லை. நம் தேச சரித்திரத்தில் எக்காலத்திலும் இராதவாறு, இப்போது மக்கள் ஆண்மையிழந்து கிடக்கின்றனர்.

தங்களுடைய அரசியல் நிலைமை முன்னேறுமென நினைத்துக் கொண்டு பிராம்மணரல்லாத தலைவர்கள் சர்க்காரைத் தழுவிக் கொள்ளுவதால் ஏற்படவிருக்கும் பேராபத்தை, பிராம்மணர்களடங்கிய மாபெரும் கட்சியினர் எளிதில் தவிர்க்க முடியும். அவர்கள் விவேகமுள்ளவர்கள், சக்தி பொருந்தியவர்கள், பரம்பரையாக அதிகாரமும் கௌரவமும் வாய்ந்தவர்கள். அவர்கள் வெற்றி பெறுவதற்காக வணங்கிக் கொடுக்க முடியும். ஒத்துழையாமைத் திட்டத்தை இதயபூர்வமாக அங்கீகரிப்பது, அப்பிரச்னை தானாகத் தீருவதற்குற்ற ஒரு வழியாகும். எனினும், அது மாத்திரம் போதாது. தாங்கள் பலவீனர்களென்றும், தீங்கிழைக்கப்

பட்டவர்களென்றும் கருதுவோருடன் தாங்களாக நட்புக்கொண்டாலன்றி, மனக்கசப்பு இருந்தே தீரும். கர்னுடகத்தில் உள்ள தேசீயப் பத்திரிகைகள், பிராம்மண ரல்லாதார் விஷயத்தில் கர்வத்துடன் அருவருக்கத் தக்க பாஷையை உபயோகிப்பதாகப் புகார்கள் வருகின்றன. தேசீய பிராம்மணர்களும் அவர்களைச் சிறுமைப்படுத்தியும் அவமதிப்பதாகவும் நடத்துவதாகப் புகார்கள் செய்யப்படுகின்றன. தங்களைக் காட்டிலும் அதிக கற்றறிவுள்ள பிராம்மணர்களிடமிருந்து மரியாதையையும் அன்பையும் ஆதரவையும் எதிர்பார்க்க, கற்றறிவில்லாத பிராம்மணரல்லாதாருக்கு உரிமை உண்டு. பிராம்மணர்களுக்கு விரோதமான வெறுப்பு, பிராம்மணரல்லாதாரில் பெரும்பாலோரை இன்னும் ஆட்கொள்ளவில்லை. மகாராஷ்டிரப் பிராம்மணர், ஹிந்து மதத்தின் தருமகர்த்தாவாக விளங்குகிருர். எனவே, அவரது பரம்பரைக் குணத்திற்கு ஏற்றவகையில், பிராம்மணரல்லாதார் பிரச்னையை அவர் தீர்த்து வைப்பார் என்பதில் எனக்குப் போதிய நம்பிக்கை இருக்கிறது.

—'எங் இந்தியா' – 17—11—1920

# 9

# இந்தியாவைப் பிரிக்க வேண்டாம்

'எங் இந்தியா' ஆசிரியருக்கு,

சென்ற வெள்ளிக்கிழமை சென்னைக் கடற்கரையில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்தில், பிராம்மணர்கள் பற்றியும் பிராம்மணரல்லாதார் பற்றியும் சில விஷயங்களைக் குறிப்பிட்டார். அவரது பிரசங்கம், சென்னையிலுள்ள பிராம்மணரல்லாத தேசீயவாதிகளுக்கு மிகுந்த வேதனையைக் கொடுத்திருக்கிறது. காந்திஜி, இவ்விஷயத்தைப் பற்றி அறவே குறிப்பிடாமல் இருந்தால், அது மிகவும் விரும்பத்தக்கதாக இருந்திருக்கும். ஏனெனில், திராவிட நாகரிகம், மதம், பண்பாடு, தற்போதைய பிராம்மணரல்லாதார் இயக்கத்தின் காரணங்கள், அதன் உட்பொருள் இவற்றைப் பற்றிக் காந்திஜிக்கு எதுவுமே தெரியாதென்பது, அவரது பிரசங்கத்திலிருந்து தெளிவாகத் தெரிகிறது. இந்தியாவின் மற்றப் பகுதிகளிலிருந்து தென்னிந்தியாவைத் தனித்துக் காட்டும் திராவிட நாகரிகத்தின் விசேஷ அம்சங்களை அவர் உணர்ந்திருப்பதாகத் தெரியவில்லை. இந்தியாவின் மதத்துக்கும் நாகரிகத்திற்கும் (ஒருவேளை அவர் வட இந்தியாவைக் குறிப்பிடலாம்) பிராம்மணர்கள் தங்கள் பங்குக்குச் செய்துள்ள தொண்டைப் புகழ்ந்ததன் மூலம் காந்திஜி தம்மையறியாமலே பிராம்மணரல்லாதாருக்குக் களங்கத்தை உண்டுபண்ணியிருக்கிருர். ஏனெனில், பிராம்மணரல்லாதாரின் மூதாதையர்கள், தென்னிந்தியாவின் சிறப்புக்குப் பிராம்மணர்களைக் காட்டிலும் அதிகத் தொண்டு புரியாவிடினும், பிராம்மணர்களுக்குச் சமமாகத் தொண்டு புரிந்துள்ளனர். இதற்கு, அவர்களுடைய இலக்கியம், மதம், தத்துவ சித்தாந்தம் முதலியவை சான்ருக அமைந்துள்ளன. யாருடைய இதயத்தில் அன்பு ததும்புகிறதோ, யாரிடம்

பிராம்மணரல்லாதார் சமூகம் பெருமதிப்புக் கொண்டுளதோ, அப்படிப்பட்ட ஒருவர் அறியாமல் கூறியிருந்தால்கூட, அத்தகைய களங்கத்தைக் காட்டிலும் ஒரு சமூகம் முழுவதற்கும் அதிருப்தி ஏற்படக் கூடிய விஷயம் வேறெதுவும் இருக்க முடியாது. காந்திஜியின் சமீப கால விஜயமும், அடுத்த மாத மத்தியில் அவர் தென்னிந்தியாவில் நீண்ட யாத்திரை செய்ய உத்தேசித்திருப்பதும், ஒத்துழையாமை நோக்கத்தைப் பலப்படுத்த, ஒத்துழையாமை இயக்கத்தைப் பிரசாரம் செய்வதற்காகத்தான் எனலாம்.

ஆனால், மிகவும் தொல்லையான ஒரு பிரச்னை பற்றி அவசரப்பட்டும் வாய்க்கு வந்தபடியும் பேசுவதால், அவரது நோக்கம் பலவீனமடைவதுடன், அவ்விஷயத்தில் மனம் நொந்துள்ள மிகப் பெரும்பான்மையோரின் அனுதாபத்தையும் இழக்கும்படி நேரும்.

தென்னிந்தியாவில் பிராம்மணருக்கும் பிராம்மணரல்லாதாருக்கும் இடையே ஏற்பட்டுள்ள பிளவு துரதிர்ஷ்டவசமாக நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது. இந்தப் பிளவைத் தீர்த்து, ஒற்றுமை ஏற்படும்படி செய்ய காந்திஜி உண்மையாக விரும்பினால், விருப்பு வெறுப்பின்றித் திறந்த மனத்துடன் இந்தப் பிரச்னையைத் தீர்க்க உறுதியுடன் அக்கறை எடுத்துக் கொள்ளட்டும். அப்படியானால், ஒரு வேளை அவர் மிகுந்த ஆராய்ச்சிக்குப் பின் இந்தப் பிரச்னையைத் தீர்க்கும் வழியைக் கண்டுபிடிக்கக் கூடும். அவ்விதமில்லாவிடில், அவர் வரப்போகும் தென்னிந்திய யாத்திரையின் போது, பிராம்மணர்—பிராம்மணரல்லாதார் தகராறில் சிறிதும் தலையிடாமல் ஒதுங்கியிருப்பதுதான் மகத்தான ஒத்துழையாமை இயக்கத்திற்கு நன்மையாகும்.

சென்னை, 11—4—1920 சி. கந்தஸ்வாமி

இதே தொனியில் எனக்குப் பல கடிதங்கள் வந்திருக்கின்றன. இந்த நிருபர்கள், நான் கூறியதைத் தவறாக அர்த்தம் செய்து கொண்டுள்ளனர் என்பது தெளிவாகத் தெரிகிறது. எனது பிரசங்க விவரத்தை நான் பார்க்கவில்லை. எனவே, அது தவறான வியாக்கியானத்துக்கு இடம் கொடுக்கிறதா என்பது எனக்குத் தெரியாது. திராவிட நாகரிகத்தின் சாதனைகளை யாரும் மறுக்கவில்லை, எதிர்க்கவுமில்லை. எனினும், அந்தச் சாதனைகளால், ஹிந்து மதத்திற்கோ அல்லது மானிட வர்க்கத்துக்கோ பிராம்மணர்கள் புரிந்துவந்துள்ள தொண்டு பாதிக்கப் படவுமில்லை, குறைந்துவிடவுமில்லை. ஆரிய வடநாட்டிலிருந்து திராவிடத் தென்னாட்டைப் பிரித்து ஒதுக்க வேண்டாமென்றும் இந்த நிருபர்களை எச்சரிக்கிறேன். இன்றைய இந்தியா இரண்டு பண்பாடுகள் மாத்திரமல்ல, மற்றும் பல பண்பாடுகள் சேர்ந்த ஓர் ஐக்கிய நாடேயாகும்.

—'எங் இந்தியா' – 27—4—1920

# 10

# வேற்றுமையில் ஒற்றுமை காண வேண்டும்

நான் தக்ஷிணத்தில் யாத்திரை செய்தபோது சாதி முறை பற்றிக் கூறிய விஷயங்களைக் கண்டித்து, பலர் கோபத்துடன் கடிதங்கள் எழுதியிருக்கிறார்கள். அந்தக் கடிதங்களை நான் பிரசுரிக்கவில்லை. ஏனென்றால், அக்கடிதங்களில் தூஷணையைத் தவிர வேறெதுவுமில்லை, தூஷணையிராத கடிதங்களில் நியாய மான வாதமில்லை. 'எங் இந்தியா'வின் கருத்துக்களை ஆதரிக் காதவர்களுடைய அபிப்பிராயங்களை நான் அதில் பிரசுரிக்க ஆர்வமுடையவனாக இருக்கிறேன். ஆனால், கடிதங்கள் சுருக்க மாகவும் சுவையுடனும் இருக்க வேண்டும். கடுமையாகத் தாக்கி எழுதுவது வாதமல்ல. இதையெல்லாம் நான் கூற நேர்ந்ததற் குக் காரணம் என்னவெனில், எனக்கு எழுதியுள்ள நிருபர்களின் கடிதங்களில் குறைந்த பட்சம் இருவருடைய கடிதங்களாவது பிரசுரமாகியிருக்கும். ஆனால், அவர்களுடைய கடிதங்கள் நீள மாக இருந்ததுடன், தெளிவில்லாமலும் புரியாமலும் இருந்தன. எனினும், அந்த நிருபர்கள் எழுப்பியுள்ள பிரச்னை கவனத்துக்கு உரியதாகவும் விடையளிக்க வேண்டியதாகவும் இருக்கிறது.

சாதி முறையை வைத்துக்கொண்டிருப்பது இந்தியாவின் அழிவிற்கு காரணமாகிவிடுமென்றும், சாதி முறைதான் இந்தி யாவை அடிமைத்தனத்துக்கு ஆளாக்கியதென்றும் அவர்கள் வாதிக்கிறார்கள். ஆனால், நாம் இன்றைய நிலையை அடையும்படி செய்தது சாதி அல்ல என்பதே என் அபிப்பிராயம். நம்மை அடிமைத்தனத்துக்கு உள்ளாக்கியது நம்முடைய பேராசை யும், முக்கிய தருமங்களை நாம் அசட்டைசெய்ததும்தான். ஹிந்து மதம் சிதறுண்டு போகாமல் சாதி காப்பாற்றி யுளது என்பதே எனது நம்பிக்கையாகும். மற்ற ஒவ்வொரு ஒழுங்கு முறையிலும் மாசுக்கள் படிந்திருப்பதுபோல், சாதி முறையிலும் மாசுக்கள் படிந்துள்ளன. சாதியை யொட்டிய நான்கு பிரிவுகள் மாத்திரமே மூலாதாரமானவை, இயற்கை யானவை, அவசியமானவை என்பது என் கருத்து. எண் ணிக்கையற்ற உபசாதிகளால் (சாதியில் உள்ள உட்பிரிவுகள்) சிற்சில சமயங்களில் அனுகூலம் உண்டு என்றாலும், பெரும் பாலும் அவை இடையூறாகவே இருக்கின்றன. அவற்றை எவ் வளவுக்கெவ்வளவு சீக்கிரமாக ஒன்று சேர்த்து ஐக்கியப்படுத்து கிறோமோ, அவ்வளவுக்கெவ்வளவு நன்மை உண்டாகும். உபசாதி களின் அழிவும் புனருத்தாரணமும் சந்தடியின்றி எப்போதும் ஏற்பட்டு வந்துள்ளன; இனியும் ஏற்பட்டே தீரும். அந்தப் பிரச்னையைச் சமாளிக்க, சமுதாய வற்புறுத்தலுக்கும் பொது

ஜன அபிப்பிராயத்துக்கும் சக்தி உண்டென நம்பலாம். ஆனால், மூலாதாரமான நான்கு பிரிவுகளை அழிக்கும் முயற்சியை நான் நிச்சயமாக எதிர்க்கிறேன். சாதி முறை, சமத்துவமின்மையை அடிப்படையாகக் கொண்டதல்ல. அவ்விஷயமாக தாழ்வு என்ற கேள்வியே எழுவதற்கில்லை. சென்னை, மகாராஷ்டிரம் அல்லது மற்றவிடங்களைப் போல் அவ்விதக் கேள்வி எழுமாயின், சந்தேகமின்றி அத்தகைய போக்கைத் தடுக்க வேண்டியது அவசியம். எனினும், அந்த முறை துஷ்பிரயோகம் செய்யப்படுகிறது என்பதற்காக, அதை ஒழித்துவிட வேண்டும் என்று கூறுவதற்குத் தகுந்த காரணம் இருப்பதாகத் தோன்றவில்லை. அதை எளிதில் சீர்திருத்துவதற்கு வழியிருக்கிறது. இந்தியாவெங்கும் உலகத்தின் மற்றப் பாகங்களிலும் அதிவேகமாகப் பரவி வரும் ஜனநாயகத் தத்துவம், சாதி முறையில் உள்ள ஆதிக்க நோக்கத்தையும் தாழ்வு மனப்பான்மையையும் எள்ளளவும் ஐயமின்றிக் களைந்துவிடும்.

ஜனநாயகத் தத்துவம், வெளித்தோற்றங்களை ரத்து செய்வதன் மூலம் ஒழுங்குபடுத்தக் கூடிய யந்திரம் போன்ற ஒரு பொருளல்ல. அதற்கு மனமாற்றம் தேவையாகும். அந்தத் தத்துவம் பரவுவதற்குச் சாதி தடையாக இருக்குமாயின், இந்தியாவிலுள்ள ஐந்து மதங்களும் – ஹிந்து மதம், இஸ்லாம் மதம், கிறிஸ்துவ மதம், பார்சி மதம், யூதர் மதம் - சமமான முறையில் தடையாக இருக்கின்றன என்றே சொல்ல வேண்டும். சகோதரத்துவ உணர்ச்சியை அறிவுறுத்துவதுதான் ஜனநாயகத் தத்துவத்தின் தேவையாகும். ஒரு கிறிஸ்துவரையோ அல்லது ஒரு முகம்மதியரையோ முற்றிலும் கூடப்பிறந்த சகோதரரைப் போல் என் சொந்த சகோதரராகக் கருதுவதில் எனக்குக் கஷ்டம் எதுவுமில்லை. சாதிக் கொள்கைக்கு எந்த ஹிந்து மதம் பொறுப்போ. அதே ஹிந்து மதம்தான், மனிதரிடையே மாத்திரமல்ல, எல்லா ஜீவராசிகளிடையேயும் அவசியமாக சகோதர பாவத்தை அறிவுறுத்துவதற்கும் பொறுப்பாக இருக்கிறது.

நாம் சாதியை ஒழித்துவிட்டு, ஐரோப்பாவில் இருப்பது போல் தரத்தை அடிப்படையாகக்கொண்ட முறையைக் கைக்கொள்ள வேண்டுமென்று எனக்கு எழுதியுள்ள நிருபர்களில் ஒருவர் யோசனை கூறுகிறார். அதாவது, சாதியிலுள்ள பரம்பரை எண்ணத்தை நிராகரித்துவிட வேண்டுமென்பது அவரது அபிப்பிராயம் போலும். பரம்பரை விதியானது, முடிவற்ற ஒரு நிரந்தரமான விதி என்றே எண்ணுகிறேன். எனவே, அந்த விதியை மாற்றும் எந்த முயற்சியும், இதற்கு முன் முடிந்தது போல, முற்றிலும் மோசமான குழப்பத்தில் முடியும்.

ஒரு பிராம்மணரை எப்போதும், அவர் ஆயுள் முழுவதும் ஒரு பிராம்மணராகவே கருதுவதில் மகத்தான நன்மை இருக்கிறது. அவர் பிராம்மணரைப் போல நடந்துகொள்ளாவிட்டால்,

உண்மையான பிராம்மணருக்குக் காட்டப்படும் மரியாதையையும் மதிப்பையும் அவர் இயற்கையாகவே இழந்துவிடுவார். இதற்காக, தண்டனைகள் அளிக்கவும் வெகுமதிகள் கொடுக்கவும், தாழ்த்தவும் உயர்த்தவும் நீதி மன்றங்கள் அமைப்பதால் ஏற்படக்கூடிய எண்ணிக்கையற்ற சங்கடங்களைக் கற்பனை செய்துகொள்ளுவது எளிதாகும். மறுபிறப்பிலும், மறு உடல் எடுப்பதிலும், ஹிந்துக்கள் நம்பிக்கை வைக்கத்தான் வேண்டும். ஹிந்துக்கள் அதில் நம்பிக்கை வைப்பார்களாயின், இயற்கை, சிறிதும் தவறிவிடாமல் சரியாக நடந்துகொள்ளாத பிராம்மணருக்குத் தண்டனை விதிக்குமென்பதை அவர்கள் அறிந்துகொள்ள வேண்டும். சரியாக நடந்துகொள்ளாத பிராம்மணரை இயற்கை கீழ்த்தரப் பிரிவில் மறுபிறப்பு எடுக்கும்படி தாழ்த்தியும், இந்த ஜன்மத்தில் பிராம்மணரின் வாழ்க்கை முறைகளை அனுஷ்டிக்கும் ஒருவரை அடுத்த ஜன்மத்தில் பிராம்மணராகப் பிறக்கும்படி உயர்த்தியும் கணக்கை நிச்சயமாக ஒழுங்குபடுத்திக் கொள்ளும்.

ஜனநாயகத் தத்துவ வளர்ச்சிக்கு சமபானம் (சமமாகத் தண்ணீர் அருந்துவது), சமபந்தி போஜனம், கலப்பு மணம் இவை அவசியமல்ல என்பதே எனது உறுதியான அபிப்பிராயம். கலப்பற்ற முழு ஜனநாயகத் திட்டத்தின் கீழ், உண்பது, தண்ணீர் அருந்துவது, திருமணம் செய்துகொள்ளுவது இவை சம்பந்தமாக ஒரேவிதமான சம்பிரதாயங்களும், பழக்க வழக்கங்களும் இருக்குமென நான் நினைக்கவில்லை. நாம் எப்போதும் வேற்றுமையிலே ஒற்றுமையை நாட வேண்டும். ஒருவர், கண்டபடி எவருடனும் சேர்ந்து தண்ணீர் குடிக்கவோ, சாப்பிடவோ விரும்பாததை ஒரு பாவமாக நான் கருதமாட்டேன். ஹிந்து மதத்தில் சகோதரர்களின் குழந்தைகள் கலப்பு மணம் செய்துகொள்ளுவதில்லை. அந்தத் தடை காரணமாக அவர்களுக்குள் அன்னியோன்னிய பாவம் குறைவதில்லை; அது அவர்களுடைய உறவை வளர்க்கிறதென்றும் கூறலாம். வைஷ்ணவக் குடும்பங்களில், தாய்மார்கள் பொதுவான சமையலறையில் சாப்பிடமாட்டார்கள்; மற்றவர்கள் உபயோகிக்கும் பாத்திரத்திலிருந்து தண்ணீர் அருந்தவும் மாட்டார்கள். இது எனக்கு நேரில் தெரியும். அதற்காக அவர்களைத் தனித்தவர்களாகவோ, கர்வம் கொண்டவர்களாகவோ யாரும் கருதுவதில்லை. அவர்கள் மீது மற்றவர்களுக்குள்ள அன்பும் குறைவதில்லை. அவையெல்லாம் ஒழுங்கு நடவடிக்கைக் கட்டுப்பாடுகளாகும். அவை தீமையானவை அல்ல. ஆனால், அவை நகைக்கத்தக்கவாறு எல்லை மீறிப் போனால் தீங்காக முடியலாம். அவ்வித நடவடிக்கைகளின் நோக்கம், தாங்கள் உயர்ந்தவர்கள் என்ற மமதையாக இருக்குமாயின், அந்தக் கட்டுப்பாடு தன்னைத் திருப்தி செய்துகொள்ளுவதற்காகக் கைக்கொண்டதாகிறது. எனவே, அது துன்பத்தைக் கொடுப்பதாக இருக்கிறது. ஆனால், காலம் செல்லச் செல்ல, புதிய நிர்ப்பந்தங்களும் சந்தர்ப்பங்களும் எழும். அப்போது

சமபானம், சமபந்தி போஜனம், கலப்பு மணம் இவை பற்றி ஜாக்கிரதையான மாறுதல்களும் புதிய ஒழுங்குகளும் செய்து கொள்ள வேண்டியிருக்கும்.

ஹிந்துக்கள் நான்கு சாதிகளாகப் பிரிக்கப்பட்டிருப்பதை நான் எப்போதுமே ஆதரித்து வந்திருக்கிறேன். அதை நான் ஆதரிக்கத் தயாராயினும், 'எங் இந்தியா'வில் நான் அடிக்கடி கூறிவந்திருப்பது போல், தீண்டாமையை மானிட வர்க்கத்துக்கு விரோதமான ஒரு கொடிய குற்றமாகவே கருதுகிறேன். அது தன்னடக்கத்தின் அடையாளமல்ல; உயர்ந்தவர் என்ற இறுமாப்பும் துணிவுமாகும். அந்த இறுமாப்பினால் யாதொரு பலனுமில்லை. அது, ஹிந்து மதத்தில் உள்ள வேறெதுவும் இராதவாறு, எந்த அம்சத்திலும் முற்றிலும் நம்மைப்போலவே இருப்பதுடன், பல துறைகளிலும் தேசத்திற்கு முக்கியமான தொண்டு புரிந்துவரும் மானிட வர்க்கத்தைச் சேர்ந்த ஏராளமானவர்களை ஒடுக்கிவைத்திருக்கிறது. அது ஒரு பாவமாகும். அந்தப் பாவத்தை ஹிந்து மதம் எவ்வளவுக்கெவ்வளவு துரிதமாகப் போக்கிக்கொள்ளுகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு ஹிந்து மதத்திற்கே நன்மையுண்டாகும். அப்போதுதான், ஹிந்து மதம் கௌரவமான, உன்னதமான ஒரு மதமென்று அங்கீகரிக்கப்படும். தீண்டாமையை வைத்துக்கொண்டிருப்பதற்குச் சாதகமாக யாதொரு வாதமும் இருப்பதாகத் தெரியவில்லை. பாவமான ஒரு ஏற்பாட்டை ஆதரிப்பதற்காக, வேத நூல்களிலிருந்து எடுத்துக்காட்டப்படும் சந்தேகாஸ்பதமான ஓர் ஆதாரத்தை நிராகரிக்க நான் தயங்கவில்லை. உண்மையில் நியாயமான பகுத்தறிவிற்கோ அல்லது இதயத்தின் கட்டளைக்கோ முரணாக இருக்கும் எல்லா ஆதாரங்களையும் நான் நிராகரித்துவிடுவேன். பகுத்தறிவுக்கு உடன்பாடான ஆதாரமானது, பலவீனமானவர்களுக்கு ஆதரவளித்து அவர்களை உயர்த்துகிறது. அது. அந்தராத்மாவின் மெல்லிய குரலால் புனிதமாக்கப்பட்ட பகுத்தறிவுக்கு முரணாக இருக்கும்போது, பலவீனர்களைச் சிறுமைப்படுத்திவிடுகிறது.

—'எங் இந்தியா' - 17—11—1920

## 11

# முகத்தின்மீது கோபம்கொண்டு மூக்கை வெட்டுவதா?

விவேகானந்தர், பஞ்சமர்களை ஒடுக்கப்பட்ட வகுப்பினர் என்று குறிப்பிடுவது வழக்கம். அவரது வருணனைதான் பெரிதும் உண்மையானது என்பதில் ஐயமில்லை. நாம் அவர்களை

ஒடுக்கிவைத்துள்ளோம். அதன் விளைவாக, நாமும் தாழ்ந்த நிலையை அடைந்துவிட்டோம். கோகலேயின் பாஷையில், நாம் 'சாம்ராஜ்யத்தின் பறையர்களா'கியிருக்கிறோம். பாரபட்சமற்ற கடவுளால், நாம் செய்த வினைக்குத் தகுந்த நீதி நமக்கு வழங்கப் பட்டிருக்கிறது. ஒடுக்கப்பட்டவர்களுக்காக நான் என்ன செய்து வருகிறேன் என்று ஒரு நிருபர் ஆத்திரத்துடன் என்னைக் கேட்கிறார். இரத்தக் கறை படிந்த கைகளைக் கழுவும்படி நாம் ஆங்கிலேயர்களைக் கேட்பதற்கு முன், ஹிந்துக்களாகிய நாம் இரத்தக் கறை படிந்த நமது கைகளைக் கழுவிக்கொள்ள வேண்டாமா? சரியான காலத்தில் கேட்கப்பட்டுள்ள நிருபரின் இந்தக் கேள்வி நியாயமானது. என்னுடைய அடிமைத்தனத்திலிருந்து என்னை நான் விடுவித்துக்கொள்ளாமல், அடிமை நாட்டில் உள்ள ஒருவர் ஒடுக்கப்பட்ட வகுப்பினரை அவர்களுடைய அடிமைத்தனத்திலிருந்து விடுவிப்பது சாத்தியமா? அது சாத்தியமாயின், நான் இன்றே அவர்களை விடுவித்துவிடுவேன். ஆனால்,அது சாத்தியமில்லாத ஒரு காரியமாகும். ஓர் அடிமைக்கு, நியாயமான காரியத்தைச் செய்யக்கூடச் சுதந்திரமில்லை. அந்நிய நாட்டுச் சாமான்களின் இறக்குமதியை நான் தடுப்பது நியாயமாகும். அதை அமுலுக்குக்கொண்டுவர எனக்குச் சக்தியில்லை. மௌலானா முகமது அலி துருக்கிக்கு நேரில் சென்று, துருக்கியர்களின் தரும நியாயமான போராட்டத்தில் இந்தியா துருக்கியின் பக்கத்தில் இருப்பதாகக் கூறுவது நியாயமாகும். ஆனால், அவ்விதம் செய்ய அவருக்குச் சுதந்திரமில்லை. ஓர் உண்மையான தேசீயச் சட்டசபையை நான் அடைந்திருப்பேனாயின், ஒடுக்கப்பட்டவர்களின் ஏகபோக உபயோகத்திற்காக விசேஷமான, சிறந்த கிணறுகள் வெட்டியும், அவர்களுக்கு ஏராளமான சிறந்த பள்ளிக்கூடங்கள் நிர்மாணித்தும், ஹிந்துக்களின் இறுமாப்புக்குச் சரியான பதில் கொடுத்திருப்பேன். அதன் பயனாக, தமது குழந்தைகளுக்குக் கற்பிக்க ஒரு பள்ளிக்கூடம் இல்லை என்ற நிலை தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த ஒருவருக்குக்கூட ஏற்படாது. ஆனால், அந்த நன்னாள் வர நான் காத்திருக்க வேண்டும்.

இதன் மத்தியில், தாழ்த்தப்பட்டவர்கள், தங்கள் பாட்டைத் தாங்களே பார்த்துக் கொள்ளட்டுமென்று விட்டுவிட வேண்டியதுதானா? இல்லவே இல்லை. எனக்குரிய அடக்கமான முறையில் எனது பஞ்சம சகோதரருக்கு நான் என்ன செய்ய முடியுமோ, அதையெல்லாம் செய்திருக்கிறேன், செய்துகொண்டும் வருகிறேன்.

நம் நாட்டில் உள்ள இந்தத் தாழ்த்தப்பட்டவர்களுக்கு மூன்று வழிகள் இருக்கின்றன. அவர்கள் பொறுமையிழந்து, அடிமைகளின் சொந்தக்காரர்களான சர்க்காரின் உதவியை நாடலாம். அவர்களுக்கு அந்த 'உதவி கிடைக்கும். ஆனால், அது மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கியதாக முடியும். இன்று தாழ்த்தப்பட்டோர் அடிமைகளின் அடிமைகளாக இருக்கிறார்கள். அவர்கள்

சர்க்காரின் உதவியை நாடினுல், தங்களுடைய உற்ருர் உறவின ரையே ஒடுக்குவதற்கு அவர்கள் உபயோகிக்கப்படுவார்கள். அவர்களுக்கு விரோதமாகப் பாவம் செய்யப்பட்டு வருவதற்குப் பதிலாக, அவர்களே பாவம் செய்தவர்களாகிவிடுவார்கள். முஸ் லிம்கள் அந்த உதவியைப் பரிசோதனை செய்து பார்த்துத் தோல்வியடைந்தார்கள். சர்க்கார் உதவியை நாடி, பிறகு தங்கள் நிலைமை முன்பு இருந்ததைக் காட்டிலும் மோசமாகிவிட்டதை அவர்கள் கண்டுகொண்டனர். சீக்கியர்கள் தாங்கள் அறியாம லேயே அந்த வழியைக் கைக்கொண்டு தோல்வியடைந்தனர். அதன் காரணமாக, இன்று இந்தியாவில் சீக்கியர்களைக் காட்டி லும் அதிக அதிருப்தி கொண்டுள்ள சமூகம் வேறு எதுவுமில்லை. எனவே, சர்க்கார் உதவி அந்தப் பிரச்னையைத் தீர்க்கக் கூடிய தல்ல.

இரண்டாவது வழி என்னவெனில், ஹிந்து மதத்தை நிரா கரித்துவிட்டு, எல்லோரும் இஸ்லாம் அல்லது கிறிஸ்தவ மதத் துக்கு மாறுவதாகும். லோகாயதமான நன்மைக்காக மதம் மாறு வதை நியாயமென்று கூற முடியுமாயின், நான் தயக்கமின்றி அவ்விதமே யோசனை கூறுவேன். ஆனுல், மதம் இதயத்தைப் பொறுத்த ஒரு விஷயமாகும். சரீர சம்பந்தமான வசதிக் குறை வுக்காக ஒருவர் சொந்த மதத்தை விட்டுவிட்டு வேறு மதத் துக்கு மாறுவது சரியான காரணமாகாது. பஞ்சமர்களை மனி தத் தன்மையற்ற முறையில் நடத்துவது ஹிந்து மதத்தின் ஓர் அம்சமாயின், அதை நிராகரிப்பது அவர்களுக்கும் என் போன்ற வர்களுக்கும்கூட முழு முதற் கடமையாகிவிடும். அப்படியாயின், நானும் என் போன்றவர்களும் மதத்தில் மூடநம்பிக்கை வைத்து அதன் புனிதப் பெயரால் நடைபெறும் ஒவ்வொரு தீமையையும் சகித்துக்கொண்டிருக்க மாட்டோம். ஆனுல், தீண்டாமை ஹிந்து மதத்தின் அம்சமில்லையென்பதே எனது நம்பிக்கை. அதை, ஹிந்து மதத்தில் படிந்துள்ள அழுக்கு என்று கூறுவதே சரியா கும். அதை அகற்ற எல்லா முயற்சியும் எடுத்துக்கொள்ள வேண்டும். ஹிந்து மதத்திலுள்ள இந்தக் கறையை அகற்ற மனப்பூர்வமாக உறுதிகொண்டுள்ள ஹிந்து சீர்திருத்தக்காரர்கள் ஏராளமாக இருக்கிருர்கள். எனவே, இந்தப் பிரச்னை தீர மத மாற்றம் எந்தவிதத்திலும் பரிகாரமல்லவென்பதே எனது உறுதி யான கருத்தாகும்.

அடுத்தபடியாகவும் கடைசியாவும் உள்ள வழி, தன்முயற் சியும் தன்னம்பிக்கையும்தான். அத்துடன், பஞ்சமர்களல்லாத ஹிந்துக்கள். தாங்களாக வலுவில் முன்வந்து அளிக்கும் உதவி யையும் ஏற்றுக்கொள்ளலாம். அதுவும் ஏதோ சலுகை காட்டும் நோக்கத்துடன் அல்ல, கடமையைச் செய்யும் நோக்கத்துடன் அவர்கள் உதவ முன்வரவேண்டும்.

இந்த இடத்தில் தான் நமக்கு ஒத்துழையாமை உபயோக மாக இருக்கும். எல்லோருமறிந்த இந்தத் தீமையை அகற்ற

நான் முற்றிலும் ஒழுங்கான ஒத்துழையாமையை ஆதரிக்கிறேன். ஆனால், வெளிஉதவியை நாடாமல் தன் சொந்த முயற்சியைக் கைக்கொள்ளுவதே ஒத்துழையாமையின் அர்த்தமாகும். தடுக்கப்பட்ட பிரதேசங்களுக்குச் செல்ல வற்புறுத்துவது ஒத்துழையாமையாகாது. அமைதியாக அவ்விதம்செய்தால் அது சட்ட மறுப்பாக இருக்கலாம். சட்ட மறுப்புக்கு அதிகமான பூர்வாங்கப் பயற்சியும் தன்னடக்கமும் வேண்டுமென்பதைக் கஷ்டமான அனுபவங்களுக்குப் பிறகு நான் தெரிந்து கொண்டேன். எல்லோரும் ஒத்துழையாமையில் ஈடுபடலாம். ஆனால், சிலரே சட்ட மறுப்புச் செய்ய முடியும். எனவே, ஹிந்து மதத்தை எதிர்க்குமுகத்தான், பஞ்சமர்கள் தங்களுடைய பிரத்தியேகமான குறைகள் நீங்காமல் இருக்கும் வரையில், தாங்கள் மற்ற ஹிந்துக்களுடன் எல்லாத் தொடர்பையும், சம்பந்தத்தையும் நிச்சயமாக நிறுத்திக்கொள்ள முடியும். ஆனால், இதற்குக் கட்டுக்கோப்பான, புத்திசாலித்தனமான முயற்சி வேண்டும். எனக்குத் தெரிந்த வரையில், ஒத்துழையாமையின் மூலம் பஞ்சமர்கள் வெற்றி காணும்படி நடத்திச் செல்லுவதற்கு உற்ற தலைவர் அவர்களிடையே இல்லை.

எனவே, பஞ்சமர்களுக்குச் சிறந்த வழி என்னவெனில், அடிமைத்தனத்தைத் தகர்த்தெறிவதற்காகத் தற்போதைய சர்க்காரை எதிர்த்து நடக்கும் மகத்தான தேசிய இயக்கத்தில் இதயபூர்வமாக ஈடுபடுவதுதான்.*

இந்தத் தீய சர்க்காருக்கு விரோதமாக ஒத்துழையாமையைக் கைக்கொள்ளுமுன், இந்திய தேசத்தை உருவாக்கும் பல்வேறு பிரிவினரிடையே ஒத்துழைப்பு ஏற்பட வேண்டுமென்பதைப் பஞ்சம நண்பர்கள் உணர்ந்து கொள்ளுவது எளிதாகும். ஹிந்துக்கள், சர்க்காருக்கு விரோதமாக ஒத்துழையாமையை வெற்றிகரமாக அனுஷ்டிக்க விரும்பினால், அவர்கள் தங்கள் லட்சியம் நிறைவேறுவதற்காக முஸ்லிம்களுடன் ஐக்கிய மடைந்

---

* மேற்கண்ட யோசனையைக் குறித்து, பிரபல வக்கீலும் எழுத்தாளருமான ஸ்ரீ ஆர். ஜி. பிரதான் 29-12-1929 'எங் இந்தியா'வில் எழுதியதாவது:

''காங்கிரஸ் அரசியல்வாதிகளிலும் சுயராஜ்யக் கட்சியினரிலும் பெரும்பாலோர் சமுதாயப் பிற்போக்காளர்களாவர். காங்கிரசின் ஒத்துழையாமைத் தீர்மானம் தேசம் அமுலுக்குக் கொண்டு வந்து தீர வேண்டிய கட்டளையாகுமென்று அவர்கள் கூறுகிறார்கள். ஆனால், தீண்டாமை சம்பந்தமான காங்கிரஸ் தீர்மானத்தைப் பற்றி அவர்கள் பேசுவதே இல்லை. தாழ்த்தப்பட்ட வகுப்பினர் தேசீய விரோதிகள் அல்ல, விரோதிகளாகவும் இருக்க முடியாது. சர்க்கார் வைதிகத்தை ஆதரிக்கிறார்களென்பதற்காக, சர்க்காரின் சூழ்ச்சி வலையில் சிக்கிக்கொள்ளத் தீண்டாதார் விரும்பவில்லை. எனவே, அரசியல் இயக்கம் நடைபெற்று வரும் அதே சமயத்தில் தீண்டாமை எதிர்ப்பு இயக்கமும் நடைபெறுமாயின், தீண்டாதார் ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்துகொள்ளுவார்கள். தீண்டாதார் வகுப்புத் தலைவர்களில் சிலரது அபிப்பிராயத்தையே இங்கே நான் குறிப்பிட்டிருக்கிறேன்.''

ஸ்ரீ பிரதானின் கடிதத்திற்குப் பதிலாகக் காந்திஜி எழுதியதாவது:

''சர்க்கார் அதாவது ஆட்சி புரிவோருக்கு எதிராக ஒத்துழையாமை என்றால், ஆளப்படுவோரிடையே ஒத்துழைப்பு என்று அர்த்தம். இதை ஸ்ரீ பிரதான் மறந்து

திருப்பது போல் பஞ்சமர்களுடன் ஐக்கிய பாவம் கொள்ள வேண்டும். பலாத்காரக் கலப்பில்லாத ஒத்துழையாமை, முக்கிய மாக ஒரு தீவிரமான ஆன்ம பரிசுத்த இயக்கமேயாகும்.

அந்த இயக்கம் ஆரம்பமாகியுள்ளது. பஞ்சமர்கள் தீர்க் காலோசனையின்மீது அதில் பங்கு எடுத்துக்கொண்டாலும், அல்லது எடுத்துக்கொள்ளாவிட்டாலும், மற்ற ஹிந்துக்கள் தங்க ளுடைய முன்னேற்றத்துக்குக் குந்தகமின்றிப் பஞ்சமர்களைப் புறக்கணிக்கத் துணியமாட்டார்கள். எனவே, பஞ்சமர் பிரச்னை எனக்கு உயிர்போன்ற தென்றாலும், தேசீய ஒத்துழையாமையில் என் முழு கவனத்தையும் செலுத்துவதுடன் நான் திருப்தியடை கிறேன். ஏனெனில், பெரிய பிரச்னையில் சிறிய பிரச்னை உள் ளடங்கியிருக்கிறது என்பது எனது நிச்சயமான கருத்தாகும்.

இந்தப் பிரச்னையுடன் பிராம்மணரல்லாதார் பிரச்னை நெருங்கிய சம்பந்தமுடையது. அந்தப் பிரச்னையை, இதுவரை யில் என்னால் முடிந்ததைக் காட்டிலும் இன்னும் அதிக நுணுக்க மாக ஆராய்ச்சி செய்திருக்க வேண்டுமென்பதே என் விருப்பம். சென்னையில் நிகழ்ந்த அந்தரங்கக் கூட்டமொன்றில் நான் செய்த பிரசங்கத்தின் ஒரு பகுதியைச் சம்பந்தமின்றிப் பிய்த்தெடுத்து பிராம்மணரென்று கூறப்படுவோருக்கும் பிராம்மணரல்லாதார் என்று கூறப்படுவோருக்குமிடையே விரோதம் மேற்கொண்டு அதிகமாகும்படி துஷ்பிரயோகம் செய்திருக்கிறார்கள். அந்தக் கூட்டத்தில் கூறிய ஒரு வார்த்தையைக்கூட நான் மறுக்க விரும்பவில்லை. பிராம்மணர்கள் என்று ஒப்புக்கொள்ளப்பட்டவர் களுக்கு அக்கூட்டத்தில் நான் வேண்டுகோள் விடுத்தேன். நம்மைப் பிரிட்டிஷார் எவ்வளவு பேய்த்தனமாக நடத்துகிறார் களோ, அது போலவே அவர்கள் பிராம்மணரல்லாதாரைப் பேய்த்தனமாக நடத்துகிறார்கள் என்பது எனது அபிப்பிராய மென்று அவர்களிடம் குறிப்பிட்டேன். எவ்விதத் தாமதமின்றியும்,

---

விட்டார். தீண்டாமைப் பாவத்தை ஹிந்துக்கள் அகற்றாவிடில். ஓராண்டு சென்றா லும் சரி, அல்லது நூறு ஆண்டுகள் சென்றாலும் சரி, சுயராஜ்யம் கிடைக்காது. ஒத் துழையாமை இயக்கத்தில் சேர்ந்துகொள்ளும்படி நான் தீண்டாதாரை ஏன் அழைக் கிறேனெனில், அவர்கள் தங்கள் பலத்தை உணரவேண்டுமென நான் விரும்புகிறேன். ஹிந்து – முஸ்லிம் ஒற்றுமையின்றி எவ்விதம் சுயராஜ்யம் பெறுவது முடியாத காரி யமோ, அது போலவே தீண்டாமைப் பாவத்தை அகற்றினாலன்றிச் சுயராஜ்யம் பெறு வது முடியாத காரியம்."

ஒரு நிருபருக்குப் பதிலாக 3-11-1921 'எங் இந்தியா'வில் காந்திஜி எழுதிய தாவது: "நம் திட்டத்தில் தீண்டாமைக்கு இரண்டாந்தர ஸ்தானம் அளிக்க முடியாது. அந்தக் களங்கத்தை அகற்றினாலன்றிச் சுயராஜ்யம் என்பது அர்த்தமற்றதாகும். தொண்டர்கள் தங்கள் அலுவல்களை நிறைவேற்றுவதில் சமுதாயப் பகிஷ்காரத்தை யும், பகிரங்கமான தூஷணைகளையும்கூட வரவேற்க வேண்டும். சுயராஜ்யம் பெறுவ தற்கான நடவடிக்கை முறையிலும், கிலாபத் நடவடிக்கை முறையிலும், தீண்டாமை ஒழிப்பை மிகவும் சக்தி பொருந்திய ஓர் அம்சமாக நான் கருதுகிறேன். பரிசுத்தமற்ற ஹிந்து மதம், இஸ்லாம் மதத்தைப் பரிசுத்தம் செய்யும் நடவடிக்கைக்கு உதவியாக இருக்க முடியாது."

பேரம் செய்யாமலும் அவர்கள் பிராம்மணரல்லாதாரைச் சமாதானப்படுத்த வேண்டுமென்றும் நான் கூறினேன். ஆனல் மகாராஷ்டிரத்திலோ அல்லது சென்னையிலோ உள்ள சக்தி வாய்ந்த பிராம்மணரல்லாதாரையோ, அல்லது அவர்களிடையே உள்ள விஷமிகளையோ, பிராம்மணரென்று கூறப்படுவோரைப் பயமுறுத்தும்படி தூண்டும் உத்தேசத்துடன் நான் அவ்விதம் கூறவேயில்லை. 'பிராம்மணரென்று கூறப்படுவோர்' என்ற வார்த்தையை நான் நிதானமாக யோசித்தே உபயோகித்துள்ளேன். ஏனெனில், மூடத்தனமான வைதிக அடிமைத்தனத்திலிருந்து தங்களை விடுவித்துக்கொண்டுள்ள பிராம்மணர்களுக்கு பிராம்மணரல்லாதாருடன் எவ்வித சச்சரவுமில்லை. அது மாத்திரமல்ல. அத்தகைய பிராம்மணர்கள், பிராம்மணரல்லாதார் எங்கே பலவீனமாக இருந்தாலும் அவர்கள் எல்லாவிதத்திலும் முன்னேறும்படி செய்ய ஆர்வமுடையவர்களாக இருக்கிருர்கள். தமது நாட்டை நேசிக்கும் எவரும், தமது நாட்டில் உள்ள மிகத் தாழ்ந்தவர்களை அசட்டை செய்யத் துணிவாராயின், அவர் தமது நாடு பொதுவாக முன்னேற்றம் அடையும்படி செய்வதில் வெற்றி பெற முடியாது. எனவே, சர்க்காருடன் குலாவிக் கொண்டிருக்கும் பிராம்மணரல்லாதார். தங்களையும், தங்களுக்குச் சொந்தமான நாட்டையும் காட்டிக் கொடுத்தவர்களாகிருர்கள். சர்க்காரில் நம்பிக்கையுடையவர்கள் அதை நிலைநிறுத்தத் தங்களிஷ்டம் போல் தாராளமாக உதவி புரியட்டும். ஆனல், தமது பிறப்பை மதிக்கும் எந்த இந்தியரும், முகத்தின் மீது கோபித்துக்கொண்டு மூக்கை வெட்டிக்கொள்ளாமல் இருப்பாராக.

—'எங் இந்தியா' - 27—10—1920

## 12

# சூழ்ச்சியிலிருந்து தப்ப வழி

1920-டிசம்பர் மாதம் நடந்த நாகபுரி காங்கிரஸ் கமிட்டியும், விஷயாலோசனைக் கமிட்டியும் தீண்டாமைப் பாவ சம்பந்தமான பிரிவை எவ்வித எதிர்ப்புமின்றி அங்கீகரித்தது குறிப்பிடத் தக்கது. சுயராஜ்யம் பெறுவதற்கு ஹிந்து மதத்தில் உள்ள இந்தக் கறையை அகற்ற வேண்டியது அவசியம் என்று குறிப்பிட்டுத் தேசீய மகாசபையில் தீர்மானம் நிறைவேறியது நல்லதுதான். சைத்தான் தன் சகாக்களிடமிருந்து உதவி பெற்றுல் மாத்திரமே வெற்றி பெற முடியும். அது நம்மை வெற்றிகொள்ளுவதற்கு நம்முடைய சுபாவத்தில் உள்ள குற்றம் குறைகளை எப்போதும் தனக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக்கொள்ளுகிறது. அது போலவே, அரசாங்கம், நம்முடைய பலவீனங்கள், தீய வழக்கங்களின் மூலம் நம்மீது அதன் ஆதிக்கத்தை நிலைநிறுத்திக்

கொள்ளுகிறது. சர்க்காரின் சூழ்ச்சிகளுக்கு நாம் இலக்காகாமல் இருக்கும்படி செய்துகொள்ள வேண்டுமாயின், நாம் நமது குற்றம் குறைகளைக் களைய வேண்டும். அதனாலேயே நான் ஒத்துழையாமையை, பரிசுத்தமாக்கிக் கொள்ளும் ஒரு நடவடிக்கை என்று கூறியுள்ளேன். அந்த நடவடிக்கை பூர்த்தியாகிவிட்டால், சாக்கடைக் குழிகள் தூர்க்கப்பட்டாலும் வறண்டுவிட்டாலும் கொசுக்கள் மறைந்துவிடுவது போல், அவசியமான சூழ்நிலையின்றி சர்க்கார் தகர்ந்துதான் தீரும்.

# 13

# காங்கிரஸ்வாதிகளின் கடமை

பஞ்சமர்கள், சென்னை மாகாணத்தைப் போல் வேறெங்கும் அவ்வளவு கொடுமையாக நடத்தப்படுவதில்லை. அங்கே பஞ்சமரின் நிழல்கூட, பிராம்மணரை அசுத்தப்படுத்திவிடுகிறது! அவர் பிராம்மணத் தெருக்கள் வழியாகக்கூடப் போகக் கூடாது. பிராம்மணரல்லாதாரும் அவரை அப்படியேதான் நடத்துகிறார்கள். பஞ்சமர், இவ்விருவருக்குமிடையே அகப்பட்டுக் கொண்டு அணு அணுவாக நசுக்கப்பட்டு வருகிறார். அப்படியிருந்தும், சென்னை மகத்தான கோவில்களுக்கும் மதபக்திக்கும் பெயர் பெற்றதாகும். அங்குள்ளவர்கள், நெற்றியில் நாமங்கள், விபூதிப் பட்டைகள், நீண்ட குடுமிகள், சட்டையின்றி திறந்த சுத்தமான உடல்கள் இவைகளுடன் ரிஷிகளைப் போல் விளங்குகிறார்கள். ஆனால், அவர்களுடைய மதம் இந்த வெளிச் சடங்குகளுடன் முடிந்துவிட்டது போல் தோன்றுகிறது. சங்கரரையும் ராமானுஜரையும் பெற்றெடுத்த ஒரு பூமியில் உள்ள மிகவும் உழைப்பாளிகளும் உபயோகமானவர்களுமான பிரஜைகளிடம், இந்த முறை அனுஷ்டிக்கப்படுவதை அறிந்துகொள்ளுவதே கஷ்டமாக இருக்கிறது. இந்தியாவின் இந்தப் பாகத்தில் (தென்னிந்தியா) நமது சொந்த மக்களைப் பேய்த்தனமாக நடத்திவருகிறார் களெனினும், தென்னிந்திய மக்களிடம் எனக்குள்ள நம்பிக்கையை நான் கைவிடவில்லை. நம்மிடையிலிருந்து தீண்டாமைச் சாபக்கேட்டை அகற்றினாலன்றி சுயராஜ்யம் பெறுவது முடியாத காரியமென்று, நான் அவர்களடங்கிய மாபெரும் கூட்டங்களிலெல்லாம் சந்தேகத்துக்கு இடமின்றிக் கூறியுள்ளேன்.

ஹிந்துக்கள் விரும்பினால், 'பஞ்சமர்களு'க்கு விடுதலை அளிப்பதும், ஹிந்துக்கள் தங்களுக்கு என்ன உரிமைகள் கோருகிறார்களோ, அதே உரிமைகளை அவர்களுக்கு அளிப்பதும் சாத்தியமாகும் என்பது எனது நம்பிக்கை. இந்தியர்கள் விரும்பினால், தாங்கள் உண்ணும் உணவையெல்லாம் தாங்களே சமைத்துக் கொள்ளுவது போல், தங்களுக்குத் தேவையான துணிகளையெல்

லாம் தாங்களே உற்பத்தி செய்ய முடியும் என்றும் நான் நம்புகிறேன். அது போலவே, இந்த வருடம் நாம் சுயராஜ்யம் பெற முடியும் என்றும் நம்புகிறேன். மிகவும் சிரமப்பட்டு திட்டமிட்ட யந்திர நடவடிக்கையால் இந்தத் தீவிர மாற்றம் ஏற்பட்டுவிட முடியாது. நமக்குக் கடவுளின் அருள் இருந்தால்தான் அந்த மாற்றம் ஏற்பட முடியும். நம் ஒவ்வொருவருடைய இதயத்திலும் கடவுள் ஆச்சரியமான மாறுதலை உண்டாக்கி வருகிறார் என்பதை யார் மறுக்க முடியும்? அது எப்படியாயினும், தீண்டாத சகோதரரிடம் நட்புக்கொள்ள வேண்டும்; வேதங்கள், உபநிடதங்கள், பகவத்கீதை இவை காட்டும் ஹிந்து மதத்திலும், சங்கரர், ராமானுஜர் காட்டியுள்ள ஹிந்து மதத்திலும், எவ்வளவு பதிதனுயினும் சரி, ஒரு மானிடரைக் கூட தீண்டாதாராக நடத்துவதற்குச் சிறிதும் ஆதாரமில்லை யென்றுகூறி ஹிந்து தருமத்துக்கு எதிராக நடந்துவரும் ஹிந்துக்களை வேண்டிக்கொள்ள வேண்டும். இது ஒவ்வொருவருடையவும், ஒவ்வொரு காங்கிரஸ் தொண்டருடையவும் கடமையாகும். அக்கொடிய தடை, அகிம்சைக்கு நேர் மாறாகும் என்று வைதிகர்களுக்கு மிகவும் வினயத்துடன் எடுத்துக் கூற ஒவ்வொரு காங்கிரஸ் வாதியும் முற்படுவாராக.

—'எங் இந்தியா' – 29—9—1921

# 14

# உண்ணுவிரதமும் கடவுள் நம்பிக்கையும்

ஏதோ சிற்சில இடங்களைத் தவிர, இந்தியாவில் உள்ள எல்லாப் பாகங்களிலும் நடந்த நூற்றுக்கணக்கான பொதுக் கூட்டங்களிலும், அந்தரங்கக் கூட்டங்களிலும், தீண்டாமைக்கு எதிராக நான் கூறிய வாதங்களை யாரும் கண்டிக்கவே இல்லை. தீண்டாமையை வன்மையாகக் கண்டித்தும், தங்களிடையிலிருந்து தீண்டாமையை அகற்றுவதாகப் பிரதிக்ஞை செய்தும் கூட்டங்களில் தீர்மானங்கள் நிறைவேறின. கூட்டங்களில் ஆஜராகியிருந்த மக்கள், எண்ணிக்கையற்ற சந்தர்ப்பங்களில் கடவுள் சாட்சியாகப் பிரதிக்ஞையை எடுத்துக் கொண்டனர். அந்தப் பிரதிக்ஞையை நிறைவேற்றத் தங்களுக்குச் சக்தி அளிக்க வேண்டுமென்று இறைவனை வேண்டிக் கொண்டு அவரது அருளை நாடினர்.

இந்த லட்சக்கணக்கான மக்களுக்கு எதிராகவே நான் உண்ணுவிரதத்தை மேற்கொண்டேன். அவர்களுடைய இதய பூர்வமான அன்பே, ஐந்தே நாட்களுக்குள் ஆச்சரியகரமான

மாறுதலை உண்டாக்கி, எராவ்டா* உடன்படிக்கையையும் உருவாக்கியது.

அந்த உடன்படிக்கை பூரணமாக நிறைவேற்றப்படாவிடில், அவர்களுக்கு எதிராக மீண்டும் உண்ணுவிரதத்தைத் தொடங்குவேன். சர்க்காருக்கும் அதற்கும் இனிமேல் சம்பந்தமில்லை; அவர்கள் தங்கள் பாகத்தைக் காலம் தவருமல் நிறைவேற்றிவிட்டார்கள். எராவ்டா உடன்படிக்கை சம்பந்தமான தீர்மானங்களின் பெரும்பகுதியை, சாதி ஹிந்துக்கள் என்று சொல்லப்படும் இந்த லட்சக்கணக்கான மக்களே நிறைவேற்ற வேண்டியவர்களாக இருக்கிருர்கள். நான் மேலே விவரித்த கூட்டங்களுக்கு அவர்கள்தான் கூட்டம் கூட்டமாக வந்தார்கள். அவர்கள்தான் தீண்டாத சகோதர, சகோதரிகளைத் தங்கள் சொந்த சகோதர, சகோதரிகளைப் போல் அணைத்துக்கொள்ள வேண்டும்; அவர்கள்தான் தீண்டாதாரைத் தங்கள் கோவில்களுக்கும், தங்கள் வீடுகளுக்கும், தங்கள் பள்ளிக்கூடங்களுக்கும் வருந்தி அழைக்க வேண்டும். தங்களுடைய விலங்குகள் தகர்ந்துவிட்டன; கிராமங்களிலுள்ள மற்றவர்களைவிட தாங்கள் எவ்விதத்திலும் தாழ்ந்தவர்கள் அல்ல; மற்ற கிராமவாசிகளைப் போல் தாங்களும் ஒரே கடவுளையே வணங்குகிருேம்; அவர்களைப் போல் தங்களுக்கும் அதே உரிமைகளும் சலுகைகளும் உண்டு என்று கிராமங்களிலுள்ள தீண்டாதார் உணரும்படி செய்ய வேண்டும். உடன்படிக்கையின் இந்த மூலாதாரமான நிபந்தனைகள் சாதி ஹிந்துக்களால் நிறைவேற்றப்படாவிட்டால், கடவுளின் முன்னிலையிலும், மனிதரின் முன்னிலையிலும் நான் உயிர் வாழ முடியுமா? அந்த உடன்படிக்கையின் நிபந்தனைகளைச் சாதி ஹிந்துக்கள் நிறைவேற்றுவதற்காக, என்னை ஒரு

---

* 1932-ஆம் வருடம் செப்டம்பர் மாதம் தீண்டாதார் சார்பில் வந்த தலைவர்களுக்கும் மற்ற ஹிந்து சமூகத் தலைவர்களுக்கும் ஓர் உடன்படிக்கை ஏற்பட்டது. சட்டசபைகளில் தீண்டாதாரின் பிரதிநிதித்துவ சம்பந்தமாகவும், மற்றும் அவர்களுடைய நலன்கள் சம்பந்தமான வேறு சில விஷயங்கள் பற்றியுமே உடன்படிக்கை செய்து கொண்டார்கள். பிரிட்டிஷ் பிரதம மந்திரியின் தீர்மானத்தை ரத்து செய்வதே அந்த உடன்படிக்கையின் நோக்கமாகும். ஹிந்து சமூகத்திலிருந்து தீண்டாதாரைப் பிரித்து, அவர்களுக்குத் தனித் தேர்தல் தொகுதிகள் அளிப்பது என்பதே பிரிட்டிஷ் பிரதம மந்திரியின் தீர்மானம். ஹிந்து சமூகத்திலிருந்து தீண்டாதார் பிரிக்கப்பட்டதைக் கண்டித்துக் காந்திஜி 'சாகும்வரை உண்ணுவிரதம்' ஆரம்பித்தார். அதன் காரணமாக, தீண்டாதார் தலைவர்கள் உள்பட ஹிந்து சமூகத் தலைவர்கள் காந்திஜியின் முன்னிலையில் ஒரு மகாநாடு கூடினார்கள். காந்திஜி அப்போது எராவ்டா சிறையில் இருந்தார். அவ்வமயம் ஏற்பட்ட உடன்படிக்கையே எராவ்டா உடன்படிக்கையாகும். அதில் காந்திஜியும் கையெழுத்திட்டார். அது மக்களின் ஒருமித்த கோரிக்கையைப் பிரதிபலித்ததால், பிரிட்டிஷ் பிரதம மந்திரி அதை அங்கீகரித்துத்தீர வேண்டியதாயிற்று. காந்திஜி உண்ணுவிரதம் இருந்ததன் பலனுக, தீண்டாதாரின் குறைகளைத் தீர்க்கத் தொண்டு புரிவதென்றும், தீண்டாமையைத் துடைத்தொழிப்பதென்றும் அம் மகாநாட்டில் ஒரு தீர்மானமும் நிறைவேறியது. இந்தத் தீர்மானத்தின் நேரடியான பலனே, ஹரிஜன சேவைச் சங்கமாக மலர்ச்சியடைந்தது.



1932–இல் காந்திஜி எராவ்டா சிறையில் இருந்தபோது, இச்சிறையில் உள்ள இந்த மாமரத்தின் கீழ்தான் ஹரிஜன சம்பந்தமான பிரக்யாதிபெற்ற 'எராவ்டா ஒப்பந்த' சம்பந்தமாகத் தலைவர்களுடன் விவாதித்து வந்தார்.



பவநகரில் காந்திஜி ஹரிஜனக் குழந்தைகளுடன் ஆனந்தமாகப்
பேசிக்கொண்டிருக்கிறார்—ஜுலை, 1934.

பணயமாகக் கருதும்படியும் நான் டாக்டர் அம்பேத்கார், ராவ் பகதூர் ராஜா முதலிய தீண்டாதார் கோஷ்டியைச் சேர்ந்த மற்ற நண்பர்களிடமும் கூறத் துணிந்தேன்.

எந்தச் சமயத்திலும் ஆரம்பமாகலாம் என்ற நிலையிலிருந்து வரும் எனது உண்ணுவிரதமானது என்னால் கைக்கொள்ளப் படுமாயின், இந்தச் சீர்திருத்தத்தின் எதிரிகளை வற்புறுத்துவ தற்காக அதை மேற்கொள்ள மாட்டேன்; ஆனால், என்னுடைய தோழர்களோ அல்லது தீண்டாமையை அகற்றுவதாகப் பிர திக்ஞை செய்துகொண்டுள்ளவர்களோ அவ்விஷயமாக நடவ டிக்கை எடுத்துக்கொள்ளத் துடித்தெழும்படி செய்வதற்காகவே, நான் உண்ணுவிரதம் அனுஷ்டிக்க முற்படுவேன். அவர்கள், தங்க ளுடைய பிரதிக்ஞைகள் பொய்த்துப் போகும்படி செய்துவிட் டாலோ, அல்லது பிரதிக்ஞைகளை நிறைவேற்றும் உத்தேசம் அவர்களுக்கு ஒருபோதும் இருந்திராவிட்டாலோ, அவர்களது ஹிந்து மதம் வெறும் ஏமாற்று வித்தையாகிவிட்டாலோ, பின் னர் வாழ்க்கையில் எனக்குப் பற்றுதலே இராமற் போய்விடும். எனவே, எனது உண்ணுவிரதம் இந்தச் சீர்திருத்தத்தின் விரோதிகளைப் பாதிக்காது; எனது சக ஊழியர்களையும் பாதிக் காது; தீண்டாமைக்கு எதிரான இயக்கத்தில் என்னையும் காங் கிரசையும் ஆதரிப்பதாக என்னை நம்பும்படி செய்து, பிறகு புனராலோசனை செய்ததன் மீது, என்னதான் இருப்பினும் தீண் டாமை கடவுளுக்கும், மானிடவர்க்கத்துக்கும் எதிரான ஒரு குற்ற மல்ல என்ற முடிவுக்கு வரும் லட்சக்கணக்கானவர்களையும் அது பாதிக்காது. தன்னையும் பிறரையும் பரிசுத்தம் செய்துகொள்ளு வதற்காக உண்ணுவிரதம் இருக்கும் வழக்கம் வெகுகாலமாக இருந்து வருகிறது என்பதே என் அபிப்பிராயம். கடவுளிடம் மனிதருக்கு நம்பிக்கை இருந்து வரும் வரையில் அந்த வழக்கமும் இருந்துதான் தீரும். எல்லாம் வல்ல இறைவனுக்கு, அது வேதனைக்குள்ளான இதயத்திலிருந்து எழும் பிரார்த்தனையே. ஆனால், எனது வாதம் விவேகமுள்ளதாயினும், மூடத்தனமான தாயினும், அதன் மூடத்தனத்தையோ, அல்லது தவறையோ நான் உணரும் வரையில், அந்த நிலையிலிருந்து என்னை யாரும் அசைக்க முடியாது. என் அந்தராத்மாவின் குரலுக்கு இணங்க மாத்திரமே மீண்டும் நான் உண்ணுவிரதத்தைத் தொடங்கு வேன்; எராவ்டா உடன்படிக்கையின் நிபந்தனைகளை நிறை வேற்ற சாதி ஹிந்துக்கள் தவறிய குற்றம் காரணமாக, அந்த உடன்படிக்கை வெளிப்படையாகத் தகர்ந்து போய்விட்டால் மாத்திரமே, நான் மீண்டும் உண்ணுவிரதத்தைத் தொடங்கு வேன். அவ்விதம் தவறுவது ஹிந்து மதத்துக்குத் துரோகம் செய்வதாகும். அதற்குச் சாட்சியாக இருந்துகொண்டு உயிர் வாழ நான் விரும்ப வேண்டாம்.

—'என் ஆன்ம வேதனை' (1933) 4—11—1932

## 15

# அவசரப்படுவோருக்கு எச்சரிக்கை

மத விஷயங்களில் நிர்ப்பந்தம் இருக்க முடியாது. எந்த விஷயத்திலும் நிர்ப்பந்தம் இருக்க முடியாதென்றே கூறுவேன். ஒருவருடைய சாதியோ, கொள்கையோ, தேசமோ எதுவாயினும் யாருக்கு எதிராகவும், எந்த விதத்திலும், எந்த உருவத்திலும் பலாத்காரத்தை உபயோகிக்கக்கூடாது என்பதில் நான் கண்டிப்பான கருத்துக்கள் உடையவன். இதைப் பொது மக்கள் அறிவர். எனவே, இந்த இயக்கத்தை நடத்துவோர் ஒரு விஷயத்தை அறிந்துகொள்ள வேண்டும். அதாவது எதிர்பார்க்கப்படும் உண்ணுவிரதத்திலிருந்து என்னைக் காப்பாற்றுவதற்காகக்கூட, அவர்கள் அவசரப்பட்டு ஆட்சேபகரமான முறைகளைக் கைக்கொண்டு, இயக்கத்தின் வேகத்தைத் துரிதப்படுத்தக் கூடாது. அவர்கள் அவ்வாறு செய்தால், அவர்கள் கேவலம் என் வாழ்வின் முடிவையே துரிதப்படுத்தியவர்களாவர். நான் நம்புவது போல், எந்த இயக்கத்தின் சார்பில் அந்தச் சிறு உண்ணுவிரதத்தைக் கைக்கொள்ளும்படி கடவுள் என்னைப் பிரேரணை செய்தாரோ, அந்த இயக்கம் சீர்கெடுவதை நான் காணும்படி நேருவது, எனக்கு உயிருடன் இருந்துகொண்டே இறப்பது போலாகும். பலாத்காரக் கூட்டத்தின் ஒழுங்கற்ற முறைகளால் ஹரிஜனங்களின் இயக்கத்துக்கும் ஹிந்து மதத்துக்கும் யாதொரு பலனும் ஏற்படாது. உலகத்திலேயே இல்லாவிட்டாலும், இந்தியாவிலேயே இதுதான் மகத்தான மதச் சீர்திருத்த இயக்கமாகும். அடிமைத்தனத்தில் வாழ்ந்து வரும் சற்றேறக்குறைய நான்கு கோடி மனிதர்களின் நல்வாழ்வு இதில் அடங்கியிருக்கிறது. இதைக் கண்டிக்கும் வைதிகப் பிரிவினர் எல்லா மரியாதைக்கும் அனுதாபத்துக்கும் உரியவர்களாவர். அன்பினுல், ஆன்ம தியாகத்தினுல், முற்றிலும் தன்னடக்கத்தினுல், நம் வாழ்க்கையின் பரிசுத்தத் தன்மை சந்தடியின்றி அவர்களுடைய இதயத்தை மாற்றும்படி செய்வதால், அவர்களை நாம் நம் பக்கம் சேரும்படி செய்யவேண்டும். எதிரிகளை நம் வழிக்கு மாற்றக்கூடிய நமது சத்தியத்திலும், நமது அன்பிலும் நமக்கு நம்பிக்கை வேண்டும்.

நீண்ட காலமாக ஒடுக்கப்பட்டு வந்துள்ள நான்கு கோடி மக்களை, வெறும் ஆடம்பர வேஷங்களால் விடுதலை செய்து விட முடியாது என்பதில் சந்தேகத்துக்கே இடமில்லை. எல்லா முனைகளிலிருந்தும் தாக்கும் யோசனைகளடங்கிய ஓர் உறுதியான ஆக்கத் திட்டத்தைக் கைக்கொள்ள வேண்டும். இந்தச் சாகஸமான காரியத்திற்கு, ஆயிரக்கணக்கான ஆடவர்கள், பெண்கள், சிறுவர், சிறுமியர் இவர்களின் ஒன்று திரட்டப்பட்ட சக்தி தேவையாகும். அவர்கள் மகோன்னதமான மத நோக்கங்கள்

கொண்டவர்களாகவும் இருக்க வேண்டும். எனவே, இந்த இயக்கத்தின் கலப்பற்ற மதப் பண்பை உணராதவர்கள், இதிலிருந்து விலகிவிட வேண்டுமென நான் மரியாதையுடன் வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன். அந்த நம்பிக்கையும், உற்சாகமும் உள்ளவர்கள், அவர்கள் சிலராயினும் சரி, அல்லது பலராயினும் சரி, இயக்கத்தில் சேர்ந்து வேலை செய்யட்டும். தீண்டாமை ஒழிப்பு, மகத்தான அரசியல் விளைவுகளை உண்டு பண்ணலாம். உண்மையில் உண்டுபண்ணும். ஆனால், அது ஓர் அரசியல் இயக்கமல்ல. அது சாதாரணமாக ஹிந்து மதத்தைப் பரிசுத்தம் செய்வதற்கான இயக்கம் மாத்திரமே. முற்றிலும் பரிசுத்தமான சாதனங்களின் மூலம்தான் ஹிந்து மதம் பரிசுத்தமாக முடியும். இறைவன் அருளால், இந்தியா முழுவதும் அத்தகைய சாதனங்களுடன் வேலை செய்வோர் ஆயிரக்கணக்கில் இல்லாவிடினும், நூற்றுக் கணக்கில் இருக்கின்றனர். எனவே, அவசரப்படும் அவநம்பிக்கைவாதிகள் கவனத்துடன் காத்திருந்து பார்க்கட்டும். ஆனால், அவர்களுடைய நோக்கங்கள் போற்றத்தக்கவையாக இருப்பினுங்கூட, அவர்கள் அவசரப்பட்டும், முன் யோசனையில்லாமலும் தலையிட்டு இயக்கத்துக்குத் தீங்கு விளைவிக்காமல் இருப்பார்களாக.

—'என் ஆன்ம வேதனை' (1933), 7 – 11 – 1932

# 16

# செப்பிடு வித்தை பலிக்காது

சென்னையிலே சமீபத்தில் நிகழ்ந்த சனுதனிகள் கூட்டமொன்றில் ஸ்ரீ வி. வி. ஸ்ரீநிவாச ஐயங்கார் நிகழ்த்திய பிரசங்கம், தினசரிப் பத்திரிகைகளில் வெளியாகியிருந்தது. அதைக் காந்திஜியின் கவனத்திற்குக் கொண்டு வந்தனர். குறிப்பாக, அந்தப் பிரசங்கத்தில் கீழ்க்கண்ட பாகம் காந்திஜியின் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டது. "ஆலயப் பிரவேசம் மத சம்பந்தமான ஓர் இயக்கமேயன்றி, அரசியல் இயக்கமல்ல என்று, அந்த இயக்கத்தின் மாபெரும் பிரதான புருஷரான காந்திஜி பிரகடனம் செய்துள்ளார்......அது ஓர் மத இயக்கமல்ல, மகத்தான அரசியல் இயக்கமே என்பது என் அபிப்பிராயம். ஹரிஜனங்களைச் சமாதானப்படுத்த வேண்டியதும், சர்க்காருக்கு ஓர் ஐக்கிய முன்னணியைக் காட்ட வேண்டியதும் காந்திஜியின் அரசியல் நோக்கங்களுக்கு அவசியமாக இருக்கிறது... தற்போதைய ஆலயப் பிரவேச இயக்கமானது, அந்தப் புதிய கட்சியைக் காங்கிரஸ் பக்கம் சேர்த்துக் கொள்ளுவதற்காக, காந்திஜியும் அவரைப் பின்பற்றுவோரும் செய்யும் அரசியல் செப்பிடு வித்தையே."

இந்தக் கூற்றைக் கண்டித்து, காந்திஜி கூறிய விவரம் கீழே கொடுக்கப்பட்டி[illegible]ருக்கிறது:

முன்னாள் நீதிபதியான ஸ்ரீ ஐயங்கார், அவ்வளவு பொறுப் பற்ற முறையில் பேசியிருப்பதைக் கண்டு நான் ஆச்சரியமும் வேதனையும் அடைகிறேன். இந்த இயக்கத்தை ஆராய்ச்சி செய்யும் சிரமத்தை அவர் எடுத்துக் கொண்டிருந்தால், நான் அரசியலைப் பற்றி எதுவும் அறிந்துகொள்ளுவதற்கு முன்பே தீண்டாமை ஒழிப்பை, நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்ட ஒரு சித்தாந்தமாகக் கொண்டுவிட்டேன் என்பதை உடனடியாகத் தெரிந்து கொண்டிருப்பார். மத இயல்பின்றி அரசியல் இயல்பு அவருக்கு வழிகாட்டியாக இருந்திருக்கு மாயின், அவர் கூட்ட நடவடிக்கைத் திட்டத்திலிருந்து ஆலயப் பிரவேச விஷயத்தை விலக்கி, பொருளாதார, கல்வித்துறைகளில் மாத்திரம் தமது கவனத்தைச் செலுத்தியிருப்பார். ஆனால், இப் போது ஸ்ரீ ஐயங்கார் தமது செல்வாக்கிற்கே ஆபத்து நேர்ந் தாலும் நேரட்டும் என்று துணிந்துள்ளார். ஏனெனில், ஆலயப் பிரவேசமின்றி, ஹிந்துமதம் தீண்டாமையை ஒழித்துவிட்டதாகக் கூற முடியாதென்று அவர் நம்புகிறார்.

ஹரிஜனங்களை மோசமாக நடத்தத் தாங்கள் விரும்பவில்லை யென்றும், அவர்களுடைய பொருளாதார நலன்களையும், இந்த உலக வாழ்க்கைக்குத் தேவையான மற்ற வசதிகளையும் அபி விருத்தி செய்ய விரும்புவதாயும் ஸ்ரீ ஐயங்காரும் மற்ற சனாதனி களும் கூறுகிறார்கள் அல்லவா? அவர்களுக்கு நான் ஒரு யோசனை கூறுகிறேன். தீண்டாதார் ஊழியர் சங்கத்தில் அவர்கள் சேர்ந்து, தீண்டாதாரின் வாழ்க்கை நலன்கள் அபிவிருத்தியடைய வேலை செய்வதுடன், அதற்குப் பண உதவியும் செய்யட்டும்; என்னிடமும், என் போன்ற கருத்துடையவர்களிடமும் ஆலயப் பிரவேசப் பிரச்னையை விட்டுவிடட்டும். அந்தச் சங்கத்தில் சில காங்கிரஸ்வாதிகளே இருக்கிறார்கள் என்பதை ஸ்ரீ ஐயங்கார் அறிய வேண்டும். அந்த ஸ்தாபனத்தில் பல பிரபல மிதவாதிகள் இருக்கிறார்கள். சனாதனிகள் என்ன சொல்லுகிறார்களோ, அதைச் செயலில் காட்டுவதாயின், அவர்கள் அந்தச் சங்கத்துக்குப் பணத்தையும் ஊழியர்களையும் கொண்டுவந்து, அதன் நிர்வா கத்தை ஏற்றுக்கொண்டு, அதன் கொள்கையை உருவாக்க முடி யும். இது அவர்களுக்குப் பொருத்தமாக இராவிடில், அவர்கள் ஒரு போட்டி ஸ்தாபனத்தை நிறுவி, நாடெங்கும் அதன் கிளைகளை ஏற்படுத்தட்டும். அதன்மூலம் அவர்கள் ஹரிஜனங்களின் இதயத் தைக் கவர்ந்து, அவர்களுடைய நன்றியைப் பெறட்டும். நான் ஆலயப் பிரவேச இயக்கத்தை நிறைவேற்றி, புண்ணியம் சம்பா தித்துக் கொள்ள முயற்சித்துப் பார்க்கிறேன். ஆலயப் பிரவேச இயக்கம் ஹரிஜனங்களையும் சாதி ஹிந்துக்களையும் உத்தாரணம் செய்வதுடன், அவ்விரு சாராரையும் பரிசுத்தம் செய்து, தானா கவே ஹரிஜனங்களின் லௌகிக நலன்களும் அபிவிருத்தியடை யும்படி செய்யுமென்பதையும் நான் அவர்களுக்குக் காட்ட முடியும். பாமர மக்கள் சம்பந்தப்பட்ட ஒரு விஷயத்தில்

'செப்பிடு வித்தை' அதிக பலனைக் கொடுக்காது என்பதை ஸ்ரீ ஐயங்கார் உணர வேண்டும். அவர்களுக்கு யார் வேண்டுமாயினும் வேண்டுகோள் விடுக்கலாம். இறுதியில் யோக்கியப் பொறுப்பும் கடின உழைப்பும்தான் வெற்றிபெறும்.

—'என் ஆன்ம வேதனை' (1933) 27—1—1933

பகுதி எட்டு

# சமபந்தி போஜனமும் கலப்பு மணமும்

## 1

## மரியாதை தருமம்

[காங்கிரஸ் வாரத்தின்போது பெல்காமில் நடந்த தீண்டாமை ஒழிப்பு மகாநாட்டில் காந்திஜி பேசியதாவது :]

நண்பர்களே,

தீண்டாமை பற்றி என் கருத்துக்களைக் கூற வேண்டுமென்று கேட்க வேண்டிய அவசியமே இல்லை. இந்த ஜன்மத்தில் நான் மோட்சம் அடையத் தவறிவிடுவேனாயின், அடுத்த ஜன்மத்தில் நான் ஒரு 'பங்கி'யாகப் பிறக்க வேண்டும் என்பதே என் இதயத்தின் பிரார்த்தனையாகும். இதை நான் பல்வேறு பொது மேடைகளிலும் எண்ணிக்கையற்ற தடவை பிரகடனம் செய்திருக்கிறேன். பிறப்பு, கர்மா இந்த இரண்டு அடிப்படையிலும் வர்ணாச்சிரமத்தில் எனக்கு நம்பிக்கையுண்டு. ஆனால், 'பங்கி'யை ஒரு தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்தவராக நான் கருதவில்லை. அதற்கு மாறாக, மதிப்புக்கும் மரியாதைக்கும் உரிய பல 'பங்கி'களை எனக்குத் தெரியும். மற்றொருபுறம் மரியாதைக்கும் மதிப்புக்கும் பாத்திரரல்லாத பிராம்மணர்கள் நடமாடிக்கொண்டுதான் இருக்கிறார்கள். எனவே, இக் கருத்துக்கள் கொண்டு எனக்கு மறு ஜன்மம் ஏற்படுமாயின், பறையர்களுக்கு மத்தியில் நான் ஒரு பறையனாகப் பிறக்கவே விரும்புகிறேன். ஏனெனில், அவ்விதம் பிறந்தால், அவர்களுக்கு நான் இன்னும் அதிகமாகப் பயன்படத் தக்க தொண்டுபுரிய முடியும்; அவர்கள் சார்பில் மற்ற சமூகங்களை வேண்டிக்கொள்ள இன்னும் சிறந்த நிலையில் இருப்பேன்.

தீண்டாமையை ஒழிப்பதற்குச் சமபந்தி போஜனமும், கலப்பு மணமும் அவசியமானவை என்று நான் கருதவில்லை. வர்ணாச்சிரம தருமத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு. எனினும், நான் 'பங்கி'யுடன் சாப்பிடுவது உண்டு. நான் ஒரு சன்னியாசியா என்று எனக்குத் தெரியாது. இந்தக் கலியுகத்தில் சன்னி

யாசிக்கு விதிக்கப்பட்டுள்ள நிபந்தனைகளை நிறைவேற்றுவது எவருக்காவது சாத்தியமா என்பது மிகவும் சந்தேகம்தான். ஆனால், நான் மனமறிந்து சன்னியாச மார்க்கத்தில் சென்று வருகிறேன். எனவே, இந்தக் கட்டுப்பாடுகளையெல்லாம் நான் அனுஷ்டிக்க வேண்டிய அவசியமில்லை என்பது மாத்திரமல்ல, அவ்விதம் அனுஷ்டிப்பது எனக்குத் தீங்காகவும் இருக்கலாம்.

என் போன்றவர்கள் சம்பந்தப்பட்ட வரையில் கலப்புமணப் பிரச்னை எழுவதற்கில்லை. கலப்பு மணம் என் திட்டத்துக்கு உட்பட்டதல்ல என்று கூறுவதே போதுமானது. என் சொந்த இனத்திலேயே எல்லோரும் சமபந்தி போஜனம் செய்வதில்லையென உங்களுக்குக் கூறுகிறேன். எங்கள் வைஷ்ணவ குடும்பங்களிலே சிற்சில இடங்களில் ஒருவருடைய பாத்திரங்களை மற்றவர் உபயோகிப்பதில்லை; மற்றவர்களுடைய சமையலறையிலிருந்து கொண்டுவரப்பட்ட நெருப்பில் கூட சமையல் செய்வதில்லை. இதை நீங்கள் மூட வழக்கமென்று கூறலாம்; ஆனால், அதை நான் அவ்விதம் கருதவில்லை. அந்த வழக்கத்தால் ஹிந்து மதத்துக்கு எவ்விதத் தீங்கும் நேராதென்பது நிச்சயம்.

என் ஆசிரமத்தில் உள்ள 'தீண்டாதார்'களில் ஒருவரான தூதாபாய் யாதொரு வேற்றுமையுமின்றி மற்றவர்களுடன் உட்சார்ந்து உணவு அருந்துகிறார். ஆனால், இந்த உதாரணத்தைப் பின்பற்றும்படி ஆசிரமத்துக்கு வெளியிலுள்ள எவருக்கும் நான் சிபார்சு செய்யமாட்டேன். மற்றும், மாளவியாஜியிடம் எனக்கு எவ்வளவு மதிப்பு உண்டு என்பது உங்களுக்குத் தெரியும். நான் அவரது பாதங்களைக் கழுவுவேன். ஆனால், என்னால் தொடப்பட்ட உணவை அவர் அருந்தமாட்டார். அவ்விதம் செய்வது அவமதிப்பாகுமென்று நான் கோபித்துக்கொள்ளுவதா? கூடவே கூடாது. ஏனெனில், அவமதிக்கும் நோக்கம் அவருக்கு இல்லை என்பதை நான் நன்கு அறிவேன்.

நான் எந்த மதத்தைச் சேர்ந்தவனோ, அந்த மதமானது நாம் அனுஷ்டிப்பதற்காக மரியாதை தருமத்தை விதித்திருக்கிறது. பண்டைய கால ரிஷிகள், தியானத்தின்மூலம் பரிபூரணமான ஆராய்ச்சிகள் செய்து, அந்த ஆராய்ச்சிகளின் பயனாக சில மகத்தான உண்மைகளைக் கண்டுபிடித்தனர். அவற்றிற்கு ஈடு இணை வேறு எந்த மதத்திலும் இல்லை எனலாம். அந்த உண்மைகளில் ஒன்று இதுதான்: அதாவது, சில வகை உணவுகள் மனிதரின் ஆன்ம வளர்ச்சிக்குத் தீங்கு விளைவிக்கின்றன என்று அவர்கள் கருதினர். எனவே, அத்தகைய உணவுகளை உபயோகிக்கக் கூடாதென்று அவர்கள் தடை செய்துவிட்டார்கள். யாரோ ஒருவர் வெளிநாடுகளுக்குச் செல்ல வேண்டியிருந்ததாகவும், உணவு விஷயமாக வேறான பழக்க வழக்கங்களும் விதிகளும் உள்ள புதிய மனிதர்களுடன் வசிக்க நேர்ந்ததாகவும் வைத்துக் கொள்ளுங்கள். மனிதர்கள் தாங்கள் எவரிடையே வசிக்கிறார்களோ, அவர்களுடைய சமுதாயப்

பழக்க வழக்கங்கள் சிற்சில சமயங்களில் எவ்வளவு நிர்ப்பந்தமாக இருக்கின்றன என்பதை ரிஷிகள் அறிந்து, அத்தகைய நெருக்கடியான சமயங்களில் உதவியாக இருப்பதற்காக மரியாதை தருமத்தை விதித்தார்கள். மரியாதை தருமத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு. என்றாலும், அதை ஹிந்து மதத்தின் ஒரு முக்கிய அம்சமாக நான் கருதவில்லை. இந்தக் கட்டுப்பாடுகள், பயமின்றி ரத்து செய்யப்படும் காலம் வந்தாலும் வரலாம். எனினும், தீண்டாமை இயக்கத்தில் உத்தேசிக்கப்பட்டுள்ள சீர்திருத்தம், சமபந்தி போஜனம், கலப்பு மணம் பற்றிய கட்டுப்பாட்டை ஒழித்துவிடாது; நான் வேஷதாரி யென்றும், முன்னுக்குப் பின் முரணாகப் பேசுவதாகவும் என் மீது குற்றஞ்சாட்டுவதாக இருந்தால்கூட, இந்தக் கட்டுப்பாடுகளை முற்றிலும் ரத்து செய்துவிட வேண்டுமென நான் பொது மக்களுக்குச் சிபார்சு செய்ய முடியாது.

உதாரணமாக, நான் என் மகனை, தங்கு தடையின்றி முஸல்மான் வீடுகளில் சாப்பிடுவதற்கு அனுமதிக்கிறேன். ஏனெனில், அங்கே எதைச் சாப்பிடலாம், எதைச் சாப்பிடக்கூடாது என்பது பற்றி அவன் போதிய அளவு ஜாக்கிரதையாக இருக்க முடியும் என நம்புகிறேன். எனக்கும் சரி, முஸல்மான் வீடுகளில் சாப்பிடுவதில் மனக்கஷ்டம் எதுவுமில்லை. ஏனெனில், என் உணவு பற்றி எனக்குக் கண்டிப்பான விதிகள் உண்டு.

இச்சந்தர்ப்பத்தில் அலிகாரில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தை நான் உங்களுக்குக் கூற விரும்புகிறேன். நானும் சுவாமி சத்திய தேவரும் காஜா சாகிபின் விருந்தினர்களாக இருந்தோம். சுவாமி சத்தியதேவர் என் கருத்துக்களை ஆதரிக்கவில்லை. அவை பற்றி நாங்கள் விவாதித்தோம். என் கருத்துக்கிணங்க, ஒரு முஸல்மான் அளிக்கும் உணவைச் சாப்பிட நான் மறுப்பது எவ்விதம் தவறோ, அதுபோலவே சத்தியதேவர் தமது மரியாதை தருமத்தை மீறுவது தவறு என்று நான் அவரிடம் கூறினேன். எனவே, அவருக்குப் பிரத்தியேகமாகச் சமையல் ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அது போலவே நான் பாரி சாகிபின் விருந்தினனாக இருந்தபோது, அவர் எனக்கு ஒரு பிராம்மண சமையல் காரரை ஏற்பாடு செய்திருந்தார். சமையல் சாமான்களை அன்றாடம் கடைத் தெருவிலிருந்து புதிதாக வாங்கி வர வேண்டுமென்றும் கண்டிப்பாகக் கட்டளையிட்டிருந்தார். எங்கள் விஷயமாக அவர் ஏன் அவ்வளவு சிரமம் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டேன். என்னையோ அல்லது எனது சகாக்களையோ தம்முடைய மதத்துக்கு மாற்றிவிட வேண்டுமென்ற அந்தரங்க உத்தேசம் தமக்கு இருப்பதாகப் பொது மக்களுக்குத் துளிச் சந்தேகம்கூட ஏற்படாமல் தவிர்க்கவே, தாம் அவ்விதம் செய்ததாக அவர் கூறினார். அந்த ஒரே ஒரு சம்பவம், பாரி சாகிப் மீது நான் கொண்டிருந்த மதிப்பை மிகவும் உயர்த்தியது.

—'எங் இந்தியா' 22—1—1925

## 2

# ஸ்ரீ ராமனையும் சீதையையும் பின்பற்றுங்கள்

[தீண்டாமை பற்றி ஸ்ரீமதி சுஹாசினி தேவி எழுதிய கடிதத்துக்குக் காந்திஜி அளித்த பதிலின் விவரம் வருமாறு:]

தீண்டாமை ஒழிப்பு இயக்கம் ஏராளமான படிகள் முன்னேறியிருக்கிறது என்பதை நிரூபிக்கப் புள்ளிவிவரங்கள் தேவையில்லை. தீண்டாமைத் தடை எல்லாவிடத்திலும் தகர்ந்து வருகிறது. தீண்டாதார் குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடங்களும் சாப்பாடு விடுதிகளும் ஏற்படுத்தி, ஒவ்வொரு மாகாணத்திலும் மேல் சாதியினர் தீண்டாதாரின் தேவைகளைப் பூர்த்தி செய்து வருவதைக் காண்கிறோம். இருந்தாலும், தீண்டாதார் விஷயமாக இதுவரை நிறைவேற்றப்பட்டிருப்பதைக் காட்டிலும் இன்னும் எவ்வளவோ காரியங்கள் நிறைவேற வேண்டியிருக்கின்றன.

அவர்கள் பற்றிப் பெண்கள் கொண்டுள்ள தப்பெண்ணங்களைத் தகர்க்கும் பிரச்னை மிகவும் கஷ்டமானதாகும். அது உண்மையில் பெண்கள் கல்வியே. அது சிறுமிகளின் கல்விப் பிரச்னை மாத்திரம் அல்ல; விவாகமான பெண்களின் கல்விப் பிரச்னையுமாகும். எனவே, தேசபக்தியுள்ள ஒவ்வொரு கணவரும் தங்கள் மனைவிக்குத் தாங்களே உபாத்தியாயராக இருக்க வேண்டுமென்றும், துரதிருஷ்டசாலிகளான அவரது சகோதரிகளிடையே தொண்டு புரிய அவரைத் தயார் செய்ய வேண்டுமென்றும் நான் அடிக்கடி யோசனை கூறி வந்திருக்கிறேன். அந்த யோசனையில் உள்ள சிக்கல்களையும் கவனித்து நடந்து கொள்ளும்படி நான் கூறியுள்ளேன். அவற்றில் ஒன்று, கணவன்மார் தங்கள் மனைவிமாரைப் போக சாதனங்களாகக் கொள்ளுவதைக் கைவிட்டு, தங்கள் தேச நிர்மாண வேலைக்கு அவர்களையும் கூட்டாளிகளாகக் கருத வேண்டும் என்பதாகும்.

சீதையின்றி நாம் ராமனை அடைந்திருக்க முடியாது. பல ஆண்டுகள் நாடு கடத்தப்பட்டுப் பயங்கரமான வனவாசத்தின்போதும், சோதனையின் போதும், சீதை தமது கூட்டாளியான ராமபிரானின் அன்பு ததும்பும் கவனிப்பின் கீழ் உண்மையான கல்வியும் பயிற்சியும் பெற்றாள். நாம் எல்லோரும் நம் சொந்த நாட்டில் நாடுகடத்தப்பட்டவர்களாக இருக்கிறோம். எனவே, நம் சக்திகளுக்கும் சந்தர்ப்பங்களுக்கும் இயன்றவரையில் நாம் ராமன், சீதை இவர்களைப் பின்பற்றி நடக்க வேண்டியது அவசியமாகும்.

வெவ்வேறான சமபந்தி போஜனத்தையும் தீண்டாமையையும் சம்பந்தப்படுத்தக்கூடாது. சமையல் சம்பந்தமான விஷயங்களில் விலக்குகள், ஹிந்து சமுதாயம் முழுவதும் ஊடுருவிக் கிடக்கின்றன. சமபந்தி போஜனத்தைத் தீண்டாமையுடன் இணைத்துக் குழப்புவது, தீண்டாமை இயக்கத்தின் முன்னேற்றத்துக்குத் தடை விளைவிப்பதாகும். சமுதாயத் தொண்டுக்கு மற்ற எந்த மனிதரையும் போல் சமத்துவ முறையில் தீண்டாதாரும் உரியவராவர்.

தீண்டாமை விலக்கு, ஹிந்துக்கள் கையாள வேண்டிய ஒரு சமுதாயப் பிரச்னையாகும். அப்படியிருக்க, பொதுவாக ஹிந்துவுடன் சேர்ந்து முஸ்லிமும் பார்சியும் இராணுவச் செலவைக் கட்டுப்படுத்துவதற்குரிய அதிகாரம் பெறுவதற்கோ, பணமாற்ற விகிதத்தைத் தீர்மானிக்கவோ, பூரண மது விலக்கை ஏற்படுத்தவோ, அந்நியத் துணிகளுக்குக் கடுமையான தீர்வை விதிக்கவோ, சுதேசிக் கைத்தொழில்களுக்குப் பாதுகாப்பளிக்கவோ தீண்டாமைப் பிரச்னை ஏன் தடையாக இருக்க வேண்டும்?

ஆனால், உண்மையான, எல்லா அம்சங்களுடன்கூடிய சுயராஜ்யம் வேறு விஷயமாகும். தீண்டாமை ஒழிந்தாலன்றி, பொது மக்களின் மனத்தில் சுயராஜ்யம் என்ற வார்த்தையுடன் இணைந்துள்ள விடுதலை கிடைப்பது முடியாத காரியமாகி விடுமென்பது நிச்சயம். அது மாத்திரமல்ல; பல்வேறு பிரிவினரிடையே இதய ஒற்றுமை அபிவிருத்தியடைய வேண்டும். மற்றும் எளிதில் குறிப்பிடக்கூடிய பல சமுதாயத் தீமைகளும் நீங்க வேண்டும். அப்படியானால்தான் சுயராஜ்யம் பெறுவது சாத்தியமாகும். நாம் அறிந்துகொண்டுள்ள பல விஷயங்களையும் தழுவிய விரிவான சுயராஜ்யம்தான் ஒருபோதும் ஸ்தம்பித்து நிற்காத அகவளர்ச்சியாகும். விருப்பு வெறுப்பு, கோபதாபம், மூடபக்தி, இவை சுவர்கள் போல் சுயராஜ்யம் என்ற கம்பீரமான கருங்காலி விருட்சத்தின் வளர்ச்சியைத் திணறடித்து வரும் வரையில், சுயராஜ்யம் பெறுவது முடியாத காரியம்.

—'எங் இந்தியா' – 10—3—1927

# 3

# கடவுளிடம் சலுகை பெற வழி

மதத்தின் பெயரால் ஹிந்துக்களான நாம் வெளித்தோற்றச் சடங்குகளையே பிரமாதமாக ஆடம்பரப்படுத்தி வந்திருக்கிறோம். மதத்தை, கேவலம் சாப்பிடும், குடிக்கும் ஒரு பிரச்னையாகச் செய்து அதை இழிவான நிலைக்குக்கொண்டு வந்

துள்ளோம். தன்னலத் தியாகம், அந்தரங்க சுத்தி, கடுமையான தவ ஒழுக்கம் இவையெல்லாம் அறிவுச் சுடரால் ஒளி பெற்று விளங்குவதே, பிராம்மணீயத்தின் ஒப்புயர்வற்ற நிலைக்குக் காரணம். உணவுகள், மனித ஸ்பர்சம் (தீண்டுதல்) இவற்றின் ஆன்மிக பலாபலன்களுக்கு எல்லை மீறி முக்கியத்துவம் அளிக்கும் பட்சத்தில், ஹிந்துக்கள் அதோ கதியாகிவிடுவார்கள். மனத்தில் எழும் சோதனைகளுக்கும் ஆசைகளுக்கும் இடையே நாம் இருந்து வருகிறோம். முற்றிலும் தீண்டத்தகாத, நீசத்தனமான எண்ண ஓட்டங்களால் நாம் தீண்டப்பட்டும் அசுத்தமாக்கப்பட்டும் வருகிறோம். எனவே, இந் நிலையில் நமது மமதை காரணமாக, நாம் அறியாமையினாலும், பெரும்பாலும் கர்வத்தினாலும் நமக்குத் தாழ்ந்தவர்களென்று நாம் கருதும் மக்களைத் தீண்டுவதால் ஏற்படும் பலாபலனை மிகைப்படுத்தாமல் இருப்போமாக. நாம் என்ன சாப்பிட்டோம், நாம் யாரால் தொடப்பட்டோம் என்பதைக் கொண்டல்ல, ஆனால் நாம் யாருக்கு, எப்படித் தொண்டு புரிந்தோம் என்பதைக் கொண்டே சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் எல்லாம் வல்ல இறைவனின் சன்னதிக்கு முன்னிலையில் நாம் தீர்மானிக்கப்படுவோம். துன்பத்தில் இருந்த ஒரே ஒரு மனிதருக்கு நாம் தொண்டு புரிந்தால் கூட, கடவுளின் சன்னதியில் நமக்குச் சலுகை கிடைக்கும். தீய தொடர்பை நாம் தவிர்க்க வேண்டியது அவசியம். அதுபோல் கெட்ட உணர்ச்சியைத் தூண்டும், அல்லது அசுத்தமான உணவுகளை நாம் தவிர்க்க வேண்டும். ஆனால், இந்தச் சடங்குகளுக் கெல்லாம் நாம் எல்லை மீறி முக்கியத்துவம் அளிக்கக்கூடாது. மோசடி, வெளி வேஷம் போன்ற மற்றும் மோசமான துன்மார்க்கச் செயல்களை மறைப்பதற்காக நாம் சில உணவுகளைத் தவிர்க்கத் துணியாதிருப்போமாக. இழிநிலையை அடைந்துள்ள, அல்லது அசுத்தமான சகோதரரின் ஸ்பர்சம் நம்முடைய ஆன்மிக வளர்ச்சிக்குத் தீங்கு விளைவிக்கக் கூடாதென்ற நோக்கத்துடன், நாம் அவர்களுக்குத் தொண்டு செய்ய மறுக்கத் துணியாதிருப்போமாக.

—'எங் இந்தியா' 5—1—1922

## 4

# ஐந்தாவது பிரிவை ஒழிக்க வேண்டும்

இது, சமபந்தி போஜனம், கலப்பு மணம் இவை சம்பந்தப்பட்ட பிரச்னையல்ல என்பதை நாம் உணர வேண்டும். இது சாதி என்று தவறாகக் கூறப்படும் வர்ணாச்சிரமத்தை ரத்து செய்யும் பிரச்னையுமல்ல. இது தீண்டாமையை ஒழிக்கும், ஆதாரமற்ற ஐந்தாவது பிரிவை ரத்து செய்யும் தெளிவான

ஒரு பிரச்னையாகும். வர்ணாச்சிரமத்தை முற்றிலும் ரத்து செய்யும் நோக்கத்துடன் நம்மிடையே ஒரு சீர்திருத்தப் பிரிவு இருந்து வருகிறது. ஒருவர் ஒரு குறிப்பிட்ட பிரிவில் பிறந்தவர் என்பதற்காக அவரைத் தொடுவதுகூடத் தீட்டு என்றும், அதற்குப் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டுமென்றும் நிலவிவரும் மூட வழக்கத்தை அகற்றுவது மாத்திரமே தீண்டாமைக்கு விரோதமான இயக்கத்தின் நோக்கமாகும். இந்த இயக்கம் பரப்பிலும் அளவிலும் எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக வளர்ச்சி யடைகின்றதோ, அவ்வளவுக் கவ்வளவு அணுவளவும் வழுவாது அதன் நிபந்தனைகளை அறிந்து, அவற்றிற்கு உட்பட்டு நடக்க வேண்டியது அவசரமாகிறது. நாம் வைதிகத்துக்குச் சவால் விடுக்கும் அதே சமயத்தில், நாம் என்ன சொல்லுகிறோமோ அதைக் காட்டிலும் அதிகமாக நாம் எதுவும் செய்துவிடப் போவதில்லையென வைதிகர்களுக்கு உறுதி கூற வேண்டும். இயக்கத்தின் பூரண நோக்கத்தையும் அவர்கள் அறிந்து கொள்ளும்படி செய்ய வேண்டும். குறைந்த பட்சம் நாம் என்ன செய்து வர வேண்டுமென்பதைப் பெரும்பாலும் நாம் கவனித்து நடப்பதில்லையென வாரந்தோறும் வரும் கடிதங்கள் எனக்குக் காட்டுகின்றன. எனவே, வைதிகர்கள் அச்சம் கொண்டிருப்பது இயல்பேயாகும். அதனால், சீர்திருத்தக்காரரின் கடமை அவசியத்தைக் காட்டிலும் அதிகக் கஷ்டமாகிவிடுகிறது.

—'எங் இந்தியா' – 21—8—1924

## 5

# சேர்ந்து சாப்பிடமறுப்பது பாவமல்ல

என் சம்பந்தப்பட்ட வரையில், சமபந்தி போஜனம் ஓர் அவசியமான சீர்திருத்தம் என்று நான் நிச்சயமாகச் சொல்ல முடியாது. அதே சமயத்தில், அந்தக் கட்டுப்பாட்டை அடியோடு தகர்க்கும் மனப்பான்மை நிலவி வருவதை நான் உணருகிறேன். அந்தக் கட்டுப்பாட்டுக்குச் சாதகமாகவும் சரி, பாதகமாகவும் சரி, நான் காரணங்கள் கண்டுபிடிக்க முடியும். எனினும், அந்தக் கட்டுப்பாட்டை ஒழிக்க நான் அவசரப்படமாட்டேன். ஒருவர் மற்றொருவருடன் சேர்ந்து சாப்பிட மறுப்பதை நான் ஒரு பாவமாகக் கருதவில்லை. அது போலவே, ஒருவர் சமபந்தி போஜனத்தை ஆதரிப்பதையும், அதை அனுஷ்டிப்பதையும் ஒரு பாவமாக நான் கருதவில்லை. ஆனால், மற்றவர்களின் உணர்ச்சிகளைப் பொருட்படுத்தாமல் அந்தக் கட்டுப்பாட்டைத் தாக்கும் முயற்சியை நான் எதிர்க்கத்தான் வேண்டும். அதற்கு மாறாக நான், அத்தகையோரின் உணர்ச்சிகளை மதித்து நடப்பேன்.

—'எங் இந்தியா' – 19—3—1925

# 6

# பல தலை அரக்கன்!

ஓர் ஆந்திர நிருபர் அவரது கஷ்டங்களைக் குறித்துக் கீழ்வருமாறு எழுதுகிறார்:

"தீண்டாமை பற்றி ஒரு வங்காள நிருபருக்குத் தாங்கள் அளித்துள்ள விடைகள் சென்ற வாரம் "எங் இந்தியா'வில் வெளியாகியிருக்கின்றன. அந்த விடைகள் ஒன்றில் நீங்கள் வருமாறு குறிப்பிட்டிருக்கிறீர்கள்: "நாம் சூத்திரர்களிடமிருந்து தண்ணீர் வாங்கி அருந்துவதால், தீண்டாதார்களிடமிருந்தும் நாம் தண்ணீர் வாங்கி அருந்தத் தயங்கக்கூடாது." மேலே 'நாம்' என்பது உயர்ந்த சாதி ஹிந்துக்களைக் குறிக்கிறது. வட இந்தியாவில் நிலவிவரும் வழக்கம் எனக்குத் தெரியாது. ஆந்திராவிலும் இன்னும் தெற்கேயுள்ள பிரதேசங்களிலும் பிராம்மணரல்லாதாரிடமிருந்து பிராம்மணர்கள் தண்ணீர் வாங்கி அருந்தமாட்டார்கள் என்பது மாத்திரமல்ல (க்ஷத்திரிய, வைசிய, சூத்திர சாதியினர் எவரிடமிருந்தும் வாங்கிச் சாப்பிடமாட்டார்கள்), அவர்களில் அதிக வைதிகமானவர்கள் பிராம்மணரால்லாதார் விஷயத்தில் கண்டிப்பான தீண்டாமையையும் அனுஷ்டிக்கின்றனர். இந்த உண்மையைத் தாங்கள் அறிவீர்களா? சாதிகள் உயர்வு பற்றிய தற்போதைய போலிக் கொள்கைகளைக் களைவதற்கு, சமபந்தி போஜனம் அவசியம் என்பதை நீங்கள் ஆதரிக்கவில்லையென அடிக்கடி கூறியிருக்கிறீர்கள். உங்களுக்கும் மாளவியாஜிக்கும் பரஸ்பரம் மரியாதையும் மதிப்பும் இருந்தும்கூட, உங்கள் கையிலிருந்து தண்ணீரோ அல்லது வேறு எதுவோ வாங்கி அருந்த மாளவியா மறுப்பதை நீங்கள் அவமதிப்பாகக் கருதமாட்டீர்களென்ற உண்மையையும் நீங்கள் ஒரு சமயம் மேற்கோளாக எடுத்துக்காட்டியிருக்கிறீர்கள். மாளவியா சம்பந்தப்பட்டவரையில், அவமதிக்கும் நோக்கம் இராமலிருக்கலாம் என்பதை நான் ஒத்துக்கொள்ளுகிறேன். பிராம்மணரல்லாதார்தொடுவது இருக்கட்டும்;எங்கள்பக்கத்திலுள்ள பிராம்மணர்கள் தாங்கள் சாப்பிடும் உணவை, ஒரு பிராம்மணரல்லாதார் நூறுகெஜ தூரத்துக்கு அப்பாலிருந்து பார்த்துவிட்டால்கூட, சாப்பிடமாட்டார்கள் என்பது உங்களுக்குத் தெரியாது. ஒரு வைதிகப் பிராம்மணர் சாப்பிடும்போது, தெருவில் ஒரு சூத்திரர் ஒன்றிரண்டு வார்த்தைகள் பேசிவிட்டால்கூட வைதிகப் பிராம்மணருக்குக் கோபம் பீறிட்டுக்கொண்டு வந்துவிடும். அவர் அன்று முழுவதும் சாப்பிடாமல் பட்டினி கிடப்பாரென்பதையும் உங்களுக்குக் கூறுகிறேன். அதெல்லாம் அவமதிப்பு இல்லையாயின், இந்த உண்மைகளுக்கு அர்த்தம் என்ன? இதெல்லாம் பிராம்மணர்கள் தாங்கள் உயர்ந்தவர்கள் என்ற எண்ணம் கொண்டதாகாதா? இவ்விஷயங்களையொட்டிய அர்த்தத்தைத் தயவு செய்து விளக்குவீர்களாக? நானும் ஒரு பிராம்மண இளைஞன் தான். அதையெல்லாம் நேரில் பார்த்திருப்பதாலேயே உங்களுக்கு எழுதுகிறேன்."

தீண்டாமை பல தலைகள் உள்ள ஓர் அரக்கன். அது முற்றிலும் ஒழுக்க, மத சம்பந்தமான பிரச்னை. ஆனால், சமபந்தி

போஜனத்தை ஒரு சமுதாயப் பிரச்னை என்று நான் கருதுகிறேன். தற்போதைய தீண்டாமையில், தங்கள் வர்க்கத்தில் ஒரு பகுதியினரை அவமதித்தல் அடங்கியிருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. அது ஒரு பிளவை நோயைப் போன்று சமுதாயத்தின் உயிரையே அரித்துத் தின்றுவருகிறது. அது மனிதரின் உரிமைகளை மறுப்பதாகும். அது சமபந்தி போஜனத்துடன் சமநிலையில் இல்லை. எனவே, இரண்டையும் பிணைக்க வேண்டாமென்று சமுதாயச் சீர்திருத்தவாதிகளை வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன். அவற்றைப் பிணைப்பார்களாயின், "தீண்டாதாரின், நெருங்காதாரின்" புனித இயக்கத்துக்குத் தீங்கு விளைவித்தவராவர்.

இந்தப் பிராம்மண நிருபரின் கஷ்டம் உண்மையானதே. அந்தத் தீமை எவ்வளவு தூரத்துக்குப் போயிருக்கிறது என்பதையே அவரது கடிதம் காட்டுகிறது. முற்றிலும் அடக்கம், தனக்கென யாதொரு உரிமையும் கோராதிருத்தல், தியாகம், பரிசுத்தம், மன்னிக்கும் குணம், உண்மையான அறிவு இவையே பிராம்மணன் என்ற பெயருக்குப் பொருளாக இருக்க வேண்டும்; ஒரு காலத்தில் அவ்விதமே இருந்து வந்தது. ஆனால், இன்று இந்தப் புண்ணிய பூமி, பிராம்மணருக்கும் பிராம்மணரல்லாதாருக்குமிடையே பிளவு உண்டாக்கும் சாபத்துக்கு இலக்காகியிருக்கிறது. பல இடங்களிலும் பிராம்மணர் தம்முடைய உயர்வை இழந்துவிட்டார். அவர் ஒருபோதும் தமக்கு உயர்வைக் கோரியதில்லை. அவரது தொண்டு உரிமை காரணமாக அவருக்கு உயர்வு இருந்து வந்தது. அவர் தாம் உரிமை கொண்டாட முடியாத உயர்வை, இப்போது கண் மூடித்தனமாக வற்புறுத்தி வருகிறார். அதனாலேயே, இந்தியாவிலுள்ள சில பாகங்களில் அவர் மீது பிராம்மணரல்லாதாருக்குப் பொறாமை ஏற்பட்டிருக்கிறது.

எனினும், இந்த நிருபர் போன்ற பிராம்மணர்கள் இருப்பது ஹிந்து மதத்திற்கும், தேசத்திற்கும் அதிர்ஷ்டமேயாகும். உயர்வை வற்புறுத்தும் பிராம்மணர்களின் போக்கு நல்ல காலத்துக்கு அறிகுறியல்ல. எனவே, நிருபரைப் போன்றவர்கள் அத்தகைய மனப்போக்கை, தங்கள் சக்தி முழுவதையும் உபயோகித்து எதிர்த்து வருகிறார்கள்; அவர்கள் தங்களுடைய உயர்ந்த பரம்பரைச் சம்பிரதாயங்களுக்கிணங்க, தன்னலமற்ற விடாமுயற்சியுடன் பிராம்மணரல்லாதாருக்குத் தொண்டு புரிந்து வருகிறார்கள். ஒவ்வோரிடத்திலும் பிராம்மணர்கள் முன்னணியில் நின்று தீண்டாமைத் தீமையை எதிர்த்துப் போராடி வருவதையும், வேத நூல்களிலிருந்து ஆதாரங்கள் காட்டி தங்கள் கட்சியைப் பலப்படுத்தி வருவதையும் காண்கிறோம். ஆந்திர நிருபர் குறிப்பிட்டுள்ள விதமாக நடந்துகொள்ளும் தென் பிரதேசப் பிராம்மணர், காலப் போக்கை உணர்ந்து, உயர்வு பற்றிய போலி எண்ணங்களைக் களைந்துகொள்ள வேண்

டும்; ஒரு பிராம்மணரல்லாதாரைப் பார்ப்பது பாவமென்றும், அவரது குரல் கேட்பதால் உணவு அசுத்தமாகி விடுகிறதென்றும் கருதும் மூடவழக்கத்தை விட்டுவிட வேண்டுமென்றும் நான் வற்புறுத்துகிறேன். பிராம்மணர்கள், எல்லாவற்றிலும் பிரம்மத்தைக் காண வேண்டுமென்று உலகத்திற்கு உபதேசித்தார்கள். எனவே, வெளியேயிருந்து அசுத்தம் எதுவும் ஏற்பட்டுவிட முடியாது; அசுத்தம் உள்ளேயிருந்துதான் வருகிறது. ஒருவர் மனத்தில் எழும் தீய எண்ணங்களே தீண்டத்தகாதவை, நெருங்கத்தகாதவை என்ற உபதேசத்தை மீண்டும் பிரகடனம் செய்ய பிராம்மணர் முன் வரட்டும். 'மனிதன் தன்னைத்தானே அசுத்தம் செய்துகொள்ளுவது போல், அடிமையாக்கிக் கொள்ளுவது போல், தன்னைத்தானே உண்மையில் விடுதலை செய்துகொள்ளுபவனும் மனிதன் தான்' என்ற அற்புதமான சித்தாந்தத்தை உலகம் நம்பும்படி உபதேசித்தவர் பிராம்மணரே.

ஆந்திர நிருபர் கூறியுள்ள விவரங்களைக் குறித்து பிராம்மணரல்லாதார் கலங்க வேண்டாம். அவரது சார்பில், ஆந்திர நிருபரைப் போன்ற பிராம்மணர்கள் போராடுவார்கள்; போராடியும் வருகிறார்கள். ஒரு சிலர் செய்த பாவங்களுக்காகப் பிராம்மண சமூகத்தையே வெறுக்கும் மனப்பான்மை வளர்ந்து வருவதைக் குறித்து அஞ்சுகிறேன். பிராம்மணரல்லாதார் அவ்விதம் வெறுக்கக்கூடாது. தவறாக நடந்துகொள்ளும் பிராம்மணர்களை, தம் விஷயத்தில் சரியாக நடந்துகொள்ளும்படி வற்புறுத்தாமல் பிராம்மணரல்லாதார் பெருந்தன்மையுடன் இருக்கட்டும். ஒரு வழிப்போக்கர் எனக்கு மரியாதை செய்யவில்லை என்பதற்காகவோ, அல்லது நான் சமீபத்தில் இருப்பதால், அல்லது தீண்டுவதால், அல்லது என் குரலைக் கேட்பதால் அசுத்தமாகிவிடுவதாக அவர் எண்ணுகிறார் என்பதற்காகவோ, என்னை அவர் அவமதித்து விட்டதாக நான் நினைக்க வேண்டிய அவசியமில்லை. ஆனால், நான் போகும் வழியை விட்டு அப்பால் போகும்படி அவர் கட்டளையிட்டால் நான் மறுத்துவிட வேண்டும். அவர் என் குரலைக் கேட்டுவிடுவாரோ என்று அஞ்சி நான் பேசாமல் இருக்கக்கூடாது. இதுவே போதுமானது. அவர் அறியாமையால் தாம் உயர்வானவர் என்று எண்ணுவதையோ அல்லது அவரது மூடவழக்கத்தையோ கண்டு நான் அனுதாபப்படலாம். எனினும், அதற்காக அவர் மீது கோபம் கொள்ளக்கூடாது. அவர் மீது வெறுப்பை வளர்த்துக்கொள்ளக்கூடாது. என்னை யாராவது வெறுத்தால் அது எனக்குக் கோபத்தை உண்டாக்குமல்லவா? அவரையும் நான் அவ்விதமே நினைத்து வெறுக்கக்கூடாது. தன்னடக்கத்தை இழப்பதால் பிராம்மணரல்லாதார் தமது கட்சியை இழந்தவராவர். இறுதியாக அவர் வரம்பு மீறிச் சென்று, தமது சார்பில் போராடும் பிராம்மணர்களைத் தரும சங்கடத்திற்கு உள்ளாகிவிடக்கூடாது.

பிராம்மணர், ஹிந்து மதத்தின், மானிட வர்க்கத்தின் சிறந்த மலர்போல் சிரேஷ்டமானவர். அந்த மலர் வாடிவிடும்படி நான் எதுவும் செய்யமாட்டேன். அது தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ளும் சக்தியுடையதென்பது எனக்குத் தெரியும். இதற்கு முன் எத்தனையோ சண்டமாருதங்களை அது சமாளித்திருக்கிறது. எனினும், அந்த மலரின் மணத்தையும் ஒளியையும் அபகரிக்க பிராம்மணரல்லாதார் முயற்சித்தனர் என்ற சொல்லுக்கு இடம் வைக்க வேண்டாம். பிராம்மணர்களை அழித்துவிட்டு, அதன் விளைவாகப் பிராம்மணரல்லாதார் உயர்நிலை அடைவதை நான் விரும்ப மாட்டேன். ஆனால், இதற்கு முன் பிராம்மணர்கள் அடைந்திருந்த உயர்ந்த நிலைக்கு, அவர்கள் தங்கள் சொந்த முயற்சியால் வருவதையே நான் விரும்புவேன். பிராம்மணர்கள் பிறவியிலேயே பிராம்மணர்களாகப் பிறக்கின்றனர். ஆனால், பிராம்மணீயம் அப்படியல்ல. அது ஒரு விசேஷ குணமாகும். நம்மிடையே மிக அடக்கமுள்ளவர்களும் மிகவும் தாழ்ந்தவர்களும் அந்தக் குணத்தைப் பயிற்சியின்மீது பெற முடியும்.

—'எங் இந்தியா' – 19—2—1925

# 7

# சமபந்தி உணவை வற்புறுத்தலாமா?

ஒரு நிருபர் எழுதுவதாவது:

"நல்லெண்ணம் கொண்ட சிலர், எல்லா வகுப்பினரிடையும் நல்லெண்ணத்தை வளர்க்கும் வழிகளில் ஒன்றாக, பல சாதியினரும், பல சமூகத்தினரும், பல தேசங்களைச் சேர்ந்தவர்களும் அடங்கிய ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்வதாக வைத்துக்கொள்ளுங்கள். அது கலப்பற்ற சைவ உணவு விருந்தென்றும், அதில் மதுபானமே விநியோகிக்கப்படமாட்டாதென்றும் வைத்துக்கொள்ளுங்கள். அப்போது, எந்த ஹிந்துக்களாவது, உங்கள் சாதியைச் சேர்ந்த அல்லது உங்கள் சொந்தக் குடும்பத்தைச் சேர்ந்த எவராவது அழைப்பிற்கு இணங்க, (ஆமாம், வற்புறுத்தலுக்காக அல்ல) அந்த விருந்தில் கலந்துகொள்ள விரும்பி, அவ்விஷயமாக உங்கள் அபிப்பிராயத்தைக் கேட்டால், நீங்கள் உங்கள் சொந்த சனாதனக் கொள்கை காரணமாக அதை ஆட்சேபணை செய்வீர்களா? நிர்மானுஷ்யமான ஓரிடத்தில், ஒரு பிராம்மணர் வழி நடந்த களைப்பால் பசியுடனும் தாகத்துடனும் மூர்ச்சையடையும் தறுவாயில் இருக்கிறார். அப்போது அவருக்கு ஒரு சண்டாளரோ, முஸல்மானோ அல்லது ஒரு கிறிஸ்தவரோ சுத்தமான அரிசி உணவும், சுத்தமான தண்ணீரும் மனமுவந்து (வற்புறுத்தி அல்ல) கொடுத்தால், உங்கள் சனாதன தருமம் அல்லது மரியாதை தருமக் கொள்கையுடைய அந்தப் பிராம்மணர் அதை ஏற்றுக்கொள்ளலாமா? சுருங்கச் சொன்னால், கேள்வி இதுதான்: அத்தகைய நல்லெண்ணத்தை நிருபிப்பதற்காக சாதி, சமய, தேச வேற்றுமையின்றி சர்வஜன விருந்து அளிப்பதோ, அல்லது 'தீண்டாதார்' தீண்டத் தகுந்த ஒரு ஹிந்துவுக்கு உணவு அளிப்பதோ,

அதை அவர் அங்கீகரிப்பதோ, உங்களுடைய சனுதன, வர்ணுச்சிரம, அல்லது மரியாதை தருமத்துக்கு இசைந்ததா, அல்லவா?''

ஒரு பிராம்மணர் ஆபத்தான நிலேயிலிருந்தால், அவர் உயிரை வைத்துக்கொள்ள விரும்பும் பட்சத்தில் சுத்தமான உணவு அளிப்பவர் யாராயினும் அதை அவர் ஏற்றுக்கொள்ளலாம். சர்வதேச அல்லது சர்வசாதி விருந்தில் கலந்துகொள்ளுவதை நான் ஆட்சேபிக்கவும் மாட்டேன், ஆதரிக்கவும் மாட்டேன். அதற்குக் காரணம் சாதாரணமானதே. அதாவது அத்தகைய வைபவங்கள் நட்பையோ அல்லது நல்லெண்ணத்தையோ அவசியம் வளர்க்கும் என்பதில்லே. இன்று ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே ஒரு விருந்து வைபவம் நடத்துவது சாத்தியமே. ஆனுல், அத்தகைய விருந்து வைக்காததுதான், அவர்களேப் பிரிந்திருக்கும்படி செய்கிறது என்பதில்லே; அது போலவே, அவ்வித ஒரு விருந்து இரு சமூகங்களேயும் ஒன்று சேர்த்தும் விடாது என்று நான் துணிந்து கூறுவேன். படுமோசமான விரோதிகள் ஒன்று சேர்ந்து சாப்பிடுவதையும் உற்சாகத்துடன் பேசுவதையும் நான் பார்த்திருக்கிறேன். அப்படியிருந்தும், அவர்கள் விரோதிகளாகவே இருந்து வருவார்கள். எனவே, நிருபர் இதற்கெல்லாம் எங்கே எல்லே கட்ட முடியும்? சைவ உணவுடனும், மதுவிலக்குடனும் அவர் நிறுத்திக்கொள்ளுவானேன்? மாமிச உணவு சாப்பிடுவதை ஒரு புண்ணியமாகவும், சாராயம் குடிப்பதை ஒரு தீங்கற்ற, மகிழ்ச்சியைக் கொடுக்கும் சிற்றுண்டியாகவும் கருதும் ஒரு மனிதர். அவரது மாட்டிறைச்சித் துண்டையும் உல்லாசமான மதுபானத்தையும் மற்றவர்களுடன் பகிர்ந்து சாப்பிடுவதை நல்லெண்ணத்தை வளர்க்கும் ஒரு காரியமாகவே கருதுவார். நிருபர் கேள்வியில் அடங்கியிருக்கும் வாதத்திற்கு ஓர் எல்லே கட்டுவதென்பது முடியாத காரியம். எனவே, சமபந்தி போஜனம் நல்லெண்ணத்தை வளர்க்கும் ஒரு முறை என்பதை நான் ஒப்புக்கொள்ள முடியாது.

ஆனுல், என் வரையில் நான் இந்தக் கட்டுப்பாடுகளேயெல்லாம் அனுஷ்டிப்பதில்லே. சாப்பிடத் தகாதவைகளேத் தவிர மற்ற உணவு எதையும், அது சுத்தமாக இருக்கும் பட்சத்தில், நான் யாரிடமிருந்தும் வாங்கிச் சாப்பிடுவேன். என்றுலும், கட்டுப்பாடுகளே அனுஷ்டிப்போரின் உணர்ச்சிகளுக்கு நான் மதிப்புக் கொடுக்கிறேன். இவ்விஷயமாக மற்றவர்களின் 'குறுகிய மனப்பான்மை'யை நான் கண்டிக்கவில்லே. எனது 'தாராள'மான போக்கைக் குறித்து என்னே நானே முதுகில் தட்டிக் கொடுத்துக் கொள்ளவுமில்லே, வெளித் தோற்றத்துக்குத் தாராள மனப்போக்கு உடையவனுகத் தோன்றும் நான், உண்மையில் குறுகிய மனப்பான்மையுடையவனுகவும், சுயநலக்காரனுகவும் இருக்கலாம். வெளித்தோற்றத்தில் குறுகிய பழக்க வழக்கமுள்ளவராகத் தோன்றும் எனது நண்பர், உண்மையில் தாராள மனமுள்ளவராகவும், சுயநலமற்றவராகவும் இருக்கலாம். சிறப்போ

அல்லது சிறுமையோ, நோக்கத்தைத்தான் பொறுத்திருக்கிறது. நட்பு உணர்ச்சியும் சகோதர பாவமும் வளர வேண்டும் என்ற திட்டத்தின் ஓர் அம்சமாக சமபந்தி போஜனத்தை வற்புறுத்துவதால், போலிப் பிரச்னைகளும் வீண் நம்பிக்கையும் எழுந்து நல்லெண்ண வளர்ச்சிக்கு இடையூறு ஏற்படும். தீட்டு, உயர்வு என்ற எண்ணத்தை அகற்றவே நான் முயற்சித்துக் கொண்டிருக்கிறேன். தனக்குத் தானே விதித்துக் கொண்டுள்ள இந்தக் கட்டுப்பாடுகளுக்கு ஆரோக்கிய ரீதியாகவும் ஆன்மிக ரீதியாகவும் மதிப்பு உண்டு. எனினும், அவற்றை அனுஷ்டிக்காததால் மனிதன் நரகத்திற்குப் போய்விட மாட்டான் ; அனுஷ்டிப்பவரை அவை ஏழாவது சுவர்க்கத்திற்கும் கொண்டு போய்ச் சேர்த்து விடாது;போஜனக் கட்டுப்பாடுகளை மிகமிகக்கண்டிப்பாக அனுஷ்டிக்கும் ஒருவர் உண்மையில், சமுதாயமே வெறுத்து ஒதுக்கத் தகுந்த அயோக்கியராக இருக்கலாம். சாதி, சமய வேற்றுமை எதுவுமின்றி எல்லோருடனும் சேர்ந்து எதையும் சாப்பிடுபவர், எப்போதும் கடவுளிடம் அஞ்சி நடக்கும் குணம் வாய்ந்தவராகவும், அவரது சகவாசத்தைப் பெறுவது ஒரு பாக்கியமாகவும் இருக்கலாம்.

—'ஹரிஜன்' – 30—4—1925

# 8

# 'நான் எழுதுவதில் முரண்பாடு இருந்தால்...'

நான் எழுதுவதையெல்லாம் விடாமல் வாசித்து வரும் ஒருவர், சமபந்தி போஜனம், கலப்பு மணம் இவை பற்றிச் சமீபத்தில் நான் எழுதியுள்ளவைகளுக்கும், சில வருஷங்களுக்கு முன் எழுதியிருப்பவைகளுக்கும் வேற்றுமை இருப்பதைத் தமது கடிதத்தில் சுட்டிக்காட்டியுள்ளார்.

*1921* அக்டோபர் *6*-ந்தேதி நான் 'ஹிந்து மதம்'பற்றி 'எங் இந்தியா'வில் எழுதிய கட்டுரையிலிருந்து அந்த வேற்றுமைக்கு அவர் மேற்கோள் காட்டியுள்ளார். அதில் அவர் சில பகுதிகளை விட்டுவிட்டுக் கீழ்க்கண்டவற்றை மாத்திரம் குறிப்பிட்டுள்ளார்:

"சமபந்தி போஜனத்தினாலும் கலப்பு மணத்தினாலும் வர்ணாச்சிரமம் பாதிக்கப்படவில்லையாயினும், பல்வேறு வகுப்புகளிடையே சமபந்தி போஜனத்தையும் கலப்பு மணத்தையும் ஹிந்து மதம் முற்றிலும் ஆதரிக்கவில்லை. ஹிந்து மதம் தன்னடக்கத்தின் மகோன்னதமான எல்லையை அடைந்துள்ளது. ஆன்மா விடுதலை பெற வேண்டும் என்பதற்காக, உடல் சம்பந்தமான வசதிகளை அடியோடு துறப்பதே ஹிந்து மதம் என்பதில் ஐயமில்லை......ஒருவர்

ஒரு குறிப்பிட்ட பிரிவைச் சேர்ந்த ஒரு பெண்ணைத் தவிர வேறு யாரையும் மணம் செய்துகொள்ளுவதில்லையென்ற கட்டுப்பாட்டை அனுசரிப்பது, அவரது சிறந்த தன்னடக்கத்தையே காட்டுகிறது...... சமபந்தி போஜனத்தையும், கலப்பு மணத்தையும் விலக்குவது துரிதமான ஆன்மிக மலர்ச்சிக்கு அவசியமாகும்.''

பிறகு சென்ற வருடம் நவம்பர் மாதம் 4-ந் தேதி நான் விடுத்த அறிக்கையிலிருந்து அவர் மேற்கோள் காட்டியுள்ளார். அந்த அறிக்கைகள் பத்திரிகைகளில் வெளியாகியிருந்தன. அதிலும் அவர் சில பகுதிகளை விட்டுவிட்டுக் கீழ்க்கண்டவற்றை மாத்திரம் குறிப்பிட்டுள்ளார்:

''சமபந்தி போஜனத்துக்கும் கலப்பு மணத்துக்கும் உள்ள கட்டுப்பாடுகள் ஹிந்து மதத்தின் அம்சங்களல்ல. அவை சமுதாயத்தில் நிலவும் வழக்கங்களாகும். ஒருவேளை அவை, ஹிந்து மதம் க்ஷீண தசையிலிருந்தபோது அதில் புகுந்து கொண்டிருக்கலாம்......இன்று இந்த இரு தடைகளும் ஹிந்து சமுதாயத்தைப் பலவீனப்படுத்தி வருகின்றன. இந்தத் தடைகளை வற்புறுத்துவது, வாழ்க்கையின் வளர்ச்சிக்கு இன்றியமையாத மூலாதாரமான விஷயங்களிலிருந்து மக்களின் கவனத்தைத் திருப்பி வருகிறது......உணவு, விவாக சம்பந்தமான கட்டுப்பாடுகள் ஹிந்து சமுதாயத்தின் வளர்ச்சியைத் தடுத்து வருகின்றன.''

விருப்பு வெறுப்பற்ற மனத்துடன் நான் அந்த இரு அறிக்கைகளையும் வாசிக்கும்போது, குறிப்பாக அவற்றின் முழு விவரங்களையும் வாசிக்கும்போது, அந்த இரண்டுக்கும் முரண்பாடு இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. 1921-ம் வருடத்திய அறிக்கையில் நான் ஹிந்து மதத்தைப் பற்றி எழுதியபோது, மிகச் சுருக்கமாகவும் மேலெழுந்தவாரியாகவுமே குறிப்பிட்டிருந்தேன். நவம்பர் 4-ந் தேதி அறிக்கையில், எண்ணிக்கையற்ற சாதிகளையும், சாதிக் கட்டுப்பாடுகளையும் பற்றி நான் ஆராய்ச்சி செய்ய வேண்டியிருந்தது. இப்போது ஆசிரமத்தில் வாழ்க்கை முறை எப்படியிருக்கிறதோ, முற்றிலும் அது போலவேதான் 1921-ஆம் ஆண்டிலும் இருந்தது. எனவே, என் பழக்க வழக்கத்தில் எவ்வித மாறுதலும் ஏற்பட்டுவிடவில்லை. சமபந்தி போஜனம், கலப்பு மணம் இவ்விஷயமாக ஒருவர் மேற்கொள்ளும் கட்டுப்பாடு, உடல் சம்பந்தமான வசதிகளைத் துறக்கும் ஒரு செய்கை என்பதுதான் இன்னும் எனது நம்பிக்கையாகும். 1921-ஆம் ஆண்டு எழுதிய கட்டுரையை இன்று நான் எழுதுவேனாயின், ஒருவேளை அதில் ஒரு வார்த்தையை நான் மாற்றியிருப்பேன். 'விலக்கு' என்பதற்குப் பதிலாக, அதே கட்டுரையில் சில வரிகளுக்கு மேலே நான் குறிப்பிட்டிருப்பதுபோல், 'சமபந்தி போஜனம், கலப்பு மணம் இவற்றிற்கு எதிராகத் தனக்குத் தானே மேற்கொண்டுள்ள கட்டுப்பாடு, துரிதமான ஆன்மிக மலர்ச்சிக்கு அவசியமாகும்' என்று மீண்டும் குறிப்பிட்டிருப்பேன்.

நவம்பர் 4–ந் தேதி அறிக்கையில் நான் என்ன கூறியிருப்பினும், சகோதர மனப்பான்மை வளருவதற்கோ, அல்லது தீண்டாமையை அகற்றுவதற்கோ சமபந்தி போஜனமும் கலப்பு மணமும் எவ்விதத்திலும் அவசியமில்லையென்று நான் கூறுவேன். அதே சமயம், வற்புறுத்தப்பட்ட கட்டுப்பாடு நிச்சயமாக எந்தச் சமுதாயத்தின் வளர்ச்சியும் குன்றும்படி செய்துவிடும். இந்தக் கட்டுப்பாடுகளை வர்ண தருமத்துடனே அல்லது சாதியுடனே இணைப்பதால், ஆன்மிக சுதந்திரத்திற்கு நிச்சயமாகக் குந்தகம் ஏற்படுவதுடன், வர்ணமானது மதத்திற்கு ஒரு சுமையாகிவிடும்.

இதையெல்லாம் கூறிய பிறகு, நான் எழுதும் விஷயங்களை விடாமல் வாசித்து வரும் எந்த நிருபருக்கும், அவற்றில் அக்கறையுள்ள மற்றவர்களுக்கும் ஒன்று கூற விரும்புகிறேன். நான் கூறுவதில் முரண்பாடு தோன்றக்கூடாது என்பதுபற்றி நான் கவலைப்படவில்லை. சத்தியத்தை நாடிச் செல்லும் நான், பல கொள்கைகளை உதறித் தள்ளியிருக்கிறேன்; பல புதிய விஷயங்களைக் கற்றுக்கொண்டிருக்கிறேன். எனக்கு வயதாகிவிட்டாலும், என் மனவளர்ச்சி நின்றுவிட்டதென்ற உணர்ச்சி எனக்கு ஏற்படவில்லை. அல்லது என் உடல் அழிந்ததும் என் வளர்ச்சி நின்றுவிடுமென்றும் நான் கருதவில்லை, நான் அக்கறை கொண்டுள்ள விஷயம் நிமிஷத்திற்கு நிமிஷம் சத்தியத்தின் கட்டளைக்குக் கீழ்ப்படியத் தயாராக இருப்பதுதான், சத்தியம் தான் என் கடவுள். எனவே, நான் எழுதியவற்றில் உள்ள முரண்பாட்டை யாராவது கண்டுபிடித்தால், அவருக்கு என் சித்த சுவாதீனத்தில் நம்பிக்கை இருக்குமாயின், ஒரே விஷயத்தைப் பற்றி நான் பிற்பாடு எழுதியதையே அவர் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும்.

—'ஹரிஜன்' - 29—4—1933

# 9

# செயற்கைச் சரக்கு

ஹூப்ளியிலிருந்து எழுதியிருக்கும் ஒருவர் கீழ்வருமாறு சில கேள்விகள் கேட்டுள்ளார் :

*தீண்டாமை இயற்கையானதா அல்லது செயற்கையானதா? அது சமுதாயத்தில் அடங்கியுள்ள மக்களின் ஒழுக்க வளர்ச்சி, அறிவு வளர்ச்சி, வாழ்க்கை முறை இவற்றைப் பொறுத்ததா? தீண்டாமை முற்றிலும் அகற்றப்பட்ட ஒரு சமுதாயத்தை நீங்கள் சித்திரித்துக்காட்ட முடியுமா?*

என் அபிப்பிராயத்தில், தீண்டாமை முற்றிலும் செயற்கைச் சரக்கேயாகும். மக்களின் ஒழுக்க, அறிவு வளர்ச்சிக்கும் தீண்

டாமைக்கும் சம்பந்தமில்லை. இதற்குக் காரணம் தெளிவானது. ஹிந்து சமுதாயத்தில் தீண்டாதார் எனப்படுவோர் ஒழுக்க, அறிவு அபிவிருத்தியில் சாதி ஹிந்துக்களிடையே உள்ள மிக மிகச் சிறந்தவருக்குச் சமமாக இருப்பதைக் காண்கிறோம். அப்படியிருந்தும், அவர் தீண்டாதாராகவே நடத்தப்படுகிறார். நான் சித்தரிக்கும் தீண்டாமையிலிருந்து விடுதலையடைந்த சமூகத்தில், எவரும் தம்மை மற்றவரைக் காட்டிலும் உயர்வாகக் கருதமாட்டார். அவ்விதம் உருவாக்கப்பட்ட ஒரு சமுதாயத்தில் ஒழுங்கற்ற விபரீதமான போட்டியோ அல்லது சண்டையோ இராது.

அவர் அடுத்தபடியாகக் கேட்பதாவது :

"தீண்டாமையை ஒழிப்பதற்குச் சமபந்தி போஜனமும் கலப்பு மணமும் அவசியமானவையா ?"

அந்தக் கேள்விக்கு 'இல்லை' என்பதும் 'ஆம்' என்பதுமே எனது பதிலாகும். இல்லை என்பதற்குக் காரணம் என்னவெனில், அது ஹரிஜன சேவக சங்கத் திட்டத்தின் ஓர் அம்சமல்ல. தவிர, திருமணம் செய்துகொள்ளுவதும் உண்பதும் பொதுவாகத் தனி நபரைப் பொறுத்த விஷயங்கள். ஒருவரை, அவரது விருப்பத்துக்கு விரோதமாக, ஒரு பெண்ணை மனைவியாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்படியோ அல்லது எவருடனும் சாப்பிடும்படியோ கேட்க யாருக்கும் உரிமையில்லை.

அதே சமயம் எனது விடை 'ஆம்' என்பதும் ஆகும். ஏனென்றால், தீண்டாதவர் அல்லது தாழ்ந்தவர் என்ற காரணத்தைக்கொண்டு ஒருவர் மற்றொருவரால் தொடப்பட்ட உணவைச் சாப்பிட மறுத்தால், அவர் தீண்டாமையை அனுஷ்டிப்பவராகிறார். வேறு விதமாகச் சொல்லுவதாயின், சமபந்தி போஜனம் அல்லது திருமணம் செய்வதற்கு, தீண்டாமை தடையாக இருக்க முடியாது.

அவருடைய அடுத்த கேள்வியாவது :

"மத சம்பந்தமான அனுஷ்டானங்களில் அல்லது பழக்க வழக்கங்களில் மாறுதலை உண்டு பண்ணுவதற்கு, குற்றம் குறையுள்ள ஒருவர் தகுது வாய்ந்த அதிகாரியாக இருக்க முடியுமா ?"

மானிடராகப் பிறந்த எல்லோருமே சற்றேறக் குறைய குற்றம் குறையுள்ளவர்கள்தான். எனினும், குறையுள்ள ஒரு மனிதர், ஒரு குறிப்பிட்ட மாறுதலைச் செய்வதற்குக்கூடத் தகுதியற்ற விதத்தில் அவ்வளவு குறையுள்ளவராக இருக்க முடியாது. ஒருவர், வேறு விதத்தில் குறையுள்ளவராயினும், போதை கொடுக்கும் வஸ்துக்களான அபின், சாராயம் முதலியவற்றை உபயோகிக்கும் விஷயமாக சில நிர்ணயமான கொள்கையுடையவராக இருக்கலாம். அங்கிலையில், மத சம்பந்தமான ஆதாரங்

களை அடிப்படையாகக் கொண்டிருந்தாலும், மக்களின் குடிப் பழக்கத்தில் மாறுதல்களை உண்டாக்க உத்தேசிக்கவும், மாறுதல்களை அமுலுக்குக் கொண்டுவரவும் அவருக்கு எல்லா உரிமையும் உண்டு.

—'ஹரிஜன்' – 23—3—1934

# 10

# முரண்பாட்டுக்குக் காரணம் மனக்குழப்பமே

ஒருவர் எழுதுவதாவது :

"தீண்டாமையை ஒழிக்க நீங்கள் தீவிரப் பிரசாரம் செய்து வரும்போது, சில விஷயங்களைக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அவை, 'எங் இந்தியா' வில் ஏற்கனவே நீங்கள் எழுதியுள்ள விஷயங்களுக்கு முரணாக இருப்பதுபோல் தோன்றுகின்றன. உதாரணமாக, சமபந்தி போஜனக் கட்டுப்பாடு பற்றிய விதி ஆன்மிக மலர்ச்சிக்காக ஏற்பட்டதேயன்றி, அதற்கும் வர்ண தருமத்துக்கும் சம்பந்தமில்லையென்று நீங்கள் சில ஆண்டுகளுக்கு முன் எழுதியிருந்தீர்கள். இப்போதோ, தீண்டாமை காரணமாக தீண்டாதாருடன் எவராவது சாப்பிட ஆட்சேபிப்பது பாவம் என்று சொல்லி வருகிறீர்கள். ஆன்மிக மலர்ச்சிக்கு சமபந்தி போஜனக் கட்டுப்பாடு அவசியமென்றோ அல்லது நியாயமென்றோ நீங்கள் ஒத்துக்கொண்டால், தீண்டாதாருடன் சாப்பிட மறுப்பது பாவமென்று நீங்கள் எப்படிச் சொல்ல முடியும்? சமபந்தி போஜனக் கட்டுப்பாடு வர்ண தருமத்தின் ஓர் அம்சமல்ல என்று நீங்கள் கூறுவதை நான் ஒத்துக்கொள்ளுகிறேன். எனினும், சமபந்தி போஜனம் ஆன்மிக மலர்ச்சிக்கு ஏன் தடையாக இருக்கிறது என்பதைத்தான் என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை."

இங்கே இரண்டு விதத்தில் மனக்குழப்பம் இருக்கிறது. முதலாவதாக, தீண்டாமை காரணமாகச் சமபந்தி போஜனக் கட்டுப்பாடு, ஆன்மிக மலர்ச்சி காரணமான கட்டுப்பாட்டிலிருந்து முற்றிலும் வேறானது. முதலாவது கட்டுப்பாடு, ஒரு வகுப்பினர் யாவரையுமே ஒதுக்கிவைப்பதாக இருக்கிறது. அது, அவ்வகுப்பினரின் வாழ்விற்கே ஒரு சவாலாகும். இரண்டாவதான கட்டுப்பாடோவெனில், ஒரு குறிப்பிட்ட வகுப்பில் பிறந்தார் என்பதற்காக யாரையும் ஒதுக்கவில்லை; ஆனால், குறிப்பிட்ட பழக்க வழக்கங்களுக்கு இலக்கான தனி நபர்களையே ஒதுக்கி வைக்கிறது. அவ்விதமாக, தீண்டாமை காரணமான கட்டுப்பாடு, சம்பந்தப்பட்டவர்களின் பழக்க வழக்கங்கள் எவ்விதமாயினும். நீடித்து வரும். ஆன்மிக மலர்ச்சி காரணமான கட்டுப்பாடு, ஒதுக்கப்பட்டவர் ஆட்சேபகரமான தமது பழக்க வழக்கங்களைத் கைவிட்ட

உடனடியாக நீங்கிவிடும். எனவே, நிருபர் குறிப்பிட்டுள்ளபடி 'எங் இந்தியா'வில் நான் முன்பு எழுதியிருப்பதற்கும் எனது தற்போதைய நிலைக்கும் முரண்பாடு எதுவுமில்லை. இரண்டாவதாக, 'எங் இந்தியா'வில் குறிப்பிட்டுள்ள எனது அபிப்பிராயத்துக்கு நான் சமாதானம் கூற முடியாமல் இருந்தாலும்கூட, நிருபரின் சந்தேகம் தீருவதற்குக் காரணமிருக்கிறது. அதாவது, 'எங் இந்தியா'வில் நான் முன்பு குறிப்பிட்டிருந்த கட்டுப்பாட்டை ஆதரிக்கிறேன். தீண்டாமை காரணமாக சமபந்தி போஜனத்தை ஆட்சேபிப்பதை நான் கண்டிக்கிறேன். நிருபரின் சந்தேகம் தீருவதற்கு இது போதாதா?

வைஷ்ணவ சமய சம்பந்தமான நூல்களில் அவ்விஷயங்களையொட்டிக் கண்டிப்பான கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டிருக்கின்றன; எனவே, எனது நிலை அவற்றிற்கு முரணாக இல்லையா என்றும் நிருபர் மேற்கொண்டு கேட்டுள்ளார். அந்தக் கேள்வி நியாயமானதுதான். அந்தக் கட்டுப்பாடுகளுக்கும் எனது நிலைக்கும் உள்ள முரண்பாட்டை, நான் தவிர்க்க முடியாதவனாக இருக்கிறேன் என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். நான் வைஷ்ணவ சமயத்தைச் சேர்ந்தவன் என்பது பற்றிப் பெருமை அடைகிறேன். எனினும், அதற்காக வைஷ்ணவ சமய நூல்களில் விதிக்கப்பட்டுள்ள எல்லாச் சடங்குகளையும் நான் விடாமல் அனுஷ்டித்துத் தீரவேண்டுமென்ற அவசியமில்லை. நான் வைஷ்ணவ சமயத்தில் உறுதியான நம்பிக்கை வைத்திருப்பதற்குக் காரணம், அது உலகிலுள்ள யாவரிடமும் அன்பு காட்டும்படி, அதாவது எல்லோரிடமும் சகோதர மனப்பான்மை கொள்ளும்படி உபதேசிக்கிறது; சத்தியத்தையும் அகிம்சையையும் அணுவளவும் வழுவின்றி அனுஷ்டிக்கும்படி அது பெரிதும் வலியுறுத்துகிறது; கடவுளிடம் தன்னலமற்ற பக்தி கொள்ளும்படியும் அது வற்புறுத்துகிறது. மத சம்பந்தமான ஹிந்து நூல்களிலும், லௌகிக சம்பந்தமான நூல்களிலும் வைஷ்ணவ மகான்களும் மற்ற நூலாசிரியர்களும் குறுகிய மனப்பான்மையையும், சகியாமையையும், மூடநம்பிக்கையையும் மிகவும் வன்மையாகக் கண்டித்திருக்கிறார்கள். வேறு எந்த மத நூலிலும் அவ்விதம் யாரும் கண்டிக்கவில்லை. எனவே, வைஷ்ணவ சமய தத்துவத்துக்கு வெளிப்படையான முரண்பாடுள்ள சடங்குகள் அனுஷ்டிக்கப்படுவதைக் குறித்து நான் கலங்க வேண்டிய அவசியமில்லை.

நிருபர், தமது கடிதத்தின் இறுதியில் கீழ்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார் :

"எங்களுக்கு ஏற்படும் சந்தேகங்களை நாங்களே தீர்த்துக்கொள்ள முடியாது. எனவே, நாங்கள் உங்களுடைய சிறந்த தீர்ப்புக்குப் பணிகின்றோம். நாங்கள் உங்களுடைய உபதேசத்தைப் பின்பற்றும்போது, எங்களுடைய நெருங்கிய உற்றார் உறவினரால் கூட நாங்கள் பகிஷ்கரிக்கப்படும் சங்கடத்துக்கு உள்ளாக வேண்டியிருக்கிறது. அத்தகைய சந்தர்ப்பங்களில் நாங்கள் என்ன செய்வது?"

இந்தக் கேள்விக்கு விடையளிப்பது கஷ்டமாகும். இது, ஓர் ஆடவருக்கோ அல்லது ஒரு பெண்ணுக்கோ, துன்பத்தைச் சகித்துக்கொள்ளும் சக்திக்குத் தகுந்தவாறு அவரவரே தீர்மானித்துக்கொள்ள வேண்டிய விஷயமாகும். தீண்டாமை ஒரு தீமை என்று கருதுவோர், அதை எவ்விதத்திலும் எந்த உருவத்திலும் அனுஷ்டிக்க முடியாது. மிகவும் முக்கியமான அத்தகைய விஷயத்திலும், ஒவ்வொரு சீர்திருத்தவாதியும், அவர் ஆடவராயினும் சரி, பெண்ணுயினும் சரி, தைரியமாகத் தமது கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டுமென்றும், அவர்கள் தங்களுக்கு நேரும் சமுதாயக் கொள்கைகளையெல்லாம் அஞ்சாமல் தைரியமாக எதிர்த்து நிற்க வேண்டுமென்றுமே நான் எதிர்பார்ப்பேன். உலகம் முழுவதுமே சீர்திருத்தவாதிகளின் விதி அப்படித்தான்.

—'எங் இந்தியா' - 13—4—1934

# 11

# சாதி ஒழிய வேண்டியதே

*1.* வேதங்கள் கூறும் வர்ணுச்சிரமத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு. ஸ்மிருதிகளிலும் மற்ற நூல்களிலும் முரண்பாடான சில பகுதிகள் இருப்பினும், வர்ணுச்சிரமம் முற்றிலும் சம அந்தஸ்தை அடிப்படையாகக் கொண்டதென்பதே என் அபிப்பிராயமாகும்.

*2.* சாஸ்திரங்கள் என்ற பெயரால் அச்சிடப்பட்ட நூல்களிலுள்ள ஒவ்வொரு வார்த்தையும் வேதவாக்கு அல்ல என்பதே என் கருத்து.

*3.* ஒப்புக்கொள்ளப்பட்ட நூல்களின் வியாக்கியானம் விரிவடைந்து வந்திருக்கிறது. மனிதரின் அறிவையும் இதயத்தையும் போல் அது எல்லையின்றி விரிவடையும் ஆற்றல் உள்ளது.

*4.* சாஸ்திரங்களில், உலகம் முழுவதற்கும் பொதுவான உண்மைகளுக்கும் ஒழுக்கங்களுக்கும் வெளிப்படையான முரண்பாடுள்ள எதுவும் நீடிக்க முடியாது.

*5.* சாஸ்திரங்களில், பகுத்தறிவுக்கு முரணுக இருக்கும் எதுவும் நிலைத்திருக்க முடியாது.

*6.* சாஸ்திரங்களில் உள்ள வர்ணுச்சிரமம் இன்று அனுஷ்டானத்தில் இல்லை.

*7.* தற்போதைய சாதி முறை வர்ணுச்சிரமத்திற்கு நேர் விரோதமானது.

8. வர்ணுச்சிரமத்தில், சமபந்தி போஜனத்துக்கும் கலப்பு மணத்துக்கும் தடை இருந்ததில்லே, இருக்கவும் கூடாது. லாபம் சம்பாதிப்பதற்காகப் பரம்பரைத் தொழிலே மாற்றிக் கொள்ளுவதற்கே வர்ணுச்சிரமத்தில் தடை இருக்கிறது. எனவே, தற்போதைய வழக்கம் இரட்டிப்புத் தவருகும். அது சமபந்தி போஜனம், - கலப்பு மணம் இவ்விஷயமாகக் கொடுமையான கட்டுப்பாடுகளே ஏற்படுத்தியிருக்கிறது; தொழிலேத் தேர்ந்தெடுப்பது பற்றித் தாறுமாருன குழப்பத்தைச் சகித்துக்கொண்டிருக்கிறது.

9. வர்ணுச்சிரமத்தில் சமபந்தி போஜனத்திற்கும், கலப்பு மணத்துக்கும் தடை இல்லேயென்ருலும், அவ்விஷயமாக நிர்ப்பந்தம் கூடாது. ஓர் ஆடவரோ அல்லது பெண்ணே எங்கே கல்யாணம் செய்துகொள்ளுவது, எங்கே சாப்பிடுவது என்பதைத் தனி நபரின் தங்குதடையற்ற விருப்பத்துக்கு விட்டுவிட வேண்டும். வர்ணுச்சிரம விதி அனுஷ்டிக்கப்படுவதாயின், திருமணம் சம்பந்தப்பட்ட வரையில், ஜனங்கள் இயற்கையாக, தங்கள் சொந்த வர்ணத்தைச் சேர்ந்தவர்களுடன் மாத்திரமே கல்யாண உறவு வைத்துக்கொள்ள விரும்புவர்.

10. நான் அடிக்கடி கூறியிருப்பதுபோல், பிறப்பினுல் தீண்டாமை என்ற விஷயம் சாஸ்திரங்களில் இல்லவே இல்லே. தற்போதைய தீண்டாமை வழக்கத்தை ஒரு பாவமாகவும், ஹிந்து மதத்திற்குப் பெரும் களங்கமாகவுமே நான் நிச்சயமாகக் கருதுகிறேன். தீண்டாமை வாழ்ந்தால் ஹிந்து மதம் செத்துவிடும் என்ற அபிப்பிராயம் முன்னரைக் காட்டிலும் இப்போது என் மனத்தில் பலம் பெற்றிருக்கிறது.

11. சாதியை அழிப்பதற்கு, மிகவும் பயன் தரத்தக்க, மிக்க துரிதமான, சிறிதும் ஆடம்பரமற்ற வழி யென்னவெனில், சீர்திருத்தவாதிகள் முதலில் தங்களுக்குள் அந்த வழக்கத்தை ஒழிக்க முற்படுவதுதான். அவசியமாயின், அதன் காரணமாக ஏற்படும் சமுதாய பகிஷ்காரத்தின் விளேவுகளேயும் அவர்கள் ஏற்கத் தயாராக இருக்கவேண்டும். வைதிகத்தைத் தூற்றுவதால், சீர்திருத்தம் ஏற்பட்டுவிடாது. அத்தகைய மாறுதல் யாருமறியாமல் நாளாவட்டத்தில் சிறிது சிறிதாக ஏற்பட வேண்டும். 'உயர்ந்த' வகுப்பினர் தங்களுடைய 'உயர்ந்த' பீடத்திலிருந்து கீழே இறங்கி வந்தால்தான், 'தாழ்ந்த' வகுப்பினரிடையே நல்லெண்ணம் ஏற்படும்படி செய்ய முடியும். நகரங்களில் வசிக்கும் மக்களுக்கும் கிராமவாசிகளுக்கும் இடையேயுள்ள பிளவையும், உயர்ந்த வகுப்பினருக்கும் தாழ்ந்த வகுப்பினருக்கும் உள்ள பிளவையும் அகற்றி ஒற்றுமை ஏற்படும்படி செய்வது, எவ்வளவு கஷ்டமானதென்பதைக் கிராம ஊழியத்தின் அன்ருட அனுபவமானது காட்டுகிறது. நகரங்கள், கிராமங்கள் இரண்டிலுமே வகுப்பு வேற்றுமை இருந்து வருகிறது.

—'ஹரிஜன்' 16—11—1935

# 12

# 'தீண்டாதார்'
# சாதி ஹிந்துக்களாகும் காலம்

''சாதி ஒழிய வேண்டியதே'' என்ற தலைப்பின் கீழ் நான் எழுதிய கட்டுரை, சாதி ஹிந்துக்களுக்கும் ஹரிஜனங்களுக்கும் இடையேயுள்ள சம்பந்தத்தைப் பற்றிக் குறிப்பிடவில்லை. சாதி ஹிந்துக்கள் அல்லது சவர்ண ஹிந்துக்களிடையே மாத்திரம் ஏற்பட வேண்டிய சீர்திருத்தத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறது. தீண்டாமை ஒழிந்துவிட்டால், பின்னர் 'தீண்டாதார்', சாதி ஹிந்துக்கள் போன்ற அதே நிலையை அடைவார்கள். அதன் பின் அவர்கள் ஹரிஜனங்களாகக் கருதப்படமாட்டார்கள்; சாதி ஹிந்துக்களிடையே நிலவி வரும் பழக்க வழக்கங்களுக்கு அவர்கள் உட்பட வேண்டியிருக்கும். எனவே, சாதி இப்போதிருப்பதுபோலவே இருந்து வருமாயின், ஹரிஜனங்களுக்கும் சாதி ஹிந்துக்களுக்குமிடையே சமபந்தி போஜனமோ, கலப்பு மணமோ இராது. இன்றிருக்கும் சாதி முறை ஒழிந்துவிடுமாயின், —அது ஒருநாள் ஒழிந்துதான் தீரும்—பின்னர் சாதி ஹிந்துக்களுக்கும் சாதி ஹிந்துக்களுக்குமிடையே சமபந்தி போஜனமும் கலப்பு மணமும் ஏற்படுவதுபோல், ஹரிஜனங்களுக்கும் சாதி ஹிந்துக்களுக்குமிடையேயும் அவை நிச்சயமாக ஏற்பட்டுவிடும். எனினும், வர்ணம் அப்படியே இருந்து வருமென்பதே என் நம்பிக்கையாகும். வர்ணம் நிலைத்திருக்குமாயின், முன்பு இருந்தது போல், யார் யார் எந்தத் தொழில் செய்ய வேண்டுமென்ற கட்டுப்பாடு ஏற்படும்; முன்பு இராதது போலவே சமபந்தி போஜனம், கலப்பு மணம் இவை சம்பந்தமாகக் கட்டுப்பாடு எதுவும் இராது. அவ்விஷயமாக என்ன நேர்ந்தாலும், அது ஹரிஜன சேவக் சங்கத்தின் அலுவல் காரணமாக ஏற்பட்டுவிடாது; வேறு சக்திகளின் காரணமாகவே ஏற்படும். ஏனெனில், அந்தச் சக்திகளை ஹரிஜன் சேவக் சங்கம் ஒழுங்குபடுத்தவோ அல்லது கட்டுப்படுத்தவோ முடியாது. எனினும், தனிநபர்கள் என்ற முறையில் அச்சங்கத்தின் அங்கத்தினர்கள், அவரவர் மனப்போக்கின்படி, அந்தச் சக்திகளை உருவாக்குவதில் தங்கள் பங்கை எடுத்துக்கொள்ளுவார்கள் என்பது நிச்சயம்.

—'ஹரிஜன்'-30—11—1935

# 13

# ஹரிஜனங்களுக்கு மத போதனை அவசியம்

**கேள்வி :** ஹரிஜனங்கள் பிரஜா உரிமைகளும் சமுதாய உரிமைகளும் பெறும்படி செய்வதற்காக, குறிப்பிட்ட இடங்களில் கிளர்ச்சியை ஆரம்பிக்கும்படி சாதி ஹிந்துக்களுக்கு நீங்கள் ஆலோசனை கூறுவீர்களா? அவசியமானல் இவ்விஷயமாக, சாதி ஹிந்துக்களுக்கு எதிராக சத்தியாக்கிரகத்துக்கு ஏற்பாடு செய்யுமாறு நீங்கள் ஹரிஜன சேவக சங்கத்துக்கு சிபார்சு செய்வீர்களா?

**பதில் :** சாதி ஹிந்துக்களுக்கு எதிராகச் சத்தியாக்கிரகம் செய்யுமாறு, ஒரு ஸ்தாபனம் என்ற முறையில் நான் அச்சங்கத்திற்கு ஆலோசனை கூறமாட்டேன். ஆனல், சங்க அங்கத்தினர்களுக்கு, தங்கள் சொந்த முறையில் அவரவர் இடங்களில் அவ்வித சத்தியாக்கிரகத்துக்கு ஏற்பாடு செய்யுமாறு நான் ஆலோசனை கூறுவது மாத்திரமல்ல, அவர்கள் அவ்விதம் செய்ய வேண்டுமென்றும் எதிர்பார்க்கிறேன். சத்தியாக்கிரக தத்துவத்தை அறிந்துகொண்டு ஒழுங்கான முறையில் அவர்கள் சத்தியாக்கிரகத்திற்கு ஏற்பாடு செய்வார்களாயின், அவ்விஷயமாக அவர்களுக்கு நிச்சயமாக நான் ஆதரவளிப்பேன். அவ்விதம் செய்யவேண்டியது அவர்களுடைய கடமையாகும்.

**கே :** மாகாணங்களில் ஜனப்பிரதிநிதி சர்க்கார்கள் இராததால், ஹரிஜனங்களின் ஆலயப் பிரவேசத் திட்டத்தைத் தீவிரமாகவும் ஊக்கத்துடனும் நடத்தும்படி நீங்கள் சங்கத்திற்கு யோசனை கூறுவீர்களா?

**ப :** நான் யோசனை கூற முடியும். இப்போதுகூட அவ்விதம் நடைபெற்று வருகிறதென்றே அறிகிறேன். ஆனல், அது ஆமை வேகத்தில் நடந்துவருகிறது. அதன் வேகத்தை நிச்சயமாக அதிகரிக்க வேண்டுமென்பதே என் விருப்பம்.

**கே :** ஹரிஜன சேவக சங்க அங்கத்தினர்கள் தீண்டாதாருடன் சம்பந்தி போஜனம் செய்ய மறுக்கலாமா? இவ்விஷயமாக உங்களுடைய கருத்துக்களில் ஏதாவது மாறுதல் ஏற்பட்டிருக்கிறதா?

**ப :** சமபந்தி போஜனம், தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தின் ஒரு முக்கிய அம்சம் அல்ல என்று நான் ஒரு சமயம் கூறத்தான் செய்தேன். எனினும், என் சொந்த ஹோதாவில் சமபந்தி

போஜனத்தை நான் விரும்பினேன். இன்று, அவ்விதமே செய்ய வேண்டுமென நான் உற்சாகமூட்டுகிறேன்.

**கே:** கிராமப் பஞ்சாயத்துகள், முனிசிபாலிடிகள், சட்ட சபைகள் முதலியவற்றில் ஹரிஜனங்களுக்குப் போதிய பிரதிநிதித்துவம் கோருவதன் மூலம், ஹரிஜனங்களுக்கு அரசியல் அதிகாரம் கிடைக்க, ஹரிஜன சேவக சங்கம் முயற்சிக்க வேண்டாமா?

**ப:** நிச்சயமாக முயற்சிக்கத்தான் வேண்டும். அவ்விஷயமாக எவ்வளவு முயற்சி எடுத்துக்கொண்டாலும் அது அதிகமாகாது.

**கே:** வயது வந்தவர்கள் அடங்கிய ஹரிஜன் கூட்டங்களிலும் ஹரிஜன் ஹாஸ்டல்களிலும் ஹிந்து மதத்தின் முக்கிய அம்சங்கள் பற்றிச் சங்கம் ஹரிஜனங்களுக்குப் போதிக்க வேண்டாமா?

**ப:** ஹரிஜனக் குழந்தைகளுக்கும், வயது வந்தவர்களுக்கும் ஹிந்து மதத்தின் முக்கிய அம்சங்கள் பற்றிப் பொது அறிவு ஏற்படும்படி செய்ய வேண்டியது சங்கத்தின் முதன்மையான கடமையாக இருக்க வேண்டும். அவ்விஷயங்கள் பற்றி அவர்கள் அறியாமையில் வளர்ந்து வருவார்களாயின், அவர்கள் ஹிந்து சமுதாயத்தில் நிலைத்திருக்கமாட்டார்கள். அந்த நிலைக்குப் பொறுப்பு, அவர்களுக்கு அவசியமான மதபோதனை அளிக்கத் தவறியவர்களையே சாரும்.

—'ஹரிஜன்' - 28–7–1946

# 14

# மகிழ்ச்சி தரும் அந்நாள்

சூரத் பட்டிதார் ஆசிரமத்திலிருந்து ஒரு நண்பர் ஸ்ரீ நரஹரி பரீக்கிற்குக் கீழ்வருமாறு எழுதியுள்ளார்:

"காந்திஜி அரசியலில் பிரவேசித்ததிலிருந்து, இந்தியாவில் தீண்டாமை ஒழிப்பு இயக்கத்துக்கு மகத்தான உத்வேகம் ஏற்பட்டிருக்கிறது. ஒரு சாதி ஹிந்துவை மணம் செய்து கொள்ளுவதற்குக் கல்வி பெற்ற ஒரு ஹரிஜன் சிறுமியை அவர் கண்டுபிடிப்பராயின், அது இயக்கத்துக்கு ஒரு விதத்தில் உதவியாக இருக்கும். ஆனல், இவ்விஷயத்தை மற்றொரு கோணத்திலிருந்து சிந்திக்க வேண்டும். பெண் கல்வியில் நம் நாடு இன்னும் பிற்போக்கானதாகவே இருந்து வருகிறது. எல்லா விதத்திலும் பிற்போக்காக இருக்கும் ஹரிஜனங்களிடையே உள்ள கல்வி பெற்ற சிறுமிகளைக் கைவிரலால் எண்ணிவிட முடியும், அவர்கள் சாதி ஹிந்துக்களை மணம் செய்துகொண்டால் அவர்கள் தங்

கள் சமூகத்திலிருந்து பிரிக்கப்பட்டு சாதி ஹிந்துக்களுடன் ஐக்கியமாகிவிடு வார்கள்' பின்னர், தங்கள் சமூகத்துக்கு உள்ளேயிருந்து தங்கள் ஹரிஜன சகோதரிகளின் உத்தாரணத்துக்கு அவர்கள் தொண்டு செய்ய முடியாமற் போய்விடும். அத்தகைய ஒன்றிரண்டு சம்பவங்களை நான் அறிவேன்.

''ஒரு விதத்தில் அத்தகைய கல்யாணங்கள் ஹரிஜனங்களை அறியாமை யில் வைத்திருக்கவே உதவியாக இருக்கிறது எனலாம். ஒரு சமூகத்தின் முன்னேற்றம், அதன் பெண்களின் முன்னேற்றத்தையே பொறுத்திருக்கிறது. ஹரிஜன சமூகத்தில் உள்ள சிறந்த பெண்களை சாதி ஹிந்துக்களுக்கு மணம் செய்து கொடுத்துவிட்டால், இன்று அறியாமைப் பேரிருளில் ஆழ்ந்து கிடக் கும் ஹரிஜனங்கள் அதிலிருந்து வெளியே வரமுடியாதவாறு காந்திஜி கதவை மூடியவராவார். இத்தகைய நிலை ஏற்படாதவாறு தடுக்க வேண்டும். எனவே, ஹரிஜனச் சிறுமிகள் சாதி ஹிந்துக்களை மணம் செய்துகொள்ளுவதாயின், தம் பதிகள் தங்களுடைய வாழ்க்கையை ஹரிஜனங்களின் தொண்டிற்கு அர்ப்ப ணம் செய்ய வேண்டுமென்ற நிபந்தனையின்மீதே மணம் செய்துகொள்ள வேண்டும். இல்லாவிடில் கல்வி, பெற்ற ஹரிஜனப் பெண்கள் தங்கள் சொந்த சமூகத்தில் உள்ள ஹரிஜன இளைஞர்களையே மணம் செய்து கொள்ளும்படி தூண்ட வேண்டும். அவர்கள் உண்மையிலேயே கற்றறிஞர்களாக இருக் கும் பட்சத்தில், அவர்கள் தங்கள் சமூகத்திலுள்ள மற்றவர்களும் பின்பற்றக் கூடிய எடுத்துக்காட்டாக இருப்பார்கள்.

''எங்கள் ஆசிரமத்தில் ஹரிஜன மாணவர்களும் ஹரிஜன் அல்லாத மாணவர்களும் யாதொரு வேற்றுமையுமின்றிச் சேர்ந்தே வசித்து வருகிறார்கள் என்பதை நீங்கள் அறிந்திருக்க வேண்டும். பரீக்ஷித் லால் ஒவ்வொரு வருட மும் ஒன்று அல்லது இரண்டு ஹரிஜன மாணவர்களை ஆசிரமத்திற்கு அனுப்பு கிறார். இந்த வருடமும் இரண்டு ஹரிஜன மாணவர்கள் வந்தனர். அவர் களில் ஒருவர் என்னிடம் கூறியதாவது: 'கற்றறிவுள்ள சாதி ஹிந்துச் சிறுமி கள் கற்றறிவுள்ள ஹரிஜன் இளைஞர்களை மணம் செய்து கொள்ளும்படி பாபு காந்திஜி) ஏன் உற்சாகப் படுத்தக்கூடாது? உண்மையில் இத்தகைய திரு மணங்களைத்தான் அவர் ஆதரிக்க வேண்டும். சாதி ஹிந்துப் பெண்கள் ஹரி ஜனங்களுடன் ஹரிஜன்ங்களாவே வாழ்வார்களாயின், அவர்களிடமிருந்து ஹரிஜன் சகோதரிகள் எவ்வளவோ கற்றுக் கொள்ளுவது சாத்தியமாகும். அதனால், ஹரிஜன் உத்தாரண அலுவல்களுக்கும் மிகுந்த உத்வேகம் ஏற்படும்' இந்த கேள்விக்கு நானே பதில் அளிக்க முடியும். எனினும், இதற்குப் பாபு பதில் அளிப்பதையே நான் விரும்புவேன். அது தீவிர சிந்தனைக்கு உரிய ஒரு கேள்வியாகும்.''

கற்றறிவுள்ள ஒரு ஹரிஜன் சிறுமி, ஒரு சாதி ஹிந்துவை மணம் செய்து கொண்டால், அந்தத் தம்பதிகள் ஹரிஜனங் களுக்குத் தொண்டு புரியவே தங்களை அர்ப்பணம் செய்து கொள்ள வேண்டும். போக வாழ்க்கை, ஒருபோதும் அத்தகைய ஒரு திருமணத்தின் நோக்கமாக இருக்க முடியாது. அவ்வித வாழ்க்கை ஒழுங்கற்றதாகும். அதை நான் ஒரு போதும் ஆதரிக்க முடியாது. சிறந்த நோக்கங்களுடன் செய்துகொள்ளும் விவாகம் தோல்வியில் முடியலாம். ஆனால், அத்தகைய துரதிர்ஷ்டத்தை யாராலும் தடுக்க முடியாது. ஒரு ஹரிஜனச் சிறுமி, உயர்ந்த

ஒழுக்கமுள்ள ஒரு சாதி ஹிந்துவை மணம் செய்து கொண்டால் கூட, அது ஹரிஜனங்களுக்கும் சாதி ஹிந்துக்களுக்கும் நன்மையைக் கொடுக்கும். அவர்கள் ஒரு நல்ல முன்னுதாரணம் காட்டியவராவார்கள். அந்த ஹரிஜன் சிறுமி உண்மையில் தகுதி வாய்ந்தவளாக இருக்கும் பட்சத்தில், அவளுடைய குணமும் செல்வாக்கும் வெகு தூரம் பரவி, மற்றவர்களும் தன் உதாரணத்தைப் பின்பற்றும்படி அவள் உற்சாக மூட்டியவளாவாள். பின்னர், அத்தகைய திருமணங்களைக் கண்டு சமுதாயம் கிலி கொள்ளாது. அவற்றில் யாதொரு தவறும் இல்லையென்பதை அவர்கள் தாங்களாகவே அறிந்துகொள்ளுவார்கள். அத்தகைய தம்பதிகளுக்குப் பிறக்கும் குழந்தைகளும் நல்லவர்களாக இருந்துவிட்டால், அவர்கள் தீண்டாமை ஒழிவதற்கு மேலும் உதவியாக இருப்பார்கள். ஒவ்வொரு சீர்திருத்தமும் நத்தை வேகத்தில்தான் நகர்ந்து செல்லும். இந்த மெதுவான முன்னேற்றத்தைக் கண்டு அதிருப்திப்படுவோர், சீர்திருத்தம் இயங்கும் விதம் பற்றி தங்கள் அறியாமையைப் பறைசாற்றியவராவார்கள்.

சாதி ஹிந்துப் பெண்கள், ஹரிஜனக் கணவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பது நிச்சயமாக விரும்பத்தக்கதுதான். அது சிறந்தது என்று சொல்ல நான் தயங்குகிறேன். அவ்விதம் சொல்லுவது, பெண்கள் ஆடவர்களைக் காட்டிலும் தாழ்ந்தவர்கள் என்ற பொருள்படும். இன்று அத்தகைய தாழ்வு மனப்பான்மை நிலவுவதை நான் அறிவேன். இந்தக் காரணத்துக்காக நான் தற்போது, ஒரு ஹரிஜனச் சிறுமி ஒரு சாதி ஹிந்துவை மணம்செய்து கொள்ளுவதைக் காட்டிலும், ஒரு சாதி ஹிந்துப் பெண் ஒரு ஹரிஜனைத் திருமணம் செய்துகொள்ளுவதே சிறந்ததென்பதை ஒப்புக்கொள்ளுவேன். என் இஷ்டப்படி நடக்குமாயின், என் செல்வாக்கிற்கு உட்பட்ட எல்லா சாதி ஹிந்துப் பெண்களையும் ஹரிஜனக் கணவர்களையே தேர்ந்தெடுத்துக் கொள்ளும்படி அறிவுறுத்துவேன். அது மிக மிகக் கஷ்டமான காரியம் என்பதை நான் அனுபவவாயிலாக அறிகிறேன். பழைய விருப்பு வெறுப்புக்களைக் களைவது கடினமாகும். அத்தகைய விருப்பு வெறுப்புக்களைக் கண்டு நகைப்பதும் கூடாது. பொறுமையுடன் அவைகளை அகற்றி வெற்றி பெற வேண்டும்.

ஒரு சிறுமி, ஒரு ஹரிஜனை மணம் செய்துகொள்ளுவதுடன் தன் கடமை முடிந்துவிட்டதாகக் கற்பனை செய்துகொள்ளுவது தவறாகும். விவாகத்திற்குப் பிறகு போக வாழ்க்கையின் மயக்கத்திற்கு இலக்காகிவிடுவது இன்னும் அதிக மோசமாகும். எனவே, ஒவ்வொரு திருமணத்தின் இறுதியான சோதனை என்னவெனில், தம்பதிகளிடம் அது எவ்வளவு தூரம் தொண்டு உணர்ச்சியை அபிவிருத்தி செய்கிறது என்பதேயாகும். ஒவ்வொரு கலப்பு மணமும், அதனதன் தரத்துக்குத் தகுந்தவாறு, அத்தகைய மணங்களுக்குக் கற்பிக்கப்படும் களங்கத்தை அகற்றுவதாக இருக்க வேண்டும். பின்னர் இறுதியாக, 'பங்கி' என்ற அழகான பெயரில் ஒரே ஒரு சாதிதான் இருக்கும். அந்தப்

பெயருக்கு, சீர்திருத்தவாதி அல்லது எல்லா அழுக்கையும் அகற்றுபவர் என்பதே பொருளாகும். மகிழ்ச்சியைக் கொடுக்கும் அத்தகைய ஒரு நன்னுள் விரைவில் உதயமாகும் என்று நாமெல்லோரும் பிரார்த்திப்போமாக.

என்னுடைய சிறந்த அபிலாஷைகள்கூட, நான் வாயளவில் கூறியதும், உண்மையாக நிறைவேறி விடாது என்பதை கடிதம் எழுதியிருப்பவர் உணர வேண்டும். நான் அவ்விதம் பிரகடனம் செய்தபின், ஒரு ஹரிஜனச் சிறுமியைக்கூட ஒரு சாதி ஹிந்துவுக்கு விவாகம் செய்து கொடுப்பதில் இன்னும் நான் வெற்றி பெறவில்லை. என்னிடம் ஒரு சாதி ஹிந்துச் சிறுமி இருக்கிருள். அவள், அவளது தந்தையின் விருப்பத்துக்கு இணங்க, அவளது தந்தை தேர்ந்தெடுத்துள்ள ஒரு ஹரிஜன் இளைஞரை மணம் செய்துகொள்ள இசைந்திருக்கிருள். அந்த இளைஞர், தற்போது சேவாக் கிராமத்தில் பயிற்சி பெற்றுவருகிருர். கடவுள் விருப்பமிருந்தால், திருமணம் சிறிது காலத்துக்குப் பிறகு நடைபெறும்.

—'ஹரிஜன் பந்து' - 30—6—1946

பகுதி ஒன்பது

# ஆலயப் பிரவேசம்

## 1

## குருவாயூரில் சமரச யோசனை

[குருவாயூர் ஆலயப் பிரவேச விஷயமாக, வைதிகப் பற்றுள்ள பண்டித பி. தாரகத்னவிற்குக் காந்திஜி சமரச யோசனையொன்று கூறினர். 1933 ஜனவரி மாதம் 2-ந் தேதி, 'அஸோஸியேடெட் பிரஸ்' நிருபர் காந்திஜியைப் பேட்டி கண்டு பேசிய போது காந்திஜி அந்தச் சமரச யோசனை பற்றிய விவரங்களைக் குறிப்பிட்டார். அவையாவன :]

குருவாயூர் ஆலயப் பிரவேச விஷயமாக நான் கூறிய யோசனை இதுதான். ஒவ்வொரு நாளும் சில மணி நேரம், ஹரிஜனங்களுக்கும், ஹரிஜனங்கள் கோவிலுக்குள் இருப்பதை ஆட்சேபிக்காத மற்ற ஹிந்துக்களும் ஆலயத்தைத் திறந்துவிட வேண்டும். மற்றும் சில மணி நேரம், ஹரிஜனங்களின் ஆலயப் பிரவேசத்தை எதிர்ப்பவர்களுக்கென்று பிரத்தியேகமாகத் திறந்துவிட வேண்டும். இந்த யோசனையை அங்கீகரிப்பதில் எவ்விதக் கஷ்டமும் இருப்பதற்கில்லை. ஏனெனில், குருவாயூரில் கிருத்திகை ஏகாதசி உற்சவம் நடக்கும்போது மற்ற ஹிந்துக்களுடன் ஹரிஜனங்களும் ஆலயத்திற்குள் செல்ல அனுமதிக்கப்படுகிறார்கள். பிறகு கோவில் விக்கிரகத்திற்குப் பரிசுத்த மந்திர ப்ரோக்ஷணம் செய்கிறார்கள்.

தினந்தோறும் ஹரிஜனங்களின் ஆலயப் பிரவேசத்திற்குப் பிறகு, கோவிலைப் பரிசுத்தம் செய்ய வேண்டுமென்பது அவரது யோசனையா என்று கேட்டதற்கும் பதிலாகக் காந்திஜி கூறியதாவது:

"என் சம்பந்தப்பட்ட வரையில், பரிசுத்தம் செய்வதையே நான் எதிர்க்கிறேன். எனினும், பரிசுத்தம் செய்வதில் ஆட்சேவாதிகளின் மனச்சாட்சி திருப்தியடையுமாயின், அதைக் குறித்து நான் எவ்வித ஆட்சேபனையும் எழுப்ப மாட்டேன். பல்வேறு நூல்களில் குறிப்பிட்ட பல்வேறு காரணங்களிலிருந்து தினந்தோறும் கோவில் அசுத்தமாவதற்கு இடமிருக்கிறது. பரிசுத்தச் சடங்குக்கு ஏதாவது மதிப்பு இருக்குமாயின், ஹரிஜனங்கள் கோவிலுக்குள் அனுமதிக்கப்பட்டாலும், அனுமதிக்கப்படாவிட்டாலும் தினந்தோறும் பரிசுத்தம் செய்தாக வேண்டும்."

அந்தச் சமரச யோசனை, ஹரிஜனங்களுக்கும் உயர்ந்த சாதியினருக்கும் உள்ள வேற்றுமையை இன்னும் நிலைநிறுத்துவதாகாதா என்று கேட்டதற்குப் பதிலாகக் காந்திஜி குறிப்பிட்டதாவது :

"ஹரிஜனங்களின் நிலை இவ்விதம் இருக்க வேண்டும்: 'நான் கோவிலுக்குள் இருப்பதை ஒருவர் ஆட்சேபித்தால், அந்த ஆட்சேபவாதி எனக்குள்ள உரிமையை அபகரிக்காமலிருக்கும் வரையில், அவரது ஆட்சேபணையை மதித்து நடக்க நான் விரும்புவேன். நான் கோவிலில் இருப்பதை ஆட்சேபிக்காதவர்களுடன் நானும் சேர்ந்து கடவுளை வணங்குவதில், நியாயமான பங்கு எடுத்துக்கொள்ள அனுமதிப்பதைக் கொண்டு நான் திருப்தியடைவேன்.' "

காந்திஜி மேலும் கூறியதாவது: "ஹரிஜனங்களின் ஆலயப் பிரவேசத்தை ஆதரிக்கும் ஜனங்கள் பெரும்பாலோராக இருக்கும் ஓரிடத்தில், சில குறிப்பிட்ட மணி நேரம் தங்களுக்கென்று கோவில் பிரத்யேகமாகத் திறக்கப்பட வேண்டுமென்று விரும்பும் சாதி ஹிந்துக்களின் தொகை மிகக் குறைவாகவே இருக்கும். அதை நாம் பொருட்படுத்த வேண்டிய அவசியமில்லை."

—'என் ஆன்ம வேதனை' - (1933) பக்கம்—114—115

## 2

## 'நான் கோரும் உரிமை'

திருவாங்கூரைச் சேர்ந்த பண்பாடுள்ள தீண்டாதாருக்கு, அவர்கள் ஆலயங்களுக்குள் செல்லத் தனித்தனியாக உரிமை கோரலாமென்று நான் யோசனை கூறினேன். எனினும், அவ்விதம் செல்ல விரும்பினுல் அவர்கள் தன்னடக்கத்துடன் நடந்துகொள்ள வேண்டும்; சட்ட மன்றங்களின் உதவியை நாடாமல், கோவில் மேற்பார்வையாளர்களின் அவமதிப்புகளைப் பொறுத்துக்கொள்ள வேண்டும். தீண்டாதார்களுக்கு நான் கூறும் பொதுவான யோசனை என்னவெனில், தீண்டாமைத் தீமை அமுலில் இருக்கும் வரையில், அவர்கள் ஆலயப் பிரவேச உரிமையை சோதனை செய்து பார்க்க வேண்டாமென்பதுதான். கர்ப்பக்கிரகத்திற்குள் செல்லும்படி நான் யாருக்கும் யோசனை கூறியதேயில்லை. மற்ற வகுப்பினருக்குக் கோவிலுக்குள் எங்கெல்லாம் செல்ல உரிமை உண்டோ அங்கெல்லாம், ஹிந்துஆலயங்களின் மேற்பார்வையாளர்கள், தீண்டாதாரை அனுமதிக்க வேண்டுமென்றே கொள்கையளவில் நான் கோருகிறேன்.

—'எங் இந்தியா' - 8—12—1921

# 3

# மதத்திற்கு அவமதிப்பு எது?

சென்னை மாகாண கோர்ட்டில் விசாரிக்கப்பட்ட ஓர் அசாதாரண வழக்கு, ஒடுக்கப்பட்ட நமது தேச மக்களின் வருந்தத் தக்க பரிதாப நிலையைத் தெளிவாகவும் பகிரங்கமாகவும் எடுத்துக் காட்டியிருக்கிறது. எளிமையாகவும் சுத்தமாகவும் உடை உடுத்திய ஒரு பஞ்சமர், முற்றிலும் பக்தி உணர்ச்சியுடன் ஒரு கோவிலுக்குள் சென்ருர். எவரது உணர்ச்சியையாவது புண் படுத்தும் நோக்கமோ, எந்த மதத்தையாவது அவமதிக்கும் நோக்கமோ அவருக்குச் சிறிதும் இல்லை. அவர் ஒவ்வொரு வருடமும் இந்தக் கோவிலுக்கு வெளியே நின்று கடவுளை வணங்கி விட்டுச் செல்வது வழக்கம். ஆனல், அவர் கோவிலுக்கு உள்ளே பிரவேசிப்பதில்லை. எனினும், சென்ற வருடம் அவர் ஆனந்த பரவச நிலையில் தம்மையே மறந்து கோவிலுக்குள் சென்றுவிட்டார். மற்றவர்களுக்கும் அவருக்கும் குருக்கள் எவ்வித வேற்றுமையும் கண்டுபிடிக்க முடியாததால், அவர் கொடுத்த காணிக்கையைக் குருக்கள் ஏற்றுக் கொண்டார். ஆனல், ஒடுக்கப்பட்ட வகுப்பைச் சேர்ந்த அவருக்குச் சுயஞாபகம் வந்த பொழுது, அனுமதி மறுக்கப்பட்டுள்ள ஓரிடத்தில் தாம் இருப்பதைக் கண்டு நடுநடுங்கிக் கோவிலிருந்து வெளியே ஓடி விட்டார். ஆனல், அவரை அறிந்த சிலர் அவரைப் பிடித்துப் போலீசாரிடம் ஒப்புவித்து விட்டனர். கோவில் அதிகாரிகள் அந்தக் குற்றத்தைக் கண்டுபிடித்த போது, கோவிலைப் பரிசுத்தம் செய்ய ஏற்பாடு செய்தனர்.

பிறகு ஒரு வழக்கு நடந்தது. ஒரு ஹிந்து மாஜிஸ்திரேட், அவர் குற்றவாளியெனக் கண்டு, அவர் தமது சொந்த மதத்தை அவமதித்ததற்காக 75 ரூபாய் அபராதமோ அல்லது ஒரு மாதம் கடுங்காவல் தண்டனையோ விதித்தார்! பிறகு அப்பீல் செய்யப் பட்டது. அதன் மீது விரிவாக விவாதம் நடந்தது. விவாதத் திற்குப் பின் தீர்ப்பு ஒத்திவைக்கப்பட்டது! கடைசியாகக் கீழ்க் கோர்ட்டார் விதித்த தண்டனை ரத்து செய்யப்பட்டது. அந்த ஏழைப் பஞ்சமருக்கு, ஆலயத்திற்குள் பிரவேசிக்க உரிமையுண்டு என்பதற்காக அல்ல; ஆனல், பிராசிகியூஷன் தரப்பார் கீழ்க் கோர்ட்டில் அவமதிப்பை ருசுபிக்க மறந்து விட்டார்கள் என்பதற்காகவே கீழ்க் கோர்ட்டார் விதித்த தண்டனை ரத்தாயிற்று. எனினும், இது நீதிக்கோ, சத்தியத்திற்கோ, மதத்திற்கோ அல்லது ஒழுக்கத்திற்கோ வெற்றியல்ல.

பஞ்சமர், கடவுளை வணங்குவதில் தமக்குள்ள உற்சாகம் காரணமாய், தாம் கோவிலுக்குள் செல்லக்கூடாதவர் என்பதை மறந்ததற்காக அவர் சிறைத் தண்டனை அனுபவிக்க வேண்டியதில்லை. இதுதான், அவரது அப்பீல் வெற்றி பெற்றதிலிருந்து

நாம் அடையும் ஆறுதலாகும். எனினும், அவரோ அல்லது மற்றப் பஞ்சமர்களோ மறுபடியும் கோவிலுக்குள் பிரவேசிக்கத் துணிவார்களாயின், அவர்களை வெறுத்து அவமதிப்போர் தாங்களே அவர்களைத் தண்டித்து விடுவார்கள். அவர்கள் தண்டிக்கவில்லையாயின், கோர்ட்டார் பஞ்சமர்களுக்குக் கடுமையான தண்டனை விதிப்பார்கள் என்பது அநேகமாக நிச்சயம்தான்.

அது ஒரு விந்தையான நிலையாகும். தென்னாப்பிரிக்காவில் நம் நாட்டு மக்கள் நடத்தப்படும் விதத்தைக் குறித்து நாம் ஆத்திரம் அடைகிறோம். ஆத்திரம் அடைவது நியாயம்தான். சுயராஜ்யத்தை ஸ்தாபிக்க நாம் துடித்து வருகிறோம். ஆனால், ஹிந்துக்களான நாம், நம் சொந்த மதத்தையே சேர்ந்த ஐந்தில் ஒரு பகுதியினரை, நாய்களைக் காட்டிலும் மோசமாக நடத்துவதில் உள்ள முரண்பாட்டைக் கவனிப்பதில்லை. நாய்கள் தீண்டாதவையல்ல. நம்மில் சிலர் இப்போதெல்லாம் நாய்களை வீட்டிற்கு உள்ளேகூட வைத்துக்கொண்டு சீராட்டுகிறார்கள்.

தீண்டாமைத் தீமையை அகற்றும் விஷயமாக எவ்வளவோ செய்யப்பட்டிருக்கிறது என்பதில் ஐயமில்லை. எனினும், அதெல்லாம் அற்பமாகும். ஆலயத்திற்குள் பிரவேசித்ததற்காக கிரிமினல் வழக்குகள் தொடருவது இன்னும் சாத்தியமாக இருக்கிறது. ஒடுக்கப்பட்டவர்களுக்கு இன்னும் ஆலயப் பிரவேச உரிமை தொடர்ந்து மறுக்கப்பட்டு வருகிறது. பொதுக் கிணறுகளை உபயோகிக்கவும், தேசீயப் பள்ளிக்கூடங்களுக்குத் தங்கள் குழந்தைகளை இஷ்டப்படி அனுப்பவும் அவர்களுக்கு உரிமையில்லை. தென்னாப்பிரிக்காவில் ஐரோப்பியர்கள் நம் தேசத்தினருக்கு என்ன உரிமைகள் அளிக்க வேண்டுமென்று நாம் விரும்புகிறோமோ, அதே உரிமைகளை நம் நாட்டில் நாம் ஒடுக்கப்பட்டவர்களுக்கு விட்டுக் கொடுக்க வேண்டும்.

ஆனால், இந்த வழக்கில் மனக்கஷ்டத்தை அகற்றும் அம்சங்களும் இல்லாமலில்லை. தண்டனை ரத்தாகியது நிச்சயமாக ஓரளவு ஆறுதலைக் கொடுக்கும் விஷயம்தான். எனினும், அந்த ஏழைப் பஞ்சமர் சார்பில், பல சாதி ஹிந்துக்கள் தாங்களே நேரில் தீவிர அக்கறை எடுத்துக்கொண்டார்களென்ற உண்மை மிகச் சிறந்த ஆறுதலை அளிக்கிறது. எதிரியின் உதவிக்கு யாராவது சென்றிராவிடில், அப்பீல் கொடுக்கப்பட்டிராது. கற்றறிவுள்ள ஒவ்வொரு ஹிந்துவும் தம்மைத் 'தீண்டாதவ'ரின் நண்பராக நினைக்கவேண்டியதும், மதத்தின் பெயரால் மாறுவேஷத்துடன் நிலவும் சம்பிரதாயக் கொடுமையிலிருந்து அவரை விடுவிப்பதைத் தம் கடமையாகக் கருத வேண்டியதும் விரும்பத்தக்கதாகும். ஒரு பஞ்சமர் ஆலயத்திற்குள் பிரவேசிப்பது அவமதிப்பதல்ல, அவருக்கு எதிராக விதிக்கப்பட்டுள்ள தடை முத்திரை இருக்கிறதே, அதுதான் மதத்திற்கும் மானிட வர்க்கத்திற்கும் அவமதிப்பாகும்.

—'எங் இந்தியா' – 14—1—1926

# 4

# கடவுளை வணங்கியதற்குத் தண்டனையா ?

தெற்கே அது போன்ற மற்றொரு வழக்கிலும் கோர்ட்டார் தீர்ப்பளித்துள்ளனர். அவ்வழக்கும், 'தீண்டாதார்' ஆலயப் பிரவேச சம்பந்தமான தொல்லையான பிரச்னை பற்றியதே. மாலா (பறையர்) சாதியைச் சேர்ந்த முருகேசன், கடவுளை வணங்கும் நோக்கத்துடன் திருச்சானூர் கோவிலுக்குள் பிரவேசிக்கத் துணிந்ததற்காக திருப்பதி சப் மாஜிஸ்திரேட் கோர்ட்டில் விசாரிக்கப்பட்டார். அவரது ஆலயப் பிரவேசம், இ. பி. கோ. 295-வது பிரிவின் கீழ் 'ஒரு வகுப்பாரின் மதத்தை அவமதிக்கும் நோக்கத்துடன் அசுத்தப்படுத்தியதாகும்' என்று கீழ்க் கோர்ட்டார் கருதி, எதிரிக்கு ரூ. 75 அபராதமோ, அபராதம் செலுத்தத் தவறினால் ஒரு மாதம் கடுங்காவல் தண்டனையோ விதித்தனர். அந்த ஏழையின் அதிர்ஷ்டவசமாக, அவர் விஷயத்தில் சீர்திருத்த வாதிகள் அக்கறை எடுத்துக்கொண்டனர். அப்பீல் தொடரப்பட்டு, அது எதிரிக்குச் சாதகமாகியது. அப்பீல் கோர்ட்டாரின் தீர்ப்பிலிருந்து கீழ்க்கண்ட பகுதியைக் குறிப்பிடுகிறேன் :

"கீழ்க் கோர்ட்டிலே பிராசிகியூஷன் தரப்பில் ஏழு சாட்சிகள் விசாரிக்கப்பட்டனர். அப்பீல்தாரர் சாதியில் ஒரு மாலா என்றும், மாலாக்கள் கோவிலுக்குள் அனுமதிக்கப்படுவதில்லை யென்றும், மாலாக்கள் கோவிலில் பிரவேசிப்பது கோவிலை அசுத்தம் செய்வதாகுமென்று கருதப்படுகிறதென்றும் சாட்சியத்திலிருந்து தெரிந்தது. சாதி ஹிந்துக்கள் மாத்திரமே அனுமதிக்கப்படும் மூலஸ்தானம் வரையிலும் அவர் சென்றாரென்பதும் ருசுவாகியிருக்கிறது. அப்போது அவர் ஒழுங்காக உடை உடுத்திக்கொண்டிருந்ததுடன் அவரது பக்தியைக் காட்டும் அடையாளமான விபூதியும் இட்டுக்கொண்டிருந்தார். எனவே, அர்ச்சகர் அவரை ஒரு சாதி ஹிந்து என்றே எண்ணினர். தேங்காய்கள் முதலிய அவரது காணிக்கைகளை ஏற்று, அவருக்காக கற்பூர ஆரத்தியும் காட்டினர். அப்பீல்தாரர் குருக்களின் தொண்டிற்காக விதிக்கப்பட்ட நான்கு அணாவைச் செலுத்தினர். அவர் கோவிலைவிட்டுச் சென்ற பிறகுதான், அவர் ஒரு மாலா என்பது கோவில் அதிகாரிகளுக்குத் தெரிந்தது. மாலா பிரவேசித்ததால், கோவில் அசுத்தமாகி விட்டதென்று கருதப்பட்டது. பிறகு கோவில் பரிசுத்தமாவதற்கு ஒரு சடங்கு செய்ய வேண்டியது அவசியமாயிற்று.

"எதிரி சட்டப்படி குற்றம் செய்ததாக, பிராசிகியூஷன் தரப்பார் நிரூபித்திருக்கிறார்களா என்பதை முதன் முதலாக யோசிக்க வேண்டும். ஒரு மாலா கோவிலுக்குள் பிரவேசித்த

தால் கோவில் ஆசாரப்படி அவர் அதை அசுத்தம் செய்துள்ளார் என்பது போதிய அளவு நிரூபிக்கப்பட்டுள்ளது. எனினும், அதனுடன்கூட, அவர் எந்த வகுப்பினரின் மதத்தையாவது அவமதித்தாரா? மதத்தை அவமதிக்க வேண்டும் என்ற நோக்கம் அவருக்கு இருந்ததா? அல்லது மதத்திற்கு அவமதிப்பு ஏற்படக் கூடும் என்பதை அவர் அறிந்திருந்தாரா? இதை யெல்லாம் நிரூபிக்க வேண்டியதும் அவசியமாகும். இந்த விஷயத்தை மனத்திற்கொண்டு பிராசிகியூஷன் தரப்பார் வழக்கை நடத்தியிருப்பதாகத் தெரியவில்லை. எந்த வகுப்பினரின் மதத்தையாவது அவமதிக்கும் நோக்கம் அவருக்கு உண்டா என்பதோ, கோவிலுக்குள் பிரவேசிப்பது மதத்திற்கு அவமதிப்பாகும் என்பதை அவர் அறிந்திருந்தாரா என்பதோ ஒரு புறமிருக்கட்டும். எதிரியின் நடவடிக்கை தங்கள் மதத்திற்கோ அல்லது வேறு எந்த வகுப்பினரின் மதத்திற்கோ அவமதிப்பாகும் என்பதை எந்தச் சாட்சியிடமிருந்தாவது பிராசிகியூஷன் தரப்பார் வெளிப்படுத்தினார்களா? எனவே, பிராசிகியூஷன் தரப்பு சாட்சியத்தில் உள்ள இந்தக் குறை காரணமாகத் தண்டனை செல்லுபடியாகாது. ஆகையால், இவ்வழக்கு மேலும் விசாரிக்கப்பட வேண்டுமென நான் நினைக்கவில்லை.''

இந்த வழக்கிலும் பிராசிகியூட்டர்கள், நீதிபதிகள், வெறுக்கப்பட்ட ஏழை எதிரி யாவரும் ஒரே மதத்தைச் சேர்ந்தவர்களே, அதாவது ஹிந்துக்களே. எதிரி அவருக்கு விதிக்கப்பட்ட அமிதமான அபராதத்தைச் செலுத்த முடிந்திராதென்றே எண்ணுகிறேன். மறுபடியும் எதிரி கடுங்காவல் தண்டனையிலிருந்து காப்பாற்றப்பட்டது, மகிழ்ச்சிக்குரியதாகும்.

எதிரி தாம் ஹிந்து மதத்தைச் சேர்ந்தவரென்றே கூறுகிறார். அவர் ஹிந்து மதத்தைச் சேர்ந்தவர் என்பதும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. எனவே, ஒரு பஞ்சம ஹிந்து, ஒரு ஹிந்து ஆலயத்துக்குள் பிரவேசித்தது எப்படிப் பார்த்தாலும் ஹிந்து மதத்திற்கு அவமதிப்பாகாது என்று கூற ஹிந்து நீதிபதிக்கு உரிமையுண்டு. எதிரி கோவிலுக்குள் பிரவேசிப்பது ஒழுங்கற்றதென சில ஹிந்துக்கள் கருதலாம். அது வழக்கத்துக்கு விரோதமாக இருக்கலாம். அது, மற்றும் நூறு விதத்தில் தவறு என்று கருதப்படலாம். எனினும், அது இந்தியன் பீனல் கோடு சட்டப்படி குற்றம் என்று கருதும் அளவுக்கு எந்த வகுப்பினரின் மதத்துக்கும் அவமதிப்பு அல்லவே அல்ல. இழிவாகக் கருதப்படும் எதிரியின் பிறப்புக்கு அடையாளமாக அவர் மீது எவ்விதச் சின்னங்களும் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. அவர் ஒழுங்காகவே உடை தரித்திருந்தார். நெற்றிக்கும் இட்டுக்கொண்டிருந்தார். துன்பத்திற்குள்ளான இவர்கள் மற்றவர்களை ஏமாற்ற வேண்டுமென எண்ணியிருந்தால், இவர்களுக்கும் மற்றவர்களுக்கும் எவ்வித வேற்றுமையும் கண்டுபிடிக்க முடியாது.

மதத்தின் புனிதமான பெயரால் மனிதர்களைத் துன்புறுத்துவதில் விடாப்பிடியாக இருப்பது, கலப்பற்ற வெறிபிடித்த பிடிவாதமாகும். அவ்விதம் செய்வதால், துன்புறுத்துவோர் தாங்கள் அறியாமலேயே தங்கள் மதத்தை அசுத்தம் செய்தவர்களாகிறார்கள். தாங்கள் எவ்வளவு கௌரவமானவர்கள் என்று கூறிக்கொள்ளுகிறார்களோ, அவ்வளவு கௌரவமாவது உள்ளவர்களும், பொதுவாகக் கோவிலுக்குள் ஹிந்துக்கள் அனுசரிக்கும் எல்லாச் சடங்கு விதிகளுக்கும் உட்பட விரும்புவோருமான மனிதர்களைக் கோவிலுக்குள் பிரவேசிக்கக்கூடாதென்று தடுப்பது, மதத்தை அசுத்தம் செய்வதாகாதா? அதைக் காட்டிலும் அதிகமாக எதுவும் விதிப்பதற்கோ அல்லது எதிர்ப்பதற்கோ எவருக்கும் உரிமையில்லை. மனிதனின் இதயத்தைக் கடவுள் ஒருவரே அறிவார். அப்பழுக்கின்றி உடை உடுத்திக்கொண்டுள்ள ஓர் உயர்சாதி ஹிந்துவைக் காட்டிலும், மட்டமான அழுக்கு உடை தரித்துக்கொண்டுள்ள ஒரு பஞ்சமர் அதிக சுத்தமான இதயம் படைத்தவராக இருக்கலாம்.

—'எங் இந்தியா'- 11—3—1926

# 5

# தீண்டாதாருக்குத் தனிக் கோவில்கள்

1915-ஆம் ஆண்டு நான் தென்னாப்பிரிக்காவிலிருந்து திரும்பியபோது, தீண்டாமை ஒழிப்பு இயக்கம் என் மனத்தில் உருவாகத் தொடங்கியது. தீண்டாதாருக்குத் தனியாக ஆலயங்களையோ அல்லது பள்ளிக்கூடங்களையோ நிர்மாணிப்பது தீண்டாமை ஒழிப்பு இயக்கத்துக்கு முற்றிலும் முரணாகுமென்று நான் ஆரம்பத்தில் எண்ணினேன். ஆனால், கண்டிப்பான தர்க்க சாஸ்திரத்தை அடிப்படையாகக்கொண்டு இயக்கத்தை நடத்துவது முடியாதென்பதை அனுபவபூர்வமாக நான் தெரிந்துகொண்டிருக்கிறேன். தெளிவாகத் தங்கள் கருத்தைத் தெரிவித்துள்ள ஹிந்துக்கள் ஒரே வாக்காகத் தீண்டாமை ஒழிப்பை ஆதரித்தும்கூட, ஒடுக்கப்பட்ட சகோதரர்கள் இன்னும் வெகுகாலம் வரையில் பலவிதத்திலும் உதவியை நாடுவது அவசியமாக இருக்கும். ஹிந்துக்களாகிய நாம், நம்மில் மூன்றில் ஒரு பகுதியினரை அவ்வளவு தூரம் ஒடுக்கி வைத்திருக்கிறோம் என்பதையும் அனுபவபூர்வமாக நான் அறிந்துகொண்டிருக்கிறேன்.

கொள்கையளவில், வாயளவில் நாம் தீண்டாமையை ஒழித்த பிறகு விசேஷ முயற்சி எடுத்துக் கொள்ளாவிடில், அவர்களில் பெரும்பாலோர் அதனால் கிடைக்கும் வாய்ப்பைத் துரிதமாக உபயோகப்படுத்திக் கொள்ளமாட்டார்கள். அறியாத பாமர

மக்களும் தீண்டாதாருக்குக் கிடைக்கும் வாய்ப்பைச் சகிக்க மாட்டார்கள். ஏனெனில், அப்போது தீண்டாதாரின் போக்கு அசட்டுத்தனமாக இருப்பது இயற்கை அல்லவா? அவர்கள் வெகு காலமாகக் கிடைக்காத சுதந்திரம் கிடைத்ததும், அதை அனுபவிக்க முந்திக் கொள்ளலாம் அல்லவா? இது மன்னிக்கத் தக்கதே யென்றாலும், பாமர மக்கள் அதைச் சகித்துக்கொண்டிருக்க மாட்டார்கள். எனவே, ஏககாலத்தில் இரு முறைகளைக் கைக்கொள்ள வேண்டுமென்பது எனது திடமான அபிப்பிராயமாகும். அதாவது, சாதாரண கோவில்களிலும் சாதாரண கல்விச் சாலைகளிலும் பிரவேசிக்கவும், பொதுக் கிணறுகளை உபயோகிக்கவும் தீண்டாதாருக்குப் பூரண சுதந்திரம் இருக்க வேண்டும்; அதே சமயத்தில், தீண்டாதாரின் வசதிக்கெனப் பிரத்தியேகமாக மாதிரிக் கோவில்களும், மாதிரிப் பள்ளிக்கூடங்களும் நிர்மாணிக்க வேண்டும். அவைகளில் எப்போதும் முதல் சலுகை தீண்டாதாருக்குத்தான் என்றாலும், மற்றவர்களுக்கும் அது திறக்கப்பட்டிருக்க வேண்டும். இந்தக் கருத்தை அடிப்படையாகக் கொண்டே, ஒடுக்கப்பட்டவர்களுக்கு மாதிரிக் கோவில்களும் மாதிரிப் பள்ளிக்கூடங்களும் நிர்மாணிப்பதன் மூலம் தீண்டாமை ஒழிப்புக்கு முனிசிபாலிடிகள் ஆக்கம் அளிக்கக் கூடுமென்றும், அதே சமயம் தற்போதுள்ள கோவில்களையும் நம் தேச மக்களான அவர்களுக்குத் திறந்துவிட முயற்சிக்க வேண்டுமென்றும், கல்கத்தா முனிசிபல் கெஜட்டிற்கு நான் அனுப்பிய சுருக்கமான குறிப்பு ஒன்றில் யோசனை கூறியிருந்தேன். எனவே, ஆலயப் பிரவேசத்திற்கு எதிராக உள்ள தடையைக் குறித்து நான் பராமுகமாக இருப்பதற்கு எனது குறிப்பு ஒரு சமாதானமாகும் என்று எவ்விதத்திலும் கருதுவதற்கில்லை.

—'எங் இந்தியா' – 28—11—1929

## 6

# பிரதிக்ஞையை நிறைவேற்றுங்கள்

தற்போது அனுஷ்டிக்கப்படும் தீண்டாமை, ஹிந்து மதத்திற்கே மிகப் பெரிய களங்கமாகும். அது (சனாதனிகள் மன்னிப்பார்களாக) சாஸ்திரங்களுக்கு விரோதமானது. அது மானிட வர்க்கத்தின் மூலாதாரக் கொள்கைகளுக்கு விரோதமானது. கேவலம் பிறப்பு காரணமாக ஒரு மனிதரை, தீண்டாதார் என்றோ, நெருங்கத்தகாதவர் என்றோ, பார்க்கத்தகாதவர் என்றோ கருதுவது பகுத்தறிவுக்கு விரோதமானது. இவ்விதமெல்லாம் கூறுவதுகூட அதன் கொடுமையைச் சரிவர உணர்த்துவதாகாது. சில ஆடவர்களும் பெண்களும், அவர்களுடைய குழந்தைகளும், சாதி ஹிந்துக்கள் என்று கூறப்படுவோரைத்

தொடுவதோ அல்லது அவர்களுக்கு அருகில் குறிப்பிட்ட தூரத்திற்கு வருவதோ, அல்லது அவர்கள் கண்களில் படும்படி நிற்பதோ கூடக் குற்றமாகும். இதில் துக்ககரமான விஷயம் என்னவெனில், தீண்டாமை ஹிந்து மதத்தினுல் விதிக்கப்பட்டிருப்பது போல் கோடிக்கணக்கான ஹிந்துக்கள் அதில் நம்பிக்கை கொண்டிருப்பதுதான்!

ஆனுல், இந்த வழக்கம் பயங்கரமானதென்று சீர்திருத்த வாதிகள் இதைக் கண்டு நடுங்குவது மகிழ்ச்சிக்கு உரியதாகும். மொத்தத்தில் ஹிந்து சாஸ்திரங்களிலே இதற்கு ஆதாரமில்லை என்ற முடிவிற்கு அவர்கள் வந்திருக்கிருர்கள். சாஸ்திரங்களில், எந்தச் சந்தர்ப்பத்தில் குறிப்பிட்டிருக்கிற தென்பதைக் கவனியாமல், சில பகுதிகளை மாத்திரம் தனியாக எடுத்துக்கொண்டு, இந்த வழக்கத்திற்கு ஆதாரம் இருப்பதாகக் கூறலாம். அவ்விதமாயின், மானிட வர்க்கம் அறிந்த எந்தத் தீமைக்கும் ஆதாரம் காட்ட முடியும். ஆனுல், ஜீவகாருண்யம் அல்லது ஒழுக்கம், அகிம்சை அல்லது சத்தியம் என்ற மூலாதாரமான கொள்கைகளுக்கு முரணுன எதையும், எந்த வழக்கத்தையும் ஹிந்து தருமத்துக்கு ஒவ்வாதது என்று உடனடியாக நிராகரித்துவிடுவதற்கு, சாஸ்திரங்களில் ஏராளமான ஆதாரங்கள் இருக்கின்றன.

தீண்டாமைக்கு எதிரான இந்த இயக்கம் நாளுக்கு நாள் வலுப்பெற்று வருகிறது. ஹிந்து இந்தியாவின் பிரதிநிதிகளான பிரபல ஹிந்துக்கள் சென்ற செப்டம்பர் மாதம் கூட்டம் கூடி, தீண்டாமையைக் கண்டித்தும், சாத்தியமாயின் தற்போதைய ஆட்சியிலேயே சட்டபூர்வமாகத் தீண்டாமையை ரத்துசெய்வதென்றும், தவறினுல் இந்தியாவுக்குச் சொந்தமான பார்லிமெண்டு ஏற்படும்போது அவ்விதம் சட்டம் கொண்டு வந்து அதை ரத்துச் செய்வதென்றும் ஏகமனதாகத் தீர்மானம் நிறைவேற்றினர்.

நாம் அகற்ற வேண்டிய தீண்டாமையின் அறிகுறிகளில் ஆலயத்திற்குள் பிரவேசிக்க ஹரிஜனங்களுக்குள்ள தடையும் ஒன்ருகும். இது சம்பந்தமான போராட்டத்தின்போது ஒரு விஷயம் கண்டுபிடிக்கப்பட்டது. அதாவது, இந்தத் தீய வழக்கத்தை இந்தியாவில் உள்ள பிரிட்டிஷ் கோர்ட்டுகள் அங்கீகரித்துள்ளன. எனவே, தீண்டாதாரின் சில நடவடிக்கைகள் பிரிட்டிஷ் இந்தியன் பீனல் கோடு சட்டப்படி குற்றங்களாகும் அதன்படி, ஹிந்து கோவிலுக்குள் பிரவேசிக்கும் ஒரு தீண்டாதார் குற்றம் செய்ததாகத் தண்டனைக்கு உள்ளாக நேரும்.

ஆகையால், ஆலயப் பிரவேச இயக்கம் முன்னேற்றம் அடைய வேண்டுமாயின், முதலில் இந்த விபரீதத்தை ஒழிக்க வேண்டியது அவசியமாகியிருக்கிறது. இந்த நோக்கத்துடனேயே, மத்திய சட்ட சபையில் இரண்டு மசோதாக்கள் கொண்டு

வரப்பட்டுள்ளன. மாகாண சர்க்கார்களின் அபிப்பிராயத்தைக் கேட்டபின், வைஸ்ராய் அம்மசோதாக்களைக் கொண்டு வர அனுமதி கொடுத்திருக்கிருர். அது, தனிப்பட்டவர் கொண்டு வரும் மசோதாக்களாகும். எனவே, அவற்றைப் பற்றி ஆலோசிக்க சர்க்காரும் சபை அங்கத்தினர்களும் முட்டுக்கட்டை போடாமல் இருந்தாலொழிய, அவை சட்டமாவதற்கு வாய்ப்பு ஏற்படாது. மத விஷயங்களில் நடுநிலைமை வகிப்பதாக சர்க்கார் உறுதிமொழி அளித்திருப்பதால், எவ்விதத்திலாயினும் முதல் மசோதா எளிதில் நிறைவேறுவதற்குச் சர்க்கார் உதவியளித்துத் தீர வேண்டும். ஆலயப் பிரவேச விஷயமாக பிரிட்டிஷ் இந்தியா கோர்ட்டுகளின் தீர்ப்புகளால் எவ்விதப் பாதகமும் ஏற்படாமல் செய்வதே அம்மசோதாவின் நோக்கமாகும். அது தீண்டாமையைச் சட்டபூர்வமாக அங்கீகரிக்கக் கூடாது என்று கூறுகிறது.

இந்த நாட்டில் உள்ள மக்களால் அனுஷ்டிக்கப்படும் பல்வேறு மதங்களைச் சேர்ந்த பழக்க வழக்கங்கள் இருந்து வருகின்றன. அந்த வழக்கங்களை மீறுவது அந்தந்த மத விதிகளின்படி மோசமானதெனினும், அவற்றை மீறி நடப்பது குற்றமல்ல. உதாரணமாக, ஒரு ஹிந்து மாட்டிறைச்சி சாப்பிடுவது ஹிந்து மத விதிப்படி ஒரு குற்றமெனினும், இ.பி.கோ. சட்டப்படி அது தண்டிப்பதற்குரிய குற்றமல்ல. இது நியாயம்தான். அப்படியிருக்க, தீண்டாமை வழக்கத்தை மீறியதற்காக இந்தியாவிலுள்ள பொதுச் சட்டம் ஏன் தண்டனை விதிக்க வேண்டும்? தற்போதைய தீண்டாமை வழக்கத்திற்கு ஹிந்து வேத நூல்களில் ஆதாரமிருப்பதாக பண்டிதர்களான பல ஹிந்துக்கள் கூறுகிருர்களெனில், அதற்கு நேர் எதிரான அபிப்பிராயமுடைய ஹிந்து பண்டிதர்களும் ஏராளமாக இருக்கிருர்கள். *1933* ஜனவரி மாதம் *25*–ம்தேதி பண்டித மாளவியாஜியின் தலைமையில் நடந்த அகில இந்திய சனுதன சபைக் கூட்டத்தில், மற்ற ஹிந்துக்களைப் போல் ஹரிஜனங்களுக்கும் ஆலயங்களுக்குள் பிரவேசிக்க உரிமை உண்டென்று ஒரு தீர்மானம் நிறைவேறியிருக்கிறது.

அந்த மசோதாக்கள் நிறைவேருவிடில், இந்தச் சீர்திருத்தத்தின் முக்கிய அம்சம் கால வரையறையின்றி ஸ்தம்பித்துவிடும். மத விஷயங்களில் நடுநிலைமை என்பதற்கு, மத சம்பந்தமான சீர்திருத்தத்தை நிறுத்தி வைப்பதென்பதோ, அதற்குத் தடையாக இருப்பதென்பதோ அர்த்தமல்ல. மதிப்பிற்குரிய சனுதனிகளின் ‘மதத்திற்கு ஆபத்து’ என்ற கூக்குரலை அறிந்துகொள்ளுவது கஷ்டமாக இருக்கிறது. எந்த ஒரு மசோதாவின் கீழும், கோவிலுக்குச் செல்லும் பெரும்பான்மையோரின் விருப்பத்திற்கு விரோதமாக ஒரு கோவிலைக்கூடத் திறந்துவிட மாட்டார்கள். ஒரு ஹரிஜன் அத்து மீறிக் கோவிலுக்குள் பிரவேசிக்க ஒரு மசோதாவும் இடமளிக்கவில்லை. சீர்திருத்தக்காரர்கள் தங்கள் விருப்பத்திற்கு இணங்கும்படி தங்கள் எதிரிகளை வற்புறுத்த முற்படவில்லை. அவர்கள், முற்றிலும் நேர்மையான முறைகளில்

தீண்டாமையை யொட்டி, பெரும்பான்மையோரையோ அல்லது சிறுபான்மையோரையோ தங்கள் அபிப்பிராயத்திற்கு மாற்றவே விரும்புகிருர்கள்.

ஹரிஜனங்களே ஆலயப் பிரவேசத்தை விரும்பவில்லையென்றும், தங்களுடைய பொருளாதார, அரசியல் நிலைமை முன்னேற வேண்டுமென்று மாத்திரமே விரும்புகிருர்களென்றும் கூறப்படுகிறது. சீர்திருத்தவாதி விரும்புவதும் அதுதான். ஆனல், ஹரிஜனங்களுக்கு மத விஷயங்களில் சமத்துவம் ஏற்பட்டுவிடுமாயின், அவர்களுடைய பொருளாதார, அரசியல் நிலை வெகு விரைவில் முன்னேற்றம் அடையும்படி செய்யலாம் என்பதே அவரது நம்பிக்கையாகும். ஹரிஜனங்கள் ஆலயப் பிரவேசத்தை விரும்பவில்லை என்பதைச் சீர்திருத்தவாதி மறுக்கிருர். சாதி ஹிந்துக்களிடமும் ஹிந்து மதத்திடமும் தீண்டாதார் அவ்வளவு வெறுப்படைந்து, அவர்களிடமிருந்து தாங்கள் எதையும் விரும்பவில்லை என்று கூறுவதாக இருக்கலாம். அவர்கள் மனம் நொந்தும், அதிருப்தியடைந்தும் மத சம்பந்தமான எல்லைக்கு வெளியிலேயே இருக்க விரும்பலாம். சாதி ஹிந்துக்கள் செய்யும் எந்தத் தவமும் காலம் கடந்ததாகிவிடலாம்.

ஆயினும், தீண்டாமை ஹிந்து மதத்தில் ஒரு களங்கம் என்பதை உணரும் சாதி ஹிந்துக்கள் தீண்டாமைப் பாவத்திற்காகப் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டியவர்களாக இருக்கிருர்கள். எனவே, ஆலயப் பிரவேசத்தை ஹரிஜனங்கள் விரும்பினுலும் விரும்பாவிட்டாலும், மற்ற ஹிந்துக்களுக்கு எந்த நிபந்தனைகள் உண்டோ அதே நிபந்தனைகளின்மீது ஹரிஜனங்களுக்கும் சாதி ஹிந்துக்கள் தங்கள் கோவில்களைத் திறந்துவிட வேண்டும். ஆலயப் பிரவேசத் தடை கௌரவ உணர்ச்சியுள்ள ஒரு சாதி ஹிந்து சம்பந்தப்பட்ட வரையில், சென்ற செப்டம்பர் மாதம், பம்பாய்க் கூட்டத்தில் அவர் செய்துகொண்ட பிரதிக்ஞையை இடைவிடாது மீறுவதாகும். ஹரிஜனங்களுக்கு ஆலயங்களைத் திறந்து விடுவதாக உலகத்துக்கும் கடவுளுக்கும் யார் உறுதிமொழி கொடுத்தார்களோ அவர்கள் தங்கள் பிரதிக்ஞையை நிறைவேற்ற, அவசியமாயின் தங்களுக்குச் சொந்தமான எல்லாவற்றையும் தியாகம் செய்ய வேண்டும். அவர்கள் ஹிந்துக்களின் மனநிலையைப் பிரதிபலிக்காதவர்களாக இருக்கலாம். அப்படியாயின், அவர்கள் தோல்வியை ஒத்துக்கொண்டு உற்ற தவம் செய்யவேண்டும். தீண்டாதாருக்கு விடுதலைப் பிரகடனமாக அமைந்து, கடவுள் முன்னிலையில் அவர்கள் தீண்டாதார் அல்ல என்று உறுதி அளிக்கும் ஒரே ஆன்மிக நடவடிக்கை ஆலயப் பிரவேசம்தான்.

—'ஹரிஜன்' – 11—2—1933

# 7

# வைதிகர்களை வழி மறிக்கலாமா ?

அக்கறையும் ஊக்கமும் உள்ள, ஆனால் பொறுமையற்ற ஒரு தொண்டர், ஹரிஜனங்களுக்கு ஆலயங்களும் பொது இடங்களும் திறந்துவிடப்பட வேண்டுமென்று முயற்சித்து வருகிறார். அம்முயற்சியில் அவர் பெருமை அடையக் கூடியவாறு வெற்றி பெறவில்லையெனினும், ஏதோ ஓரளவு வெற்றி பெற்றுள்ளார். பொறுமையிழந்த அவர் எழுதுவதாவது:

"தாங்களாகக் காரியத்தை ஆரம்பிப்பார்கள் என்று இந்த வைதிகர்களுக்காகக் காத்துக் கொண்டிருப்பதால் பலனில்லை. நிர்ப்பந்தப்படுத்தினாலன்றி, அவர்கள் ஒருபோதும் அசைந்து கொடுக்கமாட்டார்கள். தீண்டாமையைத் துடைத்தொழிக்கத் தீவிரமான முறைகளைக் கைக்கொள்ளவேண்டும். எனவே, கோவிலுக்குள் வைதிகர்கள் பிரவேசிக்க முடியாமல் தொண்டர்களும் ஹரிஜனங்களும் கோவில்களின் வாயிலில் சத்தியாக்கிரகம் செய்வது பயன் தரத்தக்க முறையாக இருக்குமா என்பது பற்றிய, உங்கள் அபிப்பிராயத்தை அன்புடன் தெரிவிக்கும்படி வேண்டிக்கொள்கிறேன். வேண்டுகோள்களும் கெஞ்சுதல்களும் அவர்களிடம் யாதொரு பயனையும் அளிக்கவில்லை. இவைகளில் மேற்கொண்டு காலத்தைச் செலவழிப்பது, அரிய நேரத்தை வீண் போக்குவதாகும் என்பது எனது தாழ்மையான அபிப்பிராயம்."

அவ்விதம் வழியைத் தடுப்பது கலப்பற்ற நிர்ப்பந்தமாகும். மதத்திலோ அல்லது எந்தச் சீர்திருத்த விஷயங்களிலோ நிர்ப்பந்தமே இருக்கக்கூடாது. தீண்டாமை விலக்கு இயக்கம் தன்னைத் தானே பரிசுத்தம் செய்துகொள்ளும் ஓர் இயக்கமாகும். எந்த மனிதரையும், அவரது விருப்பத்திற்கு விரோதமாகச் சுத்தப்படுத்திவிட முடியாது. எனவே, வைதிகர்களுக்கு விரோதமாக, நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ, நிர்ப்பந்தம் இருக்கக்கூடாது. தீண்டாமையை ஒழிப்பதன் அவசியத்தை நாம் உணர்ந்து கொள்ளுமுன், நம்மில் பலர் வைதிகர்களைப் போலவே இருந்தோம் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அப்போது, கோவிலுக்குள் நாம் செல்லும் வழியை எவரும் தடுப்பதை நாம் விரும்பியிருக்கமாட்டோம். கோவிலுக்குள் பிரவேசிக்க ஹரிஜனங்களை அனுமதிக்கக்கூடாதென்பது தவறு என இப்போது நாம் அறிகிறோம் என்பது உண்மையே. ஆனால், அந்நாட்களில் அவர்களை அனுமதிக்கக்கூடாதென்பதை நாம் நம்பினோம். அது போலவே, வைதிகர்கள் கோவிலுக்குச் செல்லும் வழியை நாம் தடுக்கக்கூடாது.

சத்தியாக்கிரகம் என்ற வார்த்தை அடிக்கடி தவறாகவும், மறைமுகமான பலாத்காரத்தை மறைக்கவும் உபயோகிக்கப் பட்டு வருகிறது என்பதை, எனக்குக் கடிதங்கள் எழுதும்

நிருபர்களுக்கு நான் ஞாபகமூட்ட வேண்டும். ஆனால், அந்த வார்த்தையின் கர்த்தா என்ற முறையில் நான் ஒன்று கூற அனுமதிக்கப்படலாம். அது எந்த விதத்திலும், நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ, கண்ணுக்குத் தெரிந்தோ அல்லது தெரியாமலோ, எண்ணத்திலோ, வார்த்தையிலோ அல்லது செயலிலோ, பலாத்காரத்தைத் தவிர்க்கிறது. எதிரிக்குத் தீங்கு நேர விரும்புவதோ அல்லது துன்பம் விளைவிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் எதிரியிடமோ, எதிரியைப் பற்றியோ கொடுமையாகப் பேசுவதோ, சத்தியாக்கிரகத்தை மீறுவதாகும். சத்தியாக்கிரகம் சம்பந்தப்பட்ட வரையில், உண்மையான பலாத்காரத்தைக் காட்டிலும் பெரும்பாலும் தீய எண்ணமோ, தீய வார்த்தையோ அதிக ஆபத்தாக முடியலாம். திடீரென்று ஏற்பட்ட கோபத்தில் உபயோகிக்கப்படும் பலாத்காரத்தைக் குறித்து வருந்தி, அடுத்த விநாடியில் மறந்துவிடலாம்; ஆனால் தீய வார்த்தை அப்படியல்ல. சத்தியாக்கிரகம் அமைதியானது; அது ஒருபோதும் நோகும்படி செய்யாது. கோபத்தினாலோ அல்லது துவேஷத்தினாலோ நாம் செய்யும் காரியம் சத்தியாக்கிரகமாகாது. அதில் வீண் சந்தடிக்கோ, பொறுமையின்மைக்கோ, கூக்குரலுக்கோ இடமில்லை. சத்தியாக்கிரகம் நிர்ப்பந்தத்திற்கு நேர் எதிரானது. பலாத்காரத்தின் ஸ்தானத்தில் பலாத்காரத்துக்கு நேர் எதிராக அது உருவாக்கப்பட்டுள்ளது,

ஆயினும், 'தீண்டாமையைத் துடைத்தொழிக்க மிகவும் தீவிரமான முறைகள் தேவை' என்று நிருபர் கூறுவதை நான் பூரணமாக ஒத்துக்கொள்ளுகிறேன். ஆனால், தீவிர முறைகளை நாம் நமக்கு எதிராகவே எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது.

வைதிகர்கள், அவர்கள் அனுஷ்டிக்கும் தீண்டாமை, சாஸ்திரங்களின் கட்டளையென்றும், அதை அகற்றிவிட்டால் ஹிந்து மதத்திற்குப் பெரும் தீங்கு நேருமென்றும் மனப்பூர்வமாக நம்புகிறார்கள். இந்த நம்பிக்கையை எப்படி சமாளிப்பது? அவர்களுடைய கோவில்களில் ஹரிஜனங்களை அனுமதிக்க வேண்டுமென்று நிர்ப்பந்தப்படுத்துவதன் மூலம், அவர்கள் தங்களுடைய நம்பிக்கையை ஒரு காலத்திலும் மாற்றிக்கொள்ளமாட்டார்கள் என்பது தெளிவாகும். இந்நிலைமையில் செய்ய வேண்டியதென்ன? கோவில்களுக்குள் ஹரிஜனங்கள் பிரவேசிப்பது அவ்வளவு முக்கியமல்ல; ஹரிஜனங்களைக் கோவிலுக்குள் செல்லவிடாமல் தடுப்பது தவறு என்று நம்பும்படி வைதிகர்களின் மனத்தை மாற்றுவதுதான் முக்கியமாகும். அவர்களுடைய இதயத்தில் படும்படி வேண்டிக்கொள்ளுவதன் மூலம்தான், அதாவது அவர்களது உயர்ந்த குணங்களை எழுப்புவதன் மூலம் தான், இந்த மனமாற்றம் ஏற்படும்படி செய்ய முடியும். பிரார்த்தனைகளின் மூலமும், உண்ணாவிரதத்தின் மூலமும், மற்ற விதங்களில் தாங்களே துன்பத்திற்கு உள்ளாவதன் மூலமும்தான், அதாவது, தாங்கள் அதிக பரிசுத்தம் அடைவதன் மூலம்தான்,

வைதிகர்களுக்கு அத்தகைய வேண்டுகோள் விடுக்க முடியும். அத்தகைய முறை ஒருபோதும் தோல்வியடைந்ததில்லே. அதன் முடிவு வெற்றிதான்.

சீர்திருத்தவாதி தமது லட்சியத்தின் சத்தியத்தை இதய பூர்வமாக உணர்ந்தவராக இருக்க வேண்டும். அப்படியாயின் அவர் எதிரியிடம் பொறுமையிழக்கமாட்டார்; தம்மிடத்தில்தான் பொறுமையிழப்பார். சாகும் வரையில் உண்ணுவிரதம் அனுஷ்டிக்கக்கூட அவர் தயாராக இருக்க வேண்டும். ஆனல், அவ்விதம் செய்ய ஒவ்வொருவருக்கும் உரிமையோ அல்லது சக்தியோ இல்லே. கடவுள் மிக மிகக் கண்டிப்பானவர். அவர் தமது சிறந்த பக்தர்களிடமிருந்து அதிகாரத்துடன் கோருவது, கண்டிப்பான தன்னடக்கம்தான். உண்ணுவிரதங்கள்கூட பலாத்காரமாகிவிடலாம். மனிதரின் கையில் துஷ்பிரயோகத்திற்கு இலக்காகாமல் இருப்பது இந்த உலகிலேயே எதுவுமில்லே. மானிடரிடம் நன்மையும் தீமையும் கலந்திருக்கின்றன; ஒவ்வொருவரும் ஜெக்கிலாகவும் ஹைடாகவும்* இருக்கிருர்கள். ஆனல் பிறரைத் துன்புறுத்தாது தன்னேத்தானே துன்புறுத்திக் கொள்ளும்போது அத்தகைய துஷ்பிரயோகத்திற்குப் பெரிதும் இடமிராமற் போய்விடுகிறது.

—'ஹரிஜன்' – 15—4—1933

# 8

# ஆன்மிகத் தேவையைப் பூர்த்தி செய்யும் ஆலய வழிபாடு

விக்கிரக ஆராதனேயை எதிர்க்கும் ஓர் உபாத்தியாயர் கீழ் வருமாறு மூன்று கேள்விகள் கேட்டுள்ளார் :

1. ஸ்ரீ ராமபிரானின் வாழ்க்கையைப் பின்பற்றும் ஒரு ஹிந்து, கோவிலுக்குச் சென்று அங்குள்ள ஸ்ரீ ராம விக்கிரகத்தையும் தரிசனம் செய்ய வேண்டியது அவசியமா? செய்கையைக் காட்டிலும் தரிசனம் சிறந்ததா?

2. உயிருள்ள ஒருவரின் முன்னிலேயில் நாம் மரியாதையாகத் தலே வணங்கினுலோ அல்லது கைகூப்பிக் கும்பிட்டாலோ அவர் பதிலுக்கு அவ்விதமே செய்கிருர். ஆனல், விக்கிரகம் எவ்விதப் பதிலும் அளிப்பதில்லே. அப்படியிருக்க, விக்கிரகத்தை வணங்குவதால் என்ன பயன்? ஒருபோதும்

---

* இது ராபர்ட் லூயி ஸ்டீபன்சன் என்ற பிரபல மேனுட்டு ஆசிரியர் எழுதிய உலகப் புகழ் பெற்ற நாவல். டாக்டர் ஜெக்கில் என்ற உயர்ந்த மனிதர், சிற்சில சமயங்களில் கொலேக்கும் கொடுமைகளுக்கும் அஞ்சாத மிஸ்டர் ஹைட் என்ற அரக்கராக மாறி அவர் செய்யும் பாதகங்கள் இதில் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன.

பதில் எழுதாத ஒருவருக்குக் கடிதங்கள் எழுதிக்கொண்டிருப்பதால் என்ன பயன்?

3. எந்த நபருடைய உருவத்தை ஒரு ஹிந்து தொழுகிருரோ, அந்த நபர் அவரது வாழ்நாளில் சில தவறுகள் செய்திருக்கலாம். அந்த நபரின் உருவத்தை வணங்கும் அந்த பக்தர், அவரது தவறுகளையும் அனுஷ்டிக்க முற்படலாம். அவ்விதம் அனுஷ்டிப்பதால் அவருக்குத் தீங்கு நேராதா?

இவை போன்ற கேள்விகள் ஏற்கெனவே கேட்கப்பட்டு, அவற்றிற்குப் பல தடவை பதில்களும் அளிக்கப்பட்டுள்ளன. ஆனுல், ஆலயப் பிரவேசப் பிரச்னையானது அக் கேள்விகளை மீண்டும் எழும்படி செய்திருக்கிறது. அக் கேள்விகளுக்கு ஏற்கெனவே பதில் அளிக்காதது போல, அவை இந்த நிருபரைப் போன்ற நியாயமான சந்தேகவாதிகளுக்கு மனவேதனையைக் கொடுக்கின்றன. இவரைப்போன்ற சந்தேகவாதிகளைத் திருப்தி செய்ய முடியுமா என்பது சந்தேகமாயினும், என்னுல் இயன்ற வரையில் திருப்தி செய்ய முயற்சிக்க வேண்டும்.

ஸ்ரீ ராமச்சந்திரனின் விக்கிரகத்தை வணங்குவதற்காக எந்த ஹிந்துவும் கோவிலுக்குச் செல்ல வேண்டிய அவசியமில்லை. ஒரு கோவிலில் உள்ள விக்கிரகத்தைப் பாராமல் ஸ்ரீ ராமனைத் தியானிக்க முடியாத ஒருவரே கோவிலுக்குச் செல்ல வேண்டும். அவரது ஸ்ரீ ராமன் வேறு எங்குமிராமல் அந்தக் கோவிலில் மாத்திரமே இருப்பதாக அவருக்குத் தோன்றுவது துரதிர்ஷ்டமாக இருக்கலாம்; ஆனுல், அது உண்மையே. கபடமற்ற அந்த நம்பிக்கையைக் குலைக்க நான் விரும்பமாட்டேன்.

முதல் கேள்வியில் உள்ள உப கேள்வி புத்திசாலித்தனமானதல்ல. தரிசனத்தையும் செயலையும் ஒப்பிட்டுப் பார்ப்பதென்ற பேச்சிற்கே இடமில்லை. அவ்விதம் இருக்குமாயின், செய்கை தான் சிறந்ததென்று நான் தயக்கமின்றிக் கூறுவேன். தரிசனத்தின் நோக்கமே, செயலை அனுஷ்டிக்கச் சக்தி உண்டாக வேண்டும் என்பதுதான்; ஆன்மாவை ஒரு நிலைப்படுத்திப் பரிசுத்தமாக்க வேண்டும் என்பதுதான். எனவே, தரிசனமே நியாயமான செயலாகிவிடாது; ஆனுல், நியாயமான செயல் புரியும்படி தூண்டுவதேயாகும்.

உபாத்தியாயர், இரண்டாவது கேள்வி கேட்டிருப்பதன் மூலம், ஆலய வழிபாட்டின் நோக்கத்தை அறிந்துகொள்ள முற்றிலும் தவறிவிட்டார் என்பது தெரிகிறது. உயிருள்ள ஒரு நபருக்கு நான் வந்தனம் செய்யும்போது அவரும் பதிலுக்கு வந்தனம் செய்கிருர். அது ஒருவருக்கொருவர் செய்துகொள்ளும் மரியாதையாகும். அதில் விசேஷச் சிறப்பு எதுவுமில்லை. அது நல்ல பழக்க வழக்கத்தின் அறிகுறியாக இருக்கலாம். ஆனுல், கோவிலுக்குச் செல்வது ஆன்ம பரிசுத்தத்திற்காகவே.

ஓர் உயிருள்ள நபர் தம்மைப் போலவே குற்றம் குறைகள் உள்ளவராக இருக்கலாம். ஆனல், கோவிலில் ஒருவர், கற்பனைக்கு எட்டாதவாறு, குற்றம் குறையற்றுப் பரிபூரணமாகவும் நிரந்தரமாகவும் விளங்கும் கடவுளை வணங்குகிருர். உயிருள்ள நபர்களுக்கு எழுதும் கடிதங்களுக்குப் பதில் வந்தால் கூட, அது பெரும்பாலும் இதயத்தைப் பிளக்கும் துக்கத்தில் முடிகிறது. அவற்றிற்கு எப்போதும் பதில் வரும் என்ற உத்தரவாதமும் இல்லை.

பக்தர்களின் கற்பனைக்கு இணங்க கடவுள் கோவில்களில் வாசம் செய்கிருர். அவருக்குக் கடிதங்கள் எழுதப் பேனு, மை, காகிதம் எதுவும் வேண்டாம்; பேச்சுக்கூட வேண்டாம். கேவலம் ஊமையைப் போல் மௌனமாக வணங்குவதே அவருக்கு எழுதும் கடிதமாகும். அந்தக் கடிதத்துக்குப் பதில் கிடைக்க ஒருபோதும் தவறுவதில்லை. இந்தச் செயல் யாவும் நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்ட அழகான பழக்கமாகும். இங்கே முயற்சி வீணுவதில்லை; இதயத்தைப் பிளக்கும் வேதனைக்கு இடமில்லை; தப்பெண்ணம் உண்டாகக் கூடிய அபாயமுமில்லை. ஆலயங்களிலோ, மசூதிகளிலோ, அல்லது கிறிஸ்தவாலயங்களிலோ வழிபாடு செய்வதில் உள்ள சாதாரண தத்துவத்தைக் கடிதம் எழுதியவர் அறிந்துகொள்ள முயற்சிக்க வேண்டும். கடவுளின் இந்தப் பல்வேறு வாசஸ்தலங்களிடையே நான் எவ்வித வேற்றுமையும் கற்பிக்கவில்லை. இதை அவர் உணர்ந்துகொள்ளுவாராயின், நான் கூறுவதன் அர்த்தத்தை அவர் இன்னும் நன்ருகத் தெரிந்துகொள்வார். நம்பிக்கையினுல் தான் அந்தப் பல்வேறு ஆலயங்களும் உருவாகியிருக்கின்றன. எப்படியாவது, கண்ணுக்குத் தெரியாத சக்தியிருக்குமிடம் போய்ச் சேர மனிதருக்குள்ள மட்டற்ற ஆர்வத்திற்கு ஒரு விடையாகவே, அக் கோவில்கள் அமைந்திருக்கின்றன.

அவதாரங்கள் பற்றிய ஹிந்துக் கொள்கையை அறிந்து கொள்ளும் சிரமத்தை நிருபர் எடுத்துக்கொள்வதில்லை என்பதையே மூன்ருவது கேள்வி காட்டுகிறது. நம்பிக்கையுள்ள ஹிந்துவுக்கு, இறைவனின் அவதாரம் குற்றம் குறையற்றதாகும். ஹிந்து பக்தரின் கிருஷ்ண பரமாத்மா, சிறிதும் களங்கமற்றபரிபூரண அவதாரமாவார். குண தோஷங்களை ஆராய்பவரின் கடுமையான தீர்ப்பைப்பற்றி பக்தர் கவலைப்படவில்லை. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின், ஸ்ரீ ராமபிரானின் லட்சக்கணக்கான பக்தர்கள், அந்தப் பெயர்களில் கடவுளைத் தியானித்துத் தங்கள் வாழ்க்கையையே அடியோடு மாற்றிக் கொண்டிருக்கிருர்கள்.

இந்த அற்புதம் எப்படி நிகழ்கிறது என்பது எனக்குத் தெரியவில்லை. அது ஒரு மர்மமாக இருக்கிறது. அதை நிரூபிக்க நான் முயற்சித்ததில்லை. கடவுளைக் குறிக்கும் மகோன்னதமான அடைமொழியும், கடவுளின் பெயரும் சத்தியம்தான் என்பதை, என் பகுத்தறிவும் இதயமும் வெகு காலத்திற்கு முன்பே

உணர்ந்துகொண்டு விட்டன. எனினும், ஸ்ரீ ராமபிரான் என்ற பெயரிலேயே நான் சத்தியத்தைக் காண்கிறேன். எனக்கு ஏற்பட்ட சோதனையின் இருள் சூழ்ந்த நேரத்தில், அந்த ஒரு பெயர்தான் என்னைக் காப்பாற்றியது; இன்னும் காப்பாற்றி வருகிறது. அது குழந்தைப் பருவத்தில் ஏற்பட்ட தொடர்பாக இருக்கலாம்; துளசிதாஸ் என் இதயத்தில் உண்டாக்கிய கவர்ச்சியின் காரணமாகவும் இருக்கலாம். அது எப்படியாயினும், சக்தி வாய்ந்த உண்மை அதுதான். நான் இந்த வரிகளை எழுதுகையில், என் குழந்தைப் பருவத்தில் எனது மூதாதையர் வீட்டிற்கு அடுத்துள்ள ராம்ஜி மந்திருக்கு நான் தினந்தோறும் சென்றபோது கண்ட காட்சிகளை என் ஞாபக சக்தி மீண்டும் கண் முன் நிற்கும்படி செய்கிறது. என்னுடைய ராமபிரான் அப்போது அங்குதான் வசித்தார். பல பயங்கரங்களிலிருந்தும் பாவங்களிலிருந்தும் அவர் என்னைக் காப்பாற்றினர்.

நான் சம்பந்தப்பட்டவரையில், அது மூடபக்தியல்ல. விக்கிரகத்தின் பொறுப்பாளி ஒரு கெட்ட மனிதராக இருக்கலாம். அவருக்கு விரோதமாக எனக்கு எதுவும் தெரியாது. கோவிலில் தவறான நடவடிக்கைகள் நிகழ்ந்திருக்கலாம். அவை பற்றியும் எனக்கு எதுவும் தெரியாது. அவை என்னைப் பாதிக்கவில்லை. என் விஷயத்தில் எது உண்மையாக இருந்ததோ, எது உண்மையாக இருக்கிறதோ, அதுதான் கோடிக்கணக்கான ஹிந்துக்கள் விஷயத்திலும் உண்மையாகும்.

எனது ஹரிஜன சகோதரர் விரும்பினுல், அவரது மதத்தைச் சேர்ந்த சகாக்களான கோடிக்கணக்கான சாதி ஹிந்துக்கள் எனப்படுவோருடன் அவரும் கோவில் வழிபாட்டில் பங்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்பதே என் விருப்பம். சாதி ஹிந்துக்கள், ஹரிஜன சகோதரர்களுக்குத் தங்கள் கோவில்களைத் திறந்துவிடவேண்டியது கடமையாகும். மானிட வர்க்கத்தின் ஆன்மிகமான தேவையைக் கோவில் வழிபாடு பூர்த்திசெய்கிறது. அதில் செய்ய வேண்டிய சீர்திருத்தங்கள் இருக்கத்தான் செய்கின்றன. எனினும், மனிதர் உள்ளளவும் ஆலய வழிபாடும் இருந்துதான் தீரும்.

—'ஹரிஜன்' – 18—3—1933

## 9

# நான் காணும் எதிர்கால ஆலயம்

ஹரிஜன ஆலயப் பிரவேச இயக்கம் நடந்து வரும் அதே சமயத்தில், ஆலயச் சீர்திருத்தக் கோரிக்கை கூடாது என்பது சாத்தியமல்ல. மற்ற ஆலயங்களைப் போலவே நவீன ஹிந்து

ஆலயமும் மூடநம்பிக்கைக்கு நாற்றங்காலாக இருந்து வருகிறது. ஆலயப் பிரவேச இயக்கத்துடன் நான் எவ்வித சம்பந்தமும் வைத்துக்கொள்ள வேண்டாமென்று ஓர் அமெரிக்க நண்பர் சாந்தமாகக் கேட்டுக்கொண்டிருக்கிறார். இஸ்லாம் மதத்தின் பரம பக்தரான ஒரு நண்பருக்கும் எனக்கும் நீண்ட கடிதப் போக்குவரத்து நடந்தது. அவரும், அவருக்கே உரித்தான முறையில் அமெரிக்க நண்பரைப் போலவே கேட்டுக்கொண்டிருக்கிறார். அவர்கள் கூறியிருப்பதில் ஆழ்ந்த கருத்து இருக்கிறது. எனினும், கோவில்களை அழித்துவிடுவதே ஊழல்களுக்குப் பரிகாரம் என்று அவர்கள் கூறுவதை நான் ஏற்றுக்கொள்ள முடியாது.

மிகவும் ஏராளமானவர்கள் கோவில்களைச் சீர்திருத்துவதில் தான் நம்பிக்கை கொண்டிருக்கிறார்களேயன்றி, அழிப்பதில் அல்ல. ராஜ்கோட்டில் ஒரு மாதிரிக் கோவில் நிர்ணயிப்பது பற்றி ஆர்வமிக்கத் திட்டமொன்று உருவாகியிருக்கிறதென்று சில தினங்களுக்கு முன்தான் குறிப்பிட்டேன். கோவில் சீர்திருத்தத்தின் அவசியத்தை வற்புறுத்தாமல், நான் ஹரிஜனங்களின் ஆலயப் பிரவேசத்தை உபதேசிக்க முன் வந்தது பற்றிப் பல நிருபர்கள் என்னைக் கண்டித்திருக்கிறார்கள். கோவில் சீர்திருத்தம் அவசியமானது என்பதில் ஐயமில்லை. இவ்விஷயத்திலும் எச்சரிக்கையாக இருக்க வேண்டியது அவசியமாகும். தற்போதுள்ள எல்லாக் கோவில்களின் ஸ்தானத்திலும் புதிய கோவில்களை நிர்மாணிப்பது சாத்தியமானதென்றும் அந்த நிருபர்களில் சிலர் எண்ணுகிறார்கள். அந்த அபிப்பிராயத்தை நான் ஆதரிக்கவில்லை. எல்லாக் கோவில்களும் ஒரே விதமாக ஒருபோதும் இருக்க முடியாது. முன்பு இருந்தது போல், மானிடரின் தேவைகளுக்குத் தகுந்தவாறு அவைகளும் வெவ்வேறு விதமாகவே இருக்கும். எனவே, ஒரு சீர்திருத்தக்காரர் புறத்தோற்றத்தைக் காட்டிலும் அகத் தத்துவத்திலே தீவிர மாறுதலைச் செய்வதில் அதிக அக்கறையுள்ளவராக இருக்க வேண்டும். மனநிலையில் மாறுதல் ஏற்பட்டுவிட்டால், புறத்தோற்றம் சீர்பட்டுவிடும். மனநிலை மாறாமல், புறத்தோற்றத்தில் எவ்வளவு தீவிர மாறுதல் ஏற்பட்டாலும், அது வெள்ளை பூசப்பட்ட வெறும் கல்லறையாகவே இருக்கும். கல்லறை எவ்வளவு அழகியதாயினும் அது ஒரு மசூதியாகிவிடுமா? அதற்கு மாறாக, புனிதமாக்கப்பட்ட வெறும் தரை ஆண்டவனின் உண்மையான ஆலயமாகிவிடலாம்.

எனவே, இதற்கு முதல் தேவை குருக்கள்தான். நான் கற்பனை செய்யும் சிறந்த குருக்கள், கடவுளின் சிறந்த பக்தராக இருக்கவேண்டும். அவர் மக்களின் உண்மையான ஊழியராக இருக்கவேண்டும். அவர் எந்த ஜனங்களுக்காகப் பூஜை செய்கிறாரோ, அவர்களுக்கு வழிகாட்டியாகவும், நண்பராகவும், தத்துவ போதகராகவும் இருக்க வேண்டும். அவர் தமது கடமையைச் செய்வதில் முழு நேரத்தையும் அர்ப்பணம் செய்யக்

கூடியவராக இருக்க வேண்டும். அவரது தேவைகளும், பாசங்களும் மிகமிகக் குறைவாக இருக்க வேண்டும். அவர் சாஸ்திரங்களில் தேர்ச்சி பெற்றவராக இருக்க வேண்டும். மக்களின் நலனிலேயே அவரது கவனம் முழுவதும் செல்ல வேண்டும். இவ்விதம் நான் கூறுவது ஒரு கற்பனைச் சித்திரமல்ல. அது வாழ்க்கையோடு இயைந்த உண்மையாகும். அது, எனது குழந்தைப் பருவத்தின் ஞாபகங்களை அடிப்படையாகக் கொண்டது. நான் இப்போது ஞாபகப்படுத்திக்கொண்டு கூறும் குருக்கள், ராஜாவினாலும் மக்களாலும் மதிக்கப்பட்டார். அவர்கள் தங்களுக்கு அவசியமான சந்தர்ப்பத்தில் குருக்களைச் சூழ்ந்து அவரது ஆலோசனையையும் புத்திமதியையும் நாடினர்.

இக்காலத்தில் அத்தகைய ஒரு குருக்களைக் கண்டுபிடிப்பது கஷ்டமானதென்று ஓர் அவநம்பிக்கைவாதி கூறுவாராயின், அது ஓரளவு உண்மையே ஆகும். ஆனால், அத்தகைய ஒரு குருக்களைக் கண்டுபிடிக்கும் வரையில், சீர்திருத்தவாதி தமது கற்பனையில் உருவாகியுள்ள கோவிலை நிர்மாணிப்பதற்காகக் காத்திருக்க வேண்டும்.

இதன் மத்தியில், அவர் தமது கற்பனையில் காணும் குருக்களிடம் என்ன உயர்ந்த குணங்கள் இருக்க வேண்டுமென்று எண்ணுகிறாரோ, அக்குணங்கள் தமக்கு ஏற்பட அவர் தாமே பாடுபடவேண்டும். தற்போதுள்ள கோவில்களில் இருக்கும் குருக்கள்மாரிடமிருந்தும் அவர் அந்தக் குணங்களை எதிர்பார்க்க வேண்டும். அதாவது, அவர் தமது சாந்தமான, ஒழுங்கான நடத்தையால் தம்மை அடுத்துள்ள சுற்றுப்புறங்களிலும் தமது குணங்கள் பரவும்படி செய்யவேண்டும். தமது ஒழுங்கான நடவடிக்கையுடன் கூடிய தமது சிந்தனை, மின்சார சக்தியை உற்பத்தி செய்யும் மகத்தான யந்திரத்தைக் காட்டிலும் அதிக வலிமை வாய்ந்தது என்பதில் அவருக்கு நம்பிக்கை வேண்டும். அவர் பொறுமையின்றி ஒரே நாளில் பலனை எதிர்பார்க்கக்கூடாது. தேவையான சக்தியைக் கொடுக்கக்கூடிய ஒரு சிந்தனை ஏற்படுவதற்கு, பல ஆண்டுகள் ஒழுங்கான நடத்தையைப் பின்பற்ற வேண்டியிருக்கலாம். அப்படியிருக்க, ஒரு மகத்தான சீர்திருத்தத்திற்கு எத்தனை ஆண்டுகள் அல்லது தலைமுறைகள் சென்றால்தான் என்ன?

ஒரு மாதிரிக் கோவில் பற்றி என் கருத்து என்ன என்பதை இப்போது வாசகர் அறிந்துகொள்ளலாம். அதற்கான ஒரு சிற்பியின் திட்டத்தையோ, அல்லது விவரங்களையோ நான் அவரிடம் சமர்ப்பிக்க முடியாது. அதற்கு இன்னும் காலம் பக்குவமாகவில்லை. எனினும், அதற்காக நான் கலங்கவில்லை. சீர்திருத்தவாதியும் கலங்கவேண்டிய அவசியமில்லை.

அவரது எதிர்கால ஆலயத்துக்கு அவர் தகுந்த மனைக்கட்டைத் தேர்ந்தெடுக்கலாம். மனைக்கட்டு எவ்வளவு விசால

மாகக் கிடைத்தாலும் நல்லது தான். அது ஒரு கிராமத்தின் அல்லது நகரத்தின் நடுவில் இருக்கவேண்டும் என்ற அவசிய மில்லை. ஹரிஜனங்களும் மற்ற ஏழைகளும் எளிதில் செல்லக் கூடிய ஓரிடத்தில் அது இருக்க வேண்டும். எனினும், அது அனு ரோக்கியமான சூழ்நிலையில் இருக்கக்கூடாது. சாத்தியமாயின், சுற்றுப்புறங்களைக் காட்டிலும் அதிக உயரமாக இருக்க வேண்டும். அது எப்படியாயினும், கோவில் கட்டடத்தின் அடிமட்டமாவது உயரமாக இருக்க வேண்டும். அதன் மீதே தினசரி கடவுளை வழிபாடு செய்வதற்கான இடத்தை நான் தேர்ந்தெடுத்துக் கொள்வேன். அதைச் சுற்றி ஒரு பள்ளிக் கூடம், ஒரு வைத்தியசாலை, மத சம்பந்தமான புத்தகங்களும் லௌகிகமான புத்தகங்களும் அடங்கிய ஒரு புத்தகசாலை முதலியன ஏற்படவேண்டும். பள்ளிக்கூடத்தை, கூட்டம் கூடி பல நல்ல விஷயங்களை விவாதிக்கும் இடமாகவும் வைத்துக்கொள் ளலாம். கோவிலையொட்டி ஒரு தருமசாலை அல்லது ஒரு விருந் தினர் விடுதி இருக்கவேண்டும். இவையெல்லாம் தனித்தனி ஸ்தாபனமாகக் கோவில் நிர்வாகத்திற்கு உட்பட்டதாக இருக்க வேண்டும். அவை ஏககாலத்திலோ, அல்லது சந்தர்ப்பங்களுக் கும் பண வசதிக்கும் தகுந்தவாறு ஒன்றன்பின் ஒன்ருகவோ நிர்மாணிக்கப்படலாம். கட்டடங்கள் பெரிதாகவும் உறுதியாக வும் இருந்தாலும் இருக்கலாம்; இராவிட்டாலும் பாதகமில்லை. அந்த ஊழியம் புரியத் தொழிலாளர் தாங்களாக முன்வரலாம். அவ்விதமாயின், மண்ணையும் வைக்கோலையும் கொண்டு கட்டட வேலையை ஆரம்பித்துவிடலாம்.

இன்னும் கோவில் நிர்மாணமாகவில்லை. ஆனல், மனைக்கட்டு வாங்கியபோது, அஸ்திவாரம் அமைத்தாகிவிட்டது. முதல் பிரார்த்தனையும் செய்தாகிவிட்டது. "மக்கள் எந்த இடத் தில் ஒன்றுகூடி தங்கள் இதயத்திலிருந்து கடவுளின் திருநாமத் தைக் கூறினலும், அது கடவுள் வசிக்கும் ஸ்தலமாகிவிடுகிறது; அது அவரது கோவிலாகிவிடுகிறது" என்று பாகவதம் கூறு கிறது. கட்டடம், விக்கிரகம், பிரதிஷ்டை இவையெல்லாம் குருக் களைச் சார்ந்தவை. குருக்கள் கிடைக்கும்போது, அவர் தமது கடமையைச் செய்ய முற்படுவார். எனினும் முதல் பிரார்த்தனை நடந்ததிலிருந்து கோவில் ஆரம்பமாகிவிட்டது எனலாம். அது உண்மையான ஆடவர்கள், பெண்களின் பிரார்த்தனையாயின், அது தொடர்ந்து முன்னேற்றம் அடைவது நிச்சயம்.

எதிர்கால ஆலயத்தைப் பற்றி நான் கூற விரும்பியது இது தான். ராஜ்கோட் ஆலய நிர்மாணத் திட்டத்தை ஆராய முற் படும் வாசகர், எனது மாதிரிக் கோவிலுக்கும் அத்திட்டத்தில் குறிப்பிட்டுள்ள கோவிலுக்கும் வெளித்தோற்றத்தில் வேற்றுமை யில்லை என்பதைக் காண்பார். எனது கற்பனைக் கோவிலிலோ, அல்லது ராஜ்கோட் திட்டத்தில் உள்ள கோவிலிலோ, புதுமை எதுவுமில்லை. புராதனமான கிராமக் கோவில்களில் அநேக

மாக நான் குறிப்பிட்ட எல்லா விசேஷ அம்சங்களும் இருந்து வந்துள்ளன.

எனினும், தற்போதுள்ள கோவில்களையும் நாம் சமாளிக்க வேண்டும். நான் குறிப்பிட்ட யோக்கியதாம்சங்கள் குருக்கள் மாருக்கு இருக்கவேண்டுமென்று கோவிலுக்குச் செல்லும் பக்தர்கள் வற்புறுத்தினல், தற்போதுள்ள ஆலயங்கள் உண்மையிலேயே கடவுள் குடிகொண்டுள்ள கோவிலாகிவிடும்.

--'ஹரிஜன்' – 29—4—1933

# 10

# ஆலயமா அல்லது வியாபாரச் சந்தையா ?

சிவசாகரிலிருந்து ஒருவர் வருமாறு எழுதுகிறார்:

பத்து நாட்களுக்கு முன், மனத்தை உருக்கும் பரிதாபமான காட்சியைக் காணும் துர்ப்பாக்கியம் எனக்கு நேர்ந்தது. என் இதயத்தைப் பிளந்த அந்த உண்மைகளை உங்களுக்குத் தெரிவிக்க வேண்டியது அவசியமாகும். எங்களுக்கு ஓய்வு நேரம் கிடைத்ததால், நாங்கள் நெடுஞ்சாலையிலிருந்து ஒரு மைல் தூரத்தில் உள்ள டேர்கான் (அஸ்ஸாம்) ஆலயத்துக்குச் சென்றோம். அது, ஜோர்ஹாட்டிற்கும் கோலகாட்டிற்கும் இடையே இருக்கிறது. அந்தக் கோவில் ஒரு குன்றின் மீது கம்பீரமாக நின்று காட்சி அளிக்கிறது. சுற்றிலும் பெரும்பாலும் தேயிலைத் தோட்டங்கள் இருக்கின்றன. குன்றைச் சுற்றிலும் உள்ள மிருதுவான பசும் போர்வை என் மனத்தை வசீகரித்துவிட்டது. தொலைவில் பிரம்மபுத்திரா நதியின் மணல் பிரதேசமும், அதன் கரைகளில் நெடுந்துரம் பரவியுள்ள கடுகுச் செடிகளின் பூக்களும் கண்களுக்கு நன்ருகத் தெரிந்தன. கோவில் வரையில் சிறிது சிறிதாக எழும்பி நீண்டு செல்லும் படிக்கட்டுகளும் உள்ளன. படிகளில் ஏறிச் சென்ற பின், கோவிலுக்குச் செல்லும் பாதையின் இருபுறங்களிலும் வரிசையாக மரங்கள் உள்ளன. குரங்குகள் அங்குமிங்கும் தாவிச் செல்லுகின்றன. அவைகளில் சில நாம் கொடுக்கும் பழங்களை வாங்கித் தின்கின்றன. துணிச்சல் உள்ள மற்றும் சில, நம் கையில் இருப்பவைகளைப் பிடுங்கிக்கொண்டு விடுகின்றன.

கோவில் பிரகாரங்கள் மேற்பார்வையின்றி மோசமான நிலையில் இருக்கின்றன. முட்செடிகளும், பார்ப்பதற்குச் சகிக்காத காட்டுச் செடிகளும் மண்டிக் கிடக்கின்றன. அக்கோவிலைச் சுற்றி அழகான தோட்டங்கள் இருந்தால், அந்த இடம் இன்னும் எவ்வளவு அதிக வனப்புடன் இருக்கும்!

கோவில் அழகான கற்கட்டிடமாகும்: அது அதிக உயரமில்லாவிடினும், அஸ்ஸாமில் உள்ள மற்றக் கோவில்களில் காண முடியாத சில விசேஷ அம்சங்கள் அந்தக் கோவிலில் இருக்கின்றன. வெளிச் சுவர்களில் உள்ள கல் உருவங்கள் சிறந்த வேலைப்பாடுகளுடன் விளங்குகின்றன.

ஆனல், அந்த இயற்கை அழகும், செயற்கை சிறப்பும், பண்டைய பெருமையும், புனிதமான சூழ்நிலையும், குருக்கள்மாரின் கொள்ளைப் புத்தியினுலும், பேராசையினுலும், இறுமாப்பினுலும் களங்கப்பட்டுள்ளன. பேராசை கொண்ட குருக்கள்மார் கோவிலை ஒரு வியாபாரச் சந்தையாக மாற்றியுள்ளனர். அங்கே தாழ்ந்த நிலையில் உள்ளவர்களும், ஏழைகளும் அனுமதிக்கப் படவில்லை. எனவே, அப்படிப்பட்ட இடத்தில் கடவுள் எப்படி வாசம் செய்வார் என நான் எனக்குள் வியந்துகொண்டேன்.

நாங்கள் கோவிலுக்குச் சென்ற தினத்தில், கோவில் வாயிலில் பக்தர்கள் அடங்கிய பெரியகூட்டம் நின்று கொண்டிருந்தது. அதில் பெரும்பாலோர் தேயிலைத் தோட்டத் தொழிலாளர்கள்தான். ஒரு கடைத் தெருவில் காணப்படும் காட்சி அங்கே நிகழ்ந்துகொண்டிருந்தது. ஒரு பக்தர் இரண்டு மாடப் புருக்களைக் காணிக்கையாகக் கொடுத்தார். அந்தக் காணிக்கையை ஏற்றுக் கொள்ளுவதற்கு விலையாக, குருக்கள் இரண்டு அணு கேட்டார். மற்றெரு பக்தர் ஒரு வெள்ளாட்டைக் காணிக்கையாகக் கொடுத்து, அதற்குத் தட்சணையாக ஒரு ரூபாயையும் குருக்களுக்குக் கொடுத்தார். அந்தக் காணிக்கையைக் கடவுள் ஏற்றுக்கொள்ளுமாறு செய்வதற்காக மேற்கொண்டு நான்கு அணு கொடுக்கும்படி குருக்கள் அவரைக் கேட்டார்! ஹிந்து மதத்தில் நம்பிக்கையுடைய கபடமற்ற, நிரபராதிகளான அந்தப் பக்தர்கள், திருடர்களிடம் அகப்பட்டுக்கொண்டு விட்டார்கள். அவர்கள் கோவில் கதவுக்கு வெளியே உட்கார்ந்து கொண்டும் மண்டியிட்டுக் கொண்டும் இருந்தனர். அவர்கள் யாதொரு தடையுமின்றிக் கோவிலுக்குச் செல்லுவோரை, பொறுமையுடன் பார்த்தார்கள். ஆச்சரியத்தினுல் ஒளிவீசும் அவர்களுடைய பரிதாபமான கண்கள், உள்ளே நிலவிய இருளை ஊடுருவிப் பார்த்தன; வீண் நம்பிக்கையுடன் உள்ளேயுள்ள கடவுளின் உருவத்தைத் தரிசிக்க முயற்சித்தன.

மத சம்மதமற்ற, மோசடியான இந்தக் காட்சியைப் பார்த்த நான், துக்கம் நிறைந்த இதயத்துடன் அப்பால் சென்றேன். என் மனம் வெதும்பியது. கடவுளுக்கும் மானிட வர்க்கத்துக்கும் எதிரான இந்தக் குற்றத்தை எல்லோரும் அறிந்து கொள்ளும்படி பரந்த முறையில் விளம்பரப்படுத்துவதென்று தீர்மானித்தேன். ஹரிஜனங்களுக்கு ஆலயத்தைத் திறந்துவிடும்படி செய்ய எல்லாவிதமான முயற்சியும் செய்து பார்த்துவிட வேண்டுமென்றும் முடிவு செய்தேன்.

அஸ்ஸாமில் உள்ள பெரும்பாலான கோவில்களிலும் ஹிந்து சமூகத்தைச் சேர்ந்த எல்லாப் பிரிவினரும் பிரவேசிக்கலாம் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். எனக்குத் தெரிந்த வரையில் டேர்கானில் உள்ள இந்தக் கோவில் ஒன்றுதான் அதற்கு விலக்காக இருந்து வருகிறது. தேயிலைத் தோட்ட தொழிலாளர்களிடமிருந்துதான் கோவில் வருமானத்தின் பெரும் பகுதி கிடைக்கிறது. கபடமற்ற இந்த மக்களின் மதப்பற்றுதலையும், அறியாமையையும் குருக்கள்மார் தங்கள் சுயநலத்திற்கு உபயோகப்படுத்திக்கொள்ளுகிருர்கள்.

தேயிலைத் தோட்டங்களுக்கு அருகில் இருப்பதால் இந்தக் கோவில் நாளுக்கு நாள் ஹரிஜனங்களுக்கு அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகி வருகிறது. எனவே, இங்கே தீண்டாமையை ஒழித்தால், ஒடுக்கப்பட்ட மக்கள் மனத்தில் மிகுந்த உற்சாகமும் உத்வேகமும் எழும். அதனுல், அவர்களிடையே உத்தாரண அலுவல்களை ஆரம்பிப்பதற்குரிய சூழ் நிலையும் ஏற்படும்.

ஹரிஜனங்களின் உத்தாரணத்திற்காக நான் சென்ற வருடம் அஸ்ஸாமில் பிரயாணம் செய்துகொண்டிருந்தபோது, தேயிலைத் தோட்டத் தொழிலாளர்கள் தீண்டாதாராகக் கருதப்படுகிறார்கள் என்பதைத் தெரிந்துகொண்டேன். எங்கே குருக்கள்மார் மக்களின் மூடபக்தியைச் சுயநலத்திற்காக உபயோகப்படுத்திக் கொள்கிறார்களோ, எங்கே நிரபராதிகளான பட்சிகளும் மிருகங்களும் பலி கொடுக்கப்படுகின்றனவோ, அத்தகைய கோவிலுக்குள் ஹரிஜனங்கள் பிரவேசிப்பதற்காகக் கிளர்ச்சி செய்ய வேண்டியது நியாயமாகும்.

ஆலயச் சீர்திருத்தம் ஒரு தனிப் பிரச்னை என்பதில் ஐயமில்லை. கோவில்களுக்குள் ஹரிஜனங்கள் பிரவேசிப்பதை, சீர்திருத்தத்திற்காக நிறுத்தி வைக்கமுடியாது. எனினும், மிருக பலிகள் கொடுக்கப்படும் கோவில்களின் விஷயம் வேறாகும். மிருக பலிகளை நிறுத்தும் வரையில், அத்தகைய கோவில்களின் அருகில் கூட நான் செல்லமாட்டேன். கோவிலுக்கு உள்ளே இருக்கும் சூழல்கள், அவற்றைப் பற்றி எதுவுமே தெரியாத பக்தரைப் பாதிக்காது. ஆனால், ஒவ்வொரு பக்தரும் மிருகபலியுடன் நெருங்கிய சம்பந்தம் உடையவராக இருக்கிறார். ஆடவராயினும் பெண்ணாயினும், அவர் அத்தகைய பலிக் காணிக்கை கொடுக்க வேண்டியவராக இருக்கிறார்.

முதல் தடவையாக அத்தகைய கோவில் ஒன்றில் ஹரிஜன் ஒருவரை அனுமதித்தால், அவர் பலியிடுவதற்காகத் துரதிர்ஷ்டம் வாய்ந்த ஒரு பட்சியையோ அல்லது மிருகத்தையோ கொண்டுவருவது இயற்கையாக எதிர்பார்க்கக் கூடியதே. அவர், மாமிச உணவு சாப்பிடுபவராகவோ அல்லது சாப்பிடாதவராகவோ இருக்கலாம். நிரபராதிகளான வாயில்லாப் பிராணிகள் ஒருபோதும் பாவம் செய்ததில்லை; பாவ உணர்ச்சியே அவைகளுக்கு இல்லை. ஆனால், அத்தகைய பிராணிகளின் இரத்தத்தினால் தம்மைப் பக்தர்கள் திருப்தி செய்ய வேண்டுமென்று கடவுள் எதிர்பார்ப்பதாகக் கபடமற்ற ஹரிஜனுக்குக் கற்பிக்கும் பாவத்திற்கு அவர் தம்மைத் தாமே ஆளாக்கிக் கொள்ளுவார். டேர்கான் ஆலயத்தை, இரத்த பலிக் களங்கமற்றதாக அஸ்ஸாம் தலைவர்கள் செய்ய வேண்டும் என்பதே என் விருப்பம்.

டேர்கானைப் போன்ற யாருமறியாத கோவிலில் அல்ல, பிரபல காளி கோவிலில்தான் அந்தச் சீர்திருத்தம் ஆரம்பமாகவேண்டும் என்று யாரும் பதிலுக்குக் கூற வேண்டாம். பெரும்பாலான சீர்திருத்தங்களும் முதன் முதலில் சிறிய முறையில் தான் ஆரம்பமாகியுள்ளன. சில்லறைக் கோவில்களிலிருந்து நிரபராதிகளான பிராணிகளின் இரத்தத்தைச் சிந்தும் களங்கத்தை அகற்றினால் கோட்டையாக விளங்கும் காளி கோவிலில் தானாகவே அச்சீர்திருத்தம் ஏற்படுவதற்கு வழி பிறந்துவிடும்.

—'ஹரிஜன்' - 5—4—1935

# 11

# தனி நபரின் தடைக்கு இடம் கொடுப்பதா?

[10-2-1934 ஸ்ரீரங்கத்திலே நடந்த பொதுக்கூட்டத்தில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்திலிருந்து எடுக்கப்பட்டது :]

**நா**ன் சென்ற தடவை இங்கிருந்தபோது, தீண்டாமை சம்பந்தமாகச் சில சாஸ்திரிகளுடன் மிகவும் சிநேக பாவமான முறையில் விவாதித்தேன். அப்போது நான் வெளியிட்ட கருத்துக்கள் முற்றிலும் சரியானவை என்பதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை. அதன் பிறகு, நான் மற்றும் பல கற்றறிஞர்களான சாஸ்திரிகளுடன் பல தடவை விவாதித்துள்ளேன். என் போன்ற ஒரு லௌகிகனுக்கு எவ்வளவு முடியுமோ, அவ்வளவு தூரத்துக்கு நான் தீண்டாமை சம்பந்தமான சாஸ்திரங்களையும் ஆராய்ச்சி செய்தேன். அதன் பயனாக நான் ஒரு திட்டமான முடிவுக்கு வந்துள்ளேன். அம்முடிவு இதுதான்: நாம் இன்று அனுஷ்டிக்கும் தீண்டாமைக்குச் சாஸ்திரங்களில் எவ்வித ஆதாரமும் இல்லை. தீண்டாதார் என்று கூறப்படுவாராயினும் சரி, வேறு யாராயினும் சரி, ஒரு ஹிந்துவைக்கூட, பொதுக் கோவிலுக்குள் பிரவேசிப்பதைத் தடுக்க எவ்வித ஆதாரமும் இல்லை.

இவ்விஷயத்தை இங்கே ஆதியோடந்தமாக விவாதிக்க நான் உத்தேசிக்கவில்லை. ஆனால், ஹரிஜனங்கள் கோவிலுக்குள் பிரவேசிப்பதை எதிர்ப்பவர்களுக்கு நான் என் சார்பில் இவ்விதம் தீவிர உறுதிமொழி கூற விரும்புகிறேன். அதாவது இந்த ஆலயப் பிரவேசத்தை எதிர்ப்பவர்களுக்கு விரோதமாகப் பலாத்காரமோ, நிர்ப்பந்தமோ உபயோகிக்கப்படமாட்டாது என்பதே. என்னை ஓர் உண்மையான, அந்தரங்க சுத்தியுள்ள சனாதனி என்று நீங்கள் அன்புடன் குறிப்பிட்டிருக்கிறீர்கள். யோக்கியமாகவும் பூரண அடக்கத்துடனும் நான் அந்த வருணனையை ஒத்துக்கொள்ள முடியுமென நினைக்கிறேன். நான் எப்போதும் என்னை ஒரு சனாதனி என்றே கூறி வருகிறேன். அவ்விதம் கூறுவதற்குக் காரணம் மிகச் சாதாரணமானது. அதாவது, சிறு வயது முதற்கொண்டே நான், என் சக்திக்கு இயன்றவரையில், நான் அறிந்த விதம் சாஸ்திரங்களுக்கு முரணின்றி நடக்க முயற்சித்து வந்துள்ளேன். அதனால்தான், தீண்டாமைக்காக வருந்தி, தன்னைப் பரிசுத்தம் செய்துகொண்டு, அந்தக் களங்கத்தை அகற்றுவதே ஒரு சனாதனியின் கடமையென்று எனக்குத் தோன்றுகிறது. தனக்கு என்ன உரிமைகளும் சலுகைகளும் இருக்கின்றனவோ, அதே உரிமைகளையும் சலுகைகளையும் ஹரிஜனங்களுக்கு வழங்க வேண்டியது சனாதனியின் இன்றியமையாத கடமையாகும். கோவிலுக்குள் செல்ல ஒரு சனாதனிக்கு என்ன விதிகள்

உண்டோ, அதே விதிகளின் மீது ஹரிஜனங்களும் கோவில்களில் பிரவேசிக்கத் தமது சக்தி முழுவதையும் உபயோகித்து முயற்சிக்கும் வரையில், சனாதனி திருப்தியடையக் கூடாது.

...

பம்பாயில் 1932 செப்டம்பர் மாதம் நான் உண்ணாவிரதம் அனுஷ்டித்து வருகையில், ஹிந்துக்களின் பிரதிநிதிகள் ஒன்று கூடி, ஆலயங்களுக்குள் செல்ல மற்ற ஹிந்துக்களைப் போல் ஹரிஜனங்களுக்கும் அதே உரிமைகள் உண்டு என்றும், அவ்விதம் செல்லுவதற்குச் சட்டபூர்வமான தடை ஏதாவது இருக்குமாயின், அந்தத் தடையை அகற்றுவதற்கான முறைகளைக் கைக்கொள்ளவேண்டும் என்றும் இதயபூர்வமாக முடிவுக்கு வந்தனர். எனவே, சாதி ஹிந்துக்களுக்கு என்ன விதிகள் உண்டோ, அதே விதிகளின்மீது கோவிலுக்குள் பிரவேசிக்க ஹரிஜனங்களுக்கு உள்ள உரிமையை நிறைவேற்ற வேண்டியது, என் போன்றவர்களுக்கு இப்போது இரட்டிப்பு கடமையாகியிருக்கிறது.

எனினும், அதற்காக ஒருவர்கூட பீதியடைய வேண்டியதில்லை. ஏனெனில், ஹிந்துப் பொது மக்களின் அபிப்பிராயத்தை ஒழுங்கான முறையில் உருவகப்படுத்த வேண்டுமென்பதே அதன் பொருளாகும். சாதி ஹிந்துக்களைப்போல் ஹரிஜனங்களுக்கும் ஸ்ரீரங்கத்தில் உள்ள இந்த மகோன்னதமான கோவில் திறக்கப்படாததைக் குறித்து நான் மிகவும் வருந்துகிறேன். என்றாலும், அவ்விதம் திறக்கப்படுவதற்கு சாதி ஹிந்துக்களின் மனம் பக்குவம் அடையும் வரையில், இந்தக் கோவிலை ஹரிஜனங்களுக்குத் திறந்துவிட வேண்டுமென நான் எள்ளளவும் விரும்பவில்லை. இது, ஆலயப் பிரவேச விஷயமாக ஹரிஜனங்கள் தங்கள் உரிமையையோ அல்லது கோரிக்கையையோ வற்புறுத்தும் பிரச்னை அல்ல. இந்தக் கோவில் அவர்களுக்குத் திறக்கப்பட்டால்கூட, இதில் பிரவேசிக்க அவர்கள் விரும்பலாம், அல்லது விரும்பாமலும் இருக்கலாம். ஆனால், இதை ஹரிஜனங்களுக்குத் திறந்துவிடும்படி செய்ய வேண்டியது, ஒவ்வொரு சாதி ஹிந்துவினுடைய இன்றியமையாத கடமையாகும். இதை ஹரிஜனங்களுக்குத் திறந்துவிட வேண்டுமென என்னைப் போன்ற தாழ்மையான ஒருவர் விரும்புகிறார் என்பதற்காக இதைத் திறந்துவிட முடியாது. பொதுவாக, சாதி ஹிந்துக்களின் ஒருமித்த அபிப்பிராயத்திற்கு இணங்க மாத்திரமே, இதைத் திறந்துவிட முடியும். ஆனால், இந்த ஆலயப் பிரவேசத்தைத் தாம் எதிர்த்து வரும்வரையில் இதை ஹரிஜனங்களுக்குத் திறந்துவிடக் கூடாது என்று ஒரே ஒரு ஹிந்து மாத்திரம் கூறும்போதுதான் சங்கடம் ஏற்படுகிறது. அத்தகைய அசாத்தியமான ஒரு கொள்கையை ஒத்துக்கொள்ளுவதாயின், ஹிந்து மதத்தில் நாம் ஒருபோதும் முன்னேற்றம் அடைய முடியாது. அந்த நிபந்தனைகளின் மீது நாம் எந்தப் பிரச்னையையும் எக்காலத்திலும் தீர்க்க முடியாது.

மற்றப் பக்தர்கள் யாவரும் ஒத்துக்கொண்ட ஒரு விஷயத்தை ஒரே ஒரு பக்தர் எதிர்க்கிறார் என்பதற்காக, ஒரு ஹிந்து

கோவிலோ, மசூதியோ, அல்லது கிறிஸ்துவாலயமோ, எவருக் காவது திறக்கப்படாமல் மூடப்பட்டிருந்ததாக நான் கேள்விப் பட்டதேயில்லை. என்னுடைய இந்தப் பிரயாணத்தில், மத்திய மாகாணம், ஆந்திரா, மலையாளம், தமிழ்நாடு முதலிய இடங்களில் பதினாயிரக்கணக்கான சாதி ஹிந்துக்களைப் பார்க்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. சாதி ஹிந்துக்களுக்கு என்னென்ன உரி மைகளும் சலுகைகளும் உள்ளனவோ, அதே உரிமைகளும் சலு கைகளும் ஹரிஜனங்களுக்கும் உண்டென்பதிலும், ஹரிஜனங் களின் ஆலயப் பிரவேச உரிமையையும் கபடமற்ற சாதி ஹிந்துக் களின் மனம் இன்று ஒத்துக்கொள்ளுகிறது என்பதிலும் எனக் குத் தினையளவு ஐயமும் இல்லை. இதை உங்கள் முன்னிலையில் சாட்சியம் கூற விரும்புகிறேன்.

எனவே, இந்த இயக்கத்தை எதிர்ப்போருக்கு நான் ஒரு யோசனை கூறுகிறேன். அதாவது அவர்கள் இந்தப் பிரச்னையைக் குழப்ப வேண்டாம். ஆலயப் பிரவேசத்தை அவர்கள் விரும்ப வில்லையாயின், அதை அவர்கள் அதன் பாட்டிற்கு விட்டுவிடட் டும். மற்ற பல விஷயங்களையொட்டியும் அவர்கள் தங்கள் உத வியையும் ஒத்துழைப்பையும் அளிப்பார்களாக. இன்று மாலை நான் சனாதனிகள் அடங்கிய ஒரு கோஷ்டியைச் சந்திக்க உத்தே சித்துள்ளேன். அப்போது நடக்கும் விவாதத்தில் கலந்துகொள் ளுமாறு நான் அதிதீவிர சனாதனியையும் அழைக்கிறேன். அது முற்றிலும் சிநேக பாவமான விவாதமாகவே இருக்கும். அவர் களுக்கும் சீர்திருத்தக்காரர்களுக்குமிடையே பல விஷயங்களில் ஒற்றுமை இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை.

—'ஹரிஜன்' – 23—2—1934

# 12

# மூர்க்கத்தனமான நிர்ப்பந்தம் கூடாது

[பிப்ரவரி 16-ந் தேதி கும்பகோணத்தில் நகர முனிசிபாலிடி அளித்த வர வேற்பு உபசாரத்திற்குப் பதிலாகக் காந்திஜி கூறியதாவது:]

என்னை இங்கே அழைத்து, எனக்கு இந்த உபசாரப் பத்தி ரம் வாசித்தளித்துக் கௌரவித்ததற்காக நான் மிகவும் பெருமை யடைகிறேன். நீங்கள் உங்கள் கருத்தைப் பட்டவர்த்தனமாகவும் தைரியத்துடனும் கூறியிருப்பதைக் குறித்தும் நான் பெருமை யடைகிறேன். நீங்கள் அதில் குறிப்பிட்டுள்ள ஒரே ஒரு விஷயம், எனது புனித கடமையை நான் தொடர்ந்து செய்து வர வேண்டும் என்பதற்குப் போதுமானது. தீவிரமான பொது ஜன அபிப்பிராயத்தை உருவாக்குவதில் நான் என் கவனம் முழு வதையும் செலுத்த வேண்டுமென்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள்.

இப்போது நான் முற்றிலும் அதைத்தான் செய்துகொண்டிருக் கிறேன். ஹரிஜனங்களுக்கு நீதி கிடைப்பதற்கு ஆதரவாகப் பொது மக்களின் அபிப்பிராயத்தைப் பண்படுத்திக் கொண் டிருக்கிறேன்.

ஆலயப் பிரவேசம் சம்பந்தமாக எழுந்துள்ள வேற்றுமையை நான் அறிவேன். இந்த ஒரு விஷயத்தில்தான் எனக்கும் சனுத னிகளுக்கும் வேற்றுமை ஏற்பட்டுள்ளது. எனக்கோ அல்லது ஹரிஜன சேவக சங்கத்தின் தலைமைக் குழுவிற்கோ நிர்ப்பந்தத் தைத் தடுப்பதற்குச் சக்தி இருக்கும் வரையில், ஆலயப் பிரவே சத்தை நிர்ப்பந்தப்படுத்தும் காரியம் எதையும் செய்யமாட்டார் கள். ஆலயப் பிரவேசம், முற்றிலும் சாதி ஹிந்துக்கள் தீர்க்க வேண்டிய ஒரு பிரச்னையாகும்.

ஹரிஜனங்கள் கோவிலுக்குள் பிரவேசிக்கக்கூடாது என்று சாதி ஹிந்துக்கள் ஏகோபித்த முறையில் கூறுவார்களாயின், அது துரதிர்ஷ்டமாகும் என்றும், காலப்போக்கிற்கு விரோதமா கும் என்றும் நான் கூறுவேன். எனினும், அந்த அபிப்பிராயம் நிலைத்திருக்கும் வரையில், ஒரு ஹரிஜனும் எந்தக் கோவிலுக் குள்ளும் பிரவேசிக்க மாட்டார்.

அந்தப் பாதையில் பொதுஜன அபிப்பிராயத்தைப் பண் படுத்தி உருவாக்குவதொன்றே எனது கடமையாகும். எனினும், அவ்விஷயத்தைப் பற்றி ஒரு வார்த்தைகூட மூச்சுவிடக்கூடாது என்று கூறுவதை நான் ஆட்சேபிக்கிறேன். அவ்விதமிருக்க என் னல் முடியாது. ஹரிஜனங்கள் கோவிலுக்குள் செல்லுவதைத் தடுத்துவரும் வரையில், சாதி ஹிந்துக்கள் தங்கள் மூலாதார மான கடமையைச் செய்தவர்களாகமாட்டார்கள் என்று, எனது மதத்தில் நான் பற்றுதல் உடையவன் என்ற முறையில் கூற விரும்புகிறேன். பாரபட்சமற்ற மனத்துடன் ஹிந்து சாஸ்திரங் களை ஆராய்ச்சி செய்த ஒருவர், அவ்விஷயத்தில் வேறுவிதமாக நினைப்பது முடியாத காரியம் என்பதும் எனது உறுதியான கருத்து. ஒரு குறிப்பிட்ட கோவிலுக்குள் ஹரிஜனங்கள் பிர வேசிப்பதை மிகப் பெரும்பான்மையோர் ஆதரிக்கும்போது, அந்தக் கோவிலை ஹரிஜனங்களுக்குத் திறந்துவிட வேண்டும். நான் ஹரிஜனங்களுக்கு ஆலயங்களைத் திறந்துவிட்ட இடங்களி லெல்லாம், ஆயிரக்கணக்கான சாதி ஹிந்துக்களின் முன்னிலை யில் அவர்களுடைய சம்மதத்தின் மீதே அவ்வாறு செய்தேன். கோவில்களைப் பற்றி மிகுந்த அக்கறை கொண்டுள்ள ஆயிரக் கணக்கான சாதி ஹிந்துக்கள், 'நாங்கள் ஹரிஜனங்களுக்கு ஆல யங்களைத் திறந்துவிட விரும்புகிறோம்' என்று கூறினர்கள்.

ஆனல், 'கூடாது', ஹரிஜனங்களுக்குக் கோவில்களைத் திறந்து விடக்கூடாது என்று கூறும் ஒரு சாதி ஹிந்து இருக்கும் வரையில் கோவில்களை அவர்களுக்குத் திறந்துவிடக்கூடாது என்று நீங்கள் கூறினல், அது மூர்க்கத்தனமான ஒரு நிர்ப்பந்தம்

என்றே நான் கூறுவேன். "9999 பேர்களின் கொள்கைக்கு எதிராக என் கொள்கைகளே ஆதிக்கம் பெற வேண்டும். பெரும்பான்மையோர் சந்தேகமின்றிக் கோவில்களில் நம்பிக்கையுடையவர்களாக இருக்க வேண்டும்; ஏளனம் செய்து நிந்திப்பவர்களாக இருக்கக் கூடாது'' என்று ஒருவர் கூறினுல், அதை நான் நிர்ப்பந்தப்படுத்துதல் என்றே சொல்லுவேன்.

—'ஹரிஜன்' - 23—2—1934

# 13

# ஆலயப் பிரவேசமும் பொருளாதார முன்னேற்றமும்

சில சமயங்களில், பத்திரிகைகளிலே ஆலயப் பிரவேச சம்பந்தமான ஆட்சேபணைகளைப் பார்க்கிறோம். அவை இரட்டைக் குழாய்த் துப்பாக்கி போல் இரு புறங்களிலிருந்தும், அதாவது ஹரிஜனங்களிடமிருந்தும் சனுதனிகளிடமிருந்தும் வருகின்றன.

'நாங்கள் ஆலயப் பிரவேசத்தை விரும்பவில்லை; எனவே, கோவில்களை நிர்மாணிக்காதீர்கள்; ஆனுல், உங்களுக்குக் கிடைக்கும் தொகையையெல்லாம் எங்கள் பொருளாதார உத்தாரணத்திற்கு உபயோகப்படுத்துங்கள்' என்று ஹரிஜனங்களில் சிலர் கூறுகின்றனர்.

'ஆலயப் பிரவேசப் பிரச்னையை அடியோடு விட்டுவிடுங்கள். ஹரிஜனங்களைக் கோவில்களுக்குள் செல்லும்படி வற்புறுத்துவதால், நீங்கள் எங்களுடைய உணர்ச்சிகளைப் புண்படுத்துகிறீர்கள்' என்று சில சனுதனிகள் கூறுகின்றனர்.

இருவர் கூறுவதும் அடிப்படையில் தவறுதான். ஹரிஜன நிதிக்கு வசூலாகும் தொகையில் ஒரு பைசாவைக் கூட, கோவில்களை நிர்மாணிப்பதில் செலவழிக்கவில்லை. இனியும் செலவழிக்கப் போவதில்லை. மற்ற ஹிந்துக்களுக்கு எந்த நிபந்தனைகளின்மீது கோவில்களைத் திறந்து விட்டிருக்கிறுர்களோ, அதே நிபந்தனைகளின் மீது ஹரிஜனங்களுக்கும் கோவில்களைத் திறந்துவிட வேண்டுமென்று மாத்திரமே முயற்சி செய்யப்பட்டு வருகிறது. கோவில்களுக்குச் செல்லுவதோ அல்லது செல்லாமல் இருப்பதோ ஹரிஜனங்களின் இஷ்டத்தைப் பொறுத்த விஷயமாகும். ஹரிஜனங்களுக்கு எதிராக உள்ள தடையை சவர்ண ஹிந்துக்கள் அகற்றித் தீர வேண்டும்.

கோவில்களை, ஆன்மிக சம்பந்தமான செல்வம் நிறைந்த பொக்கிஷக் களஞ்சியங்களாகக் கருதும் கோடிக்கணக்கானவர்களுக்கு, அக் கோவில்கள் அழிவற்ற நிரந்தரமான உண்மைகளாகும். அவற்றை அவர்கள் தங்களுடைய உயிர் போல் அருமையாகக் கருதுகிறார்கள். ஹரிஜனங்களுக்காக அவர்கள் உண்மையாகவே வருந்துவார்களாயின், அவர்கள் அந்தப் பொக்கிஷக் களஞ்சியங்களில் ஹரிஜனங்களும் பங்குகொள்ளும்படி செய்ய வேண்டும். கோவில்கள் திறக்கப்படுவதை, ஹரிஜனங்கள் எவ்வளவு மகத்தான விஷயமாகக் கருதுகிறார்கள் என்பதை நான் அறிவேன்.

சென்ற வாரம்தான், தார்வாருக்கும் பெல்காமிற்கும் இடையே சவர்ண ஹிந்துக்களும் ஹரிஜனங்களும் அடங்கிய பெரும் கூட்டத்தின் முன்னிலையில், நான் மூன்று கோவில்களைத் திறந்துவைத்தேன். அப்போது அங்கே ஆட்சேபவாதிகளும் ஆஜராகி, விக்கிரகத்துக்கு முன்னிலையில் ஹரிஜனங்கள் தலை வணங்கிப் பிரசாதம் வாங்கிக்கொண்ட போது அவர்கள் முகத்தில் தாண்டவமாடிய ஆனந்தத்தைக் கவனித்திருப்பார்களாயின், ஆட்சேபவாதிகளின் கூற்று இருந்தவிடம் தெரியாமல் மறைந்து போயிருக்கும்; ஹரிஜன் ஆட்சேபவாதிகளும், தங்களைத் தவிர பொதுவாக ஹரிஜனங்கள் யாவரும் ஆலயப் பிரவேசத்தை விரும்புகிறார்கள் என்பதையும் உணர்ந்திருப்பார்கள்; கோவில்கள் எங்கே திறக்கப்பட்டாலும், சம்பந்தப்பட்ட கோவிலுக்குச் செல்லுவோரின் பூரண சம்மதத்துடனும், அத்தகையோர் அடங்கிய ஏராளமான கூட்டத்தின் முன்னிலையிலும்தான் கோவில்கள் திறக்கப்பட்டு வருகின்றன என்பதைச் சனாதன ஆட்சேபவாதிகளும் உணர்ந்து கொண்டிருப்பார்கள்.

யாருக்கும் தெரியாமல், எங்கேயோ ஒரு மூலையில் இரகசியமாகக் கோவிலைத் திறந்துவிடுவதால், ஹிந்து மதத்திற்கு எவ்வித நன்மையும் ஏற்படாது. ஆன்மிகமான பலனோ, அல்லது வேறெவ்விதமான பலனோ ஏற்பட வேண்டுமாயின், போதிய விளம்பரம் செய்த பிறகே கோவில்கள் திறக்கப்பட வேண்டும்; மற்றும் பயபக்தியுடனும் அந்தந்தக் கோவிலுக்குச் செல்லுவோரின் விருப்பத்துடனும் சம்மதத்துடனுமே அவை திறக்கப்பட வேண்டும். கோவில்களில் நம்பிக்கையோ அல்லது அக்கறையோ இராமல், தங்களுக்குத் தாங்களே சீர்திருத்தக்காரர்கள் என்று பட்டம் சூட்டிக் கொண்டுள்ளவர்களின் விருப்பத்திற்கிணங்க கோவில்களைத் திறப்பது கூடாது. கோவில்களுக்குச் செல்லுவதை மூடபக்தி யென்றுகூட அத்தகையோர் கருதலாம்.

ஆலயப் பிரவேசக் கிளர்ச்சிக்குப் பணச் செலவு தேவையில்லை. ஒருசில தொண்டர்களைத் தவிர வேறு எவரும் அந்தக் கிளர்ச்சியில் ஈடுபட வேண்டிய அவசியமுமில்லை. ஆனால், அத் தொண்டர்கள் ஆலயங்களில் நம்பிக்கையுடையவர்களாக இருக்க

வேண்டும். அவரது வார்த்தைக்குப் பாமர சவர்ண ஹிந்துக்களி டையே மதிப்பு இருக்க வேண்டும். எனவே, அது சாந்தமா கவும் மிக ஜாக்கிரதையாகவும் கையாள வேண்டிய பிரச்னையாக இருந்து வருகிறது; அது அப்படித்தான் இருக்க முடியும். வற் புறுத்துவதாயின், ஆலயப் பிரவேசத்தை ஆதரிக்கும் நம்பிக்கை யுள்ள சீர்திருத்தவாதியின் உரிமையையும் கடமையையும் மாத் திரமே வற்புறுத்த வேண்டும். கோவில்கள் சுயேச்சையாக ஹரிஜனங்களுக்குத் திறக்கப்பட்டாலன்றி, தீண்டாமையை வேருடன் களைந்துவிட்டதாகக் கூற முடியாது. பொருளாதார முன்னேற்றம் சம்பந்தப்பட்டவரையில், அது வேறு, ஆலயப் பிரவேசம் வேறு என்று நினைக்கக்கூடாது. ஆலயப் பிரவேசம் அத்தகைய முன்னேற்றத்திற்கு உதவியாகவே இருக்க முடியும். ஏனெனில், ஹரிஜனங்களைச் சுயேச்சையாகக் கோவிலுக்குச் செல்ல அனுமதித்துவிட்டால், மற்றவர்களைப் போல் ஹரிஜனங் களுக்கும் பொருளாதார முன்னேற்றத்திற்குரிய வழிகள் தாமா கவே ஏற்பட்டுவிடும்.

கல்வி முன்னேற்றம் என்பதற்குப் பொருள் பொருளாதார முன்னேற்றம்தான் என்பது ஒப்புக்கொள்ளப்படுமாயின், வசூ லாகும் தொகைகள் சம்பந்தப்பட்ட வரையில், அவை எல்லாம் ஹரிஜனங்களின் பொருளாதார முன்னேற்றத்திற்காக மாத்திரமே உபயோகிக்கப்படும். ஏனெனில், கல்வி பெற்ற ஹரிஜனங்கள் வாழ்க்கைப் பந்தயத்தில் ஓட அதிகத் தகுதியுடையவர்களாக இருப்பார்கள் அல்லவா? சவர்ண ஹிந்துக்களிடையே கல்வி யானது, வாழ்க்கைப் பந்தயத்தில் அவர்களைப் பெரிதும் தகுதி குன்றியவர்களாகச் செய்திருக்கிறது என்பதை நான் அறிவேன். ஆனால், அதற்குக் காரணம் என்னவெனில், அவர்களுடைய கல்வி உடலுழைப்பை வெறுக்கும்படி செய்திருப்பதுதான். குறைந்தபட்சம் இன்னும் சிறிது காலத்திற்காவது, பெரும்பா லான ஹரிஜனங்கள் விஷயத்திலும் அத்தகைய விபரீதம் ஏற்படு மென்ற அபாயத்துக்கு அதிக இடமில்லை. தற்போதையக் கல்வி முறை, முற்றிலும் இராவிட்டாலும் பெரும்பாலும், கைத்தொழில் கல்வியை அசட்டை செய்துள்ளது. எனவே, ஆலயப் பிரவேச இயக்கத்தை நடத்துவோர், ஹரிஜனங்களின் கல்வியிலிருந்து தற்போதைய முறையின் தீமைகளைக் களைந்துவிடுவார்களாயின், மேலே குறிப்பிடப்பட்ட ஆபத்தை முற்றிலும் தவிர்க்க முடியும்.

—'ஹரிஜன்' – 16—2—1934

# 14

# பலாத்காரம் சனாதன தருமம் அல்ல

[ஜாஸிடி ஸ்டேஷனில் நிகழ்ந்த சம்பவத்திற்குப் பின், தேவ காரில் நடந்த கூட்டத்தில் காந்திஜி பேசினர். அச் சம்பவத்தைப் பற்றி அப்போது காந்திஜி குறிப்பிட்டதாவது :]

இந்தப் புண்ணிய ஸ்தலத்திற்கு மறுபடியும் நான் வர முடிந்ததைக் குறித்து மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். முன்பு எனது மூதாதையர்களும் இங்கே விஜயம் செய்தனர். ஆனால், அவர்கள் இங்கே விஜயம் செய்த காரணம் வேருகும். *1915*-இல் நான் தென்னாப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்குத் திரும்பி வந்தபோது, இங்குள்ள ஆசிரமத்தைத் திறந்துவைக்க என்னை அழைத்தார்கள் என்பது உங்களுக்குத் தெரியாதிருக்கலாம்.

நான் சென்ற தடவை இங்கே விஜயம் செய்தபோது அநேகமாக எல்லாப் பண்டாக்களும் (குருக்கள்மார்) தொண்டர்களாக இருந்தனர். அவர்கள் என் மீதும் என் கோஷ்டியினர் மீதும் அன்பைச் சொரிந்து தொண்டு புரிந்தார்கள். தீண்டாமை சம்பந்தமாக இன்று என் கொள்கைகள் எவையோ, அவைதான் அன்றும் என் கொள்கைகளாக இருந்தன என்பதை அவர்கள் நன்கு அறிவர். அந் நாட்களில் நான் தீண்டாமையைப் பற்றிப் பேசாத கூட்டம் ஒன்றுகூட இருந்ததில்லை என்பதையும் அவர்கள் அறிவர். ஆனால், துரதிர்ஷ்டவசமாக இந்தத் தடவை அவர்களிடையே வேற்றுமை ஏற்பட்டு, அவர்கள் இரு பிரிவுகளாகப் பிரிந்துவிட்டார்கள். அதில் ஒரு பிரிவினர் எனக்கும் என் கோஷ்டிக்கும் தொண்டு செய்தார்கள்; மற்றொரு கோஷ்டியினர், அவர்கள் மிகச் சிலரேயாயினும், என்னை எதிர்த்தார்கள். எல்லோருடைய அன்பையும் எக்காலத்திலும் பெறுவது மனிதனால் இயலாத காரியம் என்பதை நான் அறிவேன். எனவே, எனது பழைய நண்பர்களான பண்டாக்களில் சிலர், எனக்கு எதிர்க் கட்சியில் இருந்ததைக் குறித்து நான் ஆச்சரியமோ அல்லது துக்கமோ அடையவில்லை.

ஆனால், அவர்கள் எதிர்த்த விதம் எனக்கு ஆழ்ந்த வருத்தத்தை உண்டாக்கியிருக்கிறது. என் மீது மக்களுக்கு உள்ள அன்பை மாற்றும் நோக்கத்துடன், என்னைப் பற்றிப் பொய்களும், பாதி உண்மைகளும் அடங்கிய துண்டுப் பிரசுரங்களை வழங்கியதற்கு அவர்களே பொறுப்பாளிகளென நான் கருதுகிறேன். அவர்கள் கண்ணியமான பாஷையைக் காற்றுவாக்கில் விட்டுவிட்டார்கள். அந்தத் துண்டுப் பிரசுரங்களில் ஒன்று கீதார் மகாராஜா சாகேபின் கட்டளைக்கிணங்க விநியோகிக்கப்பட்டதென்று கூறப்படுகிறது. அவ்விஷயமாக எனக்கு உண்மையான ருஜு கிடைத்தாலன்றி, நான் அதை நம்ப முடியாது.

நான் தென்னிந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்த போது, சில இடங்களில் கருப்புக்கொடி ஆர்பாட்டங்கள் கண்ணிய மாக நடந்தன. கருப்புக்கொடி வைத்துக் கொண்டிருப்பவர்கள் தீண்டாமை இயக்கத்தை எதிர்க்கிறார்கள் என்பதைக் காட்டும் நோக்கத்துடன் மாத்திரமே அந்த ஆர்ப்பாட்டம் நடந்தது. அவர்களில் பலர் சிறு பையன்களே ஆவர். மற்றவர்களைப் போல் அவர்களுக்கும் நான் என் வணக்கத்தைத் தெரிவித்த போது, அவர்களும் பதிலுக்கு எனக்கு வணக்கம் தெரிவிக் கவும், சந்தோஷ ஆரவாரத்தில் கலந்துகொள்ளவும் கூடத் தயங்கவில்லை. மகத்துவம் பொருந்திய அவர்களுடைய மூதாதை யர்களான துரோணரையும் பீஷ்மரையும் போல் அவர்களும், தங்கள் வயிற்றுக்காகவே அவ்விதம் செய்வதாகக் கூறியிருப் பார்கள் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை. ஆனால், துரதிர்ஷ்டவசமாக இங்கேயோ கண்ணியமான பாஷையைக் கைவிட்டது மாத்திரமல்ல; இவர்கள் பலாத்காரத்திலும் இறங்கி விட்டார்கள்.

விடியற்காலம் இரண்டரை மணிக்கு நான் ஜாஸிடி ஸ்டேஷ னில் இறங்கிய போது, அவர்களுடைய கண்டனக் கூக்குரல்கள் வானளாவின. அவர்கள் பலாத்காரத்திலும் ஈடுபட்டார்கள். சாத்தியமாயின், அவர்கள் மோட்டாரின் மேற்புறத்தை நிச்சய மாக நொறுக்கியிருப்பார்கள். மோட்டாரின் மீது பலமான அடி கள் விழுந்தன. பின்புறமுள்ள கண்ணாடி தூளாகியது. நான் கடுமையான காயமடையாமல் தப்பியது தெய்வச் செயலே. என் உடலில் காயமேற்படும்படிச் செய்ய அவர்கள் விரும்ப வில்லை; மோட்டாரின் மேற்புறத்தில் தடிகளால் அடித்தும், பின் புறக் கண்ணாடியை உடைத்தும், அவர்கள் என்மீதுள்ள கோபத் தைக் காட்ட விரும்பினார்கள் என்றே நம்புகிறேன்.

அவர்களின் நோக்கம் எதுவாயினும், அவர்களுடைய நட வடிக்கை சந்தேகமின்றிப் பலாத்காரமானது. அது, அவர்களே வருந்தக்கூடிய விதத்தில் முடிந்திருக்கலாம். இன்று காலை இவர் களுடைய நடவடிக்கையையும், கள்ளிக்கோட்டை தம்பிரானின் நேர்மையான நடவடிக்கையையும் ஒப்பிட்டுக் காட்ட விரும்பு கிறேன். நான் குருவாயூருக்குச் சென்றிருந்தேன். அந்தப் பிர பல கோவிலைச் சுற்றிப் போராட்டம் நடந்து கொண்டிருந்த போது, தம்பிரான் நிச்சயமாக ஆத்திரப்படுவதற்குச் சிறிது காரணம் இருந்தது. அப்படியிருந்தும் அவர், எனக்கு எதிராக எவ்வித ஆர்ப்பாட்டமும் செய்யக் கூடாதென்றும், கருப்புக் கொடி கூடக் காட்டக் கூடாதென்றும் தடுத்துவிட்டார். அவரது மாளிகையில் என்னை விசேஷ மரியாதையுடன் வரவேற்றுப் பேசினார். ஒவ்வொருவர் பக்கத்திலும் கொள்கைக்காகப் போராட்டம் நடந்துவருகிற தென்பதை அவர் மனம் விட்டுக் கூறினார். எனக்கு எதிராக ஆர்ப்பாட்டம் நடத்துவதற்கு, தம்பி ரான் தகுந்த காரணம் கூறியிருக்கலாம். ஆனால், தேவகார்

பண்டாக்களும், இங்குள்ள வர்ணுச்சிரம சுயராஜ்ய சங்கத்தி னரும் தங்கள் நடவடிக்கைக்குச் சமாதானமாக ஒரு சாக்கும் சொல்லுவதற்கில்லே.

இந்த எதிர்ப்பு எதற்காக? சனுதனிகள் என்று தங்களேத் தாங்களே கூறிக்கொள்ளுவோருக்கு, தாங்கள் சனுதன தருமத் தின்படி நடந்துகொள்ளுவதாக எண்ணும் இந்த இறுமாப்பு ஏன்? அவர்களேப் போலவேதான் நானும் சனுதன தருமத்தைப் பின் பற்றுவதாகக் கூறுகிறேன். சனுதன தருமத்தைப் பற்றிப் பிரத்தியேகமாக வியாக்கியானம் செய்ய எனக்கு எவ்வளவு அதிக அல்லது குறைந்த உரிமை உண்டோ, அவ்வளவு உரிமை தான் அவர்களுக்கும் உண்டு. அவர்கள் எந்தச் சாஸ்திரங்களேப் பிரமாணமாகக் கொண்டிருக்கிருர்களோ, அதே சாஸ்திரங்களேத் தான் நானும் பிரமாணமாகக் கொண்டிருக்கிறேன். எனினும், சந்தேகமின்றி அவர்களுக்கும் எனக்கும் ஒரு வேற்றுமை இருக் கிறது. அந்த வேற்றுமை முற்றிலும் வியாக்கியானம் பற்றிய தாகும். அத்தகைய வேற்றுமைகள் எப்போதும் இருந்தே தீரும். யார் மீதும் என் கருத்துக்களேத் திணிக்க நான் விரும்ப வில்லேயென்ற என் உறுதி மொழியைக் கொண்டு அவர்கள் திருப்தியடைய வேண்டும். நிர்ப்பந்த முறைகளில் எனக்குச் சிறிதும் நம்பிக்கை இல்லே. மக்களுடைய பகுத்தறிவுக்கும் இதயத்திற்கும் வேண்டுகோள் விடுப்பதன் மூலம், சத்தியத்தோ டியைந்த என் கருத்துக்கு மக்கள் மனத்தை மாற்றவே நான் விரும்புகிறேன்.

உதாரணமாக, ஆலயப் பிரவேசப் பிரச்னேயை எடுத்துக் கொள்ளுங்கள். என்னுடைய பிரயாணத்தின் போது, பல கோவில்களே ஹரிஜனங்களுக்குத் திறந்து வைக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. அப்போது ஆயிரக்கணக்கானவர்கள் கரகோஷம் செய்து அதை ஆமோதித்தார்கள். ஒருவர் கூட அதை எதிர்க்கவில்லே. ஒரே ஓரிடத்தில் மாத்திரம் குறிப்பிடத் தக்க சிறுபான்மையோர் ஆலயத்தைத் திறந்துவிடுவதை எதிர்த் தனர். எனவே, அந்தச் சிறுபான்மையோரின் மனம் மாறும் வரையில் கோவிலேத் திறக்க நான் மறுத்துவிட்டேன். அத் தகைய சம்மதமின்றியோ அல்லது ஏதாவதொருவிதமான நிர்ப் பந்தம் காரணமாகவோ ஒரே ஒரு கோவில் திறக்கப்பட்டதாக நான் கண்டுபிடித்தால் கூட, அதை மறுபடியும் ஹரிஜனங்களுக்கு மூடிவிடும்படி செய்ய நான் என்னுல் இயன்ற சகல முயற்சியும் செய்வேன்.

பின்னர், ஆலயப் பிரவேச மசோதாவை எடுத்துக்கொள் ளுங்கள். *1932*-இல் நான் உண்ணுவிரத மிருந்தபோது, பம் பாயில் ஹரிஜனங்களுக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதியை நிறை வேற்றுவதற்குற்ற சகல நியாயமான முறைகளேயும் கைக்கொள்ள வேண்டியது ஒவ்வொரு சாதி ஹிந்துவின் இன்றியமையாத கடமையாகும். அவசியமாயின், சட்டத்தின் உதவியையும்

நாடுவதென்று அந்த வாக்குறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது. பெரும்பான்மையோரின் விருப்பம் நிறைவேற வேண்டுமாயின், ஆலயப் பிரவேச மசோதாவோ அல்லது அது போன்ற வேறு மசோதாவோ முற்றிலும் அத்தியாவசியம். இன்று ஆலயப் பிரவேசத்தை ஒரே ஒருவர் எதிர்த்தால்கூட, சட்டப்படி ஹரிஜனங்களுக்குக் கோவிலைத் திறந்துவிட முடியாது. ஆலயப் பிரவேசத்தைக் கணிசமான பெரும்பான்மையோர் ஆதரிக்காவிடில், ஆலயப் பிரவேசச் சட்டம் நிறைவேறுவதற்குக்கூட நான் இணங்கமாட்டேன்.

எனவே, சனாதனிகளின் எதிர்ப்புக்கு அர்த்தம் என்னவெனில், அத்தகைய சட்டத்துக்கு ஆதரவாகப் பொது மக்களின் அபிப்பிராயத்தைக்கூட நான் உருவாக்கக் கூடாது என்பதேயாகும். நான் பொதுக்கூட்டங்களில் வாக்குகள்கூட எடுப்பதில்லை. அத்தகைய சட்டத்துக்கு ஆதரவாகப் பெரும்பான்மையோர் வாக்குக் கொடுப்பார்கள் என்பதை நான் அறிவேனாயினும், நான் வாக்குகள் எடுப்பதில்லை. ஏனென்றால், நிபுணர்கள் தீர்மானிக்க வேண்டிய முக்கிய விஷயங்களை யொட்டி, பொது மக்களிடையே வாக்கு எடுப்பது தவறு என்பதே எனது கருத்தாகும். ஆலயப் பிரவேச மசோதாவைப் போன்ற ஒரு சட்டம் அவசியமானதா அல்லது விரும்பத் தகுந்ததா என்பது நிபுணர்கள், அதாவது இவ்விஷயத்தில் சட்ட நிபுணர்களான வக்கீல்கள் தீர்மானிக்க வேண்டியதாகும். கோவில்களைத் திறந்துவிடும் விஷயத்தில் சாதி ஹிந்துக்களின் வாக்குகள் மாத்திரமே கணக்கில் எடுத்துக்கொள்ளப்பட வேண்டும் என்று நான் அடிக்கடி கூறி வந்திருக்கிறேன். அவர்கள் கோவில்களை ஹரிஜனங்களுக்குத் திறந்துவிட விரும்பவில்லையாயின், அது தீண்டாமைக் களங்கத்திலிருந்து அவர்கள் தங்களைப் பரிசுத்தம் செய்து கொள்ளவில்லை என்பதையே காட்டுவதாகும். சாதி ஹிந்துக்களின் எதிர்ப்புக்கிடையே எல்லாக் கோவில்களையும் ஹரிஜனங்களுக்குத் திறந்துவிட்டால்கூட, எனக்கு அதனால் யாதொரு பயனுமில்லை. நிர்ப்பந்தத்தினால் பரிசுத்தம் ஏற்படும்படி செய்துவிட முடியாது.

எனவே, எதிர்ப்புக்குக் காரணம் என்ன என்பதைக் கண்டுபிடிக்க நான் முயற்சித்தேன்; அம்முயற்சியில் நான் வெற்றி பெறவில்லை. தீண்டாமை விஷயமாகப் பொது மக்களின் அபிப்பிராயம் துரிதமாக மாறி வருகிறது, தீண்டாமை இறுதிக் கட்டத்தில் இருந்து வருகிறது. எனவே, ஹிந்துக்களின் அபிப்பிராயத்தை மாற்ற நான் மிகுந்த ஜாக்கிரதையுடன் எவ்வளவு நேர்மையான முறைகளைக் கைக்கொண்டு வந்தாலும்கூட, எவ்விதத்திலாயினும் எனது பிரயாணத்தை ஸ்தம்பித்து நிற்கும்படி செய்ய சிலர் முயற்சிப்பதே எதிர்ப்புக்குக் காரணமாக இருக்கலாம்.

எனவே, எவ்விதம் யுதிஷ்டிரர்* பாதி உண்மையைக் கூறி தமது கொடி கீழே இறங்கும்படி செய்தாரோ, அது போலவே சனு தனிகளும் இன்று காலை தங்களுடைய நடவடிக்கையால் இந்தப்

* இச்சம்பவம் மகாபாரதத்தில் உள்ள ஓர் அற்புதமான கட்டமாகும். துரோணுச் சாரியார் அஸ்திர வித்தையில் ஈடு இணையற்றவராதலால், பாண்டவர்களால் அவரை எதிர்த்து நிற்க முடியவில்லை. துரோணரின் பாணங்களுக்குப் பாண்டவர்களிடையே எண்ணிக்கையற்றவர் பலியாயினர். அப்போது ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனைப் பார்த்து இவ்விதம் கூறினர். "அர்ஜுனு, தரும யுத்த விதிகளின்படி போரிட்டால் இந்தத் துரோணரைத் தோற்கடிக்க முடியாது. இவர் தோல்வியுறும்படி செய்ய வேண்டுமாயின், தருமத்திலிருந்து வழுவித்தான் தீரவேண்டும். இவரை எதிர்த்து வெற்றி பெற வேறு வழி எதுவுமில்லை. அவர் யுத்தம் செய்யாமல் இருக்கும்படி செய்வதற்கு ஒரு வழிதான் உண்டு. அவரது புதல்வனுன அசுவத்தாமா இறந்துவிட்டான் என்று அவர் கேள்விப்பட்டால், அவருக்கு பின்னர் இந்த உலக வாழ்க்கையே வெறுத்து விடும். அவர் ஆயுதங்களையும் கீழே எறிந்துவிடுவார். எனவே, அசுவத்தாமா மரண மடைந்ததாக யாராவது பொய் சொல்லித்தீர வேண்டும்."

இதைக் கேட்டதும் அர்ஜுனன் நடுநடுங்கிவிட்டான். உலகங்கள் யாவும் ஒன்று சேர்ந்து எதிர்த்தால்கூட வெற்றி பெறும் மகாவல்லமை பொருந்திய அர்ஜுனன்' பேராபத்தைத் தடுப்பதற்காகக்கூட ஒரு பொய் சொல்ல விரும்பவில்லை; அவன் அருகில் இருந்த மற்றவர்களும் பொய் சொல்ல இசையவில்லை.

தருமபுத்திரர் சிறிது நேரம் ஆழ்ந்த ஆலோசனை செய்துவிட்டு, "பொய் சொல்லும் மகாபாதகத்தின் சுமையை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன்" என்று முன் வந்தார். பாற்கடலைக் கடைந்தபோது எழுந்த காலகூட விஷத்தைச் சாப்பிட ருத்ரமூர்த்தி முன் வந்ததுபோல, தருமமே உருவெடுத்த யுதிஷ்டிரர் பதினுயிரக்கணக்கானவர்கள் துரோணரின் ஆயுதங்களுக்குப் பலியாகாமல் தடுப்பதற்காக அந்தப் பெரும் தியாகம் செய்ய, அதாவது ஒரு பொய் சொல்ல இசைந்தார்.

அப்போது பீமன் தனது கதையால், 'அசுவத்தாமா' என்ற பெயருள்ள ஒரு யானையை அடித்துக் கொன்றுவிட்டு, துரோணரின் எதிரில் வந்து நின்று, "அசுவத்தாமாவைக் கொன்றுவிட்டேன்" என்று கூறினுன். அவ்விதம் அரைப் பொய் கூறியதைக் குறித்து அவன் மனம் வெட்கிக் குன்றியது. அவன் கூறியதை உண்மை என்று நம்பாத துரோணர்; "யுதிஷ்டிரா, என் புதல்வன் கொல்லப்பட்டது உண்மையா ?" என்று தரும புத்திரரைக் கேட்டார்.

எங்கே யுதிஷ்டிரர் எல்லோரையும் கைவிட்டுவிடுவாரோ என்று கிருஷ்ண பரமாத்மா கலங்கினர். யுதிஷ்டிரர் பொய் சொல்லாவிடில், துரோணரின் பிரம்மாஸ்திரம் பாண்டவர்களின் பூண்டையே அழித்துவிடும் என்று அஞ்சினர்.

யுதிஷ்டிரரும் பொய் சொல்ல வேண்டுமே என்று நடுங்கினர். இறுதியில், ஏராளமானவர்களின் உயிரைப் பாதுகாக்க இந்தப் பாவம் செய்துதான் தீரவேண்டும் என்று மனத்தைத் திடப்படுத்திக்கொண்டார். "ஆம், அது உண்மைதான். அசுவத்தாமா கொல்லப்பட்டான்" என்ருர் நடுங்கிய குரலுடன். பிறகு மெதுவாக "அசுவத்தாமா என்ற யானை" என்று சேர்த்துக்கொண்டார். எனினும், பேரிகைகளின் முழக்கத்தில் யுதிஷ்டிரர் மெதுவாகக் கூறியது துரோணரின் காதுகளுக்குக் கேட்கவில்லை. உடனே துரோணர் ஆயுதங்களை எறிந்துவிட்டு, யோகத்தில் அமர்ந்தார். திருஷ்டத்யும்னன் தரும யுத்த முறைக்கு விரோதமாக அவரைக் கொன்ருன். தருமபுத்திரர் பொய் சொன்னதால், அதற்கு முன் பூமியைத் தொடாமல் பூமிக்கு மேலே சென்று கொண்டிருந்த அவரது ரதம் பூமியைத் தொட்டுவிட்டது. அதற்குப் பிறகு அவரது ரதம் பூமிக்கு மேலே எழுவதில்லை. இந்தச் சம்பவத்தையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்.

புனித ஸ்தலத்தில் தங்கள் கொடியை இறக்கிவிட்டார்கள் என்று கூற நான் தயங்கவில்லை. துர்ப்பாக்கியமான அரை உண்மையை யுதிஷ்டிரர் கூறியபோது, அவரது ரதத்தின் சக்கரங்கள் சில அடிகள் தூரம் பூமிக்குள் அழுந்திவிட்டன என்றும், அதற்காக அவர் மரணத்திற்குப் பிறகும் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டியிருந்தது என்றும் மகாபாரதத்தை எழுதிய மகாமுனிவர் கூறவில்லையா? தங்களுடைய நடவடிக்கைகளுக்காக இதய பூர்வமாக வருந்தும்படியும், இன்று காலை கையாண்ட பலாத்காரத்தை இனி ஒரு போதும் கையாளுவதில்லை என்று தீர்மானித்துக்கொள்ளும்படியும், நான் சனாதன நண்பர்களை மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

சீர்திருத்தவாதிகளுக்கு நான் கூறுவது இதுதான்: "உங்கள் பக்கத்தில் மிகப் பெரும்பான்மையோர் இருக்கின்றனர். உங்களுக்கு எதிர்ப்பை உருவாக்கி வருவோரை விரல் விட்டு எண்ணி விடலாம். அவர்களை நீங்கள் உங்களுடைய பொறுமையினாலும் சாந்தத்தினாலும் பரிசுத்தத் தன்மையினாலும் உங்கள் பக்கம் சேர்த்துக்கொள்ள முயற்சிக்க வேண்டும். தன்னைத்தான் பரிசுத்தம் செய்துகொள்ளுவதே இந்த இயக்கத்தின் கருத்தாகும். இதயம் பரிசுத்தமாக இருப்பவர்களுக்கே இதில் இடமிருக்க முடியும். ஆர்ப்பாட்டக்காரர்கள் விஷயத்தில் நாம் தலையிடக் கூடாது. அவர்கள் விரும்பினால் கறுப்புக் கொடிகளை ஏந்திச் செல்லுவதன் மூலம் தங்கள் கோபத்தை வெளியிட அவர்களுக்கு எவ்வித உரிமையும் உண்டு. அதிலிருந்து. இந்த இயக்கத்தை எத்தனை பேர் எதிர்க்கிறார்கள் என்பதும் எனக்குத் தெரியலாம். ஆனால், அவர்கள் நான் செல்லும் பாதையைத் தடுக்கும்போதோ அல்லது வேறுவிதமான பலாத்காரத்தைக் கைக்கொண்டு, தங்கள் கோபத்தைக் காட்டும்போதோதான் சங்கடம் ஏற்படுகிறது. அது எப்படியாயினும், முக்கியமாக நீங்கள் மிகப் பெரும்பான்மையோராக இருப்பதால் சனாதனி நண்பர்களிடம் நீங்கள் சாந்தமாகவும் பொறுமையாகவும் நடந்து கொண்டு, நல்வார்த்தைகளாலும் நம்பிக்கையினாலும் அவர்களை உங்கள் பக்கத்தில் சேர்த்துக்கொள்ளும்படி செய்ய முயற்சிக்க வேண்டும். நல்வார்த்தைகள் வெற்றி பெறாவிடினும், நீங்கள் உண்மையில் சத்தியத்தின் பிரதிநிதிகளாக இருப்பீர்களாயின், அவர்கள் சத்தியத்தை உணரும்படி காலம் செய்துவிடும். சீர்திருத்தவாதிகள் பதிலுக்குப் பதில் செய்யக்கூடாது. தன்னைத் தானே பரிசுத்தம் செய்துகொள்ளும் இந்த இயக்கத்தில், சீர்திருத்தவாதிகள் ஈடுபடும் எத்தகைய பலாத்காரமும் என்னைக் கடினமான தவத்தை மேற்கொள்ளும்படி செய்துவிடும் என்பதை நீங்கள் அறிய வேண்டும்."

இப்போது, இக்கூட்டத்தில் உள்ளவர்களுக்கு ஒரு வார்த்தை. இங்கே பல லட்சக்கணக்கான சண்டாளர்கள் இருப்பதாக அறிகிறேன். அவர்கள் தங்களை ஹிந்துக்கள் என்றே

சொல்லிக்கொள்ளுகிருர்கள்; ஹிந்துக்களின் பழக்க வழக்கங்களையே அனுஷ்டிக்கிருர்கள்; ஹிந்து தெய்வங்களையே வணங்குகிருர்கள். அப்படியிருந்தும் அவர்கள், எவ்விதத்திலும் தீண்டாதாராகவே கருதப்படுகிருர்கள். தங்களை ஹிந்துக்கள் என்று கூறிக்கொள்ளாதவர்களை நீங்கள் தீண்டாதாராகக் கருதவில்லை. தங்களை ஹிந்துக்கள் என்று கூறிக்கொள்ளுவோருக்குத் தண்டனையாக நீங்கள் அவர்களைத் தீண்டாதாராராகக் கருதுகிறீர்கள்! அவர்கள் செய்த தவறு என்ன? அவர்கள் போதை தரும் மதுபானங்களை விட்டுவிட்டார்கள். உங்களையும் என்னையும் போல அவர்கள் பசுக்களைப் பூஜிக்கிருர்கள். அவர்கள் சைவ உணவைக்கூட மேற்கொண்டிருக்கிருர்கள். உங்களையும் என்னையும் காட்டிலும் அவர்கள் அதிக உற்சாகத்துடனும், நிச்சயமாக அதிக நம்பிக்கையுடனும் ராம நாம ஜபம் செய்கிருர்கள். அவர்கள் ஓய்வு நேரங்களில் நூற்றும் நெய்தும் நாட்டின் செல்வம் பெருகும்படி செய்கிருர்கள்; எனவே, சமூகத்தின் பறையர்களாக அவர்களைக் கருதுவதற்குப் பதிலாக, அவர்களை அன்புடனும் அனுதாபத்துடனும நடத்த வேண்டும். அதற்கு அவர்கள் உரியவர்களேயாவர், அவர்களைத் தீண்டாதார் என்று கருதுவதற்குச் சாஸ்திரங்களில் ஆதாரம் எதுவுமில்லை. ஆதாரம் இருக்குமாயின் நாம் எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரமாக அழிந்து போகிருேமோ அவ்வளவுக்கவ்வளவு நமக்கும் நன்மை, உலகத்துக்கும் நன்மையே.

சண்டாளர்களுக்கு நான் கூறுவது இதுதான்; "ராம நாமத்தில் உங்களுக்கு நம்பிக்கை இருக்குமாயின், மற்ற ஹிந்துக்கள் உங்களை எவ்வளவு நிராகரித்தாலும் உங்களுக்குக் கிடைக்க வேண்டிய உரிமைகள் கிடைத்தே தீரும். அவர்களல்ல, அந்தத் தெய்விக நாமம் உங்களைப் பாதுகாத்து, உங்களுக்கு, யாராலும் அபகரிக்க முடியாத அமைதியையும் ஆனந்தத்தையும் கொடுக்கும்."

—'ஹரிஜன்' – 4—5—1934

# 15

# மக்கள் மனத்தை மாற்ற வேண்டும்

ஹரிஜன சேவக சங்கம் சமீபத்தில் ஆலயப் பிரவேச சம்பந்தமாக நிறைவேற்றிய முக்கியமான தீர்மானம் வாசகர்களுக்கு ஞாபகமிருக்கலாம். இப்போதெல்லாம் அவ்விஷயமாக அதிகமெதுவும் காதில் விழவில்லையென்பதற்காக, அதைச் சங்கம் மறந்துவிட்டதென்ருே, அல்லது கைவிட்டுவிட்டதென்ருே யாரும் முடிவு கட்டிவிட வேண்டியதில்லை. பண்டித மாளவியாஜியின் நாசிக் விஜயமும், அவரைச் சுற்றி ஏராளமான கூட்டங்கள் கூடியதும், தீண்டாமை ஒழிப்பை மக்கள் பொதுவாக வெறுக்க

வில்லை என்பதையே காட்டுகின்றன. வைதிகர்கள் தீண்டாமை யைக் கைவிடத் தயாராக இல்லை என்பதையும் அவை காட்டின. எனினும், எதிர்கால நிகழ்ச்சிகளுக்காகக் காத்திருப்பது சாத்திய மல்ல. ஆங்காங்குள்ள சங்கங்கள், தற்போதுள்ள கோவில்களைத் திறந்துவிடவும், ஹரிஜனங்களுக்கு மாத்திரமல்ல, எல்லோருக் குமே புதிய கோவில்களை நிர்மாணிக்கவும்கூட நிரந்தரமான முயற்சி செய்யவேண்டும்; ஆரோக்கியமான பிரதேசங்களில் அக்கோவில்கள் அமைக்கப்பட்டு, அவற்றைச் சார்ந்து ஒரு பள்ளிக்கூடம், ஒரு கூட்டம் கூடுமிடம், ஒரு தருமசாலை முதலி யனவும் ஏற்படுமாயின், அத்தகைய கோவில்கள் செல்வாக்குட னும், எல்லா ஹிந்துக்களுக்கும் பலன் அளிக்கக் கூடியவாறும் திகழுமென்பது நிச்சயம். அவ்வீடத்தில் ஒவ்வொரு நாளும் மாலை யிலோ அல்லது குறிப்பிட்ட காலங்களிலோ பொது மக்கள் பிரார்த்தனைகள் நடத்தலாம். எப்போதாவது மத சம்பந்தமான பிரசங்கங்களுக்கும் ஏற்பாடு செய்யலாம். அந்தக் கோவில்கள் ஒழுங்காக நடத்தப்படுமாயின், தற்போதுள்ள கோவில்களை ஹரி ஜனங்களுக்குத் திறந்து விடும் விஷயமாக எழுந்துள்ள தப் பெண்ணம் மறைவதற்குப் பெரிதும் வழியேற்படும், எங்கே ஹரி ஜனங்களுக்குக் கோவில்கள் திறக்கப்படுகின்றனவோ, அங்கே அவர்களுக்கு விரோதமாகப் பாரபட்சம் காட்டாமலிருக்கும்படி ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். மற்ற ஹிந்துக் களுக்கு என்ன நிபந்தனைகளின்மீது கோவில்கள் திறக்கப்பட் டிருக்கின்றனவோ, அதே நிபந்தனைகளின்மீது ஹரிஜனங்களுக் கும் திறக்கப்பட வேண்டும்,

நமது கோரிக்கை நிறைவேறுவதற்காக, வெவ்வேறு பிர தேசங்களில் வெவ்வேறு முறைகளைக் கைக்கொள்ள வேண்டி யிருக்கலாம் என்பதைக் கூற வேண்டிய அவசியமில்லை. எனினும், எல்லா இடங்களிலும் பூரண அகிம்சையை அனுஷ்டித்துத் தீர வேண்டும். இந்தியா முழுவதும் ஏககாலத்தில் ஒரே விதமான இயக்கத்தை நடத்த வேண்டுமென்ற உத்தேசம் இல்லை. ஒவ் வொரு பிரதேசத்திலும் உள்ள சந்தர்ப்பங்களுக்குத் தகுந்தவாறு இயக்கம் தீவிரத்திலும் முறையிலும் வேறுபடும். ஆலயப் பிர வேசத்தைச் சிறுபான்மையோர் தீவிரமாக எதிர்க்கும் ஓரிடத்தி லாவது ஆலயங்கள் திறக்கப்படக்கூடாது. ஹரிஜனங்களுக்கு எந்தக் கோவிலைத் திறப்பதாயினும், முதலில் மற்ற ஹிந்துக் களின் ஏகோபித்த சம்மதத்தைப் பெற வேண்டும். எனவே, செய்ய வேண்டியதென்னவெனில், ஆலயப் பிரவேசத்தை ஆதரிக் கும்படி ஆங்காங்கு பொது மக்களுடைய மனத்தை மாற்றுவதற் குத் தீவிரமாக முயற்சிப்பதேயாகும்.

ஹிந்து சமஸ்தானங்களின் நிலைமை வேறாகும். எங்கே மகா ராஜாவோ அல்லது அவரது அதிகாரிகளோ ஆலயப் பிரவேச சம்பந்தமாக அனுதாபம் காட்டுகிறார்களோ, அவ்விடங்களில் கோவில்களைத் திறந்துவிடுவதில் கஷ்டம் இராது. இந்தப்

பிரச்னை திருவாங்கூரில் மிகுந்த முக்கியத்துவம் பெற்றிருக்கிறது. மற்றப் பெரும்பாலான இடங்களிலும், ஆலயப் பிரவேச விஷயமாக ஹரிஜனங்கள் அக்கறை காட்டவில்லை. திருவாங்கூரில் நிலைமை வேறாகும். அந்தச் சமஸ்தானத்திலுள்ள ஹரிஜனங்களில் மிகப் பெரும்பான்மையோர், மற்றவிடங்களில் உள்ள ஹரிஜனங்களைக் காட்டிலும் மிகவும் முன்னேற்றம் அடைந்துள்ளனர். கல்வித் தேர்ச்சி தேவையான உத்தியோகங்களில் பல ஹரிஜனங்கள் இருக்கின்றனர். பலர் கலாசாலைகளிலும் தேர்ச்சி பெற்று வெளிவந்திருக்கிறார்கள். தங்கள் சுதந்திரத்திற்கு ஊறு விளைவிக்கும் எந்தக் கட்டுப்பாடும் அவர்களுக்குக் கொதிப்பை உண்டாக்குவது இயல்பேயாகும். அதிலும் எல்லாக் கட்டுப்பாடுகளையும்விட ஆலயப் பிரவேசக் கட்டுப்பாடு அவர்களுக்கு மிகுந்த கொதிப்பை உண்டாக்குகிறது. அங்குள்ள சவர்ண ஹிந்துக்களில் பெரும்பாலோர் தடையை அகற்றவேண்டும் என்பதை முற்றிலும் ஆதரிக்கின்றனர். விசால மனம் படைத்த மகாராஜாவையும், மகாராணியையும் திருவாங்கூர் பெற்றிருக்கிறது. இந்தச் சீர்திருத்தம் வெகு காலத்திற்கு முன்பே அமலுக்கு வந்திருக்க வேண்டும். எனவே, ஒரு சில வைதிகர்கள் அவர்களுடைய சொந்தத் துறையில் எவ்வளவு செல்வாக்கு உடையவர்களாயினும், அவர்களின் எதிர்ப்பு, மிகவும் அத்தியாவசியமான ஒரு சீர்திருத்தத்திற்குத் தடையாக இருக்கும்படி அனுமதிக்கக் கூடாது. ஆனால், சரியான பொதுஜன வாக்கு எடுப்பு அல்லது அது போன்ற ஏதாவது முறைகளைக் கைக்கொண்டு, மற்றவர்களுக்கு என்ன விதிகள் உண்டோ அதே விதிகளின்மீது ஹரிஜனங்களுக்குத் திருவாங்கூர் கோவில்களைத் திறந்துவிடுவதைப் பெரும்பாலான சவர்ண ஹிந்துக்களும் திட்டவட்டமாக ஆதரிக்கிறார்கள் என்பதை ஹரிஜன சேவகர்கள் சந்தேகத்துக்கு இடமின்றி எடுத்துக்காட்ட வேண்டும். தம்முடைய சமஸ்தானத்தில் உள்ள பொதுஜன அபிப்பிராயத்திற்கு முன்னணியில் மகாராஜா செல்லாமல் இருக்கலாம். ஆனால், தெளிவாகக் குறிப்பிடப்பட்ட பொதுஜன அபிப்பிராயத்தை அவர் புறக்கணிப்பார் என நான் கற்பனை செய்துகொள்ள முடியாது.

—'ஹரிஜன்' – 28—3—1936

# 16

# தொண்டர்களின் புனித கடமை

[பெங்களூருக்கு அருகில் உள்ள கெங்கேரியில் நடந்த தென்னிந்திய ஹரிஜன் தொண்டர்கள் மகாநாட்டில் காந்திஜி நிகழ்த்திய சொற்பொழிவின் விவரம் இங்கே கொடுக்கப்பட்டிருக்கிறது :]

## நமது லட்சியம்

தென்னிந்தியாவிலுள்ள எல்லாப் பாகங்களிலிருந்தும் அழைக்கப்பட்டு இம்மகாநாட்டிற்கு பிரதிநிதிகள் விஜயம் செய்திருக்கிறார்களெனினும், மற்ற விடங்களிலிருந்தும் இங்கே அவ்விஷயத்தில் அக்கறையிலுள்ள பலர் வந்திருக்கின்றனர். எனவே, பிரதிநிதிகளின் அலுவல் சம்பந்தமான விஷயங்களைத் தவிர, பொதுவான சில விவரங்களையும் கூற விரும்புகிறேன்.

சவர்ண ஹிந்துக்கள் பயன் பெற வேண்டுமென்றே நான் இந்தப் பொது விஷயங்களைக் குறிப்பிடுகிறேன். இந்தியாவில் தற்போதுள்ள மற்ற இயக்கங்களுக்கும் தீண்டாமையை ஒழிக்க வேண்டுமென்ற இந்த இயக்கத்திற்கும் வேற்றுமை உண்டு என்பதைச் சவர்ண ஹிந்துக்கள் அறிந்துகொள்ள வேண்டும்.

என் சம்பந்தப்பட்ட வரையில், ஹரிஜன சேவக சங்கம் சம்பந்தப்பட்ட வரையில், தீண்டாமை எதிர்ப்பு இயக்கம் ஓர் அரசியல் இயக்கமல்ல. ஹரிஜனங்களின் பொருளாதார முன்னேற்றத்திற்காக மாத்திரம் ஏற்பட்ட இயக்கமும் அல்ல. அவர்களுடைய சமுதாயப் புனருத்தாரண இயக்கமும் அல்ல. எனினும், இதிலிருந்து ஹரிஜனங்களின் சமுதாய, பொருளாதார அல்லது அரசியல் முன்னேற்றம் நமது நோக்கம் அல்ல என்று பொருள் கொள்ளக்கூடாது. இந்த முன்னேற்றங்களையெல்லாம் நாம் விரும்புகிறோம். நாம் நமது அலுவல்களை யோக்கியப் பொறுப்புடன் செய்து வந்தால், நமது முயற்சிகளைத் தொடர்ந்து மேலே குறிப்பிட்ட துறைகளில் முன்னேற்றம் ஏற்பட்டுத் தீரும் என்பது நிச்சயம்.

எனினும், நமது லட்சியம் முற்றிலும் வேறாகும். அந்த லட்சியம் இதுதான் : தீண்டாமை ஹிந்து மதத்தில் ஒரு களங்கமாக இருக்கிறது. எப்பாடு பட்டாயினும் அதை அகற்றித் தீரவேண்டும். தீண்டாமை ஒரு விஷமாகும். அதை நாம் உற்ற சமயத்தில் ஒழிக்காவிடில், அது ஹிந்து மதத்தையே அழித்துவிடும். தொண்டர்கள், பிரதிநிதிகளின் வரிசைக்கு வெளியில் உள்ள நீங்களும், தொண்டர்கள், பிரதிநிதிகளில்கூட சிலரும், நான் கூறுவதன் உண்மையான கருத்தை உணரவில்லை என்பதை நான் அறிவேன். எனினும், நீங்கள் என் கருத்தை உணர்ந்தாலும் உணரா

விட்டாலும், நான் தீவிரமாகவும் உறுதியாகவும் கொண்டுள்ள அபிப்பிராயங்களை நான் தொடர்ந்து கூறி வரத்தான் வேண்டும்.

தீண்டாமையைத் தொடர்ந்து வருவதன் காரணமாக, அழிவு ஹிந்து மதத்தை மெள்ளச் சூழ்ந்துகொண்டு வருவதை நான் காண முடிகிறது. என்னைப் போல் நீங்களும் அதை ஆராய்ச்சி செய்வீர்களாயின், ஹிந்து மதம் மெதுவாகச் சீர்குலைந்து வருவதை நீங்களும் காண்பீர்கள். அந்தச் சீர்குலைவு பின்னர் அதிக வேகமாகி, தொண்டர்களால் தடுக்க முடியாமற் போய் விடலாம்.

## உலகில் உவமையில்லை

தீண்டாமை ஹிந்து மதத்தை அழிக்கவல்ல ஒரு சாபக்கேடு, ஒரு களங்கம், ஒரு பயங்கர சக்தி வாய்ந்த விஷம். இவ்விதம் நான் ஏன் கூறுகிறேன், தெரியுமா? பிறப்பு காரணமாக ஒரு மனிதரைக்கூட தீண்டாதாராகக் கருதுவது, நமது ஜீவகாருண்ய உணர்ச்சிக்கு முற்றிலும் விரோதமானது. உலகத்திலுள்ள வேத நூல்களையெல்லாம் ஆராய்ச்சி செய்து பாருங்கள்; ஹிந்துக்களைத் தவிர மற்ற ஜனங்களின் நடவடிக்கைகளையும் ஆராய்ந்து பாருங்கள்; அவற்றில் தீண்டாமைக்கு உவமையாக நீங்கள் எதையும் கண்டுபிடிக்க முடியாது. ஒருவர் குறிப்பிட்ட ஒரு கடமையைச் செய்யும் போது தீண்டாதாராகக் கருதப் படலாம். அச்சமயம் அவரே, தம்மைப் பிறர் தீண்டாதாராகக் கருதுவதற்குக் காரணம் இருக்கிறது என்பதை உணருவார். உதாரணமாக, திக்கற்ற ஒரு நோயாளியின் உடலிலிருந்து இரத்தம் பெருகி, அவரது உடை வீணாகி விடுகிறது; அவரைத் துன்புறுத்தும் நோய் காரணமாக அவர் உடலிலிருந்து துர் நாற்றம் உண்டாகிறது. அத்தகைய நோயாளிக்குச் சிகிச்சை செய்யும் நர்ஸ், சிகிச்சை முடியும் வரையில் தீண்டாதாராக இருக்கிறார். ஆனால், அவர் சுத்தமாகக் கழுவிக்கொண்ட பின் நம்மைப் போல் தீண்டத் தகுந்தவராகி விடுகிறார். அது மாத்திர மல்ல. நம்மைப் போல் அவரும் சமுதாயத்தில் நடமாடத் தகுதி வாய்ந்தவராக இருப்பதுடன், அவர் பின்பற்றும் தொழில் காரண மாக அவர் போற்றுதற்கும், நமது மரியாதைக்கும் உரியவரா கிறார். நமது சமுதாயத்திலே அந்தஸ்தில் தராதாரம் இருக்கும் வரையில், அவர் நம்மிடையே மிகவும் உயர்ந்த அந்தஸ்தை வகிக்க வேண்டியவராகிறார்.

இப்போது சித்திரத்தின் மற்றொரு புறத்தைப் பாருங்கள். உதாரணமாக, டாக்டர் அம்பேத்காரை எடுத்துக்கொள்ளுங்கள். அவர் ஒடுக்கப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர் என்றும் தீண்டா தார் என்றும் கூறப்படுகிறது. அறிவில் அவர், புத்திசாலிகளும், படித்தவர்களுமான ஆயிரக்கணக்கான சாதி ஹிந்துக்களைக் காட்டிலும் மிகச் சிறந்தவர். நம்மில் எவரையும் போல் அவரும்

பார்ப்பதற்கு வெகு சுத்தமாக இருக்கிறார். அவர் இன்று ஒரு பிரபல சட்ட போதகராக இருக்கிறார். நாளை அவர் ஹைகோர்ட் நீதிபதி பதவிக்கு வரலாம். அரசாங்கத்தில் ஒரு வைதிகப் பிராம்மணர் வர முடியாத உயர்ந்த பதவி எவ்விதம் இல்லையோ, அது போலவே டாக்டர் அம்பேத்காரும் வர முடியாத உயர்ந்த பதவி எதுவுமில்லை. அப்படியிருந்தும், டாக்டர் அம்பேத்கார் தொட்டால் ஒரு வைதிகப் பிராம்மணர் அசுத்தமாகிவிடுவார். அதற்குக் காரணம் என்னவெனில், அவர் ஒரு தீண்டாதாராகப் பிறந்துள்ளார் என்ற அவரது மன்னிக்க முடியாத பாவம்தான்!

பிறப்பு காரணமாகத் தீண்டாமை ஹிந்து மதத்தின் ஒரு முக்கிய அம்சம் என்று எண்ணுவது வழக்கமாகிவிட்டது. இல்லாவிடில், இன்று கூட நம்மில் பலர் நம் சொந்த மக்களிடம் எப்படி நடந்து கொள்ளுகிறோமோ, அவ்விதம் நடந்து கொள்ள மாட்டோம்.

## அதை அகற்றுவது எப்படி?

இன்று நான் இங்கே செய்துள்ள பிரசங்கத்தில், புதிதாக எதுவும் கூறிவிடவில்லை என்பதை அறிவேன். இதே விஷயத்தை இன்று கூறியதைவிடக் கடுமையான பாஷையில் இதற்கு முன்பு நான் கூறியுள்ளேன். எனினும், தீண்டாமையை ஒழிக்க வேண்டியது அவசியம் என்ற சாதாரண உண்மை, உங்கள் அறிவையோ அல்லது செயலையோ தூண்டாத வரையில் நான் கூறுவதெல்லாம் அதிகமாகிவிடாது.

தீண்டாமை என்ற ஓர் அசாதாரண நிலை, ஹிந்து மதத்தில் மாத்திரமே உள்ள விசித்திரமாகும். அது பகுத்தறிவுக்கு முரணானது. அதற்குச் சாஸ்திரங்களில் ஆதாரமில்லை. நான் சிறிதளவு சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்ததிலிருந்தும், சாஸ்திரங்களை ஆழ்ந்து ஆராய்ச்சி செய்தவர்கள் எனக்கு எடுத்துக் கூறியதிலிருந்தும், ஹிந்து மதத்தில் பிறப்புக் காரணமாக தீண்டாமைக்கு ஆதாரமில்லை என்பது நிதர்சனமாகத் தெரிகிறது. அவ் விஷயமாகச் சாஸ்திர விதிகளைக் கூறிக்கொண்டிருக்க எனக்கு இப்போது நேரமில்லை. நான் கூறும் விஷயங்களுக்கு இப்போது சாஸ்திரங்களிலிருந்து ஆதாரங்கள் காட்ட வேண்டிய அவசியமில்லை. ஆனால், அவசியம் எது? ஹிந்து மதத்தில் தீண்டாமை ஒரு களங்கம் என்பதையும், அது ஹிந்து மதத்தையே அழிக்கக் கூடியது என்பதையும், நீங்கள் சந்தேகமின்றி உணர்ந்துகொள்ளுவீர்களாயின், அதை அகற்ற நீங்கள் முன்வர வேண்டும்.

அதை அகற்ற நீங்கள் என்ன செய்வீர்கள்? தீண்டாமை ஹிந்து மதத்தில் ஒரு களங்கம் என்று பிரகடனம் செய்வதன் மூலம் உங்கள் கடமையைச் செய்துவிட்டதாக நீங்கள் எல்லோரும் கூறுவீர்களாயின், அது பரிகாசத்திற்கு இடமாகும். திடீரென எழுந்த உற்சாகம் காரணமாக நீங்கள் ஒரு ஹரிஜனைத்

தொட்டு, அணைத்துக்கொண்டு, பிறகு அவரை அடியோடு மறந்து விடுவது போதாது. நீங்கள் தினந்தோறும் ஹரிஜனங்கள் இருக்குமிடம் சென்று, உங்கள் கொள்கைக்கு அறிகுறியாகச் சில ஹரிஜனங்களைத் தொடுவதை ஒரு கடமையாகக் கொள்ளுவது கூடப் போதாது. நீங்கள் சந்திக்கும் ஹரிஜனங்கள் தங்களுக்கு நல்ல காலம் உதயமாகிவிட்டதாக சந்தேகத்துக்கு இடமின்றி உணரும்படி நீங்கள் உங்கள் தினசரி நடவடிக்கைகளை ஒழுங்கு படுத்திக்கொள்ள வேண்டும்.

நீங்கள் கோவிலுக்குச் செல்வது வழக்கமாயின், உங்களுடன் ஹரிஜனங்களையும் அழைத்துச் செல்ல ஆரம்பிக்க வேண்டும். உங்களுடைய ஹரிஜன் நண்பர்களுடன் கோவிலுக்குள் செல்ல நீங்கள் அனுமதிக்கப்படாவிட்டால், தீண்டாமை தவறு என்பதில் எனக்கு இருப்பது போல் உங்களுக்கும் திடமான நம்பிக்கை இருக்குமானல், ஒரு தேளையோ அல்லது நெருப்பையோ கண்டால் நீங்கள் எப்படி ஒதுங்கிச் செல்லுவீர்களோ, அப்படியே அந்தக் கோவிலிலிருந்து ஒதுங்கிச் சென்றுவிட வேண்டும். அப்போதுதான் என்னைப் போல நீங்களும், அத்தகைய கோவிலில் கடவுள் இல்லை என்பதில் நம்பிக்கை கொண்டவர்களாவீர்கள்.

உதாரணமாக, உலகம் முழுவதும் புகழ்பெற்ற மகத்தான கோவிலை, அதாவது காசியிலுள்ள காசி விசுவனுதர் ஆலயத்தை எடுத்துக் கொள்ளுகிறேன். அங்குள்ள கடவுள் உலகம் முழுவதற்கும் கடவுளாகக் கூறப்படுகிறது. அப்படியிருந்தும் ஸ்ரீ விசுவனுதரின் பெயரால் சவர்ண ஹிந்துக்கள், 'இந்தக் கோவிலுக்குள் வரக்கூடாது' என்று ஹரிஜனங்களிடம் கூறும் துணிவு கொண்டுள்ளனர்.

## கடவுளின் கோவில்கள் அல்ல

எந்த வைதிக ஹிந்துவுக்கும் நான் குறைந்தவன் அல்லவென்று கூறிக் கொள்ளுகிறேன். என் சக்திக்கு இயன்ற வரையில், ஹிந்து மதத்தின் எல்லாக் கட்டளைகளையும் என் சொந்த வாழ்க்கையிலே நிறைவேற்ற முயற்சித்து வருகிறேன். என் சக்தி அற்பமானது என்பதை நான் ஒத்துக் கொள்கிறேன். எனினும், அதன் காரணமாக ஹிந்து மத சம்பந்தமாக எனது நிலையும் அம் மதத்தில் எனக்குள்ள பாசமும் பாதிக்கப்படவில்லை. ஹிந்து மதத்தில் எனக்கு மிகுந்த பாசமிருந்தும் கூட, ஒரு தனி ஹரிஜனுக்குக் காசி கோவில் கதவுகள் மூடப்பட்டிருந்தால் கூட, அது அந்த ஹரிஜனுக்குத் திறக்கப்படும் வரையில் அந்தக் கோவிலில் காசி விசுவனுதர் குடி கொண்டிருக்கமாட்டார் என்று கூறவே இங்கே வந்துள்ளேன். அது வரையில், அந்தக் கோவிலின் புனிதத் தன்மையிலோ, அல்லது அங்கே கடவுளை வணங்கினுல் என் பாவங்கள் தீர்ந்து நான் பரிசுத்தனுகிவிடுவேன் என்பதிலோ பூரண நம்பிக்கையுடன் நான் அந்தக்

கோவிலை அணுகமுடியாது. அத்தகைய கோவில் விஷயத்தில் எனக்குப் பக்தி உணர்ச்சி உண்டாக முடியாது. ஹரிஜனங்களுக்குக் கதவுகள் மூடப்படும் காசி விசுவநாதர் கோவில் சம்பந்தப்பட்ட வரையில் எது உண்மையோ, அதுதான் இந்தியாவிலுள்ள ஒவ்வொரு கோவில் சம்பந்தப்பட்ட வரையிலும் உண்மையாகும். குருவாயூர் கோவில் உள்பட, தென்னிந்தியாவிலுள்ள எல்லாக் கோவில்களின் விஷயத்திலும் அது பொருந்தும்.

குருவாயூர் கோவில் கதவுகள் எனக்குத் திறக்கப்படவில்லை என்பதற்காக நான் கடவுளுக்கு வணக்கம் செலுத்துகிறேன். அந்தக் கோவிலின் தருமகர்த்தாக்களோ அல்லது அந்தக் கோவிலின் மேற்பார்வையாளர் எவராயினும் சரி, அவர் அக்கோவிலுக்குள் பிரவேசிக்க எனக்கு அனுமதி அளிப்பதாக வைத்துக் கொள்ளுவோம். அப்போதுகூட, ஹரிஜன சமூகத்திற்கு அது மூடப்பட்டிருக்கும் வரையில் நான் அந்த அனுமதியைப் பயன்படுத்திக்கொள்ள முடியாது. இங்குள்ள உங்களில் ஒவ்வொருவரும் அவ்விதம் நினைக்க முற்பட்டாலன்றி, அவர் தமது இதயத்திலிருந்து தீண்டாமையை அகற்றவில்லை என்றே கொள்ளவேண்டும்.

## அவர்கள் குற்றமல்ல

மிகப் பெரும்பாலான ஹரிஜனங்கள் நமது இயக்கத்தில் அக்கறை கொள்ளவில்லை என்பது சிறிதும் முக்கியமல்ல. இன்று காலையில்தான் ஸ்ரீ டிசௌசா தலைமையில் ஹரிஜனங்கள் அடங்கிய ஒரு கோஷ்டியினர் என்னைக் கண்டு பேசினார்கள். ஹரிஜனங்கள் தங்களுடைய அரசியல், பொருளாதார முன்னேற்றத்தைப்போல் ஆலயப் பிரவேச விஷயத்தில் அவ்வளவு அக்கறை கொள்ளவில்லையென்றும், சமுதாயத்தில் தங்களுடைய அந்தஸ்து உயர வேண்டும் என்பதே அவர்களுடைய விருப்பம் என்றும் அவர்கள் என்னிடம் கூறினர். அவர்கள் அவ்விதம் நினைப்பது இயல்பேயாகும். அவர்களுக்கு நம்முடன் ஒற்றுமையாக இருக்க வேண்டுமென்ற உணர்ச்சியும் நம்முடன் கோவில்களுக்கு வந்து வழிபடவேண்டுமென்ற ஆசையும் அற்றுப்போனதற்கு நாம்தான் பொறுப்பாளி ஆவோம்.

அதனால்தான், அவர்கள் சம்பந்தப்பட்ட வரையில் ஹிந்து மதத்தின் கடவுள் உண்மையில் இல்லை என்றாகிவிட்டதென நான் கூறுகிறேன். இஸ்லாம் மதக் கடவுளிலிருந்தோ அல்லது கிறிஸ்துவ மதக்கடவுளிலிருந்தோ, ஹிந்து மதக் கடவுள் வேறானவர் அல்ல என்பது உண்மையே. ஒவ்வொரு மதத்திலும் கடவுள் வழிபாடு முறைதான் ஒவ்வொரு விதத்தில் விசேஷமாக இருக்கிறது.

ஹரிஜனங்கள் விஷயத்தில் நாம் பாவங்கள் செய்துள்ளோம். மன்னிக்க முடியாதவாறு அவர்களைக் கேவலமாக நடத்தி

யுள்ளோம். அதன் காரணமாக சவர்ண ஹிந்துக்கள் செல்லும் கோவில்கள் தங்களுக்காக ஏற்பட்டவை அல்லவென்று கருதும்படி ஹரிஜனங்கள் கற்பிக்கப்பட்டுள்ளனர். எனவே, இவ்விஷயத்தில் அவர்கள் அக்கறை காட்டாததைக் குறித்து நீங்கள் அவர்கள் மீது குற்றம் சாட்டமுடியாது. எனினும் திருவாங்கூரிலும் இந்தியாவிலுள்ள மற்றவிடங்களிலும் இருக்கும் ஹரிஜனங்கள் கோவில்களுக்குள் செல்ல இன்னும் விருப்பம் கொண்டிருக்கிறார்கள் என்பதும், மற்ற ஹிந்துக்களைப்போல் தங்களுக்கு அதே உரிமை கோருகிறார்கள் என்பதும் ஆறுதல் அளிக்கக்கூடிய விஷயமாகும்.

## மதம் மாறும் பிரச்னை

ஹரிஜனங்களுக்குக் கோவில்களைத் திறந்துவிடும் விஷயமாக மற்றொரு பிரச்னை இருக்கிறது. அதை நீங்கள் உணர்ந்து கொள்ளத் தவறக்கூடாது. கோவில்களைத் திறந்துவிடவேண்டுமென்று ஹரிஜனங்கள் வற்புறுத்துகிறார்கள் என்பதற்காக நீங்கள் அவர்களுக்குக் கோவில்களைத் திறந்துவிடுவீர்களாயின், நீங்கள் பெரிய காரியம் எதுவும் செய்தவர்களாகமாட்டீர்கள். ஆனால், நீங்கள் செய்த பாவத்திற்குப் பிராயச்சித்தம் செய்ய வேண்டும் என்பதற்காக நீங்கள் அவர்களுக்குக் கோவில்களைத் திறந்துவிடுவீர்களானால், அப்போதுதான் அது புனிதமான ஒரு செய்கையாகும். இந்தியாவிலுள்ள ஹரிஜனங்கள் வேறொரு மதத்திற்கு மாற்றப்பட்டு, ஹிந்து மதத்தில் ஒரே ஒரு ஹரிஜன் பாக்கியிருந்தால்கூட, ஹரிஜனங்களுக்குக் கோவில்களைத் திறந்துவிட வேண்டும் என்பதை நான் வற்புறுத்தத்தான் வேண்டும்.

ஹரிஜன் பிரச்னை மத சம்பந்தமான பிரச்னையாகும். எனவே, விசேஷ முக்கியத்துவம் வாய்ந்த அந்தப் பிரச்னைக்கும் மற்றப் பிரச்னைகளுக்குமுள்ள வேற்றுமை இதுதான். தற்போதைய ஹரிஜன் இயக்கம் சாதாரணமான கொள்கையையோ, அரசியல் தந்திரத்தையோ ஆதாரமாகக் கொண்டதல்ல. என் சம்பந்தப்பட்ட வரையில், அது முற்றிலும் மதச் சார்புள்ள பிரச்னையாகும். ஹரிஜனங்கள் ஹிந்து மதத்தைவிட்டு வேறு மதம் மாறுதிருப்பதற்கு, ஹரிஜனங்களின் அரசியல் அல்லது பொருளாதாரப் புனருத்தாரணம் போதுமானதென்று எனக்குத் திருப்தி ஏற்படும்படி நிரூபிக்கப்பட்டால்கூட, நான் கோவில்களை ஹரிஜனங்களுக்குத் திறந்துவிட வேண்டும் என்றும், ஹரிஜனங்களுக்கும் மற்ற ஹிந்துக்களுக்கும் எந்த விதத்திலும் ஏற்றத் தாழ்வு இருக்கக்கூடாதென்றுமே விரும்புவேன். நம் நாட்டுச் சகோதரர்களுக்கு நாம் செய்த தவறுக்கு வருந்தி, ஈடு செய்வதே இந்தப் பிரச்னையாகும்.

ஹரிஜனங்கள் மற்ற மதங்களுக்கு மாறிவிடலாமென்ற பீதி இப்போது பல ஹிந்துக்களையும் கலங்கும்படி செய்திருக்கிறது.

எனினும், அதற்கும் ஹரிஜனங்களுக்கு நாம் செய்யவேண்டிய கடமைக்கும் எவ்விதச் சம்பந்தமும் இல்லை. மத மாற்ற பீதி காரணமாக நாம் நமது நடவடிக்கைகளைத் துரிதப்படுத்தி ஆலயங்களைத் திறக்க முற்பட்டால், அது சிறப்பைத் தருவ தாகாது. அத்தகைய முறைகளால் ஹிந்து மதத்தைக் காப்பாற்றி விட முடியாதென்று நான் நிச்சயமாகக் கூறுவேன்.

ஹரிஜனங்களிடமிருந்து எவ்விதக் கைம்மாறும் எதிர் பாராமல், நமது கடமையைச் செய்வதன் மூலம்தான் ஹிந்து மதம் பரிசுத்தமாக்கப்பட வேண்டும். அப்படியானால் மாத்திரமே அதை நாம் காப்பாற்ற முடியும். அதற்குக் குறைந்த எதுவும் ஹிந்து மதத்தைக் காப்பாற்ற முடியாது. தன்னலத்திற்காகவோ அல்லது அரசியல் தந்திரம் காரணமாகவோ, நீங்கள் ஹரிஜனங் களுக்கு ஆதரவாக ஏதாவது செய்வீர்களாயின், உங்கள் இதயத்திலிருந்து நீங்கள் தீண்டாமையை ஒழித்தவர்களாக மாட்டீர்கள். அந்த விஷம் ஹிந்து சமுதாய அமைப்பில் பீறிட் டெழக்கூடிய பல சந்தர்ப்பங்கள் ஏற்படலாம். அதனால் நாம் மிகவும் குழப்பமடைந்து தவிக்க நேரும். நாம் தீண்டாமையைக் குறித்து வெட்கமடைந்தோமாயின், அதனால் என்ன பலன்கள் ஏற்படுவதாக இருந்தாலும் சரி, ஏற்படாவிட்டாலும் சரி, உடனே அதை (தீண்டாமையை) உதறித் தள்ளிவிடவேண்டும்.

## வக்கிர புத்தி

ஹரிஜனங்கள் குடிக்கும் வழக்கத்தையும் செத்த மாட் டிறைச்சி தின்னும் வழக்கத்தையும் அசுத்தமாக இருப்பதையும் கைவிடுவார்களாயின், தாங்கள் தீண்டாமையை அகற்றி விடுவ தாகச் சவர்ண ஹிந்துக்கள் தங்களுடைய 'உயர்ந்த பீட'த்தி லிருந்து கூறும்போது, நான் பொறுமையிழந்தவனாகிறேன். என் னுடைய தந்தையோ, தாயாரோ, மகனோ அல்லது மகளோ குஷ்ட ரோகியாக இருப்பதாய் வைத்துக்கொள்ளுங்கள். குஷ்டரோகத் தைக் களைந்தால்தான் அவர்களைத் தொடுவேன் என்று நான் கூற முடியுமா? தேவையாக இருக்கும்போது நான் அவர்களுக்குத் தொண்டு செய்யாவிடில், எங்களிடையே உள்ள புனித பாசம் பொய்த்துப் போகும்படி செய்தவனாவேன். ஹரிஜனங்களின் நிலை அதைவிட மிகவும் மோசமாகும். ஹரிஜனங்கள் இன்று வந் துள்ள நிலைக்கு நாமேதான் பொறுப்பாளி. மதுபானம் செய்வது, செத்த மாட்டிறைச்சி தின்பது முதலிய மற்றும் அவர்களுடைய அசுத்தமான பழக்க வழக்கங்களுக்கு நேரடியாக நாம்தான் பொறுப்பாளியாவோம். எனவே, நாம் உண்மையாக நடந்து கொள்ள வேண்டுமாயின், ஹரிஜனங்களை அவர்களிடம் எத்தனை குறைகள் இருப்பினும், நாம் தழுவிக்கொள்ள வேண்டும். ஹரிஜனங்கள் உங்களுடைய சகோதரர்கள் என்ற மனப்பான்மை உங்களுக்கு ஏற்பட்ட உடனேயே, அவர்கள் தங்களுடைய

பழக்க வழக்கங்களை மாற்றிக்கொள்ளுவார்கள். இவ்விதம் நான் நம்புவதற்கு ஆதாரம் இருக்கிறது. இவ்விஷயத்தில் அனுபவமுள்ளவர்கள் நான் கூறுவதை உறுதி செய்வார்கள். எனவே, முதலில் சவர்ண ஹிந்துக்கள் தங்களுடைய இதயத்தைச் சுத்தம் செய்துகொண்டு, ஹரிஜனங்கள் விஷயத்தில் தங்களுடைய போக்கை மாற்றிக் கொள்ளவேண்டும்.

ஹிந்துக்கள் சுவீகாரம் செய்துகொண்ட ஒரு ஹரிஜன்கூட தம்மைச் சீர்திருத்திக்கொள்ளத் தவறியதில்லை. ஹரிஜன் தமது குடிப் பழக்கத்தையும், செத்த மாட்டிறைச்சி தின்னும் வழக்கத்தையும் கைவிடுவதற்கு, முன்னேற்றகரமான சூழ்நிலை சக்தியளிக்கும். தாங்கள் சரிவர நடந்து கொள்ளவேண்டிய அவசியமில்லை என்பதற்காக ஹரிஜனங்களின் அசுத்தத்தைக் குறிப்பிடுவது, சவர்ண ஹிந்துக்களின் வக்கிர புத்தியையே காட்டுகிறது.

## புனித நம்பிக்கை

பணம் இராமல், ஹரிஜன் சேவக சங்கத்தை எப்படி நடத்துவது என்பது பற்றி இங்கே மிகுந்த விவாதம் நடைபெறும் என்று எனக்குத் தெரியும். அத்தகைய பிரதிநிதிகளுக்கு நான் கூறுவது என்னவெனில், அவர்களுக்கு நம்பிக்கை இராததே அந்தப் பீதிக்குக் காரணம். ஏதோ அரை டஜன் சவர்ண ஹிந்துக்களை அல்ல, கோடிக்கணக்கான சவர்ண ஹிந்துக்களின் இதயத்தை நாம் தொட விரும்புகிறோம். பணம் இல்லை என்ற காரணத்தினால், ஒரு ஹிந்துக் கோவில்கூட ஒரு போதும் மூடப்பட்டதில்லை. இந்த அதிசயத்தை ஆராய்ச்சி செய்யும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். கோடிக்கணக்கான ஹிந்துக்கள் மூடபக்தி காரணமாகக் கோவில்களுக்கு எப்போதும் பணம் கொடுக்கிறார்கள் என்ற தவறான எண்ணத்தை உங்கள் மனத்திலிருந்து அகற்றிவிடுங்கள். அந்தக் கூற்றில் ஓரளவு உண்மையிருக்கலாம். எனினும், பெரிதும் உண்மை என்னவெனில், தாங்கள் செய்வது பக்தி பூர்வமான ஒரு காரியம் என்ற விவரிக்கமுடியாத நம்பிக்கை காரணமாகவே, மக்கள் காசும், அரிசியும், தேங்காயும், வெற்றிலைப் பாக்கும் கொடுத்து அந்தக் கோவில்களை ஆதரிக்கிறார்கள். அவர்கள் பக்தியினால் செய்யும் இந்தக் காரியங்களை மூடநம்பிக்கை என்று நீங்கள் வருணிக்கக்கூடாது. அவ்விதம் வருணிப்பது நீங்கள் உங்களுக்கும் இந்தியாவுக்கும் மானிட வர்க்கத்துக்கும் அநீதி செய்வதாகும். கோடிக்கணக்கான மக்களைக் கோவிலுக்குச் செல்லும்படி தூண்டும் நம்பிக்கையில் ஏதோ புனிதத் தன்மையும் உண்மையும் அடங்கியிருக்கிறது என்பதில் ஐயமில்லை. இந்தக் கோவில்களை மௌனமாக ஆதரிக்கும் மக்களின் பக்தியிலும், உங்களுடைய கடமையிலும் உங்களுக்கு நம்பிக்கை இருந்தால், நீங்கள் ஒவ்வொருவரும் ஒரு சிறிய ஆலயமாக விளங்குவீர்கள்; மக்களிடமிருந்து காசோ அல்லது அரிசியோ உங்கள் கைக்கு வந்து சேரும்.

நீங்கள் வெற்றி பெற எவ்வளவு காலமாயினும், அதைக் குறித்து நீங்கள் கவலைப்படவேண்டாம். காலம் ஒரு போதும் சத்தியத்திற்கு எதிராகப் போகமுடியாது. இதுதான் தெளிவான சத்தியமாகும். "நீங்கள் தீண்டாமையை ஒழிக்க வேண்டும் அல்லது அழியவேண்டும்." நீங்கள் மனம் சோர்ந்து விடாமல், தைரியத்துடனும் நம்பிக்கையுடனும் உங்கள் கடமையைச் செய்து வரவேண்டும். நீங்கள் சோம்பேறித்தனத்தினுல் கண் விழிப்புடன் இராவிட்டால், பின்னர் பண உதவி செய்யவில்லை என்று மக்கள் மீது குற்றம் சாட்டாதீர்கள். தீண்டாமை ஒழிப்பு இயக்கம் வெளியிலுள்ள சக்திகள் காரணமாக அழிந்துவிடாது; உள் பலவீனம் காரணமாகவே அழிவுறும். எனவே, இந்த முறையில் பிரச்னையை அணுகும்படி நான் ஒவ்வொரு தொண்டரையும் வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

—'ஹரிஜன்' – 20—6—1936

# 17

# மகாராஜாவின் முன்னுதாரணம்

திருவாங்கூர் தர்பார் கீழ்க்கண்ட பிரகடனத்தை வெளியிட்டிருப்பதன் மூலம், அகண்ட ஹிந்து உலகத்தின் வாழ்த்துக்களுக்கும், சிந்திக்கும் ஆற்றல் வாய்ந்த சகலருடைய வாழ்த்துக்களுக்கும் உரியதாகியிருக்கிறது:

"நமது மதத்தின் உண்மையிலும் நியதியிலும் நமக்குப் பூரண நம்பிக்கை உண்டு. அது தெய்வீக உபதேசத்தையும் பூரண சகிப்புத் தன்மையையும் அடிப்படையாகக் கொண்டது. அதன் சம்பந்தமான அனுஷ்டானம் பல பல நூற்ருண்டுகளாகக் காலத்தின் அவசியத்திற்குத் தகுந்தவாறு மாறி வந்திருக்கிறது. எனவே நம்முடைய ஹிந்துப் பிரஜைகளில் எவரும், ஹிந்து மதம் நம்பிக்கையினுல் ஏற்படும் மனச் சாந்தியையும் ஆறுதலையும் பெறப் பிறப்பு, சாதி அல்லது சமூகம் காரணமாகத் தடையெதுவும் இருக்கக் கூடாது. கோவில்களின் ஆசார விதிகளையும் அனுஷ்டானங்களையும் நிலைநிறுத்தி, ஒழுங்கான சூழ்நிலையையும் பாதுகாப்பதற்காக நம்மால் ஏற்படுத்தப்படும் விதிகளுக்கும் நிபந்தனைகளுக்கும் உட்பட்டு எல்லா ஹிந்துக்களுக்கும் கோவிலுக்குள் பிரவேசித்து வணங்க உரிமை உண்டு. நம்மாலும் நமது அரசாங்கத்தினுலும் மேற்பார்வையிடப்படும் சகல கோவில்களிலும், பிறப்பு காரணமாகவோ, மதம் காரணமாகவோ, எவ்விதக் கட்டுப்பாடுமின்றி எல்லா ஹிந்துக்களும் பிரவேசிக்கவும் வணங்கவும் உரிமை உண்டென்று இதன்மூலம் பிரகடனம் செய்து கட்டளையிடுகிருேம்."

இந்த நடவடிக்கை முன்பே எடுக்கப்பட்டிருக்க வேண்டும். எனினும், நடவடிக்கையே எடுக்காமலிருப்பதைக் காட்டிலும்,

தாமதித்தாவது எடுப்பது நல்லதுதான். ஸ்ரீ கே. பரமேசுவரன் பிள்ளை, ஹரிஜன் சேவக சங்கத்தின் திருவாங்கூர் கிளைத் தலைவராக இருக்கிறார். அவரது சாந்தமான விடாமுயற்சி காரணமாகவே இந்தப் பெரிய காரியத்திற்கு வழிகோலப் பட்டது என்று கர்வமின்றிக் கூறலாம். சங்கத்தின் தொண்டர்கள் சவர்ண ஹிந்துக்களின் மனச்சாட்சியைத் தூண்டி விட்டார்கள். மற்ற சாதி ஹிந்துக்களைப்போல் அதே விதிகளுக்கிணங்க ஹரிஜனங்களுக்கும் சமஸ்தானக் கோவில்களைத் திறந்துவிட வேண்டுமென்று வேண்டிக்கொண்டு சவர்ண ஹிந்துக்கள் ஏராளமான விண்ணப்பங்கள் அனுப்பினர். தீண்டாமை ஒரு காளான் போன்றதாயினும், அது ஹிந்து உலகத்தை இறுகப் பற்றிக் கொண்டிருக்கிறது. அதை எந்த ஹிந்துவாவது தகர்த்து, அதற்கு விரோதமாகப் பிரகடனம் செய்வாராயின், அவர் சீர்திருத்தக்காரர்களிடையே வியப்பை உண்டாக்குகிறார்; வைதிகர்களின் உக்ரமான கண்டனத்திற்கும் ஆளாகிறார். அதிலும் ஒரு புராதன வைதிக ஹிந்து சமஸ்தானமான திருவாங்கூர் மகாராஜாவைப் போன்ற உயர்ந்த பதவியிலுள்ள ஒருவர் அவ்வித நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கையில், வைதிகர்களின் கண்டனம் அதிகமாகவே இருக்கும். பக்தியையும் நீதியையும் அடிப்படையாகக் கொண்ட, தீர்க்காலோசனையுடன் கூடிய இந்த நடவடிக்கைக்கு முன்னிலையில் எல்லாக் கண்டனமும் மறைந்துவிடுமென நம்புவோமாக.

ஒரு ஹிந்துவுக்கும் மற்றொருவருக்கும் மிகக் குறைந்த வேற்றுமை கற்பிப்பதன்மூலம்கூட, ஹரிஜனங்கள் கஷ்டப்பட்டு சம்பாதித்துள்ள சுதந்திரம் குன்றிவிடும்படி செய்ய முயற்சி நடைபெறாதென்றும் நம்புவோமாக.

சமஸ்தான அரசாங்கத்தின் பாதுகாப்பில் நடைபெறும் கோவில்களில், 'உயர்ந்த சாதி ஹிந்து' வழிபடுவதற்கு என்ன விதிகள் உண்டோ, அதே விதிகளின் கீழ் ஹரிஜனங்களும் வழிபட உரிமை உண்டென்பதே பிரகடனத்தின் பொருளாகும். அதாவது, திருவாங்கூரில் கடவுள் கோயில் கொண்டுள்ள இடங்களில் இனிமேல் மனிதருக்கும் மனிதருக்கும் எவ்வித வேற்றுமையும் இல்லை. அங்கே ஹரிஜன், உயர்சாதி ஹிந்து என்ற வித்தியாசம் இராது. எல்லோரும் ஹரிஜனங்களாக, அதாவது கடவுளின் குழந்தைகளாக இருப்பார்கள். அந்த மகத்தான பிரகடனத்தின் கருத்து இவ்விதம் இல்லையாயின், அதை வெறும் காகிதமென்றே கூறவேண்டும். எனினும், அதன் அந்தரங்க சுத்தியிலோ அல்லது அது ஏதோ ஓர் அந்தரங்க நோக்கத்துடன் விடுக்கப்பட்டதென்றோ நாம் சந்தேகப்படுவதற்குக் காரணமில்லை.

திருவாங்கூரில் உள்ள கிறிஸ்துவ சமூகம் பெரியது, முக்கியமானது. அங்குள்ள கிறிஸ்துவ மதச் சங்கங்கள் ஹரிஜனங்களை

மயக்கி வருகின்றன. அவர்களுக்காக அச்சங்கங்கள் பணம் செலவு செய்வதுடன், அவர்களுக்கு உண்மையான சுதந்திரமும் சமுதாயத்தில் சம அந்தஸ்தும் அளிப்பதாக நம்பிக்கை ஊட்டி வருகின்றன. ஹரிஜனங்களுக்கு முதலில் ஹிந்து மதத்தில்தான் சமுதாய சமத்துவ அந்தஸ்தும், உண்மையான சுதந்திரமும் கிடைக்க வேண்டும். நான் தனி நபர்களைக் கருத்தில் கொண்டு பேசவில்லை. பொதுவாக எல்லோரையும் மனத்திற் கொண்டே பேசுகிறேன். ஹரிஜனங்கள் மற்ற ஹிந்துக்களுடன் இறுக இணைக்கப்பட்டிருக்கிறார்கள். எனவே, அவர்கள் இப்போ திருப்பது போல் அடிமைகளாக இராமல், மற்ற ஹிந்துக்களுடன் சகோதரர்களாகப் பழக முற்பட்டாலன்றி, பட்டத்தை மாற்றிக் கொள்ளுவதால் யாதொரு பலனும் ஏற்படாது. இதைத் தவிர, பிரகடனம் செயல்படுவதை மற்றச் சகோதர சமூகங்கள் நுணுக்க மாகக் கவனித்து, கண்டிக்க முற்படும் என்பதை நாம் உணர வேண்டும். எனவே, சமஸ்தான அதிகாரிகளும் சரி, சாதி ஹிந் துக்களும் சரி, பிரகடனத்தின் புறவாசகத்தை மாத்திரமல்ல, அகக் கருத்தையும் பூரணமாக அமலுக்குக் கொண்டு வர வேண் டியது இன்றியமையாத கடமையாகும்.

பிரகடனத்தை அமலுக்குக் கொண்டு வரவேண்டிய முக்கிய கடமை, ஒரு விதத்தில் சீர்திருத்தக்காரர்களையும் ஹரிஜனங் களையும் சார்ந்திருக்கிறது. இந்தச் சுதந்திரத்தை அவர்கள் பயபக்தியுடனும், ஏற்ற முறையிலும், பணிவுடனும் பயன்படுத் திக்கொள்ள வேண்டும். ஹரிஜனங்கள் ஒழுங்காக ஸ்நானம் செய்துவிட்டு, சுத்தமான நிலையில் கோவிலுக்குள் பிரவேசிக்கும் படி சீர்திருத்தக்காரர்கள் பார்த்துக்கொள்ள வேண்டும். இந்த மூலாதாரமான விதியை, கோவிலுக்குச் செல்லும் மிகப் பெரும்பா லான சாதி ஹிந்துக்களும் அனுஷ்டிப்பதே இல்லை. எனவே, ஹரி ஜனங்கள் சாதி ஹிந்துக்களின் கெட்ட வழக்கங்களை 'காப்பி' யடிக்க வேண்டாம். உடலும் உள்ளமும் சுத்தமாக இருக்கும் விஷயமாக அவர்கள் ஒரு நல்ல உதாரணம் காட்டுவதில் பெருமை கொள்ள வேண்டும்.

பிரகடனம் வெளியிடப்பட்டிருப்பதற்கு அரசியல் நோக்கம் எதுவும் காரணமல்ல. சமஸ்தான அரசாங்கம் கலப்பற்ற மத சம் பந்தமான ஒரு கடமையையே செய்திருக்கிறது என்று நான் கருதுகிறேன். சமஸ்தானத்தில் உள்ள எல்லா ஹிந்துக்களும் அதை அவ்வாறே கருதி நடந்துகொள்ள வேண்டும். அதற்கு வேறுவிதமான கருத்தைக் கற்பிப்பதால், ஆன்மிக சம்பந்தமான அதன் மகத்தான நோக்கமும் பலனும் முற்றிலும் வீணாகிவிடும்.

திருவாங்கூரின் உதாரணம் மற்றவிடங்களுக்கும் பரவு மென்றும், மற்ற எல்லாச் சமஸ்தானங்களும் அந்த உதாரணத் தைப் பின்பற்றி நடக்குமென்றும் நம்புவோமாக. வேதங்களை அனுசரித்தும், காலப் போக்கிற்கு இணங்கவும் ஹிந்து மதத்தின் மூலாதாரமான கொள்கைகளுக்கு முரணின்றி மத சம்பந்தமான

ஒழுங்கு விதிகளை ஏற்படுத்துவது ஒரு ஹிந்து மகாராஜாவின் உரிமையும் கடமையுமாகும். முன்னேறி வரும் நிரந்தரமான எல்லா மதங்கள் சம்பந்தமாகவும் இது உண்மையாக இருக்க வேண்டும்.

அது எப்படியாயினும், திருவாங்கூரின் உதாரணத்தைப் பின்பற்றுவதில் மற்ற ஹிந்து மகாராஜாக்களுக்குத் தடை எதுவும் இல்லை. அவர்களும் அதைப் பின்பற்றினால், ஹிந்து மதத்திலிருந்து தீண்டாமையை முற்றிலும் அகற்றும் காலம் வெகு விரைவில் வருவதுடன், நிச்சயமான அழிவிலிருந்தும் ஹிந்து மதத்தைக் காப்பாற்றுவது சாத்தியமாகும். முன்பே அமலுக்குக் கொண்டு வந்திருக்க வேண்டிய இந்தச் சீர்திருத்தத்தை உடனே தொடங்கும்படி, ஒவ்வொரு ஹிந்து சமஸ்தானத்திலும் உள்ள பொறுப்பு வாய்ந்த ஹிந்துக்கள் தங்கள் மகாராஜாக்களைக் கேட்டுக் கொள்ளுமாறு நான் ஆலோசனை கூறுகிறேன்.

—'ஹரிஜன்' - 21—11—1936

# 18

# கடவுள் முன்னிலையில் யாவரும் சமம்

[திருவாங்கூரில் உள்ள வேங்கனூர் என்றவிடத்தில் நடந்த மாபெரும் புலையர்கள் கூட்டம் ஒன்றில் காந்திஜி பேசியதாவது:]

திருவாங்கூர் மகாராஜா விடுத்துள்ள பிரகடனத்தை நீங்கள் பக்தியுடனும், புத்திசாலித்தனமாகவும் பயன்படுத்திக்கொள்ளுவீர்களென்று நம்புகிறேன். கோவில்களுக்குச் செல்லுவதால் நமக்கு ஏதாவது லாபம் உண்டா, அல்லது ஒரு லாபமும் இல்லையா என்பது நம்முடைய மனநிலையைப் பொறுத்த விஷயமாகும். ஆலயங்களை நாம் தாழ்மையுடனும் பயபக்தியுடனும் அணுக வேண்டும். அவையெல்லாம் இறைவன் குடிகொண்டுள்ள புனித ஸ்தலங்களாகும். ஒவ்வொரு மனிதரிடத்திலும், அவரது சிருஷ்டியின் ஒவ்வொரு அணுவிலும், இப்புவியில் உள்ள ஒவ்வொன்றிலும் கடவுள் இருக்கிறார் என்பது உண்மையே. ஆனால், தவறு செய்யும் இயல்புள்ள அற்ப மனிதர்களாகிய நாம், கடவுள் எங்கும் இருக்கிறார் என்ற உண்மையை நன்கு உணருவதில்லை; கோவில்களுக்கு விசேஷமான புனிதத் தன்மையைக் கற்பித்து, அங்கே கடவுள் வசிப்பதாக எண்ணுகிறோம். எனவே, கோவில்களை நாம் அணுகும்போது, நமது உடலையும், மனத்தையும், இதயத்தையும் சுத்தம் செய்துகொள்ள வேண்டும்; பயபக்தியுடன் உள்ளே சென்று, தங்களைப் பரிசுத்தமான ஆடவர்களாகவும் பரிசுத்தமான பெண்களாகவும் செய்யும்படி இறைவனை இறைஞ்சிக் கேட்க வேண்டும்.



மதுரை மீனுட்சியம்மன் கோயிலில் காந்திஜி—3, பிப்ரவரி, 1946.



1946 பிப்ரவரியில் மதுரைக்குப் போகும் வழியில் காந்திஜி ரெயிலில் இருந்தபடியே ஆங்காங்கே கூடியிருந்த மக்களுக்குப் பேசினர்.

வெகு காலமாகச் செய்யப்பட்டு வந்த பாவங்கள் உண்மையிலேயே பேனவின் முனையால் துடைத்தொழிக்கப்பட்டுள்ளன. பிரகடனத்தில் மகாராஜாவின் கையெழுத்து இருக்கிறதெனினும், அதற்கு ஸ்ரீ பத்மநாபஸ்வாமியின் அருளே காரணமாகும். மகாராஜாவைப் பற்றி திருவாங்கூரில் ஓர் அருமையான கதை வழங்கப்படுவதை இன்றுதான் நான் அறிந்தேன்.

திருவாங்கூர் மகாராஜாக்கள் பத்மநாபதாசர்கள் என்று வழங்கப்படுவதை நீங்கள் எல்லோரும் அறிவீர்கள்; திருவாங்கூரில் உள்ள ஒவ்வொரு குழந்தையும் அறியும். மகாராஜாக்கள் பத்மநாபஸ்வாமியின் வைஸ்ராய்களாகவே இருந்திருக்கிறார்கள். மகாராஜா தினந்தோறும் கோவிலுக்குச் சென்று, அன்றாட அலுவல்கள் பற்றி ஸ்ரீ பத்மநாபஸ்வாமியிடமிருந்து கட்டளைகள் பெற்று வருவது வழக்கம் என்பது நேற்று எனக்குத் தெரிய வந்தது. மனிதருக்கு மனிதர் கட்டளையிடுவது போல் அது நடைபெறவில்லையெனினும், அந்த அற்புதமான கதையில் சிறந்த கருத்து இருக்கிறது. கடவுளின் சம்மதத்தைப் பெறாத எதையும், தவறான அல்லது பாவமான எதையும் மகாராஜா செய்யக் கூடாது என்பதே அதன் பொருளாகும். எனவே, நான் கூறியது போல, கடவுளின் அருளே மகாராஜாவை அந்த மகத்தான நடவடிக்கையைக் கைக்கொள்ளும்படி செய்திருக்கிறது. அந்த மகத்தான பிரகடனத்தினால் பலன் அடையப் போகும் உங்களுக்கு நான் வாழ்த்துக் கூற விரும்புகிறேன்.

சென்ற தடவை நான் இங்கே வந்திருந்தபோது, கோவிலுக்கு வெளியில் நடந்த கூட்டத்தில் பேசினேன். அப்போது கோவில் மதில்கள் கோவிலுக்குள் செல்ல முடியாமல் என்னைத் தடுப்பது போல் காட்சியளித்தன. அப்போது என்னை நான் ஒரு புலையனாகவும், அல்லது பறையனாகவும், தாழ்ந்தவருக்கெல்லாம் தாழ்ந்தவனாகவும், ஹரிஜனங்களிடையே ஹரிஜனாகவும் எண்ணிக் கொண்டேன். ஆனால், திருவாங்கூர் மகாராஜாவோ கடவுளின் ஊழியர், அதாவது ஹரிஜன் என்ற பட்டத்தையே தரித்துக்கொண்டுள்ளார். கடவுளின் ஊழியர்களிடையே அவர் முதல் ஸ்தானத்தை வகிக்கிறார் என்பதில் ஐயமில்லை. பிரபுக்களிடையே, எஜமானர்களிடையே அவர் முதல் ஸ்தானம் வகிக்கவில்லை. ஊழியம் செய்வதில் எப்போதுமே பகிரங்கமான வியக்கத்தக்க போட்டி உண்டு. அதில் வெற்றி பெறுவோர் வெகுமதியையோ, பெருமையையோ கோருவதில்லை. இந்தக் கருத்தில்தான் நாம் பிரகடனத்தை எடுத்துக்கொள்ள வேண்டும். எனவே, நம்பூத்ரிமாரும், மற்றப் பிராம்மணர்களும், திருவாங்கூரில் சாதி ஹிந்துக்கள் என்று கூறப்படும் யாவரும் இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு தங்களை உயர்த்திக்கொள்ளுவார்களாக. அவர்கள் தாங்களாக வலுவில் ஹரிஜனங்களிடையே ஹரிஜனங்களாகவும் கடவுளின் ஊழியர்களாகவும் இருக்க முற்படுவார்களாக. பிரகடனத்திற்

கிணங்க அவர்கள் தங்களுடைய நடவடிக்கையால், கடவுளுக்கு முன்னிலையில் உயர்ந்தோர் என்றும் தாழ்ந்தோர் என்றும் யாருமே இல்லை என்பதையும், எல்லோரும் சமமானவர்களே என்பதையும், அகில உலகமும் அறிந்துகொள்ளும்படி செய்வார்களாக.

—'ஹரிஜன்' - 23—1—1937

# 19

# ஹிந்து மதத்தின் சாரம்

தீண்டாமையை எதிர்த்து நான் நடத்தி வரும் போராட்டத்திற்கிடையே, ஹிந்து மதத்தின் சாரம் என்ன என்று பல தொண்டர்கள் என்னைக் கேட்டனர். ஹிந்து மதத்தின் சாரத்தை விளக்கும் மந்திரம் காயத்ரிதான் என்று சிலர் கூறுகிறார்கள். அதற்குத் தகுந்த காரணம் இருக்கிறது. நான் காயத்ரியை ஆயிரம் தடவை ஜபித்து, அதன் பொருளையும் அறிந்துள்ளேன். எனினும், ஹிந்து மதம் பற்றி எனது முழுக் கருத்தையும் அது பிரதிபலிக்கவில்லையென்று எனக்குத் தோன்றுகிறது. சென்ற பல வருடங்களாக நான் பகவத் கீதையைப் பிரமாணமாகக் கொண்டிருக்கிறேன். அது என் கஷ்டங்களையெல்லாம் தீர்த்துவைக்கும் காமதேனு என்றும், அது எனக்கு வழிகாட்டி என்றும் சர்வகஷ்ட நிவாரண மந்திரம் என்றும் நான் கூறி வந்திருக்கிறேன். என் வாழ்க்கையில் நூற்றுக்கணக்கான சமயங்களில் ஏற்பட்ட சந்தேகங்களையும் கஷ்டங்களையும் அது தீர்த்து வைத்திருக்கிறது. அது ஒரு தடவைகூட என்னைக் கைவிட்டதில்லை. ஆனல், அந்தப் புனித நூலை, நான் இந்த மாபெரும் ஜனக்கூட்டத்தின் முன்னிலையில் வைப்பதற்கில்லை. காமதேனு தன் மடியில் உள்ள உயர்ந்த பாலைக் கொடுக்குமுன், நாம் அந்த நூலைப் பயபக்தியுடன் ஆராய்ச்சி செய்யவேண்டும்.

ஆனல், நான் இப்போது கூறப் போகும் ஒரு மந்திரத்தில் ஹிந்து மதத்தின் சாரம் முழுவதும் அடங்கியிருக்கிறது என நிர்ணயித்துள்ளேன். ஈசோபநிஷத்தை உங்களில் பலர் அறிந்திருக்கலாம். மொழி பெயர்ப்புடனும் வியாக்கியானத்துடனும் அதைப் பல ஆண்டுகளுக்கு முன் நான் வாசித்தேன். எரவாடா சிறையில் அதை மனப்பாடமும் செய்துகொண்டேன். ஆனல், அப்போது என்னை அது வசீகரிக்கவில்லை. சமீப காலமாகத் தான் அது என்னை முற்றிலும் கவர்ந்துவிட்டது. மற்ற எல்லா உபநிஷத்துக்களும், மற்ற எல்லா வேத நூல்களும் திடீரென்று எரிந்து சாம்பலாகி விடுவதாக வைத்துக்கொள்ளுவோம். அப்போது ஈசோபநிஷத்தின் முதல் சுலோகம் மாத்திரம் ஹிந்துக்களின் மனத்தில் பதிந்திருந்தால், ஹிந்து மதம் எக்காலத்திலும் அழிவின்றித் திகழும்.

அந்தச் சுலோகம் இதுதான் :

ஈசாவாஸ்ய மிதம் ஸர்வம்
யத் கிஞ்ச ஜகத்யாம் ஜகத் ।
தேன த்யக்தேன புஞ்ஜீதா
மா க்ருத : கஸ்யஸ்வித் தனம் ॥

இதன் மொழிபெயர்ப்பு வருமாறு :

"இந்த உலகத்தில் உள்ள எல்லாவற்றிலும் சிருஷ்டிகர்த்தாவான இறைவன் வியாபித்துள்ளார். எனவே, எல்லாவற்றையும் தியாகம் செய்து அவருக்கு அர்ப்பணம் செய்யுங்கள். பிறகு உங்களுக்குக் கிடைக்கும் ஒரு பங்கை மாத்திரம் உபயோகப்படுத்திக் கொண்டு அனுபவியுங்கள். யாருடைய உடைமைகளுக்கும் ஒரு காலத்திலும் பேராசைப்படாதீர்கள்."

ஒரே கடவுள், ஒரே சிருஷ்டி கர்த்தா, ஒரே தலைவர் எல்லாவற்றிலும் வசிக்கிறார் ; அகில உலகிலும் வியாபித்திருக்கிறார். ஒரு மனிதர் இதைக் காட்டிலும் அதிகமாகத் தெரிந்துகொள்ள வேண்டியது என்ன இருக்க முடியும்? மந்திரத்தின் முதல் பாகத்திலிருந்து நேரடியாக மற்ற மூன்று பாகங்களும் எழுகின்றன. கடவுள் சிருஷ்டித்துள்ள எல்லாவற்றிலும் அவர் வியாபித்துள்ளாரென்பதில் உங்களுக்கு நம்பிக்கையிருந்தால், அவரால் கொடுக்கப்படாத எதையும் நீங்கள் அனுபவிக்கக்கூடாது என்பதிலும் உங்களுக்கு நம்பிக்கை இருக்க வேண்டும். அவர் எண்ணிக்கையற்ற குழந்தைகளின் சிருஷ்டிகர்த்தா என்பதிலிருந்து, நீங்கள் யாருடைய உடைமைகளுக்கும் பேராசைப்படக் கூடாது என்று ஏற்படுகிறது. அவருடைய எண்ணிக்கையற்ற சிருஷ்டிகளில் நீங்களும் ஒருவர் என நீங்கள் எண்ணினால், நீங்கள் எல்லாவற்றையும் தியாகம் செய்து, அவரது பாதங்களில் சமர்ப்பித்துவிடுவதுதான் நியாயமாகும். எல்லாவற்றையும் தியாகம் செய்வது வெளித்தோற்ற சம்பந்தமான தியாகம் மாத்திரமல்ல ; அது இரண்டாவது அல்லது ஒரு புதிய ஜனனமேயாகும். அது மனப்பூர்வமான ஒரு நடவடிக்கை, அறியாமையால் செய்யப்பட்டதல்ல. எனவே, அது ஆன்மிக சம்பந்தமான ஒரு புனர்ஜன்மம்தான். உடலை வைத்துக்கொண்டுள்ள ஒருவர் சாப்பிடவும் தண்ணீர் குடிக்கவும் உடை உடுத்திக்கொள்ளவும் வேண்டியது அவசியம். அவர் தமக்குத் தேவையான எல்லாவற்றிற்கும் அவரை நாட வேண்டியதே இயல்பாகும். அவர் தமது துறவுக்கு இயற்கையான வெகுமதியாக, தமக்குத் தேவையானவற்றைப் பெறுகிறார்.

இதெல்லாம் போதாதென்று, அந்த மந்திரமானது இந்த மகோன்னதமான உபதேசத்துடன் முடிவடைகிறது. 'யாருடைய உடைமைகளுக்கும் பேராசைப்படாதீர்கள்.'

இந்த உபதேசங்களை நீங்கள் நிறைவேற்றிய அதே விநாடியில், நீங்கள் உலகத்தில் எல்லா ஜீவராசிகளுடனும் சாந்தமாக

வாழும் ஒரு விவேகியாகி விடுகிறீர்கள். அது, இம்மையிலும் மறுமையிலும் ஒருவருடைய மகோன்னதமான அபிலாஷைகளைப் பூர்த்தி செய்ததாகிறது. ஆனால், கடவுளிடத்திலோ, அவரது ஈடு இணையற்ற மகோன்னதமான சக்தியிலோ நம்பிக்கையில்லாதவரின் அபிலாஷைகளை அது பூர்த்தி செய்யாது.

திருவாங்கூர் மகாராஜாவை, பத்மநாபதாசர் என்று அழைப்பது அற்ப விஷயமல்ல. அதில் மகத்தான கருத்து அடங்கியிருக்கிறது. கடவுளே தமக்குத் தாசானுதாசன், அதாவது அடியார்க்கு அடியார் என்று பட்டம் சூட்டிக் கொண்டிருக்கிறார். எல்லா மகாராஜாக்களும் தம்மை இறைவனுக்கு ஊழியர்கள் என்று கூறிக்கொள்ளுவதுதான் சரியான, மிகப் பொருத்தமான வருணனையாகும். அவர்கள் மக்களின் ஊழியர்களாக இருந்தாலன்றி, இறைவனின் ஊழியர்களாக முடியாது. ஜமீன்தார்களும், பணம் படைத்த பிரபுக்களும், மற்றும் உடைமைகள் உள்ள எல்லாரும் தங்களைத் தருமகர்த்தாக்களாக எண்ணிக்கொண்டு, நான் கூறிய வண்ணம் தியாகம் செய்வார்களாயின், பின்னர் இந்த உலகம் வசிப்பதற்கு சுவர்க்க லோகம் போலாகிவிடும்.

[கொல்லத்தில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்திலிருந்து எடுத்தது]

—'ஹரிஜன்' – 30—1—1937

# 20

# தொண்டர் வரிசையில் முதல்வர்!

[திருவாங்கூரைச் சேர்ந்த ஹரிபாதத்தில் காந்திஜி நிகழ்த்திய சொற்பொழிவின் சாரமாவது:]

கொல்லத்தில் நான் பேசியபோது, ஈசோபநிஷத்தில் உள்ள முதல் சுலோகத்தைப் பற்றிக் குறிப்பிட்டேன். ஹிந்து மத சாரம் முழுவதும் அதில் அடங்கியிருக்கிறதென்றும் கூறினேன். மகாராஜா பிரகடனம் விடுத்துள்ள இச் சமயத்தில், நம் சொந்த நிலைமைக்கு இந்த மந்திரம் எவ்வளவு தூரம் பொருத்தமாக இருக்கிறதென்று பார்க்க நான் விரும்புகிறேன். பிரகடனத்தினால் உங்களுக்கு ஏற்பட்டுள்ள மகிழ்ச்சியில் தங்கு தடையின்றி நானும் பங்கு எடுத்துக் கொண்டுள்ளேன். அதற்காக உங்களைப் போல் நானும் மகாராஜாவுக்கு நன்றி செலுத்துவதுடன், வாழ்த்துக் கூறுகிறேன். எனினும், ஈசோபநிஷத்தின் இந்தச் சுலோகத்தில் அடங்கியுள்ள கட்டளை, இந்தப் பிரகடனத்தின் மூலம் வெகு காலத்திற்குப் பிறகு தாமதமாகவே நிறைவேற்றப்பட்டிருக்கிறது என்பதையும் நான் கூற வேண்டியிருக்கிறது. நேற்றுத்தான் நாம் நம்மை ஹிந்துக்கள் என்று கூறிக்கொள்ளத் தகுதியற்றவர்களாக இருந்தோம்.

இந்த மந்திரத்தின்படி அகில உலகமும் இறைவனால் வியாபிக்கப்பட்டிருக்கிறது. அதாவது பிராம்மணரும் பங்கியும், கற்றறிஞரும் தோட்டியும், ஈழவரும் பறையரும், அவர்கள் எந்தச் சாதியைச் சேர்ந்தவராயினும், எல்லோரும் இறைவனால் வியாபிக்கப்பட்டிருக்கிறார்கள். அப்படியாயின், எவரும் உயர்ந்தவரல்ல; எவரும் தாழ்ந்தவரல்ல; எல்லோரும் சமமானவர்களே. ஏனெனில் எல்லோரும் இறைவனால் சிருஷ்டிக்கப்பட்டவர்கள் அல்லவா? இது பிராம்மணர்களோ அல்லது க்ஷத்திரியர்களோ மாத்திரம் தெரிந்துகொள்ள வேண்டிய தத்துவ சம்பந்தமான விஷயமல்ல; இது நிரந்தரமான ஓர் உண்மையையே பிரகடனப்படுத்துகிறது. அந்த உண்மையைக் குறைப்பதற்கோ அல்லது மழுப்புவதற்கோ இடமில்லை.

எனவே, மகாராஜாவும் மகாராணியும் திருவாங்கூரில் உள்ள மிகத் தாழ்ந்தவரைக் காட்டிலும் ஓர் அணுக்கூட உயர்ந்தவர்கள் அல்ல. நாம் எல்லோரும் ஒரு கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டவர்கள்; அவரது ஊழியர்கள். சமமானவர்களுக்கு முதலில் மகாராஜா இருக்கிறார். அவ்வளவுதான். எஜமானர் என்ற முறையில் அவர் முதல் ஸ்தானம் வகிக்கவில்லை; தொண்டர் என்ற முறையிலேயே முதல் ஸ்தானம் வகிக்கிறார். எனவே, ஒவ்வொரு மகாராஜாவும் பத்மநாபதாசர் என்று அழைக்கப்படுவது எவ்வளவு அருமையான விஷயம், எவ்வளவு சிறப்பான விஷயம்! அது பெருமைப்பட வேண்டிய ஒரு பட்டமாகும். திருவாங்கூர் மகாராஜாவுக்கு அந்தப் பட்டம் கொடுத்தவர்களுக்கு நான் வாழ்த்துக் கூறுகிறேன். எனவே, மகாராஜாவோ அல்லது மகாராணியோ நம்மில் எவரையும் காட்டிலும் அணுவளவு கூட உயர்ந்தவர்கள் அல்ல என்று நான் கூறியபோது, மகாராஜாவும் மகாராணியுமே ஒப்புக்கொண்ட கலப்பற்ற உண்மையையே கூறினேன். அது அப்படியாயின், இங்குள்ள எவர் தாம் மற்றொருவரைக் காட்டிலும் உயர்ந்தவர் என்று இறுமாப்புடன் கூறத் துணிவர்? இந்த மந்திரம் அங்கீகரிக்கப்படுமாயின், அவர்ணர்கள் என்று கூறப்படுவோரால் கோவில்கள் அசுத்தமாகிவிட்டதாக நம்பும் ஒரு ஆடவரோ அல்லது பெண்ணோ கடுமையான பாவத்துக்கு ஆளாகிறார் என்றே கூறுவேன். எனவே, பிரகடனம் கோவில்களில் ஒட்டிக் கொண்டிருந்த களங்கத்தை அகற்றிக் கோவில்களைப் பரிசுத்தம் செய்திருக்கிறது.

நான் குறிப்பிட்ட மந்திரமானது ஆடவர்கள், பெண்கள், குழந்தைகள் எல்லோருடைய இதயத்திலும் நிரந்தரமாக இடம் பெற வேண்டுமென விரும்புகிறேன். என் அபிப்பிராயத்தில், ஹிந்து மதத்தின் சாரம் அடங்கிய அந்த மந்திரமானது ஒவ்வொரு கோவில் வாயிலிலும் செதுக்கப்பட வேண்டும். கோவில்களில் பிரவேசிக்கக்கூடாதென்று நாம் யாரையாவது தடுத்தால், நாம் அந்த மந்திரம் பொய்த்துப் போகும்படி செய்தவர்களாகிறோம் என்று நீங்கள் நினைக்கவில்லையா? எனவே, பிரகடனத்

தின் வாசகத்தை மாத்திரமல்ல, அதன் உட்கருத்தையும் மனத்திற்கொண்டு நீங்கள் அதை நிறைவேற்ற வேண்டும். நாஸ்திக வாதிகளின் நாஸ்திகத்தையும், ஹிந்து மதத்தின் உண்மையிலும் அல்லது ஹிந்து மதத்திலும் நம்பிக்கையற்ற சந்தேகவாதிகளின் சந்தேகத்தையும் அகற்றித் தீரக்கூடிய அளவுக்கு அந்தப் பிரகடனம் அவ்வளவு மகத்தான ஒரு ஆன்மிக சம்பந்தமான நடவடிக்கையென நான் கருதுகிறேன். இந்தப் பிரகடனத்தின் கருத்தைச் சரியான முறையில் உணர்ந்துகொள்ளும் பட்சத்தில், அது அறியாமையால் எழும் நாஸ்திகத்தை அறவே ஒழித்துவிடும்.

திருவாங்கூர் கோவில்கள், கடவுள் குடிகொண்டுள்ள ஸ்தலங்கள் அல்லவென்று ஒரு சமயம் நான் கூறினேன். ஆனல், பிரகடனம் வெளியான தேதியிலிருந்து, திருவாங்கூர் கோவில்கள் கடவுள் குடிகொண்டுள்ள கோவில்களாகிவிட்டன. ஏனெனில், தீண்டாதார் என்று கருதப்பட்ட எவருக்கும் இனிமேல் அங்குள்ள கோவில்களுக்குள் செல்லத் தடையிராது. எனவே, சமுதாயத்தில் பறையர்கள் என்று கருதப்பட்டவர்களுக்குக் கோவில்கள் திறக்கப்பட்டுள்ளன என்ற காரணத்திற்காக இனி திருவாங்கூரில் எங்கும் ஓர் ஆடவர் அல்லது பெண்கூடக் கோவில்களுக்குச் செல்லுவதை விட்டுவிடமாட்டார் என்று நம்புகிறேன். அந்த நம்பிக்கை நிறைவேற வேண்டும் என்பதே எனது பிரார்த்தனை.

—'ஹரிஜன்' – 30—1—1937

## 21

# மக்களின் கடமை என்ன?

திருவாங்கூர் மகாராஜாவின் பிரகடனம் மகத்தானது. அதனல், ஏற்பட்டுள்ள புண்ணியமும் மகத்தானது. அவ்விஷயமாக மகாராஜாவும் அவரது ஆலோசகர்களும் ஏற்றுக்கொண்டுள்ள பொறுப்பும் மிகப் பெரியதாகும். ஒவ்வொரு சவர்ண ஹிந்துவின் முயற்சியின்றிப் பிரகடனம் பயனற்றுப் போய்விடும் என்பதில் ஐயமில்லை. பெரிதும் சர்க்கார் நடவடிக்கையின் ஆதரவு இருந்தாலொழிய, பிரகடனத்தினல் ஏற்படக்கூடிய பூரண பலனை அடைய முடியாது என்பதையும் நான் கூற வேண்டும். எனக்குத் தெரிந்தவரையில் பிரகடனம் அமலுக்கு வர, வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் சர்க்கார் நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டும். மத சம்பந்தமான துறையை முதலில் எடுத்துக் கொள்ளுவோம். ஏனெனில், அதிலிருந்துதான் மற்றத் துறைகளிலும் நடவடிக்கைகள் தொடர்ந்து வர வேண்டும். தெய்வ நம்பிக்கையைத் தவிர வேறு மூலதனம் எதுவும் இராத பெண்மணிகள் மாத்திரமே ஆலயங்களில் அக்கறை கொண்டுள்ளனர். ஆடவர்களோவெனில், பல்வேறு கலப்பு

நோக்கங்களுடன் கோவில்களுக்குச் சென்று வருகிறார்கள். படித்தவர்கள் கோவில்களை லட்சியம் செய்வதில்லை. அதன் விளைவு என்னவெனில், கோவில்கள் ஹிந்து மதத் தத்துவத்தின் களஞ்சியங்களாக இருந்த நிலை அநேகமாக மறைந்துவிட்டது. ஹிந்து மதத்தைப் பின்பற்றியவர்களுக்கு அவை ஆன்மிக சக்தி அளிப்பதும் நின்றுவிட்டது. முன்பு கோவில்களிலும், கோவில் களுக்கு அருகிலும், சுற்றுவட்டாரங்களிலும் வீசி வந்த ஆன்மிக நறுமணத்தை எவரும் உணராதிருக்க முடியாது. ஆனால், இப்போது அத்தகைய மணம் வீசுவதும் நின்றுவிட்டது. எனவே, திருவாங்கூர் சர்க்காரோ அல்லது சமஸ்தானத்திலுள்ள பெரும்பான்மையான ஹிந்துக்கோவில்களின் பாதுகாப்பாளரான மகாராஜாவோ, கோவில்களின் புனிதத் தன்மையைப் புனருத்தாரணம் செய்யவேண்டும்; பண்டைய காலத்தில் அவைகளுக்கிருந்த அதிகாரமும் தெய்வீகமான மகத்துவமும் மறுபடியும் ஏற்படும்படி பார்த்துக்கொள்ளவேண்டும். அவ்வித நிலை மீண்டும் ஏற்பட வேண்டுமாயின், கோயில்கள் தகுந்த குருக்கள்மாரின் மேற்பார்வையில் இருக்க வேண்டியது அத்தியாவசியமாகும். அவர்கள் கோயில்களின் புனிதத் தன்மையையும் தங்களுடைய கடமைகளையும் நன்கு அறிந்தவர்களாக இருக்கவேண்டும். அதாவது குருக்கள்மார் அறியாமை காரணமாக ஜீவனத்துக்காகத் தங்கள் தொழிலைச் செய்பவர்களாக இருக்கக்கூடாது. அவர்கள், கோவில்களுக்குச் செல்லுவோரிடம் கடவுளின் கட்டளையை உபதேசிக்கும் பாக்கியம் தங்களுக்குக் கிடைத்திருப்பது பற்றிப் பெருமையடைபவர்களாக இருக்க வேண்டும்; அந்தக் கோவில்கள் தெய்வீக ஸ்தலங்கள் என்பதைத் தங்களுடைய சொந்த நடத்தையின் மூலமும், வாழ்க்கையின் மூலமும் காட்டுபவர்களாக இருக்க வேண்டும்.

பிறகு, அந்தக் கோவில்களில் குற்றம் குறையற்ற சரியான போதனையும் அளிக்கப்பட வேண்டும். கோவில்களை மேற்பார்வையிடுவோரில் யாராவது ஹரிஜனங்களைக் கைபிடித்துச் சென்று ஆலய வழிபாட்டினால் அவர்களுக்கு என்ன லாபம் என்பதை எடுத்துக் கூற வேண்டும். இது, நவீன சிந்தனைக்கு இணங்க, கோவில்களின் நிர்வாகத்திலும் பாதுகாப்பிலும் ஒரு புரட்சியே என்பதில் சந்தேகமில்லை. மகாராஜாவின் பிரகடனமே புரட்சிகரமான ஒரு தஸ்தாவேசுதானே. அந்தப் புரட்சி எல்லா ஹிந்துக்களுடைய வாழ்க்கையையும் தொட்டுத்தான் தீரவேண்டும். அவ்விதம் தொட வேண்டுமாயின், இயற்கையாகவே கோவில்கள் ஜீவசக்தியுள்ள கடவுளின் வாசஸ்தலங்களாக இருக்க வேண்டுமேயல்லாது, தங்கம் அல்லது வேறு உலோகங்களால் செய்யப்பட்ட வெறும் உருவங்களின் வாசஸ்தலங்களாக இருக்கக்கூடாது.

அடுத்தபடியாக, பாமர மக்களும் புரிந்துகொள்ளக்கூடியவாறு அந்தக் கோயில்களின் சரித்திரம் எழுதப்பட வேண்டும்.

அதன் பிரதிகள், அந்தக் கோயில்களைப் பற்றி அறிந்துகொள்ள விரும்புவோருக்கு இலவசமாகவோ அல்லது மலிவான விலைக்கோ வழங்கப்படவேண்டும். அவ்விதம் செய்வதாயின், மக்களுக்கு மத சம்பந்தமான பயிற்சியளிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளக் கூடிய சரியான உபாத்தியாயர்களைப் பயில்விக்க ஒரு பயிற்சிக் கல்விச்சாலையும் ஏற்பட வேண்டும். அது போன்ற ஏதாவதொரு முயற்சி எடுத்துக்கொள்ளப்படா விட்டால், பிரகடனத்தின் நோக்கம் வீணாகிவிடும்; அதாவது மதப் பற்றுடனும் பயபக்தியுடனும் லட்சக்கணக்கான ஹரிஜனங்கள் கோவில்களுக்குள் செல்லுவார்கள் என்று எதிர்பார்ப்பதோ, கோவில்களுக்குள் செல்லும்படி அவர்களைத் தூண்டுவதோ சாத்தியமிராமற் போய் விடும் என்று அஞ்சுகிறேன்.

அடுத்தபடியாக, பொருளாதாரத் துறையை எடுத்துக் கொள்கிறேன். ஹரிஜனங்களின் பொருளாதார வாழ்க்கையை அதன் பரிதாபகரமான நிலையிலிருந்து உத்தாரணம் செய்ய வேண்டும். புத்திசாலித்தனமாகவும் தீர்க்காலோசனையுடனும் தயாரிக்கப்பட்ட திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதன் மூலம், சொற்ப மூலதனத்துடன் குறுகிய காலத்தில் அதை நிறைவேற்ற முடியும். அதன் பலனாக, யோக்கியப் பொறுப்புடன் சம்பாதிக்கும் முறையைப் போதிப்பதன் மூலம் ஹரிஜனங்கள் பிறருடைய தயவின்றித் தாங்களே தங்கள் ஜீவனத்தை எளிதில் நடத்தும் திறனைப் பெறலாம். இந்த மக்களின் அறிவுப் பயிற்சியையும் அதாவது இலக்கியப் பயிற்சியையும் இப்போது அரசாங்கம் அசட்டை செய்யத் துணியாது. புலையர்களுடனும் பறையர்களுடனும் சம்பாஷணையைத் தொடர்ந்து நடத்துவது கஷ்டமாக இருக்கிறது என்பதை நான் அனுபவபூர்வமாகத் தெரிந்துகொண்டுள்ளேன். அவ்விதம் சம்பாஷணை நடத்த முடியாததால், எனக்குத் தொல்லைகளும் ஏற்பட்டதுண்டு. வாழ்க்கையின் சாதாரண உண்மைகளைப் பற்றிக்கூட அவர்கள் பதில் கூற முடியாதவர்களாக இருக்கிறார்கள்.

அது போலவே, அரசாங்கம் ஹரிஜனங்களின் சமுதாய அந்தஸ்தையும் உயர்த்த வேண்டியதாக இருக்கிறது. தர்பார் போன்ற சமஸ்தான வைபவங்களுக்கும் நடவடிக்கைகளுக்கும் சர்க்கார் ஹரிஜனங்களுக்கு அழைப்பு அனுப்ப வேண்டும். அந்த வைபவங்கள் பற்றித் தங்களுக்கு எதுவுமே தெரிவதில்லை என்று அவர்கள் எண்ணும்படிவிடக்கூடாது. அந்த வைபவங்களில் கலந்துகொள்ளுவதற்குத் தாங்களும் அழைப்புக் கடிதங்கள் பெற உரிமையளிக்கும் சமுதாய அந்தஸ்துக்காக, தாங்கள் மற்றொரு கிளர்ச்சி நடத்தும்படியிருக்கும் என்று அவர்கள் எண்ணும்படி விடக்கூடாது. நான் கூறும் பொருள் பிரகடனத்திற்கு இருக்குமாயின், கோவில்களில் பிரவேசிக்க ஹரிஜனங்களுக்கு மத சம்பந்தமான அந்தஸ்து ஏற்பட்டது போலவே, ஹரிஜனங்களின் சமுதாய அந்தஸ்தும் ஏதோ மந்திரத்தினால் உயர்ந்தது போல் உடனே உயர்ந்துவிடும்.

ஹரிஜனங்களின் உத்தாரணத்திற்காக நான் கூறும் யோசனை இதுதான்: நான்கு ஷரத்துக்கள் அடங்கிய இந்தத் திட்டத்தில், திருவாங்கூரைப் போன்ற ஒரு சமஸ்தானத்தின் சக்திக்கோ அல்லது நிதி பலத்துக்கோ அப்பாற்பட்டது எதுவும் இல்லை என்பதே எனது தாழ்மையான அபிப்பிராயம். சமஸ்தானத் திற்கு நான் பணிவுடன் கூறுவது இவ்வளவுதான்.

நான் இப்போது மீண்டும் உங்கள் விஷயத்திற்கு வரவிரும்பு கிறேன். இந்தக் காரியங்களையெல்லாம் செய்து முடிக்க அர சாங்கம் தீர்மானிக்கலாம். எனினும், அரசாங்கத்தின் தீர்மானம் அவற்றையெல்லாம் நிறைவேற்றுவதற்குற்ற மனித சக்தியைக் கொண்டு வந்துவிட முடியாது. மகாராஜா, மகாராணி, அவர் களுடைய ஆலோசகர்கள் முதலியோருக்கு நான் விண்ணப்பித் துக்கொண்டுள்ள சில வார்த்தைகளிலிருந்து, 'அவர்கள்தான் எல்லாவற்றையும் செய்ய வேண்டும்; நீங்கள் செய்யவேண்டியது எதுவுமில்லை' என்று நீங்கள் எண்ணுவீர்களாயின், எனது முயற்சி யெல்லாம் யாதொரு பலனுமின்றி வீணாகிவிடும் என அஞ்சுகி றேன். அவசியமான மனித சக்தி உங்களிடமிருந்துதான் கிடைக்க வேண்டும். பணத்தைக் கொடுப்பதன் மூலம் மனித சக்தி வந்துவிடாது என்று, இவ்விஷயங்களில் அனுபவம் உள்ள வன் என்ற முறையில் உங்களுக்கு நான் கூறுகிறேன்.

உதாரணமாக, கோவில்களின் நிர்வாகத்தை ஏற்று நடத் தும் திறமையுள்ள மனிதர்களை, நூற்றுக்கணக்கான ரூபாய் உத வித் தொகைகள் அளிப்பதன் மூலம் பெற்றுவிட முடியாது. அத் தகையோர், மதஉணர்ச்சியால் தூண்டப்பட்டவர்களாக இருக்க வேண்டும்; தங்கள் வேலையில் மிகுந்த விருப்பம் உடையவர்க ளாக இருக்கவேண்டும்; எனவே, ஜீவனத்திற்குப் போதுமான சிறு தொகைக்கு அவர்கள் வேலை செய்யத் தயாராக இருக்க வேண்டும். இந்தப் பயிற்சி பெறுவதையும், வாழ்க்கையின் மகோன்னதமான கடமைக்குத் தங்களைத் தகுதியாக்கிக்கொள்ளு வதையும் அவர்கள் தங்களுக்குப் பெருமையாகவும் பாக்கியமாக வும் கருத வேண்டும். அதுபோலவே, ஹரிஜனங்களுக்குக் கல்விப் பயிற்சி அளிப்பதற்குத் தேவையான மனிதர்கள் அரசாங் கத்துக்குக் கிடைத்தாலன்றி, அரசாங்கம் எதுவும் செய்ய முடி யாது.

திருவாங்கூர் மகாராஜாக்கள் ஏற்றுக்கொண்டுள்ள பத்ம நாபதாசர் என்ற பட்டத்தில் விரிந்த பொருள் அடங்கியிருக் கிறது. தங்களைக் கடவுளின் ஊழியர்கள் என்று கூறிக்கொள்ளு வதில் அவர்கள் பெருமை அடைகிறார்கள். ஆனால், அவர்கள் தங்களுடைய மக்களுக்கும் ஊழியர்கள் என்பதே அதன் அர்த்த மாகும். அந்த மகாராஜாக்கள், திருவாங்கூர் மக்களிடையே முதல் எஜமானர்கள் அல்ல, முதல் ஊழியர்களே என்று இங்கே நடந்த கூட்டங்களொன்றில் நான் கூறினேன். மக்களும் ஊழியர்கள்தான். ஆனால், மக்களின் முதல் ஊழியர்களுக்கு

அவர்களுடைய சகபாடிகளான மக்கள் திறமையுடன் உதவி புரிந்தாலன்றி, முதல் ஊழியர்கள் வெற்றி பெற முடியாது.

ஒவ்வொரு நாளும் மகாராஜா கோவிலுக்குச் சென்று, தமது தினசரி அலுவல்கள் சம்பந்தமாக ஸ்ரீ பத்மநாபஸ்வாமியிடம் கட்டளைகள் பெற்று வருகிறார் என்பதன் பொருள் என்னவெனில், ஆன்மிகம், மதம், சமுதாயம், பொருளாதாரம் இந்த நான்கு துறைகளிலும் மக்கள் தங்களுடைய சொந்த நன்மைக்காக மகாராஜாவுக்கு உதவி புரியவேண்டும் என்பதேயாகும்.

—'ஹரிஜன்' - 6--2--1937

# 22

# கோவில்கள் மறைந்தால்

அன்பார்ந்த மகாத்மாஜிக்கு,

இந்தக் கடிதத்தின் விஷயம், தங்களுக்குத் தாங்களே சுமத்திக் கொண்டுள்ள தீண்டாமை பற்றியதாகும். பிராம்மணரல்லாத சவர்ண ஹிந்துக்கள் கூட, கோவிலில் உள்ள தேவர்களுக்கும் தேவிகளுக்கும் தீண்டாதாராக இருக்கிறார்கள். எல்லாப் பொதுக் கோவில்களிலும் சாதி பிராம்மணர்களே பூஜை செய்கிறார்கள். கோவிலுக்குள் வணங்கப்படும் தேவர்களுக்கும் தேவிகளுக்கும், சவர்ண பிராம்மணர்களைத் தவிர மற்ற யாவரும் தீண்டாதார்தான்.

பிராம்மணரல்லாத சவர்ண ஹிந்துக்களின் வீடுகளில் சொந்தக் கோவில்கள் ஏராளமாக இருக்கின்றன. அங்கும் சவர்ண பிராம்மணர்களே பூஜை செய்கிறார்கள். அந்தக் கோவில்களின் சொந்தக்காரர்களும், அவற்றிற்குச் செலவு செய்வோரும், குருக்கள்மாருக்குச் சம்பளம் கொடுப்பவர்களும் பிராம்மணரல்லாத சவர்ண ஹிந்துக்களே. அப்படியிருந்தும் அவர்கள் தங்கள் சொந்தக் கோவில்களில்கூட தீண்டாதாராகவே இருக்கிறார்கள். இது தங்களுக்குத் தாங்களே சுமத்திக் கொண்டுள்ள தீண்டாமை அல்லவா? இந்தத் தீண்டாமைக்கு ஓர் உதாரணம் கூறுகிறேன்:

என் வீட்டிலிருந்து சுமார் மூன்று மைல் தூரத்தில் செம்படவர்களின் கிராமம் ஒன்று இருக்கிறது. தீண்டாதார்களான அவர்கள் 'ஷெட்யூல்ட்' சாதியைச் சேர்ந்தவர்கள். அவர்களிடையே அவர்களுக்குச் சொந்தமான பிராம்மணர்கள் இருக்கின்றனர். அந்தப் பிராம்மணர்களை, சவர்ண ஹிந்துக்கள் தீண்டாதாராகவே கருதுகிறார்கள். தீண்டாதார்களான இந்தப் பிராம்மணர்களே, செம்படவர்களுடைய வீடுகளில் சாதாரண பூஜைகள் செய்கின்றனர். இந்தப் பிராம்மணர்களை, அசவர்ணப் பிராம்மணர்கள் அல்லது அவர்ணப் பிராம்மணர்கள் என்று கூறுகின்றனர். செம்படவர்களின் அந்தக் கிராமத் தலைவர்கள் செல்வவந்தர்கள். அவர்களுக்கு ஏராளமான நிலபுலன்கள் இருக்கின்றன. அவர்களுடைய வீடுகளுக்குப் பக்கத்தில் ஜகன்னாதர் ஆலயம் இருக்கிறது. அந்தத் தலைவர்களின் செலவில்தான் அக்கோவில் நிர்மாணிக்

கப்பட்டு, அதன் நிர்வாகமும் நடந்து வருகிறது. தினசரி பூஜைச் செலவையும் அவர்களே ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். ஒரிஸ்ஸாவிலிருந்து அழைத்து வந்துள்ள சவர்ண பிராம்மணர்கள் தான் பூஜை செய்கிறார்கள். கோவிலின் சொந்தக்காரர்களான செம்படவர்கள், ஜகன்னாதர் ஆலயத்திலுள்ளவிக்கிரகங்களுக்கும் தீண்டாதாராக இருப்பது மாத்திரமல்ல; அவர்கள் அந்த கோவிலுக்குள் பிரவேசிக்கக்கூடமுடியாது. வெளியிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டுள்ள பிராம்மணர்களின் மூலம்தான் அவர்கள் கோவில் தெய்வங்களை வழிபட வேண்டும்.

வருடத்தில் இரண்டு நாட்கள் மாத்திரம் ரதோற்சவத்தின்போது கோவில் விக்கிரகங்களை வெளியே கொண்டுவந்து, தேரின்மீது ஏற்றுகிறார்கள். அப்போது மாத்திரமே கோவில் சொந்தக்காரர்களான செம்படவர்கள் விக்கிரகங்களைத் தொடலாம். அது மாத்திரமல்ல. அவர்கள் தொட்டதால் விக்கிரகங்கள் அசுத்தமாகிவிடுகின்றனவாம். எனவே, பிறகு அபிஷேகம் செய்து பரிசுத்தமாகாமல் விக்கிரகங்கள் மறுபடியும் கோவிலுக்குள் செல்ல முடியாது. இரண்டு நாள் ரதோற்சவத்திற்குப் பிறகு அபிஷேக வைபவத்தின் செலவையும் அந்தச் செம்படவர்களே ஏற்றுக்கொள்ளுகிறார்கள். இது தனக்குத்தானே சுமத்திக் கொண்டுள்ள தீண்டாமை இல்லையாயின், இதன் அர்த்தம்தான் என்ன? தாங்கள் இம்மையிலும் மறுமையிலும் கடைத்தேறுவது, தீண்டாமையைச் சரிவர அனுஷ்டிப்பதையே பொறுத்திருக்கிறது என்று ஹிந்து சமுதாயத்திலுள்ள பெரும்பாலோரும் நம்புகின்றனர்; அல்லது நம்பும்படி செய்யப்பட்டிருக்கிறார்கள். ஒரு விக்கிரகத்தையோ அல்லது ஒரு பிராம்மணரையோ தீண்டுவது பாவமென்றும், அவ்விதம் தீண்டுவோர் நரகத்துக்குச் சென்றுதான் தீரவேண்டுமென்றும் தீண்டாதார் கற்பிக்கப்பட்டிருக்கிறார்கள். தீண்டாமையில் உள்ள பல்வேறு சிக்கல்களையும் பூரணமாக விவரிப்பதென்பது முடியாத காரியம். தீண்டாமை, பிராம்மணரின் ஆதிக்கத்துக்கு நிரந்தரமான இடம் ஏற்படும்படி செய்திருக்கிறது. இதெல்லாம் கற்பனையான ஒரு சக்திக்குக் கோட்டையாகக் கோவில் இருந்து வருகிறது என்பதற்காகத்தான்.

தீண்டாதாருக்கு இப்போது மிகவும் தேவையாக இருப்பது உண்மையை அறிந்துகொள்ளுவதற்குற்ற கலப்பற்ற அறிவேயாகும். ஆனால், கோவிலில் உள்ள தீண்டாமை அதற்கு நேர்மாறான பலனையே அளிப்பதாக இருக்கிறது.

புத்தரால் கோவில்களைச் சீர்திருத்த முடியவில்லை. எனவே, அவர் கோவில்களை ஒழித்துக் கட்டினார். அதன் பயனாக, இந்தியா முழுவதும் தீண்டாமைக் கோவில்களின் ஸ்தானத்தில் புத்தர் கோவில்கள் தாற்காலிகமாக ஏற்பட்டன. எனினும், காலக் கிரமத்தில் மறைந்த கோவில்கள் மீண்டும் உயிர் பெற்று, புத்தர் கோவில்களைப் பழங்கதைகளாகும்படி செய்துவிட்டன.

எனவே, தீண்டாமை நிலவும் கோவில்களைச் சீர்திருத்துவதென்பது முற்றிலும் முடியாத காரியம். மானிட வர்க்கத்தின் க்ஷேமத்திற்காக, கோவிலில் நிலவும் மத அதருமம் ஒழிக்கப்படவேண்டும்; அதற்கு இப்போது கால சக்திகள் சாதகமாக இருக்கின்றன. தீண்டாதாரின் கதி மோட்சம், அந்தக் கோவில்கள் அடியோடு அழிவதையே பொறுத்திருக்கிறது. ஏனெனில், அவைகளில் தீண்டாமையே மதத்தின் சாராம்சமாக இருக்கிறதல்லவா? கால சக்திகள்

தங்களுடைய நாசவேலையை மெதுவாகவும், ஆனல், உறுதியாகவும் செய்து வருகின்றன. நீங்கள் சத்தியத்தை நாடுபவராக இருக்கிறீர்கள். இறைவன், அறிவில்லாத அந்தத் தீண்டாதார்களுக்கு உங்கள் மூலம் கலப்பற்ற அறிவு உண்டாகும்படி அருள் புரிவாராக. அப்படியாயின், அவர்கள் உங்களைப் பின் பற்றி, சத்தியத்தைக் காணலாம்.

உங்கள் உண்மையுள்ள,
ஹர தயாள் நாக்

வங்காளத்தின் இந்த முதுபெரும் மனிதர் பெரிய பிரச்னைகளைப் புதிய கோணத்தில் அணுகுகிருர் என்பதைக் காட்டவே இந்தக் கடிதம் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. கோவிலில் தீண்டாமை ஒழியாவிடில், கோவில்கள் ஒழிந்துவிட வேண்டும் என்று ஸ்ரீ ஹர தயாள் நாக் உண்மையில் கூறுகிருர். கோவில்கள் போய்விட்டால், அவைகளுடன் நாம் காணும் ஹிந்து மதமும் மறைந்தே தீரும்.

—'ஹரிஜன்' - 8—5—1937

# 23
# தீண்டாமை செல்லாது

**கேள்வி:** என் தாயார் சென்ற மாதம் காலமானர். ஹரிஜனங்களால் சமைக்கப்பட்ட உணவைச் சாப்பிடும் வழக்கத்தை நான் வெகு காலமாகப் பின்பற்றி வருகிறேன். இதை வைதிகர்கள் விரும்பவில்லையெனினும், அவர்கள் இதைச் சகித்துக்கொண்டு வந்தார்கள். மூன்று ஆண்டுகளுக்கு முன் ஒரு முஸ்லிம் நண்பரின் தாயார் காலமானர். அதையொட்டி நடந்த விருந்துக்கு முஸ்லிம் நண்பர் என்னை அழைத்திருந்தார். நானும் அழைப்பை ஏற்றுக்கொண்டு சாப்பாட்டுக்குச் சென்றிருந்தேன். இப்போது என் தாயார் காலமாகிவிட்டதால், அதன் சம்பந்தமான எல்லாச் சடங்குகளையும் என் சமூகத்தினர் பகிஷ்காரம் செய்துள்ளனர். நான் என்ன செய்வது?

**பதில்:** உங்களுக்குத் தைரியமிருந்தால், உங்கள் சாதியினர் என்ன வேண்டுமானலும் செய்துகொள்ளட்டுமென்று இருந்துவிடுங்கள். ஆனல், நீங்கள் என்ன நேர்ந்தாலும் உங்கள் முஸ்லிம் நண்பருடன் நட்புக்கொண்டு, அவசியமான போதெல்லாம் அவருடன் சாப்பிடுங்கள். அத்தகைய பகிஷ்காரங்களைக் கண்டு சிறிதும் பீதியடையக் கூடாது.

**கே:** நான் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் அங்கம் வகிக்கிறேன். தீண்டாமை சம்பந்தமான விலக்குகளில் எனக்கு

நம்பிக்கையில்லை. நான் அவற்றை அனுஷ்டிப்பதும் இல்லை. ஆனால், நான் எனது முன்னோர்களால் நிர்மாணிக்கப்பட்ட கோவிலின் தருமகர்த்தாவாக இருக்கிறேன். எனது முன்னோர்கள் மத விஷயங்களில் பரம வைதிகர்கள். எனவே அந்தக் கோவிலை ஹரிஜனங்களுக்குத் திறந்துவிடுவது, ஒரு நம்பிக்கைத் துரோகமாகும் என்று நான் கருதுகிறேன். இந் நிலையில் அது, நான் சத்தியாக்கிரகப் பிரதிக்ஞையில் கையெழுத்திடுவதற்குத் தடையாக இருக்குமா?

ப: நீங்கள் பிரதிக்ஞையில் கையெழுத்திடுவதற்கு அது நிச்சயமாக ஒரு தடையாக இருக்கும். நீங்கள், கோவிலைத் திறப்பதற்குச் சட்டம் இடமளித்தால், அது நம்பிக்கைத் துரோகமாகாது. தீண்டாமை நீதியற்றது, ஒழுங்கீனமானது என்பதை இப்போது நாம் அறிந்துகொண்டு விட்டதால், அது (தீண்டாமை) செல்லாது.

—'ஹரிஜன்' –8—6—1940

# 24

# ஹரிஜனங்களின் கடமை

வத்வானிலிருந்து ஒரு நண்பர் எழுதுகிறார் :

"ஹரிஜனங்கள் கோவிலுக்குள் செல்லும் விஷயமாக உங்களுக்கு அறிக்கைகள் வந்து கொண்டிருக்கும். இப்போதெல்லாம் ஹரிஜனங்களை எப்படியாவது தருமகர்த்தாக்களின் சம்மதத்தைப் பெற்றோ அல்லது பெறாமலோ, கோவில்களுக்கு அழைத்துச் செல்கிறார்கள். வைஷ்ணவ மடங்களிலோ அல்லது ராம்ஜி மந்திர்களிலோ ஹரிஜனங்களை அனுமதிக்க வேண்டுமென வற்புறுத்துவதை அறிந்து கொள்ளலாம். ஆனால், அவர்கள் நம்பிக்கை வைக்காத சுவாமி நாராயன் அல்லது ஜைனக் கோவில்களுக்குள் ஹரிஜனங்களை அழைத்துச் செல்லுவதால் என்ன நன்மை ஏற்பட முடியும் என்பதைத்தான் அறிந்து கொள்ள முடியவில்லை. அல்லது, ஹரிஜனங்களை அந்தக் கோவில்களுக்குள் செல்ல அனுமதித்தால் உடனே அவர்களுக்கு நம்பிக்கை உண்டாகிவிடும் என்று கருதுகிறார்களா?"

மற்றொரு கடிதம் அகமதாபாத்திலிருந்து வந்திருக்கிறது. அது கையெழுத்திடப் படவில்லை. அடியில் 'உங்கள் ஒடுக்கப்பட்டவர்களில் ஒருவர்' என்ற புனைப் பெயர் மாத்திரம் இருக்கிறது. அதன் கையெழுத்திலிருந்தும் பாஷையிலிருந்தும் எனக்குத் தெரிந்த ஹரிஜனங்கள் அதை எழுதவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. அதன் உசிதமான பகுதி பின்வருமாறு.

"14-ந் தேதி நடந்த மகர சங்கராந்தி விழா அன்று ஹரிஜனங்கள் கோவில்களுக்கு விஜயம் செய்ய முயற்சித்தார்கள். அவர்கள் பஜனை கோஷ்டிகளுடன்

காலை 8 மணிக்குச் சுவாமி நாராயண மந்திரை அடைந்தபோது, கதவுகள் மூடப்பட்டும் பூட்டப்பட்டும் இருந்தன. அவர்கள் கீழே சாந்தமாக உட்கார்ந்து கொண்டு சத்தியாக்கிரகம் செய்கிறார்கள். அவர்கள் வேலைகளுக்குச் செல்ல மறுக்கிறார்கள். ஸ்தல காங்கிரஸ் கமிட்டி அவர்களுடைய நடவடிக்கையைக் கண்டித்திருக்கிறது. எவ்வளவு விசித்திரம்! சுதந்திரம் கிடைத்த பிறகு கூட அவர்கள் தங்களுடைய உரிமைகளைப் பெறுவிடில் பின்னர் எப்போதுதான் பெறப்போகிறார்கள்? ஸ்தல காங்கிரஸ்வாதிகள் அங்கே சென்று, சில நிமிஷ நேரம் அங்கே தங்கிவிட்டு வந்துவிடுகிறார்கள்! ஹரிஜனங்கள் சார்பில் தீவிர முயற்சி எதுவும் இல்லை. அவர்களுக்குப் பிரயோசனகரமான உதவியும் இல்லை. ஏழை ஹரிஜனங்கள் தங்களுடைய ஏமாற்றத்தை மறப்பதற்காகக் கொடிய குளிரில் பக்திப் பாடல்களை உரக்கப் பாடிக்கொண்டிருக்கிறார்கள். இந்த முட்டுக்கட்டையை யார் தீர்ப்பது? இங்குள்ள காங்கிரஸ்வாதிகளி டையே தனிச் சிறப்போ, அந்தஸ்தோ வாய்ந்தவர் எவரும் இல்லை. டகோரில் கோவில்களுக்குள் ஹரிஜனங்களை அனுமதிக்கும்படி செய்ய ஸ்ரீ ரவி சங்கர் மகராஜ் தமது செல்வாக்கை உபயோகித்தார். ஆனால், இங்கு கோவில் களுக்குள் அவர்களை அனுமதிக்கும்படி செய்ய யாருமில்லை. ஹரிஜனங்களின் இயற்கையான உரிமைக்கு என்றென்றுமே முட்டுக்கட்டை இருந்துவர வேண்டியதுதானா? இதில் நீங்கள் தலையிட்டால் மாத்திரமே, நிலைமை மோச மாகிவிடாமல் பாதுகாக்க முடியும். இன்றோடு மூன்று நாட்களாக ஆயிரக் கணக்கான ஹரிஜன சத்தியாக்கிரகிகள் கோவில் வாசலுக்கு முன்னே கொடிய குளிரிலும் பனியிலும் உட்கார்ந்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் சட்டத் தின் உதவியை நாட விரும்பவில்லை. சவர்ணர்கள் என்று கூறப்படுவோரின் கல் மனமும் கரையுமென்று தோன்றவில்லை. இதற்கு முடிவு என்ன? தயவு செய்து நீங்கள் ஒரு வழி காட்டுவீர்களா?''

முதல் கடிதம் எழுதியிருப்பவர் குறிப்பிட்டுள்ள வேற்று மைக்கு அர்த்தமில்லை என்பதே என் அபிப்பிராயமாகும். சுவாமி நாராயண், ஜைனக் கோவில்களுக்குச் செல்ல ஹரிஜனங்களுக்கு உரிமையுண்டு. அவர்கள் அக்கோவில்களுக்குச் செல்லவும் செல்லுகிறார்கள். அவ்விதம் செல்ல அவர்கள் அனுமதிக்கப் படவும் வேண்டும். ஹரிஜனங்களுக்கு, கோவில்களுக்குள் செல்ல, பிராம்மணர்களுக்குச் சமமான உரிமைகள் கிடைக்க வேண்டும் என்பதற்காகச் சென்ற பல ஆண்டுகளாக ஓர் இயக் கம் நடந்து வருகிறது. அந்த இயக்கம் மிகுந்த வெற்றியையும் அடைந்திருக்கிறது. இப்போது பம்பாய் சர்க்கார் அவ்விதம் ஒரு சட்டமும் நிறைவேற்றியிருப்பதால், சத்தியாக்கிரகத்திற்கு இடமேயில்லை என்று தோன்றுகிறது.

சட்டம் பொது மக்களின் அபிப்பிராயத்தைப் பிரதிபலிக்கு மாயின், அது பொது மக்களின் மனப்பூர்வமான சம்மதத்தையும் மதிப்பையும் பெற்றுத்தான் தீரும். அதற்கு மாறாக, அது பொது ஜன அபிப்பிராயத்துக்கு விரோதமாக இருக்குமாயின், அது அம லுக்கு வருவது தடைப்படும். ஜனநாயகத்தில் ஒரு சட்டத்தைப் பலாத்காரத்தினால் அமுலுக்குக் கொண்டுவரமுடியாது. அதைச் செயலில் கொண்டு வருவதில் விவேகமும் விழிப்பும் அவசிய

மாகும். சீர்திருத்தக்காரர், சட்டத்தைப் புத்திசாலித்தனமாகவும் பகுத்தறிவுடனும் உபயோகிக்கும் பட்சத்தில், அதன் நோக்கம் வெற்றி பெறும். அவசரமோ அல்லது பொறுமையின்மையோ அதன் நோக்கத்தைச் சிதைத்துவிடும்.

தருமகர்த்தாக்கள், கோவில்களின் சொந்தக்காரர்கள் அல்ல. பொது மக்களின் உபயோகத்திற்காக நிர்மாணிக்கப்படும் கோவில்களின் சொந்தக்காரர்களுக்குக்கூட, கோவில்களின் சொத்து உரிமையில்லை. கடவுளை வழிபடுவதற்காகக் கோவில்களுக்குச் செல்லும் பக்தர்களே கோவில்களின் உண்மையான சொந்தக்காரர்களாவர். இந்த ரீதியில் ஆலோசிக்குமிடத்து, ஜைன, ஸ்ரீ சுவாமி நாராயணர் கோவில்கள் ஹிந்து ஆலயங்களே. நானே இந்தக் கோவில்களுக்குச் சென்றிருக்கிறேன். நான் எந்த மதப் பிரிவைச் சேர்ந்தவன் என்பதை விசாரிக்க யாரும் அக்கறை கொண்டதேயில்லை. நான் ஒரு ஹிந்துவைப் போல் தோன்றுவதே போதுமானது. அந்தக் கோவிலுக்குச் செல்லும் என்னைப் போன்ற நூற்றுக்கணக்கான மற்றவர்களுக்கும் இதே வாதம் பொருந்தும். எனவே, ஹிந்துக்களுக்குத் திறக்கப்பட்டுள்ள எல்லாக் கோவில்களுக்கும் செல்ல ஹரிஜனங்களுக்குச் சுதந்திரம் இருக்க வேண்டும். இன்று உணர்வு பெற்றுள்ள பொது மக்களின் அபிப்பிராயமும், அந்தக் கருத்துக்கு உருவம் அளித்துள்ள சட்டமும், ஹரிஜனங்களை ஒரு தனி சாதியாகக் கருதவில்லை; ஹிந்து சமுதாயத்தில் அடங்கியுள்ள நான்கு அல்லது பதினெட்டு வர்ணங்களின் ஒரு முக்கிய பகுதியாகவே அவர்களைக் கருதுகிறது. எனவே, அதற்கு மாறான கருத்து ஆக்கம் பெறுவதற்கில்லை. பக்தர்களின் பக்தியே ஒரு கோவிலை ஜீவசக்தியுள்ள ஆலயமாகச் செய்கிறது. கோவிலில் உள்ள தெய்வம், பக்தர்களுடைய உணர்ச்சியின் பிரதிபிம்பமேயன்றி வேறெதுவும் அல்ல.

இரண்டாவது கடிதத்தை எடுத்துக்கொள்ளுவோம். ஹரிஜனங்களின் பிடிவாதத்தை என்னால் பாராட்ட முடியவில்லை. கோவில் வாசலில் உட்கார்ந்திருப்பவர்கள் உண்மையான பக்தர்கள் அல்ல. தேவ தரிசனத்திற்காக அவர்கள் ஏங்கவில்லை. அவர்கள் தங்களுடைய உரிமையைப் பெறுவதற்காக மாத்திரமே அவ்விதம் செய்து வருகிறார்கள். அவ்வளவில் அவர்கள் உண்மையான மதத்திற்கு அப்பால் விலகிச் சென்று வருகின்றனர். அநாமதேயமாகக் கடிதங்கள் எழுதுவதோ, அல்லது உங்களுக்காகப் பிறரைக்கொண்டு கடிதங்கள் எழுதும்படி செய்வதோ, ஒரு பக்தருக்கு உரிய அறிகுறியல்ல.

நந்தனர், இறைவனைத் தவிர வேறு யாருடைய உதவியையும் நாடவில்லை. ஓர் உண்மையான பக்தர் நந்தனரின் அடிச்சுவடுகளையே பின்பற்றி நடப்பார். தம்மை 'உயர்ந்த சாதி'யைச் சேர்ந்தவர் என்று கருதும் பிராம்மணர்கூட நந்தனரை வணங்குகிறார். தாங்களாக விரும்பி ஹரிஜனங்களாகியுள்ளவர்களிடையே

ஒரு நந்தனர் பிறக்க வேண்டும் என்பதே எனது ஆர்வம். பிறப்பினுல் ஹரிஜனங்களாக இருப்பவர்களின் விருப்பமும் அப்படித்தான் இருக்க வேண்டும் என்பதை நான் அறிவேன். ஹரிஜன் அல்லாத ஹிந்து சமூகத்தினர் விரும்பினுல், அவர்கள் மதிப்புடனும் மரியாதையுடனும் ஹரிஜனங்களைத் தங்கள் கோவிலுக்குள் அழைத்துச் செல்லட்டும். இல்லாவிடில், அந்த உயர்ந்த நிலை ஏற்படும் வரையில் ஹரிஜனங்கள் தங்களுடைய வீடுகளிலேயே தங்கி, பக்தி என்ற கங்கா தீர்த்தத்தினுல் அவற்றை (வீடுகளை) புனிதமாக்கிக்கொள்ளுவார்களாக. அவர்கள் கீழே உட்கார்ந்து கொள்ள வேண்டிய அவசியமோ, கோவில் முன் சத்தியாக்கிரகம் செய்ய வேண்டிய அவசியமோ இல்லை. அவ்விதம் செய்வது மதவிரோதமானது, பாவமானது, தவிர்க்கப்படுவதற்குரியது.

(காந்திஜி குஜராத்தியில் எழுதியதிலிருந்து எடுக்கப்பட்டது)

— புது டில்லி — 27—1—1948

# 25

# கோவில்கள், ஆன்மிக வைத்தியசாலைகளே

ஒரிஸ்ஸாவைச் சேர்ந்த வீர புருஷோத்தமபுரி என்ற கிராமத்துக்குக் காந்திஜி விஜயம் செய்தபோது, அங்குள்ள சிவன் கோவிலுக்கு அருகில் அவருக்கு அந்தக் கிராமத்திலுள்ள பிராம்மணர்கள் ஜாகை வசதி செய்து கொடுத்திருந்தனர். அக்கிராமம் ஒரிஸ்ஸா ராஜாக்களால் பிராம்மணர்களுக்கு மான்யம் கொடுக்கப்பட்டதாகும். அவர்கள் தீண்டாமை ஒழிப்பை ஆதரிக்கிருர்களெனினும், தங்கள் கொள்கையை உறுதியுடன் அமலுக்குக் கொண்டுவரும் தைரியம் அவர்களுக்கு இல்லை. எனவே, அவர்கள் கூட்டத்தில் பேசியபோது காந்திஜி கீழ்வருமாறு குறிப்பிட்டார் :

பிராம்மணர்கள் தவம் செய்வதன் மூலம் மதத்திற்குத் தொண்டு புரிந்துகொண்டு தங்கள் வாழ்நாட்களைக் கழிக்க வேண்டும்; மற்றும் அவர்கள் சமுதாயத் தொண்டிலும், பிரம்மம் அல்லது சத்தியத்தை நாடுவதிலும் தங்கள் காலத்தைப் போக்க வேண்டும் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆனுல், நவீனப் பிராம்மணர்கள் சாஸ்திரங்களில் குறிப்பிட்டுள்ளபடி தங்கள் கடமைகளைச் செய்யாததுடன், செல்வம் திரட்டுவதற்காக அவர்கள் எல்லாவிதமான தொழில்களையும் செய்கின்றனர். அவர்கள் மதத்திற்கும் தொண்டு புரிவதில்லை. ஓர் உண்மையான பிராம்மணர், அடக்கமும் சாந்தமுமே உருவெடுத்தவராக இருக்க வேண்டும். அவர் தமது அறிவைக் குறித்தும், ஞானத்தைக் குறித்தும் கர்வம் அடையக்கூடாது. ஒரு பிராம்மணரும் ஒரு 'பங்கி'யும்



1946-இல் மதுரை கோயிலுக்கு காந்திஜி சென்றபோது வழியில் ரெயில்வே ஸ்டேஷன்களில் கூடியிருந்த மக்கள் கூட்டம்.




பழனி ஸ்ரீ பழனியாண்டவர் கோயிலும் மதுரை மீனாட்சியம்மன் கோயிலும் ஹரிஜனங்களுக்குத் திறந்துவிடப்பட்டதை முன்னிட்டு 1946 பிப்ரவரியில் காந்திஜி அவ்விரு இடங்களுக்கும் சென்றார். அவர் சென்னையிலிருந்து சென்ற 'காந்தி ஸ்பெஷல்' ரெயில் இன்ஜின் வெகு அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. அந்த இன்ஜினையும் வழிநெடுக ஏராளமான மக்கள் கூடி காந்திஜியைத் தரிசித்ததையும் படத்தில் காணலாம்.

சமம் என்று மக்களுக்குப் போதிப்பதே அவரது கடமையாகும். எனவே, ஒரு பிராம்மணர் மற்றவர்களைக் காட்டிலும் தாம் உயர் வானவர் என்று கருதினால், அவர் பிராம்மணத் தன்மையையே இழந்தவராகிறார். மற்றும் பிராம்மணர் தங்கள் கொள்கையைத் தைரியத்துடனும் உறுதியுடனும் கடைப்பிடிக்க வேண்டும். இல்லாவிடில், அவர் பிராம்மணர் என்ற பெயருக்கே உரியவர் அல்ல. நாம் எல்லாம் வல்ல இறைவனைத் தவிர வேறெவருக்கும் அஞ்சக்கூடாது. கோழைத்தனத்துக்கும் தெய்விக ஞானத்திற்கும் பொருந்தவே பொருந்தாது.

பாவம் செய்தவர்களைக் கோவில்களுக்குள் அனுமதிக்கக் கூடாது என்று கூறுவது சரியல்ல. கோவில்கள் ஆன்மிக ஆஸ்பத்திரிகள் போன்றவை. ஆன்மிக சம்பந்தமான நோயாளிகளே. அதாவது பாவம் செய்தவர்களே கோவில்களில் சிகிச்சை பெற முதல் உரிமை பெற்றவர்களாவர். கோவில்கள் பாவம் செய்தவர்களுக்காகவே ஏற்பட்டவை; முனிவர்களுக்காக ஏற்பட்டவையல்ல. பாவமே செய்யாதவர்கள் யாருமே இராத இடத்தில் பாவிகள் என்றும், பாவமற்றவர்கள் என்றும் யார் தீர்மானிப்பது? நாம் நமது தினசரிப் பிரார்த்தனைகளில், 'பாபோஹம் பாப கர்மாஹம்' என்று கூறுகிறோம். 'நான் பாவம் செய்தவன், பாவமான காரியங்களைச் செய்தவன் நான்' என்பதே அந்த வாக்கியத்தின் பொருளாகும். எனவே, பாவமற்றவர்களுக்கு மாத்திரமே கோவில்கள் ஏற்பட்டிருக்குமாயின், மானிட வர்க்கம் முழுவதற்குமே தடையாகக் கோவில் கதவுகளைப் பூட்ட வேண்டியது தான்!

—'ஹரிஜன்' - 18—5—1934

பகுதி பத்து

# வைக்கம் சத்தியாக்கிரகம்

## 1

## புகழ் ஏணியில் பாய்ந்தேறியது

சமீபகாலம்வரையில் வைக்கத்தைப்பற்றித்* திருவாங்கூருக்கு வெளியே, அதிகமாகப் போனல், சென்னை மாகாணத்துக்கு வெளியே யாருக்கும் எதுவும் தெரியாது. ஆனல், அது திடீரென்று புகழ் ஏணியில் பாய்ந்தேறிவிட்டது. அது சத்தியாக்கிரகத்தின் முக்கிய ஸ்தானமாகிவிட்டதே அதற்குக் காரணம். சத்தியாக்கிரக இயக்கத்தின் முன்னேற்றம் பற்றிய தினசரி அறிக்கைகள் பத்திரிகைகளில் வெளி வருகின்றன. திருவாங்கூரில் உள்ள தீண்டாதார்களின் சார்பிலேயே சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. அந்த இயக்கம். ஒடுக்கப்பட்ட வகுப்பினரின் நிலையை வருணிப்பதற்குரிய மற்றொரு சொல்லை நமக்கு அளித்திருக்கிறது. அதுதான் நெருங்காமை. நம் தேசத்தைச் சேர்ந்த இந்த ஏழை மக்கள், மற்றெந்த சாதி ஹிந்துக்களையும் தொடக்கூடாது என்பது மாத்திரமல்ல; குறிப்பிட்ட தூரத்திற்கு அப்பால் அவர்களை நெருங்கவும்கூடாது. இந்தத் தீமைக்குப் பரிகாரம் தேடும் நோக்கத்துடன் இயக்கத்தின் தலைவர்கள், அந்தத் தீமையின் ஒரு சிறு அம்சத்தை மாத்திரமே எடுத்துக்கொண்டு எதிர்க்க முற்பட்டிருக்கிறார்கள். அந்த அம்சத்தை அவர்கள் வெற்றிகரமாகச் சமாளித்துவிட்டால், நேரடி நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டுள்ள இந்தியாவின் அப்பகுதியில் மாத்திரமாவது அத்தீமைக்குச் சாவுமணி அடித்ததாகிவிடும் என்பது அவர்களுடைய நம்பிக்கை. அந்த இயக்கத்தை நிறைவேற்றுவதில், மலையாளத்தைச் சேர்ந்த உறுதி வாய்ந்த சில சீரிய தொண்டர்கள் சிறைப்பட்டிருக்கிறார்கள்.

எனவே, இனி பின்வாங்குவதென்ற பேச்சிற்கே இடமில்லை. இயக்கத்தை வைதிக ஹிந்துக்கள் தீவிரமாக எதிர்ப்பார்களாயின், போராட்டம் நீண்ட காலம் நடைபெறலாம். தப்பெண்ணம் ஒரு சுவர் போல் இயக்கத்திற்கு முட்டுக்கட்டையாக இருந்து வருகிறது. அந்தச் சுவர் எவ்வளவு பலமாகவும் உறுதியாகவும் இருப்பினும், சத்தியாக்கிரகிகள் உறுதியுடனும், ஆனல், பணிவுடனும், உண்மையாகவும், சாத்விகமாகவும் போராட்டத்தைத்

---

* வைக்கம் சத்தியாக்கிரகத்தைப் பற்றிய வரலாற்றுக் குறிப்பை, பின் சேர்க்கைப் பகுதியில் காண்க.

தொடர்ந்து வருவார்களாயின், அவர்கள் அந்தச் சுவரைத் தகர்த்து விடுவார்கள் என்பது நிச்சயம். இந்தக் குணாதிசயங்கள் கருங்கல் போன்ற இதயங்களையும் உருக்கிவிடும் என்பதில் அவர்களுக்குப் போதிய நம்பிக்கை இருக்க வேண்டும்.

—'எங் இந்தியா' - 17—4—1924

# 2

# வெளி உதவியை நாட வேண்டாம்

திருவாங்கூருக்கு வெளியிலிருந்து, பொது மக்களின் அனுதாபத்தைத் தவிர வேறு எவ்வித உதவியும் வரக்கூடாதென்று நான் கூறியிருக்கிறேன் அல்லவா? அந்த வாதத்தை விளக்கும்படி என்னைக் கேட்டிருக்கிறார்கள். வெளியிலிருந்து உதவி வராததால் என்ன லாபம் என்பது பற்றி நான் முன்பே ஒரு பேட்டியில் குறிப்பிட்டிருக்கிறேன். அத்தகைய உதவி வருவதற்கு, அதை அங்கீகரிப்பதற்கும்கூட, அடிப்படையான ஆட்சேபணை இருக்கிறது. சத்தியாக்கிரகம், ஏராளமான பலவீனர்களின் சார்பில் தன்னலத் தியாகிகளான சிலர் கைக்கொள்ளும் முறையே; அல்லது மகத்தான கஷ்ட நஷ்டங்களுக்கிடையே வெகு சிலர் கையாளும் முறை என்றும் சொல்லலாம். வைக்கத்தில் நடைபெற்று வருவது, முதலில் கூறப்பட்ட சத்தியாக்கிரகமாகும். அங்கே தீண்டாதார்கள் சார்பில் பலர் தியாகம் செய்ய விருப்பமுடையவர்களாக, ஆனால், பலவீனர்களாக இருக்கிறார்கள்; சிலர் விருப்பமுடையவர்களாகவும் தங்களுக்குச் சொந்தமான எல்லாவற்றையும் தியாகம் செய்ய சக்தியுடையவர்களாகவும் இருக்கிறார்கள். அந்நிலையில் அவர்களுக்கு வெளி உதவி எதுவும் தேவையில்லை என்பது தெளிவாகும். அவர்கள் வெளி உதவியை ஏற்றுக்கொள்ளுவதாக வைத்துக்கொள்ளுவோம். அதனால் தீண்டாதாரான நம் தேச மக்களுக்கு என்ன பலன் ஏற்படும்? பலம் வாய்ந்த எதிரிகளைப் பலவீனர்களான ஹிந்துக்கள் எதிர்த்து நிற்க முடியாது. இந்தியாவின் மற்றப் பாகங்களிலிருந்து உதவி புரிவோரின் தியாகம், எதிரிகளின் மனத்தை மாற்ற முடியாது. எனவே அதன் விளைவாக, தீண்டாதாரின் நிலை முதலில் இருந்ததைவிட பெரிதும் அதிக மோசமாகிவிடக் கூடும். சத்தியாக்கிரகம், எதிரிகளின் மானத்தை மாற்றுவதற்குற்ற மிகச் சக்தி வாய்ந்த ஒரு முறை என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அது இதயத்தைத் தொடும் ஒரு வேண்டுகோளாகும். இந்தியாவின் மற்றப் பாகங்களிலிருந்து வைக்கத்திற்கு வந்து கூடும் ஜனங்களால் அத்தகைய ஒரு வேண்டுகோள் விடுத்து, அதை வெற்றிகரமாகும்படி செய்வது முடியாத காரியம்.

இந்தச் சமஸ்தானத்திற்குள் நடைபெறும் ஓர் இயக்கத்திற்கு, வெளியிலிருந்து பண உதவி தேவையாக இருக்கக் கூடாது. திருவாங்கூரில் உள்ள பலவீனர்களான, ஆனல் சத்தியாக்கிரகத்தில் அனுதாபம் உள்ள எல்லா ஹிந்துக்களும், கைதியாகவும் மற்றக் கஷ்டங்களை அனுபவிக்கவும் முன்வராமலிருக்கலாம். ஆனல், அவர்கள் தேவையான பண உதவி செய்ய முடியும்; செய்யவும் வேண்டும். அத்தகைய ஆதரவின்றேல், அவர்களுடைய அனுதாபம் எதற்கு என்பது எனக்குத் தெரியவில்லை.

மகத்தான கஷ்ட நஷ்டங்களுக்கிடையே சத்தியாக்கிரகம் செய்யும் வெகு சிலர் விஷயத்தில் வெளி ஆதரவு அனுமதிக்கத் தக்கதல்ல. தனி நபரின் அல்லது குடும்ப சம்பந்தமான விரிவான முறையே பொது மக்களின் சத்தியாக்கிரகமாகும். பொது மக்களின் சத்தியாக்கிரகம் ஒவ்வொன்றும், அதற்கு இணையான குடும்ப சத்தியாக்கிரகத்தைக் கற்பனை செய்துகொள்ளுவதன் மூலம் சோதித்துப் பார்க்கப்பட வேண்டும்.

உதாரணமாக, என் குடும்பத்தில் நான் தீண்டாமைச் சாபக்கேட்டை அகற்ற விரும்புவதாக வைத்துக்கொள்ளுங்கள். அந்த அபிப்பிராயத்தை என் பெற்ருேர்கள் எதிர்க்கிருர்கள்; பிரஹ்லாதனைப் போன்ற கொள்கை உறுதியும் உற்சாகமும் எனக்கு இருக்கிறது; என் தந்தை எனக்குத் தண்டனைகள் விதிப்பதாகப் பயமுறுத்துகிருர்; என்னைத் தண்டிக்கச் சர்க்காரின் உதவியைக்கூட நாடுகிருர்; – இப்படியெல்லாம் நடப்பதாக வைத்துக்கொள்ளுங்கள். அந்நிலையில் நான் என்ன செய்ய வேண்டும்? என் தந்தை எனக்காக ஏற்படுத்தியுள்ள தண்டனைகளை, என்னுடன் சேர்ந்து அனுபவிக்கும்படி என் நண்பர்களை நான் அழைக்கலாமா? அல்லது என் தந்தை எனக்கு விதிக்கும் தண்டனைகளையெல்லாம் தலை வணங்கிச் சாந்தமாக ஏற்று, அவரது மனம் உருகும்படி செய்வதற்காகத் துன்பத்தைச் சகித்துக்கொண்டு, அன்பு காட்டும் நியதியில் பூரண நம்பிக்கை வைத்து, தீண்டாமைத் தீமையையொட்டி அவர் கண்கள் திறக்கும்படி செய்வது என் கடமையாகாதா? அவரது குழந்தையான என்னிடமிருந்து அவர் அறிந்துகொள்ள விரும்பாத ஒரு விஷயத்தை அவரிடம் விளக்கிக் கூறுவதற்காக, குடும்பத்தின் கற்றறிஞர்களான நண்பர்களின் உதவியை நான் பெறுவதிலும் கஷ்டமில்லை. ஆனல், துன்பத்தை ஏற்கும் பாக்கியத்தையும் கடமையையும் என்னுடன் பங்குகொள்ள நான் எவரையும் அனுமதிக்காமல் இருக்கலாம். கற்பனையான இந்தக் குடும்பச் சத்தியாக்கிரகம் சம்பந்தப்பட்டவரையில் எது உண்மையோ, அதுவே பொது மக்கள் சத்தியாக்கிரக விஷயமாகவும் உண்மையாகும்.

எனவே, வைக்கம் சத்தியாக்கிரகிகள், நம்பிக்கைக்கே இடமில்லாத மிகச் சிறுபான்மையோராக இருந்தாலும் சரி, அல்லது எனக்குக் கிடைத்துள்ள தகவலுக்கு இணங்க, சம்பந்

தப்பட்ட ஹிந்துக்களின் பெரும்பான்மையோராக இருந்தாலும் சரி, அவர்கள் சமஸ்தானத்திற்கு வெளியிலிருந்து பொது மக்களின் அனுதாபத்தைத் தவிர வேறெவ்வித உதவியையும் தவிர்க்க வேண்டும் என்பது தெளிவான விஷயமாகும். அத்தகைய ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் நாம் மேலே குறிப்பிட்ட நியதிக்கு இணங்க நடந்துகொள்ள முடியாதவர்களாக இருக்கலாம். இந்தச் சந்தர்ப்பத்திலும் நாம் அவ்விதம் செய்ய முடியாமல் இருக்கலாம் என்பது உண்மையே. எனினும், அந்த நியதியை நாம் மறந்துவிடக்கூடாது. நம்மால் இயன்ற வரையில் நாம் அதற்கிணங்க நடக்க வேண்டும்.

—'எங் இந்தியா' – 24—4—1924

## 3

## வைக்கம் சத்தியாக்கிரகம் நியாயமானதா ?

வைக்கம் சத்தியாக்கிரகம் மிகப் பரந்த முறையில் பொது மக்களின் கவனத்தை இழுத்திருக்கிறது. அது ஒரு சிறிய பிரதேசத்திற்குள் வரையறுக்கப்பட்டுள்ளதெனினும், அதன் சம்பந்தமான பல பிரச்னைகள் தீர வேண்டியிருக்கின்றன. எனவே, நான் அவ்விஷயத்தில் வாசகர்கள் அடிக்கடி கவனம் செலுத்தும்படி செய்வதைக் குறித்து மன்னிப்புக் கோரவில்லை. வைக்கம் சத்தியாக்கிரகத்தை நான் எவ்விதத்திலும் ஆதரிக்கக்கூடாதென்று கண்டித்து, பல முக்கியமான கடிதங்களும், தீர்க்காலோசனையுடன் கூடிய கடிதங்களும் கிடைத்திருக்கின்றன. எனக்குள்ள செல்வாக்கு எதுவாயினும் அதை உபயோகித்து, சத்தியாக்கிரகத்தை அறவே நிறுத்திவிட வேண்டுமென்றுகூட வற்புறுத்தி ஒரு கடிதம் வந்திருக்கிறது. இந்தக் கடிதங்கள் எல்லாவற்றையும் நான் பிரசுரிக்க இயலாததற்காக வருந்துகிறேன். இந்தக் கடிதங்களில் உள்ள, அல்லது என் பார்வைக்குக்கொண்டு வரப்பட்ட எல்லா விஷயங்களையும் பற்றிக் குறிப்பிடலாமென்பது எனது நம்பிக்கை.

முதல் விஷயத்தை உடனடியாகத் தெளிவாக்கிவிடலாம். சத்தியாக்கிரகத்தின் தலைவராகவும் அமைப்பாளராகவும் இருந்த ஸ்ரீ மேனன் ஸ்தானத்தை, ஒரு கிறிஸ்துவரான ஸ்ரீ ஜார்ஜ் ஜோசப் ஏற்றுக்கொள்ள அனுமதித்ததை ஆட்சேபித்திருக்கிறார்கள். அந்த ஆட்சேபணை முற்றிலும் நியாயமானது என்பதே எனது தாழ்மையான அபிப்பிராயம். அத்தலைமைப் பதவியை ஏற்றுக்கொள்ளும்படி ஸ்ரீ ஜோசப் அழைக்கப்பட்டிருக்கிறார் என்றும், அவர் அதை ஏற்றுக்கொள்ள உத்தேசித்திருக்கிறார்

என்றும் நான் கேள்விப்பட்ட உடனேயே, ஏப்ரல் 6-ந் தேதி அவருக்குக் கீழ் வருமாறு எழுதினேன் :

"நீங்கள், வைக்கம் சம்பந்தப்பட்ட வரையில். ஹிந்துக்களே வேலை செய்யும்படி விட்டுவிட வேண்டுமென்று எண்ணுகிறேன். அவர்கள்தான் தங்களைத் தாங்களே பரிசுத்தம் செய்துகொள்ள வேண்டியவர்களாக இருக்கிறார்கள். உங்கள் அனுதாபத்தின் மூலமும் பேனாவின் மூலமும் நீங்கள் உதவி புரியலாம். ஆனால், நீங்கள் இயக்கத்தை உருவாக்குவது கூடாது; சத்தியாக்கிரகம் செய்வது நிச்சயமாகக்கூடாது. நாகபுரியில் நிறைவேறிய காங்கிரஸ் தீர்மானத்தை நீங்கள் கவனியுங்கள். தீண்டாமைச் சாபக் கேட்டை அகற்றும்படி அது ஹிந்து அங்கத்தினர்களுக்கே கட்டளையிட்டிருக்கிறது. தீண்டாமை நோய் சிரியன் கிறிஸ்துவர்களைக்கூடத் தொத்திக் கொண்டுளது என்பதை, ஸ்ரீ ஆண்டுரூஸிடமிருந்து தெரிந்துகொண்டபோது நான் வியப்படைந்தேன்."

துரதிர்ஷ்டவசமாக, கடிதம் அவருக்குக் கிடைக்கு முன்பே ஸ்ரீ மேனன் கைது செய்யப்பட்டார். அவரது ஸ்தானத்தை ஸ்ரீ ஜார்ஜ் ஜோசப் ஏற்றுக் கொண்டுவிட்டார். தீண்டாமை சம்பந்தமான ஒவ்வொரு ஹிந்துவும் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டியிருப்பது போல், ஸ்ரீ ஜோசப் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டியதில்லை. மாளவியாஜியால் செய்யப்பட்ட பிராயச்சித்தத்தை ஹிந்துக்கள் தாங்கள் செய்த பிராயச்சித்தமாகக் கொள்ளலாம். ஆனால், ஸ்ரீ ஜோசப்பின் தியாகத்தை, ஹிந்துக்கள் தாங்கள் செய்த தியாகமாகக் கொள்ள முடியாது. ஏனெனில், தீண்டாமை ஹிந்துக்களின் பாவமாகும். அதற்காக அவர்கள்தான் கஷ்டப்பட வேண்டும்; அவர்கள்தான் தங்களைப் பரிசுத்தம் செய்துகொள்ள வேண்டும்; ஒடுக்கப்பட்ட சகோதரர்களுக்கும் சகோதரிகளுக்கும் அவர்கள்பட்டுள்ள கடனை அவர்கள்தான் கொடுத்துத் தீர வேண்டும். இப்போது ஹிந்துக்களுக்குத் தான் வெட்கம்; ஆனால், கொடிய தீண்டாமைப் பாவத்தை அவர்கள் களைந்துவிடுவார்களாயின், அதனால் ஏற்படும் புகழும் பெருமையும் அவர்களுக்குத்தான். அன்பு ததும்பும் பரிசுத்தரான ஒரே ஒரு ஹிந்து, மௌனமாகத் துன்பத்தை ஏற்றுக்கொண்டால், லட்சக்கணக்கான ஹிந்துக்களின் இதயத்தை உருக்க அது போதுமானது. ஆனால், தீண்டாதார்களின் சார்பில் ஆயிரக் கணக்கான ஹிந்துக்களல்லாதார் கஷ்டங்களை அனுபவித்தால் கூட, அது ஹிந்துக்களின் மனத்தைக் கரைக்க முடியாது. வெளியாரின் தலையீட்டால், அது எவ்வளவு நன்னோக்கத்துடனும் பெருந்தன்மையுடனும் இருந்தாலும் சரி, அவர்களுடைய கண் மூடித்தனத்தைத் தீர்க்க முடியாது. ஏனெனில், அதனால் அவர்களுடைய குற்றத்தை அவர்கள் உணரும்படி செய்ய இயலாது. அதற்கு மாறாக, அத்தகைய தலையீடு காரணமாக ஹிந்துக்கள் தங்களுடைய பாவத்தை ஒருவேளை இன்னும் அதிகமாக இறுகத் தழுவிக் கொள்ளலாம். எல்லாச் சீர்திருத்தங்களும், அந்தரங்க சுத்தியுடனும் நிரந்தரமாகவும் இருக்க வேண்டுமாயின், அவை உள்ளேயிருந்து வர வேண்டும்.

ஆனால், வைக்கம் சத்தியாக்கிரகிகள் வெளியிலிருந்து பண உதவியை, குறிப்பாக ஹிந்துக்களிடமிருந்து பண உதவியை ஏன் பெற்றுக்கொள்ளக் கூடாது ? ஹிந்துக்களல்லாதார் உதவி சம்பந்தப்பட்ட வரையில், அவர்களுடைய சரீர உதவியைப் போல் பண உதவி விஷயத்திலும், என் கருத்து மிகவும் தெளிவானது. ஹிந்துக்களல்லாதாரின் பணத்தைக் கொண்டு நான் எனது ஹிந்துக் கோவிலை நிர்மாணிக்க விரும்பாமலிருக்கலாம். இறைவனை வழிபடுவதற்கு நான் ஓரிடத்தை விரும்பினால், அதற்குரிய தொகையை நான் கொடுக்க வேண்டும். தீண்டாமையை அகற்றும் இவ்விஷயம், செங்கற்களாலும் சுண்ணாம்பினாலும் ஒரு கோவிலை நிர்மாணிப்பதைக் காட்டிலும் பெரிதாகும். தீண்டாமையை அகற்ற ஹிந்துக்கள் தங்கள் இரத்தத்தையே கொடுக்க வேண்டும்; அந்த பாவத்துக்கு ஈடு செய்து தீர வேண்டும். அந்தச் சாபக்கேட்டை அகற்றுவதற்காக அவர்கள் தங்கள் மனைவிமாரையும் குழந்தைகளையும் கைவிடத் தயாராக இருக்க வேண்டும். அவ்விஷயமாக வெளியிலுள்ள ஹிந்துக்களிடமிருந்து உதவி கோருவதாயின், அந்தச் சீர்திருத்தத்திற்கு இங்குள்ள ஹிந்துக்கள் தயாராக இல்லையென்பதை வெளியிடுவதாகும். சத்தியாக்கிரகிகளுக்கு இங்குள்ள ஹிந்துக்களின் அனுதாபம் இருக்குமாயின், தங்களுக்குத் தேவையான தொகையை அவர்கள் இங்கேயே பெற வேண்டும். ஹிந்துக்களின் அனுதாபம் சத்தியாக்கிரகிகளுக்கு இல்லையாயின் சத்தியாக்கிரகம் செய்யும் ஒரு சிலர் மகிழ்ச்சியுடன் பட்டினி கிடக்க வேண்டும். இல்லாவிடில், எந்த ஹிந்துக்களின் மனத்தை மாற்ற அவர்கள் விரும்புகிறார்களோ, அந்த ஹிந்துக்களின் அனுதாபத்தை அவர்கள் பெற முடியாது.

சத்தியாக்கிரகம் மனத்தை மாற்றுவதற்குற்ற முறையேயாகும். சீர்திருத்தக்காரர்கள், தங்களுடைய கருத்துக்களை சமுதாயத்தின் மீது வற்புறுத்தித் திணிக்க விரும்பவில்லை. அதன் இதயத்தைத் தொடவே அவர்கள் பெரு முயற்சி செய்கின்றனர். சத்தியாக்கிரகத்தை நான் வருணிப்பதாயின், அதை ஓர் அன்பு முறை என்றே கூறுவேன். வெளியாரின் பண உதவி இந்த அன்பு முறைக்குக் குந்தகமாக இருக்கும். இதைக் கருத்தில் கொண்டு பார்த்தால், சீக்கியரின் இலவசச் சாப்பாடு யோசனை, கிலி பிடித்துள்ள வைக்கம் ஹிந்துக்களுக்கு ஆபத்தானதென்றே நான் கருதுகிறேன்.

வைதிக ஹிந்துக்கள், தங்கள் மதத்தைச் சேர்ந்த ஒரு பகுதியினரைத் தொடுவது கடவுள் வழிபாட்டிற்கு முரணானதென்று இன்னும் கருதுகின்றனர்; ஸ்நானபானங்களும் சரீர ஸ்பர்சத்தினால் ஏற்படும் தீட்டைத் தவிர்ப்பதுமே மதப் பற்றுள்ள வாழ்க்கையின் சாரமென்றும் கருதுகின்றனர். அத்தகையோர் வைக்கத்தில் நடந்துவரும் இயக்க சம்பந்தமாகச் சமீபத்தில் ஏற்பட்டுள்ள நிகழ்ச்சிகளைக் குறித்துத் திகில் கொண்டுள்ளனர் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை. அவர்கள், தங்களுடைய

மதத்திற்கு ஆபத்து ஏற்பட்டிருப்பதாக நினைக்கின்றனர். எனவே, பரம வைதிகர்களும், மிகுந்த மூடபக்தியுள்ளவர்களும் கூட, மனச் சஞ்சலமின்றி அமைதியாக இருக்கும்படி செய்ய வேண்டியதும், தாங்கள் கட்டாயப்படுத்திச் சீர்திருத்தத்தை அமலுக்குக் கொண்டுவர முயற்சிக்கவில்லை யென்று அவர்களுக்கு உறுதிகூற வேண்டியதும் சத்தியாக்கிரகச் செயலாளர்களின் கடமையாகும். வைக்கம் சத்தியாக்கிரகிகள், வெற்றி பெறுவதற்காக வணங்கிக் கொடுக்க வேண்டும். அவர்கள், மூடபக்தர்களின் கையில் அவமதிப்புக்கும், இன்னும் மோசமான செய்கைக்கும் உடன்பட்டாலும்கூட, அவர்களுடைய இதயத்தை மாற்றுவதற்காக அவர்களிடம் அன்பு காட்ட வேண்டும்.

ஆனால், அங்கிருந்து எனக்கு இவ்விதம் ஒரு தந்தி வந்திருக்கிறது :

"அதிகாரிகள் ரஸ்தாக்களை அடைத்து வருகிறார்கள். அந்த அடைப்பை நாங்கள் தகர்த்து விடலாமா அல்லது அவற்றைத் தாண்டி அப்பால் செல்லலாமா? நாங்கள் உண்ணாவிரதம் இருக்கக் கூடாதா? உண்ணாவிரதம் பலனைக் கொடுக்கக் கூடியது என்பதை நாங்கள் அறிந்து கொண்டுள்ளோம்."

நாம் சத்தியாக்கிரகிகளாக இருந்தால், நாம் வேலிகளைத் தாண்டவோ அல்லது தகர்க்கவோ துணியக் கூடாது என்பது தான் எனது பதிலாகும். வேலிகளைத் தகர்ப்பதோ அல்லது தாண்டுவதோ நிச்சயமாகச் சிறைத் தண்டனையில் வந்து முடியும். ஆனால், அவற்றைத் தகர்ப்பது சாத்விகச் சட்ட மறுப்பு அல்ல. அது பலாத்காரமும் குற்றமும் ஆகும். நாம் உண்ணாவிரதமும் இருக்கக் கூடாது. உண்ணாவிரத சம்பந்தமாக நான் ஸ்ரீ ஜோசப்பிற்கு எழுதிய கடிதம் தப்பெண்ணத்தை உண்டாக்கியிருக்கிறது. எல்லோரும் அதை அறிந்து கொள்ளுவதற்காக, அதன் முக்கியப் பகுதியைக் கீழே குறிப்பிட்டுள்ளேன் :

"உண்ணாவிரதத்தைத் தகர்த்து விடுங்கள். ஆனால், கைது செய்யப்படும் வரையில் சாந்தமாகவும் அடக்கத்துடனும் ஒவ்வொரு கோஷ்டியாக நில்லுங்கள் அல்லது உட்கார்ந்திருங்கள்."

"உங்கள் தந்திக்குப் பதிலாக மேற்கண்ட தந்தி உங்களுக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. சத்தியாக்கிரகத்தில் உண்ணாவிரதமானது நன்றாக வரையறுக்கப்பட்ட எல்லைகளுக்கு உட்பட்டதாகும். கொடுமையாக நடந்துகொள்ளும் ஒருவருக்கு எதிராக நீங்கள் உண்ணாவிரதம் அனுஷ்டிக்க முடியாது. அவ்விதம் அனுஷ்டிப்பது அவருக்கு ஒருவிதத்தில் ஹிம்சை செய்வதாகும். அவரது உத்தரவுகளை மீறியதற்காக அவரிடமிருந்து நீங்கள் தண்டனையை வரவேற்கலாம். ஆனால், அவர் உங்களுக்குத் தண்டனை விதிக்க மறுக்கும்போது, நீங்களாகவே உங்களுக்குத் தண்டனை விதித்துக்கொள்ள முடியாது. நம்மீது அன்பு கொண்டுள்ள ஒருவருக்கு எதிராகத்தான் நாம் உண்ணாவிரதம் அனுஷ்டிக்க முடியும்; அதுவும் அவரிடமிருந்து உரிமைகளை வற்புறுத்திப் பெறுவதற்காக அல்ல; அவரைச் சீர்திருத்துவதற்காகவே யாகும். உதாரணமாக, மதுபானம் செய்யும் தமது தந்தைக்கு எதிராக ஒரு மகன் அனுஷ்டிக்கும் உண்ணா

விரதத்தைப் போலவேதான் அதுவும். நான் பம்பாயிலும், பிறகு பர்டோலியிலும் அனுஷ்டித்த உண்ணுவிரதம் இந்த ரகத்தைச் சேர்ந்ததே. என்மீது அன்பு கொண்டவர்களைச் சீர்திருத்தவே அங்கே நான் உண்ணுவிரதம் இருந்தேன். உதாரணமாக, ஜெனரல் டயரைச் சீர்திருத்துவதற்காக நான் உண்ணுவிரதம் இருக்கமாட்டேன். அவருக்கு என்மீது அன்பு இல்லை என்பது மாத்திரமல்ல; அவர் தம்மை என்னுடைய விரோதியாகவும் கருதுகிறுர். நான் கூறுவது இப்போது தெளிவாகப் புரிந்ததா ?"

மேற்கண்ட விவரங்கள் பொதுவாகக் கூறப்பட்டவை என்பதைக் குறிப்பிட வேண்டிய அவசியமில்லை. 'கொடியவர்', 'அன்பு கொண்டவர்' என்ற வார்த்தைகளும் பொதுவாகக் கூறப்பட்டவை. அநீதி இழைக்கும் ஒருவர் 'கொடியவர்' என்று குறிப்பிடப்படுகிறுர். உங்கள் மீது அனுதாபம் கொண்டுள்ள ஒருவரை, உங்கள் மீது அன்பு கொண்டவர் என்று கூறலாம். வைக்கம் இயக்கத்தில், சீர்திருத்தத்திற்கு எதிரிகள் கொடியவர்கள் என்பதே என் அபிப்பிராயம். அரசாங்கம் எதிரிகளாக இருக்கலாம், அல்லது இல்லாமலுமிருக்கலாம். இவ்விஷயத்தைப் பொறுத்த வரையில், அரசாங்கம் அமைதியைப் பாதுகாக்கும் போலீசாரைப் போல் இருந்து வருகிறதென்றே கருதுகிறேன். அரசாங்கமோ அல்லது சீர்திருத்தத்தின் எதிரிகளோ, 'அன்பு கொண்டவர்'களின் ஸ்தானத்தில் இல்லவே இல்லை. வைக்கம் சத்தியாக்கிரகத்தை ஆதரிப்பவர்கள்தான் அந்த அந்தஸ்துக்கு, அதாவது 'அன்பு கொண்டவர்' என்ற ஸ்தானத்துக்கு உரியவராவார்கள்.

சத்தியாக்கிரகியின் உண்ணுவிரதத்திற்கு இரண்டு நிபந்தனைகள் உண்டு. நம் மீது அன்பு கொண்ட ஒருவரைச் சீர்திருத்தும் நோக்கத்துடன் அவருக்கு எதிராக உண்ணுவிரதம் கைக்கொள்ளப்பட வேண்டும்; அவரிடமிருந்து உரிமைகளை வற்புறுத்திப் பெறுவதற்காகக் கைக்கொள்ளக்கூடாது. வைக்கம் இயக்க சம்பந்தமாக அங்குள்ள ஆதரவாளர்கள், தாங்களே கஷ்டத்தை ஏற்றுக்கொள்ளுவதாக உறுதி கூறியுள்ளனர் அல்லவா? அவர்கள் தாங்கள் கொடுத்த வாக்குறுதியிலிருந்து பின்வாங்கும் போதுதான், சத்தியாக்கிரகிகள் உண்ணுவிரதத்தைக் கைக்கொள்ளுவது நியாயமாக இருக்கும்.

எனது தந்தை ஒரு தீய வழக்கத்தைக் கைவிடும்படி செய்வதற்காக நான் அவருக்கு எதிராக உண்ணுவிரதம் இருக்கலாம். ஆனுல், அவரிடமிருந்து பிதுரார்ஜித சொத்தைப் பெறுவதற்காக நான் உண்ணுவிரதம் இருக்கக்கூடாது. இந்தியாவில் உள்ள பிச்சைக்காரர்கள், தங்களைத் திருப்தி செய்யாதவர்களுக்கு எதிராகச் சில சமயங்களில் உண்ணுவிரதம் அனுஷ்டிக்கிறுர்கள். தங்களுக்கு நேர்த்தியான உடை வேண்டும் என்பதற்காகப் பெற்றோருக்கு எதிராகப் பட்டினி கிடக்கும் குழந்தைகள் எவ்விதம் சத்தியாக்கிரகிகள் ஆக மாட்டார்களோ, அவ்விதமே மேலே குறிப்பிட்ட பிச்சைக்காரர்களும் சத்தியாக்கிரகிகளாக

மாட்டார்கள். பிச்சைக்காரர்களின் நடத்தை வெட்கங்கெட்டதாகும்; குழந்தைகளின் நடத்தை அறியாத்தனமாகும்.

சௌரி சௌரா தீப்பொறி, ஜ்வாலையாகும்படி செய்த எனது சக ஊழியர்களுக்கு எதிராகவும், அவர்களைச் சீர்திருத்துவதற்காகவும், நான் பர்டோலியில் உண்ணுவிரதத்தை மேற்கொண்டேன். அதிகாரிகள் தங்களைக் கைது செய்யவில்லை என்பதற்காக வைக்கம் சத்தியாக்கிரகிகள் உண்ணுவிரதத்தை மேற்கொள்ளுவார்களாயின், அது மேலே குறிப்பிட்ட பிச்சைக்காரர்களின் உண்ணுவிரதம் போன்றதே என்பதை நான் மிகப் பணிவுடன் குறிப்பிடத்தான் வேண்டும். அந்த உண்ணுவிரதம் பலனை அளிக்குமாயின், அது அதிகாரிகளின் நல்ல சுபாவத்தைக் காட்டுமேயன்றி, லட்சியத்தின் மேன்மையையோ சத்தியாக்கிரகிகளின் மேன்மையையோ காட்டாது. ஒரு சத்தியாக்கிரகியின் முதல் கவலை, தமது நடவடிக்கையின் பலனைப் பற்றியதாக இருக்கக்கூடாது; அது நியாயமானதா என்பதே அவரது கவலையாக இருக்க வேண்டும். தமது லட்சியத்திலும், அதை அடைவதற்கான முறைகளிலும் அவருக்குப் போதிய நம்பிக்கை இருக்க வேண்டும். அப்படியாயின், இறுதியில் வெற்றி கிடைக்குமென்பதை அவர் அறிய வேண்டும்.

எனக்குக் கடிதங்கள் எழுதியுள்ள நிருபர்களில் சிலர், ஓர் இந்திய சமஸ்தானத்தில் சத்தியாக்கிரகம் செய்வதை முற்றிலும் ஆட்சேபித்திருக்கிறார்கள். இவ்விஷயமாகவும், ஸ்ரீ ஜோசப்பிற்கு நான் எழுதியுள்ள மேற்படி கடிதத்தின் கீழ்க்கண்ட மற்றொரு பகுதியைக் குறிப்பிட விரும்புகிறேன்:

“நீங்கள் பொறுமையுடன் இருக்க வேண்டும். ஓர் இந்திய சமஸ்தானத்தில் நீங்கள் இருக்கிறீர்கள். எனவே நீங்கள் கோஷ்டியாகச் சென்று திவானையும் மகாராஜாவையும் பேட்டி காணலாம். இந்த இயக்கத்தை ஆதரிக்கும் ஏராளமான வைதிக ஹிந்துக்கள் கையெழுத்திட்ட மாபெரும் விண்ணப்பத்தை நீங்கள் தயாரிக்கலாம். இயக்கத்தை எதிர்ப்பவர்களைக்கூடப் பாருங்கள். பல்வேறு வழிகளிலும் சாந்தமான நேரடி நடவடிக்கையை நீங்கள் ஆதரிக்கமுடியும். பூர்வாங்கமான சத்தியாக்கிரகத்தின் மூலம் நீங்கள் இவ்விஷயத்தை ஒட்டிப் பொதுமக்களின் கவனத்தை முன்பே ஈர்த்திருக்கிறீர்கள். எல்லாவற்றிற்கும் மேலாக, அது அடியோடு மறைந்து விடாமலும், பொறுமையின்மை காரணமாக பலாத்காரமாகி விடாமலும் பார்த்துக்கொள்ளுங்கள்.”

இந்திய தேசீய மகாசபை, தனது லட்சியத்தை அடைவதற்காக ஓர் இந்திய சமஸ்தானத்தில் சத்தியாக்கிரகம் செய்வதைச் சந்தேகத்துக்கு இடமின்றித் தடுத்திருக்கிறது என்றே எண்ணுகிறேன். ஆனால், சமஸ்தானத்திலுள்ள ஊழல்களையொட்டி எந்தச் சமயத்திலும் சத்தியாக்கிரகம் செய்ய முற்படுவது நியாயமேயாகும். எனினும், சத்தியாக்கிரகம் செய்யுமுன்,

அவசியமான பூர்வாங்கமான நிபந்தனைகள் நிறைவேற வேண்டும். ஓர் இந்திய சமஸ்தானத்தில் ஒத்துழையாமை என்ற பேச்சிற்கே இடமில்லை. ஆனல், விண்ணப்பங்கள் செய்துகொள்ளுவதும், தூதுகோஷ்டி சென்று பேசுவதும் எச்சமயத்திலும் கைக்கொள்ள லாம் என்பது மாத்திரமல்ல, அவ்விதம் செய்யவேண்டியது கடமையுமாகும். எனினும், சட்டபூர்வமான சத்தியாக்கிரகத் திற்கு அவசியமான சந்தர்ப்பங்கள் வைக்கத்தில் ஏற்படவில்லை யென்று நிருபர்களில் சிலர் கூறுகின்றனர். அவர்கள் கேட்ப தாவது:

1. நெருங்காமை வைக்கத்தில் மாத்திரம் அனுஷ்டிக்கப்படுகிறதா அல்லது இது பொதுவாகக் கேரளம் முழுவதும் நிலவி வருகிறதா ?

2. அது பொதுவாக நிலவி வருகிறதெனில், கேரளத்தில் பிரிட்டிஷ் எல்லையைச் சேர்ந்த இடங்களை விட்டுவிட்டு, வைக்கத்தைத் தேர்ந்தெடுத்த தற்கு விசேஷ காரணம் என்ன ?

3. மகாராஜா, ஸ்தல சட்டசபை அங்கத்தினர்கள் முதலியோரிடம் சத்தியாக்கிரகிகள் விண்ணப்பம் செய்து கொண்டார்களா ?

4. சத்தியாக்கிரகிகள் வைதிக ஹிந்துக்களுடன் கலந்து ஆலோசித்தார் களா ?

5. ரஸ்தாவை உபயோகிப்பதென்பது ஓர் ஆரம்ப நடவடிக்கை யல் லவா? அது இறுதியில் சாதியை அடியோடு ஒழிக்கும் நோக்கத்துடன் கூடிய ஒரு முறையல்லவா ?

6. அது பொதுஜன உபயோகத்திற்கல்லாத ஒரு ரஸ்தா அல்லவா ?

முதல் இரண்டு கேள்விகளும் அனுசிதமானவை. நெருங் காமையும் தீண்டாமையும் எங்கிருந்தாலும் அவற்றை எதிர்த்துச் சமாளிக்க வேண்டியது அவசியமாகும். ஓர் இடமோ அல்லது ஒரு காலமோ தகுதியானதென்று ஊழியர்கள் எங்கே, எப்போது நினைத்தாலும், அவர்கள் சத்தியாக்கிரகத்தின் மூலமோ அல்லது வேறு நியாயமான முறைகளின் மூலமோ வேலையை ஆரம்பித்து விட வேண்டியது அவர்களுடைய கடமையாகும்.

ஒரு தடவையல்ல, பல தடவைகள் விண்ணப்பம் முதலிய முறைகளை முயற்சித்துப்பார்த்துவிட்டார்கள் என்பதே எனக்குக் கிடைத்த தகவலாகும்.

சத்தியாக்கிரகிகள், வைதிக மக்களைக் கலந்தாலோசித் தார்கள் ; அவர்களுடைய ஆதரவைப் பெற்றிருப்பதாக நினைத் தார்கள்.

ரஸ்தாவை உபயோகிப்பதுதான் சத்தியாக்கிரகத்தின் இறுதி லட்சியம் என எனக்கு உறுதி கூறியிருக்கிறார்கள்.

பிராம்மணரல்லாதார் செல்லுவதற்கு உரிமையுள்ள எல்லா ரஸ்தாக்களையும், எல்லாப் பள்ளிக்கூடங்களையும், எல்லாக் கோவில்களையும் ஒடுக்கப்பட்ட வகுப்பினருக்குத் திறந்துவிட வேண்டும் என்பதே, இந்தியா முழுவதும் உள்ள தற்போதைய இயக்கத்தின் நோக்கம் என்பதை மறுப்பதற்கில்லை.

படுமோசமான தீமையை ஒழித்துவிட்டுச் சாதியைப் பரிசுத்த மாக்குவதற்கே உண்மையில் அந்த இயக்கம் ஏற்பட்டிருக்கிறது. என் சம்பந்தப்பட்ட வரையில், வர்ணாச்சிரமத்தில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. எனினும், அதற்கு நான் செய்து கொண்டுள்ள சொந்த அர்த்தம் உண்டு என்பது உண்மையே. எப்படியாயினும், தீண்டாமை எதிர்ப்பு இயக்கத்தின் நோக்கம், சமபந்தி போஜனமோ அல்லது கலப்பு மணமோ அல்ல. இந்த இரண்டு பிரச்னைகளையும் கலப்பது ஒரு குறிப்பிட்டவர்களின் கட்சிக்குத் தீங்கு செய்வதாகும்.

பிரஸ்தாப ரஸ்தா, பொதுச்சாலை என்றே எனக்கு வந்துள்ள கடிதங்களிலிருந்து தெரிகிறது. சில ஆண்டுகளுக்கு முன் பிராம் மணரல்லாதாரைப்போல் நெருங்காதாருக்கும்கூட அதில் செல்ல உரிமையிருந்தது என்றும் அங்கிருப்பர்கள் கூறுகின்றனர்.

எனவே, வைக்கம் சத்தியாக்கிரகத்திற்கு நியாயமான காரணம் இருக்கிறது என்பதே எனது அபிப்பிராயம். அது ஒழுங்கான எல்லைக்கு உட்பட்டிருக்கும் வரையில், கண்டிப்பான அகிம்சைக்கும் சத்தியத்திற்கும் முரணின்றி நடக்கப்பட்டு வரும் வரையில், அது பொதுமக்களின் பூரண அனுதாபத்தைப் பெறுவ தற்கு உரியதாகும்.

—'எங் இந்தியா' 1—5—1924

# 4

# மற்ற மதத்தினரின் உதவியை நாடலாமா ?

வைக்கம் சத்தியாக்கிரகம் வரம்பு மீறிப் போய்க் கொண் டிருக்கிறதென நான் அஞ்சுகிறேன். சீக்கியரின் இலவச உணவு ஏற்பாடு வாபஸ் செய்யப்படுமென்றும், அந்த இயக்கத்தில் ஹிந்துக்கள் மாத்திரமே பங்கெடுத்துக் கொள்ளுவார்களென்றும் நான் நம்புகிறேன். முஸ்லிம்களுக்குள் ஏற்படும் மத சம்பந்தமான தகராறில் ஹிந்துக்களோ அல்லது மற்ற முஸ்லிம் அல்லாதாரோ தலையிட்டால், அதைக் குறித்து முஸ்லிம்கள் ஆத்திரம் அடை வார்கள். அது போலவே, ஹிந்துக்களின் சீர்திருத்த சம்பந்த மான ஒரு விஷயத்தில், மற்றவர்கள் தலையிடுவதைக் குறித்து வைதிக ஹிந்துக்கள் கோபம் அடைவார்கள்.

மலையாளத்தில் உள்ள ஹிந்து சீர்திருத்தக்காரர்கள், ஹிந் துக்கள் அல்லாதவரிடமிருந்து அனுதாபத்தைத் தவிர, அவர் களின் தலையீட்டையோ அல்லது உதவியையோ நாடுவார் களாயின், ஹிந்து சமுதாயத்தின் அனுதாபத்தை அவர்கள்

அறவே இழந்து விடுவார்கள். வைக்கத்தில் இயக்கத்தை நடத்தி வரும் ஹிந்து சீர்திருத்தக்காரர்கள், அவர்களுடைய வைதிக சகோதரர்களின் மனத்தை நிர்ப்பந்தத்தினுல் மாற்ற விரும்பவில்லை யென்றே நிச்சயமாகக் கருதுகிறேன். எப்படியாயினும், அவர்கள் எல்லைக் கோட்டையும் சத்தியாக்கிரகிகள் அதைத் தாண்டக் கூடாது என்பதையும் உணருவார்களாக. வைதிகர்கள் பீதியடையும்படி செய்யாமல் இருக்குமாறு நான் சீர்திருத்தக்காரர்களை வணக்கத்துடன் வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறேன். வைக்கத்தில் தகராறுக்குக் காரணமாக உள்ள ரஸ்தா எல்லோருக்கும் திறக்கப் பட்டுவிடுமாயின், மலையாளத்தில் கூட தீண்டாமைப் பிரச்னை தீர்ந்துவிடு மென்ற கருத்தை நான் ஒப்புக்கொள்ள முடியாது. வைக்கத்தில் சாத்விக முறையில் வெற்றி கிடைக்குமாயின், அது பொதுவாகக் குருக்கள்மாரின் மூடபக்திக் கோட்டையை அசைத்துவிடும் என்பதில் ஐயமில்லை. ஆனுல், அந்தப் பிரச்னை ஆங்காங்கு எழும் போது, ஆங்காங்கு அதைச் சமாளிக்க முற்பட வேண்டும். கிராமத்திலுள்ள ஓரிடத்தில் ஒரு கிணறு தீண்டாதாரின் உபயோகத்திற்குத் திறந்து விடப்பட்டால், அதைத் தொடர்ந்து குஜராத்திலுள்ள எல்லாக் கிணறுகளும் தீண்டாதாருக்குத் திறக்கப்பட்டுவிடும் என்பதில்லை. ஹிந்து சீர்திருத்தக்காரர்களின் நண்பர்களான கிறிஸ்தவர்கள், முஸ்லிம்கள், அகாலியர்கள் முதலிய மற்ற மதங்களைச் சேர்ந்தவர்கள், வைதிக ஹிந்துக்களுக்கு எதிராக ஆர்ப்பாட்டம் செய்தும், சீர்திருத்தக்காரர்களுக்கு பண உதவி அளித்தும், இறுதியில் வைதிகர்களைப் பயமுறுத்தி அடிபணியும்படி செய்வார்களாயின், ஹிந்து மதத்தின் கதி என்னவாகும்? அது சத்தியாக்கிரகமாகுமா? அது வைதிகர்கள் மனம் மாறிப் பணிந்து கொடுத்ததாகுமா? அது ஹிந்து மதத்தில் ஒரு சீர்திருத்தமாகுமா?

—'எங் இந்தியா' – 8—5—1924

# 5

# குண்டர்களின் காட்டுமிராண்டித்தனம்

வைக்கம் சத்தியாக்கிரகம் அநேகமாக இறுதிக் கட்டத்தை அடைந்திருக்கிறது. இப்போது திருவாங்கூர் அதிகாரிகள் சத்தியாக்கிரகிகளை, குண்டர்கள் என்ன வேண்டுமானுலும் செய்து கொள்ளட்டுமென்று அறவே கைவிட்டுவிட்டார்கள் என்று பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன. அந்தரங்கமாகக் கிடைத்த தகவலும் அச் செய்திகளை உறுதிப்படுத்தியுள்ளது. இந்தக் கொடுமை, வைதிகர்களடங்கிய பிரிவினரின் கட்டுக்கோப்பான எதிர்ப்பு என்று மறைத்துக் கூறப்படுகிறது. வைதிகர்கள் பெரும்பாலும் ஈவிரக்கமின்றி எதுவும் செய்ய முற்படு

வார்கள் என்பதை எல்லோரும் அறிவர். சீர்திருத்தக்காரர்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, வைதிகர்களுக்குச் செல்வாக்கும் பொதுஜன அபிப்பிராயமும் பின்பலமாக இருப்பது வழக்கம். எனவே, அவர்கள் கேள்வி முறையின்றிக் காரியங்களைச் செய்யலாம். பாவம், சீர்திருத்தக்காரர் அவ்விதமெல்லாம் செய்யத் துணியமாட்டார். ஆனால், இவ்விஷயத்தில் திருவாங்கூர் அதிகாரிகளின் போக்கைத்தான் புரிந்துகொள்ள முடியவில்லை. நிரபராதிகளான சத்தியாக்கிரகிகளை எதிர்த்து நடைபெறும் இந்தப் பகிரங்க பலாத்காரத்துக்கு அதிகாரிகள் உடந்தையாக இருக்கிறார்களா? திருவாங்கூரைப் போல் முன்னேற்றமடைந்துள்ள ஒரு சமஸ்தானம், உயிரையும் உடைமையையும் பாதுகாக்க வேண்டிய தங்களுடைய மூலாதாரமான கடமையைத் துறந்துவிட்டதா? குண்டர்களின் பலாத்காரம் மிகவும் காட்டுமிராண்டித்தனமாக இருப்பதாகக் கூறப்படுகிறது. அவர்கள் தொண்டர்களின் கண்களில் சுண்ணும்பை அள்ளி வீசி, அவர்களைத் துன்பத்திற்கு உள்ளாக்குகிறார்கள்.

இந்த இயக்கத்தை ஆதரித்துக் காங்கிரசில் ஒரு தீர்மானம் நிறைவேற்றக் கூடாதா என்று, கேரளப் பிரதிநிதிகள் என்னைக் கேட்டார்கள். அந்த யோசனை எனக்குப் பிடிக்கவில்லையென்று நான் அவர்களிடம் கூறினேன். அவர்கள் விரும்பியது ஆன்மிக ஆதரவே. அவர்கள் காங்கிரஸ் அக்ராசனருக்கு ஒரு தீர்மானத்தை அனுப்பியிருந்தால், காங்கிரஸ் கமிட்டி எவ்வித ஆட்சேபணையுமின்றி ஆன்மிக ஆதரவு அளித்திருக்கும். எனவே, அவ்விதம் செய்ய வேண்டாமென்று அவர்களுக்கு நான் யோசனை கூறுவதில், எனது பொறுப்பு மிகவும் அதிகமாகும். ஆங்காங்குள்ள பிரச்னைகளைத் தீர்ப்பதற்காக மேற்கொள்ளப்படும் எல்லா இயக்கங்களும், தங்கள் சொந்த பலத்தையே நம்பியிருக்க வேண்டும். அசாதாரண சந்தர்ப்பங்களில் மாத்திரமே, அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அதன் ஆன்மிக ஆதரவை அளிக்க வேண்டும். எனினும், விதிவிட்ட வழி விடட்டும் என்று வேதாந்தம் பேசிக்கொண்டு காங்கிரஸ் அங்கே நடைபெறும் காட்டுமிராண்டித்தனத்தைப் பார்த்துக் கொண்டிருக்க முடியாது என்று திருவாங்கூர் அதிகாரிகளிடம் மரியாதையாகச் சொல்லிவிடலாம். அதிகாரிகள், சாதாரணமான சர்க்கார் நடவடிக்கைகளைக் கொண்டு சத்தியாக்கிரகத்தைச் சமாளிக்கும் வரையில், இயக்கம் சமஸ்தான எல்லைக்கு உட்பட்டதாகவே இருக்க வேண்டும். ஆனால், உற்சாகமும் உறுதியுமுள்ள சத்தியாக்கிரகிகள் மீது குண்டர்களை ஏவுதல், இந்தியப் பொது மக்களுடைய அபிப்பிராயத்தின் முழு சக்தியும் சத்தியாக்கிரகிகளுக்கு கிடைக்கும்படி செய்யும் என்பது நிச்சயம்.

இப்போது வைக்கம் சத்தியாக்கிரகச் செயலாளர்களுக்கு ஒரு வார்த்தை. குண்டர்களின் சவாலை ஏற்றுக் கொள்ள வேண்டும். ஆனால், சத்தியாக்கிரகிகள் நிதானமிழந்துவிட வேண்டாம். தொண்டர்கள் தரித்திருக்கும் கதர் உடைகள் கிழிக்கப்

பட்டும் எரிக்கப்பட்டும் வருவதாகத் தெரிகிறது. இதெல்லாம் மிகுந்த ஆத்திரத்தை உண்டாக்கக் கூடியதாகும். எவ்வளவு ஆத்திர மூட்டினாலும் தொண்டர்கள் சாந்தமாக இருக்கவேண்டும். நெருப்பைக் கக்கும் பீரங்கிகளின் முன்னிலையிலும் அவர்கள் அஞ்சா நெஞ்சத்துடன் இருக்க வேண்டும். நெருங்காதவர் விடுதலை பெறுவதற்காகச் சில நூற்றுக்கணக்கான தொண்டர்கள் உயிரைக் கொடுத்தால் கூட, அது அதிக விலையாகாது. ஆனால், அத்தகைய தியாகிகள் அப்பழுக்கின்றி இறக்க வேண்டும். சத்தியாக்கிரகிகள், *ஸீஸரின் மனைவியைப் போல் சந்தேகத்திற்கு அப்பாற்பட்டவர்களாக இருக்க வேண்டும்.

—'எங் இந்தியா' – 3—7—1924

## 6
## கஷ்ட நஷ்டங்களை மௌனமாக ஏற்க வேண்டும்

வைக்கம் சத்தியாக்கிரகம், பொதுவாக எல்லோரும் அறிந்திருப்பதைக் காட்டிலும் அதிக ஆழ்ந்த கருத்துக் கொண்டதாகும். அதன் செயலாளர்களான இளைஞர்கள், ஒழுங்கில் கண்டிப்பு உள்ளவர்களாகவும், வைதிகர்கள் விஷயத்தில் தாங்கள் கைக்கொள்ளும் நடவடிக்கைகளில் சாந்தமுடையவர்களாகவும் இருக்கிறார்கள். இது, அவர்களுக்கு ஏற்பட்டுள்ள சோதனைகளில் மிகவும் அற்பமான அம்சமே. அவர்களில் சிலர் சமுதாய பகிஷ்காரத்தின் கொடுமையையும் அனுபவித்து வருகிறார்கள். இந்தக் கொடுமை எத்தகையது என்பது மேற்கத்திய மாகாணத்தைச் சேர்ந்த நமக்குத் தெரியாது. இயக்கத்தில் பங்கு கொண்டுள்ள இந்த இளைஞர்களுக்குச் சமுதாய வசதிகள் மாத்திரம் மறுக்கப்படவில்லை; குடும்பச் சொத்தில் அவர்களுக்குள்ள பங்கைக்கூட இழக்கும்படி நேருமென அவர்களைப் பயமுறுத்தி வருகிறார்கள். அவர்கள் சட்டப்படி வழக்குத் தொடர்ந்தால், ஒரு வேளை அவர்களுக்குள்ள பங்கு கிடைத்துவிடலாம். எனினும், சத்தியாக்கிரகி தனக்குச் சொந்த முறையில் இழைக்கப்பட்ட தவறுக்காகக் கோர்ட்டுக்குச் செல்ல முடியாது. கொடுமையை அனுபவிக்கும் எண்ணத்துடனேயே அவர் சத்தியாக்கிரகத்தில் ஈடுபடுகிறார். சத்தியாக்கிரகி, முற்றிலும் தம்முடைய ஒழுக்கம், தாம் படும் துன்பம் இவற்றின் சக்தியால் எதிரியின் மனத்தை

* உலக சரித்திரப் புகழ் பெற்ற ரோமிய தளபதியான ஜூலியஸ் ஸீஸரின் மனைவியினுடைய அப்பழுக்கற்ற நடத்தை, யாரும் சந்தேகிக்க முடியாதவாறு அவ்வளவு பரிசுத்தமாக இருந்ததால், ஸீஸரின் மனைவி போல் எள்ளளவும் சந்தேகத்துக்கு இடமின்றியிருக்க வேண்டும் என்ற உவமை உலகமெங்கும் வழங்கி வருகிறது.

மாற்ற முயற்சிக்கிறார். வைக்கம் போராட்டத்தின் மூலம் நாடும் சீர்திருத்தம் இதுதான். அவர் எவ்வளவுக்கெவ்வளவு அதிகப் பரிசுத்தமாக இருக்கிறாரோ, எவ்வளவுக்கெவ்வளவு அதிகத் துன்பத்துக்கு உள்ளாகிறாரோ, அவ்வளவுக்கவ்வளவு முன்னேற்ற மும் அதிக சீக்கிரத்தில் ஏற்படும். எனவே, அவர் சமுதாய பகிஷ்காரம், குடும்ப உரிமைகளுக்குத் தடை, குடும்பச் சொத்தில் தமது பங்கு அபகரிக்கப்படுதல் எல்லாவற்றையும் மௌனமாக ஏற்றுக்கொண்டு விட வேண்டும். அத்தகைய கஷ்ட நஷ்டங்களை அவர் மகிழ்ச்சியுடன் சகித்துக் கொள்ள வேண்டும் என்பது மாத்திரமல்ல, தம்மைத் துன்புறுத்துவோர் மீது அவர் தீவிர அன்பும் கொள்ள வேண்டும். அவரைத் துன்புறுத்துவோர், சீர்திருத்தக்காரர் ஏதோ பாவமான காரியம் செய்வதாகவும், அந்தத் 'தவறி'லிருந்து அவரைத் தடுக்க வேண்டுமென்றும் மனப்பூர்வமாக எண்ணுகிறார்கள். அவ்விஷயமாகப் பயன்தரத் தக்கதென்று கருதும் முறைகளை மாத்திரமே அவர்கள் கைக் கொள்ளுகிறார்கள்.

அதற்கு மாறாக சத்தியாக்கிரகி, தண்டனைகள் அடங்கிய ஒரு முறையின் மூலம் தமது சீர்திருத்தத்தை நிறைவேற்ற முயற்சிக்கவில்லை; ஆனால், தவத்தினாலும் தம்மைத் தாமே பரிசுத்தம் செய்துகொள்ளுவதாலும், துன்பத்திற்குள்ளாகியும் அதை நிறைவேற்ற முயற்சிக்கிறார். ஆகையால், தமக்கு இழைக்கப்படும் கொடுமையைக் குறித்து சத்தியாக்கிரகி ஆத்திரம் கொள்ளுவது, தமக்குத் தாமே விதித்துக்கொண்டுள்ள ஒழுங்கு முறைக்கு இடையூறு செய்வதாகும். அவர் நீண்ட காலம் அம்முறையை அனுஷ்டிக்க நேரலாம்; அதற்கு முடிவே இராததுபோல்கூட தோன்றலாம். சிறிதளவு அதட்டி மிரட்டுவதோ, நியாயமாக நல்வார்த்தை கூறுவதோ, அல்லது வற்புறுத்துவதோகூடத் துரிதமாகப் பலனைக் கொடுப்பதுபோல் தோன்றலாம்.

இங்கு நான் எதை எடுத்துக்காட்ட முற்படுகிறேன் என்றால், சத்தியாக்கிரகத்தின் அதிக சக்தியை அல்ல, சத்தியாக்கிரகி தாமாக வலுவில் மேற்கொண்டுள்ள முறையில் அடங்கியுள்ள நுணுக்கங்களையேயாகும். உண்மையில் நாள் செல்லச் செல்ல, சத்தியாக்கிரகம்தான் மிகவும் துரிதமான பலனைக் கொடுக்கக்கூடிய முறை என்பதை இப்பத்திரிகையில் அடிக்கடி எடுத்துக்காட்டி யிருக்கிறேன்.

வைக்கத்திலுள்ள இளைஞர்களான சத்தியாக்கிரகிகள் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள் என்பதைக் காட்டுவது மாத்திரமே இங்கே எனது நோக்கமாகும். மறியல் மூலம் அவர்கள் பெரும்பாலும் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள் என்பதைப் பொதுமக்கள் அறிவர். ஆனால், சத்தியாக்கிரகிகளில் சிலர், அவர்களுடைய குடும்பத்தாரிடமும் அவர்கள் சாதியைச் சேர்ந்தவர்களிடமும் மௌனமாக அனுபவித்து வரும் துன்பங்களைப் பற்றி அவர்களுக்கு ஒன்றும் தெரியாது. எனினும், மௌன

மாகவும், அன்புடனும் அனுபவித்துவரும் இந்தத் துன்பங்களே, சுவர் போல் இருந்து வரும் தப்பெண்ணத்தை இறுதியில் தகர்க்கும் என்பதை நான் அறிவேன். எனவே, சீர்திருத்தக்காரர்கள் தங்களுடைய பொறுப்பைப் பூரணமாக உணர வேண்டுமென்பதிலும், அவர்கள் தங்களுக்குத் தாங்களே விதித்துக்கொண்டுள்ள ஒழுங்கிலிருந்து மயிரிழையும் தவறக்கூடாதென்பதிலும் நான் கவலையும் அக்கறையும் கொண்டுள்ளேன்.

—'எங் இந்தியா' - 18—9—1924

# 7

# சீறும் ஜ்வாலைக்கும் நடுங்கக்கூடாது

ஒரு வைக்கம் சத்தியாக்கிரகி கீழ்வருமாறு ஒரு கடிதம் எழுதியுள்ளார் :

''வைக்கம் கோவிலுக்குச் செல்லும் எந்த ரஸ்தாவில் பிரவேசிக்க உரிமை வேண்டும் என்பதற்காக இப்போது சத்தியாக்கிரகம் செய்துவருகிறார்களோ, அந்தப் பிரவேச உரிமைக்குச் சாதகமாக 21 வாக்குகளும் பாதகமாக 22 வாக்குகளும் நேற்று திருவாங்கூர் சட்டசபையில் கிடைத்துள்ளன. அதைக் குறித்து இங்குள்ள மக்கள் மிகவும் கலக்கம் அடைந்திருப்பது இயல்பேயாகும். வாக்காளர்களைச் சர்க்கார் நேரடியாக வற்புறுத்தியதன் காரணமாகவே அவ்விதம் வாக்குகள் கிடைத்து, ஜனங்களுக்கு அதிகமான வேதனையைக் கொடுத்திருக்கிறது. தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த ஓர் அங்கத்தினரே பிரவேச உரிமையை எதிர்த்துச் சர்க்கார் கட்சியில் வாக்குக் கொடுத்தார் என்பதைக் கூற நான் வெட்கமடைகிறேன். இனி மேற்கொண்டு நிலைமையில் பல்வேறு கஷ்டங்களும் சிக்கல்களும் ஏற்படும். அமைதியான சத்தியாக்கிரக முறைகளில் இப்போது உற்சாகம் அறவே குறைந்துவிட்டது. சிலர் 'நேரடி நடவடிக்கை'யையும், கோவில்களுக்குள் பலாத்காரமாகப் பிரவேசிப்பதையும் கூட உபதேசிக்க ஆரம்பித்துவிட்டார்கள். சத்தியாக்கிரக முகாமிலேயே வைசூரி நோயும், ஏற்பட்டுள்ளது. வந்துகொண்டிருக்கும் கோடைகால உஷ்ணம் அதிகமாகும்போது, அந்த நோயும் அதிகமாகத் தாக்கலாம். உங்களுடைய தலைமையிலும், புனிதமான சாத்விகக் கொள்கையிலும் நம்பிக்கை வைத்து நாங்கள் போராட்டத்தை நடத்தி வருகிறோம். எனினும், கேரள மாகாண காங்கிரஸ் கமிட்டியின் உற்சாகம் குன்றி வருகிறதென்று அஞ்சுகிறேன். சென்ற பல மாதங்களாக அவர்களுடைய சொந்த முயற்சியால் அவர்கள் மிக மிகக் குறைவான தொகையே வசூல் செய்திருக்கிறார்கள். ஒவ்வொன்றுக்கும் நாங்கள் உங்களுடைய மதிப்பு வாய்ந்த யோசனையையும் உதவியையுமே நம்பியிருக்கிறோம். எங்களுக்குப் பணமுடை ஏற்பட்டிருக்கிறது. இங்கே உங்களுடைய விஜயத்தை எல்லாச் சத்தியாக்கிரகிகளும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். நமது இயக்கத்திற்கு உங்கள் விஜயம் மகத்தான உதவியாக இருக்கும் என்பதைச் சொல்லத் தேவையில்லை.''

அது ஒரு நல்ல கடிதமாகும். ஏனெனில், அது மனம் விட்டு எழுதப்பட்டிருக்கிறது. உண்மை விவரங்கள் கடிதத்தில் கண்ட படி இருக்குமாயின், அதையொட்டி நான் திருவாங்கூர் சர்க்காருக்கு வாழ்த்துக் கூறுவதற்கில்லை. ஆனால், உண்மை விவரங்கள் எனக்குத் தெரியாது. எனவே, நான் நேரில் அவற்றை அறிந்து கொள்ளும் வரையில், எனது முடிவை ஒத்திவைத்துள்ளேன். வெகு சீக்கிரத்தில் நான் வைக்கத்திற்குச் செல்ல ஆவலுடையவனாக இருக்கிறேன்.

இதன் மத்தியில் சத்தியாக்கிரகிகள் சோர்வடைந்துவிட வேண்டாம். அவர்கள் அவநம்பிக்கைக்கு இடம் கொடுத்துவிடக் கூடாது. நான் படித்த தமிழ்ப் பாடங்களில் ஒரே ஒரு பழமொழி தான் என் மனத்தில் எப்போதும் பசுமையாக இருந்து வருகிறது. "அனாதைக்கு ஆண்டவன்தான் துணை" என்பதே அந்தப் பழமொழியாகும். அந்த உண்மையில் உள்ள நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டே மகத்தான சத்தியாக்கிரக சித்தாந்தம் உருவாக்கப்பட்டிருக்கிறது. ஹிந்து மத இலக்கியங்களிலும், உண்மையில் எல்லா மத இலக்கியங்களிலுமே, அந்த உண்மையை நிரூபிப்பதற்கான உதாரணங்கள் நிறைய இருக்கின்றன.

சத்தியாக்கிரகிகளைத் திருவாங்கூர் சர்க்கார் கைவிட்டிருக்கலாம். நானும் கைவிடலாம். ஆனால், அவர்களுக்குக் கடவுளிடம் நம்பிக்கை இருந்தால், கடவுள் அவர்களை ஒருபோதும் கைவிட மாட்டார். அவர்கள் என்னை நம்பிக்கொண்டிருப்பார்களாயின், ஒடிந்த நாணல் குச்சி மீது தாங்கள் சாய்ந்து கொண்டிருக்கிறோம் என்பதை அவர்கள் அறிந்துகொள்ளட்டும். அவர்களிடமிருந்து நான் பத்திரமான தூரத்தில் வசித்து வருகிறேன். நான் அவர்களுடைய கண்ணீரைத் துடைக்கலாம். ஆனால், துன்பத்திற்குள்ளாவது அவர்களுடைய ஏகபோக உரிமையாகும், அவர்கள் பரிசுத்தமாக இருப்பார்களாயின், அவர்கள் படும் கஷ்டங்களின் மூலமே அவர்களுக்கு வெற்றி கிடைக்குமென்பது நிச்சயம். கடவுள் தமது பக்தர்களைக் கடைசிவரையில் சோதிக்கிறார்; எனினும் ஒருபோதும் தாங்க முடியாத அளவுக்குச் சோதிப்பதில்லை. கடுமையான சோதனையைச் சகித்து நிற்பதற்குப் போதிய பலத்தையும் அவர் தமது பக்தர்களுக்குக் கொடுக்கிறார். அவர்களுடைய கஷ்டங்களுக்கு அவர் எல்லையும் விதிக்கிறார். வைக்கம் சத்தியாக்கிரகிகளின் சத்தியாக்கிரகம், குறிப்பிட்ட காலத்திற்கு உட்பட்டோ, அல்லது குறிப்பிட்ட கஷ்ட நஷ்டங்களை அனுபவித்த பிறகோ வெற்றி பெறாவிடில், அதைக் கைவிட்டுவிட வேண்டிய ஒரு வெறும் சோதனையல்ல.

சத்தியாக்கிரகிகளுக்குக் கால எல்லை என்று எதுவுமில்லை. துன்பத்தை அனுபவிக்க அவர்களுக்குள்ள சக்திக்கும் எல்லையில்லை. எனவே, சத்தியாக்கிரகத்தில் தோல்வி என்பதே கிடையாது. அவர்களுடைய 'தோல்வி'யே வெற்றியின் உதயமாக

இருக்கலாம். அது ஒரு ஜீவனை உற்பத்தி செய்யும் பிரசவ வேதனைக்கு ஒப்பாக இருக்கலாம்.

வைக்கம் சத்தியாக்கிரகிகள் சுயராஜ்யப் போராட்டத்திற்கு இணையான ஒரு மகத்தான போராட்டத்தை நடத்தி வருகிறார்கள். நீண்ட காலமாக நிலவிவரும் ஒரு தவறையும் தப்பெண்ணத்தையும் அகற்றுவதற்காகப் போராடி வருகிறார்கள். அவற்றிற்கு, வைதிகம், மூடபக்தி, வழக்கம், அதிகாரம் இவற்றின் ஆதரவு இருந்து வருகிறது. மதம் என்ற மாறுவேஷத்தில் நடமாடி வரும் மத எதிர்ப்பையும், அறிவு வேஷத்தில் தோற்றமளிக்கும் அறியாமையையும் எதிர்த்து நடக்கும் புனித யுத்தத்தில் மேற்கொள்ள வேண்டிய பல போராட்டங்களில், வைக்கம் சத்தியாக்கிரகிகளின் போராட்டமும் ஒன்றாகும். அவர்களுடைய போராட்டம் இரத்தக் களரியின்றி இருக்க வேண்டுமாயின், எத்தகைய கடுமையான சோதனைகள் நேரினும் அவர்கள் பொறுமையுடனிருக்க வேண்டும். சீறும் ஜ்வாலைக்கு முன்னிலையிலும் அவர்கள் நடுங்கக் கூடாது.

காங்கிரஸ் கமிட்டி அவர்களுக்கு எவ்வித உதவியும் அளிக்காமலிருக்கலாம். அவர்களுக்குப் பண உதவி எதுவும் கிடைக்காமற் போகலாம். அவர்கள் பட்டினி கிடக்கும்படியும் நேரலாம். ஆனால், அந்தகாரமான இந்தச் சோதனைகளுக்கெல்லாமிடையே சத்தியாக்கிரகிகளின் நம்பிக்கை சுடர்விட்டுப் பிரகாசிக்க வேண்டும்.

அவர்களுடைய நடவடிக்கை 'நேரடி நடவடிக்கை'யாகும். சத்தியாக்கிரகிகள் தங்களுடைய எதிரிகளிடம் கோபம் கொள்ளத் துணியமாட்டார்கள். எதிரிகளுக்கோவெனில் கோபம் கொள்ளுவதைத் தவிர வேறெதுவும் தெரியாது. சத்தியாக்கிரகிகளில் எல்லோரும் யோக்கியர்கள் என்று சொல்ல முடியாது. அதுபோலவே, எதிரிகளில் எல்லோரும் அயோக்கியர்கள் என்றும் சொல்ல முடியாது. சத்தியாக்கிரகிகள் தங்கள் மதத்தில் ஆக்கிரமிப்பதாக எதிரிகள் உண்மையில் நம்புவதாலேயே, சத்தியாக்கிரகிகளை எதிர்த்து வருகிறார்கள். வைக்கம் சத்தியாக்கிரகம் துன்பத்தின் எடுத்துக்காட்டாகும். கோபமோ, பகையோ இன்றி துன்பத்தை ஏற்கும் சூரியோதயத்தின் முன்னிலையில், கடினமான கல் நெஞ்சமும், வெட்கக்கேடான அறியாமையும் அடியோடு மறைந்துவிடும் என்பது நிச்சயம்.

சத்தியாக்கிரக முகாமில் வைசூரி தோன்றியிருப்பதைக் குறித்து நான் பீதியடைகிறேன். அசுத்தம் காரணமாகவே அந்த நோய் ஏற்படுகிறது. ஆரோக்கிய விதிகளை அனுசரித்துச் சிகிச்சை செய்வதே அதற்குப் பரிகாரமாகும். அவர்கள் வைசூரி நோயாளிகளை ஒதுக்கி வைப்பதுடன், நோய்க்குக் காரணத்தையும் கண்டுபிடிக்க வேண்டும். அவர்களுடைய முகாம் முற்றிலும் ஆரோக்கியமான நிலையில் இருக்கிறதா? டாக்டர்களிடம்

வைசூரிக்கு மருந்து இல்லை. அதற்குத் தண்ணீர் சிகிச்சைதான் சிறந்த சிகிச்சை முறையாகும். குறைந்த உணவோ அல்லது உணவே சாப்பிடாமல் இருப்பதோதான் பத்திரமானது. வைசூரி நோயாளிகள் தண்ணீர் நிறைய சாப்பிட வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக, அந்த நோயாளிகளோ, மற்றவர்களோ, மன உறுதியை இழந்துவிட வேண்டாம். சத்தியாக்கிரகிகள் படவேண்டிய துன்பங்களில் இந்த நோயும் ஒன்றாக இருக்கிறது. சிப்பாய்களின் முகாம்களிலும் நோய் இருக்கத்தான் செய்கிறது. துப்பாக்கிகளால் ஏற்படும் காயங்களைக் காட்டிலும் நோய்களாலேயே அதிகச் சிப்பாய்கள் மரணமடைவதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள்.

பணத்தைப் பற்றி அவர்கள் கவலைப்பட வேண்டியதில்லை. அவர்களுடைய நம்பிக்கை அவர்களுக்குத் தேவையான சகல பண உதவியையும் கொண்டு வரும். எனக்குத் தெரிந்தவரையில், எந்த நல்ல லட்சியமும் பணத்தேவை காரணமாக நசித்ததில்லை.

—'எங் இந்தியா' - 19—2—1925

## 8

# கொதிக்கும் வெய்யில் குளிர்ந்திருக்கும்

வைக்கம் சத்தியாக்கிரக ஆசிரமத்தில் உள்ளவர்கள் அடங்கிய கூட்டமொன்றில் நான் பேசிய முழுவிவரங்களும் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆசிரமத்தில் தாற்காலிகமாக ஐம்பது தொண்டர்களுக்குமேல் இருக்கின்றனர். வைக்கம் கோவிலின் நான்கு வாயிற்படிகளையும் காவல் புரிவதற்காக நான்கு அடைப்புக்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றின் முன் தொண்டர்கள் நின்று கொண்டோ, அல்லது உட்கார்ந்துகொண்டோ இருக்கிறார்கள். அங்கே இருக்கும்போது அவர்கள் நூற்கிறார்கள். அவர்கள் சேர்ந்தாற்போல் ஆறு மணி நேரம் அங்கே தங்கியிருக்கிறார்கள். நான் பேசியதில் பொதுவான முக்கிய விஷயங்கள் அடங்கியுள்ளன. மற்றும் அவை எல்லா சத்தியாக்கிரகிகளும் அறிந்துகொள்ள வேண்டியவை. எனவே, அதை மீண்டும் இங்கே குறிப்பிடுகிறேன்:

பூரணமானதென்றும் திருப்திகரமானதென்றும் நான் கருதும் அளவுக்கு, உங்களுடன் நான் அளவளாவிப் பேசாமல் செல்லுவதைக் குறித்து வருந்துகிறேன். இதற்கு மேல் அதிகமாக நான் எதுவும் செய்வதற்கில்லையென்று தோன்றுகிறது. எனது பிரயாணத்திட்ட ஏற்பாடுகளைச் செய்திருப்போர், வைக்கத்தைத் தவிர மற்றவிடங்களையும் நான் சென்று பார்க்க வேண்டுமென்றும், இயக்கத்திற்கு அது உதவியாக இருக்குமென்றும் கருதுகிறார்கள். அவர்களுடைய யோசனைக்கு நான்

இணங்கியுள்ளேன். எனினும், இயக்கத்தின் வெற்றி, அதிகமாக உங்களைப் பொறுத்திருக்கிறதேயன்றி வெளி ஆதரவை அல்ல. இது கடந்த அனுபவத்தை அடிப்படையாகக்கொண்ட எனது உறுதியான கொள்கையாகும். உங்களிடம் ஒன்றும் இரா விட்டாலோ, உங்களிடம் அதிகமாக ஒன்றும் இராவிட்டாலோ, இதுபோன்ற அவசர விஜயத்தினுல் எவ்வளவு உற்சாகம் ஏற்பட் டாலும் அதனுல் பலன் உண்டாகாது. நான் இங்கே வந்திராவிட் டாலும், பொதுஜனங்களிடையே உற்சாகம் ஏற்பட்டிராவிட் டாலும், நீங்கள் உங்கள் மனச்சாட்சிக்கு விரோதமின்றி உண்மை யாக நடந்துகொள்ளும் பட்சத்தில், இயக்கத்திற்கு எவ்விதக் குறையும் இராது. இதுபோன்ற இயக்கத்திற்குத் தேவையான எல்லா உற்சாகமும் உங்களுடைய தொண்டினுலேயே ஏற்பட் டிருக்கும்.எனவே, இங்கே நான் இன்னும் அதிகநேரம் கழித்திருந் தால், அது பிரயோசனகரமாக இருந்திருக்கும். ஆனுல், நண்பர் களின் ஆலோசனைக்கு எதிராக அவ்விதம் செய்ய முடியவில்லை.

எனினும், உங்களிடமிருந்து நான் என்ன எதிர்பார்க்கிறேன் என்பதை, எவ்வளவு சுருக்கமாகக் கூற முடியுமோ அவ்வளவு சுருக்கமாகக் கூற விரும்புகிறேன். இயக்கத்தின் ராஜீய அம் சத்தை மறந்து விடும்படி உங்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன் இந்தப் போராட்டத்தினுல் ஏற்படக்கூடிய ராஜீய விளைவு களைப் பற்றி நீங்கள் அக்கறை கொள்ள வேண்டியதில்லை. அவற்றில் நீங்கள் அக்கறை கொண்டால், இயக்கத்தின் உண் மையான பலனை நீங்கள் இழப்பதுடன், ராஜீய பலாபலன் களையும் அடைய முடியாமற் போய்விடும். பின்னர், போராட்டம் உண்மையான உஷ்ண கட்டத்தை அடையும்போது, அதைச் சமாளிக்கும் ஆற்றல் உங்களிடம் இராது. எனவே, நான் கூறு வது உங்களைப் பீதியடையும்படி செய்வதாக இருப்பினும், இந்தப் போராட்டத்தின் உண்மையான தன்மையை உங்களிடம் விளக்கிக் கூற நான் ஆர்வம் உடையவனுக இருக்கிறேன்.

இது, ஹிந்துக்களுக்கு ஆழ்ந்த மதசம்பந்தமான ஒரு போராட்டமாகும். ஹிந்து மதத்திலுள்ள மாபெரும் களங்கத்தை அகற்ற நாம் முயற்சித்து வருகிறோம். நெடுங்காலமாக இருந்து வரும் தப்பெண்ணத்தை எதிர்த்து நாம் போராட வேண்டியிருக் கிறது. கோவிலைச் சுற்றியுள்ள ரஸ்தாக்கள் பொது ரஸ்தாக்கள் என்றே நாம் உறுதியாகக் கருதுகிறோம். அவற்றை நெருங்காதா ருக்குத் திறந்துவிடவே நாம் போராடி வருகிறோம். இது மகத் தான போராட்டத்தில் ஒரு சிறிய தகராறேயாகும்.

வைக்கத்திலுள்ள ரஸ்தாக்களைத் திறப்பதுடன் நமது போராட்டம் முடிவுறுவதாயின், அதைப்பற்றி நான் என் மண்டை யைக் குழப்பிக் கொள்ள மாட்டேன் என்பது நிச்சயம். எனவே, நீங்கள் வைக்கத்திலுள்ள ரஸ்தாக்களை நெருங்காதாருக்குத் திறப்பதுடன் போராட்டம் முடிந்துவிடும் என்று நினைத்தால், நீங்கள் தவறு செய்தவர்களாவீர்கள். அந்த ரஸ்தாக்கள் திறக்

கப்பட்டே தீரவேண்டும். ஆனல், அதுதான் போராட்டத்தின் ஆரம்பமாகும். முடிவு என்னவெனில், திருவாங்கூர் முழுவதும் உள்ள அத்தகைய ரஸ்தாக்கள் யாவும் நெருங்காதாருக்குத் திறக்கப்பட வேண்டும். அது மாத்திரமல்ல, நமது முயற்சிகளின் பலனுக, தீண்டாதார், நெருங்காதார் இவர்களின் பொதுவான நிலையைச் சீர்திருத்த வேண்டுமென நாம் எதிர்பார்க்கிருேம். அதற்கு நாம் மகத்தான தியாகம் செய்ய வேண்டும். எதிரிகள் மீது பலாத்கார முறைகளைக் கைக்கொண்டு நாம் காரியங்களைச் செய்ய வேண்டும் என்பது நமது நோக்கமல்ல. அவ்விதம் செய்வது பலாத்க்காரத்திஞலோ அல்லது நிர்ப்பந்தத்திஞலோ எதிரிகளின் மனத்தை மாற்றுவதாகும். மதசம்பந்தமான விஷயங்களில் நிர்ப்பந்தத்தைக் கொண்டு வருவது, நம்மை நாமே தற்கொலை செய்துகொள்ளுவதாகுமென்பதில் ஐயமில்லை. கண்டிப்பான அகிம்சை முறையில், அதாவது நாமே துன்பத்திற்குள்ளாகி, இந்தப் போராட்டத்தை நடத்தி வரவேண்டும்; சத்தியாக்கிரகத்தின் பொருள் அதுதான்.

லட்சியத்தை நோக்கிச் செல்லும் யாத்திரையில் உங்கள் மீது கஷ்டங்கள் திணிக்கப்பட்டாலும், இயல்பாகவே நீங்கள் அனுபவிக்கும்படி நேர்ந்தாலும், அவற்றையெல்லாம் தாங்கும் சக்தி உங்களுக்கு இருக்கிறதா என்பதே கேள்வியாகும். நீங்கள் கஷ்டங்களை அனுபவிக்கும்போதுகூட உங்கள் எதிரிகள் மீது உங்களுக்கு வெறுப்பு இருக்கக்கூடாது; வெறுப்பின் அறிகுறிகூட இருக்கக்கூடாது. அதற்கு மாருக, எதிரிகள் மீது நீங்கள் அன்பு காட்ட வேண்டுமென்றும் நான் விரும்புகிறேன். அதற்கு வழி என்னவெனில், நீங்கள் உங்களுடைய நோக்கம் எவ்வளவு யோக்கியப் பொறுப்பானதென்று கருதுகிறீர்களோ, அது போலவே எதிரிகளின் நோக்கமும் யோக்கியப் பொறுப்பானதென்று நீங்கள் கருத வேண்டும் அது கஷ்டமான காரியம் என்பதை நான் அறிவேன். நேற்று எனக்கும் அது கஷ்டமாக இருந்தது. கோவில் ரஸ்தாக்களில் நெருங்காதாருக்கு அனுமதி மறுக்கும் உரிமையை வற்புறுத்திய நண்பர்களோடு நேற்று நான் பேசிக்கொண்டிருந்தபோது, அவர்களுடைய யோக்கியப் பொறுப்பிற்கு மதிப்புக் கொடுப்பது கஷ்டமாக இருந்ததென்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். அவர்கள் சுயநலத்தை மனதிற்கொண்டே பேசினர்கள் என்பதையும் ஒப்புக்கொள்ளுகிறேன். இந்நிலையில், அவர்களின் நோக்கம் கண்ணியமானதென்று நான் அவர்களுக்கு எப்படி மதிப்புக் கொடுக்க முடியும்? இதையே நான் நேற்றும் இன்று காலையிலும் நினைத்துக்கொண்டிருந்தேன்.

பிறகு நான் செய்தது இதுதான்: ''அவர்களுடைய சுயநலனே அல்லது சொந்த அக்கறையோ எங்கே இருக்கிறது? அவர்கள் அவர்களுடைய நோக்கத்தை நிறைவேற்ற வேண்டியிருக்கிறது என்பது உண்மையே. அதுபோலவே, நாமும் நமது நோக்கத்தை நிறைவேற்ற வேண்டியிருக்கிறது. ஆனல், நமது

நோக்கம் பரிசுத்தமானதென்றும், எனவே சுயநலமற்றதென்றும் நாம் எண்ணுகிறோம். தன்னலமற்ற தன்மை எங்கே முடிகிறது, தன்னலம் எங்கே ஆரம்பமாகிறது என்பதை யார் தீர்மானிப்பது? தன்னலமற்ற தன்மை தன்னலத்தின் கலப்பற்ற உருவாக இருக்கலாம்.'' இவ்விதமெல்லாம் என்னை நானே கேட்டுக் கொண்டேன். இதை நான் வாதத்திற்காகக் கூறவில்லை. உண்மையில், என் மன உணர்ச்சியையே கூறுகிறேன். அவர்களுடைய கருத்தின் கோணத்திலிருந்து அவர்களது மனநிலையை நான் ஆராய்ந்து கொண்டிருக்கிறேன். அவர்கள் ஹிந்துக்களாக இராவிடில், நேற்று பேசியதைப் போல் அவர்கள் பேசியிருக்க மாட்டார்கள். எதிரிகளின் நிலையிலிருந்து கொண்டு எதிரிகள் நினைப்பதுபோல் நாம் விஷயங்களை நினைக்கத் தொடங்கிய உடனேயே, எதிரிகளிடம் முற்றிலும் நியாயமாக நடந்து கொள்ளுவது சாத்தியமாகிவிடும்.

ஆனால், இதற்கு மனம் விருப்பு வெறுப்பற்று இருக்க வேண்டுமென்பதை நான் அறிவேன். அத்தகைய நிலையை எட்டிப் பிடிப்பது மிகவும் கஷ்டமாகும். ஆயினும் ஒரு சத்தியாக்கிரகிக்கு அத்தகைய நிலை முற்றிலும் அத்தியாவசியம். நாம் எதிரிகளின் நிலையில் இருந்துகொண்டு, அவரது கருத்தை அறிந்து கொண்டுவிட்டால், உலகத்தில் துன்பங்களும் தப்பெண்ணங்களும் பெரும்பாலும் மறைந்துவிடும். பின்னர் நாம் எதிரிகளுடன் விரைவில் சமரசம் செய்து கொள்ளுவோம்; அல்லது அவர்களது குறைகளைப் பொறுத்து, அவர்களிடம் பெருந்தன்மையுடன் நடந்துகொள்ளுவோம். ஆனால், இப்போது நாம் சம்பந்தப்பட்ட வரையில், எதிரிகளுடன் விரைவில் சமரசம் செய்து கொள்ளுவதென்ற பேச்சிற்கே இடமில்லை. ஏனெனில், நமது கொள்கைகள் முற்றிலும் வேறானவை. எனினும் அவர்கள் மனத்தில் ஒன்றும் வாக்கில் ஒன்றும் வைத்துப் பேசவில்லையென நாம் அவர்கள் விஷயத்தில் பெருந்தன்மையுடன் நம்பலாம்.

நெருங்காதாருக்கு ரஸ்தாக்களைத் திறந்துவிட அவர்கள் விரும்பவில்லை. அவர்கள் அவ்விதம் கூறுவதற்குக் காரணம் சுயநலமாக இருந்தாலும்சரி, அல்லது அறியாமையாக இருந்தாலும் சரி, அவர்கள் அவ்வாறு கூறுவது தவறு என நாம் உண்மையில் நினைக்கிறோம். எனவே அவர்கள் கூறுவது தவறு என்பதை நாம் அவர்களுக்கு எடுத்துக் காட்டவேண்டியது கடமையாகும். நாம் துன்பத்திக்கு உள்ளாவதன் மூலம் அதை எடுத்துக்காட்ட வேண்டும். நீண்டகாலமாக இருந்துவரும் தப்பெண்ணங்கள் மதசம்பந்தமான ஆதாரத்தையும் அடிப்படையாகக் கொண்டிருக்குமாயின், நியாயத்தை உணரும்படி எதிரிகளுக்கு வேண்டுகோள் விடுப்பதனால் மாத்திரம் யாதொரு பலனும் ஏற்படாது. துன்பத்திற்குள்ளாவதன் மூலம் நியாயம் பலம் பெறுகிறது. துன்பத்திற்குள்ளாவது எதிரிகளின் அகக் கண்களைத் திறக்கின்றது. எனவே, நமது நடவடிக்கைகளில் நிர்ப்பந்தத்தின்

அறிகுறியே இருக்கக்கூடாது. நாம் பொறுமையை இழந்துவிடக் கூடாது. நாம் கைக்கொள்ளும் முறைகளில் நமக்கு நிரந்தரமான நம்பிக்கை இருக்கவேண்டும்.

நாம் இப்போது கைக்கொண்டுள்ள முறைகள் இவைதான்: நாம் நான்கு அடைப்புகளுக்கு அருகில் செல்லுகிறோம். நாம் தடுக்கப்பட்டால், கீழே உட்கார்ந்து நாள் தவருமல் நூல் நூற்க முற்படுகிறோம்.

அதன் பயனுக, ரஸ்தாக்கள் திறக்கப்பட்டே தீருமென்பதில் நமக்கு நம்பிக்கை இருக்கவேண்டும். அது மிகவும் கஷ்டமான, தாமதமான ஒரு முறை என்பதை நான் அறிவேன். ஆனல், சத்தியாக்கிரகத்தின் சக்தியில் உங்களுக்கு நம்பிக்கை இருக்கு மாயின், தாமதமான, அணு அணுவாக வேதனையைக் கொடுக்கும் இந்தச் சித்திரவதையிலும், துன்பத்திலும் நீங்கள் ஆனந்தம் கொள்ளவேண்டும். அப்படியாயின், நீங்கள் நாள் தவருமல் சென்று கொதிக்கும் வெய்யிலில் உட்காருவதால் ஏற்படும் கஷ்டத்தையும் அசௌகரியத்தையும் உணர மாட்டீர்கள். லட்சியத்திலும், லட்சியத்தை அடைவதற்கான முறைகளிலும், கடவுளிடத்திலும் உங்களுக்கு நம்பிக்கை இருக்குமாயின், கொதிக்கும் வெய்யில் உங்களுக்குக் குளிர்ச்சியாக இருக்கும். நீங்கள் களைத்துப்போய், "இப்படியே இன்னும் எவ்வளவு காலமோ" என்று கூறக்கூடாது; ஒருபோதும் கோபமடையக் கூடாது. இது, ஹிந்து மதம் பொறுப்பாளியாக உள்ள பாவத்துக்கு நீங்கள் செய்யவேண்டிய தவத்தின் ஒரு சிறு பகுதியேயாகும்.

நான் உங்களை இந்த இயக்கத்தின் சிப்பாய்களாகக் கருது கிறேன். நீங்கள் விஷயங்களை உங்களுக்குள்ளாகவே ஆராய்ந்து பார்ப்பது சாத்தியமல்ல. ஆசிரம நிர்வாகத்தில் உங்களுக்குள்ள நம்பிக்கையே நீங்கள் இங்கே வந்திருப்பதற்குக் காரணம். என் மீது நம்பிக்கை என்று அர்த்தமில்லை; நான் ஆசிரமத்தின் நிர்வாகி அல்ல. கொள்கைகள், பின்பற்ற வேண்டிய பொதுவான வழி, இவை சம்பந்தப்பட்ட வரையில் நான் இயக்கத்தை நடத்தி வருகிறேன். எனவே, இப்போதைக்கு நிர்வாகிகளாக இருப்ப வர்களிடம் உங்களுக்கு நம்பிக்கை இருக்க வேண்டும். ஆசிர மத்திற்கு வருமுன் தீர்மானிக்க வேண்டியது உங்கள் இஷ்டத் தைப் பொறுத்த விஷயமாகும். நீங்கள் இஷ்டப்பட்டு ஆசிர மத்திற்கு வந்துவிட்டால், பின்னர் ஏன், எதற்கு என்று கேட்கா மல் நீங்கள் உங்களுக்கு இடப்பட்ட தொண்டை யாதொரு ஆட்சேபணையுமின்றி செய்து முடிக்கவேண்டும்.

நாம் சக்திவாய்ந்த ஒரு நாடாக வரவேண்டுமாயின், அப் போதைக்கப்போது உங்களுக்கு இடப்படும் கட்டளைகள் எல்லாவற்றிற்கும் நீங்கள் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். இந்த ஒரே வழியின் மூலம்தான் ராஜீய வாழ்க்கையையோ அல்லது

மத சம்பந்தமான வாழ்க்கையையோ உருவாக்க முடியும். சில கொள்கைகளை நீங்கள் உங்களுக்குள்ளேயே தீர்மானித்துக் கொண்டிருக்க வேண்டும். அந்தக் கொள்கைகளுக்கு இணங்க நீங்கள் போராட்டத்தில் சேர்ந்து கொண்டிருக்க வேண்டும். அடைப்புகள் இருக்குமிடம் சென்று சத்தியாக்கிரகம் செய்வோரைப் போலவே, ஆசிரமத்தில் பின் தங்கியிருப்பவர்களும் போராட்டத்தில் அவ்வளவு பங்கு எடுத்துக்கொள்ளுகிறுர்கள்.

போராட்ட சம்பந்தமான வேலையில் ஒவ்வொரு பகுதியும் மற்றென்றைப் போல் முக்கியமானதுதான். எனவே, ரஸ்தா அடைப்புகளில் நூற்பதைப்போலவே, ஆசிரமத்தில் ஆரோக்கிய சம்பந்தமான அலுவல்களைச் செய்வதும் முக்கியமானதுதான். இவ்விடத்தில் கக்கூசுகளையும், ஆசிரமத்தைச் சுற்றிலும் மதிலுக்கு உட்பட்டுள்ள வெளிப்புறங்களையும் சுத்தம் செய்வது, நூற்பதைக் காட்டிலும் அதிக அருவருப்பாக இருக்குமாயின், அவ்விதம் சுத்தம் செய்வதுதான் அதிக முக்கியமும் லாபகரமானதும் ஆகும் என்று கருத வேண்டும். சோம்பேறித்தனமான பேச்சில் ஒரு நிமிஷம்கூட வீணுக்கக் கூடாது. நம் முன் உள்ள வேலையில் நாம் இரண்டறக் கலந்து விடவேண்டும். நம்மில் ஒவ்வொருவரும் அந்த உணர்ச்சியுடன் வேலை செய்யும் பட்சத்தில், வேலை செய்வதில்கூட ஆனந்தம் இருப்பதை நீங்கள் பார்க்கலாம். ஆசிரமத்தில் உள்ள எதையும், ஒவ்வொரு பைசா பெறுமான சொத்தையும் நீங்கள் உங்கள் சொந்த சொத்தாகக் கருதவேண்டும். இஷ்டம்போல் வீண் செலவு செய்யக்கூடிய சொத்தாக எண்ணக் கூடாது. ஒரு தானியம் அரிசியையோ, அல்லது ஒரு துண்டுக் காகிதத்தையோ நீங்கள் வீணுக அழிக்கக் கூடாது. அதுபோலவே, உங்கள் நேரத்தில் ஒரு நிமிஷத்தைக் கூட வீண் செலவு செய்யக்கூடாது. நமது நேரம் நம்முடையதல்ல. அது நாட்டுக்குச் சொந்தமாகும். அதை உபயோகிக்கும் விஷயத்தில் நாம் தருமகர்த்தாக்களாக இருந்து வருகிறோம்.

இதெல்லாம் கடுமையாகவும் கஷ்டமாகவும் உங்களுக்குத் தோன்றும் என்பதை நான் அறிவேன். நான் விவரித்துள்ள முறை கடினமானதாக இருக்கலாம். எனினும், அதை வேறெந்த விதத்திலும் விவரிப்பது என்னுல் முடியாத காரியம். ஓர் எளிதான காரியமென்று நம்பி, என்னையோ அல்லது உங்களையோ நான் ஏமாற்றுவது தவருகும்.

நமது மதத்தில் மிகுந்த ஊழல் படர்ந்திருக்கிறது. நம் நாடு சோம்பேறிகள் அடங்கிய நாடாகிவிட்டது. நேரம் எவ்வளவு இன்றியமையாதது என்ற உணர்வையே நாம் இழந்துவிட்டோம். நமது நடவடிக்கைகளில் தன்னலமே ஆதிக்கம் செலுத்துகிறது. நம்மில் உயர்ந்த நிலையில் இருப்பவர்களிடையேகூட பரஸ்பரம் பொருமை தாண்டவமாடுகிறது. நாம் ஒருவருக்கொருவர் அன்புடனே, பெருந்தன்மையுடனே நடந்து கொள்ளுவதில்லை. இவ்

விஷயங்களை யொட்டி நான் உங்கள் கவனத்தை இழுக்காவிடில், இந்தத் தீமைகளை நம்மிடையே இருந்து களைவது சாத்திய மாகாது.

தயவு தாட்சண்யமின்றி உண்மையை நாடுவதும், உண்மை யைக் கண்டு பிடிக்க உறுதி கொள்ளுவதுமே சத்தியாக்கிரக மாகும். நீங்கள் செய்யும் காரியத்தின் முக்கியத்துவத்தை நீங் கள் உணர்ந்துகொள்ளுவீர்களென நம்புவதைத் தவிர நான் வேறு என்ன செய்ய முடியும்? நீங்கள் உணர்ந்து கொண் டால், நீங்கள் செல்லும் வழி எளிதாக இருக்கும். எப்படி யெனில், அப்போது உங்களுக்கு நேரும் கஷ்டங்களில் நீங்கள் ஆனந்தம் கொள்ளுவீர்கள்; ஒவ்வொருவரும் நம்பிக்கையிழந்து கலங்கும்போது, நீங்கள் நம்பிக்கை காரணமாக மகிழ்ச்சியடை வீர்கள்.

மத நூல்களில் ரிஷிகளும் கவிகளும் கொடுத்துள்ள உதார ணங்களில் எனக்கு நம்பிக்கை உண்டு. உதாரணமாக, கொதிக் கும் எண்ணெயில் சுதன்வாவை மூழ்கடித்தபோது, அவர் சிரித் துக்கொண்டிருந்தாராம். அவ்விதம் நடந்திருக்கக்கூடும் என் பதை நான் முற்றிலும் நம்புகிறேன். அவருக்குக் கொதிக்கும் எண்ணெயில் கிடப்பதைக் காட்டிலும் தம்மைச் சிருஷ்டித்த இறைவனை மறப்பது சகிக்க முடியாத சித்திரவதையாக இருந்தது. சுதன்வாவுக்கு இருந்த நம்பிக்கையில் ஒரு பொறி இந்தப் போராட்டத்தில் இருக்குமாயின், சிறு கஷ்டங்களைச் சகித்துக் கொள்ளுவதில் நமக்குச் சிரமம் இராது.

—'எங் இந்தியா'-19—3—1925

## 9

# வெடிமருந்தைவிட அதிக சக்தியுள்ளது

ஆரம்பத்திலிருந்தே வைக்கம் சத்தியாக்கிரகத்தை அறிவையூட்டும் ஒரு சக்தியாக உபயோகிக்கவே உத்தேசித் தனர்; வைதிகர்களை நிர்ப்பந்தப்படுத்தும் ஒரு கருவியாக அதை உபயோகிக்க ஒரு போதும் உத்தேசிக்கவில்லை என்பதை நான் துணிந்து கூறமுடியும். அதன் காரணமாகவே, வைதிகர்களுக்கு எதிரான உண்ணுவிரதம் கைவிடப்பட்டது. தருமசங்கடமான நிலைமையை உண்டு பண்ணி சர்க்காரை நிர்ப்பந்தப் படுத்தக் கூடாது என்பதற்காகவே, சத்தியாக்கிரகிகள் அடைப்புகளை மீறிச் செல்லாமல் மரியாதை காட்டி வருகிறார்கள். போலீசாரை ஏமாற்ற முயற்சி செய்யாததற்கும் அதுதான் காரணம். வெட்கக் கேடான, பாவமான ஒரு மூடநம்பிக்கை என்று சீர்திருத்தவாதி களுக்குத் தோன்றும் ஒரு விஷயம், வைதிகர்களுடைய நம்பிக் கையின் ஒரு முக்கிய அம்சமாக இருக்கிறது என்பதையும்

உணர்ந்திருக்கிறார்கள். அதனால்தான், சத்தியாக்கிரகிகள் வைதிகர்களின் பகுத்தறிவுக்கு வேண்டுகோள் விடுத்துள்ளனர். எனினும், விடாப்பிடியான கொள்கைகள் உடையோரின் பகுத்தறிவுக்கு வேண்டுகோள் விடுப்பதால் யாதொரு பலனும் ஏற்படாதென்பது அனுபவத்தின் மூலம் தெரிந்ததாகும். வாதத்தினால் அல்ல, சத்தியாக்கிரகிகள் துன்பத்திற்கு உள்ளாவதன் மூலமே அறிவுக் கண்ணைத் திறக்க முடியும். சத்தியாக்கிரகிகள் பிறருடைய இருதயத்தின் மூலமே அறிவை எட்ட முயற்சிக்கின்றனர். பொதுமக்களின் அபிப்பிராயத்தைத் தட்டி எழுப்புவதே இருதயத்தைத் தொடும் முறையாகும். துப்பாக்கி வெடி மருந்தைக் காட்டிலும் பொதுமக்களின் அபிப்பிராயம் மகத்தான சக்தியுடையது. இது உண்மை என்பதை வைக்கம் சத்தியாக்கிரகம் நிரூபித்திருக்கிறது. அதாவது அது, அவர்களின் லட்சியத்தில் இந்தியா முழுவதும் கவனம் செலுத்தும்படி செய்திருக்கிறது; அந்தச் சீர்திருத்தத்தை ஆதரித்துக் கொண்டு வந்த தீர்மானத்தை யொட்டி திருவாங்கூர் சட்ட சபையில் குறிப்பிடத்தக்கவாறு விவாதம் நடக்கும்படி செய்திருக்கிறது; இறுதியாக, திருவாங்கூர் திவானிடமிருந்து தீர்க்காலோசனையுடன் கூடிய ஒரு பதில் கிடைக்கும்படியும் செய்திருக்கிறது. எனவே, சத்தியாக்கிரகிகள் தங்களுடைய பொறுமையையும், துன்பத்தை அனுபவிக்கும் ஆற்றலையும் தொடர்ந்து கடைப்பிடித்து வருவார்களாயின், வெற்றி நிச்சயம் என்பது எனது உறுதியான அபிப்பிராயம்.

—'எங் இந்தியா'–19—3—1925

# 10

# வைக்கம் சத்தியாக்கிரகம் முதற்படியே

திருவாங்கூர் போலீஸ் கமிஷனர் ஸ்ரீ பிட்டிற்கும் எனக்கும் நடந்த கடிதப் போக்குவரத்தை வாசகர்கள் பத்திரிகைகளில் பார்த்திருப்பார்கள். அந்தச் சீர்திருத்தத்தைத் திருவாங்கூர் சர்க்கார் ஆதரிக்கிறார்கள் என்பதும், வெகு விரைவில் அதை நிறைவேற்ற உறுதி கொண்டிருக்கிறார்கள் என்பதும் கடிதப் போக்குவரத்திலிருந்து இம்மியளவும் சந்தேகத்துக்கு இடமின்றித் தெரிகிறது. சீர்திருத்தத்தை சாதி ஹிந்துக்களில் பெரும்பாலோர் விரும்புகின்றனர்; ஒடுக்கப்பட்ட வகுப்பினருக்கு எதிராக உள்ள தடைக்கு உண்மையான ஹிந்து வேத நூல்களில் ஆதாரமில்லை;-இந்த எண்ணத்தை அடிப்படையாகக் கொண்டே தற்போதைய இயக்கம் ஆரம்பமாயிற்று. எனவே, இந்தப் பிரச்னையை யொட்டி பொதுஜன வாக்கு எடுப்பதற்கோ அல்லது

விளக்கம் கூறுவதற்கோ நான் ஒத்துக் கொண்டதன்மூலம், சீர்திருத்தத்திற்கே அபாயம் ஏற்படும்படி நான் செய்துவிட்டதாக யாரும் எண்ண வேண்டாம். அவ்வித யோசனைகளை நான் கூறாமலிருந்தால்தான், பிரச்னையைத் தீர்ப்பதற்கு யாதொரு உபாயமும் கூறச் சக்தியற்றவன் என்று பிறர் எண்ணும்படி நேர்ந்திருக்கும். என் போன்ற சத்தியாக்கிரகி அத்தகைய யோசனைகளைக் கூறுவது முற்றிலும் இயல்பேயாகும். அந்த யோசனைகளை வைதிகர் கோஷ்டியினர் கூறியிருந்தால், நான் அவற்றை நிராகரிக்க மாட்டேன். நமது இயக்கம், வைதிக கோஷ்டியைச் சேர்ந்த வெகு சிலரைத் தவிர வேறு எந்த இடத்திலும் ஆச்சரியகரமான ஆதரவு பெறுவதற்கு எனது யோசனைகளே வழி செய்தன என்று நான் துணிந்து கூறுவேன். சீர்திருத்தத்திற்குப் பெரும்பாலான சாதி ஹிந்துக்களின் உண்மையான எதிர்ப்பு இருந்திருக்குமாயின், அல்லது சீர்திருத்தத்திற்கு சாஸ்திரங்களின் ஆதரவு இருக்கிறது என்பதில் ஏதாவது சந்தேகம் இருந்திருக்குமாயின், சத்தியாக்கிரகத்தின் போக்கே முற்றிலும் வேறு விதமாக இருந்திருக்கும். அப்போது அது மதத்தில் ஒரு மாறுதல் செய்ய வேண்டிய அவசியத்தை வற்புறுத்துவதற்காக ஏற்பட்ட இயக்கமாக இருந்திருக்கும்; மதத்திற்கு முரணான ஒரு வழக்கத்தை ஒழிப்பதற்காக ஏற்பட்ட இயக்கமாக இருந்திராது.

இயக்கத்தின் முக்கிய நிர்வாகிகள், எனது யோசனைகளின் நியாயத்தை ஒருபோதும் ஆட்சேபிக்கவில்லை. அவர்களைக் கலந்து ஆலோசிக்காமலும், அவர்களுடைய பூரண சம்மதமில்லாமலும் நான் எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ள முடியாது.

எனவே, இப்போது ஏற்பட்டுள்ள ஒப்பந்தத்தைப் பூரணமாக, அதன் வாசகத்தின்படியும், உட்கருத்துக்கு முரணின்றியும் நிறைவேற்ற வேண்டியது வைக்கம் சத்தியாக்கிரகிகளின் கடமையாகும். ஒவ்வோரிடத்திலும் சாதி ஹிந்துக்கள் அளித்துள்ள வாக்குறுதிக்கு இணங்க, அவர்கள் இயக்கத்திற்கு ஆதரவு அளிக்க வேண்டியது கடமையாகும். அப்போதுதான் போராட்டம் துரிதமாகவும் வெற்றிகரமாகவும் முடிவடையும். ஒரு சமரசம் ஏற்படும் வரையில், சத்தியாக்கிரகிகள் எல்லைக் கோட்டை மீறிச் செல்லக் கூடாது. அதுதான், சத்தியாக்கிரகிகள் ஒப்பந்தத்தின் வாசகத்தை நிறைவேற்றுவதாகும். ஒப்பந்தத்தின் நோக்கம் நிறைவேற வேண்டுமாயின், சத்தியாக்கிரகிகள் சாந்தமாகவும், மிகுந்த பணிவுடனும் நடந்துகொள்ள வேண்டும். அவர்கள் சீர்திருத்த எதிரிகளுக்குக் காட்டும் மாறாத மரியாதை, எதிர்ப்பின் உக்ரத்தைத் தணித்துவிடும். சீர்திருத்தத்தைச் சர்க்கார் எதிர்ப்பதாக சத்தியாக்கிரகிகள் கருதக் கூடாது; எவ்வளவு சீக்கிரம் சாத்தியமோ அவ்வளவு சீக்கிரத்தில் சீர்திருத்தத்தை நிறைவேற்றுவதாகச் சர்க்கார் உறுதி கூறியிருக்கிறார்கள் என்றே கருத வேண்டும். மகாராணி, திவான், அல்லது போலீஸ்

கமிஷனர் இவர்களுடைய உறுதி மொழியைச் சந்தேகிப்பதற்கு எவ்விதக் காரணமும் இல்லை.

ஆசிரமத்தில் உள்ள சத்தியாக்கிரகிகளின் நடத்தை, எல்லைக் கோட்டில் சத்தியாக்கிரகம் செய்வோரின் நடத்தையைப் போலவே இருக்க வேண்டும். ஆசிரமத்தில் உள்ள ஒவ்வொருவரும் தமக்குக் கொடுக்கப்பட்டுள்ள அலுவல்களை மிகவும் சுறுசுறுப்புடன் செய்பவராக இருக்க வேண்டும். எளிமைக்கும் ஆரோக்கியத்திற்கும் ஆசிரமம் ஓர் உதாரணமாகத் திகழ வேண்டும். ஓய்வு நேரங்களில் எல்லாம் ராட்டினத்தில் நூற்பதாக ஆசிரமத்தில் உள்ளவர்கள் பிரதிக்ஞை செய்திருக்கிறார்கள். அங்கே நூற்றல், பஞ்சு அடித்தல், நெசவு இலாகாக்களில் எத்தனையோ அபிவிருத்தி செய்ய வேண்டியிருக்கிறது. ஆசிரமத்தில் உள்ள ஒவ்வொருவரும் சிறந்த நெசவாளியாக வர முடியாவிட்டாலும், பஞ்சு அடிப்பதிலும் நூற்பதிலும் ஒவ்வொருவரும் நிபுணராக இருக்க வேண்டும். ஆசிரம அங்கத்தினர்கள் குறைந்த பட்சம் தங்களுக்குத் தேவையான துணிகளையாவது தாங்கள் நூற்றும் நெய்தும் தீர வேண்டும். அவர்கள் ஹிந்தி மொழியையும் நன்றாகக் கற்க வேண்டும்.

மற்றும் ஆசிரமத்தில் உள்ளவர்கள் ஹிந்து மதத்தின் கௌரவத்திற்கும் கண்ணியத்திற்கும் தாங்கள் பொறுப்பாளிகள் என்று கருத வேண்டும். கோவில்களைச் சுற்றிலும் உள்ள ரஸ்தாக்களைத் திறக்கும்படி செய்வதுடன், அவர்களுடைய போராட்டம் முடிந்து விடாது. அது, ஹிந்து மதத்தில் படிந்துள்ள ஊழல்களைக் களைந்து ஹிந்து மதத்தைப் பரிசுத்தம் செய்வதற்கான மகோன்னதமான ஒரு போராட்டத்தின் ஆரம்பமேயாகும். எதிர்க்கட்சியைக் கவனித்து நடக்காதவர்களோ அல்லது வைதிகர்களின் உணர்ச்சிகளைப் புண்படுத்துவோரோ, சீர்திருத்தக்காரர்கள் அல்ல. பரிசுத்தமான நடத்தையிலும், சாஸ்திரங்களில் உள்ள உத்தமமான, சிறந்த தத்துவங்களில் கொண்டுள்ள பயபக்தியிலும் சீர்திருத்தக்காரர்கள் மிகச் சிறந்த வைதிகர்களுடன் போட்டி போடுவார்கள். மிகவும் ஆழ்ந்து சிந்திக்காமல் அவர்கள் வேத நூல்களின் அதிகாரத்தை அசட்டை செய்யமாட்டார்கள். அந்த நோக்கத்துடன் சிலர் சமஸ்கிருதம்கூடக் கற்றுக்கொண்டு, வேத நூல்களின் கட்டளைகளுக்கு உட்பட்டு சீர்திருத்த சாத்தியக் கூறுகளையும் ஆராய்ச்சி செய்வார்கள். அவர்கள் அவசரப்படமாட்டார்கள். அவர்களுடைய கொள்கைகளான சத்தியத்திற்கும் அகிம்சைக்கும் முரணின்றி அவர்கள் தைரியமாக எல்லா முறைகளையும் கைக் கொண்டபின், பண்டைய ரிஷிகளைப் போல் பொறுமையையும் நம்பிக்கையையும் அணிகலனாகக் கொண்டிருப்பார்கள்.

ரஸ்தாக்களைத் திறப்பது, சீர்திருத்த ஏணியில் முதற்படியேயாகும். பொதுவாகக் கோவில்கள், பொதுக் கிணறுகள், பொதுப் பள்ளிக்கூடங்கள் எல்லாம் சாதி ஹிந்துக்களுக்குச் சம

மாகத் தீண்டாதாருக்கும் திறக்கப்பட வேண்டும். எனினும், சத்தியாக்கிரகிகளின் தற்போதைய லட்சியம் அதுவல்ல. அநேகமாக எல்லாப் பள்ளிக்கூடங்களும் தீண்டாதாருக்குத் திறக்கப்பட்டுள்ளன. ஆனால், கோவில்கள், பொதுக் கிணறுகள், பொதுக் குளங்கள் முதலியன அவர்களுக்குத் திறக்கப்படவில்லை. இவ் விஷயமாகப் பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்க வேண்டும். சீர்திருத்தத்தை வெற்றிகரமாக நிறைவேற்று முன், பெரும்பான்மையோரின் மனத்தை மாற்ற வேண்டும்.

இதன் மத்தியில், தீண்டாதாருக்கும் மற்ற ஹிந்துக்களுக்கும் திறக்கப்படும் கோவில்களை ஸ்தாபிக்க வேண்டும். குளங்களையோ, கிணறுகளையோ வெட்ட வேண்டும். தீண்டாமை ஒழிப்பு இயக்கம் மகத்தான முன்னேற்றம் அடைந்திருக்கிறது என்பதில் ஐயமில்லை. விவேகமின்மை அல்லது மித மிஞ்சிய உற்சாகம் காரணமாக நாம் அந்த முன்னேற்றத்துக்குத் தடை செய்யாமல் இருப்போமாக. பிறப்பு காரணமாக ஒரு நபர் தொடுவதால் தீட்டு ஏற்பட்டுவிடுகிறது என்ற எண்ணம் ஒழிந்துவிட்டால், மற்றவையெல்லாம் அதைத் தொடர்ந்து எளிதாகச் சீர்திருந்தி விடும்.

—'எங் இந்தியா' – 2—4—1925

## 11

# சத்தியாக்கிரகிகளின் தேசீய யக்ஞம்

வைக்கத்தைப் பற்றியும், நெருங்காமையை எதிர்த்து அங்கே நடந்துவரும் போராட்டத்தைப் பற்றியும் 'எங் இந்தியா'வில் நீண்ட காலமாக நான் வேண்டுமென்றே எதுவும் எழுதவில்லை. இப்போதும் கூட அதையொட்டி நேரடியாக நான் எதுவும் கூற விரும்பவில்லை. ஆனால், வைக்கம் சத்தியாக்கிரகிகள் தங்கள் நேரத்தை எப்படிக் கழித்து வருகிறார்கள் என்பதையே நான் வாசகர்களுக்குக் கூற விரும்புகிறேன். சென்ற ஆகஸ்டு மாதம் 1-ஆம் தேதி வைக்கத்திலிருந்து ஒரு கடிதம் வந்தது. அக்கடிதத்தின் சாரத்தை நான் கீழே குறிப்பிட்டிருக்கிறேன் :

"இங்கே இப்போது என்னைச் சேர்த்துப் பத்து தொண்டர்களே இருக்கிறார்கள். தினந்தோறும் எங்களில் ஒருவர் சமையல் வேலை செய்கிறார். ஒருவரைத் தவிர மற்றவர்கள் ஒவ்வொருவரும் மூன்றுமணி நேரம் சத்தியாக்கிரகம் செய்கிறார்கள். சத்தியாக்கிரகம் செய்யும் இடத்திற்குப் போவதற்கும் திரும்பி வருவதற்குமாகச் சேர்த்து மொத்தம் நான்கு மணிநேரம் ஆகிறது.

"நாங்கள் தினந்தோறும் விடியற்காலம் சரியாக 4-30 மணிக்கு படுக்கையிலிருந்து எழுந்திருக்கிறோம், பிரார்த்தனைக்கு அரை மணி நேரம் ஆகிறது. பிறகு 5 மணியிலிருந்து 6 மணி வரையில் நாங்கள் தரையைக் கூட்டிச் சுத்தம் செய்தல், தண்ணீர் கொண்டு வருதல், பாத்திரங்களைத் துலக்குதல் முதலிய

அலுவல்களில் ஈடுபடுகிறோம். ஸ்நானம் செய்தபின் 5-45 மணிக்கு இருவர் சத்தியாக்கிரகம் செய்யச் சென்று விடுகிறார்கள். 7 மணிக்கு மீதியுள்ள எல்லோரும் ஸ்நானம் செய்து வந்தபின், சத்தியாக்கிரகம் செய்வதற்குப் போகும் வரையில் நூற்றல், பஞ்சு அடித்தல் முதலிய அலுவல்களைச் செய்கிறோம். எங்களில் பெரும்பாலோரும் ஒவ்வொரு நாளும் ஒழுங்காக 1000 கெஜம் நூல் நூற்றுக் கொடுக்கிறார்கள்; எங்களில் சிலர் அதைக் காட்டிலும் அதிகமாகவும் நூற்கிறார்கள். தினந்தோறும் சராசரி 10,000 கெஜங்களுக்கு மேல் நூற்கப்படுகிறது.

"ஞாயிற்றுக்கிழமைகளில் நாங்கள் ஏதாவது வேலை செய்யவெண்டுமென நான் வற்புறுத்துவதில்லை. அன்று ஒவ்வொருவரும் அவரவர் இஷ்டப்படி நடந்து கொள்ளலாம். எங்களில் சிலர் ஞாயிற்றுக்கிழமைகளில்கூட இரண்டு அல்லது மூன்றுமணிநேரம் பஞ்சுஅடிக்கவும் நூற்கவும் செய்கிறார்கள். எங்களில் காங்கிரஸ் அங்கத்தினர்களாக இருப்பவர்கள், காங்கிரஸ் வாக்குரிமைக்காக ஞாயிற்றுக்கிழமைகளில் நூற்கிறார்கள். நீங்கள் ஏற்படுத்தியுள்ள அகில இந்திய தேசபந்து ஞாபகச்சின்ன நிதிக்கு எங்களுடைய தாழ்மையான நன்கொடையாக அளிப்பதற்காக, எங்களில் சிலர் ஞாயிற்றுக்கிழமைகளிலும் மற்ற ஓய்வு நேரங்களிலும் நூற்கிறார்கள். அந்தச் சிறிய நூல் கட்டை உங்களுக்கு அனுப்ப விரும்புகிறோம். அதை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்ளுவீர்களென்று நம்புகிறோம்."

வைக்கம் சத்தியாக்கிரகிகள் தங்கள் அலுவல்களின் உண்மையான கருத்தை அறிந்து கொண்டிருக்கிறார்கள் என்பதையே மேலே கண்ட கடிதம் காட்டுகிறது. அதில் வீம்புப் பேச்சோ அல்லது வாண வித்தைப் பகட்டோ எதுவுமில்லை. ஒழுங்கான நடவடிக்கையின் மூலம் வெற்றி பெற அவர்கள் கொண்டுள்ள கபடமற்ற உறுதியையே அது காட்டுகிறது. ஒரு சத்தியாக்கிரகி ஒவ்வொரு விநாடி நேரத்தையும் பயன் தரத்தக்க விதத்தில் செலவு செய்ய வேண்டும். இவ்விதமே வைக்கம் சத்தியாக்கிரகிகள் செய்து கொண்டிருக்கிறார்கள்.

தீண்டாமையை ஒழிப்பதற்கும் நூற்பதற்கும் என்ன சம்பந்தம் என்று வாசகர்கள் கேட்கலாம். அவ்விரண்டுக்கும் ஒரு சம்பந்தமும் இராதது போல் தோன்றும். ஆனால், உண்மையில் அதிகச் சம்பந்தம் இருக்கிறது. தனித்த ஒரு நடவடிக்கை, அதன் உட்கருத்தையும் உண்மையான தத்துவத்தையும் அறிந்து அனுஷ்டிக்காவிடில், சத்தியாக்கிரகமாகாது. அது போலவே. நூற்பதில் உட்கருத்து அடங்கியிருக்கிறது. அதனால், எதிர் காலத்தில் பலன் ஏற்பட்டே தீரும். இந்த இளைஞர்களுக்கு, நூற்பது தேசீய யக்ஞமே யாகும். அது, அவர்கள் அறியாமலேயே கலப்பற்ற வெற்றிக்கு இன்றியமையாத அவர்களுடைய உண்மையான அடக்கத்தையும், பொறுமையையும், விடா முயற்சியையும் வெளிப்படுத்துகிறது.

—'எங் இந்தியா' – 24–9–1925

# 12

# திடீரென்று கைக்கொள்ளும் ஆயுதமல்ல

தீண்டாமையை ஒழிக்க உறுதி கொண்டிருக்கும் ஹிந்து சீர்திருத்தக்காரர்கள், வைக்கம் சத்தியாக்கிரகத்தின் நுணுக்கங்களையும் அதன் பலன்களையும் அறிந்துகொள்ள வேண்டும். சத்தியாக்கிரகிகளின் உடனடியான லட்சியம், கோவிலைச் சுற்றியுள்ள ரஸ்தாக்களைத் திறந்துவிட வேண்டும் என்பதே யாகும்; கோவிலுக்குள் பிரவேசிக்க வேண்டும் என்பதல்ல. மற்ற எல்லா ஹிந்துக்களுக்கும், ஹிந்துக்கள் அல்லாதாருக்கும்கூட அந்த ரஸ்தாக்களில் செல்ல உரிமையுண்டு. அதுபோலவே தீண்டாதாருக்கும் அவற்றில் செல்ல உரிமை வேண்டும் என்பதே அவர்களுடைய வாதம். அவ்விஷயத்தில் இப்போது பூரண வெற்றி கிடைத்துவிட்டது.

ரஸ்தாக்கள் திறக்கப்படுவதற்காகச் சத்தியாக்கிரகம் அனுஷ்டித்தார்கள். எனினும், மற்ற ஹிந்துக்களைப் போல் தீண்டாதாருக்கும் எல்லா உரிமைகளும் அளிக்கப்பட வேண்டும் என்பதே சீர்திருத்தக்காரர்களின் இறுதியான நோக்கமாகும்; மற்றப் பிராம்மணரல்லாதாரைப் போல் யாதொரு நிபந்தனையுமின்றித் தீண்டாதாருக்கும், கோவில்கள், கிணறுகள், பள்ளிக்கூடங்கள் முதலியவற்றிற்குச் செல்ல உரிமை வேண்டும் என்பதேயாகும். இந்தச் சீர்திருத்தங்கள் நிறைவேற வேண்டுமாயின், நேரடி நடவடிக்கைகளைக் கைக்கொள்ளுமுன் வேறு பல முறைகளை எடுத்துக் கொள்ள வேண்டியது அவசியமாகும்.

சத்தியாக்கிரகத்தை ஒருபோதும் திடீரென்று கைக்கொண்டு விடக் கூடாது. தீவிரமல்லாத மற்ற எல்லா முறைகளையும் முயற்சித்துப் பார்த்த பிறகுதான், சத்தியாக்கிரகத்தை ஆரம்பிக்க வேண்டும். தென்னிந்தியாவில் உள்ள சீர்திருத்தக்காரர்கள், ஆலயப் பிரவேசம் முதலிய விஷயங்களில் பொதுஜன அபிப்பிராயத்தைச் சீர்திருத்தி உருவாக்க வேண்டும். இது தென்னிந்தியாவில் மாத்திரம் பிரத்தியேகமாக உள்ள குறைபாடு அல்ல. இது, துரதிருஷ்டவசமாகவும் நாம் வெட்கப்பட வேண்டிய விதத்திலும், பொதுவாக இந்தியா முழுவதும், ஹிந்து மதத்தில் குறைந்த அளவிலும் அதிக அளவிலும் உள்ள குறைபாடாகும்.

அதனால்தான், வைக்கம் முகாமை மேற்பார்வையிட்டு வரும் ஸ்ரீ கேளப்பன் நாயரின் தீர்மானத்தை நான் வரவேற்கிறேன். தீண்டாதாரில் மிக்க துர்பாக்கியசாலிகளும், மிகவும் ஒடுக்கப்பட்டவர்களுமான புலையர்களிடையே தொண்டுபுரிவதில் அவர் தமது முழுக் கவனத்தையும் செலுத்தத் தீர்மானித்துள்

ளார். புலையர்களுடைய நிழல்கூட சாதி ஹிந்துக்களைத் தீட்டாக்கி விடுகிறதாம்!

ஒவ்வொரு நேரடி நடவடிக்கையையும் தொடர்ந்து ஆக்க வேலைகளை, அதாவது பாதுகாப்பு முறைகளைக் கைக்கொள்ளுவதுதான், பொன் போன்ற சிறந்த விதியாகும். இரு முனைகளிலும் சீர்திருத்தம் கைக்கொள்ளப்பட வேண்டும். அதாவது, சவர்ண ஹிந்துக்கள் தாங்கள் மிகவும் கொடுமையாக ஒடுக்கி வைத்திருந்த தீண்டாதார் விஷயத்தில் தங்கள் கடமையைச் செய்யும்படி பார்த்துக்கொள்ள வேண்டும்; அதே சமயத்தில் பார்ப்பதற்குச் சுத்தமாக இருக்கும்படி தீண்டாதாரையும் செய்ய வேண்டும்; அவர்கள் தங்களுடைய அசுத்தமான பழக்க வழக்கங்களைக் கைவிடும்படி செய்ய வேண்டும். அந்தப் பழக்க வழக்கங்களுக்கு அவர்கள் பொறுப்பாளிகள் அல்லவெனினும், சமுதாயத் தராசில் தீண்டாதார் சரிசமமான இடம் பெற வேண்டுமாயின், அவர்கள் அசுத்தமான பழக்க வழக்கங்களைக் கைவிட்டுத் தீரவேண்டும்.

—'எங் இந்தியா' – 14—1—1926

# 13

# சத்தியாக்கிரகிகள் விடுதலை

திருவாங்கூர் மகாராணி பெருந் தன்மையுடன் எல்லாச் சத்தியாக்கிரகிகளையும் விடுதலை செய்ததற்காக அவருக்கு நான் வாழ்த்துக் கூறுகிறேன். புதிதாக ஒருவர் சிம்மாசனத்தில் ஏறும் போது சில கைதிகளை விடுதலை செய்வதென்ற வழக்கம் போற்றத் தக்கது. எனவே, கிரிமினல் குற்றவாளி என்ற களங்கம் இல்லாத கைதிகளை விடுதலை செய்ததைக் காட்டிலும் இயல்பான சிறந்த முறை வேறென்ன இருக்க முடியும்? இப்போதைக்குச் சத்தியாக்கிரகத்தை நிறுத்தியுள்ள சத்தியாக்கிரகிகளுக்கும் நான் வாழ்த்துக் கூறுகிறேன். அச் செய்கை ஒரு சமரசத்திற்கு வழி செய்வதுடன், சர்க்கார் சத்தியாக்கிரகிகள் விஷயத்தில் தாங்கள் கொண்டுள்ள நிலையை யாதொரு சங்கடமுமின்றிப் பரிசீலனை செய்யவும் இடமளிக்கிறது.

காலஞ் சென்ற மகாராஜா, பல விஷயங்களை யொட்டியும் மிகவும் விவேகமான கருத்துக்கள் உடையவராயினும், தீண்டாமை சம்பந்தமாக அவர் பரம வைதிகமான நோக்கங்கள் கொண்டவராக இருந்தார். தீண்டாமை, ஹிந்து மதத்திற்குப் பெருமையளிப்பதாக இல்லை என்பதையும், அது அம்மதத்திற்குக் கடுமையான ஒரு களங்கம் என்பதையும் மகாராணி உணர்ந்து கொள்ளுவார் என்று நம்புகிறேன்; ஒரு ஹிந்து சமஸ்தானம், ஹிந்து மதத்திற்குச் செய்யக் கூடிய மிகச் சிறந்த தொண்டு

என்னவெனில், ஹிந்து மதத்திலிருந்து தீண்டாமை சாபக் கேட்டை நீக்குவதும், பெருந்தன்மையில் பிரிட்டிஷ் இந்தியாவில் உள்ள ஹிந்துக்களுக்கு ஓர் உதாரணமாகத் திகழ்வதும்தான். சத்தியாக்கிரகிகள் தங்களுடைய தன்னடக்கத்தைத் தொடர்ந்து கையாண்டு வருவதுடன். தீண்டாதார், நெருங்காதார் இவர் களின் மூலாதாரமான மானிட உரிமைகளை அங்கீகரிக்க வேண்டு மென்பதைத் தவிர, தாங்கள் அதிகமாக எதுவும் விரும்பவில்லை என்பதைத் தெளிவாகக் குறிப்பிட்டும், அதிகாரிகளின் நிலையை எளிதாக்குவார்கள் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேக மில்லை.

—'எங் இந்தியா' – 11—9—1924

# 14

# வைதிகக் கோட்டைகளைத் தகர்க்கும் போராட்டம்

வைக்கம் சத்தியாக்கிரகிகள் மிகவும் ஜாக்கிரதையாகவும் மனச் சாட்சிக்கு விரோதமின்றியும் அலுவல்களை நிர்வகித்து வருவது, வெற்றிக்கு நிச்சயமான உத்திரவாதமாகும். வெற்றி கிடைப்பதற்கு நீண்ட காலம் செல்லும் போல் தோன்றலாம். எனினும், அதுதான் வெற்றிக்கு மிக்க துரிதமான வழியாகும். அது ஒன்றுதான் உண்மையான வழியுமாகும். தீண்டாமைக்கு எதிராக நடந்துவரும் போராட்டம் மத சம்பந்தமான ஒரு போராட் டமே. அது மானிடர்க்குரிய அந்தஸ்தை அங்கீகரிப்பதற்காக நடந்துவரும் ஒரு போராட்டமே. ஹிந்து மதத்தில் மகத்தான ஒரு சீர்திருத்தம் செய்வதற்காக நடக்கும் போராட்டமே. மற்றும், அது வைதிகர்களின் வலிமை வாய்ந்த கோட்டைகளை எதிர்த்துத் தகர்ப்பதற்கான ஒரு போராட்டமே. நிச்சயமாகக் கிடைக்கப் போகும் வெற்றிக்கு, கொள்கையில் பற்றுக்கொண்ட இளம் ஹிந்துக்கள் காட்டிவரும் பொறுமையும், செய்துவரும் தியாகமும் முற்றிலும் தகும். போராட்டத்தில் ஈடுபட்டுள்ள இளைஞர்கள் காத்துக்கிடக்கும்படி நேர்ந்திருப்பது, தங்களைத் தாங்களே பரிசுத்தம் செய்துகொள்ளும் ஒரு நடவடிக்கையே யாகும். அவர்கள் விடா முயற்சி செய்து வருவார்களாயின், எதிர்கால இந்தியாவை நிர்மாணிப்பவர்களின் வரிசையில் அவர்கள் இடம் பெறுவார்கள்.

நான் வைக்கத்திற்கு வரவேண்டும் என்று மிக்க ஆர்வத் துடனிருந்துவரும் சத்தியாக்கிரகிகளுக்கு, நானும் அவர்களுடன் இருக்க ஆர்வமுடையவனாக இருக்கிறேன் என்று உறுதி கூற முடியும். நான் ஒரு சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஆனால், பலவிடங்களிலிருந்தும் எனக்கு

அழைப்புக்கள் வந்திருப்பதால், எங்கே செல்லுவது என்பதைத் தீர்மானிப்பது கஷ்டமாக இருக்கிறது. எனது உள்ளமும், பிரார்த்தனைகளும் வைக்கம் சத்தியாக்கிரகிகளிடம் இருக்கின்றன. இவை, நான் இந்த சரீரத்துடன் அவர்களிடையே இருப்பதைக் காட்டிலும் மேலானவை அல்ல என்று யார் கூறமுடியும்?

—'எங் இந்தியா' - 5—2—1925

# 15

# வெற்றிக்குக் குறுக்குப் பாதை

தீண்டாமையை ஒரு குற்றமாகக் கருதும் ஹிந்துக்கள், வைக்கம் சத்தியாக்கிரகிகளில் ஒருவர் எனக்கு எழுதியுள்ள கடிதத்தைக் கண்டு வருந்துவார்கள். அக்கடிதத்தின் விவரம் பின்வருமாறு:

''திருவாங்கூர் சட்டசபை எங்களுடைய தீர்மானத்தை நிராகரித்து விட்டது. அதற்குச் சாதகமாக 21 வாக்குகளும் பாதகமாக 22 வாக்குகளும் கிடைத்தன. பாதகமாக வாக்கு அளித்த 22 பேர்களில் மூன்று பேர்தான் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களாவர். மற்றவர்கள் சர்க்கார் அதிகாரிகளும் நியமன அங்கத்தினர்களுமாவர்.

''மேற்கண்ட உண்மைகளிலிருந்து சர்க்கார் தீர்மானத்தை யொட்டி நடுநிலைமை வகிக்கவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. அது மாத்திரமல்ல. தீர்மானத்திற்கு எதிராக வாக்குகள் சேகரிக்கவும் முற்பட்டு விட்டார்கள்.

''சாதி ஹிந்துக்கள் அடங்கிய கோஷ்டியினர் மகாராணியைப் பேட்டி கண்டு பேசியபோது, அவ்விஷயமாக எதுவும் செய்வதற்குமுன் சட்டசபையின் முடிவைத் தெரிந்துகொள்ள விரும்புவதாக மகாராணி கூறினர். எனவே சர்க்கார் தீர்மானத்தை ஆதரிக்காவிடினும், குறைந்த பட்சம் நடுநிலைமையாவது வகிப்பார்களென்று நாங்கள் எதிர்பார்த்தோம். ஆனல், விவேகமுள்ள பொதுமக்கள் சீர்திருத்தத்தை ஆதரித்தும் கூட, சர்க்கார் பெரிதும் ஓர் எதிர்க் கட்சியைப்போலவே நடந்து கொண்டுள்ளனர்.

''அது எப்படியாயினும், நான் தங்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்பும் விஷயம் இதுதான். அதாவது சட்டசபைத் தீர்மானம் பொறுமையைச் சோதிக்கும் கடைசி அடியாக முடியலாம். மெதுவான, சாந்தமான சத்தியாக்கிரக முறையில் பொறுமையிழந்து வரும் அறிகுறிகள் முன்பே இருந்து வருகின்றன. பொதுவான அமைதியின்மைக்கு, பொறுப்புள்ள தலைவர்கள்கூட அடிமைகளாகி விடலாம்.

''எனவே, சமீபத்தில் தாங்கள் இங்கே விஜயம் செய்வது முற்றிலும் அசாத்தியமாக இருக்குமாயின், சத்தியாக்கிரகத்தின் நுணுக்கங்களை யொட்டி நீங்கள் ஆதார பூர்வமான ஓர் அறிக்கையாவது வெளியிடுவது சாத்தியமாக இருக்கும் என்பது நிச்சயம். தற்போதைய அசாதாரண நிலைமையினல்

தடுமாற்றம் அடையத் தொடங்கியிருப்போருக்கு, உங்களுடைய அறிக்கை பேருதவியாக இருக்கும். உயர்ந்த சாதியினரைப் பகிஷ்காரம் செய்யவேண்டுமென்றும், அவர்களுடன் ஒத்துழைக்கக்கூடாதென்றும், இன்னும் வேறு பல முறைகளைக் கைக்கொள்ள வேண்டுமென்றும் சிலர் உபதேசிக்கத் தொடங்கியிருக்கிறார்கள். தற்போது சமுதாயம் உள்ள நிலையில் அவையெல்லாம் அபாயத்தை உண்டாக்கக்கூடியவை.

"இப்போது முகாமை நிர்வகிப்பதற்குக்கூட அதிகமான மனோபலமும் விடா முயற்சியும் தேவையாக இருக்கின்றன. இதில்கூட உண்மையான கஷ்டமில்லை. சென்ற பத்து மாதங்களாகச் சத்தியாக்கிரகம் செய்தபின், 'ரஸ்தா சுதந்திர'த் தீர்மானத்தை திருவாங்கூர் சட்டசபை நிராகரித்து விட்டதென்பதை மக்கள் உணரும்போது, ஒன்று அவர்களின் மனம் பலாத்கார முறைகளை நாட முற்படுகிறது, அல்லது சத்தியாக்கிரகம் அடியோடு சீர்குலையும் கட்டத்திற்கு வரவிருக்கிறது. இவ்விரண்டில் பலாத்கார முறைகளைப் பற்றி நான் அஞ்சுகிறேன். அதனாலேயே சத்தியாக்கிரகத்தின் நுணுக்கங்களைத் தெளிவாக விளக்கியும், சத்தியாக்கிரகம் தாமதமான முறை போல் தோன்றினும் மிகவும் துரிதமாக வெற்றி பெறுவதற்கு அதுதான் சிறந்த சாதனமென்பதை அறிவுறுத்தியும், மற்ற முறைகள் அபாயகரமானவையாக இராவிட்டாலும் அதிகப் பலன் கொடுக்கக் கூடியவை அல்லவென்றும் ஓர் அறிக்கை விடுக்கும்படி தங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்."

முன்னேற்றம் அடைந்துள்ளது என்று கூறப்படும் ஒரு சமஸ்தானம், மக்களின் முற்போக்கான கருத்துக்கு எதிராக வேலை செய்திருப்பது, அதன் 'முன்னேற்ற' நிலைக்கு வருந்தத்தக்க ஒரு விளக்கமாகத் திகழ்கிறது. நீதிநெறி நோக்குடன் கவனித்தால், முற்போக்காளர்களே உண்மையில் போராட்டத்தில் வெற்றி பெற்றுள்ளனர். தீண்டாதார், குறிப்பிட்ட பொது ரஸ்தாவை உபயோகிப்பதற்கு எதிராக 22 பேர்கள் 'வோட்டு'க் கொடுத்தது வருந்தத் தக்கதாகும். எனினும் தீர்மானத்தை ஆதரித்து 21 பேர்கள் 'வோட்டு'க் கொடுத்தது ஆறுதலை அளிக்கிறது. ஹிந்து சீர்திருத்தக்காரர்களின் நிலை நியாயமானது என்பதையே அந்த 21 பேர்களும் நிரூபித்திருக்கிறார்கள்.

கடிதத்தில், சத்தியாக்கிரகிகள் நம்பிக்கையிழந்து வருகிறார்கள் என்ற உண்மை மிகவும் துக்ககரமான பகுதியாகும். அதைக் குறித்து நான் ஆச்சரியப்படவில்லை, இது அவர்களுக்கு நீண்ட கால சத்தியாக்கிரகத்தின் முதல் அனுபவமே. எனினும், வெற்றி கிடைப்பது நிச்சயமென்று நான் அவர்களுக்கு உறுதி கூறுகிறேன். அவர்களுடைய லட்சியம் நியாயமானது; அவர்கள் கைக்கொண்டுள்ள முறைகள் சாத்விகமானவை. அவர்கள் தாங்கள் அடைந்த துன்பங்களின் மூலம் உலகத்தின் கவனத்தையே இழுத்திருக்கிறார்கள் என்பதையும் அவர்கள் உணர்ந்து கொள்ளுவார்களாக.

இந்தப் போராட்டம் ஆரம்பமாகுமுன் வைக்கத்தைப் பற்றி யாருக்குத் தெரியும்? நீண்டகாலமாக இருந்து வரும் மூட வழக்

கத்தை எதிர்த்து நாம் போராடி வருகிறோம் என்பதையும் அவர்கள் உணர வேண்டும். தப்பெண்ணம் என்ற இரும்புச் சுவரைத் தகர்க்கும் முயற்சியில் ஒரு சில சீர்திருத்தக்காரர்கள் ஒரு வருடம் துன்பத்திற்கு உள்ளாவது என்ன பிரமாதம்? பொறுமை இழப்பது, போராட்டத்தில் வெற்றியை இழப்ப தாகும். அவர்கள் இறுதிவரையில் போராடித் தீரவேண்டும். அம்முறையை விட்டுவிட்டால், வேறு எந்த முறையைக் கைக் கொள்ளுவதென்று கருதுகிறீர்கள்? பலாத்காரத்தில் ஈடுபட்டு மண்டைகளை உடைத்துக் கொள்ளுவதால் லட்சியம் நிறை வேறாது. வைதிகர்கள் தங்கள் கோஷ்டியினர் சிந்தும் இரத் தத்தின் பலனாக இன்னும் அதிகமாக விறைத்துக் கொள்ளு வார்கள். வைதிகர்கள் காயமடைந்தால், அவர்கள் போக்கு தவறாக இருந்தால்கூட, பொதுமக்களின் அனுதாபத்திற்குப் பாத்திரமாகி விடுவார்கள். பலாத்காரமாக ரஸ்தாக்களில் பிரவேசிக்க முற்பட்டால், மேற்கொண்டு பலம் பொருந்திய அடைப்புகளை ஏற்படுத்தி விடுவார்கள். பலாத்காரம் வெற்றி பெற்றால்கூட, ஒரு பொது ரஸ்தாவைத் தீண்டாதார் யந்திரம் போல் உபயோகிக்கலாம். அதனால் வைதீகர்களிடையே மன மாற்றம் ஏற்பட்டுவிடாது.

ஆனால், ஹிந்து சீர்திருத்தக்காரர்கள் விரும்புவது என்ன? தீண்டாமையை ஒரு மதமாகச் செய்து கொண்டுள்ள வைதிக மக்களின் மனத்தை மாற்றுவதே. இப்போது அவர்கள் செய்து வருவது போல், கஷ்டத்திற்கு உள்ளாவதன் மூலம்தான் வைதி கர்களின் மனத்தை மாற்ற முடியும்?

வெற்றிக்குச் சத்தியாக்கிரகம்தான் சிறந்த குறுக்குப் பாதை யாகும். பலாத்கார முறைகளால் நிறைவேற்றப்பட்ட சீர்திருத் தங்கள் யாவும் அமலுக்கு வர ஒரு வருஷமல்ல பல ஆண்டுகள் ஆயின. நீண்டகால வேதனைக்கும் துன்பங்களுக்கும் பிறகு தான் ஐரோப்பாவில் அந்தகாரம் அகன்று விவேக ஒளி ஏற்படு வது சாத்தியமாயிற்று. தவிர, பலாத்கார முறைகளால் நிரந்தர மான வெற்றி கிடைக்குமென்றும் நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஐரோப்பாவில் சீர்திருத்தத்தை எதிர்த்து மாண்டவர் களின் மனம் இறுதிவரையில் மாறவில்லை.

மனம் மாறிய மற்றவர்கள், ஏராளமானவர்கள் எதிரிகளையும் கொன்று தாங்களும் சொல்லொணாத் துன்பங்களுக்கு உட்பட்டு மாண்ட பரிதாபத்தினாலேயே அவ்விதம் மாறினர். அதன் விளை வாக பலாத்கார முறைகளில் ஏற்பட்ட நம்பிக்கை உறுதியா யிற்று. அந்தக் கோர நிகழ்ச்சிகள் உலகத்திற்கு விட்டுச் சென்ற சொத்து அந்த நம்பிக்கைதான். எனவே, சத்தியாக்கிரகிகளின் தொகை குறைந்தாலும் சரி, வெற்றி எட்டாத தூரத்துக்குச் செல்லுவதுபோல தோன்றினாலும் சரி, வைக்கம் சத்தியாக் கிரகிகள் தங்கள் பாதையிலிருந்து வழுவமாட்டார்களென்று

நம்புகிறேன். சுய விளம்பரத்தை அறவே தவிர்த்தல், மகத்தான பணிவு, எல்லையற்ற பொறுமை, ஒளிமிக்க நம்பிக்கை இவைதான் சத்தியாக்கிரகமாகும்.

—'எங் இந்தியா' - 26—2—1925

# 16

# பிரகடனம் நிறைவேறிய அற்புதம்

**1936** டிசம்பர் மாதம் 3-ந் தேதி திருவனந்தபுரம் ஹரிஜன சேவக சங்கத்திலிருந்து கீழ்க்கண்ட தந்தி கிடைத்துள்ளது :

"மகாராஜாவின் பிரகட்னம் மிகவும் வெற்றிகரமாக செயல்பட்டு வருகிறது. அவ்விஷயமாகச் சில இடங்களில் ஏற்பட்ட பீதிக்கு ஆதாரமில்லை என்பது இப்போது ருஜுவாகி இருக்கிறது. மற்ற பக்தர்களுக்குத் திறக்கப் பட்டுள்ள கோவிலின் எந்தப் பகுதிக்கும் ஈழவர்களும் ஹரிஜனங்களும் செல்ல இப்போது எவ்விதத் தடையுமில்லை. கர்ப்பக்ருஹத்திற்குள் எப்போதுமே பூஜை செய்யும் குருக்களைத் தவிர வேறொருவரும் அனுமதிக்கப்படுவதில்லை. அதைத் தவிர, மண்டபங்கள், மேடைகள், பிரகாரங்கள் உள்பட மற்ற எல்லா இடங்களையும் சாதி ஹிந்துக்களைப் போல், இப்போது புதிதாக அனுமதிக்கப் பட்ட பக்தர்கள் யாவரும் (தீண்டாதார் முதலியோர்) யாதொரு நிபந்தனையு மின்றி உபயோகித்து வருகிறார்கள். மிக மிக முக்கியமான விஷயம் என்ன வெனில், கோவில்களுக்கு உள்ளே யிருக்கும் புண்ணிய தீர்த்தங்களைக்கூட இப்போது ஈழவர்களும் ஹரிஜனங்களும் யாதொரு நிபந்தனையுமின்றி உப யோகித்து வருகிறார்கள். ஹரிஜனங்கள் அருகில் வந்தால் ஏற்பட்டு வந்த பீதி இப்போது அடியோடு மறைந்து விட்டது. இப்போது மற்ற சாதியினர் கோவில்களில் வழிபடும்போது ஹரிஜனங்களும் வந்தால் யாதொரு பரபரப் பும் ஏற்படுவதில்லை. ஹரிஜனங்கள் கோவில்களுக்குள் செல்ல குறிப்பிட்ட நேரம் எதுவும் நிர்ணயிக்கப்படவில்லை. அவர்கள் விஷயத்தில் வேறெவ்வித வேற்றுமையும் அனுஷ்டிக்கப்படவில்லை. குருக்கள்மாரும் கோவில்களைச் சேர்ந்த மற்ற அதிகாரிகளும் உண்மையில் மனப்பூர்வமாக ஒத்துழைத்து வரு வது நம்பிக்கை அளிக்கும் அம்சமாகும். கோவில்களைத் திறந்துவிட்டதில் அவர்களுக்கு மனவேதனை எதுவும் இல்லை. புலையர்கள், பறையர்கள், குறவர்கள் முதலிய நாற்பது சிறுவர்கள் நேற்று ஸ்ரீ அனந்தபத்மநாப சுவாமி கோவிலுக்குச் சென்று சுவாமி தரிசனம் செய்தார்கள். உயர் சாதியினர் கோவிலுக்குள் எவ்வளவு தூரம் செல்லலாமோ, அவ்வளவு தூரம் அவர்களும் சென்றார்கள். இங்குள்ள முக்கியமான ஸ்ரீ சுப்ரமண்ய சுவாமி கோவிலுக்கும் ஹரிஜன மாணவர்கள் சென்று தரிசனம் செய்தார்கள்.

"ஹரிஜனங்கள் இன்னும் பல கோவில்களுக்கும் சென்று இறைவனை வழி பட்டார்கள். ஹிந்து மதத்தில் அவநம்பிக்கை கொண்டிருந்த ஈழவர்கள் கூட இப்போது உற்சாகத்துடனும் மகிழ்ச்சியுடனும் ஒத்துழைத்து வருகிறார்கள். நம்பூத்ரிகள் உள்பட வைதிகர்கள் பிரகடனத்தை எதிர்க்கவில்லை. அவர் களில் பெரும்பாலோர் அதிலுள்ள ஷரத்துக்களைப் பூரணமாக அங்கீகரித்

திருக்கிறுர்கள். அவர்களிடையே கோப அறிகுறி எதையும் நாங்கள் காண வில்லே. பரம வைதிகர்களாக இருந்த அவர்கள் இப்போது விசேஷமாக எதுவும் நடக்காதது போல் சாந்தமாக இருப்பதுதான் மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. சிறப்பு வாய்ந்த இந்தப் பிரகடனம் தொடர்ந்து பூரணமாக அமுலுக்கு வந்துகொண்டிருக்கிறது.

ஆலயப் பிரவேசப் பிரகடனம் வெளியானபோது எனக்கு உண்டான அவநம்பிக்கையை நான் மறைத்து வைக்க முடிய வில்லே. அது, குறைகள் உள்ள மனப்பூர்வமாகத் தயாரிக்கப் படாத ஓர் அரசியல் தஸ்தாவேஜியா? அது சாதி ஹிந்துக்களே வற்புறுத்துவதற்காகச் செய்யப்பட்ட பிரகடனமாயின் அதை யொட்டி சாதி ஹிந்துக்களின் மனநிலே எப்படியிருக்கும்? அது, ஹரிஜனங்களிடையே எத்தகைய உணர்ச்சிகளே உண்டாக்கும்? அவர்கள் அதில் அக்கறை காட்டுவார்களா? இவ்விதமான சந்தேகங்களெல்லாம் எனக்கு ஏற்பட்டன.

பிரகடனம் காரணமாக ஏற்பட்ட உற்சாகத்தில் நான் பங்கு எடுத்துக் கொள்ளாததற்காக நண்பர்கள் என்னேக் கடிந்து கொண்டார்கள். நான் என்ன செய்வது? அவ்விஷயமாக என்னுல் உற்சாகம் கொள்ள முடியவில்லே. மகாராணி, மகா ராஜா அல்லது திவான் சர் சி. பி. ராமசாமி ஐயர் இவர்களுடைய உண்மையான எண்ணத்தில் எனக்கு அவநம்பிக்கை எதுவு மில்லே. பல ஆண்டுகளுக்குமுன் நான் திருவாங்கூரில் இருந்த போது மகாராணியையும், இப்போதைய மகாராஜாவையும் சந்தித்துப் பேசும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. மகாராணி அப்போதே சீர்திருத்தத்தில் தமக்குள்ள நம்பிக்கையை வெளி யிட்டார். மகாராஜா, அப்போது சிறு பையனுக இருந்தார். அவர், திருவாங்கூர் சிம்மாசனத்துக்கு வரும்போது தீண்டா மையை அகற்றி, கோவில்களேத் தீண்டாதாருக்குத் திறந்து விடுவாரா என்று அவரை அப்போது விளேயாட்டாகக் கேட் டேன். அவர், 'நிச்சயமாகத் திறந்து விடுவேன்' என்று உற்சாகத் துடன் பதிலளித்தார். சீர்திருத்தவாதியான சர். சி. பி. ராமசாமி ஐயரை 1915-ம் வருடத்திலிருந்தே எனக்குத் தெரியும்.

எனவே, எனக்கு ஏற்பட்ட அவநம்பிக்கைக்கு வேறு ஆழ்ந்த கருத்து உண்டு. ஜனங்களிடம் எனக்கிருந்த நம்பிக்கைக் குறைவு அதற்குக் காரணமாக இருக்கலாம். ஹரிஜன சேவக சங்கத்தின் ஆதரவில் வேலே செய்துகொண்டிருந்த சீர்திருத்தக் காரர்களின் பரிசுத்தத் தன்மையிலும், முயற்சியின் அளவிலும் எனக்கு நிச்சயமாக அவநம்பிக்கை இருந்தது.

ஆனுல், பூரணமான விவரங்கள் அடங்கிய மேற்கண்ட தந்தி, எனது சந்தேகங்களேயெல்லாம்அகற்றிவிட்டது. பிரகடனம், உண் மையில் நான் எதிர்பார்த்ததைவிட மேலாக நிறைவேறிவிட்டது. ஹரிஜனங்களின் உற்சாகம், சாதி ஹிந்துக்கள் எவ்வளவு தூரம் கோவிலுக்குள் பிரவேசிக்கலாமோ, அவ்வளவு தூரம் பிரவேசிக்க

உயர்ந்த சாதியினர் சிறிதும் எதிர்க்காமல் இருந்தது, பூஜை செய்யும் குருக்கள்மாரின் மனப்பூர்வமான ஒத்துழைப்பு, இவையெல்லாம் மகத்தான சீர்திருத்தத்தின் கலப்பற்ற பரிசுத்தத் தன்மையையே காட்டுகின்றன. மனிதனுக்கு அசாத்தியமாகத் தோன்றியது,கடவுளால் சாத்தியமாகும்படி செய்யப்பட்டுள்ளது. ராஜப் பிரகடனங்கள், பதினயிரக்கணக்கான மக்களின் மனத்தை மாற்றிவிட முடியாது. எனவே, கூட்டமாக சாதி ஹிந்துக்களின் மனம் மாறியதற்கு இது ஓர் உதாரணமாகும். இதுதான் உண்மையான மனமாற்றமாகும். ஏனெனில் அது வற்புறுத்தலின்றி வலுவில் தானுக தானாக ஏற்பட்ட மனமாற்றம் அல்லவா?

சில வருடங்களுக்கு முன்தான், வைக்கம் கோவிலுக்குச் செல்லும் சில ரஸ்தாக்களை ஹரிஜனங்கள் கடந்து சென்ருல்கூட பலாத்காரத்தில் ஈடுபடுவதாக, சாதி ஹிந்துக்கள் பயமுறுத்தினர்கள். இப்போது அந்தக் கோவிலோ, சாதி ஹிந்துக்களுக்கு என்ன விதிகள் உண்டோ அதே விதிகளுடன் ஹரிஜனங்களுக்குத் திறக்கப்பட்டிருக்கிறது. எவரும் வற்புறுத்தாமலே இது நிகழ்ந்திருக்கிறது. சங்கரஸ்மிருதியில் தீண்டாமைக்கு ஆதாரமிருப்பதாக முன்பு வைதிகர்கள் கூறினர். மகாராஜா ஸ்மிருதியில் தீண்டாமைக்கு ஆதாரமில்லையென்பது இப்போது ஒப்புக்கொள்ளப்பட்டுவிட்டது! இதை சாதி ஹிந்துக்களும் மற்ருெரு விதத்தில் ஹரிஜனங்களும் சந்தேகத்துக்கு இடமின்றி ஒப்புக்கொண்டு விட்டார்கள். உண்மையில், இது கடவுளின் மகத்துவம்தான். நமது அறிவுக் கண்களைக்கொண்டே நாம் அதை அறிய முடியும்.

மகாராஜாவுக்கும், சிறப்பு வாய்ந்த அவரது தாயாருக்கும் செல்வாக்குள்ள அவரது திவானுக்கும், திருவாங்கூர் ஹிந்துக்களுக்கும்கூட எனது வாழ்த்துக்கள். உயர்வு, தாழ்வை அடிப்படையாகக் கொண்ட சாதி வேற்றுமைகள் யாவும் திருவாங்கூரில் பழங்கதைகளாகிவிட்டன என்று நாம் நம்புவோமாக. திருவாங்கூரில் ஏற்பட்டுள்ள உற்சாகத்தை நாம் சிதறவிடாமல் பாதுகாப்போமாயின், திருவாங்கூரின் உற்சாக வேகம் இந்தியா முழுவதும் பரவ அதிக காலமாகாது.

—'ஹரிஜன்' – 12—12—1936

பகுதி பதினொன்று

# மத மாற்றம்

## 1

## மிரட்டுவது துரோகமாகும்

மதம் மாறிவிடுவதாக யார் பயமுறுத்துகிறார்களோ, அவர்கள் மதத்தின் அர்த்தத்தை அறிந்து கொள்ளவில்லை என்பதே எனது தாழ்மையான அபிப்பிராயம். மதம், மனிதன் வாழ்வதா அல்லது வீழ்வதா என்பதைப் பொறுத்த ஒரு விஷய மாகும். ஒரு மனிதன், தன் உடைகளை மாற்றிக்கொள்ளுவது போல மதத்தை மாற்றிக்கொள்ளுவதில்லை. மரணத்திற்குப் பின்னரும் அவன் எடுத்துச் செல்வது மதம்தான். மற்றும் ஒரு மனிதன், பிறரைத் திருப்தி செய்வதற்காகத் தன் மதத்தைப் பிரகடனம் செய்வதில்லை. அவன் ஒரு மதத்தை ஏற்றுக்கொள்ளு வதைத் தவிர வேறு வழியில்லை. ஓர் உண்மையான, நம்பிக்கை யான கணவன் தன் மனைவிமீது ஏன் அன்பு செலுத்துகிறான் எனில், அவன் வேறு எந்தப் பெண்மீதும் அன்பு செலுத்த முடியாது. மனைவியின் துர்நடத்தைகூட அவனது நம்பிக்கை யையும் அன்பையும் தடுக்க முடியாது. அந்தப் பாசம் இரத்த பாசத்தைக் காட்டிலும் அதிகமானது. மதசம்பந்தமான பாசமும் அத்தகையதுதான். அது உள்ளத்தைப் பொறுத்த விஷயம்.

தாங்கள் உயர்ந்தவர்கள் என்று மமதை கொண்ட ஹிந்துக் களிடம் துன்பத்துக்கும் கொடுமைக்கும் உள்ளான ஒரு தீண் டாதார், அந்த நிலையிலும் ஹிந்து மதத்தில் நம்பிக்கையுடன் வாழ்ந்து வருகிறார் அல்லவா? அவர், தன்னை உயர்ந்த ஹிந்து என்று கூறிக் கொள்ளுபவரைக் காட்டிலும் சிறந்த ஒரு ஹிந்து என்பதில் ஐயமில்லை. தன்னை உயர்ந்தவர் என்று கூறிக்கொள் ளுபவர், ஹிந்து மதத்தையே நிராகரித்தவராகிறார். எனவே, ஹிந்து மதத்தைத் துறந்து விடுவதாகப் பயமுறுத்துவோர், தங்கள் மதத்திற்கு துரோகம் செய்தவராகிறார்கள் என்பதே எனது அபிப்பிராயம்.

—'எங் இந்தியா' – 4—6—1925

2

# இரண்டு வித நோய்கள்

தேவகோட்டைப் பக்கத்தில் ஹரிஜனங்கள் கிறிஸ்தவ மதத்திற்கு மாறுவதைக் குறித்து வருந்தி, தேவகோட்டையில் உள்ள ஒரு ஹரிஜன சேவகர் எழுதியிருக்கிறார். அவர்கள் நாட்டார்களால் எவ்விதம் இடைவிடாது கொடுமைகளுக்கு இலக்காகி வருகிறார்கள் என்பதைப் பொதுமக்கள் அறிவர்.

கொடுமைகளுக்கு உள்ளான, மற்ற சாதி ஹிந்துக்களிட மிருந்து யாதொரு உதவியும் பெற முடியாதென்று நம்பிக்கை யிழந்த, ஏழை ஹரிஜனங்கள் கிறிஸ்தவ மதத்தில் அடைக்கலம் புகுவராயின், அதைக் குறித்து நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை. எனினும், அதைக் குறித்து துக்கப்பட்டுக் கொண்டிருப்பதால் யாதொரு பயனும் ஏற்படாது. அதை, மிகுந்த உற்சாகத்துடன் கூடிய சக்தியாக நாம் மாற்றிக்கொள்ள வேண்டும். உடல் சம்பந்தமான வசதிக் குறைவுக்காக மதம் வாறுவது, ஆன்மிக மத மாற்றம் அல்ல. எனினும், தங்களுடைய வாழ்க்கை வசதி களை அபிவிருத்தி செய்துகொள்ளுவதற்காகவும், கொடுமைகளி லிருந்து பாதுகாப்பு பெறுவதற்காகவும் ஹரிஜனங்கள் மதம் மாறு வதைக் குறித்து நாம் முணுமுணுக்கக்கூடாது.

மத மாற்றத்திற்குக் காரணம் என்ன என்பது பற்றியே நாம் வருந்த வேண்டும். அதற்குக் காரணம் சாதி ஹிந்துக்களே என் பதை நாம் உணருவதுடன், அதை ஒத்துக்கொள்ளவும் வேண்டும். சாதி ஹிந்துக்கள் தங்கள் பிராந்தியத்தில் உள்ள ஹரிஜனங் களிடம் தங்கள் கடமையை உணர்ந்து நடந்து கொள்ளுவார் களாயின், தங்களைப்போல் ஹரிஜனங்களும் மனித வர்க்கத்தைச் சேர்ந்தவர்தான் என்பதை அறியாமல் நாட்டார்கள் அவர்களைத் துன்புறுத்தத் துணிய மாட்டார்கள். நாட்டார்களும் சாதி ஹிந்துக்கள்தானே.

தேவகோட்டைக்கு வெளியிலிருந்து சிலர் அங்கே சென்று, நாட்டார்களுக்கும் ஹரிஜனங்களுக்குமிடையே தொண்டு புரியலா மென்று ஹரிஜன சேவகர் யோசனை கூறியுள்ளார். அதன்படி நடந்தால் நல்லதுதான். எனினும், தனிப்பட்ட சில வெளி யார்கள் அங்கே தாற்காலிகமாகச் செல்லுவதால், உருவான பலன் ஏற்பட்டுவிடுமென நான் நம்பவில்லை. டாக்டர்கள் கொடுக்கும் மருந்துகளைச் சாப்பிட்டுத் தங்களுக்குத் தாங்களே உதவி செய்துகொள்ள மறுக்கும் நோயாளிகளிடையே டாக்டர்கள் சென்று, அவர்களுக்குச் சிகிச்சை செய்ய முற்படுவதால் யாதொரு பலனும் ஏற்படாதல்லவா?

சாதி ஹிந்துக்களின் இரு பகுதியினரும், அதாவது எதுவும் செய்யாமல் ஒதுங்கி நிற்கும் சாதி ஹிந்துக்களும்,



தக்கர் பாபாவுடன் காந்திஜி.



சூரத் ஜில்லாவில் மரோலி என்ற இடத்தில் கஸ்தூரிபா சேவாசிரமத்திற்கு காந்திஜி அஸ்திவாரக்கல் நாட்டுகிருர்—12, ஜூன், 1931.

ஹரிஜனங்களைத் துன்புறுத்தும் நாட்டார்களான சாதி ஹிந்துக்களும் நோய்களால் பீடிக்கப்பட்டிருக்கிறார்கள். ஒரு சாரார், ஹரிஜனங்களைத் துன்புறுத்துவதில் ஆர்வம் கொண்டிருக்கிறார்கள். மற்றொரு சாரார், கவலையின்றி அதைப் பார்த்துக் கொண்டு வாளாவிருக்கிறார்கள். இவ்விரண்டும் ஒருவித நோய்கள் தானே. வெளியார்கள் அங்கே சென்று, நோய்களைப் புரிந்து கொண்டு, அவற்றிற்குப் பரிகார முறைகளையும் குறிப்பிடலாம். ஆனால், பரிகார முறைகளை ஏற்றுக்கொண்டு அவற்றின்படி நடந்துகொள்ள வேண்டியது நோயாளிகளின் கடமையல்லவா?

தேவகோட்டையில் உள்ள சாதி ஹிந்துக்களான இளைஞர்கள் நோய்களுக்குக் காரணத்தையும் அதன் பரிகார முறைகளையும் அறிவார்கள். அந்த முறைகளை அவர்கள் அனுஷ்டிப்பார்களா? தக்கர் பாபா தற்போது அவர்களிடையே இருக்கிறார்; அல்லது கூடியவிரைவில் அங்கே வருவார். அவரது புத்திமதிக்குச் சாதி ஹிந்துக்கள் செவி சாய்ப்பார்களா? அந்த நோயின் ஒரு சிறு விளைவே மத மாற்றமாகும். காரணத்தை அகற்றிவிட்டால், மத மாற்றங்கள் மாத்திரமல்ல, மற்றும் பல மோசமான விளைவுகளும் நின்றுவிடும்.

—'ஹரிஜன்' - 22—3—1935

## 3

# மதம், பேரம் பேசும் விஷயமல்ல

தங்கள் சொந்த மதத்தையே சேர்ந்த யாரோ சிலர் தாங்கள் கோவில்களுக்குள் செல்லுவதைத் தடுக்கிறார்கள் என்பதற்காக, மதத்தைத் துறந்து வேறு மதத்திற்கு மாறுவோம் என்று பயமுறுத்துவோர், மதப்பற்றே இராதவர்களாவர். அவர்கள் மதபக்தி காரணமாக அவ்விதம் கூறுவதாய்ச் சொல்ல முடியாது. கோவில்கள் இறைவனை வழிபடும் இடங்களாகும். அவை, அவைகளில் நம்பிக்கையுள்ள யாவருக்கும் சொந்தமானவை. மதக் கொடுமை இன்று புதிதாக ஏற்பட்டதல்ல. மதத்தைப்போல் மத சம்பந்தமான கொடுமையும் புராதனமானது. கொடுமைக்கு உள்ளாவோர் உறுதியான நம்பிக்கையுடையவர்களாயின், அக்கொடுமை அவர்களுக்குச் சோதனையாக அமைந்து அவர்களைப் பரிசுத்தம் செய்கிறது. ஹரிஜனங்கள் கொடுமையைப் பொறுமையுடன் சகித்து வருவார்களாயின், இறுதியில் அவர்கள் வெற்றி பெறுவது நிச்சயம்.

தங்களுடைய ஆலயப்பிரவேச உரிமை அங்கீகரிக்கப்படவில்லையாயின், மிகத் தொலைவான பண்டைய காலத்திலிருந்து குறை

கூறுமல் பொறுமையுடன் அனுஷ்டித்து வந்த மதத்தைத் தாங்கள் துறந்துவிடுவதாக ஹரிஜனங்கள் பயமுறுத்துவது, அவர்களே யாதொரு உரிமைக்கும் தகுதியற்றவர்களாகும்படி செய்கிறது. ஹரிஜனங்கள் ஹிந்து மதத்தைத் துறப்பது பற்றிச் சனுதனிகள் கவலைப்படாமலிருக்கலாம். சீர்திருத்தக்காரர்கள், தாங்கள் போராடுவதற்கு எவ்விஷயமுமின்றிக் குழப்பமடையலாம். எனினும், கொடுமைக்கு உள்ளாகியும்கூட அதிருஷ்டவசமாக ஹிந்து மதத்தில் அசைக்கமுடியாத நம்பிக்கையுடைய ஹரிஜனங்கள் பதினுயிரக்கணக்கில் இருக்கிறுர்கள்.

மதம் பெரிதும் சொந்த விஷயமாகும். அது ஒவ்வொருவருக்கும் அவரது கடவுளுக்கும் இடையே உள்ள விஷயம். எனவே, அதை ஒருபோதும் பேரம் பேசும் காரியமாகச் செய்துவிடக்கூடாது.

— 'ஹரிஜன்' 29—3—1935.

# 4

# பிரிந்து செல்லுவதால் பலனில்லை

ஹிந்து மதத்தில் உள்ள குறைகள் காரணமாக அல்ல, அந்த மதத்தைப் பின்பற்றுவோரில் பலரது நியாயமற்ற தப்பெண்ணம் காரணமாக மதம் மாறுவது நியாயமானதாக இருப்பினும், தற்போது அவ்விதம் மாறுவதால் மதம் மாறுவோரின் நோக்கம் தோல்வியையே அடையும். டாக்டர் அம்பேத்காரைப் போன்ற உறுதி வாய்ந்த தலைவர்கள் ஹிந்து மதத்திலிருந்து பிரிந்து செல்லுவதால், ஹரிஜனங்களின் தற்காப்பு முயற்சிகள் பலவீனமடையும். ஏனெனில், ஹிந்துவல்லாத ஹரிஜனங்கள், எவ்வளவு பிரபலமானவர்களாயினும், ஹிந்து ஹரிஜனங்களுக்கு உண்மையில் யாதொரு உதவியும் செய்ய முடியாது என்பதை நாங்கள் அறிவோம்.

டாக்டர் அம்பேத்காரின் நியாயமான கோபத்தைக் கண்டு சீர்திருத்தக்காரர்கள் சோர்வடைந்து விடவேண்டாம். அது, அவர்கள் மேற்கொண்டு அதிக முயற்சி செய்வதற்குத் தூண்டுகோலாக இருக்கவேண்டும். தீண்டாமைக்கு எதிராக வேலை செய்வோரின் தொகை மிகவும் அதிகமாகியிருப்பது உண்மையே. எனினும், எவ்வளவோ காலமாக இருந்துவரும் தப்பெண்ணத்தை அகற்றுவதற்கு, அத்தொகை சிறிதேயாகும். தீண்டாமை எதிர்ப்பு இயக்கம் பிரமாதமாக முன்னேற்றம் அடைந்துள்ளது. அதன் சம்பந்தமான அற்ப சம்பவமும் உலகத்தின் கவனத்தை இழுக்கவல்லதாக இருக்கிறது.

எனவே, இதிலிருந்து தீண்டாமை இறுதிக் கட்டத்துக்கு வந்துவிட்டதெனலாம். தீண்டாமையை இனி மானிடவர்க்கம் சகித்துக்கொண்டிராது.

—' ஹரிஜன் ' - 26—10—1935

# 5

# மிரட்டலுக்கு அஞ்சவேண்டாம், ஆனால்...

ஹிந்து சமுதாயத்தினிடையே, மத மாற்ற மிரட்டல் வடிவத்தில் டாக்டர் அம்பேத்கார் ஒரு வெடிகுண்டை வீசியதிலிருந்து, அவர் உத்தேசித்துள்ள காரியத்திலிருந்து அவரைத் தடுத்து நிறுத்த வெகு தீவிர முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. டாக்டர் அம்பேத்காரின் மிரட்டல், படிக்கத் தெரிந்தவர்களும், பத்திரிகைகள் படிக்கக்கூடியவர்களுமான ஹரிஜனங்களின் மனத்திலும் வீண் புரட்சியை உண்டு பண்ணியிருக்கிறது. உத்தியோகங்கள், இலவச சம்பள உதவிகள் முதலியவற்றைக் கோரி, ஹரிஜனங்கள் ஹிந்து ஸ்தாபனங்களுக்கோ அல்லது சீர்திருத்தக்காரர்களுக்கோ விண்ணப்பங்கள் அனுப்பத் தொடங்கியிருக்கிறார்கள். தங்கள் கோரிக்கைகள் மறுக்கப்பட்டால், தாங்கள் வேறு மதத்திற்கு மாறிவிடுவதாகவும், வேறு மதப் பிரதிநிதிகள் உதவியளிக்க முன்வந்திருப்பதாயும் அவர்கள் கூறியுள்ளனர்.

இந்த மிரட்டல்கள் ஒரு கெட்ட அறிகுறி என்பதிலும், தங்கள் மூதாதையர்களின் மதத்தில் அக்கறை கொண்டவர்களுக்கு மிகுந்த கவலையைக் கொடுக்கும் விஷயம் என்பதிலும் சந்தேகமில்லை. ஹிந்து மதத்திலோ அல்லது வேறு எந்த மதத்திலோ நம்பிக்கையிழந்தவர்களுடன் சமரசம் செய்து கொள்ளுவதால் யாதொரு பலனும் ஏற்படாது. மதம் பண்டமாற்று வியாபாரம் அல்ல. தாம் எந்த மதத்தைச் சேர்ந்திருக்க வேண்டும் என்பது ஒவ்வொருவரும் தமக்குத் தாமே தீர்மானம் செய்துகொள்ள வேண்டிய விஷயமாகும். மதத்தை எவ்விதத்திலும், எந்த உருவத்திலும் விலை கொடுத்து வாங்குவதற்கில்லை. ஆன்மிக விஷயமாக விலை என்ற சொல்லை உபயோகிப்பது சாத்தியமாயின், சொந்த உதிரத்தைக்கொண்டு மாத்திரமே மதத்தை விலைக்கு வாங்க முடியும். எனவே, எந்த ஹரிஜனாவது ஹிந்து மதத்தைத் துறந்துவிட விரும்பினால், அவர் யாதொரு தடையுமின்றி, தமது இஷ்டப்படி அவ்விதமே செய்யலாம்.

சீர்திருத்தக்காரர், தமது உள்ளத்தைத் துருவிப்பார்த்துக் கொள்ளவேண்டும். அந்தக் கோளாறுக்கு யார் காரணம்?

தம்முடைய நடவடிக்கையா அல்லது தம்மை அடுத்துள்ளவரின் நடவடிக்கையா என்பதை அவர் யோசிக்க வேண்டும். அதில் ஒழுங்குத் தவறு இருப்பதாகத் தெரியுமாயின், அதை மாற்றிக் கொள்ள வேண்டும்.

சனாதனிகள் என்று சொல்லிக்கொள்ளும் ஏராளமான ஹிந்துக்களின் நடத்தையே, இந்தியா முழுவதும் உள்ள ஹரிஜனங்களின் அசௌகரியங்களுக்கும், மனக் கொதிப்பிற்கும் காரணம் என்பது ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மையாகும். இந்நிலையில், இப்போது துறந்திருப்பதைக் காட்டிலும் இன்னும் அதிகமாக ஏராளமான ஹிந்துக்கள் ஹிந்து மதத்தைத் துறக்காததுதான் ஆச்சரியமாகும்.

எந்த மதத்தின் பெயரால் ஹரிஜனங்கள் மனிதத் தன்மையற்ற கொடுமைகளுக்கு உட்படுத்தப்பட்டுள்ளனரோ, அதே மதத்தைக் கோடிக்கணக்கான ஹரிஜனங்கள் இறுகப் பற்றிக் கொண்டிருப்பது அவர்களுடைய பக்தியையும் விசுவாசத்தையுமோ, அல்லது ஹிந்து மதத்தின் இயல்பான பெருமையையோ சந்தேகத்துக்கு இடமின்றிக் காட்டுகிறது. ஹரிஜனங்களின் ஆச்சரியகரமான விசுவாசமும், அவர்களது இணையற்ற பொறுமையும், மற்ற ஹிந்துக்களைப்போல் ஹரிஜனங்களையும் நடத்தும்படி பார்த்துக்கொள்ள வேண்டியது ஒவ்வொரு சாதி ஹிந்துவின் இன்றியமையாத கடமையாகச் செய்திருக்கின்றன. எனவே, இப்போது சாதி ஹிந்துக்கள் பின்பற்ற வேண்டிய முறை இது தான்:

ஒருபுறம், ஹிந்து மதத்தைத் துறக்க விரும்பும் ஹரிஜனங்களுக்கு உத்தியோகம், இலவசச் சம்பளம் போன்ற லஞ்சங்கள் கொடுத்து அவர்களை ஹிந்து மதத்திலேயே நீடித்திருக்கும்படி செய்ய முயற்சிக்கக் கூடாது. மற்றொருபுறம், வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் ஹரிஜனங்களுக்குப் பூரண நீதி வழங்கும்படி வற்புறுத்த வேண்டும். சீர்திருத்தக்காரர்கள், ஹரிஜனங்களின் தேவைகளை முன்னதாகவே எதிர்பார்த்து நிறைவேற்ற வேண்டும். ஹரிஜனங்கள் புகார் கூறத் தொடங்கும் வரையில் காத்திருக்கக் கூடாது.

ஹரிஜன சேவா சங்கம், தீண்டாமையை எதிர்ப்பதற்காக ஏற்பட்ட மாபெரும் ஸ்தாபனமாகும். அது, தகுதி வாய்ந்த மாணவர்களுக்கு உதவிச் சம்பளம் அளிக்கும் தாராளமான கொள்கையை மேற்கொண்டிருப்பது புத்திசாலித்தனமாகும். அது, எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு அதிகமாக ஹரிஜனங்களுக்கு உத்தியோகங்களும் கொடுக்கிறது. எனினும் அது, வேலையில்லாத ஹரிஜனங்களுக்கு வேலை தேடிக் கொடுக்கும் ஒரு ஸ்தாபனமல்ல. பொதுவாகச் சொல்லுமிடத்து, ஹரிஜனங்கள் கோரும் உத்தியோகங்களுக்கு அவர்கள் தகுதியாக இருந்தால், அவர்கள் சம்பந்தப்பட்டவரையில் உத்தியோகத்திற்கும் பஞ்சமேயில்லை.

ஆயிரக்கணக்கான ஹரிஜனங்கள் படும் மகத்தான கஷ்டங்கள் என்னவெனில், குடிக்கவும் சமைக்கவும் சுத்தமான தண்ணீர் கிடைக்காதது, பொதுப் பள்ளிக்கூடங்களுக்கும் மற்ற ஸ்தாபனங்களுக்கும் அவர்கள் செல்லுவதற்குள்ள தடை, கிராமங்களில் அவர்கள் இடைவிடாத சில்லறைத் தொல்லைகளுக்கு இலக்காகும்படி நேருவது, கோவில்களுக்குச் சென்று வழிபடுவதற்குக்கூடத் தடை முதலியவைதான். இந்தக் கஷ்டங்களும் அசௌகரியங்களும், ஏராளமான ஹரிஜனங்களின் வாழ்க்கையிலும் பயங்கரமான உண்மைகளாகும். எனவே, அவர்கள் கூட்டமாக ஹிந்து மதத்தைத் துறந்து விடுவார்களாயின், அதற்குக் காரணம், அவர்களை ஹிந்து சமுதாயத்தின் குஷ்டரோகிகள் என்று முத்திரை வைக்கும் அந்த வாழ்க்கை வசதிக் கஷ்டங்கள் தான்.

ஹிந்து மதம் இப்போது அக்னிப் பரீட்சைக்கு இலக்காகியிருக்கிறது. தனி நபர்கள் மதம் மாறுவதாலோ, கூட்டம் கூட்டமாக ஹிந்துக்கள் மதம் மாறுவதாலோகூட ஹிந்து மதம் அழிந்துவிடாது. ஆனால், ஹரிஜனங்களுக்குச் சாதி ஹிந்துக்கள் மூலாதாரமான நீதி வழங்க மறுக்கும் பாவத்தினால்தான் ஹிந்து மதம் அழிந்து போகும். ஆகையால், மதம் மாறி விடுவதாகக் கூறும் ஒவ்வொரு மிரட்டலும் சாதி ஹிந்துக்களுக்கு ஓர் எச்சரிக்கையாகும். அவர்கள் உற்ற காலத்தில் விழித்துக் கொள்ளாவிட்டால், பின்னர் நிலைமை மிதமிஞ்சிவிடும்!

உதவியை நாடும், பொறுமையற்ற ஹரிஜனங்களுக்கு ஒரு வார்த்தை. அவர்கள் உதவி கோரி ஹிந்து ஸ்தாபனங்களையோ அல்லது தனி நபர்களையோ நாடும்போது, மிரட்டல்களை உபயோகிக்க வேண்டாம். ஹரிஜனங்கள், தங்கள் கட்சியின் பலம் சாதி ஹிந்துக்களைச் செவி சாய்க்கும்படி செய்யும் என்பதில் நம்பிக்கை வைக்க வேண்டும். மத மாற்றம் என்றால் என்ன என்பதை, ஹரிஜனங்களில் பெரும்பாலோர் அறியார்கள். சாதி ஹிந்துக்கள் சுயநல நோக்கத்துடன் அவர்களை இழிவான நிலையில் வைத்திருக்கிறார்கள். ஹரிஜனங்களும் அந்த அவமதிப்பை மௌனமாகச் சகித்துக்கொண்டு வருகிறார்கள். ஹரிஜனங்கள் புகார் கூறினாலும் கூறாவிட்டாலும், முக்கியமாக அவர்கள் விஷயத்திலும் அக்கறை எடுத்துக்கொள்ளுவதே ஹிந்து சீர்திருத்தக்காரர்களின் முழு முதற் கடமையாகும். தங்களுடைய இழிவான நிலையை உணர்ந்துள்ள, அதே சமயம் மத மாற்றம் என்றால் என்ன என்பதையும் அறிந்துள்ள விவேகிகளான ஹரிஜனங்கள், தங்களுடைய மூதாதையரின் மதத்தைத் துறக்க விரும்பாத அளவுக்குச் சிறந்த ஹிந்துக்களாவர். அத்தகையோர், தங்களுக்குத் தேவையான எல்லா உதவியும் பெற உரியவர்களாவர். அல்லது மதத்தில் அக்கறை கொள்ளாத அவர்கள், தாங்கள் ஹிந்து மதத்திலேயே இருப்பதற்குப் பிரதியாக சாதி ஹிந்துக்களிடமிருந்து உதவி கோராதிருக்கலாம். எனவே, விவேகமுள்ள

ஹரிஜனங்களை, அவர்களுடைய சொந்த நன்மைக்காகவே, நான் மன்றாடிக் கேட்டுக் கொள்ளுவதென்னவெனில், மதம் மாறுவதாக மிரட்டி வாழ்க்கை வசதிகளை அபிவிருத்தி செய்துகொள்ள முற்பட வேண்டாம் என்பதே.

சீர்திருத்தக்காரர்கள், மிரட்டல்களுக்கு ஒருபோதும் பணிந்துவிடக் கூடாது; ஆனால், அதே சமயத்தில் சாதி ஹிந்துக்களிடமிருந்து ஹரிஜனங்களுக்கு நீதி கிடைக்க இடைவிடாது முயற்சிக்க வேண்டும்.

—'ஹரிஜன்' - 21—3—1936

# 6

# அபாயகரமான திட்டம்

ராவ்பகதூர் ராஜா, தமக்கும் டாக்டர் மூஞ்சேய்க்கும் நடந்த கடிதப் போக்குவரத்தைப் பிரசுரித்ததன் மூலம் பொது மக்களுக்குத் தொண்டு புரிந்திருக்கிறார். அதை வெளியிட்டதில் நம்பிக்கைத் துரோகம் எதுவுமில்லை. மூஞ்சே-அம்பேத்கார்கடிதப் போக்குவரத்து ஆபத்தானது என்பதில் ஐயமில்லை. ஆபத்தான யோசனைகளைப் பகிரங்கப் படுத்துவதில் நம்பிக்கைத் துரோகம் இருக்க முடியாது. டாக்டர் அம்பேத்காருக்கும் சாதி ஹிந்துக்களுக்கும் இடையே பேர நடவடிக்கை இத்துடன் முற்றுப் பெற்றுவிடுமென நம்புவோமாக. அவர்களுடைய பேரமானது, வாயில்லாத பல லட்சக்கணக்கான ஹிந்துக்களை, தட்டு முட்டுச் சாமான்களைப் போல் வேறொரு விதத்தில் அடிமைப்படுத்துவதாக இருக்கிறது.

அது, எராவ்டா ஒப்பந்தத்திற்கு முரணாகும். எராவ்டா ஒப்பந்தம் ஹிந்துக்களின் ஒரு பெரும் பகுதியினருக்கும் மற்றொரு பகுதியினருக்கும் இடையே செய்துகொள்ளப்பட்டது. ஹிந்து சமுதாயத்தை இரண்டாகப் பிளக்கும் முயற்சியை அந்த ஒப்பந்தம் முறியடித்ததுடன், பல நூற்றாண்டுகளாகத் தாங்கள் துன்புறுத்தி வந்த கோடிக்கணக்கானவர்களுக்கு நஷ்டஈடு செய்ய சாதி ஹிந்துக்களுக்குச் சந்தர்ப்பமும் அளித்தது.

டாக்டர் அம்பேத்கார் சாதி ஹிந்துக்களுக்குத் தண்டனை கொடுக்க விரும்புகிறார். அவ்விதம் செய்ய அவருக்கு எல்லாவித உரிமையும் உண்டு. ஆனால், அத்தண்டனைக்குச் சாதி ஹிந்துக்களும் இணங்குவார்கள் என்று அவர் எதிர்பார்க்க வேண்டாம். பொறுமையிழப்பதற்கும் டாக்டர் அம்பேத்காருக்கு எல்லாவித உரிமையும் உண்டு. ஆனால், பல நூற்றாண்டுகளாக உள்ள தப்பெண்ணங்களும் மூட வழக்கங்களும் திடீரென்று மறைந்துவிடா.

தீண்டாமை எதிர்ப்பு இயக்கத்தின் நோக்கத்தைச் சாதி ஹிந்துக்கள் அறிந்து கொள்ளும்படி செய்ய மனித சாத்தியமான எல்லா முயற்சிகளும் செய்யப்பட்டுள்ளன; செய்யப்பட்டும் வருகின்றன. இதை, சீர்திருத்த இயக்கத்தை ஆராய்ச்சி செய்வோர் மறுக்க மாட்டார்கள். டாக்டர் அம்பேத்காரின் யோசனை ஒப்புக்கொள்ளப்படுமாயின், சீர்திருத்த இயக்கத்திற்குத் தடையேற்பட்டு, அது இறுதியில் செத்தும்விடும்.

ஹரிஜனங்களை ஹிந்து மதத்திலிருந்து வேறொரு மதத்துக்கு, அந்த மதம் எந்தப் பெயரால் அழைக்கப்பட்டாலும் சரி, மாற்றுவதைச் சட்ட பூர்வமாகச் செய்வதே டாக்டர் அம்பேத்காரின் திட்டம். அத்திட்டம், சகோதரர்களைக் கொலை செய்வதாகும். அதன்படி ஹரிஜனங்களே இரு போட்டிப் பிரிவுகளாகப் பிளக்கப்பட்டு விடுவார்கள். இரு பிரிவினரும் ஹரிஜனங்கள் என்றே குறிப்பிடப்படுவார்களாயின், அவர்களது நிலை இன்றுள்ளதைக் காட்டிலும் படுமோசமானதாகிவிடும். அத்தகைய அனர்த்தம் நேருமாயின், அது துரதிருஷ்ட இந்தியாவுக்கு ஒரு பொல்லாத நாளாக இருக்கும்.

டாக்டர் அம்பேத்காரின் யோசனைப்படி ஹரிஜனங்கள் மதம் மாறுவது பெயரளவில்தானேயன்றி, அது உண்மையான மத மாற்றம் அல்ல என்று கூறுவதோ, அந்த மத மாற்றம் ஹரிஜனங்கள் கிறிஸ்தவர்களாகவோ அல்லது முஸ்லிம்களாகவோ மாறுவதைப் போல் அவ்வளவு மோசமானதல்லவென்று கூறுவதோ, வீண் வாதமாகும். எந்தப் பட்டத்தின்கீழ் அவர்கள் பிரிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பது பெரிய விஷயமல்ல. அவர்கள் வேறொரு மதத்தைச் சேர்ந்தவர்கள் என்று கூறப்படும் அதே சமயத்தில் அவர்கள் ஹரிஜனங்களாகவும் இருப்பார்களாயின், அது நாசகரமான சச்சரவுக்கு மற்றொரு காரணமாகிவிடும். இதெல்லாம் எதற்காக? சாதி ஹிந்துக்களைத் தண்டிக்க வேண்டுமென்ற விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக! கோபம் அல்லது பொறுமையின்மை காரணமாகவும் டாக்டர் அம்பேத்கார் தமது யோசனையின் விபரீத பலனை அறியவில்லையாயின், நிச்சயமாக டாக்டர் மூஞ்சே அதை அறிந்திருக்க வேண்டும்.

தவிர, ஹரிஜனங்களின் மதச் சுதந்திரத்தைக் குறித்து, அவ்விதம் பண்டமாற்று வியாபாரம் செய்ய நாம் யார்? ஒவ்வொரு ஹரிஜனுக்கும், அவர் எவ்வளவு மந்த புத்தியுள்ளவராயினும், மூடராயினும், தமது இஷ்டப்படி நடந்துகொள்ள உரிமையுண்டு. டாக்டர் அம்பேத்காரோ, அல்லது வேறெந்த மதத்திற்காவது மாற விரும்புவோரோ தங்கள் விருப்பப்படி அவ்விதம் செய்வது ஒரு விஷயமாகும். ஆனால், சட்ட பூர்வமாக, மிகப் பரந்த முறையில் வேறு விதமான தீவிர விளைவுகளை அடிப்படையாகக் கொண்டு, ஹரிஜனங்களைக் கூட்டமாக வேறு மதத்திற்கு

மாற்றும் பொறுப்பை அரசியல் அல்லது மற்றக் கட்சிகள் ஏற்றுக் கொள்ளுவது முற்றிலும் வேறு விஷயமாகும்.

இந்தியாவில் உள்ள பல்வேறு மதங்களின் தலைவர்களும், ஹரிஜனங்களைத் தங்கள் மதத்திற்கு மயக்கி இழுப்பதில் ஒருவருக்கொருவர் போட்டி போடுவதை நிறுத்திக் கொள்ளுவார்களாயின் இந்தத் துர்ப்பாக்கிய நாட்டுக்கு நன்மையாக இருக்கும். இந்தப் போட்டியில் ஈடுபட்டிருப்போர், மதத்திற்குத் தொண்டு புரிபவர்கள் அல்ல என்பது எனது உறுதியான சித்தாந்தம். அரசியல் அல்லது பொருளாதார ரீதியில் அதைப் பார்ப்போமாயின் அவர்கள் மதத்தின் மதிப்பையே குறைப்பவர் ஆகிறார்கள். நியாயமாகச் செய்ய வேண்டியது என்னவெனில், மதத்தின் அடிப்படையைக் கொண்டு அரசியலையும் மற்றெந்த விஷயத்தையும் மதிப்பிட வேண்டும்.

மதம், ஆன்ம சாஸ்திரத்தைப் பற்றியதாகும். உலகத்தின் மற்ற சக்திகளும் சிறப்புள்ளவையேயெனினும், கடவுள் என ஒன்றிருக்குமாயின், எல்லாவற்றையும்விட மகத்தானது ஆன்ம சக்தியே. சக்தி எவ்வளவுக் கெவ்வளவு பெரிதாகிறதோ அவ்வளவுக்கவ்வளவு அது நுண்ணியதாக இருக்கும் என்ற உண்மையை நாம் அறிவோம். நுண்ணிய ஸ்தூல சக்திகளில் இதுவரை முதல் ஸ்தானம் வகித்து வந்திருப்பது மின்சாரமேயாகும். அப்படியிருந்தும் அதை யாரும் பார்த்ததில்லை; அதன் அதிசயமான பலன்களையே பார்க்கிறோம். மின்சாரத்தைக் காட்டிலும் நுண்ணிய சக்தி இருப்பதாக விஞ்ஞான ஆராய்ச்சியாளர்கள் கூறத் துணிகின்றனர். ஆனால், மனிதனால் கண்டுபிடிக்கப்பட்ட எந்தக் கருவியும் ஆன்ம சக்தியையோ அல்லது தெய்விக சக்தியையோ பற்றி நிச்சயமாக எதையும் அறிந்துகொள்ளக் கூடிய வல்லமை வாய்ந்ததாக இல்லை. உண்மையான மதச் சீர்திருத்தவாதி இதுவரை அந்தச் சக்தியிலேயே நம்பிக்கை வைத்து வந்துள்ளார். அவரது அந்த நம்பிக்கை ஒரு காலத்திலும் நிறைவேறாமல் இருந்ததில்லை. அந்த நம்பிக்கைதான் இறுதியில் ஹரிஜனங்களுக்கும் மற்ற எவருக்கும் நலன்களை அளித்து, எவ்வளவு அதிசய அறிவாளியாயினும் அவரது கணக்குகளையும் மதிப்பீடுகளையும் குழப்பிவிடுகிறது. ஹிந்து மதத்திலிருந்து தீண்டாமை நோயைக் களைய முற்பட்டுள்ள சீர்திருத்தவாதி, அவர் செய்யும் ஒவ்வொரு காரியத்தையொட்டியும் அந்த ஒரு சக்தியிலேயே நம்பிக்கை வைக்கவேண்டும்; வேறு எதிலும் நம்பிக்கை வைக்கக்கூடாது.

—'ஹரிஜன்' – 22—8—1936

# 7

# சீக்கியர்கள் ஹிந்துக்களா?

அம்பேத்கார்-முஞ்சே திட்ட சம்பந்தமாக எனது நிலையைக் குறித்து வருந்தி இரு நண்பர்கள் எனக்கு எழுதியிருக்கிறார்கள். அவர்களுடைய வாதத்தின் சாரம் கீழ் வருமாறு:

"நிச்சயமாக, ஒன்றுமில்லாத விஷயத்தை நீங்கள் பிரமாதப்படுத்தியிருக்கிறீர்கள். ஹிந்து சமயங்களை உருவாக்கிய மற்றவர்களைப்போல் குரு நானக்கும் ஓர் ஹிந்து சீர்திருத்தவாதியே. சீக்கியர்கள் எல்லா முக்கியமான அம்சங்களிலும் ஹிந்துக்களே யாவர். அவர்களுடைய பண்பாடும் ஹிந்துக்களுடையதைப் போன்றதே. ஹரிஜனங்கள் தங்களைச் சீக்கியர்கள் என்று பிரகடனம் செய்து கொண்டால், அதை மதமாற்றம் என்று நீங்கள் ஏன் கூறுகிறீர்கள்?"

இந்த ஆட்சேப வாதிகள் மாத்திரமே மேற்கூறிய அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்களென்று தோன்றுகிறது. நான் எனக்கு நானே விதித்துக்கொண்ட பதினைந்து வருட அஞ்ஞாத வாசத்திலிருந்து 1915-ம்ஆண்டு முடிந்து சிறிது காலத்திற்குப்பின் தாய்நாட்டிற்குத் திரும்பிவந்தேன். அப்போது நான் பாஞ்சாலத்திற்குச் செல்ல நேர்ந்தது. அங்கே சீக்கியர்களின் கூட்டமொன்றில் நான் பேசிய போது, 'சீக்கியர்கள் சீர்திருத்தக்காரர்கள் அடங்கிய ஒரு பிரிவைச் சேர்ந்த ஹிந்துக்களே என்பது என் அபிப்பிராயம்' என்று கூறினேன். என் விஷயத்தில் நல்ல எண்ணம்கொண்ட ஒரு சீக்கிய நண்பர், சீக்கியர்கள் ஹிந்துக்கள் என்று கூறியதன் மூலம் என்னையறியாமலேயே அவர்கள் மனத்தைப் புண்படுத்திவிட்டதாக என்னிடம் தனித்துக் கூறினார். அந்த எச்சரிக்கைக்குப் பிறகு, சீக்கியர்களை ஹிந்துக்கள் என்று நான் ஒருபோதும் வருணித்ததில்லை. அவர்கள் எதில் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள் என்பதுதான் முக்கியமேயன்றி, நானோ அல்லது ஒரு சில தனி நபர்களோ எதை நம்புகிறோம் என்பது முக்கியமல்ல,

சீக்கியர்களுக்குத் தனித் தேர்தல் தொகுதிகள் இருக்கின்றன. சீக்கியர்களை ஹிந்துக்கள் என்று டாக்டர் அம்பேத்கார் கருதவில்லை. மத மாற்றத்தையே அவர் கண்டிப்பாக விரும்புகிறார். சீக்கியர் ஹிந்துக்களாயின், எராவ்டா உடன்படிக்கையில் மாறுதல் எதுவும் செய்ய வேண்டிய அவசியமில்லை. அப்படியாயின் எந்த ஹிந்துவும் ஹிந்துவாகவே இருந்துகொண்டு தமது உப பிரிவை மாற்றிக்கொள்ளலாம். தவிர, டாக்டர் அம்பேத்காரோ, டாக்டர் முஞ்சேயோ அல்லது வேறு எவரோ, ஏராளமான ஹரிஜனங்கள் அடங்கிய ஒரு கூட்டத்தின் உப பிரிவையே பேனா முனையால் மாற்றிவிட முடியாது.

மதம் முக்கியமாக ஒவ்வொருவருடைய சொந்த விஷயமாகும். அதையொட்டி ஒவ்வொருவரும் தமக்குத்தாமே

தீர்மானித்துக் கொள்ள வேண்டும். மதத்தை ஒரு தெய்விகக் கொள்கையாகக் கருதும் எவரும், டாக்டர் அம்பேத்காரும் டாக்டர் மூஞ்சேயும் கூறியுள்ள யோசனைக்கு இணங்க முடியாது.

—'ஹரிஜன்' - 19—9—1939

## 8

# அவமதிப்பு யாருக்கு?

ஹரிஜனங்களிடையே வேலை செய்யும் ஒரு தொண்டரிட மிருந்து வந்துள்ள நீண்ட கடிதத்திலிருந்து கீழ்வரும் பகுதியைக் குறிப்பிடுகிறேன்:

"தங்களை ஹிந்துக்கள் என்று சொல்லிக்கொள்ளும் விஷயமாக, படித்த ஹரிஜனங்களிடையே அதிருப்தி நாளுக்கு நாள் வளர்ந்து வருகிறது. ஏனெனில், அவர்கள் தங்களை ஹிந்துக்கள் என்று சொல்லிக்கொண்டால், தங்களுடைய சாதியையும் அவர்கள் வெளியிட வேண்டியிருக்கிறது. தாங்கள் தாழ்ந்தவர்கள் என்ற எண்ணம் காரணமாக, சாதியைக் கூறுவது மனத்திற்குக் கஷ்டமாக இருக்கிறது. எனவே, ஹிந்துக்கள் என்று சொல்லிக் கொண்டு அவமதிப்புக்கு ஆளாவதைக் காட்டிலும் தாங்கள் கிறிஸ்தவர்கள் என்று சொல்லிக் கொள்வதையே அவர்கள் விரும்புகிறார்கள். எனவே, அவர்களைச் சீக்கியர்களாகவோ அல்லது புத்தர்களாகவோ மாறிவிடும்படி கூறி, அவர்களுடைய அவமதிப்புக்கு நாம் ஏன் ஒரு முடிவு கட்டக்கூடாது? ஏனெனில், சீக்கியர்களும் புத்தர்களும் ஹிந்துக்களைப்போல் தகுதி வாய்ந்தவர்கள் அல்லவா?''

சீக்கியர்களும் புத்தர்களும் ஹிந்துக்களைப் போல் தகுதி வாய்ந்தவர்கள் என்று அக் கடிதம் எழுதியிருப்பவர் கூறுவதிலிருந்தே அவரது வாதம் பயனற்றதாகிவிடுகிறது. அது அப்படியாயின், ஹரிஜனங்களையோ அல்லது வேறெவரையோ அவ்விதம் மாறும்படி தூண்டுவதற்குக் காரணமில்லை. ஹிந்து மதத்தில் எண்ணிக்கையற்ற உப பிரிவுகள் இருக்கின்றன. தாம், அந்த உப பிரிவுகளில் ஏதாவதொன்றைச் சேர்ந்தவர் என்று சொல்லிக் கொள்ள எந்த ஹிந்துவுக்கும் சுதந்திரம் உண்டு. எந்த உப பிரிவைச் சேர்ந்தவராயினும், அவர் ஹிந்துவாகவேதான் இருந்து வருவார்.

ஒரு ஹிந்து தமது சாதியை, தாம் விரும்பவில்லையென்றாலோ அல்லது சாதியைத் துறந்துவிட்டாலோ, அதை ஏன் வெளியிட வேண்டும்? பல ஹிந்துக்களுக்கு சாதியில் நம்பிக்கையில்லை. சாதி, ஹிந்து மதத்தின் ஓர் அம்சமல்ல என்பதைக் காட்ட நான் முயற்சித்து வந்துள்ளேன். வர்ணம் சாதியல்ல, பிரிவேயாகும்.

ஒரு பிராம்மணர், உண்மையில் தான் ஒரு மத போதகராக இருந்தால், தம்மைப் பிராம்மணர் என்று சொல்லிக்கொள்ளலாம். ஒரு க்ஷத்திரியர் தாம் ஒரு சிப்பாயாக இருந்தால் தம்மை க்ஷத்திரியர் என்று சொல்லிக் கொள்ளலாம். ஒரு வைசியர், தாம் ஒரு வியாபாரியாகவோ அல்லது ஒரு குடியானவராகவோ இருந்தால், தம்மை வைசியர் என்று கூறிக் கொள்ளலாம். அல்லது ஒரு சூத்திரர் தாம் ஒரு தொழிலாளியாக இருந்தால் தம்மைச் சூத்திரர் என்று சொல்லிக் கொள்ளலாம். இந்தப் பிரிவுகள் சாதிகள் அல்ல, பிரிவுகளேயாகும்; தொழில்களைப் பொறுத்தவையே யாகும்.

தீண்டாதார் என்று பிரிவு எதுவுமில்லை. எனவே, ஒரு தீண்டாதார் தம்மைத் தீண்டாதார் என்று சொல்லித் தீர வேண்டிய அவசியமில்லை. அவர் விரும்பினல், தம்மை ஹிந்து சமுதாயம் தீண்டாதாராகக் கருதுகிற தென்றும், ஆனல், தாம் அந்த வேற்றுமையை ஒப்புக்கொள்ள வில்லையென்றும் கூறலாம். நான் வணிக சாதியைச் சேர்ந்தவன் என்று ஹிந்து சமுதாயம் பிரித்துள்ள தெனினும், நான் அந்தச் சாதியைச் சேர்ந்தவனல்ல. ஏனெனில், சாதியில் எனக்கு நம்பிக்கை இல்லை. வெறும் ஹிந்து என்று கூறிக் கொள்ளுவதைக் காட்டிலும் அதிகமாக ஏதாவது சொல்லித் தீர வேண்டுமாயின், நான் என்னை ஒரு ஹரிஜன் என்றே சொல்லிக் கொள்ளுவேன். ஏனென்றல், என் சக்திக்கு இயன்ற வரையில், நான் ஹரிஜனங்களின் நலன்களையே எனது நலன்களாகக் கொண்டுள்ளேன்.

தவிர, ஹிந்து சமுதாயம் செய்துள்ள பிரிவினையை ஒரு ஹரிஜன் வெளியிடுவதால், அவர் ஏன் அவமதிப்புக்கு உள்ளாக வேண்டும்? நிச்சயமாக அவமதிப்புக்கு உள்ளாக வேண்டியது சமூகம் அல்லவா? சமூகம்தானே தன்னைச் சேர்ந்த ஒரு பகுதியினரை அடிமைகளாக்கியும், ஒதுக்கிவைத்தும் சேரிகளில் வாழும் படி செய்திருக்கிறது?

உயர் சாதியினர் என்று கூறப்படுவோர், தங்கள் வாழ்க்கையில் தங்களுடைய மதத்தையே புறக்கணித்து, வருணிக்க முடியாதவாறு ஹரிஜனங்களைக் கொடுமைப்படுத்தி வந்திருக்கிறார்கள். அப்படியிருந்தும், தங்களை உண்மையான ஹிந்துக்கள் என்று தாங்கள் கூறிக்கொள்ள முடியும் என்ற உண்மையைக் குறித்து, ஹரிஜனங்கள் பெற்றுள்ள கல்வியே அவர்களைப் பெருமை கொள்ளும்படி செய்ய வேண்டும்.

தீண்டாமை வேரோடு அழிக்கப்பட்டு, ஹிந்து மதம் நிரந்தரமாக வாழுமாயின், ஹரிஜனங்கள் தங்களுடைய சக மனிதர்கள் ஈவிரக்கமின்றித் தங்களைக் கொடுமைக்குள்ளாக்கியும் கூட தாங்கள் மதத்தைத் துறக்காமல் உறுதியுடன் நின்றதற்காக, எதிர்கால சரித்திராசிரியர்கள் ஹரிஜனங்களுக்கே கௌரவ ஸ்தானம் அளிப்பார்கள். எனவே, ஹிந்து சமுதாயத்தில்

தாம் எந்தப் பிரிவைச் சேர்ந்தவர் என்று ஹரிஜன் கூறும் ஒவ்வொரு சமயத்திலும், அவமதிப்பு அவருக்கல்ல; ஆனல், அவரைக் கொடுமைக்குள்ளாக்கியவர்களையே, அதாவது சாதி ஹிந்துக்கள் என்று கூறப்படுவோரையே அந்த அவமதிப்பு சாரும்.

—'ஹரிஜன்' – 31—10—1936

## 9

# உண்மையான அதிசயம் எது?

சென்ற அக்டோபர் மாதம் 9-ந் தேதி வாக்கில் லண்டனில் கிறிஸ்தவப் பிரிவினர்கள் அடங்கிய கூட்டமொன்று நடந்தது. பூஜ்யரான காண்டர்பரி ஆர்ச் பிஷப் தலைமை வகித்தார். அக்டோபர் 16-ந் தேதி "சர்ச் டைம்ஸ்" பத்திரிகையில் அக் கூட்ட நடவடிக்கைகள் பிரசுரமாகியிருக்கின்றன. அதில் கீழ்வரும் விவரம் காணப்படுகிறது :

"அடுத்தபடியாகப் பேசியவர் ஒரு சாதாரண மனிதரைப்போல் உடை உடுத்தியிருந்தார். அவர் அமெரிக்கா மெதாடிஸ்ட் எபிஸ்கோபல் சர்ச் பிஷப்பான டாக்டர் ஜே.டபிள்யூ. பிக்கெட் என்பதைக் குறிப்பிடும் ஒரு சிறிய ஊதா நிறத் துண்டுகூட அவர்மீதில்லை. சென்ற சில வருடங்களாக டாக்டர் பிக்கெட் இந்தியாவில் ஜனக்கூட்டம் மதம் மாறுவதை ஆராய்ச்சி செய்து வருகிறார். 'இந்தியாவில் கிறிஸ்தவ மத மாற்றங்கள்' என்ற நூலில், அவர் தமது ஆராய்ச்சியின் பலன்களை வெளியிட்டுள்ளார். அதை அற்புதமான, மதிப்பு வாய்ந்த ஒரு நூல் என்று காண்டர்பரி ஆர்ச் பிஷப் வருணித்துள்ளார். மதமாற்ற இயக்கத்தின் ஆன்மிக சம்பந்தமான முக்கியத்துவம், டாக்டர் பிக்கெட்டின் மனத்தை மிகவும் வசீகரித்துள்ளது. 'இந்தியாவில் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த நாற்பத்தைந்து லட்சம் பேர்கள் நமது தேவரின் சீடர்களாகியிருக்கிறார்கள்' என்று டாக்டர் பிக்கெட் கூறினார். மற்றும் தேவ பக்தி காரணமாக அவர்களுடைய வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள மாறுதல்களைக் கண்டு, இந்தியாவில் மக்கள் அதிசயத்தில் ஆழ்ந்திருக்கிறார்கள் என்றும் அவர் குறிப்பிட்டார். மற்றும் டாக்டர் பிக்கெட் கூறியதாவது :

"தாழ்த்தப்பட்ட வகுப்பினர் மத உணர்ச்சிகளே இல்லாதவர்கள் என்று பிராம்மணர்கள் ஒரு காலத்தில் எண்ணினர்; அவர்களுக்கு ஹிந்துக் கோவில்களுக்குள் பிரவேசிக்கும் உரிமையளிக்க மறுத்தனர். ஆனல், அதே பிராம்மணர்கள் கூட, மக்களின் குணங்களையும் வாழ்க்கை முறைகளையும் மாற்ற கிறிஸ்தவ மதத்திற்குள்ள சக்தியை இப்போது, வேண்டா வெறுப்பாகவாவது ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இந்தியாவில் மதம் மாறியுள்ள இந்த மக்கள்தான், மேனட்டு கிறிஸ்தவ உலகில் கூட இராதவாறு அவ்வளவு ஒழுங்காகக் கிறிஸ்தவாலயங்களுக்கு வந்து, தேவனை வழிபடுகிறார்கள்.

"இப்போது தெலுங்குப் பிரதேசத்தில் ஒன்பது லட்சம் ஜனங்கள் கிறிஸ்தவ மதத்தைக் கடைப்பிடித்து வருகிறார்கள். 1026 கிராமங்களில் 1002

கிராமங்கள், ஒவ்வொரு நாள் மாலையிலும் கிறிஸ்தவாலயங்களில் தேவனை வழிபட்டுத் துதிக்கும் முறையை அனுஷ்டித்து வருகின்றன. அவற்றுள் இரு நூறுக்கு மேற்பட்ட கிறிஸ்தவாலயங்களில் தினந்தோறும் காலையிலுங்கூட வழிபாடுமுறை அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. மதம் மாறியவர்களின் உண்மையான நம்பிக்கையைக் குறித்தும் எனக்குப் பூரண திருப்தி ஏற்பட்டிருக்கிறது. அவர்களில் பெரும்பாலோர், கடவுளுடன் தங்களுக்கு விளக்கமுடியாத ஒருவிதத் தொடர்பு இருப்பது பற்றிக் குறிப்பிடுகிறார்கள். தங்கள் வாழ்க்கையில் கடவுள் இடம்பெற்றுள்ளார் என்ற நம்பிக்கையும் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. ஏசுநாதரின் மதமானது அவர்களை உயர்த்தி, அவர்கள் தங்களுடைய உடல்களையும் வீடுகளையும் சுத்தமாக வைத்துக்கொள்ளும்படியும், அவர்களை நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களாகவும் செய்திருக்கிறது என்பதைச் சுற்றுப்புறங்களில் உள்ள ஹிந்துக்கள் ஒத்துக்கொண்டுள்ளனர். இன்னும் அதிக ஆச்சரியமான உண்மை என்னவெனில், தீண்டாதாருடைய வாழ்க்கையில் இத்தகைய மாறுதல் ஏற்பட்டுள்ள இடங்களில் எல்லாம், நூற்றுக்கணக்கான உயர் சாதி ஹிந்துக்களும் மதம் மாறி வருகிறார்கள் என்பதே. அது ஓர் அசாதாரணமான அதிசயமாகும்; கிறிஸ்தவ சரித்திரத்தின் மகத்தான அதிசயங்களில் ஒன்றாகும்.''

இவ்வளவு சிறிய இடத்திற்குள் இவ்வளவு அதிகமாக மிகைபடக்கூறும் விபரீதத்தை நான் பார்த்ததே இல்லை! இந்தியாவில் உள்ள நிலைமைகளை அறியாத ஒரு வாசகர், டாக்டர் அம்பேத்கார் ஆரம்பித்துள்ள இயக்கம் காரணமாகவே, அத்தனை பேர் மதம் மாறியுள்ளனர் என்று முடிவு கட்டி விடுவார்கள். டாக்டர் பிக்கெட் மேலே குறிப்பிட்ட விதம் கூறியிருக்க முடியாது என்பது எனது நிச்சயமான அபிப்பிராயம். அவர் கொடுத்துள்ள புள்ளி விவரங்கள், நூற்றுக்கணக்கான வருடங்களுக்கு முன் இந்தியாவில் முதலாவது கிறிஸ்தவாலயம் ஸ்தாபிக்கப்பட்டதிலிருந்து இன்றுவரை மதம் மாறியவர்களின் தொகையைப் பற்றியதாக இருக்கவேண்டும். பிஷப் குறிப்பிட்டுள்ள பொதுவான சாதனைக்கும் புள்ளி விவரங்களுக்கும் சம்பந்தமில்லை. ''தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த நாற்பத்தைந்து லட்சம் பேர்களுடைய வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள மாறுதலைக் குறித்து, இந்தியாவில் அதிசயத்தில் ஆழ்ந்துள்ள ஜனக்கூட்டம்'' எங்கே இருக்கிறது? அந்த ஜனக்கூட்டத்தில் நானும் ஒருவனே. நான் இந்தியா முழுவதும் அரை டஜன் தடவைக்கு மேல் பிரயாணம் செய்திருக்கிறேன். டாக்டர் பிக்கெட் வருணித்துள்ள அளவுக்கு எவ்வித மாற்றத்தையும் நான் காணவில்லை. சமீப காலத்தில் அத்தகைய மாறுதல் ஏற்பட்டதில்லை என்பது நிச்சயம்.

இந்தியக் கிறிஸ்தவர்களடங்கிய கூட்டங்களில் பேசும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது உண்டு. அவர்களுடைய நிலை, தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த மற்றவர்களுடைய நிலையைக் காட்டிலும் சிறந்ததாக எனக்குத் தோன்றவில்லை. அவர்களுடைய மத மாற்றம் பெயரளவில்தான். அவர்கள் விஷயத்

திலும் சமூக அந்தஸ்து சம்பந்தப்பட்ட வரையில், தீண்டாமைக் களங்கம் இருந்துகொண்டுதான் இருக்கிறது. எனினும், நான் மதம் மாறியவர்களைப் பற்றி மொத்தமாகப் பேசுகிறேனேயன்றி, தனி நபர்களைப் பற்றிப் பேசவில்லை. "மத உணர்ச்சியே இல்லாதவர்கள் என்று தாங்கள் எண்ணிய தாழ்த்தப்பட்டோரின் குணங்களையும் வாழ்க்கை முறைகளையும் மாற்ற கிறிஸ்தவ மதத்திற்குள்ள சக்தியை வேண்டா வெறுப்பாக வாவது ஒப்புக்கொண்ட பிராம்மணர்கள்" யார் என்பதை நான் அறிய விரும்புகிறேன்! அதற்கு மாருக, சாதி ஹிந்துக்களில் அசட்டை செய்யப்பட்டிருந்த ஹரிஜனங்களின் வாழ்க்கையிலும் நோக்கத்திலும் தீவிர மாறுதலை உண்டாக்கியுள்ள சீர்திருத்த இயக்கத்தின் சக்தியை ஒப்புக்கொள்ளும் பல பிராம்மணர்களை நான் காட்ட முடியும். பொதுப்படையாக அவர் கூறியுள்ள நம்ப முடியாத மற்ற விஷயங்களை நான் விட்டுவிடுகிறேன். ஆனால், "தீண்டாதாரிடையே வாழ்க்கையில் இந்த மாறுதல் ஏற்பட்டுள்ள இடங்களில் நூற்றுக்கணக்கான உயர் சாதி ஹிந்துக்கள் இப்போது கிறிஸ்தவ மதத்தில் சேர்ந்து வருகிருர்கள்" என்று டாக்டர் பிக்கெட் கூறியிருக்கிருர் அல்லவா? அந்த உயர்சாதி ஹிந்துக்கள் யார் என்பதை அறிந்துகொள்ள நான் விரும்புகிறேன்! டாக்டர் பிக்கெட் எடுத்துக்காட்டியுள்ள திகைப்பைக் கொடுக்கும் விவரங்களை ருஜுப்பிக்க முடியுமாயின், "அது கிறிஸ்தவ சரித்திரத்தின் மகத்தான அதிசயங்களில் ஒன்று" தான்; இல்லை, மனித சரித்திரத்தின் மகத்தான அதிசயங்களிலேயே ஒன்ருகும்.

ஆனல், அதிசயங்களை நிரூபிக்க அலங்காரப் பிரசங்கங்கள் அவசியமா? அந்த மகத்தான அதிசயம் உண்மையில் நிகழ்ந்திருந்தால், இந்தியாவில் உள்ள நமக்கு அது தெரியாமல் போயிருக்குமா? அது நம்மைப் பாதிக்காமல் இருந்திருக்குமா?

அதிசயங்கள் விளம்பரங்களின்றித் தாமாகவே பறைசாற்றிக் கொள்ளக்கூடியவை. உதாரணமாக, திருவாங்கூரில் நிகழ்ந்த அதிசயத்தைப் பாருங்கள். திருவாங்கூரிலுள்ள இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட கோவில்கள் ஹரிஜனங்களுக்குத் திறக்கப்பட்டு விடுமென்றும், பரம வைதிக ஹிந்துக்களிடமிருந்து யாதொரு தடையும், இடையூறுமின்றி நூற்றுக்கணக்கான ஹரிஜனங்கள் அக்கோவில்களுக்குள் பிரவேசிப்பார்களென்றும் ஒரு மாதத்திற்கு முன் யாருமே நம்பவில்லை. அப்படியிருந்தும், அந்த அதிசயம் திருவாங்கூரில் நிகழ்ந்தது. இதை எவரும் எளிதில் தெரிந்துகொள்ளலாம். அதை ஓர் அதிசயமென்று கூறலாமா, கூடாதா என்பது முக்கியமல்ல. அதில் நம் கண்களுக்குப் புலப்படாத கடவுளின், ஆனல் நம் கண்களுக்குப் புலப்படும் அவரது சக்தியை நான் காண்கிறேன்.

எனக்குக் கீதையில் நம்பிக்கை இருப்பது போல் பைபிளிலும் நம்பிக்கை இருக்கிறது. உலகத்திலுள்ள மகத்தான சகல மதங்களும் என் சொந்த மதத்தைப் போல் உண்மையானவை என்றே நான் கருதுகிறேன். மேலே கூறியுள்ள விவரங்கள் உண்மையானவை என்றே வைத்துக்கொண்டாலும், தங்கள் சொந்த மதத்தையே, அதைப் பின்பற்றுவோர் கேலி செய்வதாக அறிஞரான பிஷப் கூறியிருப்பது எனக்கு வேதனையைக் கொடுக்கிறது.

—'ஹரிஜன்' - 19–12–1936

## 10

# மதங்களின் மதமாற்றப் போட்டி!

[டாக்டர் ஜான் மாட் உலகில் உள்ள மிகுந்த சுறுசுறுப்பு வாய்ந்த கிறிஸ்தவ மத போதகர்களில் ஒருவர். ஏசுநாதரின் உபதேசங்களைப் போதிப்பதற்காக அவர் பல தடவை உலகம் முழுவதையும் சுற்றியிருக்கிறார். உலகத்தில் உள்ள கோடிக்கணக்கான மாணவர்களின் கூட்டங்களில் பேசியிருக்கிறார். அவர், 'கிறிஸ்தவ மாணவர் உலக சமஷ்டி சங்கம்' என்ற நூலின் ஆசிரியர். சர்வ தேசப் பாதிரிமார் சபை போன்ற சில கிறிஸ்தவ மகாசபைகளுக்கும் அவர் அக்ராசனராக இருந்து வருகிறார். சற்றேறக்குறைய சென்ற ஐம்பது ஆண்டுகளாக கிறிஸ்தவ மத சம்பந்தமான நடவடிக்கைகளில் ஈடுபட்டு வந்துள்ள அவருக்கு இப்போது 71 வயதாகிறது. மகாத்மா காந்தி, டால்ஸ்டாய் முதல் உலகத்திலுள்ள மாபெரும் தலைவர்களுடனும், பெரும்பாலான நாடுகளின் மன்னர்களுடனும் அவருக்குத் தொடர்பு உண்டு. இந்தியாவில் உள்ள தீண்டாதார்களிடையே இதற்கு முன் ஒருபோதும் இராத கொந்தளிப்பு ஏற்பட்டுள்ளது என்பதே கிறிஸ்தவர்களின் அபிப்பிராயமாகும். அதை மனத்திற் கொண்டே டாக்டர் மாட் இந்தியாவுக்கு வந்தார். எனவே, அவருக்கும் காந்திஜிக்கும் நடந்த சம்பாஷணை மிகவும் முக்கியமானதாகும். அதன் சுருக்கமான விவரத்தைக் கீழே குறிப்பிட்டுள்ளேன்: மகாதேவ தேசாய்.]

டாக்டர் மாட் : தீண்டாமை எதிர்ப்பு இயக்கத்தை நீங்கள் மகத்தான முறையில் ஆரம்பித்து, அதில் உங்கள் உயிரையே வைத்திருக்கிறீர்கள். அதற்காக நீங்கள் கஷ்டப்பட்டு, வெற்றியடைந்திருக்கிறீர்கள். அந்தப் பிரச்னையையொட்டிய விஷயங்களையெல்லாம் நன்கு அறிந்துகொள்ள எனக்கு நீங்கள் உதவி புரிய வேண்டுமென விரும்புகிறேன். நான் எப்படி உதவி புரியலாமென்றும் கூறுங்கள். இயக்கத்திற்கு இடையூறு செய்ய நான் விரும்பவில்லை. இவ்விஷயமாக இந்தியாவில் நிகழ்ந்து வரும் சம்பவங்கள், உலகம் முழுவதும் ஆழ்ந்த உணர்ச்சியை உண்டு பண்ணக்கூடியவை. இப்போது நம் முன்னுள்ள சக்திகளின் செல்வாக்கைக் குறித்து ஜோசியம் எதுவும் கூறுவது கஷ்டமான காரியம். இந்தப்

பிரச்னையைப் பற்றி உங்கள் கருத்து என்ன என்பதை எனக்குச் சொல்லுங்கள்.

காந்திஜி : என் சம்பந்தப்பட்ட வரையில் தீண்டாமை, ஹிந்து மதம் வாழ்வதா அல்லது வீழ்வதா என்பதைப் பொறுத்த விஷயமாகும். நான் அடிக்கடி கூறி வந்திருப்பது போல், தீண்டாமை வாழ்ந்தால் ஹிந்து மதம் அழிந்துவிடும்; இந்தியாகூட அழிந்துவிடும். ஆனால், ஹிந்துக்களின் இதயத்திலிருந்து தீண்டாமை வேருடன் களையப்படுமாயின், பிறகு ஹிந்து மதம் உலகத்திற்கே திட்டமான உபதேசம் செய்யக்கூடிய நிலையில் இருக்கும். இது மிகைபடக் கூறுவதன்று. சத்தியத்தையே கடவுளாக ஒப்புக்கொள்ளும் ஒரு மனிதன் கூறுவதாகும். தீண்டாமை, ஹிந்து மதத்தின் ஒரு முக்கிய அம்சமாயின், ஹிந்து மதம் வெடித்துத் தீர்ந்த ஒரு துப்பாக்கி ரவைக்கு ஒப்பாகப் பயனற்றதாகிவிடும். ஆனால், தீண்டாமை ஒரு பயங்கரமான பொய். நான் ஆரம்பித்துள்ள தீண்டாமை இயக்கத்தின் நோக்கம் தெளிவானது. ஒவ்வொரு ஹிந்துவும் தீண்டாதாரைத் தொடவேண்டும் என்பது எனது நோக்கமல்ல. தொடத் தகுந்த ஒவ்வொரு ஹிந்துவும், தமது இதயத்திலிருந்து தீண்டாமையை ஒழித்து விடவேண்டும் என்பதே; அதாவது தீண்டாதார் விஷயத்தில் அவரது மனம் முற்றிலும் மாறிவிட வேண்டும். சமபந்தி போஜனமோ, கலப்பு மணமோ தேவையல்ல. நான் உங்களுடன் உட்கார்ந்து சாப்பிட விரும்பாமலிருக்கலாம். ஆனால், நான் உங்களுடன் உட்கார்ந்து சாப்பிட்டால், நான் தீட்டாகி விடுவேன் என்ற மனோபாவம் எனக்கு இருக்கவே கூடாது. கல்யாணம் செய்துகொள்ள வேண்டிய ஒரு பெண்ணாக நான் இருந்தால், "நான் அந்த மனிதரைக் கல்யாணம் செய்து கொள்ள முடியாது. ஏனென்றால், அவர் ஒரு தீண்டாதார்" என்று நான் சொல்லக்கூடாது. இதை நான் உங்களுக்குத் தெளிவாகக் கூறுவதற்குக் காரணம் என்னவெனில், தீண்டாதாருடன் சமபந்தி போஜனம் செய்யும்படியோ, கலப்பு மணம் செய்துகொள்ளும்படியோ நாங்கள் வைதிக ஹிந்துக்களைக் கேட்கவில்லை. ஹரிஜன சேவா சங்கத் திட்டத்தில் அவ்வித வற்புறுத்தல் எதுவுமில்லை. சமபந்தி போஜனம், கலப்பு மணம் இவை பற்றி எங்களில் பலருக்கு ஆட்சேபணை எதுவுமில்லை. தீண்டாமை புராதன வழக்கம் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஹிந்து மதம் புராதன மதம், சரித்திர காலத்திற்கு முன் ஏற்பட்ட மதம். எனவே, அதில் தீண்டாமை போன்ற பல விஷயங்கள் ஊடுருவியிருக்கின்றன. அது செத்த மதமாகிவிடாமல், ஜீவன் ததும்பும் மதமாக இருக்க வேண்டும் என்பதே எனது விருப்பம். அப்போதுதான் அது, உலகத்தில் உள்ள மற்ற மதங்களின் வரிசையில் இடம் பெற முடியும்.

டா: தீண்டாமை ஒழிப்பு உங்களுடைய ஆயுட் காலக் கடமையாக இருக்கிறது. இந்த இயக்கத்தின் முக்கியத்துவம் இந்திய எல்லைகளையும் கடந்து சென்றிருக்கிறது. அப்படியிருந்தும், மற்றெந்த விஷயங்களையும்விட இதில்தான் சிந்தனைக் குழப்பம் அதிகமாக இருந்துவருகிறது. உதாரணமாக, பாதிரிமார்களையும் பாதிமார் சங்கங்களையும் எடுத்துக் கொள்ளுங்கள். இவ்விஷயத்தில் அவர்களுடைய மனம் ஒரேவிதமாக இல்லை. நாம் எல்லோரும் ஒரே மனம் உடையவர்களாகி, இதில் நாம் எவ்வளவு தூரம் இடையூறு விளைவிக்காமல் உதவியளிக்க முடியும் என்பதைக் கண்டுபிடிக்க வேண்டியது மிகவும் விரும்பத்தக்கது. நான், சர்வதேசப் பாதிரிமார் சங்கத்தின் தலைமைப் பதவியை வகித்து வருகிறேன். அச்சபையில், உலகத்தில் உள்ள முந்நூறு பாதிரிமார் சங்கங்கள் ஸ்தானம் வகிக்கின்றன. இந்தச் சங்கங்களின் அறிக்கைகள் எனக்குக் கிடைத்துள்ளன. அவற்றிலிருந்து, தீண்டாதார் விஷயத்தில் அச்சங்கங்கள் அதிக அக்கறை கொண்டிருக்கின்றனவென்று நான் கூற முடியும். அவர்கள் எங்கெங்கே தவருன பாதைகளில் சென்று வருகிருர்கள் என்பதை நீங்கள் கூற இயலுமா? அதைக் கேட்க நான் அக்கறையுடையவனுக இருக்கிறேன். அவர்களுடைய விருப்பம் உதவியளிக்க வேண்டும் என்பதுதான்; இடையூறு விளைவிக்க வேண்டும் என்பதல்ல.

கா: இவ்விஷயமாகப் பாதிரிமார்களின் நடவடிக்கைகள் எனக்கு மன வேதனையைக் கொடுத்துள்ளன. டாக்டர் அம்பேத்கார் 'வெடி குண்டை' வீசிய உடனேயே, முஸ்லிம்கள், சீக்கியர்களைப் போல் பாதிரிமாரும் முன்வந்து, அவரது அறிவிப்புக்கு எல்லை மீறிய முக்கியத்துவம் அளித்துவிட்டார்கள். அதன்பின் அம்மத ஸ்தாபனங்களுக்குள் போட்டி ஏற்பட்டது. ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் சச்சரவு இருந்து வருவதால், முஸ்லிம்கள் மத மாற்றப் போட்டியில் ஈடுபடுவதை நான் அறிந்துகொள்ள முடிகிறது. ஆனல், சீக்கியர்கள் இதில் தலையிடுவதுதான் எனக்கு ஒரு புதிராக இருக்கிறது. தங்களுடைய தொண்டு கலப்பற்ற ஆன்மிக சம்பந்தமான முயற்சியே என்று கிறிஸ்தவப் பாதிரிமார் சங்கங்கள் கூறிக்கொள்ளுகின்றன. ஆனல், தீண்டாதாரைத் தங்கள் மதத்திற்கு மாற்றும் முயற்சியில் கிறிஸ்தவ சங்கங்கள், முஸ்லிம்களுடனும் சீக்கியர்களுடனும் போட்டி போடுவதைக் காண எனக்கு வேதனையாக இருக்கிறது. அது அருவருக்கத்தக்க ஒரு காரியமாகவும், மத தருமத்திற்கு முரணானதாகவும் எனக்குத் தோன்றுகிறது. கிறிஸ்தவ சங்கங்கள் டாக்டர் அம்பேத்காருடன் இரகசிய ஆலோசனைகளில் கூட ஈடுபடத் தொடங்கிவிட்டன. ஹரிஜனங்களின் நன்மைக்காக நீங்கள் பிரார்த்தனைகளில் ஈடுபட்டால், அதை நான் அறிந்து பாராட்டியிருக்க முடியும். ஆனல்,

அதற்குப் பதிலாக, நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள் என்பதை அறிந்துகொள்ளக் கூட மனமும் அறிவும் இல்லாத ஹரிஜனங்களுக்கு, மதம் மாறும்படி வேண்டுகோள் விடுக்க முற்பட்டுவிட்டீர்கள். ஏசுநாதர், முகமதுநபி, நானக் முதலியோர் யார் என்பதை அறிந்துகொள்ளும் அறிவோ, ஆற்றலோ ஹரிஜனங்களுக்கு நிச்சயமாக இல்லை.

பிறகு டாக்டர் மாட், காண்டர்பரி ஆர்ச் பிஷப்பின் பிரசங்கம் பற்றியும், தாம் அவருடனும், இங்கிலாந்தில் உள்ள மற்ற பிஷப்புகளுடனும் கிறிஸ்தவத் தலைவர்களுடனும் நடத்திய சம்பாஷணை பற்றியும் குறிப்பிட்டார். இந்திய மக்களின் ஆன்ம நலனுக்காக மற்ற மதத்தினருடன் கிறிஸ்தவர்கள் போட்டி போடுவதுபோல் தோன்றவில்லையென்ற உண்மையை வற்புறுத்தினர். தாங்கள் அவ்விதம் போட்டி போடுவதில்லை யென்று பாதிரிமார்களும் கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்த மற்றத் தலைவர்களும் தமக்கு உறுதியளித்திருப்பதாகவும் கூறினர். மேலும் டாக்டர் மாட் குறிப்பிட்டதாவது: "ஆனல், எந்த மதத்தினர் அங்கீகரிக்கத் தயாராக இருக்கிறார்களோ, அவர்களிடம் டாக்டர் அம்பேத்கார் ஐந்து கோடி மக்களை ஒப்புவிக்க முடியுமென்று, மத சம்பந்தமல்லாத பத்திரிகைகளில் செய்தி வெளியாகிவிட்டது. இது மகத்தான தீங்கில் வந்து முடியுமென்பதை நான் உணர்ந்தேன். மிகவும் நம்பிக்கைக்குரிய கிறிஸ்தவ மதத் தலைவர்கள் உங்களுடைய கருத்தை மிகுந்த அக்கறையுடன் கவனித்து நடந்து கொள்ளுவார்கள். தீண்டாதார்களுக்காகத் தொண்டு புரிய வேண்டுமென்ற எண்ணம் கிறிஸ்தவத் தலைவர்களுக்கு நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது. எனவே, நாங்கள் என்ன தொண்டு செய்வது புத்திசாலித்தனமாகும், எது செய்வது புத்திசாலித்தனமாகாது என்பதை எங்களுக்குக் கூறுங்கள்."

கா: டாக்டர் அம்பேத்காரின் இந்த ஆசை சம்பந்தப்பட்ட வரையில், நீங்கள் அந்த இயக்கத்தைக் குறித்துச் சாந்தமாக இருக்கலாம்; அதை நீங்கள் பொருட்படுத்த வேண்டியதில்லை. ஆனல், டாக்டர் அம்பேத்காரின் வேண்டுகோளுக்கு ஹரிஜனங்கள் செவி கொடுத்து, அவர்களும் டாக்டர் அம்பேத்காரும் ஓர் இறுதியான தீர்மானம் செய்து கொண்டு உங்களிடம் வருவார்களாயின், பின்னர் நீங்கள் உங்கள் மனச் சாட்சிக்கு இணங்க நியாயமான முறைகளைக் கைக்கொள்ளலாம். எனினும், டாக்டர் அம்பேத்காரும் ஹரிஜனங்களும் என்ன செய்யக் கூடுமென்று ஊகித்துக் கொண்டு நீங்கள் ஏதாவது செய்ய முற்படுவது அவசரக் கோலமும் கண்ணியமற்றதுமாகும்.

இச் சந்தர்ப்பத்தில், லக்ஷ்மணபுரியில் நடந்த கிறிஸ்தவர் மகாநாட்டின் நடவடிக்கைகளை, தீனபந்து ஆண்ட்ரூஸ் கண்டித்தார்.

அந்த மகாநாடு ஆதாரபூர்வமானதல்ல வென்று டாக்டர் மாட் பதிலளித்தார்.

கா: அவ்விஷயமாகக் கிறிஸ்தவ சங்கங்கள் மௌனமாக இருந்து விட்டதால், அம்மகாநாடு ஆதாரபூர்வமாகி யிருக்கிறது. அம்மகாநாட்டின் நடவடிக்கைகளுக்கும் தங்களுக்கும் எவ்விதச் சம்பந்தமும் இல்லையென்று அவை கூறியிருந் தால் நன்மையாக இருந்திருக்கும். ஒரு வேளை பாதிரிமார் சங்கங்கள் போதிய அளவு வேகமாக அலுவல்களைச் செய்யவில்லையென்று கருதி, அச்சங்கங்களின் கருத்தை லக்ஷ்மணபுரி மகாநாட்டில் கலந்து கொண்டவர்கள் வெளி யிட்டிருக்கலாம்.

டா: பாதிரிமார் சங்கங்கள், லக்ஷ்மணபுரி மகாநாட்டு நடவடிக் கைகளுக்கும் தங்களுக்கும் சம்பந்தமில்லையென்று மறுப்பு வெளியிட்டிருந்தனவே.

கா: மறுப்பு வெளியிட்டிருந்தால், அந்த மறுப்பு இங்கிலீஷ் கால் வாயைக் கடந்து இந்தப் பக்கம் வரவில்லை.

டா: இவ்விஷயமாக மிகவும் வருந்தத்தக்க விதத்தில் சிந்தனைக் குழப்பமும், நண்பர்களிடையே கூட கருத்து வேற்றுமையும் இருந்து வருகின்றன. சைத்தான் அதிகமாக விரும்புவது இதைக் காட்டிலும் வேறு எதுவும் இருக்க முடியாது. எனது வாழ்க்கையின் பெரும் பகுதியை நான் கற்றறிவுள்ள வகுப்பினரிடையே கழித்துள்ளேன். எனவே, தீண்டாமை எதிர்ப்பு இயக்கத்தில் உதவிபுரிய வேண்டுமென என் மனச் சாட்சி மிகவும் வற்புறுத்துகிறது.

பிறகு ஹிந்துக் கொடியின் கீழ், அவ்விதம் உதவி புரியும் சிறந்த கிறிஸ்தவர்களின் உதாரணத்தைக் காந்திஜி எடுத்துக் காட்டினார். காந்திஜி கூறியதாவது: 'தீண்டா தாரின் முன்னேற்றப் பாதை கஷ்டமின்றி இருப்பதாக ஸ்ரீ கெய்தான் பெரு முயற்சி செய்து வருகிறார். ஸ்ரீமதி பார், ஸ்ரீமதி மாடென் இருவரும் கிராமப் புனருத்தாரண இயக்கத்தில் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார்கள். நிற்க, திருவாங்கூரில் உள்ள ஈழவர்களை மயக்கியும் ஏமாற்றியும் ஹிந்து மதத்திலிருந்து வேறு மதத்திற்கு மாற்றுவதற் காகக் கண்ணியமற்ற போட்டி நடந்துவருகிறது. திருவாங் கூரில் உள்ள ஈழவர்கள் ஆலயப் பிரவேசத்தை விரும்பு கிறார்கள். அவர்கள் ஆலயப் பிரவேசத்தை விரும்புகிறார் களா என்று நீங்கள் என்னைக் கேட்பதால் பலனில்லை. அவர்கள் அதை விரும்பாவிட்டால் கூட, எனக்கு எவ்வளவு உரிமைகள் உண்டோ அவ்வளவு உரிமைகள் அவர்களுக்கும் கிடைக்கும்படி நான் பார்த்துக்கொள்ள வேண்டும். அதனால் தான் அவர்களுக்குக் கோவில் கதவுகளைத் திறந்துவிட,

சீர்திருத்தக்காரர்கள் தங்கள் சக்தி முழுவதையும் உபயோகித்துத் தீவிர முயற்சி செய்து வருகிறார்கள். (ஆலயப் பிரவேசத்தை அனுமதித்துத் திருவாங்கூர் மகாராஜாவின் பிரகடனம் வெளியாகிக்கொண்டிருந்த அதே சமயத்தில் காந்திஜிக்கும் டாக்டர் மாட்டிற்கும் இந்தச் சம்பாஷணை நடந்துகொண்டிருந்தது விசித்திரமாகும்.)

டா: நாங்கள் அவர்களுக்குத் தொண்டு புரிய வேண்டாமா?

மா: நிச்சயமாக நீங்கள் தொண்டு புரிய வேண்டும். ஆனால், உங்கள் தொண்டிற்கு விலையாக மதமாற்றம் செய்ய முற்பட்டு விடாதீர்கள்.

டா: அவர்கள் கிறிஸ்தவர்களாக மாறினாலும் மாறாவிட்டாலும், நாங்கள் அவர்களுக்குத் தொண்டு புரிய வேண்டியது கடமையாகும் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். மதம் மாறும்படி ஏசுநாதர் தூண்டவில்லை. அவர் தொண்டு புரிந்து தியாகம் செய்தார்.

கா: இந்தச் சீர்திருத்த இயக்கத்தில் கிறிஸ்தவர்கள் கலந்து கொள்ள விரும்பினால், அவர்கள் மத மாற்ற நோக்கம் எதுவு மின்றிக் கலந்துகொள்ள வேண்டும்.

டா: இந்தக் கண்ணியமற்ற போட்டியை விட்டுவிட்டு, தீண்டாதார் அங்கீகரிப்பதற்காகக் கிறிஸ்தவர்கள் தங்கள் வேதத்தை அவர்களுக்கு உபதேசிக்கக்கூடாதா?

கா: டாக்டர் மாட், நீங்கள் ஒரு பசு மாட்டிற்கு உங்கள் வேதத்தை உபதேசிப்பீர்களா? தீண்டாதார்களில் சிலர் அறிவில் பசு மாட்டையும்விட மிகத் தாழ்ந்தவர்களாக இருக்கிறார்கள். அதாவது இஸ்லாம், ஹிந்து மதம், கிறிஸ்தவ மதம் இவற்றில் உள்ள பெருமைகளின் ஏற்றத் தாழ்வை எவ்விதம் ஒரு பசு அறிந்துகொள்ள முடியாதோ, அது போல் தீண்டாதாரும் அறிந்துகொள்ள முடியாது. நீங்கள் உங்கள் ஆயுள் முழுமையும் உபதேசிக்கலாம். 'வந்து என் வாசனையை முகர்ந்து பாருங்கள்' என்று ரோஜா யாரிடமும் சொல்லுவதில்லை அல்லவா?

டா: ஆனால், 'உபதேசம் செய், கற்பி' என்று ஏசுநாதர் கூறினார். கடவுள் வாக்கைக் காதால் கேட்பதன் மூலம்தான் நம்பிக்கை வருகிறது என்றும் அவர் கூறினார். நான் அவ நம்பிக்கைவாதியாக இருந்த காலம் உண்டு. பிறகு கேம்பிரிட்ஜைச் சேர்ந்த பிரபல கிரிக்கெட் விளையாட்டுக்காரரான ஜே. ஈ. கே. ஸ்டட், மத போதனை செய்வதற்காக எங்கள் சர்வகலாசாலைக்கு வந்தார். அவராலேயே என் மனத்திலிருந்த சந்தேகங்களும் அவநம்பிக்கையும் தீர்ந்தன. அவரது வாழ்க்கையும் அற்புதமான உதாரணமும் மாத்திரம்

என் கேள்விக்குப் பதில் அளித்திருக்க முடியாது; என் ஆழ்ந்த தேவையைத் திருப்தி செய்திருக்க முடியாது. ஆனால், அவர் கூறியதை நான் கவனமாகக் கேட்டேன். அதன் பயனாக என் மனம் மாறியது. முதன் முதலாக நாம் பரிசுத்த வாழ்க்கையை நடத்த வேண்டும். பிறகு நாம் புத்திசாலித்தனமாகவும் அனுதாப உணர்ச்சியுடனும் மூலாதார உண்மையை விளக்குவதன் மூலமும், கைக்கொள்ளும் முறைகள், நடவடிக்கைகள், மனநிலை இவை சம்பந்தமான சந்தேக இருளைப் போக்கி, ஒளி வீசும்படி செய்ய வேண்டும். பகுத்தறிவுக்குத் தடையாக இருப்பவைகளையும் நாம் அகற்ற வேண்டும். அதுதான் உண்மையான விடுதலைக்கு நம்மைக் கொண்டு செல்லும். கிறிஸ்தவர்கள் நாளைக்கே வாபஸாகிவிட வேண்டுமென நீங்கள் விரும்புகிறீர்களா?

கா: இல்லை. ஆனால், நீங்கள் எங்களுக்கு உதவி செய்ய முடியாவிடில், எங்கள் வேலைக்கு இடையூறாக நீங்கள் வருவதை நான் விரும்பவில்லை.

டா: எங்கள் வாழ்க்கையை மற்றவர்களுடன் பங்கிட்டுக் கொள்ளுவதே கிறிஸ்தவ மதத்தின் முழுத் தத்துவமாகும். நாங்கள் வாழ்க்கை உதாரணத்துடன் பேச்சையும் சேர்த்துக்கொள்ளாமல் அதைப் பிறருடன் எப்படிப் பங்கிட்டுக்கொள்ள முடியும்?

கா: அப்படியானால் திருவாங்கூரில் செய்யப்பட்டு வரும் மத மாற்ற முயற்சி சரியானதா? அவர்கள் செய்வதற்கும் நீங்கள் கூறுவதற்கும் அளவில்தான் வேற்றுமையேயன்றி, தரத்தில் வேற்றுமை எதுவுமில்லை. நீங்கள் வாழ்க்கையை ஹரிஜனங்களுடன் பங்கிட்டுக்கொள்ள வேண்டுமாயின், அதை என்னுடனும் தக்கர் பாபாவுடனும், மகாதேவ தேசாயுடனும் ஏன் பங்கிட்டுக்கொள்ளக்கூடாது? நீங்கள் ஏன் தீண்டாதாரிடம் சென்று, இந்த எழுச்சியை உங்களுக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக்கொள்ள முயற்சிக்க வேண்டும்? அவர்களிடம் செல்லுவதற்குப் பதிலாக, நீங்கள் ஏன் எங்களிடம் வரக்கூடாது?

டா: அம்பேத்காரின் பிரகடனத்திலிருந்து, இப்பிரச்னை சம்பந்தமான விவாதமெல்லாம் கண்ணியமற்ற நோக்கக் கலப்புள்ள ஒரு கதம்பமாகிவிட்டது. எனவே, இது தவிர்க்கப்பட வேண்டும். 'எனக்கு நீங்கள் சாட்சியாக இருங்கள்' என்றார் ஏசுநாதர். ஒரு நல்ல கிறிஸ்தவர், தமது சொந்த வாழ்க்கையில் தாம் பெற்ற அனுபவத்தையோ, அல்லது தான் நேரில் பார்த்துத் தெரிந்துகொண்டதன் பலனையோ உண்மையாகக் கூற வேண்டும். நாம் ஏசுநாதரின் உண்மையான சாட்சிகளாக இராவிடில், அவரது சீடர்களைப் போல் நாம் உண்மையானவர்களாக இருக்கமாட்டோம். 'நீங்கள்

அவர்களிடம் போய், அவர்களுக்குக் கற்பித்து, அந்தகாரம் விலக உதவி புரிந்து ஒளி மண்டலத்திற்கு அவர்களை நடத்திச் செல்லுங்கள்' என்றார் ஏசுநாதர்.

**தீனபந்து ஆண்ட்ரூஸ்** காந்திஜியிடம் கூறியதாவது: உங்களுக்கும் பாதிரிமார்களுக்கும் மூலாதாரமான வேற்றுமைகள் இருந்து வருகின்றன. அப்படியிருந்தும், நீங்கள் பாதிரிமார்களின் நண்பரே. ஆனால், அவர்கள் நேர்மையாக நடந்துகொள்ள வில்லையென்று நீங்கள் கருதுகிறீர்கள். கிறிஸ்தவ மதத்தலைவர்கள் கீழ் வருமாறு கூறவேண்டுமென நீங்கள் விரும்புகிறீர்கள்: 'எரிகிற வீட்டில் பிடுங்கிய வரையில் ஆதாயம் என்பதுபோல் நடந்துகொள்ள நாங்கள் விரும்பவில்லை. இங்கே ஏற்பட்டுள்ள விசித்திரமான நிலைமையை எங்களுக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக் கொள்ளுகிறோம் என்று பிறர் நினைக்கும்படியாக நாங்கள் எதுவும் செய்யமாட்டோம்.'

**கா:** இது விட்டுக் கொடுக்கும் எத்தகைய ராஜிப் பேச்சுக்கும் இடம் தரும் விஷயமல்ல என்பது என் அபிப்பிராயம். இது ஆழ்ந்த மத சம்பந்தமான ஒரு பிரச்னையாகும். இதில் ஒவ்வொருவரும் அவரவர் விருப்பப்படி நடந்துகொள்ள வேண்டும். தற்போதைய முயற்சிதான் உங்கள் கடமை யென்று உங்கள் மனச்சாட்சி கூறுமாயின், ஹிந்து சீர்திருத்தக்காரர்களுக்கு நீங்கள் தயவே காட்ட வேண்டியதில்லை. இன்று பாதிரிமார் என்ன செய்து வருகிறார்களோ அதில் புனிதத்தன்மை எதுவுமில்லை என்பதே எனது நம்பிக்கை. இதை நான் நிச்சயமாகக் கூற முடியும்.

—'ஹரிஜன்' – 19—12—1936

# 11

# கிறிஸ்தவர்களிடையே தீண்டாமைத் தொத்து நோய்

'கிறிஸ்தவ ஹரிஜனங்கள்' என்பது முரண்பாடான வார்த்தைகளாகும். இந்தியாவிற்கு வெளியே விரட்ட முயற்சிக்கப் பட்டு வரும் தீண்டாமையை, ஹிந்து மதத்தின் ஒரு சாபக் கேடாகச் சீர்திருத்தவாதிகள் கருதுகின்றனர்; அதை ஹிந்து மதத்தின் ஒரு விசேஷ உரிமையாகச் சனாதனிகள் கருதுகின்றனர். ஹிந்துக்களின் தொடர்பு காரணமாக மலையாளத்தில்

உள்ள கிறிஸ்தவர்களிடையேயும், ஹிந்துக்களிடையே இருப்பது போல் தீண்டாமைத் தொத்துநோய் பரவியிருக்கிறது. அவ்விஷய மாக ஒரு மலையாளக் கிறிஸ்தவர் ஸ்ரீஜத் அமிருத்லால் தக்கருக்கு இவ்விதம் எழுதுகிறார் :

"புகழ் பெற்ற வைக்கம் சத்தியாக்கிரகம் நடந்த நாட்களிலிருந்து, இந்தியாவிலேயே படுமோசமான திருவாங்கூர் ஹரிஜனங்களின் நிலை பெரிதளவு அம்பலத்திற்குக் கொண்டுவரப்பட்டது. திருவாங்கூரிலுள்ள கிறிஸ்தவ ஹரிஜனங்கள், தங்களுடைய ஹிந்து ஹரிஜன சகோதரர்களைப் போலவே பிரஜா, சமுதாய உரிமைகள் இன்றியும், இழிவான வறுமை நிலையிலும் இருந்து வருகிறார்கள் என்பதை ஸ்ரீ ஸி. எப். ஆண்ட்ரூஸ் போன்ற ஒரு சில தனி நபர்களைத் தவிர வேறு எவரும் இன்னும் சந்தேகிக்கவுமில்லை, கண்டுபிடிக்கவுமில்லை. சென்ற வருடம் எடுக்கப்பட்ட ஜன கணிதத்தின்படி திருவாங்கூரில் புலையர்களும், பறையர்களும், ஈனப் புலையர்களும், மற்றும் சில சில்லறைச் சமூகத்தினருமாக மொத்தம் சுமார் ஆறு லட்சம் பேர் இருக்கிறார்கள். அவர்கள் திருவாங்கூரிலுள்ள தீண்டாத சமூகத்தினருக்குள் மிக மிகத் தாழ்ந்தோராகக் கருதப்படுகிறார்கள். ஹிந்து மதத்திலிருந்து கிறிஸ்தவ மதத்திற்கு மாறிய புலையர்கள் அல்லது பறையர்களின் நிலைமை சிறிதும் அபிவிருத்தியடையவில்லை. திருவாங்கூரில் மாத்திரம் அவர்களில் வெகு சிலர் தங்கள் சமூகங்களைச் சேர்ந்த மற்றவர்களைவிட சிறிது அதிகமாக எழுதப்படிக்கத் தெரிந்தவர்களாகவோ அல்லது சிறிது உயர்ந்த வேலையில் உள்ளவர்களாகவோ இருக்கிறார்கள். தாழ்த்தப்பட்டவர்களில் மதம் மாறியவர்களுக்கும், மாறாதவர்களுக்கும் இடையே, மதம் மாறியவர்களின் பகட்டைத் தவிர உண்மையில் வேற்றுமை எதுவுமில்லை.

"பொது ஸ்தாபனங்கள், ரஸ்தாக்கள், ஹோட்டல்கள், விடுதிகள், கோவில்கள், கிறிஸ்தவாலயங்கள், கோர்ட்டுகள், வியாபார ஸ்தலங்கள், கடைகள், தெருக்கள் முதலியவற்றை ஹிந்து ஹரிஜனங்களைப் போல் கிறிஸ்தவ ஹரிஜனங்களும் நெருங்கக் கூடாது. இரு சாராரும் இன்றுவரை நம்பூத்ரிகள் போன்ற சாதி ஹிந்துக்களுக்குப் பார்க்கத் தகுந்தவர்கள் அல்ல.

"தெற்கே நாடார்களைப் போலவும், வடக்கே சிரியர்களைப் போலவும் செல்வச் செழுமை வாய்ந்த கிறிஸ்தவ சமூகத்தினர், பாதிரிமார்களாலும் சர்க்கார் மான்யங்களாலும் முன்னேற்றம் அடைந்தவர்கள். ஹிந்து ஹரிஜன சகோதரர்கள் விஷயத்தில் மாறுதல் வேண்டாத சனாதனிகள் எவ்விதம் நடந்துகொள்ளுகிறார்களோ, அவ்விதம் நாடார்களும், சிரியர்களும் எங்கள் விஷயத்தில் நடந்துகொள்ளுகிறார்கள். கிறிஸ்தவ ஹரிஜனோ அல்லது ஹிந்து ஹரிஜனோ நூற்றுக்கணக்கான கிறிஸ்தவாலயங்களை நெருங்கத்தகாதவர்களாக இருக்கிறார்கள். மிகத் தாழ்ந்த நிலையில் உள்ள கிறிஸ்தவ ஹரிஜனங்கள் மற்ற ஹரிஜனங்களுடன் சேர்ந்து தங்கள் உரிமைகளுக்காக ஏன் போராட வேண்டும் என்பதை இதிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

"சாதி ஹிந்துக்களும் கிறிஸ்தவர்களும் எங்களுக்கு எண்ணிக்கையற்ற கொடுமைகள் இழைத்திருக்கின்றனர். குறிப்பாக, மத்திய, வடக்கு திருவாங்கூரில் உள்ள ஜாகைகளிலிருந்து, தொடத் தகுந்தவர்கள் மாத்திரமல்ல, ஈழவர்கள் போன்ற தொடத்தகாதவர்களும்கூட எங்களை இரக்கமின்றி வெளியே

துரத்தும் வழக்கம் இருந்து வருகிறது. இந்த உண்மைகள் உங்களுக்கு நன்ருகத் தெரியும். எனவே, முற்றிலும் உண்மையான இவ்விஷயத்தை ருஜூப்பிக்க நாங்கள் இக்கடிதத்தில் உதாரணங்கள் குறிப்பிட வேண்டிய அவசியமில்லை.

"எங்களில் பெரும்பாலோர் விவசாயப் பண்ணையாட்களான அடிமைகள். நாங்கள் சாதி ஹிந்துக்களும் கிறிஸ்தவர்களுமான எஜமானர்களையே அண்டிப் பிழைக்க வேண்டியிருக்கிறது. நாளுக்கு நாள் அதிகமாகி வரும் வறுமை காரணமாகவும், நிலங்கள் துண்டாக்கப்படுவதன் காரணமாகவும் எங்களுடைய பொருளாதாரக் கஷ்டம் நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது. எனவே, நிர்க்கதியான நிலையில் உள்ள தொழிலாளர்களான எங்களை ஈவிரக்கமின்றிச் சுரண்டி வருகிருர்கள். சுபிட்சத்திற்கிடையே நாங்கள் பட்டினி கிடந்து வருகிருேம். நாங்கள் பிச்சை கேட்கவில்லை. ஆனல், உங்களுடைய ஒத்துழைப்பையும், அனுதாபத்தையும், மனப்பூர்வமான உதவியையுமே கோருகிருேம்."

இத்தகைய நிலைமை ஹிந்து மதத்திற்கும் கிறிஸ்தவ மதத்திற்கும் கூட மானக்கேடாகும். தற்போதைய இயக்கம், யாருடைய முயற்சியுமின்றிக் கிறிஸ்தவ ஹரிஜனங்களுக்கும் உதவியளித்து வருகிறது. ஆனல், இந்த இயக்கத்தைத் தங்களுக்குச் சாதகமாகக்கொண்டு கிறிஸ்தவாலயங்களிலிருந்து தீண்டாமையை அறவே ஒழிக்கமுயற்சி எடுத்துக்கொள்ளப்படவேண்டும். அவ்விதம் எடுத்துக்கொள்ளப்படாவிடில், அது எனக்கு ஆச்சரியத்தையே கொடுக்கும். கற்றறிவுள்ள எண்ணிக்கையற்ற நாடார்களும் ஈழவர்களும் ஹரிஜனங்களுக்குள்ளேயே இருந்துவரும் வேற்றுமைகளை ஒழிக்கச் சிறந்த முயற்சி எடுத்துக்கொள்ளுவார்களென்று நம்புகிறேன்.

—'ஹரிஜன்' – 18—3—1933

## 12

# அரை டஜன அல்லது ஆரு!

பத்திரிகையிலிருந்து தக்கர் பாபா கீழ்க்கண்ட செய்தியைக் கத்தரித்து எனக்கு அனுப்பியுள்ளார்:

**" 'சாதி' கத்தோலிக்கர்கள் ஆலயத்திலிருந்து வெளியேறினர் "**

"கும்பகோணம் – டிச. 14. கும்பகோணம் செயிண்ட் மேரி ஆலயத்தில் நேற்று ஞாயிற்றுக்கிழமை வழிபாடு நடந்தபோது, கத்தோலிக்க ஹரிஜனங்கள், தங்களுக்கென்று பிரத்தியேகமாக ஒதுக்கிவைத்துள்ள இடத்தில் உட்கார்ந்து கொள்ளாமல் சாதி கத்தோலிக்கர்களுக்கிடையே பரவி உட்கார்ந்துவிட்டார்கள். அதனல், மிகுந்த பரபரப்பு உண்டாயிற்று. ஹரிஜனங்கள் அந்த இடத்தைவிட்டு நகர மறுத்ததால், குழப்பமும் கூக்குர

லும் ஏற்பட்டன. நிலைமை மோசமாகவே, சாதி கத்தோலிக்கர்கள் வழிபாட்டில் ஈடுபடாமல் வெளியேறி விட்டார்கள். அவ்விஷயமாக இறுதியான முடிவு ஏற்பட்டாலன்றித் தாங்கள் கோவிலுக்குள் வருவதில்லை யென்றும் அவர்கள் உறுதியாகக் கூறிவிட்டனர்.

"பிறகு, ஹரிஜனங்களின் கூட்டமொன்று நடந்தது. அப்போது, தங்களுக்குக் கோவிலில் சமத்துவ உரிமை அளிக்கப்படும் வரையில் தாங்கள் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்திவருவதென்று அவர்கள் தீர்மானித்தனர். நியாயமாக நடந்துகொள்ளும்படி ஹரிஜனங்களுக்குப் பிஷப் புத்திமதி கூறினர். பிரத்தியேகமாக இடம் ஒதுக்கி வைத்திருப்பது வசதிக்காகவே யன்றி, அதில் விசேஷ வேற்றுமை எதுவுமில்லை யென்றும் உறுதி கூறினர். பரஸ்பரம் சமரசம் செய்து கொள்ளாமல். திடீரென்று புதிய மாறுதல்களைச் செய்வதன் மூலம் மற்ற ஜனங்களின் உணர்ச்சிகளைப் புண்படுத்த வேண்டாமென்ற தமது விருப்பத்தையும் அவர் ஹரிஜனங்களுக்குத் தெரிவித்துக் கொண்டார். பிஷப்பின் உறுதிமொழி ஹரிஜனத் தலைவர்களுக்குத் திருப்தியைக் கொடுக்கவில்லை. எனவே, அவர்கள் 'சாதி இறுமாப்பையும் கண்மூடித்தனமான வழக்கத்தையும்' எதிர்க்கும்படி வற்புறுத்திக் கிராமங்களில் பிரசாரம் செய்து வருகிறார்கள்."

ஹரிஜன், பெயரளவில் ஒரு கிறிஸ்தவராயினும், ஹிந்துவாயினும் அல்லது ஒரு சீக்கியராயினும் அவர் ஹரிஜனேயாவார். ஹிந்து மதத்திலிருந்து அவர் தலைமுறை தலைமுறையாக அடைந்துள்ள களங்கத்தை அவர் மாற்றமுடியாது. அவர் தமது உடையை மாற்றிக்கொண்டு, தம்மை ஒரு கத்தோலிக்க ஹரிஜன் என்றோ, ஒரு முஸ்லிம் ஹரிஜன் என்றோ, அல்லது நவமுஸ்லிம் என்றோ, நவசீக்கியர் என்றோ எப்படி சொல்லிக்கொண்டாலும், தீண்டாமை அவர் ஆயுள் முழுவதும் அவரைப் பற்றிக்கொண்டேயிருக்கும். ஐந்துக்கு மேற்பட்ட எண்ணை நீங்கள் அரை டஜன் என்றாலோ அல்லதுஆறு என்றாலோ, எல்லாம் ஒன்றுதான். ஹிந்து மதத்திலிருந்து தீண்டாமை ஒழிக்கப்பட்டாலன்றி, ஹரிஜன் எந்தப் பட்டத்தை மேற்கொண்டாலும் அந்தக் களங்கத்தை அகற்றமுடியாது. எனவே, சாதி ஹிந்துக்களைப் போல் ஹரிஜனங்களுக்கும் ஹிந்து மதத்தைக் காக்கவோ அல்லது அழிக்கவோ சக்தி இருக்கிறது.

சாதி ஹிந்துக்கள் தங்கள் இதயத்தை மாற்றிக்கொள்ளுவதைக் காட்டிலும் ஹரிஜனங்கள் தங்கள் பட்டத்தை அதாவது மதத்தை மாற்றிக்கொள்ளுவது அதிக எளிது என்பதில் ஐயமில்லை. ஆனால், ஹரிஜனங்கள் லௌகிகமான எந்த ஆசையையும் துச்சமாக மதிக்க வேண்டும். எந்த மதத்தில், தங்கள் சகோதரர்களால் மிகவும் மூலாதாரமான உரிமைகள் மறுக்கப்பட்டு வருகின்றனவோ, அந்த மதத்தில் ஹரிஜனங்கள் மனமார உறுதியுடன் நிற்க வேண்டும். இவ்வித உயர்ந்த நிலைக்கு எழுவது ஹரிஜனங்களுக்கு அதிக எளிதாக இருக்கலாம்.

எனினும், இன்று ஹரிஜனங்களுக்கு எவ்வளவோ ஆசைகள் காட்டப்பட்டு வருகின்றன. அவற்றிற்குத் தங்கள் மனத்தைப்

பறிகொடுக்காமல் எவரும் அவைகளை எதிர்த்து நிற்பது கஷ்ட மான காரியம் என்பதில் சந்தேகமில்லை. எனவே, ஹரிஜனங்கள் தங்கள் மதத்தில் உண்மையானவர்களாயின், தங்களுடைய மூதாதையரின் மதத்தை உறுதியாகப் பற்றிக்கொள்ள வேண்டும்; மனப்பூர்வமாக மகத்தான முயற்சியில் ஈடுபட்டு அந்த மதத் தைப் பரிசுத்தம் செய்ய உறுதிகொள்ள வேண்டும். எவ்வளவு ஆசைகள் காட்டப்பட்டும் அவர்கள் அவ்விதம் உறுதியுடனிருப் பார்களாயின், அது ஓர் அதிசயமாகவே கருதப்படும். இவ்வித மெல்லாம் அவர்கள் முன்பு செய்திருக்க முடியாது. ஆனால், இப் போது செய்ய முடியும். ஏனெனில், ஹரிஜனங்களின் லட்சியத் தையே தங்கள் லட்சியமாகக் கொண்டுள்ள சாதி ஹிந்துக்களின் தொகை அதிகமாகி வருவதையும், தாங்கள் முன்பு செய்த தங்கள் சொந்தத் தவறுகளுக்காகவும், இப்போது தங்கள் சகோ தரர்களான சாதி ஹிந்துக்கள் தொடர்ந்து செய்து வரும் தவறு களுக்காகவும் அவர்கள் ஈடுசெய்து வருவதையும் ஹரிஜனங்கள் அறிவர். இதையெல்லாம் கருத்தில் கொண்டு பார்த்தால், கும்ப கோணம் சம்பவம் ஹிந்து மதத்திற்கு எவ்வளவு வெட்கக் கேடோ, அது போல் கத்தோலிக்க மதத்திற்கும் வெட்கக் கேடாகும்.

--'ஹரிஜன்' - 26—12—1936

# 13

# பசு மாடும் ஹரிஜனும்

கிறிஸ்தவ மத போதகரான டாக்டர் ஜான் மாட்டுடன் நான் பேசிக்கொண்டிருந்தபோது, ஒரு கட்டத்தில் கீழ் வருமாறு கூறினேன்: "கிறிஸ்தவ மத வேதத்தை, நீங்கள் ஒரு பசு மாட்டுக்கு உபதேசிப்பீர்களா? தீண்டாதார்களில் சிலர் அறிவில் பசு மாடுகளையும்விட மோசமான நிலையில் இருந்து வருகிறார்கள். இஸ்லாம், ஹிந்து மதம், கிறிஸ்தவ மதம் இவற்றிற்குள்ள யோக்கியதாம்சங்களின் தராதரத்தை ஒரு பசுமாடு எவ்விதம் அறிந்துகொள்ள முடியாதோ, அதுபோல் தீண்டாதாரும் அறிந்து கொள்ள முடியாது."

நான் கூறிய இந்த உவமையைக் குறித்துச் சில பாதிரிமார் நண்பர்கள் ஆட்சேபணை செய்திருக்கிறார்கள். அந்த உவமையின் நியாயத்தைக் குறித்து நான் வருந்தவில்லை. அது ஹரிஜனங்களின் மனத்தைப் புண்படுத்துவதாக இருக்க முடியாது. ஏனெனில், பசுமாடு ஒரு தெய்விக மிருகம். நான் என் தாயாரைப் பூஜிப்பது போல் பசு மாட்டைப் பூஜிக்கிறேன். இருவரும் பால் கொடுப்ப வர்கள். அறிவு சம்பந்தப்பட்டவரையில், நான் முன்பு குறிப் பிட்டதையே உறுதிப்படுத்துகிறேன். ஆயிரக்கணக்கான ஹரி

ஜனங்களுக்குப் பல்வேறு மதங்களின் பெருமைகளையோ, குறைகளையோ பற்றி, ஒரு பசு மாட்டைக் காட்டிலும் அதிகமாக எதுவும் தெரியாது. இந்த நிலைமை, உயர் சாதி ஹிந்துக்களுக்கு மானக்கேடாகும். நீண்ட காலப் பயிற்சிக்குப் பிறகு ஹரிஜனங்கள் தங்களுடைய அறிவை அபிவிருத்தி செய்ய முடியும்; ஆனால், ஒரு பசுமாடு அவ்விதம் அபிவிருத்தி செய்துகொள்ள முடியாது என்று கூற முற்படுவது, தற்போதைய விவாதத்திற்குப் புறம்பான விஷயமாகும்.

—'ஹரிஜன்' – 9—1—1937

# 14

# பழுது பார்ப்பதா, இடிப்பதா?

பசு, இந்தியாவிலுள்ள கோடிக்கனக்கான மக்களின் பக்திக்கும் பூஜைக்கும் உரிய ஒரு பொருளாகும். அவ்வாறு பூஜிக்கும் மக்களில் நானும் ஒருவன். சேவா கிராமத்தில் உள்ள பசு மாட்டுக் கொட்டில் எனக்கு எதிரே இருக்கிறது. அதில் உள்ள பசுக்களை நான் தினந்தோறும் பார்க்காமல் இருக்க முடியாது. அறிவு சம்பந்தப்பட்டவரையில் நான் ஹரிஜனங்களைப் பசுவுக்கு உவமையாகக் கூறியது, எனது நண்பர்களுக்கு அதிர்ச்சியைக் கொடுத்திருக்கிறது. அந்த அதிர்ச்சி அமெரிக்கா வரையில் போய் எட்டியிருக்கிறது. இவ்விஷயமாக அங்கிருந்து எனக்குக் கடிதங்கள் வரத் தொடங்கியிருக்கின்றன. நான் கூறிய உவமை, என்னையும், ஹரிஜனங்களுக்குத் தொண்டு செய்வதில் எனக்குள்ள உரிமையையும் இழிவுபடுத்தும் விதத்தில் உபயோகிக்கப்பட்டு வருவதாக அக்கடிதங்கள் கூறுகின்றன. "ஹரிஜனங்களை நீங்கள் பசு மாடுகளுக்கு உவமையாகக் கூறினால், அவர்கள் மீது உங்களுக்கு எப்படி மதிப்பு இருக்க முடியும்?" என்று ஆட்சேபவாதிகள் கேட்பது போல் தோன்றுகிறது.

ஆயினும், அந்த உவமையைக் குறித்து நான் சிறிதும் வருந்தவில்லை. எனக்கு அமெரிக்காவிலுள்ள பெருமை, இவ்விதமாக முதல் அதிர்ச்சியிலேயே தகர்ந்து விடக்கூடுமாயின், அத்தகைய பெருமை இருப்பதும் இராததும் ஒன்றுதான். ஆனால், எனது உவமை தீங்கற்றது. ஏனெனில், இந்தியாவில் பசு மாட்டிற்கு விசேஷ ஸ்தானம் அளிக்கப்பட்டிருப்பதே அதற்குக் காரணமாகும். அந்த உவமை பொருத்தமானதும் கூட. ஏனெனில். அறிவு சம்பந்தப்பட்ட வரையில் கிறிஸ்தவ மத தத்துவத்தைப் பற்றி பசு மாட்டைக் காட்டிலும் அதிகமாக சாதாரண ஹரிஜன் எதுவும் அறிந்துகொள்ள முடியாது. மிகவும் மந்தபுத்தியுள்ள ஹரிஜன் நாளடைவில் அதைத் தெரிந்து

கொள்ளும்படி பயிற்சி யளிக்கப்படலாம்; ஆனால், பசுவுக்கு ஒரு காலத்திலும் அத்தகைய பயிற்சி யளிக்க முடியாது என்ற வாதம் சம்பந்தமற்றதாகும். ஏனெனில், அது சம்பந்தமான வாதம் தற்போதைய நிலை பற்றியதேயன்றி, எதிர்காலத்தில் எது சாத்தியம் என்பது பற்றியதல்ல.

இந்த உவமையை நான் இன்னும் விரிவாகக் கூறினால், அதை நன்கு புரிந்து கொள்ள முடியும். அதாவது ஐந்து வயதுள்ள என் பேரனோ அல்லது அறுபத்தெட்டு வயதுள்ள என் மனைவியோ, கிறிஸ்தவ மத தத்துவத்தை எனது பசு மாடுகளைவிட அதிகமாக அறிந்துகொள்ள முடியாது என்பதே. எனினும், எனது மனைவியும் பேரனும் இருவரும் எனது அன்பான பராமரிப்பிற்கும் கவனத்திற்கும் உரியவர்கள்தான். என்னையே எடுத்துக்கொள்ளுவோம். இன்று சீன எழுத்துக்களை எனது பூஜைக்குரிய பசுவைக் காட்டிலும் அதிகமாக நான் வாசிக்க முடியாது. எனக்கும் எனது பசுவுக்கும், கஷ்டமான அந்த எழுத்துக்களைக் கற்றுக் கொடுத்தால், பாவம், பூசனைக்குரிய பசுத்தாய் போட்டியில் கலந்துகொள்ளச் சம்மதிக்குமாயின், அதை நான் முறியடித்துவிடுவேன் என்ற உண்மை, முதலில் நான் குறிப்பிட்ட உண்மையை எவ்விதத்திலும் மாற்றிவிட முடியாது.

அந்த உவமை ஒரு புறமிருக்கட்டும். ஹரிஜனங்கள் தங்களுடைய கள்ளங்கபடமற்ற மனத்தில் தங்கள் மூதாதையரின் மதத்திலே ஏதோ நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். அந்த நம்பிக்கையைச் சீர்குலைத்து அவர்களை வேறு மதத்திற்கு, அது அவர்களுடைய பண்டைய மதத்திற்குச் சமமான சிறப்புடையதாக இருந்தாலும்கூட, மாற்ற முயற்சிப்பது மத தருமத்திற்கு நேர்மாறாகும் என நான் கூறுகிறேன். என்னுடைய இந்தக் கருத்தை யாரும் சிறிதும் ஆட்சேபிக்க முடியாது என்பதை, என்னைக் கண்டிக்கும் ஆட்சேபவாதிகளும், எதையும் எளிதில் நம்பக்கூடிய எனது நண்பர்களும் அறிந்துகொள்ளுவார்களாக.

எல்லா மண்களுக்கும் ஒரேவித விசேஷச் சிறப்பு உண்டெனினும், ஒரேவிதமான விதைகள் சமமாக எல்லா மண்களிலும் சிறந்த பலன் அளிப்பதில்லை என்பதை நாம் அறிவோம். இப்போதெல்லாம் கிறிஸ்தவ நண்பர்கள், ஹிந்து மதம் உண்மையானதல்ல என்று சொல்லுவதோ அல்லது ஒப்புக்கொள்ளுவதோ இல்லையென்றாலும், ஹிந்து மதம் தவறானதென்றும், கிறிஸ்தவ மதம் ஒன்றுதான் உண்மையான மதம் என்றும், அவர்களுடைய இதயங்களில் ஓர் எண்ணம் இருந்து வருகிறதென்று அஞ்சுகிறேன். ஹிந்துக்களின் வாழ்க்கையில் ஊடுருவியிருக்கும் தீண்டாமை போன்ற மற்றும் பல தவறுகளைத் தாக்குவது நாம் அறிந்துகொள்ளக்கூடிய விஷயமே. நாம் ஒப்புக்கொண்டுள்ள ஊழல்களைக் களைந்து நமது மதத்தைப்

பரிசுத்தம் செய்ய அவர்கள் நமக்கு உதவி புரிவார்களாயின், அவர்கள் உருவான ஆக்க வேலை செய்தவர்களாவர். அந்த உதவியை நாம் நன்றியுடன் அங்கீகரிப்போம்; ஆனால், நாம் அறிந்த வரையில் அவர்களுடைய தற்போதைய முயற்சி, ஹிந்து மதத்தை அஸ்திவாரத்தோடு பிடுங்கி, அதன் ஸ்தானத்தில் வேறொரு மதத்தை ஸ்தாபிப்பதாக இருக்கிறது.

ஒரு வீடு பெரிதும் பழுது பார்க்கப்பட வேண்டிய நிலையில் இருப்பினும், அதில் வசிப்பவருக்கு அது முற்றிலும் நாகரிக மாகவும், வசிப்பதற்கு உரியதாக்வும் இருக்கிறது. அப்படியிருந் தும், மேலே குறிப்பிட்ட முயற்சி அந்த வீட்டை இடிக்க முற்படும் முயற்சியைப் போல் இருக்கிறது. அந்த வீட்டை எப்படிப் பழுது பார்ப்பது என்று காட்டுவோரையும், தாங்களே பழுது பார்த்துத் தருவதாகக் கூறுவோரையும்கூட வீட்டில் வசிப்பவர் வரவேற்பதில் ஆச்சரியமில்லை.

வீடு பழுது பார்க்க முடியாமலும், வசிப்பதற்குத் தகுதி யற்றும் போய் விட்டதென்று நிச்சயமாகத் தெரிந்தாலொழிய, எவ்வளவோ காலமாகத் தம்முடைய மூதாதையர்களுக்கும் தமக்கும் உதவியாக இருந்து வந்த வீட்டை இடிப்பதற்கான முயற்சியை அவர் நிச்சயமாகவும், கடுமையாகவும் எதிர்த்தே தீருவார். ஹிந்துக்களின் வீடு பற்றி கிறிஸ்தவ உலகம் அத் தகைய அபிப்பிராயம் கொண்டிருக்குமாயின், 'மதங்களின் பார்லி மெண்ட்', 'சர்வ தேச சகோதரத்துவம்' முதலியவையெல்லாம் கவைக்குதவாத வெறும் தொடர்மொழிகளாகிவிடும். முன் கூட்டியே சம அந்தஸ்தும், பொது மேடையும் இருப்பதையே அம்மொழிகள் குறிப்பிடுகின்றன. ஆனால், உயர்ந்தவர்கள் தாழ்ந்தவர்கள், அறிவுள்ளவர்கள் அறிவில்லாதவர்கள், மதம் மாறியவர்கள் மாருதவர்கள்,உயர் பிறப்பினர் தாழ்ந்த பிறப்பினர், சாதி மனிதர்கள் சாதிப்ரஷ்டர்கள், இவர்களிடையே ஒரு பொது மேடை இருக்க முடியாது. எனது இந்த உவமையில் தவறு இருக்கலாம்; அது மனத்தைப் புண்படுத்துவது போல் தோன்றலாம்; எனது வாதம் குற்றம் குறையுள்ளதாக இருக்க லாம். ஆனால், எனது கொள்கை அசைக்க முடியாதது என்பது நிச்சயம்.

—'ஹரிஜன்' - 13—3—1937

# 15

## வசதிகள் பெற மத மாற்றம்!

''ஆனால், ஹரிஜனங்கள் சம்பந்தப்பட்டவரையில், அவர்கள் மந்த புத்தி யுள்ளவர்கள் என்பதையோ, விவேகமற்றவர்கள் என்பதையோ அல்லது மத உணர்ச்சி இல்லாதவர்கள் என்பதையோ நான் நிச்சயமாக அங்கீகரிக்

கவே முடியாது. அவர்கள் விஷயத்தில் 'அதிகமாக நெருக்கும்' முறைகளை உபயோகிக்க முயற்சித்து வருவதாக நீங்கள் எங்கள் மீது குற்றம் சாட்டுகிறீர்கள். நாங்கள் அவ்வித முறைகளை உபயோகித்தால், அவர்களிடையே யாதொரு பலனும் ஏற்படாது என்பது நிச்சயம். என்னைப்போலவும், என் சகோதரர்கள், சகோதரிகள், நண்பர்கள் இவர்களைப் போலவும் அவர்கள் எனக்கு நல்ல ஜனங்களாகத் தோன்றுகிறார்கள். அவர்கள் ஒடுக்கப்பட்டவர்களாகவும், படிக்கத் தெரியாதவர்களாகவும், பார்வைக்கு நாகரிகமற்றவர்களாகவும் கூட இருக்கிறார்கள் என்பது உண்மையே. ஆனால், அவர்கள் ஆலோசிக்கும் தன்மையும், ஆன்மிக மனப்பான்மையும், பெருந்தன்மையும், அன்பு உள்ளமும் கொண்டவர்கள், ஒழுக்கத்தில் அவர்கள் சராசரி மனித வர்க்கத்திற்கு மேற்பட்டவர்களே யன்றிக் குறைந்தவர்களல்ல. சவர்ணர்களைக் காட்டிலும் அவர்களையே நான் அதிகமாக விரும்புகிறேன். இவ்விதம் நான் கூறுவது ஒருவேளை எனது மட்டமான பண்பைக் காட்டுவதாக இருக்கலாம்.

"மிகவும் ஆழ்ந்த ஆன்மிகச் சிந்தனையை, நான் இதுவரையில் கண்டிராத மிகவும் வியப்பிற்குரிய ஆன்மிகச் சாதனையைத் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த ஹிந்துக்களிடம், அசாதாரணமான தனி நபர்களிடமோ, படித்தவர்களிடமோ அல்ல, படிப்பில்லாத கிராமவாசிகளிடம் நான் பார்த்திருக்கிறேன் என்பதை உறுதியாகக் கூறமுடியும்.

"கிறிஸ்தவ மதக் கொள்கையை நன்கு அறிந்தவரான ஒருவரிடம் நான் ஒரு சமயம், அதைப்பற்றி அவரது அபிப்பிராயம் என்ன, அதை அவர் ஆதரிக்கிறாரா அல்லது கண்டிக்கிறாரா என்று கேட்டேன். ஒரு எருமை மாட்டுக்குப் பிண்ணாக்கு வைக்க வேண்டுமா அல்லது சோளம் வைக்க வேண்டுமா, ஏன் வைக்கவேண்டும் என்று நான் கேட்டது போல், தயக்கமின்றியும் ஒளிவு மறைவின்றியும் அவர் பதில் அளித்தார்.

"தாழ்த்தப்பட்ட வகுப்பினர் அரசியல் பற்றியும், பொருளாதாரம் பற்றியும் பேசுகிறார்கள் என்பது உண்மையே. எனினும், ஆன்மிக விஷயங்களில் உள்ள அக்கறையே அவர்களை நடுநிசி வரையில் இருக்கவும், அதிகாலையிலும் கொதிக்கும் வெய்யிலில் மத்தியானமும் மீண்டும் வரும்படியும் செய்கிறது. 'கடவுள் எங்களை நேசிக்கிறார் என்பதைக் கேட்க நாங்கள் எவ்வளவு ஆர்வமுடையவர்களாக இருக்கிறோம் என்பதை நீங்கள் அறிந்தால், ஓய்வெடுத்துக்கொள்ள நீங்கள் விரும்பவே மாட்டீர்கள்' என்ற வேண்டுகோளுடன் அவர்கள் வருகிறார்கள்.

"அந்தத் தேவையை நீங்கள் பூர்த்தி செய்யாவிடில், தாழ்த்தப்பட்ட வகுப்பினரை நீங்கள் உங்கள் பக்கத்தில் வைத்திருக்க முடியாது. அந்தக் தேவையைப் பூர்த்தி செய்வீர்களாயின், அவர்களை உங்கள் பக்கத்தில் வைத்துக் கொண்டிருக்க முடியும். ஆம், சூத்திரர்களும், சில வியாபாரிகளும்கூட கேட்பது அதுதான்."

இது, ஓர் அமெரிக்க சகோதரியிடமிருந்து வந்த நீண்ட கடிதத்தில் ஒரு பகுதியாகும். அவர் இந்தியாவில் ஒரு பாதிரியாக பல ஆண்டுகள் வசித்தவர். அந்தப் பகுதியில் கடைசியாகக் கூறப்பட்டிருப்பதை நான் மனப்பூர்வமாக அங்கீகரிக்கிறேன். உண்மைதான்; ஹரிஜனங்களுடைய ஆன்மிகத்

தேவைகளை நான் பூர்த்தி செய்ய முடியாவிடில், அவர்களை என் பக்கத்தில் வைத்துக் கொண்டிருக்க முடியாது. நானே அல்லது வேறு எந்தத் தனி நபரோ, தமக்கு அண்டையில் உள்ளவரின் ஆன்மிகத் தேவைகளைப் பூர்த்தி செய்ய முடியும் என்று நினைப்பதற்கு நான் அவ்வளவு விவேகமற்றவன் அல்ல. உடலின் தேவைகளை உள்ளத்தின் மூலம் பூர்த்தி செய்ய முடியாதது போலவே, ஆன்மிகத் தேவைகளை அறிவின் மூலமோ, அல்லது வயிற்றின் மூலமோ பூர்த்தி செய்ய முடியாது. 'உடலுக்குத் தேவையானதை அதற்குக் கொடு; உள்ளத்திற்குத் தேவையானதை அதற்குக் கொடு' என்பது ஏசுநாதரின் புகழ் பெற்ற திருவாக்கு ஆகும்.

எனக்கு அண்டையில் உள்ளவரின் ஆன்மிகத் தேவைகளை நான் பூர்த்தி செய்வதற்குற்ற ஒரே வழி என்னவெனில், அவருடன் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் ஆன்மிக வாழ்க்கை முறையை அனுஷ்டித்து வருவதேயாகும். எனது ஆன்மிக வாழ்க்கை, தனக்குத் தானே எனக்குப் பக்கத்தில் இருப்பவர்களிடம் அன்பு நடவடிக்கைகளாக மாறும்.

எனவே, சாதி ஹிந்துக்கள் எனப்படுவோர், ஹரிஜனங்கள் மீது, அதாவது சாதிப்ரஷ்டம் செய்யப்பட்ட ஹிந்துக்கள் மீது அன்பு செலுத்தாவிடில், ஹிந்து மதம் ஹரிஜனங்களை (நியாயமாகவே) இழந்துவிடும் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. சாதி ஹிந்துக்கள் அந்த ஒன்றை மாத்திரம் செய்தால், அதாவது ஹரிஜனங்களிடம் அன்பு காட்டினால் மாத்திரம் போதும், வேறு எதுவும்செய்ய வேண்டியதில்லை. அந்த ஒரு செய்கையே ஹிந்து மதத்தையும், ஹரிஜனங்களையும், சாதி ஹிந்துக்களையும் காப்பாற்றிவிடும். அவர்கள் அவ்விதம் செய்யாவிடில் அவர்களும், ஹிந்து மதமும் நிச்சயமாக அழிய வேண்டியதுதான். 'உயர் சாதி ஹிந்துக்கள்' ஹரிஜனங்களுக்காக லட்சக்கணக்கில் செலவு செய்யலாம். ஆனால், மிகவும் அவசியமான ஒரு காரியத்தை அவர்கள் செய்யாவிடில், அதாவது அவர்கள் ஆன்மிகத் துறையில் ஹரிஜனங்களைத் தங்களுக்குச் சமமானவர்களாகக் கருதாவிடில், ஹரிஜனங்களுக்கு அளிக்கும் ஸ்தூல உதவியெல்லாம் கவைக்குதவாத குப்பையைப் போல் வீண் செலவாகிவிடும்.

தம்மைப் போல் ஹரிஜனங்களும் ஆன்மிகத் தேவையை உடையவர்களாக இருக்கிறார்கள் என்று ஒத்துக்கொள்ளுவது, உதாரணமாக, என்னைப் போல் அவர்களும் அறிவை அடிப்படையாகக்கொண்ட கிறிஸ்தவ மத தத்துவ விளக்கத்தை அறிந்து கொள்ளுவார்கள் என்று கூறுவதாகாது. அவர்களை நான் என் சொந்த மனைவிக்குச் சமமாக வைத்துப் பேசுகிறேன். அவளுடைய ஆன்மிகத் தேவைகள் எனது தேவைகளுக்குக் குறைந்தவையல்ல. கிறிஸ்தவ மத தத்துவ விளக்கத்தை எந்த ஒரு

சாதாரண ஹரிஜனும் எவ்வளவு புரிந்துகொள்ளுவாரோ, அவ்வளவுதான் அவளும் புரிந்துகொள்ளுவாள். அதற்குக் காரணம் தெளிவானது. அநேகமாக, குழந்தைப் பருவத்திலேயே நாங்கள் ஒன்றுசேர்ந்தோம். விவாகமான பிறகும் எனது கல்வி தொடர்ந்து சென்றது. ஆனல், அவள் விவாகத்திற்கு முன் ஒரு பள்ளிக் கூடத்திலும் படித்ததில்லே. அவளது கல்விப் பயிற்சியில் நான் அக்கறை காட்டவுமில்லே.

மத மாற்ற நோக்கத்துடன் வேருெரு மதத்தைப் பற்றிய விளக்கம், அறிவையோ, வயிற்றையோ அல்லது இரண்டையுமோ தொடும் தன்மையுடையதாகத்தான் இருக்க முடியும். மேலே குறிப்பிட்டுள்ள கடிதத்தின் சாரம் எப்படியிருப்பினும், பெரும்பாலான ஹரிஜனங்களும், ஏன் இந்திய சமூகமே, கிறிஸ்தவ மத விளக்கத்தைப் புரிந்துகொள்ளுவது முடியாத காரியம் என்றே நான் உறுதியாகக் கூறுகிறேன். பொதுவாகப் பேசுமிடத்து, எங்கெல்லாம் மத மாற்றம் நிகழ்ந்துள்ளதோ அங்கெல்லாம், அது ஓர் ஆன்மிக நடவடிக்கையாக நிகழவில்லே. லௌகிகமான வசதிகளேப் பெறவே அத்தகைய மத மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. இந்த உண்மை, நான் அடிக்கடி இந்தியா முழுவதும் யாத்திரை செய்தபோது ஏராளமான ஆதாரங்களுடன் உறுதியாயிற்று.

—' ஹரிஜன் ' – 12—6—1937

# 16

# கடமையும் உரிமையும்

சமுதாயத்தில் மிகவும் முக்கியமான ஸ்தானங்கள் வகித்து வரும் பதினேன்கு இந்தியக் கிறிஸ்தவர்கள் ஒரு கூட்டறிக்கை வெளியிட்டிருக்கிருர்கள். அவர்கள் உயர்தரக்கல்வி பெற்றவர்கள். ஹரிஜனங்களிடையே நடந்து வரும் மதமாற்ற அலுவல்கள் பற்றி அறிக்கையில் அவர்கள் தங்களுடைய கருத்துக்களேக் கூறியுள்ளனர்.

அறியாமையில் ஆழ்ந்து கிடக்கும் எழுதப் படிக்கத் தெரியாதவர்களேக் கிறிஸ்தவ மதத்திற்கு மாற்றும் முறையைத் திட்டவட்டமாகக் கண்டிப்பது அந்த அறிக்கையின் நோக்கமல்ல. ஆனல், கிறிஸ்தவ வேதத்தை லட்சக்கணக்கான ஹரிஜனங்களுக்கு உபதேசிக்கும் உரிமையை வற்புறுத்துவதே அதன் நோக்கமாகும். அந்த அறிக்கையின் சாரம் 7, 8-வது பாராக்களில் அடங்கியிருக்கிறது. 7-வது பாராவில், குறிப்பிடப்பட்டிருப்பது இதுதான் :

"ஆடவர்களும் பெண்களும், தனியாகவும் குடும்பமாகவும், கிராம கோஷ்டிகளாகவும் கிறிஸ்தவ மதத்தில் சேரமுயற்சிப்பது தொடர்ந்து நடைபெறும்.

அது கடவுள் தன்மையில் உண்மையான இயக்கமாகும். இப்புவியில் உள்ள எந்தச் சக்தியும் அதன் வேகத்தைத் தடுக்க முடியாது. ஏசுநாதரிடம் உள்ள சத்தியத்தை அவ்வாறு நாடுவோரை வரவேற்க வேண்டியதும், அவர்களுக்குப் போதனையும் ஆன்ம போஷணையும் அளிக்க வேண்டியதும், இந்தியாவிலுள்ள கிறிஸ்தவ மதத் தலைவர்களின் கடமையாகும். எந்த மதப் பிரிவிலிருந்து வந்தாலும், அவர்களை வரவேற்கும் உரிமையைக் கிறிஸ்தவ மதத் தலைவர்கள் உறுதியாகப் பற்றிக்கொண்டிருக்க வேண்டும். அடுத்தபடியாக, மதத்தில் அவநம்பிக்கையும் ஸ்தூல வாழ்க்கையில் பற்றுதலும் நிலவும் இக்காலத்தில். அத்தலைவர்கள் எங்கும் சென்று எல்லா மக்களிடத்திலும் ஆன்மிக சம்பந்த மான பசியை எழுப்ப வேண்டியதும் கடமையாகும்.''

ஒருவர், தமது விருப்பம் நிறைவேறிவிட்டதாகக் கற்பனை செய்துகொள்ளுவதற்கு, மேலே குறிப்பிட்ட சில வாக்கியங்களே ஆச்சரியமான உதாரணமாகும். அது, தம்மையறியாமலேயே ஏற் படும் ஒரு நிலையெனினும், அது கண்டனத்திற்கு உரியதல்ல என்று கூற முடியாது. ஆடவர்களும் பெண்களும் கிறிஸ்தவ மதத்தின் தொடர்பை நாடவில்லை. ஏழை ஹரிஜனங்களும் அப் படித்தான். அவர்களுக்கு உண்மையான ஆன்மிகப் பசி இருக்க வேண்டும் என்பதே எனது விருப்பம். ஆனால், அவ்விதம் இல்லை. கோவில்கள் எவ்வளவு பண்பாடு அற்றவையாக இருப்பினும், அவற்றிற்குச் செல்லுவதால் ஹரிஜனங்கள் திருப்தியடை கிறார்கள்.

வேறொரு மதத்தைச் சேர்ந்த பாதிரி அவர்களிடம் செல்லும்போது, ஏதோ சாமான்களை விற்பவர் போலவே செல்லு கிறார். யாரிடம் செல்லுகிறாரோ, அவர்களிடமிருந்து அவரைத் தனித்துக் காட்டும் விசேஷ ஆன்மிகச் சிறப்பு எதுவும் அவரிடம் இல்லை. ஆனால், அவரிடம் ஸ்தூல சாதனங்கள் இருக்கின்றன. தம்முடைய மதத்தில் சேருவோருக்கு அவற்றைத் தருவதாக அவர் வாக்குறுதி அளிக்கிறார். பிறகு கவனியுங்கள்; இந்தியாவில் உள்ள கிறிஸ்தவ மதத்தலைவர்களின் கடமை உரிமையாக மாறி விடுகிறது!

உரிமையாக மாறும் கடமை கடமையல்ல. கடமையைச் செய்வ தற்கு ஒரு முக்கிய குணம் தேவை. அதுதான் துன்பத்திற்குள்ளா வதும், தன்னைத் தானே சோதனை செய்து கொள்ளுவதுமாகும். உரிமையை உபயோகிப்பதற்கும் ஒரு குணம் தேவை. தம்மை எதிர்ப்பவரின் மீது தமது விருப்பத்தைச் சுமத்துவதே அது. ஒரு வர் தம்முடைய நிபந்தனைகளின் மூலமோ அல்லது சட்டத்தின் உதவிகொண்டோ தமது உரிமையை ஸ்தாபிக்க முற்படலாம். நான் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டியது எனது கடமையாகும். எனினும், கடன் வாங்கிய காசுகளை, கடன் கொடுத்தவரின் இஷ்டத்திற்கு விரோதமாக அவரது சட்டைப் பையில் திணிக்க எனக்கு உரிமையில்லை. ஆன்மிக சம்பந்தமான புனிதச் செய்தியைக்கொண்டு செல்லும் தூதர், பிரார்த்தனை யினாலும், உண்ணாவிரதத்தினாலும் அக்கடமையைச் செய்வதற்குத்

தகுதியுடையவராக இருக்க வேண்டும். அதை உரிமையாகக் கருதும் பட்சத்தில், விரும்பாதவர்களிடம் அதைத் திணிப்பதாகவே முடியும்.

இவ்வாருக அந்த அறிக்கை, சந்தேகத்தைத் தணித்து, கலக்கம் அடைந்துள்ள ஹிந்துக்களைச் சாந்தப்படுத்தும் நோக்கத்துடன் வெளியிடப்பட்டுள்ளது என்பதில் சந்தேகமில்லை. ஆனால், அந்த நோக்கம் நிறைவேறவில்லை என்பதே எனது அபிப்பிராயமாகும். அதற்கு மாருக, அதைக் குறித்து மட்டமான எண்ணம் ஏற்படும்படி செய்திருக்கிறது. எனவே, நான் கூறியுள்ள விவரங்களை மனத்திற்கொண்டு, அறிக்கையின் கர்த்தாக்கள் தங்கள் நிலைமையைப் புனராலோசனை செய்ய வேண்டியது அவசியமென்று நான் கூறத் துணிகிறேன். உரிமைகளுக்கும் கடமைகளுக்கும் உள்ள மூலாதார வேற்றுமைகளை அவர்கள் அறிந்து கொள்ளுவார்களாக. ஆன்மிகத் துறையில் உரிமை என்று ஒன்றுமே இல்லை.

—'ஹரிஜன்' – 3—4—1937

# 17

# ரோஜா மலரும் வேத தத்துவமும்

மேற்கண்ட அறிக்கை சம்பந்தமாக ஓர் இந்தியக் கிறிஸ்தவப் பாதிரியார் காந்திஜியைக் கேட்டதாவது: 'பேசுவதற்கு எனக்குத் தரும நியாயமான உரிமை இல்லையா?'

காந்திஜி: அது தரும நியாயமான உரிமை அல்ல. சட்ட பூர்வமான உரிமையாகும். சட்டத்தை அடிப்படையாகக்கொண்டிராத உரிமையே இல்லை. சட்ட சம்பந்தமின்றேல், தரும நியாயமான உரிமை என்பது முரண்பாடான வார்த்தைகளாகும். எனவே, ஒன்று நீங்கள் உங்கள் உரிமையை வற்புறுத்த வேண்டும்; அல்லது அதற்காகப் போராட வேண்டும். ஆனால், கடமையை எவரும் வற்புறுத்துவதில்லை. அவர் அடக்கத்துடன் தமது கடமையைச் செய்கிருர்.

நான் ஓர் உதாரணத்தை எடுத்துக்கொள்ளுகிறேன். எனக்கு நீங்கள் கிறிஸ்தவ வேதத்தை உபதேசிக்க விரும்புகிறீர்கள். உங்களுக்குள்ள உரிமையை நான் மறுத்து, உங்களை இங்கிருந்து போய்விடும்படி கூறுகிறேன். எனக்காகப் பிரார்த்தனை செய்வதை நீங்கள் ஒரு கடமையாகக் கருதினல், நீங்கள் அமைதியாக இங்கிருந்து சென்று எனக்காகப் பிரார்த்தனை செய்வீர்கள். ஆனல், எனக்கு உபதேசம் செய்ய உரிமை உண்டு என நீங்கள் வற்புறுத்தினல், நீங்கள் போலீசாரை அழைத்து வந்து, நான் உங்களுக்கு இடையூறு செய்வதைத் தடுக்கும்படி கேட்டுக்

கொள்ளுவீர்கள். அதன் விளைவாகச் சச்சரவு ஏற்படும். ஆனல் உங்களுடைய கடமையை யாரும் ஆட்சேபிக்கத் துணியமாட்டார்கள். உங்கள் கடமையை நீங்கள் இங்கே செய்யலாம், அல்லது வேறிடத்திலும் செய்யலாம். எனது மனத்தை மாற்றும்படி நீங்கள் கடவுளிடம் செய்து கொள்ளும் பிரார்த்தனைகள் உண்மையாயின், கடவுள் என் மனத்தை மாற்றுவார். என் மனத்தை மாற்றும்படி நீங்கள் பிரார்த்தனை செய்வதையே கிறிஸ்தவ மதம் எதிர்பார்க்கிறது. கிறிஸ்தவ மதத்தைப் பற்றி எனது விளக்கம் அது தான். கடமை ஒரு கடனுகும். உரிமை கடன் கொடுத்தவரையே சாரும். பக்தியுள்ள ஒரு கிறிஸ்தவர் கடன் கொடுத்தவருக்குள்ள உரிமையைக் கோரினல், அது ஒரு வேடிக்கையாகவே இருக்கும்.

கேள்வி: ஹரிஜனங்கள் படிக்கத் தெரியாதவர்கள், அறியாமையில் ஆழ்ந்து கிடப்பவர்கள் என்ற காரணத்திற்காகத்தானே நீங்கள் கிறிஸ்தவ மதப் பிரசாரத்தை ஆட்சேபிக்கிறீர்கள்? ஹரிஜனங்களல்லாதாரிடையே பிரசாரம் செய்வதற்கு நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?

பதில்: அதே ஆட்சேபணையையே கூறுகிறேன். கிறிஸ்தவ மதத்தின் சாதக பாதகங்களைப் பற்றி இந்தியாவில் உள்ள பெரும்பாலான மக்களும் ஒரு பசு மாட்டைக் காட்டிலும் அதிகமாக எதுவும் அறியமாட்டார்கள். சூஷ்ம கணிதத்தில் ஒரு பசு மாட்டைவிட அதிகமாக எனக்கு எதுவும் தெரியாது என்று நான் கூறினல், அது என் அறிவை அவமதித்துக்கொள்ளுவதாகாது. சமய சாஸ்திரம் சம்பந்தப்பட்ட வரையில், ஹரிஜனங்களைக் காட்டிலும் ஹரிஜனங்களல்லாதாருக்கு அதிகமாக எதுவும் தெரியாது. அத்தகைய விஷயங்களை அறிந்து கொள்ளுவதில் உள்ள திறமை சம்பந்தப்பட்ட வரையில், ஹரிஜனங்களுக்கும் ஹரிஜனங்களல்லாதாருக்கும் வேற்றுமையில்லை என்பதை, சேவா கிராமத்திற்கு நான் உங்களை அழைத்துச் சென்று நிரூபித்துக் காட்ட முடியும். கிறிஸ்தவ மதக் கொள்கைகளை என் மனைவிக்கு உபதேசிக்க முயற்சி செய்யுங்கள். ஒரு பசுவைவிட அதிகமாக அவள் எதுவும் அறிந்துகொள்ள முடியாது. நான் பெற்றுள்ள பயிற்சி காரணமாக என்னல் உங்கள் உபதேசங்களை அறிந்துகொள்ள முடியும்.

கே: ஆனல், நாங்கள் சமய சாஸ்திரம் எதுவும் உபதேசிக்கவில்லை. ஏசுநாதரின் வாழ்க்கையைப் பற்றியே நாங்கள் பேசுகிறோம். அவரது வாழ்க்கையும் உபதேசமும் நமக்கு எவ்வளவு ஆறுதலைக் கொடுக்கின்றன என்பதையும் அவர்களுக்குக் கூறுகிறோம். ஏசுநாதர் எங்களுடைய வழிகாட்டியென்றும், மற்றவர்களும் அவரைத் தங்களுடைய வழிகாட்டியாக அங்கீகரிக்க வேண்டுமென்றும் நாங்கள் கூறுகிறோம்.

ப: ஆமாம். நீங்கள் அவ்விதம்தான் சொல்லுகிறீர்கள். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சருக்குப் பதிலாக ஏசுநாதரை அங்கீகரிக்கும்படி நீங்கள் என்னிடம் கூறினல், உங்கள் நிலைமை சங்கடமாகிவிடும். அதனல்தான் நீங்கள் பேச வேண்டாம்; உங்களுடைய வாழ்க்கை பேசட்டும் என்று நான் சொல்லுகிறேன். ரோஜா புஷ்பம் பேசுவதில்லை; அப்படியிருந்தும் அதன் மணம் நாற்புறமும் பரந்து வியாபிக்கிறது அல்லவா? அதைப் பார்க்க முடியாத அந்தகர்கூட அதன் வாசனையை அறிந்துகொள்ளுகிருர். ரோஜாவினுடைய தத்துவ ரகசியம் அதுதான். ஆனல், ஏசுநாதர் உபதேசித்த கிறிஸ்தவ வேதம், ரோஜா தத்துவத்தைக் காட்டிலும் நுண்ணிய கருத்துள்ளது; அதைக் காட்டிலும் அதிக நறுமணம் வாய்ந்தது. ரோஜா புஷ்பத்தின் மகத்துவத்தை விளக்கவே ஒரு பிரதிநிதி தேவையில்லையாயின், ஏசுநாதரின் வேதத்தை விளக்க ஒரு பிரதிநிதி எதற்கு?

கே: கிறிஸ்தவ மதப் பிரசாரம் வியாபார தோரணையில் இருப்பதையே நீங்கள் ஆட்சேபிக்கிறீர்கள். அவ்விஷயத்தில் ஆசை வார்த்தைகள் கூறிப் பிரசாரம் செய்யக் கூடாது என்பதை ஒவ்வொரு உண்மையான கிறிஸ்தவரும் ஒப்புக்கொள்ளுவார்.

ப: இன்று பிரசாரம் செய்யப்படும் கிறிஸ்தவ மதத் தத்துவத்தில் ஆசை வார்த்தைகள் கூறுவதைத் தவிர வேறு என்ன இருக்கிறது? உங்களுடைய கல்வி, வைத்திய சம்பந்தமான ஸ்தாபனங்களிலிருந்து மத மாற்ற அம்சத்தை அகற்றினலன்றி, அவைகளுக்கு யாதொரு மதிப்பும் இராது. மிஷன் கல்விச்சாலைகளிலும் கலாசாலைகளிலும் வாசிக்கும் மாணவர்களைப் பைபிள் வகுப்புகளுக்கு வர வேண்டுமென்று ஏன் வற்புறுத்துகிறீர்கள்? அவர்கள் பைபிள் வகுப்புக்கு வரவேண்டுமென்று நீங்கள் எதிர்பார்ப்பது கூட எதற்கு? ஏசுநாதரின் உபதேசத்தை அவர்கள் அறிந்துகொள்ளத் தான் வேண்டுமென்ருல், அவர்கள் புத்தர், ஸொரோஸ்டர், முகமதுநபி இவர்களின் உபதேசங்களையும் ஏன் அறிந்து கொள்ளக்கூடாது?

கே: அதெல்லாம் பண்டைய காலத்தில் அனுஷ்டிக்கப்பட்ட முறையாகும். இக்காலத்தில் அனுஷ்டிக்கப்படும் நவீன முறையல்ல.

ப: இக்காலத்திலும் அவ்விதம் நடைபெறுவதற்கு நான் எத்தனையோ உதாரணங்கள் கூற முடியும். டொர்னகல் பிஷப் நவீன காலத்தைக் சேர்ந்தவர் அல்லவா? அவர் தாழ்த்தப்பட்டவர்களுக்கு எழுதியுள்ள பகிரங்கக் கடிதத்தில், ஆசை வார்த்தைகளே மலிந்து கிடக்கின்றன.

கே : நீங்கள் கிறிஸ்தவ மதத்தை அதன் சிறந்த பிரதிநிதிகளைக் கொண்டு தீர்மானிக்க வேண்டும்; மிகவும் மட்டரகமான பிரதிநிதிகளைக் கொண்டு தீர்மானிக்கக் கூடாது.

ப : நான் கிறிஸ்தவ மதத்தைப் பற்றி எதுவும் கூறவில்லை. கிறிஸ்தவ மதம் பிரசாரம் செய்யப்படும் முறையைப் பற்றியே பேசுகிறேன். கிறிஸ்தவ வேதத்தைப் பிரசாரம் செய்வோரில் பெரும்பாலோர், தங்களுடைய வாழ்க்கை நறுமணம் வீசும் படி செய்கிறார்களா ? கிறிஸ்தவ மதத்தை வியாக்கியானம் செய்வதல்ல, களங்கமற்ற உண்மையான கிறிஸ்தவரைப் போல் அவர்கள் வாழ வேண்டும் என்பதே என் விருப்பம். வெகு காலம் கஷ்டப்பட்டும், பயபக்தியுடனும் ஆராய்ச்சி செய்த பிறகே நான் அம் முடிவிற்கு வந்துள்ளேன். இந்தக் கருத்தை ஒப்புக்கொள்ளும் கிறிஸ்தவர்களின் தொகை அதிக மாகி வருகிறதென்பதைக் கூற நான் மகிழ்ச்சி அடை கிறேன்.

—'ஹரிஜன்' – 17—4—1937

## 18

# புகார்களுக்கு ஆதாரம் உண்டா ?

தேசீய கிறிஸ்தவ சபையைச் சேர்ந்த ஸ்ரீ பி. ஓ. பிலிப் பிற்குக் கீழ்வருமாறு ஒரு புகார்க் கடிதம் கிடைத்திருக் கிறது :

"உங்கள் கடிதத்திற்கு மிக்க வந்தனம். கிறிஸ்தவர்கள் மீதும், மதம் மாறியுள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பினர் மீதும், திருவாங்கூரிலுள்ள சாதி ஹிந் துக்களுக்கு ஏற்பட்டுள்ள வெறுப்பை அகற்றும் விஷயத்தில், மகாத்மா தமது செல்வாக்கை உபயோகிப்பார் என்பதைக் கேட்க ஆறுதல் அடைகிறேன். கிறிஸ்தவ மத போதகரான ஜேகப் சென்ற வாரம் வடக்கு திருவாங்கூரிலுள்ள ஒரு கிறிஸ்தவாலயத்திலிருந்து எட்டுப் பறையர்களுக்கு ஞான ஸ்நானம் செய்து வைத்துவிட்டுத் திரும்பி வருகையில், சர்க்கார் கலால் இலாகாவைச் சேர்ந்த ஒரு ஹிந்து பியூன், அவரை நிறுத்திக் கடுமையாக அடித்துவிட்டார். அடியால் ஜேகப்பின் ஒரு கண்ணில் காயம் ஏற்பட்டது. ஆலயப் பிரவேசப் பிரகடனத்திற்குப் பிறகு மக்களுக்குக் கிறிஸ்தவ மதத்தை உபதேசிக்கவும், ஞான ஸ்நானம் செய்து வைக்கவும் காரணமில்லையென்று பியூன் கூறிவிட்டு அடித்தாராம். இதைப் பற்றி நான் 'மதராஸ் மெயில்' பத்திரிக்கைக்கும் 'மனோரமா' பத்திரிக்கைக்கும் எழுதினேன். ஆனால், என் கடிதங்கள் அந்தப் பத்திரிக்கைகளில் பிரசுரமாகவில்லை. அந்தப் பயங்கரமான செய்கையை எல்லோரும் அறிந்து கொள்ளும்படி நீங்கள் தயவு செய்து விளம்பரப்படுத்து வீர்களா ? அத்தகைய நடவடிக்கைகள் எங்கேயோ, எப்போதாவது நடை பெறுவதில்லை. செல்வாக்குள்ள சாதி ஹிந்துக்களுக்குத் தெரிந்தே அவை

நடைபெறுகின்றன. அந்தச் சாதி ஹிந்துக்கள் சாத்தியமாயின், கிறிஸ்தவ மதத்தின் முன்னேற்றத்தையே தடுக்க விரும்புகிறார்கள். இந்தக் கடிதத்தின் ஒரு பிரதியை நீங்கள் காந்திஜிக்கு அனுப்பலாம். ஆலயப் பிரவேசப் பிரகடனத்திற்குப் பிறகு சமூகத் துவேஷம் அதிகமாகி வருகிறது.''

சில வாரங்களுக்கு முன் அதே இடத்திலிருந்து இது போன்ற மற்றொரு புகார் எனக்கு வந்தது. நான் அந்தப் புகார்களை, விசாரிப்பதற்காகத் திருவாங்கூர் ஹரிஜன சேவக சங்கத்திற்கு அனுப்பியுள்ளேன். இதன் மத்தியில் எனக்கு மேற்கண்ட புகார் வந்திருக்கிறது. சுருக்கமான அக் கடிதத்தில் கடுமையான புகார்கள் அடங்கியிருக்கின்றன. அந்தப் புகார் களாவன:

(1) அந்த நடவடிக்கைகள் எப்போதாவது அபூர்வமாக நிகழ்பவையல்ல.

(2) செல்வாக்குள்ள சாதி ஹிந்துக்களுக்குத் தெரிந்தே அவை நடைபெறுகின்றன.

(3) சாத்தியமாயின், சாதி ஹிந்துக்கள் கிறிஸ்தவ மதத்தின் முன்னேற்றத்தைத் தடுத்துவிட விரும்புகிறார்கள்.

(4) ஆலயப் பிரவேசப் பிரகடனத்திற்குப் பிறகு சமூகத் துவேஷம் அதிகமாகி வருகிறது.

ஆதாரமின்றி அத்தகைய புகார்களைக் கூறுவது கூடாது. அந்த நடவடிக்கைகளுக்குச் சாட்சியங்களை ஹரிஜன சேவக சங்கத்திடம் சமர்பிக்கும்படி நான் அக்கடிதம் எழுதியவருக்கு யோசனை கூறியிருக்கிறேன். அச்சங்கம் அந்தப் புகாரை முற்றிலும் விசாரிக்குமென்று நான் வாக்குறுதியளிக்கிறேன். அந்தச் சங்கத்தின் தலைவர், வேலையிலிருந்து ஓய்வு எடுத்துக் கொண்ட ஒரு ஹைகோர்ட் நீதிபதியாவார். அதன் காரியதரிசி, அந்தரங்க சுத்தியும், நேர்மையும், பண்பாடும் உள்ளவர். சாதி ஹிந்துக்கள் கண்டிப்பான அகிம்சையிலிருந்து அணுவளவும் வழுவ வதைக் கண்டிக்க நான் தயங்கமாட்டேன். ஆலயப் பிரவேசப் பிரகடனம் காரணமாக, சமூகத் துவேஷம் ஏன் அதிகமாக வேண்டும் என்பதை அறிந்துகொள்ளுவது கஷ்டமாக இருக் கிறது. திருவாங்கூரில் நான் சமீபத்தில் யாத்திரை செய்த போது சமூகத் துவேஷம் எதுவும் இருப்பதாக எனக்குத் தெரிய வில்லை. குறிப்பிட்ட குற்றங்கள் சம்பந்தப்பட்டவரையில், கோர்ட் டுகளில் வழக்குத் தொடரும்படி, ஸ்ரீ பிலிப்பிற்குக் கடிதம் எழுதிய நபருக்கு நான் ஆலோசனை கூறுகிறேன். ஆனால், எனக்குக் கிடைத்துள்ள புகார்கள் அதற்கு நேர்மாறாக இருக் கின்றன. அதாவது, கிறிஸ்தவ சேரிகளிலும் அவற்றிற்கு அருகிலும் வாழும் ஹரிஜனங்களைக் கிறிஸ்தவர்கள் அடித்து இம் சிப்பதாக எனக்குப் புகார்கள் வருகின்றன. நான் அந்தப் புகார்களைப் பிரசுரிக்க மறுத்து, ஆங்காங்குள்ள கோர்ட்டுகளில்

வழக்குத் தொடரும்படி புகார்க் கடிதங்கள் எழுதியவர்களுக்குக் கூறியுள்ளேன். மேலேயுள்ள கடிதத்தைப் பிரசுரிக்க நான் மறுத்திருப்பேன். ஆனால், அதில் கடுமையான புகார்கள் அடங்கியிருப்பதால், அக்கடிதத்தைப் பிரசுரிக்க முற்பட்டேன். அத்தகைய புகார்களை ரகசியமின்றி பகிரங்கமான விசாரணையின் மூலமே விசாரித்து முடிவு செய்ய வேண்டும்.

—'ஹரிஜன்' – 17—4—1937

## 19

# உண்மையான உதவி எது?

சில கிராமங்களில் உள்ள சில ஹரிஜனங்களுக்கு அதிக வசதிகள் செய்து கொடுப்பதாகவும், எனவே ஹிந்து மதத்தை விட்டுவிடும்படியும் கிறிஸ்தவப் பாதிரிமார் சங்கம் கூறியதன் பலனாக, அந்த ஹரிஜனங்கள் மதம் மாறப்போவதாகப் பயமுறுத்தியிருப்பதைப் பத்திரிகைகள் விளம்பரப்படுத்தியுள்ளன. முக்கியமாக அவர்களை சாதி ஹிந்துக்கள் வற்புறுத்தி வேலை வாங்குகிறார்கள். குறிப்பாக, கட்டாய வேலையிலிருந்து அவர்களுக்கு விடுதலையளிப்பதாகக் கிறிஸ்தவப் பாதிரியார் சங்கங்கள் உறுதி கூறியிருக்கின்றன. ஹிந்து மத சங்கப் பிரதிநிதிகளும் ஹரிஜன சேவக சங்கப் பிரதிநிதிகளும் துன்பத்திற்குள்ளான ஹரிஜனங்கள் இருக்குமிடம் சென்று, அவர்களை நன்கு நடத்துவதாகச் சாதி ஹிந்துக்கள் உறுதி கூறும்படி செய்தார்களென்று தெரிகிறது. எனவே, தாற்காலிகமாக அந்தப் புயல் தணிந்திருக்கிறது.

அந்த ஹரிஜனங்கள் கிறிஸ்தவ மதத்தில் சேர்ந்திருந்தால், சம்பந்தப்பட்ட கிறிஸ்தவப் பாதிரிமார் சங்கத்திற்கு என்ன லாபம் ஏற்பட்டிருக்குமோ எனக்குத் தெரியவில்லை. அவர்களை, எவ்வளவு தூரம் மனப்பூர்வமாக மதம் மாறியவர்களாகக் கூற முடியும் என்பதும் எனக்குத் தெரியவில்லை. ஆனால், அத்தகைய மத மாற்ற முயற்சி சமூகத்தையே இழிவு படுத்தி, சந்தேகத்தையும் மனக் கசப்பையும் உண்டாக்கி, எல்லா வகையிலும் சமூகத்தின் முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கிறது என்பது மாத்திரம் எனக்குத் தெரியும். ஹரிஜனங்களைச் சிறந்த முறையில் நடத்துவதற்கு விலையாக மத மாற்றம் செய்வதை விட்டுவிட்டு, கிறிஸ்தவப் பாதிரிமார் சங்கங்கள் ஹரிஜனங்களின் கஷ்டங்களைக் குறைக்கும் விஷயமாக ஹரிஜன சேவகர்களுடன் ஒத்துழைப்பார்களாயின், அவற்றின் உதவி வரவேற்கப்படுவதுடன், சமூகத்தின் துரிதமான முன்னேற்றத்திற்கும் வழியேற்படும்.

—'ஹரிஜன்' – 1—5—1937

## 20

# அம்பலப்படுத்த வேண்டும்

சிறுவர்களை எதிர்காலத்தில் கிறிஸ்தவ மதத்திற்கு மாற்றும் நோக்கத்துடன் அவர்களுக்குப் பாதிரிமார்கள் புத்தகங்கள், பள்ளிக்கூடச் சம்பளங்கள் முதலியன கொடுப்பதுபற்றி ஹரிஜன சேவகர்களுக்கும் காந்திஜிக்கும் விவாதம் நடந்தது. அந்தப் பிரச்னையை எப்படிச் சமாளிப்பதென்று காந்திஜியைக் கேட்ட போது அவர் கூறியதாவது :

''கிறிஸ்தவ வேதத்தை உபதேசிக்கவும், கிறிஸ்தவ மதத்தில் சேரும்படி கிறிஸ்தவரல்லாதாரை அழைக்கவும் பாதிரிமாருக்கு உரிமையுண்டு. ஆனால், மத மாற்றங்களுக்கு உதவியாக ஸ்தூல லாபங்களையும் ஆசைகளையும் காட்ட முற்படும் விபரீதத்தைத் தயவு தாட்சண்யமின்றி அம்பலப்படுத்த வேண்டும். அத்தகைய ஆசைகளை எதிர்த்து நிற்கும்படி ஹரிஜனங்களுக்குக் கல்வியறிவு அளிக்க வேண்டும்.''

—'ஹரிஜன்' - 1—2—1942

## 21

# மத மாற்றத்தால் தீண்டாமை ஒழியாது

**கேள்வி :** தீண்டாமை ஒழிப்பு சம்பந்தப்பட்ட வரையில் ஹரிஜனங்களுக்கு, மற்றவர்களுக்குச் சமமான அந்தஸ்து அளிப்பதே காங்கிரசின் நோக்கமெனில், அவர்களை இஸ்லாம் மதத்திற்கு மாற்றுவதால் அந்த நோக்கம் நிறைவேறாதா? சுதந்திரப் பிரதிக்ஞையில், தீண்டாமை ஒழிப்புத் திட்டத்தை ஹிந்துக்களுக்கு மாத்திரம் ஏன் ஒதுக்கிவைக்க வேண்டும்? இது, ஹிந்துக்கள் பெரும்பான்மையோராக இருக்கும் நிலையை நீடிப்பதிலும் மத மாற்றம் செய்வதில் முஸ்லிம் களுக்கு உள்ள உரிமையை மறுப்பதிலும் காங்கிரசிற்குள்ள ஆர்வத்தைக் காட்டுகிறதல்லவா?

**ப:** ''தீண்டாதாரை'' இஸ்லாம் மதத்திற்கோ அல்லது வேறு எந்த மதத்திற்கோ மாற்றுவதால் தீண்டாமையை ஒழித்து விட முடியாது. ஏனெனில், 'சாதி ஹிந்துக்கள்' தான் தீண் டாமைப் பாவத்தைத் தங்களிடமிருந்து களைய வேண்டியவர் களாக இருக்கிறார்கள். இவ்வளவு காலம் தாமதித்தாவது சாதி ஹிந்துக்கள்தான், தீண்டாதாருக்கு நீதி வழங்குவதன் மூலம் தங்களுடைய களங்கத்தைக் கழுவ வேண்டியவர்

களாக இருக்கிறார்கள். அதனால்தான் ஹிந்துக்களுடன் அந்தச் சுமையில் பங்கு எடுத்துக்கொள்ள காங்கிரஸ் முஸ்லிம்களை அழைக்கவில்லை. தீண்டாதாருக்கு விரோத மாக முஸ்லிம்கள் எவ்விதப் பாவமும் செய்யவில்லையல்லவா? மிகவும் சாதாரணமான, ஆனால் அவசியமான ஒரு சமூகச் சீர்திருத்தத்தை, பெரும்பான்மையோர் நிலையை உறுதிப் படுத்துவதற்கான ஓர் அரசியல் தந்திரமென்று நீங்கள் கருது வதை நான் தடுக்க முடியாது. தீண்டாமையை ஒழிப்பதற் காகத் தவம்புரியும் பதினாயிரக்கணக்கான ஹிந்துக்களுக்குப் பெரும்பான்மை பற்றிய எண்ணமே எதுவுமில்லை. மதம் என்ற வேஷத்தில் சாதி ஹிந்துக்கள் தீண்டாதாரை அடி மைத்தனத்தைக் காட்டிலும் மோசமான ஒரு நிலைக்குக் கொண்டு வந்துள்ளனர். அவ்விதம் துன்பத்திற்குள்ளானவர் களுக்கு நீதி வழங்கவே ஹிந்துக்கள் விரும்புகின்றனர். கடைசியாக, தீண்டாதாரை மதம் மாற்ற முஸ்லிம்களுக் குள்ள உரிமையை காங்கிரஸ் மறுக்கிறது என்று நீங்கள் கூறுவது முற்றிலும் தவறாகும். மத மாற்ற வேலை செய்வதி லிருந்து காங்கிரஸ் எவரையும் தடுக்க முடியாது. நீங்கள் உங்களுடைய உரிமையைச் சரியான வழியில் உபயோகிக் கிறீர்களா, அல்லது தவறான வழியில் உபயோகிக்கிறீர்களா என்பது நீங்களே யோசித்து முடிவுசெய்ய வேண்டிய விஷய மாகும்.

—'ஹரிஜன்' – 20—4—1940

பகுதி பன்னிரண்டு

# சமூகக் கொடுமைகள்

## 1

## தண்ணீர் கொடுக்க மறுக்கும் 'புண்ணியவான்கள்'

டில்லியிலிருந்து பின்வருமாறு ஒருவர் கடிதம் எழுதியுள்ளார்:

ரோடாக் ஜில்லாவில் உள்ள ரோஹெட்டில் ஆறு சக்கிலியர் வீடுகள் இருக்கின்றன. இவர்கள் யாவரும் தொழிலாளர்கள். இவர்களுக்குக் கிராமப் பூமியில் சொத்துரிமை இல்லை. கிராமக் குட்டையில் தண்ணீர் இருந்த வரையில் அவர்கள் அதிலிருந்து தண்ணீர் எடுத்துச் செல்லுவது வழக்கமாக இருந்தது. ஆனால், அதில் தண்ணீர் வற்றிய பின், அவர்கள் கிணற்றுத் தண்ணீருக்கு ஜமீன்தார்களின் தயவை நாடவேண்டியவர்களாகிவிட்டனர். ஜமீன்தார்கள், தண்ணீருக்காக அந்த ஏழைத் தீண்டாதார் பல மணி நேரம் காத்துக் கிடக்கும்படி செய்துவிடுகிறார்கள். இந்தத் தாமதத்தைத் தவிர்ப்பதற்கான பரிகார முறைகளைக் கண்டுபிடிப்பதற்காகச் சமீபத்தில் ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. அந்தக் கமிட்டியிலும் ஒரு சக்கிலியர் அங்கம் வகித்தார். தண்ணீர் எடுத்துவர சக்கிலியர்கள் ஒரு மாலியை (தோட்டக்காரர்) நியமிக்க வேண்டுமென்றும், தண்ணீர் எடுத்து வருவதற்காக அவருக்கு மாதம் ரூ. 15 சக்கிலியர்கள் கொடுக்க வேண்டுமென்றும் அக்கமிட்டி தீர்மானித்தது. அந்தத் தீர்மானத்துக்குச் சக்கிலியர்களும் இசைந்தனர். ஆனால், இப்போது அவர்கள் அந்தத் தொகையைக் கொடுப்பது தங்கள் கடமையல்லவென்றும், மாதந்தோறும் அது கடுமையான, அநீதியான ஒரு வரிச் சுமையாகியுள்ளதென்றும் கருதுகிறார்கள். இப்போது அவ்விஷயமாக என்ன செய்வது? கிணறு வெட்டுவதற்காகச் சிறிதளவு நிலம் கொடுக்கும்படி சக்கிலியர்கள் சர்க்கார் அதிகாரிகளைக் கேட்டுக்கொள்ளலாமா ?''

அவர்கள், ஜமீன்தார்களின் சொந்த மதத்தைச் சேர்ந்தவர்கள். ஜமீன்தார்களுக்கு அவர்கள் எத்தனையோ விதத்தில் தொண்டு செய்கிறார்கள். அப்படியிருந்தும் அவர்களைக் காக்க வைக்காமல் தண்ணீர் கொடுக்கும் கண்ணியமோ, சாதாரண மனிதத் தன்மையோ இராத இந்த ஹிந்து ஜமீன்தார்களை என்னவென்று சொல்லுவது? அதிலும் மதத்தின் பெயரால் அவ்வளவு இரக்கமின்றி நடந்து கொண்டிருக்கிறார்கள்! சக்கிலியர்கள் உபயோகிப்பதால் கிணறு தீட்டாகிவிடுமென ஜமீன்தார்கள்

கருதினால், கிணற்றில் தங்களுக்குள்ள ஏகபோக உரிமைக்காக அவர்கள் ஏன் அந்தத் தொகையைத் தோட்டக்காரருக்குக் கொடுக்கக்கூடாது? கிணறு வெட்டிக்கொள்ளுவதற்காக அவர்கள் ஏன் சக்கிலியர்களுக்கு ஒரு துண்டு நிலம் கொடுக்கக் கூடாது? அதற்காகச் சிறிதளவு நிலம் கொடுக்கும்படி ஜமீன்தார்களை யாராவது கேட்டுக்கொண்டார்களா? ஒரு கோஷ்டியினர் சென்று அவர்களைப் பேட்டி கண்டால், ஒருவேளை அவர்கள் சிறிது நிலம் கொடுப்பது மாத்திரமல்ல, அதில் தங்கள் சொந்தச் செலவில் ஒரு கிணறும் வெட்டிக் கொடுப்பார்கள். ஏற்கெனவே, அவ்விதம் முயற்சி செய்திராவிடில், இப்போது முயற்சி செய்ய வேண்டும். சர்க்காரிடமிருந்து சிறிதளவு நிலம் பெறுவதன் மூலம், உடனடியான பரிகாரம் ஏற்படலாம்.

ஹிந்து மதத்திலிருந்து தீண்டாமையை இருந்தவிடம் தெரியாமல் ஒழிக்கும் முயற்சியே தீண்டாமை எதிர்ப்பு இயக்கமாகும். தனியாக எத்தனை கிணறுகள் வெட்டினாலும், தீண்டாமையை ஒழிக்க முடியாது. எனவே, ஹிந்து சீர்திருத்தவாதிகள் இப்போது இரட்டிப்புக் கடமையை நிறைவேற்ற வேண்டியவர்களாக இருக்கிறார்கள். துன்பத்திற்குள்ளாகியுள்ள சகோதரர்களுக்கு ஒருபுறம் பரிகாரமுறைகளைக் கைக்கொள்ள வேண்டும். மற்றொரு புறம், நமது சொந்த மனிதர்களையே தீண்டாதாராகக் கருதும் தீய, காட்டுமிராண்டித்தனமான வழக்கத்தில் நம்பிக்கை வைத்துள்ளவர்களின் இதயத்தை, சரியான வேண்டுகோள் விடுப்பதன் மூலம் மாற்ற வேண்டும்.

—'எங் இந்தியா' – 22—5 - 1924

## 2

# ஆழ்ந்த சோகமும் வேதனையும்

காந்திஜி சென்றவிடமெல்லாம் 'தீண்டாதார்' நண்பர்கள் அவரைச் சந்தித்தார்கள். அடிக்கடி தீண்டாதார் அடங்கிய கூட்டத்தையும் சந்திக்க வேண்டியிருக்கும். அவர்கள் கால்களில் பாதரட்சை எதுவும் இல்லாமல், மரங்களையே காண முடியாத கத்தியவாட் பிரதேச ரஸ்தாக்களில், வாட்டிவதைக்கும் உஷ்ணமான புழுதியில், ஆடாமல் அசையாமல் நின்றுகொண்டிருப்பார்கள்.

'அதோ அங்குள்ள கிணற்றிலிருந்து தண்ணீர் இழுக்கிறார்கள் அல்லவா? நாங்கள் அந்தக் கிணற்றை உபயோகித்துக் கொள்ள முடியாது. நாங்கள் ஏழைகளாதலால், எங்களுக்கென்று தனியாகக் கிணறு வெட்டிக்கொள்ளவும் முடியாது. கிணற்றுக்கு அருகில் உள்ள மாட்டுத் தொட்டியைத்தான், அது

வும் அதில் தண்ணீர் நிரப்பப்பட்ட போதுதான், நாங்கள் உப யோகித்துக்கொள்ள முடியும்.'

எங்கு சென்றாலும் இதே புகாரைத்தான் கேட்க நேர்ந்தது. குடிக்கவே தண்ணீர் கிடைக்காதபோது, ஸ்நானம் செய்யவும் துணி துவைக்கவும் எவ்விதம் தண்ணீரை எதிர்பார்க்க முடியும்? அவ்வாறாக, அவர்கள் அசுத்தமாகத்தான் இருந்து தீரவேண்டும்; அதன் காரணமாகத் தீண்டாதாராகவும் இருக்க வேண்டியதைத் தவிர வேறு வழியில்லை!

இரவு எட்டு மணிக்குப் பொதுக்கூட்டம் நடந்தது. கூட்டம் நடந்த இடத்தின் ஒரு மூலையில் தீண்டாதார் மற்றவர்களிட மிருந்து பிரிக்கப்பட்டுத் தனியாக ஒதுக்கி வைக்கப்பட்டிருந் தனர். காந்திஜியைப் புகழ்ந்து ஒரு குட்டிக் கவியால் அக்கூட் டத்திற்கென்று தயாரிக்கப்பட்ட ஒரு பாடலுடன் கூட்ட நட வடிக்கைகள் ஆரம்பமாயின. பின்னர் பள்ளிக்கூடக் குழந்தை களின் சம்பாஷணை நடந்தது. இறுதியாக நூற்பதில் பலரும் தங்கள் திறமையைக் காட்டினர். திட்டத்திற்கு மேல் நீண்ட நேரம் நடைபெற்ற நிகழ்ச்சிகளுக்குப் பிறகு, பத்து மணிக்குத் தான் முக்கிய நடவடிக்கைகள் ஆரம்பமாயின. நடவடிக்கைகளை ஆரம்பிக்கும்படி பலரும் காந்திஜியைக் கேட்கும் சமயத்தில், கூட்ட செயலாளர்களில் ஒருவர், தீண்டாதார்கள் ஒரு பாட்டுப் பாடினாலன்றி வரவேற்பு உபசாரம் பூர்த்தியாகாதென்று கருதி, மூலையிலிருந்த தீண்டாதார் பெண்களை ஒரு பாட்டுப் பாடும்படி வற்புறுத்தினர்.

அப்போது காந்திஜி கூறியதாவது:

"நிறுத்துங்கள். அவர்களை நீங்கள் பாடும்படி சொல்லு வதற்கு முன், உங்களுடன் நான் ஒரு வார்த்தை பேச வேண்டும். இதுவரையில் அந்த மூலையில் உள்ள தீண்டாதார் நண்பர்கள் மீதே என் கண்கள் பதிந்திருந்தன என்பதை நீங்கள் கவனித் திருக்க வேண்டும். தீண்டாதார் பெண்கள் தூரத்திலிருந்து பாடுவதை நான் செவி கொடுத்துக் கேட்பேனாயின், காங்கிரஸ் கமிட்டி சார்பில் நீங்கள் அளித்த வரவேற்பு அர்த்தமற்றதாகி விடும். என்னை நான் ஒரு தோட்டியென்றும், ஏழைகளின் நண்பன் என்றும், தீண்டாதாரின் தோழன் என்றும் பெருமை யுடன் சொல்லிக் கொள்ளுவதெல்லாம் உண்மைக்கு மாறான வெறும் பகட்டு வார்த்தைகளாகிவிடும். கீதையின் சுலோகங் களில் உள்ள ஒரு வார்த்தையைக்கூட நீங்கள் நம்பாதபோது, என்னைப் புகழ்ந்து அந்தச் சுலோகங்களைக் கூறுவதற்கு அர்த்தம் என்ன? உங்களுடைய புகழுரையெல்லாம் இதயபூர்வமான தாக இருக்குமாயின், அங்கேயுள்ள தீண்டாதாரை இங்கே வந்து உங்கள் மத்தியில் உட்காரும்படி அழைக்க என்னை அனுமதிக் கும்படி கோருவேன். நீங்கள் அவ்விதம் செய்ய முடியாவிட் டால்,—உங்களுடைய வரவேற்பு உபசாரம் எல்லாம் வெறும் சம்பிரதாயமேயன்றி உண்மையான உபசாரம் இல்லையெனில்,

அதை நீங்கள் தைரியமாக மனத்தைவிட்டுச் சொல்லிவிடுங்கள். நீங்கள் அவர்களை விரும்பவில்லை என்பதையும் கூறிவிடுங்கள். அப்படியாயின் நான் அவர்களுக்கு மத்தியில் சென்று, அங்கிருந்து கொண்டு உங்களுடன் பேசுவதில் மகிழ்ச்சி அடைவேன். நான் நியாயமாக இருக்க வேண்டிய இடம் அதுதான். நான் அங்கே சென்று தீண்டாதார்களிடையே உட்கார வேண்டுமென நீங்கள் கூறினால், நீங்கள் என் மனத்தைப் புண்படுத்தியதாகவோ, என்னை அவமதித்ததாகவோ ஆகாது.

பிறகு அவ்விஷயமாக வாக்கு எடுக்கப்பட்டது. கூட்டத்தில் சாதி ஹிந்துக்களிடையே தீண்டாதார் உட்கார வேண்டும் என்பதை ஆதரித்து ஆயிரத்திற்கு மேற்பட்டவர்கள் வாக்குக் கொடுத்தனர். சுமார் முப்பது பேர்கள்தான் அதற்கு எதிராக வாக்குக் கொடுத்தனர். அந்த முப்பது பேர்களிலும் ஒருவர்கூடப் பெண்மணி அல்ல.

வாக்கு முடிவைக் குறித்துக் காந்திஜி கூறியதாவது:

''நான் இப்போது இருதலைக் கொள்ளி எறும்பு போன்ற நிலையில் இருக்கிறேன். எனக்கு ஆதரவாக மிகப் பெரும்பாலோர் வாக்குக் கொடுத்திருக்கிறார்கள்; விரோதமாக மிகக் குறைந்த சிறுபான்மையோர் வாக்குக் கொடுத்துள்ளனர். எனவே, இங்கிருந்து அப்பால் சென்று, எங்கே எங்களால் தீட்டுப்படாத இடமோ அங்கே உட்கார்ந்துகொள்ளும்படி நான் சிறுபான்மையோரைப் பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன். நான் கூறும் இந்த யோசனையை அவமதிப்பதாக அவர்கள் கருதினால், நான் முதலில் கூறியபடி செய்ய, அதாவது நான் தீண்டாதார் இருக்குமிடம் சென்று அவர்கள் மத்தியில் உட்கார முற்றிலும் தயாராக இருக்கிறேன்.''

இவ்விதம் காந்திஜி கூறியதும், கூட்டத்திலிருந்த ஒருவர், தாம் வைதிகர்களின் பிரதிநிதி என்று கூறிக்கொண்டு எழுந்தார். அவர் வேறு யாருமில்லை; காந்திஜியைப் புகழ்ந்து இனிய குரலில் பாடிய குட்டிக் கவிதான்!

''ஐயா, நான் ஒரு பிராம்மணன். நீங்கள் கூறிய யோசனை என் மனத்தை மிகவும் புண்படுத்துகிறது. நீங்கள் எழுந்து சென்று தீண்டாதாரிடையே உட்கார்ந்து கொள்ளும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். என்னுடன் இங்கே உட்கார்ந்திருப்பவர்களின் அபிப்பிராயமும் அதுதான்.''

காந்திஜி: சரிதான், நான் அப்படியே செய்கிறேன். இப்போது நான் எனக்கு வாக்குக் கொடுத்த நண்பர்களுக்கு ஒரு வார்த்தை கூற வேண்டும். இப்போது நாம் நமது உரிமையை மீறி எதுவும் செய்யவில்லை. எனினும். இது போன்ற தரும சங்கடமான விஷயத்தில் நாம் யாருடைய மனத்தையும் புண்படுத்தக்கூடாது. எனவே, பெரும்பான்மையோரின் உரிமையை

வற்புறுத்தாமல் இருக்கும்படியும், தீண்டாதாரிடையே புக விடத்தை நாட என்னை அனுமதிக்கும்படியும் நான் உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.''

அப்போது ஒரு நண்பர் நடுங்கிய குரலில் கூறியதாவது: ''நில்லுங்கள். முதலாவதாக, இந்த ஆட்சேபகரமான முறையில் எங்கள் கூட்டத்தை நடத்த ஏற்பாடு செய்ததே வெட்கக்கேடா கும். மேற்கொண்டு நீங்கள் தீண்டாதாரிடையே சென்று உட் காருவதன் மூலம் எங்களுடைய வெட்கக்கேட்டை அதிகமாக்கி விடாதீர்கள்.''

காந்திஜி: ''உங்களுக்கு ஏற்பட்டுள்ள ஆழ்ந்த மன வேதனையை நான் அறிகிறேன். ஆனால், அதற்குக் காரணம் நீங்கள்தான். ஆரம்பத்திலிருந்து நீங்கள் உங்கள் மத்தியில் தீண்டாதார் உட்கார வேண்டும் என்று வற்புறுத்தியிருந்தால், உங்களுடைய உணர்ச்சிகளை நான் அறிந்துகொண்டிருக்க முடியும். ஆனால், அவர்களைத் தனியே ஒதுக்கி, தூரத்தில் உட்கார வைக்க நீங்கள் சம்மதித்தீர்கள். இப்போது நான் சுட்டிக்காட் டியதன் மீது, உங்களுடைய கடமையை உணர்ந்துகொண்டீர்கள். ஆகையால், தயவு செய்து என்னைத் தீண்டாதாரிடையே செல்ல அனுமதியுங்கள். இதில் உங்களுக்கு அவமானம் எதுவுமில்லை.''

இவ்விதம் கூறிவிட்டு, காந்திஜி இருண்ட மூலையில் இருந்த தீண்டாதார்களிடம் சென்றார். தீண்டாதாரோ, ஆச்சரியத்துடன் எதிர்பாராத அந்த நிகழ்ச்சிகளைக் கண்கொட்டாமல் கவனித்துக் கொண்டிருந்தனர்.

அப்போது, மயக்கம் தெளிந்த வைதிகர்களின் மத்தியி லிருந்து ஒருவர் எழுந்து, பிடிவாத குணமுள்ள அந்தப் பிராம் மணப் பிரதிநிதியைப் பார்த்துக் கூறியதாவது:

''இங்கேயே இருக்கும்படி நீங்கள் எங்களை வற்புறுத்துவது நியாயமல்ல. மகாத்மாஜி, அவர் உட்கார்ந்திருந்த இடத்தை விட்டுவிட்டுத் தீண்டாத நண்பர்கள் இருக்குமிடம் சென்ற உடனேயே, நாங்களும் அவரைப் பின்தொடர்ந்து சென்று தீரு வோம் என்பதை நீங்கள் அறிய வேண்டும். பிறகு நீங்கள் மாத் திரமே தனியாக இங்கே உட்கார்ந்திருக்க நேரும். எப்படியிருந் தாலும் நீங்கள் எங்களுடன் இருக்க முடியாது; எனவே, ஒரு சிலருக்காக நீங்கள் ஏன் கூட்டத்தையே கலைக்கும்படி வற் புறுத்துகிறீர்கள்? ஆகையால், இங்கிருந்து வெளியேறிவிடும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.''

இந்த வேண்டுகோள் பிராம்மண நண்பரின் செவிகளின் ஏறுமாற் போகவில்லை. அவர், அரை டஜன் நண்பர்களுடன் கூட் டத்திலிருந்து வெளியேறினார். பிறகு 'தீண்டாதார்' வகுப்பைச் சேர்ந்த சிறுமிகள் அழைக்கப்பட்டனர். அப்போது யாரும் ஆர வாரம் செய்யவில்லை. ஏனெனில், காந்திஜி எவ்விதச் சந்தோஷ ஆரவாரமும் செய்யக் கூடாதென்று தடுத்துவிட்டார். அந்தச்

சிறுமிகள் சுமார் பதினேரு மணிக்குத் தங்கள் கீதத்தைப் பாடினர். அதன் பின் காந்திஜி ஆழ்ந்த சோகமும் வேதனையும் நிறைந்த குரலிலே கூட்டத்தில் பேசினர்.

—'எங் இந்தியா' - 16—4—1925

# 3

# பொதுக் கிணறுகளும், தனிக் கிணறுகளும்

ஒரு வங்காளி கீழ்வருமாறு மூன்று கேள்விகள் கேட்டுள்ளார்:

1. ''வங்காளத்தில் கிணறுகளிலிருந்து தண்ணீர் இழுக்கத் தீண்டாதார் அனுமதிக்கப்படுவதில்லை. குடி தண்ணீர் வைக்கப்பட்டுள்ள அறைக்குள் பிரவேசிக்கக்கூட அவர்களை அனுமதிப்பதில்லை. இந்தத் தீமையை அகற்ற என்ன செய்ய வேண்டும்? அவர்களுக்கு நாம் தனியாகக் கிணறுகள் வெட்டி, தனியாகக் கல்விச்சாலைகளை அமைத்தோமாயின், அந்தத் தீமையை அனுமதித்ததாகும் அல்லவா?

2. ''தங்களுடைய கைகளிலிருந்து மேல் வகுப்பினர் தண்ணீர் வாங்கிக்கொள்ள வேண்டுமென்பது வங்காளத்திலுள்ள தீண்டாதாரின் மனப்பான்மையாக இருந்து வருகிறது. ஆனல், அவர்கள் தங்களுக்குக் கீழ் உள்ள வகுப்பினரிடமிருந்து தண்ணீர் வாங்கிக்கொள்ள மறுக்கிருர்கள். அந்தத் தவறிலிருந்து அவர்களைத் தடுக்க என்ன செய்யவேண்டும்?

3. ''தீண்டாதாரிடமிருந்து தண்ணீர் வாங்கிக்கொள்ளும் கொள்கையை நீங்கள் விரும்பவில்லை என்று வங்காளத்தில் உள்ள ஹிந்து மகாசபையும், பொதுவாக ஹிந்துக்களும் மக்களிடம் கூறி வருகிருர்கள்.''

அந்தக் கேள்விக்கு எனது விடைகள் வருமாறு:

1. தீண்டாதாரிடமிருந்து தண்ணீர் வாங்கிக்கொள்ளுவது, அத்தீமையை ஒழிப்பதற்கான ஒரு வழியாகும். அவர்களுக்கென்று பிரத்தியேகமாகக் கிணறுகள் தோண்டுவதால், அந்தத் தீமை நிரந்தரமாகி விடுமென நான் நினைக்கவில்லை. தீண்டாமையின் தீமைகளை வேருடன் களைய நீண்ட காலமாகும், தீண்டாதாருக்குப் பிரத்தியேகமாகக் கிணறுகள் வெட்டுவதால், பொதுக் கிணறுகளை உபயோகிக்க அவர்களை மற்றவர்கள் ஒரு போதும் அனுமதிக்கமாட்டார்கள் என்று அஞ்சி, தீண்டாதாருக்குத் தனிக் கிணறுகள் வெட்ட உதவி புரியாமல் இருப்பது தவருகும். தீண்டாதாருக்கு நல்ல கிணறுகளை நிர்மாணித்துக் கொடுத்தால், பலரும் அவற்றை உபயோகிப்பார்கள் என நம்புகிறேன். தீண்டாதார்களிடையே சீர்திருத்தம் செய்யும் அதே

சமயத்தில், மற்றொரு புறம் அவர்களுக்கு எதிராக சாதி ஹிந்துக்களிடையே உள்ள தப்பெண்ணத்தைத் தகர்க்க வேண்டும். அவர்கள் விஷயத்தில் சாதி ஹிந்துக்கள் தங்களுடைய கடமையை உணரும்படியும் செய்ய வேண்டும்.

2. 'உயர்ந்த' ஹிந்துக்கள் என்று கூறப்படுவோர், 'தீண்டாதவர்களை'த் 'தீண்ட' ஆரம்பித்துவிட்டால், தீண்டாதாருக்குள்ளேயே நிலவும் தீண்டாமை தானாகச் செத்துவிடும். நம்முடைய தொண்டு, தீண்டாதாருக்குள்ளேயே மிகத் தாழ்ந்த நிலையில் இருப்பவர்களிடமிருந்து ஆரம்பமாக வேண்டும்.

3. வங்காள ஹிந்து மகாசபை என் மீது என்ன கொள்கையைக் கற்பித்து வருகிறது என்பது பற்றி எனக்குத் தெரியாது. ஆனால், எனது நிலை மிகத் தெளிவானது. தீண்டாதாரைச் சூத்திரர்களாகவே கருத வேண்டும். நாம் சூத்திரர்களிடமிருந்து தண்ணீர் வாங்கிக்கொள்ளுவதால், தீண்டாதாரிடமிருந்தும் தண்ணீர் வாங்கிக்கொள்ளத் தயங்கக்கூடாது.

—'எங் இந்தியா' – 19—2—1925

## 4

# வன்மம் வேண்டாம்

வங்காளத்தில் நிலவி வரும் தீண்டாமை பற்றிய தகவல்களைக் காந்திஜி அறிந்துகொள்ள விரும்பினர். அங்கே தீண்டாதாரிடையே உள்ள செம்படவர், தோட்டி, நாம சூத்திரர் முதலிய பல்வேறு பிரிவுகள் பற்றி அவருக்கு அறிவிக்கப்பட்டது. இந்த உப பிரிவுகளிடையேயும் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற நோய் பரவியிருப்பதை அவரிடம் கூறினர்கள். அவர்களுக்குள்ள வசதிக் குறைவுகளைப் பற்றியும் காந்திஜி, தம்முடன் பேசிக்கொண்டிருந்த தீண்டாத வகுப்பைச் சேர்ந்த கனவானைக் கேட்டார். அவர் கூறியதாவது: "மேற்கு, தென்னிந்தியாவைப் போன்ற ரகமுள்ள தீண்டாமை இங்கில்லை. இருந்தாலும், உயர்ந்தவர் என்ற மனப்பான்மை இருக்கத்தான் செய்கிறது. ஒரு நாம சூத்திரர் 'உயர்ந்த ஹிந்து'வின் வீட்டிற்குள் பிரவேசிக்கலாம்; ஆனல், தண்ணீர் வைக்கப்பட்டுள்ள அறைக்குள் அவர் பிரவேசிக்க முடியாது. அவரிடமிருந்து ஒரு ஹிந்துவும் தண்ணீர் வாங்கிக் குடிக்கமாட்டார். ஒரு நாம சூத்திரரைக் கோவிலுக்குள் செல்ல அனுமதிக்கமாட்டார்கள். ஒரு நாவிதரோ, அல்லது ஒரு சலவைத் தொழிலாளியோ நாம சூத்திரருக்கு வேலை செய்யமாட்டார். இந்தக் கஷ்டங்களையெல்லாம் எப்படி நிவர்த்தி செய்வது?"

காந்திஜி: ''நீங்கள் கேட்பது சரியான கேள்வியே. அக் கஷ்டங்களை நிவர்த்தி செய்து கொள்ள நல்ல வழிகளும் இருக் கின்றன; உருப்படாத வழிகளும் இருக்கின்றன. துன்புறுத்து வோருக்கு விரோதமாகப் பலாத்காரத்தை உபயோகித்து, சீர் திருத்தத்தை அவர்களிடமிருந்து பலாத்காரமாகப் பெற விரும்பு வோர் சிலர் இருக்கிறார்கள். அத்தகைய நண்பர்களை நான் புனவில் சந்தித்தேன். அவர்கள், எனக்கு ஓர் உபசாரப் பத்திரம் வாசித்து அளிக்க விரும்பினார்கள். தங்கள் விஷயத்தில் உயர்சாதியினர் அவர்களுடைய நடத்தையை மாற்றிக் கொள்ளா விடில், தாங்கள் பலாத்காரத்தை உபயோகித்து அவர்களுக்கு ஒரு பாடம் கற்பிக்கப் போவதாக அந்த நண்பர்கள் உபசாரப் பத்திரத்தில் குறிப்பிட்டிருந்தனர். அது ஒரு வழி. நிதான புத்தி யுடையவர்களின் அனுதாபத்தை இழக்கவும், தாங்கள் அடைய விரும்பும் லட்சியத்தில் தோல்வியடையவும் அதுதான் நிச்சய மான வழியென்று அவர்களுக்குக் கூறினேன். அவர்களுக்கு உதவி புரியும் சீர்திருத்தவாதிகளின் முயற்சிகளை வீணாக்கு வதற்கும், அதுதான் நிச்சயமான வழியென்று அவர்களிடம் சொன்னேன்.

''மற்றொரு பிரிவினரும் இருக்கிறார்கள். அவர்களை நான் தென்னிந்தியாவில் சந்தித்தேன். அவர்கள், ஹிந்து மதத்தை விட்டுவிட்டு, கிறிஸ்தவ அல்லது இஸ்லாம் மதத்திற்கு மாறிவிடுவ தாகப் பயமுறுத்துகிறார்கள். அவர்கள் இதயத்தில் ஏதாவது மத உணர்ச்சி இருக்குமாயின், அதற்கு இப்போது சோதனை ஏற்பட்டிருக்கிறதென்றும், தங்களைத் துன்புறுத்துகிறார்கள் என்பதற்காக அவர்கள் மதத்தை விட்டுவிட்டால், அவர்களுடைய மத உணர்ச்சி கவைக்குதவாதென்றும் கூறினேன். நான் இங்கி லாந்துக்குச் சென்ற போது, என்னைச் சாதிப்ரஷ்டம் செய்து விட்டார்கள். அவ்விதம் செய்தது தவறு என்பதே என் அபிப் பிராயம். ஆனால், அதற்காக நான் என் மதத்தைத் துறந்திருக்க வேண்டுமா?

''மூன்றாவது வழி ஒன்றுத்தான் பரிசுத்தமான வழி என்பது என் அபிப்பிராயம். அதாவது, தன்னைத்தானே பரிசுத்தம் செய்து கொள்ளுவதாகும். உங்கள் மீது சுமத்தப்படும் குற்றச் சாட்டு களுக்கும் உங்களுக்கும் அணுவளவு சம்பந்தமும் இல்லை என்ற நிலையை ஏற்படுத்திக் கொள்ளுவதாகும்.''

''நான் எல்லாவற்றையும் உணர்ந்து கொண்டேன். பலாத் காரமும் நீங்கள் குறிப்பிட்ட மிரட்டல்களும் பலனற்றவை'' என்றார், வக்கீல் நண்பர்.

காந்திஜி: ''ஆமாம். தன்னைத் தானே பரிசுத்தம் செய்து கொள்ளுவதே சரியான வழியாகும். உங்களிடையே எவ்வளவு உயர்வு மனப்பான்மை இருந்தாலும் அதை நீங்கள் ஒழித்துவிட வேண்டும். உங்களுக்கு விரோதமான வைதிக ஹிந்துக்கள் கூறும்

புகார்களுக்குச் சிறிதளவு காரணம் இருக்கலாம். அதற்குக் கூட நீங்கள் இடம் வைக்காவிடில், அவர்களுடைய தப்பெண்ணங்களை நீங்கள் அகற்ற முடியும். அவர்களிடம் தீய வழக்கங்கள் இல்லாமல் இல்லை. ஆனால், அவற்றை நீங்கள் சுட்டிக்காட்ட வேண்டாம். இந்த வழியினால் பலன் கிடைக்க நீண்ட காலமாக லாம். எனினும், இதுதான் பலன் பெற நிச்சயமான வழி. நீங்கள் சில தீவிரமான முறைகளைக் கைக்கொண்டால், அவர்களைப் பணிய வைக்க முடியும் என்பதை நான் அறிவேன். உதாரணமாக கல்கத்தா போன்ற நகரங்களில் தோட்டிகள், தங்களுடைய குறைகள் தீர்க்கப்பட்டாலன்றித் தாங்கள் வேலைக்குத் திரும்பமாட்டோம் என்று கூறி வேலை நிறுத்தம் செய்தால், அவர்கள் வெற்றி பெறுவார்கள் என்பது நிச்சயம். ஆனால், அவர்கள் எதிர்க்கட்சியினரின் மனத்தை மாற்ற முடியாது. வேலை நிறுத்தம் காரணமாக அவர்களுடைய துவேஷம் அதிகமாகும். எனவே, நீங்கள் அப்பழுக்கின்றி நடந்துகொள்ளுங்கள். மற்ற விஷயங்களைச் சீர்திருத்தவாதிகளின் பொறுப்பில் விட்டுவிடுங்கள். இந்தத் தீமையை நான் என் சக்தி முழுவதையும் உபயோகித்து எதிர்த்து வருவதை நீங்கள் அறிவீர்கள். அது எனக்கு முற்றிலும் ஒரு மத சம்பந்தமான பிரச்னையாகும்.''

நண்பர்: ''நான் சீர்திருத்தவாதிகளை நம்ப வேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்கள். நாங்கள் உங்களை நம்புகிறோம். ஆனால், நாங்கள் மற்றவர்களை எப்படி நம்புவது? இன்று அவர்கள் தீண்டாமை பற்றிப் பேசுகிறார்கள். ஏனெனில், அவர்களுடைய ராஜீய சதுரங்க விளையாட்டில் நாங்கள் பிரயோஜனகரமான காய்களாக இருந்து வருகிறோம். ஆனால், அவர்களுடைய ராஜீய அபிலாஷைகள் பூர்த்தியான விநாடியே, அவர்கள் எங்களை நடுச் சந்தியில் விட்டுவிடுவார்கள். அதை அவர்கள், தங்களைப் பரிசுத்தம் செய்துகொள்ளும் ஒரு பிரச்னையாகவோ அல்லது தீண்டாமையை அகற்றினாலன்றிச் சுயராஜ்யம் பலனற்றதாகி விடுமென்றோ இதயபூர்வமாக நம்புகிறார்களென்று நாங்கள் நினைக்கவில்லை. நாங்கள் சீர்திருத்தவாதிகளை நம்ப வேண்டுமென நீங்கள் விரும்புகிறீர்களா? நாங்கள் போராட முற்பட்ட போதெல்லாம் அவர்கள் கீழே இறங்கி வந்திருக்கிறார்கள். நாங்கள் சோம்பேறித்தனமாக உட்கார்ந்துவிட்டால், அவர்களும் அக்கறையின்றி வேடிக்கைப் பார்க்க முற்பட்டுவிடுகிறார்கள். சமுதாயத் தொடர்புகள் வேண்டாமென நாங்களும் உறுதிகொள்ளுகிறோம். அவர்கள் எங்களிடமிருந்து தண்ணீர் வாங்க மறுப்பது போல், நாங்களும் அவர்களிடமிருந்து தண்ணீர் வாங்க மறுத்துவிடுகிறோம்.

காந்திஜி: அப்படியெல்லாம் செய்து விடாதீர்கள். அவ்விதம் செய்தால், சாதி ஹிந்துக்களை இன்னும் அதிகமாக விரோதித்துக் கொள்ளுவீர்கள். அவர்கள் விஷயத்தில் உங்களுக்கு அன்பு எதுவும் ஏற்படாமல் இருக்கலாம். ஆனால், அவர்களுக்கு

விரோதமாக உங்கள் மனத்தில் உள்ள துவேஷத்தை யெல்லாம் நீங்கள் அகற்ற முடியுமென எண்ணுகிறேன். கண்ணியமாக நடந்து கொள்ளுங்கள். வன்மம் வேண்டாம்.

—'எங் இந்தியா' – 13—6—1925

## 5

# தலைகீழான தீண்டாமை!

ஒருவர் பின்வருமாறு எழுதுகிறார் :

"தீண்டாதாருக்குள்ளேயே சிலர், 'தீண்டத்தகுந்தவரை'த் தொடுவதோ, குறிப்பிட்ட தூரத்திற்கு அப்பால் அவர் அருகில் செல்லுவதோ, அவரது கிணற்றிலிருந்து தண்ணீர் எடுப்பதோ, அல்லது அவரது கோவிலுக்குள் செல்லுவதோ பாவம் என்று கருதுகிறார்கள். மேற்கூறிய காரியங்களைச் செய்ய அனுமதித்தாலும், அவற்றைச் செய்யும்படி அழைத்தாலுங்கூட, தீண்டாதார், பாவ உணர்ச்சி காரணமாக அவ்விதம் செய்வதில்லை, அவ்விதம் செய்வது மரியாதைக்கு விரோதமென்றும், பாவமென்றும் தீண்டாதார் கருதுகிறார்கள். இது தலைகீழான தீண்டாமை அல்லவா? 'தீண்டத் தகுந்தவர்'கள் விஷயத்தில் பதிலுக்குப் பதில் செய்ய வேண்டும் என்பதற்காகத் தீண்டாதார் அவ்விதம் செய்வதில்லை. இந்த உண்மையை, சபர்மதியில் தங்களைப் பேட்டி கண்டவரும், 1922-ல் இந்தியாவில் யாத்திரை செய்தவருமான 'மாஞ்செஸ்டர் கார்டியன்' பத்திரிகையின் விசேஷ நிருபர் குஜராத்தில் உள்ள ஆனந்த், பர்டோலி தாலுக்காக்களில் நேரில் கண்டார். தீண்டாதாரின் இந்தத் தலைகீழான தீண்டாமைக்குப் பரிகாரமாக என்ன முறைகளைக் கைக்கொள்ளும்படி, நீங்கள் தீண்டாமை எதிர்ப்புத் தொண்டர்களுக்கு ஆலோசனை கூறப்போகிறீர்கள்? இது, சாதி ஹிந்துக்களின் பாவத்தைப்போல், தீண்டாதாரின் பாவமா? இந்தப் பாவத்தில் மனப்பூர்வமான நம்பிக்கையுள்ள ஒரு தீண்டாதார், தண்ணீரில் மூழ்கி இறக்கும் தறுவாயிலுள்ள ஒரு பிராம்மணருக்கு உதவி புரிய முன் வருவது சாத்தியமா?

இவர் குறிப்பிட்டுள்ள தீண்டாமையின் விபரீதத்தைப் பற்றி நான் அறியாதவன் அல்ல. சில சமயங்களில் தீண்டாதார்களை என் அருகில் வரும்படி செய்வதே எனக்குக் கஷ்டமாக இருக்கிறது. இந் நிலையில் அவர்கள் என்னைத் தொடும்படி செய்வது எவ்விதம் சாத்தியம்? தீண்டாதார்கள் சம்பந்தப்பட்ட வரையில், தீண்டத் தகுந்தவர்களைத் தொடாமலிருப்பது மத சம்பந்தமான முக்கியப் பிரச்னையல்ல. இதுவரையில் தங்களைத் தீண்டாதார் என்று கருதிவந்த 'தீண்டத்தகுந்தவர்'களைத் தாங்கள் தொடுவது சாத்தியம் என்பதையே தீண்டாதார் உணர்ந்து கொள்ளவில்லை. அனுமதி கொடுத்தால் கூட பெரும்பாலான தீண்டாதார், தீண்டத் தகுந்தவர்களைத் தொட விரும்பாததற்குப் பயம்தான் காரணம்.

இதற்கு, பிரஞ்சுக் கைதியின் வரலாற்றை உவமையாகக்கூற லாம். பிரான்ஸில் உள்ள பாஸ்டில் சிறை இருட்டறையில் பல ஆண்டுகள் அடைப்பட்டிருந்த கைதி விடுதலையடைந்த போது, அவனால் பகல் வெளிச்சத்தைக் சகிக்க முடியவில்லை. இருளி லேயே இருந்ததனால் அவன், வெளிச்ச உணர்ச்சியை இழந்துவிட் டிருந்தான்.

வங்காளத்தில் ஒரு யோசனை கூறினார்கள். தீண்டாதார் உயர்ந்த வகுப்பினர் என்று சொல்லப்படுவோரைப் பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்பதே அந்த யோசனையாகும். அதாவது தீண்டாதார், 'உயர்ந்த சாதி' ஹிந்துக்களைத் தீண்டாதவர் களாகக் கருத வேண்டும். அவர்களுக்கு இப்போது செய்து வரும் வேலைகளை யெல்லாம் நிறுத்திவிட வேண்டும்; அவர்கள் கையிலிருந்து தண்ணீரோ, உணவோ வாங்கக் கூடாது. இதுதான் அந்த யோசனையாகும். அவ்விதம் பதிலுக்குப் பதில் செய்யும் காலம் எனக்கு மிகுந்த வருத்தத்தையே கொடுக்கும். ஆனால், சுதந்திரமும் தான்தோன்றித்தனமும் தண்டவமாடும் இக் காலத்தில், இப்போது வெறும் பேச்சளவில் இருக்கும் ஒரு விஷயம், பிறகு செய்கையில் காட்டப்பட்டாலும் அதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை. அதன் விளைவாக உயர் சாதி எனக் கூறப்படுவோர், தீண்டாதாரைத் துன்புறுத்தியதன் பிரதி பலனை அனுபவிக்கும்படி நேரலாம். நாம் சீர்திருந்துவதற்கு இயற்கை தொண்ணூற்றென்பது சந்தர்ப்பங்களை அளிகிறது. அந்தச் சந்தர்ப்பங்களில் ஒன்றையும் நாம் பயன்படுத்திக் கொள்ளாவிடில், நூறாவது தடவை அது நம்மைக் கட்டாயப் படுத்தி அடிபணியும்படி செய்கிறது. அப்போது நம்மைச் சங்க டத்திற்கு உள்ளாக்கும் தண்டனையையும் நாம் அனுபவிக்கும்படி நேருகிறது.

—'எங் இந்தியா' - 21—5—1925

## 6

# வாழ்க்கையை அர்ப்பணம் செய்ய வேண்டும்

இன்று மாலை நான் பல ஈழவத் தலைவர்களுடன் வெகு நேரம் விவாதித்துக் கொண்டிருந்தேன். அவர்கள் ஈழவர்கள் என்று எனக்குச் சிலர் கூறாவிடில், அதை நான் அறிந்து கொண் டிருக்கமாட்டேன் என்பதை உங்களுக்குக் கூறுகிறேன். ஏனெனில், அவர்களுக்கும் சாதி ஹிந்துக்கள் என்று கூறப்படு வோருக்கும் அணுவளவு வேற்றுமையையும் நான் காண முடிய வில்லை. பல சாதி ஹிந்துக்களுடைய செல்வ நிலைமையைக்

காட்டிலும், ஈழவர்களின் செல்வ நிலைமை மேலானது என்பதில் சந்தேகமில்லை. கல்வித் துறையிலும் அவர்களுடைய யோக்கியதாம்சங்களில் எவ்விதக் குறைவும் இல்லை. தேசத்தின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலை வரையில் நான் யாத்திரை செய்தபோது, பல பிராம்மணர்களையும் மற்றவர்களையும் பார்த்துள்ளேன். அவர்களில் பலரையும் காட்டிலும் ஈழவர்களின் வெளித்தோற்றம் மிக மிகப் பரிசுத்தமாக இருக்கிறது. எனவே, நான் இந்த நண்பர்களை நேருக்குநேர் சந்தித்து, அவர்களுடைய உபசாரப் பத்திரத்தையும் வாசித்தபோது, ஹிந்து என்ற முறையில் நான் வெட்கித் தலைகுனிந்தேன். இந்த நண்பர்கள்தான் தீண்டாதாராகவும், திருவாங்கூரில் உள்ள சில பொது ரஸ்தாக்களில் நடப்பதற்குத் தகுதியற்றவர்களாகவும் கருதப்படுகிறார்கள்! இந்த நண்பர்கள் நம்முடைய கோவில்களுக்கு வந்தால், கோவில் தளமெல்லாம் அசுத்தமாகிவிடுகிறது! இச் சபையில் உள்ளவர்களில் மிகவும் அதிக வரி செலுத்துவோரைப் போலவே, ஈழவர்களும் வரி செலுத்துவோராக இருந்தும்கூட, அவர்கள் தங்களுடைய பிள்ளைகளையும் பெண்களையும் சில சர்க்கார் பள்ளிக்கூடங்களுக்குக்கூட அனுப்ப முடியாதவர்களாக இருக்கிறார்கள். மனிதத் தன்மையற்ற இத்தகைய கஷ்டங்களை அவர்கள் அனுபவிக்கும்படி இருப்பதற்காக, சாதி ஹிந்துக்களைவிட அவர்கள் சர்க்காருக்கு ஓரளவு குறைந்த வரி செலுத்தினால் போதும் என்று அவர்களுக்கு யாரும் தயவு காட்டவில்லை என்பதையும் நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். எனவே, மதப்பற்று உள்ள ஹிந்துக்களில் பலரும், தீண்டாதாருக்குச் சம உரிமை வழங்க வேண்டும் என்ற லட்சியத்திற்காகத் தங்கள் வாழ்க்கையை அர்ப்பணம் செய்ய வேண்டும் என்பதே எனது அபிப்பிராயமாகும்.

[ஆலப்புழையில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்திலிருந்து எடுக்கப்பட்டது.]

—'எங் இந்தியா' – 20—10—1927

# 7

# தீண்டாமை ஒரு விஷப் பாம்பு

தீண்டாமை என்ற இந்தக் கொடிய பாம்பைத் தடுத்துள்ளார்களெனினும், அதைக் கொன்றுவிடவில்லை. நீங்கள் அதைச் சிறிதும் எதிர்பாராத சமயத்தில் அது அதனுடைய விஷப் பற்களைக் காட்டுகிறது. உதாரணமாக, கீழ்க்கண்ட கடிதம் ஒன்று எனக்கு வருமென நான் எதிர்பார்க்கவேயில்லை :

"கீழ்க்கண்ட உண்மையை உங்கள் கவனத்திற்குக் கொண்டு வருவது பற்றி நாங்கள் மிகவும் வருந்துகிறோம். சென்ற 22-ஆம் தேதி தனுகுவில்

நடந்த பெண்கள் கூட்டத்திற்குப் பிறகு அது நிகழ்ந்தது. கூட்டத்திற்கு முந்நூறு நானூறு பெண்கள் வரையில் விஜயம் செய்திருந்தனர். உங்கள் பக்கத்திலே உட்கார்ந்திருந்த யுவதி ஒரு பஞ்சமப் பெண் என்று யாரோ ஒரு சிலர் கூட்டத்தில் ரகசியமாகக் கூறிவிட்டார்கள்.

"கூட்டம் முடிந்ததும், கூட்டத்திற்கு வந்திருந்த எல்லாப் பெண்களும் நேராகக் கால்வாய்க்குச் சென்று, 'மன்னிக்க முடியாத' அந்தப் பாவத்துக்காகத் தங்களைப் பரிசுத்தம் செய்து கொள்ள ஸ்நானம் செய்தார்கள். அந்தப் பாவத்திலிருந்து பாதுகாப்பு அளிப்பதற்காகச் சிறு குழந்தைகளின்மீது கூட, பால் குடிக்கும் பச்சைக் குழந்தைகள் மீதுகூட, புனித தீர்த்தத்தைத் தெளித்தார்கள். இதையெல்லாம் நான் நேரில் பார்த்தேன். நாங்கள் உங்களை ஏமாற்றி, உங்களுக்கு மரியாதை செலுத்துகிறோம். அது பக்தியுடன் கூடிய புராதனமான ஒரு மோசடியாகும்!......

"மக்கள் அறியாமையிலும் மூட பக்தியிலும் ஆழ்ந்துகிடக்கிறார்கள். இவை, உயர்ந்த சாதி என்ற மமதையுடன் சேர்ந்துகொண்டு நம்மை நாசமாக்கி வருகின்றன. அவை நம்மைக் குட்டிச்சுவராக்குவதில், தற்போதைய சர்க்காரைக்காட்டிலும் அதிக சக்தி பொருந்தியவையாக இருக்கின்றன."

அந்தக் கூட்டத்தில் என் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டிருந்த யுவதி, பீஹாரில் உள்ள பிரபல தலைவரான பிரிஜ்கிஷோர் பாபுவின் புதல்வியான ஸ்ரீமதி பிரபாவதி தேவியே. அவர் சிறிது காலமாக ஆசிரமத்தில் என்னுடன் இருந்து வருகிறார். ஆந்திர தேச யாத்திரையின்போது அவர் என்னுடன் பிரயாணம் செய்து வந்தார். பெரும்பாலான ஜனங்கள் அவரை என் புதல்வியாக நினைத்தனர். சிலர், அவரை என் மருமகள் என்று எண்ணினர். ஆனால், நான் ஸ்வீகாரம் செய்துகொண்டுள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த லக்ஷ்மி என்று ஸ்ரீமதி பிரபாவதி தேவியைத் தவறாக நினைத்த 'பெருமை' தனுகுவைச் சேர்ந்த மக்களுக்கே உரியது!

"நான் அவரைத் தொட, அந்தத் தீட்டு எங்கும் பரவியதாக தனுகுப்பெண்மணிகள் கற்பனை செய்துகொண்டதால், அவர்கள் தங்களைப் பரிசுத்தம் செய்துகொண்டதுடன், ஸ்நானம் செய்து வைத்தும் தண்ணீர் தெளித்தும் தங்கள் குழந்தைகளையும் பரிசுத்தம் செய்துகொண்டார்கள்.

சோககரமான இந்த விநோத நாடகம் நமக்கு ஒரு படிப்பினையாகும். மூடப்பழக்க வழக்கங்களுள்ள ஆடவர்கள், தங்கள் பெண்மணிகளை அசட்டை செய்து, அவர்கள் இன்னும் அதிக அந்தகாரமான மூடப்பழக்க வழக்கங்களைத் தொடர்ந்து அனுஷ்டித்து வரும்படி செய்திருக்கிறார்கள்.

எனக்கு அந்தக் கடிதம் கிடைத்த பின், நான் எச்சரிக்கையுடன் இருக்க முற்பட்டு, பிறகு நடந்த கூட்டங்களில் மக்கள் எந்தெந்தவிடங்களில் உட்கார்ந்திருக்கிறார்கள் என்பதைச் சோதனை செய்ய முற்பட்டேன். பெரும்பாலான கூட்டங்களிலும் தீண்டாதார், சாதி ஹிந்துக்களுடன் கலந்தே உட்கார்ந்

திருந்தார்கள் என்பதை அறிந்தேன். அவ்விதம் கலந்து உட்காருவதில் ஏதாவது ஆட்சேபணை உண்டா என்று அவர்களை நான் நேரடியாகக் கேட்டபோது, எவ்வித ஆட்சேபணையும் இல்லையென்று அவர்கள் பதில் அளித்தார்கள்.

ராஜமகேந்திரவரத்திற்கு அருகில் உள்ள கிராமங்கள் ஒன்றில் சிறந்த முறையில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கூட்டத்தைப் பார்த்தேன். அங்கே தனித்தனியாக அவரவர்களுக்குப் பிரிக்கப்பட்ட பகுதிகளில் சாதி ஹிந்துக்கள், தீண்டாதார், பெண்கள் முதலியோர் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தேன். அந்தப் பிரிவுகளைத் தொண்டர்கள் பெருமையுடன் சுட்டிக் காட்டினர். அவர்களை அகப்பட்டுக் கொள்ளும்படி செய்வதற்காக ஒரு யுக்தி செய்தேன். "தீண்டாதாரைத் தனியாக ஒதுக்கி வைப்பதற்கென்று இவ்விதம் ஏற்பாடு செய்திருக்கிறிர்களென்று நினைக்கிறேன்" என்றேன். பாவம், என் கேள்விக்கு விடையளித்த தொண்டர், "ஆமாம் ஐயா" என்று கூறி என்னிடம் அகப்பட்டுக் கொண்டார். பிறகுதான் அந்தத் தொண்டருக்கு ஆங்கிலம் தெரியாது என்றும், என் கேள்வியை அவர் அறிந்து கொள்ளவில்லை என்றும் தெரிந்துகொண்டேன். உடனே, அவர்களின் மத்தியிலே தீண்டாதார் உட்காருவதில்கூட்டத்திலுள்ளவர்களுக்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லையா என்று நேரடியாகக் கேட்டேன். தங்களுக்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லை என்பதை அவர்கள் எல்லோரும் சேர்ந்தாற்போல் கைதூக்குவதன் மூலம் தெரிவித்தார்கள். அப்போதும் எனக்குத் திருப்தி ஏற்படவில்லை. எனவே, அவர்கள் மத்தியில் நான் தீண்டாதாரை அனுப்பலாமா என்று கேட்டேன். அவர்கள் யாவரும் கைகளைத் தூக்கித் தங்கள் சம்மதத்தைத் தெரிவித்தார்கள். வாயால் தங்கள் சம்மதத்தைத் தெரிவிக்கும்படி அவர்களைக் கேட்டேன். அவர்கள் முதலில் மெதுவான குரலில் தங்கள் சம்மதத்தைத்தெரிவித்தார்கள். உரத்த குரலில் அவர்கள் தங்கள் சம்மதத்தைப் பிரகடனம் செய்யவேண்டுமென்று கூறினேன். எல்லோரும் 'சரி சரி' என்று தங்களுக்கு இயன்ற வரையில் உரத்த குரலில் கோஷம் செய்தார்கள். பிறகு நான் தீண்டாதாரைக் கூப்பிட்டு சாதி ஹிந்துக்களின் மத்தியில் உட்காரும்படி கூறினேன். அவர்களும் யாதொரு தயக்கமும், பயமுமின்றி அவ்விதமே உட்கார்ந்தார்கள். பிறகு தீண்டாமையை அடிப்படையாகக் கொண்டு நான் பேசினேன். அவர்களுடைய மத்தியில் தீண்டாதார் உட்கார அனுமதித்தது போற்றத்தக்க ஒரு செய்கையென்றும், மானிடராகப் பிறந்த எவரையும் தீண்டாதாராகக் கருதுவது ஒரு பாவமென்றும் அவர்களுக்குக் கூறினேன். என்னுடைய விளக்கத்திற்கும், கண் முன் கண்ட இந்த உதாரணத்திற்கும் பிறகு கூட, பெண்களோ அல்லது வேறு எவரோ தங்களைச் சுத்தம் செய்துகொள்ளுவதற்காக ஸ்நானம் செய்வார்களாயின், பிறகு அந்தப் பிரச்னையை மனோதத்துவ சாஸ்திர நிபுணரின் ஆராய்ச்சிக்குவிட வேண்டியதுதான்!

இந்தக் கதையின் பாக்கியையும் நான் முடித்துவிடுகிறேன். தீண்டாதார் தங்களுடன் சேர்ந்து உட்கார்ந்துகொள்ளுவதற்கு, அக்கூட்டத்திலிருந்த பெண்களும் சம்மதித்தார்கள். உண்மையில் தீண்டாதார் எனப்படுவோர் சாதி ஹிந்துக்களான ஆடவர்களுடனும் பெண்களுடனும் சேர்ந்து தொடும்படி உட்கார்ந்தார்கள். நான் கவனித்தவரையில், அவர்களைத் தவிர்ப்பதற்காக எவரும் நகர்ந்து உட்காரவில்லை. அருகில் உள்ள ஒரு கிராமத்தில் நடத்தப்பட்டுவரும் பள்ளிக்கூடத்தில் ஏராளமான சாதி ஹிந்துச் சிறுவர்களும் தீண்டாதார் சிறுவர்களும் யாதொரு தகராறுமின்றிக் கலந்து வாசிக்கிறார்கள். எனவே, தனுகுவில் நடந்தது போன்ற சம்பவங்களைக் குறித்து நான் வருந்துகிறேன் என்றாலும், தீண்டாமை துரிதமாக மறைந்து வருகிறது என்ற உண்மையை யாரும் மறுக்க முடியாது.

—'எங் இந்தியா' - 16—5—1929

# 8

# நமது பாவங்கள்

நிரபராதிகளான ஹரிஜனங்களுடைய தலைகளின்மீது நாம் எவ்வளவு தவறுகளைச் சுமத்தியுள்ளோம் என்பதை ஞாபகப் படுத்திக்கொள்ளுவது நல்லது. சமுதாயத்தில் அவர்கள் குஷ்ட ரோகிகளைப் போல் ஒதுக்கப்பட்டவர்களாக இருக்கிறார்கள். பொருளாதாரத் துறையில், அவர்கள் அடிமைகளைக் காட்டிலும் மோசமான நிலையில் இருக்கிறார்கள். மதம் சம்பந்தப்பட்ட வரையில், 'கடவுளின் ஆலயம்' என்று நாம் தவறாகக் கூறும் இடங்களில் பிரவேசிக்க அவர்களுக்கு அனுமதியில்லை. சாதி ஹிந்துக்களைப் போல் அவர்கள் பொது ரஸ்தாக்கள், பொதுப் பள்ளிக்கூடங்கள், பொது ஆஸ்பத்திரிகள், பொதுக் கிணறுகள், பொதுக் குழாய்கள், பொது நந்தவனங்கள் போன்றவைகளை உபயோகித்துக்கொள்ள முடியாது. இந்த உரிமையெல்லாம் ஹரிஜனங்களுக்கு மறுக்கப்பட்டுள்ளது. சிற்சில இடங்களில் குறிப்பிட்ட அளவு தூரத்திற்குள் வருவதுகூடக் குற்றமாகும்; ஒரு சில இடங்களில் அவர்கள் சாதி ஹிந்துக்களின் கண்களில் படுவதும் குற்றம். நகரங்களிலும் கிராமங்களிலும் மிகவும் மோசமான இடங்களில் அவர்கள் வசிக்கும்படி ஒதுக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு அங்கே எவ்வித சமுதாய வசதியும் பெற முடியாது. வக்கீல்களும் டாக்டர்களும் சமுதாயத்தில் உள்ள மற்றவர்களுக்கு உதவியளிப்பது போல், ஹரிஜனங்களுக்கு உதவியளிக்கமாட்டார்கள். அவர்களுடைய மத சம்பந்தமான சடங்குகளைப் பிராம்மணர்கள் செய்துவைக்க மாட்டார்கள். இதில் ஆச்சரியம் என்னவெனில், இந்த நிலையிலும் ஹரிஜனங்கள்

ஜீவனத்திற்கு ஏதோ சம்பாதித்துக்கொள்ள சக்தி உடையவர் களாக இருக்கிருர்களே என்பதுதான்; இந்த நிலையிலும் அவர் கள் ஹிந்து மதத்திலேயே இருந்து வருகிருர்களே என்பதுதான்.

அவர்கள் மிகவும் ஒடுக்கப்பட்டுத் தலைதூக்க முடியாத நிலையில் இருப்பதால்தான், தங்களை ஒடுக்குவோரை எதிர்த்து அவர்கள் எழ முடியவில்லை. எராவ்டா ஒப்பந்தத்தின் நுணுக்கங் களைத் தொண்டர்கள் தெளிவாக அறிந்துகொள்ள வேண்டும் என்பதற்காகவே, இந்தத் துக்ககரமான, வெட்கக்கேடான உண்மைகளை நான் ஞாபகத்திற்குக்கொண்டு வந்துள்ளேன். இடைவிடாத முயற்சியினுல்தான் கீழே அழுத்தப்பட்டுள்ள இவர்களை அந்த இழிவான நிலையிலிருந்து உயர்த்த முடியும்; ஹிந்து மதத்தைப் பரிசுத்தம் செய்ய முடியும்; ஹிந்து சமுதாயம் முழுவதையும், அதனுடன் இந்தியா முழுவதையும் உன்னத நிலைக்குக்கொண்டு வர முடியும்.

—'எனது ஆன்ம வேதனை' - 5—11—1932

# 9

# சனுதனிகளின் சம்மதம்

அநேகமாக எனக்குச் சனுதனிகளிடமிருந்து கிடைத்துள்ள ஒவ்வொரு கடிதத்திலும், அனுகூலமாகவும், ஆச்சரியப்படக் கூடிய விதத்திலும் அவர்கள் கீழ்க்கண்ட விஷயங்களை ஒப்புக் கொண்டுள்ளனர்:

1. ஹரிஜனங்களின் முன்னேற்றத்திற்காக எவ்வளவோ செய்தாக வேண்டும் என்பதை நாங்கள் ஒப்புக்கொள்ளுகிருேம்.

2. பல சாதி ஹிந்துக்கள் ஹரிஜனங்களைத் துன்புறுத்தி வருகிருர்கள் என்பதை ஒப்புக்கொள்ளுகிருேம்.

3. ஹரிஜனக் குழந்தைகள் கல்வி பெற வேண்டும் என்பதை ஒப்புக் கொள்ளுகிருேம்.

4. ஹரிஜனங்கள் வசிக்க நல்ல வீடுகள் வேண்டும் என்பதை ஒப்புக் கொள்ளுகிருேம்.

5. அவர்கள் ஸ்நானம் செய்யவும், தாங்களே தண்ணீர் எடுத்துக் கொள்ளவும் ஒழுங்கான ஏற்பாடு செய்ய வேண்டும் என்பதை ஒப்புக் கொள்ளுகிருேம்.

6. அவர்களுக்குப் பூரண அரசியல் உரிமைகள் இருக்க வேண்டும் என் பதை ஒப்புக்கொள்ளுகிருேம்.

7. கடவுளை வழிபட அவர்களுக்கு நிறைய வசதிகள் இருக்கவேண்டும் என்பதை ஒப்புக்கொள்ளுகிருேம்.

8. மற்றவர்களுக்கு இருக்கும் எல்லாப் பிரஜா உரிமைகளும் அவர்களுக்கும் இருக்க வேண்டும் என்பதையும் ஒப்புக்கொள்ளுகிறோம்.

ஆனால், குறிப்பாக அவர்கள் தற்போதுள்ள நிலையில் இருக்கும் வரையில், அவர்களைத் தொடும்படியோ அல்லது அவர்களுடன் நட்புக் கொள்ளும்படியோ எங்களை வற்புறுத்த வேண்டாம்.

அப்படியாயின் நான் சனாதனிகளுக்குக் கூறுவது இதுதான்:

"உங்களுக்குச் சமமான நிலையில் ஹரிஜனங்கள் இருக்க வேண்டிய அவசியத்தை நீங்கள் ஒத்துக்கொள்ளுகிறீர்கள். மற்ற சாதி ஹிந்துக்கள் ஒரு படி முன் சென்று, ஹரிஜனங்களைத் தீண்டாதாராகக் கருதாமலிருப்பதே தங்கள் கடமையென நம்புகின்றனர். நீங்கள் நம்பும் சாஸ்திரங்களையே மற்ற சாதி ஹிந்துக்களும் நம்புகிறார்கள். அதை ஆதாரமாகக் கொண்டே மற்ற சாதி ஹிந்துக்கள், நீங்கள் ஒப்புக்கொள்ளும் உரிமைகளையும் சலுகைகளையும் ஹரிஜனங்களுடன் பகிர்ந்துகொள்ள வேண்டுமென்று நினைக்கின்றனர். ஆனால், நீங்களோ, உங்களுடன் எவ்விதத் தொடர்புமின்றி ஹரிஜனங்கள் உரிமைகளையும் சலுகைகளையும் அனுபவிக்கட்டுமென்று கருதுகிறீர்கள். இதையெல்லாம் குறித்து நீங்கள் ஏன் கலக்கமடைய வேண்டும்? உங்கள் இஷ்டப்படி செய்ய உங்களுக்குள்ள சுதந்திரத்தை நீங்கள் பாதுகாத்துக்கொள்ள விரும்புகிறீர்கள். உங்களை எவரும் கட்டாயப்படுத்துவதை நீங்கள் விரும்பவில்லை. அது நியாயம் தான். அதுபோலவே, நீங்கள் அவசியமென்று கருதும் ஹரிஜன முன்னேற்றத் திட்டங்களை நீங்கள் விரும்பும் முறையில் நிறைவேற்றுமாறு, சீர்திருத்தவாதிகளை நீங்களும் கட்டாயப்படுத்த நிச்சயமாக விரும்பமாட்டீர்கள்.

"நான் சிறந்த வழியொன்று கூறத் துணிகிறேன். ஹரிஜனங்களின் நிலைமை முன்னேற வேண்டியது அவசியமென்பதில் உங்களுக்கும் சீர்திருத்தக்காரர்களுக்கும் கருத்து வேற்றுமை இல்லை. அவ்விஷயமாக நீங்கள் இதுவரையில் உருவாக எதுவும் செய்யவில்லை. எனவே, சீர்திருத்தவாதிகள் வசூல் செய்யும் நிதிக்குத் தாராளமாகப் பண உதவி செய்யுங்கள். பொதுவான திட்டத்தை நிறைவேற்ற அவர்களை உங்களுடைய பிரதிநிதிகளாக உபயோகித்துக்கொள்ளுங்கள். ஹிந்து மதத்தைப் பற்றி உங்களுடைய விளக்கத்திற்கு அவர்கள் மதிப்புக் கொடுக்க வேண்டுமென்று நீங்கள் விரும்புவது போலவே, அவர்களுடைய விளக்கத்திற்கு நீங்களும் மதிப்புக் கொடுக்க வேண்டும். ஹரிஜனங்களுடன் தொடர்பு வைத்துக்கொள்ளுவதில் சீர்திருத்தவாதிகளின் நடவடிக்கைகளைக் குறித்து நீங்கள் இதுவரையில் கோபம் கொள்ளவில்லை. அவர்கள் போகிற போக்கில் அவர்களை விட்டுவிட்டீர்கள். அவர்களை நீங்கள் பகிஷ்காரம் செய்யவில்லை. எனவே, தீண்டாமை எதிர்ப்பு இயக்கம் இப்போது முன்னரைவிட அதிகத் தீவிரமாகி அதிகமாகப் பரவியுளது என்பதற்காக, நீங்கள் இப்போது அதை எதிர்ப்பதில் அர்த்தமில்லை."

எராவ்டா உடன்படிக்கையின்படியும், சமீபத்தில் அமைக்கப்பட்ட தீண்டாதார் ஊழியர் சங்கத்தின் பிரகடனத்திற்கிணங்கவும், தீண்டாமை ஒழிப்புத் திட்டத்தில் நான் கூறியதற்கு மேல் எதுவும் அடங்கியிருக்கவில்லை என்பதைச் சனாதனிகள் தெளிவாக அறிந்துகொள்ள வேண்டும். சமபந்தி போஜனமும் கலப்பு மணமும் அதில் உட்பட்டவையல்ல. நான் உள்படப் பல ஹிந்துக்கள் அதற்கு மேலும் தீவிரமாகச் செல்லுவோம் என்பது பற்றிச் சனாதனிகள் கலங்க வேண்டியதில்லை. தனிப்பட்டவரின் தீர்மானத்தையோ அல்லது தனிப்பட்டவரின் நடவடிக்கையையோ அவர்கள் அடக்கியொடுக்க விரும்பமாட்டார்கள், தங்களுடைய நம்பிக்கையில் அவர்களுக்கு ஆழ்ந்த உறுதியிருந்தால், அவர்கள் எதிர்காலத்தில் என்ன வருமோவென்று கிலிகொள்ள வேண்டிய அவசியமில்லை. ஒரு குறிப்பிட்ட சீர்திருத்தத்திற்கு இயற்கையான ஜீவசக்தி இருக்குமாயின், அது காலத்தின் தேவைக்கு இணங்க அமலுக்கு வருமாயின், தடுக்க முடியாத அதன் முன்னேற்றத்தை உலகில் உள்ள எந்தச் சக்தியும் எதிர்த்து நிற்க முடியாது.

—'என் ஆன்ம வேதனை' - 16—11—1932

# 10

# தோட்டிகளின் துன்ப வாழ்க்கை

பம்பாய்க்கு அருகில் உள்ள வைலி பார்லி என்ற இடத்தில் செல்வந்தர்களான ஹிந்துக்களும் மற்றவர்களும் இருக்கிறார்கள். அங்கே சுமார் 1,700 வீடுகள் இருக்கின்றன. முனிசிபாலிடிக்கு ரூ. 70,000 வருமானம் கிடைக்கிறது. அதில் ரூ. 31,000 நகர சுத்திக்காகச் செலவழிக்கப்படுகிறது. ரஸ்தாக்களோ, தண்ணீர் விநியோக ஏற்பாடுகளோ, மலஜலம் கழிக்க வசதிகளோ இல்லாத குடிசைகளில் தோட்டிகள் வசித்து வருகிறார்கள். அவர்கள் வசிக்கும் நிலமும் பள்ளத்தாக்காக இருக்கிறது. அவர்களுடைய குடிசைகள், ஒரு காலத்தில் நகர சுத்தி அலுவல்களுக்காக உபயோகிக்கப்பட்ட உடைந்த தகரங்களால் நிர்மாணிக்கப்பட்டுள்ளன. அங்கே விளக்கு வசதியுமில்லை. அக்குடிசைகளுக்கு அருகில் குப்பை கொட்டும் மைதானம் இருக்கிறது. சுற்றுப்புறங்களிலிருந்து கொண்டு வரப்படும் குப்பைகளை அங்கே கொட்டுவதால், அங்கே நிரந்தரமாகத் துர்நாற்றம் வீசி வருகிறது.

அதையடுத்து, நகரசுத்தி மோட்டார் லாரிகள் நிற்கும் கொட்டகை இருக்கிறது. அங்கே அதைச் சேர்ந்த தண்ணீர்க் குழாய் இருக்கிறது. அழுக்கடைந்த தகரங்களை அங்குதான் கழுவுகிறார்கள். அங்குள்ள ஓவர்சியருக்கு நல்ல மனது இருந்தால், அந்தக் குழாயிலிருந்து தண்ணீர் எடுத்துக்கொள்ளத்

தோட்டிகளை அனுமதிப்பார். மற்ருெரு புறத்தில் வண்டிகளை வரிசையாக நிறுத்தி வைத்திருக்கிருர்கள். வீடுகளிலுள்ள கக்கூஸ்களிலிருந்து சேகரிக்கப்படும் வாளிகளைக் கொண்டு வருவதற்கே அந்த வண்டிகள் இருக்கின்றன. இந்தச் சூழ்நிலையில் தோட்டிகள் தங்கள் வாழ்நாளைக் கழிக்க வேண்டியவர்களாக இருக்கிருர்கள்.

தோட்டிகளுடைய குடிசைகளைச் சுற்றி வயல்கள் இருக்கின்றன. அந்த வயல்களில் பெரும்பாலும் தண்ணீர் இருப்பதால் அங்கே கொசுக்கள் உற்பத்தியாகின்றன; தேள்கள், பாம்புகள், வயல் எலிகள் முதலியவற்றிற்கு அவ்வயல்கள், இருப்பிடமாகவும் இருக்கின்றன.

இந்த நிலைமையில் அங்கே முப்பத்தொன்று குடும்பங்கள் வசிக்கின்றன. அவர்களில் முப்பத்தைந்து பேர் ஆடவர்கள்; இருபத்தைந்து பேர் பெண்கள்; முப்பத்து நாலு பேர் சிறுவர்கள்; பதினைந்து பேர் சிறுமிகளாவர். இந்த நூற்ருென்பது பேர்களில் ஒன்பது சிறுவர்களுக்கு மாத்திரமே மிகவும் பிரயாசைப்பட்டு வாசிக்கவும் எழுதவும் தெரியும். மற்றவர்களுக்கு அறவே எழுதப் படிக்கத் தெரியாது.

வைலி பார்லியிலுள்ள மக்களுக்குத் தங்கள் சக மனிதர்களான தோட்டிகளைப் பற்றி ஏதாவது சிந்தனையிருக்குமாயின், அவர்களுக்குக் கண்ணியமான பிரதேசத்தில், நகர வாழ்க்கையின் அம்சங்களான தண்ணீர், விளக்கு முதலிய மற்றெல்லா வசதிகளுடனும் கண்ணியமான வீடுகளை ஏற்பாடு செய்து கொடுக்க முடியும். எனவே, அங்கே சனுதனிகளுக்கும் சீர்திருத்தவாதிகளுக்கும் வேலை இருக்கிறது.

வைலி பார்லி முனிசிபாலிடிக்கு ரூ. 70,000 வருமானம் கிடைக்கிறதென்றும், அதில் மிகத் தாராளமாக 31,000 ரூபாயை நகர சுத்திக்காகச் செலவு செய்வதாகவும் கூறுவது எனது புகாருக்குச் சரியான பதில் ஆகாது. வைலி பார்லி மக்கள் செல்வவந்தர்கள் என்பது எனக்குத் தெரியும். சமுதாயத்திற்குப் பிரயோசனகரமான தொண்டு புரியும் இந்த ஊழியர்களுக்கு உதவியாக அச்செல்வவந்தர்கள் தங்களுக்குத் தாங்களே வரி விதித்துக்கொள்ள முடியும். ஆனல், அது ஒரு தாமதமான முறையென நான் கருதுகிறேன். ஒரே நாளில் கணிசமான தொகை வசூல் செய்து, தோட்டிகளுக்குத் தகுந்த ஜாகைகளும் மற்ற வசதிகளும் செய்து கொடுக்க வேண்டியது அங்குள்ள ஹிந்துக்களின் மூலாதாரமான கடமையாகும். அவர்கள் அவ்விதம் செய்தால், அதுகூடத் தங்களுடைய சக மனிதர்களுக்குச் செய்ய வேண்டிய மிகவும் சாதாரணமான கடமையைத் தாமதித்தே செய்வதாகும். அவ்விதம் அவர்கள் தங்கள் கடமையைச் செய்த பிறகுதான், வருடாவருடம் ஏற்படும் அதிகச் செலவை ஏற்றுக்கொள்ளும்படி அவர்கள் முனிசிபாலிடியைக் கேட்டுக்

கொள்ளுவது நியாயமாக இருக்கும். தோட்டிகள் முன்பிருந்ததைக் காட்டிலும் அதிக வசதிகளுடன் வாழ்வதற்கு, வருடந் தோறும் நிச்சயமாக அதிகச் செலவு செய்ய வேண்டியிருக்கும்.

—'எனது ஆன்ம வேதனை' - 17—11—1932

# 11

# வெளியேறிவிடுங்கள்

ஸ்ரீ ஏ. வி. தக்கர் பாபாவிடமிருந்து சென்ற வாரம் வந்த ஒரு கடிதத்தில் அவர் குறிப்பிட்டிருப்பதாவது:

"கவிதா என்ற கிராமத்தில் உள்ள ஹரிஜன் சிறுவர்களைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்துக்கொள்ள கவிதா சாதி ஹிந்துக்கள் இசைந்துவிட்டதாகவும், அந்தப் பிரச்னை சமரசமாகத் தீர்க்கப்பட்டுவிட்டதாகவும் சென்ற 10-ந் தேதி அஸோசியேடெட் பிரஸ் அறிவித்தது. இச்செய்தியை 13-ந் தேதி அகமதாபாத் ஹரிஜன் சேவா சங்கக் காரியதரிசி மறுத்துவிட்டார். ஹரிஜனங்களே தங்கள் குழந்தைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்புவதில்லை யென்று உறுதி கூறிவிட்டதாக அவர் கூறினர். ஹரிஜனங்கள் தாங்களாக வலுவில் அவ்விதம் உறுதி கூறவில்லை. சாதி ஹிந்துக்கள் வற்புறுத்தி அவர்களிடமிருந்து அந்த உறுதிமொழியை வாங்கினர்.

"அந்தக் கிராமத்தில் உள்ள சாதி ஹிந்துக்கள், அங்குள்ள நெசவாளர், சக்கிலியர் முதலிய ஏழை ஹரிஜனங்களுக்கு எதிராகச் சமூகப் பகிஷ்காரப் பிரகடனம் செய்து விட்டார்கள். அங்கே நூறு ஹரிஜன் குடும்பங்களுக்கு மேல் இருக்கின்றன. அதன் விளைவாக ஹரிஜனங்கள் விவசாய வேலைகளை இழந்தனர்; அவர்களுடைய கால்நடைகள் மேய்வதற்கு இடம் அளிக்கப்படவில்லை; அவர்களுடைய குழந்தைகளுக்குச் சாதி ஹிந்துக்கள் மோர் கொடுக்க மறுத்துவிட்டார்கள். இது மாத்திரமல்ல, ஒரு ஹரிஜனத் தலைவரைச் சாதி ஹிந்துக்கள் கட்டாயப்படுத்தி, அவரும் மற்றவர்களும் தங்களுடைய குழந்தைகளை மறுபடியும் பள்ளிக்கூடத்தில் சேர்க்க முயற்சிப்பதுகூட இல்லையென்று கடவுள் பெயரால் பிரமாணம் செய்து கொடுக்கும்படியும் செய்தனர். இவ்விதமாகவே 'சமரசம்' ஏற்பட்டது.

"10-ஆம் தேதி அந்தப் போலி சமரசம் ஏற்பட்டுவிட்டதாக அறிவிக்கப்பட்டும் கூட, ஏழை ஹரிஜனங்கள் முற்றிலும் சரணடைந்த பிறகுகூட, நெசவாளர்களைப் பகிஷ்காரம் செய்தது 19-ஆம் தேதி வரையில் நீடித்திருந்தது. சிலர் விஷயத்தில் 22-ஆம் தேதி வரையில்கூடப் பகிஷ்காரம் நீடித்தது. சக்கிலியர்களுக்கு எதிரான பகிஷ்காரம் அதற்கு முன் ரத்து செய்யப்பட்டுவிட்டது. ஏனெனில், சாதி ஹிந்துக்கள் தங்களின் செத்த மாடுகளைத் தாங்களே அப்புறப்படுத்த முடியாதல்லவா? அதனாலேயே அவர்கள் முன்பாகவே சக்கிலியர்களுடன் சமரசம் செய்துகொள்ளும்படி நேர்ந்தது. ஹரிஜனங்கள் விஷயத்தில் ஏற்கெனவே இழைக்கப்பட்ட அக்கிரமங்கள் போதாவென்று, ஹரிஜனங்களின் கிணற்றிற்குள் 15-ஆம் தேதியன்றும்,

19-ஆம் தேதியன்றும் மண்ணெண்ணெயை ஊற்றிவிட்டார்கள். ஏதோ 'ராஜ குடும்பத்தைச்' சேர்ந்தவர்கள் என்ற எண்ணமுள்ள சாதி ஹிந்துச் சிறுவர்களுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து வாசிக்க, தங்கள் குழந்தைகளை அனுப்பத் துணிந்ததற்காக ஏழை ஹரிஜனங்கள் விஷயத்தில் எத்தகைய பயங்கரம் அனுஷ்டிக்கப்பட்டுள்ளதென்பதை எவரும் கற்பனை செய்துகொள்ளலாம்.

"சாதி ஹிந்துக்களின் தலைவர்களை நான் 22-ஆம் தேதி காலையில் சந்தித்தேன். தங்களுடைய சொந்தக் குழந்தைகள், சக்கிலியர் முதலிய ஹரிஜனக் குழந்தைகளின் பக்கத்தில் உட்காருவதைத் தாங்கள் சகிக்க முடியாதென்று அவர்கள் கூறினர்கள். அந்த நிலைமையில் சமரசமேற்படும் விஷயமாக ஏதாவது செய்யமுடியுமா என்று 23-ஆம் தேதி அகமதாபாத் ஜில்லா மாஜிஸ்திரேட்டையும் சந்தித்துக் கேட்டேன். ஆனல், யாதொரு பயனும் ஏற்படவில்லை.

"அவ்விதமாக ஹரிஜனச் சிறுவர்கள் கிராமப்பள்ளிக்கூடத்திற்குச் செல்ல முடியாமல் அறவே தடுக்கப்பட்டுள்ளனர். அவர்களுக்கு உதவியளிப்பார் யாருமில்லை. ஹரிஜனங்கள் யாவரும் வேறு ஏதாவதொரு கிராமத்திற்குக் குடியேறுவது பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கிறர்கள். அந்த அளவுக்கு ஹரிஜனங்களிடையே ஏக்கமும் மனச்சோர்வும் ஏற்பட்டுள்ளன."

சுய உதவியைக் காட்டிலும் சிறந்த உதவி வேறில்லை. தங்களுக்குத் தாங்களே உதவி செய்துகொள்ளுவோருக்குத்தான் கடவுள் உதவி செய்கிறர். சம்பந்தப்பட்ட ஹரிஜனங்கள், தாங்கள் செய்துள்ள உறுதியை நிறைவேற்றி, கால்களைக் கழுவி விட்டுக் கவிதா கிராமத்திலிருந்து வெளியேறிவிடுவார்களாயின், அவர்கள் இன்ப வாழ்வு பெறுவதுடன், அவர்களைப் போல் நடத்தப்படும் மற்றவர்களுக்கும் அவர்கள் வழிகாட்டியவராவார்கள். உத்தியோகத்தை நாடி மக்கள் வேருெரு இடத்துக்குக் குடியேறுவது அவசியமாயின், சுயமரியாதையை நாடி அவர்கள் வேறிடத்திற்குக் குடியேற வேண்டியது எவ்வளவு அதிக அவசியமாகும்? அன்பும் ஆதரவும் இல்லாத கவிதா கிராமத்திலிருந்து இந்த ஏழைக் குடும்பங்கள் வெளியேறுவதற்கு, ஹரிஜனங்களின் நலனில் அக்கறையுள்ளவர்கள் உதவி புரிவார்களென நம்புகிறேன்.

—'ஹரிஜன்' - 5—10—1935

## 12

# ஒரு சிறு சம்பவம்

ஒரு நாள் காலை நான் சேகானுக்குச் சென்றபோது, தலைமயிர் கத்திரிக்கும் யந்திரத்தைப் பகுதி பகுதியாக காந்திஜி கழற்றிக் கொண்டிருந்ததைப் பார்த்தேன். சுத்தம் செய்து எண்ணெய் போட்டு வைப்பதற்காகவே அவ்வாறு கழற்றிக் கொண்டிருந்தார். இவ்வேலை முடிந்ததும், ஒரு கண்ணுடியை தமக்கு எதிரில் வைத்துக்கொண்டு தாமே தலைமயிரை வெட்டிக் கொள்ள ஆரம்பித்து விட்டார்.

அந்தச் சமயம் சாதுவின்* பக்தர்களில் ஒருவர் உள்ளே வந்தார். வந்தவர் ஒரு நாவிதர். இதைக் கண்டதும் எதிர்த்தாற் போல் மூலையில் இருந்த சாது, "பாபுஜி! பீமன் உங்கள் தலை மயிரைக் கத்திரித்து விடட்டும். அவனுக்கு அவ்வேலை தெரியும்" என்று சத்தம் போட்டார்.

"அவருக்கு இந்த வேலை எப்படித் தெரியும்? என்று கேட்டார் காந்திஜி.

"க்ஷவரத் தொழில் செய்து ஜீவிப்பவரே அவர்" என்றார் சாது.

---

* இந்தச் சாதுவைப் பற்றிய பிரஸ்தாபம், ஸ்ரீ மகாதேவ தேசாய் 1936-ஆகஸ்டு 1-ஆம் தேதி 'ஹரிஜ'னில் எழுதியிருக்கும் வாரக் கடிதத்திலும் குறிப்பிடப் பட்டிருக்கிறது. சாதுவின் பக்தர்களுக்கு எழும் சந்தேகங்களுக்கும் கஷ்டங்களுக்கும் பதில் சொல்ல சாதுவினால் முடியாது போகும்போது, காந்திஜி அவர்களுக்குப் பதில் சொன்ன விவரமும் அக்கடிதத்தில் கூறப்பட்டிருக்கிறது. அதன் விவரமும் வருமாறு:

"சாது, அச்சமயம் அக்குடும்பத்தைச் சேர்ந்தவராக இருந்தார். அவருடைய பக்தர்கள் பலர் அவரிடம் வந்துகொண்டிருப்பார்கள். மகாத்மாவுடன் இந்தச் சாது நெருங்கிப் பழகுவது மாத்திரமல்ல, அவருடன் வசித்து வந்த ஹரிஜனச் சிறுவன் சமைப்பதையும் சாப்பிட்டு வருவது, வந்த பக்தர்களுக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. அனுஷ்டானத்தில் தீண்டாமையில் சாதுவுக்குக் கொஞ்சமும் நம்பிக்கை கிடையாது. ஆனால், தமது பக்தர்கள் அனுசரித்து வரும் இந்தத் துவேஷத்தைக் குறித்து அவர் கண்டிப்பதும் இல்லை. அவர்கள் சாதுவிடம் வந்து விவாதிப்பார்கள். தங்களுக்கு இருக்கும் சந்தேகங்களையும் கஷ்டங்களையும் சாதுவினால் தீர்த்துவைக்க முடியாதபோது, சில சமயங்களில் அவர்கள் காந்திஜியையே போய்க் கேட்பார்கள்.

அப்படிப்பட்ட பக்தர்களில் ஒருவர் சொன்னார்: "தாழ்ந்த பிறவிகள்கூட தீண்டாமையை அனுசரிக்கின்றன. அப்படியிருக்க மகாத்மாஜி, நீங்களோ மனிதன் தீண்டாமையை அனுசரிக்கக் கூடாது என்கிறீர்கள்."

காந்திஜி: நீங்கள் சொல்லுவது விசித்திரமாக இருக்கிறது. நீங்கள் சொல்லுவது என்ன என்பதைக் கொஞ்சம் விளக்கிச் சொல்லுங்கள்.

சாதுவின் பக்தர்: கழுதைகள், நாய்களுடன் சேர்ந்து பழகுவது இல்லை. புறாவின் முட்டைகளைக் காக்கை தீண்டுவதும் இல்லை. கடவுளின் சிருஷ்டியில் ஒவ்வொரு இனத்திற்கும் அதற்கான தனி அம்சமும் இடமும் இருந்து வருகிறது.

காந்திஜி; நீங்கள் சொந்தத்தில் தீனி போட்டு வளர்ப்பதாக இருந்தால் பசுக்கள், கழுதைகள், நாய்கள் ஆகியவை ஒரே கூரையின் கீழ் இருந்து வாழச் சந்தோஷமாகத் தயாராக இருக்கின்றன. ஒரு பசுவுக்கும் நாய்க்கும் என்ன வித்தியாசம் இருக்கிறதோ, அதே வித்தியாசமே உங்களுக்கும் ஒரு தீண்டாதாருக்கும் இருக்கிறது என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

இதைக் கேட்டதும் அவர்கள் திகைத்துப் போய்விட்டனர்; ஆனால், பொருந்தக் கூடியதாகச் சில உதாரணங்களையும் எடுத்துக்கூற முற்பட்டனர். "காட்டு மிருகங்களை நாய் வெறுத்துத் தவிர்ப்பதில்லையா?" என்று கேட்டார்கள்.

காந்திஜி: சிங்கங்களையும் புலிகளையும், பாம்புகளையும் நாம் தவிர்ப்பது, அவை தீண்டத்தகாதவை என்பதனாலா? அதனால்தான் என்று கூறிவிடுவது அபத்தமானது. அம்மிருகங்களை நீங்கள் தவிர்க்கிறீர்கள் என்றால், அவற்றைக் கண்டு நீங்கள் பயப்

"அப்படியானல் சரி, வந்து வெட்டிவிடும்" என்ருர் காந்திஜி.

பீமன் மயிரைக் கத்தரிக்கும் வேலையைச் செய்ய ஆரம்பித்ததும் காந்திஜி, "நம் ஹரிஜன சகோதரர்களுக்கு க்ஷவரம் செய்து விடுவது சம்பந்தமாக உங்களுக்கு எவ்வித துவேஷமும் இல்லை என்றே நம்புகிறேன். அப்படி ஏதாவது துவேஷம் உங்களுக்கு உண்டா?" என்று பீமனைக் கேட்டார்.

---

படுவது அதற்குக் காரணம். உங்களால் முடிந்தால் அவற்றை அடக்கி வளர்க்கவும் தவறமாட்டீர்கள். அவற்றை அடக்கிப் பழக்கிவிடுகிறவரிடம் அற்புதமான சக்திகள் இருப்பதாகக் கூறி அப்படிப்பட்டவரைக் காண ஏராளமான ஜனங்கள் கூடிவிடுகிருர்கள்."

"ஆனல், பன்றியை நாம் தொடாததற்குக் காரணம், அவை ஆபாசமாக இருக்கின்றன என்பதற்காகவே அன்றி அவற்றைக் கண்டு பயப்படுகிருேம் என்பதனல் அல்ல" என்ருர்கள், அவர்கள்.

காந்திஜி: அப்படியானல் சரி. உங்களைவிட அதிக சுத்தமான ஆடையை அணிந்திருப்பவர் ஒருவர், தீண்டத்தகாதவர்கள் என்று உங்களைக் கருதுகிருர் என்று வைத்துக்கொள்ளுவோம். இதை நீங்கள் ஒப்புக்கொள்ளுவீர்களா? உங்கள் குழந்தைகளுக்காக ஆபாசமான எல்லா வேலைகளையும் உங்கள் பெண்கள் செய்கிருர்களே அவர்கள் நிலைமை என்ன? அவர்களே குடும்பங்களின் எஜமானிகளாக இருக்கின்றனர். அது ஏன்?

ஆனல், அவர்களுக்குக் கொஞ்சம் விட்டுக் கொடுக்கவும் காந்திஜி முயன்ருர். அவர் கூறியதாவது: "தீண்டப்படாதவர்கள் என்று கூறப்படுகிறவர்கள், உங்களைப் போலவே நன்ருக உடை அணிகிருர்கள், உங்களுக்காக ஆபாசமான வேலைகளையெல்லாம் செய்த பிறகு நன்ருகத் தங்களைச் சுத்தம் செய்துகொள்ளுகிருர்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். இவர்களை நீங்கள் வெறுப்பதற்கோ, தவிர்ப்பதற்கோ பதிலாக நீங்கள் இவர்களைத் தொட்டுக்கொள்ளுவீர்களா? அவர்கள் சுத்தமான உணவையே சாப்பிடுகின்றனர், மாட்டு மாமிசத்தையோ, செத்த கால்நடைகளையோ தின்பதில்லை என்ருல், அப்பொழுது நீங்கள் அவர்களைத் தொடுவீர்களா? இந்த நிபந்தனைகளையெல்லாம் பூர்த்தி செய்துவைக்கக்கூடியவர்களான ஹரிஜனங்கள் இந்தியாவில் எத்தனையோ பேர் இருக்கிருர்கள் என்பதை உங்களுக்குச் சொல்லுகிறேன். நம்மைவிட அவர்கள் அதிக சுத்தமாகவும் புனிதமாகவும் வாழ்கிருர்கள். என்ருலும், அவர்களைத் தீண்டத்தகாதவர்கள் என்று நாம் எண்ணுகிருேம். நாம் செய்துவரும் இப்படுமோசமான பாவத்தைக் கடவுள் எப்படி மன்னிப்பார்?"

"ஆனல், அவர்களை நாங்கள் கோயில்களுக்குள்ளும் அனுமதிக்க வேண்டும் என்கிறீர்கள். ஆபாசமான வேலைகளைச் செய்து வருகிறவர்களை எப்படிக் கோயில்களுக்குள் அனுமதிக்க முடியும்?" என்றும் அவர்கள் கேட்டார்கள்.

அதற்குக் காந்திஜி கூறியதாவது: "ஆபாசங்களையெல்லாம் தலையில் சுமந்து கொண்டு கோயிலுக்குப் போகும்படி அவர்களை என்ருவது நான் சொன்னது உண்டா? கோயிலுக்குப் போவதற்கு மற்ற ஹிந்துக்கள் எப்படி குளித்து முழுகிச் சுத்தமாக இருக்க வேண்டுமோ அப்படியே அவர்களும் இருக்கவேண்டும் என்றும் நான் சொல்லவில்லையா? நீங்கள் சொல்லுகிறபடி பார்த்தால், எல்லா ரண சிகிச்சை வைத்தியர்களும் நர்ஸுகளும் நம் கோயில்களுக்குள் செல்லத் தகுதியற்றவர்களே!"

இந்த விவாதம் நீண்ட நேரம் நடந்துகொண்டே போயிற்று. இதன் முடிவு என்ன என்று நான் கூறமுடியாது. அந்த விவாதத்தின் சாரத்தை மாத்திரமே நான் கொடுத்திருக்கிறேன்.

பீமன் கொஞ்சம் தயங்கினன். பிறகு, "ஹரிஜனங்களிடம் எனக்கு என் மனத்தில் எந்த விதமான துவேஷமும் இல்லை" என்ருன்.

இதற்கு காந்திஜி, "அதை நான் நம்ப முடியும். ஆனல், எனக்கு எப்படி நீர் க்ஷவரம் செய்வீரோ அதேபோல் ஒரு ஹரிஜனுக்கும் செய்வீரா?" என்று கேட்டார்.

பதில் சொல்ல திரும்பவும் பீமன் தயங்கினன். அதன் பேரில் காந்திஜி சாதுவிடம் கூறியதாவது: "இவருடைய சேவையை ஏற்றுக்கொள்ளும்படி என்னிடம் நீங்கள் சொல்லுவதற்கு முன்னல், இவ்விஷயத்தை நீங்கள் அவரிடம் கேட்டுத் தெரிந்துகொண்டிருப்பீர்கள் என்றே எண்ணினேன்."

"வருந்துகிறேன். அந்த விஷயம் எனக்குத் தோன்ருமல் போய்விட்டது" என்ருர் சாது.

"அப்படியானல், தலைமயிரைக் கத்தரிப்பதை அப்படியே நிறுத்திவிட்டு பீமனைப் போகச் சொல்லிவிடுவது பற்றி நான் சிந்திக்க வேண்டியிருக்கிறது" என்ருர், காந்திஜி.

ஆனல், பீமன் கூறினன்: "வேண்டாம். வழக்கமாக நான் ஹரிஜனங்களுக்கு க்ஷவரம் செய்வதில்லையென்ருலும், இப்பொழுதிருந்தே இதே போன்று அவர்களுக்கும் வேலை செய்கிறேன் என்று உறுதி கூறுகிறேன்."

காந்திஜி அதிகத் திருப்தியடைந்தார். பீமன் சுத்தமாக காந்திஜியின் தலைமயிரைக் கத்தரித்து முடித்தான். நாகபுரி தேசீயக் கொடி சத்தியாக்கிரகத்தின்போது தாம் சிறையிலிருந்ததாக பீமன் கூறினன். அப்பொழுது சிறையில் யாரிடமும் துவேஷமின்றி எல்லோருக்கும் க்ஷவரம் செய்துகொண்டு வந்தானும். ஆனல், சிறைக்கு வெளியே வந்ததும் பொதுஜனங்களிடையே இருந்த துவேஷமெல்லாம் தனக்கும் வந்துவிட்டது என்றும், இனி அவ்விதம் செய்யப் போவதில்லையென்றும் காந்திஜியிடம் விளக்கினன்.

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.]

—'ஹரிஜன்' – 15—8—1936

# 13

# பலவந்த வேலை

சில கிராமங்களில், சில ஹரிஜனங்கள் வெளியிட்டிருக்கும் மிரட்டலைக் குறித்து பத்திரிகைகள் விளம்பரம் செய்திருக்கின்றன. கிறிஸ்தவர்களாகிவிட்டால் அவர்கள் நன்ருக நடத்தப்

படுவார்கள் என்றும், முக்கியமாக உயர்சாதி ஹிந்துக்கள் என்பவர்கள் இப்பொழுது வாங்கிவரும் பலவந்த வேலையிலிருந்து விடுவிக்கப்படுவார்கள் என்றும், கிறிஸ்தவப் பாதிரிகள் வாக் களித்து இவர்களை ஹிந்து மதத்திலிருந்து வெளியேற்றிவிட முயற்சிக்கின்றனர். அந்த ஹரிஜனங்களும், கிறிஸ்தவர்களாகி விடுவதாக பயமுறுத்தி வருகிறார்களாம். அதன்பேரில் ஹிந்து சமயப் பிரதிநிதிகளும், ஹரிஜன சேவா சங்கப் பிரதிநிதிகளும் அந்த ஹரிஜனங்களைச் சந்தித்தனர். அவர்களை நன்றாக நடத்துவ தாக உயர்சாதி ஹிந்துக்களிடம் வாக்குறுதியையும் பெற்றனர் எனத் தெரிகிறது. இப்போதைக்குப் புயல் சமாளிக்கப்பட்டிருக் கிறது. ஹரிஜனங்கள் தங்கள் மதத்தில் சேர்ந்துவிடுவதால் கிறிஸ்தவ மத ஸ்தாபனத்திற்கு என்ன லாபம் ஏற்பட்டிருக்கும். மதம் மாறிய ஹரிஜனங்கள் எந்த அளவுக்கு யோக்கியமாக மதம் மாறியவர்களாவார்கள் என்பது எனக்குத் தெரியவில்லை. ஆனால், இது மாத்திரம் எனக்குத் தெரியும்; இத்தகைய மத மாற்ற முயற்சிகள் சமூகத்தின் ஒழுக்கத்தைக் கெடுத்து விடுகின்றன; சந்தேகங்களையும் துவேஷத்தையும் வளர்க்கின்றன; சமூகத்தின் முன்னேற்றத்தை எல்லா வழிகளிலும் கெடுக்கின்றன. ஹரிஜனங் களை ஒழுங்காக நடத்துவதற்கு, மத மாற்றம் என்று சொல்லப் படும் ஒன்றை விலையாகக் கொள்ளாமல் கிறிஸ்தவப் பாதிரிமார் கள், ஹரிஜனங்களின் கஷ்டங்களைக் குறைப்பதற்கு முயன்று வரும் ஹரிஜன ஊழியர்களுடன் ஒத்துழைப்பார்களாயின், அவர் களுடைய உதவி வரவேற்கப்படும்; சமூகத்தின் முன்னேற்ற மும் துரிதமாக நிறைவேறும்.

ஆனால், இதை நான் எழுதுவது சாதி ஹிந்துக்களின் மனச் சாட்சியைத் தட்டியெழுப்புவதற்கேயன்றி, கிறிஸ்தவப் பாதிரி களின் முறையை அம்பலப்படுத்துவதற்காக அன்று.

ஹரிஜனங்களிடமும், தாழ்த்தப்பட்ட வகுப்பார் என்று சொல்லப்படுகிறவர்களிடமும் சிறு நிலச்சுவான்தார்கள் பலவந் தப்படுத்தி வேலை வாங்கிக்கொள்ளுவது என்ற முறை அநேகமாக இந்தியாவில் எங்கும் இருந்து வருகிறது. இச்சிறு நிலச்சுவான் தார்கள் எல்லோருமே அநேகமாக ஹிந்துக்கள். இவ்விதம் இவர்கள் கட்டாயப்படுத்தி வேலை வாங்குவதை ஹரிஜனங் களும் மற்றவர்களும் சட்டப்படி எதிர்க்க முடியும். தங்களுடைய உரிமைகளைப் பற்றிய உணர்வு அவர்களுக்கு நிச்சயமாக ஏற் பட்டுவிடுவதோடு, மெள்ள விழிப்பையும் அடைந்து விடுகின்றனர். இந்த உரிமைகளை அமலுக்குக்கொண்டு வருவதற்குப் போது மான தொகையினரும் இருக்கிறார்கள். ஆனால், விதிப்படி ஆவது ஆகட்டும் என்று உயர்சாதி ஹிந்துக்கள் என்பவர்கள் கையாலா காமல் சும்மா இருந்துவிடுவார்களானால், அவர்களுக்குக் கொஞ்ச மும் கௌரவமே இராது. ஹரிஜனங்களைத் தங்கள் சகோதரர்க ளாகக் கருதி அவர்களுக்குத் தாங்கள் செய்ய வேண்டிய கடமையை உணர்ந்து, மனிதனுக்கு உரிய மரியாதையையும், வலியச் செய்யும் உழைப்புக்கு ஊதியத்தைப் பெறுவதற்கு,

அவர்களுக்குள்ள உரிமையையும் உயர் சாதியினர் என்போர் ஒப்புக் கொள்ளுவார்களாயின், அதுவே நிச்சயமாக மிகச் சிறந்ததாகும்.

ஹரிஜன ஊழியர்கள், எந்த ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்களாக இருப்பினும் சரி, ஹரிஜனங்களுடன் சிநேகமாக இருந்து, அவர்களுடைய நிலையை விவரமாக ஆராய்வது ஊழியர்களுக்குரிய கடமையாகும். அதோடு, உயர் சாதி ஹிந்துக்கள் என்பவர்களையும் அணுகி, அவர்கள் யாரை சாதிப்பிரஷ்டர்கள் என்று நடத்திச் சட்டப்படியுள்ள அவர்கள் உரிமைகளையும் பறித்திருக்கிறார்களோ அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமை என்ன என்பதை, எவ்வளவு நயமாக எடுத்துச் சொல்ல முடியுமோ அவ்வளவு நயமாக எடுத்துக் கூறியாக வேண்டியது ஹரிஜன ஊழியர்களின் கடமை.

ஓடேயிலும், குஜராத்திலுள்ள மற்றுஞ் சில கிராமங்களிலும் சாதி ஹிந்துக்கள், தங்கள் செத்த கால்நடைகளைத் தூக்கிச் சென்றுவிடும் ஹரிஜனங்கள் உரித்தெடுக்கும் தோலில் பாதியை வாங்கிக் கொண்டுவிடுகிறார்கள் என்று, என் முன்னாலிருக்கும் கடிதங்களிலிருந்து அறிகிறேன். ஹரிஜனங்கள் தூக்கிச் செல்லும் செத்த கால்நடைகள், அந்த ஹரிஜனங்களுக்கே சொந்தம் என்னும் சதாரணமான பழக்கத்திற்கு இது விரோதமானது. சில இடங்களில், ஹரிஜனங்கள் தூக்கிச் செல்லும் செத்த கால்நடைகள் அவர்களுக்கே சொந்தமாகி விடுவதோடு, அவற்றை அப்புறப்படுத்தியதற்குப் பணமும் பெறுகிறார்கள். இது சம்பந்தமாக மேற்கொண்டும் பரிசீலனை செய்து நியாயமான ஏற்பாட்டைச் செய்ய வேண்டியது அவசியம். ஹரிஜனங்கள் நியாயமாக நடத்தப்படுவார்களானால், செத்த கால்நடைகள் விஷயத்தில் உயர்சாதி ஹிந்துக்கள் என்போருக்குப் பயம் எதுவும் இருப்பதற்கில்லை. தீட்டுப்பட்டுவிடும் என்ற மூடநம்பிக்கையான விதிகள் எவையும் இல்லை என்றால், செத்த மாட்டை உரிக்கும் கலையை அவர்கள் கற்றுக் கொள்ளுவதோடு, செத்த கால்நடையின் ஒவ்வோர் பாகத்தையும் செல்வமாக்கிக் கொண்டுவிடுவார்கள். இதைத் தங்களுக்கு நன்மையானதாக்கிக் கொள்ளுவதோடு, செத்த கால்நடையைப் பயன்படுத்திக் கொள்ளும் வேலையில் தங்களுக்கு உதவி செய்யும்படி அழைக்கப்படும் ஹரிஜனங்களுக்கும் லாபகரமாகும்படி செய்வார்கள்.

—'ஹரிஜன்' – 1–5–1937

# 14

# போலீஸாரும் ஹரிஜனங்களும்

1939 செப்டம்பர் 9-ஆம் தேதி வெளியான "ஹரிஜன்" பத்திரிகையில் காந்திஜி, தென்பட்டணம் சேரி ஹரிஜனங்கள் கொடுமைப்படுத்தப்பட்டதைக் குறித்து ஸ்ரீ கே. தாத்தாச்சாரியார், தமது நாட்குறிப்பிலிருந்து அனுப்பியிருந்த விஷயங்களைப் பிரசுரித்திருக்கிறார். அதன் சாராம்சம் இதுதான்: தென்பட்டணம் சேரியைச் சேர்ந்த சில ஹரிஜனங்கள், 28-11-38-இல் ஒரு நாடகம் நடத்தினர்கள், இந்நாடகம் தென்பட்டணத்தை அடுத்துள்ள முகயூரின் ஒரு பகுதியில் நடந்தது. நாடகம் இரவு 8 மணிக்கு ஆரம்பமாகி முதலில் பிள்ளையார் வேஷம் மேடைமீது வந்தது. பின்னர் கட்டியக்காரன் வந்தான். அப்பொழுது சுமார் 100 பேர் கம்புகளுடன் வந்து அங்கே கூடியிருந்த ஹரிஜனங்களை அடித்தனர். இதனல் 10 பேருக்கு ரத்தக் காயம் ஏற்பட்டது, வந்தவர்கள் பிறகு போய்விட்டனர். அடுத்த நாள் காலை 7 மணிக்கு சுமார் 150 பேர் மேற்கண்ட சேரி பட்டா நிலத்திற்குள் பிரவேசித்தனர். அவர்களில் ஒருவரிடம் துப்பாக்கி இருந்தது. நான்கு, ஐந்து பேர்களிடம் பட்டாக்கத்திகள் இருந்தன. மற்றவர்கள் தடி வைத்திருந்தார்கள். இவர்கள் இத்தடவை தாக்கியதில் மூவர் காயமடைந்தார்கள். ரூ. 640 பெறுமானமுள்ள 160 ஆடுகளை ஓட்டிக்கொண்டு போய்விட்டார்கள். அதோடு, நாடகமாடியவர்களின் ரூ, 150 பெறுமானமுள்ள ஆடைகள், நகைகள், 20 வேட்டிகள், 30 புடவைகள், 5 ஷர்ட்டுகள், பித்தளைப் பாத்திரங்கள், நாடக மேடைக்கு வைத்திருந்த 5 பலகைகள் முதலிய ரூ. 1000 பெறுமானமுள்ள சாமான்களை எடுத்துக்கொண்டு போய்விட்டதோடு, 13 பேரைக் காயப்படுத்திவிட்டனர்.

28-ஆம் தேதி நடந்த சம்பவம் முழுவதும் மறுநாள் காலை 5 மணிக்குச் செய்யூர் போலீஸ் ஸ்டேஷனில் அறிவிக்கப்பட்டது. போலீஸார் வாக்குமூலத்தைப் பதிவு செய்துகொள்ளவில்லை. கலகம் நடந்த இடத்திற்குப் போலீஸார் உடனே போகாமல், தலையில் காயம்பட்டு இரு கைகள் முறிந்துபோன கோதண்டனை செய்யூருக்குக் கொண்டு வருமாறு கூறினர். போலீஸார் ஸ்தலத்திற்குப் போயிருந்தால், 29-ஆம் தேதி நடந்த சம்பவம் ஏற்பட்டிருக்காது.

30-ஆம் தேதி ஹெட்கான்ஸ்டபிள் சாவதானமாக அக்கிராமத்திற்குப் போய் பல கேள்விகளைக் கேட்டுவிட்டுப் போய்விட்டார். டிசம்பர் 1-ஆம் தேதி இரு கான்ஸ்டபிள்கள், ஹெட்கான்ஸ்டபிளுடன் சப் இன்ஸ்பெக்டர் கிராமத்திற்கு வந்தார். சின்னசாமி ரெட்டியாரும் தென்பட்டணத்தைச் சேர்ந்த பலரும் வந்தார்கள். எடுத்துப்போய்விட்ட சாமான்களையெல்லாம் திருப்பிக் கொடுத்துவிடும்படி செய்வதாக சின்னசாமி ரெட்டியார் வாக்குறுதி கூறினர். அப்படி திரும்பிக் கொடுத்து விடாவிட்டால், சேரியார் தம்மிடம் வந்து சொன்னல் பிறகு அதைக் குறித்து விசாரிக்கப்படும் என்று சொல்லிவிட்டு இன்ஸ்பெக்டர் போய்விட்டார். அச்சமயம் இன்ஸ்பெக்டர், தென்பட்டணத்தைச் சேர்ந்த நால்வரைக் கைது செய்து செய்யூருக்குக் கொண்டு போனர்.

7-ஆம் தேதி வரையில் சொத்துக்கள் திருப்பிக் கொடுக்கப்படாததால், சேரிவாசிகள் போலீஸ் ஜில்லா சூப்பரின்டெண்டிற்கும், கலெக்டர், டிபுடி கலெக்டர் முதலியவர்களுக்கும் அறிவித்தார். 10-ஆம் தேதி ஹெட்கான்ஸ்டபிள், சின்னசாமி ரெட்டி, தென்பட்டணம், முகயூரைச் சேர்ந்த ஐம்பது ஆறு பது பேர்கள் வந்தார்கள். நாடகம் நடக்கவில்லை, கலவரம் ஏற்படவில்லை, எப்பொருளும் எடுத்துச் செல்லப்பட்டுவிடவில்லை என்று ஒருதஸ்தாவேஜியில் கையெழுத்து வாங்கினர். எடுத்துச் சென்ற பொருள்கள் திருப்பிக் கொடுக்கப்பட்டுவிடுவதற்குத் தாம் பொறுப்பு என்று சின்னசாமி ரெட்டி மீண்டும் கூறினர். வேறு வழியில்லாமல் சேரி வாசிகள் ஒப்புக்கொண்டார்கள். 21-ஆம் தேதி வரையில் பொருள்கள் திருப்பிக் கொடுக்கப்படவில்லை. சேரி வாசிகள், செய்யூரிலிருக்கும் பூஜ்ய பாதர் சாமியாரைப் பார்த்தனர். 25-ஆம் தேதி ஹெட்கான்ஸ்டபிளும் சின்னசாமி ரெட்டியாரும், 111 ஆடுகளைத் திருப்பித் தரும்படி செய்தனர். மீதமுள்ள பொருள்கள் கொடுக்கப்படவில்லை.

7-12-38-இல் செய்திருந்த புகாருக்கு ஜில்லா போலீஸ் சூப்பரின்டெண்டு 6-1-39-இல் அனுப்பிய பதிலில், "சமரசம் ஏற்பட்டுவிட்டது என்றும், இப்போது எந்தவிதத் தொந்தரவும் இல்லை என்றும் அறிவிக்கப்படுகிறது" என்று அறிவித்திருந்தார்.

முற்றிலும் நீதி தவறி நடந்துகொள்ளப்பட்டிருக்கிறது என்பதற்கு இது உதாரணமாகத் தோன்றுகிறது. விஷயம் நாள்பட்டதாகிவிட்டாலும், இது விசாரிக்கப்பட வேண்டியதாகும். அடைந்த துன்பத்திற்கு நிவாரணம் தேடிக்கொள்ளச் செய்த முயற்சியில், அந்த மக்களையும் அவர்கள் நண்பர்களையும் பொறுத்த வரையில், எந்த அசிரத்தையும் இருந்துவிடவில்லை. ஆனல், ஸ்ரீ தாத்தாச்சாரியார் கூறியிருப்பது உண்மையாக இருக்குமாயின், அவர்கள் ஹரிஜனங்கள் என்பதற்காக அவர்களுக்கு நீதி மறுக்கப்பட்டிருக்கிறது. போலீஸ்காரர்கள், மற்றவர்களைப் போலவே ஹரிஜனங்களுக்கும் சமமாகச் சேவை செய்ய வேண்டும் என்பதை, போலீஸில் கீழ் உத்தியோகத்திலிருப்பவர்களுக்கும் போதித்தாக வேண்டும். காங்கிரஸ் ஆட்சியிலாவது தங்களுக்கு நியாயம் கிடைக்கும் என்று ஹரிஜனங்கள் உணரும் வகை இருக்க வேண்டும்.

[சிம்லாவுக்குச் செல்லும் வழியில் 3—9—39-இல் ரெயிலில் எழுதியது]

—'ஹரிஜன்' - 9—9—1939

# 15

# இரட்டிப்புப் படிப்பு

ஷோலாப்பூர் ஜில்லா போர்டு தலைவர் ஸ்ரீ டி. எஸ். யாதவ் எழுதுவதாவது :

"முக்கியமாகத் தண்ணீர் வசதி, கல்வி வசதி போன்ற உடனடி தேவைகளில் ஹரிஜனங்களுக்குச் சௌகரியங்களைச் செய்து கொடுக்க இடைவிடாமல் நான் முயற்சி செய்துவருகிறேன். காங்கிரஸ் போர்டு, ஹரிஜனங்களுக்கு ஏராளமான கிணறுகளைத் திறந்துவிட்டிருக்கிறது. இந்தக் கிணறுகளில் எல்லாம், இதைத் தெரியப்படுத்தும் அறிவிப்புகளை அவ்விடங்களில் வைக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், 'தீண்டத்தகுவோர்' சங்கடத்தை உண்டாக்கிவிடுவார்களோ என்று பயந்துகொண்டு ஹரிஜனங்கள் இந்த வசதிகளைப் பயன்படுத்திக்கொள்ள முன்வராமலிருப்பது வருந்தத்தக்கதாகும். என் சுற்றுப் பிரயாணத்தின்போது, நான் போகும் இடங்களெல்லாம், எந்தவித சங்கடமும் இல்லாமல் ஹரிஜனங்கள் தங்களுடைய நியாயமான உரிமைகளை அனுபவிப்பதற்கு அனுமதிக்கும்படி 'தீண்டத்தகுவோரைக்' கேட்டுக் கொண்டு வருகிறேன். அதே சமயத்தில், எந்தப் பொதுக் கிணற்றிலிருந்தும் குடிதண்ணீரை எடுத்துக் கொள்ளுவதற்குத் தங்களுக்கு இருக்கும் அடிப்படை உரிமையைத் தைரியமாக ஸ்தாபித்துக் கொள்ளுமாறு ஹரிஜனங்களுக்கும் எடுத்துக் கூறி வருகிறேன். பொதுக்கூட்டங்களில் பேசுவது, கட்டுரைகளில் எழுதுவது, தனிப்பட்ட விவாதங்களில் சொல்லுவது ஆகியவைகளின் மூலம் நான் இதைச் செய்து வருகிறேன். அனுபவ உதாரணமாக ஒன்று செய்தும் வருகிறேன். பொதுக்கூட்டம் முடிந்ததும் சில ஹரிஜனங்கள், 'தீண்டத்தகுவோ'ரான சில காங்கிரஸ் ஊழியர்கள், உள்ளூரிலுள்ள முக்கியமானவர்கள் சிலர் ஆகியவர்களுடன் நான் ஒரு கிணற்றுக்குப் போகிறேன். அக்கிணற்றிலிருந்து ஹரிஜனைக் கொண்டு தண்ணீர் எடுத்து எல்லோரும் குடிக்கிறோம். ஆனால், இந்த வைபவத்தில் கலந்துகொள்ளாத 'தீண்டத் தகுவோர்', வைபவத்தில் கலந்துகொண்ட 'தீண்டத்தகுவோரை' பகிஷ்காரம் செய்கின்றனர். ஹரிஜனங்களுக்கும் எல்லாவகையான தொந்தரவையும் செய்கின்றனர். எனினும், இந்தப் பகிஷ்காரத்தின் தன்மையும், அவர்கள் கொடுக்கும் தொந்தரவின் கடுமையும் நாளுக்கு நாள் குறைந்துகொண்டு வருகின்றன என்பதில் சந்தேகமில்லை. என்றாலும், இக் கஷ்டங்கள் ஏதோ ஒரு வகையில் இருந்துகொண்டே இருப்பதோடு, தீண்டாமையை ஒழிப்பதற்கு இடையூறுகளாக இருந்துதான் வருகின்றன. இதில் மேற்கொண்டும் ஏதாவது யோசனை கூறுகிறீர்களா?"

இது, நிச்சயமாகச் சிறந்த வேலை. 'தீண்டத்தகுவோர்,' தீண்டாதார் ஆகிய இரு தரப்பினருக்கும் போதனையாக இருக்கக்கூடிய விஷயம், தீண்டாமை ஒழிப்பு. தீண்டாமையை அனுசரிப்பது கடவுளுக்கும் மனித சமூகத்திற்கும் செய்யும் பாவம் என்பதை 'தீண்டத்தகுவோ'ருக்கு நியாயத்தை எடுத்துக் கூறுவதன் மூலமும், உதாரணத்தைக் கொண்டும் போதிக்க வேண்டும். தீண்டாதாரும், 'தீண்டத்தகு'வோரைக் கண்டு அஞ்சுவதை விட்டுவிட வேண்டும்; தங்களுக்குள்ளேயே தீண்டா

மையை அனுசரிப்பதை ஒழித்துவிட வேண்டும் என்று இவர்களுக்குப் போதிக்க வேண்டும். இதைச் சொல்லுவதுதான் எளிதாக இருக்கிறதே யன்றி செய்வது எளிதல்ல என்பதை நான் அறிவேன். ஆனால், இதைத் தவிர வேறு எதையும் நான் காணவில்லை. இவ்விரு தரப்பாரின் நடுவில் நான் வசித்து வருவதால், இவ்விரு சாராரிடத்திலும் இந்த வேலை எவ்வளவு கஷ்டமானதாக இருக்கிறது என்பது எனக்குத் தெரியும். ஹிந்து சமயம் சாகாமல் இருந்துவர வேண்டுமானல், இவ்வேலை எவ்வளவுதான் கஷ்டமானதாக இருந்தாலும், என்னதான் முடியாததாக இருந்தாலும், இவ் வேலையைச் செய்தே ஆக வேண்டும்.

—'ஹரிஜன்' – 8—6—1940

# 16

# உரிமையை நிலைநாட்டுக

ஒரு ஹரிஜன மணப்பெண்ணை கார்வாலில் எவ்விதத் தடையோ, தொந்தரவோ இல்லாமல் பல்லக்கில் வைத்துக் கொண்டு போனார்கள் என்று அறிவிக்கும் நல்லதிர்ஷ்டம் சில தினங்களுக்கு முன்னல் எனக்கு வாய்த்தது. ஆனல், அப்படி தொந்தரவின்றி ஹரிஜன மணப்பெண் பல்லக்கில் கொண்டு போகப்பட்டது ஏதோ ஒரு தனிச் சம்பவமே என்றும், ஹரிஜனங்கள் பல்லக்கை உபயோகிப்பதைத் தடுப்பது என்பது எப்பொழுதும் போல் குறையாமல் இருந்து கொண்டுதான் வருகிறது என்றும் ஹரிஜன சேவா சங்கத்தைச் சேர்ந்த ஸ்ரீ சியாம்லால் கூறுகிறார். இவ்வாறு தடுக்கப்பட்ட இரு சம்பவங்களைச் சமீபத்தில்தான் தாம் பார்த்ததாகவும் அவர் சொல்லுகிறார். பல்லக்குகளை உபயோகிக்கத் துணிந்த ஹரிஜனங்களை, 'கொஞ்சமும் இரக்கமின்றி, தாக்கி அடித்துவிட்டார்கள்' என்கிறார். ஹரிஜனங்ளிடையே விழிப்பு ஏற்பட்டு வருகிறது. தங்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்று கமிஷனரிடம் போய்க் கேட்டார்கள். இரு வாரங்களுக்கு முன்னதாகவே தமக்கு அறிவித்தால் பாதுகாப்பளிக்கத் தாம் தயாராக இருப்பதாக கமிஷனர் அறிவித்திருக்கிறார். ஆனல், அதன் விளைவாகப் பகைமைதான் அதிகரிக்கும். இவ் விஷயத்தில் சாதி ஹிந்துக்களுக்கு மன மாற்றம் ஏற்படுவதே உண்மையில் வேண்டியதெல்லாம். சீர்திருத்தக்காரர்களின் உழைப்பினல் நல்ல பலன் ஏற்பட்டு, ஹரிஜனங்கள் இனியும் போலீஸ் உதவியை நாடிக் கொண்டிருக்க வேண்டி வராது என்றே நம்புவோம். ஆனல், சீர்திருத்தக்காரர்களின் உழைப்பு வெற்றியடையும் வரையில், அவர்கள் காத்துக் கொண்டிருக்க வேண்டியதில்லை. போலீஸ் பாதுகாப்பை அவர்கள் நாட வேண்டியிருந்தாலும், அவ்வுதவியைப் பெற்ருவது தங்கள் உரிமையை அவர்கள் நிலைநாட்டியாக வேண்டும்.

—'ஹரிஜன்' – 15—6—1940

# 17

# எந்த அளவுக்கு ஹரிஜனங்கள் உதவி?

பர்தோலி ஹரிஜன ஊழியர்களைக் காந்திஜி சந்தித்தார். அவர்கள் கேட்ட கேள்விகளுக்குப் பதிலும் கூறினர். அவர்களுடைய முதல் கேள்வி கிணறுகளைப்பற்றியது :

''ஹரிஜனங்களின் ஒத்துழைப்பை நாடுவதா? அப்படியானல், எந்த அளவுக்கு அவர்களுடைய ஒத்துழைப்பை நாடுவது ?''

காந்திஜி கூறியதாவது : ''ஒத்துழைப்பு அவசியம். ஆனல், ஹரிஜனங்களை ஒரு கூட்டமாகச் சேர்த்துக் கொண்டு சாதி ஹிந்துக்கள் குடியிருக்கும் இடங்கள் மீது படையெடுக்கக் கூடாது. கிணறுகளுக்கு நாம் போக வேண்டும். எந்தெந்த வகுப்பினர் அவற்றை உபயோகித்து வருகின்றனர் என்பதை விசாரித்துத் தெரிந்துகொள்ள வேண்டும். ஹரிஜனங்களும் அக் கிணறுகளை உபயோகித்துக்கொள்ள அனுமதிக்க வேண்டியதன் நியாயத்தை அவர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். ஸ்தல ஸ்தாபனங்களின் கிணறுகளைப் பொறுத்தவரையில், அதிகாரிகளின் உதவியைத் தாராளமாக நாடலாம். தாங்கள் மோசமாக நடத்தப்படுவதை சகித்துக்கொள்ளத் தயாராக இருக்கும் ஹரிஜனங்களை, அக் கிணறுகளுக்குப் போய் அவற்றை உபயோகித்துக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளலாம். ஆனல், இதில் வரும் கஷ்டங்களையெல்லாம் ஹரிஜன சேவகர்களே முன்னின்று ஏற்றுக் கொள்ள வேண்டும். ஹரிஜனங்களைத் தாக்குவதாகவோ, அடிப்பதாகவோ மிரட்டுகிறவர்களுக்கும் ஹரிஜனங்களுக்கும் நடுவே ஊழியர்கள் இருக்க வேண்டும். சுத்தமான பாத்திரங்களை உபயோகிப்பதோடு, சுத்தம் சம்பந்தமாக அனுசரிக்க வேண்டிய சாதாரண விதிகளையெல்லாம் அனுசரித்து வருமாறும் ஹரிஜனங்களை எப்பொழுதும் கேட்டுக்கொள்ள வேண்டும். ஹரிஜனங்களுக்காக நாம் கிணறுகளையும் வெட்ட வேண்டும். அவற்றை உபயோகித்துக் கொள்ளும்படி சாதி ஹிந்துக்களையும் அழைக்க வேண்டும். ஹரிஜனங்கள் பகிஷ்கரிக்கப்பட்டு விடவும் கூடும். ஆனல், அவர்களுக்கு வேறு இடங்களில் வேலை கிடைக்கும்படி நாம் பார்த்துக்கொள்ள வேண்டும். தங்களுடைய உரிமைகளை உறுதியுடனும் அகிம்சையோடும் வற்புறுத்தி வருவதற்குக் கற்றுக் கொள்ளும்படியும் ஹரிஜனங்களுக்கு நாம் போதிக்க வேண்டும். அநீதி நீடித்து நடந்துகொண்டு போக முடியாது என்பதை சாதி ஹிந்துக்களுக்குக் கண்யமாக ஞாபகப்படுத்தவும் வேண்டும். இவையே பொதுவான விதிகள். ஆனல், ஒவ்வொருவரும் ஆங்காங்கே உள்ள நிலைமைக்கும் சந்தர்ப்பத்திற்கும் ஏற்றாற் போல நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும்.''

கேள்வி : ''ஹரிஜனங்களல்லாத ஹிந்து மாணவர்களை யெல்லாம் சேர்த்துக் கொள்ளும் மாணவர் விடுதிகளில், ஹரிஜனச் சிறுவர்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று நாம் வற்புறுத்தக் கூடாதா?''

பதில் : ''வற்புறுத்தலாம். ஆனால், ஹிந்துக்களில் ஒரு குறிப்பிட்ட வகுப்பினருக்கு அல்லது பிரிவினருக்கு என்று பிரத்தியேகமாக ஒரு மாணவர் விடுதி இல்லாமலிருக்கிறதா என்பதை முன்கூட்டி நன்றாகத் தெரிந்துகொள்ள வேண்டும். எல்லா வகுப்பினரும் சேர்த்துக் கொள்ளப்பட்டு, ஹரிஜனச் சிறுவர்கள் மாத்திரம் சேர்த்துக் கொள்ளப்படாத மாணவர் விடுதிகளில், இவர்களும் சேர்த்துக் கொள்ளப்படும்படி செய்வதற்கு ஹரிஜன ஊழியர்கள் எல்லா முயற்சிகளையும் செய்ய வேண்டும்.''

—'ஹரிஜன்' - 1-2-1942

# 18
# சாபக்கேடு

ஹரிஜன ஊழியர் ஒருவர் கீழ்வருமாறு எழுதுகிறார் :

1. ஹரிஜனங்களை அனுமதிக்க மறுக்கும் ஹோட்டல்கள், க்ஷவரக் கடைகள் முதலியன நம் நாட்டில் இருக்கின்றன. கதர், ஹிந்தி, காங்கிரஸ் பிரசாரகர்கள் ஆகிய நமது தேசீய ஊழியர்கள், இத்தகைய ஸ்தாபனங்களைப் பகிஷ்காரம் செய்து ஹரிஜனங்களுக்கு இருக்கும் இக்கஷ்டங்களைப் போக்குவதற்குத் தங்கள் செல்வாக்கை உபயோகிக்க வேண்டும் என்று எதிர்பார்க்கப்படவில்லையா?

2. அகில இந்திய நூற்போர் சங்கத்தில் சலவைத் தொழிலாளர்கள் இருக்கிறார்கள். இந்தச் சலவைத் தொழிலாளரில் சிலர், தங்கள் தொழிலிலும் தீண்டாமையை அனுசரிக்கிறார்கள். பிராம்மணர்கள், நாயர்கள் துணிகளைத் தவிர மற்றவர்களின் துணிகளைச் சலவை செய்ய இவர்கள் தயாராயில்லை. குடிக்கும் பழக்கமுள்ள சலவைத்தொழிலாளரை, அகில இந்திய நூற்போர் சங்கம் வேலையிலிருந்து நீக்கி விடுகிறது. அதேபோலத் தங்கள் தொழிலில் தீண்டாமையை அனுசரிக்கும் சலவைத்தொழிலாளரையும் வேலையிலிருந்து நீக்கிவிட வேண்டாமா?

இக்கேள்விகள் அதிகப் பொருத்தமானவையே. ஒரு வகையில்தான் இவ்விரு கேள்விகளுக்குப் பதில் சொல்ல வேண்டும். ஹிந்து மதம், அதற்காக வாழவும், அவசியம் வந்தால் அதற்காக உயிர்விடவும் வேண்டிய ஒரு சமயமாக இருந்து வருவதற்குத் தீண்டாமை என்ற சாபக்கேட்டை அதனிடமிருந்து நீக்கியாக வேண்டியது அவசியம். இதை உணருகிறவர்கள், அவர்கள்

காங்கிரஸ்காரர்களாயினும் மற்றவர்களாயினும், ஹரிஜனங்களை அனுமதிக்க மறுக்கும் எல்லா ஸ்தாபனங்களையும் பகிஷ்கரித்து விடவே வேண்டும். ஹரிஜன சேவகர் கேட்டிருக்கும் கேள்விகள் விஷயத்தில், சில சமயங்களில் கஷ்டம் அதிகம் இருக்கிறது. என்றாலும், அதிகக் கடுமையாகவுள்ள கஷ்டங்களை அதிகக் கஷ்டப்பட்டுச் சமாளித்து நிவர்த்தித்துக் கொண்டாலன்றி, எதையும் செய்துவிட முடியாது.

இவ்விஷயம், சில சமயங்களில் என்ன செய்வதென்றே புரியாத ஒரு குழப்பத்தை உண்டாக்கிவிடுகிறது. அகில இந்திய நூற்போர் சங்கம், மற்றத் தொழிலாளரைப் போன்றே சலவைத் தொழிலாளருக்கும் வேலை கொடுத்து வருகிறது. தீண்டாமை யாகிய சாபக்கேட்டை அவர்கள் உணரும்படி செய்ய எவ்வளவு முயற்சிகளைச் செய்தாலும், அவைகளையெல்லாம் அலட்சியம் செய்துவிட்டு அவர்கள் தீண்டாமையை விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள். இத்தகைய விஷயங்களில் நூற்போர் சங்க ஊழியர்கள் இனி அதிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்பதில் சந்தேகமில்லை. என்றாலும், அத் தொழிலாளரைப் பகிஷ்கரித்துவிட வேண்டும் என்று எடுத்த எடுப்பில் அவ்வூழியர்களுக்கு நான் சொல்லிவிடுவதற்கில்லை. இந்த மூடநம்பிக்கையை விட்டொழித்து விட்டவர்களுக்கே, வேலைக்கு எடுத்துக் கொள்ளுவதில் நிச்சயமாக அதிகச் சலுகை அளிக்க வேண்டும். தீண்டாமை விஷத்தினால் பீடிக்கப்பட்டிருக்கிறவர்கள் எவ்வித உணர்ச்சியின் பேரில் அணுகப்படுகிறார்களோ, அதைப் பொறுத்துதான் இதில் வெற்றி இருக்கிறது.

—சேவா கிராமம், 2—3—1942 —'ஹரிஜன்' - 29—3—1942

## 19

# ஹரிஜனங்களுக்குத் துன்பம்

ஸ்ரீ பரீக்ஷித்லால் மஜும்தார் கீழ்வருமாறு எழுதுகிறார் :

''கத்தியவாரில் வர்தான் சமஸ்தானத்தில் ஒரு கிராமத்தில் தொத்து நோயினால் ஏராளமான கால்நடைகள் மாண்டன. தங்களுக்கு இந்தத் துர்ப் பாக்கியம் ஏற்பட்டதற்கு ஹரிஜனங்கள்தான் காரணம் என்பது அக்கிராமத்தி லிருப்பவர்களின் மூட நம்பிக்கை. எனவே, பங்கி (தோட்டி) குடும்பத்தினருக் குத் துன்பங்களை விளைவிக்கத் தலைப்பட்டனர். அவர்களோ பயந்துகொண்டு ஊரைவிட்டே ஓடிவிட்டார்கள். இந்த விவரத்தை ஹரிஜன ஊழியர்கள் அறிந்ததும் சமஸ்தான அதிகாரிகளிடம் சென்றார்கள். பங்கிகளைப் பாது காப்பதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளும்படி அவர்களைக்

கேட்டுக்கொண்டார்கள். ஒன்றும் தெரியாதவர்களான கிராமவாசிகளுக்கு இருந்து வந்த மூட நம்பிக்கையைப் போக்குவதற்குத் தங்களாலான எல்லா முயற்சிகளேயும் ஹரிஜன ஊழியர்கள் செய்தார்கள். சமஸ்தான அரசாங்கமும் துரிதமாக நடவடிக்கை எடுத்துக்கொண்டது. ஹரிஜனக் குடும்பங்களும் கிராமத்திற்குத் திரும்பி வந்தன. இந்த ஆண்டு கால்நடைகளுக்குத் தொத்து நோய் ஏற்பட்டதால், கத்தியவார் ஹரிஜனங்கள் எப்போதையும்விட அதிகக் கஷ்டங்களே அனுபவிக்க வேண்டியதாயிற்று. கிராமவாசிகளின் மூட நம்பிக்கையின் காரணமாக, ஒரு பாவமும் அறியாத இந்த ஏழை மக்கள் அதிகத் துன்பப்பட நேர்ந்தது.''

இந்த வகையான மூடநம்பிக்கைக்குச் சரியான பரிகாரம், விஷயத்தைச் சரியாக எல்லோரும் தெரிந்துகொள்ளும்படி செய்வதுதான். சீர்திருத்த இயக்கம், கத்தியவார் கிராமங்களிடம் இன்னும் போகாமல் இருப்பதுதான், மூடநம்பிக்கை அங்கே இருந்துவருவதற்குக் காரணம் என்று தோன்றுகிறது. இக்குறையைப் போக்குவதற்கு ஹரிஜன ஊழியர்கள் பகீரதப் பிரயத்தனம் செய்தாக வேண்டும். ஆனல், அத்தகைய ஊழியர்கள் எங்கே இருந்து கிடைக்கப் போகிறார்கள்? இப்பொழுது இருக்கும் ஊழியர்களோ, கிராமங்களுக்குப் போவதில்லே. அவர்கள் கிராமங்களுக்குப் போவதாகவே இருந்தாலும், அங்கே அவர்களுக்குள்ள வேலே மிகவும் கஷ்டமானது என்பதை யாரும் யூகித்து அறிய முடியும். எவ்வளவுதான் கஷ்டங்கள் இருந்தாலும், அதனல் சளேத்துவிடாமல் ஒருவர் கடமையைச் செய்துகொண்டு போவதில்தான் மனிதனின் முயற்சியின் உயர்வு இருக்கிறது. கத்தியவார் சம்பவத்தை ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். அரசாங்கமும் மக்களும் தங்கள் கடமையை உணர்ந்தார்கள். குறிப்பிடப்பட்டிருக்கும் இச்சம்பவத்தில் உறுதியான நடவடிக்கைகளேத் துரிதமாக எடுத்துக் கொண்டார்கள். இப்போதைக்கு அங்கே கஷ்டமும் சமாளிக்கப்பட்டிருக்கிறது. இதே உதாரணமே மற்ற இடங்களிலும் அனுசரிக்கப்படுமானல், மூட நம்பிக்கையின் வேரையே களேந்துவிட முடியும். அதுதான் உண்மையான போதனேயாகவும் இருக்கும்.

—'ஹரிஜன்' - 17—3—1946

# 20

# கட்டாயப்படுத்தக்கூடாது

ஸ்ரீ தக்கர் பாபா பின்வருமாறு எழுதுகிருர் :

''புஸாவல் தாலுக்காவில் அதிக அளவில், நல்ல விதத்தில் ஹரிஜனங்களுக்குச் சேவை செய்வது என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இதற்காக மே 14-ஆம் தேதி இரு கூட்டங்களுக்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. நானும், ஸ்ரீ வைகுந்தபாய் மேத்தா, ஸ்ரீ கணபதி ராவ் தபஸே, ஸ்ரீ பார்வே,

ஸ்ரீ தாஸ்தானே ஆகியவர்களும் கூட்டத்திற்குப் போயிருந்தோம். பொதுக் கிணறுகளை யெல்லாம் ஹரிஜனங்களுக்குத் திறந்துவிட்டு விடுவதற்காக நாங்கள் முயற்சி செய்து வருகிறோம். கிராமவாசிகள் அதிக உற்சாகத்துட னிருக்கிறார்கள். வெற்றியடையலாம் என்ற நம்பிக்கை எங்களுக்கு இருக் கிறது. சந்தர்ப்பமும் அனுகூலமாக இருந்து வருகிறது."

ஸ்ரீ தக்கர் பாபா கூறுவதெல்லாம் உண்மையே. சந்தர்ப்பம் அனுகூலமாக இருக்கிறது என்று ஸ்ரீ தக்கர் பாபா கூறுவது, காங்கிரஸ் மந்திரி சபை அங்கே ஏற்பட்டிருக்கிறது என்பதாகவே இருக்கக்கூடும். இதனால், இனிமேல் மக்கள் மீது சீர்திருத்தம் திணிக்கப்பட்டுவிடும் என்று ஆகாது. இத்தகைய காரியங்களில் பலவந்தத்தை உபயோகிப்பதற்குக் கொஞ்சம்கூட இடமில்லை. தீண்டாமையைப் போன்றதோர் தீமை, மக்களின் எலும்புக் குள்ளேயும், அதுவும் மதத்தின் பேரால் புகுந்துவிட்டது. அதைப் பலவந்தத்தின் பேரில் நீக்கிவிட முடியாது. ஆனால், ஓர் அந்நிய அரசாங்கமோ, பலவந்தத்தினால் ஒடுக்கப்பட்டிருக்கிறவர்களை மேலும் ஒடுக்குவதற்குத் தனது செல்வாக்கை உபயோகிக்கிறது. நல்ல எண்ணத்தின் பேரிலோ, சுயநலத்திற்காகவோ அந்த அரசாங்கம் அவர்களுக்கு உதவி செய்ய முயற்சிக்கும்போது, அதையும் பலாத்காரத்தை உபயோகித்தேதான் செய்கிறது. காங்கிரஸ் பலாத்காரத்தைக்கொண்டு தனது நிலையை ஸ்தாபித்துக்கொள்ளவில்லை; அது முற்றிலும் ஒரு ஜனநாயக ஸ்தாபனம். ஆகையால், காங்கிரஸ் மந்திரிகள், பொதுஜனங் களுக்கு விஷயத்தை எடுத்துச் சொல்லி, தாம் செய்யும் முற் போக்கான காரியங்களுக்கெல்லாம் பொதுஜன ஆதரவைப் பெறுவர் என்றே நம்பப்படுகிறது. அவர்கள் மாகாணத்தில் செய்யப்படும் ஹரிஜன வேலை போன்றவைகளுக்கு இது அதிக உற்சாகத்தை அளிக்கும். இத்தகைய சீர்திருத்தங்களுக்கு விரோதமாக இருந்து வரும் சக்திகளெல்லாம் இதனால் தானே மறைந்துவிடும். மேலும், புஸாவல் தாலுக்கா போன்ற சிறு இடத்தில், தீவிரமாக வேலை செய்வது நல்ல பலனை அளிக்கக் கூடியதாகவும் இருக்கும். இந்தியா முழுவதிலும் ஒரே காலத்தில் நாம் வேலை செய்துவிட முடியாது. ஹரிஜன ஊழியர்களுக்கு எங்கே போதிய ஆற்றலும் செல்வாக்கும் இருக்கிறதோ, அங் கெல்லாம் வேலை துரிதமாக நடக்கும். ஆகையால், ஒரு சிறு பகுதியில் நடக்கும் நல்ல வேலையை மற்றவர்களும் பின்பற்றி, வெற்றி சீக்கிரத்தில் கிடைக்கும்படி செய்ய வேண்டும். புஸாவலில் ஆரம்பித்திருக்கும் வேலை அத்தகைய பலனை அளிக் கும் என்று நம்புவோமாக.

['ஹரிஜன பந்து'விலிருந்து எடுக்கப்பட்டது.]

—முஸோரி - 29—5—1946 —'ஹரிஜன்' - 9—6—1946

# 21

# ஹரிஜனங்களும் கிணறுகளும்

ஸ்ரீ ஹரிதேவ் சகாய் கீழே வருமாறு எழுதுகிறார் :

"நேற்று மாலை (4—9—1946), பிரார்த்தனைக் கூட்டத்தில் தாங்கள் பேசிய போது, பொதுக் கிணறுகளிலிருந்து தண்ணீர் எடுத்துக்கொள்ளுவதில் ஹரிஜனங்களுக்கு இருந்து வரும் கஷ்டங்களைப் பொது ஜனங்களின் கவனத்திற்குக் கொண்டுவந்தீர்கள். ஹரிஜனங்களுக்காகச் சென்ற இருபத்தைந்து ஆண்டுகளாக இடைவிடாது முயற்சி செய்து வந்திருந்தும், அவர்களுக்குள்ள இந்தக் கஷ்டங்களை நீக்குவதில் நாம் இன்னும் வெற்றியடையவில்லை. அவர்களுடைய துயரங்களை மற்றவர்களையெல்லாம்விட நீங்களே நன்றாக அறிவீர்கள்.

"இப்பொழுது காங்கிரஸ் அரசாங்கங்கள் அதிகாரத்திலிருக்கின்றன. இந்த அரசாங்கங்கள், ஹரிஜனங்கள் சம்பந்தமான தங்கள் கொள்கைகளைப் பிரகடனம் செய்து, தங்களால் முடிந்தவரையில் ஹரிஜனங்களுக்கு இருக்கும் கஷ்டங்களையெல்லாம் சட்டத்தின் மூலம் போக்கலாம் என்பது என் பணிவான அபிப்பிராயம். இது சம்பந்தமாக, பஞ்சாபில் இருந்துவரும் நிலைமையை உங்கள் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். கிணறுகளில் தண்ணீர் எடுக்க அனுமதிக்காதது ஒருபுறம் இருக்கட்டும்; தாங்களே கிணறுகளை வெட்டிக்கொள்ளுவதற்கு நிலத்தைப் பெறுவதற்குக்கூட அவர்கள் அனுமதிக்கப்படுவதில்லை. தண்ணீர் எடுப்பதற்கு அவர்களுக்கு வசதியில்லாத இடங்களிலெல்லாம், கிணறுகளை வெட்டிக் கொடுக்க வேண்டும், அல்லது அவர்களே கிணறுகளை வெட்டிக் கொள்ளுவதற்காக நிலத்தையாவது அவர்களுக்குக் கொடுக்க வேண்டும் என்று பஞ்பாப் சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுமாறு உங்களை வேண்டுகிறேன். ஹரிஜனங்கள் கிணறுகளை வெட்டிக் கொள்ளுவதற்குத் தங்கள் சொந்தப் பணத்தைச் செலவு செய்து கொள்ளத் தயாராக இருந்தும், அதற்கு வேண்டிய நிலம் கொடுக்கப்படாத கிராமங்கள் பஞ்சாபில் எத்தனையோ இருக்கின்றன.

"சில இடங்களில் அரசாங்கம் ஹரிஜனங்களுக்குக் கிணறுகளை வெட்டிக் கொடுக்க ஆரம்பித்திருக்கிறார்கள். ஆனால், அவை கொஞ்சமும் போதுமானவை அல்ல. தனது பிரஜைகள் எல்லோருக்கும் சரியான குடிதண்ணீர் கிடைக்கும்படி பார்க்க வேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பு."

இக்கடிதத்தை எழுதியிருப்பவர் கூறுவது முற்றிலும் சரி. ஹரிஜனங்களுக்குக் கிணறுகள் வெட்டிக் கொடுக்க வேண்டியது அரசாங்கத்தின் கடமை. நிலத்தைக் கொடுப்பது மாத்திரம் போதாது. கிணறுகளை வெட்டிக் கொடுக்கும் பொறுப்பையும் அரசாங்கமே ஏற்றுக்கொள்ள வேண்டும்.

['ஹரிஜன் சேவக்'கிலிருந்து எடுத்தது ]

—'ஹரிஜன்' – 15—9—1946

# 22

# கிணறுகள் சம்பந்தமான சட்டம்

ஸ்ரீ ஜி. ராமச்சந்திர ராவ், தாம் செய்திருக்கும் ஹரிஜன வேலை விவரத்தைக் கூறி ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். கீழே கொடுக்கப்பட்டிருப்பதுதான் அதன் சாராம்சம்:

''பொதுக் கிணறுகளை ஹரிஜனங்கள் உபயோகிக்கும்படி செய்வதற்கான வேலையை நாங்கள் எடுத்துக்கொண்டிருக்கிறோம். பஞ்சாயத்தினால் பராமரிக்கப்படும் கிணறுகள், குளங்கள், தேக்கங்கள், கால்வாய்கள் ஆகியவைகளிலிருந்து எந்தச் சாதியினரும், இனத்தினரும் தண்ணீர் எடுத்துக்கொள்ளும் உரிமையை, 1920-ஆம் வருடத்திய சென்னை ஸ்தல ஸ்தாபன போர்டுகள் சட்டத்தின் 126-ஏ பிரிவு அளிக்கிறது. இச்சட்டம் அமுலுக்கு வருவதைத் தடுப்பவர்களுக்கு ரூ. 100 அபராதமும் விதிக்க இது அதிகாரமளிக்கிறது. ஆனால், ஹரிஜனங்கள் சம்பந்தப்பட்ட வரையில் இச்சட்டம் மீறப்பட்டே வருகிறது. தாராள சிந்தனையுள்ள ஹரிஜனல்லாத ஒருவர், தங்கள் குடங்களில் தண்ணீரை ஊற்றுவார் என்று எதிர்பார்த்துக் கொண்டு பொதுக்கிணறுகளின் பக்கத்தில் ஹரிஜனங்கள் வரிசையாகக் காத்துக் கிடப்பது, பார்ப்பதற்கு மிகுந்த பரிதாபமான காட்சியாகும். கங்கிப்பாடு என்ற கிராமத்துக் கிணற்றை அவ்வூர் பஞ்சாயத்து போர்டு பராமரித்து வருகிறது. சட்ட நுணுக்கங்களை மாத்திரமேயன்றி, அவர்களுடைய தார்மிகக் கடமையையும் அவ்வூர் கிராமத் தலைவர்களுக்கு எடுத்துக் கூறினோம். மூன்று வாரங்கள் பிரசாரம் செய்த பிறகு அங்கே கிடைத்த ஆதரவு உற்சாகமளிப்பதாக இருந்தது. பிறகு ஒரு பொதுக்கூட்டத்தைக் கூட்டினோம். எங்கள் யோசனைக்கு அதிகமான ஆதரவு இருக்கவே, இனி அந்தக் கிணற்றில் எந்த விதமான தடையுமின்றித்தண்ணீர் எடுத்துக்கொள்ள ஹரிஜனங்கள் அனுமதிக்கப்படுவார்கள் என்று அங்கே அறிவித்தோம்.

''என்றாலும், இம்முடிவைப் பயன்படுத்திக் கொள்ளுவதில் ஹரிஜனங்கள் அதிகக் கோழைகளாக இருந்தார்கள் என்பது மறுநாள் காலையில் தெரிந்தது. அவர்களுடைய புத்திப்போக்கு மிகவும் வருந்த வேண்டியதாக இருந்தது. அவர்களைக் கிணற்றுக்குக் கொண்டு வருவதற்கு நாங்கள் மிகவும் கஷ்டப்பட வேண்டியிருந்தது. அவர்கள் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுக்க ஆரம்பித்த பின்னர், சாதி ஹிந்துக்களிடையே எதிர்ப்புத் தோன்றிவிட்டது. இவர்களில் பெரும்பான்மையோருக்கு அக்கிணற்றில் தண்ணீர் எடுக்காமலிருப்பது கஷ்டமே. எனினும் பலர் கிணற்றுக்கு வராமலிருந்துவிட்டார்கள். எனினும், சிலர் மாத்திரம் தாங்கள் செய்துகொண்ட முடிவில் உறுதியாக நின்றனர். நாளாவட்டத்தில் எதிர்ப்பு குறைந்துவிட்டது. சட்டத்தின் 126 ஏ விதியைப் பொதுஜனங்களுக்கு விளக்கிக் கூறுமாறு ஸ்தல ஸ்தாபன போர்டு டிபுடி இன்ஸ்பெக்டரை நான் கேட்டுக் கொள்ளவும் நேர்ந்தது.

''இந்த அனுபவம் எங்களுக்கு உற்சாகத்தை அளித்தது. ஹரிஜனங்களுக்குத் தண்ணீர்கிடைப்பதற்கு வசதியில்லாத மற்றக் கிராமங்களிலும் இதே போன்ற வேலையைச் செய்ய ஆரம்பித்தோம். ஹரிஜனங்களுக்கு இருக்கும்

இத்தகைய இடையூறுகளைப் போக்குவதற்குத் தார்மிக ரீதியில் மக்களைக் கேட்டுக்கொள்ளும் அதே சமயத்ரில், சட்ட ஏற்பாடுகளும் இருக்க வேண்டியது அவசியம் என்பது என் அபிப்பிராயம். இந்த இரண்டில் ஏதாவது ஒன்று இல்லாதபோது, மற்றென்றும் பயனில்லாததாகிவிடும். சமூகத்தில் இருந்துவரும் இடைறுகளைப் போக்குவதற்கென்று இப்பொழுது இருந்து வரும் அரசாங்கச் சட்டங்கள், தெளிவில்லாதவைகளாகவும் பலவீனமாகவும் இருக்கின்றன. இக்குறைபாடு நிவர்த்திக்கப்பட்டாக வேண்டும். சென்னை அரசாங்கம், ஹரிஜன சேவைக்கு என்று ஒரு கோடி ரூபாய் ஒதுக்கி வைத்திருக்கிறது. அந்த அரசாங்கம், சட்டப் புத்தகத்தில் இப்பொழுது இருந்து வரும் இது சம்பந்தமான சட்டங்களின் விதிகளைப் பொதுஜனங்கள் சரியாக அறியும்படி செய்வதற்கு, அத்தொகையில் ஒரு பகுதியைச் செலவிடலாம். சட்டத்தைச் செய்வது எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம், அதை அமலில் கொண்டு வருவதும்.''

ஒடுக்கப்பட்டிருக்கும் ஹரிஜனங்களுக்காகப் பேராசிரியர் ராவ் செய்திருக்கும் சிறந்த வேலை மனமாரப் போற்றத்தக்கதாகும். அவருடைய முயற்சிக்குப் பொதுஜனங்கள் ஆதரவு அளிக்க வேண்டும்.

—புது டில்லி - 7—9—1946 —'ஹரிஜன்' - 15—9—1946

# 23

# பெருமையா, பைத்தியமா ?

அதிக துக்கத்துடனேயே இதை எழுதுகிறேன். இதை எழுதும்போது என் மனக்கண் முன்னல் தோன்றும் குஜராத், பைத்தியம் பிடித்த குஜராத்தேயன்றி, பெருமையுள்ள குஜராத் அல்ல.

ஸ்ரீ பரீக்ஷித் லால், ஹரிஜனங்களின் சேவகர். அந்த வகையில் குஜராத்துக்குச் சேவை செய்ய ஆசைப்படுகிறார். ஆனல், குஜராத்தின் மக்களுக்கு ஏற்பட்டிருக்கும் பைத்தியத்தைக் கண்டு, என்ன செய்வது என்பது தெரியாமல் திகைக்கிறார். உயிருள்ள ஹரிஜனங்கள் தீண்டாதாராகக் கருதப்படுகின்றனர் என்றுதான் அறிகிறோம். ஆனல், பரீக்ஷித்லால் கூறுவதிலிருந்து, இறந்துவிட்ட ஹரிஜனங்களும் தீண்டாதாராக இருக்கின்றனர். பிரேதத்தை தகனம் செய்யும் சுடுகாட்டிலாவது, ஒரு மனிதனுக்கும் இன்னுமொரு மனிதனுக்கும் பேதமில்லாமல் இருக்க வேண்டும். பிரேதம் சாம்பலாகிவிட்டதும் எல்லா அழுக்குகளும் மறைந்துவிடுகின்றன. அப்படியிருந்தும் எல்லோருக்கும் பொதுவான சுடுகாட்டிலிருந்து ஹரிஜனங்கள் விலக்கப்பட வேண்டுமா? ஒரு வயோதிக ஹரிஜனின் சவத்தைப் பொதுச் சுடுகாட்டில் தகனம் செய்வதற்கு, அதிகக் கஷ்டத்திற்குப் பிறகு நவசாரியி

லுள்ள செல்வாக்குள்ளவர்கள் அனுமதித்திருக்கிருர்கள். உண்மையில் இதில் ஒரு தரப்பார் தயவு காட்டினர்கள் என்பதற்கோ, இன்னெரு தரப்பார் குதூகலப் படுவதற்கோ எதுவும் இல்லே. ஆனல், சிறு தயவுகளுக்கும் சில சமயங்களில் நன்றி செலுத்த வேண்டியிருக்கிறது. இவ்விஷயத்தில் கிளர்ச்சி பயனே அளித்திருப்பது நல்லதே.

இன்னுமொரு சம்பவம், முழு மோசமான துக்ககரமானதாகும். அது நடந்த கிராமத்தின் பெயரை நான் கூறப்போவதில்லே. இதிலுள்ள வெட்கக்கேடான விஷயம் என்னவென்ருல், கால்நடைகளுக்குத் தொத்து நோய் ஏற்பட்டு விடும்போது, அதற்கு ஹரிஜனங்கள்தான் காரணம் என்று கருதப்படுவதாகும். நோயின் உண்மையான காரணத்தைக் கண்டறியும் சிரமத்தைக் கூட, உயர்சாதி ஹிந்துக்கள் என்போர் எடுத்துக் கொள்ளுவதில்லே. மழைக் காலத்தில் புல் ஏராளமாக வளர்கிறது. அப்புல்லில் எல்லாவிதமான விஷப் பூச்சிகளும் இருக்கின்றன. பட்டினி கிடந்த கால்நடைகள், அப்புல்லேக் கண்டதுமே வெறி கொண்டு விஷப் பூச்சிகளேயும் சேர்த்துத் தின்றுவிடுகின்றன. இதனல் அவை நோயுற்று மாண்டு போவதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? தொத்து நோயின் காரணம் மிகத் தெளிவானது. ஹரிஜனங்களின் கால்நடைகளும் இதே போலச் செத்துவிட்டன. என்ருலும், கால்நடைகள் மாண்டதற்கு ஹரிஜனங்களே காரணம் என்று குற்றஞ் சாட்டுகிருர்கள். சாதி ஹிந்துக்கள் ஹரிஜனங்களேத் திட்டி, அடித்துத் துன்புறுத்துகிருர்கள். என் முன்னுலிருக்கும் கடிதம் கூறும் துக்ககரமான கதையின் சாராம்சம் இதுதான். என்னுடைய வார்த்தைகள், சம்பந்தப்பட்ட கிராம வாசிகளின் காதுகளுக்கு எட்ட வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

சீர்திருத்தக்காரர்கள், இப்பொழுது ஆட்சி அதிகாரத்தில் இருக்கிருர்கள். ஆகையால், அதிகாரிகள் மாத்திரம் முயற்சி எடுத்துக்கொள்ளுவார்களாயின், கிராமவாசிகளிடம் இருந்து வரும் பயங்கரமான அறியாமையில் பெரும் பகுதியைப் போக்கி விட முடியும். கிராம மக்களில் முக்கியஸ்தர்களாக இருப்பவர்கள், மூடநம்பிக்கையை விட்டுவிடுவார்களானல், அரசாங்கமும் ஹரிஜன ஊழியர்களும் தங்கள் கடமையைச் செய்வார்களாயின், ஹரிஜனங்களும் அவர்களுடைய தூக்கத்திலிருந்து எழுப்பப்பட்டு விடுவார்களாயின், பயங்கரமான இத்தீமையிலிருந்து குஜராத்தை மீட்பது சாத்தியமாகும்.

['ஹரிஜன் பந்து'விலிருந்து எடுக்கப்பட்டது]

—'ஹரிஜன்' –22—9—1946

# 24

# தீண்டாமையை நீக்குவது எப்படி?

கேள்வி : 'ஆலயப் பிரவேசத்திற்கும், பொதுக் கிணறுகளை உபயோகிப்பதற்கும் இருக்கும் தடையை நீக்கிவிட்டு, படிப்பதற்கு உபகாரச் சம்பளம் கொடுப்பது போன்றவை, அவையளவில் சிறந்தவையே. ஆனால், தீண்டாமை சாபக்கேட்டின் எல்லா அம்சங்களையும் நீக்குவதற்கு உண்மையான வழி, சேரிகளையும், ஹரிஜனங்களுக்கு வசிக்கத் தனி இடங்கள் இருப்பதையும் ஒழித்துவிடுவதுதான்' என்று சென்னை ஹரிஜன் ஒருவர் எழுதுகிறார்.

பதில் : ஹரிஜனங்களை, அவர்களுக்கு இஷ்டமான இடங்களில் வசிப்பதற்கு அனுமதித்துவிட்டால் தீண்டாமை போய்விடும் என்று சொல்லுவது நன்றாகத்தான் இருக்கிறது. ஹரிஜனங்கள் தனியான இடங்களில்தான் வசிக்க வேண்டும் என்று விதிக்கும் பொதுச் சட்டம் எதுவும், நான் அறிந்தவரையில் இல்லை. ஒரு கெட்ட பழக்கம் அவர்களை அவ்விதம் வசிக்கும்படி கட்டாயப்படுத்துகிறது. அப்பழக்கம் இப்பொழுது மாறிக்கொண்டிருக்கிறது. ஆனால், இது மிக மிக மெதுவாக மாறிக்கொண்டிருக்கிறது. இதற்கு மத்தியில் அப்பழக்கத்தை ஒழித்துவிட வேண்டியது ஒவ்வொருவரின் கடமையாகும். மக்களின் மனம் மாறும்படி செய்யவேண்டிய விஷயம் இது. மிக உயர்ந்த தியாகத்தின் மூலம், கோரும் பலனை அடைந்துவிட முடியும். துளசிதாஸ் வருமாறு கூறியிருக்கவில்லையா?

> "தியாகத்தின் மூலம் பிரம்மா உலகத்தைச் சிருஷ்டித்தார்,
> "தியாகத்தின் மூலம் விஷ்ணு பாதுகாக்கிறார்,
> "தியாகத்தின் மூலமே சிருஷ்டியானவை யெல்லாம் வாழ்கின்றன,
> "ஆகவே, பவானி, நீ போய் தியாகத்தைச் செய்."

அத்தகைய உயர்வான அருளுடன் ஒருவர் காரியத்தைச் செய்ய முன்வரும் போது மாசு மறைந்து, சமயமும் புனிதமாகிப் பாதுகாக்கப்படுகிறது.

—'ஹரிஜன்' – 13—10—1946

பகுதி பதின்மூன்று

# கெட்ட பழக்கங்கள்

## 1

## 'தீண்டாதாரு'க்கு

ஹிந்து சமூகத்தைத் தூய்மையாக்கிக்கொண்டிருக்கிறீர்கள் என்பதை நீங்கள் உணர்ந்துகொள்ள வேண்டும். ஆகையால், நீங்கள் உங்கள் வாழ்க்கையைத் தூய்மைப்படுத்திக்கொள்ள வேண்டும். உங்கள் மீது யாரும் குற்றஞ் சொல்ல முடியாத வகையில், சுத்தமான பழக்கங்களை நீங்கள் வளர்த்துக்கொள்ள வேண்டும். நீங்கள் சுத்தமாக இருப்பதற்குச் சவக்காரத்தை உபயோகிக்க உங்களால் முடியவில்லையென்றால், மர உப்புப் பொடியையோ. உளமண்ணையோ உபயோகித்துக்கொள்ளுங்கள். உங்களில் சிலர் குடிக்கிறார்கள், சூதாடுகிறார்கள். அவைகளையெல்லாம் விட்டொழித்துவிட வேண்டும். இந்தக் கெட்ட பழக்கங்கள் பிராம்மணர்களிடத்திலும் இருக்கின்றன என்று நீங்கள் அவர்களைச் சுட்டிக்காட்டலாம். ஆனால், அவர்கள் அவற்றால் தீட்டாகிவிட்டதாகக் கருதப்படுவதில்லை; நீங்கள்தான் தீட்டாகிவிட்டீர்கள் என்று கருதுகின்றனர். தயவுவைத்து உங்களை முன்னுக்குக்கொண்டு வரும்படி சாதி ஹிந்துக்களை நீங்கள் கேட்கக்கூடாது. அவர்கள் விரும்பினால், அவர்களுடைய சொந்த நன்மையை முன்னிட்டு, இதை அவர்கள் செய்ய வேண்டும். ஆகையால், உங்களுடைய சுத்தத்தையும் தூய்மையையும் பார்த்து அவர்கள் வெட்கப்படும்படி நீங்கள் செய்ய வேண்டும்.

நீங்கள் ஹிந்துக்கள் என்று சொல்லிக்கொள்ளுகிறீர்கள்; பாகவதத்தைப் படிக்கிறீர்கள். அப்படியிருந்தும் ஹிந்துக்கள் உங்களைத் தாழ்வுபடுத்துகிறார்கள் என்றால், தவறு ஹிந்து சமயத்தைப் பின்பற்றுகிறவர்களிடம் இருக்கிறதேயன்றி ஹிந்து சமயத்தில் இல்லை என்பதை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும். நூற்கவும், நெய்யவும் கற்றுக்கொள்ளுங்கள். இவற்றையே தொழிலாகக் கொண்டுவிடுவீர்களாயின், உங்கள் வறுமையைப் போக்கிக்கொண்டு விடலாம்.

'பங்கி'கள் (தோட்டிகள்)விஷயத்தில் நீங்கள் கொண்டிருக்கும் போக்கு சம்பந்தமாக, கோத்ராவில் நான் என்ன சொன்னேனோ அதையே இங்கும் திரும்பச் சொல்ல விரும்புகிறேன். 'தேத்'

களுக்கும் 'பங்கி'களுக்கும் பாகுபாட்டை நீங்கள் ஏன் கற்பிக்க வேண்டும் என்பது எனக்கு விளங்கவில்லை. அவர்களுக்கிடையே எந்த வித்தியாசமும் இல்லை. சாதாரணமான காலத்தில்கூட, அவர்கள் செய்து வரும் தொழில், வக்கீல்கள், அரசாங்க உத்தியோகஸ்தர்கள் செய்யும் தொழில்களைப் போலக் கௌரவமானதே.

சுத்தமானவை என்று என்ன சொல்லப்பட்டாலும் சரி, இன்னொருவர் தின்ற தட்டில் மிஞ்சியதை வாங்கிச் சாப்பிடுவதை நீங்கள் விட்டுவிட வேண்டும். நல்ல, சிறந்த தானியத்தை மாத்திரம், அதுவும் மரியாதையுடன் கொடுக்கப்பட்டால் மாத்திரமே வாங்கிக்கொள்ளுங்கள். நீங்கள் செய்ய வேண்டும் என்று நான் சொன்னவைகளை அனுசரித்து நீங்கள் நடப்பீர்களாயின், உங்களுடைய முன்னேற்றத்தை நான்கு, ஐந்து மாதங்களில் அல்ல, சில நாட்களிலேயே நீங்கள் அடைந்துவிடுவீர்கள்.

ஹிந்துக்கள், இயல்பாகவே பாவம் செய்கிறவர்கள் அல்ல. ஆனால், அவர்கள் அறியாமையில் மூழ்கிவிட்டனர். இந்த ஆண்டிலேயே தீண்டாமை போயாக வேண்டும். நான் உயிர் வாழும்படி செய்துவரும் இரண்டு பலமான ஆசைகள், 'தீண்டாதாரி'ன் அபிவிருத்தியும் பசுப் பாதுகாப்புமாகும். இந்த இரு ஆசைகளும் நிறைவேறிவிடுமானால், சுயராஜ்யம் உடனே ஏற்பட்டுவிடும். எனது மோட்சம் அதில்தான் இருக்கிறது. உங்களுடைய கதி மோட்சத்திற்காக வேலை செய்துகொள்ளும் பலத்தைக் கடவுள் உங்களுக்கு அளிப்பாராக.

[அகமதாபாத்தில் நடந்த ஒடுக்கப்பட்ட வகுப்பினர் மகாநாட்டில் பேசியதிலிருந்து எடுத்தது.]

—'எங் இந்தியா' - 4 - 5 - 1921

## 2

# கத்தியவாரில்

கெட்ட காரியத்திலிருந்து வெளியேற வைதிக ஹிந்துக்கள் மறுக்கிறார்கள் என்றால், நம்முடன் திரும்பக்கொண்டு வருவதற்காக நாம் முயற்சி செய்து வரும் 'தீண்டாதா'ரும் அவ்வாறே கெட்ட காரியங்களிலிருந்து வெளியேற மறுத்து வருகின்றனர். "குடிக்கவும். குளிக்கவும், அலம்புவதற்கும் சுத்தமான நீர் போதிய அளவு உங்களுக்குக் கிடைக்கும்படி செய்து தர நான் கடமைப்பட்டிருக்கிறேன். ஆனால், செத்த மாட்டு மாமிசத்தைப் புசிப்பதை நீங்கள் விட்டுவிட வேண்டாமா? அது மிகுந்த ஆபாசமான பழக்கம். ஆகையால், இப்பழக்கத்தை நீங்கள் விட்டுவிடாமல் வைத்திருக்கும்போது நான் உங்களைத்

தொட்டுக் கொண்டு வரலாம். ஆனால், வைதிக பிராம்மணர்கள் உங்களைத் தொட்டுக் கொள்ளும்படி செய்வதில் வெற்றி பெற முடியும் என்று நான் நம்புவதற்கில்லை'' என்றார், காந்திஜி.

ஆனால், செத்த மாட்டு மாமிசத்தைத் தின்பதற்கு அவர்கள் சமாதானம் கூறிவிட முயன்றார்கள். ‘‘செத்த கால்நடைகளை நாங்கள் எடுத்துப் போய்விட வேண்டும் என்று நாங்கள் எதிர்பார்க்கப்பட்டால், அவற்றின் மாமிசத்தை நாங்கள் தின்னும விரும்போம் என்று நீங்கள் எதிர்பார்க்க முடியாது'' என்றனர். இதற்குக் காந்திஜி, “நகரங்களில் பிராம்மணர்களும் உயர்சாதி ஹிந்துக்களும்கூட தோல் பதனிடும் தொழிற்சாலையை நிர்வகித்து வருகின்றனர். நானும் ஒரு நாளைக்குத் தோல் பதனிடும் தொழிற்சாலையை நடத்தி வருவதையும் நீங்கள் காண நேரலாம். ஆனால் அவர்களோ, நானோ, செத்த கால்நடைகளின் மாமிசத்தைத் தின்பதாகக் காணமுடியாது'' என்றார். ‘‘அது இருக்கலாம். ஆனால், எங்கள் விஷயத்தில் பழக்கத்தை ஒட்டித் தொழிலும் இருந்துவருகிறது'' என்று பிடிவாதமாகக் கூறினர். மாங்கிரோலில் இருக்கும் நண்பர்களும் இதே வாதத்தையே சமாளிக்க வேண்டியிருந்தது. இது ஆபாசமான பழக்கமே என்பதை அவர்கள் ஒப்புக்கொண்டார்கள். ஆனால், அநேக காலமாக வந்திருக்கும் பழக்கத்தை விட்டொழித்துவிட அவர்களால் முடியவில்லை. ‘‘ஆனால், செத்த கால்நடைகளின் மாமிசம் ருசியாகவாவது இருக்கிறதா?'' ‘‘ருசியாக இல்லவே இல்லை'' என்றார்கள். ‘‘சரி, அது ருசியாக இருக்கிறது என்று நான் எண்ணினேன். அப்படி ருசியாக இல்லை என்றால், உங்களுக்குப் போதுமான கம்பு ரொட்டியும் பாலும், காய் கறியும் கொடுப்பதாக நான் உறுதி கூறுவதானால், செத்த கால்நடைகளின் மாமிசம் சாப்பிடுவதை நீங்கள் விட்டுவிடுவீர்களா?'' ‘‘முடியாது என்றே அஞ்சுகிறேன்'' என்று தீண்டாதாரின் பிரதிநிதி நீண்ட நேரம் கழித்துச் சொன்னார். ‘‘நாங்கள் கலந்தாலோசித்துக் கொண்டு அதன் பிறகுதான் உங்களுக்குப் பதில் சொல்ல முடியும். இது பழைய பழக்கம். நீங்களும் நாங்களும் என்ன சொன்னாலும் அது இருந்துகொண்டுதான் வரும். நீங்கள் எங்களை விட்டுப் போன மறுநாளே வாக்குறுதியை நாங்கள் மீறிவிடுவதாக இருந்தால், உங்களுக்கு வாக்குறுதி அளித்து என்ன பயன்?'' அவரிடம் யோக்கியப் பொறுப்பு இருந்தது. ஆனால், சீர்திருத்தக்காரருக்கு இருக்கும் வேலை எவ்வளவு கஷ்டமானது என்பதையே அவர் பதில் காட்டியது.

—'எங் இந்தியா' - 16—4—1925

## 3

# செய்ய வேண்டியது என்ன?

ஒருவன் குடித்து, பசுக்களைக் கொன்று, செத்த கால்நடைகளின் மாமிசத்தையும் தின்கிறான் என்றால்தான் என்ன? ரகசியமாக, இன்னும் அதிக மோசமான பாவ காரியங்களைச் செய்கிறவனைவிட இவன் அதிக மோசமானவனல்லாவிட்டாலும், இவனும் தீய காரியத்தைச் செய்பவனே என்பதில் சந்தேகமில்லை. ஆனால், ரகசியமாகப் பாவங்களைச் செய்து வருபவனைத் தீண்டாதவனாகச் சமூகம் பாவிக்காததைப் போன்றே, இவனையும் தீண்டாதவனாகச் சமூகம் கருதக் கூடாது. பாவச் செயல்களைச் செய்கிறவர்களை வெறுத்து ஒதுக்கிவிடக் கூடாது. ஆனால், அவர்களிடம் பச்சாத்தாபப்பட்டுப் பாவச் செயல்களிலிருந்து விடுபடுவதற்கு அவர்களுக்கு உதவி செய்ய வேண்டும். அகிம்சா தத்துவத்தைக் குறித்து நாம் பெருமைப்பட்டுக் கொள்ளுகிறோம். ஆனால், ஹிந்துக்களிடையே தீண்டாமை இருந்துவருவது, அந்தத் தத்துவத்தையே மறுப்பதாகும். 'தீண்டாதா'ரிடமிருக்கும் தீய காரியங்களுக்கெல்லாம் நாம்தான் பொறுப்பாளிகள். அவர்களுடைய வாழ்க்கை வழிகளிலிருந்து அவர்களை அப்புறப்படுத்துவதற்கு நாம் என்ன செய்திருக்கிறோம்? நம் சொந்தக் குடும்பத்தினரைச் சீர்திருத்துவதற்கு நாம் சொத்தை யெல்லாம் செலவிடவில்லையா? நமது மகத்தான ஹிந்து குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அல்லவா 'தீண்டாதாரு'ம்? உண்மையில் மனித வர்க்கம் முழுவதையுமே பிரிக்க முடியாத ஏகக் குடும்பமாகப் பாவிக்கும்படி ஹிந்து தருமம் நமக்குப் போதிப்பதோடு, எல்லோருடைய தவறான நடத்தைக்கும் நாம் ஒவ்வொருவரும் பொறுப்பு என்றும் கூறுகிறது. ஆனால், அது மிகப் பரந்தது என்பதற்காக அந்த மகத்தான தத்துவத்தின்படி நாம் நடப்பது சாத்தியமில்லை எனில், 'தீண்டாதாரை'யும் ஹிந்துக்களாகவே நாம் கருதுவதால் அவர்களை நம்முடன் ஒன்றுபடுத்திக் கொள்ளுவதையாவது நாம் தெரிந்து கொள்ளுவோமாக.

செத்த கால்நடைகளின் மாமிசத்தைத் தின்பது, அல்லது செத்த மாமிசத்தை எண்ணிக் கொண்டிருப்பது, இதில் அதிக மோசமானது எது? நாம் தினந்தோறும் லட்சக்கணக்கான தீண்டத்தகாத எண்ணங்களை உண்டாக்கி, அவற்றை வைத்துக் கொண்டு, வளர்த்தும் வருகிறோம். அவையே வெறுக்கத்தக்க, போக்க வேண்டிய உண்மையான தீண்டத் தகாதவைகளாகையால், அவற்றை நாம் விட்டொழிப்போமாக. நமது 'தீண்டாத' சகோதரர்களை அன்போடு தழுவிக் கொண்டு, அவர்களுக்கு இதற்கு முன்னால் செய்துவிட்ட அநீதிகளுக்காக நாம் பிராயச் சித்தம் செய்வோமாக. 'தீண்டாதா'ருக்குச் சேவை செய்தாக வேண்டிய கடமையைக் குறித்து, கடிதம் எழுதியிருப்பவர் ஆட்

சேபிக்கவில்லை. அவர்களைப் பார்த்த மாத்திரத்திலேயே நமக்கு அருவருப்பாக இருக்கிறது. நாம் தீட்டுப்பட்டுவிடுகிறோம் என்றால், அவர்களுக்கு நாம் சேவை செய்வது எப்படி?

—'எங் இந்தியா' - 13—5—1926

## 4

# நமது அவமானமும் அவர்கள் அவமானமும்

நீண்ட காலமாக ஒத்திவைக்கப்பட்டு வந்த ஒரிஸ்ஸா பயணம் வந்தது; அதிக துக்கமான, அவமானகரமான அனுபவமும் ஏற்பட்டது. போல்கார் என்ற ஊருக்குச் சமீபத்திலுள்ள ரெயில்வே ஸ்டேஷன் முப்பத்தொரு மைல் தூரம். அங்கேதான் இச்சம்பவம் நடந்தது. *11*-ஆம் தேதி அவ்வூரில் நான் தீனபந்து ஆண்டுருஸுடன் உட்கார்ந்து கொண்டிருந்த போது, ஒருவர் வந்தார். அவர் பாதிக் கூனலான முதுகுடையவர். இடுப்பில் ஒரு சிறு அழுக்குத் துணியை மாத்திரம் கட்டிக் கொண்டிருந்தார். பயந்து குனிந்தவண்ணம் எங்கள் முன்னால் வந்தார். தரையிலிருந்த வைக்கோல் துரும்பை எடுத்து வாயில் வைத்துக்கொண்டார். பிறகு அப்படியே தரையில் விழுந்து நமஸ்கரித்தார். பின்னர் எழுந்து கையைக் கட்டிக்கொண்டு வணங்கினார். வாயிலிருந்து வைக்கோல் துரும்பை எடுத்துத் தலையில் செருகிக் கொண்டார். புறப்படவும் ஆயத்தமாகிவிட்டார். இக் காட்சியைக் கண்டு மனவேதனை தாங்காமல் தவித்துக் கொண்டிருந்தேன். அவர் வணக்கம் தெரிவித்து முடித்ததும், மொழி பெயர்த்துச் சொல்ல யாராவது வேண்டும் என்று சப்தம் போட்டேன். அந்த நண்பரைக் கிட்டத்தில் வருமாறு அழைத்து அவருடன் பேச ஆரம்பித்தேன். அவர், ஆறு மைல்களுக்கு அப்பால் வசிக்கும் 'தீண்டாதார்'. விறகுச் சுமையை போல்காரில் விற்றுவிட்டுப் போவதற்காக வந்தார். என்னைப் பற்றிக் கேள்விப்பட்டு என்னைப் பார்ப்பதற்காக வந்தார். வாயில் ஏன் வைக்கோல் துரும்பை வைத்துக் கொண்டார் என்று அவரைக் கேட்டேன். என்னைக் கௌரவிப்பதற்காக அவ்விதம் செய்வதாகக் கூறினார். வெட்கத்தால் தலை குனிந்தேன். என்னைக் கௌரவிப்பதற்காகச் செய்யப்பட்ட அக்காரியத்தை என்னால் தாள முடியவில்லை. என்னுடைய ஹிந்து உணர்ச்சியும் அதிகமாகப் புண்பட்டுவிட்டது. எனக்கு ஏதாவது சன்மானம் கொடுக்கும்படி அவரிடம் கேட்டேன். எனக்கு ஏதாவது செப்புக் காசைக் கொடுப்பதற்காகத் தம் இடுப்பில் தேடினார். "உங்கள் செப்புக் காசு எனக்கு வேண்டாம். அதைவிட மேலானது ஏதாவது

எனக்கு நீங்கள் கொடுக்க வேண்டும்'' என்று கேட்டேன். ''கொடுக்கிறேன்'' என்று அவர் பதில் சொன்னார். அதுதான் பழக்கமாகையால், அவர் குடிக்கிறார் என்றும், செத்த கால்நடைகளின் மாமிசத்தைத் தின்கிறார் என்றும் அவரைக் கேட்டே தெரிந்துகொண்டேன்.

''வாயில் வைக்கோல் துரும்பை வைத்துக் கொண்டு வணங்குவது என்பது மனிதனின் கௌரவத்திற்கே இழிவானது. எனவே, உலகத்தில் எவருக்காகவும் இனி அப்படி செய்வதே இல்லை என்று நீங்கள் வாக்குறுதி அளிக்க வேண்டும். இது தான் உம்மிடமிருந்து நான் விரும்பும் சன்மானம். இனி எப்பொழுதுமே மதுபானம் செய்யக் கூடாது. ஏனெனில், அது மனிதனை மிருகத்தின் நிலைக்குத் தாழ்த்திவிடுகிறது. செத்த கால்நடைகளின் மாமிசத்தை இனி எப்பொழுதுமே தின்னாதீர். ஏனெனில், அது ஹிந்து தருமத்திற்கு விரோதமானது. நாகரிகமுள்ள யாரும் செத்த கால்நடைகளின் மாமிசத்தைச் சாப்பிடவே மாட்டார்கள்'' என்றேன்.

''ஆனால், நான் குடிக்காமலிருந்தால், செத்த கால்நடைகளின் மாமிசத்தைத் தின்னாது போனால், என்னைச் சாதியை விட்டுத் தள்ளிவிடுவார்கள்'' என்றார், அப்பரிதாபகரமான மனிதர்.

''அவசியமானால் சாதியை விட்டுத் தள்ளப்பட்டு விடுவதையும் சகித்துக் கொண்டு கிராமத்தை விட்டுப் போய்விடுங்கள்'' என்றேன்.

ஒடுக்கப்பட்டிருந்த அடக்கமுள்ள அவர், அந்த வாக்குறுதியை அளித்தார். அதன்படி அவர் நடந்து வருவாரானால், அவருடைய அந்த மூன்று சன்மானங்களும், தாராள சிந்தனையுள்ள என் நாட்டினர் என்னிடம் ஒப்படைக்கும் பணத்தைவிட எவ்வளவோ அதிக மதிப்பிற்குரியனவாகும்.

இந்தத் தீண்டாமையே நமக்கு மிகப் பெரிய அவமானம். அதன் மானக்கேடு மேலும் ஆழமாகப் பதிந்து மனம் குன்றச் செய்கிறது.

—'எங் இந்தியா' – 22—12—1927

## 5

# அதன் பலனே இத்தீமைகள்

''தெலுங்கு ஜில்லாக்களிலேயே அன்றி அவற்றை அடுத்துள்ள தமிழ் ஜில்லாக்களிலும் மடிகாக்கள், மாலாக்கள் ஆகிய இரு வகுப்பாரும் இப்பொழுது 'தீண்டாதார்கள்'. இவர்கள் மாதம்மா, மாரியம்மா, கங்கம்மா ஆகிய தெய்வங்களுக்குப் பசுக்களையும் எருமைகளையும் வெட்டிப் பலி கொடுத்து வருகின்றனர். அவசர நிலைமையோ, தொத்து நோய் அபாயங்களோ ஏற்படும் சமயங்களில், சாதி ஹிந்துக்களில் சிலரும் அத்தெய்வங்களின் முன்பு இதே பலிகளைக் கொடுப்பதாக வேண்டிக்கொள்ளுகிறார்கள் என்பதில்

சந்தேகமில்லை. ஆனால், பலியிடுவது மாத்திரம் தீண்டாதார் என்று சொல்லப்படுபவர்களாலேயே செய்யப்பட்டு வருகிறது. 'தீண்டாதார்' பகிரங்கமாக மிருகங்களைப் பலி கொடுப்பதோடு, மாட்டு மாமிசத்தையும் சாப்பிட்டு வருகின்றனர். செத்த மாட்டு மாமிசத்தையும் சாப்பிடுகிறார்கள். சாதி ஹிந்துக்கள் இவற்றைச் சாப்பிடுவதில்லை. ஆனால், பன்றி மாமிசத்தைத் தாராளமாகச் சாப்பிடுகிறார்கள். ஆகையால், இந்த மிருக பலியையும், செத்த மாடு தின்பதையும் விட்டுவிடுமாறு அவர்களுக்குப் புத்திமதி கூறும் படி உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். அவர்கள் உடல்நிலை கெட்டுப் போவதற்கு, செத்த மாட்டைத் தின்பதுதான் காரணம். தீண்டாமை ஒழிப்புக்காக வேலை செய்து வரும் எங்களுக்கும் ஒரு செய்தியை அனுப் புங்கள்.''

ஆந்திர மாகாண விவசாயிகள் சங்கத்தின் காரியதரிசி எழுதி யிருக்கும் நீண்ட கடிதமே மேலே சுருக்கிக் கொடுக்கப்பட்டிருக் கிறது. இப்பொழுது இருந்துவரும் துவேஷத்திற்கு, செத்த மாட்டைத் தின்பதும், முக்கியமாக மாட்டிறைச்சி தின்பதும் அதிக முக்கியமான காரணங்களாக இருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. ஆனால், தங்கள் சகோதர ஹிந்துக்களில் ஒரு பகுதியினரைத் தீண்டாதாராகக் கருதி, அவர்களை மிகுந்த கொடு மையான வகையில் உதாசீனம் செய்து வருவதில் ஹிந்து மதத்தின் அல்லது சாதி ஹிந்துக்களின் பலவீனம் வெளிப்படு வதைப் போன்று வேறு எதிலும் அவ்வளவு மோசமாக வெளிப் படவில்லை. ஆகையால், 'தீண்டாதார்' இன்று இருக்கும் நிலை மைக்கு நம்மையே நாம் குறைசொல்லிக் கொள்ள வேண்டும். எனினும், நிலைமையைச் சீர்ப்படுத்திக் கொள்ளுவதற்கு இன்னும் காலங்கடந்துவிட வில்லை. தீண்டாமை செத்து, ஒழிந்து விட்டது என்பதைத் தீண்டாதார் உணர வேண்டும். அதன் தீய பலன் இன்னும் வெகு காலத்திற்கு விடாமல் இருந்துகொண்டு தான் இருக்கும். இருவரும் சேர்ந்து இதில் எவ்வளவு தூரம் அலட்சியமாக இருந்து வருகிறோமோ, அவ்வளவு காலத்திற்குத் தீய பலன் நீடித்தேவரும். சாதி ஹிந்துக்களுக்குத்தான் இதில் பொறுப்பு அதிகமாக உண்டு. அவர்கள், தங்கள் கடமையைச் செய்து மனப்பூர்வமாக வேலை செய்வார்களானால், இந்தப் பலி களையும், செத்த கால்நடைகளின் மாமிசத்தைத் தின்னும் பழக் கத்தையும் போக்கிவிடுவதில் அவர்கள் நிச்சயம் வெற்றி பெறு வார்கள். சமூகத்திலிருக்கும் தீமையான மூடநம்பிக்கைகளையும், தீய பழக்க வழக்கங்களையும் போக்குவதற்கு, மக்கள் விஷயத்தை அறிந்து கொண்டுவிடுவது ஒன்றே சிறந்த வழி. ஆனால், தீண்டா மையைப் போக்குவதற்கு இந்தச் சீர்திருத்தத்தை நிபந்தனையாக வைப்பார்களானால், இத் தீமைகளில் எதையும் போக்கி ஹரி ஜனங்களைப் புனிதமாக்க முடியாது. சீர்திருத்தக்காரர்களுக்கும், சாதி ஹிந்துக்களுக்கும் இதை மீண்டும் நினைவுபடுத்துகிறேன். இந்தத் தீமைகள் தீண்டாமையின் பலனேயன்றித் தீண்டா மைக்குக் காரணங்கள் அல்ல. எப்படியும் இச்சமயத்திற்கு அது அப்படி அல்லவே அல்ல. இதை நாம் உணருவோமாக.

—'ஹரிஜன்' - 18—3—1933

## 6

# செத்த கால்நடைகளை அப்புறப்படுத்துவது

செத்துப் போன கால்நடைகளை அப்புறப்படுத்திப் பங்கிடு செய்து, அவற்றின் மாமிசத்தைத் தின்னும் பல வகுப்பினர் ஹரிஜனங்களில் இருக்கின்றனர். தென்னிந்தியாவிலிருக்கும் சக்கிலியரும் மடிகாக்களும், குஜராத்திலிருக்கும் சாமார்களும் அத்தகைய வகுப்பினர். செத்த கால்நடைகளை அப்புறப்படுத்திப் பங்கிடு செய்வது தெய்விகமான கடமையும் தொழிலுமாகும். ஆனால், செத்த கால்நடைகளின் மாமிசத்தைத் தின்பது மிகவும் ஆபாசமான பழக்கம். இதை அதிக மோசமான பாவம் என்று ஹிந்து சாத்திரங்கள் கூறுகின்றன. நமது ஹரிஜன சகோதரர்கள், தங்களைத் தாங்களே புனிதமாக்கிக்கொள்ள வேண்டிய இச்சமயத்தில், அப்பழக்கத்திலிருந்து அவர்கள் விடுபடுவதற்கான உதவியைச் செய்ய வேண்டியது முக்கியமாகும். ஆனால், அநேக காரணங்களை முன்னிட்டு இதைச் செய்யத் தங்களால் முடியவில்லை என்று அவர்கள் கூறுகிறார்கள். "அநேக தலைமுறைகளாகப் பழகிப்போய்விட்ட ஒரு பழக்கம் இது. இப்பொழுது இது எங்களுக்கு ருசியான ஆகாரமாக இருக்கிறது. எவ்விதம் தங்களுக்கு ருசியுள்ளதாக இருப்பதை யாரும் விட்டுவிட முடியாதோ, அப்படியே நாங்களும் இதைத் தின்பதை விட்டுவிடுவதற்கில்லை. செத்த கால்நடைகளை அப்புறப்படுத்துவது எங்கள் மீது சுமத்தப்பட்டிருக்கும் ஒரு கடமை. ஜனங்களிடையே முக்கியஸ்தர்களாக இருப்பவர்களின் கோபத்திற்கு ஆளாகாமல், இக்கடமையை நாங்கள் தட்டிக் கழித்துவிட முடியாது என்பதையும் நீங்கள் அறிய வேண்டும். செத்த கால்நடைகளை அப்புறப்படுத்துவதற்குக் கூலியில் ஒரு பகுதியே அவற்றின் மாமிசம் என்பதையும் ஒருவேளை நீங்கள் அறிந்திருப்பீர்கள். ஆகையால், இம் மூன்று காரணங்களினால் நாங்கள் செத்த மாடு தின்பதில் கட்டுண்டிருக்கிறோம்" என்கிறார்கள்.

இந்த வாதம் கவனிக்க வேண்டியதேயாகும். எழுத்து மூலமோ, பேச்சு மூலமோ கோரிக்கைகளை வெளியிடுவதனால் எந்தப் பயனும் இல்லை. இதிலிருந்து மீளுவதற்கான வழியை நாம் காட்ட வேண்டும். செத்த கால்நடைகளை அப்புறப்படுத்துவதன் சம்பந்தமாக, நாட்டின் பல பகுதிகளிலும் இருந்து வரும் நிலைமையை நாம் முதலில் தெரிந்துகொள்ள வேண்டும். சந்தர்ப்பத்திற்கு ஏற்றவகையில் அந்த நிலைமைகளை நாம் மாற்ற வேண்டும். தோலை உரிப்பதையும், அது சம்பந்தமான மற்ற வேலைகளையும் நாம் நேரில் பார்த்து, மீதமிருப்பவைகளைத் தக்க முறையில் பட்டுவாடா செய்யவும் ஏற்பாடு செய்ய வேண்டும்.

செத்த கால்நடைகளைத் தின்பதில்லை என்று உறுதி கூற வேண்டும் என்பதை, அவற்றை அப்புறப்படுத்துவதற்கு ஒரு நிபந்தனையாக விதிக்க வேண்டும். செத்த கால்நடைகளை அப்புறப்படுத்தும்படி யாரையும் நிர்ப்பந்தப்படுத்தக்கூடாது.

இந்த வேலைக்கு அநேக தொண்டர்கள் தேவை. செத்த கால்நடைகளின் தோலைச் சுத்தமான வகையில் உரிக்கும் கலை அவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். பழைய முறையில் தோலை உரித்துக்கொண்டிருக்கும் ஹரிஜனங்களுக்கு, இம்முறையைச் சொல்லிக் கொடுக்க வேண்டும். இப்பொழுது செய்வது போல செத்த கால்நடைகளைத் தரையில் இழுத்துக்கொண்டு போவதால் தோல் சேதமடைந்து, அதன் விலை மதிப்பும் அதிகமாகக் குறைந்து விடுகிறது. அப்படிச் செய்யாமல் அவற்றைத் தூக்கிச் செல்ல வேண்டும். திறமையான, நல்ல முறையில் அவற்றைத் தூக்கிச் சென்று அப்புறப்படுத்த வேண்டும். தோல் பதனிடுகிறவர்கள், இப்புதிய முறையை விரும்பி அனுசரிப்பார்கள். ஆனால், உயர்சாதியினர் என்று கூறப்படுகிறவர்கள் இவ்வேலையில் ஆற்றல் பெற்றால்தான் அதை அனுசரிக்க அவர்கள் முன்வருவார்கள்.

செத்த கால்நடைகளைப் பங்கிடு செய்வதற்கு இப்பொழுது அனுசரிக்கப்பட்டு வரும் முறை, கொஞ்சமும் லாபமில்லாததாகும். இதனால் நாட்டிற்குக் கோடிக் கணக்கான ரூபாய் நஷ்டமாகிறது. செத்த கால்நடையின் ஒவ்வொரு பகுதியையும் சரியானபடி பயன்படுத்திக்கொள்ள வேண்டும். அதன் பெரும் பகுதி இன்று வீணாக்கப்பட்டு விடுகிறது. தோல், எலும்புகள், குடல், சதை முதலியன யாவும் பயனுள்ளவையே. அவற்றைச் சரியான வழியில் பயன்படுத்திக்கொள்ளவேண்டும். தோல் ஒருவகையில் பயன்படுத்திக்கொள்ளப்படுகிறது. எலும்புகள் பெரும்பாலும் வீணாக்கப்பட்டுவிடுகின்றன. அவற்றைப் பத்திரமாகச் சேகரித்து, விஞ்ஞான ரீதியில் அவற்றை உரமாக்கிக் கொள்ள வேண்டும். குடல், மெல்லிய கயிறுகள் திரிப்பதற்குப் பயன்படுத்தப்படுகிறது. இதில் மேலும் அபிவிருத்திகளைச் செய்வதற்கு இடமிருக்கிறது. சதையை இப்பொழுது ஆபாசமாக உபயோகிக்கப்படுவதிலிருந்து தடுத்து, இதிலிருந்து கொழுப்பு எடுப்பதற்குப் பயன்படுத்த வேண்டும். இதைக் கொண்டு தொழிற்சாலைகளுக்கு வேண்டிய கொழுப்புப் பசைகளைத் தயாரிக்கலாம். மீதமிருப்பவைகளை உரமாக்கிக் கொள்ள வேண்டும், அல்லாவிடில் பூமியில் ஆழப் புதைத்துவிடவேண்டும். இவ்விதம் செய்யப்படும் வேலைகள் முழுவதிலும் உடனிருப்பது என்று தொண்டர்கள் முடிவுசெய்து கொண்டு விடுவார்களானால், இப்புது முறைகளை ஹரிஜனங்கள் அனுசரிக்க ஆரம்பித்து விடுவதோடு செத்த கால்நடைகளின் மாமிசத்தைத் தின்பதையும் விட்டுவிடுவார்கள்.

இவற்றில் எதிலும் கட்டாயப்படுத்துவது என்பதற்கே இடமில்லை. தோலை உரிப்பவர்கள், மாறுதலுக்குத் தயாராக இல்லை

என்றால், அவர்கள் இஷ்டப்படி செய்துகொண்டு போகட்டும் என்று விட்டுவிட வேண்டும். கால்நடை ஸ்தாபனங்கள், செத்த கால்நடைகளை அப்புறப்படுத்த எவ்விதம் கடமைப்பட்டிருக்க வில்லையோ, அதே போலத் தோலை உரிப்பவர்களும் செத்த கால் நடைகளை அப்புறப்படுத்தக் கடமைப்பட்டிருக்கவில்லை. இது, பரஸ்பரம் ஒத்து ஏற்பாடு செய்துகொள்ள வேண்டிய விஷயம்.

ஆனால், தொண்டர்கள்தான் இந்த வேலையை முதலில் ஆரம்பித்துச் செய்ய வேண்டும். உண்மையில் இவர்கள் இவ் வேலைகளை மேற்பார்வை செய்வது வெறுக்கப்படாத இடங்களில் இவர்கள் மேற்பார்வை செய்து வர வேண்டும். இவ்வேலைகளில் தொண்டர்கள் பயிற்சி பெறும் வரையில், மேற்பார்வையிடு வதைத் தாமதித்துவைக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. உண்மையில் இவ்வேலையே, அதில் பயிற்சியும் அடங்கியதாக இருப்பதுதானே.

முனிசிபாலிடிகளும், ஸ்தல ஸ்தாபனங்களும், அரசாங்கங் களும், விஞ்ஞான முறையில் தோல் உரிப்பது, தோல் பதனிடுவது ஆகியவைகளில் தொண்டர்களுக்குப் பயிற்சி அளிக்கும் வேலையை உடனே ஆரம்பித்துவிட வேண்டும். கட்டடங்கள் நிபுணர்கள் ஆகியவற்றிற்கு இதனால் கொஞ்சம் செலவு ஏற்படும். உண்மையில் இதற்கென்று பயிற்சிப் பள்ளிக்கூடத்தை அமைத்து, தரும சிந்தனையுள்ள நிபுணர்கள், மிருக வைத்திய டாக்டர்கள் ஆகியவர்கள் ஒத்துழைப்பதோடு யோசனைகளையும் உதவியையும் அளிக்கும்படியும் கேட்டுக்கொள்ள வேண்டும்.

—'ஹரிஜன்' – 18—3—1933

## 7

# ஹரிஜன சகோதரர்களுக்கு

மதிப்பிற்குரிய ஸ்ரீ வி. பி. மாதவ ராவ் இக்கூட்டத்திற்குத் தலைமை வகிப்பது என் மனத்தை மிகவும் உருக்கும் விஷய மாகும். ஆறு ஆண்டுகளுக்கு முன்னால் நான் பெங்களூரில் இருந்தபோது, பன்முறை அவரைச் சந்தித்துப் பேசிய இன்ப நினைவுகள் எனக்கு இருந்து வருகின்றன. வயது முதிர்ந்துவிட்ட போதிலும், உடல் தள்ளாடியிருந்தும், எனக்குத் தமது ஆசீர் வாதத்தைத் தெரிவிக்கவும், இக்கூட்டத்திற்குத் தலைமை வகிக்கவும் அவர் சிரமத்தை எடுத்துக்கொண்டிருப்பது கல் நெஞ்சத்தையும் கரைக்கக்கூடியதாகும். நான் மேற்கொண் டிருக்கும் இந்த ஹரிஜன வேலைக்கு இதை ஓர் ஆசீர்வாதமாகவே நான் கொள்ளுகிறேன். மைசூரின் பெரியாரும் அறிவாளியுமாகிய இவர், வாழ்க்கையில் எவ்வளவோ அனுபவங்களைப் பெற்றிருக்கி

ரூர். அத்தகையவர், இந்த இயக்கத்தை ஆசீர்வதிப்பதற்காக இங்கே வந்திருப்பது அதிக ஆனந்தமடைய வேண்டியதாகும், ஆறுதல் அடைய வேண்டியதுமாகும். ஆனால், காலஞ் சென்ற ஹம்ஸா ஹுஸேன் சாஹிப், ஆறு ஆண்டுகளுக்கு முன்னால் நான் இங்கே இருந்தபோது வரவேற்புக் கமிட்டித் தலைவராக இருந்தார். அவர் காட்டிய அன்பு எனக்கு நன்றாக நினைவில் இருக்கின்றது. நண்பர் என்ற முறையில் என்னை வரவேற்க அவரும் இக்கூட்டத்தில் இருந்திருக்க வேண்டும் என்றே ஆசைப்படுகிறேன். அவருடைய ஆன்மாவுக்கு ஆண்டவன் சாந்தியளிப்பாராக.

எனக்கு நீங்கள் அளித்திருக்கும் பண முடிப்பிற்காக நான் நன்றி செலுத்துகிறேன். 'நல்ல' பண முடிப்பு என்று சொல்ல வாயெடுத்தேன். ஆனால், அடை மொழியை உபயோகிக்கத் தயங்கியிருக்கிறேன். ஏனெனில், இதைவிட இன்னும் பெரிய பண முடிப்பைக் கொடுக்க பெங்களூர் மக்களால் முடியும் என்பதை நான் அறிவேன். அதோடு, நான் உங்களிடமிருந்து விடை பெற்றுச் செல்லுவதற்கு முன்னால், ஹரிஜன சேவையைப் போன்ற சிறந்த இக்காரியத்திற்கு இன்னும் பணவுதவிகள் பலவற்றைப் பெறுவேன் என்பதும் எனக்குத் தெரியும். ஹரிஜனங்களை, சாதி ஹிந்துக்கள் விடாமல் ஒடுக்கிவைத்து வந்திருக்கிறார்கள். ஆகவே, அச்சகோதர சகோதரிக்கு நீங்கள் செய்யும் இந்த உதவி மிகச் சிறிய பிராயச்சித்தமே. உங்கள் வரவேற்புப் பத்திரத்தை ஆரம்பம் முதல் கடைசி வரையில் படித்துப் பார்த்தேன். நீங்கள் செய்திருக்கும் பல விஷயங்களை இப்பத்திரத்தில் கூற உங்களால் முடிந்திருப்பதற்காக, உங்களையும், மகாராஜாவின் அரசாங்கத்தையும் பாராட்டுகிறேன். ஆனால், தீண்டாமை நம் உள்ளங்களிலிருந்து அடியோடு ஒழிக்கப்பட்டாலன்றி மைசூர் அரசாங்கமோ, மக்களோ, அன்றி நானோ திருப்தியடைவதற்கு எந்தவிதக் காரணத்தையும் நான் காணவில்லை. ஆகையால், ஹரிஜனங்களுக்காக நீங்கள் செய்திருப்பவைகளை நான் நன்றியறிதலுடன் ஏற்றுக்கொண்டு, உங்களிடம் முழந்தாளிட்டு ஒன்று கேட்டுக் கொள்ளுகிறேன். வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் சாதி ஹிந்துக்கள் என்னென்ன உரிமைகளை அனுபவித்து வருகிறார்களோ, அவைகளை யெல்லாம் ஹரிஜனங்களும் அனுபவிக்கும் நிலை ஏற்படும் வரையில் நீங்கள் திருப்தியோடு இருந்துவிடக் கூடாது என்பதே என் கோரிக்கை. நடந்து காட்டுவதற்கு ஆண்டவன் நமக்கு அளித்திருக்கும் இச்சந்தர்ப்பத்தில் அவசியமான தூய்மையைப் பெறுவோமாக. இச்சமயம் நமது கடமையைச் செய்வதில் நாம் தவறிவிடுமோயின், ஹிந்துக்களும் ஹிந்து சமயமும் கடவுளின் கோபத்திற்கு ஆளாக நேரும் என்பது நிச்சயம்.

இப்பெரும் கூட்டத்திற்கு வந்திருக்கும் ஹரிஜன சகோதர, சகோதரிகளுக்கு ஒரு வார்த்தை. தாமே தூய்மையடையும் இக்காரியத்திலிருந்து நீங்களும் விடுபட்டுவிட முடியாது. இந்தப்

பலிபீடத்திற்கு நீங்களும் உங்கள் பலியைக் கொண்டுவர வேண்டும். உள்ளும் புறமும் சுகாதார விதிகளைக் கண்டிப்பாக அனுசரிப்பதுதான் அது. செத்த மாட்டைத் தின்பதும், மாட்டிறைச்சி தின்பதும் இன்னும் இருந்துவரும் இடங்களில் அவற்றை விட்டுவிட வேண்டும். நாகரிக உலகத்தின் எல்லாப் பகுதிகளிலும் செத்த கால்நடைகளைத் தின்பது மிகக் கேவலமானது என்று வெறுக்கப்படுகிறது. மனிதன் தின்பதற்கு அது ஏற்றதல்ல என்றும் கருதப்படுகிறது. ஹிந்து என்று சொல்லிக் கொள்ளும் யாரும் மாட்டிறைச்சி தின்றுகொண்டும் இருக்க முடியாது. பசுவைத் தெய்வீகமானதாக மதிப்பதும் பசுவைப் பூஜிப்பதும் ஹிந்து சமயத்தில் அடங்கியது. மூன்ருவதாக, குடிக்கும் பழக்கத்தையும் விட்டுவிடுமாறு இங்கே வந்திருக்கும் ஒவ்வொரு ஹரிஜன ஆடவரையும் பெண்ணையும் கேட்டுக் கொள்ளுகிறேன். சாதி ஹிந்துக்கள் பலரும் குடிக்கிருர்களே என்று எந்த ஹரிஜனும் தனக்குத் தானேயோ, என்னிடமோ கூருமல் இருப்பார்களாக. சாதி ஹிந்துக்களிடம் இருக்கும் கெட்ட பழக்கங்களை வெறுத்துவிடுங்கள் என்று நானும் ஹரிஜன் என்ற முறையில் உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். உங்களுக்காக சாதி ஹிந்துக்கள் எவ்வளவோ பிராயச்சித்தங்களைச் செய்யக்கூடும். செய்துவிட்ட தவறுகளுக்காக ஆண்டவன் முன்பு அவர்கள் எவ்வளவோ வருந்தலாம். என்ருலும், முடிவாக நீங்கள் விமோசனமடைவது, உங்கள் கையில்தான் இருக்கிறது. இதனுலேயே நேற்று முன் தினம் நான் பேசிய ஹரிஜனங்களின் பெரிய கூட்டம் ஒன்றில், செத்த மாட்டையும், மாட்டிறைச்சியையும் தின்பதைத் தாங்கள் விட்டுவிட்டதாகவும், இனி குடிப்பதில்லை என்று உறுதி செய்துகொண்டு விட்டதாகவும் அவர்கள் உறுதிமொழி அளித்தது எனக்கு அதிக ஆனந்தத்தைக் கொடுத்தது. இந்த ஹரிஜன சகோதரிகளும் சகோதரர்களும் கொண்ட இந்த உறுதியை நிறைவேற்றிவைக்கும் பலத்தைக் கடவுள் அவர்களுக்கு அருள வேண்டும் என்று எல்லாம் வல்ல இறைவனை நாம் எல்லோரும் பிரார்த்திப்போமாக.

[1934 ஜனவரி 7-ஆம் தேதி பெங்களூர் பொதுக்கூட்டத்தில் செய்த பிரசங்கம்.]

—'ஹரிஜன்' – 19—1—1934

# 8

# சாதி ஹிந்துக்களுக்கு

சுத்தமாக இருக்க வேண்டும் என்று ஹரிஜனங்களுக்குச் சொல்லி வருகிறேன். செத்த மாடு தின்னக் கூடாது, மதுபானம் செய்யக் கூடாது என்றும் கூறி வருகிறேன். அவர்கள் படிப்பதோடு, பிறகு தங்கள் குழந்தைகளுக்குச் சொல்லித் தர வேண்டும் என்றும் அவர்களுக்குக் கூறுகிறேன். சாதி ஹிந்துக்

கள் தின்றுவிட்டுப் போடும் எச்சில் இலைகளிலுள்ளதைச் சாப்பிடக் கூடாது என்பன போன்றவைகளையும் அவர்களுக்குச் சொல்லுகிறேன். ஆனால், தீண்டாமை நீக்கப்படுவதற்கு முன்னால் நிறைவேற்றப்பட வேண்டிய நிபந்தனைகளாக மாத்திரம் நான் இவற்றைக் கூறுவதில்லை. இதற்கு மாறாக, சாதி ஹிந்துக்களிடம் ஒன்று சொல்லி வருகிறேன். ஹரிஜனங்களிடம் இருக்கும் குறைபாடுகள் அவர்களிடம் இயல்பாக இருப்பவை அல்ல; ஆனால், இந்தச் சகோதரர்களை அக்கிரமமாக உதாசீனம் செய்துவிட்டதோடு, வேண்டுமென்றே ஒடுக்கிவிட்டதால் ஏற்பட்ட குறைபாடுகளே அவை. ஆகையால், அவர்கள் இன்றிருக்கிற நிலையிலேயே நாம் சீக்கிரத்தில் அவர்களுடன் உறவு கொண்டாடி, அதன் பிறகு அவர்கள் சிறந்த ஆண்களாகவும் பெண்களாகவும் ஆவதற்கு நாம் உதவி செய்தால், அக்குறைபாடுகள் மறைந்துவிடும். முன்னால் செய்துவிட்ட குற்றங்களுக்கு, சாதி ஹிந்துக்கள் செய்யக்கூடிய குறைந்தபட்சத் தவம் இதுவேயாகும். செய்துவிட்ட தவறுக்கு வருந்துகிறவர்கள், கடன்பட்டிருப்பவர்கள் என்ற முறையில் ஹரிஜனங்களை அணுக வேண்டுமேயன்றி, தகாதவர்களுக்குத் தயாளம் காட்டும் போஷகர்களாகவோ, கடன் கொடுப்பவராகவோ அவர்களை அணுகக் கூடாது.

—'ஹரிஜன்' – 28—9—1934

பகுதி பதினான்கு

# கல்வி

## 1

## தேசீயப் பள்ளிக்கூடங்கள்

சுயராஜ்யத்தை அடைய வேண்டும் என்பதற்காகத் தேசீயப் பள்ளிக்கூடங்கள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. சுயராஜ்யம் என்ற பெயருக்குரிய பெருமை அப்பள்ளிக்கூடங்களுக்கு இருக்க வேண்டுமானால், கல்வி ஸ்தாபனங்களைப் பொறுத்த வரையில், பொருந்தக் கூடியதான வகையில் தேசீய வேலைத் திட்டத்தை அவை நிறைவேற்றுவனவாக இருக்க வேண்டும். எனவே, உதாரணமாக 'தீண்டாதாரு'க்குக் கல்வியளிப்பதற்கும், பள்ளிக்கூடங்களிலிருந்து தீண்டாமைச் சாபக்கேட்டை ஒழிப்பதற்கும் தேசீயப் பள்ளிக்கூடங்கள் சக்திவாய்ந்த சாதனங்களாக இருக்க வேண்டும். கொள்கையளவில், தேசீயப் பள்ளிக்கூடங்களில் 'தீண்டாதார்' சேரலாம் என்றுதான் இருக்கிறது. ஆனால், உண்மையைப் பார்த்தால் இப்பள்ளிக்கூடங்களில் 'தீண்டாதார்' சிறுவர்கள் மிகச் சிலரே இருக்கிறார்கள். தங்கள் குழந்தைகள் 'தீண்டாதார்' குழந்தைகளுடன் கலக்கக்கூடாது என்று எண்ணும் பெற்றோர்கள், அவர்கள் விரும்பினால், தங்கள் குழந்தைகள் அப்பள்ளிகளுக்கு வராமலிருக்கச் செய்துகொள்ளட்டும். 'தீண்டாதார்' குழந்தைகளை விலக்கினால்தான் பள்ளிக்கூடத்தை நடத்த முடியும் என்று ஏற்பட்டால், பள்ளிக்கூடத்தை மூடிவிடும் ஆபத்திற்கும் உபாத்தியாயர்கள் தயாராக இருக்க வேண்டும் என்று அவர்களுக்கு யோசனை கூற நான் தயங்கமாட்டேன். 'தீண்டாதார்' குழந்தைகள் பள்ளிக்கூடத்திற்கு வந்துவிட்டால் அவர்களைச் சகித்துக் கொள்வது என்பது மாத்திரம் போதாது; ஆனால், அன்போடுகூடிய சிரத்தையோடும், கவனத்துடனும் அவர்கள் பள்ளிக்கூடங்களுக்கு அதிகமாக வரும்படிப் பார்க்க வேண்டியது அவசியம். பெற்றோர்கள், தங்கள் குழந்தைகளை அனுப்பும் வரையில் உபாத்தியாயர்கள் காத்துக்கொண்டிருக்கக்கூடாது. ஆனால், குழந்தைகளை அனுப்பும்படி அத்தகைய பெற்றோரிடம் கேட்டுக்கொள்ள வேண்டியது அவசியம். ஒரு தேசீய உபாத்தியாயர், அவர் துறையில் ஒரு சுயராஜ்யப் பிரசாரகராகிவிட வேண்டும். தம்மிடம் படிக்கும் ஒவ்வொரு குழந்தையின் சரித்திரத்தையும் அவர் அறிந்திருக்க வேண்டும்; தமது பள்ளிக்கூடத்தில் இல்லாத குழந்தைகளையும் அவர் அறிய

வேண்டும். அக்குழந்தைகளின் பெற்ருேரை அவர் அறிந்திருப்ப தோடு, தமது பள்ளிக்கூடத்திற்குத் தம் குழந்தைகளை அவர்கள் ஏன் அனுப்பவில்லை என்பதையும் தெரிந்துகொள்ள வேண்டும். இவைகளையெல்லாம் அவர் அன்போடுதான் செய்ய வேண்டுமே யன்றிச் சகிப்புத் தன்மையில்லாத உணர்ச்சியுடன் செய்யக் கூடாது. இவ்வாறெல்லாம் செய்தால் மாத்திரமே தேசீயப் பள்ளிக்கூடங்கள், காங்கிரஸ் தீர்மானத்தை அனுசரித்து உண் மையில் தேசீயத்துடன் இருக்க முடியும்.

[உபாத்தியாயர்கள் மகாநாட்டில் செய்த பிரசங்கத்திலிருந்து எடுத்தது.]

—'எங் இந்தியா' – 7—8—1924

## 2

# பொதுப் பள்ளிக்கூடங்கள்

அக்கம்பக்கத்தில் இருப்பவர்களின் பலாத்காரமான, வெற்றிகரமான எதிர்ப்பினுலோ, தவிர்க்க முடியாத மற்ற கார ணங்களினுலோ, இப்பொழுது இருக்கும் பள்ளிக்கூடங்களும் கிணறுகளும் ஹரிஜனங்களுக்குப் பயன்படவில்லையென்ருல், அங்கே பொதுப் பள்ளிக்கூடங்களை ஆரம்பித்து, பொதுக் கிணறுகளையும் வெட்ட வேண்டும். பொதுஜன அபிப்பிராயம் வளர்ச்சியடையும் வரையில், வாழ்க்கையின் அத்தியாவசியத் தேவைகள் சம்பந்தமாக ஹரிஜனங்கள் கவனிப்பாரற்று இருந்து விடக்கூடாது. தெளிவாக விழிப்படைந்துவிட்ட ஹிந்துக்கள் பலர் இருந்து, தங்கள் உற்ருர் உறவினர்களைப் போலவே ஹரி ஜனங்களையும் எண்ணி நடக்கும் உணர்ச்சியும் அவர்களுக்கு ஏற்பட்டிருக்குமானுல், பொதுஜன அபிப்பிராயம் தானே பலப் படட்டும் என்று எண்ணி காரியத்தில் இறங்காமல் காத்திருக்க வேண்டியது இல்லை. தங்களுக்கும், புதிதாக உற்ருர் உறவினர் களாகியிருப்போருக்கும் சுத்தமான நீரும், நல்ல படிப்பும் கிடைக் கும்படி செய்வதற்குத் தங்களால் ஆனதையெல்லாம் அவர்கள் செய்ய வேண்டும்.

ஹரிஜனச் சிறுவர்களுக்கு ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் என்று சொல்லப்படுபவைகளை ஆரம்பிப்பதில் விசேஷமாகக் கவனிக்க வேண்டியது ஒன்று உண்டு. ஒரு சக ஊழியர், ஹரிஜனங்களுட னிருந்து வசிப்பது என்று போயிருக்கிருர். அவர் சொல்லு வதையே இங்கே குறிப்பிடுவதுதான் சரியானதாகும். அவர் கீழே வருமாறு எழுதுகிருர் :

"ஹரிஜன் வீட்டுத் தாழ்வாரம் ஒன்றில் என் பள்ளிக்கூடம் நடக்கிறது. என்னிடம் படிக்கும் மாணவர்களில் சிலருக்கு மூக்கில் சளி ஒழுகிக் கொண் டிருக்கும்; கண்களில் பீளை தள்ளிக்கொண்டிருக்கும். உட்கார்ந்திருக்கும்

இடத்திலேயே எச்சில் துப்பிக்கொள்ளுகிறார்கள். அவர்கள் கண்களும் மூக்குகளும் இருக்கும் நிலையில்தான் அவர்கள் உடம்புகளும் இருக்கின்றன. அவர்கள் கட்டியிருக்கும் துணிகளைக் குறித்து விவரிக்கவே வேண்டியதில்லை. சிலர் ரொட்டியையோ, பலகாரத்தையோ வாயில் வைத்துக்கொண்டு, வகுப்பில் இருக்கும்போதே, விடாமல் மென்ற வண்ணம் இருக்கிறார்கள். ஆகையால், எப்படி சுத்தமாக இருப்பது, எப்படி நடந்துகொள்ளுவது என்பதை எடுத்துக் கூறுவதில்தான் என் போதனை ஆரம்பமாகிறது. பாடம் சொல்லிக் கொடுக்கும்போதே, சுத்தம் செய்யும் வேலையையும் நானே செய்துகொள்ளுகிறேன். சோம்பேறிகளாகவும், ஓயாது பேசிக்கொண்டிருப்பவர்களாகவும், சச்சரவிட்டுக் கொள்ளுபவர்களாகவும் இருக்கிறார்கள். இவையெல்லாம், பொறுமைக்கு எனக்குச் சரியான போதனைகளாக இருக்கின்றன. மோசமாகப் பொய் சொல்லுபவர்களாகவும் இருக்கிறார்கள். அவர்களில் சிலர் கஷ்டப்பட்டு வேலை செய்பவர்களாகவும் புத்திசாலிகளாகவும் இருக்கின்றனர். அவர்களோடு நான் விளையாடுகிறேன். நான் சொல்லிக் கொடுப்பதைவிட அதிகமாகவே நான் கற்றுக்கொள்ளுகிறேன். பள்ளிக்கூடத்திற்கு வருவோர் தொகை அடிக்கடி வித்தியாசப்படும். சில சமயங்களில் ஒரே ஒரு சிறுவனே வந்திருப்பான். பதினைந்து பேருக்குமேல் என்றும் வந்ததில்லை. பள்ளிக்கூடத்தை ஆரம்பித்துப் பத்து நாட்களே ஆகின்றன, எனக்கும் இது புதிது என்பதையும் உங்களுக்குக் கூறிக்கொள்ளுகிறேன். அதிகாலையில் நான் பள்ளிக்கூடத்தை ஆரம்பித்து விடுகிறேன். பள்ளிக்கூடத்திலிருந்து ஒரு பர்லாங்கு தூரத்திலிருக்கும் ஹரிஜன தருமசாலையில் நான் தூங்குகிறேன். ஆகையால், நான் தூங்கும் அறை என்று நீங்கள் சொன்னாலும், வேறு பெயர் கொண்டு நீங்கள் சொன்னாலும், அதிலிருந்து நான் வெளியே வந்ததும் என் வேலை ஆரம்பமாகிவிடுகிறது. ஹரிஜனங்கள் வசிக்குமிடத்திற்குப் போகும் வழியையெல்லாம், இரவில் மலஜலம் கழித்து ஒரே ஆபாசமாக்கிவிடுகிறார்கள். எனவே, கவனத்துடன் பார்த்துக்கொண்டு, கையில் துடைப்பத்துடன்சுத்தம் செய்துகொண்டே அங்கே போய்ச் சேருகிறேன். இதைக் கண்டு குழந்தைகளோ, அவர்களின் தாய்மார்களோ, என்கையிலிருந்து துடைப்பத்தைப்பிடுங்கிக் கொண்டு, ரஸ்தா என்றிருக்கும் அந்த இடத்தைத் தாங்களே சுத்தஞ் செய்வது அற்புதமாக இருக்கிறது. இயல்பாக சில சமயங்களில் நான் அவர்களுடைய வீடுகளுக்குள்ளும் போகிறேன். இவ்வீடுகளில் அநேகம் இருட்டுப் பொந்துகள் போல் இருக்கின்றன. அவற்றில் தீப்பெட்டிக்குள் குச்சியைத் திணித்திருப்பது போல இவர்கள் வசிக்கிறார்கள். இவற்றையும் இன்னும் அநேகவற்றையும் நான் பார்த்து வருகிறேன். ஆனால், இப்போதைக்கு எதையும் சொல்லாமல் நான் வாயை மூடி வைத்திருக்கிறேன். ஏனெனில், அவர்களிடம் ஆதாரத்துடன் பேசக்கூடிய வகையில் தன்னலமற்ற சேவையிலும், அன்பிலும் தகுதியுள்ளவனாக நான் என்னை இன்னும் செய்துகொண்டு விடவில்லை. உண்மையில் சூரியனே நம் நாட்டில் மிகப் பெரிய தோட்டி. அப்படி இல்லாமலிருந்தால், ஹரிஜனங்கள் வசிக்குமிடங்களும், உயர்ந்த சாதியினர் என்று சொல்லப்படுகிறவர்கள் வசிக்கும் பல இடங்களும், சுகாதாரக் குறைவான இடங்களில் வசித்துப் பழக்கப்பட்டவர்களுக்குக்கூட வசிக்க முடியாத இடங்களாகிவிடும். இப்புதிய சேவையைச் செய்வதில் ஆனந்தமடைகிறேன். இச்சேவைக்கு என்னை ஆளாக்கியதற்காகக் கடவுளுக்கு நன்றி செலுத்துகிறேன் என்று இப்பொழுது நான் கூறமுடியும். ஆனால், இவ் வேலைக்கு நான் புதியவன். எனக்குள்ள குறைபாடுகளையும் அறிவேன். அவை

களை வென்றுவிட முயன்று வருகிறேன். ஆகையால் ஆசிரமத்தில் பாடிவரும் அந்த அழகான கீதத்தை நான் அடிக்கடி பாடி வருகிறேன். "வைஷ்ணவ நதீ தயோ தும்ரே......" (உண்மையானவைஷ்ணவனுக, கடவுளின் உண்மையான மனிதனுக இன்னும் நீ ஆகவில்லை" என்பது அதன் பொருள்) என்பதே அந்த கீதம். உண்மையான வைஷ்ணவனுவதற்குக் கடவுள் விதித்திருக்கும் நிபந்தனைகளை நிறைவேற்றிவிட அவாவுகிறேன்."

புதிதாக வரும் ஹரிஜனச் சிறுவர்கள் எப்படி இருப்பார்கள் என்பதற்கு இது ஓர் உதாரணம் மட்டுமே. இக்குழந்தைகள் ஒவ்வொருவரும் சுத்தமாகவும், நல்ல முறையிலும் வாழக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று நாம் விரும்புகிறோம். எல்லோருக்குமான பொதுப் பள்ளிக்கூடங்களுக்கு அவர்கள் போக வேண்டும் என்றும் விரும்புகிறோம். ஆகையால், நாம் யோக்கியமாகக் காரியம் செய்வதாயிருந்தால், அவர்களைத் தயார் செய்யும் ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் முற்றிலும் அத்தியாவசியமாகும்.

—'ஹரிஜன்' – 4—3—1933.

## 3

# ஹரிஜனங்களுக்குப் படிப்பு

நடுத்தரப்படிப்பையும், கல்லூரிப் படிப்பையும்விட ஆரம்பப் பள்ளிக்கூடப் படிப்பு அநேக விஷயங்களில் அதிகக் கஷ்டமானதாகவே இருக்கிறது. அதிலும் ஹரிஜனங்களின் படிப்பு எல்லாவற்றையும்விட அதிகக் கஷ்டமானதாக இருக்கிறது. நயமல்லாததாகவே இருந்தபோதிலும், ஹரிஜனல்லாத குழந்தை கொஞ்ச அளவு வீட்டுப் பண்பாட்டையும் பெறுகிறது. சமூகம் ஒதுக்கித் தள்ளிவைத்திருப்பதால் ஹரிஜனக் குழந்தைக்கு அது இல்லை. எல்லா ஆரம்பப் பள்ளிக்கூடங்களும் உடனேயோ, சீக்கிரத்திலேயோ ஹரிஜனக் குழந்தைக்குத் திறந்துவிடப்பட வேண்டும். சீக்கிரமே திறந்துவிடப்பட்டுவிட வேண்டும் என்பது தான் என் அபிப்பிராயம். அப்படி எல்லா ஆரம்பப் பாடசாலைகளும் ஹரிஜனக் குழந்தைகளுக்குத் திறந்துவிடப் பட்டுவிட்ட போதிலும், நிரந்தரமான குறைபாட்டினுல் அவர்களுக்குச் சங்கடம் இல்லாமல் இருக்க வேண்டுமானுல், முதலில் அவர்கள் படிப்பதற்குப் பள்ளிக்கூடங்கள் அவசியமாகும். இந்தியாவின் பல பகுதிகளில் ஹரிஜன சேவா சங்கத்தின் ஆதரவில் நடத்தப் பட்டு வரும் பல பள்ளிக்கூடங்களிலும், இந்த ஆரம்பப் பயிற்சியைக் கண்டுபிடித்து அதைப் பரீட்சித்துப் பார்க்கலாம். நல்ல பழக்கம், நல்ல பேச்சு, நல்ல நடத்தை ஆகியவைகளை ஹரிஜனக் குழந்தைகளுக்குப்போதிப்பது இந்த ஆரம்ப பயிற்சியில் அடங்கியிருக்கவேண்டும். ஒரு ஹரிஜனக் குழந்தை எப்படியோ உட்காருகிறது; எப்படியோ உடையும் அணிந்துகொள்ளுகிறது. அதன்

கண்கள், பற்கள், தலை மயிர், நகங்கள், மூக்கு ஆகியவைகளில் ஒரே அழுக்காக இருக்கிறது. குளிப்பது என்பது இன்னது என்பதே அநேக குழந்தைகளுக்குத் தெரியாது. 1915-இல் தரங்கம்பாடியில் ஒரு ஹரிஜனச் சிறுவனைப் பார்த்து அவனை அப்பொழுது ஆசிரமம் இருந்த இடமான கோச்ராப்புக்குக் கொண்டுபோன போது, நான் என்ன செய்தேன் என்பது எனக்கு நினைவிருக்கிறது, இவனுக்கு க்ஷவரம் செய்யும்படி செய்தேன். பிறகு அவனை நன்ருகக் குளிப்பாட்டி அவனுக்குச் சாதாரண வேட்டியும் சட்டையும் தொப்பியும் கொடுத்தேன். பண்பாடுள்ள வீட்டுக் குழந்தைக்கும் இவனுக்கும் சில நிமிஷங்களில் எந்த வித்தியாசமும் தெரியாதபடி ஆகிவிட்டது. இவனுடைய தலை, கண்கள், காதுகள், மூக்கு முதலியன நன்ருகச் சுத்தம் செய்யப்பட்டன. எப்பொழுதும் அழுக்கு சேர்ந்திருந்த இவன் நகங்களை வெட்டிவிட்டு அவை சுத்தஞ் செய்யப்பட்டன. அவன் கால்கள் தூசு படிந்திருந்தன. அவற்றையும் நன்ருகத் தேய்த்துச் சுத்தம் செய்தார்கள். அவசியமானல், பள்ளிக்கூடம் போகும் ஹரிஜனக் குழந்தைகளுக்குத் தினந்தோறும் இத்தகைய காரியங்களையெல்லாம் செய்ய வேண்டும். சுத்தமாக இருப்பதைக் குறித்து முதல் மூன்று மாதங்கள் போதிப்பதைக் கொண்டே அவர்களுடைய பாடம் ஆரம்பமாக வேண்டும். சரியாகச் சாப்பிடுவது எப்படி என்பதையும் அவர்களுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும். என்ருலும், இதை நான் எழுதும்போது, ஒரிஸ்ஸாவில் எனது நடை யாத்திரையின்போது நான் கண்டதை நினைவுபடுத்திக் கொள்ளுகிறேன். சில கட்டங்களில் சாப்பாடு போடப்பட்ட போது, ஹரிஜனச் சிறுவர்களும் முதியவர்களும், மற்றவர்களை விட அதிகச் சுத்தமாகச் சாப்பிட்டார்கள். மற்றவர்களோ, தங்கள் விரல்களையெல்லாம் அழுக்குப்படுத்திக்கொண்டதோடு கண்டபடியெல்லாம் சிதறடித்து அவ்விடத்தை அசிங்கப்படுத்திவிட்டுப் போய்விட்டார்கள். ஹரிஜனங்களுக்குக் கலங்களில் மிச்சம் வைப்பதற்கு எதுவும் இல்லை. அவர்கள் சாப்பிட்ட கலங்கள் சுத்தமாக இருந்தன. ஒவ்வொரு வாய் உணவுக்கும் அவர்கள் விரல்களை நக்கிச் சுத்தமாக வைத்திருந்தனர். ஆனல், நான் விவரித்திருக்கிறபடி அவ்வளவு சுத்தமாக எல்லா ஹரிஜனக் குழந்தைகளும் சாப்பிட்டுவிடுவதில்லை என்பதை நான் அறிவேன்.

ஹரிஜனப் பள்ளிக்கூடங்களிலெல்லாம் இந்த ஆரம்பப் பயிற்சியை அளிப்பதானல், இது சம்பந்தமாக அவர்கள் மொழியில் பிரசுரங்கள் தயாரித்து, அச்சிட்டு அவர்களுக்குக் கொடுக்க வேண்டும். பள்ளிக்கூடத் தணிக்கையாளர்கள், பள்ளிக்கூடங்களைத் தணிக்கை செய்யப்போகும்போது, இது சம்பந்தமாக உபாத்தியாயர்களையும் மாணவர்களையும் சோதித்துப் பார்த்து, இதில் அவர்கள் எவ்வளவு முன்னேறியிருக்கிருர்கள் என்பதற்கு முழு அறிக்கைகளை அனுப்பவேண்டும்.

ஆசிரியர்களைத் தேர்ந்தெடுப்பதிலும், இப்பொழுதிருக்கும் ஆசிரியர்களுக்குப் பயிற்சி அளிப்பதிலும் அதிகக் கவனஞ்

செலுத்த வேண்டியது இவ்வேலைத் திட்டத்திற்கு அவசியமாகிறது. ஹரிஜன சேவா சங்கம், தன் பராமரிப்பிலிருக்கும் ஆயிரக் கணக்கான ஹரிஜனச் சிறுவர்களுக்குத் தனது கடமையைச் சரிவர நிறைவேற்ற வேண்டுமானால், இவை யாவும் கவனிக்க வேண்டியவைகளே.

—'ஹரிஜன்' - 18—5—1935

## 4

# ஹரிஜனங்களுக்கு மாதிரிப் பள்ளிகள்

ஹரிஜன சேவா சங்கத் தலைவர் சேத் கனஷியாம்தாஸ் பிர்லா பின் வருமாறு எழுதுகிறார்:

"ஹரிஜனச் சிறுவர்களுக்கு மாத்திரமே என்றில்லாவிட்டாலும், முக்கியமாக அவர்களுக்குப் படிப்பளிப்பதற்காக, மாணவர்கள் அங்கேயே தங்கிப் படிக்கும் சில பள்ளிக்கூடங்களை ஆரம்பிப்பது என்று யோசித்து வருகிறோம். இதுவரை ஹரிஜன மாணவர் விடுதிகளைப் பற்றியோ, பள்ளிக்கூடங்களைக் குறித்தோ நாம் பேசியபோதெல்லாம், போதிய படிப்பில்லாத, போதுமான சம்பளம் கொடுக்காத உபாத்தியார்களையும், வார்டன்களையும் கொண்டு, அரைப் பட்டினி கிடக்கும் மாணவர்களுக்காக நடத்தப்படும் பள்ளிக்கூடங்கள், மாணவர் விடுதிகளைக் குறித்தே எண்ணி வந்தோம். ஹரிஜனங்களையோ, ஏழைப் பெற்றோர்களின் குழந்தைகளையோ இத்தகைய மலிவான ஸ்தாபனங்களில் நாம் படிக்க வைத்துக் கொண்டிருக்கும் வரையில், அவர்களுக்குத் தீமையாக இருந்துவரும் தாழ்வு மனப்பான்மையை அவர்கள் விட்டொழிக்கும்படி செய்வதில் நாம் வெற்றிபெறவே முடியாது. தகுதியைப் பெறாத, போதிய சம்பளம் பெறாத இந்த ஆசிரியர்களிடமிருந்து அவர்கள் என்ன கற்றுக் கொள்ள முடியும்? மற்றச் சிறுவர்களுடன் கூடிப் பழகுவதற்கு இச்சிறுவர்களுக்குச் சந்தர்ப்பமே இல்லை. ஏழைகளுக்கும் பணக்காரர்களுக்கும், ஹரிஜனங்களுக்கும் உயர்சாதி ஹிந்துக்கள் என்பாருக்கும் இவ்விதம் கூடிப் பழகுவதற்கு வசதியில்லாது போவதால் ஏற்படும் தீமை பரஸ்பரம் இரு தரப்பாருக்கும் ஏற்படுகிறது. ஆகையால் மாணவர்கள் குடியிருந்து படிக்கும் பள்ளிக்கூடங்கள் சிலவற்றைத் திருப்தியான சூழ்நிலையில் ஆரம்பிக்க வேண்டும் என்று யோசனை கூறுகிறேன். சிறந்த முறையில் நடத்தப்படும் பொதுப் பள்ளிக்கூடத்துடன் ஒப்பிடும் வகையில் இப் பள்ளிக்கூடங்கள் தகுதி வாய்ந்தவைகளாக இருக்க வேண்டும். இத்தகைய பள்ளிக்கூடங்கள் சிலவற்றைப் பரீட்சார்த்தமாக நாம் ஆரம்பிக்க வேண்டும்.

"அவற்றிற்கு மெட்ரிகுலேஷன் தகுதி இருப்பதோடு ஒரு பல்கலைக் கழகத்துடன் இணைக்கப்படுவதாகவும் இருக்க வேண்டும். உண்மையில் அவை பெரும்பாலும் மாணவர்கள் தங்கிப் படிக்கும் பள்ளிக்கூடங்ளாக இருக்க வேண்டும். மாணவர்களை நேரடியாகக் கவனித்துக் கொள்ளுவது இதில் முக்கியம். தாய்மொழியின் மூலம் கல்வி போதிக்க வேண்டும். இரண்டாவது

மொழியாக ஆங்கிலம் கற்றுக்கொடுக்க வேண்டும். மாணவர்கள் இக்கல்வியைப் பெற்றுவரும்போது, அவர்களுடைய படிப்புக்குப் பயனளிக்கக் கூடிய வகையில் பயனுள்ள கைத்தொழில்களையும் அவர்களுக்குப் போதிக்க வேண்டும்.

''இப்படிப்பைப் பூரணமானதாகவும் தன்னிறைவுள்ளதாகவும் செய்வதற்கு, மெட்ரிகுலேஷன் பரீட்சைக்கு வேண்டியதைவிட மேலும் இரண்டு வருடங்கள் அதிக காலம் எடுத்துக்கொள்ள வேண்டும். மெட்ரிகுலேஷன் படிப்புக்கு வேண்டியதல்லாமல் மேலும் அதிகப் பயிற்சியை மாணவர்கள் பெறுவதற்கு இந்த இரண்டு ஆண்டுகளைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்.

''மூன்று கைத்தொழில்களைச் சொல்லிக்கொடுப்பது என்று இருக்கிறோம். இவற்றில் ஒன்றை, ஒவ்வொரு மாணவரும் அவர்களிஷ்டப்படி எடுத்துக் கொள்ளலாம். கீழ்க் கண்டவைகளே அக்கைத்தொழில்களாக இருக்கும்:

(1) பஞ்சைப் பட்டை போடுவது, நூற்பது, நெய்வது, சாயம் போடுவது, சலவை செய்வது; அல்லது (2) தச்சு வேலையும் கருமான் வேலையும்; அல்லது (3) காகிதம் செய்தல், புத்தகப் பைண்டு செய்தல், சாதாரண எழுத்துக் கோர்த்தல்.

''நல்ல தகுதி வாய்ந்த ஆசிரியர்கள் முதலியவர்கள் இருக்கும்படி செய்வதை முன்னிட்டு, நல்ல சம்பளத்தில் உயர்வான சிப்பந்திகளை நியமிப்பது என்று யோசிக்கப்படுகிறது. கல்லூரிப் படிப்பு இல்லையே என்ற குறை மாணவர்களுக்குத் தோன்றாமலிருக்க வேண்டும் என்பதே இதில் அடங்கிய நோக்கமாகும். அத்தகைய கல்லூரிப் படிப்பிற்கும் தடை இருக்காது. இப் படிப்பு முடிந்த பிறகு மாணவர்கள் கௌரவமான ஜீவனோபாயததைத் தேடிக் கொள்ளுவதற்கு எவ்விதத்திலும் கஷ்டப்படமாட்டார்கள் என்றும் நம்பப்படுகிறது. போர்டின் கீழேயே இருந்துவிட விரும்புவோருக்கு வேலை கொடுப்பதும் போர்டின் கடமையாகும்.

''பல்கலைக் கழகப் படிப்புடனும், கைத்தொழில் பயிற்சியுடனும், பொது அறிவையும் சுகாதாரத்தையும் விருத்தி செய்து கொள்ளும் விஷயத்திலும் விசேஷ கவனம் செலுத்தப்படும். சங்கீதம், விளையாட்டுக்கள், தேகப் பயிற்சிகள், குதிரை சவாரி, நீச்சல் முதலியனவும் கற்றுக் கொடுக்க வேண்டும். சமய, அல்லது ஒழுக்கப் பயிற்சியையும் புறக்கணித்து விடக்கூடாது. ஹிந்து தரும சம்பந்தமாகவும், நமது சொந்த கலாசாரத்தின் விசேஷமான அழகுகள் பற்றியும் நல்ல ஞானம் இருக்கும்படி செய்வதோடு எல்லா, மதங்களையும் சமமாக மதிக்கும் மனம் உண்டாகும்படியும் செய்யப்படும்.

''இப்பள்ளிக்கூடங்களில் பாதி மாணவர்கள் ஹரிஜனங்களாக இருப்பார்கள். இவர்களுக்குக் கல்வியும், சாப்பாடும், இருக்க இடமும் இனமாக அளிக்கப்படும். மற்றொரு பாதியான சாதி ஹிந்துச் சிறுவர்களுக்குக் கட்டணம் வசூலிக்கப்படும்.

''நல்ல உயர்நிலைப் பள்ளியைக் குறித்து நான் கொண்டிருக்கும் கருத்தின் சுருக்கமான விவரம் இது. ஆனால், இதைக் குறித்து எங்களிடையே அபிப்பிராய பேதங்கள் இருக்கின்றன. மெட்ரிகுலேஷன் படிப்பு முறை ஏன் இருக்க வேண்டும் என்று சிலர் கூறுகின்றனர். மற்றவர்களோ, அதிகச் செலவாகக் கூடியதான படிப்பை மேற்கொள்ளுவது தவறான உதாரணமாகி

விடுமாகையால், அதை நாம் மேற்கொள்ளக்கூடாது என்கிருர்கள். தகுதியை அதிகமாகப் பெற்றவர்கள், வாழ்க்கைக்குப் போதுமானதை மாத்திரம் வாங்கிக் கொண்டு, தியாக உணர்ச்சியின் பேரில் வேலே செய்ய முன் வருவார்களானல், அத்தகையவர்களே நியமித்துக்கொள்ளலாம் என்று விவாதிக்கப்படுகிறது. அதாவது, எளிய தியாக வாழ்க்கையை நடத்தத் தயாராக இருக்கும் ஆசிரியர்களைத் தவிர மற்றவர்களுக்கு இத்தகைய பள்ளிக்கூடங்களில் இடமில்லை என்பது அவர்களுடைய அபிப்பிராயம். மேலான தன்னலத் தியாகத்தை மேற்கொண்ட ஆசிரியர்களைக் கொண்டதாக இல்லாத பள்ளிக்கூடங்களை ஆரம்பிப்பதைவிட, ஆரம்பிக்காமலிருந்து விடுவதே மேல் என்று சொல்லும் அளவுக்குக்கூட சிலர் போய்விடுகின்றனர்.

"இவை யாவும் அனுபவ சாத்தியமல்லாதவை என்று நான் கருதுகிறேன். இதற்கு என்னுடைய வாதங்களைக் கூற வேண்டிய அவசியம் இல்லை. அவை நன்ருகத் தெரிந்தவை. இவ்விஷயத்தில் உங்கள் கருத்து என்ன என்பதை அறிவிப்பீர்களா?"

சேத் கனஷியாம்தாஸின் திட்டத்தை நான் மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன். இதை எதிர்த்துக் கூறப்படும் வாதங்கள், கொள்கையைவிட எச்சரிக்கையை அடிப்படையாகக்கொண்டே சொல்லப்படுகின்றன. ஹரிஜன போர்டினிடமிருக்கும் சொற்ப நிதியைக் கொண்டே இத்திட்டத்தை நிறைவேற்றுவதாக இருந்தால், எதிர்ப்பாளர்களையே நானும் ஆதரிப்பேன். ஆனல், மாதிரிக்காக நடத்தப்படும் இப்பள்ளிக்கூடங்கள், இவை முற்றிலும் வேலை செய்வதற்குப் போதுமான வகையில் பெறப்படும் விசேஷப் பண உதவியைக்கொண்டே நடக்கும் என்று கருதுகிறேன். நான் இருபது ஆண்டுகள் தென்னுப்பிரிக்காவில் வசித்திருக்கிறேன். அங்கே ஒவ்வொரு இந்தியரும் பறையராகவே நடத்தப்படுகிருர்கள். ஆகையால், இயற்கையல்லாத இவ்வகையில் நடத்தப்படுவதால் மனம் எவ்வளவு உணர்ச்சி யற்றதாக ஆகிறது என்பதை நான் அறிவேன். உணர்ச்சியை நான் என்றும் இழந்துவிடவில்லையெனினும் எனது நிதானத்தை நான் திரும்பவும் அடைவதற்குக் கொஞ்ச காலம் ஆயிற்று. பொதுவாக ஐரோப்பியர்களுக்கு மத்தியில் என்னை நான் ஒரு விசித்திரமான பிறவியாகவே உணர்ந்தேன். இந்தியாவில் ஹரிஜனங்களின் கஷ்டம் அதைவிட இன்னும் மோசமானதாக இருக்கிறது. தென்னுப்பிரிக்க இந்தியரைவிட இன்னும் அதிக அறியாமையிலும், அதிக ஏழ்மையிலும் ஹரிஜனங்கள் இருந்து வருவதே இதற்குக் காரணம். ஆகையால், இந்த இரட்டை மனேபாவங்களை உடைத்தெறிய வேண்டுமானுல், பணம் படைத்த பள்ளி மாணவருக்குக் கிடைப்பதைவிட எந்த வகையிலும் குறைவானதாக இல்லாத சூழ்நிலையில் பல ஹரிஜன வாலிபர்களை நாம் வளர்க்க வேண்டும். தங்கள் வேலைக்கு வேண்டியதைவிட அதிகமான தகுதியைப் பெற்ற குமாஸ்தாக்களையோ, தங்களை யாரும் குமாஸ்தாக்களாக வைத்துக்கொள்ளாததால் இயற்கையாகவே அதிருப்திகொள்ளுகிறவர்களையோ உற்பத்தி செய்துகொண்டு போவதை நோக்கமாகக்கொண்டதல்ல இங்கே ஆராயப்படும் திட்டம். இத்திட்

டத்தின்படி கல்வி பெறும் மாணவர்கள், மெட்ரிகுலேஷன் படிக்கும் மற்றவர்களைவிட எவ்விதத்திலும் குறைந்த ஞானமுள்ளவர்களாக இருக்க மாட்டார்கள். ஆனால், இவர்களுடைய உடல் நன்றாகக் கவனிக்கப்பட்டு இவர்களுடைய, கைத்திறன்களும் முற்றிலும் விருத்தியடைந்திருக்குமாகையால் அவர்கள் மேலான நிலையில் இருப்பார்கள். இவர்களுடைய எதிர்காலமும் நிச்சயம் நன்றாக இருக்கும். இவர்களுக்குத் தன்னம்பிக்கை இருக்கும். இவர்கள், தங்களுடைய உற்றார் உறவினரிடமிருந்து பிரித்து வைக்கப்பட்டிருக்கமாட்டார்கள். இதற்கு மாறாக, இவர்கள் தங்கள் சகோதர ஹரிஜனங்களுக்குச் சேவை செய்து, தாங்கள் பெற்ற போதனையின் பலனை அவர்களுக்கு அளிப்பவர்களாக இருப்பார்கள்.

இப்பொழுதுள்ள கல்வி முறைக்கு எதிராக நான் பேசியும் எழுதியும் வந்திருப்பதால், நான் இவ்விதம் கூறுவது முன்னுக்குப்பின் முரணாக இருக்கிறது என்று ஆட்சேபிக்கப்படலாம். அத்தகைய ஆட்சேபம் மேலெழுந்தவாரியானதாகவே இருக்கும். பயிற்சி, தாய் மொழியிலேயே இருப்பதுடன், இதில் படிப்பவர் சுயேச்சையாக, நல்ல வாழ்க்கையை நடத்துவதற்குக் கைத்தொழிலும் இதில் போதிக்கப்படுவதால், முதலாவதாக இக்காலப் படிப்பிலிருக்கும் மோசமான அம்சம் இதில் இல்லாது போய்விடுகிறது. இரண்டாவதாக, நல்ல முறையில் படிப்பைப் பெறக்கூடிய வசதியுடன் இருப்பவர்களுக்குப் பொருத்தமான ஓர் ஆட்சேபம், தங்களிஷ்டம் போல் படிப்பதற்கு வசதியே இல்லாதவர்கள் விஷயத்தில் பொருந்தாது. ஹரிஜனங்கள் அல்ல என்ற காரணத்தினாலேயே ஆயிரக்கணக்கான மற்ற சிறுவர்கள் பெற்று வரும் கல்வியைத் தாங்கள் பெற முடியவில்லையே என்று ஹரிஜன மாணவர்கள் மனம் குமுறிக்கொண்டிருக்கிறார்கள். ஹரிஜனங்களல்லாத வாலிபர்கள் செய்வது தவறானது, ஆகையால், சேத் கனஷியாம்தாஸ் தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கும் மோசமான நிலையிலுள்ள பள்ளிக்கூடங்களைக்கொண்டுதான் அவர்கள் திருப்தியடைந்திருக்க வேண்டும் என்று ஹரிஜனச் சிறுவர்களிடம் விவாதித்து அவர்களை நான் அவமதிக்க மாட்டேன். இவருடைய திட்டத்தை மாத்திரமே நான் ஆதரிக்கிறேன். இவருக்கு எல்லா வெற்றியும் உண்டாக வேண்டும் என்று வாழ்த்துகிறேன். இத்திட்டம் எவ்வளவுக்கு சீக்கிரத்தில் ஆரம்பிக்கப்படுகிறதோ அவ்வளவுக்கு ஹரிஜனங்களுக்கு நல்லது; இந்தியாவுக்கும் நல்லது. தீண்டாமை பூதத்தை ஒழிப்பதற்கு இப்பள்ளிக்கூடங்கள் சக்தி வாய்ந்த ஆயுதங்களாக இருக்கும்.

—'ஹரிஜன்' - 22—2—1942

# 5

# ஹரிஜனங்களுக்கு மேல் படிப்பு

ஹரிஜனங்களைத் தேர்ந்தெடுத்து, சாதி ஹிந்துக்கள் மேல் படிப்பை அளிப்பது சம்பந்தமாக ஸ்ரீ டேவிட் வகுத்திருக்கும் திட்டத்தை, தீண்டாமை ஒழிப்பில் அக்கறையுள்ளவர்கள் எல்லோரும் அறிந்திருப்பார்கள் என்றே நம்புகிறேன். இத் திட்டத்தைத் தீண்டாதார் ஊழியர்கள் சங்கத்தினர் உற்சாகமாக ஏற்றுக்கொண்ட பிறகு, கொஞ்ச காலத்திற்கு முன்னால், அது பம்பாய்ப் பத்திரிகைகளில் பிரசுரமாயிற்று, "இந் நாட்டில் சாத்தியமான சிறந்த மேல் படிப்பை (நுட்பப் பயிற்சி உள்பட) பல தீண்டாதார்கள் பெறும்படி செய்வது தான் இதன் நோக்கம்" என்று ஸ்ரீ டேவிட் கூறுகிறார். "இதன்படி, இந்தியா முழுவதிலும் இருக்கும் பணக்கார சாதி ஹிந்துக்கள், குறைந்தது தலைக்கு ஒரு 'தீண்டாதார்' வீதம், ஐந்து ஆண்டுகளுக்குப் படிக்க வைக்கும் செலவை ஏற்றுக் கொள்ள வேண்டும். தேர்ந்தெடுக்கப்படும் மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் கொடுக்க வேண்டும். பள்ளிக்கூடச் சம்பளம், புஸ்தகங்கள், குறைந்த வகையில் வாழ்க்கைச் செலவு ஆகியவை சேர்ந்தே இச் செலவு" என்கிறார். ஒரு ஹரிஜனுக்குக் கல்லூரிப் படிப்புக்கு வருடத்திற்கு ரூ. 500 ஆகும் என்றும், உயர்நிலைப் பள்ளிப் படிப்புக்கு அதில் பாதி ஆகும் என்றும் ஸ்ரீ டேவிட் நினைக்கிறார். இதற்குப் பணவுதவி செய்கிறவர்கள், சாத்தியமான இடங்களில், மொத்தமாக ஐந்து ஆண்டுகளுக்கு ஆகும் செலவைக் கொடுத்துவிட வேண்டும் என்று அவர் யோசனை கூறுகிறார்.

"படித்த ஹரிஜனங்களின் சுயமதிப்பை வளர்ப்பதற்காக ஒன்று செய்ய வேண்டும். இவ்விதம் பணவுதவியைப் பெற்றுப் படிக்கிறவர், அப்பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிடும் நிலைமை வந்ததும் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் என்றும் எதிர் பார்க்கப்படுகிறது என்று விதித்துவிட வேண்டும். இவ்விதம் செய்தால், இத்திட்டத்தின்படி படிக்கும் மாணவர், தான் படிக்கக் கடன் கொடுக்கப்பட்டிருக்கிறதே யன்றித் தனக்குக் கொடுக்கப்படுவது இனம் அல்ல என்பதை உணர்வார்" என்று ஸ்ரீ டேவிட் கூறுகிறார். அநேக மாணவர்கள், இக் கடனைத் திருப்பிக் கொடுத்து விடுவார்களானால், இதற்கென்று நிரந்தரமான ஒரு நிதியையே வைத்துவிடலாம் என்றும் அவர் எதிர்பார்க்கிறார்.

இதற்கென்று மாகாணங்களில் கமிட்டியையோ, கமிட்டிகளையோ அமைக்க வேண்டும் என்று ஸ்ரீ டேவிட் யோசனை கூறுகிறார். படிப்பதற்கு மாணவர்களைத் தேர்ந்தெடுக்கும் விதிகளை இக்கமிட்டி தயாரிக்கும். இத்தகைய கமிட்டி, அல்லது கமிட்டிகளின் சிபாரிசைப் பொறுத்தே நன்கொடைகள் பட்டு

வாடா செய்யப்படும் என்கிறார். இத்திட்டம் நிறைவேற்றப்பட்டு விடுமானால், இதனால் முக்கியமான, நிரந்தரமான பலன் ஏற்படுவதோடு ஹரிஜனங்களில் கொஞ்ச காலத்திற்குள் அநேக வக்கீல்கள், ஆசிரியர்கள், டாக்டர்கள், இஞ்சினியர்கள் ஆகியோர் பலர் இருக்கும்படி செய்வது எளிது என்று அவர் நிச்சயமாகக் கூறுகிறார். ஹரிஜனங்களில் இப்படிப்பட்டவர்கள் பலர் இருப்பது, ஒடுக்கப்பட்ட சமூகத்தினரின் அந்தஸ்தை உயர்த்துவதற்கு அதிக உதவியாக இருக்கும். அவர் மேலும் கூறுவதாவது : "இத்திட்டம், அபிப்பிராய பேதத்திற்கு இடமில்லாத வகையில் தயாரிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், அதிகமானவர்களின் ஆதரவு கிடைப்பதற்கு இடமிருக்கிறது. தீவிரமான சனாதனிகளின் ஆதரவையும் இத்திட்டம் பெற வேண்டும்......தீண்டாதார் சம்பந்தமாகத் தங்களுக்குள்ள நல்லுணர்ச்சியைத் தெரிவித்துக் கொள்ளுவதற்குச் சாதி ஹிந்துக்களுக்கு இது கைமேல் இருக்கும் ஒரு நல்ல வாய்ப்பாகும்."

ஸ்ரீடேவிட் நம்புவதைப் போன்றே 'தீவிரமான சனாதனிகள்' ஆதரிப்பார்கள், எப்படியும் இது தாராளமான ஆதரவைப் பெறும் என்று நானும் நம்புகிறேன். மத்திய போர்டோ, பம்பாய் போர்டோ, ஏதாவது உதவித் தொகையைப் பெற்றிருக்கின்றனவா என்பது எனக்குத் தெரியாது. ஒரு சிறு கமிட்டியை அமைக்க வேண்டும். சாத்தியமானால் அதிலிருந்து வேலை செய்ய ஒரு சனாதனியையும் சேர்த்துக் கொண்டு விதிகளை அமைத்து, உபகாரச் சம்பள உதவியைப் பெற வேண்டும். இதுபோல் இது வரை செய்யாதிருந்தால், இனியாவது செய்யும்படி பம்பாய் போர்டுக்கு யோசனை கூறுகிறேன்.

ஐந்து வருடச் செலவுக்கு என்று ரூ. 2,500 அல்லது ரூ. 1,250 கொடுக்கக் கூடியவர்கள் ஆயிரம் பேரைப் பெறுவதே மிகவும் சரியான காரியம். ஸ்ரீ டேவிட் திட்டத்தின் உணர்ச்சி இருந்தால் போதும்; திட்டம் அப்படியே முற்றும் அனுசரிக்கப்பட வேண்டும் என்ற அவசியம் இல்லை. குறிப்பிட்ட ஹரிஜனச் சிறுவர்களும் சிறுமிகளும், மேல் படிப்பைப் பெறுவதற்காகச் சாதி ஹிந்துக்களிடமிருந்து ஒரு நல்ல தொகையை வசூலிக்க வேண்டும் என்பதுதான் திட்டத்தின் முக்கியாம்சம். ஆகையால், இத்திட்டத்திற்குப் பணவுதவி செய்யுமாறு அழைக்கிறேன். உதவி செய்தவர்களின் விவரம் இப்பத்திரிகையில் அறிவிக்கப்படும். முதல் முழு சந்தாவும் கிடைத்தவுடனே, ஹரிஜன மாணவரைத் தேர்ந்தெடுக்குமாறு மத்திய போர்டுக்கு அறிவிப்பேன். எந்த மாகாண ஹரிஜனச் சிறுவர்களைத் தேர்ந்தேடுக்க வேண்டும் என்று, பணவுதவி செய்பவர் கூறலாம். இல்லாவிடில் அவர்களே மாணவர்களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு, அம் மாணவருக்குப் பணத்தைப் பட்டுவாடா செய்து கவனித்துக் கொள்ளும்படி மத்திய போர்டுக்கோ, மாகாண போர்டுக்கோ அறிவித்துப் பணத்தை அனுப்பலாம்.

—'ஹரிஜன்' – 25—2—1933

# 6

# எந்தப் படிப்புத் தேவை ?

நூற்றுக்கு அதிகமான ஹரிஜன ஊழியர்களுடன் காந்திஜி ஒன்றரை மணி நேரத்திற்கு அதிகமாகப் பேசிக்கொண்டிருந்தார். அவரிடம் வழக்கமாகவுள்ள பொறுமையுடன் எல்லாவிதமான கேள்விகளுக்கும் பதில் கூறினர். ஹரிஜன ஊழியர்கள் கிராமங் களில் போய் தங்கி, அங்கே சாதி ஹிந்துக்களிடையேயும், ஹரி ஜனங்களிடையேயும் வேலை செய்ய வேண்டும் என்பதே காந்தி ஜியின் பதில்களில் கண்ட முக்கியமான கருத்தாகும்.

''படித்துப் பட்டம் பெற்றவர்களிடையே வேலையில்லாத் திண்டாட்டம் கடுமையாக இருக்கிறது. அப்படியிருக்கும் போது பி. ஏ. க்களாகவும், எம். ஏ. க்களாகவும் ஆகும்படி ஹரிஜனச் சிறுவர்களை உற்சாகப்படுத்துவது சரியா? இவர்கள் தொழில் நுட்பக் கல்வியைப் பெறுவது நல்லதல்லவா?'' என்று ஒரு ஹரிஜன் கேட்டார்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: ''கைத்தொழில் கல்வி யில் சாதி ஹிந்துக்களுக்கு ஆர்வம் ஏற்படுவதற்கு முன்னல் ஹரிஜனச் சிறுவர்கள் தொழில் நுட்பக் கல்விக்குப் போவார்கள் என்று எதிர்பார்ப்பது கஷ்டம். வெறும் பள்ளிப் படிப்பு சாதி ஹிந்துக்களுக்கு இப்பொழுது நல்லதாக இல்லை. என்ருலும், அப்படிப்பினல் ஹரிஜனங்களுக்கு நன்மை இருப்பதற்கும் சாத் தியம் உண்டு. உதாரணமாக, டாக்டர் அம்பேத்காரை பிராம் மணர் என்றே நான் வெகு காலம் நினைத்து வந்தேன். அறிவிலும் ஆற்றலிலும் நம்மில் மேலானவர்களாக இருப்பவர்களுக்கு இணை யானவர் அவர். அத்தகைய சிறப்பான நிலையிலிருப்பது, சந்தே கத்திற்கு இடமில்லாத வகையில் ஹரிஜனங்களுக்குப் பயனுள் ளதே. தொழிற் கல்வியில் எனக்கு முழு நம்பிக்கை உண்டு. ஏராளமான ஹரிஜன மாணவர்கள் அக்கல்வியில் கவனம் செலுத்த வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். கைத்தொழில் படிப்புடன் பள்ளிப் படிப்புக்கும் நாம் அவர்களை உற்சாகப்படுத்த வேண்டும். கைத்தொழில் கல்வியின் தத்துவத்தை உபதேசம் செய்ய வேண்டியது ஹரிஜனங்களின் வேலை. பூக்கர் டி. வாஷிங் டன்* உலகப் பெரியார்களில் ஒருவர் என்று நான் கருதுகிறேன்.

---

* பூக்கர் டாலியா பெர்ரோ வாஷிங்டன் பிரபலமான அமெரிக்க நீக்கிரோ கல்வியாளர். அலபாமாவில் டஸ்கோகி இன்ஸ்டிடியூட்டிற்குப் பிரின்ஸிபாலாக இருந்தார். 1881 முதல் அவர் இறக்கும் வரையில் நீக்கிரோக்களின் கல்விக்கு அதுவே மிகப் பெரிய கல்வி ஸ்தாபனமாக இருந்தது. நீக்கிரோவருக்கும் வெள்ளையருக்கும் நல்லுறவு ஏற்பட வேண்டும் என்பதற்காக அவர் இடைவிடாது பாடுபட்டார். 'அடிமையிலிருந்து மேலே' என்ற அவருடைய சுயசரிதை மாத்திரமேயன்றி அநேக நூல்களையும் அவர் எழுதியிருக்கிருர். இவர் 1858-இல் பிறந்து 1915-இல் காலமானர்.

அமெரிக்காவில் நீக்கிரோக்கள் அடிமைகளாக வைக்கப்பட்டிருந்த காலத்தில் பிறந்தவர் பூக்கர் வாஷிங்டன். ஆகையால், அவருக்குப் படிக்கவே வசதி இல்லை. சிறு

அவருடைய வாழ்க்கை வரலாற்றையும் அவர் செய்த வேலை களையும் ஆராய்ந்து, அதிலிருந்து ஹரிஜனங்கள் உணர்ச்சியைப் பெறுவார்கள் என்று நம்புகிறேன்.''

பொதுக் கிணறுகளிலிருந்து தண்ணீர் எடுக்க, தங்களுக் குள்ள உரிமையை ஹரிஜனங்கள் எப்படி நிலைநாட்டிக் கொள் ளுவது என்று கேட்டதற்கு, அவசியமானால் இதற்காக அவர்கள் போலீஸ் உதவியையும், கோர்ட்டு உதவியையும் பெற வேண்டும் என்று காந்திஜி கூறினர்.

---

வயதில் தனது வெள்ளைக்கார எஜமானப் பெண்ணுக்காக இவர் பள்ளிக்கூடத்துக்கு அவளுடன் புத்தகங்களைத் தூக்கிச்செல்வார். மற்றவர்கள் பள்ளிக்கூடத்தில் படிப்பதைப் பார்த்துப் பொருமைப்படுவார். உள்ளே இவர் அனுமதிக்கவும் படுவதில்லை. பிறகு அமெரிக்காவில் அடிமை ஒழிக்கப்பட்ட பின்னர் நீக்கிரோவருக்கு என்று தனிப் பள்ளிக் கூடம் வைக்கப்பட்டும் இவர் பள்ளிக்கூடம் போக முடியவில்லை. ஏனெனில், இவர் பிழைப்புக்காக நாளெல்லாம் உப்புக் காய்ச்சும் தொழிற்சாலையில் வேலை செய்ய வேண்டியிருந்தது. எனவே, தமக்கு இரவில் பாடம் சொல்லிக்கொடுக்க வாத்தியா ருடன் ஏற்பாடு செய்துகொண்டார். பிறகு ஒரு பகல் பள்ளிக்கூடத்தில் சேர்ந்தார். ஆனல், அது இவர் வேலை செய்யும் இடத்திற்குத் தூரத்தில் இருந்தது. ஆகையால், அதில் அதிக காலம் படிக்கவில்லை. பிறகும் இரவுப் பள்ளியிலேயே படித்தார். குழந்தைப் பருவத்தில் இவ்விதம் அவர் படித்ததெல்லாம் இரவுப் பள்ளியிலேயே. பிறகு நிலக்கரி சுரங்கத்தில் வேலை செய்தார். அப்பொழுது ஹாம்டன் விவசாய இன்ஸ்டிடியூட்டைப் பற்றிக் கேள்வியுற்று 500 மைலுக்கு அப்பாலிருந்த அத்த ஸ்தாபனத்தில் படிக்கப் புறப்பட்டார். கையில் காசு இல்லாமல் படாதபாடுபட்டு அங்கே போய்ச் சேர்ந்தார். அந்த ஸ்தாபனத்தின் தலைமையாசிரியை முதலில் அவரைச் சேர்த்துக்கொள்ளவில்லை. துடைப்பத்தைக் கொடுத்துப் பெருக்கச் சொன்னர். பூக்கர் அதையும் செய்து தனது திறமையைக் காட்டி சாப்பாட்டுக்கு அங்கேயே வேலை செய்து அப்பள்ளியில் சேர்ந்து படித்தார். இவ்விதம் படிப்புக்காக அவர் பட்ட சிரமம் கொஞ்சமல்ல. 1875-இல் ஹாம் டனில் சிறப்புடன் பட்டம் பெற்ருர். திரும்பி வந்து நீக்ரோக்களுக்குப் பள்ளிக்கூடம் வைத்துப் போதிக்க ஆரம்பித்தார். காலை 8 மணி முதல் இரவு 10 மணிவரை வேலை செய்து வந்தார். நீக்கிரோக்களின் கல்வி, சமூக முன்னேற்றத்திற்காக இவர் தமது வாழ்நாளெல்லாம் பாடுபட்டார்.

பகுதி பதினைந்து

# தோட்டி வேலையும் மற்றத் தொழில்களும்

## 1

## 'தீண்டாதார்' தொழில்கள்

கேள்வி: 'தீண்டாதார்' இப்பொழுது செய்துவரும் தொழில்களைக் கொண்டே அவர்கள் தீண்டாதாராக நடத்தப்பட்டு வருவதால், இப்பொழுது அவர்கள் செய்துவரும் தொழில்களை விட்டுவிட வேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

பதில்: 'தீண்டாதார்' இப்பொழுது செய்துவரும் தொழில்களையும் வேலைகளையும் விட்டுவிட வேண்டும் என்று நான் அவர்களுக்கு யோசனை கூறவில்லை.

['என் ஆன்மாவின் வேதனை' என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டது]

## 2

## ஆசிரமத்தில் தோட்டி வேலை

தோட்டி வேலையில் எனக்குப் பிரியம் அதிகம். என் ஆசிரமத்தில் தோட்டி வேலை செய்கிறவர்களுக்குச் சுத்தத்தைச் சொல்லிக் கொடுப்பதற்காகப் பதினெட்டு வயதுள்ள ஒரு பிராம்மண வாலிபர் தோட்டி வேலை செய்து வருகிறார். இந்த வாலிபர் சீர்திருத்தக்காரர் அல்ல. வைதிகக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவர். தவறாமல் கீதை படித்து வருகிறார். பக்தியுடன் சந்தியாவந்தனமும் செய்துவருகிறார். சமஸ்கிருத சுலோகங்களை, என்னைவிட அவர் நன்றாக உச்சரிக்கிறார். அவர் பிரார்த்தனையை நடத்தும் போது, அவருடைய இனிய கீதங்கள் எல்லோரையும் பக்தி மயமாக உருக்கிவிடுகின்றன. ஆனால், துடைப்பத்தால் பெருக்கிச் சுத்தம் செய்வதிலும் தாம் திறமையைப் பெறாவிடில், தாம் கற்றிருப்பவை பூரணமானவை ஆக

மாட்டா என்று அவர் உணர்ந்தார். ஆசிரமத்தைப் பெருக்கி யெடுப்பவர் தனது வேலையை நன்ருகச் செய்ய வேண்டுமானல், தானே அந்த வேலையைச் செய்து வழிகாட்டியாக இருக்க வேண்டும் என்றும் கருதினர்.

—'எங் இந்தியா' - 4—5—1921

## 3

# நாமே செய்துகொள்ள வேண்டும்

தீண்டாமை அடியோடு போய்விடும்போது, 'பங்கி'களுக்குச் சரியானபடி சம்பளம் கொடுத்து அவர்களை நன்ருகவும் நடத்தினல், சுகாதார வேலைகளைச் செய்ய அவர்கள் மறுத்துவிடுவார்கள் என்று பயப்படுவதற்கில்லை. இதைவிட மேலானது என்று இல்லாவிட்டாலும், உலகத்தின் மற்றப் பகுதிகளில் சுகாதார வேலைகள் நன்ருகவே செய்யப்பட்டு வருகின்றன. ஆனல், தீண்டாமையும், கேவலமாக மதிப்பதும் நீக்கப்பட்டு விட்ட பிறகு 'பங்கி'கள் தோட்டி வேலையைச் செய்ய மறுத்துவிடுகிருர்கள் என்றே வைத்துக்கொண்டால், அந்த வேலையை நாமே செய்வதற்குத் தயாராக இருக்க வேண்டும். தன் குழந்தையை அலம்பிவிடுவது ஒரு தாய்க்கோ, நோயாளியைச் சுத்தம் செய்துவிடுவது சம்பளத்திற்கு வைக்கப்படும் ஒரு நர்ஸுக்கோ எவ்விதம் பாவமான காரியமல்லவோ அதே போல, மற்றவர்களுக்காகச் சுத்தம் செய்வதில் பாவமோ, அவமானமோ எதுவும் இல்லை. தீண்டாமை ஒழிக்கப்படுவதில் அடங்கியிருப்பது இதுதான்.

—'எங் இந்தியா' – 22—6—1921

## 4

# செய்தாக வேண்டிய சீர்திருத்தம்

ஸ்ரீ கிராலால் ஏ. ஷா கீழ் வருமாறு எழுதுகிருர் :

“தனிப்பட்டவர்களும், குடும்ப வாழ்க்கையிலும் சுத்தமாக இருக்க வேண்டியதன் அவசியமே வற்புறுத்தப்பட்டு வந்திருக்கிறது. இதையே, அன்ருட வாழ்க்கையில் அனுசரிக்க வேண்டியவைகளான நமது சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கும் விதி முறைகள் காட்டுகின்றன. இக் காரியங்களில் அதிக முன்னேற்றமும் ஏற்பட்டு வந்திருக்கிறது என்பதிலும் சந்தேகமில்லை. ஆனல், மக்கள் சேர்ந்து வாழும் போதும், இதே சுத்தம் அனுசரிக்கப்பட வேண்டும் என்பதில் அதே போன்ற சிரத்தை எடுத்துக்கொள்ளப்படவில்லை. இதனல் தெரு சுத்தமாக இருக்க வேண்டும் என்பதில் என்ன சிரத்தை

எடுத்துக்கொள்ளப்பட வேண்டுமோ அது இல்லாது போயிற்று. கிராமங்களிலே யன்றி நகரங்களிலும் குப்பைகளையும் ஆபாசங்களையும் கண்ட இடமெல்லாம் தெருக்களில் போட்டுவிடுகிறார்கள். தெருக்கள் சுத்தமாக இருக்க வேண்டுமே என்பதைக் குறித்து யாரும் கவலைப்படுவதில்லை.

"இந்த அசிரத்தை, தெருக்களைச் சுத்தம் செய்யும் வேலையில் ஈடுபட்டிருப்பவர்களைப் பாதிக்கிறது. அத்தொழிலாளரின் நிலைமையைக் குறித்து யாருமே எண்ணிப் பார்ப்பதில்லை. அவ்வேலையைச் செய்வதால், இயல்பாகவே அத் தொழிலாளி அசுத்தமானவனாகிறான். அவனுக்குக் கொடுக்கும் கூலியோ மிகக் குறைவு. எல்லோர் விஷயத்திலும் என்றில்லாவிட்டாலும் அநேகர் விஷயத்தில், அவர்கள் குளிப்பதற்குப் போதுமான தண்ணீரும் கிடைப்பதில்லை. இதன் பலனாக, அவன் வேலை செய்துவிட்டு வரும்போதும் அசுத்தமாகவே இருக்கிறான். அவனுக்கு உதவி செய்ய யாரும் முன்வராததனால், எப்பொழுதுமே அசுத்தத்துடன் இருந்து வருவதில் திருப்தியடைந்து விடுகிறான். தலைமுறை தலைமுறையாக, இவ்விதமே நடந்து வந்திருப்பதால், சமூகத்தில் சேராமல் ஒரு தனி வகுப்பினர் இருந்து வருகிறார்கள். வேறு ஜீவனோபாயத்தைத் தேடிக்கொள்ளுவதற்கு வாய்ப்பு இல்லாததனால், தனித்திருந்து ஏழ்மையிலும், கெட்ட பழக்க வழக்கங்களிலும், நோயிலும் வாழ வேண்டியவர்களாகிவிட்டனர்.

"சமூகத்திலிருக்கும் மற்ற வகுப்பினர், அவர்கள் செய்துவரும் வேலையைத் தாங்கள் செய்து கொள்ளத் தயாராக இல்லாததனாலேயே இவ்வகுப்பினர் இருந்து வருகிறார்கள். ஆகையால், இவர்கள் விஷயத்தில் தனக்குள்ள பொறுப்பைச் சமூகம் உணர்ந்து, இவர்களைத் தனியானவர்கள் என்று காண முடியாத வகையில் இவர்கள் சுத்தமாக இருப்பதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்து, மற்றவர்களுடன் கலந்து கொள்ளுவதற்கு இவர்களைத் தகுதியானவர்களாக்க வேண்டும். அப்படியானால் முதலாவதாக, இவர்கள் வேலை செய்யும் இடத்திற்குப் பக்கத்திலேயே இவர்கள் தங்களைச் சுத்தம் செய்துகொள்ளுவதற்குப் போதுமான தண்ணீர் வசதியைச் செய்துகொடுக்க வேண்டும். இரண்டாவதாக, இவர்கள் வேலை செய்யும் இடத்திற்கு அருகாமையில் இவர்கள் வேலைக்காகத் தங்கள் உடைகளை மாற்றிக்கொள்ளவும், வேலை முடிந்ததும் வேலைக்கான தங்கள் சாமான்களையும் உடைகளையும் வைத்துவிட்டுச் சுத்தமான உடையை மாற்றிக்கொள்ளுவதற்கும் வசதி செய்து கொடுக்க வேண்டும். இதைச் செய்து, தொழிலாளர் சுத்தமாக இருப்பதற்கு உதவி செய்யப்படுவார்களானால், சுத்தம் தங்களுக்கு வழக்கமானதாகிவிடும் வகையில், அவர்கள் அபிவிருத்தி யடைந்துகொண்டே போவார்கள்.

"இது அவசியம் செய்தாக வேண்டிய சீர்திருத்தம். இதில் எல்லா வகுப்பினரும் சிரத்தை எடுத்துக்கொள்ள வேண்டும். சமூகத்திலுள்ளவர்கள் எல்லோருக்காகவும் அவர் இவ் வேலையைச் செய்வதால் சமூகம் முழுவதுமே இச் சீர்திருத்தத்தின் பளுவை ஏற்றுக்கொள்ள வேண்டும். அதாவது, முனிசிபாலிடிகள், ஸ்தல ஸ்தாபனங்கள் முதலிய பிரதிநிதி ஸ்தாபனங்கள் இக் காரியத்தைச் செய்ய வேண்டும். அவை இல்லாத இடங்களில் அரசாங்கம் செய்ய வேண்டும். இக் கடமை நீண்ட காலமாகக் கவனிக்கப்படாமல் இருந்திருக்கிறது என்பது, இனியும் காலங் கடத்தாமல் இதை நிறைவேற்றியாக வேண்டும் என்பதற்கே சரியான வாதமாகும்.

"இச்சீர்திருத்தத்திற்குச் செலவு கொஞ்சமே. சமூகத்தின் நன்மைக்கு இதைச் செய்வது அவசியம் என்ருல், இதற்கு வேண்டிய பணத்தைத் தேடித் தான் ஆகவேண்டும்."

ஸ்ரீ ஷா கூறியிருக்கும் யோசனை, முனிசிபாலிடிகளும் ஸ்தல ஸ்தாபனங்களுமேயன்றித் தனிப்பட்டவர்களும் யோசிக்கத்தக்க தாகும். ஆனல், முக்கியமாக முனிசிபாலிடிகளும், ஸ்தல ஸ்தாப னங்களுமே கவனிக்க வேண்டும். எல்லோரும் சேர்ந்திருக்கும் இடங்கள் சுத்தமாக இருக்க வேண்டும் என்று எல்லோரும் வற்புறுத்தினுல்தான் அத்தகைய இடங்கள் சுத்தமாக இருக்கும். பொதுக் கக்கூசுகளும், தனிப்பட்டவர்களின் கக்கூசுகளும், தெருக்களும் சுத்தமில்லாமல் இருந்து வருவதற்கு முக்கியமான காரணம், தீண்டாமைதான். ஆரம்பத்தில் தீண்டாமை, சுத்தத் தைப் பற்றிய ஒரு விதியாக இருந்தது. இந்தியாவுக்கு வெளியில் உலகத்தின் மற்றப் பகுதிகளில் அவ்விதமே இன்றும் இருந்து வருகிறது. அதாவது, அசுத்தமாயிருப்பவனும், அசுத்தமான பொருளும் தீண்டத்தகாதவை. ஆனல், அவனின், அப்பொரு ளின் அசுத்தம் போய்விட்ட பின்னர், அவனும் அப்பொருளும் தீண்டத்தகாதவை அன்று. ஆகையால், கக்கூசு சுத்தம் செய்யும் வேலையில் ஈடுபடுபவர், அவர் கூலி வாங்கும் 'பங்கி'யாக இருந் தாலும், கூலி பெருத ஒரு தாயாகவே இருந்தாலும், அசுத்தமான வேலையைச் செய்த பிறகு, அவர்கள் தங்களைச் சுத்தம் செய்து கொள்ளும் வரையில் அசுத்தமாக இருப்பவர்களே. ஒரு 'பங்கி'யை என்றுமே தீண்டப்படாதவர் என்று கருதிவிடுவதற் குப்பதிலாக, அவரையும் ஒரு சகோதரராகவே பாவித்து, சமூகத் திற்காக அவர் செய்யும் அசுத்தமான வேலைக்குப் பிறகு அவர் சுத்தமாக வருவதற்கு வேண்டிய வாய்ப்பை அளித்தால், அந்தச் சமூகத்தைச் சேர்ந்த மற்றவர்களைப் போன்றே, அவரும் சமூகத் தால் ஏற்றுக்கொள்ளப்படுவராகவேண்டும். ஆகையால், நகர சபைகள் இதில் முன்னேடிகளாகக் காரியங்களைச் செய்ய முடியும். ஆனல், நகர மக்கள் வற்புறுத்தினலன்றி அவை செய்ய மாட்டா. நகர மக்களின் ஆன்மாக்களைத் தவிர நகரசபைகளுக்கு ஆன்மாவே இல்லை என்று சொல்லப்படுவது சரியே. ஆகையால், ஸ்ரீ ஷாவின் யோசனையைச் சம்பந்தப்பட்டவர்கள் பின்பற்ற வேண்டும் என்று நான் சிபாரிசு செய்வதோடு, ஒரு குறிப்பிட்ட இடத்தில் தமது முழு கவனத்தையும் செலுத்தி வேலை செய்யு மாறும் அவருக்கு யோசனை கூறுகிறேன். அங்கே மக்களிடை யேயும். அவர்களுடைய நகர சபையினிடமும் அவர் கிளர்ச்சி செய்ய வேண்டும். எனவே, பம்பாயில் பொதுஜன அபிப்பிரா யத்தை வளர்ப்பதற்கு அவர் தமது சக்தி முழுவதையும் செல விடட்டும். அவர் அங்கேதான் வசிக்கிருர். அங்கே திட்டமான யோசனைகளைக் கூறிப் பல வார்டுகளிலிருக்கும் மக்களும் அவற்றை ஏற்றுக்கொள்ளும்படி செய்வாரானல், அவர் எடுத்துக் கொள்ளும் சிரமம் வெற்றியடைவதைக் காண்பார்.

—'ஹரிஜன்' – 11—2—1933

# 5

# இந்தக் கடையர்களுக்கும்கூட கதி மோட்சம்

இக்கட்டுரையின் தலைப்புக்கு ரஸ்கினின் இலக்கியச் சொற்றொடர் ஒன்றைத் திருடிக்கொள்ளத் துணிந்திருக்கிறேன். அவரோ, அச்சொற்றொடரைப் பைபிளிலிருந்து திருடிக்கொண்டிருக்கிறார். நான் சொல்ல விரும்பும் முழுப் பொருளும், அதில் இருக்க வேண்டும் என்பதற்காக, அதில் 'கூட' என்ற சொல்லைச் சேர்த்திருப்பதோடு 'கடையர்' என்பதற்குப் பதிலாக 'கடையர்கள்' என்றும் பன்மையாக்கியிருக்கிறேன். ஏழைத் தோட்டி அல்லது 'பங்கி', ஓர் அம்சத்தில் குழந்தைக்குத் தாய் எப்படி முக்கியமானவளோ அதே போலச் சமூகத்திற்கு மிகவும் முக்கியமானவன்; சமூகத்தின் அத்தியாவசியமான உறுப்பினன். என்றாலும், இந்தத் தோட்டி அல்லது 'பங்கி'தான் ஹரிஜனங்களில் கடையனாக இருப்பதாகத் தோன்றுகிறது. தனது குழந்தைகள் சுத்தமாக இருப்பதற்கான காரியங்களைத் தாய் கவனித்து வருவதைப் போல, 'பங்கி', சமூகத்தின் சுகாதார வேலைகளைச் செய்து வருகிறான். இந்தத் தோட்டி வேலையை உயர் சாதியினர் தாங்களே செய்துகொள்ள வேண்டியிருந்தால், தனது வேலையைச் செய்வதற்காக, 'பங்கி' உடன்பட வேண்டியிருக்கும் அநேக முறைகள் வெகு காலத்திற்கு முன்னாலேயே ஒழிந்து போயிருக்கும். மதுரா தீண்டாமை எதிர்ப்பு போர்டு, அதன் முனிசிபல் போர்டுக்கு எழுதியிருக்கும் கடிதத்திலிருந்து கீழ்க்கண்ட விவரத்தைக் கொடுக்கிறேன் :

"தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த நமது சகோதரர்களை, எவ்வளவு மோசமான அவமானத்திற்கும் துயரங்களுக்கும் ஆளாக்கியிருக்கிறோம் என்பதைப்பற்றி நாம் அறிந்துகொள்ளவே இல்லை. ஓர் ஒல்லியான, வயதான, வலுவே இல்லாத பெண், ஒரு கூடை நிறைய மலத்தைத் தலையில் சுமந்து கொண்டு ஒவ்வொரு நாள் காலையிலும் நகரின் சந்துகளிலிருந்து மலத்தைக் கொட்டும் இடத்திற்குத் தூக்கிக்கொண்டு போகும் காட்சியைக் கண்டும் பரிதாபப்படாமல் இருப்பவன், கொஞ்சமும் இரக்கமற்றவனாகவே இருக்க வேண்டும். இது நீண்ட காலமாக இருந்து வரும் வழக்கமானாலும், இது மனிதத் தன்மையற்றது, கொடுமையானது; காட்டுமிராண்டித்தனமான காலத்திற்கு ஒரு நினைவுச் சின்னம். இது சுகாதாரக் கேடானதுமாகும். அக்கூடையை மூடாமலோ, அரைகுறையாக மூடியோதான் கொண்டுபோகிறார்கள். பலத்த காற்று அடித்தால் அந்த ஆபாசம் அவ்வழியாகச் செல்வோர் மீதோ, கடைகளில் காட்சியாக வைத்திருக்கும் பலகாரங்கள், தின்பண்டங்கள் மீதோ விழுந்துவிடுவதையும் பார்த்து வருகிறோம். பகுத்தறிவும், புத்திசாலித்தனமும் இருக்குமிடமான மனிதத் தலை, தெய்வீகச் சின்னம், இத்தகைய ஆபாசத்தைச் சுமந்து செல்வதற்காக இல்லை, இதைச் சுமந்து செல்கிறவர்,

சுயமதிப்பு, கௌரவம் ஆகிய உணர்ச்சிகளை யெல்லாம் இழந்துவிடுகிறார். என்றாலும், யாருக்காக இந்தச் சேவை செய்யப்படுகிறது? நகர மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் பிரதிநிதிகளே! சிந்தித்துப் பாருங்கள். இரக்கமே இல்லாத இக்காரியத்தில் உங்களுக்குள்ள பொறுப்பையும் யோசியுங்கள். இதற்குப் பரிகாரம் மிக எளிதானது. கையினால் இழுத்துச் செல்லக் கூடிய சிறு வண்டிகளை வாங்குங்கள். வாயற்றவர்களான உங்கள் ஊழியர்கள், தலையில் தூக்கிச் செல்வதற்குப் பதிலாக இழுத்துச் செல்லும்படி செய்யுங்கள். நீங்கள் கவனிக்க வேண்டிய இன்னுமொரு விஷயமும் இருக்கிறது. கக்கூசுகளிலிருந்து மலத்தை அதிக ஆபாசமின்றி அப்புறப்படுத்துவது சாத்தியமாவதை முன்னிட்டு உலோகத்தினாலாகிய அல்லது மண்ணில் செய்த சட்டிகள் இருக்கும்படியும் செய்ய வேண்டும்.''

இதை எழுதியிருப்பவரின் பாஷை கொஞ்சம் ஆடம்பரமாக இருப்பதைக் குறித்து வாசகர்கள் ஏளனமாகச் சிரிக்கவேண்டாம். அவர் கூறியிருப்பதெல்லாம் தெய்வீகமான உண்மை. 'பங்கி'கள் இதுவரையில் எந்தவிதமான ஆட்சேபணையுமின்றித் தங்கள் வேலையைச் செய்து வந்திருக்கிறார்கள். ஆகையால், பல நூற்றாண்டுகளாக இவர்கள் எவ்விதம் சமூகத்திற்குச் சேவை செய்து வந்திருக்கிறார்கள் என்பதை அறியும் சிரமத்தைச் சாதி ஹிந்துக்கள் எடுத்துக்கொள்ளவில்லை. சமூகத்தின் இச்சேவகர்களைத் தீண்டாதார்கள் என்று நாம் கருதாமலிருந்திருப்போமானால், அவர்கள் விஷயத்திலோ, அவர்கள் வேலை சம்பந்தமாகவோ நாம் கண்களை மூடிக்கொண்டிருந்திருக்க மாட்டோம். அவர்களைத் தீண்டாதாராகக் கருத நாம் முற்பட்டதால், அவர்களை நரகத்தில் இருந்தாக வேண்டியவர்களாக்கிவிட்டோம். கக்கூசுகள் என்று சொல்லப்படும் இந்நரகங்களுக்கு நாம் தினந்தோறும் போய்க் கொண்டிருந்தபோதிலும், நம்மைச் சுற்றிலும் இருந்து வரும் ஆபாசங்களைக் குறித்தோ, அந்த இடங்களில் இருந்து வரும் துர்நாற்றத்தைக் குறித்தோ, கவனிக்கும் சிரத்தையை நாம் எடுத்துக்கொள்ளுவதில்லை. மதுரா முனிசிபாலிடியின் நிலைமையும், அங்கிருக்கும் 'பங்கி'களின் நிலைமையும் எதுவோ அதுவே இந்தியாவின் எல்லா முனிசிபாலிடிகளிலும் 'பங்கி'களுக்கு இருந்து வரும் நிலைமையாகும். மதுரா தீண்டாமை ஒழிப்பு போர்டு யோசனை கூறியிருக்கும் சீர்திருத்தம் மிகவும் விரும்பத்தக்கதாகும். ஒவ்வொரு முனிசிபாலிடியும் அதிகச் செலவில்லாமலேயே இதைச் செய்யலாம்.

அலகாபாத் 'லீடர்' பத்திரிகையில் சில தினங்களுக்கு முன்னால் ஓர் அறிவிப்பைப் படித்தேன். அலகாபாத் தெருக்களில் ஒரு ஜமீன்தார் ஆரம்பித்திருக்கும் சுத்தஞ் செய்யும் வேலையைப் பற்றியது அது. இந்த வேலை இரண்டு நாட்கள் நடப்பதற்கு முன்னாலேயே, இந்தக் கீர்த்தி வாய்ந்த பணியை மேற்கொண்ட உற்சாகமுள்ள வாலிபர்கள், மலக்கூடைகளுக்குப் பதிலாக வேறு நல்ல ஏற்பாடுகளைச் செய்வது என்று எண்ணிவிட்டார்கள். இப்பொழுது 'லீடர்' பிப்ரவரி 27-ஆம் இதழிலிருந்து நான் திரும்பவும் எடுத்துக் கொடுக்கிறேன்:

''தனிப்பட்டவர்களின் கக்கூசுகளிலிருந்து மலங்களை எடுத்துச் செல்வ தற்காக இப்பொழுது தோட்டிகள் உபயோகித்துவரும் கூடைகளுக்குப் பதிலாகத் தனியாக எடுத்துவிடக்கூடிய வாளிகளுடன் கூடிய லேசான இரும்புக் கைவண்டிகள் இருக்கும்படி செய்யத் தீண்டாமை ஒழிப்பு ஊழியர்கள் முயற்சி செய்து வருகிறார்கள். யோசிக்கப்பட்டிருக்கும் இத்திட்டத்தின்படி, இத்தகைய கை வண்டிக்காகும் செலவை, தோட்டிகளை வேலைக்கு வைத்துக் கொள்ளுபவர்களே ஏற்றுக்கொள்ள வேண்டும். அலகாபாத் லா ஜெர்னல் கம்பெனியின் மானேஜர், பிரசார வேலைக்காகத் தம் சொந்தச் செலவில், மலங்களை எடுத்துச் செல்லும் மாதிரி வண்டி ஒன்றைத் தயார் செய்து தருவதாகத் தாராள மனத்துடன் முன்வந்திருக்கிறார் என்று தெரிகிறது. இத் திட்டத்தின்படி, மலத்திற்கு இரு சட்டிகளை வைத்திருக்க வேண்டும். கலி மானிக அஸ்தானிலோ, அதற்குப் பக்கத்திலோ பொது ஸ்னான அறைகளைக் கட்டுவதற்கு யாரோ ஒரு உயர் சாதி பிராம்மணப் பெண்ணிடமிருந்து பணம் வந்திருக்கிறது. அப்பெண் தமது பெயரை வெளியிட விரும்பவில்லை. சம்பந்தப்பட்ட அந்த இடத்தில் சரியான சாக்கடை, தண்ணீர் சப்ளை வசதியை முனிசிபல் அதிகாரிகள் செய்ததும் இந்த வேலை ஆரம்பிக்கப்படும்.''

இச்செய்தி வெளியிடப்பட்டிருக்கும் தேதிக்கும் இப்போதைக்கும் நடுவிலுள்ள வாரங்களில், அந்த உற்சாகம் மங்கிப் போய்விடவில்லை என்றே நம்புகிறேன். தீவிரமான சில ஊழியர்கள் விடாப்பிடியாகச் செய்துகொண்டே போனால், முக்கியமாகச் செய்தாகவேண்டிய இந்தச் சீர்திருத்தத்தை, ஒவ்வொரு பட்டணத்திலும், நகரத்திலும் ஆரம்பித்துவிடலாம்.

இவ்விதம் கொஞ்சம் முன்யோசனையோடும், கொஞ்சம் செலவோடும் மூன்று சீர்திருத்தங்களை இந்தியா முழுவதிலும் கொண்டு வந்துவிடலாம். அதனால் ஹரிஜனங்களுக்குச் சௌகரியமும் சுத்தமும் ஏற்படுவதோடு, பொதுவாக சமூகத்தின் சுகாதாரமும் விருத்தியடையும். இப்பொழுது செய்ய வேண்டியதெல்லாம், நம்மிடம் நாம் எப்படி நடந்துகொள்ளுவோமோ அதே போல, சமூகத்தின் உறுப்பினர்களாகவுள்ள 'இந்தக் கடையர்களிடத்திலும்கூட' நாம் நடந்துகொள்ள வேண்டும் என்பதுதான்.

—'ஹரிஜன்' - 18—3—1933

## 6

# சரியான 'பங்கி'

**நா**ன் கருதும் சரியான 'பங்கி', மிக உயர்ந்த பிராம்மணராகவோ, அந்தப் பிராம்மணருக்கும் மிஞ்சியவராகவோ இருப்பார். ஒரு பிராம்மணர் இல்லாமலேயே ஒரு 'பங்கி' இருந்துவர முடியும் என்று எண்ண இடமுண்டு. ஆனால், 'பங்கி' இல்லா



வர்தாவில் தெருக்களைச் சுத்தம் செய்யும் வேலையைத் தாமே செய்துகாட்ட
காந்திஜி தயாராகிறார்—1936.



சேகானில் தெருக்களைச் சுத்தம் செய்யும் தொண்டர்படைக்கு, வேலை செய்யும் விதத்தை காந்திஜி கூறிக்கொண்டிருக்கிறார்—1939.

விட்டால் பிராம்மணர் இருந்து வர முடியாது. சமூகம் வாழ முடியும்படி செய்பவர் 'பங்கி'யே. ஒரு தாய், தன் குழந்தைக்கு என்ன செய்கிருளோ அதை ஒரு 'பங்கி' சமூகத்திற்குச் செய்து வருகிருர். குழந்தையின் ஆபாசங்களையெல்லாம் தாய் அலம்பி விட்டு, அதன் ஆரோக்கியம் கெடாதபடிப் பார்த்து வருகிருள். அதே போலவே 'பங்கி'யும், சமூகத்தின் சுகாதார நிலை கெட்டுப் போய்விடாதபடி செய்து, முழு சமூகத்தின் முழு ஆரோக்கியத் தையும் பாதுகாத்துப் பத்திரப்படுத்தி வருகிருர். ஆன்மா சுத்தமாக இருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டியது ஒரு பிராம்மணருடைய கடமை. சமூகத்தின் உடலைப் பார்த்துக் கொள்ள வேண்டியது 'பங்கி'யின் கடமை. ஆனல், அனுபவத் தில் ஒரு வித்தியாசம் இருந்து வருகிறது. பிராம்மணர் பொது வாகத் தனது கடமையை அனுசரித்து நடந்துகொள்ளுவதில்லை. ஆனல், 'பங்கி' தனது கடமையை அனுசரித்தே நடந்து வரு கிருர் என்பதில் கொஞ்சமும் சந்தேகமில்லை. அநேக சேவை களைக்கொண்டு சமூகம் நிலை பெற்று இருந்து வருகிறது. எல் லாச் சேவைகளுக்கும் அடிப்படையானதாக இருப்பது 'பங்கி' யின் சேவை.

அப்படி இருந்தும், மிக மோசமான நிலையிலிருக்கும் நமது இந்திய சமூகம், 'பங்கி'யைச் சமூகப் பறையராக்கியிருக்கிறது. தராசின் அடிப்பாதாளத்தில் அவரை வைத்திருக்கிறது. அடி உதையையும், வசவையும் வாங்கிக்கொள்ளுவதற்கு மாத்திரமே தகுதியுடையவராக அவரைக் கருதுகிறது. உயர் சாதியினர் தின்று மிஞ்சும் எச்சிலைத் தின்று உயிர் வாழ்ந்து, சாணி மேட் டில் குடியிருந்ததாக வேண்டியவராகச் செய்திருக்கிறது. அவருக்கு நண்பரே இல்லை. அவர் பெயரே ஏச்சாகியிருக் கிறது. இது திடுக்கிடச் செய்யும் நிலை. இது ஏன், எதற்காக ஏற்பட்டது என்பதை ஆராய்ந்துகொண்டிருப்பது ஒருவேளை வீணனதாகலாம். இரக்கமற்ற இக்காரியத்திற்கு மூலம் என்ன என்பது நிச்சயமாக எனக்குத் தெரியாது. ஆனல், ஒன்று மாத்திரம் எனக்குத் தெரியும். 'பங்கி'யைக் கேவலமாக நாம் நினைப்பதனல் நாம் – ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள் ஆகிய எல்லோருமே – உலகம் முழுவதாலும் வெறுக்கப்பட வேண்டியவர்களாகிருேம். நமது கிராமங்கள் ஆபாசங்கள் மிகுந்தவைகளாகவும், சுகாதாரமில்லாதவைகளாகவும் ஆகிவிட் டன. கிராமவாசிகள் அற்பாயுளில் அகால மரணமடைகிருர்கள். உண்மையிலும், நீதியை அனுசரித்தும் பிராம்மணருக்குச் சம மாகக் கருதப்பட வேண்டியவர் பங்கி. அவருக்குரிய அந்த அந்தஸ்தை நாம் ஒப்புக்கொண்டு நடந்திருப்போமானல், இன்று நமது கிராமங்களேயன்றி அவைகளில் வசிப்பவர்களும், சுத்தம், ஒழுங்கு ஆகியவைகளின் சித்திரத்தைக் கண்டிருப்பார் கள். நாம் சுத்தமாக இல்லாததனலேயே எத்தனையோ நோய் களின் நாசத்திற்கெல்லாம் நாம் ஆளாகியிருக்கிருேம். சுத்த மின்மையினுலும், சுகாதாரப் பழக்க வழக்கங்களில்லாததனுலுமே

அந்நோய்கள் ஏற்படுவதால், அவற்றினின்றும் பெருமளவுக்கு நாம் விடப்பட்டுமிருப்போம்.

ஆகையால், பிராம்மணருக்கும் 'பங்கி'க்குமிடையே இருந்து வரும் அநியாயமான பாகுபாடு நீக்கப்பட்டாலன்றி நமது சமூகம் ஆரோக்கிய வாழ்வையோ, சுபிட்சத்தையோ, அமைதியையோ, ஆனந்தத்தையோ அடையவே முடியாது. இதை எந்தவிதமான தயக்கமோ, சந்தேகமோ இன்றி நான் கூறுவேன்.

சமூகத்தின் அத்தகைய கௌரவமான சேவகரிடம் என்ன தகுதிகள் முக்கியமாக இருக்க வேண்டும்? சரியான ஒரு 'பங்கி'க்குச் சுகாதார விதிகளைப் பற்றிய முழு ஞானமும் இருக்க வேண்டும். சரியான வகையிலுள்ள ஒரு கக்கூசு எப்படி கட்டப்பட்டிருக்கிறது, அதைச் சரியானபடி சுத்தம் செய்யும் விதம் என்ன என்பதும் அவருக்குத் தெரிந்திருக்க வேண்டும். மலத்தின் துர்நாற்றத்தைப் போக்குவதும், ஒழிப்பதும் எப்படி, அது தீமையுண்டாக்குவதாக இல்லாதபடி செய்வதற்கு என்னென்ன மருந்தை உபயோகிக்க வேண்டும் என்பதையும் அவர் அறிந்திருக்க வேண்டும். அதே போல ஜலமலங்களை உரமாக்கும் விதத்தையும் அவர் அறிந்திருக்க வேண்டும்.

ஆனால், இவை மாத்திரம் போதா. அதோடு மலஜலத்தின் தன்மை இன்னது என்பதையும் என்னுடைய சரியான 'பங்கி' அறிந்திருப்பார். இவைகளை அவர் உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டு வந்து, சம்பந்தப்பட்ட தனிப்பட்டவர்களுக்குத் தக்க சமயத்தில் அவர் எச்சரிக்கை செய்வார். இவ்விதம் மலஜலத்தைத் தாம் பரிசீலனை செய்ததன் முடிவைக் குறித்து அவர் தக்க சமயத்தில் அறிவித்துவிடுவார். இதற்கு அவருக்குத் தமது தொழில் சம்பந்தமான ஒழுங்கான அறிவு வேண்டியது அவசியமாகிறது. அதே போல, சிறு கிராமங்களிலேயன்றி நகரங்களிலும், மலத்தை எப்படி பட்டுவாடா செய்வது என்னும் விஷயத்தில் அவரே நிபுணராகவும் இருப்பார். இவ்விஷயத்தில் அவருடைய ஆலோசனையையும் வழிகாட்டுவதையும் நாடுவதோடு அவற்றைச் சமூகத்திற்குத் தாராளமாக அளிக்க வேண்டும். இவருடைய தொழிலுக்கு இங்கே கூறப்பட்டிருக்கும் தகுதிகளையெல்லாம் அடைவதற்கு அவசியமான, வழக்கமான படிப்பு அவருக்கு இருக்க வேண்டும் என்பதைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. அத்தகைய சரியான ஒரு 'பங்கி', தமது தொழிலை ஒரு தெய்வீகக் கடமை என்று எண்ணியே அத்தொழிலைச் செய்து வருவார். அதாவது, அத்தொழிலைக் கொண்டு பெரும் பணம் திரட்டிக்கொள்ள வேண்டும் என்று கனவு கண்டுகொண்டிருக்கமாட்டார். தாம் வேலை செய்யும் பகுதியில் இருக்கும் ஆபாசங்களையும், மலங்களையும் சரியான வகையில் நீக்கி டாங்கிடு செய்ய வேண்டியதற்குப் பொறுப்பாளி தாமே என்றும் அவர் கருதுவார். தாம் உயிர் வாழ்வதன் முக்கியமான பயன் அப்

பகுதி ஆரோக்கியத்தோடும், சுகாதாரத்தோடும் இருக்கும்படி பார்த்துக்கொள்ளுவதே என்று கருதுவார்.

இப்படிப்பட்ட சரியான 'பங்கி'கள் எத்தனை பேர் இருக்கிறார்கள்? பங்கிகளுக்கு அவர்களுடைய அந்தஸ்தும் கௌரவமும் இருக்கும்படி செய்வது படித்த வகுப்பாரின் விசேஷ வேலையும், பாக்கியமுமாகும். தங்களைச் சுற்றிலுமுள்ள பங்கிகளுக்குச் சொல்லிக் கொடுப்பதற்காக, படித்த வகுப்பைச் சேர்ந்த சிலர், சுகாதார சாஸ்திரத்தைத் தாங்களே முதலில் கற்று நிபுணர்களாக வேண்டும். அவர்கள், இப்பொழுது இருந்து வரும் நிலைமையையும், அதன் காரணத்தையும் கவனமாக ஆராய்ந்து, என்றுமே குறையாத விடாமுயற்சியுடனும், என்றும் பின்னடைந்துவிடாத, தோல்வி என்பதையே அறியாத பொறுமையுடனும் இவ்வேலையில் ஈடுபடவும் வேண்டும். சுத்தமாக இருப்பது சம்பந்தமான விதிகளை அவர்களுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும். மலங்களை அப்புறப் படுத்துவதற்கு வேண்டிய நல்ல துடைப்பமோ, பிற சாதனங்களோகூட இன்று நம் 'பங்கி'களிடம் கிடையாது. கக்கூசுகளோ, படுமோசமானவைகளாக இருக்கின்றன. 'பங்கி'கள் குடியிருக்கும் பகுதிக்குப் பக்கத்து இடங்கள் சாக்கடையைவிட மோசமாக இருக்கின்றன. படித்த வகுப்பாரில் சிலர், 'பங்கி'யை அவருடைய இன்றைய துயர நிலையிலிருந்து மீட்டு, பயங்கரமான ஆபாசத்திலிருந்து சமூகத்தைக் காப்பாற்ற இப்பணிக்குத் தங்களை அர்ப்பணம் செய்துகொண்டால்தான் இக்காரியங்களையெல்லாம் செய்ய முடியும். தம்முள் சேவா உணர்ச்சியைக் கொண்டிருக்கும் ஒருவருக்கு, அவருடைய உயர்ந்த ஆசையைப் பூர்த்தி செய்துகொள்ளுவதற்கு இந்த வேலை ஒன்றே நிச்சயமாகப் போதுமானது.

—'ஹரிஜன்' - 28—11—1936

[தோட்டிகள் வேலை நிறுத்தம் செய்யலாமா? கூடாது என்பதே காந்திஜியின் கருத்து. "வேலை நிறுத்தம் தவறு என்பதற்கான சில விஷயங்களும் இருக்கின்றன. தெருக் கூட்டுவோரின் குறைகள் இந்த ரகத்தைச் சேர்ந்தவை... தெருக் கூட்டுவோர் வேலை நிறுத்தம் செய்யக்கூடாது என்ற என் அபிப்பிராயம், 1897-இல் நான் டர்பனில் இருக்கும் போதிலிருந்தே எனக்கு இருந்து வருகிறது" என்று காந்திஜி 'ஹரிஜனி'ல் 21-4-1946-இல் எழுதிய கட்டுரையில் கூறியிருக்கிறார். அக்கட்டுரையையும், அதைக் குறித்துக் குறை கூறிய ஒரு ஹரிஜனுக்கு 12-5-1946-இல் 'ஹரிஜனி'ல் கூறிய பதிலையும், 'பங்கிகள் வேலை நிறுத்தம்' என்ற தலைப்பில் இதே விஷயத்தைக் குறித்து 23-6-1946-ல் அவர் எழுதிய மற்றோர் கட்டுரையும், 'மகாத்மா காந்தி நூல்கள்' ஆறும் தொகுப்பு 553-60-ஆம் பக்கங்களில் காண்க-]

# 7

# இந்தியாவின் வால்மீகிகள்

'பங்கி'களைக் குறிப்பிடும் மற்றொரு சொல், வால்மீகி என்பதை வாசகர்கள் அறிய வேண்டும். சிம்லாவில் அவர்கள் வசிக்கும் வீடுகள் வருந்தத் தக்கவைகளாக இருக்கின்றன. அவர்களைக் குறித்து யாருமே கவலைப்படுவது இல்லை. அவ்வளவு தூரத்திற்குப் போய் நானே நேரில் காண்பதற்கு என்னால் முடியவில்லை. என்னுடன் தங்கியிருக்கும் பாதுஷா கானை* அங்கே போய்ப் பார்த்துவருமாறு கேட்டுக் கொண்டேன். அவர்கள் குடியிருக்கும் குடிசைகளின் பரிதாபகரமான நிலைமையைக் குறித்து அவர் எனக்குக் கூறினார். வால்மீகிகளில் சிலர் என்னைப் பார்க்க வந்தார்கள்; தாங்கள் இருந்துவரும் துயரமான நிலைமையைக் குறித்து என்னிடம் புகாரும் கூறினர். முதலாவதாக, அவர்கள் குடியிருக்கும் குடிசைகள் புதிதாகக் கட்டிக் கொடுக்கப் படுமானால், அவர்களுடைய மற்றப் புகார்களும் நிவர்த்திக்கப் பட்டுவிடும் என்று நான் கருதுகிறேன். தங்கள் நடுவே இருந்துவரும் இத்தீமையைத் தங்களால் முடிந்த வரையில் சீக்கிரத்தில் போக்கியாக வேண்டியது சிம்லா பொதுமக்களின், முனிசிபாலிடியின் தவிர்க்க முடியாத கடமையாகும். தங்களிடையே இருக்கும் கொஞ்சம்கூட சுத்தமே இல்லாதவர்களைவிட அவர்கள் அதிக சுத்தமாக இருந்துவிட முடியாது.

['ஹரிஜன சேவக்'கிலிருந்து எடுத்தது,]

—சிம்லா, 13-5-1946 —'ஹரிஜன்' - 19—5—1946

# 8

# வேலை நிலை அபிவிருத்திக்கு வழி

**கேள்வி:** இவ் விஷயமாக நீங்கள் முன்பே எழுதியிருக்கிறீர்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனல் 'பங்கி'கள், அவர்களுடைய வேலையைச் செய்வதற்குச் சரியான சாதனங்களை அளிப்பது சம்பந்தமாக முனிசிபாலிடிகளுக்கும் மற்ற ஸ்தாபனங்களுக்குமேயேன்றி, இவர்களை வேலைக்கு வைத்துக் கொள்ளும் மற்றவர்களுக்கும் உள்ள கடமையைக் குறித்துத் திரும்பவும் நீங்கள் ஒரு வார்த்தை சொல்ல வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். உதாரணமாக, நீர் கசியாத இரும்புக் கூடைகளைக் கொடுத்தாலன்றி, சாதாரண கூடைகள், கோணிப் பைகள் ஆகியவைகளிலிருந்து கசியும் ஆபாச நீர் இந்தத் துர்ப்பாக்கியத் தொழிலாளர் மீது சிந்தித்தான்

* 'எல்லைப்புற காந்தி' என்று வழங்கப்பெற்ற வடமேற்கு எல்லைப்புறத் தலைவர் கான் அப்துல் கபார்கானையே 'பாதுஷா கான்' என்று காந்திஜி குறிப்பிடுகிறார்.

தீரும். தோட்டி வேலையைச் செய்வது முழுவதும் கைகளையோ, உடலின் எப்பகுதியையோ அசுத்தம் செய்து கொண்டு விடாததாக இருக்க வேண்டும். இவ்விதம் செய்து விட்டால், இவ்வேலைக்கு இன்று இல்லாமலிருக்கும் ஒரு கௌரவம் ஏற்பட்டுவிடும். தெருக் கூட்டுவது, கக்கூசு சுத்தம் செய்வது ஆகிய வேலைகளுக்குச் சரியான சாதனங்களைக் கொடுப்பதோடு, 'பங்கி'க்கு அவ்வேலையைச் சரியாகச் செய்யும் முறையையும் சொல்லிக் கொடுக்க வேண்டும். உள்ளூர், மாகாண அதிகாரிகள், சுத்தத்தை முன்னிட்டு மேற்கொள்ள வேண்டிய வேலை இது.

பதில்: ஆபாசங்களைக் கையினுல் தீண்டி எடுக்க வேண்டிய அவசியமில்லாத வகையில் அங்கீகரிக்கப்பட்ட துடைப்பங்கள், சாதனங்களையே கொடுக்க வேண்டும் என்று சட்டத்தில் விதிகள் செய்ய வேண்டும் என்று நான் கூறுவேன். இவ்வேலைகளைச் செய்யும் போது அணிவதற்கு இன்னவிதமான எளிய ஆடை இருக்க வேண்டும் என்று விதிக்க வேண்டும். இன்ஸ்பெக்டர்களும், மேஸ்திரிகளும் எப்படியாவது வேலை வாங்கிவிட வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுவதற்குப் பதிலாக, அந்தக் காருண்யமுள்ள, சுகாதாரத்திற்கு அவசியமான வேலையில் பயிற்சியளிக்கப்பட்டிருக்க வேண்டும். அதிக அளவு சுகாதாரக் கேடும், லஞ்சம், ஊழல், கெட்ட நடத்தை ஆகியவைகளோடு கூடிய குறைந்த அளவு வேலையுமே இன்றுள்ள முறையின் பலன்.

—புது டில்லி, 30-9-1946 —'ஹரிஜன்' - 6—10—1946

## 9

# புது விதமான கக்கூசுகளும் தீண்டாமையும்

கேள்வி: புது விதமான கக்கூசுகளை (பிளஷ் முறையை) அனுசரிப்பது, தீண்டாமையை ஒழிப்பதற்கு ஒரு வழி என்று நீங்கள் கருதுகிறீர்களா? அப்படியானுல், யந்திரங்களின் மீது உங்களுக்கு இருக்கும் வெறுப்பைக் கொண்டு இப்புது முறை அமலுக்கு கொண்டு வரப்படுவதை நீங்கள் அநேகமாக எதிர்க்கமாட்டீர்கள்.

பதில்: போதுமான தண்ணீர் வசதி இருக்குமிடங்களில் நவீன சுகாதார முறையை. ஏழைகளுக்கு எந்தவிதமான கஷ்டமும் இல்லாமல் கொண்டு வரலாம். இதில் எனக்கு எந்தவிதமான ஆட்சேபமும் இல்லை. சம்பந்தப்பட்ட நகரின் சுகாதாரத்தை விருத்தி செய்வதற்கான சாதனமாக, உண்மையில் இது வரவேற்கப்படும். இப்போதைக்கு இதைப்பட்டணங்

களிலேயே அமலுக்குக் கொண்டுவர முடியும். யந்திரங்கள் குறித்து எனக்குள்ள ஆட்சேபம், அதிகத் தவருக அறிந்து கொள்ளப்பட்டிருக்கிறது. யந்திரம் என்பதற்காக நான் அதை எதிர்க்கவில்லே. மனிதனின் உழைப்புக்கு இடமில்லாதபடி செய்து, அவன் ஒரு வேலேயும் இல்லாது கஷ்டப் படும்படி செய்யும் யந்திரத்தையே நான் எதிர்க்கிறேன். தானே அலம்பிக் கொள்ளும் கக்கூசு முறை, தீண்டாமையாகிய சாபக் கேட்டைப் போக்கிவிடுமா என்பது மிகவும் சந்தேகிக்க வேண்டியதாகும். தீண்டாமை என்பது நம் உள்ளங்களிலிருந்து ஒழிந்தாக வேண்டும். ஆனல், யோசனே கூறப்பட்டிருக்கும் முறையில் அது ஒழிந்துவிடாது. நாம் எல்லோரும் 'பங்கி'களாகி, தோட்டி வேலே, கக்கூசு சுத்தஞ் செய்தல் ஆகிய வேலேகளிலுள்ள கௌரவத்தை நாம் உணர்ந்து கொண்டலான்றி உண்மையில் தீண்டாமை ஒழிக்கப்பட்டுவிட்டதாக ஆகாது.

—புது டில்லி, 2-9-1946 —'ஹரிஜன்' - 15-9-1946

# 10

# சமையற்காரர்களாக ஹரிஜனங்கள்

**கேள்வி:** ஹிந்து குடும்பங்களுக்கு ஏற்ற திறமை வாய்ந்த சமையற்காரர்களாக ஹரிஜனங்களுக்குப் பயிற்சியளிக்கும் திட்டமொன்றைக் காங்கிரஸ் ஆரம்பித்து, இவ்விதம் பயிற்சியளிக்கப்பட்ட ஹரிஜன சமையற்காரர்களேயே ஒவ்வொரு ஆசிரமத்திற்கும், காங்கிரஸ் ஊழியர்களுக்கு அமைக்கும் சாப்பாட்டு விடுதிக்கும் நியமிப்பது என்று ஒரு விதியும் செய்துவிட்டால், தீண்டாமையை ஒழிப்பதற்கு இதுவே குறுக்கு வழியாகிவிடும் என்று நீங்கள் கருதவில்லேயா?

**பதில்:** மிக உயர்ந்த அந்தஸ்துக்கு ஹரிஜனங்கள் உயர வேண்டும் என்பதே ஆசையாக இருக்க வேண்டும். ஆனல், அதுதான் நமது லட்சியமாக இருக்க வேண்டுமென்ருலும், நல்ல சமையற்காரர்களாவதற்குச் சில ஹரிஜனங்களுக்குப் பயிற்சியளிப்பது நல்லதே. நம் வீட்டு வட்டாரத்திற்குள் எவ்வளவுக்கெவ்வளவு அவர்களே உள்ளே கொண்டு வருகிருேமோ அவ்வளவுக்கு இச்சீர்திருத்தம் துரிதமானதாகும் என்பதையே நான் கவனித்திருக்கிறேன். நம் குடும்பங்களில் கலந்துவிடும் ஹரிஜனங்கள், தாழ்வு மனப்பான்மையையெல்லாம் இழந்துவிடுவதோடு, ஹரிஜனங்களுக்கும் உயர்சாதி ஹிந்துக்களுக்குமிடையே இணேப்பின் ஜீவன்களாகவும் ஆகிவிடுகிருர்கள்.

—சேவா கிராமம், 19-5-1940 'ஹரிஜன்' – 25—5—1940

# 11

# ஹரிஜன சமையற்காரர்கள்

காங்கிரஸின் அடுத்த மகாநாட்டிற்குச் சமையற்காரர்கள் எல்லோரும் ஹரிஜனங்களாகவே இருக்க வேண்டும் என்றும், நம் நாட்டைப் போன்ற ஒரு ஏழை நாட்டிற்கு ஏற்ற வகையிலும், சுத்தத்தை அனுசரிப்பதிலும், சமையற் கலையிலும் ஹரிஜன சமையற்காரர்கள் பலருக்குப் பயிற்சியளிக்க வேண்டும் என்றும் கடிதம் எழுதியிருக்கும் ஒருவர் யோசனை கூறுகிறார். காங்கிரஸ் மகாநாடு எந்த மாகாணத்தில் நடக்கிறதோ அந்த மாகாண காங்கிரஸ்காரர்களுக்கு இந்தப் பாக்கியத்தையும் கடமையையும் அளிக்க வேண்டும் என்கிறார். அம்மகாநாடு முடிந்த பிறகு, சமையற்காரர்களை வைத்துக்கொள்ளக்கூடிய காங்கிரஸ்காரர்கள், இந்தச் சமையற்காரர்களை வீட்டில் வைத்துக்கொள்ள வேண்டும் என்று கூறுகிறார். தீண்டாமையெல்லாம், போய்விட்ட பழைய சங்கதி என்று காட்டக்கூடிய இது போன்ற எந்த யோசனையும் வரவேற்கத்தக்கதேயாகும். இந்த யோசனையை ஒப்புக்கொள்ளும் காங்கிரஸ்காரர்கள், காங்கிரஸ் மகாநாடு வரும் வரையில் காத்திருக்க வேண்டியதில்லை என்றும் கூறுவேன். ஹரிஜனங்களைத் தங்களுக்குச் சமையற்காரர்களாக மாத்திரமேயன்றி மற்ற வேலைகளுக்கும் இப்பொழுதிலிருந்தே அவர்கள் நியமித்துக்கொள்ள வேண்டும். அது மாத்திரமல்ல. முடிந்தவர்கள், ஹரிஜனங்களைத் தங்கள் குழந்தைகளாகவே குடும்பங்களில் சேர்த்துக் கொண்டு, அவர்களுக்குச் சரியான பயிற்சியையும் அவர்கள் அளிக்கட்டும். ஆண்களும் பெண்களும் தீண்டாமை ஒழிய வேண்டும் என்று சொல்லிக்கொள்ளுவதில் மனப்பூர்வமாக இருப்பார்களானல், மதத்தின் போர்வையில் ஹிந்து சமயம் தனது சொந்த உற்றார் உறவினர்களை, அவர்களுடைய குற்றம் எதுவுமே இல்லாதபோது, தீண்டாமை என்பதற்குள் ஆழ்த்தி இருக்கிறது என்ற உண்மையையும் உணருவார்களானல்தான், மேலே சொன்னதெல்லாம் நடக்க முடியும்.

—சிம்லா, 8—5—1946 —'ஹரிஜன்' - 19—5—1946

பகுதி பதினாறு

# சட்டசபைப் பிரதிநிதித்துவம்

## 1

## 'தீண்டாதாரு'க்குத் தனி வாக்காளர் தொகுதி

'தீண்டாதாரு'க்குத் தனி வாக்காளர் தொகுதி இருப்பது என்பது, ஒரு சைத்தான் அரசாங்கத்தின் இக்கால சிருஷ்டி என்று நான் நிச்சயமாகக் கூறுவேன். அவர்களுக்குச் செய்ய வேண்டிய ஒரேகாரியம், வாக்காளர் பட்டியலில் அவர்கள் இடம் பெறும்படி செய்து, அரசியலில் அவர்களுக்கு ஜீவாதார உரிமைகள் இருக்கும் படியும் செய்வதுதான். அவர்கள், அக்கிரமமாக நடத்தப்படுவார்களானால், அவர்களுடைய பிரதிநிதி வேண்டுமென்றே ஒதுக்கப்படுவாரானால், விசேஷத் தேர்தல் நீதிச் சபைக்குப் போக அவர்களுக்கு உரிமை இருக்கும். அந்த நீதிச் சபை, அவர்களுக்கு முழுப் பாதுகாப்பையும் அளிக்கும். தேர்ந்தெடுக்கப்பட்ட அபேட்சகரின் தேர்தலை ரத்துச் செய்துவிட்டு, ஒதுக்கப்பட்டவரைத் தேர்ந்தெடுத்ததாக அறிவித்துவிட இந்த நீதிச் சபைகளுக்கு அதிகாரம் இருக்கவேண்டும்.

'தீண்டாதாரு'க்குத் தனி வாக்காளர் தொகுதி அளிப்பது, அவர்களுடைய அடிமைத்தனத்தை நிரந்தரமானதாக்கிவிடும். தனி வாக்காளர் தொகுதி இருப்பதால் முஸ்லிம்கள் என்றைக்கும் முஸ்லிம்களாகவே இருந்து வருவார்கள். 'தீண்டாதார்' என்றுமே தீண்டாதாராகவே இருக்க வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களா? தனி வாக்காளர் தொகுதி, அந்த இழுக்கு என்றும் இருந்து வரும்படியே செய்யும். இப்பொழுது வேண்டியதெல்லாம், தீண்டாமையை ஒழித்துவிடுவதுதான். இதைச் செய்துவிட்டால்,அக்கிரமமாக அவமதித்துவரும். 'உயர்' வகுப்பார், 'தாழ்ந்த' வகுப்பார்மீது சுமத்தியிருக்கும் மோசமான தடை அழிக்கப்பட்டுவிடும். அவ்வாறு அந்த மோசமான தடையை அழித்துவிட்ட பிறகு, தனி வாக்காளர் தொகுதியை நீங்கள் யாருக்குக் கொடுப்பீர்கள்? ஐரோப்பாவின் சரித்திரத்தைக் கவனியுங்கள். தொழி

லாளர் வகுப்பினருக்கோ, பெண்களுக்கோ தனி வாக்காளர் தொகுதிகள் அங்கே இருக்கின்றனவா? வயது வந்தவர்களுக் கெல்லாம் வோட்டுரிமை அளிப்பது என்பதனுல், 'தீண்டாதார்' ருக்குப் பூரணமான பாதுகாப்பை அளித்துவிடுகிறீர்கள். வைதீக ஹிந்துக்களும் வோட்டுக்காக அவர்களிடம் போக வேண்டி யிருக்கும்.

(லண்டனில் இந்திய மாணவர்கள் மஜ்லிஸில் செய்த ஒரு பிரசங்கத்தி லிருந்து எடுக்கப்பட்டது.)

—'எங் இந்தியா' - 12—11—1931

## 2

# உயிரைக் கொடுத்தும் எதிர்ப்பேன்

மற்ற சிறுபான்மை சமூகத்தினர்கள், தங்களுக்கு அது வேண்டும், இது வேண்டும் என்று கூறுவதை நான் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனுல், 'தீண்டாதாரு'க்கென்று கேட்கப் படுவது இவை எல்லாவற்றையும்விட மிகவும் அக்கிரமமானது என்றே நான் கருதுகிறேன். அக்கிரமத் தடை நிரந்தரமாக இருந்து வரவேண்டும் என்பதுதான், அப்படிக்கேட்கப்படுவதன் பொருள். இந்தியாவின் சுதந்திரத்தை அடைந்துவிடுவதற்காகக் கூட, 'தீண்டாதாரி'ன் ஜீவாதார நன்மைகளை நான் விற்றுவிட மாட்டேன். நான், என்னளவில் ஏராளமான 'தீண்டாதாரு'க்கும் பிரதிநிதியாக இருக்கிறேன் என்று சொல்லிக்கொள்ளுகிறேன். நான் இங்கே காங்கிரஸின் சார்பாக மாத்திரம் பேச வில்லை; என் சார்பாகவும் பேசுகிறேன். 'தீண்டாதா'ரின் வாக்கெடுப்பு ஒன்று நடக்குமானுல், அவர்களுடைய வாக்கு எனக்குக் கிடைப் பதோடு மற்றவர்களைவிட எனக்கே மிக அதிக வாக்குகள் கிடைக்கும் என்றும் கூறுவேன். 'தீண்டாதாரு'க்கு மாத்திர மல்ல, வைதிக ஹிந்து தருமத்திற்கும்கூட அவமானதாக இருக்கும் தீண்டாமை என்ற அக்கிரமமான தடையை நீக்குவ தற்குக் தனி வாக்காளர் தொகுதியோ, தனியாக ஸ்தானங்களை ஒதுக்கிவைப்பதோ வழி அல்ல. 'தீண்டாதாரு'க்குச் சொல்லுவ தற்காக இந்தியாவின் ஒரு கோடியிலிருந்து மற்ருேர் கோடி வரையில் நான் வேலை செய்வேன். தீண்டாமைக் கேட்டை ஒழித்துத் தீருவது என்று பிரதிக்ஞை கொண்டிருக்கும் ஹிந்து சீர்திருத்தக்காரர்கள், இன்று ஏராளமாக இருந்து வருகிருர்கள் என்பதை இக்கமிட்டி அறியட்டும்; உலகம் முழுவதுமே அறி யட்டும். எங்களுடைய பட்டியலில், எங்களுடைய ஜனக்கணக்கில் 'தீண்டாதார்' என்று ஒரு தனி வகுப்பார் என்று ஒதுக்கப்படு வதை நாங்கள் விரும்பவில்லை. சீக்கியர்கள், சீக்கியர்களாகவே என்றென்றைக்கும் இருந்து வரலாம். முஸ்லிம்களும், ஐரோப்பியர்

களும் அவ்வாறே தனியாக இருந்து வரலாம். 'தீண்டாதார்' என்றென்றைக்கும் தீண்டாதாராகவே இருந்து வருவதா? தீண்டாமை இருந்து வருவதைவிட, ஹிந்து மதம் செத்துப் போவதே மேல் என்பேன்.

'தீண்டாதார்' இஸ்லாம் மதத்திற்கோ, கிறிஸ்தவ மதத்திற்கோ மதம் மாற்றப்பட்டு விடுவதைக் குறித்து எனக்குக் கவலை இல்லை. இதை நான் சகித்துக்கொள்ளுவேன். ஆனால், கிராமங்களில் இரு பிரிவுகள் உண்டாக்கப்படுவதால் ஹிந்து மதத்திற்கு ஏற்படக்கூடியதை நான் சகித்துக்கொள்ளவே முடியாது. 'தீண்டாதாரி'ன் ராஜீய உரிமைகளைப் பற்றிப் பேசுகிறவர்களுக்கு, இந்தியாவைப்பற்றித் தெரியாது; இந்திய சமூகம் இன்று எவ்விதம் அமைக்கப்பட்டிருக்கிறது என்பதும் தெரியாது. இதை எதிர்க்க வேண்டியவன் நான் ஒருவனே என்றால், என் உயிரைக் கொடுத்தும் இதை எதிர்ப்பேன். ஆகையால், எனக்குள்ள முழு சக்தியையும் கொண்டு இதை வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

[லண்டன் வட்டமேஜை மகாநாட்டில் மைனரிட்டிகள் கமிட்டியில் பேசியதிலிருந்து எடுத்தது.]

—'எங் இந்தியா' -26—11—1931

['தீண்டாதாரு'க்கு தனித்தொகுதி கொடுப்பதென்பதை எதிர்த்து காந்திஜி, சிறையிலிருந்து இந்தியா மந்திரிக்கும் பிரிட்டிஷ் பிரதம மந்திரிக்கும் எழுதிய கடிதங்களை இத்தொகுப்பின் பின் சேர்க்கைப் பகுதியில் காண்க.]

## 3

## ஹரிஜனங்களும் ராஜீயக் கட்சிகளும்

நீங்கள் எந்த ராஜீயக் கட்சியிலும் சேரக்கூடாது. இப்பொழுது இருந்து வரும் அரசாங்க முறையைப் பற்றிய என் அபிப்பிராயம் இன்னும் மாறிவிடவில்லை. பல நூற்றாண்டுகளாக நீங்கள் விசித்திரமான கஷ்டங்களுக்கெல்லாம் ஆளாகி வந்திருப்பதால், இந்தியாவிலிருக்கும் அதிக முற்போக்கான கட்சியில்கூட நீங்கள் சேர்ந்துக்கொள்ள வேண்டும் என நான் உங்களை எதிர்பார்க்கமாட்டேன். அரசாங்கம், உங்களுக்கு எதைக் கொடுத்தாலும் ஏற்றுக்கொள்ளுங்கள். ஆனால், உங்கள் சுயமதிப்பை மாத்திரம் நீங்கள் தியாகஞ்செய்துவிடக் கூடாது. அதே போல காங்கிரஸின் வேலைத் திட்டத்தில் உங்களுக்கு எவை நன்மையாக இருக்கின்றனவோ அவற்றை, உதாரணமாக மது விலக்கு, உப்பு வரி ரத்து போன்று காங்கிரஸ் வேலைத் திட்டங்களில் உள்ளவைகளை நீங்கள் அங்கீகரிக்கலாம். இந்தியாவின் ஏழைகளின் நன்மையே உங்களுடைய நன்மையாகவும் இருப்பதால், எந்த வகையிலும் ஹரிஜனங்கள் இந்த ஏழைகளிடமிருந்து ஒதுங்கி இருந்துவிட அனுமதிக்கமாட்டோம் என்பதையும் இதன் மூலம் உலகிற்குச் சொல்லலாம். நீங்கள் எந்த ராஜீயக் கட்சியுடனும்

சேராமலிருந்தாலும், சந்தர்ப்பம் எதுவாயிருந்தாலும், நாட்டின் நன்மையை நீங்கள் விற்றுவிடவும் மாட்டீர்கள். இதை நீங்கள் செய்துவிட்டால், ஹரிஜனங்கள் இந்தியாவில் மிக்கமுக்கியத் துவம் பெற்றவர்களாக இருப்பார்கள். இந்த ஹரிஜனங்கள் விழிப்பை அடைந்துவிடும்போது, அவர்கள் அசைக்க முடியாத தோர் சக்தியாக ஆகிவிடுவார்கள்.

[காந்திஜியுடன் பேசிக்கொண்டிருந்ததைப் பற்றி வெளியான ஒரு செய்தி யிலிருந்து எடுத்தது.]

—'ஹரிஜன்' – 28—3—1336

## 4

# ஒரு ஹரிஜன எம். எல். ஏ.யின் ஐந்து கேள்விகள்

கேள்வி: 1. இனி அமைக்கப்போகும் அரசியல் அமைப்பில் ஹரி ஜனங்களின் நிலைமை எதுவாக இருக்கும்?

2. பஞ்சாயத்துப் போர்டிலிருந்து ராஜ்ய சபை வரையில், ஜனத்தொகை யின் அடிப்படையில் ஸ்தானங்களை நிர்ணயிப்பதற்கு ஒப்புக்கொள்ளுமாறு அரசாங்கத்திற்கும் காங்கிரஸுக்கும் நீங்கள் ஆலோசனை கூறுவீர்களா?

3. சட்டசபையிலுள்ள ஒடுக்கப்பட்ட வகுப்பினர் மெம்பர்களில் பெரும்பாலானவர்களின் நம்பிக்கையைப் பெற்றிருக்கும் ஒடுக்கப்பட்ட சமூக மெம்பர்களை மந்திரி சபைக்கு நியமிக்குமாறு காங்கிரஸுக்கும், மாகாணங்களி லுள்ள பல மெஜாரிட்டி கட்சித் தலைவர்களுக்கும் நீங்கள் ஆலோசனை கூறுவீர் களா?

4. ஹரிஜனங்கள், முன்னேற்ற மில்லாமல் இருப்பவர்கள். ஆகையால், ஸ்தல ஸ்தாபன போர்டுகளிலும், முனிசிபாலிடிகளிலும் ஹரிஜனங்கள் தலைவர் களாகவும் சேர்மன்களாகவும் இருப்பது சாத்தியமாவதை முன்னுட்டு ஸ்தல ஸ்தாபன போர்டுகள், முனிசிபாலிடிகளின் நிர்வாக ஸ்தானங்களை வகுப்புவாரி முறையில் மாறி மாறி வகிக்க சட்டத்தில் விதி செய்ய வேண்டும் என்று நீங்கள் யோசனை கூறுவீர்களா?

5. காங்கிரஸில் ஜில்லா காங்கிரஸ் கமிட்டியிலிருந்து மேலான காங்கிரஸ் காரியக் கமிட்டி வரையில், ஹரிஜனங்களுக்கு இத்தனை சதவிகித ஸ்தானங்கள் இருக்க வேண்டும் என்று நீங்கள் ஏன் நிர்ணயித்து விடக்கூடாது?

பதில்: *1.* என்னுடைய செல்வாக்கினால் அமைக்கப்படும் அரசியலில், தீண்டாமையை எந்த ரூபத்திலும், முறையிலும் அனுசரிப்பதைக் குற்றமாக்கும் விதி இருக்கும். சம்பந்தப் பட்ட தேர்தல் பிரதேசத்திலிருக்கும் ஹரிஜன ஜனத் தொகையை அனுசரித்து, தேர்தல் மூலம் அமைக்கப்படும்

எல்லா ஸ்தாபனங்களிலும், தீண்டப்படாதார் என்று சொல்லப்படுகிறவர்களுக்கு ஸ்தானங்கள் ஒதுக்கப்படும்.

2. இக்கேள்விக்குப் பதில், முந்திய கேள்விக்குச் சொல்லியிருக்கும் பதிலிலேயே அடங்கியிருப்பதைக் காண லாம்.

3. இதை நான் செய்ய முடியாது. இக்கொள்கை ஆபத்தானது. கவனிக்கப்படாமல் இருந்துவிட்ட சமூகங் களுக்குப் பாதுகாப்பு அளிப்பது என்பது, அவர்களுக்குத் தீமையை உண்டாக்கும், நாட்டுக்குத் தீமையை உண்டாக் கும் அளவுக்குப் போய்விடக்கூடாது. ஒரு மந்திரி, எல்லோரு டைய நம்பிக்கைக்கும் பாத்திரமான மிக உயர்ந்தவராக இருக்க வேண்டும். தேர்ந்தெடுக்கப்பட்டவர்களைக் கொண்ட ஒரு ஸ்தாபனத்தில் அங்கம் பெற்றுவிட்ட ஒருவர், முக்கியமான பதவியை அடைவதற்கு தமது சொந்த தகுதியையும், தமக்குள்ள பொதுஜன செல்வாக்கையுமே நம்பியிருக்க வேண்டும்.

4. முதலாவதாக, இப்பொழுதுள்ள சட்டத்தில் எனக் குச் சிரத்தையே கிடையாது. அது செத்துவிட்டதைப் போன்றதே. ஆனால், நான் முன்னால் சொன்ன காரணங்களை முன்னிட்டு உங்களுடைய இந்த யோசனையை எதிர்க்கிறேன்.

5. முன்னால் சொன்ன காரணங்களை முன்னிட்டு இந்த யோசனையையும் நான் எதிர்க்கிறேன். ஆனால், காங்கிரஸின் பட்டியலில் இருக்கும் ஹரிஜனங்களின் தொகைக்கு ஏற்றாற் போல ஹரிஜன மெம்பர்கள் தேர்ந்தெடுக்கப்படும்படி, தேர் தல் மூலம் வரும் பெரிய காங்கிரஸ் ஸ்தாபனங்களைக் கட்டாயப்படுத்தவே நான் விரும்புவேன். காங்கிரஸில் நான்கணா மெம்பராவதில்கூட ஹரிஜனங்களுக்குச் சிரத்தை இல்லை என்றால், நிர்வாக ஸ்தானங்களில் தங்கள் பெயர் இருக்கும் என்று அவர்கள் எதிர்பார்க்க முடியாது. ஆனால், ஹரிஜனங்களிடம் போய், அவர்கள் காங்கிரஸில் அங்கத்தி னர்களாக வேண்டும் என்று அவர்களைத் தூண்ட வேண்டும் என்று காங்கிரஸ் ஊழியர்களுக்கு நான் பலமாக ஆலோசனை கூறுவேன்.

—'ஹரிஜன்' - 2—8—1942

# 5

# அரைகுறைப் பாராட்டு

ஒருவர் ஆங்கிலத்தில் எழுதிய கடிதத்தைக் காந்திஜி அப்படியே பிரசுரித்தார். அதன் ஆங்கில நடை மோசமாக இருந்தது. அக்கடிதத்தில் கூறப்பட்டிருந்ததன் மொழிபெயர்ப்பு வருமாறு :

"உங்களிடமிருந்து சரியான பதில் உடனே கிடைக்கும் என்ற நம்பிக்கையில் இதை எழுதுகிறேன். மேஹ்தர் சமூகத்தினரிடம் நீங்கள் கொண்டிருக்கும் அன்பையும் உறவையும் இந்தியா முழுவதும் நன்கறிவதே போன்று நானும் அறிவேன். உங்கள் உள்ளத்தை அறிந்துகொள்ளுவதற்கு, உங்கள் 'ஹரிஜன்' பத்திரிகை எங்களுக்கு அதிக உதவியாக இருந்திருக்கிறது. முக்கியமாக சமீபத்தில் வெளி வந்திருக்கும் 'ஹரிஜன்' இதழ்கள், மேஹ்தர் சமூகத்தைப் பற்றிய உங்கள் எண்ணங்களைத் திட்டவட்டமாக வெளிப்படுத்தியிருக்கின்றன.

"குழப்பமான, சிக்கலான இந்திய ராஜீயத் துறையில் எங்களுடைய நிலைமை திட்டமாகத் தெரிவதற்கும், உங்கள் உணர்ச்சிகளைப் பெரிதும் தெரிந்து கொள்ளவும், என் மனத்திலிருப்பதை வெளியிட விரும்புகிறேன்.

"அரசியல் நிர்ணய சபைக்கு அபேட்சகர்களின் நியமனப் பத்திரங்கள் தாக்கல் செய்யப்படுவது இம்மாதக் கடைசிக்குள் முடிந்துவிடும் என்று அறிந்தேன். இக்கடிதம் உங்களுக்குக் கிடைக்கும்போது, அப்படி நியமனப் பத்திரங்கள் தாக்கல் செய்யும் கடைசி நாளாக இருக்கலாம். காங்கிரஸ், குறிப்பிட்ட எம். எல். ஏ. க்களையும், எம். எல். ஏ. க்கள் அல்லாதவர்களையும் நியமிக்கிறது. தாழ்த்தப்பட்ட வகுப்பினரும் (சரியானபடி) பிரதிநிதித்துவம் அளிக்கப்படுவார்கள் என்று நம்பப்படுகிறது. ஆனால், போதுமான அளவு, அல்லது குறைந்தபட்சம் சிலரையாவது மேஹ்தர் சமூகத்திலிருந்து நியமிக்க உங்களிடமிருந்தோ, காங்கிரஸினிடமிருந்தோ யோசனை ஏதாவது உண்டா? அப்படி அவர்கள் நியமிக்கப்பட்டால், அவர்கள் பிரஜைகள் என்ற வகையில் தங்கள் கடமையை நிறைவேற்றுவதுடன், சுதந்திர இந்தியாவின் எதிர்கால அரசியலில் தங்களுடைய நியாயமான பங்கையும் அடைவார்கள்.

"2. நீங்கள் எங்களிடம் பெருந்தன்மையுடன் இருந்துவருகிறீர்கள். ஆகையால், அரசியல் நிர்ணய சபையில் மேஹ்தர் சமூகத்திற்கு ஸ்தானங்கள் அளிக்க வேண்டும் என்பதை நீங்கள் மறந்துவிடமாட்டீர்கள் என்று நானும், என் சமூகமும் நம்பலாமா?

"3. ஆலோசனை போர்டில் யார் யார் இருப்பார்கள்? சாதி ஹிந்துக்களா, அல்லது தாழ்த்தப்பட்ட வகுப்பாருள்படச் சிறுபான்மையோரா?

"4. ஆலோசனை போர்டு கூறும் ஆலோசனைகள், அரசியல் நிர்ணய சபையைக் கட்டுப்படுத்துமா? அவை கட்டுப்படுத்தமாட்டா என்றே நினைக்கிறேன். அப்படி அந்த ஆலோசனைகளை அரசியல் நிர்ணய சபை கவனிக்கப் போவதில்லை என்றால், அத்தகைய போர்டை நியமிப்பதில் என்ன அர்த்த

மிருக்கிறது? பலவீனமான சிறுபான்மையோருக்குத் திருப்தியளிப்பதற்கு மாத்திரமே அது அல்லவா?

"எங்களுக்கு எல்லாம் செய்து வருவதாகவும், செய்வீர்கள் என்றும் நீங்கள் சொல்லலாம். எங்களுக்கு எல்லாம் செய்யப்படும்போது, நாங்களும் உங்களுடன் இருக்கட்டும் என்று உங்களுக்குக் கூறுகிறேன். ஜனநாயக ரீதியில் எங்களுக்குப் பிரதிநிதித்துவம் இருக்கட்டுமே.

"நீங்கள் உடனே பதில் எழுதவேண்டிய கடமை இருப்பதோடு, என் கேள்விகளுக்குப் பூரணமாகவும் திருப்திகரமாகவும் பதில்சொல்லுவீர்கள் என்றும் பலமாக நம்புகிறேன். உங்களுடைய பதில்களை உங்கள் 'ஹரிஜன்' வாரப் பத்திரிகையில் பிரசுரிக்க வேண்டும் என்றும் பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன். சிரமத்திற்கு மன்னிப்பீர்கள் என்றும் நம்புகிறேன்."

இக்கடிதத்தைப் பிரசுரித்துக் காந்திஜி எழுதியதாவது :

ஆபத்தான ஆங்கில அறிவு, நம் சமூகத்தில் என்ன நாசத்தை உண்டாக்கியிருக்கிறது என்பதைக் காட்டுவதற்காகவே மேலே கண்ட கடிதம் முழுவதையும் பிரசுரித்திருக்கிறேன். ஆங்கிலேயரின் ஆங்கிலத்திற்கோ, இந்தியரின் ஆங்கிலத்திற்கோ இது உதாரணம் அல்ல. இக்கடிதத்தை எழுதியிருப்பவர் அரைகுறையாகப் புரிந்து கொள்ளும் புத்தக ஆங்கிலம் இது. தேச பாஷையான ஹிந்துஸ்தானியிலோ, தமது மாகாண மொழியிலோ அவர் இக்கடிதத்தை எனக்கு எழுதியிருப்பாரானால், அதனால் நான் அவருக்குச் சாதகமில்லாத பதில் எழுதும்படி அது செய்திருக்காது என்பதை அவருக்குக் கூறுகிறேன்.

இக்கடிதத்தை எழுதியிருப்பவர், எனக்கு அரைகுறைப் பாராட்டைத் தெரிவிக்கிறார். மேஹ்தர் என்று கூறப்படும் 'பங்கி'க்கு என்னுடைய அன்பைத் தெரிவிப்பது எப்படி என்பதை எனக்குச் சொல்லிக் கொடுப்பதற்காக ஒருவேளை அப்படி செய்யப்பட்டிருக்கலாம். இவர், அதிருப்தியடைந்துள்ள ஒரு பி. ஏ. பட்டதாரி. பங்கிகளுக்கு அவர் உதாரணமாக இல்லாததோடு மோசமான உதாரணமாகவும் இருக்கிறார். பங்கிகளுக்குத் தாம் பிரதிநிதி என்று அவர் சொல்லிக்கொண்ட போதிலும், அவர்களிடமிருந்து அவர் ஒதுங்கித் தனியாக நிற்கிறார்.

சிறந்த பங்கியாக இருக்கும் கலையில் அவர் பட்டதாரியாக இருப்பாரானால், நிச்சயமாக அவர் எனக்கு ஆசான் ஆவார். அவர் தோட்டி வேலை செய்வதில்லை. விஞ்ஞான ரீதியில் சுத்தம் செய்வது எப்படி என்பது அவருக்குத் தெரியாது என்றே அஞ்சுகிறேன். அக்கலையில் அவர் நிபுணராக இருந்திருப்பாரானால், இந்தியாவின் எல்லா நகரங்களும் அவருடைய சேவையை விரும்பும். பல நூற்றாண்டுகளாக இருந்து வரும் தூக்கத்திலிருந்து 'பங்கி'கள் விழித்தெழுந்துவிடுவார்களானால், ஒவ்வோர் இடத்

திலும் ஆஜியாஸ் குதிரை லாயங்களைப் போல்* அவ்வளவு சுத்த மாகப் பெருக்கியெடுத்துவிடுவார்கள். ஆபாசங்களினாலும், அழுக்கினாலும் ஏற்படுபவைகளான பிளேக்குகளும், மற்ற நோய்களும் இந்தியாவில் இருக்கமாட்டா.

பம்பாயில் நான் வசிக்கும் இடத்தில் என் அறையும், அதை அடுத்துள்ள கக்கூசும் நன்றாகச் சுத்தமாகவே இருக்கின்றன. ஆனால் நானே மூச்சுத் திணறும்படி செய்துவிடும் அழுக்கில் இருந்து வருகிறேன். என் முன்னாலிருக்கும் வீடுகளை ஆராய்ந்து பார்க்க எனக்கு நேரமில்லை. புது டில்லியில் நான் வசித்த வீட்டில் இருந்ததைப் போன்றே, இந்த வீடுகளிலும் ஜன நெருக்கம் அதிகமிருப்பதோடு அசுத்தமும் அதிகமாக இருக்கிறது. எனது பட்டதாரித் தோழரான 'பங்கி', இக்கலையில் வல்லவராக இருப்பாரானால், அவருடைய சேவையை, எனக்கு வழிகாட்டுவதற்கும், உதவி செய்வதற்கும் வேண்டும் என்று சந்தேகத்திற்கிடமின்றி கேட்டுப் பெற்றிருப்பேன்.

ஆனால், இப்பொழுது இருக்கும் நிலையில் அவரால் எனக்குப் பயனில்லை என்பது மாத்திரமல்ல, அரசியல் நிர்ணய சபையையோ, மற்றச் சட்டசபைகளையோ அவர் நினைக்கவும்கூடாது என்று அவருக்குச் சொல்லி, அவருடைய வெறுப்புக்கும் நான் ஆளாக வேண்டியிருக்கிறது. அச்சபைகளுக்கு யார் தேவையோ அவர்கள் போகட்டும். ஆனால் இவரோ, படுமோசமான சாதிப் புத்திப் போக்கை விட்டொழிப்பதற்குப் பதிலாக, இக்காரியத்திற்கு எந்த ஹரிஜனும் போதும் என்றாகிவிடாது என்று வாதிக்கிறார். மேஹ்தர் சாதியினராகத்தான் இருக்க வேண்டும் என்கிறார். இது தீமையான முறை, இதனால் யாருக்கும் நன்மை உண்டாகாது என்று அவருக்கு நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

எப்படியும் என்னிடமிருந்து சாத்தியமில்லாததையே அவர் எதிர்பாக்கிறார். இந்தப் பெரிய ஸ்தாபனங்களுக்காக உரு

---

* ஆஜியாஸ், எலிஸின் மன்னன். அவனுக்கு ஏராளமான குதிரை லாயங்கள் இருந்தன. ஆனால், அவையெல்லாம் சுத்தம் செய்யப்படாமல் முழு ஆபாசத்துடன் இருந்தன. ஹெர்குலீஸை அம்மன்னன் தனக்கு வேலைக்காரனாக நியமித்துக்கொண்டு தனது குதிரை லாயங்களைச் சுத்தம் செய்ய அனுப்பினான். இதற்குக் கூலியாக அவனுக்கு தன்னிடமுள்ள கால்நடை மந்தையில் பத்தில் ஒரு பகுதியைக் கொடுத்துவிடுவதாக ஆஜியாஸ் மன்னன் கூறினான். அதிசயிக்கத்தக்க பராக்கிரமம் வாய்ந்தவன், ஹெர்குலீஸ். அவன், அல்பியஸ் நதியை அந்தக் குதிரை லாயங்களில் திருப்பிவிட்டு, அவற்றைச் சுத்தம் செய்துவிட்டான். ஆனால் அம்மன்னனோ, அதெல்லாம் தந்திரம் எனக் கூறி, தான் வாக்களித்திருந்த பரிசைக் கொடுக்க மறுத்துவிட்டான். அதன் பேரில் ஹெர்குலீஸ் எலிஸை வென்று அதன் மன்னன் ஆஜியாஸையும் கொன்றுவிட்டான் என்பது ரோம, கிரேக்கப் புராணங்களில் வரும் கதை. எவ்வளவு அதிகமான ஆபாசம் நிறைந்த இடங்களையும் சுத்தமாக்கி விடுவார்கள் நவீன ஆற்றலைப்பெற்ற 'பங்கிகள்' என்பதை வற்புறுத்திக் கூறவே காந்திஜி, ஆஜியாஸின் குதிரை லாயங்களைக் குறிப்பிட்டிருக்கிறார்.

வாக்கப்பட்டவன் அல்ல நான். அப்போதைக்கப்போது நடந்து வரும் அசெம்பிளித் தேர்தல்களில் நான் எப்பொழுதும் சிரத்தை யெடுத்துக்கொண்டதே இல்லை. தேர்தலுக்கு அபேட்சகர்களை நியமனம் செய்யப்படும் காரியக்கமிட்டிக் கூட்டங்களுக்கு நான் போனதும் இல்லை. இப்பொழுது நடக்கும் அபேட்சகர்கள் நிய மனங்களைப்பற்றி நான் அறிந்திருப்பதெல்லாம், பத்திரிகைகளில் பார்த்துத்தான். நானே ஒரு 'பங்கி'யாகிவிட்டேன். ஏனெனில், ஒவ்வொரு ஹிந்துவும் செய்ய வேண்டிய தொழில் அது என்று நான் நினைக்கிறேன். தீண்டாமையின் கோர ரூபத்தை நாம் இன்று அறிந்திருக்கிறோம். ஹிந்துக்கள் மனப்பூர்வமாக, 'பங்கி' களாகி, சாதி வேற்றுமை இல்லாதவர்களானால்தான், நீண்ட காலமாக இருந்து வரும் தீண்டாமை என்பது சரியானபடி செத்து ஒழியும் என்றும் நான் எண்ணுகிறேன். எனக்குக் கடிதம் எழுதியிருப்பவர் கருதுவதைப் போன்று, சட்டசபை ஸ்தானங்களை அடைந்துவிட ஆசைப்படுவதனால் இதைச் செய்து விட முடியாது.

—'ஹரிஜன்' – 14—7—1946

# 6

# ஒடுக்கப்பட்ட சாதியினர்

கேள்வி: உங்கள் சுயராஜ்யத்தில் தீண்டாதாருக்குக் கிடைக்கும் ஸ்தானம் எதுவாக இருக்கும்? சிறுபான்மையோரைப் பாதுகாப்பதைக் குறித்துக் காங்கிரஸ் எவ்வளவோ சொல்லி வந்திருக்கிறது. சிறுபான்மையோரைப் பாது காப்பது சம்பந்தமான திட்டத்தைக் கொண்டுவர காங் கிரஸ் ஏன் தவறிவிட்டது? இந்த மௌனம், காங்கிரஸின் யோக்கியப் பொறுப்பில் நம்பிக்கையை உண்டாக்காததாக இருக்கிறதல்லவா?

பதில்: சாதி ஹிந்துக்கள் என்று சொல்லப்படுகிறவர்களுக்கு என்ன ஸ்தானம் உண்டோ, அதே ஸ்தானமே ஒவ்வோர் வகையிலும் 'தீண்டாதா'ருக்கும் நான் எண்ணும் சுயராஜ் யத்தில் இருக்கும். இதேதான் காங்கிரஸின் நிலைமையும். ஓர் இனத்தாருக்கு என்றில்லாத வேறு எந்த ஸ்தாபனத்தை யும் விட, சிறுபான்மையோருக்குக் காங்கிரஸ் குறைவாகப் பேசி அதிகமாகச் செய்திருக்கிறது. அது செய்துவரும் வேலையே எடுத்துக்காட்டுவதாக இருக்கும்போது, இதற் கெனத் திட்டம் எதையும் எழுதிக் காட்ட வேண்டிய அவசியம் இல்லை.

கே: தீண்டாதாரைச் சிறுபான்மையோராகக் காங்கிரஸ் கருதுகிறதா?

ப: ‘தீண்டாதாரை’ச் சிறுபான்மையோராகக் காங்கிரஸ் கருத முடியாது. இதற்கு முக்கியமான காரணம், பார்ஸிகள், யூதர்கள், கிறிஸ்தவர்கள் முதலியவர்கள் தங்களைச் சிறு பான்மையோர் என்று சொல்லிக்கொள்ளும் பொருளில் ‘தீண்டாதார்’ தங்களைச் சிறுபான்மையோர் என்று சொல்லிக்கொள்ள முடியாது. பிராம்மணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள் ஆகியவர்கள் சிறுபான்மையினர், சூத்திரர்கள் பெரும்பான்மையினர் என்றால், ஹரிஜனங்களும் சிறுபான்மை யோரே. சிறுபான்மையோர் என்று பழக்கத்தில் நாம் சொல்லும் பொருளில் இவர்கள் சிறுபான்மையினரோ, பெரும் பான்மையினரோ அல்ல. அதிருஷ்டவசமாக அந்த நிலைமைக்கு நாம் வந்துவிடவில்லை. அப்படி நாம் வந்துவிடுவோமானால் எந்த வகையான சுயராஜ்யத்திலிருந்தும் நாம் விலகிப் போய்விடுவதே ஆகும். ஆங்கிலேயர்கள் இன்று போய் விடலாம்; என்றாவது ஒரு நாள் போய்விடுவார்கள். ஆனால், ஒருவரையொருவர் கழுத்தறுத்துக்கொள்ளும் காட்டு மிராண்டிகளாக நாம் ஆகிவிடுவோமாயின், காட்டுமிராண்டிகளுக்கு இருக்கும் சுயராஜ்யமே நமக்கு இருக்கும்.

—‘ஹரிஜன்’ - 28—7—1946

# 7

# ஹரிஜனங்களின் உரிமைகள்

ஹரிஜன நண்பர்களிடமிருந்து எனக்குக் கடிதங்கள் வந்திருக்கின்றன; என்னைப் பார்க்கவும் சிலர் வந்தார்கள். இப்பொழுது ஆட்சி அதிகாரம் தேச மக்களின் கைக்கு வந்துவிட்டதால், ஒன்றுக்கு அதிகமான ஹரிஜன மந்திரிகள் இருக்கவேண்டும் என்று அவர்கள் நினைக்கிறார்கள். அவர்களுடைய ஜனத்தொகையைக் கொண்டு பார்த்தால் மூன்று பேராவது மந்திரிகளாக இருக்க வேண்டும்; மேலும், இந்த அடிப்படையில் ஒவ்வோர் இலாகாவிலும் தங்களுக்குப் பிரதிநிதித்துவம் வேண்டும் என்கிறார்கள். தங்களில் திறமை வாய்ந்தவர்கள் போதுமான அளவு இல்லை என்று கருதுவது தவறாகும் என்கிறார்கள். ஆற்றல் என்ற விதி, ஹரிஜனங்களல்லாதார் விஷயத்திலும் அனுசரிக்கப்படவில்லை என்றும் சொல்லுகிறார்கள். உறவினருக்குப் பதவிகள் அளிக்கப்பட்டிருப்பதையும் தாங்கள் எடுத்துக் காட்ட முடியும் என்கிறார்கள்.

இவர்கள் சொல்லுவதெல்லாம் சரியானதே என்று ஒப்புக்கொண்டுவிட நான் தயாராயில்லை. என் மனது வேறு வகையில் வேலை செய்கிறது. மனிதன், தன்னுடைய கடமையை நிறை

வேற்றுவதைப் பொறுத்தவரையில் அவனே எஜமான். அப்படி கடமையை அவன் சரிவர நிறைவேற்றுவதிலிருந்துதான் உண்மையில் அவனுடைய உரிமைகள் எழுகின்றன என்று நான் கருதுகிறேன். அத்தகைய உரிமைகள் மாத்திரமே ஏற்றவைகளாவதோடு, நீடித்து இருக்கக்கூடியவையுமாகும். ஆற்றலுள்ள ஹரிஜனல்லாத ஒவ்வொருவரும் தம்முடைய உரிமையை அனுசரிக்க முடிந்தால், சமூகத்தில் குழப்பம் உண்டாகிவிடும். கடமையை நிறைவேற்றுவது யாருமே செய்யக்கூடியது. சேவைக்கு இருக்கும் துறைகள் ஏராளமானவை. சிலர்தான் எஜமானர்களாக முடியும். எஜமானனுகிவிடப் பார்ப்பவன், தோல்வியையே அடைகிருன். என்ருலும், மக்கள் நான் கூறியிருக்கிறபடி நடப்பதில்லை என்பதை நான் அறிவேன். எனவே, அதிகாரத்தை அடைவதற்காகப் பொதுவாகப் போட்டி இருந்து வருகிறது. அநேகர், இதில் ஏமாற்றம் அடைந்து விடுகிருர்கள். நான் கொண்டிருக்கும் கருத்துக்களின்படியே நடைமுறையிலும் நடப்பதற்காகச் சென்ற ஐம்பது ஆண்டுகளாக நான் முயன்று வந்திருக்கிறேன். அதிகாரத்திற்காக நடக்கும் ஒழுங்கற்ற போராட்டங்களில் எனக்குச் சிரத்தையே இல்லை. ஹரிஜனங்களுக்கு நான் சொல்லும் ஒரே புத்திமதி இதுதான்: தங்கள் கடமை என்ன என்பது ஒன்றைப் பற்றி மாத்திரமே அவர்கள் நினைக்க வேண்டும். அப்படிச் செய்வார்களானல், இரவைத் தொடர்ந்து பகல் எப்படி வருகிறதோ, அதே போல உரிமைகள் தாமே நிச்சயமாக வந்து சேரும்.

—'ஹரிஜன்' – 6—10—1946

பகுதி பதினேழு

# ஊழியர்களுக்குப் புத்திமதி

## 1

## உண்மையான சேவகர்

ஹரிஜனங்களுக்குச் சேவை செய்வது, சேவைகள் எல்லா வற்றையும்விட அதிகக் கடினமானதாக இருக்கக்கூடும் என் பதை, தினந்தோறும் ஏற்பட்டு வரும் அனுபவம் காட்டுகிறது. தினமும் தாங்களே நேரில் சென்று சேவை செய்து வரும் சிறுமி யரும், வயது வந்த பெண்களும் பலர் இருக்கிறார்கள் என்பதை யும் அறிவேன். அதில் ஒரு பெண், தோட்டிகள் குடியிருக்கும் இடத்தில் தமக்கு ஏற்பட்ட அனுபவத்தைக் குறித்து விவர மாகக் கூறியிருக்கிறார். அந்த இடத்திற்கு முதல் தடவையாக அவர் சென்றபோது, தனக்கு வாந்தி வந்ததை அதிகச் சிரமப் பட்டே அடக்கிக் கொண்டாராம். இந்த இயக்கத்தில் பெண் கள் தங்களுக்குரிய பங்கை வகித்து வருவது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன்.

மிகவும் மோசமான ஆபாசங்களில் குடியிருந்து வரும் ஹரிஜனங்களுக்குச் சேவை செய்வது எப்படி? தங்களுக்குச் செய்யப்படும் சேவையை ஏற்றுக்கொள்ளும் எண்ணம் அவர் களுக்கு இல்லை. தாங்கள் குடியிருக்கும் இடங்களுக்குப் போகிற வர்களை அவர்கள் சபிக்கிறார்கள். சிலர், ஊழியர்களைத் தங்கள் தெருக்களில் கற்களால் அடித்தும் துரத்துகின்றனர். என்றா லும், நமக்கு நாமே சேவை செய்துகொள்ள வேண்டுமாயின், அவர்களுக்குச் சேவை செய்தே ஆகவேண்டும். நமக்கு நாமே உயர்நிலை அடைந்தாக வேண்டுமென்றால், இந்த நிலையிலிருந்து அவர்களை உயர்த்தியே ஆகவேண்டும். அவர்கள் கீழ் நிலையில் இருக்கும்படி அவர்களை நாம் அமுக்கிவைத்துவிட்டோம். இந்த உயர்ந்த சேவையை எல்லோருமே செய்துவிட முடியாது. ஒரு ஹரிஜன சேவகருக்கு என்னென்ன தகுதிகள் இருக்க வேண்டும் என்று நான் கருதுகிறேன் என்பதை இப்பொழுது கூறுகிறேன் :

அவர்களும் தமது சொந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்க ளாக இருந்தால் அவர்களிடம் என்ன அன்பு இருக்குமோ, அதே அன்பு ஹரிஜனங்களிடம் ஒரு ஹரிஜன ஊழியருக்கு இருக்க வேண்டும்.

உடலுக்கு ஏற்படும் துன்பங்களையோ, அவமதிப்புக்களையோ சகித்துக் கொள்ளுவதற்கு வேண்டிய பொறுமையும் தைரியமும் அவருக்கு இருக்க வேண்டும்.

சந்தேகத்திற்கோ, தூஷிக்கப்படுவதற்கோ இடமளிக்காத வகையில் நல்லொழுக்கமுள்ளவராக அவர் இருக்க வேண்டும். ஜீவனத்திற்கு, குறைந்த பட்சம் கிடைக்கக் கூடியதைக் கொண்டு வாழ்வதற்கும் அவர் தயாராக இருக்க வேண்டும்.

எனக்கு வரும் கடிதப்போக்குவரத்துக்களையெல்லாம் கவனிப்பதும், ஹரிஜனங்கள், சனுதனிகள், ஊழியர்கள் ஆகியவர்களுடன் பேசுவதும், கடுமையான தீயினூடே செல்வதைப் போன்று இருக்கிறது. வாய்விட்டுப் பேசக்கூடியவர்களாக இருக்கும் ஹரிஜனங்கள், இயற்கையாகவே சந்தேகப்படுகிறவர்களாக இருக்கிருர்கள். அதைச் செய்ய வேண்டும், இதைச் செய்ய வேண்டும் என்று வற்புறுத்திக் கேட்பவர்களாகவும் இருக்கிருர்கள். அவர்கள், பொறுமையில்லாதவர்களாகவும் இருக்கின்றனர். சனுதனிகளோ, ஹிந்து மதம் என்று தாங்கள் எதை எண்ணியிருக்கிருர்களோ அதற்கு ஆபத்து வந்துவிட்டது என்கிருர்கள். அவர்களிடம் நிறையப் பணம் இருக்கிறது; அதைத் தாராளமாக உபயோகித்தும் வருகின்றனர். புதுப் புதுப் பத்திரிகைகள் தினமும் புதிதாக வந்துகொண்டிருக்கின்றன. நாம் கெட்ட நோக்கம் கொண்டிருப்பதாகக் கூறுகிருர்கள். சீர்திருத்தக்காரர்களைக் குறித்துப் படுமோசமான விஷயங்களையெல்லாம் கூறி, இயக்கம் முழுவதற்குமே தவருன பொருளைக் கற்பிக்கின்றனர். ஊழியர்கள் எல்லோரும் முழு பக்குவத்தையும் அடைந்துவிட்டவர்கள் அல்ல. ஓர் ஊழியர், முற்றிலும் நம்பக்கூடியவராகவும், எண்ணத்திலும் உடலிலும் சுத்தமானவராகவும் இல்லாது போனுல், அவர் தம்மைச் சுற்றிலுமுள்ள நிலைமையை எப்படி விஷமாக்கிக்கொண்டு விடுவார் என்பதை நான் பார்த்திருக்கிறேன்.

ஹரிஜனங்கள், சனுதனிகள் ஆகிய இருவருக்கும் ஓர் ஊழியர் திருப்திகரமாக நடக்க வேண்டுமானுல், மிக உயர்ந்த ஒழுக்கத்தையும், ஆழ்ந்த அடக்கத்தையும், மிகுந்த தரும சிந்தனையையும் காட்டிக் கொள்ளுவதனுலேயே அவரால் அதைச் செய்ய முடியும். அதாவது அவர், சமயத்தை ஒட்டி வாழ்பவராக இருக்க வேண்டும். இது, சமயத்தைப் புனிதப்படுத்துவதற்காகத் தோன்றியுள்ள இயக்கம். வீம்புப் பேச்சினுலோ, உருட்டல் மிரட்டல்களினுலோ, அல்லது நல்ல ஒழுக்க நெறி இல்லாதவர்களினுலோ, எந்தச் சமயத்தையும், எக்காலத்திலும் தூய்மைப்படுத்திவிட முடிந்ததில்லை.

ஊழியர்கள், எல்லாவற்றையும் மிகவும் உன்னிப்பாகக் கவனித்துக் கொள்ளுபவராக இருக்க வேண்டும். சனுதனிகள், குண்டர்களைக்கொண்டு தாக்கவும்முற்பட்டுவிடுகிருர்கள் என்றும்,

கூட்டங்களைக் கலைப்பதற்கும், பலாத்காரத்தில் இறங்குவதற்கும் அவர்கள் தயங்குவதில்லை என்றும் சொல்லப்படுகிறது. இதில் ஆச்சரியம் எதுவும் இல்லை. தீமைக்கும், அதன் நலவுரிமைகள் உண்டு. அந்தச் சுயநலங்கள், சந்தேகத்திற்கு இடமின்றி ஆபத்தில் இருந்து வருகின்றன. தாம் வாழ வேண்டும் என்பதற்காக அவை தீவிரமாகப் போராடியே தீரும். ஆகையால், கலவரம் ஏற்பட்டுவிடும் என்ற அபாயம் இருக்குமிடங்களில், பொதுக்கூட்டங்கள் போன்றவைகளை ஊழியர்கள் கைவிட நேர்ந்தாலும், கலவரம் ஏற்பட்டுவிடாதபடி அவர்கள் தவிர்க்க வேண்டும். அத்தகைய நிலைமை இருக்கும் இடங்களில், அவர்கள் விமோசனச் செய்தியை வீடு வீடாகச் சென்று பரப்பவேண்டும். சாஸ்திரங்களை மறுக்கும், அல்லது அவற்றிற்கு வியாக்கியானம் செய்துகொண்டிருக்கும் வீண் வேலைகளில் ஊழியர்கள் ஈடுபடக் கூடாது. தன்னைத் தானே பாதுகாத்துக்கொள்ளுவதில் சத்தியத்திற்குள்ள இணையில்லாத ஆற்றலையே அவர்கள் நம்பியிருக்க வேண்டும். சத்தியமே உயிர். அது, ஏதாவது ஒரு மனித உடலில் புகுந்துவிட்ட மாத்திரத்தில், அது தானே வியாபித்துக் கொண்டு விடுகிறது. மௌனமாக நடந்துகொள்ளுவதுதான் எப்பொழுதுமே மிகவும் பலன் தரும் பேச்சாகும். ஆகையால், ஊழியர்களுக்கு, தங்களிடமும், தங்களுடைய லட்சியத்திலும் ஜீவ நம்பிக்கை இருந்து வர வேண்டும். ஆனால், தங்களைப் பொறுத்த மட்டில் தாங்கள் ஒன்றுமே இல்லை என்பதையும் அவர்கள் அறிவார்கள். ஆகையால், தங்களிடம் நம்பிக்கை வைக்க வேண்டும் என்பது, கடவுளிடம் நம்பிக்கை வைக்க வேண்டும் என்று பொருள்படும். யார் தங்களுடைய அகந்தைகளையெல்லாம், தானே பெரியவன் என்பதையெல்லாம் விட்டொழித்து விடுகிறார்களோ, அவர்களுக்குக் கடவுளிடமிருந்து மிகச் சிறந்த உதவி கிடைக்கிறது.

இத்தகைய உண்மையான சேவகர்கள், ஆயிரக்கணக்கில் முன்வந்து மனப்பூர்வமாகத் தியாகம் செய்வதன் மூலமே, தீண்டாமை என்ற தீமையைப் போக்கி ஹிந்து சமயத்தைப் புனிதமாக்க முடியும்.

—'ஹரிஜன்' – 29—4—1933

# 2

# ஒரே வழி சத்தியமே

ஹரிஜன சேவகர் ஒருவரிடம் என்னென்ன தகுதிகள் இருக்க வேண்டியது இன்றியமையாதது என்பதைக் குறித்து 'ஹரிஜனி'ன் சென்ற வார இதழில் நான் விவரமாக எழுதியிருக்கிறேன்.* இந்த இயக்கம் முக்கியாம்சத்தில் ஒரு சமய இயக்கமே என்ருல், ஹிந்து மதத்தைத் தூய்மையாக்கிப் பாதுகாப்பதுதான் அதன் நோக்கம் என்ருல், சத்தியம் ஒன்றைக் கொண்டுதான் அதை நிறைவேற்ற முடியும். முற்றிலும் சத்தியத்தினுல், சத்தியம் ஒன்றினுல்தான் அதுமுடியும். சமயத்தின் அஸ்திவாரமே சத்தியம்தான். சத்தியமே கடவுள் என்ருல், அசத்தியத்திற்குச் சமயத்தில் இடமே இல்லை. ஒவ்வொரு ஹரிஜன சேவகரும், அடிப்படையான இக்கொள்கையைத் தமது உள்ளத்தில் நன்ருகப் பதிய வைத்துக்கொள்ளுவார்களாக.

சனுதனிகளின் பிரசுரங்கள், பிரவாகம் போல் என்னிடம் வந்து குவிந்து கொண்டிருக்கின்றன. தினமும் புது வாரப் பத்திரிகைகளும், துண்டுப் பிரசுரங்களும் வந்த வண்ணம் இருக்கின்றன. சனுதனிகள் தங்கள் பண மூட்டைகளையெல்லாம் அவிழ்த்து விட்டுவிட்டார்கள். ஏற்பட்டிருக்கும் விழிப்பை நான் விரும்புகிறேன். அவர்களுடைய விழிப்பு, நல்ல வழியில் ஏற்பட்டதாக இருக்க வேண்டும் என்பதே என் ஆசை. நான் பார்க்கும் அவர்களுடைய எழுத்துக்களில், நன்ருக விளங்கக்கூடிய பொய்கள் இருக்கின்றன. எப்படியாவது தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தை நிறுத்திவிட வேண்டும் என்பது ஒன்றே அவர்களுடைய நோக்கம். இப்படிப்பட்ட ஒரு பிரசாரத்திற்கு எப்படி பதில் சொல்லிக் கொண்டிருக்க முடியும்?

பொய்யைக்கொண்டு பதில் சொல்லிக்கொண்டிருக்க நிச்சயமாக முடியாது. சத்தியம் ஒன்றுதான் ஒரே பதிலாக முடியும். சீர்திருத்தக்காரர்கள் மீது சனுதனிகள் புகார் சொல்லுகிருர்கள். அவர்கள் பொய் சொல்லுகிருர்கள் என்றும், காலித்தனங்களில் இறங்குகிருர்கள்என்றும் கூறுகிருர்கள். இந்தப் புகார்களை மெய்ப்பிப்பதற்கான சாட்சியம் எதுவும் கொடுக்கப்படவில்லை. புகார் சொல்லி எனக்குக் கடிதம் எழுதியிருப்பவர்களுக்கு, சாட்சியங்களை அறிவிக்கும்படி எழுதிக் கேட்டிருக்கிறேன். ஒரே ஒரு விஷயத்தில்தான் சாட்சியத்தையும் அளிக்க முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. அந்தப் புகாரைக் குறித்து விசாரிக்குமாறு தக்கவர்களுக்கு அதை அனுப்பியிருக்கிறேன். நிரூபிப்பதற்கு வேண்டிய சாட்சியத்தையும் எனக்கு அனுப்ப மறுத்திருப்பதனுல், அதுவே,

---

* காந்திஜி குறிப்பிடும் இக்கட்டுரை, இந்தப் பகுதியில் முதலாவதாகப் பிரசுரமாகியிருக்கும் முந்திய கட்டுரையே ஆகும்.

சீர்திருத்தக்காரர்களெல்லாம் தவறே செய்யாதவர்கள் என்று நிரூபிப்பதற்குப் போதுமானது என்று சொல்ல நான் விரும்ப வில்லை. சத்தியத்திற்கும் அகிம்சைக்கும் மாருன காரியம் எதையும் அவர்கள் செய்துவிடக்கூடாது என்று, சீர்திருத்தக் காரர்களை எச்சரிக்கை செய்வதற்காகவே இதை எழுதுகிறேன்.

சனுதனிக்கும் சீர்திருத்தக்காரருக்கு மிடையே எந்தவித மான பேதத்தையும் காணக்கூடாது என்பதுதான் என் முயற்சி. உண்மையோடு நடந்துகொள்ள வேண்டும் என்று இருவரையும் கேட்டுக்கொள்ளுகிறேன். ஆனல், தங்களைச் சேர்ந்தவனே நானும் என்று கருத சனுதனிகள் மறுப்பதாலும், என்னைத் தங்களுக்கு விரோதி என்று அவர்கள் நினைப்பதாலும், என்னுடைய வேண்டுகோளுக்கு அவர்களிடம் மதிப்பு இருக்காது என்றே அஞ்சுகிறேன். சீர்திருத்தக்காரர்கள், என் வேண்டுகோளைக் கேட்டுக்கொள்ளுவார்களானல், அதுவே எனக்குத் திருப்தியை அளித்துவிடும். ஏனெனில், எவ்வாறு இருளை வெளிச்சம் வென்று விடுகிறதோ, அதேபோலச் சனுதனிகளின் பொய்களைச் சீர்திருத் தக்காரர்களின் மெய் வென்றுவிடும். ஆகையால், ஹரிஜன சேவ கர், தமது காரியம் ஒவ்வொன்றையும், சத்தியத்தையே வழி காட் டும் கொள்கையாகக்கொண்டு செய்து வருவாராயின், அவர் முடி வில் சனுதனியின் மனத்தையும் நிச்சயமாக மாற்றிவிட முடியும்.

ஆனல், மிகைப்படுத்திக் கூறுவதும், பொய்யின் ரகத்தைச் சேர்ந்ததே என்பதை ஊழியர்கள் அறியட்டும். ஹரிஜனங் களுக்குக் கிணறுகளையும் கோயில்களையும் திறந்துவிடுவதைப் பற்றிய தகவல்கள் எனக்கு வந்துகொண்டிருக்கின்றன. ஆனல், அவற்றில் கூறப்பட்டிருக்கும் எல்லாக் கிணறுகளும், கோயில் களும் ஹரிஜனங்களுக்குத் திறந்துவிடப்பட்டு விடவில்லை என்றும் போதுமான ஆதாரம் இல்லாமலேயே எனக்குத் தகவல்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன என்றும் சில சமயங் களில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. துலியா தீண்டாமை எதிர்ப் புக் கமிட்டி வெளியிட்டிருக்கும் ஒரு சிறு துண்டுப் பிரசுரத்தில், இந்தியா முழுவதிலும் ஹரிஜனங்களுக்குத் திறந்துவிடப்பட்டிருக் கும் கோயில்கள், கிணறுகளின் ஜாபிதா கொடுக்கப்பட்டிருக் கிறது. பரவசமடையும்படி செய்யும் ஜாபிதாவே அது. ஆனல், அது அவ்வளவும் சரியானதே என்று ஒப்புக்கொண்டுவிட நான் தயாராயில்லை. இந்த ஜாபிதாவைத் தயாரித்ததில் அக்கமிட்டி அஜாக்கிரதையாக இருந்துவிட்டது என்பது அதற்குக் காரணம் அல்ல. ஆனல், இந்தியா முழுவதிலிருந்தும் கிடைத்த தகவல் கள் சரியானவையே என்பதைப் பரிசீலனை செய்யக் கமிட் டிக்குச் சந்தர்ப்பமில்லாததுதான் அதற்குக் காரணம். அநேக மாக இத்தகவல்களைப் பத்திரிகைகளுக்குத் தாங்கள் கொடுப் பவர்களாக இருப்பதற்குப் பதிலாக ஊழியர்கள், பத்திரிகை களில் வரும் செய்திகளையே ஆதாரமாகக்கொண்டு விடுகின்றனர். தீண்டாமை ஒழிப்புக் கமிட்டிகள் அனுப்பும் விவரங்கள், தினப்

பத்திரிகைகளில் வெளியாகும் சாதகமான செய்திகளை ஆதாரமாகக் கொண்டவை என்றால், அந்த விவரங்களை முடிவான ஆதாரங்கள் என்று ஏற்றுக்கொண்டு விடுவதற்கில்லை. அதோடு, எங்கே மீண்டும் உண்ணாவிரதம் இருந்துவிடுவேனோ என்ற பயத்தில், திறந்துவிடப்படும் கோயில்கள், கிணறுகளின் ஜாபிதா பெரிதாக இருக்கும்படி பார்க்க வேண்டும் என்ற ஆசையும் பலமாக இருந்து வருகிறது. இது எனக்கு மனச் சோர்வை உண்டாக்கும் எண்ணமாக இருப்பதோடு, இப்பெரிய இயக்கத்தைக் குறித்து மோசமான அபிப்பிராயம் ஏற்படும்படியும் செய்துவிடுகிறது. மக்களை எந்த ரூபத்திலும், வகையிலும் நிர்ப்பந்தப் படுத்தும் நோக்கத்தைக் கொண்டது அன்று என் உண்ணாவிரதம். ஹிந்துக்கள் எண்ணிப் பார்க்கும்படி செய்வதும், காரியத்தில் இறங்குமாறு தூண்டுவதுமே அதன் நோக்கம். மிக உறுதியானதால் ஆனதே சத்தியம். உயிரோ, உயிர்களோ எவ்வளவுதான் உயர்வானதாக இருந்தாலும், அவற்றையும்விட உயர்வானதாகவே சத்தியத்தைக் கொள்ள வேண்டும். லட்சக்கணக்கான உயிர்களைத் தியாகஞ் செய்ய நேர்ந்தாலும், சத்தியம் இருந்தாக வேண்டும். தீண்டாமை, ஹிந்து சமயத்திற்குள்ளடங்கிய ஒரு பகுதி என்று அநேகர் நம்புகிறார்கள். இத்தீண்டாமையை ஒழிப்பதற்காக நடந்துவரும் ஒரு பெரிய, சமய இயக்கத்திற்கு, கலப்பற்ற சத்தியத்தையும், லட்சியத்தில் கொள்ளும் அசைக்க முடியாத நம்பிக்கையையும் தவிர வேறு எதுவும் பயனில்லை. தீண்டாமை, ஹிந்து சமயத்திற்கு மிகப் பெரும் களங்கம், அது மிகப் பெரிய பொய் என்று சீர்திருத்தக்காரர்கள் கருதுகிறார்கள். அது அப்படியாயின், சத்தியத்தினாலும், சாந்தமாக நடந்து கொள்ளுவதனாலும், மாத்திரமே அதைத் தோற்கடிக்க முடியும்.

—'ஹரிஜன்' – 18—3—1933

## 3

## ஒரு விஷயம் தேவை

சரியான வகையில் ஹரிஜன சேவை செய்வதற்கும், பொதுவாக ஏழைகள், துணையற்றவர்கள், திக்கற்றவர்கள் ஆகியவர்களுக்குச் செய்யும் எல்லாச் சேவைகளுக்கும் தேவையான ஒரு விஷயம், அப்படி சேவை செய்பவரின் ஒழுக்கத்தில் தூய்மை இருக்க வேண்டியதேயாகும். இது இல்லையானால், மிக உயர்ந்த அறிவும், ஆற்றலும், நிர்வாகத் திறமையும் இருந்தும் பிரயோசனமில்லை. இதெல்லாம் இடையூறுகளாகவும் ஆகிவிடக்கூடும். ஆனால், தூய்மையான ஒழுக்கமும், அத்தகைய சேவையில் பிரியமும் சேர்ந்து இருந்துவிடுமானால், தேவையான அறிவும், நிர்வாகத் திறமையும்

நிச்சயமாக உண்டாகிவிடும். ஹரிஜன நலனுக்காகச் சேவை செய்து வருபவர்களில் இரு முக்கியமான ஊழியர்கள், மோசமான, ஒழுக்கக் கேடான காரியங்களைச் செய்துவிட்டார்கள் என்பது கண்டுபிடிக்கப் பட்டதனுலேயே இந்த எண்ணம் எனக்குத் தோன்றுகிறது. அவ்விருவரையும் அறிந்தவர்கள் எல்லோருமே, அவர்கள் மீது சந்தேகிக்க இடமில்லை என்றும், நல்ல ஒழுக்கமுள்ளவர்கள் என்றும் கருதி வந்தார்கள். ஆனால், அவர்கள் இருவரும், அவர்கள் வகித்துவரும் ஸ்தானத்திற்கு ஏற்காத வகையில் ஒழுங்கீனமாக நடந்துவிட்டனர். அவர்களுடைய உள்ளத்தின் ஓர் இருண்ட மூலையில், காமவெறி என்ற விஷ நாகம் ஒளிந்திருந்து வந்திருக்கிறது. அந்தக் காமவெறிக்கு அவர்கள் பலியாகிவிட்டார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், நாமோ சாதாரண மனிதர்கள்; இன்னொருவர் மனத்தில் என்ன இருக்கிறது என்பதை நாம் கண்டுகொண்டுவிட முடியாது. எனினும், மற்றவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்பதை, நாம் பார்க்கும், கையாலும் அவர்களுடைய செய்கைகளைக் கொண்டு அறிந்து கொள்ளலாம்; அறிந்துகொள்ள வேண்டும். இந்த இருவர் விஷயத்திலும் இவர்கள், ஹரிஜன சேவா சங்கத்தில் தாங்கள் ஊழியர்களாக இருக்க முடியாத நிலைமையை உண்டாக்கிக்கொண்டு விட்டார்கள். இது, அவர்களுக்குத் தண்டனையாகாது. இவர்களுடைய நன்மைக்கே யன்றி, ஹரிஜன சேவா சங்கத்தையும், அதன் லட்சியத்தையும் பாதுகாத்துக் கொள்ளுவதற்கும் இவர்களை வெளியேற்றிவிட வேண்டியது அவசியமாகும். இவர்கள் மீது சங்கம் எந்த நடவடிக்கையும் எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை என்றுதான் கூறுவேன். இந்த ஊழியர்கள், சங்கத்திலிருந்தும், எல்லாப் பொதுக் காரியங்களிலிருந்தும் தாமாகவே விலகிக்கொண்டு விடுவார்கள் என்று நம்புகிறேன். சேவை செய்வதன் கடமை யாருக்கும் மறுக்கப்படவில்லை. மோசமான வகையில் ஒழுக்கம் தவறி நடந்துவிட்ட ஒருவர், தான் செய்துவிட்ட தவறை உணர்ந்து திருந்தியிருப்பாரானல், அவருக்குள்ள வேலை எதுவானலும் அதை ஏற்றுக்கொண்டு அவர் சேவை செய்து வருவார். ஆனல், தானே ஏற்படும் அத்தகைய சேவையை அநேகமாக ரகசியமாகவே செய்துகொண்டு போவதற்கும், ஒரு ஸ்தாபனத்தில் இருந்து கொண்டு அதன் வசதிகளையெல்லாம் அனுபவிப்பதற்கும் வித்தியாசம் உண்டு. பொது வாழ்க்கையில் அவ்விதம் திரும்பவும் அவர் பிரவேசிப்பதற்கு, தம்மீது பொதுஜன நம்பிக்கை திரும்பவும் ஏற்படும்படி அவர் செய்வது அத்தியாவசியம்.

ஒரு பொதுஜன ஊழியர், ஒரு நிர்வாக யந்திரத்தின் ஓர் அம்சமாக இருந்து திறமையாக வேலை செய்து கொண்டுவரும் வரையில், அவருடைய ஒழுக்கத்தைக் குறித்து கவனிக்காமலேயே இருந்துவிடலாம் என்பது, இக் காலப் பொது வாழ்க்கையில் இருந்துவரும் மனப்போக்கு. ஒருவருடைய ஒழுக்கம், அவருடைய சொந்த விஷயம் என்றும் சொல்லப்படுகிறது. அடிக்கடி

அநேகர் இதே அபிப்பிராயத்தையே கொண்டுவிடுகின்றனர் என்பதை அறிவேன். என்ருலும், அதை ஏற்றுக் கொள்ளவோ, அதை அனுசரித்து நடக்கவோ என்னுல் முடிந்ததே இல்லை. தனிப்பட்டவர்களின் ஒழுக்கத்தைக் குறித்து கவனிக்கவே வேண்டியதில்லை என்று எண்ணப்பட்டிருந்த ஸ்தாபனங்கள், மோசமான நிலைமையை அடைந்துவிட்டதை நான் அறிந்திருக் கிறேன். என்ருலும், வாயில்லாப் பூச்சிகளான கோடிக்கணக் கான மக்களுக்குத் தங்களைத் தருமகர்த்தாக்களாக்கிக் கொண் டிருக்கும் ஹரிஜன சேவா சங்கம் போன்ற ஸ்தாபனங்களுக்கு மாத்திரமே, உடனடியாக என்னுடைய இக்கருத்தை அனுசரிப்ப தென்று இருக்கிறேன் என்பதை வாசகர்கள் கவனித்திருப் பார்கள். இத்தகைய சேவைக்குக் களங்கமற்ற ஒழுக்கம் இருந் தாக வேண்டியது இன்றியமையாத தேவை என்பதில் எனக்கு எந்தவிதச் சந்தேகமும் இல்லை. ஹரிஜனங்களின் நலனுக்கா கவோ கதர், கிராமக் கைத்தொழில் ஆகியவைகளுக்கா கவோ வேலை செய்யும் ஊழியர்கள், அறிவில் குழந்தைகளைப் போன்றே இருப்பவர்களான, கொஞ்சமும் களங்கமற்ற, ஏதும் அறியாத, ஒரு பாவமும் செய்யாத ஆண்களுடனும் பெண்களு டனும் நெருங்கிப் பழக வேண்டியிருக்கிறது. இந்த ஊழியர் களிடம் ஒழுக்கம் இல்லாது போகுமாகுல், முடிவில் இவர்கள் தோல்வியையே அடைவார்கள். அதோடு, இவர்கள் எந்த லட்சி யத்தை எடுத்துக் கூறிவந்தார்களோ அந்த லட்சியத்தையும், இவர்களை அறிந்த சுற்றுப்புறங்களில் கேவலப்படுத்திவிட்டவர்க ளாவார்கள். அத்தகைய சம்பவங்களைக் குறித்து எனக்கு இருக்கும் அனுபவத்தைக் கொண்டே இதை எழுதுகிறேன். ஆனல், இத்தகைய சேவைகளில் ஈடுபட்டிருப்போரின் எண்ணிக் கையைப் பார்க்கும் போது, இத்தகைய சம்பவங்கள், சந்தோ ஷிக்கத் தக்க வகையில் மிகச் சொற்பமே. எனினும், அடிக்கடி நிகழ்ந்துவிடுவதால், இத்தகைய சேவைகளில் ஈடுபட்டிருக்கும் ஸ்தாபனங்களையும் ஊழியர்களையும் பொறுத்த வரையில், பகிரங்க மாக எச்சரிக்கை செய்ய வேண்டியதும், உஷார்ப்படுத்த வேண்டி யதும் அவசியமாகிறது. ஆனல், ஸ்தாபனங்களும், ஊழியர் களும் அதிக உஷாராகவோ, தங்களையே அதிகமாக வேலை வாங்கி விடுபவர்களாகவோ எப்பொழுதும் இருந்துவிட முடியாது.

—'ஹரிஜன்' - 7—11—1936

# 4

# ஹரிஜன சேவகர்களின் தகுதிகள்

கேள்வி : ஒரு ஹரிஜன சேவகருக்கு, அவருடைய வேலை சரியான பலனை அளிப்பதற்கு இருக்க வேண்டிய தகுதிகள் யாவை?

பதில்: இத்தகைய கேள்வி, அதிகக் காலங் கடந்து கேட்கப் படும் கேள்வியாகும். என்ருலும், இதற்குத் திரும்பவும் பதில் சொல்ல முயற்சி செய்கிறேன். தீண்டாமை ஒழிப்பு வேலை,முக்கியமாக நாமே நம்மைத் தூய்மைப்படுத்திக்கொள் ளுவதையும், நீதியையும், காருண்யத்தையுமே கொண்டது. இதில் கொண்டுபோய் ராஜீயம் புகுத்தப்படுவது துரதி ருஷ்டமானதாகும். நான் ராஜீயத்தில் இறங்குவதற்கு வெகு காலத்திற்கு முன்பே, தீண்டாமை ஒழிப்பும், ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையும் நாட்டு மக்களின் நலனுக்கு அத்தியாவசிய மானவை என்பதை உணர்ந்தேன். ஹிந்து சமயம் துண்டு துண்டாக்கப்பட்டு விடுவதைத் தடுப்பதற் காகவே, என் உயிரைக் கொடுக்கவும் முற்பட்டு நான் அத னுடன் போராட வேண்டியதாயிற்று. இப்பிரச்னைக்கு ராஜீய மெருகு வந்துவிட்டது. ஆனல், சாராம்சத்தில் இது முற்றி லும் சமய, ஒழுக்கப் பிரச்னையே. ஒவ்வொரு சேவகருக்கும், ஹிந்து சமயத்தைப் புனிதப்படுத்த வேண்டும் என்ற ஆர்வம் உண்டாக வேண்டும். இதைச் செய்ய முயற்சிப் பதில் தமது உயிரைத் தியாகம் செய்யவும் அவர் தயாராக இருக்க வேண்டும். அத்தகைய ஓர் ஊழியர், ஹிந்து சம யத்திலிருக்கும் களங்கத்தைப் போக்குவதற்காக, தமது குடும்ப சம்பந்தம், சமூக சௌகரியங்கள், தமது உயிர் ஆகிய தமக்குள்ள எல்லாவற்றையும் தியாகம் செய்துவிடத் தயாராக இருப்பார். ஒருவர் செய்யும் பிரார்த்தனை, யக்ஞங்கள் போன்ற அன்ருட வாழ்க்கையின் அனுஷ்டானங் களைப் போன்றதாகவே இந்த வேலை இருக்க வேண்டுமே யன்றி, ஏதோ ஊழியத்திற்கும் சன்மானத்திற்கும் செய்யும் வேலையாக இருக்கக்கூடாது. ஊழியருக்கு இதில் ஆர்வம் மிகுந்துவிடுமானல், அவர் முன்னல் வழி தெளிவானதாக இருக்கும். இவ்விதமான ஓர் ஊழியர், ஹரிஜனங்கள் பட்டினி கிடக்க அனுமதிப்பதைவிடத் தாமே பட்டினி கிடப்பார்; ஹரிஜனங்களுக்கு மறுக்கப்படும் எந்தச் சௌகரியத்தையும் தாம் அனுபவிக்க மறுத்துவிடுவார்; ஹரிஜனங்களுடன் தாம் ஒன்ருகிவிடுவது அதிகரிப்பதையும் நாளுக்கு நாள் அவர் உணர்வார். இந்த வேலைகளையெல்லாம் ராஜீயப் பலனைக் கருதாமல் செய்யவேண்டும். தீண்டாமையை ஒழித்துவிட்டதனல் சுயராஜ்யம் வரவில்லை என்றே வைத் துக்கொண்டாலும், ஹிந்து சமயம் புனிதமானதாகவும், உயிரோடும் இருக்கும்படி செய்வதற்காக இவ்வேலையைச் செய்தே ஆகவேண்டும். இந்த வேலைக்குச் சில காங்கிரஸ் காரர்கள் ராஜீய அர்த்தத்தையே கொடுக்கின்றனர் என் பதை நான் அறிவேன். ஆனல், அது தவறு. அந்நிய அரசாங்கத்தினிடமிருந்து அவர்கள் நீதியை நாடுவதாயிருந் தால், தமது உற்ருர் உறவினர்களுக்கு அவர்கள் முதலில் நீதியைச் செய்தாக வேண்டும். நியாயத்தை அடைய

விரும்புகிறவர், தாமும் நியாயத்தைச் செய்ய வேண்டும். இதுதான் நியாயத்தின் அடிப்படையான தருமம்.

முதலில் ராஜீய சுதந்திரத்தைப் பெற்றுவிட்டால், சமூக சீர்திருத்தம் பிறகு தானே ஏற்பட்டுவிடும் என்று சொல்லுகிறவர்களும் இருக்கிறுர்கள் என்பதை அறிவேன். இது தவருன கருத்து. அகிம்சையின் மூலம் சுயராஜ்யத்தை அடைந்துவிடுபவருக்கு, நிச்சயமாக இது பொருந்தாத கருத்து. ஆனல், வைதிகர்களுக்கும், ராஜீயப் புத்திப் போக்கை மாத்திரமே கொண்டிருப்பவர்களுக்கும், ஹரிஜன ஊழியர் விஷயத்தை எடுத்துக் கூறவேண்டும். மற்றவர்கள் செய்வது சரியா, இல்லையா என்பதைச் சேவகர் கவனிக்க வேண்டாம். ஆனல், தன்னலமற்ற, தன்னையே அர்ப்பணித்துக்கொள்ளும் சேவையின் மூலம் அவர்களுக்கு ஓர் உதாரணமாக ஊழியர் விளங்கட்டும்.

—'ஹரிஜன்' – 1—2—1942

# 5

# நடந்தே யாத்திரை

என்னுடைய ஹரிஜன யாத்திரையில் மீதமிருப்பதை, சாத்தியமானவரையில் கால்நடையின் மூலம் நடந்தே முடித்துவிட வேண்டும் என்ற கருத்து நாளுக்கு நாள் எனக்கு வளர்ந்து கொண்டு வருகிறது. தமிழ்நாடு சுற்றுப்பிரயாண ஏற்பாடுகள் தக்கர் பாபாவினல் முடிவு செய்யப்பட்டு வந்தபோது, தமிழ் நாட்டுச் சுற்றுப்பிரயாணத்திற்கு என்று நிர்ணயித்திருந்த நாட்களில் அந்த யாத்திரையை முடித்துவிட முடியாத வகையில் புதிய இடங்களையும் அத்திட்டத்தில் சேர்த்துக்கொள்ளும்படி தக்கர் பாபாவும் டாக்டர் ராஜனும் வற்புறுத்தப்பட்டார்கள். அப்பொழுது தக்கர் பாபாவிடம் ஒரு யோசனை கூறினேன். எனக்கு இருக்கும் நம்பிக்கையே அவருக்கும் இருக்குமானல், அப்பொழுது தயாரிக்கப்பட்டு வந்த விரிவான பிரயாணத்திட்டத்தை ரத்துச் செய்துவிட்டுக் கிராமம் கிராமமாக நடந்தே என் சுற்றுப் பிரயாணத்தை முடித்துவிடுகிறேன் என்றேன். இந்தக் கருத்து எனக்கு அதற்குப் பிறகும் உண்டாயிற்று. முக்கியமாக தேவகார் சம்பவத்திற்குப் பிறகு* அந்த எண்ணம் என்னை வலுவாகப் பிடித்துக்கொண்டது. பலாத்கார முறைகளை அனுசரிப்பவர்களின் தொகையை விரல்விட்டு எண்ணிவிடலாம் என்பதையும்

---

* காந்திஜி இங்கே குறிப்பிடும் தேவகார் சம்பவத்தைப் பற்றிய விவரம், 'பலாத்காரம் சனுதன தருமம் அல்ல' என்ற தலைப்பில் இத்தொகுப்பில் 196–ஆம் பக்கத்தில் வெளியாகியிருக்கும் காந்திஜியின் பிரசங்கத்தில் அடங்கியிருக்கிறது. அதே தேவகார் சம்பவம் பற்றிய காந்திஜியின் கட்டுரை, இத் தொகுப்பின் 'பின் சேர்க்கைப் பகுதி'யில் 'மூன்று வருந்தத்தக்க சம்பவங்கள்' என்ற தலைப்பில் கொடுக்கப்பட்டிருக்கிறது.

அறிவேன். ஆனல், மிகச் சிலரும்கூட பொதுக் கூட்டங்களில் குழப்பத்தை உண்டாக்கிவிட முடியும். இந்த இயக்கம், எண்ணத்திலும் செயலாற்றலிலும் முக்கியமாக மத சம்பந்தமானதே என்பதை, என்னுல் இயன்ற எல்லா வழிகளிலும், பிரத்தியட்சமாக அவர்களுக்குக் காட்ட வேண்டும் என்றுதான் நான் ஆசைப்படுவேன். நோக்கம் மத சம்பந்தமானதே என்ருல், அடைய விரும்பும் முடிவும் அதுவேதான். இந்த இயக்கம், அது பரவுவதற்கு வேகமான ரெயில்களை நம்பியிருக்கவில்லை என்பதைக் காட்டவும் வேண்டும் என்பது என் ஆவல். நான் ஆகாய விமானத்தை உபயோகித்துக் கொள்ளலாம் என்று கூறப்பட்ட ஒரு யோசனை உடனேயே நிராகரிக்கப்பட்டுவிட்டது. அதோடு, நிதி வசூல் செய்வதற்காகவே இப்பிரயாணம் என்றும் யாரும் எண்ணிவிட வேண்டாம். நான் நடந்து சென்ருலுங்கூட, இந்த லட்சியம் நிறைவேறுவதற்குத் தேவைப்படும் ஆண்களும் பெண்களும், பணமும் கிடைத்துவிடும் என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். நான் கூறும் செய்தி என் உள்ளத்திலிருந்து வருவதாக இருந்தால் அது, ரெயிலையும் மோட்டாரையும்விட வேகமாக நடந்தே யாத்திரை செய்துவிடவும் கூடும்.

மக்கள் போடும் கூச்சல்கள், என்னைப் பார்த்ததும் அவர்களுக்கு ஏற்படும் ஆனந்தத்திளுலும் அன்பிளுலும் எழுவதாக இருந்தாலும், கூச்சல்களைக் கேட்டுக் கேட்டு நான் களைத்துப் போய்விட்டேன். அவற்றைத் தாங்க முடியாத அளவுக்கு என் நரம்புகள் பலவீனமடைந்துவிட்டதால் சகிக்க முடியவில்லை. அவசர அவசரமாகப் பிரயாணம் செய்வதென்பது எனது அன்ருட கதியாக ஆகிவிட்டதும் எனக்கு வெறுத்துப் போய்விட்டது. ஏராளமான ஜனக்கூட்டம் என்னை நோக்கி நெருக்கியடித்துக் கொண்டு வருவதும், இந்தக் கூட்டங்களிடமிருந்து என்னைப் பாதுகாப்பதற்காகத் தொண்டர்கள் படாத பாடுபட்டு முயற்சி செய்வதும், பலவீனமான எங்களிளுலும், இந்த ஜன நெருக்கத்திளுலும் எந்தப் பயனுமில்லை என்பதைக் காண்கிறேன். என் பாதங்களைத் தொட வேண்டும் என்ற மனேபாவம், என் உடலுக்கு ஆபத்தை விளைவிக்கும் வழியாகி விடுகிறது. பாதங்களைத் தொடுகிறவர்களின் நகங்கள் பட்டுக் காலில் கீறல்கள் ஏற்படாத நாளே இல்லை. கூச்சல் போடுவதையும், என்னைக் காண நெருக்கியடித்துக் கொண்டு வருவதையும், என் பாதங்களைத் தொடுவதையும் பலமாகக் கண்டித்து என்ன கூறியும் நிரந்தரமான பலன் ஏற்பட்டதாகக் காணேம். நான் கூறுவது காதில் விழும்படிச் செய்வதில் வெற்றி பெற்ற இடங்களில், அங்கே மாத்திரம் மக்கள் அதை உணர்ந்து கொண்டிருக்கிருர்கள். நான் செய்து வந்திருப்பதைப் போன்று, ஓர் இடத்திலிருந்து மற்ருேரிடத்திற்கு அவசர அவசரமாகப் போய்க்கொண்டிருக்கும்போது, இந்த வாய்ப்பு எனக்கு ஏற்படுவதற்கில்லை. பகலில், ஒன்றுக்கொன்று வெகு தொலைவில் உள்ள மூன்று இடங்களுக்கு நான் போய்க்கொண்டிருக்கிறேன்.

இச்செய்தியின் முக்கியமான உண்மை மக்களிடத்தில் ஊறுவதற்கு, சந்தடியின்றி இருந்து கேட்கும் மக்களுக்கு அதைச் சொல்ல வேண்டும். சமய உண்மைக்கு, எல்லா உண்மைகளுக்குமே, அது ஊடுருவி வியாபிப்பதற்கு அமைதியான, சிந்தனை சிதருத சூழ்நிலை வேண்டும்.

ஆகையால், மீதமிருக்கும் சுற்றுப்பிரயாண சம்பந்தமாக எனது சக ஊழியர்களுக்கு மூன்று யோசனைகளைக் கூறுகிறேன். அவைகளின் முக்கியத்தை அனுசரித்து அவற்றைக் கூறுகிறேன்.

(1) இம்முடிவுக்கு வரும் நாளில், நான் எங்கே இருக்கிறேனே அங்கிருந்து நடந்து சென்றே என் சுற்றுப்பிரயாணம் ஆரம்பமாகவேண்டும். பாட்னுவில் நடக்கும் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் போன்றவைகளுக்காக இப்பிரயாணம் மத்தியில் நிறுத்தப்படும். எங்கே பிரயாணம் நிறுத்தப்பட்டதோ அங்கிருந்து திரும்பவும் பிரயாணம் ஆரம்பமாகும். அல்லது புதிய இடத்திலிருந்து பிரயாணத்தைத் தொடங்கப்படும்.

(2) ஒரிஸ்ஸாப் பிரயாணம் முடிந்ததும் பிரயாணத்திற்குப் புதிய மாகாணம் தேர்ந்தெடுத்துக் கொள்ளப்படும். அந்த மாகாணத்தின் பிரயாணத்தை முடித்த பிறகு சாத்தியமான பல மாகாணங்களிலும் நடந்தே பிரயாணம் நடக்கும்.

(3) இப்பொழுது ஏற்பாடு செய்திருக்கும் பிரயாணத் திட்டத்தின்படி எல்லாமே இருக்காது. பிரயாணத்திற்குப் புது திட்டம் வகுக்கப்படும். ஆனல், எத்தனை மாகாணங்களில் சாத்தியமோ அத்தனை மாகாணங்களிலும் பிரயாணம் நடக்கும். ஒரு மாகாணத்திலிருந்து மற்ருேர் மாகாணத்திற்குப் போவதற்கு மாத்திரம் ரெயில் உபயோகித்துக்கொள்ளப்படும்.

(4) இந்த வேலையிலுள்ள ஆன்மிகத் தன்மையில் ஊழியர்களுக்கு நம்பிக்கை இருக்குமாயின், என் முதல் யோசனையை அனுசரிக்கத் தயங்கமாட்டார்கள் என்பது நிச்சயம். யோசித்துப் பாராமல் யந்திரம் போல, எந்த ஊழியரும் இதில் முடிவுக்கு வந்துவிடக்கூடாது. அவர்களுடைய நம்பிக்கை, பிறரிடம் கடன் வாங்கியதாக இருக்கக்கூடாது; நான் கூறியிருக்கும் யோசனைகளில் எதுவும் சரியல்ல என்று அவர்கள் மனத்திற்குத் தோன்றுமானல், அவற்றை ஏற்றுக்கொள்ள அவர்கள் உடனே மறுத்துவிடவேண்டும். மீதமிருக்கும் யாத்திரையை, எனக்குச் சிறந்ததென்று தோன்றும் வகையில் நான் செய்து முடித்துக் கொள்ளுகிறேன்.

'நீங்கள் கருதுவது சரியானது என்ற நிச்சயம் உங்களுக்கு இருக்குமாயின், இதற்கு முன்னுலெல்லாம், நீங்கள் செய்து வந்திருப்பதைப் போன்று, சக ஊழியர்களைப் பற்றிக் கவனிக்காமல் நீங்களே சுயேச்சையாக ஏன் செய்யக்கூடாது?' என்று

கேட்கப்படலாம். இக்கேள்வி பொருத்தமானதே. இதில் அப்படி நான் நடக்கவில்லை. ஏனெனில், என்னுடைய நம்பிக்கை எவ்வளவு பலமானதாக இருக்கவேண்டும் என்று நான் நினைக்கிறேனே அவ்வளவு பலமானதாக இல்லை. உண்மை எனக்குப் புலனானபோதிலும் மங்கலாகவே தெரிகிறது. மேலும், இந்தப் பிரயாணம் நான் விரும்பி மேற்கொண்டதல்ல. தக்கர் பாபாவும் சேத் கனஷியாம்தாஸ் பிர்லாவும் அந்த யோசனையைச் சொன்னார்கள். அதற்குத் திட்டம் போட்டதும் அவர்கள்தான். என் யோசனையைக் குறித்து சேத் பிர்லாவுடன் நான் விவாதிக்கவில்லை. இதைக் குறித்துத் தக்கர் பாபாவுக்கு உற்சாகம் ஏற்படவில்லை. மாகாணங்களுக்குச் சொன்ன சொல் தவறியதாகிவிடும் என்று இவர் பயப்படுகிறார். சம்பந்தப்பட்ட மாகாணங்களின் சம்மதமில்லாமல் இதில் நாம் எதுவும் செய்வதற்கில்லை என்கிறார். அவர் சொல்லுவது, அவர் வழியில் சரிதான். மீதமிருக்கும் மாகாணங்களின் தலைவர்களோ, காரியதரிசிகளோ, தங்கள் சக ஊழியர்களுடன் கலந்தாலோசித்துக் கொண்டு தம் அபிப்பிராயங்களைச் சுருக்கமாக எனக்குத் தந்தி மூலம் அறிவிப்பார்களா?

—'ஹரிஜன்' 11—5--1934

# 6

# ஊழியர்களுக்கு வேண்டுகோள்

நடந்தே சுற்றுப் பிரயாணத்தை ஆரம்பித்துவிட்ட ஆறும் நாள் நான் இதை எழுதுகிறேன். ரெயிலிலும் மோட்டாரிலும் போய் 750 மைல் தூரம் அநேகமாக நான் பிரயாணம் செய்திருப்பேன். குறைந்தது 1,50,000 பேரையாவது நான் பார்த்துமிருக்கக்கூடும். ஆறும் நாள் எனது மௌன விரத நாளானதால் நடந்தே போய் இந்த நாட்களில் நாற்பது மைல் தூரமே பிரயாணம் செய்திருக்கிறேன். 20,000 ஆண்கள், பெண்களுடன் தொடர்பு கொண்டேன்.

செய்யப்பட்ட வேலையில், செயற்கையேயான போக்குவரத்தினால் ஏற்பட்டதைவிட, இயற்கையான பிரயாணத்தினால் அதிகமான நன்மை ஏற்பட்டிருக்கிறது என்பதுதான் என் மனத்தில் உள்ளூர இருந்து வரும் அபிப்பிராயம். சென்ற ஐந்து நாட்களாக ஏற்பட்ட தொடர்பு கிராமவாசிகளுக்கும் எனக்குமிடையே அதிக உண்மையானதாகவும் இருந்தது. ஆனால் இந்த அனுபவங்களைக் குறித்து வேறொரு சமயத்தில் நான் சொல்லக்கூடும். இக்குறிப்பை நான் எழுதுவதன் நோக்கம், இந்தியா முழுமையின் ஒத்துழைப்பையும் பெறுவதேயாகும். உத்தகல் தலைவர்கள், அதிகக் கவனத்துடன் விரிவான பிரயாண ஏற்பாடுகளைச் செய்

திருந்தார்கள். அந்தச் சுற்றுப்பிரயாணம் பூர்த்தியானல், அகில இந்தியாவிலும் ஏழ்மையான தான இம்மாகாணத்தில் ரூ. 30,000க் குக் குறையாமல் திரட்டலாம் என்றும் எதிர்பார்த்திருந்தார்கள். அப்படியிருக்க, அப்பிரயாணத் திட்டத்தைத் திடீரென்று ரத்துச் செய்துவிடுவதென்றால் அது அவர்களுக்குச் சாமான்ய விஷய மல்ல. நிச்சயமாக ரூ. 50,000-த்திலேயே நான் என் மனத்தை வைத்திருக்கிறேன். ஆனல், அவர்களுக்கு உண்மை தெரிய வந்தபோது, பண லாபத்தைத் தியாகஞ் செய்துவிட்டுத் தங்க ளுக்குக் கீழிருப்பவர்களின் கோபத்தின் அபாயத்தைச் சமாளிக் கவும் அவர்கள் தயங்கவில்லை. டாக்டர் பி. ஸி. ராய்க்கு நான் அறிவித்தபோது, அநேகமாக வசந்தகாலப் பிரயாணத் திட்டம் முழுவதையுமே தியாகஞ் செய்துவிடுவதில் அவருக்கும் அதிகக் கஷ்டமிருக்கவில்லை. மற்ற மாகாணங்களிலிருந்தும் எந்தக் கஷ்டத்தையும் நான் எதிர்பார்க்கவில்லை. ரெயில், மோட்டார் பிரயாணத்தைவிட நடந்தே சுற்றுப்பிரயாணம் செய்வதில் இருக் கும் உயர்வான அழகைக் காண அவர்கள் தவறிவிடுவார்கள் என்று நம்ப நான் தயாராயில்லை.

வெறும் சாதாரண ஒத்துழைப்பைவிட அதிகமாகவே நான் கேட்கிறேன்; எதிர்பார்க்கிறேன். இந்தியா முழுவதிலு மிருந்தும் தீவிரமான ஒத்துழைப்பு எனக்கு வேண்டும். இயக் கத்தின் உண்மையை மக்களிடையே பரப்புவதற்கும், நான் போயிருந்தால் என்னிடம் எவ்வாறு பணமுடிப்பைக் கொடுத் திருப்பார்களோ அதேபோல எனக்குப் பண முடிப்புகளை அனுப் புவதற்கு மக்களிடமிருந்து செப்புக் காசுகளையும் வெள்ளிக் காசு களையும் வசூலிப்பதற்கும், இந்தியா முழுவதிலுமுள்ள ஊழியர்கள் அவரவர்களின் மாகாணங்களில் நடந்தே செல்லும் யாத்திரை களை ஏற்பாடு செய்துகொள்ள வேண்டும் என்று எதிர்பார்க் கிறேன். ஊழியர்களுக்கும் ஹரிஜனங்களுக்குமிடையே இன்னும் அதிக நெருங்கிய தொடர்பு ஏற்பட வேண்டும். சனதனி களிடமும் நட்பு முறையில் நெருங்க வேண்டும். போகும் இடங் களில், ஹரிஜனங்களுக்கு இருக்கும் கஷ்டங்களையும் அசௌகரி யங்களையும் மேலும் நன்ருக உணர்ந்துகொள்ளவேண்டும். மேலும் அதிகமான கோயில்களை ஹரிஜனங்களுக்குத் திறந்து விடுவ தோடு அதிகமான ஹரிஜனக் குழந்தைகளையும் பொதுப் பள்ளிக் கூடங்களில் சேர்க்க வேண்டும். உத்தகல் கிராமங்களில் நான் நடந்தே பிரயாணஞ் செய்து வந்தபோதிலும், நான் தங்கள் கிராமங்களிலும் நடந்தே பிரயாணம் செய்துகொண்டிருக்கிறேன் என்று ஊழியர்களும், கிராமவாசிகளும் நம்பவேண்டும். நான் செய்வது ஆன்மிகமான செயலாக இருக்குமானல், அந்தப் பலன் அதற்கு இருக்கும்; மக்களும் இந்த இலட்சியத்திற்காகத் தங்கள் முயற்சியைத் தீவிரமாக்கவேண்டும் என்பதையும் உணர் வார்கள். மேலும் அதிகமான ஊழியர்களைக் கண்டுபிடிப்பதும், இப்பொழுது இருந்து வரும் ஊழியர்கள் மேலும் தங்களை அர்ப்ப

ணித்துக் கொள்ளுவதும் இந்த யாத்திரையின் பலனாக இருக்க வேண்டும்.

—'ஹரிஜன்' 18—5—1934

# 7

# ஹரிஜன ஊழியர்களுக்குப் புத்திமதி

இப்பொழுது இருக்கும் நிலைமை எவ்வளவு கஷ்டமானதாக இருந்தாலும், எவ்வளவு தூரம் சாத்தியமோ அவ்வளவுக்கு உள்ளுக்குள் சீர்திருத்தத்தை நிறைவேற்றிவைக்க வேண்டியது ஹரிஜன ஊழியர்களின் முக்கியமான கடமை.

ஆகையால், ஹரிஜன ஊழியர்கள், தங்களுடைய முழு சக்தியையும் கீழ்க்கண்ட காரியங்களில் ஈடுபடுத்த வேண்டும்:

(1) ஹரிஜனங்களிடையே சுத்தத்தையும், சுகாதார வாழ்க்கையையும் வளர்த்தல்.

(2) ஆபாசமான தொழில்கள் என்று கூறப்படும் தோட்டி வேலை, தோல் பதனிடும் வேலை ஆகியவைகளில் அபிவிருத்தியான வேலை முறைகளை அமலுக்குக் கொண்டுவர வேண்டும்.

(3) மாமிசம் சாப்பிடுவதை அடியோடு விட முடியாவிட்டாலும் செத்த கால்நடைகளின் மாமிசத்தையும், மாட்டிறைச்சியையும் சாப்பிடுவதை விட்டுவிடச் செய்ய வேண்டும்.

(4) போதை தரும் மதுபானங்களைக் குடிப்பதை விட்டு விடச் செய்யவேண்டும்.

(5) எங்கெங்கே பகல் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றனவோ அவற்றிற்குத் தங்கள் குழந்தைகளை அனுப்புமாறு பெற்றோரைத் தூண்டவேண்டும். இரவு பள்ளிக்கூடங்கள் ஆரம்பிக்கப்படும் இடங்களில் அவற்றிற்குப் போகும்படி பெற்றோரைச் செய்யவேண்டும்.

(6) அவர்களுக்குள்ளேயே தீண்டாமை என்பதை ஒழித்து விடும்படி செய்ய வேண்டும்.

—'என் ஆன்மாவின் துயரம்'–1933-ம் வருடப் பதிப்பிலிருந்து.

# 8

# ஊழியர்களுக்கு வேலைத் திட்டம்

முனிசிபாலிடிகள் கவனிக்காமல் அலட்சியமாக இருந்து விடுகின்றன என்று பொதுவாகப் புகார் சொல்லப்படுகிறது. முனிசிபல் அங்கத்தினர்களிடம் நேரடியாகப் போய் அவர்களுடைய நீண்ட தூக்கத்திலிருந்து அவர்கள் விழிப்படையும்படி செய்ய வேண்டும். வாக்காளர்களுக்கும் விஷயத்தை எடுத்துக் கூற வேண்டும். அங்கத்தினர்கள் சரியாக நடந்துகொள்ளும்படி வாக்காளர்கள் செய்வார்கள் என்று எதிர்பார்க்கலாம். ஹரிஜன ஊழியர்களின் நலனுக்குச் செய்யும் வேலைகள் சம்பந்தமாக கான்பூர் முனிசிபாலிடியில் இருக்கும் ஹிந்துக்களல்லாத அங்கத்தினர்களும் ஹிந்து அங்கத்தினர்களுடன் முழு மனமார ஒத்துழைத்தார்கள் என்பதை அறிந்து சந்தோஷ மடைகிறேன். நாம் செய்யும் வேலை முற்றிலும் ஜீவகாருண்ய வேலை. ராஜீயத்திற்கும் இதற்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. ஹரிஜனங்கள், ஹிந்துக்களுக்கு மாத்திரமல்ல, ஹிந்துக்களல்லாதாருக்கும் சேவை செய்து வருகிறார்கள். ஹரிஜனங்கள் குடியிருக்கும் இடங்களில் இருந்து வரும் சுகாதாரக் கேடான நிலைமை, நகரம் முழுவதற்குமே ஆபத்தை உண்டாக்கிவிடக்கூடும். முனிசிபாலிடிகளில் இருக்கும் முஸ்லிம் அங்கத்தினர்கள், ஒரு வகுப்பினரை மாத்திரம் பாதுகாப்பவர்களாக இல்லாமல், மொத்தத்தில் எல்லா மக்களையும் பாதுகாக்க வேண்டியவர்களாக இருக்கின்றனர். மற்ற முனிசிபாலிடிகளில் அங்கம் வகிக்கும் முஸ்லிம் மெம்பர்கள் இவைகளையெல்லாம் உணரும்போது, இதில் அவர்களும் அனுதாபம் உள்ளவர்களாகவே இருப்பார்கள். தண்ணீர், விளக்கு போன்ற வசதிகளில் நகர மக்களில் மற்றவர்களுக்கு இருக்கும் சௌகரியம் ஹரிஜனங்களுக்கு இல்லை என்பது பகிரங்கமான உண்மை.

ஆனால், முனிசிபாலிடிகள் என்ன செய்தாலும், செய்யத் தவறினாலும் அதையெல்லாம் பொருட்படுத்தாமல், ஹரிஜனங்களுக்கு நல்ல வாழ்க்கை நிலை ஏற்பட சங்கம் முயற்சித்தாக வேண்டும். இவை எளிதாகவும், அதிகச் செலவு இல்லாமலும் செய்துவிடலாம். முதலில் சாக்கடை வசதி சரியானபடி இருக்கும்படி செய்து, அவர்கள் குடியிருக்கும் இடங்களைச் சுத்தம் செய்து, நல்ல பாட்டை இருக்கும்படி பார்க்கவேண்டும், வீடுகளில் வெளிச்சமும் காற்றோட்டமும் நன்றாக இருப்பதற்கு அவற்றில் கொஞ்ச மாறுதல்களைச் செய்ய வேண்டும். ஹரிஜனங்கள் குடியிருக்கும் இடங்களின் சுகாதாரத்தை அபிவிருத்தி செய்வதற்கு அதிகச் செலவில்லாத திட்டத்தைத் தயாரித்து முனிசிபாலிடிகளுக்கு அனுப்புவார்களானால், அவர்கள் சங்கத்திற்குக் கொஞ்சம் தொகையை உதவி நிதியாக அளித்து அதை

நிறைவேற்றுவதற்கு உங்களையே தங்கள் ஏஜண்டுகளாகக் கொள்வர். ஏனெனில், இதற்குத் தேவையான ஊழியர்கள் இப்போதைக்கு அவர்களிடம் இல்லாமல் இருக்கக்கூடும். அப்படியே ஊழியர்களிருந்தாலும், இத்தகைய வேலையில் அவர்களுக்கு அதிகச் சிரத்தை இல்லாமல் இருக்கவும் கூடும்.

இரண்டாவதாக, ஹரிஜனங்களுக்கு நிறையத் தண்ணீர் கிடைக்கும்படி நீங்கள் செய்ய வேண்டும். நகரங்களிலிருக்கும் தங்கள் சகோதரர்களைவிட கிராமங்களில் இருக்கும் ஹரி ஜனங்கள் அதில் அதிக மோசமான நிலைமையில் இருக்கின்றனர். பொதுக் கிணறுகளிலிருந்து தண்ணீர் எடுத்துக்கொள்ளுவதற்கு வேண்டிய பாதுகாப்புக்களை கோர்ட்டுகள் முதலியவைகளை நாடிப் பெறுவதற்கும், தண்ணீர் எடுப்பதற்குத் தங்களுக்குள்ள உரிமையை வற்புறுத்துவதற்கும் பலத்தை இனித்தான் அவர்கள் விருத்தி செய்துகொள்ள வேண்டியிருக்கிறது. இதற்கு மத்தியில் இவர்களுக்காகச் சங்கம் நல்ல கிணறுகளை வெட்டிக் கொடுக்க வேண்டும். சாதி ஹிந்துக்களும் தங்களுக்கு வேண்டிய தண்ணீரை அக்கிணறுகளிலிருந்து எடுத்துக்கொள்ளும்படி தூண்ட வேண்டும். இக்கிணறுகள் வெட்டப்பட்டு வேலை நடந்துகொண்டிருக்கும் சமயத்தில் சீர்திருத்தக்காரர்கள், ஹரிஜனங்களுக்காகக் கிணறுகளிலிருந்து தண்ணீர் எடுத்து அவர்கள் பாத்திரங்களில் ஊற்ற வேண்டும்.

மூன்றாவதாக, ஹரிஜனக் குழந்தைகளுக்காகச் சங்கம் ஆரம்பப் பாடசாலைகளை நடத்த வேண்டும். அங்கே ஆசிரியர்கள் சிறுவர்களுக்கு எழுத்துச் சொல்லிக்கொடுப்பது ஒன்றே முக்கியம் என்று இருந்துவிடக்கூடாது. உடம்பையும் துணிகளையும் சுத்தமாக வைத்திருப்பதைப் பற்றி அவர்களுக்குப் போதிக்க முயற்சித்து, ஆறு மாதங்களில், அதே வயதுள்ள சாதி ஹிந்துச் சிறுவர்களுக்குச் சமமாக சுத்தமாக இருப்பவர்களாக இச்சிறுவர்களைச் செய்ய வேண்டும். இதற்கு உபாத்தியாயருக்குப் படிப்பைவிட அன்பு உள்ளமே அதிகமாக வேண்டும். ஹரிஜன ஆரம்பப் பள்ளி ஆசிரியர்கள் செய்ய வேண்டியது என்ன என்பதைக் குறித்து வழி காட்டும் நூலை சங்கம் தயாரிப்பதும் நல்லதே. சாதி ஹிந்துக்களின் சிறுவர்கள் வீடுகளில் பெற்றுவரும் பண்பாட்டை ஹரிஜனச் சிறுவர்களுக்குக் கற்பிக்கும் விதம் அதில் அடங்கியிருக்க வேண்டும்.

நான்காவதாக, ஆசிரமம் என்ற பெரிய பெயரை நீங்கள் விரும்பவில்லை என்றும், 'மாணவர் விடுதிகள்', 'உத்தியோகாலயங்கள்' என்ற பெயரையே விரும்புகிறீர்கள் என்றும் நினைக்கிறேன். என்னைப் பொறுத்தவரையில், சபர்மதியிலிருக்கும் ஸ்தாபனம், 'ஹரிஜன ஆசிரமம்' என்றழைக்கப்படுவது எனக்குப் பிடிக்கவில்லை. இந்த மாணவர் விடுதிகளில் இருப்போருக்குச் சாதாரண படிப்போடு சில கைத்தொழில்களையும், மதத்தைப் பற்றியும் சொல்லிக் கொடுக்க வேண்டும். அவற்றைப் பாடப்

புத்தகங்களிலிருந்து சொல்லிக் கொடுக்காமல், அனுபவத்தில் அவர்கள் தெரிந்துகொள்ளும்படி செய்ய வேண்டும். புத்தகத்தைப் படிப்பதோடு மாத்திரம் இருந்துவிடாமல் மாணவர்கள் தங்கள் கைகளையும் கால்களையும் உபயோகிக்கச் சொல்லிக் கொடுப்பதோடு, தங்கள் வாழ்க்கையில் உண்மையே பேசும்படியும் செய்ய வேண்டும். உண்மையில் அக்குழந்தைகளுக்கு ஆசிரியர், தந்தையாகவே இருந்து வர வேண்டும். இத்தகைய ஸ்தாபனங்கள் ஒரு மாகாணத்திற்கு இரண்டு இருந்துவிடுமானால், பண்பாட்டைப் பரப்புவதற்கு இவையே அதிக தூரம் உதவியாவதோடு சிறந்த பிரசாரமாகவும் அமைந்துவிடும்.

மதுபானம் செய்யும் பழக்கத்தைப் போக்குவது சம்பந்தமாகவும் ஒன்று கூற விரும்புகிறேன். ஊழியர்கள், குடிப்பவர்களின் வாழ்க்கையில் பிரவேசித்து அவர்களுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொண்டால் மாத்திரமே அவர்கள் தவறை உணர்ந்து திருந்தும்படி செய்ய முடியும். பிரதிக்ஞைகளில் அவர்கள் கையெழுத்திடும்படி செய்வதனால் மாத்திரம் பயனில்லை. அவர்கள் குடிக்கும் பழக்கத்தை மேற்கொண்ட காரணங்களை அறிய வேண்டும். பால், தேநீர் குடிப்பது போன்ற மாற்றுப் பானங்களைச் சாப்பிடும்படி செய்து, அவர்களுடைய பொழுதுபோக்குக்காக விளையாட்டு, பிரசங்கங்கள் ஆகியவைகளுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

தீண்டாமை பலமாக இருக்குமிடங்களான கிராமங்களில் ஊடுருவி வேலை செய்தால் மாத்திரமே அதை ஒழிக்க முடியும். அப்படி செய்தாலன்றி இப்பிரச்னையின் விளிம்பைக்கூட தொட்டதாகாது என்பதே என் திடமான அபிப்பிராயம்.

[கான்பூரில் ஐக்கிய மாகாண ஹரிஜன ஊழியர்களிடம் காந்திஜி பேசியதன் சாராம்சம்]

—'ஹரிஜன்' – 10—8—1934

## 9

# எலும்புகளின் உபயோகம்

ராஜபுதனத்திலிருந்து எழுதியிருக்கும் ஒருவர் கூறுவதன் சாராம்சமாவது :

"இங்கே எங்கள் பகுதியில் நான் பார்க்குமிடங்களிலெல்லாம் மிருகங்களின் எலும்புகள் வழியில் சிதறிக் கிடக்கின்றன. இவற்றைப் பொறுக்கிச் சேகரிப்பதில் யாருமே கவனஞ் செலுத்துவதில்லை. எனவே, கிராமங்களின் சுற்றுப்புறங்கள், கவனிப்பாரற்ற சுடுகாடுகள் போலவே தோன்றுகின்றன. அதிக மோசமாக இருக்கும் அவ்விடங்களை நாய்கள் இன்னும் படுமோசமாக்கி வருகின்றன. இது சம்பந்தமாக நீங்கள் 'ஹரிஜன்' பத்திரிகையில் அடிக்கடி

எழுதி வருகிறீர்கள். ஹரிஜன, கிராம ஊழியர்களுக்கு, அவர்கள் இதில் என்ன செய்யவேண்டும் என்பதைக் குறித்து உடனே அறிவிக்கக் கூடாதா? அந்த எலும்புகளை அரைக்கும் மில் ஏதாவது ஒன்றுக்கு அனுப்புமாறு எங்களுக்குத் தாங்கள் யோசனை கூறுவதில் பயனில்லை. ஏனெனில்,அதற்கு ஏராளமாகச் செலவாகும். அதோடு, எலும்புகள் போன்றவைகளால் செய்யப்படும் பொருள்களை உபயோகிப்பதில் மத சம்பந்தமான துவேஷம் இருந்துவருவதையும் நீங்கள் கவனிக்க வேண்டும்.''

இந்த நாட்டில் வீணாக்கப்பட்டு வருவது உண்மையில் மிகவும் பயங்கரமானதாகும். என்றாலும், தீண்டாமை சாபக்கேட்டினால் நஷ்டமாகி வருவதன் புள்ளி விவரத்தை ஒரு பொருளாதாரப் பண்டிதர் கணக்கெடுப்பாரானால், அத்தொகை நடுங்குறச் செய்வதாக இருக்கும். தீண்டாமை என்ற பாவத்தை அனுசரிக்கும் ஆடம்பரத்திற்காக நாம் கொடுத்து வரும் கூலியைக்கொண்டே, பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு நன்றாகச் சாப்பாடு போட்டுவிட முடியும். இந்தியாவின் ஜனத்தொகையில் ஆறில் ஒரு பகுதியினரை, மிகக் குறைந்த அளவு பொருளாதார வளர்ச்சிக்குப் பயன்படுத்தவும், அவர்களுடைய அறிவும், ஒழுக்கமும் வளராதபடி செய்யவும் வீணாக்கப்படுவது கொஞ்சமல்ல. ஆனால், இப்பிரச்னையை இவ்வளவு பெரிய வகையில் கூறுவது எனக்குத் திகைப்பை உண்டாக்குகிறது. ஏனெனில், பணத்திலும் ஆட்களிலும் கோடிக்கணக்கு என்ற வகையில் எண்ணிப் பார்க்க வேண்டியிராத ஊழியர்களுக்கு, இது சாதாரண விஷயமே.

மத சம்பந்தமான மதிப்பீடுகள் மாறுதல் அடைந்தாக வேண்டும். மிருகங்களின் வாழ்வைத் தெய்விகமானதாகக் கருதப்படும் இந்தியா போன்றதோர் நாட்டில், இயற்கையாகச் சாகும் மிருகங்களின் எல்லாப் பாகங்களையும், சாப்பிடுவதற்கு உபயோகிப்பதைத் தவிர மற்றவைகளுக்கு உபயோகித்துக் கொள்ளுவதையும் தெய்விகமான உபயோகமாக நாம் கருத வேண்டும். ஹரிஜன ஊழியர்கள், இங்கே கூறப்பட்டிருக்கும் நிலைக்கு முன்னேறி யிருக்கிறார்கள் என்றே நான் கருதுகிறேன். அப்படி அவர்கள் முன்னேறி யிருந்தால், கிராமப் புறங்களில் பாட்டைகளில் சிதறிக் கிடக்கும் எலும்புகளையெல்லாம் எடுத்துச் சேகரித்து, மேற்கொண்டும் அறிவிப்பு வரும் வரையில் வைக்க வேண்டும். எலும்புகளை எளிதாகத் தூளாக்கும் முறையைக் காண முயற்சி செய்து வருகிறேன். அதை எருவாக்கி விடுவதே எளிதான சிறந்த முறை என்று எனக்குத் தோன்றுகிறது.

—'ஹரிஜன்' - 20—4—1935

# 10

# ஒரு ஹரிஜன சேவகரின் கஷ்டங்கள்

ஒரு ஹரிஜன சேவகர் நன்ருகத் தேர்ந்தவர்; உண்மை யானவர். அவர் எங்களுடன் ஒரு நாள் இருந்தார். அவர் நான்கு ஆண்டுகள் கஷ்டப்பட்டு ஊரூராகப் போயிருக்கிருர். ஆனல், அதிகப் பலன் எதுவும் இல்லை. அவருடைய ஸ்தாபனத் திற்கு ஹரிஜன சேவா சங்கத்திலிருந்து போதுமான பணம் கிடைக்கவில்லை. இளைஞர்களின் ஆதரவைப் பெறவும் அவரால் முடியவில்லை. அவருடன் இளைஞர்கள் சில நாட்கள் வந்து இருப் பார்கள்; கொஞ்ச காலம் அவருடன் வேலை செய்வார்கள். வேலை அவர்களுக்குக் கவர்ச்சியானதாக இல்லாததால் திடீரென்று விட்டுவிட்டுப் போய்விடுவார்கள். பிராம்மணரல்லாதார் அவருக்கு முட்டுக்கட்டைகளையெல்லாம் போட்டார்கள். ஹரிஜனங்களுக் காக, அவர்களிடையே இருந்து அவர் வேலை செய்ததால், அவர் களுடைய வாழ்க்கைத் தரம் குறைந்துவிட்டது என்றும் புகார் கூறினர். ஹரிஜனங்களும்கூட அவருக்கு மனச்சோர்வை அதி கரித்துவிட்டார்கள். தூய வாழ்க்கை நடத்துவதாகவும், குடிப்ப தில்லை, செத்த கால்நடைகளின் மாமிசத்தைத் தின்பதில்லை என்றும் அவருக்கு வாக்குறுதியளித்த ஹரிஜனங்கள், தங்கள் பிரதிக்ஞையின்படி நடந்துகொள்ளுவதில்லை. இப்படி அநேகம்.

மீண்டும் விடாமல் முயற்சி செய்துகொண்டு வாரும் என் பதைத் தவிர அவருக்குக் காந்திஜி சொல்லக்கூடியது வேறு எதுவும் இல்லை. காந்திஜி கூறியதாவது: "பல நூற்ருண்டு களாக ஊறிப் போயிருக்கும் ஒரு துவேஷத்தை வெல்லும் விஷயத்தில், ஒரு நாட்டு மக்களின் வாழ்க்கையில் நான்கு வருடங்கள் என்ன பிரமாதம்? எல்லையற்ற அகண்ட வெளியில், வெல்ல வேண்டிய துவேஷம் எவ்வளவு பழமையானது என்பதை நினைத்துப் பார்க்கும் ஒருவருக்கு, வாழ்நாளெல்லாம் கஷ்டப்பட வேண்டி வந்தாலும் அதுவும் எம்மாத்திரம்? நாம் போதுமான அளவு முயற்சி செய்து, அதற்காகக் கஷ்டப்பட்டும் இருக்கி ரோமோ? பூக்கர் டி. வாஷிங்டனின் வாழ்க்கையைப் பாருங்கள். அவர் கஷ்டப்பட்டதைப் போன்று நம்மில் யாராவது கஷ்டப் பட்டிருக்கிரோமா? ஹரிஜனங்களுக்கு இருந்துவரும் துயரங் களைக் குறித்துச் சொல்லுகிரோம். ஆனல், அந்தத் துயரங்களை அவர்களுடன் சேர்ந்து நாமும் பகிர்ந்துகொள்ளுகிரோமா? பட்டினி கிடக்க வேண்டியிருப்பது தாங்களேயன்றி நாம் அல்ல; நமக்குச் சுத்தமான தண்ணீர் ஏராளமாகக் கிடைக்கும்போது ஆபாசமான குட்டைகளை நம்பியே தாங்கள் வாழ வேண்டி யிருக்கிறது என்பதைக் காணும் அளவுக்கு அவர்களுக்குப் புத்தி கூர்மை இருக்கிறது.

''ஹரிஜன சேவா சங்கம், உங்களுக்குப் பணம் கொடுக்க வில்லை. அதன் கருத்துப்படி அதுவும் சரிதான். தவறான இடத்திலிருந்து நாம் ஆரம்பித்திருக்கிறோம்; நமது பலத்தையே நம்பி இருப்பதற்குப் பதிலாக நாம் வெளி உதவியை நம்பியிருக்கிறோம். இன்னுமொருவர் நமக்கு ஊட்டி வளர்ப்பதை விட்டுவிட வேண்டிய சமயம் வந்துவிட்டது. தாழ்வாரங்களிலோ, சொந்த கொட்டகைகளிலோ சிறுவர்களுக்குச் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்து, அவ்விடத்திலேயே பள்ளிக்கூடம் இயற்கையான வளர்ச்சியை அடையும்படி ஏன் செய்யக்கூடாது? உங்களுக்கு வேண்டிய தானியங்களையும், கறிகாய்களையும் நீங்களே பயிரிட்டுக்கொள்ளுவதற்கு அவர்களுடைய உதவியை நீங்கள் பெற்று, இதன் மூலம் சாப்பாட்டு விடுதியின் செலவுகளை ஏன் குறைத்துக் கொள்ளக்கூடாது? உதாரணமாக, திருவனந்தபுரத்திலிருக்கும் ஒரு பள்ளிக்கூடம், உதவிக்கு டில்லியை நம்பியிருப்பதென்பது அக்கிரமமாகும். இது கொஞ்சமும் இயற்கையல்லாதது. ஆரம்பக் கட்டங்களில் அது அவசியமானதாக இருந்திருக்கலாம். ஆனால், இப்பொழுதும் இது அவசியமானதாக இருக்கக்கூடாது. அப்பள்ளிக்கூடத்தை நடத்துகிறவர், தனது சம்பளத்திற்கு டில்லியை எதிர்பார்த்துக் கொண்டிருப்பாரானால், அவர் அங்கே அந்நியராகவே இருந்து வருவார். அவர், தம்மை ஹரிஜனங்களுடன் ஒன்றுபடுத்திக் கொண்டிருப்பாராயின், தங்களிடமிருக்கும் கொஞ்சத்தை அவருக்கும் அவர்கள் கொடுத்துப் பகிர்ந்து கொள்ளுவார்கள். அவர் பட்டினி கிடந்துவிட நிச்சயமாக விட மாட்டார்கள். எடுத்ததற்கெல்லாம் மத்திய போர்டை எதிர் பார்த்துக் கொண்டிருப்பதில் பயனில்லை. எல்லாம் சரியாக நடந்துகொண்டிருக்க மத்திய போர்டு பார்த்துக்கொள்ளும். ஆனால், அதற்கு ஆதாரமெல்லாம், அதன் கிளைகளான மாகாண போர்டுகளிலிருந்துதான் வரவேண்டும். என் மனம் தினந்தோறும் எத்தனையோ புது விஷயங்களைக் கண்டுபிடித்துக் கொண்டு வருகிறது. இதனால், வசூல் செய்வதைக்கூட நிறுத்தி விடவேண்டும் என்று எண்ணி வருகிறேன். நமக்குப் பணம் இல்லையென்றால், நமக்கு வேறு வசதிகள் இருக்கின்றன. அந்த வசதிகளைக் கண்டுபிடித்துக்கொள்ளும் ஆற்றல் மாத்திரம் நமக்கு இருக்க வேண்டும்.

''நாம் மனச்சோர்வை அடைவதற்கு ஹரிஜனங்களை ஏன் காரணமாகக் கொள்ளவேண்டும்? எத்தனை பேர் பிரதிக்ஞை செய்தபடி நடந்து கொண்டுவிடுகிறார்கள் என்பதை எனக்குக் காட்டுங்கள். நமது பிரதிக்ஞையின்படி நாம் நடந்துகொண்டு விட்டோமா? அவர்கள் செத்த கால்நடைகளின் மாமிசத்தைச் சாப்பிடுவதைக் குறித்து நாம் ஏன் இவ்வளவு பிரமாதப்படுத்த வேண்டும்? அப்பழக்கத்தை அவர்கள் விட்டுவிட வேண்டும் என்று நாம் விரும்புகிறோம் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், இதற்காக அவர்களிடம் நாம் பொறுமையை இழந்து பயனில்லை. சாதி ஹிந்துக்களில் அநேகர் மாமிசம் சாப்பிடுகிறார்கள் என்றால்,

இயல்பாகவே ஹரிஜனங்கள் செத்த கால்நடைகளின் மாமிசத்தையே சாப்பிடுவார்கள். மாமிசத்திற்கும், செத்த கால்நடைகளின் இறைச்சிக்கும் ரசாயன ரீதியில் எந்த வித்தியாசமும் இல்லை. புது மாமிசத்திற்கும், செத்த கால்நடைகளின் மாமிசத்திற்கும் எந்த வித்தியாசத்தையும் தம்மால் காண முடியவில்லை என்று டாக்டர் தேஷ்முக் எனக்கு எழுதியது உங்களுக்கு நினைவிருக்கும். நியாயம்கூட, ஹரிஜனங்கள் பக்கத்தில்தான் இருக்கிறது. தான் சாப்பிடுவதற்காக என்று ஓர் ஆட்டைக் கொல்லுவது பணக்கார ஹிந்துவுக்குச் சாத்தியம். ஆனால், ஏழை ஹரிஜன் என்ன செய்வது? உயிருள்ள ஆட்டை அவர்களுக்குத் தின்பதற்குக் கொடுக்கமாட்டார்கள். செத்த ஆட்டைத் தின்ன அவர்களுக்குச் சந்தர்ப்பம் இருந்தும் அப்படித் தின்னவும் அவர்களை விடமாட்டார்கள். நம்மிடம் இல்லாத தீய பழக்கம் எதுவும் ஹரிஜனங்களிடம் இருந்துவிடவில்லை என்பதை நாம் உணர வேண்டும், பிராயச்சித்தங்களை எல்லாம் செய்துகொள்ள வேண்டியவர்கள் நாமே. கோடிக்கணக்கான சாதி ஹிந்துக்கள் மாமிசம் சாப்பிடுவதை விட்டுவிடுவார்களானால், செத்த கால்நடைகளின் மாமிசத்தைத் தின்பதை ஹரிஜனங்கள் விட்டுவிடுவார்கள்.''

''அவர்கள் குடியிருக்கும் படுமோசமான குடிசைகளை விட்டு விட்டு நம்மிடையே வந்து குடியிருக்குமாறு அவர்களுக்குச் சொல்லலாமா?''

"இதைச் சொல்லுவது சுலபம். ஆனால், செய்வது சுலபம் அல்ல. எல்லா சாதி ஹிந்துக்களும் சீர்திருத்தக்காரர்களாகி விடுவார்களானால், உங்கள் கேள்வியே எழாது. சாதி ஹிந்துக்கள் குடியிருக்குமிடங்களில் போய் ஹரிஜனங்கள் குடியேறுவார்களானால், தாக்கப்படுவதினின்றும் அவர்களைப் பாதுகாக்கும் சக்தி இன்று சீர்திருத்தக்காரர்களுக்கு இருக்காது. ஆனால், நாட்டார்களின் உதாரணத்தைப் பின்பற்றி ஹரிஜனங்கள், தங்களை விடாமல் கொடுமைப்படுத்தி வரும் இடங்களிலிருந்து வெளியேறி வேறு இடங்களில் போய் குடியேறிவிட வேண்டும் என்று நான் கூறுவேன்."

"அவர்கள் உபநயனச் சடங்கு செய்துகொண்டு பூணூல் அணியும்படி செய்வதைக் குறித்து என்ன கருதுகிறீர்கள்?''

''அது கூடாது. அவர்கள் இன்று தாழ்வானவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் உயர்ந்த அந்தஸ்திற்கு உயர்த்தப்பட வேண்டும் என்ற கருத்து அதில் அடங்கியிருக்கிறது. அவர்கள் எவ்விதத்திலும் தாழ்வானவர்கள் அல்ல. அவர்கள் தாழ்ந்தவர்கள் என்பதற்கு அவர்களிடம் நமக்குத் தென்படுபவையெல்லாம், நமது சொந்த படுமோசமான தாழ்மையின் பிரதிபிம்பமே. நோயுற்ற என் குழந்தை என்னிடம் இருக்கிறது என்று வைத்துக்கொள்ளுவோம். அதை நான் என்ன செய்வேன்? அதை என்னுடையதல்ல என்று விட்டுவிடுவேனா? அது கேவலமானது

என்று கருதுவேனு? கருதமாட்டேன். என் பாவங்களுக்காக அது துன்பப்பட்டுவருகிறது; அதனிடம் நான் அதிகச் சிரத்தை காட்ட வேண்டும் என்று நான் எனக்கு நானே நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். ஆனால், ஹரிஜனங்களைப் பொறுத்தவரை யில் நான் உங்களுக்கு ஒன்று சொல்லுகிறேன். நம்மைவிட அவர்கள் உயர்வானவர்கள் என்றுதான் நான் கருதுகிறேன். நாம் எவ்வளவோ கொடுமைப் படுத்திவந்தும், அவர்கள் இன்னும் நம்முடன் இருந்து வருகிறார்கள்; நம்மை விடாமல் பற்றிக்கொண் டும் இருக்கின்றனர். ஹிந்து மதத்தைச் சேர்ந்தவர்களில் சிலர், ஹரிஜனங்களுக்கு அம் மதத்தில் இடமே கிடையாது என்று சொல்லிவந்தும், இந்த ஹரிஜனங்கள் அம்மதத்தை விட்டுப் போய்விடாமல் இப்பொழுதும் இருந்துவருவது அற்புதங்களி லெல்லாம் பெரிய அற்புதமாக எனக்குத் தோன்றுகிறது. இத் தனை ஆண்டுகளாக நாம் உட்கார்ந்துகொண்டு வந்திருக்கும் உச்ச நிலையிலிருந்து நாம் இப்பொழுது இறங்கி, ஹரிஜனங்களு டனுள்ள இயற்கையான நம் இடத்திற்கு நாம் வந்தாக வேண்டும்.''

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.]

—'ஹரிஜன், - 15—6—1935.

# 11

# நமது கடமை

ஒரு விதத்தில், மற்ற இடங்களிலெல்லாம் இருப்பதைவிட அதிக பளுவாகத் தீண்டாமை பளு குஜராத்தில் ஹரிஜனங்கள் மீதே அதிகமாகச் சார்வதாக இருக்கலாம். தோல்கா என்ற இடத்தில் ஒரு ஹரிஜனை, சாதி ஹிந்து ஒருவன் கொன்றுவிட் டான். அக் கொலைக்காரன் ரூ. 300 அபராதத்தோடு தப்பித்துக் கொண்டுவிட்டான். கவிதா என்ற இடத்தில் ஹரிஜனங்கள் தங்கள் குழந்தைகளைப் பொதுப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பத் துணிந்ததற்காக, ரஜபுத்திரர்கள் எனப்படுவோர், திக்கற்ற ஹரி ஜனங்களைத் தாக்கி இரக்கமின்றி அடித்துவிட்டார்கள். கத்திய வாரில், கால்நடைகளுக்குத் தொத்து நோய் ஏற்பட்டுவிட்டதற் காக அதன் பல பகுதிகளிலும் உள்ள ஹரிஜனங்களை இப்பொழுது சாதி ஹிந்துக்கள் கொடுமைப்படுத்த ஆரம்பித்திருக்கிறார்கள். ஹரிஜனங்கள் மந்திரம் போட்டிருப்பதனாலோ, பில்லி சூனியம் வைத்துவிட்டதனாலேயேதான் இவ்விதம் கால்நடைகளுக்குத் தொத்து நோய் உண்டாகிவிட்டது என்ற மூடநம்பிக்கையின் பேரி லேயே அவர்கள் இவ்விதம் செய்து வருகின்றனர். தனது உட லுக்கும் சொத்துக்கும் எந்த நேரத்திலும் ஆபத்து ஏற்பட்டுவிடும் என்ற நிரந்தரமான திகிலில் ஒவ்வொரு ஹரிஜனும் இருக்கிறார்.

சீர்திருத்தக்காரரோ, தன்னால் இந்நிலைமையில் எதுவும் செய்ய முடியவில்லை என்பதை உணருகிறார். அரசாங்கமும் இதில் அசிரத்தையுடனிருக்கிறது; அல்லது சக்தி வாய்ந்த சாதி ஹிந்துக்களுக்கு எதிராக ஒன்றும் செய்ய முடியாத நிலையிலும் அது இருக்கக்கூடும். இதற்குக் காரணம் மிகத் தெளிவானது. தங்கள் கஷ்டங்களுக்கு நிவாரணம் தேடிக் கொள்ளுவது என்பது ஹரிஜனங்களுக்குத் தெரியவில்லை. தங்களைத் தாங்களே பாதுகாத்துக் கொள்ளும் உறுதி அவர்களுக்கு இல்லை. தமக்குள்ள மனித அந்தஸ்தைப் பற்றி ஹரிஜனங்களுக்கு எதுவுமே தெரியாது. மற்றவர்கள் தனக்குச் செய்யும் அக்கிரமங்களிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ளுவதற்குத் தன்னிடம் இயல்பாகவுள்ள ஆற்றலையும் அவன் அறியான். கொடுமைப்படுத்துகிறவர்கள், தாங்கள் செய்வது இன்னது என்பதையே அறியமாட்டார்கள். ஆகையால், அவர்களிடையே அறிவு ஒளியை சீர்திருத்தக்காரர்களே ஏந்திச் செல்ல வேண்டும். அவர்களிடையே துண்டுப் பிரசுரங்களை விநியோகிக்கலாம். ஆனால், பிறரை உயிருடன் வதைக்க முற்படும் சாதி ஹிந்துக்கள், பத்திரிகைகளையோ, துண்டுப் பிரசுரங்களையோ படிப்பதே இல்லை. சுய நிறைவும், சுய திருப்தியும் கொண்டிருப்பவர்கள் அவர்கள். நேரடியான தொடர்பு ஒன்றுதான் அவர்களை அணுகுவதற்குள்ள ஒரே வழி. அவசியமானால், அவர்களுடைய வீடுகளுக்கே போய் அவர்களைப் பார்க்க வேண்டும். அவர்களுடைய கிராமங்களில் பொதுக் கூட்டங்கள் போட்டுப் பேச வேண்டும். எவ்வளவு அதிக அளவு கோபமோ, பிரசங்கமோ அவர்களுடைய அறியாமையைப் போக்கிவிடாது. அவர்களுடைய அறியாமையைப் போக்குவதற்குத் துரிதமான வழி, கால்நடைகளுக்கு நோய் எவ்விதம் உண்டாகிறது, எவ்விதம் உஷாரான பரிகாரத்தினால் நோயைத் தடுக்கவோ, குணப்படுத்தவோ முடியும் என்பதை அவர்களுக்குச் சொல்லும் அறிவு அவர்களிடையே பரவும்படி செய்வதுதான்.

இதையெல்லாம் செய்வதற்கு, பிரசாரம் செய்யும் வேலையில் ஈடுபட்டிருப்பவர்களுக்குப் பொறுமை நிறைய இருக்க வேண்டும். தாக்கப்படும் ஹரிஜனங்களைப் பாதுகாக்கும்படி சம்பந்தப்பட்ட அரசாங்கங்களையும் கேட்டுக் கொள்ள வேண்டும். சீர்திருத்தக்காரர்கள் போதிய அளவு இருக்கும் இடங்களில், ஹரிஜனங்கள் தாக்கப்படுவதை தடுக்க தங்களால் முடியவில்லையென்றால், ஹரிஜனங்களுக்கு மத்தியிலேயே அவர்களும் குடியேறிவிட வேண்டும். அறியாமையை ஒழிப்பதற்காக நடத்தும் இப்போராட்டத்தில் சனாதனிகளின் உதவியைப் பெறுவதற்கும் முயற்சிக்க வேண்டும் ஒரு பாவத்தையும் அறியாத ஹரிஜனங்களை, தவறான வழியில் செலுத்தப்பட்டுவிட்ட ஒன்றுமறியாத சாதி ஹிந்துக்கள் கொடுமையாகத் துன்பப்படுத்தி வருவதை, புத்திசாலித்தனமுள்ள எந்தச் சனாதனியும் சரி என்று கூறமாட்டார் என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன்.

—'ஹரிஜன்' – 31—8—1935

# 12

# மேலும் கேள்விகள்

ஆந்திர தேசத்தைச் சேர்ந்த ஸ்ரீ டி. என். சர்மா, நான் கல் கத்தாவிலிருந்த போது என்னை வந்து பார்த்தார். பஞ்சமர் களுக்குச் சேவை செய்து வருவோருக்கு ஏற்படும் கஷ்டங்களைக் குறித்து என்னைச் சில கேள்விகள் கேட்டார். நான் சொன்ன பதில்களை இப்பொழுது எழுதி எனக்கு அனுப்பி, அவற்றைத் திருத்தி, முடிந்தால் பிரசுரிக்கும்படியும் கேட்டுக் கொண்டிருக் கிருர். அவை ஊழியர்களுக்கு உதவியாக இருக்குமாகையால் கேள்விகளையும் என் பதில்களையும் மகிழ்ச்சியுடன் பிரசுரிக் கிறேன் :

கேள்வி 1 : தீண்டாமையைப் போக்குவதற்குப் பிரசாரம் செய்ய என்ன முறைகளை அனுசரிக்க வேண்டும் என்று நீங்கள் யோசனை கூறுகிறீர்கள் ?

பதில் : இப்பொழுது வாய்ப் பிரசாரம் அதிகமாகத் தேவை யில்லை. வேலையே பிரசாரம்தான். 'தீண்டாதார்' நிலைமை ஒழுங்காகும்படி செய்வதற்குப் பயமின்றியும், சமூக பகிஷ் காரத்தைப் பற்றிப் பொருட்படுத்தாமலும் நீங்கள் வேலை செய்துவர வேண்டும். நீங்கள் இருக்குமிடத்திற்கு முக்கிய மானவர்கள் வரும்போது, பிரசங்கங்களுக்கும் நீங்கள் ஏற் பாடு செய்யலாம்.

கே 2 : எங்கள் ஆந்திர மாகாணத்தில் இரண்டு வகையான கருத் துக்கள் இருந்து வருகின்றன. பிரசார வேலை செய்வதற்குப் பஞ்சமர்களல்லாதவர்களுக்குப் பணம் செலவு செய்யக் கூடாது என்று ஒரு தீர்மானம் கொண்டு வரப்பட்டது. முதலில் பஞ்சமர்களுக்குக் கல்வி அறிவு ஏற்படும்படி செய்து, தீண்டாமையைப் போக்க வேண்டும் என்ற கோரிக்கை அவர்களிடமிருந்து வர வேண்டும் என்று சிலர் நினைக் கிருர்கள். உயர்ந்த சாதியினர் மன மாற்றமடையும்படி செய்வதற்கும், தீண்டாமையை அனுசரிப்பது பாவம் என் பதை அவர்கள் உணரச் செய்வதற்கும் பணம் கொடுத்துப் பிரசாரம் செய்ய வேண்டும்; இதற்காகப் பண்டிதர்களையும் ஊழியர்களையும் நியமிக்க வேண்டும் என்று மற்றவர்கள் கருதுகின்றனர்.

ப : பண்டிதர்களுக்காக நான் தம்படியும் செலவு செய்யமாட் டேன். அவர்களுக்கு நீங்கள் பணம் கொடுத்தால், அவர்கள் கூலிக்காரர்களாகி விடுகின்றனர். சம்பளத்திற்காக அவர் கள் வேலை செய்யக் கூடாது. தங்கள் சொந்த நிலைமையை பஞ்சமர்கள் அறிந்து கொள்ளும்படி செய்வதற்காக அவர் களுக்குப் பணம் செலவு செய்ய வேணடும். எப்பொழுதுமே

நம் முறைகள் அகிம்சையோடு கூடியவைகளாக இருக்க வேண்டும். உயர்ந்த சாதியினர் என்று சொல்லப்படுகிற வர்கள், தங்கள் போக்கை மாற்றிக் கொண்டு, தங்கள் சொந்த உயர்விற்காகவும் தூய்மைக்காகவும் தீண்டாமைத் தடையை நீக்க வேண்டும். அவர்கள் அவ்வாறு செய்யாமல், ஹரிஜனங்களை ஒதுக்குவதை விடாமல் செய்து வருவார்க ளானல், 'தீண்டாதார்' அவர்களுக்கு எதிராகப் புரட்சியில் இறங்கிவிடும் காலம் வந்வே தீரும். அப்பொழுது பலாத் கார முறையில்கூட அவர்கள் இறங்கிவிடுவார்கள். அத் தகைய ஆபத்து ஏற்பட்டுவிடாதபடி தடுப்பதற்காகவே என்னல் இயன்றதையெல்லாம் நான் செய்து வருகிறேன். தீண்டாமை என்பது பாவம் என்பதை நம்புகிறவர்கள் எல் லோரும் அவ்வாறே செய்யவேண்டும்.

கே 3: பஞ்சமர்களுக்கு என்றே ஆரம்பிக்கப்படும் பள்ளிக் கூடங்கள், தீண்டாமையை ஒழிப்பதற்கு எந்த வகையிலா வது உதவி செய்யும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

ப: எல்லா கல்வியுமே செய்யவேண்டியதைப் போன்று நாளா வட்டத்தில் இப்பள்ளிக்கூடங்களும் தீண்டாமையை ஒழிக்க உதவி செய்ய வேண்டும். ஆனல், இத்தகைய பள்ளிக்கூடங்கள் பஞ்சமர்களுக்கு மாத்திரம் என்று இருக்கக்கூடாது; மற்ற சாதிக் குழந்தைகளையும் அவற்றில் படிக்க அழைக்க வேண்டும். இப்பொழுது அவர்கள் வர மாட்டார்கள். ஆனல், அப்பள்ளிக்கூடங்கள் நன்ருக நடத் தப்படுமானல், நாளடைவில் துவேஷம் போய்விடும். எல் லோரும் சேர்ந்து படிக்கும் பள்ளிக்கூடம் வேண்டு என்று நீங்கள் விருப்பினல், உங்களிடத்தில் அத்தகைய பள்ளிக் கூடம் ஒன்றை நீங்கள் ஆரம்பிக்க வேண்டும். உங்களுக்குச் சொந்தமாக ஒரு வீடு இருக்கிறது என்று வைத்துக்கொள்ளு வோம். உங்கள் வீட்டிலிருந்து போய்விடும்படி உங்களிடம் யாரும் சொல்ல முடியாது. தீண்டாத சிறுவன் ஒருவனை உங்கள் வீட்டுக்குக் கொண்டு வந்து அவனைக் கொண்டே ஒரு பள்ளிக்கூடத்தை ஆரம்பியுங்கள். மற்ற சிறுவர்களும் அதில் வந்து படிக்கும் படி தூண்டுங்கள்.

கே 4: தீண்டாதார் சிறுவர்களும் மற்ற சிறுவர்களும் சேர்ந்து படிக்கும் பள்ளிக்கூடங்களுக்கே எங்கள் மாகாணத்தில் ஆதரவு கொடுக்கப்படுகிறது.

ப: சரி, அவற்றிற்கு நீங்கள் ஆதரவு கொடுக்கலாம். ஆனல், 'தீண்டாதார்' குழந்தைகள் மாத்திரமே படிக்கும் பள்ளிக் கூடங்களுக்கு ஆதரவு கொடுக்க நீங்கள் மறுக்கக் கூடாது.

கே 5: தீண்டாதார்களைச் சேர்த்துக் கொள்ள மறுக்கும் பள்ளிக் கூடங்கள் ரத்துச் செய்யப்பட்டுவிடும் என்று சில தாலுக்கா போர்டுகளில் உத்தரவுகள் இருக்கின்றன. அத்தகைய

இடங்களில் 'தீண்டாத' சிறுவர் பள்ளியில் சேரும்படி செய்ய நாங்கள் பிரசாரம் செய்து உதவ வேண்டும் என்று நினைக் கிறீர்களா ?

ப: நிச்சயமாக அவ்வாறு செய்ய வேண்டும். அவர்களுக்கு நீங்கள் உதவி செய்யவேண்டும். ஆனால் இதற்கென்று விசேஷப் பிரசாரகர்கள் தேவையில்லை. இந்த வேலைக்கு உங்கள் ஊழியர்களே போதும்.

கே 6: அப்படியானல் பிரசார வேலையைப் பற்றி என்ன சொல்லுகிறீர்கள்? பேச்சில்லாமல் வேலை செய்தாலே போதும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா ?

ப: ஆம். பஞ்சமர்களை உயர்த்துவதற்குத் திட்டமான வேலை இல்லாதபோது பிரசாரத்தினல் எந்தப் பயனும் இல்லை. (இச்சந்தர்ப்பத்தில் காந்திஜி வைக்கம் சத்தியாக்கிரகத்தை பற்றிக் குறிப்பிட்டு அதனல் அப்பகுதியிலுள்ள மக்க ளிடையே மகத்தான மாறுதல்கள் ஏற்பட்டன என்ருர்.)

கே 7: இத்தகைய பிரச்னைகள் எழும்போது பிரசாரத்திற்காக நாங்கள் தாராளமாகப் பணம் செலவிடுவதா?

ப: தாராளமாக அல்ல; திட்டமான நல்ல வேலையே பிரசாரம் தான். வைக்கத்தில் பணமெல்லாம் ஆக்க வேலைக்காகவே செலவிடப்பட்டது.

கே 8: தீண்டாமைப் பிரச்னையைச் சமீபத்தில் அதிகத் தீவிரமாக எடுத்துக்கொள்ளப் போகிறீர்களா ?

ப: அப்பிரச்னையைச் சாத்தியமான அளவு தீவிரமாக நான் இப் பொழுதே எடுத்துக் கொண்டிருக்கிறேன். சாத்தியமான இடங்களிலெல்லாம் அவர்களுக்காகப் பள்ளிக்கூடங்களை ஆரம்பிக்கவும், கிணறுகள் வெட்டவும், கோயில்கள் முதலிய வைகளைக் கட்டவும் முயன்று வருகிருேம். பணம் இல்லை என்பதற்காக வேலை நின்றுவிடவில்லை. இவைகளையெல் லாம் பத்திரிகைகளில் விளம்பரம் செய்யவில்லை என்பதனல், அவர்களுக்காக எதுவும் செய்யவில்லை என்று நீங்கள் நினைக் கிறீர்கள் போலும்.

கே 9: பெல்காமில் செய்திருக்கும் தீர்மானத்தின்படி, பஞ்சமர் களைச் சேர்த்துக் கொள்ள மறுக்கும் எந்தப் பள்ளிக்கூடத் தையும் 'தேசீய'ப் பள்ளிக்கூடம் என்று சொல்லக்கூடாது.

ப: நிச்சயமாக அப்படித்தான். அவை தேசீயப் பள்ளிக்கூடங்க ளாகமாட்டா.

கே 10: அத்தகைய பள்ளிக்கூடங்களைத் தேசீயப் பள்ளிக்கூடங் கள் என்று சொல்லுவதற்கு வேண்டிய மற்ற தகுதிகளெல் லாம் இருந்த போதிலும், அத்தகைய பள்ளிக்கூடங்களுக்குக்

காங்கிரஸ் நிதியிலிருந்து உதவிசெய்யக்கூடாது என்று கூறுகிறீர்களா?

ப: எந்த உதவியும் செய்யக்கூடாது.

—'எங் இந்தியா' – 10—9—1925

# 13

# திரும்பவும் மதம் மாற்றுதல்

கேள்வி: திரும்பவும் ஹிந்து சமயத்திற்கு வந்துவிட விரும்புகிறவர்கள் சம்பந்தமாக நீங்கள் கருதுவது என்ன?

பதில்: 'நீங்கள் தாராளமாக வரலாம்' என்று சொல்லிவிட வேண்டியதுதான். ஆனால், திரும்பவும் மதம் மாறிவந்துவிட விரும்புகிறவர்களுக்கு நீங்கள் எந்தவிதமான தூண்டுதலும் செய்யக்கூடாது.

கே: அதுவல்ல. அந்தப் பிரச்னையே இல்லை. சுத்திச் சடங்கு செய்து அவர்களை ஹிந்து சமயத்தில் சேர்த்துக் கொள்ளுவதை நீங்கள் அங்கீகரிப்பீர்களா என்பதை அறியவே விரும்பினேன்.

ப: சுத்திச் சடங்கு எதுவும் அவசியமில்லை. அவர்கள், விரும்பி மதம் மாறியவர்களாக இருந்தால், அவர்கள் தாங்கள் செய்துவிட்டதற்காக வருந்தி திரும்பி வருவார்கள். அந்த நிலையில் அவர்களைத் திரும்ப ஏற்றுக் கொள்ளுகிறவர்கள், அவர்கள் ஏதோ சுத்தி செய்ய வேண்டும் என்று விரும்பலாம். அவர்கள் ராம நாமத்தை நூறு தரம் உச்சரிக்க வேண்டும் என்றுதான் நான் சொல்லுவேன்.

கே: இது போன்ற வகையில் வலியச் செய்துகொள்ளும் சுத்திச் சடங்கிற்கு ஹரிஜன ஊழியர் ஒருவர் போவதை நீங்கள் ஆட்சேபிக்கமாட்டீர்களா?

ப: அத்தகைய சடங்குகளில் கலந்துகொள்ளுவதில் எந்த ஆட்சேபமும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. ஆனால், ஹரிஜன சேவா சங்கத்தின் வேலைத் திட்டத்தின் ஒரு பகுதியல்ல சுத்திச் சடங்கு என்பதை அவர் தெளிவாக அறிந்திருக்க வேண்டும். அதோடு, திரும்பவும் மதமாற்றம் செய்து கொள்ள விரும்புகிறவர், முற்றிலும் சுயேச்சையாகவும், பிறர் தூண்டுதல் எதுவும் இல்லாமலும் செய்கிறாரா என்பதையும் ஹரிஜன ஊழியர் நிச்சயமாகத் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். திரும்பவும் மதம் மாற்றிக்

கொண்டுவிட விரும்புகிறவர், மனப்பூர்வமாகவே அவ்விதம் விரும்புகிருர் என்பதை நன்ருக அறிந்திருக்கிருரா என்பது தான் கேள்வி. அப்படி நிச்சயமாக அறிந்திருந்தால், அவ ருடன் நட்பாக இருப்பதற்கானதையெல்லாம் செய்யுங்கள்.

—'ஹரிஜன்' – 4—7 – 1936

## 14

# ஹரிஜன ஊழியரின் கேள்விகள்

கேள்வி : *தீண்டாமை ஒழிப்பு எளிதில் செய்துவிடக் கூடியதாகத் தோன்றவில்லை. அதை நாங்கள் சரியான வகையில் சமா ளிப்பதுதான் எப்படி?*

பதில் : பேசாமல் கஷ்டப்பட்டு வேலை செய்துகொண்டே போவது தான். சேகானில் நான் அவ்வேலையை எப்படிச் செய்து கொண்டு வருகிறேன் என்பதை உங்களுக்குக் கூறுகிறேன். அவர்களுக்கு நான் பிரசாரம் செய்வதில்லை. ஆனல், பலனைக் குறித்து எண்ணுமல் வேலையைச் செய்துகொண்டே போகிறேன். எந்த ரூபத்திலும், முறையிலும் தீண்டாமை இருந்து விடுவதற்கு இடம் கொடுத்துவிடக்கூடாது என்பது தான் ஒரு நிபந்தனை. என்னைச் சுற்றி சாத்தியமான வரை யில், எவ்வளவு அதிகமாக ஹரிஜனங்களை வைத்துக்கொள்ள முடியுமோ அவ்வளவு பேரையும் வைத்துக்கொண்டிருக் கிறேன். அவர்கள் வேலைக்காரர்களாக வருகிருர்கள். ஆனல், அவர்கள் எங்களுக்குச் சகோதரர்களே என்பதைச் சீக்கிரத்தில் தெரிந்துகொண்டு விடுகின்றனர். ஹரிஜனங் களுக்குள் பாகுபாடுகள் இருப்பதையும் நாங்கள் சகிப்ப தில்லை. மௌனமாகச் செய்து வரும் இச்சேவையின் திட்ட மான பலன் இன்னது என்பதை நான் இப்பொழுது சொல்ல முடியாது போனுலும், ஹரிஜனங்கள், வைதிக ஹிந்துக்கள் ஆகிய எல்லோரிடத்திலுமே நல்ல மாறுதல் இருந்து வரு கிறது என்பதை நான் சொல்ல முடியும்.

கே : *கவிதாவில் ஊரைவிட்டு வெளியேறிவிட வேண்டும் என்று அங்கிருந்த ஹரிஜனங்கள் எண்ணியது போல எண்ணுத இடங்களில், ஹரிஜனங்களுக்குத் தாங்கள் இருக்கும் ஊரை விட்டு வந்துவிடுவது அவ்வளவு எளிதாக இல்லை. அப்படி யிருக்க அவர்களுக்கு எப்படி வேலை கிடைக்கும்?*

ப : அப்பொழுது நான் சொன்ன யோசனையையே திரும்பவும் கூறுகிறேன். அந்தக் கிராமத்திலேயே இருந்து, தொடர்ந்து செய்யப்பட்டு வரும் கொடுமைகளுக்கு உட்பட வேண்டும் என்று அவர்களுக்குச் சொல்ல நாம் வெட்கப்பட வேண்டும்.

அவர்களுக்கு வேலை தேடிக் கொடுப்பது நமக்கு அசாத்தியம் என்று இருக்கக்கூடாது. ஊரைவிட்டுப் புறப்பட்டு விடுகிற வர்களின் தொகை அதிகமாக இராது.

கே: அநேக இடங்களில் 'பங்கி'களின் நிலை பரிதாபகரமானதாக இருக்கிறது. முனிசிபாலிடிகளிலிருந்து தங்களுடைய சாதா ரண உரிமைகளை அவர்கள் பெறுவது எப்படி?

ப: நிலைமை எப்படி இருந்தாலும் வேலை செய்துதான் வர வேண்டும் என்று தாங்கள் கடமைப்பட்டிருக்கவில்லை என் பதை அவர்கள் அறியவேண்டும். தாங்கள் சொல்லுவதை முனிசிபாலிடிகள் கேட்கவில்லையென்றால், அவர்கள் வேலையை விட்டுவிடலாம். ஆனால், நாம் அவர்கள் மத்தி யில் குடியிருந்து, விஷயங்களை அவர்கள் அறியும்படி செய்ய வேண்டும். அவர்கள் வேலை நிறுத்தம் செய்யும் நிலைமையை உண்டாக்கிவிடும் மோசமான முயற்சிகளைச் செய்யக்கூடாது. தங்களுக்கு நண்பர்களும் இருக்கிறார்கள் என்பதை அவர்கள் அறிந்துகொள்ளுவதற்குச் சொல்லித் தர வேண்டும். மற்றவர்களைப் போலவே வேலை நிறுத்தஞ் செய்வதற்கு அவர்களுக்கும் உரிமை இருந்தபோதிலும், அதன் எல்லையை அவர்கள் அறிய வேண்டும். மற்ற சமூக சேவைகளைப் போன்றே தாங்கள் செய்யும் வேலைக்கும் சம மான கௌரவம் உண்டு என்பதை அவர்கள் அறிந்து கொள்ளச் செய்ய வேண்டும். சமூக ஊழியர்கள் எல்லோரி லும் அதிகமாகக் கவனிப்பாரற்று இருப்பவர்கள் அவர்கள். அவர்களுக்கு நம்மாலியன்ற எல்லா உதவிகளையும் செய்ய வேண்டும் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை.

கே: நமது ஆசிரமங்கள், ஸ்தாபனங்கள் ஆகியவைகளின் பொரு ளாதார நிலைமை ஆபத்தானதாக இருந்து வருகிறதே, இதைக் குறித்து என்ன நினைக்கிறீர்கள்?

ப: நமது பண நிலைமை அல்ல; ஆனால், நமது ஒழுக்க நிலைமை தான் ஆபத்தான நிலையில் இருக்கிறது. நடந்திருக்கும் ஒழுக்கக் கேடான காரியங்களைப் பற்றி நீங்கள் அறிவீர்கள். தூய்மை ஒன்றுதான் சமூகத்திற்கு அஸ்திவாரம். ஓர் இயக் கம் அல்லது ஒரு வேலை, அதன் ஊழியர்களின் தூய ஒழுக்கத்தின் உறுதியான அஸ்திவாரத்தின் மீது அமைந்த தாக இருக்குமானால், பணம் இல்லாததனால் அது நின்று போய்விடும் என்ற ஆபத்து என்றுமே இருக்காது. பணக் காரர்களை மாத்திரமே நாம் எப்பொழுதும் எதிர்பார்த்துக் கொண்டு இருந்துவிடக்கூடாது என்பதையும் குஜராத்தி லிருக்கும் நாம் தெரிந்துகொள்ள வேண்டும். சாதாரணமான வர்களிடமிருந்தும் உதவியைப் பெறப் பார்க்க வேண்டும். நமது மத்தியதர வகுப்பினரும், ஏழைகளும், எத்தனையோ பிச்சைக்காரர்களைக் காப்பாற்றி, கோவில்களுக்கும் உதவி

வருகிறார்கள். சில நல்ல ஊழியர்களை அவர்கள் ஏன் காப்பாற்றமாட்டார்கள்? வீடுதோறும் நாம் பிச்சை எடுக்க வேண்டும். தானியங்கள், செப்புக்காசுகளைப் பிச்சையாக, பீகாரிலும் மகாராஷ்டிரத்திலும் செய்வதைப் போல, நாம் வாங்க வேண்டும். மகாராஷ்டிரத்தில் பைசா நிதி, பிடி தானிய நிதி என்றெல்லாம் வைத்திருக்கிறார்கள். சாதி ஹிந்துக்களிடையே பிரசாரம் செய்வதற்கு இதுவே மிகச் சிறந்த முறை. ஆனால், இவையெல்லாம், உங்களுடைய ஒரே நோக்கத்தையும், இவ்வேலையில் உங்களுக்கு இருக்கும் பக்தியையும், உங்களிடம் இருக்கும் தூய்மையான ஒழுக்கத்தையுமே பொறுத்திருக்கின்றன என்பதையும் நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். நாம் சுயநலமின்றிச் செய்கிறோம் என்பதை மக்கள் நிச்சயமாகத் தெரிந்துகொண்டாலன்றி இத்தகைய வேலைகளுக்கு மக்கள் கொடுக்கமாட்டார்கள்.

கே: கிறிஸ்தவர்களாகிவிட்ட ஹரிஜனங்கள் எந்தவிதத்திலும் நன்றாக இருந்துவிடவில்லை. அவர்கள் விஷயம் என்ன?

ப: தீண்டாமை ஒழிந்துவிட்டவுடனே எல்லாம் சரியாகிவிடும். தீண்டாமை இல்லை என்றால், ஹிந்துக்களல்லாத வேறு ஒரு வகையினர் தாங்கள் என்று அவர்கள் சொல்லிக்கொள்ளுவதற்கே அவசியம் இல்லை. பெயரளவில் கிறிஸ்தவர்களாகியிருப்போரைப் பற்றியே கூறுகிறேன். நம் வீட்டை நாம் சரியாக வைத்துக்கொண்டு விடுவோமானால், மேல் சட்டையை மாற்றிக்கொள்ளுகிறவர்களைப் போன்று மதத்தை மாற்றிக்கொள்ளும் ஹரிஜனங்களைக் குறித்து நாம் கவலைப் பட வேண்டிய அவசியமே இல்லை.

கே: தீண்டாமை ஒழிப்பு வேலைக்கு சாதி ஹிந்துக்களின் ஒத்துழைப்பைப் பெறுவது அசாத்தியமாக இருந்தால், கிராமக் கைத்தொழில் வேலையை எடுத்துக்கொள்ளுவது நல்லதல்லவா?

ப: இது வெறும் மயக்கம். இது போன்ற சாக்குப் போக்கின் பேரில் ஹரிஜன வேலையை விட்டுவிடுகிறவர், கிராமக் கைத்தொழில் வேலையில் மாத்திரம் அதிகமாகச் செய்துவிட முடியாது என்பது நிச்சயம். சமூகத்தின் அஸ்திவாரமான ஹரிஜனங்களைக் கவனிக்காமல் நீங்கள் கிராமத்திற்குப் போய் இருந்துவிட முடியாது.

—'ஹரிஜன்' – 28—11—1936

# 15

# ஹிந்து திருவிழாக்கள்

ஒருவர் கீழ்வருமாறு எழுதுகிறார்:

"காலஞ் சென்ற லோகமான்யர் ஆரம்பித்த ஸ்ரீ கணேச உற்சவம் சமீபத்தில் வருகிறது. அச்சமயம் அவ்வைபவத்தில் பேசுவதற்கு நமது மந்திரிகள் பலரும், தலைவர்களும் அழைக்கப்படுவார்கள். ஹரிஜனங்களும் அவ்வைபவத்தில் கலந்துகொள்ள அனுமதிக்கப்பட்டால் மாத்திரமே இவர்கள் அழைப்பை ஏற்றுக்கொண்டு அங்கே போக வேண்டும் என்று யோசனை கூற விரும்புகிறேன். அக்கூட்டத்தில் பேசப் போகும்போது, ஒரு ஹரிஜனையாவது அவர்கள் ஒவ்வொருவரும் தம்முடன் அழைத்துச் செல்வது என்றும் வைத்துக் கொள்ள வேண்டும்."

மேலே கண்ட யோசனை சரியானது. தீண்டாமையை ஒழித்துவிட வேண்டும் என்று சாதி ஹிந்துக்கள் உண்மையாகவே விரும்புவார்களானால், அவர்கள் பகிரங்கமாக ஹரிஜனங்களுடன் பழக வேண்டும்; முக்கியமாக ஹிந்து திருவிழாக்கள் போன்றவைகளில் அவ்வாறு செய்ய வேண்டும்.

—'ஹரிஜன்' - 25—8—1946

பகுதி பதினெட்டு

# ஹரிஜன சேவா சங்கம்

## 1

## அவர்கள் நம்மைப் பார்க்கும் விதம்

தீண்டாதார் ஊழியர்களின் சங்கத் தலைமை ஸ்தாபனத்தை ஆரம்பித்ததுமே அதன் மீதும், மாகாண ஸ்தாபனங்களின் பேரிலும் புகார்கள் கிளம்பியிருக்கின்றன. இயல்பாகவே இப் புகார்கள் ஹரிஜனங்களிடமிருந்துதான் வருகின்றன. இப்படி எனக்கு எழுதியிருப்பவர்களில் ஒருவர், அதிக ஆற்றலுடன் கடிதம் எழுதியிருக்கிறார். நான் விரும்பினால் விவரம் கொடுப்பதாகவும் கூறியிருக்கிறார். அவர் சொல்லுவது சரியாக இருக்கும் என்று எண்ணி விவரம் கொடுக்குமாறு அவரைக் கேட்டேன். இதற்குப் பதிலாக அவர் எனக்கு அனுப்பியிருக்கும் கடிதம், முந்திய கடிதத்தைவிட அதிகத் திறமையுடன் எழுதப்பட்டிருக்கிறது. எந்தப் பரிசோதகரின் சிறந்த அறிக்கையுடனும் போட்டி போடக் கூடியது இக் கடிதம். இதை எழுதியிருப்பவரின் மாகாணத்தில் ஹரிஜன முன்னேற்றத்திற்கென்று வேலை செய்யும் ஒவ்வொரு ஸ்தாபனத்தைப் பற்றிய சுருக்கமான அறிக்கையும் அதில் அடங்கியிருக்கிறது. போதுமான விவரங்களையெல்லாம் அவர் எனக்குக் கொடுத்துவிட்டு, விலக்கு என்றில்லாமல் அநேகமாக எல்லா ஸ்தாபனங்களைக் குறித்தும் அவர் வந்திருக்கும் ஒரே முடிவு இதுதான் :

“இந்த ஸ்தாபனங்களெல்லாம் முக்கியமாக சாதி ஹிந்துக்களினாலேயே நடத்தப்படுகின்றன. இப்படி செய்வதற்கு அவர்கள் சொந்த சுயநலம் இருக்கிறது. இல்லையானால், நல்ல சம்பளம் கிடைக்கும் வேலைகள் அவர்களுக்கு வேண்டியிருக்கிறது. இந்த ஸ்தாபனங்களில் சில, அதிகப்பட்சமாகச் செய்திருப்பது, மிகச் சில ஹரிஜனச் சிறுவர்களுக்கு உபகாரச் சம்பளத்தை வீசி எறிந்திருப்பதுதான். வேறு சில ஸ்தாபனங்கள், பிரமாதமாகப் பிரசங்கங்கள் செய்து வருகின்றன. இவை யாவும் எங்களுக்குப் போஷகராக வந்திருக்கின்றன. ஊழியராக வராதது மாத்திரமல்ல, அவற்றில் எதுவும் நண்பராகவோ, சமத்துவமானதாகவோ வரவில்லை. உங்கள் மாகாண ஸ்தாபனமும் இதில் விலக்கு அல்ல. பயந்து நடுங்கிக்கொண்டு போகாமல் அதன் பிரதானஸ்தரிடம் ஒரு ஹரிஜன் போவதே கஷ்டமாக இருக்கிறது. சீறி விழப்படுவார் என்ற ஆபத்து, போகிறவருக்கு எப்பொழுதும் இருந்து வருகிறது.”

இக்கடிதத்தை எனக்கு எழுதியிருப்பவர், தமது யோசனைகளையும் கூறியிருக்கிறார். சுருக்கமாகச் சொன்னால் அவர் கூறுவது இதுதான் :

"இப்பொழுது ஏற்பட்டிருக்கும் விழிப்பை நீங்கள் பயன்படுத்திக் கொள்ளுவதானால், ஆரம்பக் கல்வி எல்லோருக்கும் கிடைக்கும் வகையில் நீங்கள் உங்கள் கவனம் முழுவதையும் செலுத்த வேண்டும். வெகு நீண்ட காலமாக இருந்து வந்திருக்கும் அறியாமையை, கல்வியைப் பரப்பாமல் உங்களால் போக்கிவிடமுடியாது. நாங்கள் நிச்சயமாக உதவி செய்வோம், ஆனால், சாதி ஹிந்துக்கள் தீண்டாமையைப் போக்கவும், எங்களைத் தங்களில் ஒருவராக்கவும் விரும்புகிறார்கள் என்பதைப் பார்க்கும்போது, கல்வியைப் பரப்புவதற்கு அவர்கள் பணத்தையும் உழைப்பையும் உபயோகிப்பதைவிட சிறந்தது எதுவும் இருக்க முடியாது."

மேற்கொள்ளப்படும் எந்த வேலைத் திட்டத்தின் சம்பந்தமாகவும் ஹரிஜனங்களின் கருத்து என்ன என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம். தீண்டாமையை ஒழிப்பது, சாதி ஹிந்துக்களைப் பொறுத்த வரையில், அது ஒரு பிராயச்சித்தமும், தூய்மையாக்கிக் கொள்ளுவதுமான காரியம். ஆகையால், எல்லா இடங்களிலும் பள்ளிக்கூடங்களை ஆரம்பிப்பதைவிட, அவர்கள் இன்னும் அதிகமாகச் செய்ய வேண்டியிருக்கிறது. இத்தகைய பள்ளிக்கூடங்களை எங்கே ஆரம்பிக்கலாம் என்பதைக் குறித்து நான் மற்றோர் இடத்தில்* விவரமாகக் கூறியிருக்கிறேன். ஹரிஜனங்கள் எல்லோருடைய மனத்திலும் என்ன எண்ணத்தை உண்டாக்கியிருக்கிறார்கள் என்பதைக் கொண்டே சாதி ஹிந்துக்கள் நடந்து கொண்டிருப்பதைச் சோதிக்க முடியும். அவர்களுக்கு ஆதரவான வகையில் நாம் மாறுதல் அடைந்திருப்போமானால், அந்த மாறுதலை அவர்கள் ஆயிரம் வகையில் உணர்வார்கள். நாம் செய்யும் காரியங்கள், அதாவது சாதி ஹிந்துக்கள் செய்கிறவை, ஹரிஜனங்களின் வாழ்க்கையின் ஒவ்வொரு பகுதியிலும் மாறுதலை உண்டாக்கும். மூலை முடுக்கிலிருக்கும் கிராமத்தில்கூட, ஹரிஜனங்களும் சாதி ஹிந்துக்களும், ஒருவரைக் கொண்டு மற்றொருவர் வாழ வேண்டியவர்களாக இருக்கிறார்கள். ஆகையால், இவ்விதம் இருந்துவரும் நிலைமையை, நாம் விரும்பினாலும், பொதுவாக நாட்டிற்குப் பெருந்தீங்கை விளைவிக்காமல் போக்கிவிட முடியாது. இவ்விதம் ஒருவரை மற்றொருவர் நம்பி வாழ வேண்டியவர்களாக இருந்துவரும் நிலைமை, இன்று அடிமைக்கும் எஜமானுக்கும் இருக்கும் உறவாக இருந்து வருகிறது. பூரணமான மத சமத்துவம் இவர்களுக்குள் ஏற்பட்டாலன்றி, இந்த நிலையை ஒழுங்குபடுத்தவே முடியாது. இது மகத்தானதோர் வேலை. ஆனால், இந்த லட்சியத்தை நெருங்கி நாம் போகப் போக, முழு அடிமைக்கும் பூரணமான மத சமத்துவத்திற்கு மிடையே நடுவாந்தரக் கட்டம் என்பது எதுவுமே இல்லை

* 'பொதுப் பள்ளிக்கூடங்கள்' என்ற தலைப்பில் காந்திஜி எழுதிய கட்டுரையையே இங்கே குறிப்பிடுகிறார். அது இத்தொகுப்பில் 370-ஆம் பக்கத்தில் பிரசுரமாகியிருக்கிறது.

என்பது ஒவ்வொரு சாதி ஹிந்துவுக்கும் தெளிவாக வேண்டும். இதனுலேயே, நாம் செய்ய வேண்டியிருக்கும் மற்ற காரியங்களைக் கவனிக்கத் தவறிவிடாத அதே சமயத்தில், ஆலயப் பிரவேசத்தைப் பணிவுடன் வற்புறுத்திக் கொண்டுவருகிறேன்.

எனக்குக் கடிதம் எழுதியிருப்பவர், தமது தாக்குதலுக்கு ஆளாகியிருக்கும் பல ஸ்தாபனங்களிலும் ஆடம்பரமாகப் பணம் செலவிடப்படுகிறது என்று கற்பனை செய்துகொண்டு கடுமையாக விவாதிக்கிருர். ஸ்தாபனங்களை நிர்வகிப்பதில் அதிக சமர்த்தன் என்று நான் என்னைச் சொல்லிக் கொள்ளுகிறேன். ஒரு ஸ்தாபனத்தின் நிர்வாகச் செலவு, வருவாயில் 5 சத விகிதத்திற்கு அதிகமாகப் போகக் கூடாது என்பதே சிறந்ததென்ருலும், 10 சத விகிதத்திற்கு அதிகமாகப் போகக்கூடாது; மீதத் தொகை முழுதும், ஸ்தாபனம் எந்த லட்சியத்திற்காக ஆரம்பிக்கப்பட்டிருக்கிறதோ அதற்காகச் செலவிடப்பட வேண்டும் என்ற விதியின் பேரிலேயே நடந்துகொண்டு வருகிறேன். மத்திய போர்டையும், மாகாண போர்டுகளையும், சாதி ஹிந்துக்கள் தனியாக நடந்தும் ஹரிஜன ஸ்தாபனங்களையும் இந்த விதியைக் கொண்டு சோதித்துப் பார்க்குமாறு யோசனை கூறுகிறேன். இந்த ஸ்தாபனங்கள், ஹரிஜனங்களுக்குச் செலவழிப்பதைவிட அவற்றை நடத்துவதற்கே அதிகமாகச் செலவு செய்துவருகின்றன என்று சொல்லப்படாமலிருக்கப் பார்ப்போம்; ஹரிஜன நன்மைக்கு என்று வரும் பணத்தில் ஒவ்வொரு நூறு ரூபாய்க்கும் தொண்ணூறு ரூபாய் ஹரிஜனங்களின் மடிக்கே போய்ச் சேரும்படி பார்ப்போமாக. ஆகையால், ஊதியமில்லாமல் வேலை பார்ப்பவர்களே நம் அதிகாரிகளாக இருக்க வேண்டும். சம்பளம் கொடுக்க வேண்டியிருக்கும் போது, அந்தச் சம்பளம் உயர்ந்த சம்பளமாக இருக்கக் கூடாது. சாத்தியமான இடங்களில் ஹரிஜனங்களையே வேலைக்கு அமர்த்திக் கொள்ள வேண்டும். ஆட்களைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டும். தாம் பார்த்த ஸ்தாபனங்களில் இருக்கும் பியூன்கள் ஹரிஜன வகுப்பிலிருந்து நியமிக்கப்பட்டவர்கள் அல்ல என்று எனக்குக் கடிதம் எழுதியிருப்பவர் கூறுகிருர்.

நான் சுருக்கிக் கொடுத்திருக்கும் குற்றச்சாட்டுகளையும், நான் கூறியிருக்கும் யோசனைகளையும் கொண்டு, ஹரிஜன சேவைக்கு என்றிருக்கும் ஒவ்வொரு ஸ்தாபனமும் தன்னைத் தானே சோதித்துக் கொள்ளட்டும்.

—'ஹரிஜன்' – 4—3—1933

## 2

# ஹரிஜன தினம்

அசாதாரணமான முயற்சிக்கு மாத்திரமே விசேஷமாக ஒரு தினத்தைக் குறிப்பிட வேண்டியது அவசியமாக இருக்கும். ஹரிஜனங்களின் விஷயம் போன்ற புனிதமான காரியத்தில் ஒரு விசேஷ தினம், அதிகமாக அர்ப்பணித்துக் கொள்ளுவதற்கும், பிரார்த்தனைக்கும், தீவிரமான வேலைக்குமான நாளாகவே இருக்க வேண்டும்.

அந்த நாளை ஏறக்குறைய கீழ்வரும் வகையில் நான் பிரித்துக் கொள்ள வேண்டும் :

1. அத்தினத்தை நான் பிரார்த்தனையுடன் காலை 5 மணிக்கு ஆரம்பிக்க வேண்டும் எனக்கு இருக்கும் வசதியை அனுசரித்து இந்தக் காரியத்திற்கென்று கொஞ்சம் பணத்தையோ, துணியையோ, தானியத்தையோ தனியாக ஒதுக்கி வைத்துவிட வேண்டும். அதிக ஏழைகளாக இருப்பவர்களும் கூட, ஒருவேளை தாங்கள் சாப்பிடாமலோ, அந்த ஒரு வேளைச் சாப்பாட்டில் ஒரு பகுதியைக் கொண்டோ எந்தவிதமான சிரமமுமின்றி இதைச் செய்யலாம். பண்டங்களாக அளிக்கப்படுபவைகளைப் பணமாக்கி விடுவது நல்லது. அப்படிச் செய்வது சாத்தியமாகாத இடங்களில், உதவி அவசியமாகும், கஷ்டப்படும் ஹரிஜனங்களுக்கு அப்பண்டங்களைக் கொடுத்துவிட வேண்டும்.

2. குடும்பத்துத் தோட்டி யாராவது இருந்தால், அத்தோட்டியின் வேலையை அக்குடும்பமே செய்துகொள்ள வேண்டும்; அல்லது தோட்டியின் வேலையை அக்குடும்பம் பகிர்ந்து கொள்ளவாவது வேண்டும். ஒரு தோட்டி செய்துவரும் சேவையின் தன்மை இன்னது என்பதை இதனுல் ஒருவர் அறிந்து கொள்ள முடியும். அதோடு, இத்தகைய வேலையை அபிவிருத்தியுடன் கூடிய முறைகளினுல் செய்வதும் உண்டாகும். கக்கூசுகள் போன்றவைகளை உபயோகித்துக் கொள்ளும் அநேகருக்கு, 'துடைப்பத்தின் வீரர்கள்' செய்துவரும் வேலையின் முக்கியத்துவம் கவனத்துக்கு வருவதே இல்லை. நமக்குள் தீண்டாமை இல்லாமலிருக்குமானுல், தோட்டிகள் செய்யும் வேலையை நாமும் எப்போதாவது பகிர்ந்துகொண்டு வருவோமானுல், வீட்டுக் கக்கூசு போன்றவைகளை வைத்திருப்பதிலேயே நாம் மாறுபட்ட முறையைக் கொண்டிருந்திருப்போம்.

3. இந்த இரண்டு காரியங்களையும் செய்துவிட்ட பிறகு, எல்லோரும் சேர்ந்து செய்ய வேண்டியதான வேலைக்கு நாம் தயாராகிறோம். இந்த வேலை, வீடுதோறும் பணமாகவோ, பண்டமாகவோ வசூல் செய்வதுடன் ஆரம்பமாக வேண்டும். இந்த வேலை

குறிப்பிட்ட நேரத்திற்குள் முடிந்துவிட வேண்டும். அவ்விதம் வசூல் செய்த பணம் முதலியவைகளை உள்ளூர் கமிட்டியிடம் கொடுத்துவிட வேண்டும். அக்கமிட்டியோ, தனக்கு மேலுள்ள கமிட்டிக்கு அவற்றை அனுப்ப வேண்டும். இவ்விதம் மாகாணத் தலைமைக் காரியாலயத்திற்கு அவை போய்விட வேண்டும். வசூலுக்குப் போகிறவர்கள், புத்திசாலித்தனத்துடன் தேர்ந் தெடுத்து துண்டுப் பிரசுரங்கள், புத்தகங்கள், 'ஹரிஜன்' பத்திரி கைப் பிரதிகள் ஆகியவற்றையும் தங்களுடன் கொண்டு போக வேண்டும். தேவைக்கு ஏற்றபடி ஆங்கில 'ஹரிஜன்' பிரதி களையோ, தாய்மொழிப் பிரதிகளையோ கொண்டு போகலாம். இத்தகைய பிரசுரங்களை விற்க வேண்டும்; இனமாகக் கொடுக்க வேண்டியிருந்தால் இனமாகவும் கொடுத்துவிட வேண்டும். ஆனால், தான் வாங்கிய பிரதிகளின் விலையை ஒவ்வொரு கமிட்டி யும் பொறுத்துக்கொள்ள வேண்டும், 'ஹரிஜன்' பிரதிகள் அதிகப் படியாகத் தேவைப்பட்டால், அப்படி தேவைப்படும் பிரதிகளை முன்கூட்டியே பிரசுரகர்த்தர்களுக்குத் தெரிவித்து வாங்கிக் கொள்ள வேண்டும்.

4. ஒவ்வோர் இடத்திலும் ஹரிஜனங்கள் குடியிருக்கும் இடங்களுக்குப் போகவேண்டும். அங்கே சுத்தம் செய்வது அவசியமாக இருக்கும் இடங்களைச் சுத்தம் செய்ய வேண்டும். ஹரிஜனங்களைக் கூட்டிப் பேசி, அவர்களுடைய தேவைகள் யாவை என்பதைக் குறித்துக்கொள்ள வேண்டும். தீண்டா மையை ஒழிப்பதில் அவர்கள் செய்ய வேண்டிய காரியங்களை அவர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். செத்த கால்நடை களின் மாமிசத்தைத் தின்பதை அவர்கள் விட்டுவிட வேண்டும் என்று கேட்டுக்கொள்ளும்போது, அதற்கு ஆதரவாக டாக்டர் தேஷ்முக் கூறியிருக்கும் ஆதாரபூர்வமான அபிப்பிராயத்தை உப யோகித்துக் கொள்ளவேண்டும். குழந்தைகள். ஹரிஜனக் குழந்தைகளுக்குக் கூட்டங்களை ஏற்பாடு செய்யலாம்; வெளியில் அழைத்துச் சென்று முக்கியமான இடங்களைக் காட்டலாம். கக்கூசு முதலியவைகளை அபிவிருத்தியான முறைகளில் அமைப்ப தற்கு இருக்கும் சாத்தியங்களையும் கவனிக்க வேண்டும். இதனால் ஏற்படும் செலவை மக்கள் மனமார ஏற்றுக்கொள்ளுவார்க ளானால், இவ்வேலை கஷ்டமானதுமல்ல; அதிகச் செலவாகக் கூடியதும் அன்று. இதைச் செய்வதால் முடிவில் சமூகத்தின் சுகாதாரமும் செல்வமுமே விருத்தியாகும்.

5. சாதி ஹிந்துக்களும் ஹரிஜனங்களுமடங்கிய பொதுக் கூட்டத்தை நடத்துவதோடு அத்தினம் முடிய வேண்டும். தீண் டாமையை ஒழிக்க அக்கூட்டம் பிரதிக்ஞை செய்துகொள்ளுவ தோடு, ஆலயப் பிரவேசத்திற்கு அனுமதிக்கும் சட்டம் நிறைவேற வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தியும் அக்கூட்டத்தில் தீர்மானங்களை நிறைவேற்ற வேண்டும்.

6. பொதுஜன அபிப்பிராயம் சாதகமாக இருக்கும் இடங்களில், பொதுக் கிணறுகளையும், தனிப்பட்ட கோயில்களையும் ஹரிஜனங்களுக்குத் திறந்துவிட வேண்டும்.

செய்திருக்கும் வேலையைக் காட்டும் சரியான அறிக்கையை மத்தியக் கமிட்டிக்கு அனுப்ப வேண்டும்.

—'ஹரிஜன்' – 15—4—1933

## 3

# கடன்பட்டவர்களும் கடன் கொடுத்தோரும்

ராஜமகேந்திரபுரத்தில் ஒரு ஹரிஜன தூதுகோஷ்டியினர் காந்திஜியைச் சந்தித்து, அவருடன் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தனர். பல விஷயங்களைக் குறித்து விவாதித்தார்கள். அறிவும், திறமையும் மிக்கவர்கள் தங்களிலேயே அநேகர் இருக்கிறார்கள் என்றும், ஆகவே ஹரிஜன சேவா சங்கத்தை நடத்தும் அதிகாரத்தை அவர்களிடம் ஒப்படைக்க வேண்டும் என்றும் அவர்கள் கூறினார்கள், இவ்வேலையில் சாதி ஹிந்துக்கள் உதவி செய்யலாம்; ஆனால், சங்கத்தின் நிர்வாகிகள் ஹரிஜனங்களாகவே இருக்க வேண்டும் என்றனர். இதற்குக் காந்திஜி கீழ் வருமாறு பதில் கூறினார் :

''நீங்கள் எழுப்பியிருக்கும் ஒரு முக்கியமான பிரச்னை, ஹரிஜன சேவா சங்கத்தின் நிர்வாக ஸ்தானங்களில் நீங்களே இருந்து அதை நிர்வகித்து வரவேண்டும் என்பது. இதிலிருந்து, 'ஹரிஜன்' பத்திரிகையில் எழுதி வந்திருப்பதை நீங்கள் படித்து வரவில்லை என்று தெரிகிறது. ஹரிஜன போர்டு எவ்விதம் ஆரம்பமாயிற்று என்பதை நீங்கள் அறிந்து கொள்ளவில்லை என்பதும் தெரிகிறது. உங்களுக்குச் செய்துவிட்ட தவறுகளுக்காக சாதி ஹிந்துக்கள் வருந்தி, உங்களுக்குப் பரிகாரம் செய்ய வேண்டும் என்பதற்காகவே ஹரிஜன போர்டு ஆரம்பமாயிற்று. ஆகவே, அது கடன்பட்டவர்களின் போர்டு: நீங்களோ, கடன் கொடுத்திருப்பவர்கள். கடன்பட்டிருப்பவர்களுக்கு நீங்கள் கொடுக்க வேண்டியது எதுவும் இல்லை. எனவே, போர்டு சம்பந்தப்பட்ட வரையில் முன்நின்று செய்ய வேண்டியவர்கள் கடன் பட்டிருப்பவர்களே. கடன்பட்டவர்கள் தங்கள் கடமையைச் சரிவர நிறைவேற்றியிருக்கிறார்களா, இல்லையா என்பதற்கு அத்தாட்சி அளிக்க வேண்டியதுதான் உங்கள் வேலை. நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம், அவர்கள் தாங்கள் கடமைப்பட்டிருப்பதை நிறைவேற்றமுடியும்படி செய்து உதவுவதுதான். அதாவது, அவர்,

கள் செய்ய வேண்டியிருக்கும் கடமையை எப்படி நிறைவேற்று வது என்பதை அவர்களுக்கு நீங்கள் சொல்லலாம். ஹரிஜனங் களில் பெரும்பாலானவர்களுக்கு எது திருப்தியை அளிக்கும் என்பதை நீங்கள் அவர்களுக்குக் கூறலாம். உங்கள் யோச னையை அவர்கள் ஏற்றுக்கொள்ளலாம், ஏற்காமலும் போகலாம். அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லையானல், இயற்கையாகவே உங் களுடைய அதிருப்திக்கு ஆளாகும் ஆபத்திற்கு உள்ளாவார்கள். கடன்பட்ட ஒருவர், கடன் கொடுத்தவரிடம் போய், 'நான் இவ்வளவு பணம் கொண்டு வந்திருக்கிறேன்; எடுத்துக் கொள் ளுகிறீர்களா?' என்று கேட்கலாம். ஆனல், கடன் கொடுத்த வரோ, 'போம். கொடுத்தால் முழுத் தொகையையும் கொடும்; இல்லாவிட்டால் வேண்டாம்' என்று சொல்லலாம். அல்லது கடன் கொடுத்தவர், 'நீங்கள் கொண்டு வந்திருப்பது, கொடுக்க வேண்டியதில் ஒரு பகுதி கூட அல்ல, மிக மோசமான சிறு தொகை' என்றும் சொல்லலாம். கடன் கொடுத்திருப்பவர்க ளான நீங்கள் இவற்றையெல்லாம் செய்யலாம். இந்தப் போர்டு ஆரம்பிக்கப்பட்டபோது எனக்குச் சில ஹரிஜன நண்பர்கள் எழுதினர்கள். ஹரிஜனங்கள், ஆலோசனை கூறும் போர்டுகளை யும், பரிசீலனை செய்யும் போர்டுகளையும் அமைத்துக் கொள்ள வேண்டும் என்று அவர்களுக்கு யோசனை கூறினேன். இந்த வித்தியாசத்தை நீங்கள் நன்ருகப் புரிந்து கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். உங்கள் ஆலோசனையையோ, ஒத் துழைப்பையோ, உதவியையோ ஏற்றுக்கொள்ளக் கூடாது என்ற விருப்பம் எதுவும் இல்லை என்பதைத் தயவு செய்து நீங்கள் கவனிக்க வேண்டும். உண்மையான, தர்க்க ரீதியான நிலைமையையே உங்களிடம் கூறுகிறேன். கடவுள் சாதி ஹிந்துக் களுக்கு மன்னிப்புத் தவணை கொடுத்திருக்கும் சமயம் இது. இந்தத் தவணைக் காலத்தில் அவர்கள் தங்கள் மனப்பூர்வமான நன்னடத்தையை நிரூபித்துக் காட்டிக்கொள்ள வேண்டியிருக் கிறது. சாதி ஹிந்துக்களைப் பொறுத்த வரையில் இருந்து வரும் இக்கடமை முற்றிலும் நிறைவேற்றப்பட்டாக வேண்டும் என்பதற்காகவே நான் பகீரதப் பிரயத்தனம் செய்து வருகி றேன்; ஊர் ஊராகப் போய்க் கொண்டிருக்கிறேன்."

கோஷ்டியைச் சேர்ந்த ஒருவர், தானே தேர்ந்தெடுத்துக் கொள்ளும் ஹரிஜனங்களைக் கொண்ட ஆலோசனைக் கமிட்டிகளை போர்டு நியமிக்கலாம் என்ற யோசனையைக் கூறினர். அதற்குக் காந்திஜி கூறியதாவது: "இந்த யோசனையிலிருக்கும் ஆபத்தை, நானே விரும்பி உங்களுடன் ஹரிஜனைகியிருக்கும் நான், உங்க ளுக்கு எடுத்துக் காட்ட விரும்புகிறேன். ஹரிஜனங்களின் கமிட்டியை நியமித்துக் கொள்ளுமாறு போர்டைக் கேட்கா தீர்கள். ஆனல், உங்கள் கமிட்டியை நீங்களே தேர்ந்தெடுத்துக் கொண்டு, இவர் இவரைக் கமிட்டி உறுப்பினராகத் தேர்ந் தெடுத்திருக்கிறேம் என்றும், அவர்களுடன் கடிதத் தொடர்பு வைத்துக் கொள்ளுமாறும் போர்டுக்குக் கூறுங்கள். இந்த

யோசனையில் இன்னுமொரு ஆபத்தும் இருக்கிறது. உங்களுக்குள்ளேயே விரோதங்களும் தகராறுகளும் இருக்கக்கூடும். இவ் விதமிருக்கும் ஒவ்வொரு கோஷ்டியும் வெவ்வேறு கமிட்டிகளை நியமிக்கக்கூடும். அக்கமிட்டிகளையெல்லாம் கமிட்டி அங்கீகரித்து விடக்கூடும். ஆனால், அது துரதிருஷ்டமானதாகிவிடும். உங்களுக்குள் எந்தவிதமான தகராறும் இல்லாமலிருக்கட்டும். கடன் பட்டவர்களுக்கு முன்னால் ஒன்றுப்பட்டு நில்லுங்கள். போர்டு, அதன் பெயருக்கு ஏற்றபடி நடப்பதனால், உங்களில் ஒருவரை இன்னொருவர்மீது தூண்டிவிடாமலிருக்கலாம். ஆனால், கடன் பட்டவர்கள் தூண்டிவிடக்கூடும். ஒன்றுபட்டு நிற்க காங்கிரஸினால் முடிந்தது. இன்று காங்கிரசில் உங்களையும் என்னையும் போன்ற சாதாரணமானவர்களே நிறைய இருக்கிறார்கள். உங்களிடையே இருக்கும் சச்சரவுகளையெல்லாம் கண்டிப்பாக அடக்கி, திறமையுடன் அலுவல்களைச் செய்யும் ஒரு கோஷ்டியினர் உங்களிடையே இருக்கவேண்டும். அப்பொழுது, போர்டில் நீங்கள் இல்லாமலேயே அதன்மீது நீங்கள் ஆதிக்கம் செலுத்தம்முடியும். எளிதில் நீங்கள் திருப்தியடைத்துவிடாதீர்கள். ரூபாயில் ஐந்து அணு வருவதைக் கொண்டு நீங்கள் திருப்தியடைந்துவிடப்போவதில்லை என்று கடன் பட்டிருப்பவர்களிடம் சொல்லுங்கள்; முழு ரூபாயும் வந்தாக வேண்டும் என்று கேளுங்கள். பேரம் பேசிக் கொண்டிருப்பதற்கான விஷயமல்ல இது."

—'ஹரிஜன்' – 5—1—1934

4

# ஆலோசனைக் கமிட்டிகள்

[சாதி ஹிந்துக்களைக் கொண்ட ஹரிஜன சேவா சங்க போர்டுகளுக்கு உதவி செய்ய, ஹரிஜனங்களைக் கொண்ட ஆலோசனைக் கமிட்டிகளை அமைக்குமாறு காந்திஜி யோசனை கூறினர். இது சம்பந்தமாக என்ன செய்வது என்று எழுதிக் கேட்டிருந்த ஒரு ஹரிஜனுக்குக் காந்திஜி வருமாறு பதில் எழுதினர்:]

உண்மையாகவே உள்ளூர் ஹரிஜனங்களின் அபிப்பிராயங்களைப் பிரதிபலிப்பவர்களாக இருக்கும் கட்டுக்கோப்பான, பிரதிநிதிகள் அடங்கிய சிறு கமிட்டிகளை அமைக்க வேண்டும் என்று கூறுவேன். தங்கள் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்திக்கொள்ள விதிமுறைகளை அவைகள் அமைத்துக் கொள்ளலாம். தாங்கள் எதிர்பார்ப்பவை யாவை என்பதை சாதி ஹிந்துக்களுக்குத் தெரியப்படுத்த வேண்டும். பொதுவாக ஹரிஜன போர்டுகளின் நடவடிக்கைகளைக் கவனித்து வரவேண்டும். இந்த ஆலோசனைக் கமிட்டிகள் நியமிக்கப்பட்டிருக்குமிடங்களில் இவை,

கமிட்டிகள் அமைக்கப்பட்டிருப்பதை ஹரிஜன போர்டுகளுக்கு அறிவித்து, அவைகளுடன் ஒத்துழைக்கத் தயாராயிருப்பதாக வும் தெரிவிக்க வேண்டும். தாங்கள் பட்டிருக்கும் கடனைத் தீர்க்க, அதாவது ஹரிஜனங்களுக்குச் சேவை செய்ய விரும் புவதில் போர்டுகள் மனப்பூர்வமானவைகளாக இருந்தால், அவை ஆலோசனைக் கமிட்டிகளுடன் மிகச் சிறந்த நட்புத் தொடர்பை வைத்துக் கொள்ளும். அதனால் பூரண ஒத்துழைப் பும் சிநேக பாவமும் இருந்து வரும். பரஸ்பரம் இவைகளுக் குள் இருக்கும் சந்தேகத்தினால் ஆரம்பத்தில் தகராறுகள் இருக் கக்கூடும். இந்த வகையில் ஹரிஜன போர்டுகளே சிறந்த முறையில் அமைக்கப்பட்டு நன்ருகவும் இருப்பவையாகையால், அதிக மிகைப்பட்டதான கோரிக்கைகள் என்று தோன்றும் விஷயங்களில் இந்தப் போர்டுகளே சாமர்த்தியமாகச் சமா ளிக்க வேண்டி வரும். நிதானமாக நடந்து கொள்ளவும் ஆலோ சனைக் கமிட்டிகள் முயற்சிக்க வேண்டும். இவை எவ்வளவுக் கெவ்வளவு நிதானத்தோடு நடந்து கொள்ளுகின்றனவோ, அவ்வ ளவுக்குத் தங்களுக்கு அதிக உதவி செய்து கொண்டவைகளா கும். கௌரவமான முறையில் நடந்து கொள்ளுவதில் ஆலோ சனைக் கமிட்டிகள் காட்டும் திறமையினால், சமயம் வரும்போது தங்கள் கருத்து நிறைவேறும்படிச் செய்யும் ஆற்றலை அறிந்து கொண்டவைகளாகும். ஏனெனில், ஹரிஜனங்களின் ஒத்து ழைப்பில்லாமல், தாங்கள் ஹரிஜனங்களுக்குப் பட்டிருக்கும் கடனை சாதி ஹிந்துக்கள் தீர்த்துக் கொண்டுவிட முடியாது என் பதை அவை அறிய வேண்டும். ஆயினும், தங்கள் கருத்தை வற்புறுத்திதான் ஆவது என்ற பிரச்னை இதற்குள் ஏற்பட்டு விடவில்லை. ஏனெனில், ஏராளமான ஹரிஜனப் பொதுமக்கள், முற்றிலும் திக்கற்ற நிலைமையில் இருந்து வருகிருர்கள். அநீதியை எதிர்க்க அவர்கள் விரும்பினாலும், அப்படி எதிர்க்கும் சக்தி அவர்களுக்கு இல்லை. நான் சொல்லுவது என்ன என்பதை விளக்கிக் கூறுகிறேன். ஹரிஜன போர்டு களுக்கு மூன்று வேலைகள் இருக்கின்றன. ஹரிஜனங் களின் பொருளாதார, சமூக, மத அந்தஸ்தை இந்தப் போர்டுகள் உயர்த்த வேண்டும். வேறுவிதமாக இதைச் சொல்லு வதானால், வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் ஹரிஜனங்கள் தலைதூக்க முடியாதபடி பல நூற்றாண்டுகளாகச் சாதி ஹிந்துக் கள் போட்டு வைத்திருந்த தடைகளாகிய கஷ்டங்களை நீக்க வேண்டும். இவ்விதம் ஹரிஜன போர்டுகள், எங்கெங்கே அவ சியம் இருக்கிறதோ அங்கெல்லாம் கிணறுகள் வெட்டி, படிக்க உபகாரப் பணம் கொடுத்து, மாணவர்கள் தங்கிப் படிக்க விடுதிகள் அமைத்து, பள்ளிக்கூடங்களை ஏற்படுத்திச் சமூக வசதிகளைச் செய்து கொடுக்க வேண்டியிருக்கிறது. இவைகளி லெல்லாம் பொதுவாக ஹரிஜனங்கள், தங்களுக்கு உதவி எங்கே கிடைக்கிறதோ அதை ஏற்றுக்கொள்ளுகின்றனர். ஆகையால், ஆலோசனைக் கமிட்டிகள், போர்டுகளுக்குப் பயனுள்ள யோசனை களைக் கூறுவதன் மூலம் தங்களுக்கும், லட்சியத்திற்கும் உதவி

செய்து வரலாம். தாங்கள் யாருக்குப் பிரதிநிதிகளாக இருக்கிறார்களோ அவர்களுக்குத் தங்களால் இயன்ற உதவியையும் செய்யலாம். அப்படிச் செய்வதன் மூலமே, தங்கள் கருத்தை ஏற்றுக்கொள்ளும்படி செய்யும் சக்தி அவைகளுக்கு ஏற்படும். சுருங்கச் சொன்னால், ஆலோசனைக் கமிட்டிகள், ஹரிஜனப் பொது மக்களிடையே விழிப்பை உண்டாக்கி, தங்கள் சமூகத்திலிருக்கும் மற்றவர்கள் அனுபவிக்கும் உரிமைகளைத் தாங்களும் அனுபவிக்க உரிமை பெற்ற ஆண்களும் பெண்களுமே தாங்கள் என்பதை இவர்கள் உணர்ந்துக்கொள்ளும்படி செய்து, ஹரிஜனங்கள் தங்களுக்குள் சீர்திருத்தமடையச் செய்யலாம். இது லட்சியத்திற்குச் சிறந்த உதவியாகும்.

—'ஹரிஜன்' – 20—4—1934

# 5

# ஹரிஜன போர்டுகள்

ஹரிஜன போர்டு அங்கத்தினர்களுக்கு என்ன தகுதிகள் இருக்க வேண்டும்? போர்டில் எத்தனை அங்கத்தினர்கள் இருக்க வேண்டும் என்று கேட்கிறார்கள். இந்த இலட்சியத்திற்காகச் சேவை செய்ய ஆர்வம் உள்ளவர்களையும், அவர்கள் எந்தப் போர்டில் அங்கம் வகிக்கிறார்களோ அந்தப் போர்டு, இவர்கள் இருப்பதால் அதிகப் பயனுள்ளதாகச் செய்யக் கூடியவர்களையும், அவர்கள் ஒரு போர்டில் அங்கத்தினராக இருப்பதால் அவற்றின் சேவை ஆற்றலை அதிகரிக்கச் செய்பவர்களாக இருக்கிறவர்களையும் மாத்திரமே போர்டுகளில் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

கீழ்க் கண்டவை இல்லாத யாரும், ஆணோ பெண்ணோ, போர்டில் தாம் அங்கத்தினராக இருக்கச் சம்மதிக்கக் கூடாது:

(1) தீண்டாமை அடியோடு ஒழிந்தாக வேண்டும் என்பதில் நம்பிக்கை.

(2) ஆணோ பெண்ணோ, தம் சக்திக்கு ஏற்றப்படி போர்டுக்கு ஏதாவது கொடுக்க வேண்டும்.

(3) திட்டமான ஹரிஜன சேவை செய்ய வேண்டும். அதாவது, ஒரு ஹரிஜனை தங்கள் குடும்பத்தில் ஒருவராக வைத்துக் கொள்ளவேண்டும்; அல்லது ஒரு ஹரிஜனை வீட்டு வேலைக்காரராகவாவது வைத்துக்கொள்ளவேண்டும். இல்லாவிடில் ஒரு ஹரிஜனுக்கோ, ஹரிஜனங்களுக்கோ படிப்புச் சொல்லிக் கொடுப்பவராக இருக்க வேண்டும். ஹரிஜனங்கள் வசிக்கும் இடங்களுக்குத் தவறாது போய், அந்த இடங்களைச் சுத்தம் செய்து வர

வேண்டும். ஆணோ பெண்ணோ டாக்டராக இருந்தால், ஹரிஜன நோயாளிகளுக்கு இலவசமாகச் சிகிச்சை செய்ய வேண்டும் என்பன போன்றவை.

(4) தான் செய்து வரும் சேவையைப் பற்றிய தினக்குறிப்பை மாதந்தோறும் போர்டுக்கு அனுப்பவேண்டும்.

இவைகளைப் போன்ற நிபந்தனைகள் அனுசரிக்கப்படுமானல், போர்டின் அங்கத்தினர் தொகை இவ்வளவுதான் இருக்க வேண்டும் என்ற தடைக்கு அவசியம் இல்லை. அங்கத்தினர் தொகை எவ்வளவுக்கு அதிகமானலும் அது சந்தோஷமானதே. இந்தப் போர்டுகள், நடந்திருக்கும் வேலையைக் கவனிக்கவும், அனுபவங்களைப் பரிமாறிக் கொள்ளுவது, பரஸ்பரம் இருக்கும் கஷ்டங்களைத் தீர்த்துக்கொள்ளுவது ஆகியவைகளுக்காகவும் கூடும். பயனற்ற விவாதங்களில் அவை காலத்தை வீணக்க மாட்டா.

போர்டுகளைச் சேர்ந்த ஆலோசனைக் கமிட்டிகள் இருக்கலாம். இவை தமக்கென்று கொஞ்சம் குறைந்த பட்சத் தகுதியை நிர்ணயித்துக் கொள்ளும். இயற்கையாகவே போர்டு அங்கத்தினர்களுக்கு இருக்க வேண்டியதைப் போன்று ஆலோசனைக் கமிட்டி அங்கத்தினர்களுக்குத் தகுதி அவ்வளவு கண்டிப்பானவைகளாக இருக்காது.

போர்டு மெம்பர்களுக்கு இருக்க வேண்டிய தகுதிகளைச் சொன்ன மாத்திரத்திலேயே, நாம் கூறும் தகுதிகள் உள்ளவர்கள் கிடைக்காவிட்டால் என்ன செய்வது என்ற கேள்வி இயல்பாகவே பிறக்கும். இதற்கு முன்னலேயே நான் அடிக்கடி கூறி வந்திருக்கும் பதிலையே இப்பொழுதும் நான் திரும்பச் சொல்லவேண்டும். தங்கள் மாகாணங்களில் சங்கங்களை அமைக்கும்படி மத்திய போர்டினல் அழைக்கப்படுவோர், அவசியமான தகுதியுடன் கூடியவர்கள் சங்கங்களுக்கு அங்கத்தினர்களாகக் கிடைக்கவில்லை யென்ருல், தங்கள் பிரதிநிதிகளை நியமித்து அவர்கள் மூலம் சேவை செய்து வரவேண்டும். ‘சத்தியத்துடன் நடந்து கொள்ளுவது’ என்பதே ஒவ்வொரு ஹரிஜன போர்டின் குறிக்கோளாகவும் இருக்க வேண்டும். இந்தச் சிறந்த தருமத்திலிருந்து எப்பொழுதும் தவறிவிடவே கூடாது.

—‘ஹரிஜன்’ – 9—11—1934

## 6

# அதிகாரத்தைப் பரவலாக்குவது?

அதிகாரம், தலைமை ஸ்தாபனத்தினிடம் இருப்பது என்பதற்கு நான் சம்மதிக்கிறேன். என்றாலும், முதல் சந்தர்ப்பம் கிடைத்ததுமே அதிகாரத்தைப் பரவலாக்கிவிட வேண்டும் என்று எப்பொழுதும் விரும்பி வந்திருக்கிறேன். போர்டும் இதையே விரும்பி வந்திருங்கிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனால், மாகாண போர்டுகள் இதற்குத் தயாராகி, சொந்தத்தில் பணம் திரட்டிக் கொள்ள அவைகளால் முடியும்போதுதான் இதைச் செய்ய முடியும். ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒரு ஹரிஜன போர்டு இருந்து, அதற்கு வேண்டிய நிதியை அதுவே சேகரித்துக் கொள்ளுவது சாத்தியமாகவேண்டும் என்பதைவிட, எனக்குத் திருப்தியளிக்கக் கூடியது வேறு எதுவும் இல்லை. அந்த நாள் வரும்போது, அது எல்லா வகையான தீண்டாமையையும் அடியோடு ஒழிந்துபோகும்படி செய்வதாகவும் இருக்கும். இப்போதைக்கு இக்காரியம், இந்தியா முழுவதிலும் ஆங்காங்கு இருந்து வரும் ஒரு சில மனப்பூர்வமான சீர்திருத்தக்காரர்களினாலேயே செய்யப்பட்டு வருகிறது என்பதைத் துரதிருஷ்டவசமாக ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும். இவர்கள் எல்லோருமே உள்ளூரில் பணம் வசூலித்துக் கொண்டுவிடக் கூடியவர்களாக இல்லை; அவர்கள் எல்லோருமே, அனுசரிக்க வேண்டிய கொள்கையைத் தெளிவாக அறிந்துகொண்டவர்களாகவும் இல்லை. கொள்கை என்ற சொல்லை நான் வேண்டுமென்றே உபயோகிக்கிறேன். ஏனெனில், அடைய வேண்டிய லட்சியம் எல்லோருக்கும் தெரிந்தபோதிலும், சீர்திருத்தக்காரர் எந்த மோசமான குறைபாடுகளுடன் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது என்பது எல்லோருக்கும் தெரியாது. செய்துவிடும் ஒரு சின்ன தவறோ, அவசரப்பட்டுச் செய்துவிட்ட காரியமோ, அவசரப்பட்டுச் சொல்லிவிட்ட ஒரு சொல்லோ, அபிவிருத்தியின் வேகத்தைப் பின்னுக்குக் கொண்டு போய்விடக்கூடும். ஆகையால், ஹரிஜனங்களுக்குச் சேவை செய்வது, ஹிந்து சமயத்திற்கு ஏற்பட்டிருக்கும் மிகப் பெரிய களங்கத்தைப் போக்குவது என்பதைத் தவிர வேறு சிந்தனை எதுவுமே இல்லாத ஒரு சிலருக்கு, அன்றாடம் ஏற்பட்டு வரும் அனுபவங்களை அனுசரித்து, கொள்கைகளை எச்சரிக்கையுடன் உருவாக்க வேண்டும்.

—'ஹரிஜன்' – 17—8—1935



ஹரிஜன சேவா ஊழியர்களுடன் காந்திஜி பேசிக்கொண்டிருக்கிறுர்.



புனாவுக்கு ரெயிலில் போகும் வழியில், தம்மைக் காணவந்த கூட்டத்தினரிடம் ஹரிஜன நிதிக்காக காந்திஜி பணம் வசூலிக்கும் காட்சி—15, ஜூன், 1944.

# 7

# ஹரிஜன ஊழியர்கள் முன்னுள்ள வேலை

ஹரிஜன சேவா சங்கம் ஆரம்பமானதிலிருந்து, தலைமை ஸ்தாபனம், மாகாணக் கிளைகளுக்கு ஒழுங்காகவே வேண்டிய உதவிகளைச் செய்து வருகிறது. ஆனால், கிளைகள், தங்களுடைய வேலைத் திட்டத்தில் ஒரு பகுதியைத் தியாகம் செய்ய நேர்ந்தாலும், அவற்றின் சொந்தக் காலிலேயே நின்றாக வேண்டிய சமயம் இப்போது நிச்சயமாக வந்துவிட்டது. ஒவ்வொரு மாகாணத்திலும், ஒவ்வொரு ஜில்லாவிலும், தாலுக்காவிலும் நடக்கும் வேலை, சாதி ஹிந்துக்களின் தீவிரமான ஆதரவைத் தெளிவாக எடுத்துக்காட்டுவதாக இருக்க வேண்டும், ஏனெனில், சங்கத்தின் முக்கியமான வேலையே, சாதி ஹிந்துக்களின் மனத்தில் படும்படிச் செய்து மனத்தை மாற்றுவதுதான். தலைமை ஸ்தாபனம், இரண்டு மூன்று சீர்திருத்தக்காரரிடமிருந்து ஒரு கோடி ரூபாய் வசூல் செய்து, அப்பணத்தைக்கொண்டு ஹரிஜனச் சிறுவர்களுக்கும் சிறுமியருக்கும் பள்ளிக்கூடங்களையும் மாணவ விடுதிகளையும் நடத்த இந்தியா முழுவதிலும் கிளைகளையும் நடத்துகிறது என்று வைத்துக்கொள்ளுவோம். இக்காரியம், தீண்டாமை ஒழியும் நாளைத் துரிதப்படுத்தியிருக்காது. ஏனெனில், சாதி ஹிந்துக்களின் மனம் எப்பொழும் போல கல்லாகத்தான் இருந்து வரும். ஆனால், இதற்கு மாறாக, ஒரு தம்படியும் செலவு இல்லாமல், ஏதோ நல்ல அதிருஷ்டத்தின் காரணமாக சாதி ஹிந்துக்களின் மனம் மாறித் தீண்டாமை என்பதெல்லாம் பழைய சங்கதி என்றாகிவிடுமானால், சங்கத்தின் முழு நோக்கமும் நிறைவேறிவிட்டதாகும். ஏனென்றால், அப்பொழுது பொதுப் பள்ளிக்கூடங்கள், கோயில்கள், மற்ற ஸ்தாபனங்களில், சாதி ஹிந்துக்களுக்கு என்ன உரிமை இருக்கிறதோ அதே உரிமையுடன் ஹரிஜனங்களுக்கும் திறந்துவிடப்படும். ஆனால், அந்த நாள், பலர் நினைப்பதைவிட அதிக தூரத்திலும் இருக்கலாம், அல்லது சமீபத்தில் இருக்கவும் கூடும். எப்படியும் ஹரிஜன சேவா சங்கம் அடைய விரும்பும் லட்சியம் அதுவேயன்றி, ஹரிஜனங்களுக்குத் தனிப்பட்ட பள்ளிக்கூடங்கள், கிணறுகள், கோயில்கள் போன்றவைகளை அமைத்து, அதன் விளைவாகத் தீண்டாமை நிரந்தரமாக இருந்து வரும்படி செய்வது அன்று. இக்காரியங்கள் இப்பொழுது செய்யப்பட்டு வருகின்றன என்பதில் சந்தேகமில்லை. ஆனால், லட்சியத்தை அடைய வேண்டியதற்காக ஓர் உபாயமாகவே இவை செய்யப்படுகின்றன. சாதி ஹிந்துக்களின் மனம் அதிக மெதுவாக மாறுதலையடைந்து வருவதால் இவை அவசியமாகிவிட்டன.

அதிகரித்து வரும் சீர்திருத்தக்காரர் தொகையினர், சும்மா உட்கார்ந்து கொண்டு இருக்கக் கூடாது. தங்களிடமிருந்தே தீண்டாமையை ஒழிப்பதற்குப் பிரதிக்ஞை செய்து கொள்ள வேண்டும். பகிரங்கமான தங்கள் செய்கையின் மூலம் இந்த மாறுதல் வெளிக்குத் தெரியும்படி காட்ட வேண்டும். தங்களிட மிருக்கும் பணத்தை ஹரிஜன நன்மைக்காகச் செலவிடுவது, அடைந்திருக்கும் மாறுதலுக்குச் சரியான அத்தாட்சி. ஆகையால், இதுதான் வேலைத் திட்டத்தின் முக்கியமான பகுதி. ஆனால், எங்கோ மூலையிலிருக்கும் ஒரு சிலர் மாத்திரம், தங்கள் மனச்சாட் சிக்குத் திருப்தியளிப்பதற்காகத் தாராளமாக நன்கொடை கொடுப்பது என்பது, நான் கூறும் உதாரணத்தை அனு சரித்து நடந்துவிட்டதாகாது. எனவே, வேலைத் திட்டத்தின் அடிப்படையான பகுதியை மத்திய போர்டு, கிளைகளின் கவனத் திற்குக் கொண்டுவருவதும், கிளைகள் அதன் முக்கியத்தை உணர்ந்து தனக்கு வேண்டியதை முற்றிலும் தானே வசூலித்துக் கொள்ளுவதற்கான வழியைத் தயாரித்துக்கொள்ளுவதும் கடமை யாகும். உண்மையில், மாகாண போர்டுகள் நடத்தும் ஸ்தாப னங்களுக்கு ஆகும் செலவை அவை தேடிக்கொள்ளும் சுமை, நாளாவட்டத்தில் மாகாண போர்டுகளின் தலையிலேயே போடப் பட்டு வருகிறது. ஆனால், இதில் திட்டமான, உறுதியான நட வடிக்கை எடுத்துக் கொள்ளுவதற்கான சமயம் இப்பொழுது வந்துவிட்டது.

இது, முக்கியமாக சமய சம்பந்தமான இயக்கம் என்பதை எல்லா ஊழியர்களும் உணர்ந்தாலன்றி, தன்னைத் தானே முற் றிலும் நம்பி இருப்பது என்ற இந்த மாறுதல் வரவே வராது. சமய சம்பந்தமானவை என்று பொது மக்கள் நம்பும் காரியங் களுக்குப் பணத்தை ஏராளமாகச் செலவு செய்து வருபவர்கள் நாம். இந்த உண்மையைக் கண்ணெதிரே தெரிந்துகொள்ளுவ தற்கு யாத்ரா க்ஷேத்திரங்களைப் பார்த்தாலே போதும். சமய சம்பந்தமான காரியங்களுக்கு என்று எழுதி வைக்கப்பட்டிருக்கும் சொத்துக்களின் சரித்திரத்தைப் பார்த்தால், சூதுவாதறியாத லட்சக்கணக்கானவர்கள், அவை எவ்விதம் செலவு செய்யப்படு கின்றன என்பதைத் தெரிந்துகொள்ளும் சிரத்தைகூட இல்லாமல், அந்தச் சொத்துக்களைக் கொடுத்திருக்கிறார்கள் என்ற துக்ககர மான கதை தெரியவரும். சமய சம்பந்தமானது என்று மக்கள் நம்பினால் போதும்; அந்தக் காரியத்திற்கு மக்கள் இயன்ற அளவு கொடுக்கிறார்கள். ஹரிஜன ஊழியர்களிடமும் ஒரு லட்சியம் இருக்கிறது; இது சமய சம்பந்தமானது என்பதற்கு முற்றிலும் தகுதி வாய்ந்தது. இதில் அவர்களுக்கு ஜீவ நம்பிக்கை இருக்குமானால், அவர்கள் மலையைப் பெயர்க்காவிட்டாலும், தாங்கள் நடத்தும் ஸ்தாபனங்களுக்கு வேண்டிய பணத்தைத் தங்கள் சுற்று வட்டாரங்களிலிருந்து பெற்றுக் கொள்ளவாவது முயற்சிக்க வேண்டும்.

—'ஹரிஜன்' - 10—10—1936

# 8

# ஹரிஜன சேவா சங்க மகாநாட்டில் கேள்விகள்

ஹரிஜன சேவா சங்க மகாநாடு வர்தாவில் ஏப்ரல் 28, 29ஆம் தேதிகளில் நடந்தது. சேத் ஜி. டி. பிர்லா அதிக எச்சரிக்கை யுடனிருந்தார்; என் நேரத்தை அதிகமாக எடுத்துக் கொண்டு விடவில்லை. பிரசங்கம் செய்வதில் எனக்கு வெறுப்பு வளர்ந்து வருகிறது. ஆனால் உறுப்பினர், சேவா கிராமத்திற்கு தங்க ளுடன் கொண்டு வந்திருக்கும் சில கேள்விகளுக்கு 29ஆம் தேதி காலையில் பதில் சொல்லுவதாக ஒப்புக் கொண்டேன். இவற் றிற்கு நான் அளித்த பதில்கள், எல்லா ஹரிஜன ஊழியர்களுக்கும் உபயோகமாக இருக்கும். நான் பெரும்பாலான பதில்களை ஹிந்துஸ்தானியில் சொன்னேன்; சில ஆங்கிலத்தில் கூறி னேன்; ஒரு பதிலை குஜராத்தியில் கூறினேன். எல்லாக் கேள் விகளும் இனி ஹிந்துஸ்தானியில்தான் இருக்க வேண்டும் என்றும் யோசனை கூறினேன். ஹிந்தியோ, உருதுவோ தெரியாதவர்கள் தேசீய மொழியைக் கற்றுக்கொள்ள முடிவு செய்து கொள்ள வேண்டும்; ஹிந்துஸ்தானியில் தாங்களே எழுத முடியாத நிலையில் அவர்கள் இருக்கும் வரையில், தங்களுக்காக வேறு யாரையாவது எழுதிக் கொடுக்கும்படி செய்ய வேண்டும் என்றேன்.

**கேள்வி:** ஹரிஜன சேவா சங்கம், காங்கிரஸின் ஒரு பகுதி என்று கருதப்படுகிறது. ஆனால், மிகச் சில காங்கிரஸ் காரர்களே ஹரிஜன ஊழியர்களாக இருக்கிறார்கள். இது ஏன்?

**பதில்:** இச்சங்கம், காங்கிரஸின் ஒரு பகுதி அல்ல. 1932–இல் நான் சிறையிலிருந்த போது நான் மேற்கொண்ட உண்ணு விரதத்தினால் ஏற்பட்டதே இது. எல்லாப் பிரிவினரையும் கொண்ட ஹிந்துக்களின் கூட்டம் பண்டித மாளவியாவின் தலைமையில் நடந்தது. அக்கூட்டமே இச்சங்கத்தை ஏற் படுத்தியது. இந்தச் சங்கத்தைத் காங்கிரஸிலிருந்து தனி யாக வைப்பது என்றும், ராஜீயம் சம்மதமில்லாத ஸ்தாபன மாக இது இருப்பது என்றும் வேண்டுமென்றே தீர்மானிக் கப்பட்டது. சங்கத்தினிடமிருந்த இந்தத் தன்மையினால் தான், ஸ்ரீ ஜி. டி. பிர்லா அதன் தலைவராகவும், ஸ்ரீ தக்கர் பாபா அதன் காரியதரிசியாகவும் இருப்பது சாத்திய மாயிற்று. என்றாலும், பல காங்கிரஸ்காரர்கள் சங்கத்தில் இருக்கிறார்கள்; இருக்கவே வேண்டும். ஏனெனில், அநேக மாகச் சீர்திருத்தக்காரர்கள் எல்லோருமே காங்கிரஸில்

இருந்து வருகின்றனர். ஆனால், காங்கிரஸ்காரர்கள் அல்லாதவர்கள் அநேகரும் சங்கத்தில் இருக்கிறார்கள் என்பதும் உண்மை. ராஜீய விஷயத்தில் மாத்திரமே சிரத்தை கொண்டிருக்கும் காங்கிரஸ்காரர்கள், சங்கத்தில் இல்லை என்பதும் உண்மை. ஆகையால், சங்கத்தில் காங்கிரஸ்காரர்கள் சிரத்தை கொள்ளுவதில்லை என்று சில சமயங்களில் தவறாகக் கருதப்பட்டு வருகிறது. ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் தன்னுடைய வாழ்க்கையிலிருந்து தீண்டாமையை வேரோடு களைந்தெறிந்தாக வேண்டியது அவருடைய கடமை.

கே: ஹரிஜன சேவை, உண்மையில் ஹரிஜன முன்னேற்றம் என்ற வகையில்தான் இருக்கிறது. தீண்டாமை ஒழிப்புக்காகச் சாதி ஹிந்துக்களிடையே அநேகமாக எந்த வேலையுமே நடக்கவில்லை. இதற்குப் பரிகாரம் என்ன?

ப: பொதுஜனங்களிடம் தங்கள் சொல்லுக்கு மதிப்பு இருக்கும் செல்வாக்குள்ளவர்களைக் கொண்டு சாதி ஹிந்துக்களிடையே பிரசாரம் செய்தால்தான் அது வெற்றிகரமானதாக இருக்கும் என்பது அனுபவத்திலிருந்து தெரிகிறது. இத்தகையவர்கள் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. ஆனால், ஒவ்வொரு ஹரிஜன ஊழியரும் மௌனப் பிரசாரம் செய்து வருவது அவருடைய சக்திக்கு உட்பட்டது. ஹரிஜனங்களிடையே அவர்களுடைய முன்னேற்றத்திற்கான வேலை செய்வதோடு, நமது சாதி ஹிந்து ஊழியர்கள் திருப்தியடைந்து விடுகிறார்கள். அது மாத்திரம் போதாது. பல ஊழியர்கள், தங்கள் வரையில் தீண்டாமையை அனுசரிப்பதில்லையென்றாலும், அவர்களுடைய குடும்பத்தினரின் மனத்தை மாற்றவும் அவர்களால் முடிவதில்லை. இப்படிப்பட்டவர்களால் வெளியார் மனத்தை மாற்றிவிட எப்படி முடியும்? ஒவ்வொரு ஹரிஜன ஊழியரும், தாங்கள் தொடர்பு கொண்டிருக்கும் சாதி ஹிந்துக்களிடம் ஹரிஜனங்களுக்காக காலணாவைக்கூட பிச்சை எடுப்பது என்பதை ஒரு குறியாகக் கொள்ள வேண்டும் என்பது என் உறுதியான கருத்து. இவ்வேலையில் எல்லோரும் முழு மனத்துடன் ஈடுபடுவார்களானால், மிக்க நல்ல பலன் ஏற்படும்.

கே: கிறிஸ்தவத்திற்கும் இஸ்லாமுக்கும் மதம் மாறிய ஹரிஜனங்கள், அங்கும் தீண்டாதாராகவே நடத்தப்படுகின்றனர். அத்தகைய ஹரிஜனங்களுக்குச் சேவை செய்வதையும் சங்கம் மேற்கொள்ள வேண்டாமா? தீண்டாமையை அடியோடு ஒழிப்பதென முற்பட்டிருக்கும் நாம், தீண்டாமையால் கஷ்டப்படுகிறவர்கள் எல்லோருக்கும் உதவி செய்ய வேண்டாமா?

ப: இக் கேள்விக்கு 'ஹரிஜன்' பத்திரிகையில் முன்னாலேயே பதில் சொல்லியிருக்கிறேன். என்றாலும், இக்கேள்வி கேட்கப்

படும்போதெல்லாம் திரும்பவும் பதில் சொல்லியே ஆக வேண்டும். தீண்டாமை, ஹிந்து சமூகத்திலிருந்து அடியோடு நீக்கப்பட்டுவிட்டவுடனேயே அது மற்ற இடங்களிலிருந்தும் நீக்கப்பட்டுவிடும். இதில் நியாயம் இருந்தாலும், இல்லாது போனாலும், மதம் மாறியவர்கள் விஷயத்தில் நாம் தலையிடுவது, முஸ்லிம்களுடனும் கிறிஸ்தவர்களுடனும் சச்சரவுக்குக் காரணமாகிவிடும் என்பது தெளிவானது. மதம் மாறிவிட்ட அத்தகையவர்கள், ஹிந்துக்களுடன் எல்லாத் தொடர்புகளையும் அறுத்துக்கொண்டு விட்டனர்; அல்லது ஹிந்துக்கள் அவர்களைப் பகிஷ்கரித்துவிட்டார்கள். தங்கள் விதியை இன்னொரு வகுப்பாரிடம் அவர்கள் ஒப்படைத்து விட்டனர்; அந்த வகுப்புத் தலைவர்களோ, அவர்கள் பழைய தொடர்புகளை வைத்துக் கொண்டிருக்க அனுமதிக்கமாட்டார்கள். இதனாலேயே ஹிந்து சமூகத்திலிருக்கும் ஹரிஜனங்களிடத்தில் மாத்திரம் வேலை செய்வது என்று ஹரிஜன சேவா சங்கம் ஆரம்பத்திலிருந்தே தனது எல்லையை நிர்ணயித்துக் கொண்டு விட்டது. தான் முன்னாலிருந்த மதத்தைவிட்டு வெளியேறி மதம் மாறிவிட்டவர், இனியும் ஹிந்து மதத்தினால் வழி காட்டப்பட்டு நிர்வகிக்கப்பட்டு வரவில்லை.

**கே:** ஹரிஜன இளைஞர்கள் ராணுவத்தில் சேர விரும்பினால், அது சம்பந்தமாகச் சங்கம் செய்ய வேண்டியது என்ன?

**ப:** அப்படியே சேர்ந்துகொள்ள அவர்களை அனுமதித்துவிட வேண்டும். காங்கிரஸ் கொள்கை அல்லது அகிம்சைக் கொள்கையைக் கொண்டு அவர்களைக் கட்டுப்படுத்த வேண்டியதில்லை. அவர்கள் இஷ்டம் போலச் செய்துகொள்ள அவர்களுக்கு முழுச் சுதந்திரத்தையும் அளிக்க வேண்டும்.

**கே:** தீண்டாமை ஒழிய வேண்டும் என்ற லட்சியத்தில் அனுதாபமுள்ள சாதி ஹிந்துக்கள், ஹரிஜனங்களை அனுமதிக்காத கோயில்களைப் பகிஷ்கரித்து விடவேண்டும் என்று ஹரிஜனங்கள் கருதுகின்றனர்.

**ப:** அவர்கள் கருதுவது சரியானதே. ஹரிஜனங்களை அனுமதிக்காத இடங்களுக்குத் தாங்கள் போகாமல் இருந்து விடுவதோடு, அதேபோலச் செய்யுமாறு சாதி ஹிந்துக்களைத் தூண்ட வேண்டியது ஹரிஜன ஊழியர்களின் முக்கியமான கடமை.

**கே:** பல கல்வி ஸ்தாபனங்களுக்குத் தங்கள் குழந்தைகளை அனுப்புவதற்கும், பொதுக் கிணறுகளில் தண்ணீர் எடுத்துக் கொள்ளவும் சட்டப்படி ஹரிஜனங்களுக்கு உரிமை உண்டு. ஆனால், இதை அமலுக்குக் கொண்டு வருவதற்குப் பொது ஜன உணர்ச்சி இன்னும் விரோதமாக இருந்து வருகிறது. இந்த விஷயங்களில் நீதியைப் பெறுவதற்கு அவர்கள் கோர்ட்டுக்குப் போவதா, அல்லது சாதி ஹிந்துக்கள் மனமாற்றம்

அடையும் வரையில் பொறுமையுடன் அவர்கள் காத்துக் கொண்டிருப்பதா?

ப: தங்கள்மீது பலாத்காரம் உபயோகிக்கப்படும் என்ற ஆபத்து இல்லாத இடங்களில், ஹரிஜனங்கள் சட்டப்படி தங்களுக் குள்ள உரிமையை அனுசரித்து நடக்க வேண்டும். அவசிய மானல் கோர்ட்டுக்கும் போகலாம். சட்டப்படி உரிமை இருக்கிறது என்பதைக் கொண்டு திருப்தியடைந்து இருந்து விடாமல் ஹரிஜன ஊழியர்கள், சாதி ஹிந்துக்களிடையே தொடர்ந்து கிளர்ச்சி செய்து வர வேண்டும்.

கே: கக்கூசுகளைச் சுத்தம் செய்வதிலும், தெருக் கூட்டவும் தோட்டிகள் அனுசரித்து வரும் சுகாதாரக் கேடான முறை களில் சீர்திருத்தம் செய்ய வேண்டியது அவசியமான தல்லவா?

ப: இது மிகவும் அவசியமானது. அது மாத்திரமல்ல. இதைச் செய்யும் வரையில் தோட்டிகளின் நிலைமை பரிதாபகரமான தாகவே இருந்து வரும். இதை முன்னிட்டு ஹரிஜன ஊழியர் களும், சாதி ஹிந்துக்களும் தோட்டி வேலையைத் தாங்களே செய்ய வேண்டியது அவர்களுடைய கடமையாகும். தோட்டி கள் உபயோகித்த முறையைச் சாதி ஹிந்து யாரும் உப யோகிக்கமாட்டார். அவர் விஞ்ஞான ரீதியில் அவ்வேலை யைச் செய்வார். உதாரணமாக அவர், மலத்தைக் கூடை யில் எடுத்துத் தலைமேல் சுமந்து கொண்டு போகமாட்டார். ஆனல், மலத்தைக் காய்ந்த மண்ணினல் மூடி அவர் அதை உலோகப் பாத்திரத்திலேயே எடுத்துச் செல்லுவார். முடிந்த வரையில் ஆபாசத்தைக் கையினல் தொடாமலிருக்க முயற்சி செய்வார். இதற்கு உபயோகிக்கும் பாத்திரங்களை ஒரு கம்பியும் தண்ணீரும்கொண்டு சுத்தம் செய்வார். தோட்டி வேலைசெய்யும்போது அதற்கென்று தனியான உடையையும் அவர் அணிந்து கொள்ளுவார். இந்தச் சீர்திருத்தங்களுக்குச் செலவு அதிகமாக ஆகாது. புத்திசாலித்தனமும், கஷ்டப் பட்டு வேலை செய்வதும், லட்சியத்தில் அன்புமே இதற்கு வேண்டும். தோட்டி வேலையை நாம் ஒரு குறிப்பிட்ட சமூகத் திற்கு என்று வைத்துவிடக்கூடாது. ஆகையால், சமையல் வேலையை எல்லோரும் கற்றுக் கொள்ளுவதைப் போன்று, இதையும் எல்லோரும் கற்றுக்கொள்ள வேண்டும். ஒவ் வொருவரும் தமக்குத் தாமே தோட்டியாக இருக்க வேண் டும். சமூகத்தில் இந்த லட்சியத்தை அனுபவத்தில் நிறை வேற்றுவதானல், தோட்டிகளின் பரிதாப நிலைமைக்குப் பரி காரம் உண்டாகிவிடும்.

**—சேவா கிராமம், 3—5—1942** **—'ஹரிஜன்' - 10—5—1942**

# 9

# சங்கத்தின் மீது கண்டனங்கள்

ஒரு கூட்டத்தில், ஹரிஜன சேவா சங்கத்தின் கொள்கை என்ன என்பதைக் காந்திஜி விளக்கிவைத்தார். 'செய்த தவறுக்காக வருந்துவோரின் சங்கமே அது' என்று காந்திஜி கூறினர். அக்கூட்டத்தில் அநேக கேள்விகள் கேட்கப்பட்டன. அவற்றிற்குக் காந்திஜி பதில் சொன்னர். ஆகையால், அக்கேள்விகளினலும் பதில்களினலும் தம்மைத் தாமே ஆராய்ந்து பரிசோதித்துக் கொள்ளுவதாக அக்கூட்டம் இருந்தது. (இக்கூட்டத்தில் கேட்கப்பட்ட கேள்விகளுக்குக் காந்திஜி அளித்த பதிலின் முற்பகுதியை 453-ஆம் பக்கத்தில் காணவும்.)

''சங்கத்தில் ஹரிஜனப் பிரதிநிதிகளைச் சேர்த்துக்கொள்ளுவதன் மூலம், அதன் நிர்வாகக் கமிட்டியில் ஒரு ஹரிஜன மெம்பரையாவது சேர்த்துக் கொள்ளுவதன் மூலம், ஒரு முன் மாதிரியை நாம் ஏற்படுத்தக் கூடாதா?'' என்று காந்திஜியை அவர் கேட்டார். இதற்குப் பதிலளித்த காந்திஜி, புனு ஒப்பந்தம் முடிவானதும் ஹரிஜன சேவா சங்கம் ஆரம்பமான சரித்திரத்தைக் கவனிக்கும்படி கூறினர். சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பது சம்பந்தமாக, மாக்டோனல்டு அரசாங்கம் செய்திருந்த முடிவில் மாறுதல் செய்யும்படி செய்தது அந்தப் புனு ஒப்பந்தம். மோசமானதாகவுள்ள நிலைமை சரியானபடி திருத்தப்பட வேண்டுமானல் தீண்டாமையாகிய சாபக்கேட்டை ஹிந்து சமயத்திலிருந்து அடியோடு ஒழித்தாக வேண்டும் என்று கருதப்பட்டது. ஹிந்து சமூகத்தைப் பொறுத்தவரையில், அது முன்னல் செய்துவிட்ட பாவங்களுக்காக வருந்தி, உண்மையான மனமாற்றத்தை அடைவதற்கு இது அவசியமாயிற்று, இதற்காகவே ஹரிஜன சேவாசங்கம் ஆரம்பிக்கப்பட்டது என்ருர் காந்திஜி. அவர் மேலும் கூறியதாவது:

''ஆகவே, மேலே கண்ட கேள்வியிலிருக்கும் இரண்டு யோசனைகளையும் நான் எதிர்க்கிறேன். இப்பொழுது இருக்கும் ஏற்பாட்டின்படி, சங்கத்தின் போர்டில் சில ஹரிஜனங்கள் சேர்க்கப்பட்டிருக்கிருர்கள் என்பதை நான் அறிவேன். ஆனல், இது தக்கர் பாபாவின் பலவீனத்தினல் அளிக்கப்பட்ட சலுகை. செய்த பாவத்திற்காக வருந்துகிறவர்களின் சங்கமே ஹரிஜன சேவா சங்கம் என்று நான் கூறியிருக்கிறேன். தீண்டாமைக்கு இடம் கொடுத்து வைத்திருந்த பாவத்திற்குப் பிராயச்சித்தம் செய்யும்படி சாதி ஹிந்துக்கள் என்று சொல்லிக் கொள்ளுவோரைச் செய்வதே சங்கத்தின் நோக்கம். ஹரிஜனை சங்கத்தில் சேர்த்துக் கொண்டால், அவர் பேச்சை யாரும் கேட்டுவிடப் போவதில்லை. ஆகையால், அப்படி ஹரிஜனைச் சேர்ப்பது வீண் கண் துடைப்பாகவும், ஏமாற்றுவதாகவுமே இருக்கும். சீக்கிரத்

திலேயே அவர் வெளியே வந்துவிட மனமார விரும்புவார். கமிட்டிகள் எந்த முறையில் நடக்கின்றன என்பதை நன்ருக அறிந்த அனுபவத்தைக் கொண்டே நான் இதைக் கூறுகிறேன். சங்கம், எப்பொழுதுமே சிறந்த முறையில் நடந்துவிடாது என்பதை அறிவேன். என்ருலும், சங்கம் தனது முறையை மாற்றிக் கொண்டு, அதன் நிர்வாகக் கமிட்டியில் ஹரிஜனங்களுக்குப் பெரும்பான்மை ஸ்தானங்களைத் தன்னிஷ்டம்போல் அளிக்கலாம்; அல்லது ஹரிஜனங்களின் பிரதிநிதிகளடங்கிய தகுதி வாய்ந்த ஒரு கமிட்டியை நியமித்து, அதை ஆலோசித்துக்கூறும், மேற்பார்வை பார்க்கும் போர்டாக வைத்துக் கொண்டு சங்கம் உஷாராகவும், சரியான வழியிலும் நடக்கும்படியும் செய்யலாம்."

ஹரிஜன முன்னேற்ற வேலைகளுக்குச் சாது சமூகத்தின் சேவைகளைப் பெறுவதற்காகக் குவாலியர் சமஸ்தானத்தில் சமீபத்தில் நடந்த வேலைகளைக் குறித்துத் தமது அபிப்பிராயத்தைக் கூறுமாறு பிறகு காந்திஜியைக் கேட்டனர். இதற்குக் காந்திஜி கூறியதாவது: "இந்த வேலை சரியானதா, புத்திசாலித்தனமானதா என்பதில் எனக்கு அதிக சந்தேகங்கள் இருக்கின்றன. ராஜீய வாசனை இதில் இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. உண்மையான சாதுக்களின் உதவி கிடைக்குமாயின் அதை நான் வரவேற்பேன். ஆனல், என் கருத்துப்படியுள்ள சாது யாரும் நாட்டில் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். நான் காணும் சாதுக்கள், நான் ஏமாற்றமடையும்படி செய்து விட்டனர். இவர்களுக்கு விலக்கானவர் எங்கோ சிலர் இருக்கக்கூடும். அவர்களுடைய உதவி வரவேற்கப்படும். ஆனல், சாதுக்களை ஒரு கூட்டமாக இந்த வேலைக்கு உபயோகித்துக் கொள்ளுவது சாத்தியம் என்பது எனக்குப் பிடிக்கவில்லை என்பதைப் பகிரங்கமாகக் கூறுகிறேன். இப்பரீட்சையில் அவர்கள் முயற்சி செய்து பார்த்தாலும், சீக்கிரத்தில் சாதுக்கள் விலகிப்போய் விடுவார்கள் என்றே அஞ்சுகிறேன்."

கஸ்தூரிபாய் நினைவு நிதியில் ஒரு பகுதியை, ஹரிஜன சகோதரிகளுக்காக என்று ஒதுக்கிவைக்கக்கூடாதா என்று மற்றொரு நண்பர் கேட்டார். அந்நிதியை உபயோகித்துக் கொள்ளுவதற்கான வழியைக் காட்டுவார்களானல், அந்நிதி முழுவதையுமே பயன்படுத்திக் கொள்ளலாம் என்று காந்திஜி பதில் சொன்னர். ஆகையால், அதற்கென்று நிதியில் ஒரு பகுதியைத் தனியாக ஒதுக்கி வைப்பது என்பதற்கே அவசியமில்லை என்ருர்.

கேள்விகளும் பதில்களும் முடிந்தபின்னர், அங்கே கூடியிருந்தோருக்கு, காந்திஜி பொதுப்படையாகச் சில விஷயங்களைச் சொன்னர். ஹரிஜன சேவா சங்கத்தின் நடவடிக்கைகளில் பொதுவாக மந்தம் இருப்பது சம்பந்தமாகத் தாம் கண்டறிந்திருக்கும் காரணங்களையும், அதற்குப் பரிகாரங்களையும் அவர்

கூறினர். காந்திஜி சொன்னதாவது: ‘‘சாதி ஹிந்துக்களைக் கொண்டு ஹரிஜன முன்னேற்ற வேலைகளை நடத்துவது பற்றிய கொள்கைக்குப் பொறுப்பாளி நானே. செய்துவிட்ட பாவத்திற்கு அவர்கள் பிராயச்சித்தம் செய்யவேண்டும். நேரடியான சேவை செய்வதற்கு அவசியமான தகுதிகள் இல்லாது போனாலும், எல்லோரும் பணம் கொடுத்து உதவலாம் என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். உதாரணமாக, அவர்களே படிப்புச் சொல்லிக் கொடுக்கும் வேலையில் ஈடுபட முடியாமலிருக்கலாம். ஆனால், ஹரிஜனக் குழந்தைகளுக்குப் படிப்பு சொல்லிக் கொடுக்கத் தகுதிவாய்ந்த ஓர் ஆசிரியரை அவர்கள் நியமிக்கலாம். பிராய்ச்சித்தம் செய்வதற்கான வழிகளில் இது ஒன்று. ஹரிஜன சமூகத்திற்குள் பிரவேசித்து அவர்களுடைய முன்னேற்றத்திற்கு உதவ அவர்களால் முடியும். இம்மாதிரியான வேலை, தீண்டாமையைப் போக்கிவிடுமா என்று சந்தேகிகள் கேட்கிறார்கள் என்பதை அறிவேன். ஒரு சமயம் நானும் இவ்விதம் சந்தேகப்பட்டுக் கொண்டுதான் இருந்தேன். ஆனால், தவறைப் பின்னால் அறிந்து கொண்டேன். இவ்விஷயத்தில் ஸ்ரீ தேவதாருக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். அவருடைய வேலையை ஆரம்பத்தில் நான் சந்தேகத்துடன் தான் பார்த்தேன்; அதைக் கண்டித்துமிருக்கிறேன். ஆனால், ஒரு வருட அனுபவம், என் சந்தேகத்தைப் போக்கிவிட்டதோடு, பணிவையும் எனக்குப் போதித்தது. சாதி ஹிந்துக்கள் மன மாற்றமடையச் செய்வதற்காக அவர்களிடையே பிரசாரம் செய்யும் வேலையில் மாத்திரமே ஈடுபட்டு இருந்துவிடுவேனாயின், இதற்காக வெகு நீண்டகாலம் காத்துக் கொண்டிருக்கவே நேரும்; இதற்கு மத்தியில் ஹரிஜனங்களின் முன்னேற்ற வேலை எதுவுமே இல்லாமல் போய்விடும் என்பதை உணர்ந்துகொண்டேன். ஹரிஜனங்களிடையே இருந்து வேலை செய்வதற்கு வேண்டிய தூய்மைத்தன்மையும், பக்தியும், தியாக உணர்ச்சியுமுள்ள ஊழியர்கள் மாத்திரம் போதுமான அளவு இருப்பார்களாயின், சாதி ஹிந்துக்கள் தனியாக ஒதுங்கி இருந்துவிட்ட போதிலும், தீண்டாமை என்பது பழைய சங்கதியாகிவிடும் என்பதை என் அனுபவத்தைக் கொண்டு நிச்சயமாக அறிந்து கொண்டிருக்கிறேன். ஆனால், அந்த ஊழியர்கள், முதலில் உள்ளத்தில் தாங்களும் ஹரிஜனங்களாகி, ஹரிஜனங்களுடன் ஹரிஜனங்களாக வாழ்ந்து பாடுபட வேண்டும். ஆனால், தங்களுடைய உள்ளங்களிலிருந்து தீண்டாமையின் கடைசிச் சாயலையும் ஒழித்துவிட்டதாக ஹரிஜன சேவா சங்க உறுப்பினர்கள் உண்மையிலேயே சொல்லிக்கொள்ள முடியுமா? தாங்கள் கூறுகிறபடி காரியத்திலும் நடந்து கொண்டுவருகிறார்களா?’’

‘‘இதற்கு நீங்கள் கருதும் தகுதி என்ன?’’ என்று ஓர் உறுப்பினர் கேட்டார். உடனே காந்திஜி, ‘‘உமக்கு மணமாகிவிட்டதா?’’ என்று திருப்பிக் கேட்டார். திகைத்துப் போன அந்த உறுப்பினர், ‘‘மணமானவனே நான்’’ என்றார். ‘‘அப்படியானால்

மணமாக வேண்டிய மகள் உங்களுக்கு இருக்கிருளா?'' என்று கேட்டார், காந்திஜி. ''அப்படி ஒரு பெண் இருந்தால், அவளுக்கு ஒரு ஹரிஜன மாப்பிள்ளையைப் பாரும். இது அவளுடைய காம இச்சையைப் பூர்த்தி செய்வதற்காக அல்ல. ஆனல், முற்றிலும் சமய உணர்ச்சியின் பேரிலேயே இதைச் செய்யுங்கள். என் செலவில் உங்களுக்கு ஒரு வாழ்த்துத் தந்தி அனுப்புகிறேன்'' என்ருர், காந்திஜி. அவர் மேலும் கூறியதாவது: ''சாதி ஹிந்துக்களின் மனத்தை மாற்ற ஹரிஜன சேவகர்களால் ஏன் முடியவில்லை என்பதை இப்பொழுது நீங்கள் உணர்ந்து கொள்ளுவீர்கள். இதற்குக் காரணம், அவர்களுடைய உள்ளங்களில் அப்படிப்பட்ட நம்பிக்கைச் சுடர் இல்லை. கேட்டுக் கொள்ளுவது சரியான பலனை அளிப்பதற்கு, முதலில் அத்தியாவசியமாக வேண்டியது, சேவைப் பசியின் துடிப்பு. இதுவும் ஹரிஜன சேவகர்களுக்கு அவ்வளவாக இல்லை. உண்மையான சேவா உணர்ச்சியுடன் ஒரு சில சாதி ஹிந்துக்கள் இவ் வேலையில் ஈடுபட்டாலும், ஹிந்துப் பொது மக்கள் எல்லோரிடத்திலும் அந்த உணர்ச்சி ஏற்படும்படி செய்துவிட முடியும். ஆனல், மதப் பிரசாரகர்கள் என்று சொல்லப்படுகிறவர்களின் ஒரு பட்டாளமே சென்று பிரசாரம் செய்தாலும், அம்மக்களிடம் எந்த மாறுதலையும் உண்டாக்கி விடமுடியாது. அத்தகைய மதப் பிரசார வேலைக்கு ஒரு மாளவியா தேவை. என் சொந்த சகோதரி மனமாற்றமடையும்படி செய்ய என்னல் முடியவில்லை. என்னல் இதைச் செய்ய முடியாமலிருக்கும்போது, நான் மற்றவர்களை எப்படி குறை கூற முடியும்? நாம் செல்ல வேண்டியிருக்கும் பாதை, எவ்வளவு கடினமானதாகவும், முட்கள் நிறைந்ததாகவும் இருக்கிறது என்பதையே இது காட்டுகிறது. என்ருலும், இதற்கு வேண்டிய தகுதி தங்களுக்கு இருப்பதாக நினைக்கிறவர்கள், அவர்களிருக்கும் இடங்களிலேயே தாங்களே பரீட்சித்துப் பார்க்கலாம்.

''ஓரளவுக்குத் தோல்வி ஏற்பட்டிருப்பதற்குக் காரணம், ஹரிஜன சேவா சங்கத்தில் இருக்கும் உறுப்பினர்களில் அநேகர், ராஜீயநோக்கக் கலப்பு இல்லாமல் தங்கள் வேலையைச் செய்யத் தவறிவிட்டதே யாகும். இவர்கள், சாதி ஹிந்துக்களின் மனத்தில் ஊடுருவ உண்மையிலேயே விரும்புவார்களானல், கலப்பில்லாத மத உணர்ச்சி நிறைந்தவர்களாக இவர்கள் இருக்க வேண்டும். இத்தகைய வேலைக்கு, வெறும் தர்க்கவாதம் மாத்திரம் பயனில்லாத ஆயுதமாகும். இப்பொழுது உணர்ச்சியின்மையும், எதையும் கவனிக்காத போக்கும், மனம் மரம் போலாகிவிட்டதும் அவர்களுக்கு அதிகமாக இருந்து வருகிறது.

''மற்ருேர் முறை, அதிகக் கடுமையானது; ஆபத்தே இல்லாததுமல்ல இம்முறை. பட்டினி கிடக்கும் முறைதான் இது. தவருனது, ஒழுக்க ரீதியில் சரியானது அல்ல என்று எனக்குத் தோன்றியபோது, உண்ணுவிரதமிருப்பதை நானே கண்டித்திருக்கிறேன். ஆனல், தெளிவான ஒழுக்க அறிகுறி இருக்கும்

போது, உண்ணுவிரதம் இருப்பதைத் தவிர்த்துக்கொண்டு விடுவது கடமையைச் செய்யத் தவறியதாகும். அத்தகைய உண்ணுவிரதம், கலப்பற்ற சத்தியத்தையும் அகிம்சையையும் அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும்."

பேச்சோடு பேச்சாகக் காந்திஜி, தமது வாழ்நாளில் இன்னுமொரு உண்ணுவிரதத்தைத் தாம் மேற்கொள்ள வேண்டியிருக்கும் என்றும், அநேகமாக ஒன்றுக்கு மேற்பட்ட உண்ணுவிரதங்களும் இருக்கக்கூடும் என்றும் கூறினர். ஆனல், உண்ணுவிரதமிருக்கும் எண்ணம் தமக்கு இப்பொழுது எதுவும் இல்லை என்றும் அவர்களுக்கு எச்சரிக்கை செய்தார். முன்கூட்டி ஏதோ மனத்தில் தோன்றுவதையே தாம் கூறுவதாகவும் சொன்னர்.

[ஸ்ரீ பியாரிலால் எழுதியது.]

—பஞ்சகனி, 20—7—1946 —'ஹரிஜன்' – 28—7—1946

## 10

# பொருத்தமான கேள்விகள்

**கேள்வி 1:** *தீண்டாமையை ஒழிப்பதற்கு அனுபவ சாத்தியமான முறைகள் யாவை?*

**பதில்:** (அ) பிராம்மணரல்லாதார் செல்லலாம் என்று இருப்பது, ஒரு குறிப்பிட்ட சாதிக்கு மாத்திரம்தான் என்று இல்லாததுமான எல்லாப் பொதுப் பள்ளிக்கூடங்கள், கோயில்கள், பாட்டைகள் ஆகியவைகளைத் 'தீண்டாதாரு'க்கும் திறந்து விட்டுவிட வேண்டும்.

(ஆ) 'தீண்டாதாரு'க்கு எங்கெல்லாம் தேவைப்படுகிறதோ அங்கெல்லாம் அவர்களுடைய குழந்தைகளுக்குச் சாதி ஹிந்துக்கள், பள்ளிக்கூடங்களை ஏற்படுத்திக் கிணறுகளையும் வெட்டிக் கொடுக்க வேண்டும். அவர்களிடையே குடி ஒழிப்புப் பிரசாரம் செய்து, சுகாதாரச் சீர்திருத்தம் ஏற்படும்படிச் செய்து, அவர்களுக்கு வைத்திய உதவியையும் செய்வதன் மூலம், அவர்களுக்குத் தேவையான சேவைகளைச் சொந்த முறையிலும் செய்து வரவேண்டும்.

**கே 2:** *தீண்டாமைத் தீமை அடியோடு நீக்கப்பட்டுவிட்ட பிறகு, 'தீண்டாதாரு'க்கு மதத்தில் அந்தஸ்து எவ்வாறு இருக்க வேண்டும்?*

**ப:** சாதி ஹிந்துக்களுக்கு என்ன அந்தஸ்து இருக்கிறதோ அதேதான் அவர்களுக்கும் இருக்க வேண்டும். ஆகவே, ஆதி சூத்திரர்கள் என்று அழைக்கப்படுவதற்குப் பதிலாகச் சூத்திரர்கள் என்று அழைக்கப்படுவார்கள்.

கே 3 : தீண்டாமை ஒழிந்துவிட்ட பிறகு, உயர்சாதி வைதிகப் பிராம்மணருக்கும் 'தீண்டாதாரு'க்கும் இருக்கும் சம்பந்தம் எப்படி இருக்க வேண்டும்?

ப : பிராம்மணரல்லாத ஹிந்துக்களுக்கு எவ்வித சம்பந்தமிருக்கிறதோ அதே இவர்களுக்கும் இருக்க வேண்டும்.

கே 4 : சாதிகள், ஒன்றுக்கொன்று கலந்துவிட வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களா?

ப : நான் எல்லாச் சாதிகளையுமே ஒழித்துவிடுவேன். ஆனால், நான்கு பிரிவுகளை மாத்திரமே வைத்துக்கொள்ளுவேன்.

கே 5 : 'தீண்டாதார்', இப்பொழுது இருக்கும் கோயில்கள் விஷயத்தில் தலையிடாமல் தங்களுக்கு என்று தனியாக வேறு கோயில்களை ஏன் கட்டிக்கொள்ளக்கூடாது?

ப : இத்தகைய காரியங்களை அவர்களே செய்துகொள்ளுவதற்கு வேண்டிய சக்தியை 'உயர்' சாதியினர் இவர்களிடம் விட்டு வைக்கவில்லை. நம் கோயில்களில் அவர்கள் குறுக்கிடுகிறார்கள் என்று சொல்லுவது, இப்பிரச்னையைத் தவறான வழியில் நோக்குவதாகும். எல்லா ஹிந்துக்களுக்கும் பொதுவான கோயில்களில் அவர்களை அனுமதிக்க வேண்டியது உயர்சாதியினர் என்று கூறிக்கொள்ளும் நாம் செய்ய வேண்டிய கடமையாகும்.

கே 6 : வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டும் என்று நீங்கள் கூறுகிறீர்களா? நிர்வாக ஸ்தாபனங்களிலெல்லாம் 'தீண்டாதாரு'க்குப் பிரதிநிதித்துவம் இருக்க வேண்டும் என்று நீங்கள் கருதுகிறீர்களா?

ப : நான் சொல்லவில்லை. ஆனால், வேண்டுமென்றே 'தீண்டாதார்', செல்வாக்குள்ள சாதியினரால் ஒதுக்கி வைக்கப்பட்டிருப்பார்களானால், இது சுயராஜ்யப் பாதையைத் தடுக்கும் மோசமான விலக்காகும். வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தை நான் ஆதரிக்காதது, எந்தச் சமூகமும் பிரதிநிதித்துவம் பெறுவதிலிருந்து ஒதுக்கப்பட வேண்டும் என்ற பொருளில் அல்ல. இதற்கு மாறாக, பிரதிநிதித்துவம் பெறாத, போதிய பிரதிநிதித்துவத்தை அடையாத சமூகங்களுக்குச் சரியான பிரதிநிதித்துவம் இருக்கும்படி பார்க்க வேண்டிய சுமையைப் பிரதிநிதித்துவம் பெற்றுள்ள சமூகத்தினருக்கு இது உண்டாக்குகிறது.

கே 7 : வர்ணாச்சிரம தருமத்தின் அவசியத்தை நீங்கள் நம்புகிறீர்களா?

ப : ஆம். ஆனால், இன்றோ வர்ணம் மோசமான நிலைமைக்கு கொண்டு வரப்பட்டிருப்பதோடு, ஆச்சிரமம் என்பது எதுவுமே இல்லாது போய் தருமமும் தவறான முறையில்

அனுசரிக்கப்பட்டு வருகிறது. இம்முறை முழுவதையும் மாற்றியமைத்து, சமயத் துறையில் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கும் விஷயங்களுக்குப் பொருத்தமான வகையில் அதைக் கொண்டுவர வேண்டும்.

கே 8: இந்தியா கர்மபூமி, இங்கே பிறந்திருப்பவர்கள் ஒவ்வொருவரும் முன் பிறப்பில் செய்திருக்கும் நல்லதற்கும் தீயதற்கும் ஏற்ற வகையில் செல்வம், அறிவு, சமூக அந்தஸ்து, சமய ஆர்வம் ஆகியவைகளைப் பெற்றிருக்கிருர்கள் என்பதை நீங்கள் நம்புகிறீர்களா?

ப: இக் கேள்வியை எழுதியிருப்பவர் கூறும் முறையில் நான் நம்பவில்லை. ஏனெனில், எல்லா இடங்களிலுமே அவனவனின் வினைக்கு ஏற்றவாறே அனுபவிக்கிருன். ஆனல், இந்தியா முக்கியமாகக் கர்மபூமி (கடமை நாடு); போக பூமி (இன்ப நுகர்ச்சி)க்கு மாருன நாடு.

கே 9: தீண்டாமையை ஒழிப்பதைப் பற்றி ஒருவர் எண்ணுவதற்கு முன்னுல், 'தீண்டாதாரி'டையே கல்வியைப் பரப்புவதும் சீர்திருத்தங்களைச் செய்வதும் ஆரம்பத்தில் செய்தாக வேண்டிய காரியங்களல்லவா?

ப: தீண்டாமையை ஒழிக்காவிட்டால் 'தீண்டாதாரி'டம் கல்வியோ, சீர்திருத்தமோ இருக்க முடியாது.

கே 10: குடிப் பழக்கமில்லாதவர்கள் குடிகாரர்களுடன் சேராமலிருக்க வேண்டும்; மாமிசம் சாப்பிடுகிறவர்களுடன் சைவ உணவினர் சேராதிருக்க வேண்டும். இவ்விதம் இருப்பது தான் இயற்கையானது, நியாயமானது அல்லவா?

ப: அப்படி இருக்க வேண்டும் என்பதில்லை. குடிப் பழக்கமில்லாத ஒருவர், குடிகாரனுக இருக்கும் தனது சகோதரனை அப்பழக்கத்திலிருந்து மீட்பதற்காக அவனுடன் பழகியாக வேண்டியது கடமை. அதே போலவே, சைவ உணவினர் ஒருவரும், மாமிசம் சாப்பிடுகிறவருடன் பழக வேண்டும்.

கே 11: பரிசுத்தமானவரான (குடிக்காதவர், சைவ உணவு சாப்பிடுகிறவர் என்ற வகையில்) ஒருவர், குடிகாரர்கள், கொன்று மிருகங்களைச் சாப்பிடுகிறவர்கள் ஆகியவர்களுடன் பழகும் போது, அவரும் சுத்தமில்லாதவராக (குடிகாரராகவும் மாமிசம் சாப்பிடுகிறவராகவும் ஆகிவிடுகிருர் என்ற வகையில்) ஆகிவிடுகிருர் என்பது உண்மையல்லவா?

ப: தான் செய்வது தவறு என்பதை அறியாமலேயே மது பானத்தைக் குடிக்கிறவன், மாமிசம் சாப்பிடுகிறவன் பரிசுத்தமில்லாதவனுகத்தான் இருக்க வேண்டும் என்பதில்லை. ஆனல், கெட்டவர்களுடன் சேருவதால் தீமை ஏற்படுவதற்

குச் சந்தர்ப்பம் உண்டு என்பதை நான் அறிய முடிகிறது. என்ருலும், இந்த விஷயத்திலோ, 'தீண்டாதாரு'டன் கலந்துகொள்ளக்கூடாது என்பதற்கு எவ்வித நியாயமும் இல்லே.

கே 12: மேற்கண்ட காரணத்திருலேயே வைதிகப் பிராம்மணர் களேக் கொண்ட ஒரு குறிப்பிட்ட வகுப்பினர், மற்ற வகுப்பாருடன் ('தீண்டாதார்' உள்பட) யாருடனும் கலந்துகொள்ளாமல், தனியான ஒரு வகுப்பினராக இருந்துகொண்டு தங்களுடைய ஆன்மிக உயர்விற்காக ஒன்ருக வாழ்கிருர்களல்லவா?

ப: தனியாக இருப்புப் பெட்டியில் அடைபட்டு இருப்பதென்பது, மோசமான ஆன்மிகத் தன்மையாகவே இருக்க வேண்டும். மேலும், நிரந்தரமாகத் தனியாக இருந்து வருவதன் மூலம், தங்களுடைய நற்குணங்களேப் பாதுகாத்துக்கொள்ளுவது என்ற காலம் போய்விட்டது.

கே 13: தீண்டாமையை ஒழிக்க வேண்டும் என்று நீங்கள் பிரசாரம் செய்து வருவதால், இந்தியாவின் சமயங்களிலும் சாதி முறையிலும் (வர்ணுச்சிரம தருமத்திலும்), அந்த முறையிலும் சமயங்களிலும் என்னதான் தீயவைகளோ நல்லவைகளோ இருந்தாலும், நீங்கள் குறுக்கிடுவதாக ஆகாதா?

ப: ஒரு சீர்திருத்தம் ஏற்பட வேண்டும் என்று சொல்லுவதனல், எதனிடமுமோ, யாரிடமுமோ நான் எப்படி குறுக்கிடுவதாகும்? தீண்டாமையை விடாமல் வைத்துக் கொண்டிருப்பவர்களுக்கு எதிராகப் பலாத்காரத்தை உபயோகித்துத் தீண்டாமையை ஒழிக்க வேண்டும் என்று நான் பிரசாரம் செய்தால்தான் குறுக்கிடுவதாகும்.

கே 14: முதலாவதாக வைதிகப் பிராம்மணர்கள், சரியானது என்று நம்பும்படி செய்யாமல் அவர்களுடைய சமய உணர்ச்சிகளில் நீங்கள் குறுக்கிடுவீர்களானுல், அது நீங்கள் ஹிம்சை செய்வதாகாதா?

ப: என்னுடைய உறுதியான நம்பிக்கையினுலன்றி நான் அவர்களுடைய மத நம்பிக்கையில் தலேயிடாததால், வைதிகப் பிராம்மணருக்கு நான் ஹிம்சை செய்வதாகாது.

கே 15: 'தீண்டாதார்' மாத்திரமல்ல. மற்ற பல சாதியினரையும் பிராம்மணர்கள் தொடுவதில்லே. உடன் வைத்துச் சாப்பிடுவதில்லே, மணம் செய்து கொள்ளுவதில்லே எனும்போது, பிராம்மணர்கள் தீண்டாமையை அனுசரிக்கும் குற்றத்தைச் செய்கிருர்களல்லவா?

ப: மற்ற சாதியினரைத் தொட பிராம்மணர்கள் மறுப்பார்களானுல், அவர்கள் அந்தப் பாவத்தைச் செய்பவர்களே ஆவார்கள்.

**கே 16 :** மனிதன் என்ற வகையில், தன்னுடைய உரிமையை வற்புறுத்துவதற்காகப் பிராம்மண அக்கிரகாரங்களின் வழியாக அவர்கள் பவனி போவதால் 'தீண்டாதாரி'ன் பசி தீர்ந்து விடுமா?

**ப :** மனிதன், சோற்றுக்காக மாத்திரம் வாழவில்லை. சோற்றை விட சுயமதிப்பே முக்கியம் என்று அநேகர் கருதுகிருர்கள்.

**கே 17 :** பலாத்காரமற்ற ஒத்துழையாமையின் தத்துவம் முழுவதையும் நன்ருக அறிந்துகொள்ளுவதற்கு வேண்டிய படிப்பு 'தீண்டாதாரு'க்கு இல்லை. பிராம்மணனுக்கோ ராஜீயத்தை விட அதிக சிரத்தை மதத்தில்தான். இவற்றையெல்லாம் பார்க்கும்போது, இதன் சம்பந்தமாக நடத்தும் சத்தியாக்கிரகம் பலாத்காரத்தில் கொண்டு போய் விட்டுவிடாதா?

**ப :** வைக்கம் சத்தியாக்கிரகமே இங்கு குறிப்பிடப்படுகிறது என்ருல், 'தீண்டாதார்' ஆச்சரியப்படத்தக்க வகையில் தன்னடக்கத்தைக் காட்டி வந்திருக்கிருர்கள் என்பதை அனுபவம் காட்டுகிறது. கேள்வியின் பிற்பகுதி, பிராம்மணர்கள் பலாத்காரத்தில் இறங்கும் சாத்தியம் உண்டாகும் என்று கூறுவதாக இருக்கிறது. அவர்கள் பலாத்காரச் செயல்களில் இறங்குவார்களானுல், அதற்காக நான் வருத்தப்படுவேன். அப்பொழுது அவர்கள், மதத்தினிடமிருக்கும் பக்தியை அல்ல, மதத்தைப் பற்றிய அறியாமையையும் வெறுப்பையுமே காட்டிக்கொண்டவர்களாவார்கள் என்பதே என் அபிப்பிராயம்.

**கே 18 :** சாதி, இன, மத, தொழில் வேறுபாடு எதுவுமே இல்லாமல் எல்லோரும் சமமாகிவிட வேண்டும் என்று நீங்கள் கூறுகிறீர்களா?

**ப :** சாதி, மதம், இனம், நிறம் ஆகியவை எப்படி இருந்தாலும் சில விஷயங்கள், அதாவது பசி, தாகம் முதலியன எல்லோருக்கும் ஒரே மாதிரியாக இருப்பதைப் போன்றே, மனிதனுடைய சாதாரணமான உரிமைகளைப் பொறுத்தவரையில் சட்டத்தின் முன்பு எல்லோரும் சமம் என்றே இருக்க வேண்டும்.

**கே 19 :** கர்மாவின் முடிவை அடைந்துவிட்ட உயர்ந்த ஆன்மாக்கள்தான் மேலான தத்துவார்த்த உண்மையை அறிந்து அனுபவிக்க முடியும். ஆனல், ரிஷிகள் விதித்திருப்பதைப் பின்பற்றி நடந்து, அப்படி நடப்பதன் விளைவாகப் பிறப்பு இறப்பு என்பவைகளிலிருந்து விடுபட வேண்டியவர்களாக இருக்கும் கிரகஸ்தர்களால் அது முடியாது என்பதைப் பார்க்கும்போது, சாதாரண கிரகஸ்தனுக்கு உயர்ந்த தத்துவ உண்மையினல் ஏதாவது பயன் உண்டா?

**ப :** பிறப்பின் காரணமாக எந்த மனிதரையும் தீண்டாதாராகக் கருதக்கூடாது என்ற சாதாரண உண்மையை ஒப்புக்கொள்

ளுவதில் 'உயர்ந்த தத்துவ உண்மை' என்பதற்கு இடமில்லை. இந்த உண்மை மிகச் சாதாரணமானது. வைதிக ஹிந்துக்களைத் தவிர உலகம் முழுவதுமே இதை ஒப்புக்கொண்டிருக்கிறது. நாம் இன்று அனுசரித்து வரும் முறையில் தீண்டாமைத் தத்துவத்தை ரிஷிகள் உபதேசித்தார்கள் என்று கூறப்படுவதை நான் ஆட்சேபித்திருக்கிறேன்.

—'எங் இந்தியா' - 5—2—1925

# 11

# மேலும் பல கேள்விகள்

**கேள்வி 1 :** 'தீண்டாதார்' வகுப்பைச் சேர்ந்த சிலர் பரீத்பூரில் உங்களைக் கண்டு பேசிய விவரம் *14 மே, 1925*-ஆம் தேதி வெளியான 'எங் இந்தியா' பத்திரிகையில் வெளியாகியிருக்கிறது. அதில் நீங்கள், தாமே தூய்மைப்படுத்திக்கொள்ளுவதற்கான காரியங்களைச் செய்துகொள்ளும்படி அவர்களுக்குச் சொல்லியிருக்கிறீர்கள். தாமே தூய்மைப்படுத்திக்கொள்ளுவது என்பதைக் குறித்து நீங்கள் நினைப்பது என்ன? தாமே தூய்மைப்படுத்திக்கொள்ளுவதன் வெளி நிகழ்ச்சிகள் யாவை? தாமே தூய்மைப்படுத்திக்கொள்ளுவது என்பதில் காயக, மானசிக, வாசானிக காரியங்கள் உண்டா, அல்லது அவற்றில் ஒன்று மாத்திரமா?

**பதில் :** தம்மைத் தாமே தூய்மைப்படுத்திக்கொள்ளுவது என்பது மனதிலோ, பேச்சிலோ, உடலிலோ இருக்கும் அழுக்குகளைப் போக்கிக்கொள்ளுவதாகும். தீயவைகளை எண்ண வேண்டாம், பொய்யையோ, வசவுகளையோ பேச வேண்டாம். நன்ருகக் குளித்து, செத்த கால்நடைகளின் மாமிசத்தைத் தின்பதை விட்டொழித்து, ஆபாச உணவுகளைத் தின்னுமல், மதுபானம் போன்ற லாகிரி வஸ்துக்களை உபயோகிக்காமல் உடலைச் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்றே 'தீண்டாதார்' நண்பர்கள் கேட்டுக்கொள்ளப்பட்டனர்.

**கே 2 :** யாராவது ஒரு வகுப்பினரோ அல்லது தனிப்பட்டவரோ அந்த நிலையை அடைந்துவிட்டால், அந்த வகுப்போ, அந்நபரோ தீண்டாதாராகக் கருதப்படலாமா?

**ப :** அந்த நிலையை நம்மில் அநேகர் உடனே அடைந்துவிட முடியாது. அப்படி ஒருவர் அந்நிலையை அடையாது போனுலும் அவரைத் தீண்டாதாராகக் கருதிவிடக்கூடாது. அந்த நிலையில் நாம் இருக்க வேண்டும் என்று பார்த்தாலும் அது நமக்குக் கஷ்டமாகவே இருக்கும்.

கே 3: ஹிந்து சாதியினர் எல்லோரிடத்திலும் உண்பதிலும், அருந்துவதிலும், கடவுள் வழிபாட்டிலும் ஒரே மாதிரியான பழக்கம் இருக்கவில்லை. இதில் ஒரே மாதிரியான முறை இருப்பதற்கு, முதலில் செய்தாக வேண்டிய காரியம் என்ன என்று நீங்கள் கருதுகிறீர்கள்?

ப: அத்தகைய ஒற்றுமையை உண்டாக்குவதற்கென்று நான் எதுவும் செய்யவில்லை. ஹிருதய ஒற்றுமை வேண்டும் என்றே நான் பாடுபடுகிறேன். இந்தத் தடைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டது அது; உணவு போன்றவைகளில் என்ன வித்தியாசம் இருந்தாலும் ஹிருதய ஒற்றுமை இருக்க முடியும். ஒரே கடவுளை, பல்வேறு முறைகளைக் கொண்டும் நாமங்களாலும் பூசித்து வருகிறோம்.

கே 4: சுகாதாரத்தில் சுத்தமாக இருக்கும் ஹிந்துக்களுக்குக் கோயில்களிலும் சிற்றுண்டிச் சாலைகளிலும் போக அனுமதித்தால், அது ஒற்றுமைக்கு முதல் வழியாக இருக்கும் என்று யோசனை கூறப்படுகிறது. இது சம்பந்தமாக உங்கள் கருத்து என்ன?

ப: தெய்வ வழிபாட்டிற்காகவுள்ள பொது இடங்களில், பொதுவான சுத்த விதிகளை அனுசரித்து நடக்கிறவர்கள் எல்லோரும் அனுமதிக்கப்பட வேண்டும். உடையில் இன்ன விதமான சுத்தம்தான் இருக்க வேண்டும் என்பதில் யார் தீர்ப்புக் கூறுவது? இந்த விஷயங்கள் சட்டத்தினாலல்லாமல், பொதுஜன அபிப்பிராயத்தினால் ஒழுங்குபடுத்தப்படுகின்றன. ஒரு சிற்றுண்டிச்சாலை நடத்துகிறவர், தாம் சுத்தமாக இருப்பவராயின், அழுக்கோடிருப்பவருக்குப் பலகாரங்களை விற்க மறுத்துவிடுவார். அவர் அப்படிச் செய்யவில்லையானால், அவரிடம் யாரும் வாங்க வரமாட்டார்கள். ஆனால், பலகாரக் கடைக்காரர் ஒருவர், 'தீண்டாதார்' என்று சொல்லப்படுகிறார் என்பதற்காக அவருக்குப் பலகாரங்களை விற்க மறுப்பாரானால், அவர் தொழிலை நடத்தும் உரிமையை இழந்துவிடுகிறார்.

கே 5: தீண்டாமையைக் குறித்து உங்கள் கருத்து கடினமானதாக இருக்கிறது. உயர் சாதி ஹிந்துக்களில் கூட, தங்களுடைய ஆசாரமில்லாத குழந்தைகளின் கையால் நீரோ, உணவோ வாங்கிச் சாப்பிடாதவர்களிருக்கிறார்கள். இதைத் தீண்டாமை என்று நீங்கள் கூறுகிறீர்களா?

ப: இதைத் தீண்டாமை என்று நான் சொல்லவில்லை. ஹிந்து தருமத்தில் ஐந்தாவது வர்ணம் என்பது ஒன்றில்லை என்று நான் அநேக தடவைகளில் விளக்கியிருக்கிறேன். ஆகையால், மற்ற நான்கு வர்ணத்தினருக்கும் பொதுவாக இருந்து வரும் உரிமைகள் யாவும் 'தீண்டாதாரு'க்கும் இருக்க வேண்டும்.

கே 6 : தண்ணீர் குடிப்பதைப் பற்றி அதிகமாக வற்புறுத்திக் கொண்டிராமல், உயர் சாதி ஹிந்துக்கள் மனதிலிருந்து உயர்வு, தாழ்வு மனப்பான்மையைப் போக்க முயன்று பரஸ்பர அன்பையும் உதவியையும் அதிகரிப்பதே மேல் என்று சிலர் யோசனை கூறுகிறார்கள். இந்த யோசனையை நீங்கள் ஏற்றுக் கொள்ளுகிறீர்களா?

ப : நயவஞ்சகத்தை மறைப்பதற்காக இந்த யோசனை கூறப் படாமலிருக்குமானால், இதை நான் ஏற்றுக் கொள்ளுகிறேன். ஒரு மரத்தின் தன்மையை அதன் பழத்தைக் கொண்டுதான் தீர்மானிக்க வேண்டும். தண்ணீர் குடிப்பதையும் சாப்பிடு வதையும் நான் முக்கியம் என்று வற்புறுத்திக் கொண்டிருக்க வில்லை. ஆனால், ஒருவர் 'தீண்டாதார்' என்று சொல்லப் படுகிறார் என்பதற்காக அவர் கொடுக்கும் நீரைக் குடிக்க ஒருவர் மறுப்பாரானால், அப்பொழுது இதை நான் வற்புறுத் திச் சொல்லுகிறேன்; சொல்லி வருவேன். ஏனெனில், அவ் விதம் அவர் கொடுக்கும் நீரைப் பருக மறுப்பது, அப்பொழுது உயர்வு என்ற அகம்பாவத்தின் சின்னமாகிறது.

கே 7 : இதற்கு சமய சம்பந்தமான கீர்த்தனைகள் மூலம் வைஷ் ணவ உபதேசங்களைப் பரப்புவதும், சாதி, இனம், பாகுபாடு இல்லாமல் எல்லோரும் சேர்ந்து உபவாசம் போன்றவைகளை அனுசரிக்கும்படி செய்வதும் எளிதான சாதாரண முறைக ளாகும். இம்முறை நான்கு நூற்றாண்டுகளுக்கு அதிகமாகவே அனுசரிக்கப்பட்டு வந்திருக்கிறது. இந்த யோசனையைக் குறித்து உங்கள் கருத்து என்ன?

ப : இந்தக் கீர்த்தனைகளின் பலனைக் குறித்து நான் ஆராய்ந்த தில்லை. ஆனால், வெறுக்கத்தக்கதான உயர்வு மனப்பான்மை யைத் தகர்த்தெறிவதற்கான எந்த நல்ல முறையையும் நான் வரவேற்பேன்?

—'எங் இந்தியா' – 2—7—1925

# 12

# பகிஷ்காரப் பூச்சாண்டி

ஒருவர் நீண்ட கடிதம் எழுதியிருக்கிறார். அதன் சாராம்சம் இதுதான் :

"சாதி ஹிந்துக்களில் சிலராகிய நாங்கள் முயற்சி செய்து பீகார் கிரா மங்கள் சிலவற்றில் கிணறுகளை ஹரிஜனங்களுக்குத் திறந்துவிடுவதில் வெற்றி பெற்றோம். ஆனால், பக்கத்திலிருக்கும் பிராம்மணப் பூசாரிகள், கிராமக்கோயில் களில் பூஜை செய்வதையே நிறுத்திவிட்டார்கள். சிராத்தம், கல்யாணம் போன்றவைகளில் புரோகிதம் செய்வதையே நிறுத்திவிடுவதாக உள்ளூர்

பிராம்மணர்கள் மிரட்டி வருகிறார்கள். ஏதும் அறியாதவர்களான கிராம வாசிகள் இதனால் பயந்துவிட்டார்கள். சத்தியாக்கிரகம் செய்யவேண்டும் என்று நான் கருதினேன். ஆனால், நான் கோபத்தில் அப்படிச் செய்ததாகிவிடும் என்று அஞ்சி, சத்தியாக்கிரகம் செய்யாதிருந்துவிட்டேன். இத்தகைய நிலைமையில் நான் என்ன செய்யவேண்டும் என்று கூறுகிறீர்கள் ?''

இதே போன்ற விஷயம் சமீபத்தில் திருச்சிராப்பள்ளிக்கு பக்கத்திலும் நடந்தது. டாக்டர் ராஜன் அதில் உறுதியுடன் நடந்து கொண்டார். சாதியில் அவரும் பிராம்மணர்; சேவை உரிமையின் மூலம் சூத்திரர். சீர்திருத்தக்காரரின் குடும்பத்தில் ஒருவர் இறந்துவிட்ட போது, தகனக் கிரியைகளைச் செய்யக் கூட மறுத்துவிட்ட வைதிக பிராம்மணர்களை மீறி அவர் நடந்து கொண்டார்.

ஆகையால், இத்தகைய சந்தர்ப்பங்களில் சத்தியாக்கிரகம் செய்வதற்கு அவசியமில்லை என்பதே நான் கூறும் யோசனை. தீண்டாமை என்பது பாவம் என்று கருதுகிறவர்கள், பகிஷ் காரம் போன்ற கஷ்டங்கள் எவை வந்தாலும் அவற்றையும் அனுபவிக்கத் தயாராக இருப்பதோடு, அக் கஷ்டங்களைத் தூய்மைக்கும் தவத்திற்கும் உரிய காரியங்களாகக் கருதவும் வேண்டும். வெளிச் சம்பிரதாயங்களை விட்டுவிட அவர்கள் முழு அடக்கத்துடன் கற்றுக்கொள்ள வேண்டும். சாவிலும் விவாகத்திலும், அல்லது சிராத்தமாக யிருந்தாலும் கடவுள் பெயரால் அவருக்காகச் செய்யப்படும் எக் காரியத்திற்கும், புரோகிதரின் உதவி தேவையே இல்லை. ராம நாமத்தை உச்சரித்தோ, அல்லது ஒருவர் எந்தப் பழக்கத்தில் வளர்ந் திருக்கிறாரோ அதன்படி அவருக்குத் தெரிந்திருக்கும் எந்த முறையை அனுசரித்தோ, புனிதமான மந்திரங்களைச் சொல்லி யாரும் ஒரு தம்பதிகளுக்கு விவாகம் செய்து வைத்துவிடலாம். ஆயிரம் பெயர்களை மாத்திரம் கொண்டவரன்று கடவுள்; அவருக்குக் கோடி நாமங்கள் உண்டு. உள்ளத்தில் எந்தப் பெயர் உதிக்கிறதோ, எந்தப் பெயரினால் அவரை உணரு கிறோமோ அந்தப் பெயரே சிறந்த பெயர்; நமக்குச் சிறந்தவை யாக இருப்பதையெல்லாம் விட உயர்ந்தது. ஆனால், யாருக்குத் தங்கள் நம்பிக்கையில் தீரம் இருக்கிறதோ, தங்களிடமே யாருக்கு நம்பிக்கை உண்டோ, தங்கள் கொள்கையில் யாருக்கு நம்பிக்கை உண்டோ, நித்தியமான ஆண்டவனிடம் யாருக்கு நம்பிக்கை இருக்கிறதோ, அவர்களால்தான் இதையெல்லாம் செய்ய முடியும். மனவுறுதியின்மையால் எந்த விதமான பயனும் ஏற்படக்கூடிய இயக்கமல்ல இது. திடமான உள்ளமும், அப் பழுக்கற்ற ஒழுக்கமும் உள்ள ஊழியர்கள் மாத்திரமே, தங்களு டைய திடமான நம்பிக்கை கிராமவாசிகளையும் பற்றிக்கொள்ளும் படி செய்ய முடியும். பகிஷ்காரமும் அதைவிட மோசமான கொடுமைகளும் வந்தாலும் அவர்களால்தான் நியாயமான காரி யத்தைச் செய்ய முடியும்.

—'ஹரிஜன்' - 4—3—1931

# 13

# ஹரிஜனங்களும் ஹரிஜனங்களல்லாதாரும்

'ஹரிஜனங்களிடையே ஆக்க வேலையைச் செய்து வருவதை விட, அவர்களுடைய நிலைமையைக் குறித்து அவர்களுக்குத் தீவிரமான அதிருப்தி ஏற்படும்படி செய்து, அதன் மூலம் சுய உதவிக்குத் தங்களுக்குள்ளேயே சக்தியை வளர்த்துக் கொள்ளும் படி செய்வது நல்லதல்லவா? சாதி ஹிந்துக்கள் மனமாற்றமடை யும் படி செய்ய நீங்கள் முயன்று வருவதில் பயனில்லை.' ஊழியர்கள் கூட்டத்தில் கேட்கப்பட்ட கேள்விகளில் ஒன்று இது. இது முக்கியமான கேள்வியாகையால் அக் கூட்டத்தில் நான் இதற்குச் சொன்ன பதிலின் சுருக்கத்தைக் கொடுப்பது நல்லது. இயக்கத்தின் முழுத் தன்மையையும் பற்றி எதுவுமே தெரிந்து கொள்ள வில்லை என்பதையே கேள்வி வெளிப்படுத்துகிறது. ஹரிஜனங்களிடையே அதிருப்தியை உண்டாக்குவதால் அவர்களுக்கு உடனடியான நிவாரணம் எதுவும் ஏற்பட்டுவிடாது. அதோடு ஹிந்துக்களிடையே இந்த மோசமான பாகுபாடு நிரந்தரமாக இருந்து வரும்படியும் அது செய்துவிடும். இயற்கைக்கு விரோதமான இந்தப் பாகுபாட்டை ஒழித்துவிட்டுச் சாதி ஹிந்துக்களிடமிருந்து ஹரிஜனங்களுக்கு உரியதான சாதாரண நீதியைப் பெறுவது என்பதுதான் இந்த இயக்கத்தின் நோக்கம். இதனால் இந்த இயக்கம், செய்த தவறுகளுக்கு வருந்திப் பிராயச்சித்தம் செய்து கொள்ளுவதாக ஆகிறது. எனவே, இது ஒரு பக்கம் ஹரிஜனங்களிடையே ஆக்க வேலை செய்வதைக் கொண்டிருக்கிறது. மற்றொரு பக்கத்தில், கேட்டுக்கொள்ளுவதன் மூலமும், விவாதிப்பதனாலும், எல்லாவற்றிற்கும் மேலாகச் சீர்திருத்தக்காரர்களைப் பொறுத்த வரையில் சரியாக நடந்துகொள்ளுவதனாலும், சாதி ஹிந்துக்கள் மனமாற்றமடையும்படி செய்வதைக் கொண்டது இந்த இயக்கம்,

விவாதிக்கப்பட்ட மற்றோர் கேள்வி இது: ஹரிஜனங்களுக்குச் சேவை செய்வதைவிட, பட்டினி கிடக்கும் விவசாயிகளின் நிலைமை அபிவிருத்தியடையப் பார்ப்பது அதிக முக்கியமானது என்று நீங்கள் கருதவில்லையா? ஆகையால், விவசாயிகளின் ஸ்தாபனங்களில் பொருளாதார நிலையைப் பொறுத்த வரை இயல்பாகவே ஹரிஜனங்களும் சேர்ந்துதான் இருப்பார்களாகையால் அத்தகைய ஸ்தாபனங்களை நீங்கள் ஆரம்பிக்கக் கூடாதா?'

இக்கேள்வியைக் கேட்டிருப்பவர் கூறுவது உண்மையாக இருக்க வேண்டும் என்றே விரும்புகிறேன். துரதிருஷ்டவசமாக, விவசாயிகளின் பொருளாதார நிலைமை சீர்படுவது என்பதில்

ஹரிஜனங்களின் பொருளாதார நிலை சீர்படுவதும் சேர்ந்துதான் இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. ஹரிஜனல்லாத ஒரு விவசாயி, தான் விரும்பும் அளவுக்கு உயர முடியும்; வாய்ப்பும் அவர் உயர அனுமதிக்கிறது. சாதி ஹிந்து விவசாயியைப் போன்று ஹரிஜன விவசாயி தாராளமாக நிலம் வைத்துக் கொண்டு அதைப் பயன்படுத்திக் கொள்ள முடியாது. தனக்குத் தேவையான தொழிலாளர்கள் ஹரிஜனுக்குக் கிடைக்கமாட் டார்கள். அநேக இடங்களில் அவருக்குத் தேவையான விதை யையும் அவர் வாங்க முடியாது. ஹரிஜனல்லாத விவசாயியைப் போன்றே, தன்னுடைய பொருளாதார நிலையை மேன்மைப் படுத்திக்கொள்ளுவதற்கு ஹரிஜன விவசாயியால் முடிகிறது என்றே வைத்துக் கொள்ளுவோம். அப்படியிருந்தாலும், அவர் முன்னால் எந்தெந்தச் சமூகக் கஷ்டங்களுக்கு ஆளாகி வந்தாரோ அதே கஷ்டங்கள் அவருக்கு இப்பொழுதும் இருந்து கொண்டு தான் வரும். அவரது பொருளாதார நிலை சீர்பட்டதால் அவர், சமூகக் கஷ்டங்களை ஓட்டாண்டியாக இருந்த போது, உணர்ந் ததைவிட இன்னும் அதிகக் கடுமையாகவே உணருவார். ஆகையால், ஹரிஜனங்களுக்கு இருந்து வரும் விசேஷமான, விசித்திரமான கஷ்டங்களைக் கவனிப்பதற்கென்று ஹரிஜனங் களின் சேவைக்காகத் தனியான ஸ்தாபனம் இருக்க வேண் டியது தவிர்க்க முடியாத தேவையாகிறது. சமூகத்தில் படு பாதாளத்தில் இருக்கும் இவர்கள் நல்ல அபிவிருத்தியை அடைவது, சமூகம் முழுவதும் அடையும் அபிவிருத்தியில் சேர்ந்ததாக இருக்க வேண்டும். மேலும் சாதாரண விவசாயி, கவனிப்பாரற்றுப் போய்விடவில்லை. உதாரணமாக, அகில இந்திய நூற்போர் சங்கம், விவசாயிகளின் நிலைமை சீர்பட வேண்டும் என்பதற்காகவே வேலை செய்து வருகிறது. பயிர்த் தொழிலுடன், அவர்களுக்கு ஒரு கைத்தொழிலும் இருந்து, அதனால் பஞ்ச கால ஆபத்து அவர்களுக்கு ஏற்படாமல் பாதுகாப்புடன் அவர்களுடைய மிகக் குறைந்த வருமானத்துடன் மேலும் வருமானம் கிடைக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டு வரு கிறது.

—'ஹரிஜன்' – 15—6—1934

# 14

# ஹரிஜனங்களும் ராணுவப் பயிற்சியும்

**கேள்வி:** நான் ஒரு ஹரிஜன ஊழியன். ராணுவப் பயிற்சி பெறுவதில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. ராணுவத்தில் சேரும்படி ஹரிஜனங்களுக்கு நான் ஊக்கமளிக்கலாமா?

ராணுவத்தில் சேருகிறவர்களுக்குப் பயமும், தீண்டாமையும் போய் விடுவதோடு, சுயமதிப்பையும் அறிந்து கொள்ளுகிருர்கள். இதில் நீங்கள் கூறும் யோசனை என்ன?

பதில்: இக்கேள்வியுடன் நீங்கள் தவருனவரிடம் வந்திருக்கிறீர்கள். ராணுவப் பயிற்சியில் எனக்கு நம்பிக்கை இல்லை என்பது உங்களுக்குத் தெரியும். ராணுவத்தில் சேரும் ஹரிஜனங்கள் திடீரென்று அப்படியே மாறுதல் அடைந்துவிடுகிருர்கள் என்று நீங்கள் நம்புவது போல நான் நம்பவில்லை. ஆனல், ராணுவத்தில் சேர தாமாக விரும்பும் ஹரிஜனங்களை அப்படிச் சேர வேண்டாம் என்று தூண்ட நான் முயற்சி செய்யமாட்டேன். பணக்காரர்களாக இருப்பவர்களின் பிள்ளைகள் ராணுவப் பயிற்சி பெறப் போகிருர்கள் என்ருல், அவர்களைப் பின்பற்றித் தாங்களும் ராணுவப் பயிற்சி பெற ஹரிஜனங்களும் போவார்களாயின், அவர்களை நான் எப்படித் தடுக்க முடியும்? அகிம்சைப் பாடத்தைச் சொல்லிக் கொடுப்பதென்பது என்றுமே கஷ்டமானதுதான்; இரண்டு மடங்கு ஒடுக்கப்பட்டிருப்பவர்கள் அகிம்சையை அறிந்து கொள்ளும்படி எப்படிச் செய்ய முடியும்? ஒடுக்கப்பட்டிருப்பவர்களிலும் கூட, அகிம்சையின் பாடத்தை உண்மையாக அறிந்துகொண்டிருக்கும் சில ஹரிஜனங்கள் இருந்துவருவது தான் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது.

—'ஹரிஜன்' – 28—7—1940

## 15

# என் உயிர்

கேள்வி: உங்களை ஹரிஜனங்களுக்கே அர்ப்பணம் செய்து கொண்டுவிட்டதால், இப்பொழுது உங்கள் உயிர் அவர்களுக்குச் சொந்தமானதல்லவா?

பதில்: என் உயிர் ஹரிஜனங்களுக்குச் சொந்தமானது என்பது பாதி உண்மை மாத்திரமே. முழு உண்மையும் என்னவென்ருல், என் உயிர் கடவுளுக்குச் சொந்தமானது. ஆகவே, அது ஹரிஜனங்களும், அதன்மூலம் எல்லாப் படைப்புக்குமே சொந்தமானது என்பதுதான். என்னை இங்கே வைத்திருக்கவோ, கொண்டு போய்விடவோ சக்தியுள்ளவர் கடவுள் ஒருவரே.

—'என் ஆன்மாவின் வேதனை' – 6—12—1932

பகுதி இருபது

# ஹரிஜன நிதி வசூல்

## 1

## ஹரிஜனங்களுக்காகப் பிச்சை எடுத்தல்

சிறிய ரெயில்வே ஸ்டேஷன்களிலெல்லாம் ஏழை மக்கள் காந்திஜியிடம் வந்து, அவர் நீட்டும் கரத்தில் ஹரிஜன உதவிக்காகச் சில செப்புக் காசுகளை அவர்கள் வைத்துவிட்டுப் போவது திகைப்படையச் செய்வதாகவே இருக்கிறது. வேறு வேலைகளின் காரணமாக ரெயில் வண்டியின் வாசலுக்குக்கூட பல சமயங்களில் அவர் போக முடிவதில்லை. யாரும் கேட்காமலே தங்களால் இயன்றதைக் கொடுத்துவிட்டுப் போக மக்கள் வருவதை நான் பார்த்திருக்கிறேன். காந்திஜி எங்கே போனாலும் ஹரிஜனங்களுக்காகப் பிச்சை எடுப்பது அவருக்கு வழக்கம் என்பது அவர்களுக்குத் தெரியும். வேறு வேலை இருப்பதோ, மௌன விரதமோ, அவ்வேலையை விட்டுவிடும்படி அவரைச் செய்தாலும் அவர்கள் அதை அவருக்கு நினைவூட்டி விடுகின்றனர்.

சமீபத்தில் காந்திஜி டில்லியில் இருந்தபோது, மாலைப் பிரார்த்தனைக் கூட்டங்களில் நல்ல தொகையையே வசூலித்திருக்கிறார் என்பதை வாசகர்கள் அறிய அக்கறை கொள்ளக்கூடும். கையெழுத்துப் போட்டுக் கொடுப்பதன் மூலமும் ஒவ்வொரு வருடமும் சில ஆயிரங்களை ஹரிஜனங்களுக்காக அவர் சம்பாதித்து விடுகிறார். ஒரு நாள் ஓர் இளைஞர், காந்திஜி கையெழுத்துப் போட்டுத் தரவேண்டும் என்று கேட்டார். காந்திஜி வழக்கம்போல் ஹிந்தியில் கையெழுத்துப் போட்டார். அந்த இளைஞரோ தமிழர். காந்திஜி, தம் பெயரை ஆங்கிலத்தில் எழுத வேண்டும் என்று அவர் கேட்கவில்லை. அதற்குப் பதிலாக அந்த இளைஞர், ''தயவு செய்து தமிழிலும் கையெழுத்துப் போடுங்கள்'' என்றார். இதற்குக் காந்திஜி, 'நான் முயற்சி செய்கிறேன். ஆனால், நீர் மேற்கொண்டும் ஐந்து ரூபாய் கொடுக்க வேண்டி யிருக்கும்'' என்றார். இளைஞர் சிரித்துக்கொண்டே ''மகாத்மாஜி, நான் முன்பே பத்து ரூபாய் கொடுத்திருக்கிறேன்'' என்றார். தமிழ் எழுத்துக்களை நினைவுபடுத்திக் கொண்டு தமிழில் கையெழுத்திடுவதற்குக் காந்திஜி தலையைச் சொரிந்து கொள்ளுவதை அவர் பார்த்தார். பிறகு ஒவ்வொரு எழுத்தாக எழுதித் தமிழில் கையெழுத்துப் போட்டார். ஆனால், தமிழ்க் கையெழுத்தில் ஒரு தவறுகூட இல்லாமல் எல்லாம் சரியாக இருந்தது.

இதைக் கண்டு ஆச்சரியப்பட்ட அந்த இளைஞர், "கையெழுத்தில் தவறே இல்லாமல் இருக்கிறது. மகாத்மாஜி, உங்கள் ஞாபகசக்தி அபாரமானது" என்றார். இவ்விதம் கூறியவாறே அக்கையெழுத்துக்கு மேற்கொண்டும் பத்து ரூபாய் கொடுத்தார். உடனே காந்திஜி, "என் ஞாபக சக்தி ஆற்றலுக்கு ஒன்றுமில்லையா? பாராட்டத்தக்க வகையில் இதில் நான் தேறியிருக்கிறேன். இதற்கு நீங்கள் ஒரு பரிசு கொடுக்க வேண்டும்" என்றார். அந்த வாலிபர் உடனே மூன்றாவது பத்து ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்தார். இதைக் கண்டு ஆனந்தமடைந்த காந்திஜி, "சில வினாடிக்குள் ஹரிஜனங்களுக்காக முப்பது ரூபாய் கிடைத்திருக்கிறது. அவர்கள் உங்களை ஆசீர்வதிப்பார்கள்" என்றார்.

டில்லியில் மாலையில் வசூலான தொகை ருசிகரமானதாக இருக்கும். (தம்படிகளையும் அரைத் தம்படிகளையும் கவனிக்கவும்)

| | | |
|---|---|---|
| *30—3—'42* | ... | *123—0—0* |
| *31—3—'42* | ... | *179—3—7½* |
| *1—4—'42* | ... | *227—11—6* |
| *2—4—'42* | ... | *166—13—9* |
| *3—4—'42* | ... | *102—9—9* |
| காந்திஜி புறப்படுவதற்கு அரைமணி நேரத்திற்கு முன்னால் அவருடன் பேச வந்த பத்திரிகை நிருபர்களிடமிருந்து 'பறித்த' தொகை | | ரூ. *38—0—0* |
| | | ரூ. *837—6-7½* |

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.]

—'ஹரிஜன்' - 26—4—1942

## 2

# பண வசூல்கள்

நான் சேவா கிராமத்திற்கு வெளியிலிருக்கும்போது ரெயில்வே ஸ்டேஷன்களிலும், மாலைப் பிரார்த்தனைக் கூட்டங்களிலும் வசூலிக்கும் தொகை, தீண்டாமை ஒழிப்பின் அபிவிருத்திக்கு ஏதாவது அறிகுறியாக இருக்க வேண்டுமானால், அத்தொகை பெரியதாக இருக்க வேண்டும். ஏனெனில், முன்பைவிட இப்பொழுது அதிகமாகப் பணம் கொடுக்க முன்வருவதைக்

காண்கிறேன். ஸ்டேஷன்களில் நிற்பவரோ, பிரார்த்தனைக் கூட்டங்களுக்கு வருகிறவரோ, தம்மாலியன்றதைக் கொடுக்கத் தவறுவதில்லை. இவ்விதம் பணம் கொடுக்க முன்வருகிறவர்களைக் குறித்து எதுவும் மிகைப்படுத்தத் தேவையில்லை. எனினும், இந்த இயக்கம் பிடிக்கவில்லையானல், பணம் கொடுக்க வருகிறவர்களும் சொற்பமாகவே இருப்பார்கள். ஆனல், இவ்விஷயத்திலோ விரும்பி மனமாரக் கொடுக்கிருர்கள். அப்படிக் கொடுப்பவர்கள் சிரித்த முகத்தோடு வந்து கொடுப்பதைப் பார்க்கும்போது எனக்கு ஆனந்தமுண்டாகிறது. ஏழு கூட்டங்களில் பம்பாயில் ரூ. 4,000 வசூலாகி யிருக்கிறது. ஒவ்வொரு நாள் வசூலும் முந்திய நாள் வசூலை விட அதிகமாக இருந்து வந்தது. இவ்விதம் முதல் நாள் வசூல் ரூ. 205—5—6 என்ருல் கடைசி நாள் ரூ. 1,342—10—9.

—'ஹரிஜன்' - 24-5-1942

பகுதி இருபத்தி ஒன்று

# இயக்கத்தின் விரிவான பொருள்

## 1

## சமயங்களின் சகோதரத் தத்துவம்

தீண்டாமை பூதத்தை ஒழிக்க முற்பட்டிருப்பதில் என் உள்ளுக்குள் இருக்கும் ஆசை என்னவென்றால், ஹிந்துக்களுக்குள் சகோதரத்துவம் ஏற்படுவதோடு மாத்திரமல்லாமல் முக்கியமாக ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், பார்ஸிகள், யூதர்கள் ஆகியவர்களுக்குள்ளும் முக்கியமாக சகோதரத்துவம் நிலவும்படிச் செய்ய வேண்டும் என்பதே. ஏனெனில், உலகத்திலுள்ள எல்லா சமயங்களின் அடிப்படையான உண்மையில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. கடவுளால் அருளப்பட்டவையே அவை என்று நான் நம்புகிறேன்; இச்சமயங்கள் எம்மக்களுக்கு அருளப்பட்டிருக்கின்றனவோ அவை அவர்களுக்கு அவசியமானவை என்றும் நம்புகிறேன். இச்சமயங்களைப் பின்பற்றுவோரின் எண்ணங்களை அனுசரித்து அச்சமயக் கிரந்தங்களை நாம் படிப்போமாயின், அவை எல்லாம் அடிப்படையில் ஒன்றே; அவை ஒன்றுக்கொன்று உதவியாக இருக்கின்றன என்பதைக் காண்போம்.

'என்னைத் தீண்டாதே' என்ற இது, ஹரிஜனங்களோடு மாத்திரம் நிற்கவில்லை. ஆனால் இது, சாதிக்கு விரோதமாக சாதியையும், மதத்திற்கு விரோதமாக மதத்தையும் தூண்டியிருக்கிறது. இந்த இயக்கத்தின் பலனாக இந்த நாட்டிலிருக்கும் பல சமயத்தினரிடையேயும், வகுப்பினரிடையேயும் நாம் மன ஒற்றுமையை அடைந்து, அதன் மூலம் இந்தியாவிலிருக்கும் எல்லா மக்களின் உதவியையும், வெளியிலிருக்கும் மக்களின் உதவியையும்கூட நான் வரவேற்காத வரையில், என்னைப் பொறுத்தவரையில் நான் திருப்தியடையமாட்டேன்.

—'ஹரிஜன்' -16–2–1934

# 2

# ஹிந்துக்கள், முஸ்லிம்களிடையே தீண்டாமை

எனக்குக் கடிதம் எழுதியிருக்கும் ஒரு முஸ்லிம் கீழே வருமாறு கூறுகிருர் :

"தீண்டாமைக் குற்றச்சாட்டை முஸ்லிம் லீக் மீது கூறுவதற்காக நீங்கள் வெட்கப்பட வேண்டும். முஸ்லிமின் கண்ணிலிருக்கும் சிறு துரும்பை நீக்க முயற்சிப்பதற்கு முன்னால், ஹிந்துக்களின் கண்ணிலிருக்கும் உத்தரத்தை நீங்கள் நீக்க வேண்டும். சென்ற ஆயிரம் ஆண்டுகளாக ஹிந்துக்கள், முஸ்லிம்களை அடியோடு பகிஷ்கரித்து வரவில்லையா? ஹிந்து, முஸ்லிமுடன் சாப்பிடுவதோ, நீர் அருந்துவதோ இல்லை. அவர் கலப்பு மணம் செய்து கொள்ளுவதுமில்லை. தன் வீட்டை முஸ்லிமுக்கு வாடகைக்குக் கொடுப்பதுகூட இல்லை. ஹிந்துக்கள் நிறைவேற்றி வந்திருப்பதைப் போன்று ஒரு சமூகத்தை அடியோடு ஒதுக்கி வைத்திருப்பதைவிட வேறு ஒன்றை நீங்கள் யூகித்தும் பார்க்க முடியுமா? இப்பொழுது முஸ்லிம்கள் திருப்பிக்கொண்டு தங்களைச் செய்ததையே திருப்பிச் செய்கிருர்களென்ருல், அது நியாயமான வினைப் பயனல்லவா?"

இந்த அளவுக்கு நான் ஒப்புக்கொண்டிருக்கிறேன். முஸ்லிம்கள் பதிலுக்குச் செய்வது எதுவானுலும் ஹிந்துக்கள் அதை அனுபவிக்க வேண்டியவர்களே. அவர்கள் அப்படிச் செய்ய வேண்டுமா? இதுதான் எனது கேள்வி. அதையே இப்பொழுது கேட்கிறேன். மதத் துவேஷத்தைப் பயன்படுத்திக்கொண்டு ஒரு காரியத்தைச்செய்வது என்பது ஒரு பெரிய ராஜீயக் கட்சிக்குத் தகுந்த காரியமா?

முஸ்லிம் லீக் செய்வதோ, செய்யாமலிருப்பதோ எதுவானுலும், பதிலுக்குப் பதில் செய்யப்படுவதில் நியாயமிருக்கிறது என்பதைச் சிந்தனையுள்ள ஹிந்துக்கள் எண்ணிப் பார்த்து, தனியாக ஒதுங்கியிருப்பது என்பதை ஹிந்து சமயத்திலிருந்து போக்க வேண்டும். புராதன ஹிந்து தருமத்திற்கோ, பகுத்தறிவுக்கோ பொருந்தாத செயற்கைத் தடைகளைக் கொண்டு ஹிந்து தருமத்தைப் பாதுகாத்துவிட முடியாது. ஹிந்து தேநீர், முஸ்லிம் தேநீர், ஹிந்து நீர், முஸ்லிம் நீர் என்று ரெயில்வே ஸ்டேஷன்களில் கூவப்படுவதைக் கேட்டு தாம் அதிக வேதனைப் பட்டதாக மௌலானு அபுல் கலாம் ஆஜாத் சில தினங்களுக்கு முன்னுல் கூறியது மிகவும் சரியானதேயாகும். என்னைத் தீண்டாதே என்பது இன்று அனுசரிக்கப்பட்டு வரும் விதத்தில் ஹிந்து சமயத்தில் எவ்வளவு தூரம் ஆழ்ந்த வேர்விட்டிருக்கிறது

என்பதை நான் அறிவேன். ஆனால், இதைக் காங்கிரஸ்காரர்களும் சகித்துக் கொண்டு வரவேண்டும் என்பதற்கு எந்தக் காரணமும் இல்லை. அவர்கள் சரியானபடி நடந்து வருபவர்களாக இருந்தால், ஹிந்து சமூகத்தில் தீவிரமான மாறுதல்கள் ஏற்படுவதற்கான வழியை அவர்கள் வகுக்க வேண்டும். தீண்டாமை ஒழிய வேண்டும் என்பது, தீண்டாதார் எனப்படுவோரைத் தீண்டிக்கொள்வதோடு மாத்திரம் முடிந்துவிடவில்லை. அதற்கு இன்னும் அதிக ஆழமான பொருளும் இருக்கிறது.

—'ஹரிஜன்' – 1—6—1940

# 3
# அதன் விளைவுகள்

பழனியில் கோயிலின் அருகில் நடந்த பிரமாண்டமான கூட்டத்தில் பூரண அமைதி இருந்தது. சப்தம் என்பதே எதுவும் இல்லை. தீண்டாமையை ஒழிப்பதன் விளைவுகளைக் குறித்து அங்கே கூடியிருந்தோருக்குஎடுத்துக்கூற அச்சமயத்தைப் பயன்படுத்திக் கொண்டேன். தீண்டிக் கொள்ளுவது என்பதுடன் இந்த இயக்கம் ஆரம்பமாயிற்று; ஆனால், அது அத்தோடு நின்றுவிடுமானல் அது உணர்ச்சியற்ற மரக்கட்டை போன்றே இருக்கும். ஒரு பிராம்மணர், அவர் எவ்வளவுதான் கற்றறிந்திருந்தாலும், தீயவராகவும் இருக்கக்கூடும். அப்படிப்பட்டவரை பிராம்மணர் என்று சொல்லுவது அறிவுக்கு முற்றிலும் முரணானதாகும். பிரமத்தை அறிந்தவரே பிராம்மணர். ஒருவர் எப்படிப்பட்டவர் என்பதை நிர்ணயிக்க வல்லது அவரது ஒழுக்கமேயல்லாது அவர் தொழில் அன்று. சமூக உறவு சம்பந்தப்பட்ட எல்லாவற்றிலுமே, ஒரு தோட்டி, பிராம்மணருக்குச் சமம் என்று இருக்கவேண்டும். மற்றவைகளிலெல்லாம் ஒரு தோட்டி மௌலானா அபுல் கலாம் ஆஜாத்துக்குச் சமமாக இருப்பாராயின், அவர் பெருமையுடன் இருந்த நாற்காலியில் தோட்டி இருக்கக்கூடாது என்பதற்கு எக்காரணமும் இல்லை. ஒரு தோட்டி, தோட்டியாக வேலை செய்து கொண்டே, காங்கிரஸ் அக்கிராசனரின் ஸ்தானத்தில் வீற்றிருக்கும் நாள் வருவதைக் காண நான் ஆனந்தமடைவேன்.

தீண்டாமைப் புண், வெகு ஆழமாகப் புரையோடியிருப்பதால், அது நம் வாழ்க்கையில் வியாபித்துவிட்டது என்று தோன்றுகிறது. எனவே, இதனல் பிராம்மணருக்கும் பிராம்மணரல்லாதாருக்கும், ஒரு மாகாணத்திற்கும் இன்னொரு மாகாணத்திற்கும், ஒரு மதத்திற்கும் மற்றோர் மதத்திற்கும் உண்மையற்ற வித்தியாசங்களெல்லாம் இருந்து வருகின்றன. தீண்டாமையின் விஷ வாசனையுள்ள இவையெல்லாம் ஏன் இருந்துவரவேண்டும்?

நாமெல்லோரும் ஒரே இந்தியக் குடும்பத்தின், அதற்கும் மேலாக ஒரு மனிதக் குடும்பத்தின் குழந்தைகளாக ஏன் இருந்து வரக் கூடாது? ஒரே மரத்தின் கிளைகளைப் போன்று நாம் இருக்க வில்லையா?

தீண்டாமை அடியோடு ஒழிக்கப்பட்டுவிடும்போது, இந்த வித்தியாசங்களெல்லாம் மறைந்துவிடும்; மற்றவரைவிட தான் உயர்ந்தவர் என்று யாரும் எண்ணிக் கொள்ளமாட்டார். இயல்பாகவே, பிறரைச் சுரண்டி வாழ்வது என்பதும் ஒழிந்து, கூட்டுறவு தினசரி வாழ்க்கை முறையாக இருந்துவரும்.

—'ஹரிஜன்' – 10—2—1946

## 4

## 'என் சொந்த எண்ணமே'

தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தை சுவாமி விவேகானந்தர் ஆரம்பித்தார் என்றும், அவருக்குப் பின்னுல் அந்த வேலையைக் காந்திஜி நிறைவேற்றிவைத்தார் என்றும் ரோமன் ரோலண்டு எழுதியிருக்கிருர். சரித்திராசிரியர் என்ற நோக்கத்தில் அவர் இதைக் கூறியிருக்கிருர். விவேகானந்தரும் தயானந்தரும் தீண் டாமையைக் கண்டித்திருக்கிருர்கள். ஆகையால், இப்பெரிய தீமையின் சம்பந்தமான போக்கை அவர்களிடமிருந்து பாபு பெற்ருர் என்பது சரித்திரத்தைப் பொறுத்தவரையில் உண்மை; ஆனுல், தீண்டாமையை எதிர்த்துப் போராடுவது என்று காந்திஜி தீர்மானித்தபோது அவ்விரு பெரியார்களின் கருத் துக்கள் அவருக்குத் தெரியுமா என்று நான் கேட்டதற்குக் காந்திஜி கூறியதாவது:

''விவேகானந்தர் எழுதியிருக்கும் ராஜயோகத்தைத் தவிர அவருடைய நூல்களில் எதையும் இதுவரை நான் படித்த தில்லை. தயானந்தர், ஆரிய சமாஜத்தை ஆரம்பித்தார் என்பது எனக்குத் தெரியும். ஆனுல், ஹரிஜனங்களின் முன்னேற்றத்தைக் குறித்து அவர் எண்ணினுர் என்பது எனக்குத் தெரியாது. ஹரி ஜனங்களுக்குச் சேவை செய்ய வேண்டும் என்பது எனக்குச் சொந்தமாக ஏற்பட்ட எண்ணமே.''

தென்னுப்பிரிக்காவில் இருந்த சூழ்நிலையும், காந்திஜி அங்கே செய்து வந்த வேலையும் தீண்டாமையைப்பற்றிய பிரச்னையை அவருடைய கவனத்திற்கு முக்கியமாகக் கொண்டு வந்து, அதன் பேரில் தீண்டாமை ஒழிப்பு வேலையை மேற்கொள்ளவேண்டும் என்ற கருத்து தோன்றியிருக்கலாமா என்று அவரைக் கேட் டேன். அதற்குக் காந்திஜி கூறியதாவது:

"நீங்கள் கூறுவது சரியே. தென்னப்பிரிக்காவில், தென்னப் பிரிக்கச் சூழ்நிலையில்தான் இந்தக் கருத்து எனக்கு ஏற் பட்டது."

"தரித்திர நாராயணன்" என்ற சொல்லை முதலில் உபயோ கித்தவர் விவேகானந்தரே என்பது அவருக்குத் தெரியுமா என்று பாபுவைக் கேட்டேன். அதற்கு அவர் கூறியதாவது: "தெரியாது. சித்தரஞ்சன் தாஸ் கூறவே அச்சொல்லை நான் முதன் முதலில் கேட்டேன். ஆகையால், அவர் கண்டுபிடித்த சொல் அது என்று எண்ணினேன். அதை முதலில் சொன்னவர் விவேகானந்தரே என்பது பின்னல்தான் எனக்குத் தெரிந்தது."

[ஸ்ரீ மகாதேவ தேசாயின் நாட்குறிப்பிலிருந்து எடுத்தது.]

# பெண்களும் தீண்டாமையும்

[1933-34ல் காந்திஜி ஹரிஜன யாத்திரை செய்த போது, பல்வேறு பெண்கள் கூட்டங்களில் செய்த பிரசங்கங்களிலிருந்து பின் கண்ட பகுதிகள் எடுக்கப்பட்டுள்ளன.]

## விலாசப்பூரில்

சகோதரிகளாகிய நீங்கள், ஹரிஜன் இயக்கத்திற்கு உங்களால் முடிந்ததைக் கொடுக்கவேண்டுமென்று விரும்புகிறேன். ஹரிஜனங்களுக்கு நாங்கள் எந்த விதத்தில் சேவை செய்யலாமென்று நீங்கள் எனக்கு அளித்துள்ள வரவேற்பில் கேட்டிருக்கிறீர்கள். மற்றெல்லாவற்றையும்விட முக்கியமாக, உங்கள் உள்ளத்திலிருந்து தீண்டாமையை அறவே ஒழித்து விட்டு, உங்களுடைய குழந்தைகளுக்கு எப்படி சேவை செய்வீர்களோ அதே மாதிரி ஹரிஜனப் பையன்களுக்கும், பெண்களுக்கும் சேவை செய்ய வேண்டுமென்று விரும்புகிறேன். உங்களுடைய சொந்த உறவினர்களைப்போல், சகோதரர்களைப் போல், சகோதரிகளைப் போல், ஒரே இந்தியத்தாயின் குழந்தைகளான அவர்களை நீங்கள் நேசிக்க வேண்டும். தியாகம், சேவை ஆகியவற்றின் உயிர்ச் சின்னங்கள் என்று பெண்களை நான் போற்றி வந்திருக்கிறேன். தன்னலமற்ற சேவை உணர்ச்சியை இயற்கை உங்களுக்கு அளித்திருக்கிறது. இந்த விஷயத்தில் ஆண்கள் உங்களுக்குச் சமமாக வரமுடியாது. கஷ்டத்தைக் கண்டால் மனம் இளகிவிடும் இரக்க உள்ளம் படைத்தவர்கள் பெண்கள். ஆகையால், ஹரிஜனங்களின் கஷ்டங்கள் உங்கள் மனத்தை இளக்கி, நீங்கள் தீண்டாமையையும், அத்துடன் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற வித்தியாசத்தையும் கைவிட்டுவிட்டால், ஹிந்து மதம் தூய்மையடைந்து விடும்; ஹிந்து சமுகமும் ஆன்மிக முன்னேற்றப் பாதையில் ஒரு நீண்ட அடி எடுத்து வைத்ததுமாகும். இந்தியாவிலுள்ள 35 கோடிமக்களும் க்ஷேமமாயிருப்பார்களென்பது இதன் இறுதிப் பலனாயிருக்கும். மனித இனத்தில் ஐந்தில் ஒரு பங்குக்கு ஏற்படும் அற்புதமான பிராயச்சித்த அனுபவம், மனித வர்க்கத்துக்கே ஒரு நல்ல பலனையளிக்கும். இது ஒரு பெரிய இயக்கம்; ஆன்ம சுத்தி இயக்கங்களிலேயே இது மிகப் பெரிதானதாக இருக்கலாம். இதில் நீங்கள் முழுப் பங்கு கொள்ள வேண்டுமென்று எதிர்பார்க்கிறேன்.

—'ஹரிஜன்' - 8—12—1933

# டில்லியில்

எல்லோரையும் படைத்த கடவுளின் கண்களில், அவனுடைய எல்லாச் சிருஷ்டிகளும் சரிசமமானவர்களே. மனிதர்களுக்குள் உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்று கடவுள் பாகுபாடு செய்திருந்தால், யானைக்கும், எறும்புக்கும் உள்ள வித்தியாசத்தைப் போல் அது கண்ணுக்குப் புலப்பட்டிருக்கும். ஆனால் கடவுள் எல்லா மனிதப் பிறவிகளுக்கும் பாரபட்சமின்றி ஒரே விதமான உருவத்தையும், இயற்கைத் தேவைகளையும் அளித்திருக்கிறார். நகரசுத்தி வேலை செய்வதில் ஹரிஜனங்கள் தீண்டத்தகாதவர்கள் என்று நீங்கள் கருதினால், தன்னுடைய குழந்தைகளுக்கு எந்தத் தாயார்தான் அந்த வேலையைச் செய்யவில்லை? சமூகத்திற்கு மிகவும் பிரயோசனமான ஊழியர்களான ஹரிஜனங்களை தீண்டத்தகாதவர்களென்றும், 'பிரஷ்டர்' களென்றும் நினைப்பது அநீதியின் சிகரமாகும். இந்த பாவத்தை ஹிந்து சகோதரிகள் உணரச்செய்ய வேண்டுமென்பதற்காகவே இந்தச் சுற்றுப் பிரயாணத்தை நான் ஆரம்பித்திருக்கிறேன். எந்த மனிதப் பிறவியையுமே நமக்குத் தாழ்ந்தவன் என்று நினைப்பது ஒரு நல்ல காரியமாக இருக்கவே முடியாது. நாமெல்லோரும் ஒரே கடவுளைத்தான் வெவ்வேறு பெயர்களில் வழிபடுகிறோம். ஆகையால், நாம் யாவரும் ஒன்றே என்ற அடிப்படை உண்மையை உணர்ந்து, தீண்டாமையையும், மனிதர்களிடையே உயர்ந்தவர்கள், தாழ்ந்தவர்கள் என்ற உணர்ச்சியையும் விட்டுவிட வேண்டும்.

—'ஹரிஜன்' - 22—12—1933

# சென்னையில்

உங்களை ஒரு காரியம் செய்யச் சொல்லுவதற்காக நான் இங்கே வந்திருக்கிறேன். சிலர் உயர்ந்தவர்கள், சிலர் தாழ்ந்தவர்கள் என்பதை அடியோடு மறந்துவிடுங்கள். சிலர் தீண்டத்தக்கவர்கள், சிலர் தீண்டத்தகாதவர்கள் என்பதையும் அடியோடு மறந்து விடுங்கள். என்னைப் போலவே நீங்களெல்லோரும் கடவுள் நம்பிக்கையுள்ளவர்களென்றும் நான் அறிவேன்; ஆண்களுக்கும் ஆண்களுக்குமிடையே, பெண்களுக்கும் பெண்களுக்குமிடையே உயர்ந்தவர்கள், தாழ்ந்தவர்கள் என்று வித்தியாசம் கற்பிக்கும்படி கடவுள் அவ்வளவு கருணையற்றவராகவோ, நேர்மையற்றவராகவோ இருக்கமுடியாது. ஹிந்து மதத்திற்கு இந்த தீண்டாமைதான் மிகப் பெரிய இழுக்காகும். தீண்டாமை வாழ்ந்தால், ஹிந்து மதம் செத்துவிடும் என்று சொல்ல நான் தயங்கவே மாட்டேன். கடவுளைப்பற்றி மனிதர்களின் பாஷையில் சொல்லலாமென்றால், கடவுள் நம்மிடம் மிகவும் பொறுமையாயிருந்திருக்கிறார். ஆனால் கடவுளின் பொறுமைக்கும் ஓர் எல்லையுண்டு; ஹிந்து இந்தியாவில் மனிதன் மனித

னுக்கு இழைக்கும் இந்தக் கொடூரத்தை அவர் இனிப் பொறுத்துக் கொண்டிருக்கமாட்டார் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

—'ஹரிஜன்' - 29—12—1933

# பெங்களூரில்

நம்மைவிடச் சிலர் தாழ்ந்தவர்கள் என்று நாம் நினைக்கும் போது, நம்மிடம் தீமை குணமே ஓங்கி நிற்கிறது. இந்தத் தீமையை நாம் விட்டொழிக்காவிட்டால், அது நம்மை விழுங்கி விடும். பிராயச்சித்தம் செய்வதற்குக்கூட ஒரு ஹிந்துவும் இருக்கமாட்டார். அத்தகைய கதி நமக்கு நேர்ந்தால், அது நியாயம்தான் என்றே நான் நினைக்கிறேன். இந்த எச்சரிக்கையைக் கொடுப்பதற்காகவே நான் இந்தியா பூராவிலும் சுற்றுகிறேன். ஆகையால், எல்லா ஹரிஜன்களும் நம்முடன் பிறந்த சகோதரர்கள், சகோதரிகளைப் போன்றவர்கள் என்று நினைத்தால் பெரிய புண்ணியம் செய்தவர்களாவீர்கள்,

—'ஹரிஜன்' – 19—1—1934

ஹரிஜனங்கள் வசிக்கும் சில இடங்களைப் பார்த்த பிறகு காந்திஜி மற்றொரு கூட்டத்தில் பேசினார். மைசூரில் பார்த்ததற்கும் இதற்குமுள்ள வித்தியாசம் அவருக்கு மிகவும் வேதனையாயிருந்தது. அவர் கூறினார்:

மற்றவர்கள் நம்மை எப்படி நடத்த வேண்டுமென்று நாம் நினைக்கிறோமோ அதே மாதிரி நாமும் மற்றவர்களை நடத்த வேண்டும் என்ற கொள்கையில் நான் நம்பிக்கையுள்ளவன். இன்று காலையில், இப்போது நான் பார்த்த ஓட்டைக் குடில்கள் மனிதர்கள் வாழ்வதற்குத் தகுதியானவைகளல்ல. ஒரு குறைந்த பட்ச தரத்திற்குக் கீழே இறங்கினோமானால், அது மனித குலத்துக்கே அவமதிப்பாகும். நான் பார்த்த ஓட்டைக் குடில்கள் அந்தக் குறைந்தபட்சத் தரத்தைத் திருப்தி செய்யவில்லை. இது பலவிதங்களிலும் அழகான ஒரு இடமாகும். அடுத்தபடியாகக் கிடைக்கும் சந்தர்ப்பத்தில் இந்த மாசு அங்கிருந்து அகற்றப் பட்டு விட வேண்டுமென்று விரும்புகிறேன். துரதிருஷ்டசாலிகளான இந்த சகோதரர்களுக்கும், சகோதரிகளுக்கும் இன்னும் நல்ல குடியிருப்புகளை அளிக்க ஏற்கனவே ஏற்பாடு செய்யப் பட்டிருப்பதாக அறிகிறேன். ஆனால், இத்தகைய உதவியை எவ்வளவு சீக்கிரத்தில் அளிக்கிறோமென்பது முக்கியம் என்பதை நீங்களும் ஒப்புக் கொள்ளுவீர்களென்று நம்புகிறேன். உங்களுடைய ஏற்பாடுகளெல்லாம் முடிந்த பிறகு, அது மிகவும் காலம் கடந்ததென்று சொல்லப்படும்படி இருக்கவேண்டாம்.

—'ஹரிஜன்' – 19—1—1934

இரண்டாம் பாகம்

# பெண்களும் சமூக அநீதியும்

தமிழாக்கம் :

ந. ராமரத்தினம்

பகுதி ஒன்று

# பெண்கள் முன்னேற்றம்

## 1

## பெண்களின் மறுமலர்ச்சி

[பம்பாய் பகினி சமாஜத்தின் வருடாந்தரக் கூட்டமொன்று 1918 பிப்ரவரி 20-ஆம் தேதியன்று காந்திஜியின் தலைமையில் நடைபெற்றது. காந்திஜி குஜராத்தி மொழியில் தனது தலைமையுரையை நிகழ்த்தினர். ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்ட இந்த உரை கீழே கொடுக்கப்படுகிறது.]

பெண்களின் மறு மலர்ச்சி என்று நாம் பேசும் போது என்ன அர்த்தத்துடன் நாம் பேசுகிறோம் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டியது அவசியமாகும். வாழ்வு மங்கியிருந்தால் தான் மறு மலர்ச்சி இருக்க முடியும். அப்படியானல், அதன் காரணம் என்ன, அது எப்படி நேர்ந்தது என்பதை மேற்கொண்டு நாம் பரிசீலனை செய்ய வேண்டும். இந்த விஷயங்களைப் பற்றி ஆழ்ந்து சிந்தனை செய்ய வேண்டியது நமது முதல் கடமை. இந்தியா பூராவிலும் நான் சுற்றுப் பிரயாணம் செய்த போது ஒரு விஷயத்தைக் கண்டேன். அதாவது, இப்போதுள்ள கிளர்ச்சிகளெல்லாம் நம் மக்களின் ஒரு மிகச் சிறு பகுதியினருக்குள்ளாகவே இருக்கின்றன; அகண்ட வானில் இவர்கள் சிறு தூசிகளைப் போன்றவர்களே. கோடிக்கணக்கான ஆண்களும் பெண்களும், இந்தக் கிளர்ச்சி ஒன்று நடக்கிறது என்பது கொஞ்சம் கூடத் தெரியாமலே வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இந்த நாட்டிலுள்ள மக்களில் 85 சத விகிதத்தினர், தம்மைச் சுற்றி என்ன நடக்கிறது என்ற உணர்வே இல்லாத நிலைமையில் தங்கள் நாட்களைக் கழித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த ஆண்களும், பெண்களும், அறியாதவர்கள் தானென்றாலும், வாழ்க்கையில் தாம் செய்ய வேண்டியதைச் செம்மையாகவும், சரியாகவும் செய்கிறார்கள். இருவருக்கும் ஒரே மாதிரியான கல்வி யறிவுதான் இருக்கிறது, அல்லது கல்வி யறிவில்லாமல் இருக்கிறது. இருவரும் பரஸ்பரம் ஒருவருக்கொருவர் எப்படி உதவி செய்ய வேண்டுமோ அப்படிச் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய வாழ்க்கையின் முழுமை இல்லையென்றால், அதற்குக் காரணத்தை மீதமுள்ள 15 சத விகிதத்தினரின் முழுமையற்ற வாழ்க்கையிலும் காணலாம். பகினி சமாஜத்திலுள்ள எனது சகோதரிகள், இந்த 85 சதவிகித

மக்களின் வாழ்க்கைகளை ஆழ்ந்து பரிசீலனை செய்தால், சமாஜத்திற்கு நல்லதொரு வேலைத் திட்டம் வகுத்துக் கொள்ளுவதற்கு அவர்களுக்கு நல்ல ஆதாரங்கள் கிடைக்கும்.

நான் இப்போது தெரிவிக்கப் போகும் கருத்துக்கள், மேலே குறிப்பிட்ட 15 சத விகிதத்தினரைப் பற்றி மட்டுமே இருக்கும். அப்போது கூட, ஆண்கள், பெண்கள் இருவருக்குமே பொதுவாயிருக்கும் பிரதிகூலங்களை விவாதிப்பது பொருத்த மற்றதாகவே இருக்கும். ஆண்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது பெண்களின் மறு மலர்ச்சி எப்படி இருக்க வேண்டும் என்பதே நாம் கவனிக்க வேண்டிய விஷயமாகும். சட்டங்கள் பெரும்பாலும் ஆண்களாலேயே இயற்றப்பட்டவை; தமக்குத் தாமே பணித்துக்கொண்ட இந்த வேலையில் ஆண்கள் எப்போதுமே நியாயமாகவும், தராதரம் பார்த்தும் நடந்து கொண்டிருக்கிறார்கள் என்பதில்லை. பெண்கள் என்றால் அவர்களிடம் இயற்கையாகவே சில குணாதிசயங்கள் இருக்கத்தான் வேண்டும் என்று நமது சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கின்றன. சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள இந்த மாசுகளை அகற்றுவதே பெண்களின் மறு மலர்ச்சிப் பணியில் நாம் செய்ய வேண்டிய மிகப் பெரிய முயற்சியாய் இருக்க வேண்டும். இதை யார், எப்படி முயற்சி செய்யப் போகிறார்கள்? இந்த முயற்சியை நாம் செய்வதற்கு சீதை, தமயந்தி, திரௌபதி போன்ற தூய்மையும், உறுதியும், தன்னடக்கமும் உள்ள பெண்களை நாம் தோற்றுவிக்க வேண்டுமென்பதே என்னுடைய தாழ்மையான அபிப்பிராயமாகும். அப்படிப்பட்டவர்களை நாம் தோற்றுவித்தால், முன் காலத்திய அத்தகைய பெண்களுக்குச் செலுத்தப்பட்டு வந்த அதே மரியாதை இந்த நவீன சகோதரிகளுக்கும் ஹிந்து சமூகத்தினரிடமிருந்து கிடைக்கும். அவர்களுடைய வார்த்தைகளுக்கும் சாஸ்திரங்களுக்குள்ளதைப் போன்ற மதிப்பு இருக்கும். அவர்களைப் பற்றி நமது ஸ்மிருதிகளில் அங்குமிங்கும் தெரிவிக்கப்பட்டுள்ள சில கருத்துக்களைக் கண்டு நாம் வெட்க மடைவோம். சீக்கிரத்தில் அவற்றை மறந்தும் விடுவோம். பழங் காலத்தில் ஹிந்து மதத்தில் இத்தகைய புரட்சிகள் நடந்திருக்கின்றன; எதிர் காலத்திலும் அப்படி நடக்கும். அதனால் நமது மதத்திற்கும் ஒரு ஸ்திரத் தன்மை ஏற்படவும் வழியுண்டாகும். அத்தகைய பெண்களை இந்தச் சங்கம் சீக்கிரத்தில் தோற்றுவிக்க வேண்டுமென்று இறைவனை வேண்டுகிறேன்.

நமது பெண்கள் க்ஷீண மடைந்ததன் மூல காரணங்களை இப்போது விவாதித்து விட்டோம். எந்த லட்சியங்கள் நிறைவேறினால் பெண்களின் இன்றைய நிலைமையை அபிவிருத்தி செய்யலாம் என்பதையும் கவனிப்போம். இந்த இலட்சியங்களை நிறைவேற்றக் கூடிய பெண்களின் எண்ணிக்கை குறைவாகத் தான் இருக்க முடியும். ஆகையால், சாதாரணப் பெண்கள் முயற்சி செய்தால் என்ன சாதிக்க முடியும் என்பதை இப்போது பார்ப்போம். தம்முடைய நிலைமையைப் பற்றிக் கூடிய வரை

யில் அதிகமான பெண்களுக்கு உணர்வு ஏற்படும்படி செய்ய வேண்டும் என்பதே அவர்களுடைய முதல் முயற்சியாக இருக்க வேண்டும். பள்ளிக் கல்வியின் மூலம்தான் இந்த முயற்சியைச் செய்ய முடியும் என்று நம்புவோரில் நானும் ஒருவனல்ல. அந்த அடிப்படையில் வேலை செய்வது, நமது நோக்கங்கள் நிறைவேறு வதைக் காலவரையறையின்றி ஒத்திப்போடுவதாகும். இவ் வளவு நீண்டகாலம் காத்திருக்க வேண்டியதில்லை யென்பதை நான் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் அனுபவ பூர்வமாக அறிந்திருக்கிறேன். பள்ளிக் கல்வி அளிக்க வேண்டுமென்று ஆரம்பிக்காமலே, இப்போதுள்ள பரிதாபமான நிலைமையைப் பெண்களுக்கு உணர்த்த முடியும். ஆணின் தோழி பெண்; ஆணைப்போலவே பெண்ணுக்கும் அதே சிந்தனைத் திறனிருக் கிறது. ஆணின் நடவடிக்கைகளில் மிகச் சிறு அம்சங்களில்கூடப் பங்கு கொள்ள பெண்ணுக்கு உரிமை இருக்கிறது; ஆணுக் குள்ள அதே சுதந்திரமும், உரிமையும் பெண்ணுக்கும் இருக் கின்றன. ஆண்களின் நடவடிக்கைகளில் ஆண்களுக்கு முழு உரிமைகள் இருப்பதைப் போலவே பெண்களின் நடவடிக்கை களில் பெண்களுக்கு முழுஉரிமைகள் இருக்க வேண்டும். எழு தப் படிக்கத் தெரிந்தால்தான் இத்தகைய நிலைமை உண்டு என்றிருக்கக் கூடாது; இதுவே இயற்கையான நிலைமையாக இருக்க வேண்டும். ஒரு வெறும் கொடிய பழக்கம் காரணமாக, அறிவிலிகளும், கொஞ்சமும் தகுதியில்லாதவர்களும்கூட, பெண் களைவிடத் தாங்கள் உயர்ந்தவர்கள் என்ற ஒரு அந்தஸ்தை அனு பவித்து வருகிறார்கள். இதற்கு அவர்களுக்குத் தகுதி கிடை யாது; அப்படி இருக்கவும் கூடாது. நம்முடைய பெண்களின் நிலைமை காரணமாக நம்முடைய இயக்கங்களில் பல பாதி யிலேயே நின்று விடுகின்றன. நாம் செய்யும் பல வேலைகள் உரிய பலன்களை அளிப்பதில்லை; தன்னுடைய வியாபாரத்திற் குப் போதிய மூலதனம் போடாமல் உள்ள வியாபாரியைப் போல் நம்முடைய நிலைமை இருக்கிறது.

எழுதப்படிக்கத் தெரியாமலிருந்தால்கூட பிரயோசனமான நல்ல வேலை செய்ய முடியும் என்றாலும், அத்தகைய படிப்பு இல்லாமல் எப்போதுமே நாம் இருக்க முடியாதென்பது என் னுடைய உறுதியான நம்பிக்கையாகும். எழுத்தறிவு நம்முடைய புத்திக் கூர்மையை மேலும் வளர்ச்சிபெறச் செய்கிறது; நல்லது செய்வதற்குள்ள நம்முடைய சக்தியையும் அதிகரிக்கிறது. எழுத்தறிவுக்கு எப்போதுமே நான் அனாவசியமான உயர்ந்த மதிப்புக் கொடுத்தது கிடையாது. அதற்கு உரிய இடத்தை அளிக்கவே முயற்சித்துக்கொண்டிருக்கிறேன். கல்வியறிவில்லை என்ற காரணத்திற்காக ஆண்கள், பெண்களுக்கு சம உரிமை கள் கொடுக்க மறுப்பதற்கோ, அல்லது அவற்றைப் பறிப் பதற்கோ நியாயமில்லை என்று அவ்வப்போது நான் எடுத்துக் காட்டி வந்திருக்கிறேன். ஆனால், பெண்கள் இந்த இயற்கை யான உரிமைகளை வற்புறுத்தவும், புத்திசாலித்தனமாகப் பயன்

படுத்திக் கொள்ளவும், அவற்றின் வளர்ச்சிக்கு வேலை செய்ய வும், பெண்களுக்குக் கல்வியறிவு அத்தியாவசியமானதாகும். மேலும், இத்தகைய கல்வி யறிவில்லாத மக்கள் உண்மையான தன்னறிவைப் பெறுவதும் சாத்தியமில்லை. மனத்திற்கு நிம்மதி யான மகிழ்ச்சியளிக்கும் விஷயங்களைக் கொண்ட புஸ்தகங்கள் எவ்வளவோ இருக்கின்றன. கல்வியறிவு இல்லாவிட்டால் இவற்றை அனுபவிக்க முடியாமற் போய்விடும். கல்வியறிவில் லாத மனிதப் பிறவிக்கும், மிருகத்திற்கும் அதிக வித்தியாச மில்லை என்று கூறுவது மிகையாகாது. ஆகையால், ஆண்களைப் போலவே பெண்களுக்கும் கல்வி அவசியமாகும். ஆண்கள், பெண்கள் இருவருக்கும் ஒரே மாதிரியான கல்வி அளிக்கப்பட வேண்டுமென்பது இல்லை. அரசாங்கத்தின் கல்வி முறையில் தவறுகள் நிறைய இருக்கின்றன; அதனல் பல தீமைகளும் உண்டாகின்றன. ஆண்கள், பெண்கள் இருவருமே அதை விலக்க வேண்டும். அந்த முறையில் இப்போதுள்ள தவறுகள் இல்லாதிருந்தால்கூட, மொத்தத்தில் அது பெண்களுக்கு ஏற்றது என்று நான் கருதமாட்டேன். ஆணும், பெண்ணும் அந்தஸ்தில் சமமானவர்களே. ஆனல், இருவரும் ஒரே தன்மை வாய்ந்தவர் களல்ல. இருவரும் ஈடிணையற்ற ஒரு ஜோடி; ஒருவருக்கொருவர் உதவியாயிருப்பவர்கள். ஒருவர் இல்லாமல் மற்றெருவர் வாழ முடியும் என்று நினைத்துக்கூடப் பார்க்கமுடியாது. ஆகையால், இருவரில், ஒருவருடைய அந்தஸ்தைப் பாதிக்கும் எதுவும், இரு வருக்குமே அழிவை உண்டாக்கும் என்பது தெளிவு. பெண்களின் கல்விக்காகத் தயாரிக்கும் எந்தத் திட்டத்திலும், இந்த முக்கிய மான உண்மையை எப்போதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். மணமான தம்பதிகளின் வெளி அலுவல்களில் ஆணுக்குத்தான் எல்லா அதிகாரங்களும். ஆகையால், அவற்றைப் பற்றி அவனுக்கு அதிக அறிவு இருக்க வேண்டுமென்பது பொருத்தமானதேயாகும். ஆனல், குடும்ப வாழ்க்கை என்பது, முற்றிலும் பெண்களுக்குரிய விஷயமாகும். ஆகையால், குடும்ப விஷயங்கள், குழந்தைகளை வளர்த்தல், குழந்தைகளுக்குக் கல்வி போன்றவைகளில் பெண்களுக்கு அதிக அறிவு இருக்கவேண்டும். காற்றுப் புகமுடியாத தனித்தனி அறைகளில் அறிவை அடைத்து வைக்க வேண்டுமென்று இதற்கு அர்த்தமில்லை; அல்லது, அறி வின் சில பிரிவுகள் யாருக்கும் மறுக்கப்பட வேண்டும் என்பது மில்லை. ஆனல், இந்த அடிப்படைக் கொள்கைகளைக் கருத்தில் கொண்டு, தாரதம்மியத்துடன் பாட திட்டங்கள் வகுக்கப் பட்டாலொழிய, ஆண்களும், பெண்களும் பூரண வாழ்வு வாழ முடியாது.

நமது பெண்களுக்கு ஆங்கிலக் கல்வி அவசியமா, இல்லையா என்பதைப்பற்றியும் ஒன்றிரண்டு வார்த்தைகள் சொல்ல விரும்பு கிறேன். நம்முடைய சாதாரண வாழ்க்கையில், ஆண்களுக்கோ, பெண்களுக்கோ ஆங்கில அறிவு இருக்கத்தான் வேண்டுமென்ப தில்லை என்ற முடிவுக்கு நான் வந்திருக்கிறேன். ஜீவனேபாயத்

திற்கும், நம்முடைய ராஜீய இயக்கங்களில் தீவிரமாகப் பங்கு கொள்ளுவதற்கும் ஆங்கிலம் அவசியம் என்பது உண்மையே. பெண்கள் ஜீவனோபாயத்திற்காக வேலை செய்வதிலோ அல்லது வர்த்தகத்துறைகளில் ஈடுபடுவதிலோ எனக்கு நம்பிக்கை கிடையாது. ஒரு சில பெண்களுக்கு ஆங்கிலம் அவசியமாயிருக்கலாம் அல்லது ஆங்கிலம் தெரிந்து கொள்ளவேண்டுமென்று அவர்கள் ஆசைப்படலாம். அத்தகையவர்கள், ஆண்கள் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து சுலபமாகத் தமது இந்த ஆசையைப் பூர்த்திசெய்து கொள்ளலாம். பெண்களுக்கென்று உள்ள பள்ளிகளில் ஆங்கிலத்தைப் புகுத்துவது, நம்முடைய கதியற்ற நிலைமையை மேலும் நீடிக்கத்தான் செய்யும். ஆங்கில இலக்கியத்திலுள்ள வளம் மிக்க செல்வங்கள். ஆண்கள், பெண்கள் இருவருக்குமே கிடைக்கும்படி செய்ய வேண்டும் என்று சொல்லப்படுவதை நான் படித்துமிருக்கிறேன்; கேட்டுமிருக்கிறேன். இத்தகைய மனப்பான்மையில் ஒரு தப்பெண்ணம் இருக்கிறது என்பதைத் தாழ்மையுடன் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். இந்தச் செல்வங்கள் ஆண்களுக்குத்தான் கிடைக்க வேண்டும், பெண்களுக்குக் கிடைக்கக்கூடாது என்று யாரும் தாள்போட்டுவிட உத்தேசிக்கவில்லை. உங்களுக்கு விருப்பமிருந்தால், உலகம் பூராவிலுமுள்ள இலக்கியங்களையுமே நீங்கள் படிப்பதை யாரும் தடுக்கமுடியாது. ஆனால், ஒரு குறிப்பிட்ட சமூகத்தின் தேவைகளைக் கருத்தில் கொண்டு பாடத் திட்டங்களைத் தயாரிக்க வேண்டியிருக்கும் போது, இலக்கிய ருசியை வளர்த்துக்கொண்டுள்ள ஒரு சிலருக்கு வேண்டியதைச் செய்ய முடியாது. ஆண்களும், பெண்களும் இப்போது ஆங்கிலம் படிப்பதில் செலவிடும் நேரத்தைக் குறைத்துக் கொள்ள வேண்டும் என்று நான் சொல்லுகிறேன் என்றால், அதனால் அவர்களுக்குக் கிடைக்கக்கூடிய இன்பத்தை மறுக்க வேண்டும் என்பது என்னுடைய நோக்கமல்ல. இதைவிட அதிக இயற்கையான ஒரு முறையைப் பின்பற்றினால் இவ்வளவு அதிகச் செலவும், கஷ்டமும் இல்லாமல் அதே இன்பத்தைப் பெறமுடியும் என்று நான் கருதுகிறேன். நிகரில்லாத அழகுடைய பல ரத்தினங்கள் உலகத்தில் நிறைய இருக்கின்றன; ஆனால், இந்த ரத்தினங்களெல்லாம் இங்கிலீஷ்காரர்களால் தான் அமைக்கப்படுகின்றன என்பதில்லை. இதே மாதிரி மேன்மையுள்ள ஆபரணங்கள் தம்மிடமும் இருக்கின்றன என்று மற்ற மொழிகளும் பெருமைப் பட்டுக்கொள்ள முடியும். இவையெல்லாம் நமது பாமர மக்களுக்கும் கிடைக்கும்படி செய்ய வேண்டும். நம்மிடமுள்ள அறிவாளிகள் இவற்றை நமது மொழிகளிலேயே மொழி பெயர்க்க முன்வந்தால்தான் அது சாத்தியமாகும்.

மேலே குறிப்பிட்டுள்ளது போன்று ஒரு கல்வித் திட்டத்தைத் தயாரித்து விடுவதால்மட்டும், 'நமது சமூகத்திலிருந்து பால்ய விவாகம் என்ற தீமையை அகற்றி விட்டதாகவோ, நமது பெண்களுக்குச் சம உரிமைகள் அளித்ததாகவோ ஆகிவிடாது. திருமணத்திற்குப் பிறகு பார்வையிலிருந்து மறைந்து விடும் நமது

பெண்களைப் பற்றி இப்போது கவனிப்போம். அவர்கள் மீண்டும் நமது பள்ளிகளுக்குத் திரும்பி வருவார்களென்று சொல்ல முடியாது. தமது பெண்களுக்கு இளம் பிராயத்திலேயே திருமணம் முடித்துவைக்கும் பாவத்தைச் செய்து விட்ட தாய்மார்கள், பிறகு அவர்களுக்குப் பள்ளிப்படிப்பை அளிக்க முடியாது; அல்லது, சுவையற்ற அவர்களுடைய வாழ்க்கையை வேறு விதமாக உற்சாகமானதாக்கவும் முடியாது. தங்களுடைய செய்கை எவ்வளவு பாவமானது என்பதைப் பின்னர் அவர்கள் உணர்ந்தால்கூட, இப்படிச் செய்வது சாத்தியமில்லை. ஒரு இளம் பெண்ணை மணந்துகொள்ளுபவன், உன்னதமான நோக்கத்துடன் அப்படிச் செய்வதில்லை; வெறும் காம வெறியைத் தீர்த்துக்கொள்ளவே மணக்கிறான். இந்தப் பெண்களை யார் மீட்பது? இந்தக் கேள்விக்குச் சரியான பதில் கிடைத்தால், பெண்களின் பிரச்னைக்குத் தீர்வு காண்பதற்கும் அது வழி காட்டுவதாக இருக்கும். இதற்கு விடை கிடைப்பது கஷ்டமானதுதான். ஆயினும், இதற்கு ஒரே பதில்தான் இருக்கமுடியும். அவளுக்காகப் பரிந்து பேசுவதற்கு அவளுடைய கணவனைத் தவிர வேறு யாரும் கிடையாது. குழந்தைப் பருவத்திலேயே திருமணம் ஆகி மனைவியாகிவிட்ட ஒருத்தி, தன்னை மணந்துகொண்டவனைத் திருப்பிவிடுவாள் என்று எதிர்பார்ப்பதில் பிரயோசனமில்லை. ஆகையால் இந்தக் கடினமான வேலையை இப்போதைக்காவது ஆண்களிடமே விட்டுவிட வேண்டும். என்னால் முடியுமென்றால், குழந்தைப் பருவத்தில் திருமணம் செய்து கொண்டு விட்ட பெண்களைக் கணக்கெடுத்து, அவர்களுடைய கணவர்களைக் கண்டுபிடித்து, தம்முடைய எதிர்காலத்தைக் குழந்தை மனைவிகளுடன் இணைத்ததன் மூலம் அவர்கள் புரிந்துள்ள பெரிய குற்றத்தை உணர்த்த முயற்சி செய்வேன். இந்தக் குழந்தை மனைவிகளுக்குக் கல்வியளித்து, குழந்தைகள் பெறுவதற்கு மட்டுமின்றி, குழந்தைகளைச் சரியாக வளர்ப்பதற்கும் அவர்களைத் தகுதியுள்ளவர்களாகச் செய்ய வேண்டுமென்றும், இதற்கிடையே அவர்கள் உண்மையான பிரம்மசாரிகளாக வாழவேண்டுமென்றும், இல்லாவிடில் அவர்களுடைய அந்தப் பாவத்திற்குப் பிராயச்சித்தமே கிடையாது என்றும் எச்சரிப்பேன்.

பகினி சமாஜத்தைச் சேர்ந்தவர்கள், தம்முடைய சக்திகளைச் செலவிடுவதற்கு இவ்வாறாகப் பல பிரயோசனமான துறைகள் இருக்கின்றன. வேலை செய்வதற்கான வாய்ப்புகள் நிறைய இருக்கின்றன. உறுதியுடன் வேலை செய்வதில் முனைந்தால், கட்டில்லாமல் நடக்கும் சீர்திருத்த இயக்கங்களை இப்போதைக்குப் பேசாமல் விட்டு விட்டு, சுயாட்சி இயக்கத்திற்குப் பொருத்தமான சேவை செய்ய முடியும்; அதைப்பற்றி ஒரு வார்த்தைகூடப் பேசாமலேயே இந்தச் சேவையைச் செய்யமுடியும். அச்சகங்கள் ஏற்படாமலும், பிரசங்கங்கள் செய்வதற்கான வாய்ப்புகள் மிகவும் குறைவாகவும் இருந்த காலத்திலும், இப்போதிருப்பதைப் போல் ஒரு நாளைக்கு ஆயிரம் மைல் பிரயாணம் செய்ய

முடியாமல் ஒரு நாளைக்கு 24 மைல் பிரயாணம் செய்வதே கஷ்ட மாயிருந்த காலத்திலும், நமது லட்சியங்களைப் பரப்புவதற்கு ஒரே ஒரு சாதனம்தான் இருந்தது. அதுதான் நம்முடைய செய்கை. செய்கைகளுக்கு மிகுந்த சக்தி இருந்தது. இப் போதோவென்றால் வாயுவேகமாக அங்குமிங்கும் ஓடுகிறோம்; பிரசங்கங்கள் செய்கிறோம்; பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் எழுதுகிறோம். அப்படியிருந்தும்கூட, நம்முடைய லட்சியங்கள் தொலை தூரத்திலேயே இருக்கின்றன. எங்கும் ஏக்கம் நிறைந் திருக்கிறது. நாம் நிறைய பிரசங்கங்கள் செய்து, கட்டுரைகள் எழுதுவதைவிட, முன்காலத்தைப்போல் செய்கைகளில் கவனம் செலுத்தினால் அதற்கு மக்களிடையே மேலும் நல்ல செல்வாக்கு இருக்குமென்று நான் நினைக்கிறேன். உங்கள் சங்கத் திலுள்ளவர்கள் எந்த வேலை செய்தாலும் பகட்டு இல்லாமல் அமைதியாகச் செய்ய வேண்டுமென்பதே என்னுடைய மனப் பூர்வமான பிரார்த்தனையாகும்.

## 2

# பெண்ணுக்கு விடுதலை அளியுங்கள்

ஆந்திராவில் நான் செய்த பிரசங்கங்களில் ஒன்றை ஆதாரமாகக் கொண்டு, சென்னையிலுள்ள பிரபல சமூக சேவகி யான டாக்டர் எஸ். முத்துலட்சுமி ரெட்டி ஒரு நீண்ட கடிதம் எழுதியிருக்கிறார். அதிலிருந்து ஒரு ருசியான பகுதியைக் கீழே தருகிறேன்.

"நம்முடைய மக்களின் அன்றாட வாழ்க்கையின் பழக்கவழக்கங்களை நல்ல விதமாக மாற்றி, சீர்திருத்தம் செய்யவேண்டியது அவசரமான காரிய மாகும் என்று பெஜவாடாவிலிருந்து,* குண்டூருக்குப் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது நீங்கள் தெரிவித்த கருத்துக்கள் என்னைப் பெரிதும் கவர்ந்திருக்கின்றன.

"ஒரு டாக்டர் என்ற முறையில் நான், நீங்கள் கூறுவதை முற்றிலும் ஒப்புக்கொள்ளுகிறேன் என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆயினும், ஒரு விஷயத்தை எடுத்துக்காட்ட அனுமதிப்பீர்க ளென்று நம்புகிறேன். கல்வியின் பயனாக உண்மையிலேயே சமூக சீர்திருத்தம், நல்ல சுகாதாரம், நல்ல ஆரோக்கியமான சூழ்நிலை ஆகியவை வரப்போகின்றன என்றால், நமது பெண்களுக்குக் கல்வி யளிப்பதன் மூலம்தான் அவற்றை அடைய முடியும்.

"இப்போதுள்ள சமூக அமைப்பில், கல்விக்கும், உடலையும், மனத்தையும் நன்கு அபிவிருத்தி செய்து கொள்ளுவதற்கும், தன்னம்பிக்கை பெறுவதற்கும்

* இப்பொழுது விஜயவாடா என்றழைக்கப்படும் ஆந்திர நகரமே அச்சமயம் பெஜவாடா என்றழைக்கப்பட்டு வந்தது.

மிகச் சில பெண்களுக்குத்தான் போதிய வாய்ப்புகள் அளிக்கப்படுகின்றன என்று நீங்கள் நினைக்கவில்லையா?

''பழக்க வழக்கங்கள், சம்பிரதாயங்கள் என்ற சுமையின் கீழ் பெண்களுடைய தனித் தன்மை அலட்சியமாக நசுக்கப்படுகின்றது என்று நீங்கள் நினைக்கவில்லையா?

''குழந்தை மணம் என்ற பழக்கம், உடல் வளர்ச்சி, அறிவு வளர்ச்சி, ஆன்மிக வளர்ச்சி ஆகிய எல்லா வளர்ச்சிகளின் அஸ்திவாரத்தையுமே தகர்க்கவில்லையா? குழந்தைப் பருவத்திலேயே மனைவிகளாகிவிட்டவர்கள், தாய்களாகிவிட்டவர்களின் வேதனைகளும், நமது விதவைகள், கைவிடப்பட்ட மனைவிகளின் தீராத் துயரங்களும் உடனடியான பரிகாரத்திற்கு உரியன அல்லவா?

''மதம் என்ற பெயரில் குற்றமற்ற இளம் பெண்கள் சீர்கேடும், தீமையும் நிறைந்த ஒரு வாழ்க்கையை நடத்தும் பழக்கத்தை அனுமதிப்பதோ அல்லது சகித்துக் கொள்ளுவதோ ஹிந்து சமூகத்திற்கு நியாயம்தானா? புராதன இந்தியாவில் மைத்ரேயி, கார்கி, சாவித்திரி போன்ற பெண்களிடம் ஒரு வலிமையும், தைரியமும், தாமாகச் சிந்தித்துப் பார்த்துச் செயல்படும் சக்தியும் இருந்தன. இன்றுகூட பிரம்ம சமாஜம், ஆரிய சமாஜம் போன்ற தாராளப்போக்கு கொண்ட மதப் பிரிவுகளிலும், அர்த்தமில்லாத வழக்கங்கள், சம்பிரதாயங்கள், சடங்குகளிலிருந்து விடுதலை பெற்ற பிரம்ம ஞான சங்கம் ஆகியவற்றையும் சேர்ந்த பல பெண்களிடம் இந்தக் குணாதிசயங்கள் இருக்கின்றன. சமூகத்தின் கொடுமை காரணமாக, ஒரு சிலரைத் தவிர, இந்தியாவிலுள்ள பெண்கள் இந்தத் தன்மைகளை இழந்துவிட்டார்களென்று நீங்கள் நினைக்கவில்லையா?

''நம்முடைய தேசீய பலவீனத்திற்கும், இன்றைய அவமான நிலைமைக்கும் மூல காரணமான இந்தச் சமூகத் தீமைகளுக்கெல்லாம் உடனடியான பரிகாரம் கண்டு பிடிக்க வேண்டுமென்று தேசீயக் கட்சியான காங்கிரஸில் உள்ளவர்களிடம் ஒரு ஆர்வமும், துடிதுடிப்பும் இருக்க வேண்டாமா? பெண்கள் உடல், மனம், தார்மிகம், ஆன்மிகம் ஆகிய துறைகளில் முழுமையான வளர்ச்சி பெற்று தைரியத்திற்கும், விவேகத்திற்கும் ஒரு உதாரணமாக விளங்குவதற்காகவும், முக்கியமாக மனைவிகள், தாய்மார்கள் என்ற தம்முடைய புனிதமான கடமைகளை உண்மையாகவும், சரியான முறையிலும் நிறைவேற்றுவதற்கும், இந்தியாவின் எதிர்கால நிர்வாகிகளின் அன்றாடப் பழக்க வழக்கங்களையும், சீலத்தையும் உருவாக்குவதற்குப் பயிற்சி அளிப்பதற்காகவும், பெண்களுக்கு விடுதலை அளிக்க வேண்டுமென்பதை நமது மக்களுக்கு உணர்த்த வேண்டாமா?

''சுதந்திரம் என்பது ஒவ்வொரு நாட்டினுடையதும், தனி நபருடையதுமான பிறப்புரிமை என்று காங்கிரஸ் மெம்பர்கள் நம்பினால், எப்படியும் அதை அடைந்தே தீருவதென்று அவர்கள் உறுதி கொண்டிருந்தால், பெண்கள் பல துறைகளிலும் நல்ல முறையில் அபிவிருத்தி யடைவதற்குத் தடையாயிருக்கும் தீய பழக்க வழக்கங்களையும், சம்பிரதாயங்களையும் முதலில் அகற்ற வேண்டாமா? இந்தப் பரிகாரம் அவர்களிடமேதான் இருக்கிறது.

''நமது கவிஞர்களும், ஆழ்வார்கள், நாயன்மார்களும், முனிவர்களும் கூட இதையேதான் சொல்லியிருக்கிறார்கள். சுவாமி விவேகானந்தர் பின்வருமாறு கூறியிருக்கிறார்: 'தமது பெண்களுக்கு மதிப்புக் கொடுக்காத எந்த தேசமும்

நாட்டு மக்களும், மேன்மை அடைந்ததே இல்லை, எதிர்காலத்திலும் அவை மேன்மையடையப் போவதில்லை. சக்தியின் உயிர்ச் சின்னங்களான இவர்களுக்கு நீங்கள் மரியாதை கொடுக்காததுதான் உங்களுடைய வர்க்கம் இவ்வளவு கீழ்த்தரமான நிலைமைக்கு வந்ததற்கு முக்கியமான காரணமாகும். தெய்வீக அன்னையின் உயிர்ச் சின்னங்களான பெண்களின் நிலையை உயர்த்தா விட்டால், உயர்வடைவதற்கு வேறு எந்த வழியும் இருக்கிறதென்று நினைக்கா தீர்கள்!''

''அருள் பெற்ற தமிழ்க் கவிஞரான காலஞ்சென்ற சுப்ரமண்ய பாரதியும் இதே கருத்துக்களை எதிரொலித்திருக்கிறார்.

''ஆகையால், நேர்மையானதும், நிச்சயமானதுமான சுதந்திரப் பாதையில் செல்லுமாறு, உங்களுடைய சுற்றுப் பிரயாணங்களின் போது நமது ஆண்களுக்குத் தயவு செய்து உபதேசம் செய்வீர்களா?''

காங்கிரஸ்காரர்கள்தான் இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று எதிர்பார்ப்பதற்கு டாக்டர் முத்து லட்சுமி ரெட்டிக்கு முழு உரிமையும் இருக்கிறது. இந்தத் துறையில் பல காங்கிரஸ்காரர்கள் தனிப்பட்ட முறையிலும், ஸ்தாபன ரீதியாகவும் நல்ல வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்போது தோன்றுவதைப்போல் இல்லாமல், இந்தத் தீமை இன்னும் அதிகமாக ஆழ்ந்து வேரோடியிருக்கிறது. தவறு பெண்கள் கல்வியில் மாத்திரம் இல்லை. நம்முடைய கல்வி முறை பூராவுமே அழுகிப்போயிருக்கிறது. கண்டிக்கப்பட வேண்டியவை குறிப்பிட்ட சில பழக்க வழக்கங்கள் மாத்திரமல்ல; ஒரு தீமை இருக்கிறது, அதை அகற்ற வேண்டும் என்று ஒப்புக்கொண்ட பிறகும் நகர மறுக்கும் செயலற்ற தன்மையே கண்டிக்கப்பட வேண்டும். கடைசியாக, இந்தக் கண்டனம் நகர்ப்புறங்களில் வாழும் மத்திய தர வகுப்பினருக்குத்தான் பொருந்தும். அதாவது, இந்தியாவிலுள்ள லட்சக்கணக்கான மக்களில் இவர்கள் 15 சத விகிதத்தினரே. கிராமங்களில் வசிக்கும் மக்களுக்குக் குழந்தை மணமோ, விதவா விவாகத்திற்குத் தடையோ எதுவும் கிடையாது. வளர்ச்சியைத் தடைசெய்யும் வேறு சில தீமைகள் அவர்களிடமும் இருக்கின்றன என்பது உண்மையே. செயலற்ற தன்மை இருவருக்குமே பொதுவானது. கல்வியமைப்பை அடியோடு மாற்றி, மக்களின் தேவைகளுக்கேற்ற ஒரு முறையை வகுக்க வேண்டும் என்பதுதான் முக்கியம். குழந்தைகளுக்குக் கல்வியளிப்பதுடன் முதியோர் கல்விக்கும் முக்கியத்துவம் கொடுக்காத எந்தத் திட்டமும் கவைக்குதவாது. மேலும், தாய்மொழிகளுக்கு அவற்றிற்குரிய இயற்கையான முக்கியத்துவத்தை அளிக்காத எந்தத் திட்டமும் பிரச்னைக்கு எந்தப் பரிகாரமும் அளிப்பதாகாது. இப்போதுள்ள படித்தவர்களின் மூலம்தான் இந்த வேலையைச் செய்ய முடியும். ஆகையால், பெரும் அளவில் சீர்திருத்தம் ஏற்படுவதற்கு முன்பு, படித்தவர்களுடைய மனப்பான்மையில் மாறுதல் ஏற்படவேண்டும். இந்தியாவிலுள்ள ஒரு சில படித்த பெண்கள்,

மேல்நாட்டு மோகம் என்ற மலையுச்சியிலிருந்து கீழே இறங்கி இந்தியாவின் சமவெளிக்கு வரவேண்டுமென்பதை டாக்டர் முத்துலட்சுமியிடம் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். பெண்கள் புறக்கணிக்கப்படுவதற்கும், சரியாக நடத்தப்படாததற்கும் ஆண்களைத்தான் குற்றம் சொல்லவேண்டும் என்பதில் சந்தேகமில்லை. அதற்கு அவர்கள் தகுந்த பிராயச்சித்தமும் செய்யவேண்டும். ஆனல், மூடநம்பிக்கைகளை விட்டொழித்து இந்தத் தவறுகளை உணர்ந்துள்ள பெண்களே, சீர்திருத்தம் என்ற நிர்மாண வேலையைச் செய்யவேண்டும். பெண்களின் விடுதலை, இந்தியாவின் விடுதலை, தீண்டாமை ஒழிப்பு, மக்களின் பொருளாதார நிலையை உயர்த்துதல் போன்ற இப்பிரச்னைகள் தாமாகவே கிராமங்களுக்குள் ஊடுருவிச் சென்று, கிராம வாழ்வைச் சீர்படுத்திவிடும்.

—'எங் இந்தியா' - 23—5—1929

## 3

# பெண்களின் நிலைமை

திருமணம் என்ற வலையில் இதுவரையில் வீழ்ந்துவிடாமல் வெற்றிகரமாகச் சமாளித்து வந்துள்ள ஒரு சகோதரி பின்வருமாறு எழுதுகிருள் :

"நேற்று மலபாரி மண்டபத்தில் பெண்கள் மகாநாடு ஒன்று நடைபெற்றது. அங்கே பல நல்ல பிரசங்கங்கள் செய்யப்பட்டன, பல தீர்மானங்கள் நிறைவேறின. சாரதா மசோதாவே* நேற்று முக்கியமான பிரச்னையாயிருந்தது. பெண்களுடைய திருமண வயது 18 ஆக இருக்க வேண்டும் என்பதை நீங்கள் ஆதரிப்பது பற்றி நாங்கள் மிகுந்த மகிழ்ச்சி யடைகிறோம். வாரிசுரிமைச் சட்டங்களைப் பற்றியும் ஒரு முக்கியமான தீர்மானம் நிறைவேறியது. இந்த விஷயத்தைப் பற்றி 'நவஜீவன்' பத்திரிகையிலும், 'எங் இந்தியா' பத்திரிகையிலும் நீங்கள் காரசாரமாக ஒரு கட்டுரை எழுதினல் எவ்வளவு உதவியாக இருக்கும்? பெண்கள் தமது பிறப்புரிமையைத் திரும்பப் பெறுவதற்கு ஏன் கெஞ்ச வேண்டும் அல்லது சண்டை போட வேண்டும்? பெண்களின் வயிற்றில் உதித்த ஆண்கள் "பலவீனமான பெண்ணினம்" என்றும் எங்களுக்கு உரியதை "அளிப்பதாக" பிரமாதமாக வாக்குறுதி கூறுவதையும் கேட்கும்போது விசித்திரமா யிருக்கிறது; அது சோகம் நிறைந்த ஒரு வேடிக்கையாகவும் இருக்கிறது. தம்மிடமுள்ள மிருக பலத்தினல் ஒருவரிடமிருந்து சட்ட விரோதமாகப் பறித்துக் கொண்டதைத் திரும்பக் கொடுப்பதில் உயர்ந்த மனப்பான்மையோ, பெண்களிடம் பரிவோ என்ன இருக்கிறது? எந்த வழியில் பெண்கள் ஆண்களை விட முக்கியத்துவத்தில் குறைந்தவர்கள்? அவர்களுடைய வாரி

*குழந்தைகள் மணத்தைத் தடுப்பதற்கென்று ஸ்ரீ ஹரிவிலாச சாரதா கொண்டு வந்த பிறகு, சாரதாச் சட்டம் என்று வழங்கிய மசோதா.

சுரிமை ஆண்களுடையதை விட ஏன் குறைவானதாக இருக்க வேண்டும்? அது ஏன் சமமானதாய் இருக்கக்கூடாது? இரண்டு நாட்களுக்கு முன்பு இந்த விஷயத்தைப் பற்றிச் சிலருடன் கடுமையாக விவாதித்துக்கொண்டிருந்தோம். ஒரு பெண்மணி கூறினர்: "சட்டத்தில் எந்த மாறுதலையும் நாங்கள் விரும்ப வில்லை. இப்போதுள்ள நிலைமையே எங்களுக்குத் திருப்திகரமாக இருக்கிறது. குடும்பத்தின் பெயரையும், பண்பாடுகளையும் சுமந்து செல்லும் பிள்ளைக்கு அதிகப் பங்கு கொடுக்க வேண்டுமென்பது நியாயம்தான். அவன்தான் குடும் பத்திற்கு முக்கிய பலம்." நாங்கள் சொன்னேம்: "பெண் என்ன ஆவது?" நல்ல முறுக்கான வாலிபன் ஒருவன் அங்கிருந்தான். அவன் குறுக் கிட்டு, "அவளை அவன் கவனித்துக் கொள்ளுவான்" என்ருன். அதுதான் விஷயம். 'அவன்' கவனித்துக்கொள்வான். எப்போதும் 'அவன்' தான். இந்த 'அவன்' இருக்கிருனே, அவனல் எப்போதும் ஓயாத தொல்லைதான். 'அவன்' என்று ஒருவன் ஏன் இருக்க வேண்டும்? 'அவன்' இருப்பான் என்று ஏன் நினைக்க வேண்டும்? 'அவன்' வரும்வரையில் போனல் போகிறது என்று பெற்ரோரின் வீட்டில் வைத்துக்கொண்டிருந்து விட்டு, அவன் வந்த வுடன் 'அப்பாடா' என்று பெருமூச்சுவிட்டுக்கொண்டு அவனிடம் ஒப்படைப்ப தென்ருல், பெண்களென்ன சாக்கு மூட்டைகளாக? அவர்கள் பேசுவது அப் படித்தானிருக்கிறது. உண்மையாகக் கேட்கிறேன், நீங்கள் ஒரு பெண்ணு யிருந்தால், உங்களுக்கு அளவுக்கு மீறி ஆத்திரம் வராதா?"

ஆண்கள், பெண்கள் விஷயத்தில் செய்யும் அக்கிரமங்களைக் கண்டு அளவுக்குமீறி ஆத்திரமடைவதற்கு நான் ஒரு பெண்ணு யிருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. இந்த ஜாப்தாவில் வாரிசுரிமை பற்றிய சட்டம் கடைசியானது என்றே நான் கருது கிறேன். வாரிசுரிமைச் சட்டத்தில் உள்ள தீமையைவிட இன் னும் மிகப் பெரிய ஒரு தீமையைப் பற்றியது சாரதாச் சட்டம். ஆனல், பெண்களின் உரிமைகளைப் பற்றிய விஷயத்தில் நான் கொஞ்சமும் விட்டுக் கொடுக்கமாட்டேன். ஆண்களுக்கில்லாத சட்டபூர்வமான நிர்ப்பந்தம் எதுவும் பெண்களுக்கு இருக்கக கூடாது என்பதே என்னுடைய அபிப்பிராயம். பெணகள், பிள்ளைகள் இருவருக்கும் சம அந்தஸ்து கொடுக்கப்படுவதைய நான் விரும்புகிறேன். தாங்கள் பெறும் கல்வியின் அளவுக் கேற்ப பெண்கள் தமது பலத்தை உணர ஆரம்பிக்கும்போது, தங்கள்மீது சுமத்தப்படும் அப்பட்டமான ஏற்றத் தாழ்வுகளை அவர்கள் ஆட்சேபிப்பது இயற்கையே.

ஆனல், சட்டபூர்வமான நிர்ப்பந்தங்களை அகற்றுவது, வெறும் தாற்காலிகமான சாந்தியாகவே இருக்கும். பெரும் பாலோர் நினைப்பதைவிட, இந்தத் தீமை இன்னும் ஆழமாக வேரூன்றியிருக்கிறது. ஆண்களின் அதிகார ஆசையும், புகழுக் கான ஆசையுமே இதற்குக் காரணம். இன்னும் ஆழ்ந்து பார்த் தால், பரஸ்பர காம இச்சையே இதற்குக் காரணமாகும். ஆண் எப்போதுமே அதிகாரத்தை விரும்பி வந்திருக்கிருன். சொத்துடைமை இந்த அதிகாரத்தை அளிக்கிறது. அதி காரத்தை அடிப்படையாகக் கொண்ட பிற்காலப் புகழுக்கும்

மனிதன் ஆசைப்படுகிறான். சொத்து கொஞ்சம் கொஞ்சமாகத் துண்டாடப்பட்டுவிட்டால் இது கிடைக்காது. எதிர்காலத்தில் எல்லோரும் சம பங்குடையவர்களாக இருக்கவேண்டுமென்றால் இப்படித்தான் நடக்கவேண்டும். இதனால்தான் சொத்தின் பெரும் பகுதி மூத்த மகனுக்குப் போய்ச் சேருகிறது. பெரும் பாலான பெண்களுக்குத் திருமணம் ஆகிவிடுகிறது. சட்டம் அவர்களுக்கு விரோதமாயிருந்தாலும், தம்முடைய கணவன் மார்களின் அதிகாரத்தையும், உரிமைகளையும் அவர்கள் சம மாகப் பகிர்ந்து கொள்ளுகிறார்கள். குறிப்பிட்ட சீமான்களின் மனைவியரான சீமாட்டிகள் என்று அழைக்கப்படுவதில் அவர்கள் மகிழ்ச்சியடைகிறார்கள். ஆகையால், ஏற்றத்தாழ்வுகளைப் பற்றித் தர்க்கங்கள் நடக்கும்போது. தீவிரமான சீர்திருத்தங்களை ஆதரித்து அவர்கள் வோட்டளிக்கக்கூடும். ஆனால், தங்களுடைய வோட்டை அனுசரித்து நடந்துகொள்ள வேண்டுமென்று வரும் போது, தம்முடைய உரிமைகளைவிட்டுக் கொடுக்க அவர்கள் விரும்பமாட்டார்கள்.

ஆகையால், சட்டபூர்வமான நிர்ப்பந்தங்களை ரத்து செய்ய வேண்டுமென்பதை நான் எப்போதுமே ஆதரிப்பேன் என்றாலும், இந்தியாவிலுள்ள விஷயமறிந்த பெண்கள் மூலகாரணத்தைக் களைய வேண்டுயென்றே விரும்புவேன். தியாகம், கஷ்டங்களை அனுபவித்தல் ஆகியவற்றின் உருவாகப் பெண்கள் விளங்குகிறார்கள். ஆகையால், பெண்கள் பொதுவாழ்வில் பங்கெடுத்துக் கொள்ள வருவதன் பலனாக பொது வாழ்வு தூய்மை பெறுவதாயிருக்க வேண்டும்; அதன் பலனாக கட்டுக்கடங்காத பேராசையும், சொத்து சேர்க்கப்படுவதும் குறைய வேண்டும். அடுத்த சந்ததியினருக்குக் கொடுப்பதற்கு கோடிக்கணக்கான மக்களிடம் சொத்து என்று எதுவுமில்லை என் பதை அவர்கள் அறியட்டும். பிதுரார்ஜித சொத்து என்று ஒரு சிலருக்கு இல்லாமலே இருப்பதுதான் நல்லது என்பதை அவர் களிடம் நாம் கற்றுக்கொள்ளுவோம். ஒரு பெற்றோர், எல்லோ ருக்கும் சமமாகக் கொடுக்கக் கூடிய உண்மையான சொத்து, தம்முடைய குணமும், கல்வி வசதிகளும் அவர்களுக்கும் கிடைக்கும்படி செய்வதேயாகும். தம்முடைய பெண்களும், பிள்ளைகளும் தன்னம்பிக்கையுடன் தாமாகவே உழைத்து, நாணயமாகச் சம்பாதித்து வாழ்க்கை நடத்துவதற்குப் பெற்றோர் கள் வழி செய்து கொடுக்க வேண்டும். அப்படியானால், சிறு குழந்தைகளைப் பராமரிக்கும் பொறுப்பு, இயற்கையாகவே மூத்த வர்களையே சாரும். பிதுரார்ஜிதமான சொத்துக்கு அடிமை களாகி விடுவது, சுயமுயற்சியைக் கொன்றுவிடுவதுடன், சோம் பேறித்தனத்தையும் போக வாழ்வையும் தொடர்ந்து வரும் இச் சைகளையும் வளர்த்து விடுகிறது. அப்படிச் செய்வதற்குப் பதிலாக தமது குழந்தைகள் சுதந்திரமாக வாழ்வதற்குப் பணக் காரர்கள் கற்றுக் கொடுத்துவிட்டால், பணக்கார வீட்டுக் குழந்தைகளிடம் இப்போது காணப்படும் கையாலாகாத்தனம்

பெரிதும் அகன்றுவிடும். தலைமுறை தலைமுறையாகப் பழக்கத்தில் வந்துள்ள தீமைகளைக் கண்டுபிடித்து, அவற்றை அகற்றுவது, விழிப்புற்ற பெண்களின் உரிமையாக இருக்க வேண்டும்.

பரஸ்பரம் காம இச்சையும் பெண்களின் தகுதியின்மைக்கு ஒரு முக்கிய காரணமாகும் என்பதற்கு ருசு தேவையில்லை. தற்பெருமை பிடித்த ஆண், தன்னையுமறியாமலேயே பெண்களின்மீது ஆதிக்கம் செலுத்துவதற்காகப் போராடியிருக்கிறான். அதே மாதிரி பெண்ணும், தன்னையுமறியாமலேயே பல வழிகளில் ஆண்களைச் சுற்றி வளைத்திருக்கிறாள். முட்டுக்கட்டை நிலைமை தான் இதன் பலன். இந்தக் கண்ணோட்டத்துடன் பார்க்கும் போது, பாரதமாதாவின் விழிப்புற்ற புதல்விகள் தீர்க்கவேண்டியது மிகவும் கடினமான பிரச்னையேயாகும். மேல்நாட்டினரின் முறையை அவர்கள் அப்படியே பின்பற்றக் கூடாது. அந்த முறை அவர்களுடைய சூழ்நிலைக்கு ஏற்றதாயிருக்கலாம். இந்தியர்களின் மேதைக்கும், இந்தியச் சூழ்நிலைக்கும் ஏற்ற முறைகளையே இங்கே பின்பற்ற வேண்டும். உறுதியுடனும், நிதானத்துடனும் அவர்கள் நடந்து கொள்ளவேண்டும். நம்முடைய பண்பாட்டின் சிறந்த அம்சங்களைக் காப்பாற்றி, மட்டமாகவும், அவமானப்படத்தக்கதாகவும் உள்ளவற்றைத் தயக்கமின்றி நிராகரித்துவிட வேண்டும். சீதைகள், திரௌபதிகள், சாவித்திரிகள், தமயந்திகள் செய்ய வேண்டிய வேலை இது; ஆண் தன்மை நிறைந்த பெண்களோ, பொய்ப் பகட்டுள்ளவர்களோ, இதைச் செய்ய முடியாது.

—'எங் இந்தியா' - 17—10—1929

## 4

# ஸ்மிருதிகளில் பெண்கள்

விஜயவாடாவில் பிரசுரம் செய்யப்படும் 'இந்திய சுயராஜ்யம்' என்ற பத்திரிகையின் இதழ் ஒன்றை ஒருவர் எனக்கு அனுப்பியிருக்கிறார். ஸ்மிருதிகளில் பெண்களுக்கு அளிக்கப்பட்டுள்ள ஸ்தானத்தைப் பற்றி அதில் ஒரு கட்டுரை இருக்கிறது. அதிலிருந்து சிலபகுதிகளை எந்த மாறுதலும் செய்யாமல் அப்படியே கீழே தருகிறேன் :

''மனைவி, தன் கணவனை எப்போதும் கடவுளாக மதித்து நடத்த வேண்டும்; அவன் குணவானா யில்லாமலிருந்தாலும், சீலமற்றவனா யிருந்தாலும்,, காம இச்சை மிகுந்தவனா யிருந்தாலும் கூட, அவனைக் கடவுளாகவே மதித்து அவள் நடத்த வேண்டும். (மனு—5-154)

பெண்கள், தம் கணவன்மார்களின் சொற்படி நடக்க வேண்டும். இதுவே அவர்களுடைய மிகவும் உயர்ந்த கடமையாகும். (யாக்ஞவல்க்யர்—1-18)

பெண்களுக்கென்று தனியாக சடங்குகளோ, உபவாசங்கள் முதலி யனவோ கிடையாது. கணவனுக்குப் பணிவிடை செய்வதன் மூலமே சுவர்க் கத்தில் அவள் உயர்ந்த இடத்தைப் பெறுகிறாள். (மனு—5-145)

கணவன் உயிருடனிருக்கும்போது உபவாசம் இருந்து, சடங்குகளைச் செய்பவள், கணவனின் ஆயுளைக் குறைத்தவளாகிறாள். அவள் நரகத்திற்கே போவாள். புண்ய தீர்த்தங்களை விரும்பும் ஒரு பெண், தன்னுடைய கணவ னின் பாதங்களையோ, அவன் உடல் பூராவையுமோ கழுவி அந்த நீரைப் பருக வேண்டும். அப்படிச் செய்வதன் மூலம் அவள் உயர்பதவி பெறுகிறாள். (அத்ரி—136-37)

கணவனைவிட உயர்ந்த சுவர்க்கலோகம் வேறு எதுவும் பெண்ணுக்குக் கிடையாது. தன் கணவன் மனம் கோணும்படி நடந்துகொள்ளுபவள், இறந்த பிறகு கணவன் வாழும் உலகத்திற்குப் போக முடியாது. (வசிஷ்டர்—21-4)

தன்னுடைய தகப்பனாரின் குடும்பத்தைப்பற்றிப் பெருமைபட்டுக் கொண்டு, கணவனுக்குக் கீழ்ப்படியாமலுள்ள பெண்ணை, பெரிய ஜனக்கூட் டத்தின் முன்னிலையில் நாய்களுக்கு இரையாக எறிந்துவிட வேண்டும். (மனு—8-371).

கணவனுக்குக் கீழ்ப்படியாமல் நடக்கும் ஒரு பெண் அளிக்கும் உணவை யாரும் புசிக்கக் கூடாது. அவள் காமாதுரி என்று கருதப்பட வேண்டும். (ஆங்கீரஸர்—69)

கணவன் துன்மார்க்கங்களில் இறங்கி யிருக்கும்போது, அல்லது குடிகார னாகி விட்டபோதும், அல்லது உடல் நலிவுற்றிருக்கும்போதும் அவனுக்குக் கீழ்ப்படிய மறுக்கும் பெண்ணினுடைய உயர்ந்த ஆடைகளையும், ஆபரணங் களையும் பறித்துக்கொண்டு, மூன்று மாதங்களுக்கு அவளை விலக்கி வைத்து விட வேண்டும். (மனு—10-78)''

பெண்களின் சுதந்திரத்தைத் தம்முடைய சுதந்திரமாகவும், பெண்களை மனித குலத்தின் தாய்மார்களாகவும் கருதுபவர் களின் மதிப்பைப் பெற முடியாத வாசகங்கள் ஸ்மிருதிகளில் இருப்பது துக்கப்பட வேண்டிய விஷயமாகும். வைதிகத்தின் சார்பில் பிரசுரிக்கப்படும் ஒரு பத்திரிகை, இத்தகைய வாசகங் களை மதத்தின் ஒரு பகுதியைப் போல் பிரசுரிப்பதென்பது, இன் னும் அதிக வருத்தத்தைக் கொடுப்பதாகும். பெண்களுக்குரிய ஸ்தானத்தை அளித்து, அவர்களை மிகுந்த பக்தி சிரத்தையுடன் போற்றும் வாசகங்களும் ஸ்மிருதிகளில் இருக்கின்றன. ஸ்மிருதி களிலேயே ஒன்றுக்கொன்று முரண்பட்டதாகவும், தார்மிக உணர்ச்சியைப் புண்படுத்துவதாகவும் உள்ள வாசகங்களை என்ன செய்வது என்ற கேள்வி எழுகிறது. தரும சாஸ்திரங் களின் பெயரால் அச்சிடப்படும் எல்லாவற்றையுமே கடவுளின் கட்டளைகளாகவோ, அருள் மொழிகளாகவே எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியமில்லை என்பதை அடிக்கடி இந்தப் பத்திரி கையிலேயே நான் குறிப்பிட்டிருக்கிறேன். ஆனால், எது நல்லது, அதிகார பூர்வமானது, எது கெடுதல், இடைச்செருகல் என் பதை எல்லோருமே தீர்மானித்து விடமுடியாது. ஆகையால்,

தரும சாஸ்திரங்கள் என்று வழக்கிலிருந்து வரும் எல்லா நூல் களையும் பரிசீலனை செய்து, தார்மிக மதிப்பு இல்லாதவைகளையும் மதம், ஒழுக்கத்தின் அடிப்படைகளுக்கு முரணாயிருப்பவைகளையும் அகற்றிவிட்டு, ஹிந்துக்களின் உபயோகத்திற்காகத் திருத்தப் பட்ட பதிப்பு ஒன்றை வெளியிடுவதற்கு, கற்றறிந்த விற்பன்னர் கள் கொண்ட குழு ஒன்று இருக்க வேண்டும். ஹிந்துக்கள் பூராவும், மதத் துறைத் தலைவர்கள் என்று ஏற்றுக்கொள்ளப் பட்டிருப்பவர்களும் இந்தக் குழுவின் முயற்சியை நிச்சயமாக ஒப்புக்கொள்ள மாட்டார்களென்பது, புனிதமான இந்த முயற் சிக்குத் தடையாக இருக்க வேண்டியதில்லை. மனப்பூர்வமா கவும், தொண்டு மனப்பான்மையுடனும் செய்யப்படும் வேலை, காலப்போக்கில் பலனளிக்கும். உதவி தேவையாயிருப்பவர் களுக்கும் இது நிச்சயமாக உதவியளிக்கும்.

—'ஹரிஜன்' –28—11—1936

# 5

# பெண்களும் வர்ணமும்

மதிப்பிற்குரிய நண்பரொருவர் பின்வருமாறு எழுதுகிறார் :

''வர்ணத்தைப்பற்றி சமீபகாலமாக நீங்கள் 'ஹரிஜன்' பத்திரிகையில் எழுதி வருவதைப் பார்க்கும்போது,* நீங்கள் குறிப்பிடும் வர்ணம் ஆண்க ளுக்கு மட்டுமே என்றுதான் தோன்றுகிறது. அப்படியானால், பெண்கள் விஷயம் என்ன ஆகிறது? எதைக்கொண்டு ஒரு பெண்ணின் வர்ணத்தை நிர்ணயிப்பது? மணமாவதற்கு முன்பு பெண் தன் தகப்பனாரின் வர்ணத்தைச் சேர்ந்தவளென்றும், மணமான பிறகு கணவனின் வர்ணத்திற்கு மாறிவிடுவா ளென்றும் நீங்கள் சொல்லக்கூடும். ஒரு பெண்ணின் வாழ்க்கையில் எந்தக் கட்டத்திலும் அவளுக்குச் சுதந்திரம் இருக்க முடியாது; மணமாவதற்கு முன்பு அவள் பெற்றோரின் ஆதரவில் இருக்க வேண்டும்; மணமான பிறகு கணவனின் ஆதரவில் இருக்க வேண்டும்; விதவையாகிவிட்டால் தன் குழந்தைகளின் ஆதரவில் இருக்க வேண்டும் என்று மனுஸ்மிருதி விதித்திருப்பதை நீங்கள் ஆதரிக்கிறீர்களென்று எடுத்துக்கொள்ளுவதா?

''அது எப்படியிருந்தாலும், இப்போது பெண்கள் வாக்குரிமை பெற்ற யுகத்தில் நாம் வாழ்கிறோம். தனித்து நின்று ஜீவனோபாயத் தொழில்கள் செய்யும் விஷயத்தில் ஆண்களைப் போலவே பெண்களும் நிச்சயமாக முன் வந்துவிட்டார்கள் என்பது கண்கூடான உண்மை. கணவன் லேவாதேவி செய்துகொண்டிருக்கலாம். ஆனால், அவன் மனைவி, பள்ளிக்கூட ஆசிரியை யாகப் பணியாற்றுவதைப் பார்ப்பது இன்று மிகவும் சர்வ சாதாரணமாகி விட்டது. இந்த நிலைமையில் பெண் எந்த வர்ணத்தைச் சேர்ந்தவளாயிருப்

* வர்ணாச்சிரம தர்மத்தைக் குறித்து காந்திஜி எழுதியிருக்கும் மற்றக் கட்டுரை களை இத்தொகுதியின் முதல் பாகத்தில் ஆறும் பகுதியில் காண்க.

பாள்? வர்ணச்சிரம விதிகளின்படி சாதாரணமாக ஆண்கள் தம்முடைய பெற்ருேர்களின் தொழில்களைச் செய்வார்கள். ஆகையால், அவர்களுடைய வர்ணத்தையே மேற்கொள்ளுவார்கள். பெண்கள் தம்முடைய பெற்ருேர் களின் வர்ணத்தைச் சேர்ந்தவர்களா யிருப்பார்கள். மணமான பிறகும் அவர்கள் தத்தம் தொழில்களையே செய்துகொண்டிருப்பார்களென்றும் எதிர் பார்க்கலாம். இந்த இரண்டுக்குமிடையே அவர்களுடைய குழந்தைகளின் வர்ணம் என்னவாயிருக்கும்? அல்லது இந்தப் பிரச்னையை அந்தக் குழந்தை களே தம்மிஷ்டப்படி சுயேச்சையாக முடிவு செய்து கொள்ளட்டுமென்று விட்டு விடுவீர்களா? அப்படியானல் நீங்கள் வியாக்கியானம் செய்துள்ள வாழை யடி வாழையான வர்ண தருமம் என்ன ஆவது?''

இன்றுள்ள நிலைமையில் இது பிரச்னைக்குச் சம்பந்தமில்லாத கேள்வி என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். பிரஸ்தாபக் கட்டுரையில் நான் எடுத்துக் காட்டியிருப்பது போல, வர்ணங் களைப்பற்றி இன்று ஏற்பட்டுள்ள குழப்பம் காரணமாக உண்மை யில் வர்ணங்களே இப்போது இல்லை. வர்ணச்சிரமக் கொள்கை இன்று செயல்படவில்லை. இப்போதுள்ள ஹிந்து சமூகத்தை அராஜகம் என்று வர்ணிக்கலாம்; நான்கு வர்ணங்கள் என்பது இன்று பெயரளவில்தான் இருக்கின்றன. வர்ணங்கள் என்ற அடிப்படையில் பேச வேண்டுமானல், ஆண்களாயிருந்தாலும் பெண்களாயிருந்தாலும், எல்லோருக்கும் இன்று ஒரே ஒரு வர்ணம்தான் இருக்கிறது. நாமெல்லோரும் சூத்திரர்களே.

என்னுடைய கருத்தின்படி வர்ண தருமம் சீரமைக்கப்படும் போது, மணமாவதற்கு முன்பு ஒரு பெண் தன்னுடைய சகோ தரனைப் போலவே தந்தையின் வர்ணத்தைச் சேர்ந்தவளாயிருப் பாள். வெவ்வேறு வர்ணங்களிடையே கலப்பு மணம் என்பது அபூர்வமானதாக இருக்கும். ஆகையால், திருமணத்திற்குப் பிறகும் ஒரு பெண்ணின் வர்ணம் பாதிக்கப்படாமல் அப்படியே இருக்கும். ஆனல், கணவன் வேறு வர்ணத்தைத் சேர்ந்தவன யிருந்தால், திருமணத்திற்குப் பிறகு அந்தப் பெண், தன்னுடைய பெற்ருேர்களின் வர்ணத்தைத் துறந்துவிட்டுத் தனது கணவனின் வர்ணத்தையே மேற்கொள்ளுவாள். இப்படி வர்ணம் மாறுவது யாருடைய உணர்ச்சியையும் புண்படுத்துவதாக அர்த்தமாகாது. ஏனெனில், சீரமைக்கப்பட்ட வர்ணச்சிரமத்தில் நான்கு வர்ணங் களுக்குமே முழுமையான சமூக சமத்துவம் இருக்கும்.

ஒரு மனைவி, தனியாக ஒரு தொழில் செய்வாள் என்று நான் எதிர்பார்க்கவில்லை. குழந்தைகளைப் பராமரிப்பது, குடும்பத்தை கவனித்துக்கொள்ளுவது ஆகிய வேலைகளுக்கே அவளுடைய நேரமும், சக்தியும் சரியாக இருக்கும். நன்கு அமைக்கப்பட்ட ஒரு சமூகத்தில், குடும்பத்தையும் பராமரிக்கும் அதிகப்படியான சுமை பெண்களின் மீது சுமத்தப்படக்கூடாது. ஆண்கள் குடும்ப சம்ரட்சணையையும், பெண்கள் குடும்ப நிர்வாகத்தையும் கவனித்துக்கொள்ள வேண்டும். இருவரும் ஒருவருக்கொருவர் உதவியாகவும், ஒத்தாசையாகவும் பணிபுரியவேண்டும்.

இதில் பெண்களின் உரிமைகள் மீறப்படுவதோ, அவர்களுடைய சுதந்திரம் அடக்கப்படுவதோ எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. 'பெண்களுக்குச் சுதந்திரமே இருக்க முடியாது'' என்று மனு கூறியிருப்பதாகச் சொல்லப்படுகிறது. என்னைப் பொறுத்தவரையில் இதை நான் வேதவாக்கியமாக எடுத்துக்கொள்ளவில்லை. இந்த விதி இயற்றப்பட்ட காலத்தில் பெண்கள் அடக்கியாளப்பட்டு வந்தார்கள் என்பதையே இது காட்டுவதாயிருக்கலாம். நமது இலக்கியங்களில் மனைவியைக் குறிப்பிடும்போது ''அர்த்தாங்கனு'' (மறுபாதி), ''சகதர்மிணி'' (துணைவி) என்ற வார்த்தைகளை உபயோகித்திருக்கிறார்கள், கணவன், தன் மனைவியை ''தேவி'' என்று அழைப்பது இகழ்ச்சியைக் காட்ட வில்லை. ஆனால், துரதிருஷ்டவமாகப் பெண்களின் பல உரிமைகளும், சலுகைகளும் பறிக்கப்பட்டு, அவர்கள் ஒரு தாழ்ந்த அந்தஸ்துக்கு இறக்கப்பட்ட ஒரு காலமும் வந்தது. அதனால் பெண்களின் வர்ணம் தேய்ந்துபோனதாக அர்த்தமில்லை. ஏனெனில், வர்ணம் என்பது குறிப்பிட்ட சில உரிமைகள் அல்லது சலுகைகளைக் குறிப்பிட வில்லை; கடமைகளையும் பொறுப்புகளையுமே அது குறிப்பிடுகிறது. நம்முடைய கடமையை நம்மிடமிருந்து யாரும் பறிக்க முடியாது. நாமே அதைத் தட்டிக் கழிக்க முற்பட்டா லொழிய மற்றவர்கள் அதைச் செய்ய முடியாது. தன்னுடைய கடமையை அறிந்து அதை நிறைவேற்றும் பெண், தன்னுடைய கௌரவமான அந்தஸ்தை உணருகிறாள். அவள் தலைமை தாங்கும் குடும்பத்துக்கு அவள் அரசியேயொழிய அடிமையல்ல.

சமூகத்தில் பெண்ணின் கடமை என்ன என்பதைப் பற்றி நான் எடுத்துக் காட்டியுள்ள நிலைமை ஏற்றுக்கொள்ளப்பட்டால், குழந்தைகளின் வர்ணம் என்ன என்பது ஒரு பிரச்னையாகவே இருக்காது என்பதை நான் சொல்லத் தேவையில்லை. ஏனெனில், வர்ணம் சம்பந்தப்பட்ட வரையில் கணவனுக்கும் மனைவிக்குமிடையே மாறுபாடு எதுவும் இராது.

—'ஹரிஜன்' – 12—10—1934

## 6

# பெண்களும் ராணுவ மனப்பான்மையும்

ராணுவ மனப்பான்மையை எதிர்த்துப் போராடுவதில் பெண்கள் எந்த மாதிரி உதவி செய்ய முடியும் என்று பல கூட்டங்களில் குறிப்பாகக் கேட்கப்பட்டது, இந்தியாவிலுள்ள பெண்களிடமிருந்து இத்தாலியப் பெண்கள் என்ன கற்றுக்

கொள்ளலாம் என்பதைச் சொல்லுமாறு இத்தாலியில் ஒரு கூட்டத்தில் காந்திஜியிடம் கேட்டார்கள்.

பாரிஸில் அவர் கூறினர்: "தாங்கள் மெல்லியலார் என்பதை மட்டும் பெண்கள் மறந்துவிட்டால், யுத்தத்திற்கு எதிராக ஆண்களைவிடப் பெண்கள் எவ்வளவோ அதிகம் செய்யமுடியும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. 'நீங்கள் எந்த ராணுவ நடவடிக்கைகளிலும் கலந்து கொள்ளுவதை நாங்கள் ஒப்புக் கொள்ள முடியாது' என்று பெரிய போர் வீரர்கள், படைத் தலைவர்கள் ஆகியோரின் மனைவியார்களும், பெண்களும் மறுத்தால், அவர்கள் அப்பொழுது என்ன செய்வார்கள் என்ற கேள்விக்கு நீங்களே பதில் சொல்லிக் கொள்ளுங்கள்."

லாஸேனில் அவர் பின்வருமாறு கூறினர்: "ஐரோப்பாவிலுள்ள பெண்களுக்கு ஒரு செய்தி விடுக்கவேண்டுமென்று கேட்டனர்கள். அதற்கு எனக்குத் தைரியமிருக்கிறதா என்று எனக்குத் தெரியவில்லை. அவர்களுடைய கோபத்திற்காளாகாமல் நான் செய்தி விடுக்க வேண்டுமானுல், சென்ற ஆண்டில் இந்தியாவில் பெண்கள் ஒன்றுபோல் திரண்டெழுந்ததை அவர்களுக்கு எடுத்துக்காட்டுவேன். அகிம்சைப் படிப்பினையை ஐரோப்பா பருக விரும்பினுல், அங்கேயுள்ள பெண்களின் மூலமே அதைச் செய்ய முடியும் என்று நான் உண்மையாகவே நம்புகிறேன். தன்னைத் தானே தியாகம் செயது கொள்ளும் தன்மையின் உருவாகப் பெண் விளங்குகிருள் என்பதே என்னுடைய நம்பிக்கையாகும். ஆனுல், ஆண்களைவிடத் தமக்கு எவ்வளவு மகத்தான அனுகூலம் இருக்கிறது என்பதை, துரதிருஷ்ட வசமாகப் பெண்கள் இன்று உணரவில்லை. அவர்கள் ஆண்களின் மாயச் செல்வாக்கில் சிக்கி உழலுகிருர்கள் என்று டால்ஸ்டாய் சொல்லுவதுண்டு. அகிம்சையின் சக்தியை அவர்கள் உணர்ந்தால். மெல்லியலார் என்று தாம் அழைக்கப்படுவதற்கு அவர்கள் சம்மதிக்கமாட்டார்கள்."

இத்தாலியில் பெண்கள் கூட்டமொன்றில் பேசும்போது அவர் சொன்னர்: "ஆண்களைப் போன்று அதே காரியங்களில் பெண்களும் பங்குகொள்ள முடியும் என்பதே அகிம்சை யுத்தத்திலுள்ள பெருமையாகும். பலாத்காரத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு யுத்தத்தில் பெண்களுக்கு அத்தகைய உரிமைகள் எவையும் கிடையாது. எங்களுடைய சென்ற அகிம்சைப் போராட்டத்தில், இந்தியப் பெண்கள் ஆண்களைவிட இன்னும் அதிக பலனளிக்கத்தக்க முறையில் பங்கெடுத்துக் கொண்டார்கள். இதன் காரணம் சாதாரணமானதே. அகிம்சைப் போராட்டத்தில் மிகவும் அதிகமாகக் கஷ்டங்களை அனுபவித்தாக வேண்டும். பெண்களைவிடத் தூய்மையுடனும், உயர் நோக்குடனும், கஷ்டங்களை வேறு யார் அனுபவிக்க முடியும்? இந்தியாவிலுள்ள பெண்கள் தம்முடைய முகமூடிகளைக் கிழித்தெறிந்துவிட்டு தேசத்திற்குப் பணியாற்றுவதற்கு முன்வந்தார்கள். தம்முடைய

குடும்பங்களைப் பராமரிப்பதைவிட அதிகமான சேவையை, தேசம் தம்மிடமிருந்து எதிர்பார்க்கிறது என்பதை அவர்கள் உணர்ந்தார்கள். சட்ட விரோதமாக அவர்கள் உப்பு உற்பத்தி செய்தார்கள்; அந்நியத் துணிக் கடைகளையும், கள்ளு, சாராயக் கடைகளையும் மறியல் செய்தார்கள். விற்பவர், வாங்குபவர் இருவரையுமே திருப்ப முயற்சி செய்தார்கள். உள்ளத்தில் துணிவுடனும், தயாளத்துடனும் இரவு வெகு நேரமான பிறகுகூட குடிகாரர்களைத் தொடர்ந்து சென்றார்கள். சிறைகளுக்குச் சென்றார்கள். ஆண்களைவிட அதிகமாகத் தடியடியைத் தாங்கிக் கொண்டார்கள். மேல்நாட்டுப் பெண்கள், மிருகங்களாவதற்கு ஆண்களுடன் போட்டி போடப் போகிறார்களென்றால், இந்தியப் பெண்களிடமிருந்து அவர்கள் கற்றுக்கொள்ளக்கூடிய படிப்பினை ஒன்றுமில்லை. மக்களைக் கொன்று குவிப்பதற்காகத் தமது கணவன்மார்களையும், பிள்ளைகளையும் அனுப்புவதில் ஆனந்தம் அடைவதையும், பின்னர் அவர்களுடைய வீரத்தைப் பாராட்டுவதையும் அவர்கள் நிறுத்திக் கொள்ளவேண்டும்.''

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.]

—'எங் இந்தியா' – 14—1—1932

*[ஒரு பெண்மணி, 22–10–1938-ல் காந்திஜிக்கு எழுதிய ஒரு கடிதத்தில், யுத்தத்திற்குச் சாதகமாகப் பெண்களை உபயோகித்துக் கொள்ள நடந்து வரும் பல்வேறு முயற்சிகளை எடுத்துக் கூறிவிட்டு, ''பெண்கள் மாத்திரம் அகிம்சையின் சக்தியையும் கீர்த்தியையும் உளமாற அறிந்திருப்பார்களானால், இந்த உலகில் எல்லாமே சரியாக இருக்கும்'' என்றார். இதில், பெண்களை ஊக்குவிக்க காந்திஜி நாடெங்கும் சுற்றுப்பிரயாணம் செய்தால், ''உலகிற்குச் சமாதான வழியைக் காட்டுவது எங்களால் முடிவதாக இருக்கலாம்'' என்கிறார். இதற்கு 5–11–38 'ஹரிஜன்' பத்திரிகையில் பதிலளிக்கையில், இதற்கென தாம் பிரயாணத்தை மேற்கொள்ளுவதற்கில்லை என்று கூறிவிட்டு, ''காங்கிரஸிலிருக்கும் ஆண்கள், அகிம்சையில் கொண்டுள்ள நம்பிக்கையை விடாமல் வைத்திருந்து, அகிம்சை வேலைத் திட்டத்தை உள்ளன்போடு முற்றிலும் நிறைவேற்றி வருவார்களானால், பெண்களும் தாமே அதற்கு உட்பட்டவர்களாகி விடுவார்கள் என்பதே என்னுடைய கருத்து'' என்கிறார். இக்கட்டுரையின் முழு விவரத்தையும், 'மகாத்மா காந்தி நூல்கள்'—இரண்டாம் தொகுப்பில் 403-6 ஆம் பக்கங்களில் காணலாம்.]*

# 7
# பெண்ணின் பங்கு

அகில இந்திய மாதர் மகாநாட்டின் நிரந்தரக் கமிட்டி சமீபத்தில் அப்போட்டாபாத்தில் கூடியது. எல்லைப்புற மாகாணத்தில் இவர்கள் கூடுவது இதுவே முதல் தடவையாகும். அங்கத்தினர்களுக்கு மிகவும் மகிழ்ச்சியளிக்கத்தக்க அனுபவம் ஏற்பட்டதாக அறிகிறேன். சாதி வித்தியாசங்களோ, மத வேறுபாடுகளோ காட்டப்படவில்லை. முஸ்லிம், சீக்கிய, ஹிந்து மதங்களைச் சேர்ந்த பெண்கள் தாராளமாகக் கலந்து பழகினர்கள். நிரந்தரக் கமிட்டி பின்கண்ட மூன்று தீர்மானங்களை நிறைவேற்றியது :

"1) ஐரோப்பாவிலும், தூரக் கிழக்கிலும் யுத்தம் இன்னும் தொடர்ந்து நடந்துகொண்டிருப்பதைப்பற்றி அப்போட்டாபாத்தில் கூடியுள்ள அகில இந்திய மாதர் சங்க நிரந்தரக் கமிட்டியின் அங்கத்தினர்கள் தமது ஆழ்ந்த வருத்தத்தையும், ஏக்கத்தையும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறார்கள். இந்தியாவிலுள்ள சகல பிரிவினரும் சந்தேகத்திற்கிடமில்லாத முறையில் தங்கள் கண்டனத்தைத் தெரிவித்துள்ளனர். நாஜிஸ, பாஸிஸ்ட் சக்திகளிடம் தமது சுதந்திரத்தை இழந்து, அவர்களுடைய இரும்புக் குதியின் கீழ்ச் சிக்கிக்கொண்டுள்ள எல்லா நாடுகளுக்கும் தமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறார்கள். தகராறுகளையும், குறைகளையும் யுத்தத்தின் மூலம் தீர்க்க முயற்சிப்பது எவ்வளவு பயனற்றது என்பதை உணர்ந்து, சமாதான லட்சியத்திற்குத் தங்கள் செல்வாக்கு முழுவதையும் உபயோகிக்கும்படி உலகத்திலுள்ள பெண்களை மீண்டும் கேட்டுக்கொள்ளுகிறார்கள்.

"2) உலக நாடுகளின் சகோதரத்துவம் ஒன்றை அமைத்து, நிரந்தரமான சமாதானத்தை நிலை நாட்டுவதற்கு அகிம்சை ஒன்றுதான் சிறந்த வழி என்ற தனது நம்பிக்கையை நிரந்தரக் கமிட்டி மீண்டும் ஊர்ஜிதம் செய்கிறது. இந்த லட்சியத்தை அடைவது எவ்வளவு கஷ்டமானது என்பதை அவர்கள் அறிந்திருக்கிறார்கள். ஆகையால்தான் தம்முடைய தனிப்பட்ட வாழ்க்கையிலும், கூட்டு வாழ்க்கையிலும் அகிம்சையையே பின்பற்ற முயற்சிக்க வேண்டுமென இந்தியப் பெண்களைக் கேட்டுக் கொள்ளுகிறார்கள். ஏனெனில், சேவை, தியாகம் என்ற வழி வந்த இந்தியப் பெண்கள், இந்த விஷயத்தில் உலகப் பெண்களுக்கு வழிகாட்ட முடியுமென்று அவர்கள் கருதுகிறார்கள்.

"3) எல்லா நாடுகளும் விடுதலைபெற்று, உலக ஜனநாயகம் ஏற்படவேண்டுமென்பதே தங்களுடைய யுத்த லட்சியம் என்று பிரிட்டன் கூறியிருக்கிறது. இந்தியாவின் சுதந்திர அந்தஸ்துக்கு அங்கீகாரம் அளிப்பதே இந்த லட்சியத்திற்குச் சரியான முதல்படியாக இருக்கும் என்ற அகில இந்திய மாதர் மகாநாட்டின் அபிப்பிராயத்தை இக்கமிட்டி அங்கத்தினர்கள் ஊர்ஜிதம் செய்கிறார்கள்."

யுத்தத்தை எதிர்த்து நடத்தப்படும் யுத்தத்தில் பெண்கள் வழிகாட்டுவார்கள், வழிகாட்ட முடியும் என்று என்னைப்

போலவே அப்போட்டாபாத்தில் கூடிய சகோதரிகளும் நம்பு கிறார்களென்று தெரிகிறது. அது அவர்களுடைய விசேஷப் பணி யும், உரிமையுமாகும். ஆகையால், அகிம்சையில் தனக்குள்ள நம்பிக்கையைக் கமிட்டி மீண்டும் ஊர்ஜிதம் செய்திருக்கிறது. அந்த மகாநாட்டின் செல்வாக்குக்கு உட்பட்ட பெண்கள், கமிட்டியின் நம்பிக்கையைப் பகிர்ந்துகொண்டு அதற்கு வேலை செய்வார்களென்று நம்புவோமாக.

சேவா கிராமம் - 27—7—1940 —'ஹரிஜன்' - 4—8—1940

# 8

# பெண்ணின் பங்கு என்ன ?

உயர்ந்த கல்வி பெற்ற ஒரு சகோதரி, எனக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். அதிலிருந்து சில பகுதிகளை நீக்கிவிட்டு மீது முள்ளதைக் கீழே தருகிறேன் :

"ஆன்மா எவ்வளவு உயர்வானது என்பதை அகிம்சை, சத்தியாக்கிர கத்தின் மூலம் நீங்கள் உலகத்திற்குக் காட்டி யிருக்கிறீர்கள். மனிதனின் கீழ்த்தரமான தன்மையை வெல்லுவது என்ற பிரச்னைக்கு இந்த இரு வார்த்தைகளுமேதான் பரிகாரமாகும்.

"ஒரு தொழிலைக் கற்றுக்கொள்ளுவதன் மூலம் கல்வி பெறுவது என்பது சிறந்த வழி என்பதோடு மட்டுமில்லை; நமது குழந்தைகள் தன்னம்பிக்கை பெறுவதற்கு அது ஒன்றுதான் சரியான வழியுமாகும். இதைச் சொன்னது நீங்கள்தான், இதன் மூலம் கல்விப் பிரச்னை பூராவையுமே ஒரே வாக்கியத்தில் தீர்த்துவிட்டீர்கள்.

"பெண்களாகியஎங்களுடைய பிரச்னைக்கும்நீங்கள் பரிகாரம்கண்டுபிடிக்க வேண்டுமென்று உங்களை மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன். பெண்கள் பிரச்னை என்று எதுவுமே கிடையாதென்று ராஜாஜி கூறுகிறார். ராஜீயக் கண் ணோட்டத்துடன் பார்த்தால், பெண்கள் பிரச்னை என்று எதுவும் இல்லாம லிருக்கலாம். வேலை வாய்ப்புகள் சம்பந்தப்பட்ட வரையில் சட்டத்தின் மூலம் இதைச் சரிப்படுத்திவிடக் கூடும். அதாவது, ஆண்களைப்போலவே பெண்களும் எல்லாத் தொழில்களையும் செய்யலாம் என்று செய்துவிட முடி யும். ஆனால், நாங்கள் பெண்கள், ஆண்களிலிருந்து மாறுபட்ட தன்மையுடை யவர்கள் என்ற உண்மையை இதனாலெல்லாம் மாற்றிவிட முடியாது. எங்க ளுடைய கீழ்த்தரமான தன்மைகளைச் சமாளிப்பதற்கு அகிம்சை, சத்தியாக்கிர கத்தைத் தவிர, மேற்கொண்டு சில கோட்பாடுகளும் எங்களுக்கு வேண்டும். ஆணைப்போலவே பெண்ணின் உள்ளமும் நல்லவைகளை நாடுகிறது. ஆண், தன்னுடைய அடக்கியாளும் குணம், காமவெறி, புண்படுத்த விரும்பும் மிருக உணர்ச்சி போன்றவைகளை விட்டொழிப்பதற்கு அகிம்சையும், பிரம்மசரிய மும் தேவைப்படுகிறது. அதேமாதிரி பெண்களுக்கும் சில கீழ்த்தரத் தன்மைகள் இருக்கின்றன. இவை ஆண்களின் தன்மைகளிலிருந்து மாறு

பட்டவை. இந்தத் தன்மைகள் பெண்ணினத்திற்கு இயற்கையாகவே உள்ளவை என்றும் சொல்லப்படுகிறது. இவற்றை விட்டொழிப்பதற்குப் பெண்ணுக்கும் சில கோட்பாடுகள் அவசியமாகும். பெண்ணினத்தின் இயற்கையான தன்மைகள், பெண் என்பதற்காக அவள் வளர்க்கப்படும் விதம், பெண் என்ற காரணத்திற்காக அவளைச் சுற்றிச் சிருஷ்டிக்கப்படும் சூழ்நிலை ஆகிய யாவும் அவளுக்கு எதிராக இருக்கின்றன. அவள் வேலை செய்யும்போதுகூட, அவளுடைய தன்மைகள் வளர்க்கப்பட்ட விதம், சூழ்நிலை ஆகியவை எப்போதும் அவளுக்குக் குறுக்கே நிற்கின்றன. ''என்ன இருந்தாலும், அவள் பெண்தானே'' என்று ரொம்ப சுலபமாகச் சொல்லி விடுகிறார்கள். அதாவது, பெண்ணைப் பிறந்தது, அவள் தலைமீது சுமத்தப் படும் ஒரு பெரிய பாரமாக இருக்கிறது. எங்கள் நிலையை உயர்த்திக் கொள்ளுவதற்கு சரியான பரிகாரம் மட்டும் இருந்தால், எங்களுடைய இயற்கை குணங்களான இரக்கம், பரிவு ஆகியவை தடைகளாயிருப்பதற்குப் பதிலாக உதவியாக இருக்கும்படி செய்துவிட முடியும். ஆண்களுக்கும், குழந்தைகளுக்கும் நீங்கள் அளித்திருக்கும் பரிகாரத்தைப் போலவே இந்த முன்னேற்றமும் எங்களிடமிருந்துதான் வரவேண்டும்.

''இயற்கை, வளர்க்கப்படும் விதம், சூழ்நிலை என்று சொன்னேன். இதைத் தெளிவாக்குவதற்கு ஒரு உதாரணம் கூறுகிறேன்.

''இரக்கம், மென்மை, பரிவு, தாய்மை ஆகியவை பெண்களின் இயற்கை. தம்மை யறியாமலே பெண்கள் இந்தத் தன்மைகளால் பெரிதும் உந்தப்படு கிறார்கள். ஆகையால் செயலில் இறங்கும்போது மிகுந்த உணர்ச்சி வசப்பட்டு விடுகிறார்கள். ஆண்களோடு பழகும்போது, தவறுகள் செய்துவிடுகிறார்கள், இரக்கம் காட்டக் கூடாத சமயத்தில் இரக்கம் காட்டிவிடுகிறார்கள். பெண்கள் சலன புத்தி யுடையவர்களா யிருக்கிறார்கள்; சுலபமாகத் தற்பெருமை கொண்டு விடுகிறார்கள்; பொதுவாக அசட்டுத்தனமாக நடந்துகொள்ளு கிறார்கள்.

''உங்களைப் பார்க்க வந்தேனல்லவா? அந்தச் சந்திப்பில் எனக்கு மிகுந்த ஆர்வமிருந்தது. முதல் நாளிரவு தூக்கமே இல்லாமல் இதைப்பற்றியே யோசித்துக் கொண்டிருந்தேன். உங்களெதிரில் வந்து நின்றேன். உட்காரச் சொன்னார்கள். அப்போது ஸ்ரீதேசாய்க்குப் பின்னால் போய் உட்கார்ந்து கொண்டேன். பேச்சு என் காதில் விழவில்லை. உங்களைப் பார்க்கவும் முடியவில்லை. என்ன அசட்டுத்தனமான காரியம்! மேலும், நான் சொல்ல வந்ததை விளக்கிச் சொல்லுவதற்கு நாவெழவில்லை. உணர்ச்சிவசப்பட்டு விடும் என்னுடைய சுபாவம்தான் இதற்குக் காரணம்; இது சுலபமாகக் கை மீறிப்போய் விடுகிறது. சரியான பயிற்சி இருந்தால் இந்தக் குறிப்பிட்ட குறைபாட்டைப் போக்கிவிடலாமென்பது உண்மையே. அப்போதும்கூட நிச்சயமாக வேறு ஏதாவதொரு அசட்டுத்தனமான காரியம் செய்திருப்பேன்.

''தேசீய திட்ட சப்-கமிட்டியின் பெண்கள் பகுதியிலிருந்து அனுப்பப் பட்டிருந்த ஒரு கேள்வித் தாளுக்குத் தான் எழுதிய பதில்களை என்னுடைய சிநேகிதி ஒருத்தி என்னிடம் காண்பித்தாள். கேள்விகளுக்கு இலக்கங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன, பின் குறிப்பிட்டது போன்ற கேள்விகள் கேட் கப்பட்டிருந்தன: 'நீங்கள் வசிக்கும் பிரதேசத்தில் பெண்கள் தம்மிச்சையாகச் சொத்து வைத்துக்கொள்ளவும், வாங்கவும், வாரிசுரிமை மூலம் பெறவும்,

விற்பனை செய்யவும் எந்த அளவுக்கு உரிமை யுண்டு? பெண்கள் செய்யக் கூடிய பற்பல விதமான வேலைகளை அவர்களுக்கு கற்றுக் கொடுக்கவும், பயிற்சி யளிக்கவும் என்ன ஏற்பாடுகள் அல்லது வசதிகள் செய்யப்பட்டிருக்கின்றன?' இந்தக் கேள்விகளுக்கு அவள் பதிலளிக்கவில்லை. ஆனால், பின் வருமாறு எழுதி யிருக்கிறாள்: "முன் காலத்தில் பெண்களுக்கு எந்தக் கல்வியுமே அளிக்கப்படவில்லை யென்று சொல்லுவதில் கொஞ்சமும் உண்மை இராது. வேத காலத்தில் ஒரு பெண்ணுக்கு மணமானவுடன், கணவன் வீட்டு எஜமானி என்ற கௌரவமான அந்தஸ்து அவளுக்கு அளிக்கப்பட்டது." இதற்கு மனுவையும் ஆதாரம் காட்டி இருக்கிறாள். இன்றைய வழக்கங்களைப் பற்றிக் கேள்வித்தாளில் கேட்கப்பட்டிருக்கும்போது, புராதன காலத்துப் பழக்க வழக்கங்களைப் பற்றி எழுத வேண்டிய அவசியமென்ன என்று அவளைக் கேட்டேன். ஒரு வியாசம் மாதிரி எழுதினால் நன்றாயிருக்குமென்று தான் நினைத்ததாக அவள் ஏதோ முணுமுணுத்தாள். தன்னுடைய பதிலைவிட வேறு யாரோ ஒரு பெண் எழுதிய பதில் இன்னும் மோசமாக இருந்தது என்று முகமலர்ச்சியுடன் கூறினாள். பெண் என்ற காரணத்திற்காக அவளுக்குச் சரியான பயிற்சி மறுக்கப்பட்டதுதான் என்னுடைய தோழியின் தவறுக்குக் காரணம் என்று நினைக்கிறேன். ஒரு கேள்வி கேட்கப்படும்போது வேறொரு விஷயத்தைப்பற்றி வியாசம் எழுதக்கூடாதென்பது ஒரு குமாஸ்தாவுக்குக்கூடத் தெரிந்திருக்கும்.

"என் மனத்திலுள்ளதை விளங்கவைப்பதற்கு உதாரணங்கள் கொடுத்துக் கொண்டே போகவேண்டிய அவசியமில்லை என்றே நினைக்கிறேன். பற்பல விதமான பெண்களைப்பற்றி உங்களுக்கு விரிவான அனுபவம் இருக்கிறது. ஆகையால் பெண்களைச் சரியான பாதையில் செலுத்துவதற்கு வேண்டிய ஜீவாதாரமான கொள்கை அவர்களிடம் இல்லை என்று நான் சொல்லுவது சரிதானா வென்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும்.

"ஹரிஜன் பத்திரிகையைப் படிக்கும்படி நீங்கள் எனக்கு யோசனை கூறினீர்கள். அதை நான் ஆவலுடன் படித்துக் கொண்டிருக்கிறேன். ஆனால், அந்தரான்மாவுக்கான உபதேசம் எதையும் இதுவரையில் அதில் நான் காணவில்லை. ராட்டினத்தில் நூற்பதும், தேசீய விடுதலைக்காகப் போராடுவதும் பயிற்சியின் சில அம்சங்களேயாகும். அவற்றில் முழுமையான பரிகாரம் இருப்பதாகத் தோன்றவில்லை. ஏனெனில், ராட்டையில் நூற்கும் பெண்களையும், காங்கிரஸ் லட்சியத்திற்காக வேலை செய்ய முயற்சிக்கும் பெண்களையும் நான் பார்த்திருக்கிறேன். என்றாலும் அவர்கள் தவறுகள் இழைக்கிறார்கள். அவர்கள் பெண்கள் என்பதே தவறுகளுக்குக் காரணம் என்று சொல்லிவிடுகிறார்கள்.

"பெண், ஆணைப்போலாகிவிட வேண்டுமென்று நான் விரும்பவில்லை. ஆனால், ஆண்கள் தமது கீழ்த்தரமான தன்மைகளைச் சமாளிக்க அவர்களுக்கு அகிம்சையைப் போதித்திருப்பதைப் போலவே, எங்களுடைய அசட்டுத்தனமான குணங்களை அகற்றவல்ல ஒன்றை எங்களுக்கும் கற்றுக் கொடுங்கள். எங்களுடைய குணங்களை எப்படிப் பயன்பெறத்தக்க சிறந்த வழியில் உபயோகித்துக் கொள்ளலாம், எங்களுக்கிருக்கும் பிரதிகூலங்களை எப்படி அனுகூலங்களாக மாற்றிக்கொள்ளலாம் என்று தயவு செய்து சொல்லுங்களேன்.

“நான் மெல்லினத்தாள் என்ற சுமை எப்போதும் என்னுடனேயே இருக்கிறது. “என்ன இருந்தாலும் அவள் பெண்தானே” என்று அலட்சியமாக யாராவது சொல்லுவதைக் கேட்கும்போதெல்லாம் என் உள்ளம் புழுங்குகிறது—உள்ளம் புழுங்குவது சாத்தியமென்றால். இந்த விஷயங்களைப் பற்றி ஒரு ஆணுடன் நான் பேசினேன். அவர் என்னைப் பார்த்துச் சிரித்துவிட்டுச் சொன்னார்: ‘நம்முடைய நண்பர் வீட்டிலிருந்த அந்தக் குழந்தையைப் பார்த்தாயா? அவன் ரெயில் விளையாட்டு விளையாடிக் கொண்டிருந்தான். ஒரு தூண் எதிர்ப்படும் வரையில் ‘குப் குப்’ என்று ரெயிலைப் போல் ஓடிக்கொண்டிருந்தான். அதைச் சுற்றி வளைத்து அவன் போயிருக்கலாம். அதற்குப் பதிலாகத் தன் தோள்களால் அதை நெருக்கித் தள்ள முயற்சித்துக் கொண்டிருந்தான். அவன் குழந்தைதானே! அதைத் தான் தள்ளிவிட முடியுமென்று நினைத்துக்கொண்டான். உன்னைப் பார்க்கும்போது அந்தக் குழந்தையின் ஞாபகம் எனக்கு வருகிறது. நீ சொல்லுவது மனோதத்துவத்தைப் பற்றிய விஷயம். அதைப் புரிந்துகொண்டு, அதற்குப் பரிகாரம் காண நீ செய்யும் முயற்சியைப் பார்க்கும்போது எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது.’ ”

நான் சத்தியாக்கிரகத்தைக் கண்டு பிடித்தபோது, பெண்களின் லட்சியத்திற்கு உதவி புரிய ஆரம்பித்து விட்டேனென்று பெருமைப்பட்டுக்கொண்டிருந்தேன். ஆனால், பெண்கள் ஆண்களைப் போலில்லாமல் வேறுவிதமாக நடத்தப்பட வேண்டுமென்று இக்கடிதத்தை எழுதியுள்ள பெண் அபிப்பிராயப்படுகிறார். அப்படியானால், எந்த மனிதனும் சரியான பரிகாரத்தைக் கண்டு பிடிக்க முடியுமென்று நான் நினைக்கவில்லை. அவன் எவ்வளவுதான் முயற்சி செய்தாலும் தோல்வியே ஏற்படும். ஏனெனில், பெண்ணிலிருந்து மாறுபட்ட விதத்தில் இயற்கை அவனைச் சிருஷ்டித்திருக்கிறது. செருப்பை அணிந்திருப்பவனுக்குத்தான் அது எங்கே கடிக்கிறதென்பது தெரியும். ஆகையால், தமக்கு என்ன வேண்டும் என்பதை இறுதியில் பெண்களேதான் முடிவாகத் தீர்மானிக்க வேண்டியிருக்கும். அடிப்படையில் ஆண்களும், பெண்களும் ஒன்றே என்று நான் நினைக்கிறேன்; ஆகையால், அவர்களுடைய பிரச்னையின் சாராம்சமும் ஒரே மாதிரியாகத்தானிருக்கு மென்பது என்னுடைய அபிப்பிராயமாகும். இருவருக்கும் உள்ளம் ஒரே மாதிரியானதுதான். இருவரும் ஒரே வாழ்க்கையை நடத்துகிறார்கள்; ஒரே மாதிரியான உணர்ச்சிகளுடையவர்களாக இருக்கிறார்கள். ஒருவருடைய தீவிரமான உதவியில்லாமல் மற்றொருவர் வாழ முடியாது.

ஆனால், எப்படியோ, எவ்வளவோ காலமாக ஆண்கள் பெண்கள் மீது ஆதிக்கம் செலுத்தி வந்திருக்கிறார்கள். ஆகையால், பெண்களிடம் ஒரு சிறுமை மனப்பான்மை வளர்ந்து விட்டது. பெண்கள் ஆண்களைவிடத் தாழ்ந்தவர்கள் என்று, ஆண்கள் சுயநலத்துடன் செய்த பிரசாரம் உண்மைதான் என்று பெண்கள் நம்பிவிட்டார்கள். ஆனால், ஆண்களிடையே இருந்த தீர்க்கதரிசிகளோ, பெண்களின் சம அந்தஸ்தை அங்கீகரித்திருக்கிறார்கள்.

ஆயினும், ஏதோ ஒரு கட்டத்தில் ஒரு பிரிவினை ஏற்படுகிறது என்பதில் சந்தேகமில்லை. இருவரும் அடிப்படையில் ஒன்றுதான் என்ருலும், உருவத்தில் இருவருக்குமிடையே முக்கியமான மாறுபாடுகள் இருக்கின்றன என்பதும் உண்மையே. ஆகையால், இருவரும் செய்யக்கூடிய வேலைகளிலும் மாறுபாடுதான் இருக்கும். தாய்மையின் கடமையை மிகப் பெரும்பாலான பெண்கள் எப்போதும் ஏற்றுக்கொள்ளுவார்கள். ஆனல், தாய்மைக்கு இருக்கவேண்டிய தன்மைகள் ஆண்களுக்கு இருக்கவேண்டுமென்ற அவசியமில்லை. பெண் சகித்துக்கொள்ளுபவள்; ஆண் ஆதிக்கம் செலுத்துபவன். அவள் வீட்டின் எஜமானி; அவன் சோற்றுக்கு வழி செய்பவன்; அவள் வினியோகம் செய்பவள். சகல அம்சங்களிலும் அவள் கட்டிக்காப்பவள். குழந்தைகளை வளர்க்கும் கலை அவளுடைய விசேஷமானதும், பிரத்தியேகமானதுமான உரிமையாகும். அவளில்லையேல் இனமே நசிந்து போய்விடும்.

இல்லத்தை விட்டு வெளியே வந்து, அதே இல்லத்தைக் காப்பதற்காகத் துப்பாக்கிகளை ஏந்துங்கள் என்று பெண்களை அழைப்பதோ, அல்லது அவர்களை அப்படிச் செய்யத் தூண்டுவதோ ஆண், பெண் இருவருக்குமே இழிவானது என்று நான் கருதுகிறேன். இது காட்டுமிராண்டித்தனத்திற்குத் திரும்புவதாகும்; முடிவுக்கு ஆரம்பமுமாகும். ஆண்கள் சவாரி செய்யும் குதிரையைத் தாமும் சவாரி செய்ய முயற்சி செய்வதன் மூலம் பெண்கள் தாமும் கீழே விழுந்து, ஆண்களையும் கீழே தள்ளி விடுகிருர்கள். தன்னுடைய துணைவி அவளுடைய விசேஷப் பணிகளைக் கைவிடும்படி ஆசை காட்டுவதன் மூலம் அல்லது தூண்டுவதன் மூலம் நேரும் பாவம் ஆணையே சேரும். தன் வீட்டை வெளித்தாக்குதலிலிருந்து காப்பாற்றுவதில் எவ்வளவு வீரம் இருக்கிறதோ அவ்வளவு வீரம், வீட்டை நல்ல சீரான நிலைமையில் வைத்துக்கொள்ளுவதிலும் இருக்கிறது.

லட்சக்கணக்கான விவசாயிகளை அவர்களுடைய இயற்கையான சூழ்நிலைகளில் நான் கவனித்திருக்கிறேன். சின்னஞ் சிறு சேவா கிராமத்திலும், அவர்களை ஒவ்வொரு நாளும் பார்த்துக்கொண்டிருக்கிறேன். அப்போது இயற்கையான தொழில் பிரிவினைகளின் தன்மை என் கவனத்தைக் கவர்ந்திருக்கிறது. கருமான், தச்சு வேலை செய்யும் பெண்கள் கிடையாது. ஆனல், ஆண்களும், பெண்களும் வயல்களில் வேலை செய்கிருர்கள். மிகக் கடினமான வேலைகளை ஆண்கள் செய்கிருர்கள். பெண்கள் வீடுகளைப் பார்த்துக்கொள்ளுகிருர்கள். குடும்பத்தின் சொற்ப வருமானத்தை அதிகரிக்க அவர்கள் உதவி செய்கிருர்கள். ஆனல், குடும்பத்திற்கு வேண்டியதைச் சம்பாதிக்கும் முக்கியமான பொறுப்பு ஆண்களிடமே இருக்கிறது.

இயற்கையான தொழில் பிரிவினைகளை ஏற்றுக்கொண்டுவிட்டால் பிறகு, இரு தேவையான பொது குணங்களும், பண்பாடும் இரு பாலாருக்கும் ஒரே மாதிரியாகவே இருக்கின்றன.

தனிப்பட்டவர்களோ, நாடுகளோ, வாழ்க்கையின் எல்லா அம்சங்களுக்கும் சத்தியத்தையும், அகிம்சையையும் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தி வருவதே இந்தப் பெரிய பிரச்னைக்கு நான் செய்துள்ள உதவியாகும். இதில் பெண்களே சந்தேகமின்றி தலைவர்களாயிருப்பார்கள் என்ற நம்பிக்கையை நான் விடாமல் பேணி வந்திருக்கிறேன். மனித இனத்தின் வளர்ச்சியில் இவ்வாறு அவர்கள் தமது ஸ்தானத்தை ஏற்றுக் கொண்டவுடன் தமது சிறுமை உணர்ச்சியைக் களைந்து விடுவார் களென்றும் நம்பி வந்திருக்கிறேன். பெண்கள் இதை வெற்றிகர மாகச் செய்துவிட்டால், எல்லாக் காரியங்களும் பால் உணர்ச்சி யினால்தான் தூண்டப்பட்டு, நிர்ணயிக்கப்படுகின்றன என்ற இந்தக் காலத்திய போதனையை நம்ப அவர்கள் கண்டிப்பாக மறுத்துவிடவேண்டும். இந்தக் கருத்தை நான் அவ்வளவு தெளி வாகக் கூறவில்லை என்று அஞ்சுகிறேன். ஆயினும், என் மனத்தி லுள்ளது தெளிவாகத் தெரிந்திருக்குமென்றே நினைக்கிறேன். யுத்தத்தில் கலந்துகொண்டுள்ள லட்சக்கணக்கான ஆண்கள், பால் உணர்ச்சியினால் பீடிக்கப்பட்டிருக்கிறார்களென்று நான் நினைக்கவில்லை. வயல்களில் சேர்ந்து வேலை செய்யும் விவசாயி களும் இதைப்பற்றிக் கவலைப்படவில்லை; அதற்கு ஆளாகி விடவு மில்லை. இதனால் ஆண்களிடமும், பெண்களிடமும் உள்ள உணர்ச்சி அவர்களிடம் இல்லை என்று அர்த்தமில்லை. ஆண், பெண் உறவுகளைப்பற்றிய இன்றைய நூல்களில் ஊறிப்போயிருப் பவர்களுக்கு இருப்பதைப் போல், அவர்களுடைய வாழ்க் கையில் இந்தப் பால் உணர்ச்சி அவ்வளவு முக்கியத்துவம் பெற்றிருக்கவில்லை என்பது நிச்சயம். வாழ்க்கை என்ற கடின மான போராட்டத்தைச் சமாளிக்க வேண்டியிருக்கிற ஆண் களுக்கோ, பெண்களுக்கோ அம்மாதிரி விஷயங்களுக்கெல்லாம் அவகாசம் இல்லை.

அகிம்சையின் அவதாரம் பெண் என்று இந்தப் பத்திரிகை யில் நான் கூறியிருக்கிறேன். அளவில்லாத அன்பு என்பதே அகிம்சையின் பொருள். அத்துடன் எந்தக் கஷ்டத்தையும் பொறுத்துக்கொள்ளுவதும் அதனுடைய விசேஷமாகும். மனி தனை ஈன்றெடுக்கும் அன்னையாகிய பெண்ணைத் தவிர வேறு யாருக்கு இந்தச் சக்தி அவ்வளவு அதிகமாக இருக்கிறது? சிசுவை வயிற்றில் தாங்கிக்கொண்டு, ஒன்பது மாதங்கள் வரையில் அதைப் போஷித்து வளர்த்து, அதில் உள்ள வேதனையில் இன்பம் காணுகிறாள். பிரசவ வேதனைக்கு ஈடான கஷ்டம் வேறென்ன இருக்க முடியும்? ஆனால், சிருஷ்டி செய்கிறோம் என்ற ஆனந்தத்தில் அந்த வேதனைகளை மறந்து விடுகிறாள். தன்னுடைய குழந்தை அன்றாடம் வளர்ந்து கொண்டே இருக்க வேண்டுமென்பதற்காக ஒவ்வொரு நாளும் கஷ்டப்படுவது யார்? அந்த அன்பைப் பெண்கள், மனித வர்க்கத்திற்கே மாற்றட்டும். நாம் மனிதனின் காம இச்சைக்கான கருவியாய் இருந்தோம் அல்லது இருக்க முடியும் என்பதை அவர்கள் மறந்துவிடட்டும்.

அப்படியானல், மனிதனுக்குச் சரி சமமாக அவனுடைய தாய், அவனைச் சிருஷ்டித்தவள், அவனுக்கு மௌனமாக வழிகாட்டும் தலைவி என்ற பெருமையான ஸ்தானம் அவர்களுக்குக் கிடைக்கும். போரில் உழன்று கொண்டும், சமாதான அமிருதத்திற்காகத் தவித்துக்கொண்டுமிருக்கும் உலகத்திற்குச் சமாதானக் கலையைப் போதிக்கும் வாய்ப்பு பெண்களுக்கே இருக்கிறது. சத்தியாக்கிரகத்திற்குப் பெண்கள் தலைமை வகிக்கலாம். இதற்குப் புஸ்தகப் படிப்பு தேவையில்லை. வேதனைகளை அனுபவிக்கும் சக்தி, நம்பிக்கை ஆகியவைகளிலிருந்து கிடைக்கும் மன உறுதியே இதற்கு வேண்டும்.

பல வருடங்களுக்கு முன்பு நோய்வாய்ப்பட்டிருந்த நான், புனவிலுள்ள ஸாஸூன் ஆஸ்பத்திரியில் படுத்துக் கொண்டிருந்தேன்; என்னைக் கவனித்துக் கொண்டிருந்த நர்ஸ் அம்மாள், ஒரு சம்பவத்தை என்னிடம் சொன்னர். ஒரு கர்ப்பவதிக்கு, ‘குளோரோபாம்’ என்ற மயக்க மருந்தைக் கொடுக்கப்போனர்களாம். ஆனல், வயிற்றிலுள்ள குழந்தையின் உயிருக்கு ஆபத்து வந்துவிடுமோ என்று பயந்து அவள் மறுத்துவிட்டாளாம். தன்னுடைய குழந்தையிடம் உள்ள அன்பு ஒன்றுதான் அவளுக்கு மயக்க மருந்து. அதைக் காப்பாற்றுவதற்கு எந்தக் கஷ்டத்தையும் அவள் பொருட்படுத்தவில்லை. இத்தகைய வீரப் பெண்மணிகள் எவ்வளவோ பேர்கள் இருக்கிறர்கள். ஆகையால், தங்கள் இனத்தை அவர்கள் ஏளனப்படுத்த வேண்டாம். நாம் ஆணுய்ப் பிறக்கவில்லையே என்றும் வருந்த வேண்டாம். இந்த வீராங்கனையை நினைக்கும்போது பெண்களின் பெருமையைப்பற்றி எனக்குப் பொருமை ஏற்படுகிறது. ஆனல், இந்தப் பெருமை அவர்களுக்குத் தெரியவில்லையே! நாம் ஆணுய்ப் பிறக்கவில்லையே என்று பெண்கள் நினைப்பதற்கு எவ்வளவு காரணமிருக்கிறதோ, அவ்வளவு காரணம் நாம் பெண்ணுய்ப் பிறக்கவில்லையே என்று விரும்ப ஆண்களுக்கும் இருக்கிறது. ஆனல், இது பயனற்ற ஆசை. நாம் எப்படிப் பிறந்திருக்கிறேமோ அதிலேயே மகிழ்ச்சியடைந்து, இயற்கை நமக்கு விதித்துள்ள கடமையைச் செய்வோமாக.

சேவா கிராமம் – 12—2—40 —‘ஹரிஜன்’ - 24—2—1940

# 9

# பெண்களும் அவர்களது பணியும்

கேள்வி : “இல்லத்தை விட்டு வெளியே வந்து, அதே இல்லத்தைக் காப்பதற்காகத் துப்பாக்கிகளை ஏந்துங்கள் என்று பெண்களை அழைப்பதோ அல்லது அவர்களை அப்படி செய்யத் தூண்டுவதோ, ஆண், பெண் இருவருக்குமே இழி

வானது; இது காட்டுமிராண்டித்தனத்திற்குத் திரும்புவதாகும்; முடிவுக்கும் ஆரம்பமாகும்" என்று நீங்கள் சொல்லுகிறீர்கள். ஆனால், வயல்களிலும், தொழிற்சாலைகளிலும் வேலை செய்யும் லட்சக்கணக்கான பெண்களின் சமாசாரம் என்ன? அவர்கள் தமது இல்லங்களிலிருந்து வெளியே வந்து, குடும்ப சம்ரட்சணைக்குச் சம்பாதிக்க வேண்டிய நிர்ப்பந்தம் இருக்கிறதே. கைத்தொழில் வளர்ச்சி வேண்டாமென்று ரத்து செய்துவிட்டு, மிகப் புராதன காலத்திற்குத் திரும்பி விடுவீர்களா? அதுவும் காட்டுமிராண்டித்தனத்திற்குத் திரும்புவதாகவும், முடிவுக்கு ஆரம்பமாகவும் இராதா? பெண்களை வேலை செய்யச் சொல்லும் பாவம் இல்லாத உங்களுடைய புது அமைப்புதான் என்ன?

பதில்: லட்சக்கணக்கான பெண்கள் தமது இல்லங்களிலிருந்து வெளியே வந்து குடும்ப சம்ரட்சணைக்காகச் சம்பாதிக்க வேண்டியிருக்கிறதென்றால், அது தவறு தான்; ஆனால், துப்பாக்கி ஏந்துவது போல் அவ்வளவு தவறல்ல. உழைப்பதில் காட்டுமிராண்டித்தனம் எதுவுமில்லை. குடும்பங்களை கவனித்துக்கொண்டே பெண்கள் தமது வயல்களில் வேலை செய்வதில் காட்டுமிராண்டித்தனம் எதுவும் எனக்குத் தெரியவில்லை. என் கற்பனையிலுள்ள புது அமைப்பில், எல்லோரும் தமது சக்திக்கேற்றவாறு உழைப்பார்கள்; அவர்கள் செய்யும் வேலைக்குப் போதுமான ஊதியமும் கிடைக்கும். புது அமைப்பில் பெண்கள் ஓய்வு நேரத்தில் வேலை செய்பவர்களாயிருப்பார்கள்; குடும்பத்தைப் பார்த்துக் கொள்ளுவதே அவர்களுடைய முதல் வேலையாக இருக்கும். புது அமைப்பில் துப்பாக்கி நிரந்தரமான அம்சமாயிருக்குமென்று நான் கருதவில்லை. ஆகையால், ஆண்கள் விஷயத்தில்கூட அதன் உபயோகம் படிப்படியாகக் கட்டுப்படுத்தப்படும். அது உள்ள வரையில், சகித்துக்கொள்ள வேண்டிய ஓர் அவசியமான தீமையாகவே அது அனுமதிக்கப்படும். ஆனால், வேண்டுமென்றே பெண்கள் மீதும் அந்தத் தீமையைச் சுமத்திக் களங்கப்படுத்தமாட்டேன்.

சேவா கிராமம் - 12—3—1940 —'ஹரிஜன்' – 16—3—1940

# 10

## எழுத்தாளர்களின் தவறு

ஏற்கனவே விஷயாலோசனைக் கமிட்டியில் பேசியிருந்த ஒரு விஷயத்தைப் பற்றி காந்திஜி அடுத்தபடியாகப் பேசினார். சரியான சூழ்நிலை இல்லாததால், விஷயாலோசனைக் கமிட்டியில் அதைப்பற்றித் தீர்மானம் நிறைவேற்ற முடியவில்லை. ஜோதி

சங்கம் என்ற ஒரு பெண்கள் இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் காந்திஜிக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார்கள். இந்தக் காலத்து வெளியீடுகளில் பெண்கள் சித்தரிக்கப்படும் விதத்தைக் கண்டித்து, அவர்கள் நிறைவேற்றியிருந்த தீர்மானத்தின் நகல் ஒன்றையும் அந்தக் கடிதத்துடன் அனுப்பியிருந்தார்கள். அவர்களுடைய புகாரில் நல்ல நியாயம் இருப்பதாக காந்திஜி கருதினர். காந்திஜி சொன்னர்: ''இன்றைய எழுத்தாளர்கள் பெண்களைப் பற்றி முற்றிலும் தவருன ஒரு சித்திரம் வரைந்து காட்டுகிருர்கள் என்பதே அவர்களுடைய புகாரின் சாராம்சமாகும். உணர்ச்சி ததும்பும் விதத்தில் நீங்கள் பெண்களைப் பற்றி எழுதுவதையும், அவர்களுடைய அங்க, அவயவ அமைப்புகளை மட்டமான முறையில் நீங்கள் வர்ணிப்பதையும் பற்றி அவர்கள் ஆத்திரப்படுகிருர்கள். அவர்களுடைய வசீகரமும், பலமும் அவர்களுடைய அங்க, அவயவ அமைப்புக்களிலும், ஆண்களின் காமக் கண்களுக்கு இன்பமளிக்கும் தன்மையிலும்தான் இருக்கின்றனவா? 'பெண்கள் அடங்கி நடக்கும் சாதுப் பிறவிகள். வீட்டிலுள்ள குற்றேவல்களெல்லாம் அவர்கள் தலையில்தான். கணவன்மார்களே அவர்களுடைய தெய்வங்கள். பெண்களைப் பற்றி எந்தக் காலத்திலும் இப்படியேதான் எழுதிக் கொண்டிருக்க வேண்டுமா?' என்று அவர்கள் கேட்கிருர்கள். அவர்கள் கேட்பது நியாயம்தான். அவர்களை ஏன் உள்ளது உள்ளபடி உண்மையாக வருணிக்கவில்லை? ''நாங்கள் வானுலகப் பிறவிகளுமல்ல, விளையாட்டுப் பொம்மைகளுமல்ல; நரம்புகளும், இச்சைகளும் நிறைந்த மூட்டைகளும் அல்ல'' என்று அவர்கள் கூறுகிருர்கள். "ஆண்களைப்போல் நாங்களும் மனிதப் பிறவிகளே. அவர்களைப்போல் எங்களுக்கும் அதே விடுதலை ஆர்வம் இருக்கிறது" என்கிருர்கள். பெண்களைப் பற்றியும் அவர்களுடைய மனேபாவங்களைப் பற்றியும் எனக்கு நன்ருகத் தெரியுமென்றே நான் நினைக்கிறேன். ஒரு காலத்தில் தென்னுப்பிரிக்காவில் என்னைச் சுற்றி நிறைய பெண்களிருந்தார்கள். அவர்களுடைய வீட்டுக்காரர்களெல்லாம் சிறை சென்று விட்டார்கள். அங்கே என்னுடன் சேர்ந்து அறுபது பேர் வசித்துக் கொண்டிருந்தார்கள். இந்த எல்லாப் பெண்களுக்குமே நானே சகோதரனுகவும், தகப்பனுகவும் இருக்க வேண்டியிருந்தது. என்னுடைய மேல் பார்வையின் கீழ் அவர்களுடைய பலமும், ஊக்கமும் பெருகின. இறுதியில் அவர்களும் சிறை சென்ருர்கள்.

''நமது இலக்கியங்களில் பெண்களைத் தெய்வங்களாக வருணிப்பது மிகைப்பட்ட அளவுக்குக்கூட இருப்பதாக அறிந்தேன். இப்படி அவர்களை வருணிப்பது முற்றிலும் தவருகும். ஒரு சிறு சோதனையை உங்கள் முன்பு குறிப்பிடுகிறேன். அவர்களைப் பற்றி நீங்கள் எழுத ஆரம்பிக்கும்போது, நீங்கள் என்ன கற்பனை செய்து கொள்ளுகிறீர்கள்? நீங்கள் எழுதத் தொடங்கு முன்பு அவர்களை உங்களுடைய தாயைப் போல் நினைத்தால், காய்ந்து வறண்டு கிடக்கும் நிலத்தில் வானிலிருந்து பொழியும் அற்புத

மான அந்த மழையைப் போல், உங்களுடைய பேனா முனைகளி லிருந்து மிகத் தூய்மையான இலக்கியமே பொழியும் என்று நான் உறுதியாகக் கூறுவேன். ஒரு பெண் உங்களுடைய மனைவி யாவதற்கு முன்பு, ஒரு பெண் உங்களுடைய தாயாக இருந்தாள் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். ஒரு பாவமு மறியாத பேதைப் பெண்களின் ஆன்மிக தாகத்தைத் தணிப் பதற்குப் பதிலாகச் சில எழுத்தாளர்கள் அவர்களுடைய இச்சைகளைத் தூண்டிவிட்டு விடுகிறார்கள். இதன் பலன் என்ன? கட்டுக் கதைகளில் வரும் வருணனைக்குப் பொருத்தமாகத் தாங் களும் எப்படி இருக்கலாம் என்று முயல்வதிலேயே அந்தப் பெண்கள் தமது நேரத்தை வீணாக்குகிறார்கள். பெண்களின் அங்க அமைப்புகளை நுட்பமாக விவரிப்பது, இலக்கியத்தின் அத்தியாவசியமான அம்சமா என்று எனக்குப் புரியவில்லை. உப நிஷத்துக்களிலோ, குர்ஆனிலோ, பைபிளிலோ அம்மாதிரி எதை யாவது பார்க்கிறீர்களா? பைபிள் இல்லாவிடில் ஆங்கில மொழிக்கே மதிப்புக் கிடையாது என்பதை நீங்கள் அறிவீர்களா? ஆங்கில மொழி என்பது மூன்று பாகம் பைபிள், ஒரு பாகம் ஷேக்ஸ்பியர் என்று சொல்லப்படுவது உண்டு. குர்ஆன் இல்லா விட்டால் அரபு மொழியே மறந்து போய்விடும். துளசிதாஸர் இல்லாவிடில் ஹிந்தி மொழி எப்படி இருக்குமென்று நினைத்துப் பாருங்கள்! பெண்களைப் பற்றி இன்றைய இலக்கியங்களில் காணப்படுபவைகளைப் போன்று அதில் ஏதேனும் இருக் கிறதா?''

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது]

—'ஹரிஜன்' – 21—11—1936

பகுதி இரண்டு

# குழந்தைக் கல்யாணமும் சீதனமும்

## 1

## திருமணச் சம்மத வயது

திருமணச் சம்மத வயதை, 14 வயது என்றுவது உயர்த்தும் நோக்கத்துடன் சட்ட சபை முன்பு கொண்டு வரப்பட்டுள்ள ஒரு மசோதாவைப் பற்றி ஸ்ரீமதி டோரதி ஜீன ராஜ தாஸா ஒரு சுற்றுக் கடிதம் அனுப்பி யிருக்கிறார். எனக்கும் அக்கடிதத்தின் நகல் ஒன்றை அனுப்பி யிருக்கிறார். அதைக் கீழே தருகிறேன்:

“சட்டசபையின் அடுத்த கூட்டத்தில் வரவிருக்கும் குழந்தைகள் பாதுகாப்புச் சட்டத்திற்கு உங்கள் செல்வாக்கை உபயோகித்து ஆதரவு தேட முடியுமா என்று உங்களைக் கேட்பதற்காகவே இந்தக் கடிதத்தை எழுதுகிறேன். உலக நாடுகளிடையே மதிப்பும், மரியாதையும் வாய்ந்த ஒரு பெரிய நாடாக இந்தியா விளங்க வேண்டுமானல், குழந்தைப் பருவத்திலேயே பெண்கள் தாய்களாகி விடும் இழுக்கை அகற்ற வேண்டுமென்று நான் உறுதியாக நம்புகிறேன்.

“சென்ற தடவை இந்த மசோதா வந்தபோது நாட்டிலும், சட்டசபையிலும் இதற்குப் பெரும் அளவு ஆதரவு கிடைத்தது. பொதுஜன அபிப்பிராயம் ஒரு அளவுக்குப் பகிரங்கமாகத் தெரிவிக்கப்பட்டால், அடுத்த கூட்டத்தில் அதை நிறைவேற்றுவதில் அதிகக் கஷ்டம் இராதென்று நான் நினைக்கிறேன். நாடெங்கிலும் இந்த மசோதாவை ஆதரித்து, முக்கியமாகப் பெண்கள், பல கூட்டங்களை நடத்துகிறார்களென்பது எனக்கு நிச்சயமாகத் தெரிந்த விஷயமாகும். சிறு பெண்களின் திருமணச் சம்மத வயது 14 என்றுவது உயர்த்தப்பட வேண்டும் என்பதே பெரும்பாலான பெண்களின் அபிப்பிராயமாகும் என்பது நிச்சயம்.

“மசோதாவை நீங்கள் பலமாக ஆதரிக்க வேண்டும். இந்த மசோதாவுக்கு ஆதரவு தருவதோடு மட்டுமில்லாமல், அன்றாட வாழ்க்கையிலும் இந்தக் கொள்கைகளைப் பின்பற்ற வேண்டிய அவசியத்தை ஆண்களுக்கும் பெண்களுக்கும் நீங்கள் வலியுறுத்த வேண்டும். அப்படிச் செய்வது இந்த மசோதா நிறைவேறுவதற்குப் பெரிதும் உதவியா யிருக்குமென்று நான் நம்புகிறேன்.

இந்த மசோதாவைப் பற்றி எனக்கொன்றும் தெரியாது என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன்; இருந்தாலும் சம்மத வயதை 14 ஆக மட்டுமல்ல, 16 ஆக உயர்த்துவதைக்கூட நான் பலமாக ஆதரிக்கிறேன். ஆகையால், மசோதாவின் ஷரத்துகளைப் பற்றி நான் ஏதும் சொல்ல முடியாதென்றாலும், ஒன்று மறியாத இளம் பெண்களை மனிதனின் காம இச்சையிலிருந்து காப்பாற்றும் எந்த முயற்சிக்கும் நான் மனப்பூர்வமான ஆதரவு அளிப்பேன். 14 வயதில் திருமணப் பூர்த்தி நடப்பதுகூட தார்மிக மற்றதும், மனிதத் தன்மைக்கு முரணானதுமான செய்கை என்பதே என்னுடைய தாழ்மையான அபிப்பிராயமாகும். திருமணச் சடங்கு என்று ஒன்று நடத்தப்பட்டு விடுகிறது என்பதற்காக, இதற்குச் சட்ட சம்மதம் ஏற்பட்டு விடக்கூடாது. தார்மிகத்திற்கு விரோதமான ஒரு பழக்கத்தை மத சம்மதமாக்குவதற்கு, ஆதார பூர்வமானதுதானா வென்று நிச்சயமாகத் தெரியாத சமஸ்கிருத வாசகங்களை எடுத்துக்காட்ட முடியாது. இளம் பருவத்தில் குழந்தைகள் தாய்களாகி விடுவதால் தேகாரோக்கியம் எவ்வளவு பாழாகி யிருக்கிறது என்பதை நானே நேரில் பார்த்திருக்கிறேன். குழந்தை மணத்தின் கொடுமைகள் போதாதென்று, கட்டாய பால்ய வைதவ்யமும் சேரும்போது, இந்தச் சோக நாடகம் பூர்த்தியடைந்து விடுகிறது. சம்மத வயதை உயர்த்தும் தன்மை வாய்ந்த எந்த நியாயமான மசோதாவுக்கும் நிச்சயமாக என்னுடய் ஆதரவு கிடைக்கும். ஆனால், போதிய பொதுஜன ஆதரவு இல்லாததால் இப்போதுள்ள சட்டம்கூடப் பயனற்றுப் போயிருக்கிறது என்பது எனக்குத் துக்கத்தை விளைவித்திருக்கிறது. இதிலும். இதைப் போன்ற பல விஷயங்களிலும் சீர்திருத்தவாதியின் வேலை மிகக் கடினமானது. ஹிந்து சமூகத்தினர் உண்மையாக நிலைமையை உணரச் செய்ய வேண்டுமானால், அடிக்கடி தொடர்ந்து கிளர்ச்சி செய்ய வேண்டியது அவசியமாகும். இந்தியப் பெண்கள் உரிய காலத்திற்கு முன்பே முதுமை பெற்று, இளம் வயதிலேயே இறப்பதிலிருந்து அவர்களை மீட்கவும், ஹிந்து சமூகத்தில் நோஞ்சல்கள் பிறப்பதைத் தடுக்கவும் முயற்சி செய்வது உன்னதமான பணியாகும். இந்தப் பணியில் ஈடுபட்டிருப்பவர்கள் முழு வெற்றிபெற வேண்டுமென்று விரும்புகிறேன்.

—'எங் இந்தியா' - 27—8—1925

[குழந்தைகளுக்கு விவாகஞ் செய்து விடுவதன் கொடுமையைக் கண்டித்து, 'குழந்தை மணத்தின் தீமை' என்ற தலைப்பில் காந்திஜி எழுதிய மற்றொரு கட்டுரை, 'மகாத்மா காந்தி நூல்கள்' 4-ஆம் தொகுப்பில் 659-61–ஆம் பக்கங்களில் பிரசுரமாகி யிருக்கிறது. 13 வயதுப் பெண்ணை 26 வயதுள்ளவன் மணந்தான். இத்தம்பதிகள் 13 நாட்கள் கூட சேர்ந்து வாழவில்லை. அதற்குள் அப்

பெண் நெருப்பில் வெந்து மாண்டு போனாள். கணவன் சகிக்க முடியாத முறையில் மிருகத்தனமாக நிர்ப்பந்தப் படுத்தியதன் காரணமாகவே அவள் தற்கொலை செய்து கொண்டு இறந்தாள் என்று ஜூரிகள் முடிவு கூறினர்கள், இறக்கும் தறுவாயில் அப்பெண் கொடுத்த வாக்குமூலத் திலிருந்து, கணவனே அவள் ஆடையில் தீ வைத்தான் என்பது தெளிவாகத் தெரிந்தது. இந்த துக்ககரமான நிகழ்ச்சியை காந்திஜிக்கு ஸ்ரீமதி மார்க்கரட் கஸின்ஸ் அறி வித்திருந்தார். அக்கட்டுரையில் இதைக் குறிப்பிட்டு எழு திய காந்திஜி, ''மனத்தைக் கட்டுப்படுத்தாமல் தீமையில் திளைத்திருக்கும் மனிதனே, பக்குவமடைவதற்கு முன்பே பெண்ணுக்கு மணம் செய்யாமலிருப்பது பாவம் என்று சொல்லுவான்'' என்றார். இதைக் கண்டித்தும், குழந்தை மணத்திற்கு ஆதரவாக சாஸ்திரங்களில் இருக்கும் ஆதா ரங்களைக் காட்டியும் ஒருவர் எழுதிய கடிதத்தை, 'எங் இந்தியா' 9—9—1926-ஆம் தேதி இதழில் காந்திஜி பிர சுரித்து அதற்குப் பதிலும் எழுதினர். ''குழந்தை மணத் திற்கு ஆதரவு'' என்ற தலைப்பில் வெளியான இக்கட் டுரையையும் நான்காம் தொகுப்பில் 661—66-ஆம் பக்கங் களில் காண்க.]

# 2

# குழந்தை மனைவிகளின் துயரங்கள்

'வங்காளத்தைச் சேர்ந்த ஒரு ஹிந்து பெண்' பின் வருமாறு எழுதியிருக்கிறார்:

''நமது ஹிந்து சமூகத்திலுள்ள ஒன்றுமறியாத குழந்தை மனைவிகளின் சார்பில் நீங்கள் பேசியதற்கு உங்களுக்கு எப்படி நன்றி செலுத்துவதென்று எனக்குத் தெரியவில்லை. சென்னை சம்பவம் தனிப்பட்ட ஒன்றல்ல. ஒரு வருடத்திற்கு முன்பு கல்கத்தாவிலும் அம்மாதிரி ஒரு சம்பவம் நடந்தது. அந் தப் பெண்ணுக்கு வயது பத்துதான். தன் கணவனுடன் இரு இரவுகள் கழித்த பிறகு, கணவனை நெருங்கவே அவள் மறுத்துவிட்டாள். ஆனால், ஒரு நாள் அவனுக்கு வெற்றிலைப் பாக்கு கொடுப்பதற்காகத் தாயார் பெண்ணை அனுப்பினாள். அதைக் கணவனிடம் கொடுத்துவிட்டு உடனே வந்துவிடலாமென்று அந்தப் பேதை நினைத்தாள் போலும். ஆனால், அவன் கதவைத் தாளிட்டுவிட்டான். அறையிலிருந்து அவள் வெளியே வரமுடிய வில்லை. சற்று நேரம் கழித்து பரிதாபமான ஒரு முனகல் சப்தம் கேட்டது. பெண்ணின் தாயார் ஓடி வந்தாள். கதவைத் திறந்து பார்த்தபோது அந்தப்

பெண் இறந்து கிடந்தாள். 'கணவன்' அவளை அவ்வளவு பலமாக அவள் மண்டையில் அடித்திருக்கிறான்.

"இவன் மீது கோர்ட்டில் வழக்கு நடந்தது, மரண தண்டனையும் விதிக்கப்பட்டது.

"அத்தகைய சம்பவங்கள் வெளியே வராமல் நமது சமூகத்தில் எவ்வளவு நடக்கின்றனவோ, யார் கண்டார்கள்? குழந்தை மனைவிகள், பருவமடையும் வரையில் தங்கள் கணவன்மார்களிடமிருந்து ஒதுங்கி இருக்க முயன்றிருப்பதை நான் நேரில் அறிவேன்.

"ஆனால், அவர்கள் சார்பில் யார் பேசப் போகிறார்கள்? நம்முடைய பெண்கள், தம்முடைய துக்கச் சுமையை வாய் திறவாமல் எப்போதுமே சகித்துக்கொண்டிருக்கிறார்கள். எந்தத் தீமையையும் எதிர்த்துப் போராடுவதற்கு அவர்களுக்கு ஆற்றலில்லாமற் போய்விட்டது. ஆண்களுக்குள்ள அதிகாரமோ கணக்கு வழக்கில்லை. அவர்கள் எப்போதுமே தங்கள் சுகத்தைப் பற்றித்தான் நினைக்கிறார்களே யொழிய, அந்தப் பேதைப் பெண்களைப்பற்றி நினைப்பதில்லை.

"எனக்குப் பழக்கமுள்ள ஒரு பிராம்மணப் பெண்ணுக்கு பத்தாவது வயதில் திருமணம் நடந்தது. ஆனால், அவள் கணவனிடம் போக மறுத்துவிட்டாள். இதனால் கணவன் பருவமடைந்த வேறொரு பெண்ணை மணந்து கொண்டுவிட்டான். நல்ல வாலிபத்தின் வாளிப்பில் உள்ள அந்தப் பெண், இப்போது தன் தந்தையின் வீட்டிலேயே இருக்கிறாள்.

"கிராமங்களில் கீழ் வகுப்பினரிடையே ஒரு பழக்கம் இருக்கிறதாம். ஒரு பெண் இதைப்பற்றி என்னிடம் சொன்னாள். அதாவது, குழந்தை மனைவிகள் தம் கணவன்மார்களை அணுகுவதில்லையாம். இரவு நேரத்தில் அவர்களைக் கணவர்களின் அறைகளுக்குள் தள்ளுவதும் சுலபமல்ல. இதனால் கணவன்மார்கள் அந்தக் குழந்தை மனைவிகளை அடிப்பதுண்டாம்.

"இப்படிக் கஷ்டப்படுபவர்கள் அதைப்பற்றி வாய்விட்டுச் சொல்லுவதற்கு வாய்ப்பில்லாம லிருந்தால், மிருகத்தனமான பழக்க வழக்கங்கள் நியாயம் தான் என்று வாதாடுவது சுலபம்."

இந்தச் சித்திரம் உண்மையானதா யிருந்தாலும், மிகைப்பட்டதாயிருந்தாலும், இத்தகைய நிலைமை இருக்கிறதென்பது உண்மையே. இதற்கு ஆதரவாக நான் சாட்சியங்களைத் தேடிக்கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. வயதான ஒரு டாக்டரைப் பற்றி எனக்குத் தெரியும். அவருக்குத் தொழிலில் நல்ல வருமானம் கிடைக்கிறது. அவர் மனைவியை இழந்து விட்டார். அவர் ஒரு பெண்ணை மணந்து கொண்டிருக்கிறார். அவருக்கு மகளாக இருக்கக்கூடிய அளவுக்கு அந்தப் பெண் அவ்வளவு இளம் வயதினள். அவர்கள் 'கணவனும், மனைவியுமாக'ச் சேர்ந்து வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். மனைவியை இழந்த அறுபது வயதுள்ள கல்வி இலாகா அதிகாரி ஒருவர், ஒன்பது வயதுச் சிறுமி ஒருத்தியை மணந்து கொண்டார். இந்த வெட்கக் கேடான விஷயம் எல்லோருக்கும் தெரியும். ஆயினும், அவர் சர்க்காராலும் பொது ஜனங்களாலும் மதிக்கப்பட்டு, கல்வி

இலாகா இன்ஸ்பெக்டராகவே தொடர்ந்து இருந்து கொண்டிருந்தார்.

'எந்த விதமான தீமையையும் எதிர்த்துப் போராடுவதற்கு, இந்தியப் பெண்களுக்கு ஆற்றலற்றுப் போய்விட்டது' என்று அந்த அம்மையார் கூறுவது சரிதான். இத்தகைய நிலைமைக்கு ஆண்கள்தான் முக்கிய காரணம் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், பல பெண்கள் குற்றத்தை ஆண்கள் மீது சுமத்திவிட்டுத் தமது மனச்சாட்சியைத் திருப்தி செய்து கொள்ளுகிறார்கள். விஷயம் தெரிந்த பெண்கள், சீர்திருத்தச் சுமையை ஏற்றுக் கொள்ளவேண்டாமா? ஆண்களைப் பெற்றெடுத்த தாய்மார்கள் இவர்களே. அந்த ஆண்களுக்கும், பெண்ணினத்திற்குமே இந்தக் கடமையை அவர்கள் செய்ய வேண்டாமா? திருமணம் ஆனவுடன் தமது கணவன்மார்களின் பொம்மைகளாகி உரிய காலத்திற்கு முன்பே, எதிர்காலத்தில் நல்ல திடகாத்திரமில்லாதிருக்கும் குழந்தைகளைப் பெற்றுக்கொண்டிருக்கும் வேலையில் ஈடுபடப் போகிறார்களென்றால், பெண்கள் பெறும் கல்வி எதற்காக? வேண்டுமானால் பெண்களின் வோட்டுரிமைக்காக அவர்கள் சண்டைபோடலாம். இதனால் காலமும் வீணாவதில்லை, தொந்தரவும் இல்லை. விஷமத்திற்கு இடமில்லாமல் பொழுதைப் போக்குவதற்கு அவர்களுக்கு இது ஒரு வாய்ப்பாக இருக்கிறது. பெண்களுக்குப் பருவ வயது வரவேண்டும். அப்போதுங்கூட ஒரு மணமகன் தமக்குப் பிடித்திருக்கிறதா, இல்லையாவென்று முடிவாகத் தேர்ந்தெடுக்கும் உரிமையும் அவர்களுக்கு இருக்க வேண்டும். இல்லாவிட்டால் திருமணம் செய்து கொள்ள முடியாதென்று மறுக்கும் நிலைமை இருக்க வேண்டும். அப்படி ஏற்பட்டால், குழந்தை மணம் என்பது அசாத்தியமாகிவிடும். அதுவரையில், தாம் ஓய்வெடுத்துக் கொள்ளாமலும், ஆண்களுக்கும் ஓய்வளிக்காமலும், குழந்தை மனைவிகளிடையேயும், குழந்தை விதவைகளிடையேயும் வேலை செய்வதற்கு வேண்டிய வீரப்பெண் மணிகள் எங்கே?

—'எங் இந்தியா' – 7—10—1926

*['குழந்தை மணத்தின் கோரம்' என்ற தலைப்பில் காந்திஜி 16—11—1935 'ஹரிஜன்' பத்திரிகையில் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். அதில் அவர், குழந்தை மண எதிர்ப்புக் கமிட்டியார் வெளியிட்ட அறிக்கையைப் பிரசுரித்துத் தமது கருத்தையும் வெளியிட்டிருக்கிறார். இக்கட்டுரையும் 'மகாத்மா காந்தி நூல்கள்'–4-ஆம் தொகுப்பில் 667-9-ஆம் பக்கங்களில் பிரசுரமாகியிருக்கிறது.]*

# 3

# சீதனமும், குழந்தை மணமும் கூடாது

**கேள்வி :** சாதாரணமாக நாம சூத்திரப் பெண்களுக்கு 12 அல்லது 13 வயதில் திருமணம் ஆகிவிடுகிறது; இதற்கு முன்பு 8 அல்லது 10 வயதிலேயே நடந்து கொண்டிருந்தது. மண மகன் மணமகளுக்கு ரூ. 150 சீதனம் கொடுக்க வேண்டும். இருவருக்குமிடையே 12 முதல் 15 வயது வரையில் வித்தியாசம் இருக்கும். இதன் பலனுக நாமசூத்திர வகுப்பில் விதவைகளின் எண்ணிக்கை அதிகமாகவே இருக்கிறது. அந்த வகுப்பினரில் ஒரு பகுதியினரிடையே விதவைகளை மறுமணம் செய்து கொள்ளும் பழக்கம் இருந்து வந்தது. ஆனுல், உயர்ந்தவர்கள் என்று கருதப்பட்ட மற்ருெரு பகுதியினரைப் பின்பற்றி இவர்களும் அந்தப் பழக்கத்தைக் கைவிட்டுக் கொண்டிருக்கிருர்கள். குழந்தை மணம், விதவைகள் மறுமணம் செய்து கொள்ளுவது ஆகியவைகளைப் பற்றி உங்களுடைய அபிப்பிராயம் என்ன?

**பதில் :** காந்தி இதற்குப் பதிலளிக்கையில், தம்முடைய அபிப்பிராயம் கண்டிப்பானது என்று சொன்னுர். முதலாவதாக. குழந்தை விதவைகள் இருக்கக்கூடிய நிலைமையே ஏற்படக் கூடாது. குழந்தை மணத்தை அவர் வெறுத்தார். இந்தத் தீய பழக்கத்தை உயர் வகுப்பினர் என்று சொல்லப் படுவோரைப் பார்த்து துரதிருஷ்டவசமாக நாமசூத்திர வகுப்பினரும் பின்பற்றுகிருர்களென்று தோன்றுகிறது.

சீதனம் கொடுக்கும் பழக்கத்தையும் காந்திஜி எதிர்த்தார். சீதனம் என்பது பெண்களை விலைபேசி விற்பதைத் தவிர வேறென்றுமில்லை. நாமசூத்திரர்களுக்கிடையேகூடப் பிரிவினைகள் இருப்பது வருந்தத்தக்கது. தங்களுக்கிடையே உள்ள வகுப்புப் பிரிவினைகளையெல்லாம் அவர்கள் ஒழித்து விடவேண்டுமென்று காந்திஜி பலமாக வற்புறுத்தினுர். எல்லா வகுப்பு வித்தியாசங்களும் அழிக்கப்பட்டு விட வேண்டும். 'பங்கி' என்ற ஒரே வகுப்புதான் இருக்க வேண்டும். 'பங்கி'கள் என்று அழைக்கப்படுவதிலேயே ஹிந்து சமூகம் பெருமை கொள்ள வேண்டும் என்று தாம் அடிக்கடி தெரிவித்துள்ள அபிப்பிராயத்தை நாமசூத்திரர்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும் என்ருர் காந்திஜி.

குழந்தை மணங்கள் ஒழிக்கப்பட்டுவிட்டால், குழந்தை விதவைகள் இருப்பதற்கு இடமில்லை; அப்படியே இருந்தாலும் மிகவும் சொல்பமாகவே இருக்கும். ஒரு ஆணின் ஆயுளில் ஒரே மனைவி, அதேமாதிரி பெண்ணுக்கும் ஒரே கணவன் என்பதே பொது விதியாக இருக்க வேண்டு

மென்பது காந்திஜியின் விருப்பமாகும். உயர்ந்த வகுப்பினர் என்று சொல்லப்படுவோரிடையே கட்டாயமாக விதவைக் கோலத்தை அனுபவிப்பது பழக்கமாகிவிட்டது. இது வெட்கக்கேடானது என்று அவர் சொன்னார். ஆனால், சமூகம் இந்தப் பரிதாபமான நிலைமையில் இருக்கும்வரையில், எல்லா இளம் விதவைகளும் மறுமணம் செய்து கொள்ளுவதை அவர் ஆதரித்தார். ஆண்களுக்கும், பெண்களுக்கும் சம உரிமைகள் இருக்க வேண்டுமென்பதே அவருடைய நம்பிக்கை. ஆகையால், ஆண்களுக்குள்ள அதே உரிமைகள் பெண்களுக்கும் இருக்க வேண்டுமென்ற முறையில்தான் அவர் சிந்திக்க முடியும்.

[காந்திஜியின் பாத யாத்திரைக் குறிப்புகளிலிருந்து எடுக்கப்பட்டது]

—'ஹரிஜன்' – 16—3—1947

# 4

# ஓர் இளைஞரின் சங்கடம்

பட்டிதார் வகுப்பைச் சேர்ந்த இளைஞர் ஒருவர் பின்வருமாறு எழுதுகிறார் :

"நான் இந்த வருடமே மணந்து கொண்டுவிட வேண்டுமென்று என் பெற்றோர்கள் விரும்புகிறார்கள்; இந்த விஷயத்தில் அவர்களுடைய விருப்பத்திற்கு நான் கீழ்ப்படிய வேண்டுமென்று வற்புறுத்துகிறார்கள்...... தங்கள் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணை மாற்றாகக் கொடுத்தாலொழிய எங்கள் வகுப்பில் பிள்ளைகளுக்கு மணமகள் கிடைக்காது. குழந்தைகள் மணமே எங்கள் வகுப்பிலுள்ள விதி. எனக்குக் கூட ஒன்பது அல்லது பத்து வயதுள்ள பெண்கள் தான் கிடைக்கிறார்கள்; அதுவும், மாற்றுக்கு எங்கள் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணைக் கொடுப்பதா யிருந்தால்தான். இந்த வருடம் சந்தர்ப்பத்தை நழுவ விட்டுவிட்டால், பின்னர் இதுகூடச் சாத்தியமில்லாமற் போய்விடுமென்று என் தகப்பனார் கூறுகிறார். 'முடியாது' என்று சொன்னால், என் தாயார் அழுகிறாள்; குடும்பத்தில் இல்லாத பொல்லாத தகராறுகளைச் செய்கிறாள். நான் பட்டிதார் வகுப்பைச் சேர்ந்த இளைஞன். எனக்கு வயது 22 ஆகிறது. ஒரு விதவையையோ, எங்கள் ஜாதியைச் சேராத வேறொரு பெண்ணையோ நான் மணந்துகொள்ளுவதை என் பெற்றோர்கள் ஒப்புக்கொள்ளவே மாட்டார்கள். இந்த நிலைமையில் நான் என்ன செய்வது?"

இந்தப் பட்டிதார் இளைஞரைப் போல் இதே தருமசங்கடத்திலுள்ள பல இளைஞர்களை எனக்குத் தெரியும். நமது சாஸ்திரங்களின்படி, தன்னுடைய மகனுக்கு 16 வயதுக்கு மேலாகிவிட்டால், பெற்றோர்கள் அவனைத் தம் நண்பனைப் போல் கருத வேண்டும். அவனைச் சமமாகப் பாவித்து அந்தரங்கமாகப் பேச

வேண்டுமேயொழிய, குழந்தையாக நினைத்து நிர்ப்பந்தம் செய்யக்கூடாது. ஆனால், வயதான பிள்ளைகள்கூடத் தம்முடைய விருப்பங்களின்படி செய்யக் கடமைப் பட்டிருக்கிறார்களென்று இந்நாட்டிலுள்ள பெற்றோர்களில் சிலர் நினைக்கிறார்கள் போல் தோன்றுகிறது. திருமணம் போன்ற விஷயங்களில்கூட இப்படி நினைக்கிறார்கள். இந்த விஷயத்தில் பிள்ளைகளின் விருப்பம் என்று எதுவும் இருக்கமுடியாதென்று நினைக்கிறார்களா? பிள்ளைகளின் நிலைமையே இப்படியென்றால், பெண்களின் விஷயம் எப்படியிருக்குமென்று ஊகித்துக் கொள்ளலாம். இத்தகைய சந்தர்ப்பங்களில் பெற்றோர்களின் கோபத்திற்கு இளைஞர்களும், இளம் பெண்களும் பயப்படாமலிருக்க வேண்டியது அவர்களுடைய உரிமை மட்டுமின்றி,மதப்பூர்வமான கடமையுமாகும்என்று எனக்குத் தோன்றுகிறது. ஒரு வாலிபனோ, இளம் பெண்ணோ, நியாயமான ஒரு நிலையை எடுத்துக்கொண்டு அதை முழு உறுதியுடன் பின்பற்றினால், பெற்றோர்கள் ஒன்றும் தடங்கல் செய்வதில்லையென்பதே என்னுடைய அனுபவமாகும். தம்முடைய குழந்தைகளின் உறுதியை மாற்ற முடியாதென்பதை அவர்கள் உணர்ந்தவுடன், அதற்குத் தம் மனத்தைச் சரிப்படுத்திக் கொண்டு விடுகிறார்கள். ஏனெனில், எப்படியும் அவர்கள் தம் வழிக்கு வந்துவிடுவார்கள் என்ற ஒரு நம்பிக்கை எப்போதுமே பெற்றோர்களுக்கு இருந்து கொண்டிருக்கிறது. ஆனால், இந்த நம்பிக்கை பாழானவுடன், மேற்கொண்டு வற்புறுத்துவதில் அர்த்தமில்லை என்பதை உணர்ந்து கைவிட்டுவிடுகிறார்கள். ஆகையால், ஒரு குழந்தையை மணம் செய்து கொள்ளுவது, மாற்றுப் பெண் கொடுப்பதென்ற தீய பழக்கத்திற்கு உட்படுவது ஆகிய இரட்டைப் பாவத்திற்கு உடந்தையாயிருக்க முடியாதென்று மறுத்துவிட வேண்டுமென்பதே இந்த இளைஞருக்கு நான் கூறும் யோசனையாகும். இப்படி மறுப்பதால் எவ்வளவு குடும்பக் கஷ்டங்களைச் சமாளிக்க வேண்டியிருக்குமென்பதைப் பற்றி அவர் கவலைப்படக்கூடாது. அவசியமான கட்டுப்பாடுகளுக்குட்பட்டு, தன் வகுப்பைச் சேராத ஒரு பெண்ணையோ, ஒரு விதவையையோ மணந்துகொள்ளுவதை அவர் பெருமையாக நினைக்கவேண்டும்.

—'எங் இந்தியா' - 11—4—1929

## 5

# ஒரு மாணவரின் சங்கடம்

ஒரு மாணவர் கேட்கிறார் :

"பட்டப் படிப்பு இல்லாமல், மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேர்ச்சி பெற்றவரும், துரதிருஷ்டவசமாக இரண்டு, மூன்று குழந்தைகளுக்குத் தந்தை

யாக இருப்பவருமான ஒருவர், வாழ்க்கைக்கு வேண்டிய அளவு சம்பாதிப்ப தற்கு என்ன செய்ய வேண்டும்? தன் இஷ்டத்திற்கு விரோதமாகவும், இருபத் தைந்து வயதுகூட ஆவதற்கு முன்பும் மணந்து கொள்ளும்படி நிர்ப்பந்திக்கப் பட்டால் என்ன செய்ய வேண்டும்?''

தன்னுடைய மனைவியையும், குழந்தைகளையும் காப்பாற்றத் தெரியாதவரும், தன் இஷ்டத்திற்கு விரோதமாக மணந்து கொண்டவருமான ஒரு மாணவர் படித்ததெல்லாம் வீண் என் பதே உடனடியாக எனக்குத் தோன்றும் பதிலாகும். ஆனால், அவருக்கு அது சென்ற கால சரித்திரமாகும். வழி தெரியாமல் விழிக்கும் இந்த மாணவருக்கு உதவியளிக்கக்கூடிய விதத்தி லேயே பதில் சொல்ல வேண்டும். தன்னுடைய தேவை என்ன என்பதை அவர் சொல்லவில்லை. அவர் மெட்ரிகுலேஷன் தேர்ச்சி பெற்றவர் என்பதற்காகத் தன்னுடைய தேவையை உயர்த்திக் கொள்ளாமல், சாதாரணத் தொழிலாளியைப் போல் இருக்கச் சம்மதித்தால், பிழைப்புக்காகச் சம்பாதிப்பதில் அவருக்குக் கஷ்டமிருக்க முடியாது. தொழிலாளி தன்னுடைய புத்திக் கூர் மையை வளர்த்துக்கொள்ள சந்தர்ப்பம் கிடைத்ததில்லை. ஆனால், இவருக்குப் புத்திசாலித்தனம் இருப்பதால், தொழிலாளியை விடத் தன் வேலையை இன்னும் நன்றாகச் செய்வதற்கு அந்த புத்திசாலித்தனம் உதவியாயிருக்கும். இதனால் ஆங்கிலமே கற்றுக்கொள்ளாத தொழிலாளிக்குப் புத்திசாலித்தனம் இல்லை யென்று அர்த்தமில்லை. துரதிருஷ்டவசமாகத் தொழிலாளர்கள் தமது புத்திசாலித்தனத்தை அபிவிருத்தி செய்து கொள்ள உதவியளிக்கப்பட்டதே இல்லை. உலகத்தில் வேறெந்த பாகத் திலுமில்லாத அவ்வளவு பிரதிகூலங்களுக்குட்பட வேண்டியிருந் தாலும், பள்ளிகளில் படிக்கும் வாய்ப்புள்ளவர்களின் மனம் விரி வடைகிறது. புத்திபூர்வமான இந்த வளர்ச்சி இருந்த போதி லும், பள்ளிக்கூட நாட்களிலும், கல்லூரி நாட்களிலும் அவர் களுக்கு ஏற்படும் வறட்டுக் கௌரவம் இதைப் பயனற்றதாக்கி விடுகிறது. ஆகையால், மேஜையில் உட்கார்ந்து கொண்டு வேலை செய்தால்தான் சம்பாதிக்க முடியுமென்று மாணவர்கள் நினைக் கிறார்கள். ஆகையால், இந்தக் கடிதத்தை எழுதியவர் உழைப் பின் கௌரவத்தை உணர்ந்து, அதன் மூலமே தன்னையும், தன் குடும்பத்தையும் காப்பாற்ற முயற்சிக்க வேண்டும்.

அவருடைய மனைவியும் தன்னுடைய ஓய்வு நேரத்தில் ஏதா வது வேலை செய்து குடும்ப வருமானத்தைப் பெருக்கலாமே? அதே மாதிரி, குழந்தைகளும் ஏதாவது வேலை செய்ய முடியு மென்றால், அவர்களும் பலனளிக்கத்தக்க வேலையைச் செய்யப் பழக்க வேண்டும். புஸ்தகப் படிப்பின் மூலம்தான் புத்திசாலித் தனத்தை வளர்க்க முடியுமென்ற முற்றிலும் தவறான எண்ணத் தைக் கைவிட்டு, முறைப்படி கற்றுக்கொள்ளப்பட்ட கைவினை களின் மூலம்தான், சீக்கிரமாக மனவளர்ச்சி பெறமுடியுமென்ற உண்மையை உணர வேண்டும். ஒவ்வொரு கருவியும், கைவிரல் களின் ஒவ்வொரு திருப்பமும் எதற்காக என்று வேலை கற்றுக்

கொள்ளுபவர்களுக்குச் சொல்லித் தரப்படுகிறதல்லவா? அப்போதே புத்திசாலித்தனம் வளர ஆரம்பித்து விடுகிறது. மாணவர்கள் சாதாரணத் தொழிலாளர்களைப் போல் இருக்கத் தயாராயிருந்தால், மாணவர்களிடையே வேலையில்லாமை என்ற பிரச்னையைக் கஷ்டமில்லாமல் தீர்த்துவிட முடியும்.

இஷ்டத்திற்கு விரோதமான திருமணம் சம்பந்தப்பட்ட வரையில், நான் சொல்லக்கூடியது ஒன்றுதான். அதாவது, பலவந்தமாக அவர்கள் மீது சுமத்தப்படும் எந்தத் திருமண ஏற்பாட்டையும் எதிர்ப்பதற்கு அவர்கள் போதிய மன உறுதியை வளர்த்துக் கொள்ள வேண்டும். தமது இஷ்டத்திற்கு விரோதமான எதையும், தனித்து நின்று, நியாயமான எல்லா வழிகளிலும் எதிர்க்கும் கலையை மாணவர்கள் கற்றுக் கொள்ள வேண்டும்; மனத்திற்குப் பிடித்தமில்லாத திருமண விஷயத்தில் இது இன்னும் அதிக அவசியமானதாகும்.

—'ஹரிஜன்' – 9—1—1937

*[காந்திஜி மேற்கண்டவாறு எழுதிய பிறகு அதைப் படித்து விட்டு ஒருவர் நீண்ட கடிதம் எழுதினர். அவர் லட்சுமணபுரி சர்வகலாசாலையில் எம்.ஏ. படிப்பவர். இந்நிலையில் தம் குடும்பத்தை எப்படி காப்பாற்றுவது, தமது சகோதரிகளுக்கு எப்படி விவாகத்தை முடிப்பது, குழந்தைகள் பெறுவதைத் தடுக்க செயற்கை முறைகளை அனுசரிக்கலாமா என்றெல்லாம் தமது கடிதத்தில் அவர் கேட்டிருந்தார். இக்கடிதத்தையும் இதற்கு காந்திஜி அளித்த பதிலையும் படிக்க விரும்புவோர் அவற்றை "மகாத்மா காந்தி நூல்கள்"—நான்காம் தொகுப்பு 438-42–ஆம் பக்கங்களில் காண்க.]*

## 6

# ஓர் இளைஞரின் தரும சங்கடம்

**கேள்வி:** *நான் 22 வயதான இளைஞன். எனக்குத் திருமணம் செய்து கொள்ள இஷ்டமில்லையென்றால், இந்த விஷயத்தில் என் தகப்பனர் சொல்படி நான் நடக்க மறுப்பது நியாயமாயிருக்குமா?*

**பதில்:** 16 வயது ஆனவுடனேயே குழந்தைகள், பெற்றோர்களின் நண்பர்களாகி விடுகின்றனர் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன; பகுத்தறிவும் அதையே கூறுகிறது. அதாவது, 16 வயது ஆனவுடன் அவர்கள் பெற்றோர்களின் கட்டளைகளிலிருந்து விடுபட்டுவிடுகிறார்கள். சாத்தியமான போதெல்லாம் அவர்கள் பெற்றோர்களைக் கலந்து கொள்ளவும், அவர்

கள் இஷ்டத்திற்கிணங்கவும் கடமைப் பட்டிருக்கிறார்கள். உங்களுக்கு வயது வந்துவிட்டது. திருமணத்தைப் போன்ற அவ்வளவு முக்கியமான ஒரு விஷயத்தில், பெண் உங்களுக்குப் பிடிக்கவில்லை யென்றால், அல்லது நியாயமான வேறு ஏதாவது காரணமிருந்தால், மணம் செய்துகொள்ள முடியாதென்று நீங்கள் மரியாதையுடன் மறுத்து விட வேண்டும்.

—'ஹரிஜன்' 9—3—1940

# 7

# கட்டாயத் திருமணம்

**கேள்வி:** ஒரு சகோதரி எழுதுகிறார் :

"ஒன்று திருமணம் செய்துகொள்ள வேண்டும் அல்லது வீட்டைவிட்டு வெளியேற வேண்டும் என்று பெற்றோர்கள் வற்புறுத்தும்போது, அத்திருமணத்திற்கு இஷ்டமில்லாத ஒரு பெண் என்ன செய்வது? தானே சம்பாதித்துக் கொள்ளக்கூடிய அளவுக்குப் போதிய கல்வி அவளுக்கு இல்லையென்றால், எங்கே போவாள்? யாருடைய பாதுகாப்பை அவள் கோர முடியும்?''

**பதில்:** இந்தக் கேள்வியைப் படிக்கும் போது மனத்துக்குச் சங்கடமாயிருக்கிறது. பெற்றோர்கள், தமது பெண்களின் மீது பலவந்தமாகத் திருமணத்தைச் சுமத்துவது முற்றிலும் தவறாகும். தாமே சம்பாதிக்க முடியாத நிலையில் பெண்களைப் பெற்றோர் வைத்திருப்பதும் தவறுதான். திருமணம் செய்து கொள்ள மறுக்கிறாள் என்பதற்காகப் பெண்ணைத் தெருவில் துரத்திவிட எந்தப் பெற்றோருக்கும் உரிமையில்லை. இத்தகைய கொடிய மனப்பான்மையுடையவர்கள் தொகை அரிதாயிருக்குமென்றே நம்புவோமாக. கக்கூஸ்களைச் சுத்தம் செய்வதுள்பட, எந்த உழைப்புமே தன் கௌரவத்திற்குக் குறைவல்ல என்பதை உணர வேண்டுமென்பதே இந்தப் பெண்ணுக்கு நான் சொல்லக் கூடிய யோசனையாகும். பெண்கள், ஆண்களின் பாதுகாப்பை நாடலாகாது. அன்று திரௌபதி செய்வதைப்போல், தம்முடைய சுயபலத்தையும், சீலத்தையும், கடவுளையுமே அவர்கள் நம்பியிருக்க வேண்டும்.

—புது டில்லி – 6—9—1946 —'ஹரிஜன்' – 15—9—1946

[பதினாறு வயதுள்ள வைசியப் பெண்ணுக்கும், அதே ஊரில் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த 21 வயதுள்ள அவள் தாய் மாமனுக்கும் காதலும், கள்ள நட்பும் ஏற்பட்டு

கர்ப்பவதியாகி விட்டாள். உண்மை வெளியே வந்ததும் அவர்கள் இருவரும் தற்கொலை செய்து கொண்டுவிட்டார்கள். தாய் மாமனை மணக்கும் வழக்கம் இந்த வகுப்பில் இல்லாததால் ஏற்பட்ட இப்பரிதாப சம்பவத்தை ஒருவர் காந்திஜிக்கு எழுதி அவருடைய கருத்தை அறிய விரும்பினர். இதற்குப் பதிலளித்த காந்திஜி, ''திருமணத் தடைகள் உலகம் முழுவதிலும் ஒரே மாதிரியானவை அல்ல. இவை பெரும்பாலும் சமூகப் பழக்க வழக்கங்களையே பொறுத்திருக்கின்றன.......இதனல் கட்டுப்பாடுகளையும், சரியல்ல என்று கருதப்படுவனவற்றையும், நிலைத்து வந்துள்ள எல்லாச் சமூகப் பழக்க வழக்கங்களையும் இளைஞர்கள் மீறிவிடலாம் என்று அர்த்தமில்லை. அவர்கள் அப்படிச் செய்யத் தீர்மானிக்கும் முன்பு, பொதுஜன அபிப்பிராயத்தைத் தங்கள் பக்கம் திருப்ப முயல வேண்டும். அதற்கிடையே, சம்பந்தப்பட்டவர்கள், காலம் வரட்டும் என்று பொறுமையுடன் இருக்க வேண்டும்......" என்ருர். இதன் விவரத்தை ''மகாத்மா காந்தி நூல்கள்'' நான்காம் தொகுப்பு 442-4-ஆம் பக்கங்களில் காண்க]

# 8

# ஒரு இளம் தம்பதிகளின் சோகக் கதை

ஒரு இளைஞர் எழுதுகிருர் :

"எனக்கு 15 வயது ஆகிறது. என் மனைவியின் வயது 17. எனக்கு இப்போது பெரிய சங்கடமேற்பட்டிருக்கிறது. பொருத்த மில்லாத இந்தத் திருமணத்தை நான் விரும்பவில்லை. ஆனல், என்னுடைய தகப்பனரும், மாமனும் என் ஆட்சேபணையை ஏற்றுக்கொள்ளுவதற்குப் பதிலாகக் கடும் கோபம் கொண்டனர். என்னைத் திட்டவும், ஏசவும் ஆரம்பித்தனர். ஒரு பெரிய இடத்து சம்பந்தம் கிடைக்கிறதேயென்று பெண்ணின் தகப்பனருக்குப் பெருமை. ஆகையால், அவளை விட நான் வயதில் சிறுவனயிருந்தும்கூட தன் பெண்ணை எனக்கு மணம் செய்து கொடுத்துவிட்டார். என்ன முட்டாள் தனம்! இணங்கிப்போக முடியாத ஒரு மணத்தை என்மீது சுமத்தி, என்னைக் குழியில் தள்ளாமல், என் தகப்பனர் என்னைச் சும்மாவிட்டிருக்கக்கூடாதா? இதனுடைய அர்த்தம் அப்போது எனக்குத் தெரிந்திருந்தால், எனக்குத் திருமணம் செய்விப்பதற்கு நான் சம்மதித்திருக்கவே மாட்டேன். ஆனல், இப்போது அதெல்லாம் நடந்து முடிந்துபோன காரியம். இப்போது நான் என்ன செய்யலாமென்று சொல்லுங்கள்."

இந்த இளைஞர் தன் பெயர், விலாசம் முதலிய பூரா விவரங்களையும் கொடுத்திருக்கிறார். ஆனால், நான் பதிலெழுதினால் அவருக்குக் கிடைக்காமற் செய்து விடுவார்களென்று பயப்படுகிறார். ஆகையால், 'நவஜீவன்' பத்திரிகையின் மூலம் பதிலளிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டிருக்கிறார். இது வருந்தத்தக்க நிலைமையாகும். தைரியமிருந்தால் அந்தத் திருமணத்தை மறுத்துவிட வேண்டும் என்பதே அந்த இளைஞனுக்கு நான் கூறும் யோசனையாகும். அவர்களுடைய திருமணத்தின் போது சப்தபதி என்று ஒரு சடங்கு நடந்திருக்கும். அப்போது அவர்களுக்கு என்ன பிரதிக்ஞைகள் செய்து வைக்கப்பட்டன என்பது அந்த இளைஞனுக்கோ, பெண்ணுக்கோ தெரிந்திருக்க முடியாது. திருமணம் ஆனபிறகு, அவர்கள் சேர்ந்து வாழவே இல்லை. ஆகையால், திருமணம் என்று சொல்லப்படும் அந்தச் சடங்கை மறுப்பதன் மூலம், வீட்டை விட்டு வெளியேற்றப்படுவதற்குக் கூடத் தயாராக அந்த இளைஞன் தன்னைத்தானே தைரியப்படுத்திக்கொள்ள வேண்டும் என்னுடைய வார்த்தைகள் இந்த தம்பதிகளுடைய பெற்றோர்களின் காதுகளுக்கு எட்ட முடியுமென்றால், குற்றமற்ற தங்களுடைய குழந்தைகளிடம் இரக்கம் காட்ட வேண்டுமென்றும், கொடுமையான ஒரு சோகத்தை அவர்கள் மீது சுமத்தக் கூடாதென்றும் கேட்டுக்கொள்ளுவேன். 15 வயதுப் பையன் என்றால், உண்மையில் மிகச் சிறியவனே. அவன் பள்ளிக்கூடத்திற்கு அல்லது தொழிற் பட்டறைக்குத்தான் போய்க் கொண்டிருக்க வேண்டுமே யொழிய, ஒரு குடும்பஸ்தனின் கடமைகளை அவன் மீது ஏற்றக் கூடாது. பிரஸ்தாப தம்பதிகளின் பெற்றோர்கள், தம்முடைய கடமையை உணர ஆரம்பிப்பார்களென்று நம்புகிறேன். அவர்கள், தம் கடமையை உணரவில்லையென்றால், பெற்றோர்களுடைய அதிகாரத்தைப் பணிவுடன் மீறி, மனச்சாட்சியும், பகுத்தறிவும் காட்டும் வழியைப் பின்பற்ற வேண்டியது அந்தப் பையன், அப் பெண் ஆகிய இருவருடைய தெளிவான கடமையாகும்.

—'எங் இந்தியா' – 3—1—1929

9

# இது திருமணமா?

சமீபத்தில் நான் நோயுற்றிருந்த போது, ஆரம்பத்தில் சில தினங்களுக்கு என்னுடைய கடிதப்போக்குவரத்தையே கவனிக்க முடியாமலிருந்தேன். அப்போது எனக்கு வந்த ஒரு கடிதத்திலிருந்து சில பகுதிகளைக் கீழே தருகிறேன். கடிதம்

எழுதியவர் பூரா விவரங்களையும் கொடுத்திருக்கிறார். ஆயினும், அதில் உள்ள பெயர்களை நான் நீக்கி விட்டேன்:

"இந்த வருடம் கல்யாண மாதத்தில், கார்வாரிலுள்ள சதாசிவகாடில் இதயத்தைப் பிளப்பதாக இருக்கும் ஒரு திருமணச் சடங்கு நடைபெற்றது. மணப்பெண்ணுக்கு வயது 12 இருக்கும். அவள் கோவாவிலுள்ள மிகவும் ஏழ்மையான ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவள். மணமகனுக்கு வயது 60. அவருடைய முதல் மனைவி எட்டு ஒன்பது குழந்தைகள் பெற்றாள். அதில் இரண்டு குழந்தைகள் இப்போது உயிருடனிருக்கின்றன. சுமார் மூன்று வருடங்களுக்கு முன்பு, அந்த அம்மையார் இறந்துவிட்டார். மணமகன் ஒரு ஆங்கிலப் பள்ளியின் ஸ்தாபகர். சென்ற வருடம் ஒரு இளம் பெண்ணை மணந்துகொள்ள அவர் ஏற்பாடு செய்தார். ஆனால், அவர் வகுப்பைச் சேர்ந்தவர்களே கிளர்ச்சி செய்ததால் இந்த ஏற்பாடு கைவிடப்பட்டது. இந்தத் தடவை பெண்ணின் பெற்றோர்களுக்கு இருநூறு ரூபாய் கொடுத்து காரியத்தை முடித்துக்கொண்டுவிட்டார். இதற்கு என்ன செய்வது? அந்த இடத்தில் உள்ள ஸ்ரீ......... போன்ற சமூக சீர்திருத்தவாதிகள், மனிதத் தன்மைக்கு விரோதமான இந்தக் காரியத்துக்கு எதிராகத் தம் சிறு விரலைக் கூட அசைக்கவில்லை."

எனக்கு வந்த கடிதத்தைச் சுருக்கமாக மேலே கொடுத்திருக்கிறேன். இதில் காணப்படும் விவரத்தின் உண்மையைப் பற்றிச் சந்தேகிப்பதற்குக் காரணமிருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. இது எங்கோ நடந்துவிடும் மிகவும் அபூர்வமான ஒரு சம்பவம் என்று சொல்ல முடிந்தால் நன்றாயிருக்கும். இம்மாதிரி காரியங்கள் அடிக்கடி நடைபெறுவதால், தீவிரமான பரிகாரம் எதையாவது கண்டு பிடித்தாக வேண்டும். இத்தகைய திருமணத்தைப் பற்றிய விவரங்களையெல்லாம் பிரசுரித்து, அம்பலப் படுத்தி, பெண்ணினத்திற்கு விரோதமான இக்காரியங்கள் நடைபெற முடியாமல் நல்ல முறையில் பலமான பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்குவது ஒரு வழியாகும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், தார்மிக விரோதமான இது மாதிரி திருமணங்கள் நடக்க விருக்கும்போது, உள்ளூரில் கிளர்ச்சி செய்வதுதான் நல்ல பலனளிப்பதாயிருக்கும். சரியான சமயத்தில் கிளர்ச்சி ஏற்பட்டதால், எட்டு குழந்தைகளைப் பெற்ற இந்த வயோதிகரின் முதல் முயற்சி முறியடிக்கப்பட்டதென்று கடிதம் எழுதியிருப்பவர் கூறுகிறார். பிரஸ்தாப திருமணத்தின்போதும் அத்தகைய கிளர்ச்சி ஏன் நடக்கவில்லையென்று எனக்குப் புரியவில்லை. இந்த வயோதிகர் ஒரு இளம் பெண்ணை மணக்க ஏற்பாடு செய்திருக்கிறார் என்ற விஷயம் அந்த ஊரிலுள்ள பலருக்குத் தெரியாமலா இருந்திருக்கும்? சித்திரவதையும், துக்கமும் நிறைந்த ஒரு வாழ்விலிருந்து அந்தப் பெண்ணைக் காப்பாற்றுவதற்கு, ஏன் உடனடியாக கிளர்ச்சி ஆரம்பிக்கப்படவில்லையென்று ஆச்சரியமாயிருக்கிறது. உள்ளூரில் உள்ளவர்களின் ஆதரவைத் திரட்ட முடியுமென்றால், அந்தக் குழந்தை மனைவியைக் காப்பாற்றுவதற்கு இப்போதுக்கூடக் காலம் கடந்து

விடவில்லை என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். அந்தக் கடிதத்தைப் பார்க்கும்போது, இந்தக் கிழவர் ஒரு காலத்தில் தரும சிந்தனையுள்ள ஒரு பரோபகாரியாக இருந்தவர் என்று தெரிகிறது. அவரிடம் சொல்லிப் பார்க்க முடியாதா? 'பெண்ணைக் கல்விப் பயிற்சிக்காக ஸேவா ஸதனத்திற்கோ அல்லது வேறு ஏதாவது ஒரு கல்வி ஸ்தாபனத்திற்கோ அனுப்பி விடுங்கள், பின்னர், அவளுக்குப் பருவ வயது வந்தவுடன் உங்களுடன் சேர்ந்து வாழுவதா அல்லது திருமண பந்தம் ரத்தானதாகக் கருதுவதா என்று முடிவு செய்யும் உரிமையையும் அவளிடமே விட்டு விடுங்கள்' என்று அவரிடம் சொல்லிப் பார்க்கலாமே. ஆனால், சமூகம் இன்றுள்ள உறக்க நிலைமையில், அம்மாதிரி நடவடிக்கை சாத்தியமாயிருந்தாலும், இல்லாவிட்டாலும் நல்ல ஒழுக்கமுடைய இளைஞர் நியாயமானதும், நேர்மையானதுமான வழிகளில் குழந்தை மணங்களைத் தடுக்கவும், முடிந்த இடங்களில் குழந்தை விதவைகளின் மறுமணத்திற்கு ஊக்கமளிக்கவும் தம்மை ஒரு சங்கமாக அமைத்துக் கொள்ளுவதில் என்ன தடை இருக்கிறது? இவ்விரண்டும் ஒன்றோடொன்று இணைந்தவை என்று எனக்குத் தோன்றுகிறது. இந்தத் தொண்டுக் குழுவினர் தம்முடைய சொந்த ஊர்களிலேயே செயல்பட்டால்தான், அவர்களுடைய வேலை பலனளிக்கும். சில வருடங்களுக்குள்ளாகவே அவர்கள் எதிர்த்து நிற்க முடியாத ஒரு சக்தியாக வளர்ச்சி பெற்று விடுவார்கள். நம்முடைய பெரும்பாலான பட்டணங்களில் சிறு ஜனத் தொகைதான் இருக்கிறது. கடிதம் எழுதியிருப்பவர் குறிப்பிட்டிருப்பது போன்ற தார்மிக விரோதமான பேரங்கள் நடைபெறுவதையோ, தம் ஊர்களிலுள்ள குழந்தை விதவைகளையோ கண்டு பிடிப்பது அவர்களுக்கு அசாத்தியமல்ல. ஆயினும், இந்தத் தொண்டுக் குழுவினர் மிகவும் சாதுரியத்துடனும், அபாரமான தன்னடக்கத்துடனும் நடந்து கொள்ள வேண்டியிருக்குமென்பதில் சந்தேகமில்லை. அவர்கள் கொஞ்சமாவது பொறுமையை இழந்துவிட்டால், அல்லது பலாத்காரத்தில் இறங்கினால் அவர்கள்மீது வெறுப்புத் தோன்றி, அவர்களுடைய நோக்கமே தோல்வியடைந்து விடும்.

—'எங் இந்தியா' - 1—9—1927

## 10

# இரட்டைப் பாவம்

கொஞ்ச காலத்திற்கு முன்பு நான் எழுதியிருந்த "இது திருமணமா?" என்ற கட்டுரையைப்பற்றி "ஒரு பிரம்மசாரி" என்ற புனை பெயருடன் ஒருவர் நீண்ட கடித மெழுதியிருக்கிறார்.

எனக்குத் தெரிவதற்காக அவர் தன் பெயரையும் கொடுத்திருக்கிருர், அக்கடிதத்தின் சுருக்கத்தைக் கீழே தருகிறேன் :

"'இது திருமணமா?' என்ற தலைப்பில் உங்களுடைய பத்திரிகையின் 1வ வெளியீட்டில் நீங்கள் எழுதியிருந்த கட்டுரையை அக்கறையுடன் படித்தேன். இதில் சம்பந்தப்பட்டவர்களின் பெயர்களை நான் கொடுக்கவில்லை. ஆயினும், கார்வாரைச் சேர்ந்த கௌட சரஸ்வதி பிராம்மண வகுப்பைச் சேர்ந்தவர்களுக்கு, இது ஒரு பகிரங்க ரகசியமாகும். இந்தத் திருமணம் நடந்த வகுப்பைச் சேர்ந்த ஒருவன் என்ற முறையில், பொதுஜனங்களின் முன்பும், குறிப்பாக இந்தியா பூராவிலும் உள்ள கௌட சரஸ்வதி பிராம்மணர்களின் முன்பும் பின்கண்டவற்றைச் சமர்ப்பிக்க விரும்புகிறேன். அவற்றைப்பற்றி அவர்கள் கவனமாகப் பரிசீலனை செய்யவேண்டுமென்றும் விரும்புகிறேன்.

ஒரு ஆண், ஒரு பெண்ணை விலைக்கு வாங்குவதென்பது அவமானமானது என்பதில் சந்தேகமில்லை. ஆனல், நம்மிடையே அதைப்போலவே மற்ருெரு கெட்ட வழக்கமும் இருக்கிறது. அதாவது, ஒரு தகப்பனுர் தன்னுடைய மகளுக்குக் கணவனை விலைக்கு வாங்க வேண்டியிருக்கிறது. கணவன் பெறும் அந்தப் பணம் வரதட்சிணை என்று சொல்லப்படுகிறது. இந்த வரதட்சிணை பெண்ணின் பெற்ருேர்களுடைய சக்திக்குத் தகுந்தவாறு இருப்பதில்லை. கணவனுய் வரப்போகிறவனின் பரம்பரை வருமானத்தைப் பொறுத்தே அது இருக்கும்; அல்லது சில சமயங்களில் அவனுடைய கல்வியைப் பொறுத்திருக்கும். ஒருவன் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகப் படித்து, பட்டங்கள் பெறுகிருனே, அவ்வளவுக்கவ்வளவு கல்யாண மார்க்கெட்டில் அவனுடைய விலையும் உயருகிறது.

சில மாதங்களுக்கு முன்பு பம்பாயில் ஒரு திருமணம் நடந்தது. மணமகன் உயர்ந்த படிப்புப் படித்தவர். அரசாங்கத்தில் பெரிய உத்தியோகமும் வகிக்கிருர். அவருக்குச் சுமார் இருபதாயிரம் ரூபாய் வரதட்சிணை கொடுக்கப்பட்டதாம். உயர்ந்த கல்வி பெற்றவர்கள் எந்தக் கெடுதல்களைத் தவிர்க்கவேண்டுமென்று எதிர்பார்க்கிருேமோ, அந்தத் தவறுகளை அவர்களே செய்து மேலும் மேலும் கீழே போய்க்கொண்டிருப்பது உண்மையிலேயே பரிதாபமானதாகும்."

இதே வகுப்பைச் சேர்ந்த மற்ருெருவரும் எனக்கு எழுதியிருக்கிருர். மனைவிகளை விலைக்கு வாங்க விரும்புகிறவர்கள், பெண்களைத் தேடி கோவாவுக்குப் போகிருர்களாம். ஏனெனில் தகப்பனுர்களாகவோ, பாட்டனுர்களாகவோ இருக்கக்கூடிய அளவுக்கு அவ்வளவு வயதானவர்களுக்கு, தம் பெண்களை விற்றுப் பணம் பண்ணுவதற்கு வெட்கப்படாத ஏழை கௌட சரஸ்வதி பிராம்மணர்கள் அங்கேதான் இருக்கிருர்களாம். இவ்வாருக இந்த வகுப்பினர் இரட்டைப் பாவத்தைச் செய்கிருர்கள். யார் அதிகப் பணம் கொடுக்கத் தயாராயிருக்கிருர்களோ, அவர்கள் படித்த பையனைப் பெறலாம். ஏழைப் பெற்ருேர்கள், பருவ வயதுகூட எய்தாத தமது பெண்களை, அதிக விலை கொடுக்கத் தயாராயிருக்கும் கிழவனுருக்குக்கூட (சில சமயங்களில் படித்த

வர்களாகவு மிருப்பார்கள்) பேரம் செய்யத் தயாராயிருக்கிறுர் கள். சரஸ்வதி பிராம்மண வகுப்பினர் ஏதாவது காரணத்திற்காக இந்தச் சீர்திருத்தத்தை ஒத்திப்போட விரும்பினுல், இதே தீமையுள்ள மற்ற வகுப்பினர்களும் இருக்கிறுர்கள் என்ற ஒரு ஆறுதல்தான் அவர்களுக்குக் கிடைக்கும். இதில் ஏதாவது வித்தியாசமிருந்தால் அது அளவைப் பொறுத்ததாகவே இருக் கும். ஆனுல், சரஸ்வதி பிராம்மண வகுப்பினர் இந்தச் சீர்திருத் தத்திற்கு வழி காட்ட முன்வந்தால், மற்றவர்களிடமும் தான் இந்தத் தீமை இருக்கிறதே என்ற சாக்குப் போக்கில் தஞ்சம் புகமாட்டார்கள். இந்தத் தீமை இப்போது அம்பலப்படுத்தப் பட்டுவிட்டதால், இந்த இரட்டைப் பாவத்திலிருந்து தம்மை விடுவித்துக்கொள்ளும் முயற்சியில் அவர்கள் இறங்கவேண்டும்.

—'எங் இந்தியா' - 6—10—1927

## 11

# புறையோடும் புண்

சிறு குழந்தைகளான பெண்களுக்கும், வயோதிகர்களுக்கு மிடையே திருமணங்கள் நடப்பதுபற்றி, ஷோலாப்பூரிலிருந்து மகேச்வரி வகுப்பைச் சேர்ந்த ஒரு இளைஞர் பின்வருமாறு எழுது கிறுர்:

"எங்களுடைய மகேச்வரி வகுப்பில் குடும்ப வாழ்க்கைக்குக் கெட்ட காலம் ஏற்பட்டிருக்கிறது என்றே சொல்லவேண்டும். எங்களுடைய வகுப் பைச் சேர்ந்த நூற்றுக்கணக்கான தொண்டு கிழவர்கள், தங்களுடைய காம இச்சையைத் திருப்தி செய்துகொள்ளுவதற்காக, ஒவ்வொரு வருடமும் ஏராள மாகப் பணம் செலவழித்து குழந்தைப் பெண்களைத் தேடிக்கொள்ளுகிறுர்கள். இதன் பலனுக எங்கள் வகுப்பு, ஊழலும், ஒழுக்கமின்மையும் நிறைந்த சாக் கடையாகிக்கொண்டு வருகிறது. குழந்தை மணமும், பொருத்தமில்லாத திருமணங்களும் சர்வ சாதாரணமாகிவிட்டன. குடும்ப வாழ்க்கை இவ்வளவு மோசமாகிவிட்ட இத்தகைய ஒரு வகுப்பினரிடையே, நாட்டின் நல்ல பெயருக் குத் தகுதியுடையவர்கள் தோன்றுவார்கள் என்று எதிர்பார்ப்பது வீண் வேலையே. உரிய காலத்தில் ஏதாவது செய்யப்பட்டாலொழிய, எதிர்காலம் உண்மையாகவே இருள் நிறைந்ததாகவே இருக்கும்.

"இந்த ஊரைச் சேர்ந்த பத்து, பன்னிரெண்டு இளைஞர்கள் சேர்ந்து குழந்தை மணங்களையும், பொருத்தமில்லாத திருமணங்களையும் தடுக்கும் நோக்கத்துடன் ஒரு சங்கம் அமைத்துக்கொண்டு ஒரு கிளர்ச்சியை ஆரம்பிக்க ஏற்பாடு செய்திருக்கிறுர்கள். விரும்பத்தகாத இத்தகைய திருமணங்கள் நடக்கும் இடங்களிலெல்லாம் நாங்கள் சத்தியாக்கிரகம் செய்ய உத்தேசித் திருக்கிறோம், இத்தகைய நடவடிக்கை பலனளிக்கத் தவருது என்றே நம்புகி ரோம். மகேச்வரி திருமணங்களில் உள்ள பற்பலவிதமான சடங்குகளை யெல்

லாம் நீங்கள் அறிந்திருப்பீர்கள். இந்த விஷயத்தில் அமைதியான சத்தியாக்கிரகத்தைச் சிறந்த முறையில் எப்படி நடத்தலாமென்று தயவுசெய்து நீங்கள் யோசனை கூறுவீர்களா ?

மணமகன், மணமகள் இருவரும் திருமணம் செய்துகொள்ளுவதற்கு எது சரியான வயது என்று நீங்கள் நினைக்கிறீர்கள் ? பொருத்தமில்லாத திருமணங்களைத் தடுப்பதற்கு எந்த நிலைமையில் சத்தியாக்கிரகம் செய்யலாமென்று நீங்கள் சிபார்சு செய்கிறீர்கள் ?

"சமீபத்தில், ஐம்பத்தைந்து, அறுபது வயதாகிவிட்ட இரு கிழவர்கள், பன்னிரண்டு வயதான பெண்களை மணந்துகொண்டார்கள். இதே கிராமத்தில் இன்னும் சில நாட்களில் இதேமாதிரி திடுக்கிடத்தக்க பல திருமணங்கள் நடைபெற விருக்கின்றன. இம்மாதிரி திருமணங்கள் நடைபெறாமல் தடுப்பதற்காக ஏற்கனவே நாங்கள் அச்சடித்த பிரசுரங்களை வினியோகித்து ஒரு கிளர்ச்சியை ஆரம்பித்துவிட்டோம். வெறும் பிரசாரம் மட்டும் போதாதென்றும், கடுமையான நேரடி நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டுமென்றும் நாங்கள் நினைக்கிறோம். இந்த விஷயங்களைப்பற்றி, தயவுசெய்து உங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிவிப்பீர்களா ?"

இம்மாதிரி விஷயங்களுக்கு, சத்தியாக்கிரகம் சரியானது தான் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், எப்படி சத்தியாக்கிரகம் செய்வதென்பது வேறு விஷயம். சத்தியாக்கிரகத்தின் கட்டுப்பாடுகளைப் பற்றிப் பல தடவைகளில் நான் எழுதியிருக்கிறேன். ஒருவர் சத்தியாக்கிரகம் செய்கிறாரென்றால் அவர் கட்டுப்பாடுள்ளவர், அடக்கம் உள்ளவர், தூய்மையானவர், சமூகத்தில் ஒரு அந்தஸ்து உள்ளவர் என்று அர்த்தம். தீமை வேறு, தீமை செய்பவன் வேறு என்ற வித்தியாசத்தை சத்தியாக்கிரகி மறக்கவே கூடாது. தீமை செய்பவரிடம் அவருக்குக் கெட்ட எண்ணமோ, வெறுப்போ இருக்கக்கூடாது. ஒருவர் எவ்வளவு பெரிய தீமை செய்பவராயிருந்தாலும்கூட, அனாவசியமாக அவர் மனத்தைப் புண்படுத்தும் பாஷையில்கூடப் பேசக்கூடாது. ஏனெனில், அன்பினால் மாற்ற முடியாதபடி அவ்வளவு சீரழிந்து போனவன் உலகத்தில் யாருமில்லை என்பது சத்தியாக்கிரகியின் அடிப்படை நம்பிக்கையாக இருக்கவேண்டும். தீமையை நன்மையின் மூலமும், கோபத்தை அன்பின் மூலமும், பொய்யை உண்மையின் மூலமும், ஹிம்சையை அகிம்சையின் மூலமும் சமாளிக்கவே ஒரு சத்தியாக்கிரகி எப்போதும் முயற்சிப்பான். உலகத்திலிருந்து தீமையை ஒழிக்க வேறு எந்த வழியும் கிடையாது. கோபம், கெட்ட எண்ணப் போன்ற மனிதனுக்கு இயல்பான பலவீனங்கள் தன்னிடம் அறவே இல்லாமலிருக்கின்றனவா; எந்தத் தீமைகளுக்கு எதிராக நாம் இயக்கம் நடத்த உத்தேசிக்கிறோமோ அதே தீமைகளை நாமும் செய்யக்கூடுமா என்பதை, தன்னைச் சத்தியாக்கிரகி என்று சொல்லிக்கொள்ளும் ஒருவர் எப்போதுமே தாழ்மையுடன் தன்னைத் தானே கேட்டுப் பார்த்துக் கொள்ளுவார். ஆன்ம சுத்தியிலும், தவத்திலும் சத்தியாக்கிரகியின் வெற்றி பாதி அடங்கியிருக்கிறது. பிரசங்

கங்கள் அல்லது படாடோபமான காரியங்களின் மூலம் கிடைப் பதைவிட, மௌனமானதும், வெளிப் பகட்டில்லாததுமான சத்தியம், அன்பு மூலம் இன்னும் நிலையான பலன்கள் கிடைக்கும் என்ற நம்பிக்கை சத்தியாக்கிரகிக்கு உண்டு.

ஆனால், சத்தியாக்கிரகம் மௌனமாகச் செயல்பட முடியு மென்றாலும், சத்தியாக்கிரகியும் ஒரு அளவுக்குச் செயலில் இறங்க வேண்டும். ஒரு சத்தியாக்கிரகி எந்தத் தீமையை ஒழிக்க முயற்சிக்கிறாரோ, அதற்கு எதிராக விரிவானதும், தீவிர மானதுமான ஒரு கிளர்ச்சியை நடத்தி முதலில் பொதுஜன அபிப்பிராயத்தைத் திரட்ட வேண்டும். ஒரு சமூகத் தீமையைப் பற்றிப் பொதுஜன அபிப்பிராயம் போதுமான அளவுக்கு உருவான பிறகு, சமூகத்தில் உள்ள மிக உயர்ந்தவர்கள் கூட அந்தத் தீமையை அனுஷ்டிக்கவோ அல்லது பகிரங்கமாக அதற்கு ஆதரவு கொடுக்கவோ துணியமாட்டார்கள். விழிப் படைந்ததும், விஷய அறிவுள்ளதுமான பொதுஜன அபிப்பிரா யமே, சத்தியாக்கிரகியின் மிகவும் சக்தி வாய்ந்த ஆயுதமாகும். ஏகமனதான பொதுஜன அபிப்பிராயத்தை அடியோடு அலட் சியம் செய்து ஒருவர் ஒரு சமூகத் தீமையை ஆதரித்தால், அவரை சமூகம் பகிஷ்காரம் செய்வதற்கு அது நியாயமான காரண மாகும். ஆனால், சமூக பகிஷ்காரம் என்பது பகிஷ்கரிக்கப்படுபவ ருக்குக் கேடு விளைவிப்பதாயிருக்கக்கூடாது. குற்றமிழைப்பவரு டன் சமூகம் பரிபூர்ணமான ஒத்துழையாமை செய்யவேண்டும் என்பதே இதன் பொருளாகும். இதற்கு அதிகமாகவோ, குறை வாகவோ அதற்கு வேறு எந்த அர்த்தமும் கிடையாது. வேண்டு மென்றே சமூகத்திற்கு விரோதமாக நடக்க ஒருவர் முன் வந்தால், சமூகத்தினிடமிருந்து எந்த சேவையையும் எதிர் பார்க்க அவருக்கு உரிமை இல்லை என்பதே இதன் கருத்தாகும். அநேகமாக இதுவே போதுமானதாயிருக்கும். விசேஷ சந்தர்ப் பங்களில், விசேஷ நடவடிக்கைகள் அவசியமாயிருக்கலாம். ஒவ் வொரு விசேஷ சந்தர்ப்பத்திற்கும் தகுந்தவாறு நடவடிக்கையை மாற்ற வேண்டியிருக்கலாம்.

ஆனால், தன்னுடைய வயோதிகத்திலும் தனது காமவெறியை விட முடியாத காமாதுரனை என்ன செய்வது? காமத்திற்குக் கண்ணில்லை. அதற்குத் தராதரம் கிடையாது. என்ன ஆனாலும் எப்படியாவது அதைத் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்றே அது உந்தித் தள்ளுகிறது. இத்தகைய ஒருவரைச் சமூகம் எப்படி நடத்தவேண்டும்? துரதிருஷ்டம் பிடித்த பெண்கள் இவர்களுக் குக் கிடைக்க முடியாமற் செய்வதே சமூகத்தின் கடமை என் பதுதான் இதற்குப் பதில். இருபது வயதுக்குக் குறைந்த பெண் களுக்குத் திருமணம் செய்வதில்லை, அவளுடைய விருப்பத்திற்கு விரோதமாக மணம் செய்து கொடுப்பதில்லை என்ற விதியைக் கண்டிப்பாகப் பின்பற்ற வேண்டும். ஒரு வயோதிகனை எந்தப் பெண்ணும் தன்னிச்சையாக மணந்துகொள்ள விரும்பவில்லை

யென்றால், அந்தக் கிழவன் என்ன செய்வது என்ற கேள்வி எழுவது இயற்கையே. இந்தக் கேள்விக்கு சமூகம் பதிலளிக்க முடியாது; பெண்களைத் தேடிக் கொடுப்பது சமூகத்தின் கடமையல்ல. துரதிர்ஷ்டம் பிடித்த பெண்களை, கண் மூடித் தனமான காமவெறிக்கு இரையாகாமல், காப்பாற்றுவதுதான் சமூகத்தின் பொறுப்பு. காம வெறியைத் திருப்தி செய்து கொள்ளுவதற்கான வழி செய்து கொடுப்பது சமூகத்தின் கடமைகளில் ஒன்றல்ல. ஆனால், சமூகச் சூழ்நிலையில் தூய்மை நிலவினால், வெறியர்களின் வெறியைத் தணிப்பதற்கு அது பெரிதும் உதவியாயிருக்கும் என்பதை அனுபவத்தில் காணலாம்.

—'எங் இந்தியா'-8—8—1929

# 12

# இளைஞர்களுக்கு அவமானம்

ஸிந்துவிலுள்ள ஹைதராபாதில் சமீப காலமாக, பயப் படத்தக்க அளவுக்கு மணமகன்களுக்கு கிராக்கி அதிகமாயிருக் கிறதாம். தந்தி இலாகா இஞ்சினீயரிங் பிரிவைச் சேர்ந்த ஒரு சிப்பந்தி, நிச்சயதார்த்தத்தின் போது மணமகள் வீட்டாரிட மிருந்து ரொக்கமாக இருபதினாயிரம் ரூபாய் வரதட்சிணை வாங்கி யிருக்கிறார். அத்துடன், திருமண தினத்தன்றும், பிறகு, முக்கிய மான பண்டிகைகளின் போதும் மேற்கொண்டு நிறைய ரொக்கம் கொடுப்பதாகவும் அவருக்கு வாக்களிக்கப்பட்டிருக்கிறதாம். ஒருவர் எனக்கு அனுப்பியுள்ள ஒரு பத்திரிகையில் இந்த விவரங்கள் காணப்படுகின்றன. வரதட்சிணை கொடுத்தால்தான் திருமணம் செய்துகொள்ள முடியும் என்று நிபந்தனை விதிக்கும் எந்த இளைஞனும், தான் படித்த படிப்புக்கும், தன்னுடைய தேசத் திற்கும் அவமதிப்பைத் தேடிக்கொடுத்தவனாகிறான்; பெண்ணி னத்தையும் அவமானப்படுத்தியவனாகிறான். நாட்டில் பல இளைஞர் இயக்கங்கள் இருக்கின்றன. இந்த இயக்கங்கள் இம் மாதிரியான விஷயங்களைக் கவனிப்பது நல்லதென்று நினைக் கிறேன். இம்மாதிரி சங்கங்கள், உருவான சீர்திருத்தங்கள் செய்வதற்கான பிரதிநிதி ஸ்தாபனங்களாயிருக்க வேண்டும். பல சமயங்களில் இவை தம்மைத்தாமே புகழ்ந்து கொள்ளும் சங்கங் களாகிவிடுகின்றன. சில சமயங்களில் பொது இயக்கங்களுக்கு உதவி செய்து இச்சங்கங்கள் நல்ல வேலை செய்கின்றன. பொதுமக்கள் அளிக்கும் பாராட்டுதலே நாட்டின் இளைஞர்கள் பெறும் வெகுமதி என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். இவர்களுடைய வேலையைத் தொடர்ந்து சமூகத்தி லேயே சீர்திருத்தங்கள் ஏற்பட வேண்டும். இல்லாவிடில், அவர்

களிடையே நியாயமில்லாத ஒரு ஆன்ம திருப்தி ஏற்பட்டு, அவர்களுடைய உறுதியும் சீர்குலைந்துவிடும். மானக்கேடான வரதட்சிணைப் பழக்கத்தைக் கண்டித்து பலமான பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்க வேண்டும். இந்த மானக்கேடான பணத்தைப் பெற்றுத் தம்மை அசுத்தம் செய்து கொள்ளும் இளைஞர்களை, சமூகம் பகிஷ்காரம் செய்துவிட வேண்டும். பெண்களின் பெற்றோர்களும், ஆங்கிலப்பட்டப் படிப்புகளைக் கண்டு பிரமிப்படைவதை நிறுத்த வேண்டும். தம்முடைய பெண்களுக்கு ஏற்ற உண்மையான குணசீலர்களான இளைஞர்களைக் கணவர்களாகப் பெறுவதற்கு தம்முடைய சிறு சாதிகளையும், ஊர்களையும் தாண்டி வெளியே சென்று தேடுவதற்கும் அவர்கள் தயங்கக்கூடாது.

—'எங் இந்தியா' – 21—6—1928

# 13

# விலை கொடுத்து வாங்கித் திருமணம்

இந்தியா பூராவிலும் பல வகுப்பினரிடையே நிலவி வரும் வரதட்சிணைப் பழக்கத்தைப் பற்றி விவாதம் நடத்தும்படி, சில மாதங்களுக்கு முன்பு 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகை தனது வாசகர்களை அழைத்திருந்தது. இதைப்பற்றி அந்தப் பத்திரிகையில் தலையங்கமும் எழுதப்பட்டிருந்தது. இந்தக் கொடிய பழக்கத்தைப்பற்றி 'எங் இந்தியா' பத்திரிகையில் நான் அடிக்கடி எழுதுவதுண்டு. 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகையில் வந்துள்ள கடிதங்கள் வேதனையளிக்கும் பழைய நினைவுகளை எனக்கு ஞாபகமூட்டுகின்றன. ஸிந்துவில் இருந்த பழக்கத்தைப்பற்றி அப்போது நான் எழுதியிருந்தேன். படித்த ஸிந்திகளில் பலர், தமது பெண்களை நல்ல இடத்தில் கல்யாணம் செய்து கொடுக்க வேண்டும் என்ற ஆவல் கொண்ட பல பெற்றோர்களிடமிருந்து ஏராளமான தொகைகளைப் பறித்திருக்கிறார்கள். பொதுவாக இந்தப் பழக்கத்தை எதிர்த்து, 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகை தீவிரமாகப் பிரசாரம் செய்திருக்கிறது. இது உள்ளக்கனிவே இல்லாத ஒரு பழக்கம் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், எனக்குத் தெரிந்த வரையில் இது பாமர மக்களைப் பாதிக்கவில்லை. இந்திய சமுதாயம் என்ற பெருங்கடலில் ஒரு துளியாயுள்ள மத்தியதர வகுப்பினரிடையே மட்டும்தான் இந்தப் பழக்கம் இருந்து வருகிறது. தீய பழக்கங்களைப்பற்றி நாம் பேசும் போதெல்லாம், சாதாரணமாக மத்தியதர வகுப்பினரைப் பற்றித்தான் நாம் நினைக்கிறோம். கிராமங்களில் வசிக்கும் லட்சக்கணக்கான மக்களிடையே எவ்வளவோ பழக்க வழக்கங்களும், தீமைகளும் இருக்

கின்றன. ஆனால், அவற்றைப்பற்றி இன்னும் நமக்குக் கொஞ்சம் கூடத்தெரியாது.

நாட்டில் உள்ள மக்களில் ஒரு சிறு பகுதியினரிடையேதான் வரதட்சிணைக் கொடுமை இருக்கிறது என்பதற்காக, அதை நாம் புறக்கணித்துவிட முடியும் என்று அர்த்தமில்லை. இந்தப் பழக்கம் ஒழிந்தாக வேண்டும். திருமணம் என்பது பணத்திற்காகப் பெற்றோர்கள் செய்யும் ஒரு பேரமாக இருப்பது நிற்க வேண்டும். இந்த முறை, சாதியுடன் நெருங்கிய தொடர்புடையதாகும். ஒரு குறிப்பிட்ட சாதியைச் சேர்ந்த சில நூறு பேர்களிடையேயிருந்து தான் பிள்ளையை அல்லது பெண்ணைத் தேட வேண்டும் என்ற கட்டுப்பாடு இருக்கும் வரையில், அதற்கு விரோதமாக யார் என்ன சொன்ன போதிலும், அது தொடர்ந்து நீடித்துக்கொண்டுதான் இருக்கும். பிள்ளைகளோ, பெண்களோ, அல்லது பெற்றோர்களோ சாதித் தளைகளை அறுத்தாக வேண்டும்; அப்போதுதான் இந்தக் கொடுமையை ஒழிக்க முடியும். திருமணத்திற்கான வயதையும் உயர்த்த வேண்டும். பொருத்தமான கணவன் கிடைக்காவிட்டால், பெண்கள் மணமாகாத கன்னிகளாகவே இருப்பதற்கும் துணிய வேண்டும். நாட்டிலுள்ள இளம் வயதினரின் மனப்பான்மையிலேயே ஒரு புரட்சியை ஏற்படுத்தக் கூடிய விதத்தில் கல்வி அளித்தால்தான் இது சாத்தியமாகும். துரதிருஷ்டவசமாக, நமது சூழ்நிலைக்கும், கல்வி முறைக்கும் சம்பந்தமே இல்லாமலிருக்கிறது. ஆகையால், நாட்டிலுள்ள பிள்ளைகள், பெண்களில் ஒரு மிகச் சிறு பகுதியினர் பெறும் கல்வி, இந்த நிலைமையைக் கொஞ்சமும் பாதிக்கவில்லை. எனவே, இந்தக் கொடுமையைக் குறைப்பதற்கு என்னென்ன செய்ய முடியுமோ, அதையெல்லாம் செய்ய வேண்டியது தான் என்றாலும், நாட்டில் துரிதமாக ஏற்பட்டு வரும் மாறுதல்களுக்கேற்ற முறையில் கல்வி முறையும் மாறினால்தான், இந்தக் கொடுமையையும், மற்றும் பல கொடுமைகளையும் சமாளிக்க முடியுமென்று நான் உறுதியாக நம்புகிறேன். பல பிள்ளைகளும், பெண்களும், கல்லூரிப் படிப்புக்கூட முடித்திருக்கிறார்கள். அவர்கள் கூட, தம்முடைய எதிர்கால வாழ்க்கையுடன் மிக நெருங்கிய சம்பந்தம் உடைய திருமணம்போன்ற விஷயத்தில், இந்தக் கொடிய பழக்கத்தை எதிர்க்க முடியாமல், அல்லது எதிர்க்க விரும்பாமலிருக்கும் காரணம் என்ன? தங்களுக்குக் கல்யாணம் ஆக வில்லை என்பதற்காக, படித்த பெண்கள் கூடத் தற்கொலை செய்துகொள்ளுவது ஏன்? கொஞ்சமும் நியாயமில்லாததும், தார்மிக உணர்ச்சிக்கு முரணானதுமான ஒரு பழக்கத்தை மீறுவதற்குத் துணிச்சல் ஏற்படவில்லையென்றால், அவர்களுடைய புத்தகப் படிப்பினால் என்ன பிரயோசனம்? இதற்குப் பதில் தெளிவாக இருக்கிறது. சமூகக்கொடுமைகளை, அல்லது இதரக் கொடுமைகளை எதிர்த்துப் போராடுவதற்கு, பிள்ளைகளுக்கும், பெண்களுக்கும் பயிற்சி யளிக்கத் தவறும் ஒரு கல்வி முறையில் ஏதோ, பெரிய தவறு இருக்கத்தான்

வேண்டும். வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்திலும் தோன்றும் பல பிரச்னைகளையும் சரியாகத் தீர்க்கக் கூடிய விதத்தில், ஒவ்வொரு மாணவரிடம் உள்ள இயல்புகளை ஊக்கிவிடும் கல்விக்குத் தான் மதிப்பு உண்டு.

—'ஹரிஜன்' - 23—5—1936

# 14

# தவிர்க்கக் கூடிய வேதனை

ஒருவர் அனுப்பியுள்ள ஒரு நீண்ட முறையீட்டிலிருந்து பின்கண்ட பகுதியைத் தருகிறேன் :

"நான் ஒரு பள்ளி ஆசிரியர். எனக்கு வயது 67. ஆயுள் பூராவும் (46 வருடங்கள்) கல்வித்துறையிலேயே பணி புரிந்து வந்திருக்கிறேன். நான் வங்காளத்திலுள்ள ஏழ்மையான, ஆனல், கௌரவமான ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவன். நாங்கள் நல்ல நிலைமையில் இருந்தவர்களே. ஆனல், இப்போது ஏழைகளாக இருக்கிறோம். ஆண்டவன் அருளினல் (?)* எனக்கு ஏழு பெண்களும், இரண்டு பிள்ளைகளும் இருக்கிறார்கள். நிர்க்கதியான தனது பெற்றோரைகளை விட்டு விட்டு இருபது வயதுள்ள மூத்த பையன் சென்ற அக்டோபரில் இறந்தான். அவன் நல்ல புத்திசாலிப் பையன். அவனைத்தான் நான் நம்பிக் கொண்டிருந்தேன். என்னுடைய ஏழு பெண்களில் ஐந்து பேருக்கு ஏற்கனவே கல்யாணமாகி விட்டது. என்னுடைய ஆருவது பெண்ணுக்கும் (18 வயது) ஏழாவது பெண்ணுக்கும் (16 வயது) இனித்தான் கல்யாணம் ஆக வேண்டும். என் இளைய பிள்ளை 11 வயதுள்ள சிறுவன். என்னுடைய சம்பளம் அறுபது ரூபாய். குடும்ப காலட்சேபத்துக்கே இது போதுமானதாயில்லை. என்னிடம் சேமிப்பும் ஒன்றுமில்லை. என்னிடம் ஒன்றுமே இல்லை என்று சொல்லலாம். கடன்தான் இருக்கிறது. ஆருவது பெண்ணுக்கு வரன் நிச்சயமாகி இருக்கிறது. கல்யாணம் செய்வதற்கு, நகைகளுக்கும் பிறவற்றிற்கும் ரூபாய் 900 ஆகும். அதில் வரதட்சிணைக்காக ரூபாய் 300. கானடா ஸன் லைப் இன்ஷியூரன்ஸ் கம்பெனியில் என் ஆயுளை ரூபாய் 2000-க்கு இன்ஷியூர் செய்திருக்கிறேன். 1914-ஆம் வருடத்தில் இன்ஷியூர் செய்துகொண்டேன். இதன் மீது ரூபாய் 400 மட்டும் கடன் கொடுக்க கம்பெனி சம்மதித்திருக்கிறது. இது எனக்குத் தேவையான பணத்தில் பாதிதான் ஆகிறது. மற்றப் பாதியைத் திரட்டுவதற்கு எனக்கு வழியே இல்லை. நிர்க்கதியாயுள்ள இந்தத் தந்தைக்கு, மற்றப் பாதியை உதவமாட்டீர்களா?"

இம்மாதிரி வந்துள்ள பல கடிதங்களில் இது ஒன்று. பெரும்பாலான கடிதங்கள் ஹிந்துஸ்தானியில் எழுதப்பட்டுள்ளன. ஆனல், ஆங்கிலக் கல்வியினல் பெண்களின் பெற்றோர்களுடைய நிலைமையில் ஒரு அபிவிருத்தியும் ஏற்படவில்லை என்பதை நாம்

* கேள்விக்குறி கடிதம் எழுதியவர் இட்டிருப்பது

அறிவோம். சில சமயங்களில் நிலைமை மோசமாகியும் இருக்கிறது; ஏனெனில், ஆங்கிலக் கல்வி பயின்ற ஒரு தகப்பனுரின் ஆங்கிலக் கல்வி பயின்ற ஒரு பெண்ணுக்கு மாப்பிள்ளை தேடும் போது அவனுடைய விலை உயர்ந்து விடுகிறது.

இந்த வங்காளி தகப்பனுருக்குச் செய்யக்கூடிய சிறந்த உதவி, அவருக்குத் தேவையான தொகையைக் கடனுகவோ, இனுமாகவோ அளிப்பதல்ல. அவருடைய பெண்ணுக்கு விலை கொடுத்துக் கணவனை வாங்கக்கூடாது; பணத்திற்காகவல்லாமல் அன்பு காரணமாக அவளை மணக்கத் தயாராயிருக்கும் ஒருவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும்; அல்லது அந்தப் பெண்ணே அப்படித் தேர்ந்தெடுத்துக்கொள்ளும்படி விட்டுவிடவேண்டும். பெண்ணின் தந்தை இப்படிச் செய்வதற்கு அவருடைய மனதைத் திருப்பி, அவருடைய உறுதியைப் பலப்படுத்துவதே சிறந்த உதவியாக இருக்கும். அதாவது, மாப்பிள்ளை தேடுவதை இன்னும் விரிவுபடுத்தவேண்டுமென்பதே இதன் அர்த்தமாகும். சாதி, மாகாணம் என்ற இரட்டைச்சுவர்களைத் தகர்க்க வேண்டும். இந்தியா பிரிக்கமுடியாத ஒரு முழுமையென்ருல், சேர்ந்து சாப்பிடுவதற்கோ, மணம் செய்துகொள்ளுவதற்கோ தடையாயிருக்கும் பற்பல சிறு கோஷ்டிகளை நாமாக ஏற்படுத்தலாமா? இந்தக் கொடிய பழக்கத்தில் மத சம்மதம் ஒன்றுமில்லை. தனிப்பட்டவர்கள் இந்தச் சீர்திருத்தத்தை ஆரம்பிக்க முடியாதென்றும், சமூகம் பூராவும் இந்த மாறுதலுக்குப் பக்குவம் அடையும் வரையில் காத்திருக்க வேண்டுமென்றும் கூறுவதில் பயனில்லை. மனிதத் தன்மைக்கு விரோதமான பழக்க வழக்கங்களைத் தகர்த்தெறிந்து, தைரியமுள்ள தனி மனிதர்களே எல்லாச் சீர்திருத்தங்களையும் செய்திருக்கிருர்கள். அந்தப் பள்ளி ஆசிரியருக்கு அப்படி என்ன தான் கஷ்டம் வந்துவிட முடியும்? திருமணம் என்பது புனிதமான ஒரு அந்தஸ்தாகும். அதற்குப் பதிலாக, அதை ஒரு வியாபார பேரமாக பாவிக்க முடியாதென்று மறுத்துவிட்டால், என்ன கஷ்டம் வந்து விடப்போகிறது? ஆகையால், கடன் வாங்குவது அல்லது யாசகம் கேட்பது என்ற யோசனையை அவர் தைரியமாகக் கைவிட்டுவிடட்டும். தன்னுடைய பெண்ணைக் கலந்துகொண்டு சாதி, மாகாணம் என்ற வித்தியாசங்களைப் பொருட்படுத்தாமல் தகுந்த ஒரு வரனைத் தேர்ந்தெடுத்து, இன்ஷியூரன்ஸ் கம்பெனியிலிருந்து கிடைக்கக்கூடிய நானூறு ரூபாயைச் சேமித்து வைக்கட்டும் என்று நான் அவருக்கு யோசனை கூறுகிறேன்.

—'ஹரிஜன்' - 25—7—1936

# 15

# ஒரு பெண்ணின் தேவை என்ன ?

ஒரு பெண்மணி பின்வருமாறு எழுதுகிறார் :

"'தவிர்க்கக்கூடிய வேதனை' என்ற தலைப்பில் நீங்கள் எழுதியிருந்த கட்டுரை அரைகுறையாக இருப்பதுபோல் எனக்குத் தோன்றுகிறது. பெற்றோர்கள், தமது பெண்களுக்குத் திருமணம் செய்யவேண்டுமென்று ஏன் வற்புறுத்த வேண்டும்? அதற்காக அவர்கள் ஏன் சொல்லொணாக் கஷ்டங்களை அனுபவிக்கவேண்டும்? பெற்றோர்கள் தமது பிள்ளைகளைப் படிக்கவைப்பது போல், பெண்களையும் படிக்கவைத்தால், அவர்களும் தாமாகச் சம்பாதிப்பதற்கு உதவியாக இருக்கும். பின்னர் அவர்கள் தமது பெண்களுக்குக் கணவன்மார்களைத் தேடுவதைப்பற்றிக் கவலைப்படவேண்டிய அவசியமிராது. பெண்கள் தமது நிலைமையைத் தாமே நன்கு அபிவிருத்தி செய்துகொள்ள சந்தர்ப்பம் பெறும்போதும், தம்முடைய சுய முயற்சியினால் கௌரவமாக வாழ முடியும் என்ற நிலைமையிலும் அவர்கள் மணம் செய்துகொள்ள விரும்பும்போது, தகுதியுள்ள வரன் கிடைப்பதில் ஒரு கஷ்டமுமில்லை என்பதே என்னுடைய அனுபவமாகும். இதனால் பெண்களுக்கு உயர்தரக் கல்வி அளிக்கவேண்டுமென்று நான் சொல்லுவதாக அர்த்தமில்லை. ஆயிரக்கணக்கான பெண்களுக்கு இது சாத்தியமில்லை என்பதை நான் அறிவேன். ஒரு உபயோகமான தொழில் செய்வதற்குப் பயிற்சியளித்தால், பெண்கள் தம்முடைய பெற்றோர்களையோ, எதிர்காலக் கணவன்மார்களையோ நம்பியிருக்க வேண்டுமென்பதில்லாமல், தாமே வாழ்க்கையைச் சமாளிக்க முடியும் என்ற முழு நம்பிக்கை அவர்களுக்கு ஏற்படும். நான் கோருவது இதுதான். தம்முடைய கணவன்மார்களால் கைவிடப்பட்ட சில பெண்களை எனக்குத் தெரியும். அந்தக் காலத்தில் அவர்கள் நல்ல ஒரு பயிற்சி பெற்று, தம்மைத்தாமே காப்பாற்றிக்கொள்ளும் அதிர்ஷ்டம் அவர்களுக்குக் கிட்டியது. இன்று அவர்கள் தமது கணவன்மார்களுடன் கௌரவமாக வாழ்க்கை நடத்துகிறார்கள். விவாக வயது ஆன பெண்களை வைத்துக்கொண்டு கஷ்டப்படும் பெற்றோர்களின் பிரச்னையை நீங்கள் பரிசீலனை செய்யும்போது, இந்த அம்சத்தையும் வற்புறுத்த வேண்டுமென்று விரும்புகிறேன்."

இந்தக் கடிதத்தில் தெரிவிக்கப்பட்டுள்ள கருத்துக்களை நான் மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன். நான் குறிப்பிட்டிருந்த தகப்பனாரின் நிலைமை வேறு, திறமையற்ற ஒரு பெண் தனக்கு வாய்த்திருக்கிறாளே என்பதால் அவர் வேதனைப் படவில்லை; அவரும், ஒருக்கால் அவருடைய பெண்ணும் கூட, கணவனைத் தேடும் விஷயத்தில் தங்களுடைய சிறு சாதித் தாண்டிப் போகக் கூடாதென்று நினைத்தார்கள். இதுதான் அவருடைய வேதனை. இவர் விஷயத்தில் பெண்ணின் 'யோக்கியதாம்சங்களே' இடையூறாக உள்ளன. அந்தப் பெண் எழுதப் படிக்கத் தெரியாதவளாக இருந்திருந்தால், எந்த இளைஞனாயிருந்தாலும் பரவாயில்லையென்று சொல்லியிருப்பாள்.

ஆனால், படித்த பெண்ணாகையால், கணவனும் படித்தவனாக இருக்க வேண்டுமென்று அவள் விரும்பியது இயற்கையே. ஒரு பெண்ணை மணந்து கொள்ளுவதற்கு, பணம் பறிக்கும் கேவலம் நிச்சயமாக அந்தத் திருமணத்திற்குத் தடையாயிருக்க வேண்டுமென்று கருதப்படாமலிருப்பது நமது துரதிர்ஷ்டமே. கல்லூரியில் ஆங்கிலப் படிப்பு படித்தவர்களுக்கென்று இயற்கையற்ற ஒரு மதிப்புக் கொடுக்கப்படுகிறது. இது பல பாவங்களை மூடி மறைத்துவிடுகிறது. படித்தவர்கள் பெண்களை மணந்து கொள்ளுவதற்கு ஒரு விலை வைக்கிறார்களல்லவா? இந்தப் படிப்பு, தகுதி முதலியவைகளுக்கு இப்போதிருப்பதைவிட இன்னும் அதிக விவேகமான ஒரு வியாக்கியானம் செய்யப்பட்டால், பெண்களுக்குத் தகுதியான வரன்களைத் தேர்ந்தெடுப்பதில் உள்ள கஷ்டம் அடியோடு போய் விடாவிட்டாலும், பெரிதும் குறைந்தாவது போகும். ஆகவே, இந்தப் பெண்மணி எழுதியுள்ள கடிதத்தைப் பெற்றோர்கள் கவனிக்க வேண்டுமென்று சிபார்சு செய்கிறேன். அதே சமயத்தில் பெரும் கேடு விளைவிக்கும் சாதித் தடைகளைத் தகர்த்தெறிய வேண்டுமென்றும் வற்புறுத்த விரும்புகிறேன். சாதித் தடைகளைத் தகர்ப்பது, விரிவான முறையில் பிள்ளைகளைத் தேர்ந்தெடுப்பதற்கு உதவி செய்யும்; பணம் பறிப்பதையும் இது பெரிதும் தடை செய்யும்.

—'ஹரிஜன்' 5—9—1936

# 16

# திருமணத்தை எளிய முறையில் நடத்துதல்

கராச்சியில் நடைபெற்ற ஒரு திருமணத்தைப் பற்றிய விவரங்களை ஒருவர் அனுப்பியிருக்கிறார். பெண்ணுக்கு வயது 16. அவள், சேத்லால் சந்த் என்ற ஒரு பணக்காரரின் பெண். திருமணச் செலவை அவர் மிகவும் குறைத்து, சடங்கை மத சம்பிரதாயங்களின்படி, கௌரவமான முறையில் நடத்தினாராம். இந்தச் சடங்கு பூராவும் முடிவதற்கு இரண்டு மணி நேரத்திற்கு அதிகமாக ஆகவில்லையென்று கடிதம் எழுதியிருப்பவர் கூறுகிறார். சாதாரணமாக, திருமணச் சடங்கு பல நாட்களுக்கு நடப்பதுண்டு; வீண்செலவும் நடக்கும். மதச்சடங்குகளைக் கற்றறிந்த ஒரு பிராம்மணர் நடத்திவைத்தார். மணமகனும், மணமகளும் கூறும் மந்திரங்களின் அர்த்தம் என்ன என்பதை அவர்களுக்கு விளக்கிக் கூறினார். சேத்லால் சந்தையும், காலம் கடந்த இந்த மாறுதலை ஆரம்பிப்பதற்குத் தன்னுடைய கணவனுக்கு ஆதரவு

கொடுத்த அவருடைய மனைவியையும் பாராட்டுகிறேன். மற்ற பணக்காரர்களும் இதைப் பின்பற்றுவார்களென்று நம்புகிறேன். சேத்லால் சந்தும், அவருடைய மனைவியும் கதரில் முழுநம்பிக்கையுள்ளவர்களென்பதை அறிய கதர் அன்பர்கள் மகிழ்ச்சியடைவார்கள். மணமகன், மணமகள் இருவரும் கதரே அணிந்திருந்தார்கள். அவர்கள் எப்போதுமே நம்பிக்கையுடன் கதர் அணிபவர்கள். இந்தத் திருமணச்சடங்கு, ஆக்ரா மாணவர் கூட்டத்தில் நான்கண்ட காட்சியை எனக்கு ஞாபகப்படுத்துகிறது. ஐக்கிய மாகாணத்தில் கல்லூரிகளிலும், பள்ளிகளிலும் படிக்கும் மாணவர்கள் சீக்கிரமாகக் கல்யாணம் செய்து கொண்டுவிட வேண்டுமென்று ஆவலாயிருக்கிறார்களாம். விலையுயர்ந்த வெகுமதிகள், இன்னும் உயர்தரமான கேளிக்கைகளுடன் தமது பெற்றோர்கள் இதற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்றும் எதிர்பார்க்கிறார்களாம். ஒரு நண்பர் எனக்குக் கொடுத்த இந்தத் தகவல் ஆக்ரா மாணவர் கூட்டத்தில் ஊர்ஜிதமாயிற்று. நன்கு படித்த பெற்றோர்களிடம் கூட இந்த உடைமைப் பெருமை இருந்ததாம். செலவு சம்பந்தப்பட்ட வரையில் இவர்களைப் போல் அவ்வளவு கல்வியறிவில்லாத பணக்கார வியாபாரிகளையும் இவர்கள் தோற்கடித்தார்களாம். இவர்களுக்கெல்லாம், சமீபத்தில் சேத்லால் சந்த் செய்த திருமணமும், சில நாட்களுக்கு முன்பு சேத் ஜம்னாலால் பஜாஜ் செய்த திருமணமும், செலவைக் குறைப்பதற்கு ஊக்குவிக்கும் ஒரு நல்ல உதாரணமாயிருக்கும். இளம் வயதில், முக்கியமாக மாணவனாயிருக்கும் போது, மணம் செய்து கொள்ளுவதைத் தடுப்பதிலும், செலவைக் குறைக்கத்தான் வேண்டும் என்ற உறுதியிலும், பெற்றோர்களைவிட இளைஞர்களுக்குத்தான் அதிகப் பொறுப்பு உண்டு. மதச் சடங்குகளுக்கு பத்து ரூபாய்க்கு மேல் தேவைப்படாது திருமணத்தில் மதச் சடங்கைத் தவிர வேறு எதுவும் அவசியமான ஒரு அம்சமாகக் கருதப்படக் கூடாது. பணக்காரர்கள், ஏழைகள், உயர்ந்தவர்கள், தாழ்ந்தவர்கள் என்ற வித்தியாசங்களை அகற்ற முயற்சிகள் நடக்கும் இந்த ஜனநாயக யுகத்தில், பணக்காரர்களுக்கு ஒரு கடமை இருக்கிறது. அதாவது, தம்முடைய வாழ்க்கையிலும், போகங்களிலும் தன்னடக்கத்துடன் நடந்து கொள்ளுவதன் மூலம் அவர்கள் ஏழைகளுக்கு வழிகாட்ட வேண்டும். "சமூகத்தின் தலைவர்கள் எதைச் செய்கிறார்களோ, அதையே மற்றவர்களும் பின்பற்றுவார்கள்" என்ற பகவத் கீதை சுலோகத்தை அவர்கள் ஞாபகப்படுத்திக் கொள்ளட்டும். இதன் உண்மையை நம்முடைய அன்றாட அனுபவத்திலேயே காண்கிறோம். திருமணச் சடங்குகளிலும், மரணச் சடங்குகளிலும் இதை இன்னும் நன்றாகப் பார்க்கிறோம். இதற்காக ஆயிரக்கணக்கான ஏழைகள், தம்முடைய வாழ்க்கைத் தேவைகளைக் கூடக் குறைத்துக் கொண்டு, அநியாய வட்டியில் கடன் சுமையையும் ஏற்றுக் கொள்ளுகிறார்கள். நாட்டிலுள்ள படித்த இளைஞர்கள், முக்கியமாக பணக்காரப் பெற்றோர்களின் பிள்ளைகள், தமக்காக வீண்

செலவு எதையும் அனுமதிப்பதில்லை என்று உறுதி பூண்டால், நாட்டின் செல்வம் இப்படி வீணடிக்கப்படுவதைச் சுலபமாக நிறுத்திவிடலாம்.

—'எங் இந்தியா' – 26—9—1929

# 17

# கணவனும் மனைவியும்

கேள்வி : கணவன் மகா கொடியவனாயிருந்தாலும், அன்பின் உருவாயிருந்தாலும், மனைவி பதிபக்தியுடனிருப்பதும், அவனிடம் தன்னைப்பரிபூர்ணமாக ஐக்கியப்படுத்திக் கொண்டு விடுவதுமே ஹிந்துமதத்தின் மிக உயர்ந்த லட்சியமாகும். இதுதான் மனைவிக்குச் சரியான நடத்தை என்றால், கணவனின் எதிர்ப்பை மீறி அவள் தேசீய சேவையில் ஈடுபடலாமா? அல்லது கணவன் அனுமதிக்கும் அளவுவரையில் தான் அவள் போகலாமா?

பதில் : மனைவி என்றால் சீதையைப் போலிருக்க வேண்டும்; கணவன் ராமனைப் போலிருக்கவேண்டும். இவர்களே என்னுடைய லட்சிய தம்பதிகள். ஆனால் சீதை, இராமனின் அடிமையல்ல; அல்லது இருவரும் ஒருவருக்கொருவர் அடிமையாயிருந்தனர். இராமன் எப்போதும் சீதையிடம் பரிவு காட்டுகிறான். உண்மையான அன்பு இருக்குமிடத்தில் இத்தகைய கேள்வி எழாது. உண்மை அன்பு இல்லாத இடத்தில் இத்தகைய பிணைப்பு இருந்ததேயில்லை. ஆனால், இன்றைய ஹிந்து குடும்பம் ஒரு புதிராகவே இருக்கிறது. கணவனும், மனைவியும் மணந்து கொள்ளும் போது பரஸ்பரம் ஒருவரைப் பற்றி மற்றவருக்குத் தெரிவதில்லை. பெரும்பாலான ஹிந்து குடும்பங்கள் அமைதியாக நடைபெறுகின்றன என்றால், மதநிர்ப்பந்தமும், பழக்க வழக்கங்களும், மணமானவர்களின் சீரான வாழ்க்கையுமே அதற்குக் காரணமாகும். ஆனால், கணவனுக்கோ, மனைவிக்கோ வழக்கத்திற்கு விரோதமான அபிப்பிராயம் தோன்றினால், முரண்பாடுகள் ஏற்படும் அபாயமிருக்கிறது. கணவன்மார்கள் சம்பந்தப்பட்டவரையில் அவர்களுக்கு ஒரு கவலையுமில்லை. தன்னுடைய கூட்டாளியின் விருப்பத்தைத் தெரிந்துகொள்ள வேண்டிய கடமை இருப்பதாகக் கணவன் நினைப்பதில்லை. தன்னுடைய மனைவியைத் தன் சொந்த சொத்தாக அவன் கருதுகிறான். தன்னுடைய கணவனின் உரிமையை நம்பும் அந்தப் பேதை மனைவி, தன்னைத்தானே அடக்கிக் கொண்டு விடுகிறாள். இதிலிருந்து வெளியே வர ஒரு வழி இருக்கிறதென்றே நான் நினைக்கிறேன். மீராபாய் இதற்கு

காட்டியிருக்கிருள். தான் சொல்லுவது சரி, அல்லது தன்னுடைய எதிர்ப்பு ஓர் உயரிய லட்சியத்திற்காக என்று மனைவி நினைக்கும்போது, தன் வழிப்படி சென்று, விளைவுகளை ஏற்றுக் கொள்ள அவளுக்கு முழு உரிமை இருக்கிறது.

**கேள்வி:** உதாரணமாக, ஒரு கணவன் மாமிசம் சாப்பிடுகிருரென்று வைத்துக் கொள்ளுவோம். மாமிசம் சாப்பிடுவது தீமை என்று மனைவி கருதுகிருள். அப்படியானல் அவள் தன் நம்பிக்கையின்படியே செல்லலாமா? மாமிசம் உண்ணுவது போன்றவைகளிலிருந்து அவள் அன்பு வழிகளில் தன் கணவனைத் திருப்பலாமா? அல்லது அவள் தன் கணவனுக்கு மாமிச உணவைச் சமைத்துப் போட வேண்டுமா? அது போதாதென்று, கணவன் விரும்பினல் அவளும் அதைச் சாப்பிட வேண்டுமா? மனைவி தன் விருப்பப்படி நடக்கலாமென்று நீங்கள் கருதினல், ஒருவர் கட்டாயப்படுத்துவது, மற்ருருவர் எதிர்ப்பது என்ற நிலையில் எப்படிக் குடித்தனத்தை நடத்துவது?

**பதில்:** முதல் கேள்வியின் பதிலிலேயே இதற்கும் ஒருவாறு பதிலடங்கியிருக்கிறது. கணவனின் குற்றங்களுக்கு மனைவி உடந்தையாய் இருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. ஒரு காரியம் தவறு என்று அவள் கருதும்போது, சரியென்று அவள் நினைப்பதைச் செய்வதற்குத் துணிய வேண்டும். ஆனல், குடும்பத்திற்காகச் சம்பாதிப்பது கணவனின் கடமையாகவும், குடும்பத்தை நிர்வகித்து, சமையல் செய்வது மனைவியின் வேலையாகவும் இருப்பதால், இருவரும் ஏற்கனவே மாமிச உணவு சாப்பிடுபவர்களாயிருந்தால், குடும்பத்திற்கு வேண்டிய மாமிச உணவை அவள் சமைக்கத்தான் வேண்டும். ஆனல், மரக்கறி உணவு சாப்பிடும் ஒரு குடும்பத்தில், கணவன் மாமிச உணவுக்கு மாறி, மனைவி தனக்கு வேண்டியதைச் சமைத்துப் போடவேண்டுமென்று வற்புறுத்தினல், மனைவி தவறென்று நினைக்கும் மாமிச உணவை அவள் சமைத்துப் போட வேண்டுமென்ற அவசியமில்லை. குடும்பம் அமைதியாக நடக்க வேண்டுமென்பது மிகவும் விரும்பத் தக்கதுதான். ஆனல், அதுவே ஒரு முடிவான குறிக்கோளாயிருக்க முடியாது. என்னைப் பொறுத்தவரையில், வாழ்க்கையிலுள்ள எதையும் போல். தாம்பத்யமும் ஒரு கட்டுப்பாடு என்றே நான் கருதுகிறேன். வாழ்க்கை என்பது ஒரு கடமை, இதை நாம் சரியாக நிறைவேற்றுகிருேமா என்பதற்கு ஒரு சோதனைக்காலம். இம்மையிலும், மறுமையிலும் பரஸ்பரம் நல்லவைகளாயிருப்பவைகளைச் செய்வதற்கு உதவுவதுதான் மணவாழ்வின் நோக்கம். மனிதவர்க்கத்திற்குத் தொண்டு புரிவதும் அதன் நோக்கமாகும். கூட்டாளிகளில் ஒருவர் கட்டுப்பாடு விதியை

மீறும்போது, அந்த பந்தத்தை முறித்துக் கொள்ளும் உரிமை மற்றொரு கூட்டாளிக்குக் கிடைக்கிறது. பந்தத்தை முறிப்பதென்பது இங்கே தார்மிக பந்தத்தையே குறிப்பிடு கிறது; உடல் உறவையல்ல. இதில் விவாகரத்துக்கு இட மில்லை. மனைவியோ, கணவனோ பிரிந்து போய்விடுகிறார் கள்; ஆனால், எந்த நோக்கத்திற்காக அவர்கள் மணந்து கொண்டார்களோ அந்த நோக்கத்தை நிறைவேற்றுவதற்கே இந்தப் பிரிவு. இருவரும் ஒருவருக்கொருவர் தாழ்ந்தவர் களல்ல, சம அந்தஸ்துள்ளவர்கள் என்று ஹிந்து மதம் கருதுகிறது. வேறு விதமான ஒரு பழக்கம் வளர்ந்து விட் டது என்பது உண்மையே. இந்தப் பழக்கம் எப்போது ஆரம்பமாயிற்று என்று யாருக்கும் தெரியாது. அதைப் போல் இன்னும் பல தீமைகளும் இதற்குள் புகுந்து கொண் டிருக்கின்றன. ஆனால், ஒன்று மட்டும் எனக்குத் தெரியும். தன்னைத்தான் அறிவதுதான் பிறப்பின் நோக்கம். தன்னைத் தான் அறியும் அந்த நிலையை எய்துவதற்கு ஆணோ, பெண்ணோ தன் விருப்பப்படி நடந்துகொள்ள ஹிந்து மதம் முழு உரிமை அளிக்கிறது.

—'எங் இந்தியா' - 21—10—1926

## 18

## ஹிந்து மனைவி

மணமான தன்னுடைய சகோதரியின் துன்பங்களைப்பற்றி ஒரு சகோதரர் எழுதியுள்ள நீண்ட கடிதத்தின் சுருக்கத்தைக் கீழே தருகிறேன்:

"கொஞ்ச காலத்திற்கு முன்பு என்னுடைய சகோதரிக்குக் கல்யாணம் நடந்தது. ஆனால், கணவனாக வந்தவனின் குணம் எங்களுக்குத் தெரியாது. இவன் கொஞ்சமும் ஒழுக்கமில்லாதவன் என்பது பிறகு கண்டுபிடிக்கப் பட்டது. அவன் பெரிய ஸ்திரீ லோலன். இந்த வழியில் அவனுக்குத் திருப்தி என்பதே கிடையாது. அவனுக்குக் கௌரவத்தைப்பற்றிய உணர்ச்சியும் கிடையாது. தன்னுடைய 'எஜமான்' நாளுக்கு நாள் மேலும் மேலும் படுகுழி யில் ஆழ்ந்துகொண்டே யிருப்பதை மணமான கொஞ்ச காலத்திற்குள் என் தங்கை தெரிந்துகொண்டாள். அவள் சொல்லிப் பார்த்தாள். அவனுக்கு இது பொறுக்கவில்லை. அவளுக்கு 'ஒரு பாடம் கற்பிக்க வேண்டும்' என்பதற் காக, அவள் எதிரிலேயே மோசமான விதத்தில் நடந்துகொண்டான். அவளை நிற்க வைத்து சவுக்கால் அடிப்பான். சோறில்லாமல் பட்டினி போடுவான். இம்மாதிரி யெல்லாம் நடந்தது. அவளைத் தூணில் கட்டி வைத்துத் தன் னுடைய அக்கிரமங்களை நேரிலேயே பார்க்குமாறு செய்தான். என் தங்கை மனமுடைந்து போயிருக்கிறாள். அவளுடைய புலம்பல் எங்களுக்கு வேதனை

யாக இருக்கிறது. நாங்கள் என்ன செய்ய முடியும்? அவளும் நாங்களும் என்ன செய்ய வேண்டுமென்று நீங்கள் யோசனை கூறுவீர்கள்? பெண்களுக்கென்று உரிமைகளோ, சலுகைகளோ இல்லாமல் அவர்கள் முற்றிலும் ஆண்களின் தயவை நம்பியிருக்க வேண்டியிருப்பது ஹிந்து மதத்தில் மிகவும் வெட்கப்பட வேண்டிய அம்சங்களில் ஒன்றாகும். ஒரு ஆண், இரக்கமே இல்லாமல் கொடூரமாக நடந்துகொள்ளுவதென்று ஆரம்பித்தால், துரதிர்ஷ்டம் பிடித்த அந்தப் பெண்ணுக்கு எந்தப் பரிகாரமும் இல்லை. அவன் இஷ்டப்படி சம்பந்தம் வைத்துக் கொள்ளலாம்; அவனுக்கு எதிராக ஒரு சிறு விரலைக் கூட அசைக்க முடியாது. ஆனால், ஒரு பெண்ணுக்கு மணமாகிவிட்டது என்றால், முற்றிலும் தன் கணவனின் தயவிலேயே அவள் வாழ வேண்டியிருக்கிறது. ஆயிரக்கணக்கான பெண்கள் இந்தக் கஷ்டம் தாங்காமல் அழுது கொண்டிருக்கிறார்கள். இதையும், இதைப் போன்ற கொடுமைகளையும் ஹிந்து மதத்திலிருந்து அகற்றின லொழிய, முன்னேற்றத்திற்கு ஏதாவது நம்பிக்கை இருக்க முடியுமா?''

இதை எழுதியவர் படித்தவர். தன்னுடைய சகோதரியின் துயரத்தைப்பற்றி நான் கொடுத்துள்ள இந்தச் சுருக்கத்தைவிட அவர் இன்னும் அதிக விதரணையுடன் விவரித்திருக்கிறார். தன்னுடைய பெயரையும், முழு விலாசத்தையும் அவர் கொடுத்திருக்கிறார். கடுமையான ஆத்திரத்தின் விளைவாக அவர் ஹிந்து மதத்தைக் கண்டித்திருப்பது மன்னிக்கத்தக்கதே. ஆயினும், அபூர்வமாக நடக்கும் ஏதோ ஒரு சம்பவத்தை, வெளி உணர்ச்சியுடன் ஒரு சகஜமான சம்பவத்தைப் போல் கருதியிருப்பதுதான் அந்த ஆத்திரத்தின் அடிப்படையாகும். ஏனெனில், லட்சக்கணக்கான ஹிந்து மனைவிகள் முழு அமைதியுடன் வாழ்க்கை நடத்துகிறார்கள்; தம்முடைய இல்லங்களில் அவர்களே அரசிகளாகவும் விளங்குகிறார்கள். தம்முடைய கணவன்மார்கள் மீது அவர்கள் செலுத்தும் அதிகாரத்தைக்கண்டு எந்தப் பெண்ணும் பொறாமைப்படுவாள். இது அன்பின் மூலம் கிடைக்கும் அதிகாரமாகும். கணவனின் கொடுமைக்கு, இக்கடிதத்தை எழுதியிருப்பவர் கொடுத்துள்ள உதாரணம், ஹிந்து மதத்திலுள்ள தீமையைக் காட்டுவதாகாது; மனித இயற்கையிலுள்ள தீமையையே காட்டுகிறது. உலகத்தில் பல்வேறு நிலைமையிலுள்ள பல மதத்தினரிடையேயும், இந்தத் தீய குணம் வெளிப்பட்டிருக்கிறது. அடித்துப் பேசத் திறனில்லாத சாது மனைவிக்கும், சில சமயங்களில் அப்படி அடித்துப்பேச இஷ்டப்படாத மனைவிக்கும்கூட, விவாகரத்து உரிமை, முரட்டுக் கணவனிடமிருந்து பாதுகாப்பளிப்பதாக இல்லை. ஆகையால், சீர்திருத்தத்தின் நலன்களை முன்னிட்டே சீர்திருத்த வாதிகள் பரபரப்பையும், மிகைப்படுத்துதலையும் தவிர்ப்பது நல்லது.

இருந்தாலும், இந்தக் கட்டுரையில் குறிப்பிடப்பட்டுள்ள சம்பவம் ஹிந்து சமூகத்தில் முற்றிலும் சாதாரணமானதும் அல்ல. மனைவி, கணவனுக்குப் படிந்து நடக்கவேண்டுமென்ற அம்சம் ஹிந்து பண்பாட்டில் அளவுக்கு மீறி வற்புறுத்தப்பட்டிருக்கிறது; மனைவி, தன் கணவனுடன் அடியோடு ஐக்கியமாகிவிட

வேண்டுமென்றும் வற்புறுத்தியிருக்கிறது. இதன் பலனாக, தன்னை ஒரு மிருகத்தைப்போல் ஆக்கிவிடும் அளவுக்குச் சில சமயங்களில் கணவன் அதிகாரத்தைப் பறித்துக்கொண்டு, பிரயோகிக்க ஆரம்பித்து விடுகிறான். ஆகையால், இத்தகைய வரம்பை மீறிய செய்கைகளுக்குப் பரிகாரம் சட்டத்தில் இல்லை. பெண்கள்—மணமாகாத கன்னிகள் அல்ல—உண்மையான கல்விபெறச் செய்ய வேண்டும்; ஆண்கள் மனிதத் தன்மைக்கு முரணாக நடந்துகொள்ளுவதைக் கண்டிப்பதற்குப் பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்கவேண்டும். அதுதான் உண்மையான பரிகாரம். பிரஸ்தாப சம்பவத்திற்குப் பரிகாரம் நம்பமுடியாதபடி அவ்வளவு சுலபமானது. சகோதரனும், மற்ற உறவினர்களும் நாமென்ன செய்வது என்று ஏக்கம்கொண்டு, துயரடைந்துள்ள அந்தப் பெண்ணுடன் சேர்ந்து அழுவதற்குப் பதிலாக, அவர்கள் அவளுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டும். பாவம் செய்யும் ஒரு கணவனைத் திருப்தி செய்வதோ அல்லது அவன் உறவை நாடு வதோ, அவளுடைய கடமைகளில் ஒன்றல்ல என்பதை அவளுக்கு உணர்த்த வேண்டும். கணவன் தன் மனைவியைப்பற்றிக் கொஞ்ச மும் கவலைப்படவில்லை என்பது நன்றாகத் தெரிகிறது. ஆகையால் சட்டரீதியான சம்பந்தத்தை முறித்துக்கொள்ளாமல், அவள் கணவனிடமிருந்து பிரிந்து தனியாக வசிக்கலாம்; தனக்குத் திரு மணமே ஆகவில்லையென்ற உணர்ச்சியுடன் வாழ்க்கையை நடத்த லாம். விவாக ரத்து சாத்தியமில்லாத ஹிந்து மனைவிக்குக்கூட, இரண்டு வழிகள் இருக்கின்றன. அதாவது, கணவன் தன்னைக் கொடுமைப்படுத்துகிறான் என்று வழக்குத்தொடுத்து, தனக்கு ஜீவனாம்சம் கொடுக்க வேண்டுமென்று வற்புறுத்தலாம். எல்லா சமயங்களிலுமில்லாவிட்டாலும், பெரும்பாலான சமயங்களில் இந்த வழி பலனளிப்பதில்லை என்பதை நான் அனுபவத்தில் அறிந்திருக்கிறேன். ஒழுக்கமுள்ள பெண்ணுக்கு இது எந்த ஆறு தலும் அளிப்பதில்லை. சமூகத்திற்கும், முக்கியமாக மனைவிக்கும் கணவனைத் திருத்துவதே நோக்கமாக இருக்க வேண்டும். இந்த வழியினால் அத்தகைய சீர்திருத்தம் அசாத்தியமானதாகிவிடா விட்டாலும், கஷ்டமானதாய்விடுகிறது. பிரஸ்தாப சம்பவத்தில் அந்தப் பெண்ணின் பெற்றோர்கள் அவளைக் காப்பாற்றக்கூடிய நல்ல நிலைமையில் இருக்கிறார்கள். அப்படி இல்லாமற் போனாலும் இப்படிக் கொடுமையாக நடத்தப்படும் பெண்களுக்குத் தஞ்சம் அளிக்கும் ஸ்தாபனங்களின் எண்ணிக்கை நாட்டில் அதிகமாகிக் கொண்டு வருகின்றன. வேண்டாத கணவன்மார்களை விட்டு மனைவிகள் பிரிந்து வாழும்போது, அல்லது விவாக ரத்தினால் கிடைக்கும் நிவாரணத்தைப் பெறமுடியாமல் கணவன்மார்களால் கைவிடப்படும்போது, இந்த இளம் பெண்களின் சரீர இச்சையை எப்படித் திருப்தி செய்வது என்ற பிரச்னை வேறு இருக்கிறது. ஆனால், எண்ணிக்கையைக் கணக்கிட்டுப்பார்க்கும்போது, இது உண்மையில் அவ்வளவு பெரிய குறையல்ல. ஏனெனில், தலை முறை தலைமுறையாக விவாக ரத்தை அனுமதிக்கும் பழக்கம்

இல்லாத ஒரு சமூகத்தில், ஒரு தடவை மணத்தில் இன்பம் காணாத பெண், மறுதடவை மணக்க விரும்புவதில்லை. சமூகத்தின் எந்த ஒரு பிரிவிலும் அத்தகைய நிவாரணம் வேண்டுமென்று பொதுஜன அபிப்பிராயம் கோரும்போது, அது சாத்தியமாகும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. எனக்கு வந்துள்ள இக் கடிதத்தை நான் புரிந்துகொள்ள முடிந்த வரையில், மனைவி தன்னுடைய சரீர இச்சையைப் பூர்த்தி செய்து கொள்ளமுடியவில்லை என்பது புகாரல்ல. கணவன் யாரையும் மதிக்காமல், மிகவும் ஒழுங்கீனமாயிருக்கிறான் என்பதே இங்குள்ள புகாராகும். நான் சொன்னதைப்போல், மனோபாவத்தை மாற்றிக்கொள்ளுவதே இதற்குப் பரிகாரமாகும். நம்முடைய பல வியாதிகளைப் போல், நாமென்ன செய்ய முடியுமென்ற ஏக்க உணர்ச்சியும் வெறும் கற்பனைதான். தவறான கற்பனையால் எழுந்துள்ள வேதனையைப் போக்குவதற்குப் புதிய கண்ணோட்டமும், புது வழியில் சிந்தனை செய்வதுமே போதுமானவைகளாயிருக்கும். கொடுமைக்குள்ளாக்கப்படும் இடங்களிலிருந்து இவர்களை அகற்றிவிட்டால்போதும் என்று நண்பர்களும், உறவினர்களும் திருப்தி யடைவதும் கூடாது. அவள் தன்னைப் பொதுஜன சேவைக்குத் தயார் செய்துகொள்ளுவதற்கு ஊக்கமளிக்க வேண்டும். கணவனுடன் சேரும் உரிமையால் கிடைக்கக்கூடிய 'பாக்கியத்தை' இழக்கும் நஷ்டத்திற்கு, இத்தகைய பயிற்சி நல்ல ஈடாக இருக்கும்.

—'எங் இந்தியா' -3—10—1929

# 19

# குடும்பக் கஷ்டங்கள்

## (1)

**கேள்வி:** *நான் 23 வயதான ஓர் இளைஞன். சென்ற இரண்டு வருடங்களாக நான் சுத்த கதரையே உபயோகித்து வருகிறேன். சென்ற 28 நாட்களாக என்னுடைய ஓய்வு நேரத்தில் ஒழுங்காக நூற்று வருகிறேன். ஆனால், என்னுடைய மனைவி கதர் அணிய மறுக்கிறாள். அது ரொம்ப முறடாக இருக்கிறது என்று அவள் சொல்லுகிறாள். அவள் கதர்தான் அணிய வேண்டுமென்று நான் கட்டாயப்படுத்தலாமா? எங்களுடைய சுபாவம் பரஸ்பரம் முரண்பட்டதாக இருக்கிறது என்பதையும் குறிப்பிட விரும்புகிறேன்.*

**பதில்:** இதுதான் இந்தியாவிலுள்ள சகஜமான வாழ்க்கை. கணவனுக்கு அதிக அதிகாரமிருக்கிறது; அவன் அதிகமாகப் படித்திருக்கிறான். ஆகையால், மனைவியிடம் ஏதாவது குறை

பாடு இருந்தால் அதைப் பொறுத்துக் கொண்டு, அவளுக்கு ஆசிரியனகை இருக்க வேண்டுமென்று நான் அடிக்கடி கூறியிருக்கிறேன். உங்களிடையே உள்ள முரண்பாட்டை நீங்கள் சகித்துக்கொள்ளத்தான் வேண்டும். உங்களுடைய மனைவியை அன்பின் மூலம்தான் வெல்லவேண்டும்; கட்டாயத்தினல் அல்ல. ஆகவே, உங்களுடைய மனைவி கதரைத்தான் அணிய வேண்டுமென்று நீங்கள் கட்டாயப்படுத்த முடியாது. ஆனல், உங்களுடைய உதாரணத்தையும், அன்பையும் பார்த்து, அவளும் சரியானபடி நடந்து கொள்ளுவாள் என்றே நீங்கள் நம்ப வேண்டும். நீங்கள் உங்களுடைய மனைவியின் சொத்தல்ல; அதைப்போலவே உங்கள் மனைவியும் உங்களுடைய சொத்தல்ல வென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். அவள் உங்களுடைய சிறப்புப்பாதி. அப்படியே அவளை நடத்துங்கள். இந்தப் பரீட்சைக்காகப் பின்னர் நீங்கள் வருந்தமாட்டீர்கள்.

(2)

**கேள்வி :** எனக்கு மணமாகிவிட்டது. என் மனைவி நல்லவள். எங்களுக்குக் குழந்தைகள் இருக்கின்றன. இதுவரையில் நாங்கள் அன்னியோன்னியமாகவே வாழ்க்கையை நடத்தி வந்திருக்கிறேம். துரதிருஷ்டவசமாக அவள் சந்தித்த மற்றெரு பெண்ணைத் தன் குருவாக ஏற்றுக்கொண்டிருக்கிருள். அவளிடமிருந்து குரு மந்திரத்தையும் பெற்றிருக்கிருள். இப்போது என் மனைவியின் வாழ்க்கையைப்பற்றி எனக்கு ஒன்றுமே தெரியவில்லை. இதனல் எங்களிருவரிடையே உறவுகள் அவ்வளவு சுமுகமாக இல்லை. நான் என்ன செய்யவேண்டுமென்று எனக்குத் தெரியவில்லை. துளஸிதாஸ் சித்திரித்துள்ள ராமனே என்னுடைய லட்சிய புருஷன். ராமன் செய்ததைப் போலவே, நானும் என்னுடைய மனைவியுடன் எல்லாத் தொடர்புகளையும் கத்தரித்துக் கொண்டு விட வேண்டுமா?

**பதில் :** தராதரமில்லாமல் பெரியவர்களைப் போலவே நாமும் நடந்து கொள்ளக்கூடாது என்று துளஸிதாஸ் நமக்குப் போதித்திருக்கிருர். அவர்கள் துணிந்து செய்யும் ஒரு காரியத்தை நாமும் செய்துவிட முடியாது. ராமனுக்கு சீதையிடம் உள்ள அன்பை நினைத்துப் பாருங்கள். மாயப் பொன் மானின் தோற்றத்திற்கு முன்பு ராமனின் கட்டளைப்படி உண்மையான சீதை மேகங்களில் மறைந்து விட்டாளென்றும், அவளுடைய வெறும் சாயைதான் இருந்தது என்றும் துளஸிதாஸ் கூறுகிருர். இந்த விஷயம் லட்சுமணனுக்குக்கூடத் தெரியாமல் அவ்வளவு ரகசியமாக இருந்தது. ராமனுடைய நோக்கமே வேறு என்றும், அது தெய்வீகமான

தென்றும் கவிஞர் கூறுகிறார். மாயப் பொன் மான் தோன்றிய பிறகு, இந்தச் சாயையான சீதையுடன்தான் ராமன் உறவாடினர். அப்போதுங்கூட ராமனின் எந்த ஒரு செய்கையையும் சீதை ஆட்சேபிக்கவில்லை. இந்த மாதிரி விவரங்கள் உலகிலுள்ள சாதாரண மனிதர்களின் விஷயங்களில் காணப்படுவதில்லை; உங்கள் விஷயமும் அப்படித்தான். ஆகையால், உங்களுக்கு நான் சொல்லக்கூடிய புத்திமதி என்னவென்றால், உங்கள் மனைவியின் இஷ்டப்படியே விடுங்கள்; அவளுடைய நடத்தையைப் பற்றி உங்களுக்கு எந்தப் புகாரும் இல்லாத வரையில் அவள் விஷயத்தில் தலையிடாதீர்கள். நீங்கள் யாரையாவது குருவாக ஏற்றுக்கொண்டு, அவரிடம் குரு மந்திரத்தையும் பெற்றுக் கொண்டு, அந்த ரகசியத்தை உங்கள் மனைவியிடம் சொல்லாமலிருந்தால், இந்த ரகசியத்தைத் தன்னிடம் சொல்ல வில்லையே என்று உங்கள் மனைவி ஆட்சேபிப்பதை நீங்கள் ஏற்றுக் கொள்ளுவீர்களா? கணவனுக்கும், மனைவிக்குமிடையே எந்த ரகசியமும் இருக்கக் கூடாது என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். மணவாழ்வில் எனக்கு மிகுந்த மதிப்பு உண்டு. கணவனும் மனைவியும் ஒருவரோடொருவர் ஐக்கியமாகி விடுகிறார்களென்றே நான் கருதுகிறேன். அவர்கள் இரண்டில் ஒன்று என்றோ அல்லது ஒன்றில் இரண்டாகவோ இருக்கிறார்கள். ஆனால், இம்மாதிரி விஷயங்களை உயிரற்ற இயந்திரங்களைப்போல் சீர்படுத்த முடியாது. எல்லாவற்றையும் கவனிக்கும்போது, நீங்கள் தாராள மனம் படைத்த கணவனாக இருப்பதால், தன்னுடைய ரகசியத்தை உங்கள் மனைவி உங்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்பாமலிருப்பதைப் பொறுத்துக் கொள்ளுவதில் உங்களுக்குக் கஷ்டமிருக்க முடியாது.

—'ஹரிஜன்' - 9—3—1940

(3)

**கேள்வி:** எல்லா அம்சங்களிலும் தீண்டாமையை அகற்றியவர்களைத் தவிர வேறுயாரும் சத்தியாக்கிரகத்தில் பங்கு கொள்ளக்கூடாது என்று நீங்கள் சொல்லியிருக்கிறீர்கள். இது சரிதான். இந்த விஷயத்தில் ஒரு காங்கிரஸ்காரரின் மனைவிக்குத் தன்னுடைய கணவனின் நம்பிக்கை பிடித்தமில்லாமலிருப்பதாக வைத்துக்கொள்ளுவோம். ஹரிஜனங்களை வீட்டுக்குள் அழைத்துக் கொண்டு வருவதற்கும் அவள் சம்மதிக்கவில்லை. அந்த நிலைமையில் அவர் என்ன செய்ய வேண்டும்? தன்னுடைய இஷ்டப்படி மனைவி நடக்க வேண்டுமென்று மனைவியைக் கட்டாயப்படுத்துவதா; அல்லது அவளைக் கைவிட்டுவிடுவதா; அல்லது சத்தியாக்கிரகப் போராட்டத்தைக் கைவிடுவதா?

பதில்: உங்கள் மனைவியைக் கட்டாயப்படுத்துவதற்கு அவசியமே இல்லை. அவள் தன்னிஷ்டப்படி நடந்துகொள்ளும்படி விட்டு விடவேண்டும். நீங்கள் உங்கள் இஷ்டப்படி நடக்க வேண்டும். அப்படியானால், அவளுக்கென்று தனியாகச் சமையலறை இருக்கும். வேண்டுமானால், அவளுக்கென்று தனியறை இருக்கும். ஆகவே, போராட்டத்தைக் கைவிடுவது என்ற கேள்வி எழவில்லை.

—'ஹரிஜன்' – 13—4—1940

# 20

# நேர்மையற்றது

ஒருவர் பின்வருமாறு எழுதுகிறார்:

"கட்சில் எங்களிடையே மிகவும் கண்யமான பலர் இருக்கிறார்கள். இவர்கள் நேர்மையானவர்கள், தாராள மனமுள்ளவர்கள், ஆழ்ந்த மதப் பற்றும், உயர் நோக்கமும் உள்ளவர்கள். ஆனால், ஒரு ஆண் சந்ததி வேண்டும் என்பதற்காக மறுமணம் செய்துகொள்ளுவதற்கு இவர்கள் தயங்குவதே இல்லை. பெண் குழந்தை பிறந்தால் மட்டம் என்று நினைக்கும் ஹிந்துக்களிடையே உள்ள வழக்கத்தை நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்களா? இந்த விஷயத்தில் உங்கள் அபிப்பிராயத்தை வெளியிடவேண்டுமென்று மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன். பிள்ளை இல்லாவிட்டால் சுவர்க்கத்திற்குப் போக முடியாது என்று வைதிக மனப்பான்மையுள்ளவர்கள் கூறுவதை நீங்களும் ஒப்புக்கொள்ளுகிறீர்களா?

"நல்ல தருமங்கள் செய்துள்ள ஒருவருக்கு மூன்று மனைவிகள் இருக்கிறார்கள். இப்போது அவர் நாலாவதாக ஒரு மனைவியை மணந்துகொண்டிருக்கிறார். சில மாதங்களுக்கு முன்பு அவர் ஒரு யாகம் செய்தார். அப்போது ஒவ்வொரு நாளும் 500 பிராம்மணர்களுக்குச் சாப்பாடு போடப்பட்டது. இந்தச் சடங்குக்காக லட்ச ரூபாய்க்குமேல் செலவிடப்பட்டிருக்கிறது. இம்மாதிரி உதாரணங்களை நான் எவ்வளவோ சொல்லமுடியும்."

துரதிர்ஷ்டவசமாக ஆண் சந்ததி வேண்டுமென்ற ஆவல் அநேகமாக ஹிந்து சமூகத்திலுள்ள எல்லோருக்குமே இருக்கிறது. இதற்கு மூல காரணம் என்ன என்பதைத் தேடிக் கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. ஆண், பெண் இருவரும் சமமாகக் கருதப்படும் இந்த நாட்களில், பெண்களுக்கு எதிரான இந்தப் பாகுபாடு பொருத்தமற்ற ஒன்றாகும். ஆண் குழந்தை பிறந்தால் குதூகல மடைவதற்கோ, பெண் குழந்தை பிறந்தால் துக்கப்படுவதற்கோ, எந்தக் காரணமும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. இரண்டுமே கடவுள் அருளியவையே. இருவருக்குமே வாழும் உரிமை இருக்கிறது. உலகம் இயங்கிக்

கொண்டிருப்பதற்கு இருவருமே அவசியம். ஆனால், பல தலை முறைகளாக, வேரூன்றிப் போயிருக்கிற பழக்கங்களைத் திடீரென்று மாற்றிவிட முடியாது. சமூகத்தின் மனச்சாட்சியை விழிப்படையச் செய்வதன்மூலமும், பெண்ணின் உண்மையான அந்தஸ்தையும்,கௌரவத்தையும் சமூகம் சரிவர உணரச் செய்வதன் மூலமுமே இவற்றைச் சமாளிக்க முடியும். ஆண்குழந்தைப் பிறக்கவில்லை யென்றால், கணவன் மறுமணம் செய்து கொள்ளுவது என்பதற்கு இன்று கணவன், மனைவி இருவருமே சம்மதிப்பதைக் காண்கிறோம். இந்தக் கடிதம் எழுதியவரைப் போன்ற சீர்திருத்தவாதிகள், பொறுமையை வளர்க்க வேண்டும்; துரதிருஷ்ட வசமான இந்தச் சம்பவங்களைக் கண்டு கோபமடைவதோ, ஏக்கமடைவதோ கூடாது. தம்முடைய லட்சியத்தில் நம்பிக்கை வைத்து, ஆண் குழந்தை, பெண் குழந்தை என்று பாகுபாடு காட்டுவது எவ்வளவு அர்த்தமற்ற கொடுமை என்பதை, சமூகம் என்றைக்காவது உணரத்தான் செய்யும் என்ற உறுதியுடன் அவர்கள் வேலை செய்ய வேண்டும்.

—'ஹரிஜன்' – 28 – 5—1938

## 21

# காட்டுமிராண்டித்தனத்தின் எஞ்சியுள்ள சின்னம்

**த**ம்மிடமுள்ள கால்நடைகள், வீட்டுச் சாமான்களைப்போல் தம் மனைவிகளும் தம்முடைய சொத்துக்கள் என்று நினைத்து, ஆடு மாடுகளை அடிப்பதைப் போல் அவர்களையும் அடிப்பதற்குத் தமக்கு உரிமை இருப்பதாக நினைக்கும் கணவன்மார்கள் இந்தியாவில் எவ்வளவோ பேர் இருக்கிறார்கள் என்பதை, வருந்தத்தக்க அன்றாட சம்பவங்களின் மூலம் நாம் அனுபவத்தில் அறிந்திருக்கிறோம். ஒரு கணவன் தன் மனைவியை அடிப்பதற்குச் சட்ட பூர்வமான உரிமை இருக்கிறது என்பதை ஒரு நீதிபதியே ஏற்றுக்கொள்ளுவார் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆகவே, மதுரை செஷன்ஸ் நீதிபதி, மிருகத்தனமான இந்த உரிமையை அங்கீகரித்துத் தீர்ப்பளித்திருக்கிறார் என்று ஒரு பத்திரிகைச் செய்தியை ஒரு நண்பர் என்னிடம் காட்டியபோது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. நல்ல வேளையாக ஒரு ஆங்கில நீதிபதி, கீழ்க்கோர்ட்டு வழக்கு விவரங்களைப் பரிசீலனை செய்துகொண்டிருந்தபோது, மதுரை செஷன்ஸ் நீதிபதியின் இந்த அசாதாரணமான தீர்ப்பைக் கண்டுபிடித்தார். பிறகு எதிரியான கணவனுக்கு நோட்டீஸ் அனுப்பினார். கொஞ்சகாலம் பொறுத்து இந்த

வழக்கை நீதிபதிகள் பாண்டுரங்கராவும், கே. எஸ். மேனனும் விசாரித்தார்கள். அவர்களுடைய தீர்ப்பைக் கீழே தருகிறேன் :

''எதிரி தன் மனைவியைத் துன்புறுத்தினர் என்ற முதல் குற்றச்சாட்டின் மீது செஷன்ஸ் நீதிபதி எதிரியை விடுதலை செய்துவிட்டார். இந்த விடுதலையை ஆட்சேபித்து ஸ்தல சர்க்கார் அப்பீல் செய்யவில்லை. மனைவி அதிகப்பிரசங்கித்தனமாகவோ, மரியாதை யில்லாமலோ நடந்துகொண்டால் அவளை அடிப்பதற்குக் கணவனுக்கு உரிமை இருக்கிறது என்று பல இடங்களில் செஷன்ஸ் நீதிபதி கூறியிருப்பதை மட்டும்தான் இங்கே பிரஸ்தாபிக்க வேண்டியிருக்கிறது. மனைவியை அடிப்பதற்குக் கணவனுக்குள்ள உரிமையைப்பற்றி அவருக்கு எந்தவிதமான சந்தேகமும் இல்லை. இதனால், மனைவியைத் துன்புறுத்தினர் என்று குற்றப்பத்திரிகையில் ஒரு குற்றச்சாட்டை சேர்த்ததற்காகப் போலீஸாரையும், அந்தக் குற்றச்சாட்டையும் சேர்த்து செஷன்ஸ் விசாரணைக்கு அனுப்பிய சப்-மாஜிஸ்டிரேட்டையும் கூட அவர் கண்டித்திருக்கிறார்.

''தனிப்பட்ட முறையில் செஷன்ஸ் நீதிபதி இந்த விஷயத்தில் எந்தவிதமான அபிப்பிராயத்தையும் வைத்துக்கொள்ளுவதற்கு உரிமை உண்டு. ஆனால், நீதிபதி என்ற ஸ்தானத்தில் உட்கார்ந்துகொண்டு, அதிகப்பிரசங்கித்தனமாகவோ மரியாதை யில்லாமலோ நடக்கும் மனைவியை அடிக்க கணவனுக்கு உரிமையுண்டு என்று விதிக்க அவருக்கு நியாயமில்லை. அத்தகைய உரிமை எதுவும் இந்தியன் குற்றச்சட்டத்தில் அங்கீகரிக்கப்படவில்லை. ''பொது விலக்குகள்'' என்ற அத்தியாயத்தில், மனைவியை அடிப்பது ஒரு விலக்காகக் கொடுக்கப்படவில்லை.

''இந்த தீர்ப்பு ஆதாரமற்றது, தவறானது என்று இந்த கோர்ட்டு அறிவித்தாலொழிய, ஒரு செஷன்ஸ் நீதிபதி இவ்வாறு அளித்துள்ள தீர்ப்பு எவ்வளவு கடுமையான விளைவுகளை உண்டாக்கும் என்பதைச் சுலபமாகப் புரிந்துகொள்ளலாம். எதிர்காலத்தில் தம் மனைவிகளை அடிப்பதற்குக் கணவன்மார்கள் இதைச் சாக்காகக் காட்டக்கூடாதே என்பதற்காகத்தான், இந்த விஷயத்தில் கணவனின் உரிமையைப்பற்றி செஷன்ஸ் நீதிபதி அளித்துள்ள தீர்ப்புக்கு எந்த ஆதாரமும் கிடையாது என்பதைச் சந்தேகத்திற்கு இடமில்லாத முறையில் தெளிவாக்குவது அவசியம் என்று நினைத்தோம்."

மனைவிகளை, உடைமைகளைப்போல் நடத்தலாம், தமக்குத் தோன்றும்போதெல்லாம் அவர்களை அடிக்கலாம் என்ற உரிமை தமக்கு உண்டு என்ற நம்பிக்கை, படித்த கணவன்மார்களிடம் கூட இருக்கிறது என்பதை வெட்கத்துடன் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது. மனைவிகளை அப்படி நடத்துவது, காட்டுமிராண்டித்தனத்தின் எஞ்சியுள்ள சின்னம் என்பதை இந்தத் தீர்ப்புக் காட்டுவதாகும்.

—'ஹரிஜன்' – 3—10—1936

பகுதி மூன்று

# நகைகளும் படுதாவும்

## 1

## பெண்களும் நகைகளும்

[கொழும்புவில் சிங்களப் பெண்களின் ஒரு சிறு கூட்டத்தில் செய்த பிரசங்கம்]

மகேந்திரர் இலங்கைக்கு வந்தபோது, தாய்நாட்டிலிருந்தவர்களுக்குச் செல்வ வளத்திலோ, ஆன்மிக வளத்திலோ ஒரு குறைவுமில்லை; எங்கள் கை ஓங்கியிருந்தது. இந்தப் பெருமையை நீங்களும் பகிர்ந்துகொண்டீர்கள். ஆனால், இன்று அந்தக் குழந்தைகள் பட்டினியால் வாடுகிறார்கள். அவர்கள் சார்பாகத்தான் இன்று நான் உங்கள் முன்பு பிச்சைக்கு ஓட்டை ஏந்தி வந்திருக்கிறேன். அவர்களுடைய உறவை நீங்கள் மறுக்காமல், அதில் கொஞ்சம் பெருமையும் கொள்ளுவதாயிருந்தால் உங்களுடைய பணத்தை மட்டுமின்றி, மற்ற பல இடங்களிலுள்ள சகோதரிகள் செய்ததைப்போல், உங்களுடைய நகைகளையும் நீங்கள் கொடுக்க வேண்டும். சகோதரிகள் ஏராளமாக நகை போட்டுக்கொண்டிருந்தால், என்னுடைய பசிக்கண்கள் அவற்றையே நாடுகின்றன. நகைகளைக் கேட்பதில் மற்றொரு உள் நோக்கமும் இருக்கிறது. அதாவது, நகைகள், ஆபரணங்களில் பெண்களுக்குள்ள மோகத்தைப் போக்க வேண்டுமென்பதே அந்த நோக்கம். மற்ற சகோதரிகளிடம் நான் உரிமையுடன் பேசுவதைப்போல், உங்களிடமும் பேசலாமென்றால், ஆணைவிடப் பெண் அதிகமாக அலங்கரித்துக் கொள்ளுவதன் காரணம் என்ன என்பதைச் சொல்லுங்கள். ஆண்களைத் திருப்தி செய்வதற்காகவே அப்படி அலங்கரித்துக் கொள்ளுகிறார்கள் என்று பெண்கள் என்னிடம் கூறியிருக்கிறார்கள். உலகத்தில் உங்கள் பங்கை நீங்கள் செய்ய வேண்டுமென்றால், ஆண்களைத் திருப்தி செய்வதற்காக நீங்கள் அலங்கரித்துக்கொள்ள மறுக்க வேண்டும். நான் ஒரு பெண்ணாய்ப் பிறந்திருந்தால், தன்னுடைய விளையாட்டுக் கருவியாக இருப்பதற்காகத்தான் பெண் பிறந்திருக்கிறாள் என்று ஆண்கள் வேஷம் போடுவதை நான் எதிர்த்துப்போராடுவேன். பெண்களின் மனத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்பதற்காகவே நான் மானஸீகமாகப் பெண்ணாயிருக்கிறேன். முன்பு நடத்தியதைப் போலில்லாமல் வேறு விதமாக என் மனைவியை நடத்த

வேண்டும் என்ற முடிவுக்கு நான் வரும் வரையில், அவளுடைய மனத்தில் நான் புகுந்து பார்க்க முடியவில்லை. ஆகையால், கணவன் என்ற முறையில் எனக்கிருந்த 'உரிமைகளை' யெல்லாம் கைவிடுவதன் மூலம், அவளுடைய எல்லா உரிமைகளையும் திருப்பிக்கொடுத்தேன். இன்று என்னைப் போலவே அவளும் எளிய முறையில் இருப்பதைக் காண்கிறீர்கள். அவள் கழுத்தில் மாலையையோ, மற்ற ஆபரணங்களையோ பார்க்க முடியாது. நீங்களும் அப்படி இருக்கவேண்டும் என்று நான் விரும்புகிறேன். உங்களுடைய சொந்த ஆசைகளுக்காகவும் ஆண்களுக்கும் அடிமைப்பட மறுத்து விடுங்கள். உங்களைச் சிங்காரித்துக் கொள்ள மறுத்து விடுங்கள். வாசனைப் பொருள்களை உபயோகிக்காதீர்கள். நீங்கள் சரியான மணத்தை அளிக்க விரும்பினால், அது உங்களுடைய உள்ளத்திலிருந்து வரவேண்டும். அப்போது ஆணை மட்டுமன்றி, மனிதவர்க்கத்தையே நீங்கள் வசீகரித்து விடுவீர்கள். அது உங்களுடைய பிறப்புரிமை. மனிதன் பெண்ணிடம் பிறந்தவன்; அவளுடைய சதையும், எலும்பும்தான் மனிதன். உங்களுக்குரிய ஸ்தானத்தைப் பெற்று, மீண்டும் உங்களுடைய கடமையைச் செய்யுங்கள்.

மலைத்தோட்டங்களிலுள்ள உங்களுடைய சகோதரிகளின் கோரமான நிலைமையை நீங்கள் அறிவீர்களா? அவர்களையும் உங்களுடைய சகோதரிகளாக பாவியுங்கள். அவர்களிடையே சென்று பழகி, சுகாதாரத்தில் உங்களுக்குள்ள அறிவையும், திறமையையும் அவர்களுக்குப் பயன்படும்படி உதவுங்கள். அவர்களுக்குச் சேவை செய்வது உங்கள் பாக்கியமாயிருக்கட்டும். நீங்கள் இருக்குமிடங்களுக்கு அருகிலேயே சேவைக்கு வாய்ப்பில்லையா? ஆண்களிடையே சமூகத்திற்கே ஓர் அபாயமிருக்கும் போக்கிரிகளும், குடிகாரர்களும் இருக்கிறார்கள். திருடர்கள், குடிகாரர்கள், சூதாடிகள் வசிக்குமிடங்களுக்கு ரட்சண்ய சேனையைச் சேர்ந்த பெண்கள் தைரியமாகப் போவதைப் போல், நீங்களும் இந்தப் போக்கிரிகள் இருக்குமிடங்களுக்குச் சென்று அவர்கள் காலில் விழுந்து, கெஞ்சிக் கூத்தாடி அவர்களைத் திருப்ப வேண்டும். அந்த சேவை, நீங்கள் அணிந்திருக்கும் ஆபரணங்களைவிட அதிக அலங்காரமானதாக இருக்கும். நீங்கள் அப்படி மிச்சப்படுத்தும் பணத்திற்கு நான் தருமகர்த்தாவாக இருந்து, அதை ஏழைகளிடையே விநியோகிப்பேன். ஏதோ நான் சொன்ன இந்த வார்த்தைகள் உங்கள் உள்ளங்களில் பதியவேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

—'எங் இந்தியா' – 8—12—1927

# 2

# பெண்களும் ஆபரணங்களும்

தமிழ் நாட்டிலுள்ள ஒரு பெண் டாக்டரிடமிருந்து ஒரு வெகுமதியும், அத்துடன் ஒரு கடிதமும் எனக்கு வந்திருக்கின்றன. அந்தக் கடிதம் வெகுமதியின் மதிப்பை உயர்த்துகிறது என்று நான் கருதுகிறேன். மேலும், அது மற்றவர்களுக்கு ஓர் உதாரணமாகவும் இருக்கக் கூடும். ஆகையால், வெகுமதி யளித்தவர், ராஜா, ஊர் ஆகிய விவரங்களை அகற்றி விட்டுக் கடிதத்தின் சுருக்கத்தைக் கீழே தருகிறேன்:

"நேற்று தபால் மூலம் ஒரு வைர மோதிரத்தையும், ஒரு ஜதை தோடுகளையும் உங்களுக்கு அனுப்பினேன் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுவதற்காகவே இதை எழுதுகிறேன். அரண்மனையில் நான் செய்த சேவைக்காக 12 வருடங்களுக்கு முன்பு இவை எனக்குக் கொடுக்கப்பட்டன......அதாவது ராஜாவுக்கு ஆண் சந்ததி பிறந்தபோது, நீங்கள் அந்த வழியாகப் போனபோது, உங்களைத் தமது அரண்மனைக்கு அழைப்பதற்கு ராஜாவுக்குத் தைரியமில்லை என்பதை அறிந்து மிகவும் வருந்தினேன். சர்க்காரிடமுள்ள பயம் தான் அதற்குக் காரணமாம். முன்பெல்லாம் இந்த ஆபரணங்கள் என்னுடனேயே இருக்கும். நீங்கள் வந்துவிட்டுப்போன பிறகு, இந்த ஆபரணங்களைப் பார்க்கும்போதெல்லாம் என் உணர்ச்சி எப்படி இருந்திருக்கு மென்பதை நீங்கள் ஊகித்துக்கொள்ளலாம். இப்போது இவற்றைப் பார்த்தபோது என் உள்ளத்தில் ஒரு வெறுப்பு உணர்ச்சி தோன்றியது; நீங்கள் இங்கே வந்திருந்தபோது, பட்டினி கிடக்கும் லட்சக்கணக்கான மக்களைப் பற்றிப் பேசினீர்களல்லவா? என்னுடைய வெறுப்பு உணர்ச்சி பிறகு அந்த ஏழைகள்பால் ஆழ்ந்த அனுதாபமாக மாறியது. 'இந்த ஆபரணங்களெல்லாம் மக்களின் பணத்திலிருந்து செய்யப்பட்டவை அல்லவா? இவற்றை என்னுடைய சொந்த உடைமைகளாக வைத்துக்கொள்ள எனக்கென்ன பாத்யதை இருக்கிறது?' என்று என்னை நானே கேட்டுக்கொண்டேன். பிறகு இவற்றை உங்களுக்கு அனுப்பிவிடுவதென்று முடிவு செய்தேன். இவற்வற நீங்கள் கதர்த் தொண்டுக்காக உபயோகித்துக் கொள்ளலாம். அதன் மூலம் பட்டினி கிடக்கும் மக்களில் சிலருக்கு உதவி புரியலாம். இவை என்னுடைய பெட்டியின் ஒரு மூலையில் கிடப்பதைவிட, இப்படி உபயோகிப்பது இன்னும் நல்ல வழி என்று நான் நம்புகிறேன். இவை ஐந்நூறு ரூபாய் பெறும் என்று ஒரு நண்பர் மதிப்பிட்டிருக்கிறார். ஆகையால், அவை அந்தத் தொகைக்கு இன்ஷ்யூர் செய்யப்பட்டிருக்கிறது. தாராள மனம் உள்ள யாரேனும் ஒருவர், இந்த ஆபரணங்கள் எந்த நிலைமையில் உங்களுக்கு அனுப்பப்படுகின்றன என்பதை அறிந்து, அவற்றின் உண்மையான விலைக்கு அதிகமாகவே கொடுப்பார் என்று நம்புகிறேன். இந்தக் கடிதத்தை உங்கள் விருப்பம்போல் உபயோகித்துக் கொள்ளலாம்."

பயத்திற்குக் காரணமே இல்லாமலிருக்கும் போதுகூட, அதை நாம் கற்பனை செய்து கொள்ளுவது ஆச்சரியப்படத்தக்க

விஷயமே. பகிரங்கமாகவும், மனமுவந்தும் எவ்வளவோ ராஜாக்கள் கதருக்கு ஆதரவு கொடுத்திருக்கிறார்கள். இந்தப் பெண் டாக்டர் கூறியிருப்பதைப்போல், யாரிடமிருந்து அந்தச் செல்வமெல்லாம் கிடைத்ததோ அவர்களுக்கு அதன் மூலம் உதவி செய்திருக்கிறார்கள். கதருக்கு ராஜீய முக்கியத்துவம் இருக்கிறது என்பது உண்மைதான். ஆனால், கதருக்கு ஆதரவளிப்பது குற்றம் என்று சர்க்கார் துணிந்து அறிவிக்கக் கூடிய கட்டத்திற்கு இன்னும் நாம் வந்து விடவில்லை. பரோபகார நோக்கமுள்ள எந்த இயக்கத்தையுமே ராஜீயத்திற்குப் பயன்படுத்திக் கொண்டு விடலாம். ஆனால், அதற்காக அதிலுள்ள பரோபகார நோக்கம்கூட பகிஷ்கரிக்கப்படுகிறது என்றால், அது வருந்தத் தக்கதாகவே இருக்கும். ஆனால், மற்றொரு விஷயத்தையும் குறிப்பிடுவதுதான் நியாயம். இந்தப் பெண் டாக்டர் பிரஸ்தாபித்துள்ள ராஜா ஒருவர் தான் கதரை ஆதரிப்பதற்கோ, அல்லது என்னைப் போன்ற ஒரு பொதுஜன ஊழியனுக்குச் சாதாரண மரியாதை காட்டுவதற்கோ கூட பயப்படுகிறாரென்று அர்த்தமில்லை. ஆயினும், இந்த ராஜாவின் பகிஷ்காரத்தினால் இந்த வெகுமதி கிடைத்திருப்பது நல்லதே. ஆனால், இதைக் கண்ணுறும் சகோதரிகளுக்கு ஒரு வார்த்தை. அதாவது, பட்டினி கிடக்கும் மக்களுக்குச் செய்யவேண்டிய கடமையைப்பற்றி, இந்த சகோதரியின் சிந்தனையைத் தூண்டிய சந்தர்ப்பங்கள் ஏற்பட்டால்தான் மற்றவர்கள் அந்த உதாரணத்தைப் பின்பற்ற வேண்டும் என்ற அவசியமில்லை. வேலை கிடைக்காததால், நாட்டில் சாப்பிட வழியில்லாத கோடிக்கணக்கான மக்கள் இருக்கும் வரையில், சகோதரிகள் தம்மை அலங்கரித்துக்கொள்ளுவதற்காக விலையுயர்ந்த ஆபரணங்களை வைத்திருப்பதற்கு நியாயமில்லை என்பதைச் சுலபமாகவே புரிந்துகொள்ள முடியும். சில சமயங்களில், தம்மிடம் நகைகள் இருக்கின்றன என்ற பெருமைக்காகவே அவற்றை வைத்துக்கொள்ளுகிறார்கள். நான் ஏற்கனவே கூறியிருப்பது போல், இந்தியாவிலுள்ள பணக்காரப் பெண்கள் மட்டும் தம்மிடம் அதிகப்படியாக உள்ளவற்றைத் துறந்து விட்டு, கதரில் கிடைக்கக்கூடிய அலங்காரத்துடன் திருப்தியடைந்து விடுவார்களென்றால், கதர் இயக்கம் பூராவுக்குமே வேண்டிய நிதியை அதிலிருந்து பெற்றுவிட முடியும். அத்துடன் மட்டுமில்லை. இந்தியாவிலுள்ள பணக்காரப் பெண்கள் இப்படி நடந்து கொண்டால் தேசத்திலும், குறிப்பாக பட்டினி கிடக்கும் மக்களிடையேயும் ஏற்படக் கூடிய தார்மிக பலன் கொஞ்சமா?

—'எங் இந்தியா' – 5—4—1928

## 3

# நகைகளால் நாட்டுக்கு நஷ்டம்

பெண்கள் நகைகளை வெகுமதியாகக் கொடுக்க வேண்டும் என்று நான் கேட்டுக் கொண்டதையும், இப்படிக் கிடைத்தவை களை நான் ஏலம் போடுவதையும் கண்டித்து ஒரு பத்திரிகை எழுதியிருப்பதைப் பார்த்தேன். என்னுடைய கூட்டங்களுக்கு வரும் ஆயிரக்கணக்கான சகோதரிகள், தாம் அணிந்து கொண் டிருக்கும் எல்லா நகைகளையும் கொடுக்காவிட்டாலும், பெரும் பாலானவற்றை என்னிடம் கொடுத்துவிட வேண்டுமென்று விரும்புகிறேன். லட்சக்கணக்கானவர்கள் அரைப்பட்டினியாக வும், மக்களில் என்பது சதவிகிதத்தினர் போதிய போஷாக்கு இல்லாமலும், இருக்கும்போது, ஆபரணுதிகளை அணிவது கண்ணை உறுத்துவதாகும். இந்தியாவிலுள்ள பெண்கள் தமக் கென்று சொந்தமாக ரொக்கம் வைத்துக் கொண்டிருப்ப தென் பது அரிது. ஆனல், அவள் அணிந்து கொண்டிருக்கும் நகைகள் அவளுக்குச் சொந்தமானவை. ஆயினும், அவற்றைக் கூடத் தன்னுடைய எஜமானனுகிய கணவனின் சம்மதம் இல்லாமல் கொடுக்கவும் மாட்டாள்; கொடுக்கத் துணியவும் மாட்டாள். ஒரு நல்ல காரியத்திற்காக, தன்னுடையது என்று உள்ள ஒன் றைக் கொடுப்பது அவளுக்கு உயர்வை அளிக்கிறது. மேலும், பெரும்பாலான இந்த ஆபரணங்கள் கலைப்பொருள்களுமல்ல; அவற்றில் சில பார்ப்பதற்கே விகாரமாகவும், அழுக்கை இழுக் கும் சாதனங்களாகவும் இருக்கின்றன. கால்களில் போட்டுக் கொள்ளும் காப்பு, தண்டைகள், கழுத்தில் அணியும் கனமான மாலைகள், தலைமயிரைச் சீர்படுத்துவதற்காகவல்லாமல், சுத்த மாக வைத்துக் கொள்ளப்படாத, சில சமயங்களில் துர்நாற்றம் கூடவீசும் தலைமயிருக்கு ஆபரணங்களாக உபயோகிக்கப்படும் தலை நகைகள், மணிக்கட்டிலிருந்து முழங்கை வரையில் வரிசை வரிசையாக வளையல்கள் முதலியவைகளெல்லாம் இந்த ரகத் தைச் சேர்ந்தவை. விலையுயர்ந்த ஆபரணுதிகளை அணிவது தேசத்திற்கு ஒரு பெருத்த நஷ்டம் என்பதே என்னுடைய அபிப் பிராயமாகும். அந்த அளவுக்கு மூலதனம் பயன்படுத்தப்படா மல், முடக்கி வைக்கப்பட்டுவிடுகிறது என்பதே அதன் அர்த்த மாகும். ஆன்ம சுத்திக்கான இந்த இயக்கத்தில், ஆண்களோ, பெண்களோ நகைகளை வெகுமதிகளாக் கொடுப்பது சமூகத் திற்கு நிச்சயமாக நன்மையளிக்கும் ஒரு காரியம் என்றே நான் கருதுகிறேன். கொடுப்பவர்கள் மனமகிழ்ந்து கொடுக்கிறுர்கள். இப்படிக் கொடுக்கும் நகைகளுக்குப் பதிலாக, எக்காரணத்தை முன்னிட்டும் வேறு நகைகளை வாங்கிப் போட்டுக் கொள்ளக் கூடாது என்றும் நான் நிபந்தனை விதிக்கிறேன். தம்மை அடி மைப் படுத்தியுள்ள பொருள்களைக் கொடுத்து விடும்படி தம்மை

ஊக்கிவிட்டதற்காகப் பெண்கள் என்னை வாழ்த்தியுமிருக்கிறார்கள். பல சந்தர்ப்பங்களில், தம்முடைய இல்லங்களில் எளிமை நிலவும்படி செய்ததற்காக ஆண்களும் எனக்கு நன்றி செலுத்தியிருக்கிறார்கள்.

—'ஹரிஜன்' - 22—12—1933

## 4

## படுதாவைக் கிழித்தெறியுங்கள்

வங்காளம், பீஹார், அல்லது ஐக்கிய மாகாணத்திற்கு நான் போகும்போதெல்லாம், மற்ற மாகாணங்களைவிட அங்கே படுதா முறை (கோஷா) மிகவும் கண்டிப்பாக அனுஷ்டிக்கப்படுவதைக் கவனித்திருக்கிறேன். ஒரு நாள் இரவு வெகு நேரத்திற்குப் பிறகு தர்பங்காவில் ஒரு கூட்டத்தில் பேசினேன். சப்தமோ தொந்தரவோ, சமாளிக்க முடியாத கூட்டமோ இல்லாமல் அமைதியான சூழ்நிலையில் அந்தக் கூட்டம் நடைபெற்றது. என்னெதிரில் ஆண்கள் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். பின்புறத்திலும், திரைக்குப்பின்னாலும் பெண்கள் இருந்தார்கள். பெண்கள் இவ்வாறு உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள் என்று என்னிடம் மற்றவர்கள் சொல்லித்தான் தெரிந்தது. ஒரு அனாதை இல்லத்திற்கு அஸ்திவாரக்கல் நாட்டுவது சம்பந்தமான விழா அது. ஆனால், திரைக்குப் பின்னாலிருந்த பெண்களுக்காகப் பேசும்படி கேட்டுக் கொண்டார்கள். திரைக்குப் பின்னால் எவ்வளவு பேர் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள் என்பது எனக்குத் தெரியாது. ஆனால், அந்தத் திரையைப் பார்த்தபோது எனக்குத் துக்கமாயிருந்தது. அது எனக்கு வேதனையளிப்பதாகவும், அவமானமாகவும் இருந்தது. காட்டுமிராண்டித்தனமான ஒரு பழக்கத்தை விடாமல் பற்றிக் கொண்டிருப்பதன் மூலம், இந்தியாவிலுள்ள பெண்களுக்கு ஆண்கள் இழைக்கும் தவறைப் பற்றிச் சிந்தித்தேன். இந்தப் பழக்கம் ஆரம்பமான காலத்தில், அதற்கு ஏதாவது அவசியம் இருந்திருக்கலாம். ஆனால், இப்போது அதனால் பிரயோசனமே இல்லை; அத்துடன் அது நாட்டுக்குச் சொல்லொணாக் கெடுதலையும் விளைவிக்கிறது. சென்ற நூறு ஆண்டுகளாக நாம் பெற்றுவந்துள்ள கல்வியினால் ஒரு பலனும் ஏற்படவில்லை என்றே தோன்றுகிறது. ஏனெனில், படித்தவர்கள் வீட்டிலும் படுதா முறை பின்பற்றப் படுவதைக் காண்கிறேன். அதில் அவர்களுக்கு நம்பிக்கை இருக்கிறது என்பதற்காகவல்ல; மிருகத்தனமான இந்தப் பழக்கத்தை ஒரேயடியாக ஒழித்துக் தள்ளுவதற்கு அவர்களுக்குத் துணிச்சலில்லை. ஆயிரக்கணக்கான பெண்கள் கலந்து கொள்ளும் நூற்றுக்கணக்கான

கூட்டங்களில் நான் பேசுகிறேன். இந்தக் கூட்டங்களில் ஏற்படும் சப்தம், இரைச்சல் காரணமாக, அங்கே வந்துள்ள பெண்களுக்குப் பலனளிக்கத்தக்க வகையில் ஏதாவது பேசுவது அசாத்தியமாகி விடுகிறது. தங்களுடைய இல்லங்களிலும், முற்றங்களிலும் இவர்கள் அடைபட்டுக் கிடக்கும் வரையில் வேறென்ன எதிர்பார்க்க முடியும்? ஆகையால், இவர்களை ஒரு பெரிய அறையில் கொண்டுவந்து வைத்து, திடீரென்று யாரோ ஒருவர் பேசுவதைக் கேட்கச் சொல்லும்போது, தாம் என்ன செய்ய வேண்டும், எப்படி பிரசங்கத்தைக் கேட்க வேண்டும் என்று அவர்களுக்குப் புரிவதில்லை. அமைதி ஏற்படச் செய்த பிறகு, பல அன்றாட விஷயங்களில் அவர்களை அக்கறை காட்டச் செய்வதும் கஷ்டமாகி விடுகிறது. அவர்கள் சுயேச்சையாக இருக்கும்படி அனுமதிக்கப்பட்டதே யில்லை யாகையால், அந்த விஷயங்களைப் பற்றி அவர்களுக்கு ஒன்றும் தெரிவதில்லை. இது சற்று மிகைப்பட்ட சித்திரம்தான் என்று எனக்குத் தெரியும். என் கூட்டங்களுக்கு வரும் ஆயிரக்கணக்கான சகோதரிகள், உயர்ந்த பண்பாடு உடையவர்கள் என்பதை நான் அறிவேன். ஆண்களைப் போலவே அவர்களும், சந்தர்ப்பம் ஏற்படும்போது உயர்ந்த முறையில் நடக்கக் கூடியவர்கள் என்பதும் எனக்குத் தெரியும். அவர்கள் வெளியே போவதற்கு வாய்ப்புகள் இருக்கின்றன என்பதையும் நான் அறிவேன். ஆனால், படித்தவர்களுக்கு இது ஒரு பெருமை என்று சொல்லுவதற்கில்லை. அவர்கள் ஏன் இன்னும் அதிகமாகப் போகவில்லை என்பதே கேள்வி. ஆண்கள் அனுபவிக்கும் அதே உரிமைகளை நமது பெண்களும் ஏன் அனுபவிக்க வில்லை? அவர்களும் வெளியே சென்று ஏன் சுதந்திரக் காற்றை அனுபவிக்கக் கூடாது?

கற்பு என்பது கட்டிக் காத்து வளர்க்க வேண்டிய ஒன்றல்ல. இதை ஒருவர் மீது சுமத்தவும் முடியாது. சுற்றிலும் திரை போட்டு இதைக் காப்பாற்றவும் முடியாது. அது உள்ளிருந்தே வளர்ச்சி பெற வேண்டும்; அதற்கு மதிப்பு இருக்க வேண்டுமானால், எந்தக் கவர்ச்சியையும் சமாளிக்க வல்லதாக அது இருக்க வேண்டும். சீதையின் கற்பைப்போன்று அவ்வளவு உறுதியானதாயிருக்க வேண்டும். ஆண்கள் பார்த்தாலே கருகிவிடக் கூடுமென்றால், அது மிகவும் அற்பமானதாகவே இருக்க வேண்டும். பெண்கள் ஆண்களை நம்பத்தான் வேண்டும் என்ற நிர்ப்பந்தம் இருப்பதுபோல், ஆண்கள் ஆண்களாயிருக்க வேண்டுமானால், தம் மனைவியரையும் நம்பத்தான் வேண்டும். நம்முடைய உறுப்புகளில் ஒன்று, பூராவாகவோ, ஒரு அளவுக்கோ செயலற்றுப் போகும் நிலையில் நாம் வாழாதிருப்போமாக. ராமன் சுதந்திர புருஷனாயிருந்ததைப் போல், சீதையும் அவ்வளவு சுதந்திரம் உள்ளவளாக இருந்திரா விட்டால் ராமன் ஏது? துணிவு நிறைந்த சுதந்திரத்திற்கு உதாரணம் வேண்டுமானால் திரௌபதியை எடுத்துக் கொள்ளலாம். சீதை மென்மையின் அவதாரம். அவள் மிருதுவான ஒரு மலர் போன்றவள். திரௌபதி, உறுதியான

ஆல் போன்றவள். ராஜரீகமான தன்னுடைய மன உறுதிக்கு வல்லமை மிக்க பீமனையே அவள் பணிய வைத்தாள். மற்றவர்கள் பீமனைக் கண்டு நடுங்கினார்கள்; ஆனால், திரௌபதியிடம் அவன் பசுவைப்போல் அடங்கியிருந்தான். பாண்டவர்களில் யாருடைய பாதுகாப்பையும் அவள் நாடவில்லை. இந்தியப் பெண்கள் சுதந்திரமாக வளர்ச்சி பெறுவதில் தலையிடுவதன் மூலம் சுதந்திரமான, மனோதிடமுள்ள மனிதர்களின் வளர்ச்சியில் நாம் தலையிடுபவர்களாகிறோம். நமது பெண்கள் விஷயத்திலும், 'தீண்டாதவர்கள்' விஷயத்திலும், நாம் செய்யும் காரியங்கள், ஆயிரம் மடங்கு அதிக வேகத்துடன் நம் தலையிலேயே வந்து விடியும். நமது பலவீனம், சஞ்சல புத்தி, குறுகிய மனப்பான்மை, நிர்க்கதியான உணர்ச்சி ஆகியவைகளுக்கு இதுவும் ஒரு அளவு காரணமாகும். ஆகையால், ஒரு பெரிய முயற்சி செய்து படுதாவைக் கிழித்தெறிவோமாக.

—'எங் இந்தியா' - 3—2—1927

## 5

# படுதா முறை

இந்தியாவில் படுதா முறை என்பது, ஹிந்துக்களின் ஆதிக்கம் க்ஷீண மடைந்த காலத்தில் ஏற்பட்ட சமீப காலப் பழக்கம் என்பதே என்னுடைய அபிப்பிராயம். பெருமை மிக்க திரௌபதியும், மாசற்ற சீதையும் வாழ்ந்த நாட்களில் படுதா முறை இருந்திருக்கமுடியாது. திரைக்குப் பின்னாலிருந்துகொண்டு கார்கி தன்னுடைய உபதேசங்களைச் செய்திருக்க முடியாது. இந்தியா பூராவிலுமே படுதா முறை இல்லை. தட்சிணம், குஜராத், பஞ்சாப் ஆகிய இடங்களில் இந்த வழக்கமே தெரியாது. விவசாயிகளுக்கும் இது தெரியாது. இந்த மாகாணங்களிலுள்ள பெண்களும், விவசாய வகுப்பைச் சேர்ந்த பெண்களும் அனுபவிக்கும் சுதந்திரத்தினால், அசம்பாவிதம் எதுவும் நேர்ந்ததாக நாம் கேள்விப்படுவதில்லை. படுதா முறை இல்லை என்ற காரணத்தினால் உலகத்தின் மற்றப் பகுதிகளில் உள்ள ஆண்களும் பெண்களும் ஒழுக்கத்தில் குறைந்தவர்கள் என்று சொல்லுவதும் நியாயமாகாது. புராதனமானது எதுவாயிருந்தாலும், அது நல்லது என்று கடிதம் எழுதியிருப்பவர் வாதாடுகிறார். ஈடிணையற்ற ஒரு தார்மிக கோட்பாட்டை நமது முன்னோர்கள் நமக்கு அளித்திருக்கிறார்கள் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், எந்த விஷயத்திலுமே அவர்கள் தவறிழைக்க முடியாதவர்கள் என்பதை நான் ஏற்றுக்கொள்ள முடியாது. இன்னதுதான் உண்மையில் புராதனமானது என்று யார் சொல்ல முடியும்? 108 உபநிஷத்து

களுமே ஒரே மாதிரி புனிதத் தன்மை உடையவைகளா? சோதனைக்குட்படுத்தப்படக் கூடிய எதையும், பகுத்தறிவு என்ற உறைகல்லில் தீட்டிப் பார்க்க வேண்டும்; அந்தச் சோதனையில் வெற்றி பெருதவை. புராதன ஆடைகளில் தோன்றினுலும் கூட அவற்றை நிராகரித்து விடவேண்டும்.

—'எங் இந்தியா' - 24—3—1927

## 6

# படுதாவுக்கு அழிவுகாலம்

பீகாரைச் சேர்ந்த மிகச் செல்வாக்குள்ள சில கனவான்களும், அந்த மாகாணத்தைச் சேர்ந்த பெண்களும் சேர்ந்து, படுதா முறையை அடியோடு ஒழித்து விடவேண்டுமென்று, நல்ல வாதங்களுடன் ஒரு வேண்டுகோள் வெளியிட்டிருக்கிருர்கள். இது பீகாரில் வெளியிடப்பட்டிருக்கிறது. இந்த வேண்டுகோளில் ஐம்பதுக்கு மேற்பட்ட பெண்கள் கையெழுத்திட்டிருப்பதிலிருந்து, இந்த வேலையைத் தீவிரமாகச் செய்தால், பீகாரில் படுதா முறை சென்ற கால நிகழ்ச்சிகளில் ஒன்ருகிவிடுமென்று தெரிகிறது. இந்த வேண்டுகோளில் கையெழுத்திட்டுள்ள பெண்கள், மேல்நாட்டு நாகரிகத்தை மேற்கொண்டவர்களல்ல; இவர்கள் வைதிக மனப்பான்மையுள்ள ஹிந்துக்கள் என்பது குறிப்பிடத்தக்கது. அந்த வேண்டுகோளில் திட்டவட்டமாகப் பின்வருமாறு கூறப்பட்டிருக்கிறது:

"கர்நாடகம், மகாராஷ்டிரம், கேரளாவிலுள்ள சகோதரிகளைப்போலவும், முற்றிலும் இந்திய தோரணையிலும், ஐரோப்பிய மோஸ்தர் முயற்சிகளை யெல்லாம் தவிர்த்தும், எங்கள் மாகாணத்தில் உள்ள பெண்களும் இஷ்டம்போல் நடமாடவும், சமூக வாழ்வின் எல்லா அம்சங்களிலும் தமக்குரிய பங்கைச் செய்யவும் உரிமை இருக்க வேண்டுமென்று விரும்புகிருேம். நிர்ப்பந்தமாக அடைபட்டுக் கிடக்கும் நிலைமையிலிருந்து, முற்றிலும் மேல்நாட்டு மோஸ்தருக்கு மாறிவிடுவது கொதிக்கும் எண்ணெய்க்குப் பயந்து நெருப்பில் குதிப்பது போலாகும். ஆகவே, நமது பெண்கள் இந்திய லட்சியங்களுக்கிணங்க வளர்ச்சி பெறவேண்டுமானல், படுதா முறை ஒழிய வேண்டுமென்று நாங்கள் கருதுகிருேம். நமது சமூக வாழ்வின் கம்பீரத்தையும், லாவண்யத்தையும் அவர்கள் மேலும் அழகுறச் செய்ய வேண்டுமென்றும், அதன் தார்மிகத்தை உயர்த்த வேண்டுமென்றும், திறமை வாய்ந்த இல்லற நிர்வாகிகளாகவும், கணவன்மார்களுக்கு உதவியான தோழியர்களாகவும், சமூகத்திற்குப் பிரயோசனமான உறுப்பினர்களாகவும் இருக்கவேண்டுமென்று நாம் விரும்பினல், இப்போது நடைமுறையிலிருக்கும் படுதாப் பழக்கம் போகவேண்டும். அவர்களுடைய முகமூடி கிழித்தெறியப்பட்டாலொழிய, அவர்களுடைய நலன்களுக்கான எந்த நடவடிக்கையையும் எடுத்துக்கொள்ள முடியாது. நம்முடைய

ஜனத்தொகையில் பாதியின் சக்தி சிதைபட்டுக் கிடக்கிறது. இயற்கைக்கு மாருக அடைபட்டுக் கிடக்கும் இந்தச் சக்தி விடுவிக்கப்பட்டால், அதன் பலனுக ஒரு ஊக்கம் பிறக்கும். இந்த ஊக்கம் சரியான வழியில் செலுத்தப்பட்டால், அது எங்கள் மாகாணத்திற்குப் பெரும் நன்மையாயிருக்குமென்று நாங்கள் உறுதியாக நம்புகிறேம்.''

பீகாரிலுள்ள படுதா முறையின் தீமை எனக்குத் தெரியும். இந்த இயக்கம், சரியான தருணத்திலேயே ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது.

இந்த இயக்கம் தோன்றிய விதம் விசித்திரமானது. பாபு ராமானந்தன் மிச்ரா என்ற கதர்த் தொண்டர், படுதா என்ற அடக்குமுறையிலிருந்து தம் மனைவியை விடுவிக்க விரும்பினர். அந்தப் பெண் ஆசிரமத்திற்கு வருவதை அவருடைய மனிதர்கள் அனுமதிக்காததால், ஆசிரமத்திலிருந்து இரு பெண்களைத் தம் மனைவிக்குத் துணைவிகளாக அழைத்துச் சென்ருர். அவ்விருவரில் மகன்லால் காந்தியின் பெண் ராதா பென் ஒருத்தி. அவள் ஆசிரியையாக இருக்கவேண்டுமென்று ஏற்பாடு. அவளுடன் காலஞ்சென்ற தால்பகதூர் கிரியின் மகள் துர்காதேவியும் போனுள். ஸ்ரீமதி மிச்ராவைப் படுதா முறையிலிருந்து மாற்றுவதற்கு இந்த ஆசிரமப் பெண்கள் செய்த முயற்சி, அந்த இளம் மனைவியின் பெற்றேர்களுக்குப் பிடிக்கவில்லை. எல்லாக் கஷ்டங்களையும் அந்தப் பெண்கள் பொறுத்துக்கொண்டார்கள். இதற்கிடையே தம் மகளைப் பார்ப்பதற்காக மகன்லால் காந்தி அங்கே போனுர். எவ்வளவு கஷ்டங்கள் வந்தாலும் பொறுத்துக்கொண்டு, தம்முடைய முயற்சியில் அவர்கள் உறுதியாக இருக்கச் செய்ய வேண்டுமென்பதும் அவர் விருப்பம். ராதா பென் தன் பணியைச் செய்துகொண்டிருந்த கிராமத்தில் அவர் நோய்வாய்ப்பட்டு, பின்னர் பாட்னுவில் இறந்தார். ஆகவே, படுதாவை எதிர்த்துப் போராடுவதை தங்களுடைய புனிதமான கடமைகளில் ஒன்ருக பீகார் நண்பர்கள் மேற்கொண்டனர். ராதா பென், அந்தப் பெண்ணை ஆசிரமத்திற்கு அழைத்து வந்தாள்; அவள் ஆசிரமத்திற்கு வந்தது மேலும் கிளர்ச்சியை உண்டாக்கியது. இதனுல் ஏற்கனவே தயாராயிருந்த அவளுடைய கணவன் இன்னும் அதிக ஆர்வத்துடன் போராட்டத்தில் குதிக்க நேர்ந்தது. இவ்வாருக ஒரு சொந்த விஷயத்திற்காக ஆரம்பமான இந்த இயக்கம், ஊக்கத்துடன் தொடர்ந்து நடத்தப்படும் போல் தோன்றுகிறது. பீகாரின் அனுபவ மிக்க போர் வீரரும், பல போராட்டங்களைப் பார்த்திருப்பவருமான பாபு பிரஜ்கிஷோர் பிரசாத் இதற்குத் தலைமை வகித்து நடத்துகிருர். அவர் தலைமை வகித்து நடத்திய இயக்கம் எதுவும் கருகி மடிய விடப்பட்டதாக எனக்கு ஞாபகமில்லை.

பீகாரிலுள்ள ஜனத்தொகையின் ஒரு பாதி, சமூக சேவை செய்ய முடியாமல் கொடியதொரு தடையை விதிப்பதும், அதற்குரிய சுதந்திரத்தை மறுப்பதும், சில சமயங்களில் நல்ல

வெளிச்சம், காற்றைக்கூட மறுப்பதுமான இந்த முறையை ஒழிப்பதற்கு அடுத்த ஜுலை 8-ஆம் தேதி முதல் தீவிரமான இயக்கம் ஆரம்பிப்பதென்று தேதி நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. நம்மிடையே உள்ள பல சமூகக் கேடுகள், நாம் சுயராஜ்யப் பாதையில் முன்னேறுவதற்குத் தடைகளாக இருக்கின்றன என்பதை நாம் எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரமாக உணருகிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு நமது லட்சியத்தை நோக்கி நாம் முன்னேறுவதும் துரிதமாயிருக்கும். சுயராஜ்யம் பெறும் வரையில் சமூக சீர்திருத்தங்களை ஒத்திப்போடுவது என்பது, சுயராஜ்யத்தின் அர்த்தத்தையே புரிந்துகொள்ளாததாகும். நம்மிடையே உள்ள சிறப்புப் பாதி செயலற்றுப்போகும்படி விட்டுவிட்டால், நம்மை நாமே காப்பாற்றிக்கொள்ளுவதோ, மற்ற நாடுகளுடன் நல்ல முறையில் போட்டி போடுவதோ சாத்திய மில்லாமற் போய்விடும்.

ஆகையால், படுதாவை எதிர்த்துப் போராடுவதென்று பீகார் தலைவர்கள் உற்சாகத்துடன் முன்வந்திருப்பதைப் பாராட்டுகிறேன். எந்தச் சீர்திருத்தத்தின் வெற்றியும் அதில் ஈடுபட்டுள்ள ஊழியர்களின் தூய்மையைப் பொறுத்திருக்கிறது. இதுவும் அப்படித்தான். இந்த வேண்டுகோளில் கையெழுத்திட்டுள்ள பெண்களுக்கு மிகுந்த பொறுப்பு இருக்கிறது. படுதா முறையைக் கைவிட்டாலும்கூட, அவர்கள் இந்தியப் பெண்களின் வழக்கமான அடக்கத்தை விடாமல், எந்தக் கஷ்டத்தையும் பொருட்படுத்துவதில்லை என்ற தைரியத்தையும், உறுதியையும் காட்டினால், இவர்களுடைய முயற்சி சீக்கிரத்தில் வெற்றி பெறுவதைக் காண்போம். படுதாவுக்கு எதிரான போராட்டத்தை. சரியான முறையில் நடத்துவது பீகாரிலுள்ள எல்லா ஆண்களுக்கும் பெண்களுக்கும் சரியான கல்வியறிவைப் புகட்டுவதாகும்.

—'எங் இந்தியா' - 28—6—1928

# 7

# பீகாரில் படுதா முறை

8-ஆம் தேதி யன்று பீகாரின் பல முக்கியமான இடங்களில் படுதா முறைக்கு எதிராகக் கட்டுப்பாடான ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்றன. இந்த ஆர்ப்பாட்டங்களை ஏற்பாடு செய்தவர்கள் எதிர்பார்த்ததற்கு மேலாகவே இது வெற்றிகரமாக நடந்தது என்று பீகார் நண்பர் ஒருவர் எனக்கு எழுதியிருக்கிறார். பாட்னா கூட்டத்தைப் பற்றி 'ஸர்ச்லைட்' என்ற பத்திரிகையில் வெளிவந்துள்ள செய்தி பின்வருமாறு ஆரம்பமாகிறது :

"சென்ற ஞாயிற்றுக்கிழமையன்று (8-ஆம் தேதி) பாட்னாவில் ராதிகா சின்ஹா கழகத்தில் நடந்த ஆண்களும், பெண்களும் கொண்ட கலப்புக்

கூட்டத்தில் அபூர்வமான காட்சியொன்று காணப்பட்டது. மிகவும் கடுமையான மழை பெய்துகொண்டிருந்தது. நல்ல வேளையாகக் கூட்டம் ஆரம்பமாகும் சமயத்தில் மழை நின்றுவிட்டது. மழை பெய்துகொண்டிருந்த போதிலும், எதிர்பாராத விதமாகப் பெரிய கூட்டம் கூடிற்று. ராதிகா சின்ஹா கழகத்தில் விசாலமான மண்டபத்தில் கூடியிருந்தவர்களில் பாதிப்பேர் பெண்கள். அவர்களில் முக்கால்வாசிப்பேர் முதல்நாள் வரையில், ஏன், ஒரு மணி நேரத்திற்கு முன்னால் வரையில் கூடப் படுதா முறையைப் பின்பற்றி வந்தவர்கள்.''

அந்தக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின் மொழிபெயர்ப்பு பின்வருமாறு:

''நாட்டுக்கும், குறிப்பாகப் பெண்களுக்கும் சொல்லொணுக் கேட்டை விளைவித்திருப்பதும், இன்னமும் விளைவித்துக்கொண்டிருப்பதுமான கொடிய படுதாமுறையை இன்று முதல் ஒழித்துவிட்டோம் என்பதை இங்கே கூடியுள்ள பாட்னுவாசிகளாகிய நாங்கள் இதன்மூலம் அறிவிக்கிறோம். இன்னும் ஒரு முடிவுக்கு வராமல் ஊசலாடிக்கொண்டிருக்கும் மாகாணத்திலுள்ள மற்றப் பெண்களும் இந்த முறையைக் கூடிய சீக்கிரத்தில் ஒழித்துவிட்டு, அதன்மூலம் தமது கல்வியையும், சுகாதாரத்தையும் அபிவிருத்தி செய்துகொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறோம்."

படுதாவை ஒழிப்பதற்குத் தீவிரமான பிரசாரம் செய்யவும், பீகாரில் பெண்களின் கல்வியைப் பரப்பவும் அந்தக் கூட்டத்தில் ஒரு தாற்காலிக கமிட்டி நியமிக்கப்பட்டது. மாகாணத்திலுள்ள ஒவ்வொரு நகரத்திலும், கிராமத்திலும் மஹிள சமிதிகளை (மாதர் சங்கங்கள்) ஏற்படுத்த வேண்டுமென்றும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. பெண்கள் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குத் தங்கி, 'நல்ல மனைவிகளாகவும், தகுதியுள்ள தாய்மார்களாகவும்,' நாட்டுக்குப் 'பிரயோசனமான ஊழியர்களாகவும்' பயிற்சி பெறுவதற்காக பல்வேறு இடங்களில் மஹிள ஆசிரமங்களை அமைக்க வேண்டுமென்று மற்றொரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இதற்காக அக்கூட்டத்திலேயே ஐயாயிரம் ரூபாய் வரையில் நன்கொடைகள் வாக்களிக்கப்பட்டன. பல பெண்கள் ரூ. 25 முதல், ரூ. 250 வரையில் நன்கொடை அளித்திருக்கிறார்கள். பீகாரில் மேலும் பல இடங்களில் நடந்த கூட்டங்களைப் பற்றிய செய்திகளும் அந்தப் பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன. இந்த இயக்கத்தைச் சீராக ஏற்பாடு செய்து, உற்சாகத்துடன் நடத்தினால், படுதா முறை இருந்த இடம் தெரியாமல் போய் விடும். இது மேல்நாட்டு மோஸ்தருக்குத் திருப்பும் இயக்கமல்ல என்பதைக் கவனிக்க வேண்டும். இயற்கையிலேயே பழமையில் நம்பிக்கையுடையவர்களும், அதே சமயத்தில் ஹிந்து சமூகத்தில் புகுந்து கொண்டுவிட்ட தீமைகளையெல்லாம் நன்கு உணர்ந்திருப்பவர்களுமான தலைவர்களால் நடத்தப்படும் உள்ளூர் இயக்கம்தான் இது. பாபு பிரஜ்கிஷோர் பிரசாதும், தொலைவிலுள்ள லண்டனிலிருந்து இதை அக்கறையுடன் கவனித்துக் கொண்டிருக்கும் பாபு ராஜேந்திர பிரசாதும், மேல்நாட்டு நாகரீ

கத்திற்கு மாறிவிட்ட இந்தியர்களல்ல. அவர்கள் நல்ல ஹிந்துக்கள்; இந்தியப் பண்பாட்டிலும் பரம்பரையிலும் நம்பிக்கையுள்ளவர்கள். அவர்கள் குருட்டுத்தனமாக மேல்நாட்டு முறைகளைப் பின்பற்றுபவர்கள் அல்ல; ஆயினும், அதில் உள்ள நல்லவற்றை ஏற்றுக்கொள்ளவும் அவர்கள் தயங்குவதில்லை. ஆகையால், இந்த இயக்கம் இந்தியப் பண்பாட்டில் உள்ள உயர்ந்த அம்சங்களை எந்த விதத்திலும் குலைத்து விடுமென்றோ, குறிப்பாக, இந்தியப் பெண்மையின் விசேஷத் தன்மைகளான மென்மையையும், அடக்கத்தையும் குலைத்துவிடுமென்றோ, அச்சப்படுவதற்குக் காரணமே இல்லை. இந்த இயக்கம் என்ன செய்யுமோ என்ற அச்சத்துடன் தயங்கிக் கொண்டிருப்பவர்கள் அப்படியெல்லாம் பயப்பட வேண்டியதில்லை.

—'எங் இந்தியா' – 26—7—1928

   

படுதா முறையை எதிர்த்துப் பேசக் கூடாது என்று சில முஸ்லிம்கள் காந்திஜியை எச்சரித்தனர். ஆகையால், அதைப் பற்றிப் பேசுவதற்கு அவர் கொஞ்சம் தயங்கினர். ஆனல், பல ஹிந்துப் பெண்களும் படுதா முறையைப் பின்பற்றுவதையும், அவருக்குத் தெரிந்த பல மலேயா முஸ்லிம் பெண்கள் படுதாவை மேற்கொள்ளவில்லை என்பதையும் கண்டபோது அவர் தைரியம் கொண்டார். இந்தியாவில் படுதா முறையைப் பின்பற்ருத பல பிரபல முஸ்லிம் பெண்கள் இருப்பதும் அவருக்குத் தெரியும். கடைசியாக, உள்ளத்தை மறைக்கும் படுதாதான் உண்மையான படுதா. படுதாவுக்குள்ளிருந்து எட்டிப் பார்த்து ஒரு ஆணின் மீது தன் பார்வையைச் செலுத்தும் ஒரு பெண், படுதாவின் நோக்கத்தையே மீறுகிருள். முகம்மது நபிகள் எந்த நோக்கத்துடன் படுதா வேண்டுமென்று சொன்னரோ, அதே உணர்ச்சியுடன் ஒரு பெண் அதைப் பின்பற்றினல், உண்மையில் அவள் முகம்மது நபிகளின் விருப்பத்தை நிறைவேற்றியவளாவாள்?

'ஹரிஜன், - 23—3—1947

பகுதி நான்கு

# இளம் விதவைகள் துயரம்

## 1

## விதவையின் பிரலாபம்

விதவைகள் மறுமணம் என்பது ஒரு அளவுக்கு அவசியமே. நம்முடைய இளைஞர்கள் தம்மைத் தாமே பரிசுத்தம் செய்து கொண்ட பிறகுதான் இந்தச் சீர்திருத்தத்தைக் கொண்டுவர முடியும். அவர்கள் தூய்மையானவர்களாக இருக்கிறார்களா? அவர்கள் பெறும் கல்வியின் மூலம் பலன் பெறுகிறார்களா? அல்லது அவர்களுடைய கல்வியை ஏன் குறை கூற வேண்டும்? குழந்தைப் பருவத்திலிருந்தே நம்மிடம் ஒரு அடிமை மனப் பான்மை ஊட்டப்பட்டு வருகிறது. நாம் சுதந்திரமாகச் சிந்திக்க முடியவில்லையென்றால், எப்படி சுதந்திரமாகச் செயல்பட முடியும்? சாதி, அந்நியக் கல்வி, அந்நியர் ஆட்சி ஆகியவற்றிற் கெல்லாம் நாம் அடிமைப்பட்டிருக்கிறோம். நமக்கு அளிக்கப் பட்டுள்ள வசதிகள் ஒவ்வொன்றும் நம்முடைய தளைகளாகி விட்டன. நம்மிடையே படித்த இளைஞர்கள் எவ்வளவோ பேர் இருக்கிறார்கள். தம் இல்லங்களிலேயே உள்ள விதவைகளின் கதியைப் பற்றி அவர்களில் எவ்வளவு பேர் சிந்தித்துப் பார்த் திருக்கிறார்கள்? எவ்வளவு பேர் பணத்தின் கவர்ச்சிக்கு ஆளா காமல் மீண்டிருக்கிறார்கள்? எவ்வளவு பேர் இவர்களைத் தமது சொந்த சகோதரிகளாகவும், தாய்மார்களாகவும் பாவித்து, அவர் களுடைய கௌரவத்தைக் காப்பாற்றியிருக்கிறார்கள்? தம்மு டைய சாதிக்காரரர்கள் என்ன வேண்டுமானாலும் செய்து கொள் ளட்டுமென்று, எவ்வளவு பேர் துணிந்து தம் நம்பிக்கைப்படி செயலாற்றியிருக்கிறார்கள்? அந்தப் பேதை விதவைக்கு யார் புகல்? அவளுக்கு நான் என்ன ஆறுதல் அளிக்க முடியும்? அவர்களில் எவ்வளவு பேர் ‘நவஜீவன்’ படிப்பவர்களாயிருப்பார் கள்? இதைப் படிக்கும் ஒரு சிலர் கூடத் தம் நம்பிக்கைப்படி நடக்க முடியுமா? ஆயினும், விதவையின் பிரலாபத்தைப் பற்றி எப்போதாவது நான் ‘நவஜீவன்’ பத்திரிகையில் எழுதிக் கொண்டுதான் இருக்கிறேன். சந்தர்ப்பம் ஏற்படும்போது மேலும் எழுதவும் உத்தேசித்திருக்கிறேன். இதற்கிடையே தன்னுடைய பாதுகாப்பில் குழந்தை விதவையை வைத்துக் கொண்டுள்ள ஒவ்வொருவரும் அவளுக்கு மணம் செய்து வைப் பதைக் கடமையாகக் கருத வேண்டுமென்று கேட்டுக் கொள்ளு கிறேன்.

— ‘எங் இந்தியா’ 4—2—1926

# 2

# கட்டாய விதவை நிலை

இந்தியா பூராவிலும் எவ்வளவு விதவைகள் இருக்கிறார்கள் என்ற புள்ளி விவரங்களைக் கொண்ட ஒரு பிரசுரத்தை சர் கங்காராம் வெளியிட்டிருக்கிறார்; ஒவ்வொரு மாகாணத்தைப் பற்றிய விவரங்களையும் கொடுத்திருக்கிறார். இந்த விவரங்கள் ஒவ்வொரு சீர்திருத்தவாதியினிடமும் இருக்கவேண்டும்.

சீர்திருத்தம், எந்த வரிசையில் நடைபெறவேண்டுமென்பதைப்பற்றி சர் கங்காராம் கூறுவதைப் பலர் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். அவர் கூறும் வரிசை பின்வருமாறு:

1. சமூக சீர்திருத்தம்
2. பொருளாதார சீர்திருத்தம்
3. சுயராஜ்யம் அல்லது ராஜீய விடுதலை

சர் கங்காராமுக்கு முன்னால் வாழ்ந்தவர்கள், சமூக சீர்திருத்த ஆர்வத்தில் அவருக்குக் கொஞ்சமும் குறைந்தவர்களல்ல. ஆனால், அவர்கள் சர் கங்காராம் கூறுவதைப் போல் நினைக்கவில்லை. சமூக சீர்திருத்தத்தைப் போலவே சுயராஜ்யமும் அவ்வளவு முக்கியமானதே என்று ரானடே, கோகலே, சாந்தவர்க்கார் ஆகியோர் நினைத்தார்கள். லோகமான்ய திலகரின் சமூக சீர்திருத்த ஆர்வமும் குறைவானதல்ல. ஆனால், எல்லா சீர்திருத்தங்களுமே சேர்ந்து நடைபெற வேண்டுமென்று அவரும் மற்றவர்களும் நினைத்தார்கள். மற்றவைகளைவிட ராஜீய சீர்திருத்தம்தான் அதிக அவசரமானது என்று லோகமான்யரும், கோகலேயும் கருதினார்கள். நாம் ராஜீய அடிமைத்தனத்தில் இருப்பதால், வேறெந்த வேலையையும் செய்வதற்கு முடியாதவர்களாக இருக்கிறோம் என்று அவர்கள் நினைத்தார்கள்.

இதில் உள்ள உண்மை என்னவென்றால், ராஜீய விடுதலை என்பது சர்வஜன விழிப்பாகும். தேசீய நடவடிக்கைகளின் எல்லா அம்சங்களையும் தழுவாமல் இது ஏற்பட முடியாது. ஒரு சீர்திருத்தம் என்றால், ஒரு விழிப்பு ஏற்பட்டிருக்கிறது என்றுதான் அர்த்தம். தேசம் உண்மையாக விழிப்படைந்துவிட்டால், ஒரு துறையில் மட்டும் சீர்திருத்தம் ஏற்படுவதைக் கண்டு அது திருப்தியடையாது. ஆகையால், எல்லா இயக்கங்களும் நடைபெறவேண்டும்; ஒரே சமயத்திலும் நடைபெற வேண்டும்.

ஆனால், அவசியமான சீர்திருத்தத்திற்கு சர் கங்காராம் கூறும் வரிசையைப் பற்றி அவருடன் வாதம் செய்து கொண்டிருக்க வேண்டியதில்லை. ராஜீய, பொருளாதாரப் பிரச்னை

களுக்கு அவர் கூறும் பரிகாரங்களை நாம் ஒப்புக் கொள்ளாவிட்டாலும், சமூக சீர்திருத்தத்தில் அவருக்குள்ள ஆர்வத்தை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். அவர் கொடுத்துள்ள புள்ளி விவரங்கள் உண்மையாகவே பயங்கரமாயிருக்கின்றன. "குழந்தை மணங்களாலும், கட்டாய விதவை நிலைகளாலும் ஏற்படும் பரிதாபத்தைக் காட்டும் புள்ளி விவரங்களைக் கண்டு யார்தான் அழமாட்டார்கள்?'' என்று அவர் கேட்கிருர். 1921-ம் வருடத்திய ஜனக் கணக்கின்படி ஹிந்து விதவைகளைப் பற்றிய விவரங்கள் பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| 5 வயது வரையுள்ள விதவைகள் | — | 11,892 |
| 5 முதல் 10 வயது வரையுள்ள விதவைகள் | — | 85,037 |
| 10 முதல் 15 வயது வரையுள்ள விதவைகள் | — | 2,32,147 |
| | | 3,29,076 |

அதற்கு முந்திய இரண்டு ஜனக் கணக்குகளின் விவரங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. 1921-ஆம் வருடத்தின் மொத்த எண்ணிக்கை, முந்திய இருபது வருடங்களுடையதை விடச் சற்றி அதிகமாக இருக்கிறது. மற்ற வகுப்புகளைச் சேர்ந்த விதவைகளின் விவரங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஹிந்து குழந்தை விதவைகளுக்கு எவ்வளவு பெரிய தவறிழைக்கப்படுகிறது என்பதையே இந்த விவரங்கள் காட்டுகின்றன. மதத்தின் பெயரால் பசுவைக் காப்பாற்ற வேண்டுமென்று கேட்கிரேம். குழந்தை விதவையின் ரூபத்திலுள்ள மனிதப் பசுவுக்குப் பாதுகாப்பளிக்க மறுக்கிரேம். மதத்தில் பலாத்காரத்திற்கு இடம் கொடுக்க மாட்டோம். ஆனல், திருமணச் சடங்கின் அர்த்தத்தையே புரிந்துகொள்ள முடியாத மூன்று லட்சம் குழந்தை விதவைகளின் மீது, மதத்தின் பெயரைச் சொல்லி பலவந்தமாக விதவை நிலையைச் சுமத்துகிரேம். சின்னஞ் சிறு பெண்கள் மீது விதவை நிலையைச் சுமத்தும் மிருகத்தனமான குற்றத்தின் தண்டனையை ஹிந்துக்கள் தினமும் அனுபவித்துவருகிருர்கள். நமது மனச்சாட்சி உண்மையிலேயே விழிப்படைந்திருந்தால், விதவை நிலை ஒருபுறமிருக்க, பதினைந்து வயதுக்கு முன்பு திருமணமே இராது; இந்த மூன்று லட்சம் சிறுமிகளுக்கும் மத சம்மதப்படி திருமணமே நடந்ததில்லையென்றும் அறிவித்துவிடுவோம். இந்த விதவை நிலைக்கு எந்த சாஸ்திரத்திலும் ஆதாரம் கிடையாது. தன்னுடைய வாழ்க்கைத் துணைவனின் அன்பை நினைந்து உருகும் ஒரு பெண், மனமறிந்து தானகவே விதவை நிலையை ஏற்றுக்கொண்டால், அது வாழ்க்கைக்கு ஒரு கண்ணியத்தையும், மெருகையும் கொடுக்கும்; இல்லத்தையும் புனிதமாக்குவதுடன் மதத்திற்கே கூட உயர்வை அளிக்கும். மதம் அல்லது பழக்கம் காரணமாக விதவை நிலையைச் சுமத்துவது, தாங்க முடியாத ஒரு பாரமாயிருக்கும்;

அதனுல் ரகசியமான ஒழுக்கக் கேடுகள் ஏற்பட்டு இல்லமே அசுத்தப்படும். அதனுல் மதத்திற்கே அபகீர்த்தி ஏற்படும்.

வியாதியுற்ற ஐம்பத்துக்கு மேற்பட்ட கிழவர்கள், குழந்தை மனைவிகளை மணந்து கொள்ளுவதை, அல்லது விலைக்கு வாங்குவதை நினைத்துப் பார்க்கும் போது, இந்த ஹிந்து விதவை நிலை நாற்றமெடுக்க வில்லையா? நம்மிடையே ஆயிரக்கணக்கான விதவைகள் இருக்கும் வரையில், எந்த நிமிஷத்திலும் வெடிக்கக்கூடிய ஒரு சுரங்கத்தின் வாயில் உட்கார்ந்திருப்பவர்களாவோம். நாம் தூய்மையாயிருக்க விரும்பினுல், ஹிந்து மதத்தைக் காப்பாற்ற விரும்பினுல், கட்டாய விதவை நிலை என்ற இந்த பாவத்தை நம்மிடையேயிருந்து அகற்ற வேண்டும். தம்முடைய பொறுப்பில் குழந்தை விதவைகளை வைத்துக் கொண்டிருப்பவர்கள், துணிந்து அவர்களுக்கு மணம் செய்து வைக்க வேண்டும் —மறு மணம் அல்ல. அவர்களுக்கு உண்மையாகத் திருமணம் நடக்கவே இல்லை.

—'எங் இந்தியா' - 5—8—1926

# 3

# ஒடுக்கப்பட்ட மனித குலம்

தீண்டாதார் மட்டுமே ஒடுக்கப்பட்ட மனித குலத்தின் ஒரு பகுதியினர் என்பதில்லை. ஹிந்து சமூகத்தில் உள்ள இளம் விதவையும், அதே நிலைமையில்தான் இருக்கிருள். வங்காளத்திலிருந்து ஒருவர் பின்வருமாறு எழுதுகிருர் :

''முஸ்லிம்களிடையே விதவைகளின் மறுமணத்தைப் பற்றி எந்தக் கட்டுப்பாடும் இல்லை. ஆனுல், ஒருவர் நான்கு மனைவிகள் வரையில் மணந்து கொள்ளலாம் என்று அனுமதிக்கப்பட்டிருக்கிறது. பல முஸ்லிம்களுக்கு ஒன்றுக்கு மேற்படட மனைவிகளும் இருக்கிருர்கள். ஆகையால், முஸ்லிம்களிடையே ஆண்களில் யாருக்கும் மணமாகாமலிருப்பதில்லை. ஆகையால், விதவைகளின் மணத்திற்குத் தடை இல்லாத இடங்களில், ஆண்களின் எண்ணிக்கையைவிடப் பெண்களின் எண்ணிக்கை அதிகமாயிருக்கிறது என்பது உண்மையல்லவா? அதாவது, விதவை மறுமணம் அனுமதிக்கப்படும் வகுப்புகளில், பலதார மணமும் அனுமதிக்கப்படவேண்டும் என்பதும் உண்மையல்லவா?

''ஹிந்துக்களிடையே விதவை மறுமணத்தை சாதாரணமானதாக்கிவிட்டால், தம்மை மணந்துகொள்ளும்படி இளம் விதவைகள் இளைஞர்களிடம் பசப்பமாட்டார்களா? அப்படியானுல், மணமாகாத பெண்களுக்கு மாப்பிள்ளைகளைக் கண்டுபிடிப்பது கஷ்டமானதாகவும், அசாத்தியமானதாகவும் போய் விடாதா?

''ஒரு ஹிந்து, ஒரு மனைவிக்குமேல் மணந்துகொள்ளலாம் என்று அனுமதிக்கப்படாவிட்டால், இப்போது விதவைகள் இழைக்கும், அல்லது இழைப்ப

தாகக் கருதப்படும் பாவங்களை யெல்லாம் மணமாகாத பெண்களும் இழைக்க மாட்டார்களா?

"விதவை மறுமணத்தைச் சிபார்சு செய்வதற்கு முன்பு, பிரேமை, அடக்க மான கிரகஸ்த வாழ்வு, பதிவிரதா தருமம் போன்ற விஷயங்களையும் கவனிக்க வேண்டுமென்பதை நான் உங்களுக்கு ஞாபகப்படுத்த விரும்பவில்லை.''

விதவைகள் மறு மணம் செய்து கொள்ளுவதைத் தடுக்க வேண்டுமென்ற ஆர்வத்தில், இக் கடிதத்தை எழுதியிருப்பவர், பல விஷயங்களைப் புறக்கணித்துவிட்டார். ஒன்றுக்கு அதிக மான மனைவிகளை மணந்து கொள்ளுவதற்கு, முஸ்லிம்களுக்கு உரிமை இருக்கிறது. ஆனால், அவர்களில் பெரும்பாலோருக்கு ஒரே ஒரு மனைவிதான் இருக்கிறாள். துரதிருஷ்டவசமாக, ஹிந்து மதத்தில் பல தார மணத்திற்கு விரோதமாகத் தடை எதுவுமில்லை என்பது இவருக்குத் தெரியாது போல் தோன்றுகிறது. உயர்ந்த அந்தஸ்திலுள்ள ஹிந்துக்கள், ஒன்றுக்கு மேற்பட்ட மனைவிகளை மணந்திருக்கிறார்கள். பல ராஜகுமாரர்கள், கணக்கற்ற பெண்களை மணந்து கொள்ளுகிறார்கள். உயர் வகுப்பினர் என்று சொல்லப் படுவோரிடையே மட்டும்தான் விதவை மறு மணம் தடுக்கப்பட் டிருக்கிறது என்பதையும் அவர் மறந்துவிடுகிறார். நாலாவது பிரிவைச் சேர்ந்த பெரும்பான்மையோரிடையே, விதவைகள் தாரா ளமாக மறு மணம் செய்து கொள்ளுகிறார்கள். அதனால் எந்த அசம்பா விதமும் ஏற்பட்டுவிட வில்லை. அவர்கள் ஒன்றுக்கு அதிகமான மனைவிகளை மணந்து கொள்ளலாமென்றாலும், ஒரு சமயத்தில் ஒரு துணைவியுடனேயே திருப்தியடைந்துவிடு கிறார்கள்.

எல்லா இளைஞர்களையும் விதவைகளே கொண்டுபோய் விடு வார்களென்றும், மணமாகாத பெண்களுக்கு யாருமே இருக்க மாட்டார்களென்றும் அவர் கூறுவது, அவரிடம் கொஞ்சமும் தராதர உணர்ச்சி இல்லை என்பதையே காட்டுகிறது. இளம் பெண்களின் ஒழுக்கத்தைப் பற்றி அளவுக்கு மீறிக் கவலைப் படுவது, பரிசுத்தமற்ற உள்ளத்தையே காட்டுகிறது. ஒரு குறிப் பிட்ட அளவு விதவைகள் மறு மணம் செய்து கொள்ளுவதால், ஏராளமான பெண்களுக்கு மணமே ஆகாமல் போய்விடாது. அது எப்படியிருந்தாலும், அம்மாதிரி ஒரு நிலைமை ஏற்பட்டால், இன்று நடைபெறும் பால்ய மணங்கள்தான் அதற்குக் காரணமா யிருக்கும். குழந்தை மணங்களைத் தடுப்பதுதான் முன்கூட்டியே செய்யப்படக் கூடிய பரிகாரமாகும்.

அன்பு, கிரகஸ்த வாழ்க்கையின் புனிதம் முதலியவைகள் சம்பந்தப்பட்ட வரையில், இளம் வயதுள்ள விதவை இருந்தால், அவற்றைப் பற்றி அதிகம் பேசாமலிருப்பதே நல்லது.

ஆனால், கடிதம் எழுதியிருப்பவர் என்னுடைய வாதத்தி லுள்ள முக்கியமான அம்சத்தைப் புரிந்து கொள்ளவேயில்லை. ஒரேயடியாக எல்லா விதவைகளுக்கும் மறு மணம் செய்துவிட

வேண்டுமென்று நான் சொன்னதே இல்லை. சர் கங்காராமினல் சேகரிக்கப்பட்டு, சுருக்கமாக இப் பத்திரிகையில் நான் வெளியிட்ட அந்த விவரங்கள், 15 வயது வரையுள்ள விதவைகளைப் பற்றியே குறிப்பிடுகின்றன. பரிதாபப்படத் தக்க இந்தப் பேதைகளுக்கு, பதிவிரதா தருமம் என்றாலே என்ன என்று தெரியாது. காதலை அவர்கள் அறிந்ததேயில்லை. இந்தப் பெண்களுக்கு மணமே ஆகவில்லை என்று சொல்லுவதுதான் உண்மையாக இருக்கும். திருமணம் என்பது, புனிதமான ஒரு சடங்காகவும், ஒரு புது வாழ்வின் தலைவாயிலாகவும் இருக்க வேண்டும். அப்படியானல், மணந்துகொள்ளும் பெண்கள் முழு வளர்ச்சி பெற்றவர்களாக இருக்க வேண்டும். தம்முடைய வாழ்க்கைத் துணைவர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் விஷயத்தில் அவர்களுக்கும் ஒரு பங்கு இருக்க வேண்டும்; தம்முடைய செய்கையின் விளைவுகளும் அவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். குழந்தைகளை இணைத்து வைத்துவிட்டு, அதைத் திருமணம் என்று சொல்லுவதும், பின்னர் அவளுடைய கணவன் என்று சொல்லப்படுபவன் இறந்தவுடன் அவளுக்கு விதவா நிலையை விதிப்பதும் கடவுளுக்கும், மனிதனுக்கும் எதிராக இழைக்கப்படும் ஒரு குற்றமாகும்.

உண்மையான ஒரு ஹிந்து விதவை ஒரு பொக்கிஷம் என்றே நான் கருதுகிறேன். அவள், மனித குலத்திற்கு ஹிந்து மதத்தினல் அளிக்கப்பட்ட ஒரு பரிசாகும். ரமாபாய் ரானடே, அத்தகைய ஒரு பொக்கிஷம். ஆனல், குழந்தை விதவைகள் இருப்பது ஹிந்து மதத்திற்கே ஒரு மாசாகும்; ஒரு ரமாபாய் இருப்பது அதற்குப் பிராயச்சித்தமாகாது.

—'எங் இந்தியா' - 19—8—1926

# 4

# விதவை மறுமணம்

ஹிந்து விதவைகளைப் பற்றி சர் கங்காராம் கொடுத்துள்ள விவரங்கள் எல்லா ஹிந்து விதவைகளையும் குறிப்பிடுகின்றனவா, அல்லது மறு மணம் கூடாது என்ற பழக்கமுள்ள வகுப்புகளிலுள்ள விதவைகளை மட்டும்தான் குறிப்பிடுகின்றனவா என்று ஒருவர் எழுதிக் கேட்கிருர். இதைப் பற்றி சர் கங்காராமிடம் விசாரித்தேன். தம்முடைய புள்ளி விவரங்கள், விதவைகள் மறு மணம் தடை செய்யப்பட்டுள்ள வகுப்பினரை மட்டும் குறிப்பிடவில்லை என்றும், எல்லா வகுப்புகளையும் சேர்ந்த விதவைகளைப் பற்றிய விவரங்கள் அதில் அடங்கியிருக்கின்றன என்றும் அறிவிக்கிருர். சர் கங்காராம் மேலும் கூறுகிருர்: "மேலும் அந்த வகுப்பினரைப் பற்றிய புள்ளி விவரங்களை

மட்டும் கொடுப்பதில் பிரயோசனமில்லே. முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும் மறு மணம் செய்து கொள்ளலாம் என்பதை நாமெல்லோரும் அறிவோம். இப்போதோ, பின்னரோ மறு மணம் செய்துகொள்ளப்போகும் விதவைகள் அவர்களிடையேயும் இருக்கிறார்கள். ஹிந்து விதவைகளுக்குள்ள தடையைத்தான் நான் அகற்ற விரும்புகிறேன். ஒவ்வொரு விதவையும் மறுமணம் செய்துகொள்ள வேண்டுமென்று நான் கட்டாயப்படுத்த விரும்பவில்லே.''

இது நல்லதுதான் என்பதில் சந்தேகமில்லே. ஆனால், ஹிந்து மதத்தில் தடுக்கப்பட்ட எல்லேக்குள் வரும் வகுப்பினருக்கு மட்டுமேதான் இந்தத் தடை இருக்கிறது. அந்த எல்லேக்கு வெளியே உள்ள ஹிந்து விதவைகள், முஸ்லிம், கிறிஸ்தவ விதவைகளைப் போலவே, தாராளமாக மணந்து கொள்ளுகிறார்கள். ஆயினும், எல்லா முஸ்லிம், கிறிஸ்தவ விதவைகளும், ''இப்போதோ, பின்னரோ'' மறுமணம் செய்து கொண்டுவிடுவதில்லே என்பதையும் சொல்லத்தான் வேண்டும். பலர் மறுமணம் செய்துகொள்ள விரும்புவதில்லே. ஆயினும், தடுக்கப்பட்ட எல்லேக் கோட்டுக்கு வெளியேயுள்ளவர்கள் கூட, உயர் வகுப்பினர் என்று சொல்லப்படுவோரைக் குருட்டுத்தனமாகப் பின்பற்றி இளம் விதவைகளுக்கு மணம் செய்விக்காமல் வைத்திருக்கும் போக்கு காணப்படுகிறது என்பதிலும் சந்தேகமில்லே. ஆனால், இன்னும் விரிவாகப் புள்ளி விவரங்கள் இருந்தாலன்றி, விதவைகள் மறுமணம் செய்து கொள்ளுவதைத் தடுக்கும் பழக்கத்தினால் எவ்வளவு விபரீதமான தீங்கு ஏற்படுகிறது என்பதை நாம் சரியாக மதிப்பிட முடியாது. சர் கங்காராமினுடைய ஸ்தாபனமும், இந்தப் பிரச்னேயில் விசேஷ கவனம் செலுத்தி வரும் மற்ற ஸ்தாபனங்களும், வேண்டிய புள்ளி விவரங்களேச் சேகரித்து பிரசுரிப்பார்கள் என்று நம்புவோமாக. விதவா விவாகம் தடுக்கப்பட்ட வகுப்பினரிடையே, 20 வயதுக்குட்பட்ட விதவைகள் எவ்வளவு பேர் இருக்கிறார்கள் என்பதை அறிவது சாத்தியமாகவே இருக்க வேண்டும்.

இந்தத் தடை நியாயமானதுதான் என்று ஸ்தாபிப்பதற்காகவே, இக்கடிதம் எழுதியிருப்பவர் இக்கேள்வியைக் கேட்டிருக்க வேண்டுமென நினைக்கிறேன். இளம் விதவைகள் மறு மணம் செய்துகொள்ளுவதைத் தடுப்பதில் உள்ள தீமையை, அவரும், அவரைப் போல் நினைப்பவர்களும் அலட்சியம் செய்யாது இருப்பார்களாக. ஒரு குழந்தை விதவையிருந்தால் கூட, அந்தத் தவறுக்குப் பரிகாரம் செய்துதான் ஆக வேண்டும்.

—'எங் இந்தியா - 2—9—1926

## 5

# விதவைகள்

குழந்தை வயதினர்களான தமது குமாரத்திகளுக்கு ''மணம்'' செய்து வைக்கும் பாவத்தைச் செய்யும் பெற்ருேர்கள், அந்தப் பெண்கள் சிறு வயதினராக இருக்கும்போது விதவைகளாகி விட்டால் அவர்களுக்கு மறுமணம் செய்து வைத்து, தமது பாவத்திற்குப் பிராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டும் என்பதே என்னுடைய கோரிக்கையாகும். முதிர்ந்த வயதில் பெண்கள் விதவைகளானல், மீண்டும் மணந்து கொள்ள வேண்டுமா, அல்லது விதவைகளாகவே இருக்க வேண்டுமா என்பது அவர்களையே பொறுத்த விஷயமாகும். இது சம்பந்தமாக ஒரு விதியைச் செய்யும் அதிகாரம் எனக்கு இருந்தால், ஆண்கள், பெண்கள் இருவருக்குமே அதில் ஒரே விதிதான் இருக்க வேண்டுமென்று நான் சொல்லுவேன். மனைவியை இழந்த 50 வயது கிழவர் ஒருவர், கேட்பாரற்று மறுமணம் செய்து கொள்ளலாமென்ருல், அதே வயதுள்ள விதவைக்கும் அந்த உரிமை இருக்க வேண்டும். மறுமணத்தின் மூலம் இருவருமே பாவம் செய்கிருர்கள் என்பதே என்னுடைய அபிப்பிராயம். ஆயினும், அது முற்றிலும் வேறு விஷயம். தக்கவயதை அடைந்த பிறகு தாமே மணம்செய்து கொண்டவர்கள் விதவைகளரகவோ மனைவியை இழந்தவர்களாகவோ ஆகிவிட்டால், அப்படிப்பட்டவர்கள் மறுமணம் செய்து கொள்ளுவது பாவமாகும் என்று ஹிந்துச் சட்டம் திருத்தப்படுவதை நான் தாராளமாக வரவேற்பேன்.

—'எங் இந்தியா' – 14—10—1926

## 6

# விதவைகளும், மனைவியரை இழந்தவர்களும்

ஒருவர் பின்வருமாறு எழுதுகிருர் :

''சென்ற அக்டோபர் 14-ஆம் தேதி 'எங் இந்தியா' பத்திரிகையில் வெளிவந்த கேள்விகளையும், நீங்கள் அளித்த பதில்களையும் கவனமாகப் படித்தேன். 'தக்க வயதை அடைந்த பிறகு தாமே மணந்துகொண்டு பின்னர் விதவைகளாகவோ, மனைவியை இழந்தவர்களாகவோ ஆகிவிட்டவர்கள், மறுமணம் செய்துகொள்ளுவது பாவமாகும் என்று ஹிந்துச் சட்டம் திருத்தப்படுவதை நான் தாராளமாக வரவேற்பேன்' என்று முதல் கேள்விக்குப் பதிலளிக்கையில் நீங்கள் கூறியிருக்கிறீர்கள்.

''ஹிந்து மதத்தில் இம்மாதிரி சீர்திருத்தம் செய்வது விபரீதமாக இருக்கு மென்றும், சமூகம் பூராவினுடைய தார்மிக ஒழுக்கத்தையே பெரும் அளவுக்கு இது பாதித்துவிடும் என்றும் நான் கருதுகிறேன். உதாரணமாக, தக்க வயது வந்த பிறகு ஒரு ஆணோ, பெண்ணோ மணம் செய்துகொண்டு, சில நாட்கள் மண வாழ்க்கை நடத்திய பிறகு துரதிருஷ்ட வசமாக இருவரில் ஒருவர் இறந்துவிட்டால், அவர்களும் மறுமணம் செய்துகொள்ள அனுமதிக் கப்படக்கூடாது என்று சொல்கிறீர்களா? மணவாழ்க்கையை நன்ருக அனுப விக்க வேண்டும் என்ற பேரவா அவர்களுக்கு இருந்தால்கூட, அவர்கள் தக்க வயது வந்த பிறகு மணந்து கொண்டார்கள் என்ற ஒரே காரணத்திற் காக, அவர்கள் மீண்டும் மணந்துகொள்ளக் கூடாது என்கிறீர்களா? ஹிந்துச் சட்டத்தில் இம்மாதிரி ஒரு சீர்திருத்தம் செய்யப்பட்டால், பூர்த்தியடையாத தம்முடைய இச்சைகளைத் திருப்தி செயதுகொள்ளுவதற்கு அவர்கள் ஒழுக்கக் கேடான ஏதாவதொரு வழியைக் கண்டுபிடித்து விடுவார்கள் என்றும் நான் அஞ்சுகிறேன்; பின்னர் சமூகம் பூராவிலுமே ஒழுக்கக் கேடு மலிந்து விடும். ஆகையால் இந்த விஷயம் முற்றிலும், சம்பந்தப்பட்ட ஆண்கள் அல்லது பெண் களின் இஷ்டத்திற்கு விட்டுவிடப்பட வேண்டும் என்று நான் நினைக்கிறேன்.''

கேள்வி கேட்டவருக்கு நான் அளித்த பதில், சட்டத்தை இயற்றும் மனிதனுக்கு விடப்பட்ட ஒரு அறைகூவலாகும். தன்னுடைய சுதந்திரம் கட்டுப்படுத்தப்படுவதை மனிதன் அனு மதிப்பதில்லை, ஆகையால் ஆணின் விஷயத்தில் விரும்பத்தக்க தென்று கருதப்படுவது, பெண்ணுக்கும் பொருந்தும் என்றும், ஆகையால் மனைவியை இழந்தவன் மறுமணம் செய்து கொள்ளு வதற்கு உரிமை அளிக்கப்பட்டிருப்பது போல் விதவைக்கும் அளிக்கப்பட வேண்டும். இந்த உண்மையைத்தான் என் பதிலில் எடுத்துக் காட்ட முயற்சித்திருக்கிறேன். மேலும், பிரிட்டிஷ் அரசியலமைப்பின்கீழ் இயற்றப்பட்டுள்ள சட்டங்களைப் போல், ஹிந்துச் சட்டம் அப்படி நெகிழ்ந்து கொடுக்காதது அல்ல. 'குற்றம்' என்ற வார்த்தைக்குப் பதிலாக 'பாவம்' என்ற வார்த் தையைத் தேர்ந்தெடுத்து நான் உபயோகித்திருக்கிறேன் என்ப தையும் கவனிக்க வேண்டும். ஒருவன் குற்றம் செய்தால், மனித னால் இயங்கப்படும் அரசாங்கம் அதற்குத் தண்டனை விதிக்கும். கடவுளோ, அல்லது ஒருவருடைய மனச்சாட்சியோதான் பாவத் திற்குத் தண்டனை கொடுக்க முடியும். என்னுடைய பதிலில் நான் குறிப்பிட்டுள்ள அந்தஸ்துக்கு ஹிந்து சமூகம் உயர்ந்து விட்டால், அது மனித குலத்திற்கும், ஹிந்து சமூகத்திற்குமே கூட, பெரிய லாபமாக இருக்கும் என்றே நான் நினைக்கி றேன்.

—'எங் இந்தியா' – 18—11—1926

# 7

# லட்சிய துஷ்பிரயோகம்

குழந்தை விதவைகளின் மறுமணம் பற்றி வந்துள்ள கடிதத்திலிருந்து சில பகுதிகளைக் கீழே தருகிறேன் :

''செப்டம்பர் 23-ஆம் தேதி 'எங் இந்தியா' பத்திரிகையில் 'பி' என்பவருக்கு நீங்கள் எழுதியுள்ள பதிலில், குழந்தை விதவைகளுக்கு அவர்களுடைய பெற்றோர்களே மறுமணம் செய்துவைத்து விடவேண்டுமென்று கூறியிருக்கிறீர்கள். கன்னிகாதானம் செய்துவிடும் பெற்றோர்களுக்கு, அதாவது சாஸ்திரங்களில் விதித்துள்ளபடி தமது பெண்களுக்குத் திருமணம் செய்து வைக்கும் பெற்றோர்களுக்கு இது எப்படி முடியும்? புனிதத்துடன் மதச் சடங்குகளை நடத்தி, தம்முடைய பெண்கள் மீது தமக்குள்ள உரிமைகளை யெல்லாம் மாப்பிள்ளைக்கு விட்டுக் கொடுத்துவிடும் பெற்றோர்கள், அவன் இறந்த பிறகு அந்தப் பெண்ணை வேறொருவனுக்கு மணஞ் செய்து கொடுப்பதென்பது சாத்தியமில்லை. அவள் விரும்பினால் தானாகவே மறுமணம் செய்துகொள்ளலாம்; ஆனால், அவள் கணவனுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்டவளாதலால் அவளுடைய கணவன் இறந்த பிறகு அவளைத் திருமணம் செய்து கொடுப்பதற்கு உலகத்தில் யாருக்கும் உரிமை கிடையாது. அதே காரணத்தினால் மறுமணம் செய்துகொள்ளுவதற்கு அவளுக்கே எந்த உரிமையும் இல்லை. ஆகையால், கணவன் இறக்கும் சமயத்தில் அவன் குறிப்பிட்டு அனுமதி கொடுத்திருந்தாலொழிய, அவள் மறுமணம் செய்துகொள்ளுவது இறந்த கணவனுக்கு நம்பிக்கைத் துரோகம் செய்வதாகும். தர்க்க ரீதியாகப் பார்த்தாலும் கூட, ஒரு விதவை சிறுமியாயிருந்தாலும், இளம் பெண்ணாயிருந்தாலும், வயதானவளா யிருந்தாலும், பெரும்பாலான சனாதனிகளிடையே பழக்கமாயுள்ள கன்னிகாதான முறைப்படி மணம் நடந்திருந்தால், கணவன் அனுமதி கொடுத்திருந்தாலொழிய மறுமணம் செய்துகொள்ளுவதென்பது சாத்தியமில்லை. உண்மையான சனாதன தருமத்தில் நம்பிக்கையுள்ள ஒரு கணவன் அத்தகைய அனுமதி கொடுப்பதைச் சகிக்கவும் மாட்டான். சாத்தியமானால் தன்னுடைய மனைவி தன்னுடன் உடன்கட்டை ஏறுவதையே அவன் மகிழ்ச்சியுடன் வரவேற்பான்; அல்லது அவளுடைய ஆயுள் பூராவும் தன்னை நினைத்து, தன் ஞாபகத்திற்குப் பக்தி செலுத்துவதை, அல்லது அதற்குச் சமமான கடவுளிடம் பக்தி செலுத்துவதை வரவேற்பான். ஹிந்து தருமத்தில் திருமணமும், வைதவ்யமும் ஒன்றையொன்று தழுவியதாகும்; அவை தனித்தனி அம்சங்களல்ல. ஆகையால், அவனுடைய செய்கை முற்றிலும் ஹிந்து திருமணம், விதவை நிலை ஆகியவற்றின் உயர்ந்த நோக்கங்களைக் காப்பாற்ற வேண்டும் என்ற விருப்பத்தால் தூண்டப்பட்டதாகவே இருக்கும்.''

இத்தகைய வாதம், ஒரு உயர்ந்த லட்சியத்தைத் துஷ்பிரயோகம் செய்வதாகுமென்று நான் கருதுகிறேன். இதை எழுதியவர் நல்ல எண்ணத்துடன் தான் எழுதியிருக்கிறாரென்பது உண்மையே. ஆனால் பெண்களின் தூய்மையில் அவர் காட்டும் அளவுக்கு மீறிய கவலையினால், அடிப்படை நீதியையே அவர்

மறந்துவிடுகிறார். சிறு குழந்தைகள் விஷயத்தில் கன்னிகா தானத்தின் அர்த்தம் என்ன? ஒரு தகப்பனாருக்குத் தன் குழந்தைகள் மீது சொத்துரிமை போன்ற உரிமை ஏதாவது இருக்கிறதா? அவர் அவர்களைக் காப்பாற்றுபவரே யொழிய, சொந்தக்காரரல்ல. தன் பொறுப்பில் உள்ள குழந்தையைக் காப்பாற்றும் உரிமையை அவர் பண்டமாற்றுசெய்து துஷ்பிரயோகம் செய்யும்போது, குழந்தையைக் காப்பாற்றும் உரிமையையே அவர் இழந்துவிடுகிறார். மேலும், ஒரு தானத்தை ஏற்றுக் கொள்ளச் சக்தி இல்லாத ஒரு குழந்தைக்கு எப்படி தானம் கொடுக்க முடியும்? பெற்றுக் கொள்ளும் சக்தி இல்லாத இடத்தில் தானமே இருக்க முடியாது. கன்னிகாதானம் என்பது மத பூர்வமான ஒரு சடங்கு; அதில் ஆன்மிக அர்த்தமும் இருக்கிறது. அத்தகைய வார்த்தைகளை அப்படியே உபயோகிப்பது மொழியையும், மதத்தையும் துஷ்பிரயோகம் செய்வதாகும். அப்படியானால், இந்த உலகம் தட்டை வடிவமானதென்றும், திருப்பாற்கடலில் திருப்பள்ளி கொண்டிருக்கும் கடவுளின் தலைக்குமேல் குடை பிடித்துக் கொண்டிருக்கும் ஆயிரம் தலையுள்ள பாம்புதான் உலகத்தைத் தாங்கிக் கொண்டிருக்கிறது என்றும் நமது புராணங்களில் மறைபொருளாகச் சொல்லப்பட்டிருப்பவற்றைக்கூட அப்படியே ஒப்புக்கொண்டு விடலாமே!

ஒரு பச்சைக் குழந்தையைத் தள்ளாடும் ஒரு கிழவனுக்கோ, அல்லது குழந்தைப் பருவம் தாண்டாத ஒரு பையனுக்கோ திருமணம் செய்து கொடுக்கும் அளவுக்கு ஒரு தகப்பனார் தன்னுடைய பொறுப்பை துஷ்பிரயோகம் செய்வதிலிருந்து, அந்தப் பெண் விதவையாகி விட்டால், அவளுக்கு மறுமணம் செய்து வைப்பதுதான் அந்தத் தகப்பனார் தன்னுடைய பாவத்தைப் போக்கிக் கொள்ளுவதற்கு செய்யக்கூடிய குறைந்த பட்ச பிராயச்சித்தமாகும். நான் முன்னால் ஒரு கட்டுரையில் சொல்லியிருப்பதுபோல், அந்த மாதிரி திருமணங்கள் ஆரம்பத்திலிருந்தே செல்லுபடியாகா வென்று அறிவித்து விடவேண்டும்.

—'எங் இந்தியா' – 11—11—1926

## 8

# விதவைகளின் மறுமணம்

நூற்றுக்கணக்கான பெண்களை நான் சந்தித்திருக்கிறேன். ஆனால், தமக்கு மணமாகவில்லை என்று 13 வயதுக்கு மேற்பட்ட பெண்கள் இரண்டு, மூன்று பேர்கள்கூடச் சொல்லி நான் கேட்கவில்லை. மடியில் உட்கார்ந்து கொள்ளுவதற்கே தகுதியான ஒரு பெண்ணைத் தன் மனைவி என்று சொல்லிக் கொள்ளுவது மத

மாகாது; அது மதத்திற்கு விரோதமானதாகும். 16 வயதுக்குட்பட்ட பெண்ணை மணந்துகொள்ளுவதில்லையென இந்தியாவிலுள்ள ஒவ்வொரு இளைஞனும் உறுதி பூணவேண்டு மென்று நான் எதிர்பார்க்கிறேன். ஹிந்து தருமத்தில் விதவைக்குப் புனிதமான ஒரு இடம் உண்டு. ஆனால், முன் காலத்திய ஹிந்து விதவைகள் இன்றைய விதவைகளைப் போல் அவ்வளவு பரிதாபமான நிலைமையில் இருந்ததில்லை. 15 வயதுள்ள ஒரு பெண் விதவையாக முடியுமென்று என்னால் நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை. பெண்ணினுடைய சம்மதம் இல்லாமலோ, அல்லது வேறு காரணங்களுக்காகவோ பெற்றோர்களால் திருமணம் செய்து வைக்கப்பட்ட பெண்களை மணமானவர்களாகவே நான் கருதவில்லை. அத்தகைய பெண் விதவையாகி விட்டால், அவளுக்கு மறுமணம் செய்து வைப்பது பெற்றோர்களின் கடமை என்று நான் நினைக்கிறேன். மற்ற விதவைகள் சம்பந்தப்பட்ட வரையில், முழு விதவா வாழ்க்கையைத் தாம் நடத்த முடியாது என்று அவர்கள் நினைத்தால், மனைவியரை இழந்து அதே நிலைமையிலுள்ள ஆண்களைப் போலவே அவர்களுக்கும் மறுமணம் செய்து கொள்ளும் அதே உரிமை இருக்கிறது. உங்கள் சமூகம் இந்த மூன்று பிரச்னைகளையும் தனது சொந்தப் பிரச்னைகளாக ஏற்றுக்கொண்டு, அவற்றிற்குப் பரிகாரம் கண்டுபிடிக்கத் தன்னாலியன்ற முயற்சியைச் செய்யட்டும்.

[30—7—1927-இல் மைசூரில் நிகழ்த்திய ஒரு பிரசங்கத்திலிருந்து எடுத்தது.]

—'எங் இந்தியா' – 18—8—1927

*[1927-இல் காந்திஜி சென்னை பச்சையப்பன் கல்லூரியில் செய்த ஒரு பிரசங்கத்தில் குழந்தை விதவைகள் சோரத்தைக் கண்டித்து வருமாறு கூறினார்: "16 வயதுள்ள பிராம்மணப் பெண்கள் கிடைக்க மாட்டார்கள் என்றும், பிராம்மணரில் வெகுசிலரே தங்கள் பெண்களை மணம் செய்யாமல் வைத்திருக்கிறார்கள் என்றும், 10, 12, 13 வயதுக்கு முன்பே பிராம்மணப் பெண்களுக்கு மணமாகிவிடுகிறது என்றும் அவர்கள் சொல்லுகிறார்கள். அப்படியானால் பிராம்மண இளைஞருக்கு ஒன்று சொல்லுகிறேன்; உன்னால் உன்னையே கட்டுப்படுத்திக்கொள்ள முடியவில்லை என்றால், பிராம்மணனாக இருப்பதை விட்டுவிடு. பாலியத்திலேயே விதவையாகி விட்ட பக்குவமடைந்த 16 வயதுப் பெண்ணைத் தேர்ந்தெடுத்துக் கொள். 16 வயதான விதவை கிடைக்க வில்லையென்றால், உனக்குப் பிடித்த எந்த சாதிப்பெண்ணை யாவது மணந்து கொள்."*

*பிராம்மண இளைஞருக்கு இவ்வாறு கூறிய காந்திஜி, பொதுவாக எல்லா இளைஞரும் ஒரு பிரதிக்ஞை செய்து*

கொள்ள வேண்டும் என்ருர். "விதவையல்லாத பெண்ணை மணக்க மாட்டோம். எப்படியும் ஒரு விதவையைத் தேடியே மணப்போம். விதவை கிடைக்கா விட்டால் மணமே செய்து கொள்ளாமல் இருப்போம்'' என்று இளைஞர்கள் பிரதிக்ஞை செய்துகொள்ள வேண்டும் என்ருர்.

இப்பிரசங்கத்தின் விவரத்தை 'மகாத்மா காந்தி நூல்கள்'—நான்காம் தொகுப்பு *678—81*-ஆம் பக்கங்களில் காண்க.]

## 9

# ஆத்திரம் நிறைந்த ஓர் ஆட்சேபணை

ஒரு வங்காளிப் பள்ளிக்கூடத்தின் தலைமை ஆசிரியர் பின் வருமாறு எழுதுகிருர் :

''விதவைப் பெண்களைத்தான் மணந்து கொள்ளவேண்டுமென்று சென்னையில் மாணவர்களுக்கு நீங்கள் செய்த உபதேசமும், பிரசங்கங்களும் எங்களைத் திடுக்கிட வைத்துவிட்டன; என்னுடைய தாழ்மையான, ஆனல், ஆத்திரம் நிறைந்த ஆட்சேபணையைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

''விதவைகள் ஆயுள் பூராவும் பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிப்பதுதான் இந்தியப் பெண்ணினத்திற்கு உலகத்தில் மகோன்னதமான ஒரு பெரிய ஸ்தானத்தை அளித்திருக்கிறது. இத்தகைய உபதேசம் அந்தப் பழக்கத்தை அழிக்கும் போக்கை உண்டாக்கிவிடும். மேலும், திருமணம் பற்றி நீங்கள் கூறும் கருத்துக்கள் மறுபிறப்பு, முக்தி போன்ற ஹிந்து மத நம்பிக்கைகளைக் குலைத்து விடுவதோடு, ஹிந்து சமூகத்தையும் நமக்குப் பிடித்தமில்லாத மற்ற சமூகங்களின் அளவுக்கு இறக்கிவிடும். நமது சமூகம் சீர்குலைந்திருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனல், ஹிந்து தருமத்தின் லட்சியங்களில் நாம் கண்ணும் கருத்துமா யிருந்து, நம்மால் முடிந்தவரையில் அவற்றைப் பின்பற்ற முயற்சி செய்யவேண்டும். மற்ற சமூகங்களின் லட்சியங்களினல் நாம் குழப்பமடைந்துவிடக்கூடாது. அகல்யாபாய், ராணி பவானி, பெஹுலா, சீதை, சாவித்திரி, தமயந்தி போன்றவர்களின் உதாரணங்கள் ஹிந்து சமூகத்திற்கு வழிகாட்டிகளாக இருக்க வேண்டும்; அவர்களுடைய லட்சியப் பாதையில் நமது சமூகத்தை நாம் செலுத்த வேண்டும். ஆகையால் சிக்கலான இந்தப் பிரச்னைகளைப்பற்றி நீங்கள் அபிப்பிராயம் தெரிவித்து, அதன் மூலம் சமூகம் தன்னிஷ்டப்படி நடக்கும்படி விட்டுவிடக் கூடாதென்று மிகவும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.''

ஆத்திரம் நிறைந்த இந்த ஆட்சேபணையினல் நான் என் கருத்துக்களை மாற்றிக் கொள்ளவுமில்லை; அவற்றிற்காக நான் வருந்தவுமில்லை. மன உறுதி கொண்டவளும், பிரம்மசரியத்தை

அறிந்து, அதை அனுஷ்டிக்க வேண்டுமென்று துணிந்திருப்பவளு மான ஒரு விதவைகூட என்னுடைய புத்திமதி காரணமாகத் தன் முடிவை மாற்றிக் கொள்ளமாட்டாள். ஆனல், என்னுடைய யோசனை பின்பற்றப்பட்டால், திருமணம் நடந்த காலத்தில் அதன் அர்த்தத்தையே அறியாத சிறுமிகளுக்கு அது நிச்சயம் பெரிய ஆறுதலை அளிக்கும். அவர்கள் விஷயத்தில் 'விதவை' என்ற பதத்தை உபயோகிப்பது, புனிதமான தொடர்புகளுடைய ஒரு பெயரை துஷ்பிரயோகம் செய்வதாகும். இக்கடிதத்தை எழுதியவர் என்ன நோக்கத்துடன் எழுதினரோ அதே நோக்கத் துடன்தான், நாட்டிலுள்ள இளைஞர்கள், விதவைகள் என்று சொல்லப்படுவோரையே மணந்து கொள்ள வேண்டும், அல்லது மணமே செய்து கொள்ளக் கூடாது என்று நான் சொல்லு கிறேன். குழந்தை விதவை நிலை என்ற சாபக்கேட்டை ஒழித்தால் தான் திருமணத்தின் புனிதத்தைக் காப்பாற்ற முடியும்.

பிரம்மசரியத்தை அனுஷ்டித்தால் விதவைகள் மோட்சத்தை அடைகிறார்கள் என்ற கூற்றுக்கு அனுபவத்தில் எந்த ஆதாரமும் இல்லை. இறுதியான அந்த ஆனந்த நிலையை அடைவதற்கு வெறும் பிரம்மசரியம் மட்டும் போதாது; மேலும் பல காரியங் கள் அதற்கு அவசியமாகும். ஒருவர்மீது சுமத்தப்படும் பிரம்ம சரியத்தினல் பிரயோசனமே இல்லை. பல சமயங்களில் அதனல், ரகசியமான தீமைகள் தோன்றுகின்றன; சமூகத்தின் உயிர் நாடியையே தொலைத்து விடக்கூடிய தீமைகள் எழுகின்றன. நேரில் விஷயங்களைப் பார்த்தறிந்த அனுபவத்தின் மீதுதான் நான் எழுதுகிறேன் என்பதை, கடிதம் எழுதியிருப்பவர்கள் உணர வேண்டும்.

என்னுடைய யோசனையின் பலனக கன்னிகளாகவுள்ள விதவைகளுக்கு அடிப்படை நீதி கிடைக்க முடிந்தால், அதன் காரணமாக, மற்றப் பெண்கள் பருவ காலத்திற்கு முன்பே ஆண் களின் காமவெறிக்கு விற்கப்படாமல், பருவமும், விஷய அறிவும் ஏற்படும் வரையில் காத்திருக்க வாய்ப்பளிக்கப்பட்டால், நான் மகிழ்ச்சியடைவேன்.

மறுபிறப்பு, முக்தி போன்ற கொள்கைகளில் உள்ள நம்பிக் கைக்கு முரணான திருமணக் கொள்கை எதையும் நான் சொல்ல வில்லை. கீழ்த்தர வகுப்பினர் என்று நாம் இறுமாப்புடன் வரு ணிக்கும் லட்சக்கணக்கான ஹிந்துக்களிடையே விதவைகளின் மறுமணம் தடை செய்யப்பட்டிருக்க வில்லை என்பதை வாசகர் கள் உணர வேண்டும். மனைவிகளை இழந்த கிழவர்கள், மறுமணம் செய்து கொள்ளுவது அந்த நம்பிக்கையைப் பாதிக்கவில்லை என் ருல், விதவைகள் என்று தவருக வருணிக்கப்படும் பெண்களின் உண்மையான மணம் மட்டும் அந்தப் பெரிய நம்பிக்கையில் எப்படித் தலையிடுகிறது என்று எனக்குப் புரியவில்லை. மறு பிறப்பு போன்றவைகளெல்லாம் என்னைப் பொறுத்த வரையில் வெறும் கொள்கைகள் மட்டுமல்ல; அன்ருடம் சூரியன் உதிப்பது

போல அவை பிரத்தியட்சப் பிரமாணங்கள் என்று நான் கருது கிறேன் என்பதை இக்கடிதத்தை எழுதியிருப்பவர் உணர வேண்டும். முக்தி என்பது ஒரு பிரமாணம்; அதை அடைவதற்கு என்னுலியன்ற வரையில் நான் முயற்சி செய்து கொண்டிருக்கி றேன். முக்தியைப் பற்றி நான் ஆழ்ந்து சிந்தனை செய்ததால் தான், கன்னி விதவைகளுக்கு இழைக்கப்படும் தவறைப் பற்றிய உணர்வு எனக்கு ஏற்பட்டது. ஆண்கள் எந்தக் கட்டுப்பாடும் இன்றி சுதந்திரமாக இருப்பவர்கள். இந்த மமதையில், துன்பத் திற்குள்ளாக்கப்பட்டிருக்கும் இன்றைய கன்னி விதவைகளையும், அழியாப் புகழுடைய சீதை, மற்றும் இவர் குறிப்பிட்டுள்ள மற்றப் பெயர்களையும் ஒரே மூச்சில் சேர்த்துச் சொல்லாதிருப் போமாக.

கடைசியாக, ஹிந்து தருமத்தில் உண்மையான விதவை நிலைக்கு, நியாயமான ஒரு பெருமை கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆயினும், விதவைகள் மறுமணம் செய்து கொள்ளக்கூடாதென வேதகாலத்தில் அடியோடு தடை விதிக்கப்பட்டிருந்தது என்ற நம்பிக்கைக்கு ஆதாரம் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. ஆனால், என்னுடைய போராட்டம், உண்மையான விதவை நிலையை எதிர்த்து அல்ல. அதன் பெயரால் உள்ள அந்த கேலிச் சித்திரத்தையே நான் ஆட்சேபிக்கிறேன். நான் குறிப்பிடும் பெண்களை, அவர்களுடைய சகிக்க முடியாத தளைகளிலிருந்து விடுதலை செய்ய வேண்டியது, கண்ய உணர்ச்சி உள்ள ஒவ்வொரு ஹிந்துவின் கடமையுமாகும்; அத்தகைய பெண்களை விதவை களாகப் பாவிக்காமலிருப்பதே நல்ல வழியாகும். ஆகையால், விதவைகள் என்று தவருக அழைக்கப்படும் இந்தக் கன்னிகளைத் தவிர வேறு யாரையும் மணந்துகொள்ள முடியாது என்று மறுத்து விடவேண்டுமென்று ஹிந்து இளைஞர்களுக்கு நான் சொன்ன யோசனையை, தாழ்மையுடன், ஆனல், அழுத்தமாக மீண்டும் கூறுகிறேன்.

--'எங் இந்தியா' -6—10—1927

# 10

# இணக்கமற்ற சிந்தனை

ஒருவர் பின்வருமாறு எழுதுகிருர் :

"நீங்கள் எழுதியுள்ள ஓர் கட்டுரையில் ஒரு இடத்தில் பின்வருமாறு கூறி யிருக்கிறீர்கள் : திருமணம் என்பது ஒரு புனிதமான சடங்கா யிருந்தால், அந்த இணைப்பு வெறும் உடல்களின் இணைப்பு மட்டும் அல்ல; இருவரில் ஒருவர் இறந்துவிட்டாலும் பிரிக்க முடியாத உள்ளங்களின் இணைப்பாகும். உள்ளங்கள் உண்மையாக இணைக்கப்பட்டால், ஒரு விதவையோ, மனைவியை

இழந்தவரோ மறுமணம் செய்துகொள்ளுவது என்பது நினைத்துப் பார்க்க முடியாததாகும்; அது முறை தவறியதும், தவறானதுமாகும்.

''அதே கட்டுரையில் மற்றொரு இடத்தில் பின்வருமாறு கூறுகிறீர்கள் : கன்னி விதவைகளுக்கு மறுமணம் செய்து வைப்பது விரும்பத்தக்கது என்பதோடு மட்டுமல்ல; விதவைப் பெண்கள் உள்ள பெற்றோர்கள் அவர்களுக்கு மறுமணம் செய்து வைக்க வேண்டியது கடமையாகும் என்றும் கருதுகிறேன்.

''இந்த இரண்டு அபிப்பிராயங்களும் எப்படிப் பொருந்தும்?''

இவ்விரண்டு கருத்துகளுக்குமிடையே முரண்பாடு இருப்பதாக நான் நினைக்கவில்லை. ஒரு சின்னஞ் சிறு பெண்ணை, அந்தக் குழந்தையின் க்ஷேமத்தைப் பொருட்படுத்தாமலும், அவளுக்குத் தெரியாமலும் விஷயமறியாத அல்லது இரக்கமில்லாத பெற்றோர்கள் திருமணம் செய்து கொடுப்பது மணமே அல்ல. அது நிச்சயமாகப் புனிதச் சடங்கல்ல. ஆகையால், அத்தகைய பெண்ணுக்கு மறுமணம் செய்து வைக்க வேண்டியது கடமையாகிறது. உண்மையில், இந்த இடத்தில் ''மறுமணம்'' என்ற வார்த்தையே பொருத்தமானதல்ல. அந்தக் கன்னிக்கு உண்மையாக முன்பு மணமே ஆகவில்லை. ஆகையால், அவளுடைய கணவன் என்று சொல்லப்படுபவன் இறந்துவிட்டால், அவளுக்குத் தகுதியான ஒரு வாழ்க்கைத் துணைவனைத் தேடிக் கொடுப்பது பெற்றோர்களுக்கு இயற்கையான ஒரு கடமையாயிருக்கும்.

— 'எங் இந்தியா' – 26—9—1929

## 11

# அபலை விதவைகள்

குவெட்டாவில் தன்னுடைய கணவன், இரண்டு மாதக் குழந்தை, மாமனார், கணவனின் இளைய சகோதரன், அதாவது தன் கணவன் வீட்டார் யாவரையுமே இழந்து விட்ட 17-வயதுள்ள ஒரு பெண்ணின் பரிதாபமான நிலைமையைப் பற்றி ஒரு நண்பர் துக்கத்துடன் எழுதியிருக்கிறார். அவள் தப்பிப் பிழைத்து, தான் உடுத்திக் கொண்டிருந்த ஆடைகளோடுமட்டும் திரும்பி வந்ததாக அவர் கூறுகிறார். அந்தப் பெண் அவருடைய மாமன் மகள். அவளை எப்படித் தேற்றுவது, அல்லது அவளை என்ன செய்வது என்று அவருக்குத் தெரியவில்லை. அவளும் காயமடையாமல் தப்பவில்லை. அவளுடைய கால் பாதிக்கப்

பட்டிருக்கிறது. நல்ல வேளையாக எலும்பு பிசகிப்போகாமல் அப்படியே இருக்கிறது. அவர் பின்வருமாறு தன் கடிதத்தை முடித்திருக்கிறார் :

''அவளை லாகூரிலுள்ள அவளுடைய தாயாரிடம் விட்டிருக்கிறேன். அவளுக்கு மறுமணம் செய்து வைத்துவிடக்கூடாதா என்று அவளிடமும், மற்ற உறவினர்களிடமும் லேசாகப் பிரஸ்தாபித்தேன். சிலர், நான் சொல்லுவதை அனுதாபத்துடன் கேட்டார்கள் ; வேறு சிலர் இந்த யோசனையை ஆட்சேபித்தார்கள். என் சகோதரியின் பெண்ணைப் போலவே மற்றும் பல பெண்களுக்கும் இம்மாதிரி அனுபவம் ஏற்பட்டிருக்குமென்பதில் சந்தேகமில்லை. துரதிருஷ்டம் பிடித்த இந்த விதவைகளுக்கு ஆறுதலாக ஒரு வார்த்தை சொல்லுவீர்களா ?''

தொன்று தொட்டு வழக்கமாக இருந்து வரும் சில கருத்துக்கள் சம்பந்தப்பட்ட விஷயங்களில் என்னுடைய எழுத்தோ, வார்த்தையோ என்ன செய்ய முடியும் என்று எனக்குத் தெரியவில்லை. மனைவியை இழந்த ஆணுக்கு மறுமணம் செய்து கொள்ள உரிமை இருப்பது போல், விதவைக்கும் மறுமணம் செய்து கொள்ள உரிமை உண்டு என்று நான் பல தடவைகளில் சொல்லியிருக்கிறேன். தன்னிச்சையான விதவை நிலை என்பது ஹிந்து மதத்தில் விலை மதிப்பில்லாத ஒரு வரப்பிரசாதமாகும்; பலவந்த விதவை நிலை ஒரு சாபக்கேடாகும். கட்டுப்பாடுகள் எவையுமே இல்லையென்றால், பல இளம் விதவைகள் சரீர இச்சையைக் கட்டுப்படுத்த முடியாதோ என்ற பயத்தினால் அல்லாமல், ஹிந்து பொதுஜன அபிப்பிராயம் என்ற இழிச்சொல்லிலிருந்து தப்புவதற்காகக் கொஞ்சமும் தயக்கமில்லாமல் மறுமணம் செய்துகொண்டு விடுவார்களென்றே நான் நம்புகிறேன். ஆகையால், இந்த குவெட்டா சகோதரியைப் போல் துரதிருஷ்ட நிலைமையிலுள்ள எல்லா இளம் விதவைகளும், மறுமணம் செய்து கொள்ளுவதற்கு சகல தூண்டுதல்களும் அளிக்கப்பட வேண்டும். அவர்கள் மறுமணம் செய்து கொள்ளுவதென்று தீர்மானித்தால், மற்றவர்கள் அவர்களைக் குறை சொல்லமாட்டார்களென்ற நிச்சயமும் இருக்கவேண்டும். அவர்களுக்குத் தகுதியான வரன்களைத் தேடிக்கொடுப்பதற்கும் எல்லா முயற்சிகளும் செய்யப்பட வேண்டும். இது எந்த ஸ்தாபனத்தினாலும் செய்யப்படக் கூடிய வேலையல்ல. விதவைகளாகிவிட்டவர்களின் உறவினர்களான சீர்திருத்தவாதிகளே இதைச் செய்ய வேண்டும். தம்முடைய வட்டாரங்களில் தீவிரமாகவும், கண்யத்துடனும், அடக்கமாகவும் இதைப்பற்றி அவர்கள் பிரசாரம் செய்யவேண்டும். அவர்களுக்கு வெற்றி கிடைக்கும்போதெல்லாம் அதற்குப் பெரிய விளம்பரம் அளிக்க வேண்டும். அப்படிச் செய்தால் மட்டும்தான் பூகம்பத்தில் விதவைகளாகியிருக்கக்கூடிய பெண்களுக்கு உருப்படியான உதவி செய்ய முடியும். இந்த கோர சம்பவத்தின் ஞாபகம் மக்கள் மனத்தில் பசுமையாக இருக்கும்போதே, பொதுஜன அனுதாபத்தைச் சுலபமாகத் திரட்டுவது சாத்தியமாயிருக்க

லாம். இந்தச் சீர்திருத்தம், ஒரு தடவை பெரும் அளவில் ஆரம்பமாகிவிட்டால், சாதாரணமாக விதவைகளான பெண்கள்கூட, இஷ்டப்பட்டால், மணந்து கொள்ளுவது சுலபமாக இருக்கும்.

—'ஹரிஜன்' - 22—6—1935

# 12

# கட்டாய வைதவ்யம்

ஜூலியஸ் ஸீஸரின் காலத்தில் வாழ்ந்த டியோடரஸ் என்ற ஸிஸிலி நாட்டுக்காரர், பிரபஞ்சத்தின் சரித்திரத்தைப் பற்றி எழுதியுள்ள ஒரு நூலில், உடன்கட்டை ஏறுவதைப்பற்றியுள்ள பின்கண்ட சுவாரஸ்யமான பகுதிகளை பியாரிலால் தேடிப் பிடித்திருக்கிறார் :

"இளைஞர்களும், இளம் பெண்களும் திருமணம் செய்துகொள்ளுவதென்பது, அவர்களுடைய பரஸ்பர சம்மதத்தின்மீதேயன்றி, பெற்றோர்களின் முடிவுப்படி அல்ல என்பது இந்தியர்களிடையே ஒரு புராதனமான சட்டமாகும். ஆனால், பக்குவமடையாத பருவத்தினரிடையே மணங்கள் நடைபெற்றபோது, அடிக்கடி தோல்விகள் ஏற்படுவதுண்டு. தம்முடைய திருமணம் பற்றி இருதரப்பினரும் வருத்தப்படும்போது, பல பெண்கள் ஒழுக்கம் தவறியவர்களானார்கள். அடக்கமற்ற வாழ்க்கையின் காரணமாக மற்றவர்களிடமும் காதல் கொண்டார்கள். கடைசியில், தாங்கள் முதலில் மணந்துகொண்ட கணவர்களை விட்டுவிடவேண்டுமென்று அவர்கள் விரும்பியபோது, பகிரங்கமாக அப்படிச் செய்வது கௌரவமாயிராது. ஆகையால், விஷத்தின் மூலம் அவர்களைக் கொன்றுவிடுவார்கள். மனித உயிரைப் போக்குவதற்கான பல மூலிகைகள் அவர்களுடைய நாட்டில் நிறைய இருக்கின்றன. இந்த மூலிகைகளில் சிலவற்றைப் பொடிசெய்து உணவிலோ, நீரிலோ கலந்து கொடுத்தாலும் சாவு ஏற்பட்டுவிடும். ஆனால், இந்தக் கொடிய பழக்கம் பரவ ஆரம்பித்து பல உயிர்கள் பலியிடப்பட்டன. இப்படிக் குற்றம் செய்பவர்களுக்குத் தண்டனையும் அளிக்கப்பட்டது. அப்போதும்கூட மற்ற மனைவிகள் தம்முடைய இந்தக் கொடிய வழக்கத்தை விடவில்லை. ஆகவே, கடைசியாக ஒரு சட்டமியற்றினார்கள். இதன்படி ஒரு மனைவி, கர்ப்பவதியாய் இருந்தாலொழிய அல்லது ஏற்கனவே குழந்தைகள் பெற்றவளாயிருந்தாலொழிய, கணவன் இறந்தால் அவளும் அவனுடன் சேர்ந்து கொளுத்தப்படவேண்டுமென்றும், இதற்கு அவள் கீழ்ப்படிய இஷ்டப்படாவிட்டால், தன் ஆயுள் பூராவும் விதவையாகவே இருக்கவேண்டுமென்றும், எல்லாச் சடங்குகளிலிருந்தும் அவள் நிரந்தரமாக விலக்கப்படவேண்டுமென்றும் விதிக்கப்பட்டது."

மனிதத் தன்மைக்கு விரோதமான இந்த இரு பழக்கங்களுக்கும் உண்மையான ஆரம்ப காரணம் இதுதானென்றால், பலவந்தமாக நம்மீது திணிக்கப்பட்ட சட்டத்தின் மூலம் உடன்கட்டை ஏறுதல் ஒழிக்கப்பட்டதற்கு நாம் கடவுளுக்கு

நன்றி செலுத்த வேண்டும். திருமணம் என்ருல் என்ன என்று கூடத்தெரியாத பெண்கள்மீது பலவந்தமாக விதவை நிலையைச் சுமத்தும் ஹிந்து சமூகத்தை, வெளியிலிருந்து வரும் எந்தத் தடையும் காப்பாற்ற முடியாது. ஹிந்துக்களிடையே விஷய அறிவு ஏற்படுவதன் மூலம் இந்தச் சீர்திருத்தம் ஏற்படலாம்; அல்லது குழந்தை விதவைகளுக்கு மறுமணம் செய்விக்க வேண்டிய கடமையைப் பெற்ருேர்கள் உணருவதன் மூலம் ஏற்படலாம். பெண்கள் இதற்குச் சம்மதிக்காவிட்டால், அவர்கள் மணந்துகொள்ளுவது சரியான காரியம் தான் என்பதை அவர்களுக்கு அறிவுறுத்தலாம். இது வயது வராத பெண்களுக்கே பொருந்தும். விதவைகள் என்று சொல்லப்படுபவர்கள் வயது வந்தவர்களாயிருந்து, அவர்கள் மணந்துகொள்ள விரும்பவில்லையென்ருல், மணமாகாத கன்னிகளாயிருந்தால் மணந்துகொள்ள அவர்களுக்கு எவ்வளவு உரிமை உண்டோ அவ்வளவு உரிமை இப்போதும் உண்டு என்பதை மட்டும் அவர்களிடம் சொன்னுல் போதும்; வேறென்றும் சொல்லத் தேவையில்லை. தம்மிடமுள்ள வெள்ளி அல்லது தங்கச் சங்கிலிகளையும், மோதிரங்களையும், ஆபரணங்களென்று பெண்களும், வயது வந்தவர்களும் கூட நினைக்கிருர்கள். அதுபோல் தம்மைச் சுற்றிக் கட்டப்பட்டுள்ள சங்கிலிகளை ஆபரணங்களென்று தவருக நினைத்து, அவற்றைக் கட்டிப்பிடித்துக்கொள்ளும் கைதிகளின் தளைகளை முறிப்பது கஷ்டம்தான்.

—'ஹரிஜன்' – 20—3—1937

பகுதி ஐந்து

# விபசாரக் கொடுமை

## 1

## ஆந்திர தேசத்தில்

ஆயினும், உள்ளத்தைக் கிளறிவிடுபவைகளிலிருந்து, உள்ளத்தைக் கொல்லும் கண்டு பிடிப்புகளுக்கும் நான் இறங்கத்தான் வேண்டும். காக்கிநாடாவில், அந்தப் பெரிய பொதுக் கூட்டத்திற்குப் பிறகு, இரவு 9 மணி சுமாருக்கு நானிருந்த பங்களாவுக்குத் திரும்பி வந்தபோது, சில மாதர்களும், பெண்களும் என்னைப் பார்க்க வந்தார்கள். நான் உள்ளே போகும் போது வெளிச்சம் மிகவும் மங்கலாக இருந்தது. அவர்களுடைய நடமாட்டங்களும், பார்வைகளும் ஒரு மாதிரியாயிருந்தன. "நீங்கள் நூற்பதுண்டா? திலகர் சுயராஜ்ய நிதிக்கு என்ன தருவீர்கள்?" சாதாரணமாக இப்படித்தான் நான் யாரையும் வரவேற்பது வழக்கம். ஆனால், இந்த வழக்கமான கேள்விகள் எனக்கு வரவில்லை. அதற்கு மாறாக இந்த மாதர்கள் யார் என்று வீட்டுக்காரரைக் கேட்டேன். அவருக்கும் தெரியவில்லை. அவர்கள் யாரென்று விசாரித்தார். கொஞ்சம் தயக்கத்திற்குப் பிறகு பதில் வந்தது. "நாங்கள் நாட்டியக்காரிகள்." பூமி வெடித்து என்னை விழுங்கிவிடுவது போன்ற உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது. இந்த வாழ்க்கையின் ஆரம்பத்தைக் கொண்டாடுவதற்கு ஒரு சடங்கும் இருப்பதாக அவர் என்னைச் சமாதானப்படுத்தினர். என்னைப் பொறுத்த வரையில் இது, நிலைமையை இன்னும் மோசமாக்கிவிட்டது. கண்டிக்கத்தக்க ஒன்றிற்கு ஒரு மரியாதை அளிக்கப்பட்டுவிட்டது. நான் குறுக்கு விசாரணை செய்தேன். என்னைத் தரிசனம் செய்வதற்கு வந்ததாக அவர்கள் மிகவும் மரியாதையான குரலில் பதிலளித்தார்கள். "வேறு தொழில் ஏதாவது செய்ய அவர்கள் தயாரா?" "ஆம். அதன்மூலம் எங்களுக்கு ஜீவனம் நடக்குமானல் தயார்." அந்த இடத்திலேயே இதை முடித்துவிட எனக்கு மனம் வரவில்லை. நான் ஆணயிருப்பது பற்றி வெட்கப்பட்டேன். மறுநாள் காலை ராஜமகேந்திரபுரத்தில் தங்கினேம். அங்கே மனத்தைத் திறந்து பேசினேன். ஆந்திராவில் இதுதான் மிகவும் வேதனையளித்த ஒரு அனுபவம். இந்தியாவின் மற்றப் பகுதிகளிலும் இந்தப் பாவம், ஏதாவது ஒரு உருவத்தில் சகஜமாக இருந்துவருகிறது

என்றே நினைக்கிறேன். ஆன்ம சுத்தியின்மூலம் நாம் சுயராஜ்யம் பெறப்போகிறோ மென்றால், நமது காம இச்சைகளுக்குப் பெண்களை இரைகளாக்கலாகாது என்றுதான் நான் சொல்லுவேன். பலவீனமானவர்களைக் காப்பாற்ற வேண்டுமென்ற சட்டம் இந்த விஷயத்தில் குறிப்பாகப் பொருந்தும். பசுக்களைக் காப்பதென்பதில், நமது பெண்களின் கற்பைப் பாதுகாப்பதும் அடங்கியிருக்கிறது என்றே நான் நினைக்கிறேன். நமது தாய்மார்கள், சகோதரிகள், குமாரத்திகளுக்கு மரியாதை காட்டுவது போல், நம் நாட்டுப் பெண்களுக்கும் நாம் மரியாதை காட்டக் கற்றுக்கொண்டாலொழிய, நவ இந்தியா ஏற்பட முடியாது. நம்மிடமுள்ள மனித உள்ளத்தைக் கொன்று, நம்மை மிருகங்களாக்கும் பாவங்களிலிருந்து நம்மை விடுவித்துக் கொள்ளுவோமாக.

—'எங் இந்தியா' - 13—4—1921

## (2)

முக்கியமான ஒரு விஷயத்தைப் பற்றி, ராஜமகேந்திரபுரத்தில் நான் விரும்பியதையெல்லாம் சொன்னேன். யாராவது ஒரு தெலுங்கு நண்பர் அதை மொழி பெயர்த்து, நூற்றுக்கணக்கான நம் நாட்டு மக்களிடையே அதைப் பரப்புவார் என்று நம்புகிறேன். நேற்றிரவு காக்கிநடாவில் அந்த தாசிகள் என்னைப் பார்க்கவந்த போது மணி பத்து இருக்கும். அவர்கள் யார் என்ற உண்மை எனக்குப் பூராவாகத் தெரிந்தபோது, பூமியே வெடித்து அதற்குள் நான் முழுகுவதுபோல் எனக்குத் தோன்றிற்று. அந்தப் பாவத்தை நம்மிடையேயிருந்து அகற்றி விடும்படி உங்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். நம்முடைய காம வெறிக்காக ஒரு சகோதரிகூட வெட்கமும், சிறுமையும் நிறைந்த வாழ்க்கை நடத்த வேண்டியிருப்பது சரியல்ல. இந்தச் சுத்தி இயக்கத்தில், இந்தப் பெண்களையெல்லாம் நமது சகோதரிகளாகவும், குமாரத்திகளாகவும் பாவிக்க வேண்டியது நமது கடமையாகும். அகம்பாவம் பிடித்த இந்த அரசாங்கத்தின் பலாத்காரம் நம்மை எப்படி உறுத்துகிறது? ஒரு பெண்ணின் வாழ்க்கையைப் பாழடித்து, நாம் அரசாங்கத்தைவிட மோசமான பலாத்காரத்தைச் செய்யாதிருப்போமாக. நாட்டின் இந்தப் பகுதியில் ஒரு தாசி கூட இல்லை என்று கூடிய சீக்கிரத்தில் எனக்கு உறுதி கூறுமாறு சகோதர, சகோதரிகளாகிய உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். ஒவ்வொரு இடமாகச் சென்று, ஒவ்வொரு தாசியையும் கண்டுபிடித்து, ஆண்கள் தாம் செய்யும் தவறைப் பற்றி வெட்கமடையும்படி செய்ய வேண்டுமென்று, எனக்குப் பின்னால் உட்கார்ந்து கொண்டிருக்கும் இந்தச் சகோதரிகளைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

—'எங் இந்தியா' - 11—5—1921

# 2

# லட்சுமணபுரியின் படுகுழிகள்

லட்சுமணபுரியிலிருந்து ஒரு ஆங்கிலேய நண்பர் பின்வருமாறு எழுதுகிறார்:

"உங்களுடைய ஆதரவாளர்களில் சிலர் அதிகாரப் பதவிகளை வகிப்பவர்களாயிருப்பார்கள். அவர்களிடம் போவதற்கு முன்பு, லட்சுமணபுரியிலுள்ள விபசார விடுதிகளைப் பற்றி ஒரு வார்த்தை எழுதும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளுவதற்காகவே இதை எழுதுகிறேன். அமீனுபாதிலுள்ள ராணுவ போலீஸாருடன் இன்று காலை பேசிக்கொண்டிருந்தேன். ராணுவப் படைகளைச் சேர்ந்தவர்கள் அடிக்கடி போகும் ஐம்பது விபசார விடுதிகள் இந்த இடத்தில் இருப்பதாக அறிந்தேன். (இந்த இடங்களுக்கு அவர்கள் போகக்கூடாது. மீறிப் போனதற்காகப் பலர் ராணுவ அதிகாரிகளால் தண்டிக்கப்பட்டிருக்கிறார்கள்). அந்த இடங்களுக்கு ஐரோப்பியர்களும், ஆங்கிலோ-இந்தியர்களும் போகிறார்கள். இந்தியர்களைப்பற்றி அவர்கள் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால், அவர்களும் இந்தப் பெண்களிடம் போவதாகக் கேள்விப்பட்டேன். மனிதத் தன்மையை இழிவாக்குவதும், தன்னடக்கமற்றதுமான இந்தத் தீமையை எதிர்ப்பதற்கு, நீங்கள் ஒரு வார்த்தை சொல்லுவது மற்றெதையும் விடப் பலனுள்ளதாக இருக்கும். இந்த விஷயத்தில் என்னாலியன்ற உதவிகளைச் செய்வதாக நான் வாக்களிக்கத் தயாராயிருக்கிறேன்."

இந்த ஆங்கில நண்பர் கூறுவது போல் என்னுடைய வார்த்தைக்கு அவ்வளவு சக்தி இருக்கிறதென்று நானும் நம்பினால் நன்றாயிருக்கும். இதை நான் எழுதிக் கொண்டிருக்கும் போது, இரவில் என்னைப் பார்க்கவந்த அந்த அருமை காக்கினாடா பெண்களின் ஞாபகம் என்னை வாட்டுகிறது. அவர்களுடைய அவமானத்தைப் பற்றிக் கேள்விப்பட்ட பிறகு, அவர்கள் எனக்கு இன்னும் அருமையானவர்களாகி விட்டார்கள். தங்களுடைய வாழ்க்கை எத்தகையது என்பதை அவர்கள் என்னிடம் சூசகமாகத்தான் தெரிவிக்க முடிந்தது. அவர்கள் சார்பில் பேசிய பெண்ணின் கண்களில் துக்கமும், வெட்கமும் குடிகொண்டிருந்தன. அவர்கள் குற்றமிழைப்பவர்கள் என்று சொல்ல எனக்கு மனம் வரவில்லை. இவர்களைச் சந்தித்த பிறகு நான் செய்த பிரசங்கத்தில், தனிப்பட்ட வாழ்வில் பரிசுத்தமாயிருக்க வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தினேன். ஆகையால், லட்சுமணபுரியிலுள்ள அந்த வழுக்கிவிழுந்த சகோதரிகளை நினைக்கும் போது என் மனம் வேதனையடைகிறது. அவர்கள் அம்மாதிரி வெட்கப்படத்தக்க வாழ்க்கையை நடத்தும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. அவர்கள் மனமுவந்து அந்தத் தொழிலைச் செய்யவில்லை என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். மனிதனிடமுள்ள மிருக வெறி, வெறுக்கத்தக்க இந்தக் குற்றத்தை லாபகரமான ஒரு தொழிலாக்கிவிட்டது. லட்சுமணபுரியிலுள்ளவர்கள்

சுக வாழ்வை விரும்புபவர்கள் என்று பெயர் போனவர்கள். ஆனல், லட்சுமணபுரி ஒரு முஸ்லிம் குருவின் ஸ்தானமுமாகும். இஸ்லாத்தில் உள்ள உன்னத அம்சங்கள் யாவும் அங்கும் இருக்கின்றன. ஹிந்துக்கள் சம்பந்தப்பட்ட வரையில், மாசுமருவற்ற சீதையும், ராமனும் அலைந்து திரிந்து, ஆட்சி புரிந்த மாகாணத்தின் தலைநகரம் லட்சுமணபுரி. ஹிந்துக்கள் சுத்தமாகவும், கம்பீரத்துடனும், வீரத்துடனும், சத்தியத்தில் உறுதியுடனும் இருந்த நாட்களை அது ஞாபகப்படுத்துகிறது. ஒத்துழையாமை என்பது தன்னைத் தானே தூய்மைப்படுத்திக் கொள்ளுவதாகும். ஒத்துழையாமையாளர்களும், மற்றவர்களும் லட்சுமணபுரியிலுள்ள இந்த அதர்மக் கொள்ளை நோயைக் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். இந்தியாவிலுள்ள மற்ற நகரங்களைவிட லட்சுமணபுரி ஒன்றும் கெட்டுப் போய்விடவில்லை என்று லட்சுமணபுரியின் நல்ல பெயரில் அக்கறையுள்ள யாரும் எனக்கு ஞாபகப்படுத்த மாட்டார்களென்று நம்புகிறேன். அகஸ்மாத்தாக லட்சுமணபுரி ஒரு உதாரணமாகக் கிடைத்தது. இந்தியா பூராவிலுமுள்ள பெண்களின் தூய்மைக்கும், பாதுகாப்புக்கும் நாம் பொறுப்பாளிகள். லட்சுமணபுரி ஏன் வழிகாட்டக் கூடாது?

—'எங் இந்தியா' - 18—8—1921

## 3

# வழுக்கி விழுந்த நமது சகோதரிகள்

தம் உடல்களை விற்று வாழ்க்கையை நடத்தும் அந்தப் பெண்களை, ஆந்திர மாகாணத்திலுள்ள காக்கிநடாவில்தான் முதன் முதலாகப் பார்த்தேன். அங்கே ஐந்தாறு பேர்கள்தான் வந்திருந்தார்கள்; அதுவும் சில நிமிடங்களுக்குத்தான். இரண்டாவது தடவையாக, பாரிஸாலில் அவர்களைப் பார்த்தேன். என்னைச் சந்திப்பதற்கு முன்னதாகவே ஏற்பாடு செய்து கொண்டு, நூற்றுக்கு மேற்பட்ட அத்தகைய பெண்கள் வந்திருந்தார்கள். தாங்கள் காங்கிரஸ் அங்கத்தினர்களாகச் சேர்ந்து விட்டதாகவும், திலகர் சுயராஜ்ய நிதிக்கு நன்கொடை அளித்திருப்பதாகவும், ஆனல், காங்கிரஸ் கமிட்டிகளில் நிர்வாகப் பதவிகளை விரும்பக் கூடாதென்று நான் சொல்லுவது தங்களுக்குப் புரியவில்லை என்றும் அவர்கள் ஒரு கடிதம் எழுதியிருந்தார்கள். என்னைச் சந்திக்க விரும்புவதாகவும் அக் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார்கள். தங்களுடைய எதிர்கால நலன்களைப் பற்றி என்னிடம் யோசனை கேட்க விரும்புவதாகக் கடிதத்தை முடித்திருந்தார்கள். இந்தக் கடிதத்தைக் கொண்டுவந்தவர், மிகுந்த தயக்கத்துடன்தான் கடிதத்தை என்னிடம் கொடுத்

தார். ஏனெனில், இந்தக் கடிதத்தைப் பார்த்து எனக்குக் கோபம் வருமா அல்லது சந்தோஷப்படுவேனா என்று அவருக்குத் தெரியாது. என்னால் முடியுமானால் இந்தச் சகோதரிகளுக்கு உதவி செய்வது என் கடமையாகும் என்று அவரைத் தேற்றினேன்.

இந்தச் சகோதரிகளுடன் நான் செலவிட்ட அந்த இரண்டு மணி நேரமும் என் நினைவை விட்டு அகலவே அகலாது; சுமார் இருபது ஆயிரம் ஆண்கள், பெண்கள், குழந்தைகள் உள்ள அந்த ஊரில் தாங்கள் 350 பேருக்குமேல் இருப்பதாக அவர்கள் சொன்னார்கள். பாரிஸால் ஆண்களின் அவமானத்தின் சின்னங்களாக அவர்கள் விளங்குகிறார்கள். எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரத்தில் இதை அவர்கள் ஒழிக்கிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு பாரிஸாலின் நல்ல பெயருக்கு அது நல்லதாகும். பாரிஸாலுக்கு எது பொருந்துமோ, அது ஒவ்வொரு நகரத்திற்கும் பொருந்தும் என்றே அஞ்சுகிறேன். ஆகையால், ஒரு உதாரணமாகத்தான் பாரிஸாலைக் குறிப்பிடுகிறேன். இந்தச் சகோதரிகளுக்குச் சேவை செய்ய வேண்டுமென்று நினைத்த பெருமை பாரிஸாலிலுள்ள சில இளைஞர்களைச் சேர்ந்ததாகும். இந்தத் தீமையை ஒழித்த பெருமையும் சீக்கிரத்தில் பாரிஸாலுக்குக் கிடைக்க வேண்டுமென்று விரும்புகிறேன்.

மனிதன் எவ்வளவோ தீமைகளுக்குப் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கிறான். ஆனால், மெல்லினம் என்றல்லாமல் பெண்ணினம் என்று நான் கருதும், மனித குலத்தின் சிறப்புப் பாதியான பெண்களை, மனிதன் முறைதவறிப் பயன்படுத்திக் கொள்ளுவது போல் இழிவானதும், திடுக்கிட வைப்பதும், மிருகத்தனமானதுமான தீமை வேறு எதுவுமில்லை. ஆண், பெண் ஆகிய இரு இனங்களில் பெண்ணினமே உன்னதமானது. ஏனெனில், இன்றும்கூட தியாகம், பொறுமையுடன் கஷ்டங்களைச் சகித்துக் கொள்ளுதல், எளிமை, நம்பிக்கை, அறிவு ஆகியவற்றின் உருவங்களாகப் பெண்கள் இருக்கிறார்கள். தன்னுடைய அறிவுதான் உயர்ந்ததென்று மனிதன் அகம்பாவப் படுகிறான். ஆனால், பல சமயங்களில் மனிதனின் அந்த அறிவை விடப் பெண்களின் சூட்சும அறிவே உண்மையானதாக இருந்திருக்கிறது. ராமனுக்கு முன்பு சீதையையும், கிருஷ்ணனுக்கு முன்பு ராதையையும் குறிப்பிடுவதில் அர்த்தமிருக்கிறது. நாகரிகமடைந்த ஐரோப்பாவிலும் இது பரவி இருக்கிறது. சில நாடுகளில் அரசாங்கத்தின் ஒழுங்கு முறைகளுக்குட்பட்டுக்கூட இது நடக்கிறது என்ற காரணத்தினால், தீய பழக்கத்தில் இப்படிச் சூதாடுவதற்கு மனித வளர்ச்சியில் இடமுண்டு என்ற நம்பிக்கையில் நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ள வேண்டாம். இந்தியாவிலேயே முன்பு இப்படி நடந்திருக்கிறது என்பதைக் காரணம் காட்டி, இதை நிரந்தரமானதாக்கிவிடாமலும் இருப்போமாக. நல்லது, கெட்டதைப் பாகுபாடு செய்து பிரிப்பதை நாம் நிறுத்தி

விட்டு, நமக்குப் பூராவாகத் தெரியாத சென்ற காலப் பழக்கங்களைக் குருட்டுத்தனமாகப் பின்பற்ற ஆரம்பித்தால், அந்த நிமிஷம் முதல் நமது வளர்ச்சியும் நின்றுவிடும். சென்ற காலத்தின் உன்னதமான, சிறந்த பண்புகளுக்கு நாம் வாரிசுகளாவோம். சென்ற காலத் தவறுகளைப் பெருக்கிக் கொண்டு போவதன் மூலம், நம்முடைய பிதுரார்ஜிதத்தை நாம் அகௌரவப் படுத்தக் கூடாது. சுயமரியாதையுள்ள இந்தியாவில், எந்த ஒரு பெண்ணின் கற்பும் ஒவ்வொருவருக்கும் தம் சொந்த சகோதரியின் கற்பைப் போன்று அவ்வளவு முக்கியமானதல்லவா? இந்தியாவில் வாழும் ஒவ்வொருவரையும் நமது சகோதரராகவோ, சகோதரியாகவோ பாவிக்கும் தன்மைதான் சுயராஜ்யம்.

ஆகையால், ஒரு மனிதன் என்ற முறையில், இந்த நூறு சகோதரிகளின் முன்பு நான் வெட்கித் தலைகுனிந்தேன். அவர்களில் சிலர் வயதானவர்கள். பெரும்பாலோர் 20 முதல் 30 வயது வரையுள்ளவர்கள். இரண்டு மூன்று பேர் 12 வயதுக்குட்பட்ட சிறுமிகள். மொத்தத்தில் இவர்களுக்கு ஆறு பெண்களும், நான்கு பிள்ளைகளும் இருக்கிறார்கள். இவர்களில் மூத்தவனுக்கு அவர்களிலேயே ஒரு பெண்ணை மணந்து கொடுத்திருக்கிறார்கள். வேறு ஏதாவது சாத்தியமாயிருந்தாலொழிய, பெண்கள் அவர்களைப்போல் அதே தொழிலுக்குத் தயார் செய்யப்படுவார்களாம். தங்களுக்கு விமோசனமே கிடையாது என்று அவர்கள் நினைக்க வேண்டியிருந்ததென்றால், அது புண்ணில் குச்சியால் குத்தியது போலிருந்தது. ஆயினும், அவர்கள் புத்திசாலிகளாகவும், அடக்கமுள்ளவர்களுமாகவே இருந்தார்கள். அவர்கள் பேசியது கண்யமான முறையில் இருந்தது. அவர்கள் அளித்த பதில்களும் அழகாகவும், நேரடியாகவும் இருந்தன. அப்போதைக்கு வேறெந்த சத்தியாக்கிரகியையும் போலவே அவர்களும் உறுதியுடனிருந்தார்கள். தமக்கு உதவியளிக்கப்பட்டால், அடுத்த நாளிலிருந்து தம்முடைய தொழிலை விட்டுவிட்டு, நூற்கவும், நெய்யவும் ஆரம்பிப்பதாக அவர்களில் 11 பேர் வாக்களித்தார்கள். மற்றவர்கள் யோசிக்க வேண்டுமென்று சொன்னார்கள். ஏனெனில், அவர்கள் என்னை ஏமாற்ற விரும்பவில்லை.

பாரிஸாலில் உள்ளவர்களுக்கு இதோ இத்துறையில் வேலை இருக்கிறது. இந்தியாவின் உண்மைத் தொண்டர்களான ஆண்களுக்கும், பெண்களுக்கும், இதோ வேலையிருக்கிறது. 20,000 பேர் ஜனத்தொகையில் இத்தகைய அபாக்கியவதிகளான 350 சகோதரிகள் இருந்தால், இந்தியா பூராவிலுமாக 52,50,000 பேர்கள் இருக்கக்கூடும். ஆனால், இந்தியாவின் கிராமங்களில் வசிப்பவர்களும், முற்றிலும் விவசாயத் தொழிலிலேயே ஈடுபட்டிருப்பவர்களுமான இந்தியாவின் ஜனத் தொகையில் ஐந்தில் நான்கு பகுதியினர் இந்தத் தீமையினால் பாதிக்கப்படவில்லை என்று தற்பெருமையடைகிறேன். ஆகையால், இந்தியா பூராவிலும் தம்முடைய மானத்தை விற்றுப் பிழைப்பவர்களின் குறைந்தபட்ச எண்

ணிக்கை *10,50,000* ஆக இருக்கும். துரதிருஷ்டம் பிடித்த இந்த சகோதரிகளை, அவர்களுடைய அவமானத்திலிருந்து மீட்பதற்கு முன்பு, இரண்டு நிபந்தனைகளை நிறைவேற்ற வேண்டும். ஆண்களாகிய நாம் நமது இச்சைகளைக் கட்டுப்படுத்தக் கற்றுக் கொள்ள வேண்டும்; இந்தப் பெண்கள் கௌரவமாகக் காலம் தள்ளுவதற்கு ஏதாவது ஒரு தொழிலைக் கண்டுபிடிக்க வேண்டும். நம்மைத் தூய்மைப்படுத்தி, நமது தீய இச்சைகளை அடக்கி வைப்பதற்கு ஒத்துழையாமை இயக்கம் உதவி செய்யவில்லையென்றால், அதில் அர்த்தமே இல்லை. இடமிருக்குமோ, இல்லையோ என்ற பயமில்லாமல், எல்லோரும் மேற்கொள்ளுவதற்கு நூற்றலையும், நெய்தலையும் போல் வேறு தொழில் கிடையாது. இந்தச் சகோதரிகளில் பெரும்பாலோர் திருமணத்தைப் பற்றி நினைக்க வேண்டிய அவசியமில்லை. அதைப் பற்றித் தாங்கள் நினைக்க முடியாது என்பதையும் அவர்கள் ஒப்புக்கொண்டார்கள். ஆகையால், அவர்கள் இந்தியாவின் உண்மையான சன்னியாசினிகளாக ஆகவேண்டும். சேவை செய்வதைத் தவிர வாழ்க்கைக் கவலை ஒன்றும் இல்லையாதலால், இஷ்டப்படி அவர்கள் நூற்கலாம், நெய்யலாம். 15 லட்சம் பெண்கள் தினசரி எட்டு மணி நேரம் சுறுசுறுப்புடன் நூற்கிறார்களென்றால், ஏழை இந்தியாவுக்கு அவ்வளவும் ரூபாய்கள் என்று அர்த்தம். தாங்கள் தினசரி இரண்டு ரூபாய் சம்பாதிப்பதாக இந்தச் சகோதரிகள் என்னிடம் சொன்னார்கள். ஆனால், மனிதனின் வெறியைத் திருப்தி செய்வதற்கு அவர்களுக்குப் பல சாதனங்கள் வேண்டியிருக்கின்றன. நூற்கவும், நெய்யவும் ஆரம்பித்து விட்டால், அவற்றில் பலவற்றை விட்டுவிடலாம் என்பதை அவர்கள் ஒப்புக்கொண்டார்கள். அவர்களுடைய பாவ வழியைக் கைவிடாவிட்டால், அவர்கள் காங்கிரஸ் கமிட்டிகளின் நிர்வாகிகளாயிருக்க முடியாது என்பதை, எங்களுடைய சம்பாஷணை முடிந்தபோது நான் சொல்லாமலேயே அவர்கள் தெரிந்து கொண்டார்கள். சுத்தமான கரங்களும், தூய்மையான உள்ளங்களும் இல்லாத யாரும் சுயராஜ்யம் என்ற பலிபீடத்தின் முன்பு தலைமை தாங்கி நிற்க முடியாது.

—'எங் இந்தியா' - 15—9—1921

# 4

# வழுக்கி விழுந்த சகோதரிகள்

மதாரிபூரில், வழுக்கி விழுந்த சகோதரிகள் நூற்கும் நிகழ்ச்சி ஒன்றை வரவேற்புக் கமிட்டியினர் ஏற்பாடு செய்திருந்தார்கள். இந்தக் காட்சியைப் பார்க்கும்போது எனக்குச் சந்தோஷமாயிருந்தது. ஆனால், இந்தப் பிரச்னையைக் கையாளு

வதில் உள்ள அபாயங்களை வரவேற்புக் கமிட்டியினரின் கவனத்திற்குக் கொண்டு வந்தேன். பாரிஸாலில்தான் இவர்களை மீட்பதற்கான இயக்கம் திட்டமாக உருவாயிற்று. ஆனால், அங்கே அது நல்ல முறையில் நடக்கவில்லை. இப்போது அது போகும் விதமே விகாரமாயிருக்கிறது இந்த அபாக்கியவதிகளான சகோதரிகளுக்காக ஒரு சங்கம் அமைக்கப்பட்டது. அந்தச் சங்கத்திற்குத் தப்பர்த்தம் கொடுக்கக் கூடிய ஒரு பெயர் வைக்கப்பட்டிருக்கிறது. அதனுடைய இப்போதைய ''நோக்கங்களும், கொள்கைகளும்'' பின்வருமாறு :

''1) ஏழைகளுக்கு உதவி செய்வது, நோய்வாய்ப்பட்டுள்ள சகோதரர்களுக்கும், சகோதரிகளுக்கும் சிகிச்சை அளிப்பது.

2) அ. தம்மிடையே கல்வியைப் பரப்புதல்.

ஆ. நாரி சில்பாச்ரமம் ஒன்றை ஸ்தாபித்து, நூற்றல், நெய்தல்,தையல் வேலை போன்ற கைவேலைகளுக்கு ஊக்கமளித்தல்.

இ. உயர்தர சங்கீதப் பயிற்சி அளித்தல்.

3) சத்தியாக்கிரகத்தையும், அகிம்சையையும் கொள்கைகளாகக் கொண்ட மற்ற ஸ்தாபனங்களுடன் சேர்ந்து கொள்ளுவது.

இது குதிரைக்கு முன்பு வண்டியைக் கொண்டு வந்து நிறுத்துவதாகும். இந்தச் சகோதரிகள் தம்மைத் தாமே திருத்திக் கொள்ளுவதற்கு முன்பு பரோபகரமான பணிகளில் ஈடுபடுவது நல்லது. அதன் விளைவு பரிதாபப்படத்தக்கதா யிராதென்றால், உயர்தர சங்கீதப் பயிற்சி அளிப்பதென்ற திட்டம் மிகவும் வேடிக்கையாகவே இருக்கும். இந்தப் பெண்களுக்கு ஆடவும், பாடவும் தெரியுமென்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். சத்தியாக்கிரகம், அகிம்சை இரண்டையும் கொள்கைகளாக உடைய எல்லா ஸ்தாபனங்களிலும் அவர்கள் சேரலாம்; ஆயினும், தம்முடைய தொழிலின் மூலம் சத்தியத்திற்கும், அகிம்சைக்கும் முரணாகவே நடந்து கொண்டிருப்பவர்களாவார்கள்.

அவர்கள் காங்கிரஸ் அங்கத்தினர்களாகச் சேர்க்கப்பட்டிருப்பதாகவும், அவர்களுடைய 'எளிய நிலைமைக்குத் தகுந்த தேசீய சேவை செய்ய அனுமதிக்கப்பட்டிருப்பதாகவும்' எனக்கு வந்துள்ள கடிதத்தில் கூறப்பட்டிருக்கிறது. அவர்கள் பிரதிநிதிகளாகக்கூடத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் பெயரால் தயாரிக்கப்பட்டுள்ள ஒரு விக்ஞாபனத்தைப் பார்த்தேன். அது ஆபாசமானதாயிருக்கிறது என்று நான் நினைக்கிறேன்.

நோக்கம் என்னவாயிருந்தாலும், இந்தச் சம்பவம் பூராவும் வெட்கக்கேடானது என்றுதான் நான் நினைக்க வேண்டியிருக்கிறது. ராட்டையில் நூற்பதை நான் பாராட்டுகிறேன். ஆனால், தீமைக்கு அதை ஒரு அனுமதிச் சீட்டாக உபயோகிக்கக்கூடாது.

எல்லோரும் சத்தியாக்கிரகத்தை ஆதரிப்பதை நான் விரும்புகிறேன்; ஆனால், கொலையே தொழிலாகக் கொண்ட இரக்கமற்ற கொலைகாரன் சத்தியாக்கிரக உறுதி மொழியில் கையெழுத்திடுவதை, என்னால், முடிந்த வரையில் முயற்சி செய்து தடுப்பேன். இந்தச் சகோதரிகளிடம் எனக்கு முழு அனுதாபமும் இருக்கிறது. ஆனால், பாரிஸாலில் பின்பற்றப்பட்ட முறைகளை நான் ஒப்புக் கொள்ள முடியாதவனாயிருக்கிறேன். இந்தச் சகோதரிகளுக்கு ஓர் அந்தஸ்து ஏற்பட்டிருக்கிறது; சமூகத்தின் தார்மிக நலன்களை முன்னிட்டு அவர்களுக்கு அந்த அந்தஸ்து இருக்கக் கூடாது. இந்தப் பெண்கள் எந்த நோக்கத்துடன் சங்கம் அமைத்துக் கொண்டிருக்கிறார்களோ, அதே மாதிரி ஒரு சங்கத்தைத் திருடர்களென்று நமக்குத் தெரிந்தவர்கள் அமைத்துக் கொண்டால், அதை நாம் ஏற்றுக்கொள்ளமாட்டோம். இந்தச் சங்கத்திற்கும் நியாயமில்லை; ஏனெனில், இவர்கள் திருடர்களை விட அபாயகரமானவர்கள். திருடர்கள் உடைமைகளைத் திருடுகிறார்கள்; ஆனால், இவர்கள் நல்லொழுக்கத்தைத் திருடிவிடுகிறார்கள். சமூகத்தில் இந்த துரதிருஷ்டசாலிகள் இருப்பதற்கு ஆண்தான் முக்கியமான காரணமென்றாலும், விஷமம் செய்வதற்கான வாய்ப்புகளை இவர்கள் அபாயகரமான அளவுக்குப் பெற்றிருக்கிறார்கள் என்பதை மறந்துவிடக் கூடாது. இந்தச் சங்கம் காரணமாக அவர்கள் மிகவும் தகாத முறையில் நடந்து கொள்ளுகிறார்களென்றும், இப்பொழுதே இவர்களால் பாரிஸால் இளைஞர்கள் ஒழுக்கம் கெட்டுப் போயிருக்கிறார்களென்றும் பாரிஸாலில் என்னிடம் சொல்லப்பட்டது. அவர்களுடைய சங்கத்தைக் கலைத்துவிட்டால் நல்லது என்று நான் நினைக்கிறேன். இவர்கள் தம்முடைய அவமானமான வாழ்க்கையைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருக்கும் வரையில், இவர்களிடமிருந்து நன்கொடைகளையும், சேவைகளையும் ஏற்றுக் கொள்ளுவதோ, அவர்களைப் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுப்பதோ, அவர்கள் காங்கிரஸ் அங்கத்தினர்களாவதற்குத் தூண்டுதல் அளிப்பதோ தவறு என்று நான் உறுதியாகக் கருதுகிறேன். அவர்கள் காங்கிரஸில் சேருவதற்குச் சட்டபூர்வமான தடை எதுவுமில்லை. ஆனால், பொதுஜன அபிப்பிராயம் அவர்களைக் காங்கிரஸிலிருந்து விலக்கி வைக்குமென்றும், காங்கிரஸ் மெம்பர்களாகச் சேராமல் அவர்களே அடக்கத்துடனிருப்பார்களென்றும் நான் நம்பிக் கொண்டிருந்தேன்.

என்னுடைய கருத்து அவர்களுடைய காதுகளுக்கு எட்டக் கூடாதா? அவர்கள் காங்கிரஸிலிருந்து தமது பெயர்களை வாபஸ் பெற்றுக் கொண்டு, தங்களுக்கென்று ஒரு சங்கம் இருந்தது என்பதையும் மறந்து, தமது ஒழுக்கக்கேடான தொழிலை சீக்கிரமாகவும்,உறுதியுடனும் கைவிட்டுவிட வேண்டுமென்று வற்புறுத்த விரும்புகிறேன். பிறகுதான் அவர்கள் தமக்கு ஒரு கட்டுப்பாட்டை ஏற்படுத்திக் கொள்ளுவதற்காக நூற்பதையோ, நெய்

வதையோ, அல்லது வருவாய் அளிக்கக் கூடிய வேறு ஏதாவது நல்லதொரு தொழிலையோ தமது ஜீவனோபாயத்திற்காக மேற்கொள்ளலாம்.

—'எங் இந்தியா' - 25—6—1925

# 5

# வேதனை தரும் விளக்கம்

''வங்காளத்திலுள்ள பல நகரங்களிலும், கிராமப்புறங்களிலும் இப்போது நீங்கள் சுற்றுப் பிரயாணம் செய்துகொண்டிருப்பதால், நீங்கள் ஒரு வார்த்தை புத்திமதி கூறி, வேண்டுகோள் விடுத்தால், மிகவும் நல்ல பலன் ஏற்படும் என்ற ஆழ்ந்த நம்பிக்கையில், வங்காளத்தின் சமூக வாழ்விலுள்ள மிகவும் மோசமான ஒரு அம்சத்தை உங்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். எந்தக் குறிப்பிட்ட ஒரு வகுப்பு, சாதி அல்லது பிரிவின் மீதும் குறை சொல்ல வேண்டுமென்ற எண்ணம் எனக்குக் கொஞ்சமும் கிடையாது. இப்போது வங்காளத்தில் உள்ள நிலைமையை, உங்கள் கவனத்திற்குக் கொண்டுவரவேண்டுமென்பது ஒன்றுதான் என்னுடைய நோக்கமாகும்.''

''பிரமிக்கத்தக்க விதத்தில் இப்போது வங்காளத்தில் ஒவ்வொரு நாளும் பல பெண்கள் கடத்திச் செல்லப்படுவதைப் பற்றிய விவரங்கள் உங்கள் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டிருக்க வேண்டும் என்றே நம்புகிறேன். நமது சமூக வாழ்வின் உட்புறத்தில் ஏதோ கோளாறு இருக்கிறது என்பதையே தார்மிக விரோதமான இந்த நிகழ்ச்சிகள் நிச்சயமாகக் காட்டுகின்றன.

''வங்காளத்தின் சில ஜில்லாக்களில் நடக்கும் விபசாரமும், அங்கே உள்ள ஒழுக்கக் கேடும் ஆச்சரியப்படத் தக்கவைகளாக இருக்கின்றன. மேற்கு வங்காளத்தின் பெரும்பாலான ஜில்லாக்களிலும், சணல் தொழில் மிகுந்துள்ள வடக்கு, கிழக்கு வங்காளப் பகுதிகளிலும் ஒரு கிராமக் கடைத் தெருவில்கூட விபசார விடுதிகள் அவசியமான ஒரு அம்சம் என்று கருதப்படுகிறது. 'பந்தர்கள்' என்று சொல்லப்படும் பெரிய கடை வீதிகளில் நிலைமை எப்படி இருக்கும் என்பதைச் சுலபமாக ஊகித்துக் கொள்ளலாம். நல்ல வியாபார காலத்தில், பெரும்பாலான சணல் மார்க்கெட்டுகளில் ஏற்கனவே உள்ள விபசார விடுதிகள் போதாவென்று, தாற்காலிக விபசார விடுதிகளும் ஏற்பாடு செய்யப்படுகின்றன. ஏராளமான விபசாரிகள் இந்த இடங்களில் வந்து குவிந்து, மார்க்கெட் ஓரமாக நதிகளில் நிறுத்தப்பட்டிருக்கும் படகுகளிலிருந்து மோசமான தமது தொழிலை நடத்துகிறார்கள். மேற்கு வங்காளத்தின் பல பாகங்களில் அநேகமாக எல்லாச்சந்தைகளிலுமே இந்த அபாக்கியவதிகள் வந்து குவிந்து விடுகிறார்கள். சந்தை நடக்கும் மைதானங்களில் தாற்காலிகமாகக் கூடாரங்கள் போட்டுக் கொண்டு, சந்தைக்கு வருபவர்களிடம் தொழில் செய்கிறார்கள். சில ஜில்லாக்களில் ஒரு ஜமீன்தாரின் வீட்டையோ, கச்சேரியையோ சுற்றி ஏராளமான விபசாரிகள் குடியேறிவிடுகிறார்கள். ஏனெனில், பொதுவாக ஜமீன்தார்களும், அவர்களுடைய அதிகாரிகளும்

இவர்களுக்கு ஆதரவு தருபவர்கள். மைமன்ஸிங், பப்னு, ராஜஷாஹி ஜில்லாக்கள் குறிப்பாக இந்த விஷயத்தில் பெயர் போனவை. இந்த ஜில்லாக்களில் தான் பெண்கள் கடத்தப்படுவதும், துன்புறுத்தப்படுவதும் அதிகமாக இருக்கின்றன என்பது எதிர்பார்க்கக் கூடியதேயாகும். வங்காளத்தில் வைஷ்ணவர்கள் அல்லது பைராகி என்று சொல்லப்படுபவர்கள் சுமார் 4 லட்சம் பேர் இருக்கிறார்கள். (ஆண்கள் 1,74,497; பெண்கள் 2,03,610) இவர்களில் பெரும்பாலோர் பாடியும், பிச்சை யெடுத்தும் வாழ்க்கை நடத்துகிறார்கள். சுருங்கச் சொன்னால், இந்தப் புல்லுருவிகளுக்காக வங்காள மக்கள் வருடத்தில் 3 கோடி ரூபாய் செலவிடுகிறார்கள். இந்த வைஷ்ணவ வகுப்பு, ஹிந்து சமூகத்தின் குப்பைத் தொட்டி என்று கருதப்படுவதுதான் இதிலுள்ள மிகவும் துரதிருஷ்டவசமான அம்சமாகும். கடத்தப்படுபவர்களில் பெரும்பாலோர் இந்த வைஷ்ணவப் பெண்களே. மதம் என்ற போர்வையில் இந்த துர்ப்பாக்கியசாலிகள் முற்றிலும் ஒழுக்கக்கேடான முறையில் வாழ்க்கையை நடத்துகிறார்கள். நான் கூறும் இந்த விஷயங்களைப் பற்றி நீங்கள் அந்தரங்கமாக விசாரித்து, இவை எவ்வளவு தூரம் சரியானவை என்பதை நீங்களே தெரிந்து கொள்ள வேண்டுமென்றுதான் நான் கேட்டுக்கொள்ளுகிறேன். கைராட்டினத்தை இவர்களிடையே புகுத்தி, தராதரமில்லாமல் தருமம் செய்வதையும் நிறுத்திவிட்டால், இந்த லட்சம் பேர்களும் காப்பாற்றப்படுவார்கள்; இதனால் அவர்களை உபயோகமான ஒரு ஆஸ்தியாகவும் மாற்றிவிடலாம்.

''கல்கத்தாவிலும், அதைச் சுற்றியும்கூட நிலைமை மோசமாகத்தான் இருக்கிறது. மிதுனபுரி, பங்கூரா, வீரபூமி, பர்த்வான் முதலிய மேற்கு வங்காள ஜில்லாக்களின் சகிக்க முடியாத வறுமை காரணமாக, நூற்றுக் கணக்கான பெண்கள் தமது கிராமங்களை விட்டு கல்கத்தாவுக்கும், அதன் சுற்றுப் புறங்களுக்கும் வந்து குவிந்து விடுகிறார்கள். பணிப் பெண்களாகவோ, வெற்றிலை விற்பவர்களாகவோ இங்கே அவர்கள் நிச்சயமற்ற வாழ்க்கை நடத்துகிறார்கள். இந்த ஜில்லாக்களில் துர் வியாதிகளும், குஷ்ட நோயும் அதிகமாகப் பரவியிருப்பதற்குப் பாமர மக்களிடையே உள்ள ஒழுக்கம் மிகத் தரக் குறைவா யிருப்பது மற்றொரு காரணமாகும். வங்காளத்திலுள்ள 15,451 குஷ்ட ரோகிகளில், 7,240 பேர் (அநேகமாக சரி பாதி) பர்த்வான் டிவிஷனைச் சேர்ந்தவர்கள்; (வங்காள ஜனக்கணக்கு அறிக்கை 1921, இரண்டாவது பாகம், பக்கம் 162). வங்காளத்தில் மிகவும் க்ஷீணமடைந்து வரும் ஜில்லாக்களும் இவைதாம். இங்கே ஜனத்தொகையும் பெரிதும் குறைந்து வந்திருக்கிறது. வங்காளத்திலுள்ள வேறெந்தப் பகுதியையும் விட, இந்த ஜில்லாக்களில் குடிப்பழக்கம் அதிகமாகப் பரவியிருப்பது ஒரு விசித்திரமே.

''கல்கத்தாவிலுள்ள நாடகக் கொட்டகைகள் முக்கியமாக வழுக்கிவிழுந்த பெண்களாலேயே நடத்தப்படுகின்றன. ஏராளமான மாணவர்களும், பொது வாழ்விலுள்ள பிரபலஸ்தர்களும்கூட இந்த இடங்களுக்கு விஜயம் செய்கிறார்கள். இந்த நாடகக் கொட்டகைகளில் முக்கியமான பொதுக்கூட்டங்களும் நடத்தப்படுகின்றன. நடிகைகளையும், நாட்டியக்காரிகளையும் பாராட்டி தினசரிப் பத்திரிகைகளில் நீண்ட கட்டுரைகள் வெளியிடப்படுகின்றன. (துரதிருஷ்டவசமாக, மிகவும் செல்வாக்குள்ள சில தேசீயப் பத்திரிகைகளில் கூட) மேலும், நாடகம், நாட்டியம் முதலியவைகளுக்கென்றே படங்கள் நிறைந்த வங்காள சஞ்சிகைகளும் இருக்கின்றன. பத்து வருடங்களுக்கு முன்பிருந்

ததைவிட இன்று வங்காளி மொழியில் மட்டரகமான பிரசுரங்கள் அதிகமாயிருக்கின்றன என்றே சொல்லலாம்.

"இவற்றையெல்லாம் பார்க்கும்போது, மனம் ஏக்கமடைகிறது; நிர்க்கதியான உணர்ச்சி ஏற்படாமலும் இருக்கமுடியாது.

"இப்போது உள்ள நிலைமையில், பின்கண்ட விஷயங்களைப் பற்றி உங்களுடைய அபிப்பிராயத்தைப் பகிரங்கமாகத் தெரிவிக்க வேண்டுமென்று தாழ்மையுடன் நான் கேட்கத்தான் வேண்டியிருக்கிறது.

(1) ஒரு காங்கிரஸ் மெம்பரோ, தொண்டரோ அல்லது தேசிய ஊழியராக வேண்டுமென்று விரும்புபவரோ பெண்களால் அல்லது நடிகைகளால் நடத்தப்படுபவைகளும், மிருக இச்சையைத் தூண்டக்கூடிய படங்கள், கவர்ச்சியளிக்கத் தக்கவிதத்தில் காட்டப்படுபவைகளுமான நாடகக் கொட்டகைகளுக்குப் போகலாமா?

(2) இந்த நாடகக் கொட்டகைகளில் பொதுக் கூட்டங்களை நடத்தலாமா?

(3) பெண்களால் நடத்தப்படும் நாடகக் கொட்டகைகள், நாட்டிய அரங்குகள் முதலியவைகளைப் பற்றிய விளம்பரங்களை தேசீயப் பத்திரிகைகள் பிரசுரிக்கலாமா? நடிகைகளைப் பாராட்டும் கட்டுரைகளை அவை பிரசுரிக்கலாமா? மது வகைகள், போதை வஸ்துக்களைப் பற்றிய விளம்பரங்களையும் பிரசுரிக்கலாமா?

(4) மாணவர்களும், காங்கிரஸ் ஊழியர்களும் புகை பிடிப்பது, குடிப்பது போன்றவைகளைக் கண்டிப்பாகத் தவிர்க்க வேண்டாமா? சிட்டகாங் நகரத்தில் மாதத்தில் ரூ. 50,000 மதிப்புள்ள சிகரெட்டுகளும், பீடிகளும் விற்பனையாவதாக வியாபாரிகளே என்னிடம் கூறியிருக்கிறார்கள் (சிட்டகாங் நகரத்தின் ஜனத்தொகை 36,030, ஜில்லாவின் ஜனத்தொகை 16,11,422)!!

(5) குடியையும், விபசார விடுதிகளையும் ஒழிப்பதற்கு எல்லா நகரசபைகளும், ஸ்தல ஸ்தாபனங்களும் தம்மாலியன்ற முயற்சிகளைச் செய்யவேண்டாமா? இந்த சமூகத் தீமைகளை ஒழிப்பதற்கு இந்த ஸ்தாபனங்கள் தம்மாலியன்ற அளவுக்குப் பிரசாரம் செய்துவர வேண்டாமா?"

இந்தக் கடிதம் என்னிடம் சிட்டகாங்கில் கொடுக்கப்பட்டது. அதிலிருந்து இதுவரையில் என் பையிலேயே இருந்து வந்திருக்கிறது. வழுக்கி விழுந்த சகோதரிகளை அவர்களுடைய தவறிலிருந்து திருப்புவதற்குச் செய்யப்பட்ட முயற்சிகள், எப்படி தீமைக்கு அனுமதிச் சீட்டாகி விட்டன என்பது வாசகர்களுக்குத் தெரியும். விபசாரம் வளர்ந்து கொண்டேயிருக்கும் ஒரு மகத்தான தீமை என்பது நானறிந்ததே. தீமையில் நன்மையைக் காணும் போக்கும், புனிதமான கலை அல்லது வேறு ஏதாவது ஒரு பொய்ப் பெயரைச்சொல்லித் தீமையை மன்னிக்கப் பார்ப்பதும், இழிவான இந்தப் புலன் நுகர்ச்சிக்கு ஒரு மாதிரியான அந்தஸ்தைக் கொடுத்துவிட்டது. இப்போது நிலவும் அதர்மப் பெரு வியாதிக்கு இதுவே காரணம். ஆனல், இக்கடிதத்தை எழுதியிருப்பவர் கூறுவதுபோல் நிலைமை இவ்வளவு

மோசமாயிருக்குமென்று நான் எதிர்பார்க்கவில்லை. இந்தத் தீமையை அவர் மிகைப்படுத்திக் கூறவில்லை என்றே நினைக்கிறேன். ஏனெனில், என்னுடைய சுற்றுப்பிரயாணங்களின் போது, பல இடங்களிலிருந்து இதற்கு ஊர்ஜிதம் கிடைத்திருக்கிறது. கடவுளிடம் நம்பிக்கையில்லாத யுகம் இது. அப்படியே இருந்தாலும் அது உணர்வற்ற இயந்திரத்தின் செய்கை போன்ற நம்பிக்கையாக இருக்கிறது. இந்தக் காலத்தில் சுகபோகங்கள் பெருகிக்கொண்டே போகப்படுவதைப் பார்க்கும்போது, ஆதிக்கத்தின் உச்சாணியில் இருப்பதுபோல் தோன்றியபோதே ரோமாபுரிக்கு ஏற்பட்டிருந்த க்ஷீணம் ஞாபகத்திற்கு வருகிறது. இத்தகைய யுகத்தில் இந்தத் தீமை பெரும் அளவில் இருந்தாலும், ஒரு பரிகாரத்தைக் குறிப்பிடுவது சுலபமானதல்ல. இதைச் சட்டத்தின் மூலம் தீர்க்க முடியாது. லண்டன் பூராவிலும் இந்தத் தீமை மலிந்திருக்கிறது. பாரிஸும் இதற்குப் பெயர்போனது; பாரிஸின் தீமை ஒரு மோஸ்தராக ஆகிவிட்டது. சட்டம் இதைத் தடுத்திருக்குமென்றால், நல்ல நிர்வாக அமைப்புள்ள இந்த நாடுகள் தம்முடைய தலைநகரங்களிலிருந்து இதை ஒழித்திருக்கும். என்னைப் போன்ற சீர்திருத்தவாதிகள் எவ்வளவுதான் எழுதினாலும், இந்தத் தீமையை அப்படி ஒன்றும் சமாளித்துவிட முடியாது. இங்கிலாந்தின் அரசியல் ஆதிக்கமே கெடுதலானதுதான். கலாசார ஆதிக்கம் அதிலும் மோசம். ஏனெனில் ராஜீய ஆதிக்கத்தை நாம் விரும்பாமல் அதை எதிர்ப்பதற்கு முயற்சி செய்கிறோம். ஆனால், கலாசார ஆதிக்கத்தைக் கட்டித் தழுவிக்கொள்ளுகிறோம். கலாசார ஆதிக்கம் பூர்ணமானதாகிவிட்டால், ராஜீய ஆதிக்கத்தை எதிர்க்க முடியாது என்பதை அதன் மீதுள்ள மோகத்தினால் நாம் உணருவதில்லை. நான் கூறுவதைத் தவறாக எடுத்துக்கொள்ள வேண்டாம். பிரிட்டிஷாரின் ஆட்சிக்கு முன்னால் இந்தியாவில் விபசாரமே கிடையாது என்று நான் சொல்லுவதாக அர்த்தமில்லை. ஆனால், இப்போதிருப்பதைப் போல் அவ்வளவு பரவலாக அது இருந்ததில்லை என்று கூறுகிறேன். இது மேல் வகுப்பினர் சிலரிடையே மட்டும் நிலவி வந்தது. ஆனால், இப்போது மத்தியதர வகுப்பு இளைஞர்களை அது வேகமாகச் சீரழித்துக் கொண்டிருக்கிறது. நாட்டிலுள்ள என் நம்பிக்கை பூராவும் இளைஞர்களிடமே இருக்கிறது. இந்தத் தீமைக்கு இரையாகியிருப்பவர்கள் இயற்கையிலேயே கெட்டவர்களல்ல. அவர்கள் சிந்தனையின்றி, தம்மையறியாமலேயே இதில் இழுக்கப்பட்டு விடுகிறார்கள். அவர்களுக்கும், சமூகத்திற்கும் இதனால் ஏற்பட்டிருக்கும் தீமையை அவர்கள் உணரவேண்டும். கண்டிப்பான கட்டுப்பாடுள்ள வாழ்க்கைதான் அவர்களையும், தேசத்தையும் முழு அழிவிலிருந்து காப்பாற்ற முடியும் என்பதையும் உணரவேண்டும். எல்லாவற்றையும் விட முக்கியமாக அவர்கள் கடவுளை மனக்கண் முன்பு நிறுத்திக்கொண்டு, தீய ஆசைகளிலிருந்து காப்பாற்றிக் கொள்ளுவதற்குக் கடவுளின் துணையை

நாட வேண்டும்; வெறும் வறட்டுக் கட்டுப்பாடுகளால் மட்டும் பிரயோசனமில்லை. "மனிதன் உபவாசமிருந்து தன் உடலைக் கட்டி வைத்திருந்தாலும் ஆசை இருந்துகொண்டு தானிருக்கிறது. கடவுளை நேருக்கு நேர் கண்டால்தான் ஆசை போகும்" என்று தெரியாமலா கீதாசாரியர் கூறினர்? கடவுளை நேருக்கு நேர் பார்ப்பதென்பது, கடவுள் நமது உள்ளங்களில் குடி கொண்டிருக்கிறார் என்று உணருவதாகும். எந்த விதமான வெளி நடவடிக்கையும் இல்லாமலேயே குழந்தை தன் தாயின் வாஞ்சையை உணர்ந்துகொள்ளுவது போல், நாமும் கடவுளை உணர வேண்டும். தாயின் வாஞ்சையைப் பற்றிக் குழந்தை வாதப் பிரதிவாதம் செய்து பார்க்கிறதா? குழந்தை அதை மற்றவர்களுக்கு ருசுப்பிக்க முடியுமா? "இருக்கிறது" என்று மட்டும்தான் அது வெற்றி முழக்கம் செய்கிறது. கடவுளும் அப்படித்தான். அவர் காரண அறிவை மீறியவர். ஆனால், அவர் அனுபவமுள்ளவர். துளசிதாஸ், சைதன்யர், ராமதாஸ், மற்றும் எவ்வளவோ ஆன்மிகத் தலைவர்கள் எவ்வளவு அனுபவம் பெற்றிருக்கிறார்கள்? உலகத்தில் நமது பள்ளிக்கூட ஆசிரியர்களின் அனுபவத்தை நாம் நிராகரிக்காததைப் போல், இந்த ஆன்மிக ஆசிரியர்களுடைய அனுபவத்தையும் நிராகரிக்காதிருப்போமாக.

நாடகக் கொட்டகைகளுக்குப் போவது போன்ற பல காரியங்களை, காங்கிரஸ்காரர்கள் செய்யலாமா என்று கடிதம் எழுதியிருப்பவர் கேட்டிருக்கிறார். மனிதனைச் சட்டத்தின்மூலம் நல்லவனாக்கிவிட முடியாது என்று ஏற்கனவே கூறியிருக்கிறேன். பிறரின் மனத்தை மாற்றும் சக்தி எனக்கு இருந்தால், கெட்ட நடத்தையுள்ளவர்கள் நடிகைகளாக நடிப்பதை நிச்சயமாக நான் நிறுத்திவிடுவேன். மனிதர்கள் புகை பிடிப்பதையும், மது அருந்துவதையும் நிறுத்திவிடுவேன். மிகவும் கௌரவமான சஞ்சிகைகளையும், பத்திரிகைகளையும் கேவலப்படுத்தும் எல்லா மட்ட ரகமான விளம்பரங்களையும் தடுத்துவிடுவேன். நமது சஞ்சிகைகளின் சில பக்கங்களை அசுத்தப்படுத்தும் ஆபாசப் படங்களையும், எழுத்துக்களையும் கண்டிப்பாக நிறுத்திவிடுவேன். ஆனால், நான் விரும்பும் அந்தச் சக்தி என்னிடம் இல்லையே! ஆனால், அரசாங்கமோ, காங்கிரஸோ சட்டத்தின்மூலம் இவற்றைச் சீர்படுத்துவது என்பது, இந்த வியாதியை விட மோசமான பரிகாரமாக இருக்கும். புத்திசாலித்தனமானதும், தூய்மையானதும், நல்ல முறையிலிருப்பதுமான பொதுஜன அபிப்பிராயமே நமக்குத் தேவையாகும். சமையலறைகளை கக்கூசுகளாகவோ, வரவேற்பு அறைகளாகவோ, குதிரை லாயங்களாகவோ உபயோகிக்கக் கூடாது என்று எந்த சட்டமுமில்லை. ஆனால், பொதுஜன அபிப்பிராயம், அதாவது பொதுஜன ருசி, அத்தகைய சேர்க்கையை அனுமதிக்காது. பொதுஜன அபிப்பிராயம் சில சமயங்களில் தாமதமாக உருவாகும். ஆனால், அது ஒன்றுதான் நிச்சயமான பரிகாரமாகும்.

—'எங் இந்தியா' - 9—7—1925

# 6

# சமாளிப்பதற்குச் சரியான வழி

காங்கிரஸ் மெஜாரிடியாயிருக்கும் மாகாணங்களில் என்னென்னவோ விதமான நம்பிக்கைகள் எழுப்பப்பட்டிருக்கின்றன. சில நம்பிக்கைகள் நியாயமானவைகளே; அவை நிறைவேறவும் செய்யும். வேறு சில நம்பிக்கைகள் அப்படி நியாயமானவையல்ல. பம்பாய் மாகாணத்தில் சூதாட்டம் இன்னும் அதிகமாயிருக்கிறது. இந்தச் சூதாட்டத்தில் ஈடுபட்டிருப்பவர்கள், சூதாட்டம் சட்ட பூர்வமானதாக்கப்பட்டு விடுமென்று நினைக்கிறார்கள்; பம்பாயில் நிறைய இருக்கும் ரகசிய சூதாடி மடங்கள் இனி தேவையில்லை என்றும் நினைக்கிறார்கள். ஏற்கனவே, சூதாட்டம் ஒரு அளவுக்குச் சட்ட சம்மதமானதாக்கப் பட்டிருக்கிறது. இது பொதுவாகவே செய்யப்பட்டாலும் கூட, சட்ட விரோதமான சூதாட்டங்கள் இல்லாமலிருக்குமா என்பது சந்தேகமே. குதிரைப் பந்தய சூதாட்டத்தில் குதிரைப் பந்தய கிளப்புக்கு ஏகபோக உரிமை இருக்கிறது. ஏழைகளும், சூதாடுவதற்குச் சௌகரியமாக அவர்கள் இன்னொரு பந்தயக் கூடத்தைத் திறக்க அனுமதிக்க வேண்டுமென்று கூறப்படுகிறது. இதனால் நிறைய வருமானம் கிடைக்குமென்றும் ஆசை காட்டுகிறார்கள். அதே மாதிரி விபசார விடுதிகளை ஒழுங்குபடுத்தி, லைசென்ஸ் வழங்கலாமென்றும் ஒரு யோசனை சொல்லப்பட்டிருக்கிறது. சட்ட பூர்வமானதாக்கினாலும், இல்லாவிட்டாலும் தீமை தொடர்ந்து நடந்துகொண்டுதானிருக்குமென்றும், ஆகையால், அதை சட்டபூர்வமானதாக்கி விபசார விடுதிகளுக்குப் போகிறவர்களுக்குப் பாதுகாப்பளிப்பது நல்லதென்றும் பொதுவாக வாதிக்கப்படுகிறது. மந்திரிகள் இந்த வலையில் விழுந்துவிட மாட்டார்களென்று நம்புகிறேன். விபசார விடுதிகளைச் சமாளிப்பதற்குச் சரியான வழி, பெண்களே இருமுனைப் பிரசாரம் செய்வதாகும். (1) தம்முடைய ஜீவனத்திற்காக மானத்தை விற்கும் பெண்களிடையே பிரசாரம் செய்தல். (2) அறியாத்தனத்தினாலோ, அகம்பாவத்தினாலோ மெல்லினத்தார் என்று அழைக்கும் சகோதரிகளிடம் ஒழுங்காக நடந்து கொள்ளாவிட்டால் அது அவமானம் என்று ஆண்களை உணரச் செய்ய வேண்டும். பல வருடங்களுக்கு முன்பு, விபசார விடுதிகள் நிறைந்த பம்பாய் தெருக்களின் முனைகளில் நின்றுகொண்டு, தம்முடைய உயிருக்குக்கூடப் பயப்படாமல், தைரியம் மிகுந்த ரட்சண்ய சேனைக்காரர்கள் மறியல் நடத்தியது எனக்கு ஞாபகமிருக்கிறது. பெரும் அளவில் இம்மாதிரி ஏதாவது ஏன் ஏற்பாடு செய்யக் கூடாது என்று எனக்குத் தெரியவில்லை. குதிரைப் பந்தய மைதானத்தில் சூதாடுவது சம்பந்தப்பட்ட வரையில், மேல் நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டுள்ள வேறு பலவற்றைப் போல், எனக்குத் தெரிந்த வரையில் இதுவும் ஒரு இறக்கு

மதியே. எனக்கு அதிகாரம் இருந்தால், குதிரைப் பந்தய சூதாட்டத்திற்கு இப்போதுள்ள சட்ட சம்மதத்தைக்கூட வாபஸ் பெற்றுவிடுவேன். தன்னைத்தானே தூய்மைப்படுத்திக் கொள்ளுவதுதான் காங்கிரஸின் வேலைத் திட்டம் என்று 1920-ஆம் வருடத்துத் தீர்மானத்திலேயே தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது; ஆகவே, தீமையின்மூலம் கிடைக்கும் வருமானத்துடன் காங்கிரஸுக்கு எந்தச் சம்பந்தமும் இருக்க முடியாது. ஆகையால், மந்திரிகள் தமக்குக் கிடைத்துள்ள அதிகாரத்தை, பொதுஜன அபிப்பிராயத்தை நல்ல முறையில் உருவாக்குவதிலும், பெரிய மனிதர்கள் சூதாடுவதைத் தடுப்பதிலும் உபயோகிக்க வேண்டும். பெரிய மனிதர்கள் என்று சொல்லப்படுபவர்களின் வழிகளை விஷயமறியாத பாமர மக்களும் பின்பற்ற மாட்டார்கள் என்பது பிரயோசனமில்லாத நம்பிக்கையாகும். நல்ல சாதிக் குதிரை வளர்ப்புக்குக் குதிரைப் பந்தயம் அவசியம் என்று சொல்லக் கேட்டிருக்கிறேன்; இதில் உண்மை இருக்கலாம். ஆனால், சூதாட்டம் இல்லாமல் குதிரைப் பந்தயம் நடத்த முடியாதா? அல்லது சாதிக் குதிரை வளர்ப்புக்குச் சூதாட்டமும் அவசியமான ஒரு உதவியா?

—'ஹரிஜன்' - 4—9—1937

## 7

# துரதிருஷ்டம் பிடித்த நமது சகோதரிகள்

தென்னிந்தியாவில் எனக்கு அளிக்கப்பட்ட வரவேற்புப் பத்திரங்களுக்குள் தேவதாஸிகளின் சார்பில் அளிக்கப்பட்ட வரவேற்புப் பத்திரம்தான் மிகவும் உள்ளத்தை உருக்குவதாக இருந்தது. தேவதாஸிகள் என்பது விபசாரிகளுக்குச் சொல்லப்படும் அலங்காரப் பெயராகும். இந்த துரதிருஷ்டம் பிடித்த சகோதரிகளின் வகுப்பைச் சேர்ந்தவர்களே இந்த வரவேற்பைத் தயாரித்துக் கொடுத்தார்கள். அவர்களுக்குள்ளேயே சீர்திருத்தம் நடந்து கொண்டிருக்கிறது என்றும், ஆனால், முன்னேற்றம் இன்னும் தாமதமாகவே இருக்கிறது என்றும் வரவேற்புப் பத்திரத்தைக் கொண்டு வந்த தூதுகோஷ்டியினரிடமிருந்து அறிந்தேன். பொதுவாக, பொதுஜனங்கள் இந்தச் சீர்திருத்தத்தில் அக்கறை காட்டவில்லை என்று தூதுகோஷ்டியின் தலைவர் சொன்னார். எனக்கு காக்கினடாவில்தான் முதல் அதிர்ச்சி ஏற்பட்டது. இரண்டாவது அதிர்ச்சி பாரிஸாலில்; துரதிருஷ்டம் பிடித்த இந்தச் சகோதரிகளில் ஏராளமானவர்களை அங்கே நான் சந்தித்தேன். அவர்களை தேவதாஸிகள் என்று அழைத்தாலும், வேறு பெயர் சொல்லி அழைத்தாலும், பிரச்னை ஒரே மாதிரியானதுதான். மனிதனின் காம வெறிக்காகப் பல பெண்

கள் தமது கற்பை விற்கவேண்டி யிருப்பது மிகுந்த வெட்கமும், துக்கமும், வேதனையும் தரும் விஷயமாகும். மெல்லினத்தார் என்று சொல்லப்படுவோர்மீது, இந்த மானக்கேட்டை சுமத்து வதற்காக, சட்டத்தை இயற்றும் மனிதன் கொடும் தண்ட னையை அனுபவிக்க வேண்டியிருக்கும். ஆணின் வலையிலிருந்து பெண் விடுதலை பெற்று, தன் முழு அந்தஸ்தையும் அடைந்து, மனிதனுடைய சட்டத்தையும், அவனால் அமைக்கப்பட்ட ஸ்தா பனங்களையும் எதிர்த்துக் கலகம் செய்யும்போது, அந்தக் கலகம் அகிம்சா பூர்வமானதா யிருந்தாலும், மிகவும் பலனளிப்பதா யிருக்குமென்பதில் சந்தேகமில்லை. சட்ட விரோதமானதும், ஒழுக்கக் கேடானதும், தன்னுடைய புலன் நுகர்ச்சிக்காக மானத்தை விற்றுப் பிழைக்கவேண்டி யிருக்கிற ஆயிரக் கணக் கான சகோதரிகளின் கதியைப்பற்றி, இந்திய ஆண்கள் சிந்தித் துப் பார்க்கட்டும். இதில் உள்ள பரிதாபம் என்ன என்றால், இந்த விபசார மடங்களுக்குப் போகிறவர்களில் மிகப் பெரும் பான்மையோர் மணமானவர்கள். ஆகவே இவர்கள் இரட் டைப் பாவம் செய்தவர்களாகிறார்கள். விசுவாசத்துடன் இருப் பதாகப் பிரமாணம் செய்துள்ள தம் மனைவியருக்குத் துரோகம் செய்கிறார்கள். தம்முடன் கூடப் பிறந்த சகோதரிகளின் மானத்தைக் காப்பதுபோல், இந்த சகோதரிகளின் மானத்தை யும் காக்க வேண்டியவர்கள், அவர்களுக்கும் துரோகம் இழைக் கிறார்கள். இந்தியாவிலுள்ள ஆண்களாகிய நாம், நமது அந் தஸ்தையே நினைத்துப் பார்த்தால், இந்தத் தீமை ஒரு நாள்கூட நீடிக்கமுடியாது.

நம்மிடையே உள்ள மிகவும் கௌரவமானவர்களில் பெரும்பாலோர், இந்தத் தீமையில் ஊறிப்போயிருக்கவில்லை யென்றால், பசியால் வாடும் ஒரு மனிதன் ஒரு வாழைப்பழத் தைத் திருடுவதையோ, பணம் தேவைப்படும் ஓர் இளைஞன் 'ஜேப்படி' செய்வதையோ விட இது பெரிய குற்றமாகக் கருதப் பட்டிருக்கும். சமூகத்திற்கு அதிக மோசமான தீங்கை விளைவிப் பது எது? சொத்தைத் திருடுவதா, அல்லது ஒரு பெண்ணின் கற்பைப் பறிப்பதா? குதிரைப் பந்தய மைதானத்தில் ஒரு லட் சாதிபதியிடம், திருடுவதையே தொழிலாகக் கொண்ட ஒருவன் ஜேப்படி செய்துவிடுகிறான். அந்த லட்சாதிபதி, அந்தச் செய் கைக்கு உடந்தையல்ல; ஆனால், தன்னுடைய மானத்தை விற் கும் விபசாரி மட்டும்தான் அதற்கு உடந்தை என்று சொல்லா தீர்கள். ஜேப்படி செய்யும் ஒரு சிறுவன் மோசமா? அல்லது ஒருவனுக்கு மயக்கவஸ்துவைக் கொடுத்து, அவன் சொத்து பூரா வையும் எழுதி வாங்கிவிடும் அயோக்கியன் மோசமா? ஆண் தன்னுடைய சாமர்த்தியமானதும், தராதரமற்றதுமான வழிக ளால் முதலில் பெண்ணின் உன்னதமான இயற்கை உணர்வைப் பறித்து, பின்னர் அவளுக்கெதிராகச் செய்யப்படும் குற்றத் திற்கு அவளையும் உடந்தையாக்கவில்லையா? அல்லது பஞ்சமர் களைப் போன்று சில பெண்கள், மானக்கேடான வாழ்க்கைக்

கென்றே பிறந்திருக்கிறுர்களா? மணமாகி யிருந்தாலும், ஆகா விட்டாலும், ஒவ்வொரு இளைஞனுமே நான் எழுதியிருப்பதன் கருத்தை சிந்தித்துப் பார்க்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த சமூக வியாதியைப் பற்றி, இந்த அதர் மப் பெருவியாதியைப் பற்றி நான் அறிந்துள்ளவைகளை யெல் லாம் எழுதமுடியாது. மீதமுள்ளவைகளை அவர்கள் கற்பனை செய்து பார்த்துக் கொண்டு, அந்தப் பாவத்தை அவர்களே செய்திருந்தால், அதைப்பற்றி வெட்கித் தலைகுனியட்டும். தூய் மையான மனிதன் எங்கிருந்தாலும், தன்னைச் சுற்றியுள்ள இடங் களைத் தூய்மைப்படுத்துவதற்குத் தன்னுல் முடிந்ததைச் செய் யட்டும். இந்த இரண்டாவது வேலையைச் செய்வதைவிட, எழுதுவது சுலபம் என்பதை நான் அறிவேன். இது தரும சங் கடமான விஷயம். ஆனுல், இது மிகவும் தரும சங்கடமான விஷயம் எள்பதற்காகவே சிந்தனை செய்யக்கூடிய யாவரும் இதில் கவனம் செலுத்தவேண்டியது அவசியமாகிறது. அபாக் கியவதிகளான இந்தச் சகோதரிகளிடையே வேலை செய்வதை நிபுணர்களிடம் விட்டுவிடவேண்டும். இந்தத் தீய மடங்களுக்கு விஜயம் செய்பவர்களிடையே செய்யவேண்டிய வேலையைப் பற் றியே நான் குறிப்பிடுகிறேன்.

—'எங் இந்தியா' - 16—4—1925

## 8

# இரட்டைக் குற்றம்

தார்மிக விரோதமான இந்த அழுக்கினுல் இன்னும் ஆழ்ந்த வேதனை ஏற்பட்டிருக்கிறது. தம்முடைய உறவினர்க ளான ஆண்களின் மத்தியிலேயே இந்தப் பெண்கள் உட்கார்ந் திருக்கிறுர்கள். ஆனுல், நீண்ட காலப் பழக்கம் காரணமாக ஏற்பட்டுள்ள ஒரு மோசமான நிலைமையிலிருந்து, எப்படி விடுபடு வது என்று இருவருக்குமே தெரியவில்லை. இதைப் பார்ப்பதற் குப் பரிதாபமாயிருக்கிறது. "எங்களில் யாருக்குமே இது பிடிக்கவில்லை. ஆனுல், நாங்கள் எப்படிக் காலம் தள்ளுவது?" என்பதே இவர்களுடைய நிர்க்கதியான ஓலமாயிருக்கிறது. "உங்களையெல்லாம் நான் அழைத்துக் கொண்டுபோய் போதிய உணவும், ஆடையும், கல்வியும், சுத்தமான சூழ்நிலையும் அளித் தால், இந்த மானக்கேடான வாழ்க்கையை விட்டுவிட்டு என் னுடன் வந்துவிடுவீர்களா?" என்று காந்திஜி கேட்டார். "வருகி ரேும்" என்று அவர்கள் பதிலளித்தார்கள். ஆனுல், இந்த விஷ யத்தைப் பற்றி காந்திஜிக்கு எந்தவிதமான மயக்கமும் கிடை யாது. இதைப்பற்றித் தம்முடைய பிரசங்கத்தில் குறிப்பிட்

டார். குற்றமிழைப்பவர்களின் உறங்கிக் கிடக்கும் மனச்சாட்சி களை கனல் கக்கும் சொற்களால் கண்டித்தார்:

"அவர்களுடன் நான் பேசிக்கொண்டும், அவர்கள் கூறுவ தன் உள்ளர்த்தத்தைப் புரிந்துகொண்டும் இருந்தபோது, பருவ மடையாத பெண்களை ஒழுக்கக் கேடான காரியங்களுக்கு அர்ப் பணிக்கும் வழக்கத்தைக் குறித்து என் உள்ளமே கொதித்தெழுந் தது. இவர்களை தேவதாஸிகள் என்று அழைப்பதன்மூலம், மதத்தின் பெயரால் கடவுளையே அவமதிக்கிறோம். இந்தச் சகோதரிகளை நமது காமவெறிக்காக உபயோகித்துக்கொண்டு, அதே மூச்சில் கடவுளின் பெயரையும் இழுப்பதனால் இரட் டைக் குற்றத்தைச் செய்தவர்களாகிறோம். இத்தகைய ஒழுக் கக் கேடான காரியங்களுக்காக ஒரு வகுப்பினர் இருப்பதையும், இந்த கோரமான ஒழுக்கக்கேட்டைச் சகித்துக்கொள்ளுவதற்கு இன்னொரு வகுப்பினரும் இருப்பதையும் நினைத்தால், வாழ்க் கையைப் பற்றியே அவநம்பிக்கை ஏற்படுகிறது. அவர்களுடன் நான் பேசிக்கொண்டிருந்தபோது அவர்களுடைய கண்களில் எந்தத் தீமையையும் நான் காணவில்லை என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். மற்ற எந்தப் பெண்களையும் போல் அவர் களும் நல்ல உணர்ச்சிகளும், நல்லொழுக்கமும் இருக்கக் கூடிய வர்களே. அவர்களுக்கும், நம்முடன் பிறந்த சகோதரிகளுக்கு மிடையே என்ன வித்தியாசம் இருக்கமுடியும்? ஒழுக்கக் கேடான காரியங்களுக்கு நமது சகோதரிகளை நாம் அனுமதிக்க வில்லையென்றால், அவர்களைமட்டும் அப்படி உபயோகிக்க நாம் எப்படி அனுமதிக்கலாம்? இத்தகைய காரியங்களுடன் எந்த விதமான சம்பந்தமும் உள்ள ஹிந்துக்கள், சமூகத்திலிருந்து இந் தக் காளானை ஒழிக்கட்டும். அவர்களுக்கு நான் அளித்த வாக் குறுதியை நிறைவேற்றினால், தங்கள் வழிகளைத் திருத்திக் கொள்ளுவதாக அவர்களில் பெரும்பாலோர் உறுதி கூறியிருக்கி றார்கள். அவர்கள் அப்படிச் செய்யமுடியாவிட்டால் அதற்காக அவர்களைக் குறை கூறமாட்டேன்; அவர்கள் வாழும் சமூகத் தையே குற்றம் சொல்லுவேன். இந்தச் சகோதரிகளுக்குக் கைகொடுத்து உதவவேண்டியது உங்கள் கடமையாகும். மானக்கேடான வாழ்க்கையிலிருந்து அவர்கள் மீட்கவேண்டி யது உங்களுடைய பொறுப்பாகும். மீண்டும் அவர்களுக்கு ஆசைகாட்டும் நிலைமை ஏற்பட்டால், அதை அவர்கள் எதிர்த் துச் சமாளிப்பது கஷ்டம் என்பது எனக்குத் தெரியும். ஆனால், ஆண்கள் தமது காமவெறியைக் கட்டுப்படுத்திக்கொண்டால், சமூகமும் இந்தத் தீமையை எதிர்த்து நின்றால், சுலபமாக சமூ கத்திலிருந்து இந்தத் தீமையை ஒழிப்பது சாத்தியமாகும்."*

[மகாதேவ தேசாய் எழுதியது]

—'எங் இந்தியா' – 22—2—1927

*மாயவரத்தில் காந்திஜி செய்த பிரசங்கத்திலிருந்து எடுத்தது இது.

# 9

# தேவதாஸி

அயர்வே இல்லாத டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி பின் வருமாறு எழுதுகிறார்:

"ஹிந்து கோவில்களில் தேவதாஸி முறை இருப்பதை நீங்கள் பகிரங்கமாகக் கண்டித்து வருவதால், அந்தத் தீமையை அகற்றுவதற்கு உங்கள் உதவியை நாடத் துணிந்திருக்கிறேன். இந்த மாகாணத்தில் இது மிகவும் கஷ்டமான வேலையாக இருக்கிறது. படித்தவர்கள் என்று சொல்லப்படுவோரும் மிகப் பிரபலமான காங்கிரஸ்காரர்களும்கூட என்னுடைய சீர்திருத்த யோசனைகளை எதிர்க்கிறார்கள். மிகக் கொடூரமான அந்த முறைக்கு ஆதரவும் அளிக்கிறார்கள்.

"நான் கொண்டுவந்த தேவதாஸி மசோதா இப்போது சட்டமாகிவிட்டது. இனும் மான்யங்களை அனுபவிக்கும் தேவதாஸிகளை மட்டுமே இது தடை செய்கிறது. ஆனால், விபசாரத்தின் மூலம் வாழ்க்கையை நடத்துவதற்காக மதத்தின் போர்வைக்குள் ஒளிந்துகொண்டு, பொட்டுக் கட்டும் வழக்கத்தை அனுஷ்டிக்கும் ஒரு பிரிவினரும் அந்த வகுப்பில் இருக்கிறார்கள். இது குழந்தைகளை விலை கூறி விற்பதைத் தவிர வேறொன்றுமில்லை; ஏனெனில், குழந்தைகள் விலை கொடுத்து வாங்கப்பட்டுக்கூட சுவீகாரம் எடுத்துக் கொள்ளப்படுகிறார்கள். (தேவதாஸி சுவீகாரம் எடுத்துக் கொள்ளுவதை ஹிந்து மதம் அனுமதிக்கிறது) விஷய அறிவு இல்லாதவர்களாகவும், ஒரு காரியத்தைப்பற்றித் தாமே ஒரு முடிவுக்கு வரமுடியாத நிலைமையிலும் உள்ள சிறு வயதில், மீள்வது மிகவும் அரிதாயிருக்கிற இந்த வெறுக்கத்தக்க வாழ்க்கையில் அவர்கள் திருப்பப்படுகிறார்கள். குழந்தைகளின் உள்ளங்களையும், உடல்களையும் வியாபாரம் செய்யும் இத்தகைய கொடியவர்களைத் தண்டிப்பதற்குச் சட்டம் கொண்டு வரும்படி, அந்த வகுப்பிலுள்ள விஷய அறிவு பெற்றவர்களிடமிருந்து எனக்குப் பல மனுக்களும், மகஜர்களும் வந்திருக்கின்றன.

"பீனல் சட்டத்திலுள்ள 372, 373 ஷரத்துக்கள் போதுமானவைகளாக இல்லை. ஆகையால், நான் மற்றொரு மசோதா கொண்டுவரப் போவதாக அறிவித்திருக்கிறேன். அதனுடைய வெற்றிக்கு உங்கள் ஆசியை நாடுகிறேன். இந்த வழக்கத்திலுள்ள தீமையை மக்கள் அறியாதவரையில், சட்டத்தினால் பிரயோசனமில்லை என்று சிலர் வாதாடலாம். ஆனால், நம் மக்களில் ஒரு கணிசமான பகுதியினர் இந்த அநீதியை உணர்ந்திருக்கிறார்கள் என்பதே என்னுடைய வாதமாகும். குற்றமிழைக்கும் இத்தகைய பெற்றோர்களிடமிருந்து குழந்தைகளை எடுத்துக்கொண்டு வந்துவிடுவதற்கு எனக்குச் சட்ட பூர்வமான அதிகாரம் இருந்தால், நானே பல பெண்களை மீட்டுவிட முடியும் என்று நினைக்கிறேன்.

"தேவதாஸி வகுப்பினரிடையேகூட, பெரிய விழிப்பு ஏற்பட்டிருக்கிறது. அவர்களும் விரிவான முறையில் பிரசாரம் செய்து வந்திருக்கிறார்கள். ஆனால், அந்த வகுப்பினர் தம்மைத் தாமே திருத்திக்கொள்ளுவதற்குச் செய்யும்

முயற்சிகளுக்கு உயர் வகுப்பினர் உதவி செய்வதில்லை என்பதைக் காண எனக்கு வேதனையாக இருக்கிறது. மேலும், மற்ற நாடுகளிலும், பம்பாய், வங்காளம் போன்ற மாகாணங்களிலும் கூட உள்ள சட்டங்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, இந்த மாகாணத்தில் குழந்தைகளைப் பாதுகாப்பதற்கான சட்டங்கள் அநேகமாக இல்லை என்றே சொல்லலாம்.

''முன்னேற்ற மடைந்துள்ள நாடுகளில், பொதுஜன அபிப்பிராயம் உருவாவதற்கு முன்பே சுகாதாரம், தார்மிகம் ஆகிய துறைகளில் சீர்திருத்தம் ஏற்பட்டிருக்கிறது என்பதை நாம் அறிவோம். ஏனெனில், இந்தச் சீர்திருத்தங்களே பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்கத் துணை செய்பவைகளாகும். இந்த மாகாணத்தில் சர்க்காரை அதிகமாகக் குறை சொல்ல முடியாது. உயர் வகுப்பினரைத்தான் குறை கூற வேண்டும். சாதி, மத பேதமில்லாமல் எல்லாக் குழந்தைகளுமே நமது கவனிப்புக்கும், அனுதாபத்திற்கும் உரியவர்கள் என்பதையும், கோரமான ஒரு வாழ்க்கையிலிருந்து குற்றமற்ற குழந்தைகளை மீட்கும் இந்த விஷயத்தில், சாதி, வகுப்புகளின் விருப்பு, வெறுப்புகளை மீறி நடந்துகொள்ள வேண்டும் என்பதையும், உயர் வகுப்பினர் போதிய அளவுக்கு உணரவில்லை.''

இந்த யோசனையை நான் மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன். இந்த உத்தேச மசோதா, பொது ஜன அபிப்பிராயம் உருவாவதற்கு முன்பே கொண்டுவரப்படும் மசோதாவாயிராது என்று கூட நான் நினைக்கிறேன். வாய் விட்டுப் பேசுபவர்கள் யாவருமே இந்த வழக்கத்தை எந்த ரூபத்திலும் நீடிக்கவிடக்கூடாது என்றே சொல்லுகிறார்கள். ஒழுக்கக்கேடான இந்த வியாபாரத்தில் ஈடுபட்டிருப்பவர்களின் அபிப்பிராயத்திற்கு மதிப்புக் கொடுக்கவேண்டியதில்லை. கஞ்சா, அபினி மடங்கள் கூடாதென்று பொதுஜன அபிப்பிராயம் ஆட்சேபித்தால், அந்த மடங்களை நடத்துபவர்களின் அபிப்பிராயத்தை நாம் லட்சியம் செய்வோமா? தேவதாஸி முறை என்பது, அதை ஆதரிப்பவர்களுக்கு ஓர் இழுக்காகும். பொதுஜனங்கள் இவ்வளவு அசட்டையாயிருந்திராவிட்டால் அது எப்போதோ செத்து மடிந்திருக்கும். என்ன காரணத்தினாலோ இந்த நாட்டின் பொதுஜன அபிப்பிராயம் உறங்கிக் கிடக்கிறது. பல தவறுகளின் கோரத்தைப் பொதுஜன அபிப்பிராயம் பல சமயங்களில் உணருகிறது. ஆனால், அதைப்பற்றி எதுவும் செய்வதற்கு அவர்களுக்கு அக்கறை இல்லை; அல்லது சுறுசுறுப்பு இல்லை. ஆனால், டாக்டர் ரெட்டியைப்போல் தீவிரமாக வேலை செய்யக்கூடியவர்கள் யாராவது காரியத்தில் இறங்க ஆரம்பித்தால், அசிரத்தையாயிருக்கும்போது மனச்சாட்சி எந்த அளவு ஆதரவைத் தர முடியுமோ அதைத் தரத் தயாராயிருக்கிறது. ஆகையால், டாக்டர் ரெட்டியின் யோசனை உரிய காலத்திற்கு முன்பு கூறப்படும் யோசனையாகும் என்று நான் நினைக்கவே இல்லை; இத்தகைய சட்டத்தை முன்பேகூடக் கொண்டுவந்திருக்கக்கூடும். அது எப்படியிருந்தாலும், மத வாழ்விலும், பொது சமூக வாழ்விலும் தூய்மையை விரும்பும் யாவருடைய மனப்பூர்வமான ஆதரவும் அந்த அம்மையாருக்குக் கிடைக்குமென்றே நம்புகிறேன்.

—'எங் இந்தியா' - 29—8—1929

# 10

# ஹரிஜனங்களைப் போன்றவர்களே

ஒரு தேவதாஸியை மணந்து கொண்டுள்ள ஆந்திர பட்டதாரி ஒருவர் பின்வருமாறு எழுதுகிறார்:

"நெடுநாட்களுக்கு முன்பே உங்களுக்கு எழுதவேண்டுமென்று நினைத்தேன். ஆனால், எனக்குக் கூச்சம் மிகவும் அதிகம். நல்ல வேளையாக, இப்போது என் சுமையை அந்தரங்கமாக உங்களிடம் சொல்லுகிறேன்.

"நான் தேவதாஸி வகுப்பைச் சேர்ந்தவன். என்னுடைய சமூக வாழ்வு ஒரு சித்திரவதையாக இருந்தது. மகாத்மாஜி, உலகத்தில் நாட்டியக்காரியின் தொழிலைவிட மோசமான தொழில் வேறு ஏதாவது இருக்கிறதென்று நீங்கள் நினைக்கிறீர்களா? விபசாரம் என்பது ஒரு குறிப்பிட்ட வகுப்பின் சின்னமாக இருப்பது இந்தியாவுக்கே ஒரு இழுக்கல்லவா?"

"ஆந்திர தேசம்தான் இந்தத் தீமையின் கேந்திரஸ்தானம் என்று நினைக்கிறேன். முக்கியமாகத் திருமணக் காலங்களிலும், தேவாலய உற்சவங்களின் போதும், ஹிந்துக்கள் நாட்டியக்காரிகளை அமர்த்துகிறார்கள். இவர்கள் விக்ரகத்தின் முன்பு ஆபாசமான சைகைகளுடன், ஆபாசமான பாட்டுகளைப் பாடுவதற்காக அமர்த்தப்படுகிறார்கள். புதிதாக மணந்துகொள்ளும் தம்பதிகளுக்கும் இவர்கள் ஒரு கெட்ட உதாரணத்தைக் காட்டுகிறார்கள்.

"ஒரு வகுப்பு பூராவுமே விபசார வாழ்க்கையில் தள்ளப்பட்டுவிட்டால், அந்த வகுப்பின் வேதனை சகிக்கமுடியாததாகும். இந்தத் தீமையைக் களைவதற்கு இங்குள்ள இளைஞர்கள் தம்மாலியன்ற முயற்சிகளைச் செய்கிறார்கள். ஆனால், அவர்களுக்கு உதவியும், புத்திமதியும் பெரிதும் தேவைப்படுகின்றன. ஹரிஜன் இயக்கத்தைப் போலவே இதை முக்கியமானதும், அவசரமானதுமான ஒரு பிரச்னையாக எடுத்துக்கொள்ள மாட்டீர்களா? இந்த விஷயத்தை உங்களுடைய உள்ளத்தின் ஒரு மூலையில் எப்போதும் வைத்துக்கொண்டு, இதற்கு விளம்பரம் அளியுங்கள். காங்கிரஸ் மட்டுமல்லாமல், பொதுஜன அபிப்பிராயம் பூராவுமே உங்களுக்குப் பக்கபலமாக இருக்கிறது. விபசாரச் சட்டமும், இந்தியக் குற்றச் சட்டமும் செய்ய முடியாததை, நீங்கள் வாயசைத்தால் செய்துவிட முடியுமென்று எனக்கு நம்பிக்கையிருக்கிறது.

"என்னுடைய வகுப்பையே சேர்ந்த ஒரு பெண்ணை, சட்ட பூர்வமாகவும், மதச் சடங்குகளின்படியும் நான் மணந்து கொண்டிருக்கிறேன். எனக்கு இரண்டு பெண் குழந்தைகள் இருக்கிறார்கள். மற்ற எந்த ஹிந்து மனைவியையும்போல் என் மனைவியும் தெய்வ பக்தி உள்ளவளாகவே எனக்குத் தோன்றுகிறாள். ஆயினும் சமூகம் எங்களை ஒரு மாதிரியாகவே நடத்துகிறது. எங்களுடைய முன்னோர்களின் பாவங்கள் எங்கள்மீது வஞ்சம் தீர்த்துக்கொள்ளுகின்றன. விபசாரம் என்ற தீமையிலிருந்து நாங்கள் இருவரும் விடுபட்டு விட்டோம்; ஆயினும், அந்த மாசு இன்னும் எங்களை விடவில்லை.

"ஹரிஜனங்களும், தேவதாஸிகளும்தான் ஒரே மாதிரியான மானக்கேடான நிலைமையில் உள்ள வகுப்பினர்களாவர். தார்மிக ரீதியில் உயருவ

தற்கு அவர்கள் தமக்குத்தாமே உதவி செய்துகொள்ளவேண்டும் என்பது உண்மையே. இருந்தாலும், அவர்கள் இதைத் தாமே செய்துகொள்ள முடிவதைவிட, உங்களைப் போன்ற ஓர் ஆசிரியர், அவர்களுக்கும், சமுகத்திற்கும் இன்னும் சீக்கிரமாகப் போதிக்கமுடியும். இவ்விரண்டும் ஒன்றை யொன்று சார்ந்த இயக்கங்கள். ஹரிஜனங்களிடம் உங்களுக்குள்ள ஆர்வத்தில் இந்த சகோதர வகுப்பினரை மறந்துவிடாதீர்கள்."

என்னிடம் இருப்பதாக இவர் கருதும் சக்தி உண்மையாகவே எனக்கு இருக்கக் கூடாதா? என்றல் எவ்வளவு முடியும் என்பதை நினைக்கும்போது எனக்கு வேதனையாகவே இருக்கிறது. நான் 'எங் இந்தியா' பத்திரிகையை நடத்திக் கொண்டிருந்தபோது தேவதாஸி முறையைப்பற்றியும், பொதுவாக விபசாரத்தைப்பற்றியும் அடிக்கடி குறிப்பிடுவதுண்டு என்பது, ஒரு வேளை இக் கடிதம் எழுதியவருக்குத் தெரியாமலிருக்கலாம். ஆனல், என்னுடைய முயற்சியினல் அந்தத் தீமையைக் களைந்துவிட முடியவில்லை. தனிப்பட்ட சிலருக்குத்தான் அதனல் பிரயோசனம் ஏற்படும். இப்போது இந்தப் பிரச்னையைப்பற்றி 'ஹரிஜன்' பத்திரிகையில் குறிப்பிடுகிறேனென்றல், 'எங் இந்தியா' நாட்களில் கிடைத்ததை விட அதிக வெற்றி கிடைக்குமென்ற நம்பிக்கையால் அல்ல. இந்தப் புதிய முயற்சியினல் தனிப்பட்ட சிலருக்கு நன்மை ஏற்பட்டால், அது எனக்கு மகிழ்ச்சியளிப்பதா யிருக்கும்.

தேவதாஸிகளும் ஹரிஜனங்களைப் போன்றவர்களே என்று அவர் கூறியிருப்பது முற்றிலும் சரியானதே. ஆயினும், இரண்டுக்கு மிடையே உள்ள வித்தியாசத்தை அவர் உணரவேண்டும். ஆனல், யாருடைய வாழ்க்கை அதிக மோசமானது என்று ஆராய்ந்து கொண்டிருப்பது நேரத்தை வீணடிப்பதாகும். ஹிந்து மதம் தூய்மைப்படுத்தப்பட வேண்டுமானல், தீண்டாமையைப் போலவே, தீமையை நிரந்தரமாக்கும் இந்தப் பழக்கமும் ஒழிந்தாக வேண்டும். சமுகத்திலிருந்து இந்தத் தீமையைக் களையும் உன்னதமான பணியில் ஈடுபட்டிருப்பவர்கள், திட்டம் போட்டுக் கொண்டு வேலைசெய்ய வேண்டியிருக்கும். உடனே தமது முயற்சிகளுக்கு வெற்றி கிடைக்காவிட்டால் அதைக் கண்டு தளர்ச்சி யடைந்துவிடக் கூடாது. உடனடியாகத் தம்மைச் சுற்றியுள்ள தீமையை அவர்கள் கவனிக்க ஆரம்பிக்கட்டும். இந்தப் பிரச்னையைக் கவனிப்பதற்கு இரண்டு வழிகள் இருக்கின்றன. தம்முடைய இழிவான நோக்கங்களுக்காக தேவதாஸிகளைப் பயன்படுத்திக் கொள்ளுவோரிடையே போய் வேலை செய்ய வேண்டும். தேவதாஸி வகுப்பினரிடையேயும் வேலை செய்ய வேண்டும். தேவதாஸிகள், சமூகத்தின் தீமைக்கு உட்பட மறுத்துவிட்டால், அந்தப் பழக்கம் உடனே தொலைந்துவிடும். ஆனல், இது அவ்வளவு எளிதான வழியுமல்ல. பசி பாவத்தை அறியாது. துரோணரையும், பீஷ்மரையும் போல தேவதாஸிகளும் தம்முடைய பாவச் செயலுக்கு ஆதாரமாகத்

தம் வயிற்றைக் காட்டுகிறார்கள். வழக்கம் காரணமாகத் தாம் செய்யும் தொழிலின் பாவத் தன்மை பற்றிய உணர்வே அவர்களுக்கு அற்றுப்போய் விட்டது. ஆகையால் விபசாரத்திற்குப் பதிலாக, குற்றமற்ற ஒரு தொழிலை அவர்களுக்குக் கண்டுபிடித்துக் கொடுக்க வேண்டும். பிறகு சமூகத்தில் செய்யவேண்டிய வேலையும் இருக்கிறது. கல்யாணங்களுக்கும், உற்சவங்களுக்கும் தேவதாஸிகளை அமர்த்துபவர்களிடம் போய் வாதாட வேண்டும். சமூகத்திற்கு என்ன சீர்திருத்தம் வேண்டுமென்று சீர்திருத்தவாதிகள் கட்டளையிட முடியாது. சமூகத்தின் நியாய உணர்ச்சியையும், உள்ளத்தையும் தொடும்படியாக வேண்டுகோள் விடுக்கவேண்டும். சாதாரணமாகக் கல்வி என்று சொல்லப்படுவது எவ்வளவு அத்தியாவசியமோ, அதைப் போலவே சீர்திருத்தமும் ஒரு மாதிரியான கல்விதான். ஆகையால், அதுவே ஒரு கலையாகும். முறைப்படி போனால்தான் அதில் பலன் கிடைக்கும்.

ஒரு தேவதாஸியை மணக்கத் துணிந்த இவர் பாராட்டுக்குரியவரே. தன்னுடைய மனச்சாட்சியின் அங்கீகாரத்தைக் கொண்டே அவர் திருப்தியடைய வேண்டும். அவர் மீதும், அவர் மனைவி மீதும் மற்றவர்களுக்கு உள்ள வெறுப்பைப் பொருட்படுத்தாமல் வாழ்க்கையை நடத்த வேண்டும்.

—'ஹரிஜன்' – 14—9—1934

## 11

# சட்ட பூர்வமான விபசாரம்

**கா**ங்கிரஸ் மந்திரி சபைகளிட மிருந்து எவ்வளவு அதிகமாக எதிர்பார்க்கப்படுகிறது என்பதற்கு டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி மற்றொரு ருசுவை அளித்திருக்கிறார். அப்படி எதிர்பார்ப்பதற்கு மக்களுக்கு உரிமை இருக்கிறது. அவர்கள் சோதனையை நன்கு சமாளிக்கிறார்கள் என்பதை காங்கிரஸின் எதிரிகள்கூட ஒப்புக் கொள்ளுகிறார்கள். உண்மையான இந்தியச் சூழ்நிலைக்கு ஏற்றதாகத் தமது நிர்வாகம் செயல்படவேண்டும் என்பதற்காக, காங்கிரஸ் மந்திரி சபைகள் மக்களின் நன்மைக்கான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளுவதில் ஒன்றோடொன்று போட்டி போட்டுக் கொண்டிருப்பதுபோல் தோன்றுகிறது. தேவதாஸிகளை மானக்கேடான வாழ்க்கையில் அழுத்தும், ஒழுக்கக் கேடான தேவதாஸி முறையை நிறுத்துவதற்குத் தாம் கொண்டு வந்துள்ள மசோதாவை நிறைவேற்றும்படி டாக்டர் முத்துலட்சுமி சென்னை மந்திரி சபைக்குப் பகிரங்கமாக ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறார். அந்த மசோதாவை நான் பரிசீலனை

செய்யவில்லை. ஆனால், அதன் நோக்கம் மிக நல்லதாகும். அது இன்னும் அந்தத் தென்னிந்திய மாகாணத்தில் சட்டமாகவில்லை என்பதுதான் ஆச்சரியம். மதுவிலக்கைப் போலவே இதுவும் அவ்வளவு அவசரமான பிரச்னை என்று டாக்டர் முத்துலட்சுமி கூறுவதை நான் முற்றிலும் ஒப்புக்கொள்ளுகிறேன். இப்போதுள்ள பிரதம மந்திரி, பல வருடங்களுக்கு முன்பு இந்தக் கொடிய பழக்கத்தைப் பலமாகக் கண்டித்துப் பேசியிருக்கிறார் என்பதை அவர் ஞாபகப்படுத்துகிறார். அதைச் சட்ட பூர்வமாக கவனிப்பதற்கு இப்போது அவருக்குக் கொஞ்சம் அதிகாரம் இருக்கும் இந்தச் சமயத்தில், இந்தப் பிரச்னையில் அவருடைய ஆர்வம் குறைந்துவிடவில்லை என்று எனக்குத் தெரியும். இன்னும் பல மாதங்கள் கழிவதற்கு முன்பாகவே, தேவதாஸி முறைக்குச் சட்ட சம்மதம் இல்லாமல் போய்விடும் என்று அந்த அம்மையார் நம்புவதை நானும் பகிர்ந்துகொள்ளுகிறேன்.

—'ஹரிஜன்' - 25—9—1937

பகுதி ஆறு

# பெண்களின் நிலைமை

## 1

## ஹிந்துச் சட்டமும் மைசூரும்

பெங்களூரிலிருந்து ஸ்ரீ பாஷ்யம் அய்யங்கார் பின்வருமாறு எழுதுகிறார் :

"ஹிந்துச் சட்டம் இப்போது அமலாக்கப்படும் விதம் காலத்திற்கு ஒவ்வாததாகவும், நமது நீதி, நேர்மை உணர்ச்சிகளுக்கு முரணானதாகவும் இருக்கிறது. சில உதாரணங்கள் கொடுக்கிறேன்.*

1) அன்புக்குப் பாத்திரமான நெருங்கிய உறவினர்களான சகோதரியின் பெண், மருமகள், சகோதரனின் விதவை, சிற்றன்னை போன்றவர்களுக்கு வாரிசுரிமை அடியோடு மறுக்கப்படுகிறது. விதவையாகிவிட்ட தன் மருமகளைத் தவிர வேறு உறவினர் யாரும் இல்லாத ஒருவர் இறந்து விட்டால், அவருடைய சொத்துக்கள் சர்க்காருக்குச் சேர்ந்துவிடுகின்றன. தன்னுடைய வாழ்வு பூராவையும் தன்னுடைய கணவனின் குடும்பத்தை நம்பியிருந்த அந்தப் பேதைப் பெண் தெருவில் நிற்கிறாள்.

2) வாரிசுகள் ஜாப்தாவில் சேர்க்கப்பட்டுள்ள நெருங்கிய உறவினர்களுக்குக்கூட, தூர பந்துக்களான தாயாதிகளின் முன்பாத்யதை காரணமாக சொத்தில் பங்கு பெற வாய்ப்புக் கிடைப்பதில்லை. சகோதரி ஒரு வாரிசுதான். ஆனால், கொள்ளுப் பாட்டனாரின் சந்ததியில் ஐந்துகால் தள்ளிய ஒருவர் உயிரோடிருந்தால்கூட இறந்தவரின் சொத்து அவருக்குப் போய்ச் சேர்ந்துவிடும். சகோதரிக்கு ஒன்றும் கிடைக்காது. பிள்ளையின் மகள், சகோதரியின் மகன், சகோதரனின் மகள் ஆகியவர்களின் விஷயமும் அப்படித்தான்.

3) பெண்களுக்கு வாரிசுரிமை மூலம் அல்லது வெகுமதியாகக் கிடைத்த சொத்துக்களை அவர்கள் முழு உரிமைகளுடன் அனுபவிக்க முடியாது. ஒரு விதவை தன்னுடைய கணவனின் சொத்தை ஜாக்கிரதையாகப் பரிபாலிக்க வேண்டும். அவள் அதிகமாகச் செலவிட்டுவிட்டால் அல்லது சொத்தின்மீது கடன் வாங்கிவிட்டால், அவளுடைய ஜீவனத்திற்காகவே அப்படிக் கடன் பட்டிருந்தாலும்கூட, தூர பந்துவான ஒரு தாயாதி அவளைக் கோர்ட்டுக்கு இழுத்து அவளுடைய உரிமைகளை விட்டுவிடும்படி நிர்ப்பந்

---

* பெண்கள் சம்பந்தமாக இங்கே கூறப்பட்டிருக்கும் குறைகள் எல்லாம் பின்னால் இந்திய சுதந்திர அரசாங்கம் 1956 இல் செய்த ஹிந்து வாரிசுரிமைச் சட்டம், ஜீவனாம்சச் சட்டம், விவாகச் சட்டம் போன்றவைகளால் அடியோடு நீக்கப்பட்டு விட்டன என்பது கவனிக்க வேண்டியதாகும்.

திக்க முடியும். மிதாட்சர முறைதான் இங்கே பொதுவாகப் பின்பற்றப்படுகிறது. ஒரு பெண்ணுக்கு எந்த வழியில் சொத்து கிடைத்தாலும், அது அவளுடைய ஸ்ரீதனமென்றும், தன்னிஷ்டப்படி அதை அவள் என்ன வேண்டுமானாலும் செய்யலாமென்றும், மிதாட்சரச் சட்டத்தில் மிகவும் தெளிவாக விதிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், பிரிவி கவுன்ஸில் இதை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டது. பெண்கள் சக்தியற்றவர்கள் என்றே இந்தியர்கள் எப்போதும் அவர்களை நடத்திவந்திருப்பதாகவும், மிதாட்சரத்தை இயற்றியவர் தீவிரவாதி என்றும் பிரிவி கவுன்சில் கூறிவிட்டது.

4) செவிடு, ஊமைகளுக்கு வாரிசுரிமை கிடையாதென்று விலக்கப்பட்டிருக்கிறது. இந்த விஷயத்தில் முடவனை அவன் கைக் கொம்பினாலேயே அடிக்கிறோம்.

5) பிரிட்டிஷ் இந்தியாவைப்போல் மைசூரில் விதவைகளின் மறுமணம் சட்டபூர்வமானதென்று அங்கீகரிக்கப்படவில்லை.

6) பெண் புஷ்பவதியான பிறகு மணம் செய்வது சட்டபூர்வமானதா என்பது சந்தேகமாயிருக்கிறது. பெண்களின் சம்மத வயதை 14 என்று உயர்த்த வேண்டும்.

7) இஷ்டப்பட்டால் விவாக ரத்து செய்துகொள்ளலாமென அனுமதிக்க வேண்டும். இந்தியாவில் முன்பு இப்படி இருந்திருக்கிறது. முதல் கணவன் உயிருடனிருக்கும்போதே, எந்த நிலைமையில் ஒரு மனைவி இரண்டாவது கணவனை மணந்துகொள்ளலாமென்று பராசரர் பிரஸ்தாபித்திருக்கிறார்.

8) இப்போதைய சட்டத்தின்படி சாதி விட்டுச் சாதி மணந்துகொள்ளுவது அனுமதிக்கப்படுவதில்லை. அதைச் சட்ட சம்மதமானதாக்க வேண்டும். நமது முன்னோர்கள் இதைத் தாராளமாக அங்கீகரித்திருக்கிறார்கள். வசிஷ்டர், வியாசர், நாரதர், பராசரர் போன்ற நம்முடைய ரிஷிகளில் பலர் கலப்பு மணங்களின் மூலம், பிறந்தவர்கள். நான் ஒரு கிறிஸ்தவப் பெண்ணை மணந்து கொள்ளுவது சட்ட ரீதியானதுதான் என்றால், மற்றொரு சாதியைச் சேர்ந்த ஒரு ஹிந்து மனைவியை நான் ஏன் மணந்துகொள்ளக் கூடாது?

9) தாய் தந்தையரில்லாத ஒரு பையன், சுவீகாரத்திற்கு அருகதையற்றவன். ஒரு பையன் சுவீகாரத்திற்குத் தகுதியுள்ளவனா யிருக்கிறானென்றால், அவன் தாய் தந்தையற்ற பையன்தான். ஆயினும், அதற்குத் தடை விதிக்கப்பட்டிருக்கிறது.

10) கணவனால் அனுமதிக்கப்பட்டிருந்தா லொழிய அல்லது தாயாதிகள் சம்மதம் கொடுத்தா லொழிய விதவைகள் சுவீகாரம் எடுத்துக்கொள்ள முடியாது. சுவீகாரம் எடுத்துக் கொள்ளக் கூடாது என்று கணவன் தடுத்திருந்தா லொழிய, அவன் சம்மதம் அளித்திருப்பதாகக் கருதி, விதவைகள் சுவீகாரம் எடுத்துக்கொள்ளுவதை அனுமதிக்க வேண்டும். பம்பாயில் உள்ள சட்டம் இதுதான்.

"இம்மாதிரி இன்னும் பல உதாரணங்கள் இருக்கின்றன. சிலவற்றை மட்டுமே நான் பொறுக்கிக் கொடுத்திருக்கிறேன்.

"திணற அடிக்கும் இவைகளை யெல்லாம் திருத்த வேண்டுமென்று, சிந்தித்துப் பார்க்கக் கூடியவர்கள் விரும்புகிறார்கள். சட்ட மியற்றுவதன் மூலம்

தான் சட்டத்தை மாற்ற முடியும். பொது ஜன அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ளாமல் சட்டசபை எந்தச் சட்டத்தையும் நிறைவேற்ற முடிவதில்லை. இதற்கென்று நியமிக்கப்படும் ஒரு கமிட்டிதான் பொதுஜன அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ள முடியும். ஆகையால் இந்த விஷயத்தைப் பரிசீலனை செய்யவும், சாட்சியங்களைப் பதிவு செய்யவும், பின்னர் எப்படி சட்ட மியற்ற வேண்டுமென்று யோசனை கூறவும் ஒரு கமிட்டியை நியமிக்க வேண்டுமென்று எங்கள் அசெம்பிளியின் பட்ஜெட் கூட்டத்தில் பிரேரித்தேன். இது சபையில் ஏகமனதாக நிறைவேறியது.

"சமஸ்தானம் பூராவிலுமுள்ளவர்கள் விரும்பியும்கூட இந்தக் கமிட்டி இன்னும் நியமிக்கப்படவில்லை. பிரிட்டிஷ் இந்தியாவில் இது விஷயமாக இன்னும் ஒன்றும் செய்யாமலிருக்கும்போது, மைசூர் ஏதாவது செய்தால் சிரிப்பார்களோ என்று பயப்படுவது போல் தோன்றுகிறது. நீங்கள் சொன்னதுபோல், இது அர்த்தமில்லாதது. பிரிட்டிஷ் இந்தியாவில் இதற்கு உண்மையான சங்கடங்கள் இருக்கின்றன. ஆனால், இந்த வேலையைச் செய்வதற்கு மைசூருக்கு ஒரு தனித் தகுதி இருக்கிறது. மைசூருக்குள்ள விசேஷ வாய்ப்புகளை நாம் புறக்கணிப்பது விவேகமற்றதாகும். இப்போதுள்ள எங்கள் சமஸ்தானாதிபதி நல்ல விஷய அறிவுள்ளவர். அதே மாதிரி திவானும் சீர்திருத்த மனப்பான்மையுள்ள ஒரு உண்மையான மனிதர். நாம் விரும்பும் சீர்திருத்தங்களை இப்போது செய்ய முடியவில்லை யென்றால், எப்போதுமே செய்ய முடியாது.

"இந்த விஷயத்தைப்பற்றி நீங்கள் 'எங் இந்தியா'வில் எழுதக் கூடாதா?"

மேற்கண்ட கடிதத்திற்கு நான் இவ்வளவு முக்கியத்துவம் கொடுத்திருப்பதால், அவர் கூறும் ஒவ்வொரு சீர்திருத்தத்தையும் நான் ஆதரிப்பதாக அர்த்தமில்லை. அவற்றில் சிலவற்றை உடனடியாகக் கவனிக்க வேண்டுமென்பதில் சந்தேகமில்லை. காலத்திற்கு ஏற்றவைகளா யில்லாதவற்றை ஹிந்து சமூகத்திலிருந்து ஒழிக்க வேண்டும் என்பவர்கள், இவற்றை யெல்லாம் கவனமாகப் பரிசீலனை செய்ய வேண்டுமென்பதிலும் எனக்குச் சந்தேகமில்லை.

பிரிட்டிஷார் வருவதற்கு முன்பு கண்டிப்பான ஹிந்து சட்டம் என்ற எதுவும் மக்களின் வாழ்க்கையைச் சீர்படுத்திக் கொண்டிருக்கவில்லை. ஸ்மிருதிகள் என்ற பெயருடன் வழங்கும் கோட்பாடுகள், மனிதர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்பதற்கே வழிகாட்டின; அவை மாற்ற முடியாத விதிகளல்ல. சட்டத்தைப்பற்றி இன்றைய வக்கீல்கள் அறிந்துள்ள அத்தகைய அதிகாரம் அவற்றிற்குக் கிடையாது ஸ்மிருதிகளில் விதிக்கப்பட்டுள்ள கட்டுப்பாடுகள், சமூகத்தின் சம்மதத்தின் மூலம் அமலாக்கப்பட்டனவே யொழிய, சட்டபூர்வமாக அல்ல. நம்மைப் போலவே ஸ்மிருதிகளும் தொடர்ந்து மாறிக்கொண்டே யிருந்தன என்பதை, அவற்றிலுள்ள ஒன்றுக்கொன்று முரணான சுலோகங்களிலிருந்தே தெரிந்துகொள்ளலாம். சமூகக் கலையில் அவ்வப்போது ஏற்படும் புதிய நிலைமைகளுக்கேற்றவாறு அவைகளும் மாற்றப்பட்டுக் கொண்டிருந்தன. விவேகமுள்ள அரசர்கள், புதிய நிலைமைகளுக்கு ஏற்றவாறு புதிய வியாக்கியானங்களைப்

பெறவும் உரிமை இருந்தது. இப்போது சொல்லப்படுவதைப் போல் ஹிந்து மதமோ, ஹிந்து சாஸ்திரங்களோ மாறுதலற்றவைகளாகவோ, மாற்ற முடியாதவைகளாகவோ இருந்ததேயில்லை.

அந்தக் காலத்தில் சமூகத்தின் மரியாதையையும், விசுவாசத்தையும் பெறுவதற்கு வேண்டிய விவேகமும், அறிவும் உள்ள அரசர்களும், ஆலோசகர்களும் இருந்தார்கள் என்பது உண்மையே. ஆனால், ஸ்மிருதிகளும், சாஸ்திரங்கள் என்று சொல்லப்படும் எவையும் மாற்றவே முடியாதவை என்று நினைக்கும் வழக்கம் இப்போது பரவிவிட்டது. அனுபவ சாத்தியமற்றவைகளாகவோ, நமது தார்மிக உணர்ச்சிக்கு முற்றிலும் முரணாயிருப்பவைகளாகவோ உள்ள சுலோகங்களை நாம் கவனிக்காதது போல் புறக்கணித்து விடுகிறோம். மனிதனின் வளர்ச்சியில் முற்போக்கான ஒரு உறுப்பாக ஹிந்து சமூகம் இருக்க வேண்டுமானால், இந்த அதிருப்திகரமான நிலைமையை என்றைக்காவது, எப்படியாவது மாற்றித்தான் ஆக வேண்டும். பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் மதமும் வேறு, லட்சியமும் வேறு; ஆகையால் இந்த மாறுதல்களை அவர்கள் செய்ய முடியாது. தங்களுடைய வர்த்தக நலன்கள் கொஞ்சமும் பாதிக்கப்படாமல் அப்படியே காப்பாற்றப்பட வேண்டும்; அதற்காக தார்மிக நலன்களையோ, வேறெந்த நலன்களையோ அவர்கள் பலி கொடுக்கத் தயாராயிருக்கிறார்கள். ஆகையால், ஹிந்து சமூகம் தெளிவாக வற்புறுத்தினாலொழிய, அவர்களுடைய நோக்கத்திற்கு இடையூறு இல்லாமல் செய்ய முடிவதாக இருந்தாலொழிய, நமது பழக்க வழக்கங்களிலோ, சட்டங்கள் என்று சொல்லப்படுபவைகளிலோ தீவிர மாறுதல்கள் செய்யப்படமாட்டா; அத்தகைய முயற்சிகளையும் அவர்கள் அனுமதிக்கமாட்டார்கள். பல்வேறு விதமான கருத்துக்களும், சட்டங்களும் பழக்கத்திலுள்ள பிரிட்டிஷ் இந்தியா போன்ற ஒரு பெரிய பிரதேசத்தில், ஒரே மாதிரியான சில அம்சங்களில் ஹிந்துக்களின் பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்குவதென்பது கஷ்டமான காரியமாகும். ஏற்கனவே உள்ள பொதுஜன அபிப்பிராயமும், அரசியல் விடுதலை பெறுவதற்கான போராட்டத்தில்தான் குறியாயிருக்க முடியுமென்பது இயற்கையே. ஆனால். மைசூர் போன்ற ஒரு சமஸ்தானத்திற்கு அம்மாதிரி கட்டுப்பாடுகளோ, போராட்டமோ இல்லை. ஹிந்து சட்டத்தில் காலத்திற்கு ஏற்றவைகளா யில்லாதவற்றை அகற்றுவதில் பிரிட்டிஷ் இந்தியாவுக்கு முந்திக்கொள்ள வேண்டியது மைசூரின் கடமையாகும் என்பதே என்னுடைய தாழ்மையான அபிப்பிராயமாகும். மைசூர் ஒரு பெரிய சமஸ்தானம்; முக்கியமானதும்கூட. ஆகையால், அத்தகைய மாறுதல்களைச் செய்ய அவர்கள் முயற்சி செய்யலாம். அது, வரவர சட்டத்திற்குட்பட்டுச் செயல்படும் மன்னரைக் கொண்ட சமஸ்தானமாகிக் கொண்டு வந்திருக்கிறது. சமூக மாறுதல்களைச் செய்வதற்கு வேண்டிய அளவு பிரதிநிதித்துவத் தன்மை பெற்ற அசெம்பிளி ஒன்று அங்கிருக்கிறது. ஹிந்துச் சட்டத்திற்கு மாறுதல்கள்

அவசியமா, என்ன மாறுதல்கள் செய்யவேண்டும் என்று பரிசீலனை செய்வதற்கு ஏற்கனவே அசெம்பிளியில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. வைதிக மனப்பான்மை, முற்போக்கு மனப்பான்மை இரண்டுக்கும் பிரதிநிதித்துவம் வகிப்பவர்களைக்கொண்ட ஒரு பலமான கமிட்டி நியமிக்கப்பட்டால், அவர்களுடைய சிபார்சுகள் அவசியமான மாறுதல்களைச் செய்வதற்கு வழி கோலுவதாகவும், உபயோகமாகவும் இருக்கும். இத்தகைய கமிட்டிகள் நியமிக்கும் விஷயத்தில் மைசூர் அசெம்பிளியின் விதிகள் என்ன என்று எனக்குத் தெரியாது. ஆனால், மைசூர் ராஜ்யத்திற்கு வெளியே உள்ளவர்களையும் கமிட்டியில் மெம்பர்களாக நியமிக்கவோ, சேர்த்துக்கொள்ளவோ ஏற்றவாறு அந்த விதிகள் வளைந்து கொடுக்கக் கூடியவைகளாயிருக்கும் என்பதில் சந்தேகமில்லை. அது எப்படி யிருந்தாலும், பல அம்சங்களில் ஹிந்துச் சட்டத்தை மாற்ற வேண்டியது அத்தியாவசியம் என்பதை ஸ்ரீ பாஷ்யம் அய்யங்கார் எடுத்துக்காட்டி யிருக்கிறார். காலம் தாழ்ந்த இந்தச் சீர்திருத்தத்தை செய்வதற்கு மைசூரைவிடத் தகுதியுள்ள வேறு சமஸ்தானம் இல்லை.

—'எங் இந்தியா' – 13—10—1927

## 2

# பெண்களின் பங்கு

கல்கத்தா பெண்கள் கதர் விற்பனை செய்ய முயற்சித்ததன் மூலம் கல்கத்தாவிலுள்ள கனவான்களைத் தடுத்திருக்கிறார்கள். இதற்காக அவர்கள் கைது செய்யப்பட்டுள்ளதாகப் பத்திரிகைகளில் ஒரு தந்திச் செய்தி பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. அக்ராசனராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவரின் மனைவி, அவருடைய விதவை சகோதரி, சகோதரியின் பெண் ஆகியோரும் கைது செய்யப்பட்டுள்ளனர். ஆரம்ப காலத்திலாவது, சிறை செல்லும் கௌரவத்தைப் பெண்களுக்கு அளிக்க வேண்டாமென்று நான் நினைத்தேன். அவர்கள் தீவிரமான சட்டமறுப்பாளர்களாக வேண்டியதில்லை என்றும் எண்ணினேன். ஆனால், ஆண், பெண் என்றுகூட பட்சபாதம் காட்டக் கூடாது என்ற ஆர்வத்தில் வங்காள அரசாங்கம் மூன்று கல்கத்தா பெண்களுக்கு இந்தக் கௌரவத்தை அளித்திருக்கிறார்கள். இந்தப் புதுத் திருப்பத்தை நாடு பூராவுமே வரவேற்குமென்று நம்புகிறேன். இந்தியாவின் சுயராஜ்யப் போராட்டத்தில் ஆண்களைப் போலவே பெண்களுக்கும் சம பங்கு இருக்க வேண்டும். ஒருக்கால், இந்த அமைதியான போராட்டத்தில் பெண்கள் ஆண்களை நன்றாகத் தோற்கடித்து விடக்கூடுமோ, என்னவோ. மத நம்பிக்கை

சம்பந்தப்பட்டவரையில் ஆண்களைவிடப் பெண்கள் மிகவும் உயர்ந்தவர்கள் என்பதை நாம் அறிவோம். வாய் திறவாமல், கண்ணியமாகக் கஷ்டங்களைப் பொறுத்துக் கொள்ளுவதே பெண்மையின் சின்னமாகும். வங்காள அரசாங்கம் இப்போது பெண்களையும் போர்க்களத்தில் நிறுத்திவிட்டதால், இந்தியாவிலுள்ள எல்லாப் பெண்களும் ஒன்று சேர்ந்து இந்த அறைகூவலை ஏற்றுக் கொள்ளுவார்களென்று நம்புகிறேன். போதிய அளவு ஆண்கள் கைது செய்யப்பட்ட பிறகு, தம்முடைய இனத்தின் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்காக எப்படியும் பெண்கள் வரத்தான் வேண்டியிருந்திருக்கும். ஆனால், இப்பொழுது சிறைக் கொடுமைகளை ஆண்களோடு சேர்ந்தே பெண்களும் அனுபவிக்கட்டும். கடவுள் அவர்களுடைய கௌரவத்தைக் காப்பாற்றுவார். திரௌபதியின் மானத்தைக் காப்பாற்ற வேண்டிய இயற்கையான கடமையுள்ளவர்கள், அவளுடைய கடைசித் துகில் உரியப்படும் வரையில் ஒன்றும் செய்ய முடியாமல் மௌனமாக நின்று கொண்டிருந்த போது, ஆண்களைக் கேலி செய்வது போல், அவளுடைய கற்பின் சக்தியே அவளுடைய மானத்தைக் காப்பாற்றியது. காலம் முடிவடையும் வரையிலும்கூட இப்படித்தானிருக்கும். மிகவும் பலவீனமான உடலுள்ளவர்கள் கூடத் தமது மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளும் சக்தி பெற்றிருக்கிறார்கள். பெண்ணைக் காப்பாற்றுவது ஆண்களின் பாக்கியமாக இருக்கட்டும். ஆனால், ஆண்கள் இல்லை என்பதற்காகவோ, அல்லது அவளைக் காப்பாற்ற வேண்டிய புனிதமான கடமையை அவர்கள் நிறைவேற்றத் தவறினாலோ, அதற்காகப் பெண்கள் ஏக்கமுற வேண்டாம். சாகத் தெரிந்த ஆணோ, பெண்ணோ, தன் கௌரவத்திற்கு ஊறு வந்துவிடுமோ என்று பயப்பட வேண்டிய அவசியமில்லை.

போர்க்களத்தில் வந்து நிற்கத் தயாராயிருக்கும் பெண்களின் பெயர்களை, ஆடம்பரம் இல்லாமலும், வீணில் காலம் கடத்தாமலும் சேகரிக்க வேண்டுமென்று இந்தியாவிலுள்ள பெண்களுக்கு யோசனை கூற விரும்புகிறேன். அத்தகையவர்கள் தமது பெயர்களை வங்காளப் பெண்களுக்கு அனுப்பட்டும். தம்முடைய உயர்ந்த உதாரணத்தை மற்ற இடங்களிலுள்ள சகோதரிகளும் பின்பற்றத் தயாராயிருக்கிறார்கள் என்பதை வங்காளத்திலுள்ள சகோதரிகள் அறிந்துகொள்ளட்டும். சிறை வாழ்க்கையின் கஷ்டங்களையும், பெண்களுக்கு ஏற்படக் கூடிய இதர சங்கடங்களையும் துணிந்து ஏற்றுக் கொள்ளுவதற்குப் பலர் முன் வராமலிருக்கலாம். முதலில் சிலர்தான் தியாகம் செய்ய முன்வருகிறார்கள் என்றால், அதைப் பற்றி தேசம் வெட்கப்பட வேண்டியதில்லை.

ஆண்களின் கடமை தெளிவாக இருக்கிறது. நாம் நிதானமிழந்துவிடக் கூடாது. பரபரப்பினால் நமது பெண்களையோ, தேசத்தையோ காப்பாற்ற முடியாது. பெண்கள், குழந்தைகள் என்று பார்க்க வேண்டாமென அரசாங்கத்தினிடம் சொல்லியிருக்

கிறோம். ராணுவச் சட்ட ஆட்சி நாட்களில் பஞ்சாபில் பெண்கள், குழந்தைகள் என்று அரசாங்கம் பார்க்கவுமில்லை. பஞ்சாபிலுள்ள ஒரு பாஸ்வொர்த் ஸ்மித், மணியன்வாலா பெண்களின் மீது காரி உமிழ்ந்ததையும், இதர வழிகளில் சிறுமைப்படுத்தியதையும்விட, கல்கத்தாவிலுள்ள அதிகாரிகள் தாம் குற்றம் என்று கருதும் ஒன்றிற்காக, சட்டத்தின் பெயரைச் சொல்லிக்கொண்டு கல்கத்தா சகோதரிகளைக் கைது செய்வது இன்னும் அதிக நாகரிகமான செய்கை என்று நான் கருதுகிறேன். ஆனால், அவர்கள் தமது பொதுக் கடமையை நிறைவேற்றுவதற்காகப் பெண்களைக் கைது செய்வதாயிருந்தால், அப்படிக் கைது செய்யப்படுவதற்குப் பெண்களை நாம் அனுப்புகிறோம். பெண்கள் சுதேசி மந்திரத்தைப் பரப்பிக் கொண்டும், அரசாங்கத்தின் வாழ்க்கைக்கே அஸ்திவாரமாயிருப்பதைத் தகர்த்துக் கொண்டுமிருந்தால், அரசாங்கம் அதைப் பார்த்துக்கொண்டு சும்மா இருக்க வேண்டுமென்று நாம் எதிர்பார்க்கக் கூடாது. அந்நியத் துணி விற்பனையும், அதன் பலனாக இந்தியாவின் வசதிகளைப் பயன்படுத்திக்கொள்ளும் வாய்ப்பும்தான் அரசாங்கத்தினுடைய வாழ்க்கைக்கே அஸ்திவாரமாகும். ஆகையால், ஆண்களாகிய நாம், நமது பெண்கள் சுதேசிக் கிளர்ச்சியில் கலந்துகொள்ள அனுமதித்தால், ஆண்களைப் போலவே அவர்களையும் சிறைப்படுத்துவதற்குச் சர்க்கார்களுக்கு உரிமை இருக்கிறது என்பதையும் நாம் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

—'எங் இந்தியா' - 15—12—1921

## 3

# மலைகளையும் நகர்த்திவிடுவர்

தியாகத்தின் உருவாகப் பெண்கள் அமைந்திருக்கிறார்கள். பெண்கள், சரியான உணர்ச்சியுடன் ஒரு காரியத்தில் இறங்கினால், மலைகளைக்கூட அவர்கள் நகர்த்திவிடுகிறார்கள். நாம் நமது பெண்களைத் துஷ்பிரயோகம் செய்திருக்கிறோம். அவர்களைப் புறக்கணித்து விட்டோம் என்று கூடச் சொல்லலாம். ஆனால், கடவுளின் அருளினால் கைராட்டினம் அவர்களை உருமாற்றிக் கொண்டிருக்கிறது. தலைவர்களும், அரசாங்கத்தின் கருணையைப் பெற்றவர்களுமான மற்றவர்களும், சிறை செல்லும் கௌரவத்தைப் பெற்றுவிட்டால், ஆண்கள் விட்டுப்போன காரியத்தை இந்தியப் பெண்கள் செய்து முடித்துவிடுவார்கள் என்பதிலோ, ஆண்களைவிட இன்னும் அழகாக அவர்கள் அதைச் செய்வார்கள் என்பதிலோ எனக்குச் சந்தேகமில்லை.

—'எங் இந்தியா' - 22—12—1921

4

# இந்தியப் பெண்களுக்கு

இந்த நல்ல போராட்டத்தில் சேருவதற்குச் சில சகோதரிகள் அவசரப்படுவது ஒரு நல்ல சகுனமாகவே எனக்குத் தோன்றுகிறது. உப்பு வரிக்கு எதிரான இயக்கம் எவ்வளவு கவர்ச்சிகரமானதாயிருந்தாலும், அவர்கள் அத்துடன் மட்டுமே நிறுத்திக்கொள்ளுவது லாபகரமானதல்ல என்ற உண்மை புலப்பட்டிருக்கிறது. அவர்கள் கூட்டத்தோடு கூட்டமாக ஆகிவிடுவார்கள். கஷ்டங்களை அனுபவிக்க வேண்டுமென்று அவர்கள் விரும்புவார்கள். அந்த வாய்ப்பு அதில் அவர்களுக்குக் கிடைக்காது.

இந்த அகிம்சைப் போராட்டத்தில், ஆண்களின் பங்கைவிட பெண்களின் பங்கு அதிகமானதாக இருக்க வேண்டும். பெண்களை மெல்லியலார் என்று கூறுவது அவர்களை அவதூறு செய்வதாகும்; இது ஆண்கள் பெண்களுக்கு இழைக்கும் அநீதியுமாகும். மிருக பலம்தான் பலம் என்றால், ஆண்களைப் போல் பெண்கள் அவ்வளவு மிருகங்களல்ல என்பது உண்மையே. தார்மிக சக்திதான் பலமென்றால், பெண்கள் ஆண்களைவிட எவ்வளவோ உயர்ந்தவர்கள். பெண்களுக்கு அதிக உள்ளுணர்வு இல்லையா? தம்மைத் தாமே தியாகம் செய்துகொள்ளும் தன்மை அவர்களிடம் அதிகம் இல்லையா? அவர்களுக்கு இன்னும் அதிக சகிப்புச் சக்தி இல்லையா? அவர்களுக்கு இன்னும் அதிக தைரியம் இல்லையா? பெண் இல்லாமல் ஆண் இருக்க முடியாது. அகிம்சைதான் நமது வாழ்க்கையின் நியதி என்றால், எதிர்காலம் பெண்களிடம்தான் இருக்கிறது.

பல வருடங்களாக இந்த எண்ணத்தை நான் வளர்த்து வந்திருக்கிறேன். ஆண்களோடு தங்களையும் அழைத்துக்கொண்டு போக வேண்டுமென்று ஆசிரமப் பெண்கள் வற்புறுத்திய போது, இந்தப் போராட்டத்தில் உப்புச் சட்டத்தை மீறுவதோடு மட்டுமல்லாமல், இன்னும் பெரிய காரியங்களை அவர்கள் செய்யப் போகிறார்கள் என்று எனக்குள் ஏதோ ஒன்று சொல்லிற்று.

அந்த வேலையை இப்போது நான் கண்டுபிடித்து விட்டதாக நினைக்கிறேன். 1921-இல் கள்ளு, சாராயக் கடைகளையும், அந்நியத் துணிக் கடைகளையும் ஆண்கள் மறியல் செய்தது, ஒரு காலம் வரையில் எதிர்பாராததற்கு அதிகமாகவே வெற்றி பெற்ற போதிலும், பலாத்காரம் ஏற்பட ஆரம்பித்ததால் அது தோல்வியடைந்தது. நம்முடைய உறுதியை உண்மையாகவே காட்ட வேண்டுமானால், மறுபடியும் மறியலை ஆரம்பிக்க வேண்டும். கடைசி வரையில் அது சாத்விக முறையிலேயே நடை

பெற்றால் சம்பந்தப்பட்டவர்களுக்கு விஷய அறிவு ஊட்ட அதுவே மிகவும் துரிதமான வழியாக இருக்கும். இதில் நிர்ப் பந்தமே இருக்கக்கூடாது; தன்மையாக எடுத்துச் சொல்லி மனத்தை மாற்றும் முயற்சியாகவே இது இருக்கவேண்டும். பெண்களைப்போல் அவ்வளவு பலனளிக்கத்தக்க விதத்தில் உள்ளங்களைத் தொடக்கூடியவர்கள் வேறு யார்? போதையளிக் கும் மது வகைகளைத் தடுப்பதும், அந்நியத் துணிகளைப் பகிஷ் காரம் செய்வதும்தான் இறுதியில் நமது சட்டமாயிருந்தாக வேண்டும். கீழேயிருந்து கண்டிப்பான நிர்ப்பந்தம் ஏற்பட்டா லொழிய இந்தச் சட்டம் வராது.

இரண்டும் தேசத்திற்கு அத்தியாவசியமானவை என்பதை யாரும் மறுக்கமாட்டார்கள். குடியும், போதை வஸ்துக்களும் அவற்றை உபயோகிப்பவர்களின் ஜீவனையே உறிஞ்சி விடுகின் றன. அந்நியத் துணிகள் நாட்டின் பொருளாதார அஸ்தி வாரத்தையே தகர்த்து, லட்சக்கணக்கானவர்களுக்கு வேலை யில்லாமல் செய்து வருகிறது. இந்தக் கஷ்டத்தை வீட்டிலுள்ள வர்கள், அதாவது, பெண்கள்தான் அனுபவிக்கிறார்கள். ஒரு காலத்தில் சீராகவும், அமைதியாகவும் இருந்த குடும்பத்தை குடிப் பழக்கம் எவ்வளவு சீரழித்து விடுகிறது என்பதை, குடி காரக் கணவர்களைக் கொண்ட பெண்களே அறிவார்கள். வேலை யில்லாமலிருப்பது என்றால் என்ன என்பதை நமது கிராமங்களி லுள்ள லட்சக்கணக்கான பெண்கள் அறிவார்கள். இன்று சர்க்கா சங்கம் ஒரு லட்சத்திற்கு மேற்பட்ட பெண்களுக்கும், பத்தாயிரத்திற்கு உட்பட்ட ஆண்களுக்கும் உதவி செய்கிறது.

இந்தியாவிலுள்ள பெண்கள், இந்த இரண்டு விஷயங்களை யும் எடுத்துக்கொண்டு, அவற்றில் விசேஷ கவனம் செலுத்தட் டும்; அப்படிச் செய்தால் தேசீய விடுதலைக்கு ஆண்களைவிட அவர்கள் அதிக உதவி செய்தவர்களாவார்கள். இதுவரையில் அவர்கள் கண்டறிந்திராத சக்தியும், தன்னம்பிக்கையும் அவர் களுக்கு உண்டாகும்.

அந்நியத் துணி விற்பவர்கள், வாங்குபவர்கள், கள்ளு, சாராயம் விற்பவர்கள், அவற்றை உபயோகிப்பவர்களுக்குப் பெண்கள் வேண்டுகோள் விடுத்தால், அவர்களுடைய உள்ளம் உருகாமல் போகாது. இந்த நான்கு வகையினருக்கும் பலாத் காரமிழைத்தவர்கள் அல்லது பலாத்காரமிழைக்க உத்தேசித் தவர்கள் என்று பெண்களைச் சந்தேகிக்கவே முடியாது. இவ்வளவு அமைதியானதும், எதிர்ப்பில்லாததுமான ஓர் இயக்கத்தைக் குறித்து அரசாங்கம் அதிக காலம் சும்மா இருக்க முடியாது.

இந்தக் கிளர்ச்சியை ஆரம்பிப்பதும், நடத்துவதும் முற்றிலும் பெண்களே என்பது இதிலுள்ள கவர்ச்சியாக இருக்கும். தேவையான உதவியை அவர்கள் ஆண்களிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம். ஆனால், ஆண்கள் முற்றிலும் அவர்களுக்கு உட் பட்டே நடந்து கொள்ள வேண்டும்.

இந்தக் கிளர்ச்சியில் படித்தவர்களும், படிக்காதவர்களுமான ஆயிரக்கணக்கான பெண்கள் பங்குகொள்ளலாம்.

உயர்தரக் கல்வி பெற்றுள்ள பெண்கள், என்னுடைய இந்த வேண்டுகோளைப் பயன்படுத்திக் கொண்டு, பாமர மக்களின் நலன்களில் தம்மைத் தீவிரமாக ஐக்கியப்படுத்திக்கொள்ளவும், தார்மிகத் துறையிலும், லோகாயதத் துறையிலும் அவர்களுக்கு உதவி செய்யவும் வாய்ப்புக் கிடைக்கிறது.

அந்நியத் துணி பகிஷ்காரப் பிரச்னையைப் பரிசீலனை செய்து பார்த்தால், கதரின் மூலம் தவிர வேறு வழிகளில் அது சாத்தியமில்லை என்பதை அவர்கள் அறிவார்கள்.

இந்தியத் தேவைகளுக்குப் போதுமான அளவு துணியை இப்போதைக்கு மில்களில் உற்பத்தி செய்யமுடியாது என்பதை மில்காரர்களே ஒப்புக்கொள்ளுவார்கள். சரியான சூழ்நிலை இருந்தால், நமது கிராமங்களிலுள்ள கணக்கற்ற வீடுகளில் கதரை உற்பத்தி செய்ய முடியும். தங்களுக்குக் கிடைக்கும் ஒவ்வொரு நிமிஷ நேர அவகாசத்தையும் நூற்பதில் செலவிடுவதன் மூலம் இத்தகைய சூழ்நிலையை உண்டு பண்ணும் பெருமை நமது பெண்களுக்குக் கிடைக்கட்டும். கதர் உற்பத்தி என்பது போதிய நூல் நூற்கும் பிரச்னைதான். இந்த யாத்திரையை* ஆரம்பித்த சென்ற பத்து நாட்களில், சந்தர்ப்ப விசேஷம் காரணமாக தக்ளியின் சக்தியை நான் அறிந்தேன். இதற்கு முன்பு அது எனக்குத் தெரியாது. உண்மையில் அது அற்புதமான ஒரு சாதனமாகும். என்னுடைய சகபாடிகள் தம்முடைய மற்ற வேலைகளைக் கெடுத்துக்கொள்ளாமல், விளையாட்டாகவே, 12-ஆம் நம்பரில் தினம் 4 சதுர கெஜம் கதர் நெய்யக் கூடிய அளவுக்கு நூல் நூற்றிருக்கிறார்கள். ஒரு யுத்த முறை என்ற தன்மை சம்பந்தப்பட்டவரையில் கதருக்கு ஈடிணையே கிடையாது. இந்த இரு சீர்திருத்தங்களின் தார்மிக பலன்கள் மகத்தானவை என்பது வெளிப்படை. ராஜீய பலனும் அதற்குக் குறைவாயிராது. போதை வஸ்துக்களைத் தடைசெய்தால் ரூ. 25 கோடி வருமானம் அரசாங்கத்திற்கு நஷ்டமாகிறது. அந்நியத் துணியைப் பகிஷ்காரம் செய்வதால் இந்தியாவிலுள்ள லட்சக்கணக்கான மக்கள் குறைந்த பட்சம் 60 கோடியாவது மிச்சப்படுத்துகிறார்கள். இந்த இரண்டு சாதனைகளும் தாற்காலிகமாக உப்புவரி ஒழிப்பைவிட உயர்வானவைகளாயிருக்கும். இந்த இரு சீர்திருத்தங்களின் தார்மிகப் பலன்களை மதிப்பிடுவது சாத்தியமில்லை.

"கள்ளுக்கடை, அந்நியத் துணிக்கடை மறியலில் பரபரப்போ, செயல் துணிவோ ஒன்றுமில்லையே" என்று சில சகோதரிகள் சொல்லலாம். முழு மனத்துடனும் அவர்கள் இந்தக் கிளர்ச்சியில் ஈடுபட்டால், வேண்டிய பரபரப்பையும், செயல்

---

* உப்பு சட்டத்தை எதிர்த்து 1930-இல் சபர்மதி ஆசிரமத்திலிருந்து தொண்டர்களுடன் டண்டிக்குக் கால்நடையாகவே யாத்திரை புறப்பட்டதையே இங்கே காந்திஜி குறிப்பிடுகிறார்.

துணிவையும் இதில் காண்பார்கள். கிளர்ச்சி முடிவதற்குள்ளாகவே அவர்கள் சிறைப்படுத்தப்படவும் கூடும். அவர்கள் அவமதிக்கப்படுவதோ, அல்லது அவர்களுடைய உடலுக்குக் காயம் விளைவிக்கப்படுவதோகூட நடக்கக்கூடாதது அல்ல. அத்தகைய அவமதிப்பையும், காயத்தையும் அனுபவிப்பதே அவர்களுடைய பெருமையாக இருக்கும். அம்மாதிரி கஷ்டங்கள் அவர்களுக்கு நேர்ந்தால், முடிவு துரிதப்பட்டுவிடும்.

இந்தியப் பெண்கள், என்னுடைய வேண்டுகோளை ஏற்றுக்கொள்ளுவதாயிருந்தால், சீக்கிரமாகச் செயலில் இறங்கவேண்டும். அகில இந்தியாவிலும் வேலையை உடனே எடுத்துக்கொள்ள முடியாது என்றால், சாத்தியமான மாகாணங்களில் வேலை ஆரம்பமாகட்டும். அவர்களுடைய உதாரணத்தை மற்ற மாகாணங்களும் சீக்கிரத்தில் பின்பற்றும்.

—'எங் இந்தியா' – 10—4—1930

# 5

# பெண்கள் மகாநாடு

சென்ற ஞாயிற்றுக்கிழமையன்று டண்டியில் நடைபெற்ற பெண்கள் மகாநாடு, நான் விரும்பியதைப் போலவே ஒரு காங்கிரசாக இருந்தது. பரோடா பிரதேசத்தைச் சேர்ந்த மோட்டார்கள், நவஸாரிக்கும் டண்டிக்கு மிடையே ஓடக்கூடாது என்று அரசாங்கம் தடைவிதித்ததன் காரணமாக, பலர் 12 மைல்களும் நடந்தே டண்டிக்கு வந்தார்கள். பின்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன :

(1)

"1930 ஏப்ரல் 13-ஆம் தேதியன்று டண்டியில் கூடியுள்ள இந்த குஜராத் பெண்கள் மகாநாடு, காந்திஜி கூறியதைக் கேட்ட பிறகு, குஜராத்தி லுள்ள கள்ளு, சாராயக் கடைகளை மறியல் செய்வதென்று தீர்மானிக்கிறது. இந்தக் கடைகளை வைத்திருப்பவர்கள் அந்த வியாபாரத்தை நடத்த வேண்டாமென்றும், குடிப் பழக்கம் உள்ளவர்கள் அதை விட்டுவிடும்படியும் கேட்டுக்கொள்ளுகிறது. அதேமாதிரி அந்நியத் துணிக் கடைகளை மறியல் செய்வது என்றும் தீர்மானிக்கிறது. அந்நியத் துணிகளை விற்க வேண்டா மென்றும், அந்தத் துணிகளை வாங்குபவர்கள், அவற்றை வாங்காமலிருக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளுகிறது."

(2)

"கதரின் மூலம்தான் அந்நியத் துணி பகிஷ்காரம் சாத்தியமாகுமென்று இந்த மகாநாடு அபிப்பிராயப்படுகிறது. ஆகையால், இங்கே கூடியுள்ள

பெண்கள் இனிமேல் கதரையே உபயோகிப்பது என்று தீர்மானிக்கிறார்கள். சாத்தியமான வரையில் ஒழுங்காக நூற்பதென்றும் தீர்மானிக்கிறார்கள்- இதற்கு முன்னேடியான முறைகளை யெல்லாம் கற்றுக்கொண்டு, தம் அருகிலிருப்பவர்களிடையே கதரின் செய்தியைப் பரப்புவது என்றும், நூற்பது வரையிலுள்ள முறைகளை அவர்களுக்குக் கற்றுக் கொடுப்பது என்றும், அவர்கள் ஒழுங்காக நூற்பதற்கு ஊக்கமளிப்பது என்றும் தீர்மானிக்கிறார்கள்.''

(3)

''குஜராத் பூராவிலுமுள்ள பெண்களும், மற்ற மாகாணங்களிலுள்ள பெண்களும், இந்த மகாநாட்டில் ஆரம்பிக்கப்பட்டுள்ள இந்த இயக்கத்தை மேற்கொள்ளுவார்கள் என்று இந்த மகாநாடு நம்புகிறது.''

சுயராஜ்ய இயக்கம் இப்படி விரிவுபடுத்தப் பட்டிருப்பது மிகவும் முக்கியமானதாகும் என்று நான் கருதுகிறேன். இந்தப் பத்திரிகையில் ஏற்கனவே கூறப்பட்டுள்ள வாதங்களை நான் மீண்டும் வற்புறுத்த வேண்டியதில்லை. மிதுபென் ஏற்கனவே செயலில் இறங்க ஆரம்பித்துவிட்டார். அவர், எடுத்த காரியம் நடக்காமல் விட்டுவிடுபவரல்ல. இருபது அல்லது இருபத்தைந்து பெண்கள் ஒரு கோஷ்டியாகச் சென்று, கள்ளுக்கடைகளின் முன்பு நின்றுகொண்டு, அங்கே வருபவர்களை நேரில் சந்தித்துக் குடிக்க வேண்டாமென்று கேட்டுக் கொள்ளுவதென ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இந்த ஒழுக்கக்கேடான வியாபாரத்தை விட்டுவிட்டு, இன்னும் நல்ல வழிகளில் ஜீவனேபாயம் தேடும்படியும் கடைக்காரர்களைக் கேட்டுக்கொள்ளுவார்கள்.

போதிய பயிற்சிபெற்ற தொண்டர்கள் கிடைத்தவுடன் அந்நியத் துணிக் கடைகளும், கள்ளுக்கடைகளைப் போலவே மறியல் செய்யப்படும். இந்த இரண்டு பகிஷ்காரங்களையும் ஒரே கமிட்டி தான் நடத்துமென்றாலும், இரண்டுக்கும் தனித்தனி கிளைகள் இருக்கத்தான் செய்யும். இதில் ஏதாவது ஒரு பிரிவில் மட்டும் வேலை செய்வதற்குப் பெண்கள் முன்வரலாம். ஒவ்வொரு ஊழியரும் காங்கிரஸைச் சேர்ந்தவராயிருக்க வேண்டும் என்ற அவசியமுமில்லை. ஆனால், ஒரு விஷயத்தைத் தெளிவாகப் புரிந்து கொள்ளவேண்டும். இது காங்கிரஸ் வேலைத் திட்டத்தின் ஒரு பகுதியாகும். இதன் பலனாக மகத்தான தார்மிக, பொருளாதார விளைவுகள் ஏற்படுமென்றால், அதைப் போலவே ராஜீய விளைவுகளும் ஏற்படும்.

அந்நியத் துணி பகிஷ்காரப் பிரிவில் சேருபவர்கள், கதர் உற்பத்தி என்ற நிர்மாண வேலை இல்லாமல், வெறும் பகிஷ்காரம் மட்டும் செய்வது விஷமத்தனமான ஒரு காரியமாகும் என்பதை உணரவேண்டும். கதர் உற்பத்தி இல்லாமல், பகிஷ்காரம் மட்டும் வெற்றி பெறுவது தேசீய சுதந்திர இயக்கத்தைப் பாழாக்கி விடும். ஏனெனில், லட்சக்கணக்கான மக்கள் வெறும் நம்பிக்கையுடன் மட்டும் அதை மேற்கொள்ளுவார்கள். ஆனால், அவர்கள் அணிந்துகொள்ளுவதற்குத் துணி கிடைக்காவிட்டால்,

அல்லது கிடைக்கும் துணியின் விலை மிகவும் அதிகமாயிருந்தால், நம்மைச் சபிப்பார்கள். ஆகையால், அந்நியத் துணியை விலக்கிவிட்டு, நமக்கு வேண்டிய கதரை நாமே உற்பத்தி செய்து அணிய வேண்டும் என்பதே திட்டமாயிருக்க வேண்டும். பெரும்பாலான கதர் ஊழியர்கள், உப்பு சத்தியாக்கிரக இயக்கத்தில் இருக்கிறார்கள். ஆகையால், கதர் உற்பத்தி தாற்காலிகமாகத் தடைப்பட்டிருக்கிறது.

தம்முடைய மானத்தை மறைத்துக்கொள்ளுவதற்குத் துணி விலைக்கு வாங்கத்தான் வேண்டும் என்ற மூடநம்பிக்கையை நாட்டினர் விட்டொழித்தால், துணிக்குப் பஞ்சம் ஏற்படவேண்டிய அவசியமே இல்லை. மான்செஸ்டர் அல்லது டில்லி பிஸ்கோத்துக்கள் கிடைத்தாலொழிய நாம் பட்டினி கிடக்க வேண்டும் என்று சொல்லுவதைப் போன்றதுதான் இது. நமது உணவை நாமே சமைத்துச் சாப்பிடுவதைப் போலவே, நாம் மனது வைத்தால், நமக்கு வேண்டிய துணிகளை நாமே உற்பத்திசெய்து அணிய முடியும். நூறு வருடங்களுக்கு முன்புகூட அப்படிச் செய்திருக்கிறோம். அந்த வித்தையை இப்போதும் நாம் மறுபடியும் கற்றுக் கொள்ள முடியும். இது சம்பந்தமான முக்கியமான செயல் முறைகள், கற்றுக்கொள்ளுவதற்கு மிகவும் எளிதானவை. மிகுந்த நெருக்கடியான இந்தத் தருணத்தில், தேசத்தின் சரித்திரத்தில் ஒரு திருப்பம் ஏற்படும் இந்தக் கட்டத்தில், நாம் சோம்பேறித்தனத்தை வளர்த்துக்கொண்டு தயங்கக் கூடாது. நமது மில்களைப் பற்றிய வாதங்களை நான் மறுபடியும் எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. ஒவ்வொரு மில்லும் உண்மையாகவே சுதேசித் தன்மை வாய்ந்ததாயிருந்தாலும், நம்முடைய தேவைகள் பூராவையும் அவைகளால் உற்பத்தி செய்யமுடியாது. இந்தப் பிரச்னையை எப்படி அணுகினாலும், நமக்குப் பிடித்தாலும், பிடிக்காவிட்டாலும், அகிம்சை மார்க்கத்தின் மூலம் நாம் சுதந்திரம் பெற வேண்டுமானால், *1920*-இல் நாம் ஆரம்பித்த அந்நியத் துணி பகிஷ்காரத்தில் நாம் வெற்றி பெறவேண்டுமானால், கதரைத் தவிர வேறு வழியில்லை.

—'எங் இந்தியா' – 17—4—1930

6

# கருணைப் பணிபுரியுங்கள்

*29-11-1927*-ல் யாழ்ப்பாணத்திலுள்ள உடுவில் பெண்கள் கல்லூரியில் பேசும்போது காந்திஜி பின்வருமாறு கூறினார் :

"இன்று காலை உங்களையெல்லாம் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது பற்றி உண்மையிலேயே மிகவும் மகிழ்ச்சியடைகி

றேன். உள்ளன்போடு நீங்கள் அளித்துள்ள சிறு அன்பளிப்புகள், பொதுப் பண முடிப்புடன் சேர்த்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இது எனக்குப் பிடிக்கவேயில்லை. உங்களுடைய அன்பளிப்புகளும், பொதுப் பண முடிப்புடன் சேர்க்கப்பட்டதற்கு முடிந்த வரையில் நல்ல முறையிலேயே வியாக்கியானம் செய்யப்போகிறேன். பையன்களை விட நீங்கள் அதிக அடக்கமுள்ளவர்களாதலால், நீங்கள் எதையும் கொடுத்திருக்கிறீர்களென்பதை நான் அறியக் கூடாதென்று விரும்புகிறீர்கள். ஆனல், இந்தியா பூராவிலும் நான் பல்லாயிரக்கணக்கான பெண்களைச் சந்தித்திருக்கிறேன். ஆகையால், இந்தக் காலத்தில் பெண்கள் செய்யும் எந்த நல்ல காரியங்களையும் என்னிடமிருந்து ஒளிப்பது கஷ்டம்.

தாம் செய்துள்ள கெட்ட காரியங்களைப் பற்றிக்கூட, சில பெண்கள் என்னிடம் சொல்லத் தயங்குவதில்லை. இப்போது என் முன்பு கூடியுள்ள இவ்வளவு பெண்களில், கெட்ட காரியம் செய்யும் பெண் ஒருவரும் இல்லை என்றே நம்புகிறேன். உங்களைக் குறுக்கு விசாரணை செய்ய எனக்கு அவகாசமில்லை. ஆகையால், உங்களைக் கேள்விகள் கேட்டு நான் அலுப்படையச் செய்யப்போவதில்லை. ஆனல், இங்குள்ள பெண்களில் கெட்ட காரியங்கள் செய்பவர்கள் யாராவது இருந்தால், அவர்களுடைய படிப்பினல் ஒரு பிரயோசனமுமில்லை என்றுதான் சொல்லுவேன்.

நீங்கள் வெறும் அழகுப் பொம்மைகளாவதற்காக உங்களுடைய பெற்றோர்கள் உங்களைப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பவில்லை. அதற்கு மாருக, நீங்கள் கருணைப் பணிபுரிபவர்களாக வேண்டுமென்று எதிர்பார்க்கிருர்கள். ஒரு குறிப்பிட்ட விதத்தில் ஆடையணிபவர்களுக்குத்தான் அந்தப் பெயர் பொருந்தும் என்று தவருக நினைக்காதீர்கள். தன்னைப்பற்றியே அதிகம் நினைக்காமல், தன்னைவிட ஏழ்மையிலும், துரதிருஷ்டத்திலும் உள்ளவர்களைப் பற்றி அதிகமாக நினைக்கும் பெண் ஒவ்வொருவருமே கருணைப் பணி புரிபவளாகிவிடுகிருள். எனக்கு அளிக்கப்பட்டுள்ள பணமுடிப்புக்கு உங்களாலியன்றதைக் கொடுத்ததன் மூலம் கருணைப் பணியாளர்களின் வேலையை நீங்கள் செய்திருக்கிறீர்கள். ஏனெனில், துரதிருஷ்டவசமாக, உங்களைவிட ஏழ்மையான நிலைமையில் உள்ளவர்களுக்காக அந்தப் பணமுடிப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது.

சொற்பப் பணம் கொடுப்பது சுலபம்தான்; ஆனல், தானே ஒரு சிறு காரியத்தைச் செய்வதுதான் இன்னும் கஷ்டமானது. நீங்கள் யாருக்காகப் பணம் கொடுக்கிறீர்களோ, அவர்களுடைய நிலைமையைப் பற்றி நீங்கள் உண்மையாகவே இரக்கப்பட்டால், நீங்கள் இன்னும் ஒரு படி மேலே சென்று, இவர்கள் உற்பத்தி செய்யும் கதர்த் துணிகளை அணிய வேண்டும். கதர்த் துணி உங்களிடம் கொண்டு வரப்படும்போது, "கதர் கொஞ்சம் மோட்டாவாக இருக்கிறதே. இதை நாங்கள் அணியமுடியாது" என்று

நீங்கள் சொன்னல், உங்களிடம் தியாக உணர்ச்சி இல்லை என்று எனக்குத் தெரிந்துவிடும்.

உயர்ந்த வகுப்பினர், தாழ்ந்த வகுப்பினர், தீண்டத்தக்கவர்கள், தீண்டத்தகாதவர்கள் என்ற வித்தியாசம் எதுவும் இங்கே இல்லாமலிருப்பது நல்ல விஷயமே. உங்களுடைய உள்ளங்களும் அதே பாதையில் போய்க்கொண்டிருந்தால், மற்ற சில பெண்களைவிட நாம் உயர்ந்தவர்கள் என்று நீங்கள் நினைக்காமலிருந்தால், அது உண்மையாகவே நல்லதுதான்.

கடவுள் உங்களுக்கு அருள் புரிவாராக.

[‘இலங்கையில் காந்திஜியுடன்’ என்ற புத்தகத்தின் 1928-ஆம் ஆண்டு பதிப்பிலிருந்து]

# 7

# மாணவிகளுக்குப் புத்திமதி

*29—11—27-இல் யாழ்ப்பாணம் ராமனுதன் பெண்கள் பள்ளியில் பேசும்போது காந்திஜி பின்வருமாறு கூறினர் :*

யாழ்ப்பாணத்திலுள்ள பல்வேறு கல்வி ஸ்தாபனங்களுக்கும் விஜயம் செய்ததைப் பூர்த்தி செய்வதுபோல் இன்று காலை நான் இங்கு வர முடிந்தது பற்றிப் பெருமகிழ்ச்சியடைகிறேன்.

இந்த தினத்தை இனி ஒரு வருடாந்தர விழாவாகக் கொண்டாடி, அன்று கதர் வேலைக்காக நிதி வசூல் செய்யப் போவதாக, உங்களுடைய வரவேற்புப் பத்திரத்தில் நீங்கள் வாக்களித்திருப்பது என் உள்ளத்தைத் தொட்டுவிட்டது. நீங்கள் இப்படிக் கூறியிருப்பது வெறும் வாய் வார்த்தை அல்ல என்றும், இதை நீங்கள் ஒரு கடமையாகக் கருதி நிறைவேற்றப் போகிறீர்கள் என்றும் எனக்குத் தெரியும். பட்டினி கிடக்கும் எந்த லட்சக்கணக்கான மக்களுக்காக நான் இந்தச் சுற்றுப் பிரயாணத்தைச் செய்கிறேனே அவர்களுக்கு, இந்தச் சகோதரிகளின் உறுதியையும் புரிந்து கொள்ளுவது சாத்தியமாக இருந்தால், அவர்கள் மனம் மகிழ்ச்சியடையும் என்பதை நான் அறிவேன். இலங்கையில் என்னிடம் பல பண முடிப்புகள் அளிக்கப்பட்டிருக்கின்றன; நீங்களும் கொடுத்திருக்கிறீர்கள். ஆனல், யாருக்காக இந்தப் பண முடிப்புகள் அளிக்கப்பட்டிருக்கின்றனவோ அவர்கள், வாயில்லாப் பூச்சிகள். இவற்றையெல்லாம் நான் விளக்கிச் சொல்ல முயற்சித்தால்கூட, அவர்களுக்குப் புரியாது. இதை நான் சொல்லக் கேட்கும்போது உங்களுக்கு வேதனையாக இருக்கும். அவர்களுடைய பரிதாபமான நிலைமையைப்பற்றி நான் என்னதான் வருணித்தாலும், அவர்களுடைய உண்மையான நிலைமையை நீங்கள் அறிந்துகொள்ள முடியாது.

இதிலிருந்து உடனடியான ஒரு கேள்வி எழுகிறது. இவர்களுக்கும், இவர்களைப் போன்ற மற்ற மக்களுக்கும் நீங்கள் என்ன செய்யப்போகிறீர்கள்? இன்னும் கொஞ்ச எளிமையுடனிருங்கள், வாழ்க்கையில் இன்னும் சற்றுக் கண்டிப்பைக் காட்டுங்கள் என்று கூறிவிடுவது சுலபமே. ஆனால், அது அந்தப் பிரச்னையுடன் விளையாடுவதாகவேதான் இருக்கும்.

இத்தகைய சிந்தனைகளே என்னை ராட்டினத்தில் கொண்டு வந்துவிட்டன. இப்போது உங்களிடம் சொல்லுவதைப் போலவே என்னிடம் நானே சொல்லிக்கொண்டேன். அவதிப்படும் இந்த மக்களுக்கும், உங்களுக்கு மிடையே உயிர்த்துடிப்புள்ள ஒரு தொடர்பை ஏற்படுத்த முடிந்தால், உங்களுக்கும், அவர்களுக்கும், உலகத்திற்கும் கொஞ்சம் நம்பிக்கை இருக்கிறது என்று சொல்லிக்கொண்டேன்.

இந்த ஸ்தாபனத்தில் உங்களுக்கு மதபோதனை அளிக்கப்படுகிறது. அது நியாயமானதே. அழகான ஒரு கோவிலும் இருக்கிறது. காலையில் எழுந்து முதலில் நீங்கள் பிரார்த்தனை செய்கிறீர்களென்று உங்களுடைய கால அட்டவணையிலிருந்து தெரிகிறது. இதெல்லாம் உள்ளத்திற்கு உயர்வளிக்கும் நல்ல காரியங்களே. ஆனால், அன்றாடம் ஏதாவது ஒரு உருவான காரியமாக மாற்றப்படாவிட்டால், இந்தத் தெய்வ வழிபாடு அழகான ஒரு சடங்கைத் தவிர வேறொன்றுமில்லை என்று எளிதில் ஆகிவிடக்கூடும். ஆகையால், அந்த தெய்வ வழிபாட்டை தொடர்ந்து ராட்டினத்தை மேற்கொண்டு, தினசரி அரை மணிநேரம் அதில் செலவிட வேண்டும். நான் குறிப்பிட்ட அந்த மக்களைப்பற்றி நினைத்து, "அவர்களுக்காக நான் நூற்கிறேன்'' என்று கடவுளின் பெயரால் சொல்ல வேண்டும். இதை நீங்கள் மனப்பூர்வமாகச் செய்தால், இந்த உண்மையான சேவையினால் உங்களுக்குப் பெருமையும் பணிவும் கிடைக்கிறது என்ற உணர்வுடன் செய்தால், ஆடம்பரத்திற்காகவல்லாமல், உங்களுடைய அங்கங்களை மூடிக்கொள்ளுவதற்காகவே நீங்கள் ஆடைகளணிந்தால், கதர் அணிவதிலோ, உங்களுக்கும் அந்த மக்களுக்கு மிடையே அந்தப் பிணைப்பை ஏற்படுத்திக் கொள்ளுவதிலோ நீங்கள் நிச்சயமாகக் கொஞ்சமும் தயங்கமாட்டீர்கள்.

இந்த ஸ்தாபனத்திலுள்ள பெண்களுக்கு நான் சொல்ல விரும்புவது இத்துடன் முடிந்து விடவில்லை.

சர் ராமனுதன் உங்களுக்கு அளித்துள்ள, ஸ்ரீமதி ராமனுதனும், அவருடைய தலைமையில் வேலை செய்யும் ஆசிரியர்களும் அளித்துக்கொண்டிருக்கும் பரிவுக்கு நீங்கள் தகுதியுள்ளவர்களாக இருக்க வேண்டுமானால், நீங்கள் இன்னும் எவ்வளவோ செய்ய வேண்டும். ஏற்கனவே இந்தப் பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருந்த பெண்கள் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள் என்பதைப்பற்றி, மன்னிக்கத்தக்க பெருமையுடன், உங்களுடைய சஞ்சிகையில் பிரஸ்தாபிக்கப்பட்டிருப்பதைப்

பார்த்தேன். இன்னார் இன்னாரை மணந்து கொண்டாள் என்ற தோரணையில் நாலைந்து குறிப்புகளைப் பார்த்தேன். 25 வயது ஆன, அல்லது 22 வயதுகூட ஆன ஒரு பெண் மணந்துகொள்ளு வதில் ஒன்றும் தவறில்லை. ஆனால், முற்றிலும் சேவை செய்வதற் காகவே எந்தப் பெண்ணும் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட தாக இந்தக் குறிப்புகளில் நான் காணவில்லை. ஆகையால், பெங் களூர் மகாராஜா பெண்கள் கல்லூரி மாணவிகளுக்கு நான் சொன்னதையே உங்களுக்கும் சொல்ல உத்தேசித்திருக்கிறேன். அதாவது, நீங்களெல்லோரும் இத்தகைய ஸ்தாபனங்களிலிருந்து வெளியே வந்தவுடன் வாழ்க்கையிலிருந்தே மறைந்து, வெறும் பொம்மைகளாகிவிடப் போகிறீர்களென்றால், கல்வியாளர்களும் தரும ஸ்தாபனங்களும் எடுத்துக்கொள்ளும் பெரும் முயற்சி களுக்கு அது உரிய பிரதிபலனாகாது.

பள்ளிக்கூடங்களிலிருந்தோ, கல்லூரிகளிலிருந்தோ வெளியே வந்தவுடன். பெரும்பாலான பெண்கள் பொது வாழ்விலிருந்தே மறைந்துவிடுகிறார்கள். இந்த ஸ்தாபனத்திலுள்ள நீங்கள் அப்படி செய்ய நியாயமில்லை. மிஸ். எமெரியின் உதாரணமும், இந்த ஸ்தாபனத்தை மேற்பார்வையிட்டு வந்திருக்கும் மற்றவர் களின் உதாரணங்களும் உங்கள் கண்முன் இருக்கின்றன. அவர்கள் மணமாகாத கன்னிகளாகவே இருந்திருக்கிறார்கள் என்று நான் கூறுவது தவறில்லை என்றே நினைக்கிறேன்.

ஒவ்வொரு பெண்ணும், ஒவ்வொரு இந்தியப் பெண்ணும், மணந்து கொள்ளுவதற்காகவே பிறக்கவில்லை. ஒரு ஆணுக்குப் பணி புரிவதற்குப் பதிலாக, சேவைக்காகவே தம்மை அர்ப்பணித் துக் கொள்ளும் பல பெண்களை நான் காட்டமுடியும். பார்வதி யையும், சீதையையும் போல் உன்னதமான பிறவிகளை ஹிந்துப் பெண்கள் மீண்டும் சிருஷ்டிக்க வேண்டிய காலம் வந்துவிட்டது என்றே நினைக்கிறேன்.

நீங்கள் சைவ சமயத்தைச் சேர்ந்தவர்களென்று கூறுகிறீர் கள். பார்வதி என்ன செய்தாள் என்பதை நீங்கள் அறிவீர்கள். கணவனைப் பெறுவதற்காக அவள் பணம் செலவிடவில்லை. தான் விலை கொடுத்து வாங்கப்படுவதையும் அவள் அனுமதிக்க வில்லை. ஏழு ஸதிகளில் ஒருவளாக இன்று பார்வதி ஹிந்து வானில் ஒளி வீசுகிறாள். இது, ஒரு கல்வி ஸ்தாபனத்தில் அவள் பெற்ற பட்டப்படிப்பினால் அல்ல. கேட்டறியாத அவளுடைய தவ மகிமையினால் அந்தப் பதவியை எய்தினாள்.

வெறுக்கத்தக்க அந்த வரதட்சிணைப் பழக்கம் இங்கிருப்ப தாக அறிகிறேன். இதனால் இளம் பெண்கள், தகுதியான, கண வர்களைப் பெறுவது மிகவும் கஷ்டமாகிறது. உங்களைப் போன்ற வயது வந்த பெண்கள், எல்லாச் சபலங்களையும் எதிர்த்து நிற்க வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிறார்கள். நீங்கள் இந்தக் கொடிய பழக்கங்களை எதிர்த்து நின்றால், உங்களில் சிலர் ஆயுள்

பூராவுமாவது, அல்லது பல வருடங்களுக்காவது கன்னிகளாகவே தான் இருக்க வேண்டியிருக்கும். பின்னர், வாழ்க்கைக்கு ஒரு துணைவன் வேண்டுமென்று உங்களுக்குத் தோன்றும் போது, பணம், புகழ், அழகு உள்ள ஒருவன் வேண்டும் என்று தேடிக் கொண்டிருக்க மாட்டீர்கள். பார்வதியைப் போல், ஈடில்லாத நற்குணங்கள் பொருந்திய ஒருவனையே தேடுவீர்கள். சிவனைப் பற்றி நாரதர் பார்வதியிடம் எப்படி வருணித்தாரென்பதை நீங்கள் அறிந்திருப்பீர்கள். உடலெல்லாம் சாம்பல் பூசிய ஓட்டாண்டி, அழகில்லாதவன், பிரம்மசாரி என்றெல்லாம் நாரதர் வருணித்தார். "ஆம், அவனே என் கணவனுயிருப்பான்" என்று பார்வதி பதிலளித்தாள். பார்வதியைப் போல் ஆயிரக்கணக்கான வருடங்கள் தவம் செய்யாவிட்டாலும், தவம் செய்வதுடன் உங்களில் சிலர் திருப்தி யடையத் தயாராயிருந்தாலொழிய, சிவனைப் போன்ற பலர் உங்களுக்குக் கிடைக்கமாட்டார்கள். சாதாரண மானிடர்களாகிய நாம், அப்படி யெல்லாம் செய்ய முடியாது.

இந்த நிபந்தனைகளை நீங்கள் ஒப்புக்கொண்டால், பொம்மைகளின் ராஜ்யத்தில் மறைந்துவிட நீங்கள் மறுத்துவிடுவீர்கள். அதற்குப் பதிலாக, பார்வதி, தமயந்தி, சீதை, சாவித்திரியைப் போன்ற ஸதிகளாயிருக்க ஆசைப்படுவீர்கள். அப்போதுதான் இத்தகைய ஒரு ஸ்தாபனத்திற்கு நீங்கள் தகுதியுடையவர்களாவீர்கள் என்பதே என்னுடைய தாழ்மையான அபிப்பிராயமாகும்.

கடவுள் இந்த ஆசைக்கனலை உங்களுக்கு மூட்டட்டும். உங்களுக்கு அந்த ஆசி கிடைத்தால், உங்கள் ஆசை நிறைவேறுவதற்கும் அவர் அருள் புரிவார்.

['இலங்கையில் காந்திஜியுடன்' என்ற நூலிலிருந்து எடுத்தது.]

## 8

# பெண்களிடையே மனம்விட்டு நிகழ்த்திய உரை

*[காசியில் நடைபெற்ற பெண்கள் கூட்டத்தில் காந்திஜி நிகழ்த்திய உரைதான் ஹரிஜன் யாத்திரையில் அவருடைய கடைசி உரை. தீண்டாமை பற்றித் தம்முடைய நிலை என்ன என்பதை காந்திஜி பின் கண்டவாறு சுருக்கமாக விளக்கிக் கூறினர்:]*

புசித்தல், அருந்துதல் ஆகிய விஷயங்களில் கட்டுப்பாடுகள்; உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற உணர்ச்சியைப் பின்பற்றுதல் ஆகியவைதான் மதம் என்று இன்று நாம் நினைக்க

ஆரம்பித்திருப்பது பரிதாபமே. இதைவிடப் பெரிய அறியாமை வேறு எதுவும் இருக்க முடியாது என்பதை நான் உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். பிறப்பும், சில சம்பிரதாயங்களைப் பின் பற்றுவதும் ஒருவருடைய உயர்வுக்கோ. தாழ்வுக்கோ அளவு கோலாகிவிடாது. குணம் ஒன்றுதான் இதில் முக்கியமானது. உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற சீட்டுகளை ஒட்டிக் கடவுள் மனிதர்களைச் சிருஷ்டிக்கவில்லை. பிறப்பு காரணமாக ஒருவன் தாழ்ந்தவன் அல்லது தீண்டத்தகாதவன் என்று ஒதுக்கும் எந்தச் சாஸ்திரமும் நமது மதிப்பைப் பெற முடியாது. இது கடவுளையும், கடவுளின் சொரூபமான சத்தியத்தையும் மறுப்ப தாகும். சத்தியம், நியாயம், நீதி ஆகியவைகளின் சொரூபம் தான் கடவுள். இத்தகைய ஒரு கடவுள், நமது பெரும் ஜனத் தொகையில் ஐந்தில் ஒரு பகுதியைத் தீண்டத்தகாதவர்கள் என்று கருதும் ஒரு மதத்தையோ, பழக்கத்தையோ அனுமதித் திருக்கவே முடியாது. ஆகையால், இந்த அக்கிரமமான எண் ணத்தை நீங்கள் விட்டொழிக்க வேண்டுமென்று விரும்புகிறேன். அசுத்தமான வேலையுடன் சம்பந்தப்பட்ட தீண்டாமை இருக்க வேண்டியதே. இது நம்மில் ஒவ்வொருவருக்குமே உண்டு. ஆனால், அசுத்தத்தை நாம் அலம்பிக் கொண்டவுடன் சுத்தமான வர்களாகிவிடுகிறோம். ஆனால், எந்த வேலையும் அல்லது நடத் தையும் ஒரு ஆணையோ, பெண்ணையோ என்றென்றைக்கும் தீண் டத் தகாதவனாக்க முடியாது.

நாமெல்லோருமே ஒரு அளவுக்குப் பாவம் செய்பவர்களே. யார் கடவுளைச் சரணடைகிறானோ, யார் அவனுடைய திருநாமத் தைச் சொல்லுகிறானோ, அவன் பாவத்திலிருந்து விடுபட்டுவிடு கிறான் என்று நம்முடைய சமய நூல்களாகிய கீதை, பாகவதம், துளஸி ராமாயணம் ஆகிய ஒவ்வொன்றும் சந்தேகத்திற்கிடமில் லாமல் கூறுகின்றன. இந்த நிபந்தனை, மனித வர்க்கம் பூரா வுக்குமே பொதுவானது.

இந்த விஷயத்தில் நீங்கள் மற்றொரு எளிய சோதனையை யும் செய்து பார்க்க வேண்டுமென்று விரும்புகிறேன். ஒவ்வொரு இனத்திற்கும், மனித இனமாயிருந்தாலும் வேறு இனங்களா யிருந்தாலும், சில பிரத்தியேக அடையாளங்களிருக்கின்றன. இதனால் இவன் மனிதன், அது மிருகம், அது நாய், இது பசு என்று நாம் பிரித்துச் சொல்ல முடிகிறது. ஆனால், தீண்டாதார் என்று சொல்லப்படுகிறவர்கள், தீண்டத்தகாதவர்கள் என்று பிரித்துக் காட்டும்படியாக அவர்களிடம் தனியான அடையாளக் குறிகள் எவையாவது இருக்கின்றனவா? நம் ஒவ்வொருவரை யும் போலவே அவர்களும் மனிதப் பிறவிகளே. தாழ்ந்த இனத் தைச் சேர்ந்தவைகளிடம் கூட, தீண்டத்தகாத அடையாளக் குறி இருப்பதாக நாம் கருதவில்லை. அப்படியிருக்கும் போது, இந்த மிருகத்தனமான அநீதி எங்கிருந்து, எதற்காக வந்தது? இது மதமல்ல; மதத்திற்கு முற்றிலும் முரணான ஒன்றாகும். இந்தப்

பாவம் இன்னும் உங்களிடம் இருந்தால் அதை விட்டொழித்து விடவேண்டு மென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

பல நூற்ருண்டுகளாக இருந்துவரும் இந்தப் பாவத்தைப் போக்கிக் கொள்ள வேண்டுமானல், ஹரிஜனங்களிடம் அன்பு கொள்ள வேண்டும். அவர்களிருக்கும் இடங்களுக்குச் சென்று உங்கள் குழந்தைகளை அணைத்துக் கொள்ளுவதைப் போலவே அந்தக் குழந்தைகளையும் அணைத்துக் கொள்ள வேண்டும். அவர்களுடைய நலன்களில் அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டும். அவர்களுக்குப் போதிய உணவு கிடைக்கிறதா, சுத்தமான குடி தண்ணீர் கிடைக்கிறதா, நம்முடைய உரிமை என்று நாம் அனுபவிக்கும் சுத்தமான காற்றும் வெளிச்சமும் அவர்களுக்கும் கிடைக்கின்றனவா என்று விசாரித்துத் தெரிந்துகொள்ள வேண்டும். அந்தப் பாவத்தைப் போக்கிக் கொள்ளுவதற்கு இது ஒன்றுதான் வழியாகும். மற்ரெரு வழியும் இருக்கிறது. நீங்கள் நூற்பு யக்ஞத்தை ஆரம்பிக்க வேண்டும். கதரையே அணிவதாகப் பிரதிக்ஞை எடுத்துக்கொள்ள வேண்டும். ஏனெனில், லட்சக்கணக்கான ஒடுக்கப்பட்ட மக்களுக்கு அது ஆதரவளிக்கிறது. நீங்கள் ஒரு அளவுக்கு அவர்களுடன் உங்களை ஐக்கியப்படுத்திக் கொள்ளுவதற்கு நூற்பு யக்ஞம் உங்களுக்கு உதவி செய்யும். நீங்கள் அணியும் ஒவ்வொரு கெஜம் கதரும், ஹரிஜனங்களுக்கும், மற்ற ஏழைகளுக்கும் சில அணுக்கள் கொடுப்பதாகும். கடைசியாக, ஹரிஜனங்களுடைய கஷ்டங்களைப் போக்குவதைத் தவிர வேறெந்த நோக்கமுமில்லாத ஹரிஜன நிதிக்கு உங்களால் முடிந்ததைக் கொடுக்க வேண்டும்.

—'ஹரிஜன்' – 31—8—1934

# 9

# சமூகத்தில் பெண்கள் அந்தஸ்து

**கேள்வி :** இந்தியப் பெண்களிடையே ராஜீய, பிரஜா உரிமைகள் பற்றிய விழிப்பு ஏற்பட்டிருப்பதால், அவர்களுடைய பரம்பரையான குடும்பக் கடமைகளுக்கும், சமூகத்திற்கு அவர்கள் செய்ய வேண்டிய கடமைகளுக்குமிடையே முரண்பாடு ஏற்பட்டிருக்கிறது. ஒரு பெண், பொது வேலைகளில் ஈடுபட்டால், தன்னுடைய குழந்தைகளையோ, குடும்பத்தையோ புறக்கணிக்கும்படியாக இருக்கலாம். இந்த தருமசங்கடத்திற்கு என்ன வழி?

**பதில் :** அத்தியாவசியமான குடும்பக் கடமைகளைச் செய்வதை விட, தன்னுடைய எஜமானனின் சுகானுபவத் தேவைகளைத் திருப்தி செய்வதிலும், தன்னுடைய ஆடம்பரத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளுவதிலுமே பெண்

களின் நேரம் செலவாகிவிடுகிறது. பெண்கள் குடும்பத்தில் இப்படி உழலும் அடிமைத்தனம், நமது காட்டுமிராண்டித் தனத்தின் சின்னம் என்றே எனக்குத் தோன்றுகிறது. அடுக்களைகளில் அடிமைகளாய் உழைப்பது காட்டுமிராண்டித்தனத்தின் சின்னம்தான் என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். இந்தக் கொடுமையிலிருந்து நமது பெண்களை விடுதலை செய்யவேண்டிய காலம் வந்துவிட்டது. குடும்ப வேலை என்பது பெண்களின் நேரம் பூராவையுமே விழுங்கி விடுவதாய் இருக்கக் கூடாது.

—'ஹரிஜன்' - 8-6-1940

## 10

# மணமான நிலைமை

ஒரு சகோதரி நல்ல சமூக சேவகி. தேசப் பணியை இன்னும் நன்ருகச் செய்ய வேண்டும் என்பதற்காக மணந்து கொள்ளாமலேயே இருக்க வேண்டுமென்று ஆசைப்பட்டாள். ஆனல், அவளுடைய கனவுக் கணவன் கிடைத்துவிட்டதால், சமீபத்தில் மணந்துகொண்டு விட்டாள். ஆனல், இதன்மூலம் தான் தவறு செய்துவிட்டதாகவும், தனக்குத் தானே பணித்துக் கொண்ட உயர்ந்த லட்சியத்திலிருந்து இறங்கி வந்துவிட்டதாகவும் இப்பொழுது நினைக்கிருள். இது தவருன எண்ணம் என்று அவள் மனத்தைத் திருப்ப நான் முயற்சி செய்திருக்கிறேன். சேவை செய்வதற்காகப் பெண்கள் மணந்து கொள்ளாமலிருப்பது என்பது மிகவும் நல்லதுதான். ஆனல், லட்சத்தில் ஒருவர் தான் அப்படிச் செய்ய முடிகிறது. மணந்து கொள்ளுவதென்பது, வாழ்க்கையில் இயற்கையான ஒன்ருகும். அதை எந்த விதத்திலும் தரக் குறைவானது என்று நினைப்பது முற்றிலும் தவருகும். எந்த ஒரு காரியத்தையும் தரக் குறைவானதென்று ஒருவர் நினைக்க ஆரம்பித்துவிட்டால், பிறகு எவ்வளவு முயற்சி செய்தாலும் அவர் தன்னை உயர்த்திக்கொள்ளுவது கஷ்டமாகிவிடுகிறது. திருமணத்தை ஒரு புனிதமான சடங்காக நினைப்பதே லட்சியமாக இருக்க வேண்டும்; அதன்மூலம், மண வாழ்வில் தன்னடக்கத்தைப் பின்பற்ற வேண்டும். ஹிந்து தருமத்திலுள்ள நான்கு ஆச்சிரமங்களில் திருமணமும் ஒன்று. பார்க்கப்போனல், மற்ற மூன்றும் அதைத்தான் அஸ்திவாரமாகக் கொண்டிருக்கின்றன. ஆனல், இன்று துரதிருஷ்டவசமாகத் திருமணம் என்பது வெறும் சரீர இணைப்பாகவே கருதப்படும் நிலைமை ஏற்பட்டுவிட்டது. மற்ற மூன்று ஆச்சிரமங்களும் இல்லை என்றே சொல்லிவிடலாம்.

ஆகையால், மேலே குறிப்பிட்ட சகோதரியும், அவரைப் போல் நினைக்கும் சகோதரிகளும், திருமணத்தைப் பற்றிக் குறை வாய் நினைக்கக்கூடாது. அதற்கு உரிய இடத்தைக் கொடுத்து அதன் புனிதத்தையும் அதற்கு அளிக்க வேண்டும். அவசியமான புலனடக்கத்தை அவர்கள் அனுஷ்டித்தால், தம்மிடம் இன்னும் அதிகமான தொண்டு உணர்ச்சி வளர்ச்சி பெறுவதை அவர்கள் அறிவார்கள். சேவை செய்ய வேண்டுமென்ற விருப்பமுள்ளவள், தன்னைப் போன்ற மனப்பான்மையுள்ள ஒரு கணவனைத்தான் தேர்ந்தெடுத்துக் கொள்ளுவாள். அவர்கள் இருவரும் சேர்ந்து வேலை செய்வது, தேசத்தின் லாபமாக இருக்கும். பொதுவாக நமது பெண்களுக்குத் தாய்மையின் கடமைகள் கற்றுக் கொடுக்கப்படாதது ஒரு பரிதாபமே. ஆனால், மணவாழ்வு என்பது மதப்பூர்வமான ஒரு கடமையென்றால், தாய்மையும் அப்படித்தான் இருக்க வேண்டும். ஒரு லட்சியத் தாயாக இருப்பதென்பது சுலபமான காரியமல்ல. முழுப் பொறுப்பு உணர்ச்சியுடன்தான் குழந்தைகளைப் பெறவேண்டும். தான் கர்ப்பம் தரிக்கும் காலத்திலிருந்து குழந்தையை ஈன்றெடுக்கும் வரையில், தன்னுடைய கடமைகள் என்னென்ன என்பதை அறிந்திருக்க வேண்டும். தேகாரோக்கியமுள்ள, புத்திசாலிகளான நல்ல குழந்தைகளைத் தேசத்திற்கு அளிக்கும் தாய், தேசத்திற்கு உண்மையாக சேவை செய்தவளாகிறாள். குழந்தைகள் வளர்ந்த பிறகு அவர்களும் சேவைக்குத் தயாராயிருப்பார்கள். தொண்டு புரிய வேண்டுமென்ற உண்மையான ஆர்வமுள்ளவர்கள், வாழ்க்கையில் எந்த நிலைமையிலிருந்தாலும், எப்போதும் தொண்டு புரியத்தான் செய்வார்கள். தொண்டு புரிவதற்குக் குறுக்கே நிற்கும் ஒரு வாழ்க்கை முறையை அவர்கள் மேற்கொள்ளவே மாட்டார்கள்.

—சேவா கிராமம் – 3—3—42 —'ஹரிஜன்' - 22—3—1942

# 11

# ஜம்னுலால்ஜியும் பெண்களும்

[வார்தாவில் உள்ள மஹிளா ஆசிரமத்தில் நிகழ்த்திய ஒரு உரை.]

குறிப்பாக, மஹிளா ஆசிரமத்தைச் சேர்ந்தவர்கள் அவருக்கு மிகவும் கடமைப்பட்டவர்கள். அவர்கள் எப்படி அதற்குக் கைம்மாறு செய்யப்போகிறார்கள்? அர்த்தமில்லாத வெறும் கண்ணீர் விடுதல் கூடாது. சேவையைத் தான் அவர் சிறந்த கைம்மாறாகக் கருதுபவர். ஆன்மாவிற்குச் சாவே கிடையாது. அழிவது உடல்தான். ஆனால், ஜம்னுலால்ஜியைப் போல், எல்லோரும் மனிதர்களின் உள்ளங்களில் என்றென்றைக்கும் இடம் பெற்றுவிட முடியாது. வார்தாவை ஒரு லட்சிய நகரமாக்குவ

தற்கு மஹிளா ஆசிரமத்தைச் சேர்ந்தவர்களும், மாணவிகளும் தம்மாலியன்றதையெல்லாம் செய்யவேண்டும். ஊரைச் சுத்தம் செய்வதற்கும், எழுத்தறிவின்மையை அகற்றுவதற்கும், கதரைப் பரப்புவதற்கும், தீண்டாமையை ஒழிப்பதற்கும், பெண்களுக்குச் சேவை செய்வதற்கும் நீங்கள் உதவவேண்டும். நீங்கள் யாவரும் கோசேவா சங்கத்தில் உறுப்பினர்களாகச் சேரலாம்; மற்றவர்களைச் சேர்ப்பதற்கும் உதவி புரியலாம். இது கண்டிப்பான பிரதிக்ஞை யல்ல. பசுவினிடம் உங்களுக்கு அன்பிருந்தால் அந்தப் பிரதிக்ஞையில் கையெழுத்திடுவீர்கள். கடைசியாக, உருது இருக்கிறது. அதுவும் முக்கியமானதே. நீங்கள் ஒவ்வொருவரும் உருது லிபியைக் கற்றுக்கொள்ள ஆரம்பிக்கவேண்டும். ஹிந்தி, உருது இரண்டும் தெரிந்தவர்கள்தான் நாளடைவில் என்னுடைய கனவாகிய அந்த அற்புதமான ஹிந்துஸ்தானிக் கலப்பைச் சிருஷ்டிக்க முடியும். பின்னர் அதுவே தேசீய மொழியாக இருக்கும்.

பெண் சேவகிகளைத் தயார் செய்வதற்காக ஜம்னுலால்ஜி மஹிளா மண்டலத்தை ஸ்தாபித்தார். அவருடைய சேவை உணர்ச்சியை நீங்களும் மேற்கொண்டு, வாழ்க்கை என்ற விரிவான கடலுக்குள் நீங்கள் நுழையும்போது அதைக் கவசமாகக் கொள்ளுவதே, நீங்கள் செய்யக்கூடிய குறைந்தபட்ச காரியமாகும். உங்களில் பெரும்பாலோர் மணந்துகொண்டு விடுவீர்கள். இது இயற்கையானதே. ஜம்னுலால்ஜி எப்போதும் ஏதாவது கல்யாணங்களுக்கு ஏற்பாடு செய்துகொண்டே இருப்பார். இதனால் அவரைத் திருமணப் பதிவாளர் என்றுகூட நான் கேலி செய்வதுண்டு. தம்மைப்போல் அவ்வளவு அதிருஷ்டசாலிகளாயில்லாத சகோதரிகளுக்குச் சேவை செய்வதற்காக நம் பெண்களில் பலர் மணந்துகொள்ளாமலேயே இருக்க வேண்டுமென்று என்னைப் போலவே அவரும்தான் விரும்புகிறார். ஆனால், அத்தகைய பெண்கள் அரிதாகவே இருக்கிறார்கள். அது எப்படியிருந்தாலும், நீங்கள் சேவை செய்யவேண்டுமென்றே நான் எதிர்பார்க்கிறேன். நீங்கள் மணந்துகொண்ட பிறகு, இருவராகி விடுகிறீர்கள். ஆகையால், நாலு மடங்கு சேவை செய்ய வேண்டும். மண வாழ்க்கையை, சரீர இச்சையைத் திருப்தி செய்வதற்காக அல்லாமல் உண்மையாக நடத்தினால், பிரம்மசரியத்தைவிட அது கடினமானதாக இருக்கும்.

ஜம்னுலால்ஜி அபூர்வமான ஒரு மனிதர். சேவை செய்வதற்காகவே, பேதமின்றி எல்லோருக்கும் சேவை செய்வதற்காகவே அவர் பிறந்தார். அவர் செய்த எதையும் அரை மனத்துடன் செய்ததில்லை. அவருடைய சுறுசுறுப்பு வியப்பளிப்பதாயிருக்கும். தமக்குப் பால் அளித்த பசுவைப் பராமரிக்கும் வேலையைக்கூட அவர் ஆரம்பித்திருந்தார். எந்தக் காரியத்தையும் அவர் அவ்வளவு முழுமையுடன் செய்பவர். நாம் விரும்பியிருக்கக் கூடியதைப் போலவே அவர் சேவை செய்து

கொண்டே உயிர் நீத்தார். நாமெல்லோரும், எல்லா விஷயங்களிலுமே அவரைப் பின்பற்ற முடியாது. ஆயினும், உங்களுக்காக எவ்வளவோ செய்துள்ள ஒருவரிடம் உங்களுக்கு உண்மையான அன்பும், பற்றுதலும் இருந்தால், அவருடைய வாழ்க்கையிலிருந்து நீங்கள் ஒரு பாடம் கற்றுக்கொள்ள வேண்டும். கஷ்டப்பட்டு உழையுங்கள்; பெண்மையைப் பற்றிய அவருடைய உயர்ந்த லட்சியங்கள் நிறைவேறுவதற்கு, உங்களைப் பூராவாக அர்ப்பணித்துக் கொள்ளுங்கள்.

—'ஹரிஜன்' - 15—3—1942

## 12

# இந்திரா நேருவுக்கு திருமண நிச்சயம்

இந்திரா நேரு, பிரோஸ் காந்தியை மணந்து கொள்ளுவதென்று நிச்சயிக்கப் பட்டிருப்பதைப் பற்றி கோபத்துடன் திட்டி பலர் எனக்கு எழுதியிருக்கிறார்கள்; சிலர் வாதம் செய்யவும் முயற்சித்திருக்கிறார்கள். ஒரு மனிதன் என்ற முறையில், பிரோஸ் காந்தியைப் பற்றி ஒருவராவது விரோதமாக ஒரு வார்த்தையும் சொல்லவில்லை. அவர் பார்ஸி வகுப்பைச் சேர்ந்தவர் என்பதே, அவர்களுடைய மதிப்பீட்டின்படி, அவர் செய்த குற்றமாகும். மணந்து கொள்ளுவதற்காக இருவரில் யாரும் தம் மதத்தை மாற்றிக் கொள்ளுவதை நான் எப்போதும் பலமாக எதிர்த்து வந்திருக்கிறேன்; இப்போதும் எதிர்க்கிறேன். மதம் என்பது, நினைத்த போது கழற்றி எறிந்துவிடக் கூடிய ஒரு ஆடையல்ல. பிரஸ்தாப திருமண ஏற்பாட்டில் மத மாற்றம் என்ற கேள்வியே எழவில்லை. பிரோஸ் காந்தி, பல வருடங்களாக நேரு குடும்பத்துடன் இருந்து வந்திருக்கிறார். கமலா நேரு நோய்வாய்ப்பட்டிருந்தபோது, அவர் பணிவிடை செய்திருக்கிறார், கமலா நேருவுக்கு அவர் ஒரு மகனைப் போன்றவர். ஐரோப்பாவில் இந்திரா நோயுற்றிருந்த போது அவளுக்கு அவர் பெரும் உதவியாக இருந்திருக்கிறார். அவர்களிடையே இயற்கையான ஒரு அன்னியோன்னியம் வளர்ந்தது. இந்த நட்பு முற்றிலும் கண்ணியமான தன்மை வாய்ந்ததாகும். இது பரஸ்பரக் கவர்ச்சியாக முதிர்ச்சி பெற்றிருக்கிறது. ஆனால், ஜவாஹர்லால் நேருவின் சம்மதமும், ஆசிகளும் இல்லாமல் இருவரும் மணந்து கொள்ளமாட்டார்கள். இந்தக் கவர்ச்சியின் அஸ்திவாரம் பலமாயிருக்கிறது என்று அவர் திருப்தியடைந்த பிறகுதான், சம்மதம் கொடுக்கப்பட்டது. நேரு குடும்பத்தினருடன் எனக்கு உள்ள தொடர்பைப் பற்றிப் பொது ஜனங்களுக்குத் தெரியும். அவ்விருவருடனும் நான் பேசினேன். இந்தத் திருமண நிச்சயத்திற்குச் சம்மதம் கொடுக்க மறுப்பது ஒரு கொடுமையாக இருந்திருக்கும். காலம் போகப்

போக இம்மாதிரி திருமணங்கள் பெருகத்தான் செய்யும். இத்தகைய திருமணங்களால் சமூகத்திற்கு நன்மைதான். இப்போது பரஸ்பர சகிப்புத்தன்மைக் கட்டத்திற்குக் கூட நாம் வரவில்லை. ஆனல், சகிப்புத் தன்மை மதங்களிடம் பரஸ்பர மதிப்பாக வளர்ச்சியடையும் போது, இம்மாதிரி மணங்கள் வரவேற்கப்படும். எதிர்காலத்தில் சமூகம் திருத்தியமைக்கப்படும் போது, நமது மதிப்பீடுகள் மாறிவிட்டிருக்கும். செல்வம், பட்டம் அல்லது பதவி ஒன்றுதான் சீலத்திற்கு அளவுகோல் என்பது மாறி, சீலம்தான் முக்கியம் என்று ஆகிவிடும். அந்தக் காலத்தில் குறுகிய தன்மை வாய்ந்ததும், காரண அறிவைத் திருப்தி செய்ய முடியாததுமான எந்த மதமும் பிழைத்து வாழ முடியாது. என்னுடைய கற்பனையிலுள்ள ஹிந்து தருமம், குறுகிய தன்மை வாய்ந்ததல்ல. காலத்தில் எவ்வளவு தொன்மையானதோ அதைப் போல் வளர்ச்சியின்மூலம் மாறுதலடையும் தன்மை வாய்ந்தது. ஸோராஸ்டர், மோஸஸ், ஏசு கிறிஸ்து, முகம்மது நபிகள், நானக், மற்றும் பல தீர்க்கதரிசிகளின் உபதேசங்கள் அதில் அடங்கியிருக்கும். அது பின்வருமாறு வியாக்கியானம் செய்யப்படுகிறது :

'விவேகிகளும், நல்லவர்களும், கோபதாபங்கள், துவேஷம் இவற்றிலிருந்து நிரந்தரமாக விடுதலை பெற்றவர்களும் பின்பற்றக் கூடியதாகவும், உள்ளங்களுக்குச் சாந்தி அளிக்கக் கூடியதாகவும் இருப்பதுதான் (உண்மையான) மதம்.'

அது அப்படி இல்லையென்ருல், அழிந்துவிடும். எனக்குக் கடிதம் எழுதியவர்களுக்கு நான் பதில் போடாதது பற்றி அவர்கள் என்னை மன்னிக்க வேண்டும். தம்முடைய கோபத்தைக் களைந்துவிட்டு, இந்தத் திருமணத்திற்கு நல்லாசி கூறுமாறு அவர்களை அழைக்கிறேன். அறியாமை, சகிப்பின்மை, வெறுப்பு ஆகியவைகளையே அவர்களுடைய கடிதங்கள் காட்டுகின்றன. ஒரு மாதிரியான தீண்டாமையும் அவற்றில் காணப்படுகின்றது. இது அபாயகரமானது. ஏனெனில், அதைத் தீண்டாமை என்று சுலபமாகப் பிரித்துச் சொல்லிவிட முடியாது.

—'ஹரிஜன்' – 8—3—1942

## 13

# குழந்தைகளைப் பற்றி

**கேள்வி :** சமூகம் முன்னேறும்போது பல்வேறு சாதிகளைச் சேர்ந்தவர்கள் ஒருவரை யொருவர் மணந்து கொள்ளுவது அதிகமாகுமென்பதையும், அதை வரவேற்க வேண்டுமென்பதையும் நான் முற்றிலும் ஒப்புக்கொள்ளுகிறேன். திருமணம்

செய்து கொள்ளுபவர்கள் மதம் மாறக் கூடாதென்று நீங்கள் சொல்லுவதும் சரியே. ஆனல், குழந்தைகளைப் பற்றி என்ன சொல்லுகிறீர்கள்! அவர்களை எந்த மதத்தில் வளர்க்க வேண்டும்? தகப்பனரின் மதத்திலா, அல்லது தாயாரின் மதத்திலா?

பதில்: இம்மாதிரி திருமணங்கள் நடக்கும் போது, இருவரும் அவரவர்களுடைய மதத்திற்கு மதிப்பு வைத்திருக்கிறார்களென்றே கருத வேண்டும். அவர்கள் மதப் பற்றுள்ளவர்களாயிருந்தால், குழந்தைகள் தம்மையறியாமலேயே தமக்கு ஏற்றது என்று கருதுவதை மேற்கொண்டுவிடும். பெற்றோர்களின் தலையீடோ, ஆட்சேபணையோ இல்லாமல் தமக்கிஷ்டப்பட்ட மதத்தைக் குழந்தைகள் பின்பற்றும். பெற்றோர்களுக்கு மதத்தில் அவ்வளவாக அக்கறையில்லை யென்றால், குழந்தைகளும் ஒருக்கால் அப்படித்தான் இருப்பார்கள். எப்படியாவது அவர்கள் பார்த்துக் கொள்ளுவார்கள். இம்மாதிரி மணங்களில் இப்படி நடப்பதைத்தான் நான் பார்த்திருக்கிறேன். குழந்தைகளை எந்த நம்பிக்கையில் வளர்ப்பது என்று பெற்றோர்களிடையே தீவிரமான அபிப்பிராய பேதம் ஏற்படும் போதுதான் சங்கடம் முளைக்கிறது.

—'ஹரிஜன்' - 29—3—1942

# 14

# பெண்களின் பொருளாதார சுதந்திரம்

கேள்வி: மணமான பெண்களுக்குச் சொத்துரிமை அளிக்கும் விதத்தில் சட்டத்தைத் திருத்துவதைச் சிலர் ஆட்சேபிக்கிறார்கள். பெண்கள், பொருளாதாரத் துறையில் சுதந்திரம் பெற்றுவிட்டால், பெண்களிடையே ஒழுக்கக்கேடு பரவி விடுமென்றும், குடும்ப வாழ்வு சீரழிந்து விடுமென்றும் அவர்கள் காரணம் கூறுகிறார்கள். இந்த விஷயத்தில் உங்களுடைய மனப்பான்மை என்ன?

பதில்: பதிலுக்கு ஒரு கேள்வி கேட்பதன்மூலம் இந்தக் கேள்விக்கு நான் பதிலளிக்கிறேன். ஆணின் சுதந்திரத்தினலும், அவனுக்குச் சொத்துரிமை இருப்பதாலும், ஆண்களிடையே ஒழுக்கக் கேட்டை உண்டு பண்ணிவிடவில்லையா? இதற்கு 'ஆம்' என்று நீங்கள் பதிலளித்தால், பெண்கள் விஷயத்திலும் அப்படியே இருக்கட்டும். ஆண்களைப் போலவே பெண்களுக்கும் சொத்துரிமையும், மற்ற உரிமைகளும் கிடைத்தால், அவர்களுடைய குணங்களுக்கோ, கெடுதல்களுக்கோ அவர்கள் அந்த உரிமைகளை அனுபவிப்பது காரணமல்ல என்பது புலப்படும். ஒரு ஆண் அல்லது பெண்ணின் நிர்க்

கதியான நிலைமையைத்தான் ஒழுக்கம் நம்பியிருக்க வேண்டுமானல், அந்த ஒழுக்கத்தினல் என்ன பிரயோசனம்? ஒழுக்கம் என்பது நமது உள்ளங்களில் ஆழ்ந்து வேரூன்றியுள்ள ஒன்ருகும்.

—'ஹரிஜன்' – 8—6—1940

# 15

# ஆதரவை நாடிச் செல்லாதீர்கள்

கேள்வி: தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களைக் கொண்ட ஸ்தாபனங்களுக்குப் பெரும் அளவில் பெண்களை அபேட்சகர்களாக நிறுத்துவதற்குக் காங்கிரஸ் தயங்குவதைக் காண்கிருேம். பல்வேறு ஸ்தாபனங்களிலும் பெண்கள் இன்னும் அதிகமான அளவில் எடுத்துக் கொள்ளப்படவேண்டுமென்பது நியாயமும், அவசியமும் அல்லவா? இந்த விஷயத்தை எப்படி முடிவு செய்வீர்கள்?

பதில்: இம்மாதிரி விஷயங்களில் சமத்துவம் அல்லது வேறு விதமான விகிதாசாரம் எனக்குப் பிடிக்கவில்லை. தகுதி ஒன்றுதான் சோதனையாக இருக்கவேண்டும். ஆனல், பெண்களைக் குறைவாகப் பேசுவதே வழக்கமாக இருந்து வருகிறது. ஆகையால், யோக்கியதாம்சங்கள் சமமாயிருந்தால், ஆண்களைவிடப் பெண்களையே எடுத்துக் கொள்ள வேண்டும். இந்தச் சலுகையினல், ஆண்களின் இடங்களை முற்றிலும் பெண்களே பற்றிக் கொண்டாலும் பரவாயில்லை. இனம் என்ற ஒரே காரணத்திற்காக ஒருவரை அங்கத்தினராக எடுத்துக்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்துவது அபாயகரமானதாக இருக்கும். பெண்களோ, அல்லது வேறெந்த கோஷ்டியினரோ ஆதரவைப் பொருட்படுத்தக் கூடாது. அவர்கள் நீதியைத்தான் கோரவேண்டும், சலுகைகளை அல்ல. ஆகையால், ஆண்களாயினும், பெண்களாயினும் ஆங்கிலக் கல்வியையோ, மேல்நாட்டுக் கல்வியையோ பரப்பக்கூடாது. தம்முடைய மாகாண மொழிகளின் மூலம், தம்மைப் பிரஜைகளின் பல்வேறு கடமைகளுக்குத் தகுதியுள்ளவர்களாக்கும் விதத்தில் பொதுக் கல்வியைப் பரப்ப வேண்டும். இதுதான் சரியான முறையாகும். மிகவும் அவசியமான இந்தச் சீர்திருத்தத்தைச் செய்ய ஆண்கள் முதல் முயற்சி எடுத்துக் கொள்வது, ஏதோ தயவு செய்வதாகாது; பெண்களுக்கு முன்னடியே அளித்திருக்க வேண்டிய நியாயத்தைச் செய்வதே யாகும்.

['கேள்விப் பெட்டி' என்ற தலைப்பில் பிரசுரமானது.]

—உருளிகாஞ்சன்-30—3—1946 —'ஹரிஜன்'-7—4—1946

# 16

# பெண்கள் விஷயம் என்ன ?

"தேர்தல்களுக்கோ, பதவிகளுக்கோ போதிய பெண்கள் நிறுத்தப்பட வில்லை என்ற புகாருக்கு நீங்கள் எழுதியிருந்த பதிலைப் படித்து மகிழ்ச்சி யடைந்தேன். அபேட்சகர்களைப் பொறுக்கி எடுக்கும் விஷயத்தில், தகுதி ஒன்றுதான் சோதனையாக இருக்க வேண்டுமென்று நீங்கள் பதிலளித்திருக் கிறீர்கள். உங்களுடைய கருத்து முற்றிலும் சரியானதே, சிந்தனை சக்தியுள்ள ஒவ்வொரு ஆணும், பெண்ணும் அதை ஒப்புக்கொள்ளுவர். 'வயதோ, இனமோ முக்கியமல்ல. தகுதியொன்றுதான் போற்றத் தகுந்தது' என்று சொல்லுவதுண்டு. ஆனால், இப்பொழுது உள்ள நிலைமை உண்மையி லிருந்து வெகு தூரத்திலிருக்கிறது. இந்தக் கொள்கை பின்பற்றப்படுவதை விட எல்லா இடங்களிலுமே மீறத்தான்படுகிறது என்பது நீங்கள் அறியாத தல்ல. மந்திரி சபைகளிலோ, சட்டசபைகளிலோ, ஸ்தல ஸ்தாபனங்களிலோ, அபேட்சகர்களை நிறுத்தும் விஷயத்தில் தகுதிக்கு முதலிடம் கொடுக்கப்படுவ தில்லை. சாதி, வகுப்பு, மாகாணம் ஆகியவைகளே முடிவான அம்சங்களாக இருக்கின்றன. இந்த நலன்களை யெல்லாம் எப்படிப் புறக்கணிக்க முடியும் என்று இதற்கு ஆதரவாக வாதாடப்படுகிறது. இந்த வாதம் சரிதான் என் றால், பெண்களின் நலன்கள் என்ன ஆவது ? இதை முன்னிட்டு, அபேட்சகர் கள் எந்த அடிப்படையில் எடுக்கப்படுகிறார்கள் என்பதற்கு மேலும் விளக்கம் தேவைப்படவில்லையா ?"

மதிப்பிற்குரிய ஒரு சகோதரி மேற்கண்டவாறு எழுதியிருக் கிறார். அந்த சகோதரி கூறுவது இதுதான்: அதாவது, எல் லாமே தவறான அடிப்படையில் இருந்தால், இன்னொரு தவறு செய்வதால் பரவாயில்லை. ஆனால், இப்படியே நாம் போய்க் கொண்டிருந்தால் இந்தத் தீங்கு வளர்ந்து கொண்டே போய், நாம் மீளமுடியாத ஒரு விஷச் சுழலில் சிக்கிக் கொண்டுவிடு வோம். ஆகையால், பெண்களை நான் கேட்டுக் கொள்ளுவது என்னவென்றால், அவர்கள் நன்றாகச் சிந்தனை செய்து, பற்றில் லாமையின் உருவாக விளங்கவேண்டும்; அதன்மூலம் அவர்கள் தம்முடைய இனத்தின் அந்தஸ்தை மட்டுமின்றி, தேசத்தின் அந்தஸ்தையும் உயர்த்திப் புகழ் பெறவேண்டும் என்பதே.

சாதியையும், வகுப்பையும் முக்கியமாக நாம் கருதிக் கொண்டிருக்கும் வரையில், பெண்கள் ஒதுங்கி நின்று, தம் முடைய பெருமையை உயர்த்திக் கொள்ளவேண்டும் என்றே யோசனை கூறுவேன். இதைச் சிறந்த முறையில் எப்படிச் செய்வது என்பதே கேள்வியாகும். இன்று வெகு சில பெண் களே ராஜீய காரியங்களில் பங்கெடுத்துக் கொள்ளுகிறார்கள். இவர்களில் பெரும்பாலோர், தாமாகச் சிந்தித்துப் பார்ப்பதில்லை. தம்முடைய பெற்றோர்கள் அல்லது கணவன்மார்களின் கட்டளை களை நிறைவேற்றி வைப்பதுடன் அவர்கள் திருப்தி யடைந்துவிடு

கிறார்கள். தாம் மற்றவர்களை நம்பியிருக்க வேண்டியுள்ள தன்மையை உணர்ந்து, தமது உரிமைகளைக் கோருகிறார்கள். இப்படிச் செய்வதற்குப் பதிலாகப் பெண்கள், பெண்களை வோட்டர்களாகச் சேர்க்க வேண்டும். அனுபவ சாத்தியமான முறைகளில் அவர்களுக்கு விஷயத்தை விளக்கவேண்டும்; அல்லது அதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். அவர்கள் தாமாகச் சிந்தித்துப் பார்ப்பதற்குக் கற்றுக் கொடுக்கவேண்டும். அவர்களைப் பிணைத்திருக்கும் சாதித் தளைகளிலிருந்து விடுவிக்கவேண்டும். அப்போதுதான் அவர்களிடம் ஒரு மாறுதல் ஏற்படும். அந்த நிலைமையில், பெண்களின் பலத்தையும், தியாக சக்தியையும் ஆண் உணர்ந்து, கௌரவமான ஸ்தானங்களை அவர்களுக்குக் கொடுக்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்படும். இப்படிச் செய்தால் இன்றுள்ள அசுத்தமான சூழ்நிலையை அவர்கள் பரிசுத்தப்படுத்தியவர்களாவார்கள். இதெல்லாம் பெண்களுக்கு.

ஆண்கள் சம்பந்தப்பட்ட வரையில். எங்கெங்கே அசுத்தமான சூழ்நிலை நிலவினாலும் அதிலிருந்து வெளியே வருவதை அவர்கள் ஒரு கடமையாகக் கொள்ளவேண்டும். தம்முடைய மனத்திலிருந்து அவர்கள் இவற்றை ஒழித்துவிட்டால், பின்னர் சாதி, வகுப்புகளை அவர்கள் பொருட்படுத்த மாட்டார்கள். ஆண்களும், பெண்களும், தாமே ஹரிஜனங்களாகி விடுவதுதான் இதற்குச் சிறந்ததும், நிச்சயமானதுமான வழியாகும். அதிலும், கடைசி நிலையிலுள்ள 'பங்கி'கள் மேஹ்தர்கள் போன்றவர்களாகி விடவேண்டும்.

திறமைசாலிகளான பெண்கள் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தால், ஆண்கள் அந்தத் தவறைத் திருத்தவேண்டும். ஆண்களை விட இன்னும் திறமையாகச் செயலாற்றுவதற்கான ஊக்கத்தை பெண்களுக்கு அளிக்க வேண்டியது ஆண்களின் கடமை. இரு தரப்பினரும் இம்மாதிரி நடந்து கொண்டால், சூழ்நிலை சீக்கிரத்தில் தூய்மைப்பட்டுவிடும். ஆண்கள் இப்படிச் செய்தாலும் செய்யாவிட்டாலும், பெண்களின் கடமை தெளிவாக இருக்கிறதென்றே நான் நினைக்கிறேன்.

—புதுடில்லி–12—4—1946 —'ஹரிஜன்' – 19—9—1946

# 17

# பெண்களின் வலிமை

**கேள்வி:** எதிர்க்காமலிருப்பது பலமுள்ளவர்களிடம் பணிந்து போவதாகாதா?

**பதில்:** சாத்விக எதிர்ப்பு என்பது பலவீனர்களின் ஆயுதமாகவே கருதப்படுகிறது. ஆனால், எந்த எதிர்ப்புக்காக

முற்றிலும் ஒரு புது வார்த்தையைக் கண்டுபிடிக்க வேண்டியிருந்ததோ, அது மிகுந்த பலசாலிகளின் ஆயுதமாகும். என்னுடைய அர்த்தத்தை விளங்க வைப்பதற்காக நான் ஒரு புது வார்த்தையைக் கண்டுபிடிக்க வேண்டியிருந்தது. ஆனால், மிகுந்த பலசாலிகளின் ஆயுதமாயிருந்த போதிலும், பலவீனர்களும், வயதானவர்களும், மனோதிடம் உள்ள குழந்தைகளும்கூட அதை உபயோகிக்கலாம் என்பதுதான் அதிலுள்ள அழகு. சத்தியாக்கிரகத்தில் எதிர்ப்பு என்பது, கஷ்டங்களைத் தானே அனுபவிப்பதாகும். ஆகையால், இது பெண்களுக்கு மிகவும் பொருத்தமான ஆயுதமாக இருக்கும். பல சந்தர்ப்பங்களில், கஷ்டங்களை அனுபவிப்பதில் இந்தியாவிலுள்ள பெண்கள், தம் சகோதரர்களையும் மிஞ்சினார்கள் என்பதைச் சென்ற வருடம் பார்த்தோம். அந்த இயக்கத்தில் இருவரும் உன்னதமாகப் பணியாற்றினார்கள். தாமே கஷ்டங்களை அனுபவிப்பது என்பது, ஒட்டுவாரொட்டியைப் போல் பரவியது. தன்னலமற்ற பல அரிய சாதனைகளை அவர்கள் செய்தார்கள். ஐரோப்பாவிலுள்ள பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் மனித வர்க்கத்தினிடம் அன்பு பெருகுவதாக வைத்துக் கொள்ளுவோம். அப்போது அவர்கள் ஆண்களைத் தீவிரமாக எதிர்த்து, ராணுவ மனப்பான்மையை, நம்ப முடியாதபடி அவ்வளவு சீக்கிரத்தில், செயலற்றதாக்கி விடுவார்கள். பெண்கள், குழந்தைகள், மற்றும் யாவருக்குமே ஒரே மாதிரியான உள்ளம்தான் இருக்கிறது; ஒரே மாதிரியான செயல் சக்திதான் இருக்கிறது என்பதே இதிலுள்ள கருத்தாகும். சத்தியத்தின் எல்லையில்லாத சக்தியை எப்படி வெளியே கொண்டு வருவது என்பதுதான் கேள்வி.

—'எங் இந்தியா' - 14—1—1932

## 18

# கற்பைக் காப்பது யார்?

**கேள்வி :** *பெண்களின் கற்பை எப்படிக் காப்பாற்றுவது?*

**பதில் :** *நீங்கள் 'ஹரிஜன்' பத்திரிகையை ஒழுங்காக வாசிப்பதில்லை என்றே அஞ்சுகிறேன். இந்த விஷயத்தைப்பற்றிப் பல வருடங்களுக்கு முன்பே விவாதித்திருக்கிறேன். அதற்குப் பிறகும் பல தடவைகளில் விவாதித்திருக்கிறேன். இதை இரண்டு தலைப்புகளின் கீழ் விவாதிக்கலாம். (1) ஒரு பெண், தன்னுடைய கற்பைத் தானே எப்படிக் காப்பாற்றிக் கொள்ளுவது? (2) அவளுடைய உறவினர்களாகிய ஆண்கள் அதை எப்படிக் காப்பாற்றுவது?*

முதல் கேள்வி சம்பந்தப்பட்ட வரையில், அகிம்சை சூழ்நிலை இருக்குமிடத்தில், அகிம்சையைப்பற்றி விடாமல் போதிக்கப்பட்டு வருமிடத்தில், பிறரை தான் நம்பியிருப்பவளாகவோ, சக்தியில்லாதவளாகவோ, நிர்க்கதியானவளாகவோ ஒரு பெண் தன்னைப் பற்றி நினைத்துக்கொள்ளமாட்டாள். அவள், உண்மையாகவே தூய்மையுள்ளவளாக இருந்தால், அவள் உண்மையில் கதியற்றவள் அல்ல. அவளுடைய தூய்மை காரணமாகத் தன்னுடைய பலத்தைப்பற்றிய உணர்வு அவளுக்கு ஏற்பட்டுவிடுகிறது. ஒரு பெண்ணின் இஷ்டத்திற்கு விரோதமாக அவளைப் பலாத்காரம் செய்ய முடியாது என்றே நான் எப்போதும் கருதி வந்திருக்கிறேன். அவள் பயத்திற்கு இடம் கொடுக்கும்போது, அல்லது தன்னுடைய தார்மிக பலத்தை அறியாதபோதுதான் பலாத்காரம் நிகழ்கிறது. தாக்குபவனின் உடல் பலத்தை அவள் சமாளிக்க முடியாவிட்டால், அவன் பலாத்காரம் செய்வதற்கு முன்பு உயிரை விட்டுவிடும் பலத்தை அவளுடைய தார்மிக பலம் அவளுக்கு அளிக்கும். சீதையின் உதாரணத்தைப் பாருங்கள். ராவணனின் வல்லமைக்கு முன்பு அவள் செயலற்ற ஓர் அபலைதான். ஆனால், அவளுடைய தூய்மை அந்த ராட்சத பலத்தையும் மிஞ்சுவதாயிருந்தது. எவ்வளவோ ஆசை காட்டி அவன் அவளை வசீகரிக்க முயற்சித்தான். ஆனால், அவளுடைய சம்மதமின்றி அவளைத் தொடமுடியவில்லை. அதற்கு மாறாக, ஒரு பெண் தன்னுடைய உடல் பலத்தையோ, அல்லது தன்னிடமுள்ள வேறு ஒரு ஆயுதத்தையோ நம்பியிருந்தால், அந்த பலம் தளர்ச்சியுறும்போது அவள் நிச்சயமாக அவமானப்பட்டுவிடுவாள்.

இரண்டாவது கேள்விக்குச் சுலபமாக பதில் சொல்லிவிடலாம். சகோதரரோ, தகப்பனரோ, அல்லது நண்பரோ, அவளுக்கும் அவளைத் தாக்க வருபவனுக்குமிடையே நிற்பார். இந்தக் கொடிய எண்ணத்தை விட்டுவிடும்படி அவன் மனத்தைத் திருப்ப முயற்சிப்பார்; அல்லது அவனைத் தடுக்கும் முயற்சியில் தன் உயிரைப் பலிகொடுத்துக் கொள்ளுவார். அப்படி அவர் தன் உயிரைக் கொடுக்கும்போது, தன் கடமையைச் செய்கிறார் என்பதோடு மட்டுமில்லை, அந்தப் பெண்ணுக்கும் ஒரு புது பலத்தை அளித்தவராவார். தன்னுடைய கற்பை எப்படிக் காப்பாற்றிக் கொள்ளுவது என்று அப்போது அவளுக்குத் தெரிந்துவிடும்.

“ஆனால், அதில்தான் சங்கடமிருக்கிறது. ஒரு பெண் எப்படித் தன் உயிரைக் கொடுக்க முடியும்? அவள் அப்படிச் செய்வது சாத்தியமா யிருக்குமா?” என்று புனவிலிருந்து வந்திருந்த சகோதரிகளில் ஒருவர் கேட்டார்.

காந்திஜி பின்வருமாறு பதிலளித்தார்: “ஓ, ஆணைவிடப் பெண்ணுக்கு அது எந்தக் காலத்திலும் சாத்தியமே.

இவ்வளவு உயர்ந்ததாயில்லாத நோக்கங்களுக்காகக்கூடப் பெண்கள் தம் உயிர்களை விடக்கூடியவர்கள் என்று எனக்குத் தெரியும். சில நாட்களுக்கு முன்புகூட, இருபது வயதுள்ள ஒரு இளம் பெண், தனக்குத் தானே தீ வைத்துக் கொண்டு உயிரைவிட்டாள். சாதாரண படிப்புக்குப் போகத் தான் மறுத்ததால் தன்னைத் துன்புறுத்துகிறார்கள் என்று அவள் நினைத்ததே அதற்குக் காரணம். எவ்வளவு உறுதியுடனும், தைரியத்துடனும் அவள் மாய்ந்தாள்! சாதாரண ஒரு எண்ணெய் விளக்கினால் தன் சேலையைப் பற்ற வைத்துக் கொண்டாள். அவள் கொஞ்சம்கூடக் கூச்சல் போடவில்லை. இதனால், எல்லாம் முடியும் வரையில் நடந்த விஷயம் பக்கத்திலுள்ள அறையில் இருந்தவர்களுக்கும் தெரியவில்லை. அவளுடைய உதாரணத்தைப் பாராட்டுவதற்காக இந்த உதாரணங்களை நான் கொடுக்கவில்லை. பெண்கள் எவ்வளவு சுலபமாகத் தம் உயிரை மாய்த்துக் கொண்டுவிட முடியும் என்பதைக் காட்டுவதற்காகவே கூறுகிறேன். இந்த தைரியம் எனக்கு வராது. ஆனால், வேண்டியது அகத்தீயே யொழிய, புறத்தீயல்ல என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன்."

குழந்தைகளைச் சமாளிக்கும் விஷயத்தில் கோபத்தையும், பலாத்காரத்தையும் எப்படி அடியோடு தவிர்க்கமுடியும் என்று அதே சகோதரி கேட்டார். காந்திஜி வாய்விட்டுச் சிரித்துக் கொண்டே பதிலளித்தார்: "நம்முடைய பழமொழி உங்களுக்குத் தெரியாதா? ஐந்து வயதாகும் வரையில் அவனுடன் விளையாடுங்கள். அடுத்த பத்து வருடங்கள் வரையில் அடித்துப் பேசுங்கள். அவனுக்கு 16 வயதானவுடன் நண்பனாக பாவியுங்கள். இதற்காகக் கவலைப் படாதீர்கள். சில சமயங்களில் உங்கள் குழந்தையிடம் நீங்கள் கோபப்பட வேண்டியிருந்தால், அதை அகிம்சாபூர்வமான கோபம் என்றே நான் சொல்லுவேன். புத்திசாலித்தனமான தாய்மார்களைப் பற்றியே நான் குறிப்பிடுகிறேன்; தாய்மார்களாக இருக்கத் தகுதியற்ற அசடுகளைப் பற்றியல்ல."

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது]

—'ஹரிஜன்', - 1—9—1940

# 19

# பலாத்காரத் தாக்குதல்கள்

இன்றுள்ள உலகம் பூராவுமே சோதனையிலிருக்கிறது. யாரும் யுத்தத்திலிருந்து தப்பமுடியாது. ராமாயணமும், மகா பாரதமும் கவிகளுடைய கற்பனைகளின் சிருஷ்டிகளாயிருந்தாலும், அவற்றை இயற்றியவர்கள் வெறும் எதுகை, மோனைகளை மட்டும் பார்க்கும் கவிஞர்களல்ல. அவர்கள் தீர்க்கதரிசிகள். அவர்கள் கூறியது இப்போது நம் கண் முன்பாகவே நடந்துகொண்டிருக்கிறது. ராவணர்கள், ஒருவரோடொருவர் போராடிக்கொண்டிருக்கிருர்கள். ஈடிணையற்ற பலத்தை அவர்கள் காட்டுகிருர்கள். வானிலிருந்து தம்முடைய நாசகர ஆயுதங்களை அவர்கள் வீசுகிருர்கள். போர்க்களத்தில் எந்த வீரச் செயலுமே அவர்களுடைய கற்பனையையோ, சக்தியையோ மீறியதாயில்லை.

மனிதனுயிருப்பவன், நிச்சயமாக இப்படிச் சண்டை போடமாட்டான். மிருகங்களே இப்படிச் சண்டை போடமுடியும். உடல் வலிமையின் வெறியினுல் சிப்பாய்கள் கடைகளைச் சூறையாடுகிருர்கள். பெண்களிடம் தகாத முறையில் நடந்துகொள்ளுவதுபற்றிக்கூட அவர்கள் வெட்கப்படவில்லை. யுத்த காலத்தில் இம்மாதிரியான சம்பவங்கள் நடப்பதைத் தடுப்பதற்கு நிர்வாகத்தினருக்குச் சக்தியில்லை. ராணுவம் அவர்களுடைய முக்கிய தேவையைப் பூர்த்தி செய்கிறது. ஆகையால், அவர்களுடைய தகாத செயல்களை நிர்வாகத்தினர் பார்க்காததுபோல் இருந்துவிடுகிருர்கள். ஒரு தேசம் பூராவுமே ராணுவ மயமாக்கப்படும்போது, ராணுவ வாழ்க்கை முறை தேசத்தின் நாகரிகத்தில் ஒன்றுகி விடுகிறது. ஆகையால், சிப்பாய்கள் இப்படி தகாத முறையில் நடந்துகொள்ளுவது கண்டனத்திற்குரிய ஒரு விஷயமல்ல. ஆனுல், இந்தியா அப்படி மாறுவதற்கு எவ்வளவோ தலைமுறைகள் ஆகும்.

ஆகையால், ஒரு சகோதரி எனக்கு அனுப்பியுள்ளவை போன்ற பின்கண்ட கேள்விகள் எழுகின்றன :

(1) ஒரு சிப்பாய் ஒரு பெண்ணைப் பலாத்காரம் செய்தால், அவள் தன் கற்பை இழந்துவிட்டதாகச் சொல்லமுடியுமா ?

(2) அந்தப் பெண்ணை சமூகம் கண்டித்து, ஒதுக்கிவிட வேண்டுமா ?

(3) இந்த நிலைமையில் பெண்களும், பொதுஜனங்களும் என்ன செய்ய வேண்டும் ?

அந்தப் பெண் கற்பை இழந்து விடுகிருள் என்பது உண்மையே. ஆயினும், அதனுல் அவளைக் கண்டிப்பதோ, விலக்கப்

பட்டவளாகக் கருதுவதோ கூடாது. கொடுமை இழைக்கப் பட்ட அவள், நமது அனுதாபத்திற்குரியவள்; காயமடைந்த யாருக்கும் நாம் சிகிச்சையளிப்பது போலவே அவளுடைய புண்ணையும் நாம் ஆற்றவேண்டும்.

தன்னுடைய கற்பு அழிக்கப்படுவதற்கு மனமுவந்து உடந்தையாயிருந்தால்தான் ஒருத்தி கண்டிக்கத்தக்கவளா கிறாள். மணமான பெண்கள் சோரம் போவதும், பலாத்கார மாகக் கற்பழிக்கப்படுவதும் ஒரே தன்மை வாய்ந்தவை அல்ல. இந்த விஷயத்தை இந்தக் கண்ணோட்டத்துடன் பார்த்தால், இம்மாதிரி விஷயங்களை இதுவரையில் ஒளித்து வந்திருப்பதைப் போல் ஒளிக்கமாட்டோம். பெண்களிடம் ஆண்கள் இவ்வாறு நடந்துகொள்ளுவதற்கு எதிராகப் பொதுஜன அபிப்பிராயமும் உருவாகிவிடும்; அது செயல்படவும் ஆரம்பிக்கும்.

இந்த விஷயத்தில் பத்திரிகைகள் தொடர்ந்து கிளர்ச்சி செய்தால், வெள்ளைச் சிப்பாய்களாயிருந்தாலும், பழுப்பு சிப்பாய் களாயிருந்தாலும், ஒருக்கால் இம்மாதிரி நடந்துகொள்ளுவதை நிறுத்திவிடுவார்கள். இத்தகைய தகாத நடத்தையைத் தடுக் கும் நிர்ப்பந்தம் அவர்களுடைய மேலதிகாரிகளுக்கும் ஏற்படும்.

நகரங்களிலிருந்து வெளியேறி, எவ்வளவோ வேலைகள் காத்துக்கொண்டிருக்கும் கிராமங்களுக்குப் போய்விடவேண்டு மென்பதே பெண்களுக்கு நான் கூறும் புத்திமதியாகும். கிராமங் களில் அவர்கள் தாக்கப்படுவார்கள் என்ற அபாயம் அவ்வள வாக இராது. ஆயினும், அவர்கள் எளிய முறையில் வாழ்க்கை நடத்தவேண்டும். ஏழைகளுடன் ஏழைகளாக ஒன்றி வாழ வேண்டும். பட்டு, ஸாடின் துணிகளையும், நகைகளையும் அணிந்து கொண்டு, தம்முடைய பணப் பெருமையைக் காட்டிக்கொண் டால், ஓர் ஆபத்திலிருந்து தப்பியோடும்போது, இரட்டை அபாயத்திற்குத் தம்மை உட்படுத்திக் கொண்டவர்களாவார்கள். கடமை காரணமாக நகரங்களில் வாழவேண்டி யிருப்பவர் களுக்கு இது பொருந்தாது.

எப்படி பயமற்றிருப்பது என்பதைப் பெண்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதுதான் முக்கியம். தன்னுடைய தூய் மையே தன்னுடைய சிறந்த கவசம் என்பதை அறிந்துள்ள பய மற்ற ஒரு பெண்ணின் கற்பை அழிக்கவே முடியாது என்பதே என்னுடைய உறுதியான நம்பிக்கையாகும். மனிதன் எவ்வளவு மிருகமாயிருந்தாலும், அனல் சுட்டெரியும் அவளுடைய கற்புத் தீயின் முன்பு அவன் வெட்கித் தலைகுனிந்துவிடுவான். பெண்கள் இவ்வாறு தம்மைக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறார்களென் பதற்கு இந்தக் காலத்திலும்கூட உதாரணங்களிருக்கின்றன. இதை நான் எழுதும்பொழுது, இரண்டு சம்பவங்கள் எனக்கு ஞாபகம் வருகின்றன. ஆகையால், இந்தக் கட்டுரையை வாசிக் கும் பெண்கள், இந்த தைரியத்தை வளர்த்துக்கொள்ளவேண்டு

மென்று சிபாரிசு செய்கிறேன். பலாத்காரத் தாக்குதல் என்று நினைக்கும்போதே இப்போது அவர்களுக்கு உடல் நடுங்குகிறது. இதை அவர்கள் விட்டொழிக்க முடிந்தால், அவர்கள் முற்றிலும் பயமற்றவர்களாகி விடுவார்கள். ஆயினும், இந்த தைரியச் சோதனையில் வெற்றி பெறவேண்டுமென்பதற்காக, ஒரு பெண் பயங்கரமான இந்த அனுபவத்திற்கு உட்படவேண்டுமென்ற அவசியமில்லை. காருண்ய வசமாக இந்த அனுபவங்கள் லட்சக்கணக்கானவர்களுக்கு, ஆயிரக்கணக்கானவர்களுக்குக் கூட ஏற்படுவதில்லை. ஒவ்வொரு சிப்பாயுமே ஒரு மிருகமல்ல. ஒரு சிலர்தான் கண்ணிய உணர்ச்சிகளையெல்லாம் இழந்து விடுகிறார்கள். பாம்புகளில் 20 சதவிகிதம்தான் விஷப் பாம்புகள்; இவற்றில்கூடச் சில பாம்புகள்தான் கடிக்கின்றன. மிதித்தாலொழிய அவை நம்மீது பாய்வதில்லை. பாம்பைப் பார்த்தாலே நடுங்குபவர்களுக்கு, இந்த உண்மை தெரிந்திருப்பது உதவியளிப்பதில்லை. ஆகையால், பெண்கள் பயமற்றிருப்பதற்குப் பெற்றோர்களும், கணவன்மார்களும் கற்றுக்கொடுக்கவேண்டும். கடவுளிடம் ஜீவ நம்பிக்கை வைப்பதன் மூலம் இதை நன்றாகக் கற்றுக்கொள்ளலாம். கடவுள் கண்ணுக்குப் புலப்படாதவராயிருந்தாலும், என்றும் அவர்தான் நம்மைக் கைவிடாத ரட்சகர். இந்த நம்பிக்கை உள்ளவர்கள், யாருக்கும் பயப்படுவதே இல்லை.

ஆனால், இம்மாதிரி நம்பிக்கையையும், தைரியத்தையும் ஒரு நாளில் பெற்றுவிட முடியாது. இதற்கிடையே மற்ற வழிகளையும் நாம் ஆராயவேண்டும். ஒரு பெண் தாக்கப்படும்போது, ஹிம்சை, அகிம்சை என்றெல்லாம் அவள் நினைத்துப் பார்த்துக்கொண்டிருக்க முடியாது. தன்னுடைய கற்பைக் காப்பாற்றிக்கொள்ளுவதற்கு, அவளுக்குத் தோன்றும் எந்த வழியையும் பின்பற்ற அவளுக்கு உரிமையுண்டு. கடவுள் அவளுக்குப் பற்களையும், நகங்களையும் கொடுத்திருக்கிறார். தன் பலம் கொண்ட மட்டும் அவள் அவற்றை உபயோகிக்கவேண்டும்; அவசியமானால், அந்த முயற்சியில் உயிரையும் விடவேண்டும்; சாவைப்பற்றிய பயத்தையெல்லாம் விட்டொழித்து விடும் ஆணோ, பெண்ணோ, தம் உயிரை அர்ப்பணிப்பதன்மூலம் தம்மை மட்டுமின்றி, மற்றவர்களையும் காப்பாற்றமுடியும். உண்மையில் சாவுக்குத்தான் நாம் அதிகமாக பயப்படுகிறோம். ஆகையால், நம்மிடமிருப்பதைவிட அதிகமானதான பலத்தின் முன்பு இறுதியில் நாம் பணிந்து விடுகிறோம். படையெடுத்து வருவோரிடம் சிலர் மண்டியிடுவார்கள், சிலர் லஞ்சம் கொடுப்பார்கள், சிலர் வயிற்றால் ஊர்ந்து செல்லுவார்கள், அல்லது வேறு மாதிரியான சிறுமைகளுக்கு உட்படுவார்கள்; சில பெண்கள் உயிரை விடுவதைவிடத் தம் உடல்களையேகூடக் கொடுத்துவிடுவார்கள். குறைகூறவேண்டும் என்ற மனப்பான்மையுடன் இதை நான் எழுதவில்லை. மனித சுபாவம் எப்படி என்பதையே விளக்குகிறேன். நாம் வயிற்றால் ஊர்ந்தாலும், அல்லது ஒரு பெண் ஆணின் வெறிக்கு உட்பட்

டாலும், எதையும் செய்தாவது உயிர் வாழ வேண்டும் என்ற நம்முடைய விருப்பத்திற்கே அது அடையாளமாகும். ஆகையால் தன் உயிரை இழப்பவன்தான் அதைக் காப்பாற்ற முடியும். 'தேன த்யக்தேன புஞ்ஜிதா:' என்ற இந்த இணையற்ற சுலோகத்தை ஒவ்வொரு வாசகரும் மனப்பாடம் செய்ய வேண்டும். ஆனல், வாயளவில் இதைச் சொல்லிக்கொண்டிருப்பதால்மட்டும் பிரயோசனமில்லை. நமது உள்ளங்களில் மூலை முடுக்குகளிலும் கூட இது ஆழ்ந்து ஊடுருவிச் செல்ல வேண்டும். வாழ்க்கையை அனுபவிக்க வேண்டுமானல், வாழ்க்கையின் கவர்ச்சியைக் கைவிட வேண்டும். அது நமது இயல்பின் ஒரு பகுதியாக இருக்க வேண்டும்.

பெண்கள் என்ன செய்ய வேண்டும் என்பதைச் சொல்லி விட்டேன். ஆனல், இத்தகைய குற்றங்களைப் பார்க்கும் ஆண் என்ன செய்ய வேண்டும்? மேற் சொன்னவைகளிலேயே இதற்கும் பதில் அடங்கியிருக்கிறது. அதை அவன், பேசாமல் பார்த்துக்கொண்டிருக்கக் கூடாது. அவன், பெண்ணைக் காப்பாற்ற வேண்டும். போலீஸ் உதவியைத் தேடிக்கொண்டு அவன் ஓடக் கூடாது; ரயில் வண்டிகளில் அபாய அறிவிப்புச் சங்கிலியை இழுப்பதுடன் திருப்தியடைந்து விடக்கூடாது. அவன் அகிம்சையைப் பின்பற்ற முடிந்தால், அந்த முயற்சியில் தன் உயிரை விட்டு, அதன்மூலம் ஆபத்திலிருக்கும் அந்தப் பெண்ணைக் காப்பாற்றுவான். அகிம்சையில் அவனுக்கு நம்பிக்கை இல்லையென்ருல், அல்லது அதைப் பின்பற்ற முடியவில்லையென்ருல், தன்னிடமுள்ள சக்தி பூராவையும் உபயோகித்து அவளைக் காப்பாற்ற முயற்சிக்க வேண்டும். எப்படிச் செய்தாலும், தன் உயிரை விட அவன் தயாராயிருக்க வேண்டும்.

வயதான, தளர்ச்சியுற்ற, பல் இல்லாத நான்கூட, அகிம்சையைச் சொல்லிக்கொண்டு, ஒரு சகோதரி தாக்கப்படுவதை நிர்க்கதியாகப் பார்த்துக் கொண்டிருந்தால், என்னுடைய 'மகாத்மா' பட்டம் கேலிக்கிடமாகி, அவமானப்படுத்தப் பட்டுவிடும். அந்தப் பட்டத்தையும் நான் இழந்துவிடுவேன். நானே, என்னைப் போன்ற மற்றவர்களோ குறுக்கிட்டு, அகிம்சை வழியிலோ, பலாத்கார வழியிலோ எங்கள் உயிர்களைவிட்டால், நிச்சயமாகப் பெண்ணைக் காப்பாற்றிவிடுவோம்; அப்படி இல்லாவிட்டாலும், அவள் கற்பழிக்கப்பட்டதற்கு உயிருள்ள சாட்சிகளாக இருக்க மாட்டோம்.

இது சாட்சிகளைப் பற்றியது. ஆனல், நம் தேசம் பூராவிலும் தைரியம் நிறைந்த ஒரு சூழ்நிலை பரவியிருந்தால், பெண்கள் தாக்கப்படுவதை எந்த இந்தியனும் பார்த்துக் கொண்டிருக்க மாட்டான் என்பது தெரிந்தால், அவர்களைத் தொடுவதற்கு எந்த சிப்பாயும் துணியமாட்டான் என்று சொல்லுவேன். அத்தகைய உணர்ச்சி இல்லை என்பது, நாம் வெட்கப்பட வேண்டிய விஷய

மாகும். ஆனல், இந்த இழுக்கை அகற்றுவதற்குத் தயாராயிருப்பவர்கள் முன் வந்தால், அந்த அளவுக்கு நல்லதுதான்.

அரசாங்கத்தினிடம் செல்வாக்கு உள்ளவர்கள், அரசாங்கம் வேண்டிய நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவதற்கு முயற்சி செய்வார்கள். ஆனல், சுய உதவிதான் சிறந்த உதவியாகும். இப்போதைய நிலைமையில், நம்முடைய பலத்தையும், கடவுளின் உதவியையும்தான் நாம் நம்பியிருக்கலாம்.

[வர்தா போகும் போது ரெயிலில் எழுதியது–19—2—42]

—'ஹரிஜன்' - 1—3—1942

# 20

# இனி கிடையாது

கேள்வி: பலாத்காரத் தாக்குதல் அபாயங்களிலிருந்து தப்பித்துக் கொள்ளுவதற்காக நகரங்களிலுள்ள பெண்கள் கிராமங்களுக்குப் போய்விட வேண்டுமென்று நீங்கள் யோசனை கூறியிருக்கிறீர்கள். ஆயினும், எங்களில் சிலராவது தைரியமாக இந்த அபாயத்தை எதிர்த்து நிற்க வேண்டுமென்று நீங்கள் நினைக்கவில்லையா? பெண்களை எப்போதுமே ஆபத்திற்குட்படுத்தாமல் பத்திரமாகக் காப்பாற்றி வைத்திருந்தால், அவர்களுக்குத் தைரியமும் தன்னம்பிக்கையும் எப்படிவரும்? ஒருத்தி தைரியமாகச் சாவை எதிர்நோக்குவது பெண்களின் இயக்கத்திற்கு உதவியாக இராதா? பெற்ருேர்கள் தமது பெண்களை மீண்டும் படுதாவுக்குள் அடைத்து வைத்துவிடக்கூடிய அபாயம் இன்று இருக்கிறது.

பதில்: நகரங்களில் இருக்க வேண்டியிருப்பவர்கள் அங்கேயே இருந்து, என்ன நேர்ந்தாலும் சமாளித்துக்கொள்ள வேண்டியதுதான். ஆனல், வெறும் வீராப்புக்காக எதையும் செய்யக்கூடாது. அவர்கள் கிராமங்களுக்குப் போகும்போது படுதா இருக்காது. கடவுளால் கைவிடப்பட்ட இந்தப் பந்து போன்ற உலகத்தை, இரு கோஷ்டிகள் தம் பலம் கொண்ட மட்டும் உதைத்துக் கொண்டிருக்கின்றன. அத்தகைய இந்த உலகத்தில் ஆபத்திலிருந்து சுதந்திரம் என்பது எங்குமே கிடையாது. எங்கே போனலும் வேலைதான். படுதாவில் ஒளியும் நாட்கள் இனி கிடையாது.

சேவா கிராமம் – 2—3—1942

—'ஹரிஜன்' - 8—3—1942

# 21

# பயமற்று இருங்கள்

நமது பெண்கள் சுலபமாகப் பயந்துவிடுகிறார்கள். உலகம் பூராவிலுமே கிட்டத்தட்ட இப்படித்தான் இருக்கிறது. நமது பெண்கள் தைரியமாக இருக்கக் கற்றுக்கொள்ள வேண்டுமென்று காந்திஜி விரும்பினார். அவமானத்திற்கு உட்படுவதைவிடப் பெண்கள் தற்கொலை செய்துகொள்ளலாம் என்று அவர் சொன்னதைப் பெரிதும் தப்பர்த்தம் செய்துகொண்டு விட்டார்கள். அவர்கள் விரும்பினால், தம்முடைய தற்காப்புக்காக ஒரு கத்தியை வைத்துக் கொள்ளலாம். ஆனால், நம்மை மீறிய பலத்திற்கு எதிரே ஒரு கத்தியால் பிரயோசனமில்லை. அவமானத்திற்கு உட்படுவதைவிட விஷத்தைச் சாப்பிட்டு உயிரை மாய்த்துக் கொள்ளலாமென்று அவர் சொன்னார். அவர்கள் எதற்கும் தயாராக இருப்பதே அவர்களைத் தைரியசாலிகளாக்கிவிட வேண்டும். சாவுக்கு அஞ்சாத ஒரு பெண்ணை யாரும் கற்பழிக்க முடியாது. அவளுடைய தற்காப்புக்கு இரண்டு வழிகளிருக்கின்றன. ஒன்று கொல்லலாம் அல்லது கொல்லப்படலாம், அல்லது கொல்லாமலே உயிரைவிடலாம். இரண்டாவது வழியை அவர் கற்றுக் கொடுக்க முடியும்; முதல் வழியை அல்ல. எல்லாவற்றிற்கும் மேலாக அவர்கள் பயமற்றவர்களாக யிருக்க வேண்டுமென்று அவர் விரும்பினார். கோழைத்தனத்தைப் போல் பாவம் வேறு எதுவும் இல்லை.

[பியாரிலாலின் 'வாராந்திரக் கடிதங்களி'லிருந்து எடுத்தது.]

—'ஹரிஜன்' – 3—11—1940

# 22

# பெண்களுக்குப் புத்திமதி

சண்டிபுரியில் காந்திஜி தங்கியிருந்த வீட்டின் முற்றத்தில் கூடியிருந்த பெண்களிடையே அவர் பேசுகையில், பெண்கள் கடவுளையும், தம் சுய பலத்தையும்தான் நம்ப வேண்டுமேயொழிய மற்றவர்களின் பலத்தை நம்பியிருக்கக் கூடாதென்று சொன்னார். தம்முடைய சொந்த பலத்தில் அவர்களுக்கு இன்னும் அதிக நம்பிக்கை இருக்க வேண்டும்; அவர்கள் பயப்பட்டால் போக்கிரிகளின் தாக்குதல்களுக்கு சுலபமாக இரைகளாகிவிடுவார்கள் என்றார்.

"இந்தியப் பெண்கள் அபலைகளல்ல. சென்ற காலத்தில் அவர்கள் வீரச் செயல்கள் புரிந்து புகழ் பெற்றவர்கள். தம்முடைய குணத்தின் மூலம்தான் அவர்கள் அந்தப் புகழைப்

பெற்றூர்கள்; வாளின் உதவியுடன் அல்ல இன்று கூட அவர்கள் பல வழிகளில் நாட்டுக்கு உதவி செய்ய முடியும். தமக்கு மட்டுமின்றி, தேசம் பூராவுக்குமே உதவிசெய்ய முடியும். தமக்கு மட்டுமின்றி, தேசம் பூராவுக்குமே உதவியாய் இருக்கும் விதத்தில் அவர்கள் உபயோகமான வேலே எதையாவது செய்யலாம். இதனுல் தேசத்தை அதன் லட்சியத்திற்கு இன்னும் சமீபமாகக் கொண்டு செல்லலாம்.''

நோவாகாலியில் நடந்த சம்பவங்களுக்கு நோவாகாலி ஆண்கள் மட்டும் பொறுப்பாளிகளல்ல என்று காந்திஜி அவர்களிடம் சொன்னுர். பெண்களுக்கும் அதில் சம பொறுப்புண்டு. அவர்கள் எல்லோரும் பய மற்றவர்களாயிருக்க வேண்டுமென்றும், பழங்காலத்தில் திரௌபதியும், சீதையும் இருந்ததைப் போல் கடவுளிடம் நம்பிக்கை யுள்ளவர்களாயிருக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார்.

தீண்டாமையை அகற்றிவிடும்படியும் காந்திஜி அவர்களேக் கேட்டுக் கொண்டார். அவர்கள் இன்னமும் தீண்டத் தகாதவர்களே விலக்கி வைத்துக் கொண்டேயிருந்தால், இன்னும் கஷ்டங்கள்தான் ஏற்படும். கூட்டத்திலுள்ளவர்கள் ஒவ்வொரு நாளும் ஒரு ஹரிஜனேத் தம்முடன் சாப்பிட அழைக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். அப்படிச் செய்ய முடியாவிட்டால், சாப்பிடுவதற்கு முன்பு ஒரு ஹரிஜனே அழைத்து, சமைத்த பதார்த்தங்களே அல்லது குடி ஜலத்தைத் தொட்டுவிட்டுப் போகச் சொல்லலாம். இயற்கைக்கு விரோதமான சாதித் தடைகளால், பல்வேறு மக்களிடையே ஏற்படுத்தப்பட்டுள்ள பிளவை நீக்குவதற்கு இது பெரிதும் உதவி செய்யும் என்று காந்திஜி சொன்னுர். தம்முடைய பாவங்களுக்காக இம்மாதிரி பிராயச்சித்தம் செய்தாலொழிய, இன்னும் கடுமையான விபரீதங்கள் எல்லோருக்கும் வந்து சேருமென்ருர்.

—'ஹரிஜன்' – 26—1—1947

# 23

# ஒரு பெண்ணின் தரும சங்கடம்

**கேள்வி :** போக்கிரிகள் தாக்கும்போது ஒரு பெண் என்ன செய்ய வேண்டும்? ஓடிவிடுவதா அல்லது பலாத்காரமாக எதிர்ப்பதா? ஓட்டமெடுப்பதற்குப் படகுகளேத் தயாராக வைத்திருப்பதா அல்லது ஆயுதங்களுடன் தற்காப்புக்குத் தயார் செய்து கொள்ளுவதா?

**பதில் :** இந்தக் கேள்விக்கு நான் அளிக்கும் பதில் மிகவும் சாதாரணமானதே. என்னேப் பொறுத்தவரையில், பலாத்காரத்திற்குத் தயார் செய்து கொள்ளுவதென்ற பேச்சே கிடை

யாது. மிகவும் உயர்ந்த தன்மை வாய்ந்த தைரியத்தை வளர்க்க வேண்டுமானல், எல்லா ஏற்பாடுகளும் அகிம்சை முறையிலேதான் இருக்க வேண்டும். எப்போதும் பயந்தாங் கொள்ளியாய் இருப்பதைவிட பலாத்காரம் விரும்பத் தக்கது என்ற முறையில்தான் அதை அனுமதிக்கலாம். ஆகையால், அவசரத்தில் ஓட்டமெடுப்பதற்குப் படகுகளைத் தயாராய் வைத்திருப்பதை நான் விரும்பமாட்டேன். அகிம் சையில் நம்பிக்கையுள்ளவர்களுக்கு அவசர நிலைமை என் பதே கிடையாது; அமைதியாகவும், கண்ணியத்துடனும் சாவுக்குத் தயார் செய்து கொள்ளுவதுதான் உண்டு. ஆகையால், ஆணுயிருந்தாலும், பெண்ணுயிருந்தாலும், தாக் கப்படும் போது சாவையும் அலட்சியமாகக் கருத வேண்டும். ஏனெனில், உண்மையான உதவி கடவுளிடமிருந்துதான் கிடைக்கும். இதைத் தவிர வேறு எதையும் நான் போதிக்க முடியாது. நான் போதிப்பதை நடைமுறையில் நானே செய்து காட்டுவதற்குத்தான் நான் இருக்கிறேன். அந்த மாதிரி வாய்ப்பு எனக்குக் கிடைக்குமா, அல்லது அளிக் கப்படுமா என்று எனக்குத் தெரியாது. போக்கிரிகளால் தாக்கப்படும் போது, ஆயுதங்களில்லாமல் தம்மைக் காப் பாற்றிக்கொள்ள முடியாத பெண்களிருந்தால், ஆயுதம் வைத்துக் கொள்ளும்படி அவர்களுக்கு யோசனை சொல்ல வேண்டிய அவசியமில்லை. தாமாகவே அவர்கள் அப்படிச் செய்வார்கள். ஆயுதங்கள் வைத்துக் கொள்ளலாமா, கூடாதாவென்று அடிக்கடி இப்படிக் கேட்பதில் ஏதோ தவறு இருக்கிறது. இயற்கையாகவே சுதந்திரமாகச் செயல் படுவதற்கு மக்கள் கற்றுக்கொள்ள வேண்டும். பலனளிக்கத் தக்க உண்மையான எதிர்ப்பு அகிம்சையில்தான் இருக் கிறது என்ற முக்கியமான போதனையை அவர்கள் ஞாப கத்தில் வைத்துக் கொண்டிருந்தால், அதற்கேற்றவாறு அவர்கள் தம் நடவடிக்கைகளை அமைத்துக் கொள்ளுவார் கள். சிந்தித்துப் பார்க்காமல் உலகமும் அப்படித்தான் செய்து கொண்டு வந்திருக்கிறது. அது அகிம்சையிலிருந்து தோன்றிய உயர்தர தைரியம் அல்லாததால், அணுகுண்டு முதல் எல்லா விதமான ஆயுதங்களையும் உலகம் சேகரித்துக் கொள்ளுகிறது. பலாத்காரத்தினுல் பிரயோசனமில்லை என்பதை அறியாதவர்கள், தம்மால் முடிந்த வரையில் ஆயுதங்களைச் சேர்த்துக்கொள்ளுவது இயற்கையே.

நான் தென்னுப்பிரிக்காவிலிருந்து திரும்பி வந்த பிறகு, இந்தியாவில் மனமறிந்தும், தொடர்ந்தும் அகிம்சையில் பயிற்சி யளிக்கப்பட்டு வந்திருக்கிறது. அதன் பலனை நாம் பார்த்திருக்கிருேம்.

**கேள்வி:** பணிவதைவிட ஒரு பெண் தற்கொலை செய்து கொள் ளலாமென்று யோசனை கூறலாமா?

பதில் : இந்தக் கேள்விக்குத் திட்டமான பதிலளித்தாக வேண்டும். நோவாகாலிக்குப் புறப்படுவதற்கு முன்பு டில்லியில் இதற்குப் பதிலளித்தேன். பணிவதைவிட ஒரு பெண் நிச்சயமாகத் தன் உயிரையேதான் மாய்த்துக் கொள்ளுவாள். அதாவது, வாழ்க்கையைப் பற்றிய என்னுடைய திட்டத்தில் பணிவதற்கே இடம்கிடையாது. ஆனால், எப்படி உயிரைப் போக்கிக் கொள்ளுவதென்று என்னிடம் கேட்கப் பட்டது. இதற்கு நான் எப்படி வழி சொல்லிக் கொடுக்க முடியுமென்று உடனே பதிலளித்தேன். இத்தகைய சந்தர்ப்பங்களில் தற்கொலை செய்து கொள்ளலாம் என்று நான் அங்கீகரித்ததில் ஒரு நம்பிக்கை அடங்கி இருக்கிறது. அதாவது, தற்கொலைக்குக் கூட ஒருவருடைய மனம் தயாராக இருந்தால், அவருக்குப் போதுமான அளவு அகத் தூய்மையும், எதிர்ப்பு உணர்ச்சியும் இருக்கும். அதிலேயே எதிரி ஓடிவிடுவான். இந்த வாதத்தை நான் இன்னும் விரிவானதாக்க முடியாது. ஏனெனில், இதில் அதற்கு இடமில்லை. அதற்கு நிதர்சனமான ருசு வேண்டும்; அத்தகைய ருசு இல்லையென்பதை ஒப்புக்கொள்ளுகிறேன்.

கேள்வி : நம்முடைய உயிரையே மாய்த்துக் கொள்ளுவதா அல்லது எதிரியைக் கொல்லுவதா என்ற நிலைமை ஏற்படும் போது, என்ன செய்ய வேண்டுமென்று சொல்லுகிறீர்கள் ?

பதில் : தன்னைத் தானே மாய்த்துக் கொள்ளுவதா, அல்லது எதிரியைக் கொல்லுவதா என்ற கேள்வி எழும் போது, தன்னைத் தானே மாய்த்துக் கொள்ளுவதுதான் நம்முடைய முடிவாயிருக்க வேண்டுமென்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

பல்லா - 27—1—47 —'ஹரிஜன்' - 9—2—47

# 24

# கடத்தப்பட்ட பெண்கள்

கேள்வி : பலவந்தமாகக் கடத்திச் செல்லப்படும் பெண்கள் தவறிழைத்தவர்களல்ல வென்றும், சமூகம் அவர்களைக் கண்டிப்பது தவறாகுமென்றும் நீங்கள் எடுத்துக் காட்டியிருக்கிறீர்கள். உங்களுடைய கருத்தை மேலும் விளக்க வேண்டுமென்று விரும்புகிறோம். இத்தகைய கொடுமைக்குட் படுத்தப்படும் பெண்கள்மீது, அவர்களுடைய இஷ்டத்திற்கு விரோதமாகத் திருமணம் என்ற ஒரு சடங்கு சுமத்தப்பட்டால், அது அந்தப் பெண்களைக் கட்டுப்படுத்துவதாகக்

கருதப்பட வேண்டுமா? சமூகமும், குடும்பமும், பரந்த மனத்துடன் அவர்களைத் திரும்ப அழைத்துக் கொள்ள வேண்டியது நியாயமில்லையா? மணமாகாத பெண்கள் இப்படிக் கடத்தப்பட்டு, இத்தகைய கேலித் திருமணங்களுக்குப் பலவந்தமாக உட்படுத்தப் பட்டிருந்தால், அவர்களை மீட்பதற்கு சமூகம் விசேஷ முயற்சி செய்யவேண்டாமா? அத்துடன் மட்டுமல்லாமல், அவர்கள் சகஜமாக மணந்து கொண்டு, அவர்கள் குற்றமற்றவர்கள் என்று ருசுப்பிக்கப்பட்டு, திரும்பவும் சமூகத்தில் சேர்த்துக் கொள்ளப்படுவதற்கும் உதவி செய்ய வேண்டாமா?

**பதில்:** நீங்கள் சொல்லுவது சரிதான். என்னுடைய கருத்துக்களைப்பற்றி நீங்கள் குறிப்பிட்டுள்ளவைகளிலேயே இவையெல்லாம் இருக்கின்றன. பலவந்தமாகக் கடத்தப்பட்ட பெண்கள், ஒரு குற்றத்தையும் செய்யவில்லையென்பதிலும், அவர்களுக்கு ஒரு மாசும் ஏற்படவில்லையென்பதிலும் எனக்குச் சந்தேகமில்லை. நியாய புத்தியுள்ள ஒவ்வொரு மனிதனின் இரக்கத்திற்கும், தீவிரமான உதவிக்கும் அவர்கள் உரியவர்கள். அத்தகைய பெண்களைக் குடும்பங்கள் மனப்பூர்வமாகவும், வாஞ்சையுடனும் வரவேற்க வேண்டும். அவர்களுக்குத் தகுதியான கணவர்களைத் தேடிக் கொடுப்பதிலும் எந்தக் கஷ்டமும் இருக்கக் கூடாது.

புது டில்லி, 24—10—46 —'ஹரிஜன்' -3—11—1946

   

தன்னை மிகவும் புண்படுத்திய இக்கடிதங்களைப்பற்றி காந்திஜி குறிப்பிட்டார். பாகிஸ்தானில் பல பெண்கள் கடத்தப்பட்டிருக்கிறார்கள். அவர்களில் சிலர் கொடூரமாகத் துன்புறுத்தப்பட்டு, கற்பழிக்கப்பட்டிருக்கிறார்கள். மீட்கப்பட்ட அந்தப் பெண்கள், வெட்கப்பட்டார்கள்; அவர்கள் வளர்க்கப்பட்டு வந்துள்ள விதம் அத்தகையது. சமூகமும் அவர்களை ஏளனம் செய்தது. அப்படிச் செய்வது கொடூரமானது. சீதையினுடைய தூய்மையும், தேஜஸும் உள்ள ஒரு பெண்ணை யாரும் தொட முடியாது என்பது உண்மைதான் என்றாலும், இந்த யுகத்தில் ஒரு சீதையைக் காண்பது கஷ்டம். அது எப்படியிருந்தாலும், எல்லாப் பெண்களுமே அந்த உன்னத நிலையை அடையமுடியாது. பலவந்தமாகக் கற்பழிக்கப்பட்ட பெண், வெட்கப்படுவதற்கு ஒன்றுமில்லை. அவர்கள் கற்பழிந்தவர்களோ, ஒழுக்கம் தவறியவர்களோ அல்ல. ஒழுக்கம் தவறிய ஆண்களும், பெண்களும் தண்டிக்கப்படாமலே தப்பிவிடுகிறார்கள். சமூகத்தில் அந்தஸ்துள்ள சில ஆண், பெண்களின் தவறுகள் வெளியே வருவதில்லை. ஆனால், மிருகத்தனத்திற்குப் பலியான குற்றமற்ற

பெண்களை ஒதுக்கிவைப்பதற்கு சிலர் ரொம்ப சிரமம் எடுத்துக் கொள்ளுவது விசித்திரமே! இத்தகைய மனப்பான்மை அவருக்கு வேதனையளித்தது. தன்னுடைய மகளோ, மனைவியோ இம்மாதிரி கொடூரத்திற்கு உட்படுத்தப்பட்டு அவள் தப்பி வந்திருந்தால் அல்லது விடுவிக்கப்பட்டிருந்தால், அவளை அவர் புறக்கணிக்கவே முடியாது. ஹிந்து, முஸ்லிம் ஆகிய இரு மதங்களையும் சேர்ந்த அம்மாதிரி பெண்களை அவர் சந்தித்திருக்கிறார். நீங்கள் வெட்கப்படுவதற்கு ஒன்றுமில்லை யென்று அவர்களிடம் அவர் சொல்லியிருக்கிறார்.

பாகிஸ்தானில் ஏராளமான ஹிந்து, சீக்கியப் பெண்கள் கடத்திச் செல்லப்பட்டிருப்பதாக காந்திஜி கூறினர். அவர்கள் என்ன என்ன அக்கிரமங்களுக்கு உட்படுத்தப்படுகிறார்களென்று கடவுளுக்குத்தான் தெரியும். யூனியனிலுள்ள ஹிந்துக்களும், சீக்கியர்களும்கூட ஒழுங்காக நடந்து கொள்ளவில்லை. கடத்தப்பட்டுள்ள முஸ்லிம் பெண்கள், வெறி பிடித்த அவர்களால், வாயினல் சொல்ல முடியாத விதத்தில் அவ்வளவு கொடூரமாக நடத்தப்பட்டிருக்கிறார்களென்று அவருக்குத் தகவல் கிடைத்திருக்கிறது. ஆபாசமான முறையில் இப்படிச் சிறைப்படுத்தப்பட்டுள்ள ஒவ்வொரு பெண்ணையும் கிழக்கு பஞ்சாப் சர்க்காரும், அதிகாரிகளும் விடுதலை செய்ய வேண்டுமென்று அவர் விரும்பினர். ஒவ்வொரு கடத்தலையும் சட்ட விரோதமானதென்றும், ஆகையால் செல்லுபடியாகாததென்றும் இரு சர்க்கார்களும் கருத வேண்டும். இத்தகைய ஒவ்வொரு பெண்ணும் விடுவிக்கப்பட்டு, அந்தந்த சர்க்கார்களிடம் ஒப்படைக்கப்படும் வரையில் ஓய்வே இல்லாமல் வேலை செய்யவேண்டியது இரு சர்க்கார்களின் கண்டிப்பான கடமையாகும். சம்பந்தப்பட்ட பெண் தானாக மனம் மாறுவது, அல்லது சேர்ந்து வாழுவது என்ற பேச்சே இருக்கமுடியாது.

[காந்திஜியின் பிரார்த்தனை பிரசங்கங்களிலிருந்து]

—'ஹரிஜன்' - 7—12—1947

  

சில இடங்களில் கடத்தப்பட்ட பெண்களில் சிலர் திரும்பி வர விரும்பவில்லை யென்று சொல்லப்பட்டது. அவர்கள் தம் மதத்தை மாற்றிக் கொண்டு மணம் புரிந்து கொண்டுவிட்டார்கள். காந்திஜி இதை நம்பவில்லை. இத்தகைய திருமணங்களும், மத மாற்றங்களும் செல்லத்தக்கவைகளல்லவெனக் கருதப்பட வேண்டும். இந்தப் பெண்கள் ஒவ்வொருவரும் தம் குடும்பத்திற்குத் திரும்பும்படி பார்த்துக் கொள்ளவேண்டியது இரு சர்க்கார்களின் கடமையுமாகும். அந்தக் குடும்பங்களும் அவர்களை மனப்பூர்வமாக வரவேற்க வேண்டும். கொடியவர்களிடம் சிக்கியதற்காக அவர்களை விலக்கி வைப்பது மன்னிக்க முடியாத கொடுமையாகும்.

இவர்களை மீட்பதற்கு ஆதரவாகப் பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்க வேண்டும். இந்தப் பெண்களை மீட்பதற்கு இரு சர்க்கார்களும் முழு மூச்சுடன் முயற்சி செய்யவேண்டும். வேறு தனி நபர்கள், அல்லது ஸ்தாபனங்களின் உதவியை அவர்கள் கோரலாம். ஆனால், இது மிகவும் பெரிய வேலை. சர்க்காரால்தான் இதைச் சமாளிக்கமுடியும்.

—'ஹரிஜன்' - 14—12—1947

  

கடத்தப்பட்ட பெண்களை வைத்திருப்பவர்கள், அவர்களை கார்டியன்களிடமோ, உறவினர்களிடமோ திருப்பி அனுப்பி விடவேண்டுமென்று காந்திஜி உருக்கமான ஒரு வேண்டுகோள் விடுத்தார். அத்தகைய பெண்களை மீட்பதற்கு ஒரு கமிட்டி அமைக்கப்பட்டிருக்கிறது. இந்தக் கமிட்டியுடன் அவர்கள் தொடர்பு கொள்ளவேண்டுமென்று அவர் கேட்டுக் கொண்டார். மனமுவந்துதான் மத மாற்றம் ஏற்பட்டது என்று சொன்னால் கூட, எந்த நிலைமையில் மத மாற்றங்கள் நடந்தன என்பதை முன்னிட்டு நமது சர்க்கார் அத்தகைய மத மாற்றங்களை அங்கீகரிக்கக்கூடாதென்று மீண்டும் வற்புறுத்தினார். இந்த மத மாற்றங்கள் முற்றிலும் பயனற்றவை, மதத்திற்கே முரணானவை என்று அவர் கருதினார்.

—'ஹரிஜன்' –28—12—1947

  

கடத்தப்பட்ட பெண்களைப்பற்றி காந்திஜி மீண்டும் பேசுகையில், அவர்களில் சிலர் கர்ப்பவதிகளாக இருப்பதாகக் கூறினார். அது அவர்களுடைய குற்றமல்ல. அவர்களுக்குக் குழந்தைகள் பிறந்தால், அக்குழந்தைகளை, மற்றக் குழந்தைகளையும்போல் மரியாதையாக நடத்தவேண்டும். அக்குழந்தைகளின் மதம் என்னவென்பது தாய்மார்களின் பொறுப்பாகும். அவர்கள் பெரியவர்களான பிறகு இஷ்டப்பட்டால், மதத்தை மாற்றிக் கொள்ளலாம். சில ஹிந்துப் பெண்களும், சீக்கியப் பெண்களும் ஒரு முஸ்லிம் பீரிடம் இருப்பதாக அவர் கேள்விப்பட்டார். அவர்கள் எந்த விதத்திலும் துன்புறுத்தப்பட மாட்டார்களென்றும், ஆனால், முஸ்லிம் பெண்களைத் திருப்பி அனுப்பும் வரையில் இவர்களையும் திருப்பி அனுப்ப முடியாதென்றும் அவர் சொல்லுகிறாராம். இம்மாதிரி விஷயங்களில் பேரம் பேச முடியுமா? மற்ற தரப்பினர் என்ன சொல்லுகிறார்கள் என்பதை கவனிக்காமல், இரு தரப்பினருமே கடத்தப்பட்ட பெண்களை மீட்டுத் திருப்பியனுப்ப வேண்டும். அப்போதுதான் அவர்கள் மரியாதையான, மரியாதைக்குரிய பிரஜைகளாக வாழமுடியும். இல்லாவிட்டால் அவர்கள் நாற்பது கோடி குண்டர்கள் கொண்டதொரு நாட்டினராய் விடுவார்கள்.

—'ஹரிஜன்' – 4—1—1948

# 25

# மக்கள் புரட்சியின் கடமை

**கேள்வி:** சமூகத்தில் நம்மிடையே உள்ள பல துர்ப்பழக்கங்களைப் பற்றி நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அவை சமூகத்தில் இருக்கின்றன. ஆனால், தேவையான சமூக மாறுதல்களைச் செய்ய ஆண்கள் விரும்பவில்லையென்றால், பெண்களாகிய நாங்கள் என்ன செய்ய முடியும்?

**பதில்:** பெண்கள், தாம் ஆண்களுக்கு உட்பட்டவர்களென்றோ, அவர்களைவிட கீழ்த்தரமானவர்களென்றோ தம்மைப்பற்றி நினைத்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. பெண், ஆணின் சரிபாதி என்று பல மொழிகளும் கூறுகின்றன. அதே வாதத்தின்படி ஆணும் பெண்ணின் சரிபாதிதான். ஆங்கில மொழி இன்னும் ஒரு படி மேலே சென்று பெண்ணை ஆணின் சிறப்புப் பாதி என்று கூறியிருக்கிறது. விரும்பத்தகாதவையும், தகுதியற்றவையுமான எல்லாக் கட்டுப்பாடுகளையும் எதிர்த்துப் பெண்கள் கலகம் செய்ய வேண்டுமென்று பின்னர் அவர் பெண்களுக்கு யோசனை கூறினார். கட்டுப்பாடுகள் பலனளிக்கத்தக்கவைகளாக இருக்க வேண்டுமென்றால், மனமுவந்து ஏற்றுக்கொள்ளப்படுபவைகளாயிருக்க வேண்டும். மக்களின் கலகத்தினால் கேடு நேருவதற்கான சாத்தியக்கூறு இல்லை. தூய்மையும் காரணபூர்வமான எதிர்ப்பும் அதில் அடங்கியிருப்பதாகவே கருத வேண்டும்.

[ காந்திஜியின் பாத யாத்திரைக் குறிப்புகளிலிருந்து ]

—'ஹரிஜன்' – 23—3—47

# 26

# கஸ்தூரிபா டிரஸ்ட்

பிரார்த்தனைக்குப் பிறகு காந்திஜி செய்த பிரசங்கத்தில், இந்திய கிராமங்களிலுள்ள பெண்கள், குழந்தைகளுக்குச் சேவை புரிவதற்காகவே இந்த டிரஸ்ட் ஏற்படுத்தப்படுகிறதென்று காந்திஜி விளக்கினார். இதற்கான ஊழியர்கள் பெரும்பாலும் நகரங்களிலிருந்து வந்தவர்கள். இதுவரையில் நகரங்கள் கிராமங்களைப் பயன்படுத்திக் கொண்டு வந்திருக்கின்றன. நகரங்கள் கிராமங்களால் பயன்படுத்திக் கொள்ளப்படவேண்டுமென்பதுதான் நியாயம். ஆனால், முதலாளிகள் இன்று கிராமங்

களிலிருந்து மூலப் பொருள்களை வாங்குகிறார்கள்; பணம் பண்ணுவதற்காக அவற்றை உபயோகித்துக் கொள்ளுகிறார்கள். இந்த சேவிகைகள் கிராமங்களுக்குத் தொண்டு புரிய விரும்பினால், அவர்கள் தம்மையே கிராமவாசிகளாக நினைத்துக்கொள்ள வேண்டும். நகர மனப்பான்மை அவர்களிடமிருந்து போய்விட வேண்டும். நகரங்களிலுள்ள நல்லவற்றை கிராமங்களுக்கு எடுத்துச் செல்லவே வேண்டும். உதாரணமாக, சுத்தம், சுகாதாரம் போன்றவைகளை அங்கே கொண்டு செல்லவேண்டும். ஆனால், இவற்றில்கூட கிராமிய மணம் கமழச் செய்யவேண்டும். அப்போதுதான் கிராமங்கள் சுரண்டப்படுவதைத் தடுத்து, அங்குள்ள பெண்கள், குழந்தைகளின் நிலையை உயர்த்தமுடியும்.

—'ஹரிஜன்' – 21—12—1947.

# மதுபானத்தை ஒழிப்பதன் அவசியம்

## 1

## கலாலும் கல்வியும்

இந்த அதருமமான வழியில் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு நமது குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்கப்படுவது நமக்குப் பெருமையளிக்கும் விஷயமல்ல. கல்விக்குப் போதிய பணம் கிடைக்காமல் போய்விடுவதாயிருந்தாலும்கூட, தைரியமாக காங்கிரஸ்காரர்கள் இந்த வருமானத்தை ஒதுக்கித் தள்ளிவிடுவதானல், அவர்களுடைய சட்டசபைப் பிரவேசத்தைக்கூட நான் மன்னித்து விடுவேன். இந்த வருமானக் குறைவுக்குச் சமமான அளவில் ராணுவச் செலவைக் குறைக்க வேண்டுமென்று அவர்கள் வற்புறுத்தினல், அப்படி ஒன்றும் கெடுதல் நேர்ந்து விடாது.

—'எங் இந்தியா' - 26—12—1924

## 2

## மதுவிலக்கு நிபந்தனைகள்

மதுவிலக்கை அமலுக்குக்கொண்டு வரவேண்டுமானல், குடியிலிருந்து கிடைக்கும் வருமானத்திற்குப் பதிலாக வேறு புதிய வருமான இனங்களைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று புரோச்சிலுள்ள அஞ்சுமன் ஸ்தாபனத்தினிடம் பம்பாய் கவர்னர் ஒளிவு மறைவில்லாமல் சொல்லிவிட்டார். அதாவது, குடித் தீமையைத் தடுப்பதைப் பற்றி சர்க்காருக்கு ஒன்றும் கவலையில்லை. போதையிலிருந்து நிதானத்திற்குத் திரும்புவதால் ஏற்படும் வருமான நஷ்டத்தை ஈடுசெய்ய வேண்டியது சீர்திருத்தக்காரர்களின் கடமையாகும். ஆகையால், சீக்கிரத்தில் மதுவிலக்கு ஏற்படவேண்டுமென்று விரும்பினல், பம்பாய் கவர்னருக்கு என்ன பதிலளிப்பதென்பது பற்றி மதுவிலக்குவாதிகள் ஒரு முடிவுக்கு வரவேண்டும். பம்பாய் கவர்னர் கூறியிருப்பது, இந்த விஷயத்தில் இந்திய சர்க்காரின் கொள்கையுமாகும்.

—'எங் இந்தியா' - 11—2—1926

# 3

# தார்வாடில் பலாத்காரம்

'கிரானிகிள்' பத்திரிகைக்கு காங்கிரஸ் கமிட்டி அனுப்பியுள்ள தந்தியை நம்பலாமென்ருல், அதிகார அங்கீகாரம் இல்லாத யாரோ ஒரு போலீஸ் அதிகாரி, பீதியடைந்து போய் நிராயுதபாணிகளான ஒரு கூட்டத்தினர் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்யும்படி உத்தரவிட்டிருக்கிருர் என்பதில் கொஞ்சமும் சந்தேகமில்லை. சர்க்கார் பொதுமக்களுக்கு மதுவகைகளை வழங்குவது ஓர் உரிமையைப் போல், கள்ளுக்கடைகள் பிடிவாதமாகத் திறந்து வைக்கப்பட்டிருப்பது, பொதுஜன அபிப்பிராயத்தைப் பகிரங்கமாகவும், தார்மிக விரோதமாகவும் மீறுவதாகும். இறந்தவர்களின் குடும்பத்தினரை நான் பாராட்டத்தான் முடியும். கூட்டத்தினர், கொஞ்சமாவது பலாத்கார மனப்பான்மை காட்டியிருந்தால், அதை நான் ஆட்சேபிக்கமுடியும். ஆனல், மாற்றப்பட்ட இலாகாக்களை நிர்வகித்து வரும் மந்திரிகள், நாட்டில் வளர்ந்துவரும் பெரும் நெருக்கடியைத் தைரியமாக எதிர்நோக்கி, எல்லாக் கள்ளுக்கடைகளையும் உடனடியாக மூடி, லைசென்ஸுக்காரர்கள் கொடுத்த முன்பணத்தைத் திருப்பிக் கொடுக்காவிட்டால் தாம் பிரதிநிதித்துவம் வகிக்கும் மகத்தான கட்சியின் பாரம்பரியத்தை மீறியவர்களாவார்களென்று மரியாதையுடன் எச்சரிக்கிறேன். இரட்டைப் பாவத் தன்மை வாய்ந்த இந்த வியாபாரத்திலிருந்து கிடைக்கும் அதரும வருமானம் நஷ்டப்படுவதைக்கண்டு அவர்கள் கலங்கக்கூடாது. விழிப்படைந்துள்ளதும், ஆத்திர மடைந்துள்ளதுமான பொதுஜன மனச்சாட்சியின் முன்பு அது நீடிக்கமுடியாது. அதருமமான வழியிலிருந்து கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு கல்வியை ஆதரிக்க வேண்டியிருப்பதே கெடுதலான காரியம். குற்றமற்றவர்களின் ரத்தமும் அதில் கறைபடியும்போது, அது நாற்றமடிக்க ஆரம்பித்துவிடும். காலம் கடந்து போய்விடுவதற்கு முன்பு மந்திரிகள் இந்த எச்சரிக்கையைக் கவனிக்க வேண்டுமென்று மன்ருடிக் கேட்டுக்கொள்ளுகிறேன். வருமானத்தைப் பெரிதாக நினைத்து அவர்கள் காலப்போக்கை உணராமல் அலட்சியமாயிருந்தார்கள் என்ற பெயர் எடுக்க வேண்டாம். அவர்கள் மணிக்கணக்கிலோ, வாரக்கணக்கிலோ காத்துக்கொண்டிருக்கக்கூடாது. குடி வருமானத்தைக் கைவிடுவதற்கு முன்பு, வேறு வருமான இனங்களைக் கண்டுபிடிப்பதற்காகக் காத்துக்கொண்டிருப்பது தவருகும். வேறு ஒரு வீடு தயாராயிருந்தால்தான் கொள்ளை நோய் பீடித்துள்ள ஒரு வீட்டிலிருந்து வெளியேறுவேன் என்று ஒருவன் சொல்லுவதைப் போன்றதுதான் இது. அத்தகைய நிலைமையில் பெரும்பாலோர், முதலில் காலி செய்துவிட்டு, இந்த நோய் இல்லாத வேறு வீட்டைத் தேடுவர்.

—'எங் இந்தியா' –6—7—1921

# 4
# சீலத்திற்குத் தண்டனை

"ஏன் மரங்களிலிருந்து கள்ளிறக்கவில்லை, கடையை நடத்தவில்லை என்பதற்குக் குத்தகைக்காரர் சொல்லும் சமாதானம் திருப்திகரமாயில்லை. அவருக்கு ஐம்பது ரூபாய் அபராதம் விதிக்கப்படுகிறது."

சென்னை ராஜதானியிலுள்ள நாமக்கல் ரெவினியூ டிவிஷனல் ஆபீஸர் பிறப்பித்துள்ள உத்தரவு இது. இது ஒரு கள்ளுக்கடை என்பதை வாசகர்கள் அறிந்திருப்பார்கள். குடிகாரர்கள் குடிப்பதில்லையென்று தீர்மானித்துவிட்டதாகவும், ஆகையால், கடையைத் திறந்து வைத்திருப்பதில் பிரயோசனமிருப்பதாகத் தான் நினைக்கவில்லையென்றும் குத்தகைக்காரர் சமாதானம் சொல்லியிருந்தார். ஆயினும், குத்தகைப் பணத்தைக் கொடுக்க அவர் தயாராயிருந்தார். இந்த சமாதானம் திருப்தியளிக்கவில்லை. தாம் புதிதாக மேற்கொண்டுள்ள மதுவிலக்கு என்ற அனுபவத்திற்காக, கள் வியாபாரத்தினால் ஒரு வருடம் பூராவிலும் எவ்வளவு லாபம் கிடைக்குமென்று நிர்ணயிக்கப்பட்டிருந்ததோ அந்தத் தொகையை கிராமவாசிகள் கொடுக்கத் தயாராயிருந்தார்கள். ஆனால், சர்க்கார் அதை ஒப்புக்கொள்ளவில்லை. ஏனெனில், சட்டம் அவர்களுக்கு விரோதமாக இருக்கிறது. இந்த நடவடிக்கை பூராவும் சட்ட பூர்வமாகப் பரிசீலனை செய்யப்பட்டால், சம்பந்தப்பட்ட அதிகாரிகள் ஒருக்கால் வேறெந்த முடிவையும் அளிக்க முடியாது என்று புலப்படும். அவர்கள் மீது தவறில்லை. அந்த முறைதான் கெடுதலானது; ஏனெனில், அந்த முறையில் வருமானம்தான் முக்கியமாயிருக்கிறது. உள்ளமோ, உடலோ முக்கியமாகக் கருதப்படவில்லை. வேறு விதமாக இருந்திருந்தால், கள் அபினி வியாபாரம் வெகுகாலத்திற்கு முன்பே போயிருக்கும். அபராதங்கள், மற்றும் இதர தண்டனைகளைப் பொருட்படுத்தாமல், தாங்கள் ஆரம்பித்துள்ள சீர்திருத்தத்தைத் தொடர்ந்து நடத்துவதற்கு வேண்டிய உறுதி கிராமவாசிகளுக்கும், அந்தக் குத்தகைக்காரருக்கும் இருக்குமென்றே நம்புகிறேன்.

—'எங் இந்தியா' - 22—5—1924

# 5
# மது விலக்கு

மதுவிலக்குப் பிரசாரம் செய்யும் பொறுப்பைக் காரியக் கமிட்டி ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியாரிடம் ஒப்படைத்திருக்கிறது. இந்திய மதுவிலக்குச் சங்கத்தின் வெளியீடான 'மது

விலக்கு' என்ற மாதப் பத்திரிகையின் முதல் இதழை அவர் வெளியிட்டிருக்கிருர். இதன் விலை இரண்டணு; தபால் செலவு பிரத்தியேகம். திருச்செங்கோடு, காந்தி ஆசிரமத்திலிருந்து இதன் பிரதிகளைப் பெற்றுக்கொள்ளலாம். அதில் உள்ள விஷயங்கள் ருசிகரமாயிருக்கின்றன. சர்க்கார், எல்லா விதங்களிலும் மதுவிலக்குக்கு எப்படிக் குறுக்கே நிற்கிருர்கள் என்பதை அது காட்டுகிறது. தாமோ என்பது, மத்திய மாகாணத்திலுள்ள ஒரு ஜில்லா. எவ்வளவோ எதிர்ப்புகள் இருந்தும் அங்கே மதுவிலக்கு ஆரம்பிக்கப்பட்டது. இந்த இயக்கத்தின் சரித்திரத்தை அறிந்து கொள்ள விரும்புபவர்கள் இந்தப் பத்திரிகையைப் படிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஒரு கள்ளுக்கடைக் காரர் நஷ்டஈடு கோரியுள்ள பரிதாபமான கதையை மட்டும் நான் அதிலிருந்து எடுத்துக்கொடுக்காமலிருக்க முடியவில்லை.

"சென்னை, சேலம் ஜில்லா, சிங்காரப்பேட்டை கிராம முனிசீப்பான பெருமாள் நாயுடு என்பவர் பின்கண்ட குற்றங்களுக்காக ரெவினியூ டிவிஷனல் அதிகாரியால் விசாரிக்கப்பட்டார் :

(1) "கிராமத்திலுள்ள யாரும் கள் குடிக்கக் கூடாதென்று தண்டோரா மூலம் அவர் அறிவித்தார். (2) இனிமேல் குடிப்பதில்லையென்று ஆதித்திராவிடர்களிடமிருந்து உறுதிமொழிகள் வாங்கினர். (3) குடிக்கு எதிராக அவர் சாதிக் கட்டுப்பாட்டை ஏற்பாடு செய்தார்; இந்த விதியை மீறியவர்களுக்கு அபராதம் விதித்தார். (4) குடித்ததற்காக நொள்ளையன் என்ற ஒருவனை அடித்தார்.

"பெருமாள் நாயுடு இந்தக் குற்றச்சாட்டுகளை ஒப்புக்கொள்ளவில்லை. தான் எப்போதுமே சர்க்காருக்கு உதவி செய்திருப்பதாகக் கூறினர். 'சர்க்காரை ஆதரிப்பதும், இம்மாதிரி விஷயங்களில் நல்ல வருமானம் பெறுவதற்கு எல்லா உதவிகளும் செய்வதுதான் தன்னுடைய கடமை, நோக்கம் என்றும், அப்படியே செய்து வந்திருப்பதாகவும், அதை மீறிப்போனதே இல்லை' என்றும் தனக்கே உரிய அழகிய பாஷையில் அவர் கூறுகிருர்.

"ஆனல், அவர் சொன்னது நம்பப்படவில்லை. டிவிஷனல் ஆபீஸர் அவரை ஒரு வருடத்திற்கு 'சஸ்பென்ட்' செய்து வைத்தார். அந்த அதிகாரியின் உத்தரவில் கடைசி பாராவுக்கு மட்டும்தான் நகல் கொடுக்கப்பட்டிருக்கிறது. பாக்கியெல்லாம் 'அந்தரங்கம்'. அந்தக் கடைசி பாராவில் அதிகாரி பின்வருமாறு கூறுகிருர் :

'குடிக்கு எதிராக கிராமத்தில் ஓர் இயக்கம் இருந்தது. யாரும் கள் குடிக்கக் கூடாதென்று கிராமத்தில் தண்டோரா போடப்பட்டது. இந்த விஷயத்தைப்பற்றி அதிகாரிகளுக்குத் தகவல் கொடுக்காததன் மூலம் கிராம முனிசீப் தனது கடமையைச் செய்யத் தவறி விட்டார் என்பது சந்தேகத்திற்கிடமில்லாமல் ருசுப்பிக்கப்பட்டிருக்கிறதென்று நான் கருதுகிறேன். இந்த இயக்கத்தில் அவர் தீவிரமாகக் கலந்து கொள்ளாவிட்டாலும், இதைக் கவனிக்காதது போலிருந்துவிட்டார் என்று கூறுவதற்கு நல்ல காரணங்களிருக்கின்றன. அவருடைய முந்தைய நடவடிக்கைகளைப் பார்க்கும்போது, அவர் தன்னிஷ்டப்படி காரியங்கள் செய்யக்கூடியவரென்று தெரிகிறது. ஆயினும், அவர் 25 வருடங்கள் வேலை பார்த்திருக்கிருர் என்பதைக் கருதி, அவர் திருந்துவதற்கு

ஒரு சந்தர்ப்பம் கொடுக்கிறேன். அவரை ஒரு வருடத்திற்கு 'சஸ்பென்ட்' செய்கிறேன். இனிமேல் எந்தப் புகாருக்கும் அவர் இடம் கொடுத்தால் வேலையிலிருந்து நீக்கப்படுவார் என்றும் கடுமையாக எச்சரிக்கிறேன்'' (டி. நெ. 3469/26—1927 ஏப்ரல் 5)

இலாகாவினால் அவருக்கு இந்தத் தண்டனை விதிக்கப்பட்டது போதா தென்று, பிரதிவாதியின் நடவடிக்கைகள் காரணமாக, மூன்று மாதங்களுக் குத் தனக்கு வியாபாரமே இல்லாமற் போய்விட்டதென்ற காரணத்தைக் காட்டி, உள்ளூர் கள்ளுக்கடை குத்தகைக்காரர் அவரிடம் ரு. 300 நஷ்ட ஈடு கோரி ஒரு வியாஜ்யம் போட்டிருக்கிறார். 1926 ஜனவரியிலிருந்து, மார்ச் வரையில் தனக்கு ஏற்பட்ட நஷ்டத்தை அவர் ஈடு செய்ய வேண்டு மென்று கோரி யிருக்கிறார். இந்த வியாஜ்யத்தில் பின்கண்ட கேள்விகளை முனிசீப் தயாரித்திருக்கிறார்:

(1) இந்த தாவா எழுந்ததிலிருந்து ஒரு வருட காலத்திற்குள் வியாஜ் யத்தைத் தாக்கல் செய்திருக்க வேண்டாமா? (2) மனுவில் குறிப்பிட்டுள்ள காரியங்களைப் பிரதிவாதி செய்து, சட்ட பூர்வமாகக் கவனிக்கப்பட வேண்டிய நஷ்டத்தை விளைவித்தாரா? (3) அப்படியானால், பிரதிவாதி எந்த அளவுக்கு நஷ்டத்தை ஈடு செய்ய வேண்டும்?

வியாஜ்யம் இன்னும் நடந்துகொண்டிருக்கிறது.''

இம்மாதிரியான காரியங்கள் சாத்தியமாயுள்ள ஒரு முறையை சைத்தான் முறை என்று நான் சொல்லுவதில் என்ன ஆச்சரியம்? இதைவிட இன்னும் பெரிய சைத்தான் முறைகள் இருக்கலா மென்று என்னிடம் சொல்லவேண்டிய அவசியமில்லை. எந்த சைத்தான் முறை தேவலை என்று நான் பொறுக்கி எடுக்கும்போது அப்படிச் சொல்லலாம். செம்ஸ்போர்ட் கிளப்பில் சமீபத்தில் வைஸ்ராய்க்கு அளிக்கப்பட்ட விருந்தைப்பற்றி மகாதேவ தேசாய் சொன்னதுபோல், இதில் உள்ள பரிதாபம் என்ன வென்றால், பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்கும் படித்த இந்தியர்களில் பலர் இந்தச் சைத்தான் வலையில் சிக்கிக்கொண்டு விடுகிறார்கள். அந்த விருந்தில் ஒன்றிரண்டு இந்தியர்களைத் தவிர மற்றவர்களெல்லாம் மனமார சாம்பெயின் மதுவை அருந்தினார் கள்! சுதந்திரம், நாகரிகம், பண்பாடு போன்றவைகளின் காவலனைப்போல் மாறுவேடமணிந்து சைத்தான் வரும்போது, தன்னுடைய கவர்ச்சியிலிருந்து யாரும் தப்ப முடியாத விதத்தில் வருகிறான். ஆகையால், மதுவிலக்கு காங்கிரஸின் வேலைத்திட்டத் துடன் இணைந்த ஒன்றாய் இருப்பது நல்லதே.

—'எங் இந்தியா' - 11—7—1929

# 6

# மதுவிலக்கும் சென்னை சர்க்காரும்

சர்க்கார் உத்தரவு ஒன்றை ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியார் தேடிக் கண்டுபிடித்திருக்கிறார். அது மிகவும் சாதாரணமாய்த் தானிருக்கிறது. ஆனால், எவ்வளவு அர்த்தமுள்ளது! இந்த உத்தரவின் நகல் ஒன்றுடன், ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் பத்திரிகைகளுக்கு ஒரு குறிப்பையும் அனுப்பியிருக்கிறார்:

"சீர்திருத்தத்திற்குப் பிறகு நமக்கேற்பட்டுள்ள பல தொடர் செலவுகளில் புதிய சுகாதார அதிகாரிகளும், அவர்களுடைய சிப்பந்திகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றனர். காலரா, மலேரியா முதலியவைகளைப்பற்றிப் பொதுஜனங்களுக்கு அவர்கள் விஷய அறிவு புகட்ட வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிறது."

குடிப்பழக்கத்தை எதிர்த்தும் தாங்கள் பிரசாரம் செய்ய வேண்டுமா வென்று அந்தச் சிப்பந்திகளில் சிலர் கேட்டிருக்கிறார்கள் போலிருக்கிறது. அவர்களுக்குப் பின்கண்டவாறு பதில் கிடைத்திருக்கிறது:

"பொது சுகாதார இலாகா சிப்பந்திகள், குடி எதிர்ப்புப் பிரசாரம் செய்யக் கூடாதென்று சர்க்கார் கருதுகிறார்கள்."

குடிக்கு எதிராகப் பிரசாரம் செய்யக்கூடாதென்ற தடைக்கு எந்தவிதமான காரணமும் கூறப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஜனப்பிரதிநிதிகளின் சர்க்கார் இருந்தால், குடியினால் உடல் நலம் எப்படிப் பாதிக்கப்படுமென்பதை, சுகாதாரத்தைப் பேணும் இந்த அதிகாரிகள் மக்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டுமென்று தெளிவாக உத்தரவு பிறப்பிப்பார்கள் என்றே எதிர்பார்ப்போம். குடிப் பழக்கம் உடலுக்கு எவ்வளவு பெரிய கெடுதலை விளைவிக்கும் என்பதையும், குடி எவ்வளவு அழிவை விளைவிக்கிறது என்று பிரத்தியட்சமாக சினிமா படங்கள் மூலமும் அவர்கள் எடுத்துக்காட்ட வேண்டியிருக்கும். ஆனால், இப்போதுள்ள சர்க்கார், அம்மாதிரி எதுவும் செய்வார்களென்று எதிர்பார்ப்பது பைத்தியக்காரத்தனமாகும். கள்ளுக்கடை வைத்திருப்பவன், 'சாவுக் குழியில் விழாதீர்கள். ஜாக்கிரதை' என்று வருபவர்களிடம் எச்சரிக்க வேண்டுமென்றுகூட எதிர்பார்க்கலாம். இந்தியாவிலுள்ள எல்லாக் கள்ளுக்கடைகளையும் இந்திய சர்க்காரே வைத்து நடத்துபவர்களல்லவா? இந்த 25 கோடி ரூபாய் வருமானத்தினால்தான் நம்முடைய குழந்தைகளுக்குச் சர்வகலாசாலைக் கல்வி அளிக்க முடிகிறது. இதனால்தான் சர்க்காரும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை நம்மீது சுமத்த முடிகிறது. மக்கள் தமது கடமையை உணர்ந்து, சர்க்காரின் குடிக் கொள்கையை எதிர்ப்பதற்கான பலத்தை வளர்த்துக்கொள்ளும் வரையில், இந்தியாவில் மதுவிலக்கைக் கொண்டு வருவது சாத்தியமல்ல.

—'எங் இந்தியா' – 6—8—1926

# 7

# இந்தியா மதுவிலக்கைக் கோருகிறதா?

பஞ்சாபில் நிதிக் கமிஷனராயுள்ள ஸ்ரீ கிங் செய்த ஒரு பிரசங்கத்தில், ஒரு வருடத்திற்கு முன்பு பஞ்சாபில் நிறைவேற்றப் பட்ட ஸ்தல அனுமதிச் சட்டம் முழுத் தோல்வி யடைந்துவிட்ட தென்று சொன்னாராம். இந்தியாவில் பூரண மதுவிலக்கு ஏற்படு வதை எதிர்ப்பவர்கள், இந்தப் பிரசங்கத்தைக் காட்டிப் பிரமாதப்படுத்தியிருக்கிறார்கள். தன்னுடைய கருத்துக்கு ஆதாரமாகக் கமிஷனர் பின்கண்ட விவரங்களைக் கொடுத்திருக் கிறார்:

மொத்தம் உள்ள சுமார் 200 நகர சபைகள், ஜில்லா போர்டு கள் முதலியவற்றில், 19 ஸ்தாபனங்களே இந்தச் சட்டத்தின் கீழ் தமக்கு அனுமதி கொடுக்க வேண்டுமென்று கேட்டிருக்கின் றன. இந்தப் பத்தொன்பதிலும் ஆறு ஸ்தாபனங்களே மேற் கொண்டு நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டன. அந்த ஆறில் நடத்தப்பட்ட வாக்கெடுப்புக்கும் ஆதரவு கிடைக்கவில்லை. உதாரணமாக, ராவல்பிண்டியில் 7000 வோட்டர்கள் இருக்கிறார் கள். இதில் 6 பேர்களே தம் வோட்டுகளைப் பதிவு செய்தார் கள். லூதியானாவில், 12,500 வோட்டர்களில், முதல் வாக் கெடுப்பின் போது ஒருவர்கூட வோட் போட வரவில்லை. வாக் கெடுப்புக்கு இன்னொரு நாள் குறிப்பிடப்பட்டது. அன்று நாலு பேர்தான் வந்தார்கள். டொஹானா என்ற ஒரு சிறிய நகரத்தில், 1062 வோட்டர்களில், 802 பேர் பூரண மதுவிலக்கை ஆதரித்து வோட் அளித்தார்கள்.

இந்தியாவுக்கும், இந்திய நிலைமைகளுக்கும் புதிதான ஒருவர் என்ன சொல்லியிருப்பார்? பஞ்சாபில் யாரும் பூரண மது விலக்கு கோரவில்லை என்றுதான் சொல்லுவார். ஸ்ரீ கிங்கும் அப்படித்தான் கூறியிருக்கிறார். ஒரு சமூகம் என்ற முறையில் தமக்குச் சம்பந்தமுள்ள விஷயங்களில்கூட ஜனங்கள் அலட்சிய மாயிருக்கும் நிலைமை இருந்து வருவதுதான் இந்தியாவின் துர திருஷ்டம். வாக்கெடுப்பு நடத்துவதற்குச் செய்யப்பட்ட ஏற் பாடுகள் அவர்களுக்குப் புதியவை. பூரண மதுவிலக்கு சம்பந்த மாக ஒரு வாக்கெடுப்பு நடத்தப்படுகிறதென்ற விஷயம்கூட வோட்டர்களுக்குத் தெரியாதோ, என்னவோ. இந்தியாவிலுள்ள மிகப் பெரும்பான்மையான மக்கள் குடிப்பதில்லை. போதை வஸ்துக்களைச் சாப்பிடுவது இஸ்லாத்திற்கும், ஹிந்து மதத்திற் கும் முரணானது என்ற விஷயங்கள், இந்தியாவைப் பற்றிக் கொஞ்சமாவது தெரிந்தவர்களுக்கெல்லாம் தெரியும். இது ஸ்ரீ கிங்குக்கும் தெரிந்திருக்க வேண்டும். ஆகையால், முழுத்தோல்வி என்று ஸ்ரீ கிங் குறிப்பிட் டிருப்பதிலிருந்து ஊகிக்க வேண்டியது, பஞ்சாப் பூரண மதுவிலக்கை எதிர்க்கிறது என்பதல்ல.

பஞ்சாபிலுள்ள மக்கள் குடிப்பவர்களல்ல என்றும், குடித்துத் தம்மைப் பாழாக்கிக்கொள்ளுபவர்களைப்பற்றி அவர்கள் கவலைப் படவில்லையென்றும்தான் ஊகிக்க வேண்டும். முனிசிபல் கமிஷனர்களும், ஸ்தல ஸ்தாபனங்களின் மெம்பர்களும், மிகுந்த சமூக முக்கியத்துவம் வாய்ந்த இந்த விஷயத்தில் வோட்டர்களுக்குத் தாம் செய்யவேண்டிய கடமையில் தவறிவிட்டார்களென்றும் ஸ்ரீ கிங் ஊகிக்கலாம். ஆனால், அவர் குறிப்பிட்டுள்ள விவரங்களை ஆதாரமாகக் கொண்டு, பூரண மதுவிலக்கை பஞ்சாப் எதிர்க்கிறது என்று சொல்லுவது, விஷயமறியாதவர்கள், புதிதாக வருபவர்களின் கண்களில் மண்ணைத் தூவுவதாகும். துரதிருஷ்டவசமாக அதுதான் அதிகாரிகளின் வழக்கம். பிரச்னைகளைப் பாரபட்சமில்லாமலும், பொது மக்களின் கண்ணோட்டத்துடனும் அணுகுவதற்குப் பதிலாக, தம்மைத் தாமே சர்க்காரின் கொள்கைகளுக்கு ஆதரவாளர்களாய் நியமித்துக் கொண்டு விடுகிறார்கள்; அல்லது எப்படியும் நடத்தித் தீரவேண்டும் என்று சர்க்கார் விரும்பும் முறைகளுக்குத் தம்மை ஆதரவாளர்களாக நியமித்துக் கொண்டு விடுகிறார்கள். பசுவையும், அதன் கன்றையும் கொல்லுவதை ஹிந்துக்கள் எதிர்ப்பவர்களென்பது யாவரும் அறிந்த உண்மை. குடி விஷயமாக எடுக்கப்பட்ட வாக்கெடுப்பைப்போல் அதே முறையில் ஒரு வாக்கெடுப்பு நடப்பதாக வைத்துக்கொள்ளுவோம். லட்சக்கணக்கான ஹிந்துக்கள் தமது வோட்டுகளைப் பதிவு செய்யாவிட்டால், இந்திய நிலைமைகளை அறிந்த யாரும், புனிதமான பசுக்கள் கொல்லப்படும் கசாப்புக் கடைகளை ஹிந்துக்கள் விரும்புகிறார்களென்று சொல்ல முடியுமா? சமூகத் தவறுகளைக் கண்டு ஆத்திரப்படும் அவ்வளவு உணர்வு மக்களிடையே ஏற்படவில்லை யென்பதுதான் உண்மை. இது வருந்தத்தக்கதுதான் என்பதில் சந்தேக மில்லை. இந்த நிலைமை கொஞ்சம் கொஞ்சமாக மாற்றப்பட்டு வருகிறது. குறிப்பிட்ட சில உண்மைகள் இருந்தால், குறிப்பிட்ட சில முடிவுகளுக்கு வர முடியும். அந்த உண்மைகளை மறைப்பது முற்றிலும் மாறான முடிவுகளில் கொண்டு போய்விடும். இப்படி உண்மைகளை மறைப்பது கொடிய காரியமாகும்.

—'எங் இந்தியா' - 8—4—1926

## 8

# லேசான ஒரு கண்டனம்

குடியின் தீமையைப்பற்றி அச்சில் வரும் எதுவும் ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியின் பருந்துக் கண்களுக்குத் தப்புவதில்லை. ஒரு நெசவுக் கழகத்தின் அஸ்திவாரக்கல்லை நாட்டி அன்று மாரோலி*

---

* மாரோலி என்பது சூரத்திலிருந்து 12 மைல் தூரத்தில் தெற்கே உள்ள ஒரு சிறு கிராமம்.

கிராமத்தில் நான் செய்த மிகவும் சாதாரணமான ஒரு பிரசங்கத்தைப்பற்றிய செய்தியை அவர் பார்த்திருக்கிறார். தொழிற்சாலையில் வேலை செய்பவர்களுக்கும் குடிக்கும் உள்ள சம்பந்தத்தை அங்கே நான் எடுத்துக்காட்ட முயன்றேன். தான் மறியல் செய்யும் கள்ளுக்கடைகளுக்கு வருபவர்களை, நிரந்தரமாகக் குடிப்பழக்கத்திலிருந்து திருப்பவேண்டுமானால்,வாழ்க்கையில் அவர்களுக்கு ஏதாவது ஓர் ஆசை இருக்கும்படியாகச் செய்யவேண்டும். அவர்களுடைய ஓய்வு நேரத்திற்கு ஏதாவது வேலை கிடைக்கச் செய்ய வேண்டும் என்பதைத் தான் உணர்ந்ததாக மிதுபென் பெடிட் கூறியிருப்பதை எடுத்துக் காட்டினேன். ராட்டையில் நூற்பதும்,நெய்வதும் அதற்குச் சரியான உபாயங்களாகும் என்று மிதுபென் கண்டுபிடித்ததையும் சொன்னேன். யாரும் மிகவும் அதிகமாக வேலை செய்ய வேண்டியிருந்தால், அவர்களை ஊக்குவிக்கும் பொருள் ஏதாவது வேண்டியிருக்கும் என்பதையும் எடுத்துக் காட்டினேன். என் வாழ்க்கையிலேயே ஏற்பட்டிருந்த ஓர் உதாரணத்தைக் குறிப்பிட்டேன். போயர் யுத்தத்தின் போது, குடிப்பழக்கம் உள்ள பணியாட்களுக்கு நான் ரம் என்ற மதுவகைக்கு அனுமதிச் சீட்டு கொடுக்கவேண்டியிருந்தது. தங்களுடைய களைப்பைப் பொறுத்துக்கொண்டு, மறுநாள் வேலைக்குத் தயாராவதற்கு அது தங்களுக்கு உதவி செய்யுமாகையால், தமக்கு ரம் கொடுக்கவேண்டுமென்று அவர்கள் கெஞ்சுவார்கள். இது மூட நம்பிக்கைதான். ஆயினும், மூட நம்பிக்கைகளைச் சுலபத்தில் விட்டொழிப்பது கஷ்டம் என்று அக்கூட்டத்தில் கூறினேன்.

தாம் வாசித்த அந்தச் செய்தியை, மதுவிலக்கை எதிர்ப்பவர்கள் தங்களுக்குச் சாதகமான அர்த்தம் கொடுக்கும்படி பல விதங்களிலும் திரித்துவிட முடியும் என்று ராஜகோபாலாச்சாரியார் அஞ்சினார். அவருடைய அச்சம் நியாயமானதுதான் என்பது ருசுவாகிவிட்டது. எனக்கு மீண்டும் நிதானபுத்தி ஏற்பட்டுவிட்டதைப் பாராட்டி தருமசங்கடமான பல தந்திகள் வந்திருக்கின்றன. நான் ஏதோ மாறிவிட்டதாகச் சொல்லுகிறார்களல்லவா? அப்படி நான் மாறியிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. அதனால்தான் தருமசங்கடமாயிருக்கிறது. என் நிலைமை எப்படி இருக்கிறது தெரியுமா? ஒரு மனிதன் உயிருடனிருக்கும்போதே அவன் இறந்துவிட்டானென்று தவறாக எண்ணிக்கொண்டு அவனுடைய குணாதிசயங்களைப்பற்றிப் பத்திரிகைகளில் புகழுரைகள் பிரசுரிக்கப்படுவதாக வைத்துக்கொள்ளுவோம். ‘நம்மிடம் இவ்வளவு நல்ல குணங்கள் இருந்தன என்று எனக்கே தெரியாதே’ என்று அவனுக்கு எவ்வளவு வெட்கமாயிருக்கும். எனக்கும் அப்படித்தான் இருக்கிறது.

இந்த விஷயம் இன்னும் பெரிதாவதற்குள், பரிபூரணமான மதுவிலக்கில் எனக்குள்ள நம்பிக்கையை மீண்டும் அறிவித்துக் கொள்ள விரும்புகிறேன். ஒரு மணி நேரத்திற்கு இந்தியா பூரா

வுக்கும் என்னை சர்வாதிகாரியாக நியமித்தால், முதல் காரியமாக நான் என்ன செய்வேன் தெரியுமா? நஷ்டஈடு கொடுக்காமல் எல்லா கள்ளுக்கடைகளையும் மூடிவிடுவேன். குஜராத்தில் உள்ள கள்ளு மரங்களையெல்லாம் அழித்துவிடுவேன். தொழிற்சாலை அதிபர்கள், தம்மிடம் உள்ள தொழிலாளர்கள் சிரமமில்லாமல் வேலை செய்வதற்கான நிலைமையை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும் என்றும், இவர்கள் சாதாரண பானங்கள் அருந்துவதற்கும், அதே மாதிரி சாதாரணமாகப் பொழுதுபோக்குவதற்கும் உணவு விடுதிகளையும், ஓய்வு அறைகளையும் ஏற்படுத்தித் தரவேண்டுமென்றும் வற்புறுத்துவேன். தொழிற்சாலை அதிபர்கள் இதற்கெல்லாம் பணமில்லையே என்று சொன்னால், அந்தத் தொழிற்சாலைகளை மூடிவிடுவேன். எனக்குக் குடிப்பழக்கமே கிடையாது. ஆகையால், நான் ஒரு மணி நேரம் சர்வாதிகாரியாயிருந்தால்கூட நிதானம் தவறாமலே இருப்பேன். எனது ஐரோப்பிய நண்பர்களையும், வைத்திய காரணங்களுக்காக பிராந்தி அவசியமாயிருக்கும் வியாதியஸ்தர்களையும், சர்க்கார் செலவில் வைத்தியர்களால் பரிசோதிக்கச் செய்வேன். நெருப்புப் போன்ற இந்த திராவகம் யாருக்காவது தேவையாயிருக்கிறதென்றால், வைத்தியர்களால் அனுமதிக்கப்படும் அளவுக்கு, மருந்து வியாபாரிகளிடமிருந்து அவர்கள் அதைப்பெற சீட்டுகள் கொடுக்கப்படும். போதையளிக்கும் மற்ற வஸ்துக்களுக்கும் இந்த விதி பொருந்தும்.

குடியினால் இழக்கும் வருமானத்தை ஈடு செய்வதற்காக, ராணுவச் செலவை உடனடியாகக் குறைத்துவிடுவேன். புதிய நிலைமைக்கேற்றவாறு சேனாதிபதி எப்படியாவது சரிப்படுத்திக் கொள்ள வேண்டுமென்று எதிர்பார்ப்பேன். தொழிற்சாலைகளை மூடிவிடுவதால் தொழிலாளர்கள் வேலையில்லாமற்போய் விடுவார்களல்லவா? சாத்தியமான வரையில் தொழிற்சாலைகளுக்குப் பக்கத்திலேயே இவர்களுக்காக மாதிரிப் பண்ணைகள் ஆரம்பிக்கப்படும். இத்தொழிலாளர்கள் அங்கே அனுப்பப்பட்டுவிடுவார்கள். தொழிற்சாலைகளைச் சொந்தக்காரர்களிடமிருந்து அரசாங்கமே மேற்கொண்டு லாபகரமாக நடத்தலாம் என்று அந்த ஒரு மணிநேரகாலத்தில் எனக்கு யோசனை கூறப்பட்டிருந்தாலொழிய இப்படித்தான் செய்வேன்.

—'எங் இந்தியா' – 25—6—1931

## 9

# இந்திய சமஸ்தானங்களில்

தம்முடைய வருமானத்தை அதிகமாக்கிக்கொள்ளுவதற்காக, சமஸ்தானாதிபதிகளும், பிரிட்டிஷ் மது இலாகாவைப் பின்பற்றுவது மிகவும் வேதனை அளிப்பதாயிருக்கிறது. லாகிரி

வஸ்துக்களை உபயோகிப்பது என்பது இந்தியாவில் புராதன மான ஒரு சாபக்கேடு என்று சொல்லப்படுகிறது. அந்த அர்த்தத்தை நான் ஒப்புக்கொள்ள வில்லை. முன்காலத்தில் சமஸ்தானதிபதிகள் மதுபான வியாபாரத்தினல் ஏதோ வரு மானம் பெற்றிருக்கலாம். ஆனல், இப்போதிருப்பதைப்போல் அவர்கள், மனிதர்களை குடிக்கு அடிமைகளாக்கியதில்லை. நான் சொல்லுவது தவறென்றும், இப்போதிருப்பதைப் போன்ற கலால் வருமானம் தொன்றுதொட்டு இருந்து வருகிறது என்றும் வைத்துக்கொண்டாலும், புராதனமானவை என்பதற் காக எல்லாமே நல்லதாய்த்தானிருக்கவேண்டுமென்ற மூட நம்பிக்கையை நான் ஒப்புக்கொள்ளவில்லை. ஒரு பழக்கம் இந் தியப் பழக்கம் என்பதனல் அது நல்லதாய்த்தானிருக்க வேண்டும் என்பதையும் நான் ஒப்புக்கொள்ளவில்லை. அபினி, மற்றும் போதை யளிக்கும் பொருள்கள், மனிதனின் உள்ளத்தை மூடமாக்கி, மிருகங்களுக்கும் கீழ்த்தரமான நிலைக்கு அவனைக் கொண்டு வருகின்றன என்பதை யாரும் பார்க்கலாம். அந்த வஸ்துக்களில் வியாபாரம் செய்வது பாவகரமானது என்பது கண்கூடு. இந்திய சமஸ்தானங்கள் எல்லாக் கள்ளுக்கடை களையும் மூடிவிட்டு, பிரிட்டிஷ் நிர்வாகிகள் பின்பற்றுவதற்கு ஒரு நல்ல உதாரணத்தைக் காட்டவேண்டும்.

—'எங் இந்தியா' – 8—1—1925

## 10

# ஒரு வேண்டுகோள்

என்னுடைய வழக்கமான வாராந்தரக் குறிப்புகளில் காலி பரஜ்ஜைப்பற்றி வாசகர்கள் கவனித்திருப்பார்கள். காலி பரஜ் என்ருல் என்ன என்று குஜராத்துக்கு வெளியே உள்ளவருக்குத் தெரியாது. கறுப்பு மனிதர்கள் என்பதே அதன் பொருள். தாம் உயர்ந்தவர்கள் என்று நினைத்துக்கொண்ட சிலர், குஜராத்தில் ஒரு பகுதி மக்களுக்கு இந்தப் பெயரைக் கொடுத்ததாகத் தோன்றுகிறது. நிறம் சம்பந்தப்பட்ட வரையில் காலிபரஜ், மற்ற வர்களைவிடக் கறுப்பானவர்கள் அல்ல; மற்றவர்களிடமிருந்து மாறுபட்டவர்களுமல்ல. ஆனல், இன்று அவர்கள் நசுக்கப்பட்ட வர்களாகவும், நிர்க்கதியானவர்களாகவும், மூட நம்பிக்கையுள்ள வர்களாகவும், பயந்தவர்களாகவும் இருக்கிருர்கள். குடிதான் அவர்களுடைய பெரிய கெட்ட பழக்கம். அவர்களில் பெரும் பாலோர் பரோடா சமஸ்தானத்தைச் சேர்ந்தவர்கள்.

மூன்று வருடங்களுக்கு முன்பு இந்த மக்களிடையே ஒரு பெரிய விழிப்பு ஏற்பட்டது. ஆயிரக்கணக்கானவர்கள் குடிப்ப தையும், மாமிசம் உண்பதையும்கூடக் கைவிட்டார்கள். மது

பான வியாபாரிகளுக்கு இது பொறுக்க வில்லை. இவர்களில் பெரும்பாலோர் பார்ஸிகள். குடியை விட்டவர்களை மீண்டும் அந்தப் பழக்கத்திற்குத் திருப்புவதற்குச் சாத்தியமான எல்லா வழிகளையும் அவர்கள் கையாண்டதாகவும், பெரும் அளவுக்கு அதில் அவர்கள் வெற்றிபெற்றதாகவும் சொல்லப்படுகிறது. அதிகாரிகளும், சீர்திருத்தவாதிகளுக்கு எதிராகச் சதி செய்ததாகச் சொல்லப்படுகிறது. இந்த முயற்சிகளின் பலனாகவோ, வேறு காரணத்தினாலோ, குடிக்காமலிருப்பது பாவமென்று பிரசாரம் செய்யும் ஒரு கட்சியினர் இவர்களிடையே இப்போது தோன்றியிருக்கிறார்கள். ஒதுக்கிவைப்பதன் மூலமும், வேறு வழிகளிலும் இவர்களுடைய உணர்ச்சியைக் கொல்ல இந்தக் கட்சியினர் முயற்சிக்கிறார்கள். தமக்கே எதிராகவும், தலைமுறை தலைமுறையாகவும் வந்துள்ள ஒரு தீய பழக்கத்துக்கு எதிராகவும் போராடிக் கொண்டிருப்பவர்களின் ஆர்வத்தையும் குலைக்கப்பார்க்கிறார்கள்.

இவர்களுடைய கூட்டத்தில் ஒரு தீர்மானம் நிறைவேற்றினார்கள். பரோடா, தரம்பூர், வன்ஸ்தா சமஸ்தானங்களும், பிரிட்டிஷ் அரசாங்கமும் எல்லாக் கள்ளுக் கடைகளையும் மூடிவிட வேண்டுமென்று அத்தீர்மானத்தில் கோரியிருக்கிறார்கள். இது சாத்தியமா என்று கேட்கலாம். பூரண மதுவிலக்கை அமல் நடத்த வேண்டுமென்று ஒரு தேச மக்கள் பூராவும் செய்த முயற்சியே பரிதாபகரமாகத் தோல்வியடைந்து விட்டதே என்றும் சொல்லுவார்கள். அப்படியிருக்கும்போது எந்த பலமும் இல்லாத ஒரு சில ஆண்களும் பெண்களும் விடுக்கும் பயனற்ற ஒரு வேண்டுகோள் எப்படி வெற்றி பெற முடியும்? இந்த வாதத்தில் நல்ல பசை இருக்கிறது. ஆனால், அந்த இரு முயற்சிகளும் வெவ்வேறு விதமானவை. 1921-ல் செய்யப்பட்ட முயற்சி, சர்க்காரிடமிருந்து அதிகாரத்தைப் பறித்துவிடுவதென்ற நோக்கத்துடன் ஒத்துழையாமையாளர்கள் பிரிட்டிஷ் சர்க்காருக்கு எதிராகச் செய்த முயற்சியாகும். மேலும், கள்ளுக் கடைகள் இருப்பதால் தாமே பாதிக்கப்படாதவர்கள் இந்த இயக்கத்தை நடத்தினார்கள். ஆனால், இந்தத் தீமைக்கு இரையாகியிருந்தவர்களிடமிருந்து இந்த வேண்டுகோள் வருகிறது. இது பலமில்லாதவர்கள் பலமுள்ளவர்களுக்கு விடுக்கும் வேண்டுகோளாகும். இது, சம்பந்தப்பட்ட எல்லா சர்க்கார்களுக்குமே விடுக்கப்பட்டுள்ள வேண்டுகோளாகும்; பிரிட்டிஷ் சர்க்காருக்கு மட்டுமல்ல. இவர்கள் ஒத்துழையாமையாளர்களுமல்ல. ஒத்துழைப்புக்கும், ஒத்துழையாமைக்கும் என்ன வித்தியாசம் என்பதே இவர்களுக்குத் தெரியாது. மனமில்லாமலும், அநேகமாகத் தம்மையறியாமலும், அடக்கு முறைக்கு பயந்து கொண்டும் அவர்கள் மற்றவர்களுக்காக உழைக்கிறார்கள். சுயராஜ்யம் என்றால் என்ன என்று அவர்களுக்குத் தெரியாது. குடிப்பழக்கத்தைக் கைவிடுவதும், அந்த ஆசைக்கு இடம் கொடுக்கும் மதுவகைகளை அகற்றி விடுவதுமே அவர்களுக்கு சுயராஜ்யம். ஆகையால், அவர்களுடைய வேண்டு

கோள் மனிதாபிமானத் தன்மை வாய்ந்தது; ஆகையால், அதை ஆட்சேபிக்க முடியாது. சம்பந்தப்பட்ட சர்க்கார்களுக்கு வேண்டுகோள் விடுத்து, அவர்கள் நிறைவேற்றியுள்ள தீர்மானத்தை அக்கிராசனர் என்ற முறையில் நான் அமல் நடத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். சட்ட சபை மெம்பர்கள் மூலம்தான் பிரிட்டிஷ் சர்க்காரைக் கேட்டுக்கொள்ள முடியும். கல்வி இலாகாவைப் பட்டினிபோட வேண்டியிருந்தால்கூட, நிர்வாக சபை அங்கத்தினர்கள் கள்ளுக்கடை வருமானத்தைக் கைவிடலாம். இந்த மக்களை அவர்களே நேரில் பார்த்து, ஒரு வர்க்கம் பூராவிலுமுள்ள ஆண்களையும் பெண்களையும் சீரழிக்கும் இந்தத் தீமையைக் கண்டறியும்படி அவர்களை நான் அழைக்கிறேன். தம்முடைய நாட்டு மக்களை அவர்கள் காப்பாற்ற விரும்பினால், சரியான காரியத்தைச் செய்யத் துணிய வேண்டும்.

பரோடா, தரம்பூர், வன்ஸ்தா சமஸ்தானங்களின் நிலைமை வேறு. சமஸ்தானாதிபதிகள் இஷ்டப்பட்டால், கள்ளுக்கடைகளை மூடி, தம்மையும், தம் மக்களையும் அழிவிலிருந்து காப்பாற்றிக் கொள்ளலாம். வேண்டுமென்றேதான் 'தம்மையும்' என்ற வார்த்தையை உபயோகிக்கிறேன். ஏனெனில், ஒரு சிறு சமஸ்தானத்தில் ஏராளமான பேர்கள் அழிந்துபோவது, அவர்களே அழிந்துபோவதாகத்தான் அர்த்தம். தம்மை மீறியே காப்பாற்றப்படவேண்டும் என்று கேட்பவர்களின் வேண்டுகோளுக்கு இந்த சமஸ்தானங்கள் செவிசாய்க்கப்போவதில்லையா?

—'எங் இந்தியா' - 22—1—1925

## 11

# திருவாங்கூரில் குடியின் சாபக்கேடு

தீண்டாமைக்கு அடுத்தபடியாக மிகவும் கண்டிக்கத்தக்கது ஒன்று உண்டென்றால், அது குடி என்ற சாபக்கேடுதான். *1922*-இல் இந்த சமஸ்தானத்தின் மொத்த கலால் வருமானம் ரூ. *48,94,300*. நிலவரியின் மூலம் ரூ. *38,18,652* கிடைத்தது. மொத்த வருமானம் ரூ *1,96,70,130*. இது நிர்வாகத்திற்கே ஒரு பெரிய இழுக்கு என்று நான் கருதுகிறேன். அதன் வருமானத்தில் இவ்வளவு தொகை போதை வஸ்துக்களிலிருந்து கிடைக்கிறதென்றால், அது தீவிரமான சிந்தனையைத் தூண்டிவிடுகிறது. கலால் வருமானம் பின்கண்ட வகைகளில் கிடைக்கிறது:

| | | | |
|---|---|---|---|
| அப்காரி, | — | ரூ. | *26,82,367* |
| அபினி, கஞ்சா | — | ரூ. | *3,11,635* |
| புகையிலை | — | ரூ. | *17,00,298* |
| | மொத்தம் | ரூ. | *46,94,300* |

கள்ளுக்கடை வருமானம் மிகப் பெரிய இனமாக இருக்கிறது. கிறிஸ்தவர்களிடையே குடிப் பழக்கம் அதிகமாகப் பரவியிருக்கிறது என்றும், இதனால் நூற்றுக்கணக்கான குடும்பங்கள் சீரழிந்து போகின்றன என்றும், சாதாரணமாக, சக்தியுள்ளவர்களாகவும், புத்திசாலிகளாகவும் உள்ள ஆயிரக்கணக்கானவர்களை வறுமையிலும், அவமானத்திலும் ஆழ்த்தி விடுகிறது என்றும் கேள்விப்பட்டேன். இந்த வருமான உயர்வைக் கண்டு அந்த சமஸ்தானம் மகிழ்ச்சியடையாவிட்டாலும், ஏதோ கிடைக்கிறது என்ற நிம்மதியுடன் இருப்பது போலவே தோன்றுகிறது. அங்குள்ள வகுப்பினர் இந்தத் தீமையுடன் விளையாடுகிறார்கள்; மிதக் குடியென்றும் விளையாட்டுக் காட்டுகிறார்கள். இனிமேல் முடியாது என்ற நிலைமை ஏற்பட்டு விடுவதற்கு முன்பு இந்தத் தீமையை அடியோடு அகற்றிவிட வேண்டியது அவசியமாகும். வைத்தியரின் அனுமதிச் சீட்டு இருந்தாலொழிய மது வகைகளைப் பெறுவதை அசாத்தியமாக்கி விடுவதுதான் மிகவும் பலனளிக்கத் தக்க முறை என்பதில் சந்தேகமில்லை. மிகவும் அதிகமான வருமானத்தை அளிக்கும் ஓர் இனத்தை எப்படிக் கைவிடுவது என்பதுதான் கேள்வி. திருவாங்கூரில் என்னிஷ்டப்படி நடக்கலாம் என்ற சர்வாதிகாரம் எனக்கு இருந்தால், அந்த வருமான இனத்தை அடியோடு அகற்றிவிட்டு, எல்லாக் கள்ளுக்கடைகளையும் மூடிவிடுவேன். இந்தப் பழக்கமுள்ளவர்களைக் கணக்கெடுத்து, அவர்களுக்கு ஆரோக்கியமான பானங்களையும், சாதாரண பொழுதுபோக்கு வசதிகளையும் செய்து கொடுப்பேன்; அல்லது ஏதாவது வேலை கொடுப்பேன். இப்படிக் குடியை விட்டவர்கள், இன்னும் அதிகத் திறமையுடன் வேலை செய்து, வருமானத்தை இன்னும் அதிகப்படுத்துவார்களென்று நம்பியிருப்பேன். ஆனால், சர்வாதிகாரத்தின் காலம் மலையேறி விட்டது. ஜனநாயகம்தான் இப்போது சர்வாதிகாரி. மேல் சபையும், மக்களின் பிரதிநிதிகள் உள்ள அசெம்பிளியும் இதையெல்லாம் செய்யமுடியும். ரீஜண்டாயுள்ள மகாராணி மீது ஒரு கல்லையும், திவான் மீது மற்றொரு கல்லையும் வீசிவிட்டுக் கடமையைச் செய்தாயிற்று என்று சொல்லுவது தவறாகும். சமஸ்தான நிர்வாகத்தில் மக்களின் பங்கு நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டு வருகிறது. அவர்கள் நல்ல கல்வியறிவுள்ளவர்கள். இந்த வருமானம் கிடைத்துக்கொண்டிருக்கும்போது, அந்தத் தொகை பூராவையும் இந்தத் தீமையை ஒழிப்பதற்காக உபயோகிக்க வேண்டுமென்று வற்புறுத்தலாம். ஒரு வருடத்தில் இந்த முறையற்ற வியாபாரத்தை மூடிவிட வேண்டுமென்றும் வற்புறுத்தலாம். ஆனால், இதை ஒரு வருடத்தில் செய்ய முடியுமா, அல்லது இன்னும் அதிக காலம் ஆகுமா என்பது மக்கள் முடிவு செய்யவேண்டிய விஷயமாகும். புல் தரையில் பாம்பு ஒளிந்து கொண்டிருக்கிறது என்பதை அவர்கள் உணரட்டும். இந்த விஷயத்தில் கிறிஸ்தவர்கள் தலைமை வகித்து வழிகாட்டாவிட்டால் வேறு யாரால் முடியும் என்று மீண்டும் பணிவுடன்

கேட்கிறேன். நான் கிறிஸ்தவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன் என்பதனால், ஹிந்துக்கள் அல்லது முஸ்லிம்களுக்குப் பொறுப்பு இல்லாமல் போய்விடவில்லை. ஆனால், இம்மாதிரி விஷயங்களில் அதிக பலமுள்ளவர்களைத்தான் முதலில் கேட்டுக் கொள்ள வேண்டும்.

—'எங் இந்தியா' – 26 –3—1925

## 12

# குடி ஒழிப்பு சீர்திருத்தம்

உள்ளூர வேலை செய்வதன் மூலம், அதாவது, இந்தப் பழக்கம் உள்ளவர்களைச் சந்தித்துப் பேசுவதன் மூலம், குடிப் பழக்கத்தை ஒழிப்பதற்கு திருவாங்கூரிலுள்ள கிறிஸ்தவர்களில் சிலர் கொஞ்ச காலமாக மனப்பூர்வமாக முயற்சி செய்துகொண்டு வருகிறார்கள். மதுபான இடங்களை மறியல் செய்வதற்கு ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறார்கள். அங்கே செல்லும் பழக்கம் இருப்பவர்களுக்கு இது எச்சரிக்கையாக இருக்க வேண்டுமென்பதே அவர்களுடைய நோக்கமாகும். சாதாரணமான இந்த நடவடிக்கை திருவாங்கூர் அதிகாரிகளைக் கலவரப்படுத்தி விட்டது போல் தோன்றுகிறது. திருவாங்கூரைச் சேர்ந்த டாக்டர் பரேத் என்பவர் பிரபலமான கிறிஸ்தவர்; இவருடைய அகிம்சை உணர்ச்சி இதுவரையில் சந்தேகிக்கப்பட்டதே இல்லை. கோட்டயம் ஜில்லா மாஜிஸ்டிரேட் இவருக்கு ஒரு தடையுத்தரவு பிறப்பித்திருக்கிறார். இந்த உத்தரவின் வாசகம் பின் வருமாறு :

> "கோட்டயம் ஜில்லா போலீஸ் சூபரின்டென்டிடமிருந்து கிடைத்துள்ள தகவல்களின்படி, கள்ளுக்கடைகள் முன்பு மறியல் செய்யும்படியும், மற்றும் சட்டவிரோதமான காரியங்களைச் செய்யும்படி தூண்டியும் நீங்கள் பிரசங்கங்கள் செய்கிறீர்களென்று தெரிகிறது. இந்தப் பிரசங்கங்களால் அமைதிக்குப் பங்கம் ஏற்படக்கூடும்; சர்க்கார் மீதும் துவேஷத்தை உண்டுபண்ணக் கூடும். ஆகையால், 1895–ஆம் வருடத்திய 4-வது ரெகுலேஷனின் 26-வது ஷரத்தின்படி இன்று முதல் கோட்டயம் ஜில்லாவின் எந்தப் பகுதியிலும் நீங்கள் பிரசங்கங்கள் செய்யக்கூடாதென்று கண்டிப்பாக உத்தரவிடுகிறேன்."

மறியல் செய்யுமாறு யோசனை கூறும் ஒவ்வொரு பிரசங்கமுமே தூண்டுதல் என்று இந்த உத்தரவு கூறுகிறது. "சட்ட விரோதமான மற்ற காரியங்கள்" என்னவாக இருக்கக் கூடுமென்பது உத்தரவில் தெளிவாக்கப்படவில்லை. மாஜிஸ்டிரேட்டின் உத்தரவு சட்டத்தைச் சரியாக வியாக்கியானம் செய்கிறது என்றால், திருவாங்கூரில் குடித் தீமைக்கு ஆதரவு கொடுக்கப்படுகிறது என்று ஆகிறது. சர்க்கார், குடிப்பதற்கு வசதிகள் செய்து

கொடுக்கிறார்கள் என்பது மட்டுமில்லை. குடிகாரர்களை நேரில் அணுகி இந்தச் சபலத்திற்கு இடம் கொடுக்காதீர்கள் என்று கேட்டுக் கொள்ளுவது ஒன்றுதான் பலனளிக்கத்தக்க, அமைதி யான முறையாகும். சீர்திருத்தக்காரர்கள் இந்த முறையைப் பின்பற்றுவதையும் சர்க்கார் தடுக்கிறது. திருவாங்கூரின் சட்டத்தில் தவறு இல்லை என்றும், சட்டத்தை வியாக்கியானம் செய்வதில் ஜில்லா மாஜிஸ்டிரேட்தான் தவறு செய்திருக்கிறா ரென்றும் நம்புகிறேன். இந்த வியாக்கியானத்தை ஓர் உயர்தர கோர்ட்டில் சோதித்துப் பார்க்க வேண்டும். அது எப்படியிருந் தாலும், சீர்திருத்தக்காரர்களின் கடமை தெளிவாயிருக்கிறது. சட்டம் தவறாயிருந்தால், அதை ரத்து செய்வதற்கு அவர்கள் முயற்சி செய்ய வேண்டும். அதைச் சரிப்படுத்துவதற்குச் செய் யப்படும் எல்லா முயற்சிகளும் தோல்வியுற்றால், சிறைப்படுத்தப் படுவதாயிருந்தாலும் பரவாயில்லை என்று அவர்கள் அமைதியாக மறியல் செய்யத்தான் வேண்டும். அதே சமயத்தில், ஆத்திர மூட்டப்படும்போது தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாத வர்களைச் சேர்த்துக் கொள்ளாமல் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். இந்தத் தடை உத்தரவு நிரந்தரமானதாயிருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

— 'எங் இந்தியா' – 18—11—1926

## 13

# வரவேற்கத்தக்க நடவடிக்கை

மைசூர் சமஸ்தானத்திலுள்ள ஹோலால் கரேயிலிருந்து ஒருவர் கீழ்வருமாறு எழுதுகிறார் :

"என் தாலுகாவிலுள்ள லம்பானி வகுப்பைச் சேர்ந்தவர்கள், சென்ற ஒன்றரை மாத காலமாக கள்ளையோ, மற்ற மது வகைகளையோ, அருந்துவதை அடியோடு நிறுத்திவிட்டார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். சென்ற ஏப்ரல் மாதக் கடைசியில் இந்த ஊரில் லம்பானி மகாநாடு நடந்தது. அந்த மகாநாட்டில் அஸ்தமன சூரியனுக்கு நமஸ்காரம் செய்து, இனி போதை வஸ்துக்களைத் தொடுவதில்லையென்று அவர்கள் சத்தி யம் செய்தார்கள். அதிலிருந்து, அந்த சத்தியத்திலிருந்து அவர்கள் தவறவே யில்லை. அந்த வகுப்பைச் சேர்ந்த யாராவது ஒருவர் கள்ளுக்கடைக்கருகில் காணப்பட்டால், அந்த கிராமத்தைச் சேர்ந்த நாயக், அல்லது யஜமான், அல் லது காரபான் கண்டிப்பான நடவடிக்கை எடுத்துக்கொள்ளுகிறார். தங்கள் குடிசைகளில் இப்போது சண்டை, பூசல்கள் இல்லை; வாழ்க்கை மிகவும் அமைதியாக நடந்துகொண்டிருக்கிறது என்ற நல்ல செய்தியை அந்த வகுப் புப் பெண்கள் தினமும் எங்களிடம் சொல்லுகிறார்கள். நீங்கள் வருவதற்கு முன்பே உங்களுடைய சுத்தி இயக்கம் எங்கள் சமஸ்தானத்திற்கு வந்துவிட் டது என்பதைக் காட்டுவதற்கு இது ஓர் உதாரணம்."

இந்தப் பெரிய காரியத்தைச் செய்துள்ள லம்பானி வகுப்பி னரைப் பாராட்டுகிறேன். 1921-இல் ஓர் உற்சாகம் ஏற்பட்டது. ஆனால், பின்னர் பலர் அதிலிருந்து தவறிவிட்டார்கள். அது மாதிரி இவர்களும் நழுவிவிட மாட்டார்களென்று நம்புகிறேன். ராணிபராஜ் மக்களைப்பற்றி இந்தப் பத்திரிகையில் கொடுக்கப் பட்டிருந்த விவரங்களை, இந்த வகுப்புத் தலைவர்களின் கவனத் திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். அவர்களில் குடியை விட்ட வர்கள் தங்களுடைய ஓய்வு நேரத்தைப் போக்குவதற்கு ராட் டையில் நூற்க ஆரம்பித்தார்கள். இதனால் அவர்களுக்குக் குடி ஞாபகமே இல்லாமற் போய்விட்டது என்பதோடு மட்டுமில்லை, தங்களுடைய சேமிப்பையும் அவர்கள் இரட்டிக்க முடிந்தது. குடிக்குச் செலவிட்ட பணமும் அவர்களுக்கு மிச்சப்பட்டது; துணிமணிகளில் மிச்சம் பிடித்தும் தம் வருமானத்தைப் பெருக் கிக் கொண்டார்கள். குடிப்பதில்லை என்று பிரதிக்ஞை எடுத் துக் கொள்ளுபவர்கள், தமது நேரத்தைப் பிரயோசனமான விதத்தில் செலவிடாவிட்டால், அவர்களுக்குக் குடியின் ஞாபகம் திரும்பி வருகிறது என்பதும், அவர்களால் அதைச் சமாளிக்க முடியவில்லை என்பதுமே பொதுவாக எல்லா இடங்களிலும் குடி ஒழிப்பு சீர்திருத்தக்காரர்களின் அனுபவமாயிருக்கிறது. ஹோலால் கரேயின் உதாரணத்தை மற்ற கிராமங்களும் பின் பற்றுமென்று நம்புகிறேன். கதர் வேலை பிரமாதமாக அபிவிருத்தி யடையப்போகிறதென்று என்னிடம் சொல்லியிருக்கிறார்கள். நான் மைசூர் சுற்றுப் பிரயாணத்தை ஆரம்பிக்கும்போது இந்தச் செய்தியுடன், குடிப்பழக்கம் அழிக்கப்பட்டுவிட்டதென்ற செய் தியும் கிடைக்குமென்று நம்புகிறேன்.

—'எங் இந்தியா' - 16—6—1927

# 14

# ராணிபராஜி விசாரணைக் கமிட்டி

கமிட்டியினர் 18 கிராமங்களுக்கு விஜயம் செய்தனர். சிக்லி, புல்ஸார் தாலூகாக்களிலும், பன்ஸ்தா சமஸ்தானத்திலும் 47 கிராமங்களில் சாட்சிகளின் வாக்குமூலங்களைப் பதிவு செய்த னர். பன்ஸ்தா சமஸ்தானத்தின் மகாராஜா, தனது பிரஜை களின் நலன்களில் எடுத்துக்கொள்ளும் அக்கறையைப் பற்றி கமிட்டி வெகுவாகப் பாராட்டியிருப்பது பன்ஸ்தா சமஸ்தானத் திற்குப் பெருமையளிப்பதாகும். மகாராஜா, தனது பிரஜை களுக்கு எவ்வளவோ நல்ல காரியங்களைச் செய்கிறார் என்பது உண்மையே. ஆனால், குடி வியாபாரத்திலிருந்து வருமானம் பெற வேண்டியது அவசியம் என்று அவர் கருதும் வரையில், அவர் செய்யும் நன்மைகளெல்லாம் உண்மையாகவே வீணாகி

விடுகின்றன. பன்ஸ்தா எல்லைக்குப் பக்கத்தில் உள்ள பிரிட்டிஷ் பகுதி, கேக்வாட், தரம்பூர் ஆகிய மூன்று இடங்களிலும் மது விலக்கு இல்லை என்பதனால், பன்ஸ்தா சமஸ்தானம் மதுவிலக்குக் கொள்கையை வெற்றிகரமாக அமல் நடத்துவது கஷ்டமாகி விடுகிறது என்பது உண்மைதான். ஆனால், பெரிய தியாகங்களைச் செய்யாமலும், பெரிய நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளாமலும் பெரிய காரியங்களைச் செய்யமுடியாது. பூரண மது விலக்கை அறிவிப்பதன் மூலம் பன்ஸ்தா மற்றவர்களுக்கு வழி காட்டலாம் என்பதோடு மட்டுமில்லை; பக்கத்து ராஜ்யங்களில் மதுவிலக்கைக் கொண்டுவரவேண்டுமென்றும் பின்னர் கிளர்ச்சி செய்யலாம். குடியின் மூலம் கிடைக்கும் வருமானத்தை விட்டுக் கொடுக்கத் தயாராய் இருக்க வேண்டுமென்பதுதான் முக்கியம். உடனடியாக ஒன்று செய்யலாம். குடிப்பழக்கம் உள்ள வகுப்பினரிடையே அதற்கெதிராகத் தீவிரமாகப் பிரசாரம் செய்வதற்காகவன்றி, வேறு மிகவும் நல்ல காரியங்களுக்குக்கூட இந்தப் பணத்தை உபயோகிப்பதில்லை என்று முடிவு செய்யலாம். தம்முடைய ராஜ்யத்திலுள்ள மக்கள் இந்தத் தீய பழக்கத்தைவிட்டு விட வேண்டுமென்று உண்மையாகவே விரும்பும் ராஜ்யங்கள், இந்தத் தீயபழக்கத்தில் அவர்கள் ஈடுபடுவதைச் சட்டபூர்வமாக அசாத்தியமாக்கி விடுவதுடன் திருப்தியடைந்து விடமுடியாது. இந்தப் பழக்கத்திற்குக் காரணம் என்ன என்பதைக் கண்டு பிடித்து, அந்தப் பழக்கத்தை விட்டுவிடும்படி அவர்களுக்கு உணர்த்த வேண்டும். முடிவில் எந்த ராஜ்யமுமே குடி வருமானத்தை இழப்பதால் கஷ்டப்படவேண்டிய அவசியமில்லை. மதுவிலக்குக் கொள்கையுடன், நான் கூறியுள்ள விதத்தில் நிர்மாண வேலைகளையும் செய்தால், மக்களின் சுபிட்சமும், அதனால் ராஜ்யத்தின் சுபிட்சமும் பெருகிக் கொண்டே இருக்கும். இது, மதுவிலக்குக் கொள்கையின் நிச்சயமான விளைவாக இருக்கும்.

—'எங் இந்தியா' – 16—6—1927

## 15

# பர்மிய மக்களுக்குச் செய்தி

"குடியின் தீமை அதிகமாகிக் கொண்டிருக்கிறது என்றும், குடியினால் கிடைக்கும் வருமானம், நிலவரி வருமானத்தில் மூன்றில் ஒரு பங்கு என்றும் நேற்று கேள்விப்பட்டபோது மிகவும் வேதனையடைந்தேன். உலகத்திலுள்ள எந்த நாட்டுக்குமே இது பயங்கரமான விஷயமாகும். ஆனால், குடிப் பழக்கத்திற்குக் கொஞ்சமும் ஏற்றதாயில்லாத சீதோஷ்ண நிலையிலுள்ள பர்மா போன்ற ஒரு நாட்டில், இது தற்கொலைக்கு ஒப்பானதாகும்.

இந்தப் பழக்கத்தினுல் இந்தியாவில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று எனக்குத் தெரியும். நகரங்களில் வசிக்கும் மக்களுக்கு ஒரு மிகப் பெரிய பொறுப்பு இருக்கிறது. பர்மியத் தலைவர்கள் இதைப்பற்றி ஆழ்ந்து யோசித்து, இதை வேரோடு கெல்லி எறிவதற்கு எல்லா முயற்சிகளும் செய்யவேண்டுமென்று விரும்புகிறேன். குளிர் மிகுந்த நாடுகளின் நிலைமை என்னவாயிருந்தாலும், நம் நாட்டிலுள்ளது போன்ற சீதோஷ்ண நிலைக்குக் குடிக்கு எந்த அவசியமும் கிடையாது. குடிப் பழக்கத்திற்கு இரையான ஒரு நாட்டுக்கு அழிவைத் தவிர வேறொன்றும் கிடையாது. இந்தப் பழக்கத்தினுல் சாம்ராஜ்யங்களே அழிந்திருக்கின்றன என்று சரித்திரம் கூறுகிறது. ஸ்ரீ கிருஷ்ண பகவான் பிறந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் இந்தப் பழக்கத்தினுல்தான் அழிந்தார்கள் என்பதை இந்தியாவில் அறிந்திருக்கிறோம். ரோமாபுரியின் வீழ்ச்சிக்கு இந்த அசுரத்தனமான பழக்கமும் ஒரு காரணம் என்பதில் சந்தேகமில்லை. ஆகையால், நீங்கள் கண்ணியமாக வாழ விரும்பினுல், அவகாசம் இருக்கும் போதே இந்தத் தீமையை நீங்கள் விலக்க வேண்டும்'' என்று மோல்மினில் காந்திஜி கூறினுர்.

—'எங் இந்தியா' - 11—4—1929

# 16

# காங்கிரஸ் ஆட்சியில்

பூரணமான மதுவிலக்கையே கொண்டுவர முடியாது என்ருல், உடனடியாக அதை எப்படிக் கொண்டு வரமுடியும்? 1937 ஜூலை 14-ஆம் தேதி முதல் காங்கிரஸ் மந்திரி சபை பதவியை ஏற்றுக்கொண்டது, 'உடனடியாக' என்று நான் சொல்லுவது, அதிலிருந்து மூன்று வருடங்களில் பூரண மது விலக்கை அமலுக்குக் கொண்டுவருவதாகத் திட்டமிட்டு அறிவிப்பதாகும். இரண்டு வருடங்களிலேயே அதை அமலாக்குவது சாத்தியமென்று நான் கருதுகிறேன். ஆனுல், நிர்வாக சங்கடங்களைப் பற்றி எனக்குத் தெரியாதாகையால், மூன்று வருடங்கள் என்று சொல்லுகிறேன். இதனுல் ஏற்படும் வருமான நஷ்டத்தை நான் ஒரு பெரிய விஷயமாகவே நினைக்கவில்லை. முதல்தரமான தேசிய முக்கியத்துவம் வாய்ந்த ஒரு விஷயத்தில், நஷ்டத்தைப் பற்றி காங்கிரஸ் பார்த்துக்கொண்டிருந்தால் மதுவிலக்கு என்பது எட்டாத ஒரு கனியாகவேதான் இருக்கும்.

குடி, போதை வஸ்துக்களின் வருமானம், மிகவும் ஈனமான ஒரு வரிமுறை என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். எந்த வரியும் நன்மையானதாயிருக்க வேண்டுமானுல்,

வரி செலுத்துபவர்களுக்கு அதன் மூலம் பத்து மடங்கு பிரதி பலன் கிடைக்க வேண்டும். கலால் வரி என்பது, தார்மிகத் துறையிலும், உடல் நலத்திலும், மனத்திலும் மக்கள் தம்மைத் தாமே சீரழித்துக்கொள்ள உதவி செய்வதாகும். அதைத் தாங்குவதற்குச் சக்தியில்லாதவர்கள்மீது அது ஒரு பெரும் சுமையாக விழுகிறது. தொழிற்சாலைகளில் வேலை செய்பவர்களிடமிருந்தே பெரும்பாலும் இந்த வருமானம் கிடைக்கிறதென்று நினைக்கிறேன். அவர்களுக்கும், விவசாயத் தொழிலாளர்களுக்கும் காங்கிரஸ் மட்டுமே பிரதிநிதித்துவம் வகிக்கிறது.

வருமான நஷ்டம் என்பது வெளியில் தோன்றுவதுதான். இந்த ஈனத்தனமான வரியை அகற்றுவதால், குடிப்பவர், அதாவது, இந்த வரியைச் செலுத்துபவர் இன்னும் அதிகமாகச் சம்பாதித்து, நல்ல முறையில் செலவு செய்வதற்கு உதவுகிறது. இதனால் ஏற்படும் மகத்தான நன்மை ஒருபுறமிருக்க, தேசத்தின் பொருளாதாரத்திற்கே இது கணிசமான லாபமாகும்.

இதற்கு உடனடியாகப் பலன் கிடைக்கிறது என்பதனால் தான் மதுவிலக்குக்கு முதலிடம் அளிக்கிறேன். இதற்காக காங்கிரஸ்காரர்களும், முக்கியமாகப் பெண்களும் தம் ரத்தத்தைச் சிந்தியிருக்கிறார்கள். இதைத் தவிர, வேறு எந்த ஒரு காரியத்தினாலும் தேசீய அந்தஸ்து அவ்வளவு உயராது. இந்த ஆறு மாகாணங்கள் செய்வதை மற்ற ஐந்து மாகாணங்களும் பின்பற்றுவது சாத்தியமே. இந்தியா, குடிகார நாடாக இல்லாமல், நிதானமான நாடாயிருப்பதில், காங்கிரஸல்லாத முஸ்லீம் முதன் மந்திரிகளுக்கும் அக்கறை உண்டு.

திருட்டுத்தனமாகச் சாராயம் காய்ச்சுவதைத் தடுப்பதற்கு அதிகச் செலவாகுமே என்பது ஆஷாடபூதித்தனமானது அல்லவென்றால், அது சிந்தனையற்ற வாதமாகும். இந்தியா, அமெரிக்கா அல்ல. அமெரிக்க உதாரணம் நமக்கு இடையூறேயொழிய அனுகூலமல்ல. அமெரிக்காவில் குடிப்பதைப் பற்றி வெட்கப்படவேண்டியதில்லை. குடிப்பது அங்கே ஒரு நாகரிகச் செயல். மதுவிலக்குக் கொள்கை அங்கே கொஞ்ச காலமே சாத்தியமானதாக இருந்தது. ஆயினும், அமெரிக்காவிலுள்ள மன உறுதி கொண்ட ஒரு சிறுபான்மையினர், முற்றிலும் தம்முடைய தார்மிக பலத்தினால் மதுவிலக்கைச் செயல்படச் செய்தது அவர்களுக்கு மிகவும் பெருமையளிப்பதாகும். அந்தப் பரீட்சையை ஒருதோல்வி என்று நான் நினைக்கவில்லை. இன்னும் அதிக உற்சாகத்துடனும் அதைச் சமாளிப்பதில் இன்னும் நல்ல அனுபவத்துடனும், அமெரிக்கா அந்தக் கொள்கைக்குத் திரும்பி வராது என்று நான் நம்பிக்கை இழந்துவிடவில்லை. இந்தியா மதுவிலக்கை அமல் நடத்தினால், அமெரிக்காவிலும் அது ஏற்படுவது துரிதப்படுவதாயிருக்கலாம். இந்தியாவைப்போல் உலகத்தின் வேறெந்த பாகத்திலும் மதுவிலக்கை நிறைவேற்றுவது அவ்வளவு சுலப

மல்ல. ஏனெனில், இங்கே ஒரு சிறு தொகையினர்தான் குடிக் கின்றனர். குடிப்பது இங்கே பொதுவாக அவமரியாதையான காரியமாகக் கருதப்படுகிறது. குடி என்ருல் என்ன என்பதே தெரியாதவர்கள் கோடிக்கணக்கில் இருக்கிருர்கள் என்றே நம்பு கிறேன்.

மற்ற குற்றங்களைத் தடுப்பதற்கு ஆகும் செலவைவிட, கள்ளச் சாராயம் காய்ச்சுவதைத் தடுப்பதற்கு ஏன் அதிகச் செலவு ஆக வேண்டும்? கள்ளச் சாராயம் காய்ச்சுபவர்களுக்குக் கடும் தண்டனை கொடுக்க வேண்டுமென்று விதித்துவிட்டு, அந்த விஷ யத்தையே மறந்துவிட வேண்டும். திருடுவதைப் போலவே கள்ளச் சாராயம் காய்ச்சுவதும் என்றென்றைக்கும் நடந்து கொண்டே இருப்பதாயிருக்கலாம். கள்ளச் சாராயம் காய்ச்சும் இடங்களைக் கண்டுபிடிப்பதற்காக விசேஷ ஏற்பாடுகள் செய்ய வேண்டியதில்லை. ஆபாசமாக இல்லாவிட்டாலும், (சட்டவியாக் கியானப்படி), குடித்துவிட்டு தெருக்களிலோ, மற்றப் பொது இடங்களிலோ காணப்படுபவர்களுக்குக் கடுமையான அபராதம் விதிக்க வேண்டும்; அல்லது, அவர்களை விசாரித்து, தண்டிக்கும் காலம் வரையில் அவர்களுக்காகச் செலவிடப்பட்ட தொகையை அவர்கள் சிறையில் வேலை செய்து சம்பாதிக்கும் காலம்வரையில் சிறையிலிருக்க வேண்டுமென்று செய்ய வேண்டும்.

ஆயினும், இது எதிர்மறைத் தன்மை வாய்ந்தது. பெண் களால் நடத்தப்படும் தொண்டர் ஸ்தாபனங்கள், தொழிலாளர் கள் வசிக்கும் பிரதேசங்களில் வேலை செய்ய வேண்டும். தொண் டர்கள், குடிப் பழக்கம் உள்ளவர்களைச் சந்தித்து, அவர்களை அந்தப் பழக்கத்திலிருந்து திருப்ப முயற்சி செய்வார்கள். தொழிற்சாலைகளை நடத்துபவர்கள், தம்மிடம் வேலை செய்பவர் களுக்கு மலிவான விலையில், நல்ல ஊட்டமளிக்கும் பானங்கள் கிடைப்பதற்கும், தொழிலாளர்கள் தங்கிப் படிப்பதற்கும், நல்ல உணவும், பானமும் பெறுவதற்கும், பொழுது போக்குவதற்கும் வசதிகள் செய்து கொடுக்க வேண்டும்.

இவ்வாருக, மதுவிலக்கு என்பது நாட்டிலுள்ள முதியவர் களுக்கு ஒரு மாதிரியான கல்வி யளிப்பதாக இருக்கும்; கள்ளுக் கடைகளை மூடுவதாய் மட்டும் இராது.

புதிய கள்ளுக்கடைகளுக்கு லைசென்ஸ் வழங்காமலும், ஜனங் களுக்குப் பெரிய தொல்லை யளிப்பவைகளாகி விடக்கூடும் என்ற அபாயமிருக்கும் சில கடைகளை மூடிவிடுவதன் மூலமும் மது விலக்கு ஆரம்பமாக வேண்டும். ஏராளமான தொகையை நஷ்ட ஈடாகக் கொடுக்காமல் கடைகளை மூடுவது எவ்வளவு தூரம் சாத்தியமென்று எனக்குத் தெரியாது. எப்படியிருந்தாலும், காலாவதியாகும் லைசென்ஸுகளைப் புதுப்பிக்கக் கூடாது. எக் காரணத்தை முன்னிட்டும் புதிய கடைகளை ஆரம்பிக்கக் கூடாது. சட்ட பூர்வமாக உடனடியாக என்னென்ன செய்ய முடியுமோ,

அவ்வளவையும் வருமானத்தைப் பற்றி ஒரு சிறிதும் யோசிக்காமல் செய்துவிட வேண்டும்.

ஆனல், பூரண மதுவிலக்கு என்பதன் பொருள் என்ன? அதன் அளவு என்ன? பூரண மது விலக்கு என்பது போதை தரும் பானங்கள், பொருள்களின் விற்பனையை அடியோடு தடை செய்வதாகும். ஆயினும், இதற்கென்று அரசாங்கத்தால் அனுமதிக்கப்பட்ட டாக்டர்கள் அதை மருந்தாக எழுதிக் கொடுத்தால், அதை வாங்கலாம். அப்போதும் கூட, இதற்காக அரசாங்கத்தினல் நடத்தப்படும் கடைகளில்தான் அதை வாங்க முடியும் என்றிருக்கும். குடிக்காமல் இருக்க முடியாத, அல்லது இருக்க விரும்பாத ஐரோப்பியர்களின் உபயோகத்திற்காகக் குறிப்பிட்ட அளவில் வெளிநாட்டு மது வகைகளை இறக்குமதி செய்யலாம். இவைகளும் முழு புட்டிகளில், அனுமதிச் சீட்டு பெற்றிருப்பவர்களுக்குத்தான் விற்கப்பட வேண்டும். ஹோட்டல்களில் போதை தரும் மது வகைகளை விற்பது நிறுத்தப்படும்.

—'ஹரிஜன்' - 31—7—1937

# 17

# அகிம்சைக்கும், சத்தியத்திற்கும் விரோதம்?

ஒரு நண்பர் பின்வருமாறு எழுதுகிறுர்:

" 'குறைபாடுகளுக்குப் பதில்' என்ற தலைப்பில் (ஜுலை 31-ஆம் தேதி) நீங்கள் எழுதியிருந்த கட்டுரையில் பின்கண்ட வாக்கியம், சத்தியம், அகிம்சைக்கும், நல்ல தர்க்கவாதத்திற்கும் முரணுயிருப்பது போல் எனக்குத் தோன்றுகிறது:

'குடிக்காமல் இருக்க முடியாத, அல்லது இருக்க விரும்பாத ஐரோப்பியர்களின் உபயோகத்திற்காகக் குறிப்பிட்ட அளவில் வெளிநாட்டு மது வகைகளை இறக்குமதி செய்யலாம்.'

"தம்முடைய மாகாணங்களில் இருக்கும் இந்தியர்களின் க்ஷேமத்தில் உள்ளதைப் போலவே, ஐரோப்பியர்கள் விஷயத்திலும் காங்கிரஸ் அரசாங்கங்களுக்கு அக்கறை இருக்க வேண்டும். குடிப்பது, இந்தியர்களைப் போலவே ஐரோப்பியர்களுக்கும் கெடுதலானது என்பதை மதுவிலக்குக்காரர்கள் என்ற முறையில் எல்லா காங்கிரஸ்காரர்களும் ஒப்புக்கொள்ளுகிறுர்களென்றே நம்புகிறேன். அப்படியானல், குடிப்பவன் என்ன நினைக்கிறுன் என்பது முக்கியமாக இருக்க முடியாது. கெடுதலாயிருந்தாலும், 'அவர்களால் இருக்க முடியாது அல்லது இருக்க விரும்பவில்லை' என்ற காரணத்திற்காக ஐரோப்பியர்களுக்கு மது வகைகளை அனுமதித்தால், ஜப்பானியர்களும் அமெரிக்கர்களும்,

இந்தியாவிலுள்ள மற்றும் பல வெளிநாட்டினரும் அதே அனுமதியைக் கோருவார்கள். அந்தக் காரணத்திற்காக அந்தக் கெட்ட பழக்கத்தை அவர்கள் நீடிக்க அனுமதிப்பதாயிருந்தால், அதேமாதிரி இதே நாட்டைச் சேர்ந்த ஒரு இந்தியனும் தன்னை அழித்துக் கொள்ள ஏன் அனுமதிக்கக் கூடாது?

"ஆகையால், காங்கிரஸ் மந்திரி சபைகள் குடியைத் தடை செய்யப் போகின்றன என்றால் ஐரோப்பியர்களின் குதர்க்கத்திற்காக அவர்களுடைய நலன்களைப் பலி கொடுப்பது, அவர்கள் விஷயத்தில் நியாயமில்லாமல் நடந்து கொள்ளுவதாகும். குடிப்பதற்கான அனுமதி, ஒரு தனி நபருக்கோ, அல்லது ஒரு வகுப்பு பூராவுக்குமோ ஒரு சலுகையாகிவிடக்கூடாது. யாராவது மது பானம் அருந்த அனுமதிக்கப்படுவதென்றால், முற்றிலும் வைத்திய காரணங்களுக்காக, அல்லது எல்லோருக்கும் பொதுவான காரணங்களுக்காகவே அது இருக்க வேண்டும். காங்கிரஸ் ஆட்சியின் கீழ் ஒரு வகுப்புக்குச் சாதகமாகவோ, பாதகமாகவோ பாகுபாடு காட்டும் சட்டம் இருக்க முடியாது.

"பார்ஸிகள் முதன் முதலில் இந்தியாவுக்கு வந்து குடியேறியபோது, இந்தியப் பழக்க வழக்கங்களுக்கு மதிப்புக் கொடுப்பதோடில்லாமல், சில பழக்கங்களைத் தாமே மேற்கொள்ளுவதாகவும் ஒப்புக்கொண்டார்கள் என்று சரித்திரம் கூறுகிறது. ஐரோப்பிய வர்த்தகர்கள், மொகலாய ஆட்சியின் பழக்க வழக்கங்களுக்கு மதிப்புக் கொடுக்க வேண்டியிருந்தது. இந்தியாவில் குடியேறியுள்ள ஒவ்வொரு அந்நியரும் அப்படிச்செய்ய கடமைப்பட்டிருக்கிறார். ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மட்டும் இந்தியாவில் வசிக்கப் போகும் ஓர் அந்நியருக்கும் அந்தக் கடமையிலிருந்து விலக்கு இருக்கக்கூடாது. அறவே குடிக்காமலிருப்பது அத்தியாவசியமானதல்ல என்று நினைப்பவர்கள் கூட, இந்தியா குடியைத் தடை செய்திருந்தால், அவர்கள் இங்கே இருக்கும் வரையில் குடியை விடவேண்டியது கடமையாகும். இந்தியாவின் சட்டங்கள், பழக்க வழக்கங்கள், தாம் வாழ வந்திருக்கும் மக்களிடையே உள்ள வாழ்க்கை முறைகள் ஆகியவைகளை மதித்து நடக்கிறோம் என்ற நிபந்தனையுடனேயே அவர்கள் இந்தியாவில் வசிக்கிறார்கள் என்று கருத வேண்டும்."

பொதுவாக இந்த நண்பர் கூறுவதைப் பின்பற்றுவதற்கும், பெரும்பாலும் அதை ஏற்றுக் கொள்ளுவதற்கும் எனக்கு ஆட்சேபணை இல்லை. ஆயினும், அந்தக் கடிதத்தை நான் மூன்று தடவை வாசித்தும் கூட, அவருடைய வாதம் எனக்குப் புரியவில்லை என்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

உத்தேச விதி விலக்கு அகிம்சைக்கும், சத்தியத்திற்கும் ஏன் முரணானது? இது சரியான தர்க்கவாதமல்ல என்று அவர் சொல்லுவது கூட எது என்று எனக்குத் தெரியவில்லை. உயிருள்ளவர்களின் விஷயத்தைக் கவனிக்கும்போது, வெறும் வறட்டு வாதம் பேசுவது அபாயகரமாகவும் முடியக் கூடும். மனிதர்களைப் பற்றிய விவகாரங்களைக் கவனிக்கும் போது, எல்லா அம்சங்களையுமே நாம் பரிசீலனை செய்துவிட முடியாது. ஒரு சிறு அம்சத்தை விட்டுவிட்டால் கூட, நம்முடைய முடிவு தவறானதாகிவிடக்கூடும். ஆகையால், முடிவான உண்மையை நாம் அறியவே முடியாது. மிக மிக உஷாராயிருந்தால், கிட்டத்தட்ட உண்மை என்பதைத்தான் பெற முடியும்.

ஐரோப்பியர்களுக்கு விலக்கு அளிக்க வேண்டுமென்று நான் நினைத்ததே, அகிம்சையிலும் சத்தியத்திலும் எனக்குள்ள மதிப்பினால்தான். எந்த நாட்டிலும், எந்த நிலையிலும் உள்ள எல்லா மனிதப் பிறவிகளுக்கும் குடி ஒரு தீமை என்று பொதுவாக என்னால் விதிக்க முடியவில்லை. பனி உறைந்து போகும் அளவுக்கு அவ்வளவு குளிராயிருக்கும் பிரதேசத்தில் அது அவசியமானது என்றுகூட நான் நினைக்க முடியும். ஆகையால், ஒவ்வொரு தடவை சாப்பிடும்போதும் ஒரு குறிப்பிட்ட அளவு மது அருந்துவதைத் தீமையாகக் கருதாமல், அதை ஓர் அவசியமாக நினைக்கும் ஐரோப்பியர்கள் மீது மதுவிலக்கைச் சுமத்துவதற்கு நான் தயங்கவே செய்வேன். இந்தியாவில் இருப்பதைப் போல், ஐரோப்பியர்களிடையே குடிப்பது ஒரு கெட்ட பழக்கமாகக் கருதப்படுவதில்லை. ஆகையால், மரியாதைக்காகவாவது (அதுவும் அகிம்சையின் ஓர் அம்சமே) தாங்கள் வசிக்கும் நாட்டின் பழக்க வழக்கங்களைக் கௌரவிப்பதை அவர்களுடைய கண்ணிய உணர்ச்சிக்கே விட்டுவிடுவேன்.

ஐரோப்பியர்களுக்கு அனுமதிக்கப்படும் ஓர் அளவுக்குட்பட்ட சுதந்திரம் மற்ற வெளிநாட்டினருக்கும் அவசியம் என்பது ருசுப்பிக்கப்பட்டால், அவர்களுக்கும் அதை அனுமதிப்பதை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்ளுவேன். வைத்திய காரணங்கள் என்ற ஷரத்தின்படி ஏராளமான இந்தியர்களுக்கும் கூட இந்தச் சலுகையைக் கொடுக்க வேண்டியதும் அவசியமாக இருக்கலாம்.

குடி என்பது வளர்ந்துகொண்டே வரும் ஒரு சமூகத் தீமை. வாய்ப்புக் கிடைக்கும்போது அதை ஒழிப்பதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டியது அரசாங்கத்தின் கடமை என்பதே என்னுடைய கருத்தாகும். இதன் நோக்கம் என்ன என்பது தெளிவானது. தொழிலாளர்களையும், ஹரிஜனங்களையும் இந்தச் சாபக்கேட்டிலிருந்து விடுவிக்க வேண்டுமென்று விரும்புகிறோம். இது மகத்தான ஒரு பிரச்னையாகும். குடிப் பழக்கம் போவதற்கு எல்லா சமூக நல ஊழியர்களும், முக்கியமாகப் பெண்களும், தம்முடைய முழு சக்திகளையும் இயன்ற வரையில் உபயோகிக்க வேண்டியிருக்கும். நான் குறிப்பிட்டுள்ள மது விலக்கு (இது இன்றியமையாதது என்பதில் சந்தேகமில்லை), இந்தச் சீர்திருத்தத்தின் ஆரம்பம்தான். ஆசை காட்டி அழைப்பதற்கு வீட்டுக்கு அருகிலேயே கள்ளுக்கடை இருக்கும் வரையில், குடிகாரரை நாம் அணுக முடியாது. ஒரு திறந்த பெட்டியில் நிறைய இனிப்புப் பலகாரங்களை எதிரில் வைத்துவிட்டு, உடல் நலம் சரியாயில்லாத ஒரு குழந்தையோ, அல்லது வயதானவரோ கூட, அதைத் தொடக் கூடாது என்று தடுக்க முடியுமா? அந்தப் பெட்டியையே அகற்றினாலொழிய அது சாத்தியமல்ல.

பல நண்பர்கள் பத்திரிகைகளில் வரும் செய்திகளை எனக்குக் கத்தரித்து அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள். இந்த சமயத்தில், அத்தகைய ஒரு செய்தியில் காணப்படும் ஒரு வாதத்

திற்குப் பதிலளிக்க விரும்புகிறேன். அதாவது, இந்தச் சீர்திருத் தத்தில் தமக்குள்ள உற்சாகத்தில் ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியார், இதனால் வேலையில்லாமல் போய்விடக் கூடிய கள்ளிறக்குவோர் பிரச்னையைப் பொருட்படுத்தாமல் தள்ளிவிட்டாராம். அவர்கள் விஷயத்தில் என்ன செய்ய வேண்டுமென்று அவர் நினைத்திருக்கிறார் என்பது எனக்குத் தெரியாது. பனை வெல்லம் செய்வதில் நிபுணராகிக் கொண்டிருக்கும் ஸ்ரீ கஜானன் ஒன்று கூறுகிறார். தெற்கு மாகாணத்தில் மரம் ஏறுபவர்கள் இந்த மோசமான தொழிலில் ஈடுபட்டிருப்பதாக அவர் கூறுகிறார். மரம் ஏறுவதை நிறுத்த வேண்டிய அவசியமே இல்லை என்று அவர் கருதுகிறார். ஆனால், மதுவிலக்கு ஆட்சியில் அவர்கள் இறக்குவது பதனீராக இருக்கும். இது கள்ளாக மாற்றப்படாமல், வெல்லமாக மாற்றப்படும். ஆந்திர தேசத்தில் மரம் ஏறுபவர்கள் தாம் இறக்கும் பதனீரை விற்பனை செய்வதில்லை என்றும், ஆனால், அதை வெல்லமாக மாற்றி சாராயம் காய்ச்சுபவர்களுக்கு விற்றுவிடுகிறார்கள் என்றும், அவர்கள் அதிலிருந்து சாராயம் காய்ச்சுகிறார்களென்றும் அறிகிறேன். அம்மாதிரி சந்தர்ப்பங்களில், அரசாங்கமே அந்த வெல்லத்தை, இருவரும் ஒப்புக்கொள்ளும் ஒரு நியாயமான விலைக்கு வாங்கிக்கொண்டு விடுவதைத் தவிர வேறொன்றும் செய்ய வேண்டியதில்லை. மரம் ஏறுபவர்களைப் பற்றி எனக்குத் தெரிந்தமட்டில், வரப்போகும் மதுவிலக்கினால் அவர்கள் எதையும் இழக்கப்போவதில்லை. உடலையும், உள்ளத்தையும் பாதிக்கும் ஒரு திராவகத்திற்குப் பதிலாக, ஏழைகளுக்குப் பனைவெல்லம் என்ற மலிவான, ஆனால், புஷ்டியான உணவுப்பொருள் கிடைக்கும்.

—'ஹரிஜன்' – 14—8—1937

## 18

# அங்கும் அபாயகரமானதே

பனி உறையும் அளவுக்கு அவ்வளவு குளிர் உள்ள பிரதேசங்களில் மதுபானம் அவசியமாயிருக்கலாம் என்று நான் கூறியிருந்தேனல்லவா? 'மது கட்டுப்பாடு' என்று ஜி. இ. ஜி. காட்லின் என்பவர் எழுதியுள்ள ஒரு புஸ்தகத்திலிருந்து ஒரு நண்பர் பின்கண்ட ஒரு பகுதியை எனக்கு அனுப்பியிருக்கிறார். மதுபானத்தினால் உடம்பில் ஒரு சூடு ஏற்படுவதுபோல் தோன்றுவதைப்பற்றி அவர் விவாதித்திருக்கிறார்:

"நாம் சாதாரணமாக யோசித்துப் பார்த்தாலே, இந்தப் பலன்களைத் தவறாக அர்த்தம் செய்துகொள்ளுவதன் அபாயம் புலப்படும். உடலின் உஷ்ண நிலை மாறுவதில்லை. ஆனால், உஷ்ணமான ரத்தம் மேல் பகுதிகளுக்கு வந்துவிடுகிறது. அங்கே அது குளிர்ந்தவுடன், உடலின் உஷ்ண நிலை பூராவை

யுமே குறைப்பதற்குத் திரும்பிவிடுகிறது. கடும் குளிருக்குப் பாதுகாப்பு செய்துகொள்ள வேண்டிய இடங்களில் மது வகைகளால் பிரயோசனமில்லை என்பதோடு மட்டுமில்லை; அவை அபாயகரமானவைகளும்கூட. துருவப் பகுதிகளில் பிரயாணம் செய்யும்போது, "ஊக்கமூட்டும் எந்த போதை வஸ்துக்களையும் உபயோகிக்கக் கூடாது என்பதே என்னுடைய அனுபவம்" என்று பிரிஜாப் நான்ஸென் கூறியிருக்கிறார். போதை வஸ்துக்கள் சம்பந்தப்பட்டவரையில், விறைத்துப்போய் இறந்துவிடக் கூடும் என்ற அதிகப்படி அபாயமும் இருக்கிறது.''

ஆயினும், இந்தியாவிலுள்ள நமக்கு இம்மாதிரி சாட்சியங்கள் அவசியமில்லை. நம் நாட்டில் நமக்கு வேண்டிய உஷ்ணம் பூராவையும் சூரியனே கொடுக்கிறது. ஆகவே, இங்கே போதை தரும் பானங்களைச் சாப்பிடுவதற்கு எந்தவிதமான நியாயமும் கிடையாது.

—'ஹரிஜன்' 28—8--1937

# 19

# மிகப் பெரிய காரியம்

காரியக் கமிட்டியின் காரியங்களில், எந்தக் காலத்திலும் இந்தத் தீர்மானம்தான் (மதுவிலக்கைப் பற்றியது) மிகப் பெரிய காரியம் என்று நான் கருதுகிறேன். மதுவிலக்கைப் பற்றிப் பேசுவது எப்போதுமே ஒரு மோஸ்தராயிருந்திருக்கிறது. 1920-இல் இது காங்கிரஸின் முக்கியமான நிர்மாண வேலைத்திட்டங்களில் ஒன்றாயிற்று. ஆகையால், காங்கிரஸ் இந்தியாவின் எந்த பாகத்திலாவது அதிகாரத்திற்கு வந்தால், உடனடியாகப் பூரண மதுவிலக்கு செய்யாமலிருக்க முடியாது. ஆறு மாகாணங்களில் சுமார் ரூ. 11 கோடி வருமானத்தைக் கைவிடுவதற்கு மந்திரிகளுக்குத் தைரியம் இருக்க வேண்டியிருக்கிறது. தான் சொன்ன சொல்லை நிறைவேற்றுவதற்காகவும், போதை வஸ்துக்களைச் சாப்பிட்டுப் பழக்கப்பட்டுப் போனவர்களின் ஆன்ம நலன்களையும், வாழ்க்கை நலன்களையும் காப்பாற்றுவதற்காகவும் காரியக் கமிட்டி இதைத் துணிந்து செய்திருக்கிறது. காங்கிரஸ், பெரும்பான்மை பலத்துடன் இல்லாத ஐந்து மாகாணங்களும் கூட, இந்த ஆறு மாகாணங்களின் உதாரணத்தைப் பின்பற்றத் தயங்கமாட்டா என்பதே என்னுடைய மனப்பூர்வமான நம்பிக்கையாகும். மதுவிலக்கை அமல் நடத்துவது மற்ற ஆறு மாகாணங்களைப்போல் அவர்களுக்கு அவ்வளவு கஷ்டமல்ல. சமஸ்தானங்களும், பிரிட்டிஷ் இந்தியாவின் உதாரணத்தைப் பின்பற்றுமென்பது அளவுக்கு மீறிய நம்பிக்கையா?

மதுவிலக்கை வெற்றிகரமாக்க முடியுமா என்று பலர் சந்தேகப்படுவது எனக்குத் தெரியும். பண வருவாயை அவ்வளவு சுலபமாகக் கைவிட்டுவிட முடியாது என்று அவர்கள் நினைக்கிறார்கள். இந்தப் பழக்கம் உள்ளவர்கள் எப்படியாவது தமக்கு வேண்டிய போதை வஸ்துக்களைப் பெற்று விடுவார்களென்றும், மதுவிலக்கினால் வருமானம்தான் நஷ்டமாகிறது என்றும், கள்ளத்தனமாகவாவது போதை வஸ்துக்களை உட்கொள்ளுவது குறிப்பிடத்தக்க அளவில் குறையவில்லை என்றும் மந்திரிகள் கண்டுபிடித்தவுடன், மீண்டும் அந்த மாசுபடிந்த வருமானத்திற்குத் திரும்பி விடுவார்கள் என்றும், அப்போது நிலைமை இப்போதிருப்பதைவிட இன்னும் மோசமாக இருக்குமென்றும் அவர்கள் வாதாடுகிறார்கள்.

அந்த மாதிரி பயம் எதுவும் எனக்குக் கிடையாது. உன்னதமான இந்த லட்சியத்தில் வெற்றி பெறுவதற்கான தார்மிக ஊக்கம் நாட்டில் இருக்கிறது என்றே நான் நம்புகிறேன். மதுவிலக்கு உண்மையானதாக இருக்க வேண்டுமானால், மூன்று வருடங்களுக்குப் பிறகு என்றில்லாமல், ஆறு மாதங்களுக்குள்ளாகவே, குடி ஒழிந்து விடுவதைப் பார்க்க ஆரம்பித்து விடுவோம். இந்தியாவில் உண்மை உதயமானவுடன், பின்தங்கியிருந்த மாகாணங்கள் அல்லது சமஸ்தானங்களும் வேறு வழியில்லை என்று தலைவணங்கித்தான் ஆகவேண்டும்.

ஆகையால், இந்த நூற்றாண்டிலேயே மிகப் பெரிய இந்த ஆன்மிக இயக்கத்திற்கு ஐரோப்பியர்கள் உள்பட எல்லாக் கட்சிகளின் அனுதாபத்தையும், ஆதரவையும் மட்டுமல்லாமல், உலகம் பூராவிலுமுள்ள சிறந்த மனிதர்களின் அனுதாபத்தையும், ஆதரவையும் எதிர்பார்ப்பதற்கும் நமக்கு உரிமை இருக்கிறது.

மதுவிலக்கு என்பது இந்தியாவில் ஒரு பெரிய ஆன்மிக விழிப்பை உண்டாக்குவதாயிருக்க வேண்டுமென்றால், கள்ளுக்கடைகளை மூடுவது, குடிப்பழக்கத்தினால் உள்ளமும், உடலும் அழிந்து போன அந்த ஏழைகளும், சில பணக்காரர்களும் அந்தப் பழக்கத்திலிருந்து அடியோடு விடுபடுவதற்கு அது ஆரம்பமாகத்தானிருக்க வேண்டும். அரசாங்கத்தின் முயற்சியினால் மட்டும் இதைச் சாதித்துவிட முடியாது. இதற்குத் தேவையான விரிவான திட்டம் எப்படியிருக்க வேண்டும் என்பதை மகாதேவ தேசாய் தனது குறிப்புகளில் சொல்லியிருக்கிறார். அதையே சுருக்கமாக நானும் திருப்பிச் சொல்லுகிறேன்.

(1) ஒவ்வொரு மாகாணத்திலும் எங்கெந்த இடங்களில் கள்ளுக்கடைகள், அபினிக் கடைகள் இருக்கின்றன என்பதைக் காட்டும் படம்.

(2) லைசென்ஸ் காலாவதியானவுடன் அந்தக் கள்ளுக்கடைகளை மூடிவிடுவது.

(3) பிறகும் கிடைத்துக் கொண்டிருக்கும் குடி வருமானத்தை உடனடியாக முற்றிலும் மதுவிலக்குக்கு என்றே ஒதுக்கிவிடுதல்.

(4) ஏற்கனவே கள்ளுக்கடைகளுக்கு வந்து கொண்டிருந்தவர்கள் தொடர்ந்து வருவார்கள் என்ற நம்பிக்கையில், சாத்தியமான இடங்களிலெல்லாம் பழைய கள்ளுக்கடைகளைப் பொழுது போக்கு, உணவு, பான விடுதிகளாக மாற்றுதல். கள்ளுக்கடைக் குத்தகைக்காரர்களே இந்த விடுதிகளை நடத்தும்படி செய்ய முயற்சித்தல்.

(5) இப்போதுள்ள கலால் இலாகா சிப்பந்திகளைக் கள்ளச்சாராயம் காய்ச்சுதல், கள்ளச்சாராயம் குடித்தல் போன்றவைகளைக் கண்டுபிடிக்க உபயோகித்துக் கொள்ளுதல்.

(6) ஆசிரியர்களும், மாணவர்களும் தம் நேரத்தில் ஒரு பகுதியை குடி எதிர்ப்புப் பிரசாரத்தில் செலவிடச் செய்யும்படி கல்வி ஸ்தாபனங்களைக் கேட்டுக்கொள்ளுதல்.

(7) குடி, அபினிப் பழக்கம் உள்ளவர்களை நேரில் போய்ச் சந்திக்கும்படி பெண்களைக் கேட்டுக்கொள்ளுதல்.

(8) தாம் மதுவிலக்கை ஆரம்பிக்கும் அதே சமயத்தில் பக்கத்து ராஜ்யங்களிலும் மதுவிலக்கை ஆரம்பிப்பதற்குப் பேச்சு வார்த்தை நடத்துதல்.

(9) குடிப் பழக்கமுள்ளவர்களை அதிலிருந்து மாற்றுவதற்கு போதை யளிக்காத மாற்று பானங்கள் என்ன கொடுக்கலாம், வேறு என்ன செய்யலாம் என்று டாக்டர்களிடம் யோசனை கேட்பது. அவசியமானல், இதற்காக டாக்டர்களுக்குரிய கட்டணத்தையும் கொடுக்கலாம்.

(10) குடி எதிர்ப்புப் பிரசாரத்திற்கு ஆதரவாக குடி ஒழிப்பு சங்கங்களின் நடவடிக்கைகளை மீண்டும் ஆரம்பிப்பது.

(11) நல்ல முதல்தரமான நிர்வாகத்தின் கீழ், தம்மிடம் வேலை செய்பவர்களின் உபயோகத்திற்காக உணவு, பான விடுதிகளையும், பொழுது போக்கு விடுதிகளையும், நூல் நிலையங்களையும் ஆரம்பிக்கும்படி தொழிலதிபர்களைக் கேட்டுக்கொள்ளுதல்.

(12) பதனீர் இறக்கி விற்பதற்கோ அல்லது அதை வெல்லமாக்குவதற்கோ மரமேறுபவர்களைப் பயன்படுத்திக் கொள்ளுதல். அருந்துவதற்காக அல்லது வெல்லம் செய்வதற்கு உபயோகிப்பதற்கும், கள்ளாக்குவதற்கும் முறை வெவ்வேறானவை என்று அறிகிறேன்.

குடி, போதை வஸ்துக்களை எதிர்த்துப் பிரசாரம் செய்வதற்கு என்ன செய்ய வேண்டும் என்பதைப் பார்த்துவிட்டோம்.

சில மாகாணங்களில் மொத்த வருமானத்தில் குடி வருமானம் மூன்றில் ஒரு பகுதியாக இருக்கிறது. இந்த வருமான நஷ்டத்தை எப்படி ஈடு செய்வது? கல்விக்காகவே குடி வருமானம் முக்கியமாக உபயோகிக்கப்படுகிறது. கல்விச் செலவைக் குறைக்கலாமென்று நான் கொஞ்சமும் தயக்கமின்றி யோசனை கூறியிருக்கிறேன். கல்விச் செலவைச் சரிக்கட்டிக் கொள்ள முடியும் என்றே இன்னமும் நான் சொல்லுகிறேன். இதைப் பற்றி வேறொரு சந்தர்ப்பத்தில்தான் நான் விவாதிக்க வேண்டும். அச்செலவை ஈடு செய்துகொள்ளுவது சாத்தியமே என்பது ஒப்புக்கொள்ளப்பட்டால்கூட, ஒரே நாளில் அப்படிச் செய்து விட முடியாது. ஏற்கனவே உள்ள பொறுப்புகளை நிறைவேற்றியாக வேண்டும். ஆகவே, புதிய வருமான இனங்களைக் கண்டு பிடிக்க வேண்டும். மரண வரி, பீடி உள்பட புகையிலை வரி ஆகியவைகளை விதிக்கலாம் என்று ஏற்கனவே யோசனைகள் கூறப்பட்டிருக்கின்றன. இவற்றை உடனடியாக நிறைவேற்றுவது அசாத்தியமானது என்று கருதப்பட்டால், பற்றுக்குறையைச் சமாளிப்பதற்குக் குறுகிய காலத்திற்குக் கடன் வாங்கலாம். அதுவும் தோல்வியடைந்தால், ராணுவச் செலவைக் குறைத்துக் கொண்டு, மாகாணங்களுக்கு அதற்கேற்ற விகிதாசாரப்படி மான்யம் கொடுக்க வேண்டுமென்று மத்திய சர்க்காரைக் கேட்கலாம். தங்களுடைய உள்நாட்டு அமைதி சம்பந்தப்பட்ட வரையிலாவது ராணுவம் தமக்குத் தேவையில்லை என்பதை மாகாணங்கள் ருசுப்பித்தால், இந்தக் கோரிக்கையை மறுப்பது கஷ்டமாயிருக்கும்.

—'ஹரிஜன்' – 28—8—1937

# 20

# அனுபவசாத்தியமற்றது அல்ல

சர்தார் சர். ஜோகேந்திர சிங் ஒரு பெரிய சமூக சீர்திருத்தக்காரர்; நன்றாய்ப் படித்தவர்; ஒரு ராஜீயவாதி. ஆகையால், அவர் என்ன எழுதினாலும் அது கவனத்திற்குரியதாகும். பூரண மதுவிலக்கைப் பற்றி அவர் 'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகையில் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். அவருடைய கட்டுரைக்குரிய மதிப்புடன் அதை வாசித்தேன். ஆனால், பெருமூச்சுடன் தான் அதை முடித்தேன் என்பதை நான் ஒப்புக்கொள்ளத் தான் வேண்டும். எந்தச் சோதனையிலும் தேற முடியாத காரணங்களுக்காக, இத்தகைய ஒரு சீர்திருத்தவாதி எப்படித் தோல்வியை ஒப்புக்கொள்ள முடியும்? "கள்ளச்சாராயம் காய்ச்சுதலும், திருட்டுத்தனமாகக் குடிப்பதும் இருந்து கொண்டுதானிருக்கும். ஆகையால், மதுவிலக்குக்கு முயற்சி செய்ய வேண்டியதில்லை" என்பது ஒன்றுதான் அவருடைய வாதமென்று தோன்று

கிறது. பஞ்சாபில் விரும்பும் பகுதிகளில் மதுவிலக்கைக் கொண்டு வரலாம் என்று அனுமதிக்கப் பட்டிருந்தது. ஆனால், யாரும் அப்படிக் கேட்கவில்லை. "ஆகையால், பலவந்தமாக மது விலக்கை அமலுக்குக் கொண்டு வருவது தோல்வியடைந்துவிடும். கிராமப் புனருத்தாரணத்திற்குத் தேவைப்படுகிற வருமானத்தையும் மாகாணங்கள் இழந்துவிடும்" என்று அவர் கூறுகிறார். மது விலக்கையும், வருமானத்தையும் இணைத்ததன் மூலம் சர்தார் தன் கட்சியையே கைவிட்டுவிட்டு, முன்னுக்குப்பின் முரணாகப் பேசுகிறார். ஏனெனில், அவருடைய கட்டுரையின் நாலாவது பகுதியில் பின்வருமாறு கூறுகிறார்: "குடியைக் கட்டுப்படுத்தும் விஷயத்தில் வருமானத்தைப் பற்றிப் பொருட்படுத்த மாட்டேன் என்பதைத் தெளிவாகக் கூறியிருக்கிறேன்." மது வருமானத்தை உபயோகிப்பதில்லை என்று தம்மையே தடை செய்துகொண்டதன் மூலம், நல்ல வேளையாக, காங்கிரஸ் மந்திரிசபைகள் வருமானம் என்ற வலையில் விழாமல் தப்பித்துக்கொண்டு விட்டார்கள். இதில் கொஞ்சமாவது இடைவெளி விடப்பட்டால், ஒழுக்கத்திற்கு விரோதமான இந்த லாபத்தைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற சபலமும் மிகவும் அதிகமாயிருக்கும். ஏனெனில், குடிகாரர்களை ஒரே நிமிஷத்தில் மாற்றி விடுவது கஷ்டம் என்பதை யாரும் மறுக்கவில்லை. மதுவிலக்கை அமலுக்குக் கொண்டுவர வேண்டுமென்று பழைய மந்திரிகளை நான் கேட்கும்போது இது அனுபவசாத்தியமற்றது என்று அவர்கள் சொல்லுவதில்லை. இந்த வியாபாரத்தில் கிடைக்கும் ஏராளமான வருமானத்தைத் தாங்கள் கைவிட முடியாது என்றே அவர்கள் சொன்னார்கள். கல்விக்காக அவர்களுக்கு அது வேண்டியிருந்தது. ஆட்சேபிக்கத்தக்க ஒரு இனத்திலிருந்து கிடைக்கும் வருமானத்தின் மூலம் அளிக்கப்படும் கல்வி, பெறத் தகுந்தது தானா? அதில் ஏதாவது மதிப்பு உண்டா? இந்தியாவிலுள்ள பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் கல்வி பயின்றவர்களிடமிருந்து அந்தக் கல்விக்குரிய பிரதிபலனை இந்தியா பெற்றிருக்கிறதா?

காலம் உள்ள வரையில் திருடுவதும் இருந்து கொண்டு தானிருக்கும். இதற்காகத் திருடுவதற்கு லைசென்ஸ் கொடுக்க வேண்டுமா? பொருளைத் திருடுவதைவிட, உள்ளத்தைத் திருடுவது குறைந்த குற்றமா? கள்ளத்தனமாகச் சாராயம் காய்ச்சுவது ஓர் அளவுக்கு நடந்து கொண்டுதான் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. குடிகாரர்களையும், அபினி தின்பவர்களையும், உஷாரான பொதுமக்களின் உதவியுடன் அரசாங்கம் அனுதாபத்துடன் நடத்தும் முயற்சிகளின் அளவைப் பொறுத்தே கள்ளச் சாராயம் காய்ச்சுவதன் அளவும் இருக்கும். பொருளீட்டுவதற்கும், ஆரோக்கியத்துடன் இருப்பதற்கும் ஒரு விலை கொடுக்க வேண்டியிருப்பதைப் போலவே, தார்மிகத் துறையில் உயர்வு பெறுவதற்கும் ஒரு விலை கொடுக்க வேண்டும். ஆனால், பூரண மதுவிலக்கை முதலில் அமலாக்காவிட்டால் இந்த உருவான முயற்சி தோல்வி

யடையத்தான் செய்யும் என்பதே என்னுடைய வாதமாகும். குடிப் பழக்கம் உள்ளவர்கள் தம்முடைய சபலத்தைத் திருப்தி செய்துகொள்ளுவதற்கு அரசாங்கம் அனுமதிப்பதோடில்லாமல், அதற்கு வேண்டிய வசதிகளையும் செய்து கொடுத்துக்கொண்டிருக்கும் வரையில், சீர்திருத்தவாதிகள் வெற்றி பெறுவது துர்லபமே. ஜிப்ஸி ஸ்மித் என்பவர் மிகவும் சக்தி வாய்ந்த மதுவிலக்குப் பிரசாரகர். அவருடைய பாடல்களிலும் பிரசங்கத்திலும் மயங்கி, அவருடைய கூட்டத்திற்கு வரும் பலர் இனிக் குடிப்பதில்லை என்று சங்கல்பம் செய்து கொள்ளுவார்கள். அவருடைய கூட்டங்களில் இது ஒரு விசேஷ அம்சமாகும். தென்னுப்பிரிக்காவில் என்னுடைய சொந்த அனுபவத்திலிருந்து நான் ஒன்று சொல்ல முடியும். இந்தப் பழக்கத்திற்கு அடிமைப் பட்டவர்களில் பெரும்பாலோர், தம்மெதிரிலுள்ள அரண்மனை போன்ற மதுபானக் கடைகளுக்குள் நுழையாமல் இருக்க முடிவதில்லை. நகரங்களில் அவர்கள் எந்த முக்கியமான தெருக்களின் வழியாகச் சுற்றித் திரிந்தாலும் இப்படித்தான் நகரங்களிலிருந்து வெளியே வந்தால், வழியிலுள்ள கடைகளுக்கும் அவர்கள் போகாமலிருக்க முடிவதில்லை. அரசாங்கமே மதுவிலக்கை அமலுக்குக் கொண்டுவருவது, இந்தப் பெரிய சீர்திருத்தத்தின் முடிவல்ல. அது அதனுடைய இன்றியமையாத ஆரம்பமேயாகும்.

விரும்பும் பிரதேசங்களில் இதை அமலாக்கலாம் என்ற சலுகை சம்பந்தப்பட்ட வரையில், அதைப்பற்றி அதிகம் பேசாமலிருப்பதே நல்லது. இந்தத் தீமையான குடி மடங்களை மூடுவதற்கு எப்போதாவது எதிர்ப்பு இருந்ததா? ஓர் இடத்திலுள்ளவர்கள் எல்லோருமே குடிக்க விரும்பினுல், அங்கே இந்தச் சலுகைக்கு இடமுண்டு.

ஆண்டவன் அருளினுல் மதுவிலக்கு நிலைத்துவிட்டது. காங்கிரஸ் வேறு எதையும் சாதித்தாலும், சாதிக்காவிட்டாலும் மதுவிலக்கை அமல் நடத்துவதாக 1920ல் பிரதிக்ஞை எடுத்துக் கொண்ட காங்கிரஸ், தனக்கு வாய்ப்புக் கிடைத்த முதல் தருணத்திலேயே, அதன் விளைவைக் கவனிக்காமல் அந்தப் பிரதிக்ஞையை நிறைவேற்ற ஆரம்பித்தது என்று சரித்திரத்தில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்படும். மற்ற மாகாணங்களும் இந்த உதாரணத்தைப் பின்பற்றுமென்பதில் எனக்குச் சந்தேகமில்லை. மிகவும் அவசியமான இந்தச் சீர்திருத்தத்திற்கு எதிராக காங்கிரஸை எச்சரிக்க வேண்டாமென்று சர்தார் ஜோகேந்திர சிங்கைக் கேட்டுக்கொள்ளுகிறேன். தம்முடைய மாகாணத்திலும் வீர சீக்கியர்களிடையேயும் இதற்கு ஆதரவாகத் தம்முடைய செல்வாக்கை அளிக்கும்படி அவரை அழைக்கிறேன்.

—'ஹரிஜன்'-25—9—1937

# 21

# வெற்றிக்கான நிபந்தனைகள்

என்னைப் போலவே பாவாஸாஹிப் லவாடேக்கும் மது விலக்கில் மிகுந்த அக்கறை உண்டு. இது சம்பந்தமாக அவர் நானிருக்குமிடம் வந்து என்னைக் கௌரவித்திருக்கிறார். நாங்கள் பின்கண்ட முடிவுகளுக்கு வந்திருக்கிறோம்:

1. இது முதல், மதுவிலக்கு காரியங்களுக்காகத் தவிர வேறு எதற்காகவும் கலால் வருமானத்தைக் கண்டிப்பாக உபயோகிக்கக் கூடாது.

2. காலாவதியாகும் லைசென்ஸுகளைப் புதுப்பிக்கக் கூடாது. இந்தக் கடைகளுக்குப் போகும் பழக்கமுள்ளவர்களில் 75 சத விகிதத்தினராவது கோரினால், அங்கே உடனடியாக எல்லாக் கள்ளுக்கடைகளையும் மூடிவிடவேண்டும்.

3. மது வகைகளை விற்கவேண்டிய அவசியமிருந்தால்,நேரடியாக அரசாங்கமே நடத்தும் கடைகளின் மூலம்தான் விற்க வேண்டும்.

4. இப்போதுள்ள கள்ளுக்கடைகளையெல்லாம், சாத்தியமான இடங்களில் பொழுதுபோக்கு, உணவு, பான விடுதிகளாக மாற்றிவிடவேண்டும்.

5. குறிப்பிட்ட இடங்களை எடுத்துக்கொண்டு, இந்தப் பழக்கத்தின் காரணம் என்ன என்பதை ஆராய்ச்சி செய்து, அதைச் சமாளிப்பதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும்.

6. அங்கீகரிக்கப்பட்ட தனி நபர்கள், அல்லது கோஷ்டிகள் முற்றிலும் அமைதியாகவும், மௌனமாகவும், விஷய அறிவு ஊட்டும் விதத்திலும் மறியல் செய்ய வேண்டும். குடிகாரர்கள் தமது பழக்கத்தைக் கைவிடுவதற்கு உதவி செய்வதற்காக அவர்களுடன் நேரடியாக நெருங்கிய தொடர்பு ஏற்படுத்திக்கொள்ளுவதே இதன் நோக்கமாகும். குடிகாரர்களின் வீட்டுக்கே நேரில் போவது, முறையான மறியலின் ஓர் அம்சமாயிருக்கும். இந்தப் பரோபகாரத் தன்மை வாய்ந்த வேலையைத் தாமாகவே செய்ய முன்வருபவர்களுக்கு அரசாங்கம் ஊக்கமளிக்க வேண்டும்.

—'ஹரிஜன்' – 9—10—1937

# 22

# உண்மையாயின் மிருகத்தனமானது

ஒருவர் பின்வருமாறு எழுதுகிறுர் :

''நாஸிக்கில் ஒரு போலீஸ் பயிற்சிப் பள்ளிக்கூடம் இருக்கிறது. இங்கே தான் போலீஸ் அதிகாரிகளே உருவாக்குகிறுர்கள். அவர்கள் எல்லோரும் சேர்ந்தே பொதுவாகச் சாப்பிடவேண்டும்;மாமிசமும் மது வகைகளும் சாப்பிட வேண்டுமென்றும் எதிர்பார்க்கப்படுகிறுர்கள். மாமிசம் சாப்பிடுவது ஒருபுற மிருக்கட்டும்· தம்முடைய போலீஸ் அதிகாரிகளுக்குக் குடிக்கும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொடுப்பது, அரசாங்கத்தின் மதுவிலக்குக் கொள்கைக்கு எவ் வளவு தூரம் பொருத்தமானதாகும்? இந்த அதிகாரிகள் மதுவிலக்கு நட வடிக்கைகளிலும் பங்கெடுத்துக் கொள்ளவேண்டியிருக்கலாம். இந்தப் பள்ளிக் கூடத்தில் மாமிசமும், மது வகைகளும் கட்டாயமாகச் சாப்பிட்டாக வேண்டு மென்பதுகூட உங்களுக்குத் தெரியாமலிருக்கலாம்.

இந்தக் கட்டாயத்தைப்பற்றி எனக்குத் தெரியாது என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். இவர் இவ்வளவு நம்பிக்கையுடன் எழுதுவதால்தான் இந்தக் கடிதத்தைப் பிரசுரித்திருக்கிறேன். இந்தத் தகவல் உண்மையானதென்றுல், ஒரு போலீஸ் அதி காரியின் பயிற்சிக்கு மாமிசமும், மதுவும் சாப்பிடுவது அவசிய மானது என்று கருதப்படுவது நிச்சயமாக மிருகத்தனமானதே. இந்த விதியினுல், மாமிசம் சாப்பிடாதவர்களும், மது அருந்தா தவர்களும் போலீஸ் அதிகாரிகள் பயிற்சியிலிருந்து விலக்கப்படு கிறுர்களென்று ஆகிறது. மாமிசத்தைத் தவிர்ப்பதை ஒரு மத தருமமாகக் கொண்ட பல்லாயிரக்கணக்கான மக்கள் உள்ள இந்த நாட்டில் இந்த விதி ஒரு பெரிய அநீதியாகும். இந்த நண்பர் கொடுத்துள்ள தகவல் சரியானதல்ல என்றும், அப்படி அது உண்மையாயிருந்தால், இப்பெரும் தவறு தாமதமின்றி உடனே சரிப்படுத்தப்படும் என்றும்தான் நான் நம்பமுடியும்.

—'ஹரிஜன்' - 5—11—1938

# 23

# தாமதப்படுத்தக் கூடாது

மதுவிலக்கு எந்த உணர்ச்சியுடன் ஏற்றுக்கொள்ளப்பட் டதோ அந்த உணர்ச்சியுடன் அது காங்கிரஸ் மாகாணங்களில் நடத்தப்படவில்லே. ஒருக்கால் அது மந்திரிகளின் தவருயில்லா மலிருக்கலாம். பொதுஜன அபிப்பிராயம் கண்டிப்பாக இல்லே. காங்கிரஸ்காரர்களின் அபிப்பிராயமும் அதே மாதிரி உறக்கத்தி

லிருக்கிறது. மதுவிலக்கினல் பல லட்சக்கணக்கான மக்கள் புது வாழ்வு பெறுகிறுர்களென்பதை காங்கிரஸ்காரர்கள் உணர வில்லைபோல் தோன்றுகிறது. நாணயத்துடன் மதுவிலக்கை அமல் நடத்துவதால் காங்கிரஸுக்கு ஒரு கௌரவமும், அந்தஸ்தும் ஏற்படுகிறது என்பதையும், அந்த அளவு கௌரவமும், அந்தஸ்தும் வேறு எந்த ஒரு நடவடிக்கையின் மூலமும் கிடைக்காது என்பதையும் அவர்கள் புரிந்து கொள்ளவில்லை. மதுவிலக்கை அமல் நடத்துவது மக்களுடன் ஐக்யப்படுத்திக் கொள்ளுவதாகும் என்பதையும், மது வருமானம் எங்களுக்கு வேண்டவே வேண்டாம் என்று உறுதியுடன் மறுப்பதாகும் என்பதையும் அவர்கள் கவனிக்கவில்லை. ராஜாஜியைப் போன்ற ஒரு தீர்ந்த மதுவிலக்குவாதிக்குக்கூட, மதுவின் மூலம் கிடைக்கும் வருமானத்தை, முற்றிலும் குடித் தீமையை எதிர்த்துப் போராடுவதற்காகவே ஒதுக்கி வைப்பதற்குத் துணிவு வரவில்லை. இந்த விஷயத்தில் அவர் மிகவும் ஜாக்கிரதையாக நடந்து கொள்ளுகிருர். சுதந்திரம் பெறுவதற்கு எந்தத் தியாகமும் பெரிதல்ல என்பதை காங்கிரஸ்காரர்கள் தெரிந்து கொண்டிருக்கிருர்கள். குடி, போதை வஸ்துக்களின் பிடிப்பிலேயே நாம் தொடர்ந்து இருந்து கொண்டிருந்தால், நமது சுதந்திரம் அடிமைகளின் சுதந்திரமாகவே இருக்கும். எல்லா மாகாணங்களிலுமே பூரண மதுவிலக்கை அமல் நடத்துவதற்கு என்ன செலவானுலும் அது ஒரு பெரிய விஷயமா?

ஆயினும், சரியான 'பனியாக்'களைப்போல் மந்திரிகள் மதுவிலக்குத் திட்டங்களைத் தயாரிப்பதைப் பார்க்கிரேம். தம்முடைய வரவு, செலவில் துண்டு விழுவதையே நினைத்துக் கொண்டிருக்கிருர்கள். குடிப்பவர்கள், அபினி தின்பவர்கள் யாவருமே திடீரென்று தம்முடைய இந்தப் பழக்கத்தை நிறுத்திவிட்டால், மந்திரிகள் அப்பொழுது என்னதான் செய்வார்களோ? எப்படியாவது பார்த்துக் கொள்ளுவார்களென்று இதற்குப் பதில் சொல்லலாம். அதை அவர்கள் தாமாகவே செய்யக்கூடாதா? ஒரு காரியத்தை நிர்ப்பந்தத்தின் மீதல்லாமல் நாமாகவே செய்வதில் தான் மதிப்பு இருக்கிறது. பீகாரில் பூகம்பம் வந்தபோது ஒரு வருட வருமானத்திற்கதிகமான நஷ்டம் ஏற்பட்டது. அதனல் பீகார் அரசாங்கம் ஸ்தம்பித்துவிட்டதா? பஞ்சமும், மழையும் மக்களைச் சீரழித்து, வருமானம் பெரிதும் குறைந்து விடும்போது, இந்தியா பூராவிலுமுள்ள அரசாங்கங்கள் என்ன செய்கின்றன? வருமானத்திற்காக மதுவிலக்கைத் தாமதிப்பதன் மூலம், காங்கிரஸ் அரசாங்கங்கள் மதுவிலக்கு பற்றிய தமது பிரதிக்ஞையை மீருவிட்டாலும், அதன் உணர்ச்சியை மீறுகிருர்கள்.

புதிதாக வரி விதிப்பதன் மூலம் வருமானத்தைப் பெருக்கிக் கொள்ளுவதற்கு அவர்கள் உண்மையாக முயற்சி செய்ய வேண்டும். குடியின் சாபக்கேடு, நகரப்புறங்களில் பரவலாயிருக்கிறது. அந்தப் பிரதேசங்களில் புது வரிகளை விதிக்கலாம். மதுவிலக்கின் மூலம் தொழிற்சாலைகளை நடத்துபவர்களுக்கு நேரடியான

உதவி கிடைக்கிறது. ஆகையால், மதுவிலக்கின் மூலம் ஏற்படும் வருமான நஷ்டத்தை அவர்கள் நிச்சயமாக ஈடு செய்யமுடியும். அகமதாபாத்தில் சில மாதங்களாக மதுவிலக்கு அமலில் இருந்த காலத்தில் தொழிலதிபர்கள், தொழிலாளர்கள் இருவருக்குமே அதிகப் பணம் கிடைத்திருக்கிறது. இந்தப் பெரிய சேவைக்காகத் தொழிலதிபர்கள் ஏன் பணம் கொடுக்கக்கூடாது? இம்மாதிரி பல வருமான இனங்களைச் சுலபமாகக் கண்டு பிடிக்கலாம்.

புது வரிகள் மூலம் வருமானத்தைப் பெருக்கிக் கொள்ளுவது அனுபவ சாத்தியமற்றது என்று ருசுப்பிக்கப்பட்டால், இந்திய அரசாங்கம் ஒரு மான்யமோ, அல்லது வட்டியில்லாமல் கடனோ கொடுத்து விடவேண்டுமென்றும் நான் யோசனை கூறியிருக்கிறேன்.

முன் அனுபவம் இல்லாததால், கொஞ்சம் உஷாராகப்போக வேண்டியிருக்கிறது என்பது ஒன்றுதான், உடனடியாக மதுவிலக்கை அமலுக்குக் கொண்டு வராததற்கு நியாயமான காரணமாயிருக்க முடியும். இந்தக் கண்ணோட்டத்துடன்தான் சேலம் பரீட்சையை நான் கவனித்தேன். சென்னை அரசாங்கம் தன்னுடைய முதல் படியில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க விரும்பியது. தோல்வி ஏற்பட்டு விடக்கூடிய அபாயத்திற்கு அது தன்னை உட்படுத்திக் கொள்ள விரும்பவில்லை. திட்டம் பூராவையுமே அமல் நடத்துவதற்கு சேலம் பரீட்சையின் வெற்றி போதிய ஊக்கமளிப்பதாக இருக்க வேண்டும். தம்முடைய பிரதேசங்களில் அனுபவம் பெறுவதற்காகப் படிப்படியாக மதுவிலக்கை அமலாக்க வேண்டுமென்று ஒவ்வொரு அரசாங்கமும் விரும்புவதைப் புரிந்து கொள்ளுவது அசாத்தியமல்ல. அதற்காகத்தான் மூன்று வருடங்களில் பூரண மதுவிலக்கு ஏற்பட்டுவிட வேண்டுமென்று காரியக் கமிட்டி நிர்ணயித்தது. காலம் வெகு வேகமாக ஓடிக்கொண்டிருக்கிறது. குறிப்பிட்ட காலத்திற்குள் இந்தியா இந்தச் சாபக்கேட்டிலிருந்து விடுதலை பெறவேண்டுமானால், பணமில்லை என்பதற்காகவோ, வருமானத்தில் துண்டு விழுந்துவிடுமே என்ற பயத்தினாலோ இதைத் தாமதப்படுத்தக் கூடாது. ஒரே உறுதியுடன் இந்தத் திட்டத்தை அமல் நடத்தினால், மற்ற மாகாணங்களும், சமஸ்தானங்களும் அந்த உதாரணத்தைப் பின்பற்றும் என்பதில் சந்தேகமில்லை.

—சேவா கிராமம், 19—12—1938 —'ஹரிஜன்' – 24—12—1938

## 24

# திராவகங்களைக் குடிக்கும் பழக்கம்

ஒருவர் பின்வருமாறு எழுதுகிறார்:

"நான் சொல்லுவது உங்களுக்குப் புதிதாயில்லாமலிருக்கலாம். ஒருக்கால் உங்களுக்குத் தெரியாமலிருக்கலாம் என்பதற்காகவே இதை எழுதுகிறேன். குடிப் பழக்கமுள்ளவர்களுக்கு மது வகைகள் கிடைக்காததால் அவர்கள் திராவகங்களைக் குடிக்க ஆரம்பித்திருக்கிறார்கள் என்பதை உங்களுக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். சொன்னபடி கேட்கக் கூடிய ஒருவரை அனுப்பி, ஆறணா அல்லது ஏழணா கொடுத்து ஒரு புட்டி 'ஸ்பிரிட்' திராவகம் வாங்கிவரச் செய்கிறார்கள். அதில் நீரைக் கலந்து, 12 அல்லது 13 அணாவுக்கு விற்றுவிடுகிறார்கள். இடையில் போய் வாங்கி வருபவர் வியாபாரியல்ல. அவர் ஒரு சாதாரணப் பேர்வழிதான். மதுவிலக்கு வந்திருப்பது அவருக்குச் சௌகரியமாக இருக்கிறது. சில புட்டிகள் 'ஸ்பிரிட்' திராவகத்தை வாங்கி, அதைக் குடிகாரனிடம் விற்று ஏதோ கொஞ்சம் சம்பாதிக்க முடிகிறது.

" 'ஸ்பிரிட்' திராவகம் வாங்குவதற்கு லைசென்ஸ் வேண்டும் என்று கட்டு திட்டம் விதிப்பது அனுபவசாத்தியமானதா என்று எனக்குத் தெரியாது. மதுவிலக்கு அமலுக்கு வருவதற்கு முன்பு கள்ளுக்குப் பதிலாக குடிக்கும் 'ஸ்பிரிட்' திராவக வகைகள் ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தில் எவ்வளவு விற்பனையாயிற்று, மதுவிலக்குக்குப் பிறகு எவ்வளவு விற்பனையாகிறது என்று உஷாராகக் கண்காணிப்பது அவசியமாகும் என்று தோன்றுகிறது."

இவருடைய கடிதம், மதுவிலக்குப் பணியில் ஈடுபட்டுள்ளவர்களுடைய கவனத்திற்குரியதாகும்.

—பர்தோலி - 16—1—1939 —'ஹரிஜன்' - 21—1—1939

## 25

# மதுவிலக்கின் பொருள்

மதுவிலக்கை ஆட்சேபித்து ரோட்டரி கிளப்பில் தான் செய்த ஒரு பிரசங்கத்தின் நகலையும், ஒரு கடிதத்தையும் பம்பாய் ஆர்ச் பிஷப் அன்பு கூர்ந்து எனக்கு அனுப்பியிருக்கிறார். அவருக்குரிய மரியாதையுடன் அவ்விரண்டையும் வாசித்தேன்.

அவருடைய கடிதத்திலும், பிரசங்கத்திலும் காணப்படும் ஒரு பெரிய தவறுக்கு, முக்கியமாக நான்தான் பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டும். பம்பாயிலும், மற்ற மாகாணங்களிலும்



பம்பாய் வில்லே பார்லேயில் பாகினி சேவா மந்திருக்கு அஸ்திவாரமிடுகிறார்—7, செப்டம்பர், 1929.



1934 மே மாதத்தில் காந்திஜி. ஒரிஸ்ஸாவில் நடந்தே ஹரிஜன யாத்திரை செய்தபோது பத்ராக்கிற்குப் போகும் வழியில் ஓய்வெடுத்துக்கொள்ளுகிறார்.

காங்கிரஸ் மந்திரிசபைகள் மதுவியாபாரம் சம்பந்தமாகச்செய்து வருவதற்கு மதுவிலக்கு என்ற வார்த்தையை உபயோகிப்பது தவருகும். இந்த அரசாங்கங்கள் உண்மையில் குடியைத் தடை செய்யவில்லை. முற்றிலும் அரசாங்க ஆதிக்கத்தின் கீழுள்ள கள்ளுக்கடைகளைத்தான் மூடிக்கொண்டிருக்கிருர்கள். வருடா வருடம் கிடைப்பதைத் தவிர இந்தக் கடைக்காரர்களுக்குச் சட்ட பூர்வமான பாதுகாப்பு எதுவும் கிடையாது. தன்னுடைய லைசென்ஸ் புதுப்பிக்கப்படாமற் போகலாம் என்பது ஒவ்வொரு கடைக்காரருக்கும் தெரியும். கள்ளு அல்லது சாராயக்கடையாக இருந்தால், இவரைவிட இன்னெருவர் இன்னும் அதிகத் தொகைக்கு ஏலம் கேட்டு விடமுடியும். ஏனெனில், இவை வருடா வருடம் ஏலம் போடப்படுகின்றன. ஆகையால், மிகவும் கடுமையான நிபந்தனைகளுக்குட்பட்டு ஒரு வருடத்திற்கு இவர்களுக்கு லைசென்ஸ் கொடுக்கப்படுகிறது என்பதைத் தாண்டி, அந்தக் கடைகளில் இவர்களுக்கு எந்த உரிமையும் கிடையாது. எனவேதான், மதுக்கடை லைசென்ஸுகளை ரத்துசெய்யும் சட்டம் "சமூகத்தின் பொது நன்மைக்காக, உரிய அதிகாரம் உள்ளவர்களால் இயற்றப்பட்ட நியாயமான ஒரு சட்டம்" என்று நான் கூறுகிறேன். அரசாங்கம் என்ன செய்கிறது? வைத்திய காரணங்களுக்காகத் தவிர மற்ற வகைகளில் தீமை விளைவிக்கக் கூடியது என்று அரசாங்கம் கருதும் மதுவை அருந்தும் சபலம் அல்லது வசதி இல்லாமலிருக்கும்படி அரசாங்கம் அகற்றி விடுகிறது. அவ்வளவுதான்.

அதிகாரிகளை மதுவிலக்குச் சட்டமியற்றச் செய்ய வேண்டுமென்று ஒத்துழையாமைக் காலத்திலேயே முயற்சிகள் செய்யப்பட்டன. நிதி காரணமாக இதைச் செய்ய முடியாது என்றே ஒவ்வொருவரும் சொன்னுர்கள். மக்களுக்கு அரசாங்கம் மதுபான வசதி செய்து கொடுக்கும் உரிமையில் தலையிடுவது முறையற்றது என்று யாரும் சொல்லவில்லை. மது வருமானத்தை இழப்பதனுல் ஏற்படும் நஷ்டத்தை ஈடு செய்வதற்கு ஏதாவது வருமான வழி கண்டு பிடிக்க நான் உதவி செய்தால், உடனே மதுவிலக்கை அமலுக்குக் கொண்டு வருவதாகக்கூட ஒரு மந்திரி என்னிடம் சொன்னுர். முற்றிலும் வருமான நஷ்டத்திற்கு பயந்தே இந்தச் சீர்திருத்தம் தாமதிக்கப்பட்டு வந்திருக்கிறது என்பது பகிரங்க ரகசியம். அதாவது, வருமானத்திற்காக மக்கள் குடிப்பதற்கு ஆசை காட்டப்பட்டிருக்கிருர்கள். அபினி வர்த்தகத்தின் காதகக் கதை இதன் உண்மையை ருசுப்பிக்கும்.

தனிப்பட்டவர்களின் சுதந்திரத்தின் பெயரால் பேசுபவர்கள், இந்தியாவை அறியாதவர்கள். தன்னுடைய மிருக இச்சையைத் திருப்தி செய்து கொள்ளுவதற்கு அரசாங்கம் விபசாரிகளைக் கொடுக்க வேண்டுமென்று கேட்பதற்கு. ஒருவருக்கு எவ்வளவு உரிமை இருக்கிறதோ, அவ்வளவு உரிமை குடி வசதிகளைக் கேட்

பதற்கும் உண்டு. தாங்கள் மிதமாகக் குடிப்பதாகப் பெருமைப் பட்டுக கொள்ளுபவர்கள், நான் கூறிய இந்த உதாரணத்தினுல் மனம் புண்படமாட்டார்கள் என்று நம்புகிறேன். இந்த நாட்டில், தீய பழக்கங்களை ஒழுங்குபடுத்துவதற்குச் சட்ட மியற்றும் வழக்கம் எங்களுக்குக் கிடையாது. ஆனல், ஜெர்மனி போன்ற நாடுகளில் தமது கற்பை விற்கும் விபசாரிகளுக்கு லைசென்ஸ் கொடுக்கப்படுகிறது. அந்த நாடுகளில் எதை அதிகமாக ஆட்சேபிப்பார்கள்? விபசார விடுதிகளை மூடுவதையா, அல்லது மதுக் கடைகளை மூடுவதையா? பெண்கள் தம் கௌரவத்தை உணரும் போது, தம் கற்பை விற்க மறுத்து விடுவார்கள். தம் இனத்தின் கௌரவத்தில் அக்கறை உள்ளவர்கள், விபசாரத்தை ஒழிக்க பகீரதப் பிரயத்தனம் செய்வார்கள். அப்படிச் செய்வது இந்தத் தொழில் ஒன்றையே நம்பியிருக்கும் விபசாரிகளுக்கும், அவர்களைச் சார்ந்து வாழுபவர்களுக்கும் கஷ்டத்தை விளைவிக்குமென்று அப்போது வாதாடுவார்களா?

லைசென்ஸ் பெற்ற மதுபான இடங்கள், ஆசை காட்டி அழைத்துக் கொண்டிருக்கும் வரையில், சமூக ஊழியர்கள் பலனளிக்கத் தக்க விதத்தில் பணியாற்ற முடியாது என்றே நினைக்கிறேன்.

--'ஹரிஜன்' - 17—6—1939

# 26

# அழகிய பம்பாய்

"அழகுக்கு யாரே அழகு செய்வர்" என்பது அழகான ஒரு பழமொழி. பம்பாய் துறைமுகத்திற்குப் போகும் வழி அழகாயிருக்கிறது; அல்லது, பம்பாயில் அழகான பல இடங்கள் இருக்கின்றன என்ற காரணத்திற்காக மட்டும் பம்பாயை அழகிய நகரம் என்று சொல்லுவது தவறு என்று பல தடவைகளில் நான் கூறியிருக்கிறேன். அதில் ஆபாசமான சேரிகள் இருக்கும் வரையில், ஜன நெருக்கம் நிறைந்த சந்துகளும், மனிதர் வசிப்பதற்குத் தகுதியில்லாத பொந்துகள் ஹரிஜன்கள் வாசஸ்தலங்களாக இருக்கும் வரையில், பம்பாயை அழகிய நகரம் என்று சொல்லுவது தவருகும். ஆனல், பம்பாயில் வெகு சீக்கிரத்தில் மதுவிலக்கு ஏற்படப் போகிறது. அந்த ஓர் அழகான காரியத்தினுலேயே பம்பாய் உண்மையாகவே அழகிய நகரமாகிவிடப் போகிறது. நான் எடுத்துக் காட்டிய மாசுகள் இருந்தாலும்கூட, அது அழகிய நகரமாகிவிடும். அங்கேயுள்ள தொழிலாளர்களிடமிருந்து குடிப்பதற்கான வாய்ப்புக்கள் அகற்றப்பட்டுவிடும் போது, குடி அரக்கனை விரட்டுவதைத் தொடர்ந்து ஏற்படும் சுபிட்சத்தை அவர்கள் அனுபவிக்கும் போது, ஏழை எளியவர்

களுக்கு இன்னும் நல்ல குடியிருப்பு வசதிகளைச் செய்து கொடுப்பது பம்பாய் முனிசிபாலிடிக்கு அதிக சுலபமாக இருக்கும். இவ்வளவு துணிச்சலுடன் பம்பாய் அரசாங்கமும், குறிப்பாக டாக்டர் கில்டரும் தம் கடமையை அணுகுவது பற்றி பம்பாய் நகரவாசிகளும், மாகாணம் பூராவுமே கூட அவர்களுக்கு நன்றி செலுத்த வேண்டும். மது வியாபாரத்தையே தமது ஜீவனோபாயமாக நம்பியுள்ள பல பார்ஸிகள் இதனால் பாதிக்கப்படுவார்கள் என்பதை நான் அறிவேன். நீரைப் போலே, மதுவும் தங்களுக்கு அவசியமானது என்று நினைக்கும் நாகரிகக்காரர்களும் இருக்கிறார்கள். தமக்காக இல்லாவிட்டாலும், இந்த ஏழைகளின் நன்மையை முன்னிட்டாவது அவர்களும் குடியை விட்டொழித்து, இந்தியா பூராவுக்குமே ஓர் உதாரணமாயிருக்க வேண்டுமென்றும், பம்பாய் அழகிய நகரம் என்பதை மட்டுமில்லாமல், இந்தியாவின் முதல் நகரம் என்பதையும் மெய்ப்பிப்பார்களென்றும் நம்புகிறேன்.

பம்பாயில் மதுவிலக்கு என்பது பெரிய வருமான நஷ்டமாகும். நிதி மந்திரி தம்முடைய வரவு செலவைச் சரிக்கட்டியாக வேண்டும். அதற்கு அவருக்குப் பணம் வேண்டும்; புது வரி விதிக்க வேண்டியிருக்கும். இந்தச் சுமையை ஏற்றுக்கொள்ள வேண்டியிருப்பவர்கள் முணுமுணுக்காமல் இருப்பார்களாக. எவ்வளவு நியாயமான வரிகளாக இருந்தாலும், வரி என்றாலே யாருக்கும் பிடிப்பதில்லை என்பது பிரசித்தம். நியாயமான எல்லா ஆட்சேபணைகளுக்கும் நிதி மந்திரி சமாதானம் கூறியிருக்கிறார் என்று அறிகிறேன். இந்தச் சுமையை ஏற்றுக்கொள்ள வேண்டியிருப்பவர்கள், இந்தப் பெரிய சோதனைக்குத் தம்மாலியன்றதைச் செய்ய வாய்ப்பளிக்கப்பட்டிருக்கிறது என்று ஏன் பெருமையடையக்கூடாது? எல்லா மக்களின் குதூகலமான வரவேற்புடன் மதுவிலக்கு அமலுக்குக் கொண்டு வரப்பட்டால், அது பம்பாய்க்கு ஒரு நன்னாளாகும். மதுவிலக்கு என்பது மேலே இருந்து சுமத்தப்படும் ஒன்றல்ல என்பது நினைவிருக்கட்டும். மக்களுக்குப் பதில் சொல்ல வேண்டிய பொறுப்புள்ள அரசாங்கமே அதை அமலாக்குகிறார்கள். 1920 முதலே தேசீய வேலைத் திட்டங்களில் ஒன்றாக அது இருந்து வந்திருக்கிறது. இருபது வருடங்களுக்கு முன்பு மக்கள் தெரிவித்த உறுதியான விருப்பம் தான் இப்போது நிறைவேற்றப்படுகிறது.

—புது டில்லி – 26—3—1939 —'ஹரிஜன்' – 1—4—1939

## 27

# பந்தாரிகளும் மதுவிலக்கும்

எல்லைப்புற மாகாணத்திற்கு நான் சென்ற ரெயில் வண்டி ஸ்டேஷனைவிட்டுப் புறப்பட்டுக் கொண்டிருந்த போது, பம்பாயிலுள்ள பந்தாரிகள் பிரதம மந்திரியிடம் சமர்ப்பித்துள்ள ஒரு மகஜரின் நகலை ராவ்பகதூர் போலே என்னிடம் கொடுத்தார். அதை நான் படித்துப் பார்த்துவிட்டுத் தமக்கு பதிலெழுத வேண்டுமென்று வற்புறுத்தினர். நான் மிகவும் களைப்புற்றிருந்தேன். கொஞ்சம் ஓய்வெடுத்துக் கொண்ட பிறகு அந்த மகஜரைப் படித்துப் பார்த்துவிட்டு அவருக்குப் பதிலெழுதினேன்.

அது சுவாரஸ்யமான ஒரு மகஜர்; பொதுஜனங்களின் கவனத்திற்குரியது. அதில் கூறப்பட்டுள்ளது இதுதான்: அப்போதிருந்த பிரிட்டிஷ் ஆட்சிக்கு ராணுவ உதவி செய்ததற்குப் பிரதிபலனை, மரமேறிக் கள்ளிறக்கும் சலுகை 1672-லேயே அவர்களுக்கு அளிக்கப்பட்டது. பிறகு, அந்தச் சலுகையை அவர்கள் இழந்துவிட்டார்கள். ஆயினும், தமது தொழிலைத் தொடர்ந்து செய்துகொண்டிருக்க முடிந்தது. இது வரையில் சுமார் 8000 பேர்களுக்கு அதுவே தொழிலாயிருந்து வருகிறது.

மதுவிலக்கை அவர்கள் எதிர்க்கவில்லை. ஆனால், கொஞ்சம் கொஞ்சமாகச் சில வருடங்களில் அதை அமலாக்க வேண்டுமென்று கேட்கிறார்கள்.

கடைசியாகக் கொடுக்கில்தான் விஷம் வைத்திருக்கிறார்கள். “இந்த வேண்டுகோள்களை யெல்லாம் அரசாங்கம் பொருட்படுத்தாமல், பந்தாரிகளுக்கு என்ன வேண்டுமானாலும் நேரட்டும் என்று விட்டுவிட்டால், இந்த ஏமாற்றத்தினால், சொற்பப் படிப்புள்ளவர்களும், படிப்பே இல்லாதவர்களுமான இவர்கள் என்ன செய்வார்களென்று எங்களுக்குத் தெரியாது. நிவாரணம் பெறுவதற்குக் காங்கிரஸின் முறைகளையே பின்பற்றுவதோடு, தம்முடைய ஆத்திரத்தில் இன்னும் தீவிரமான நடவடிக்கைகளையும் எடுத்துக் கொள்ளக்கூடும் என்றும் அஞ்சுகிறோம்” என்று அந்த மகஜரில் கூறப்பட்டிருக்கிறது.

ஒரு நல்ல கட்சியை இந்த பயமுறுத்தல் பாழாக்கிவிடுகிறது. அத்துடன், இந்த மகஜரில் கையெழுத்திட்டுள்ளவர்களின் நல்லெண்ணத்தைப் பற்றியும் பெரிய சந்தேகங்களை எழுப்புகிறது. அரசாங்கம் நியாயத்திற்குப் பணிய வேண்டுமா, சக்திக்குப் பயப்பட வேண்டுமா?

பந்தாரிகளின் கட்சி நியாயமானதாக இருந்தால், அதற்குப் பொதுஜன அனுதாபமும் கிடைக்கும் என்று அவர்கள் ஏன் நம்பக் கூடாது? பயமுறுத்தல்கள் ஒரு புறமிருக்க, எந்த வித

மான அநீதியையும் அகற்றுவதற்கு மந்திரிகள் தம்மாலியன்ற வரை முயற்சி செய்து வருகிறார்கள் என்பதைப் பொதுஜனங்களுக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். பலாத்கார முறைகளில் சிந்தனை உருவாகிக்கொண்டிருக்கும் இந்தக் காலத்தில், விரிவான ஜனநாயக வோட்டுரிமையின் கீழ் தேர்ந்தெடுக்கப்படும் மந்திரிகளுக்குப் பயமுறுத்தல்கள் சர்வசாதாரணமான நிகழ்ச்சிகளாக இருக்கும் என்றே கருதப்படவேண்டும். பதவிக்காகவோ, உயிருக்காகவோகூட பயந்து தம்முடைய கடமை என்று அவர்கள் கருதுவதை நிறைவேற்றாமலிருந்து விடக்கூடாது. இந்த மகஜரில் காணப்படுவதைப்போல் பயமுறுத்தல் இருக்கிறது என்பதற்காக அவர்கள் கோபமடைந்து நியாயம் வழங்கவும் மறுத்துவிடக்கூடாது. ஆகையால், மரமேறுபவர்கள் அதே வேலையைத் தொடர்ந்து செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வது பற்றி மந்திரிகள் பரிசீலனை செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதைப் பொதுஜனங்களுக்கு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். மந்திரிகள் உதவி செய்வதற்கு, மரமேறுபவர்களும் உதவி செய்ய வேண்டும். மரமேறுபவர்கள் பதனீர் பருவத்தில் பதனீர் இறக்கி, அதை வெல்லமாகக் காய்ச்ச வேண்டும். இதற்கு நாணயமான கவனமும் ஜாக்கிரதையும் தேவை. ஏற்கனவே, இந்தப் பத்திரிகையில் எடுத்துக்காட்டியுள்ளபடி பானைகளைத் தயார் செய்ய வேண்டும். பதனீரை அருந்தவேண்டுவதில்லை. கள்ளில் ஓர் அளவு மதுசத்து இருக்கிறது. அதனால் பதனீரின் தன்மையே மாறிவிடுகிறது. ஆகையால், சுத்தமான பதனீரை கள்ளுக்குப் பதிலாகக் குடிக்க முடியாது. சர்க்கரையைப் போலவே, சுத்தமான பதனீரும் உணவுச் சத்துள்ளதாகும். ஆனால், இனிப்புக் கள்ளுக்குக்கூட அந்த அளவுக்கு அந்தத் தன்மை கிடையாது. ஆகையால் பதனீரை வெல்லமாகக் காய்ச்சிவிட்டால், சாதாரண வெல்லத்துடன் அது போட்டி போடலாம். சாதாரண வெல்லம் கலப்படமானதாகவும், அசுத்தம் நிறைந்ததாகவும் இருக்கும். கரும்பினால் செய்யப்படும் வெல்லத்தைவிடப் பனை வெல்லம் அதிக ருசியாகவே இருக்கும். கரும்பு வெல்லத்திற்கு இனிப்பு அதிகமாகையால் அதை அப்படியே சாப்பிட முடியாது. ஆனால், பனைவெல்லத்தை அப்படியே சாப்பிடலாம். அரசாங்கத்தின் மேல்பார்வையில் பனைவெல்லம் உற்பத்தி செய்யப்படும்போது, அது சுத்தமானதாயிருக்கும் என்ற உத்தரவாதமும் இருக்கும். பனை வெல்லத்தை உபயோகித்துப் பல இனிப்புப் பண்டங்களைத் தயாரிக்க முடியும். ஆனால், இந்தப் பெரிய காரியத்தைச் சாதிக்க வேண்டுமானால், அதற்கு பந்தாரிகளின் மனப்பூர்வமான ஒத்துழைப்பு அவசியமாகும். அவர்கள் உண்மையாகவே ஒத்துழைத்தால், அரசாங்கத்திற்கு உதவி செய்வதுடன், தமக்குத் தாமே உதவி செய்துகொள்ளுபவர்களுமாவார்கள். பதனீர் பருவம் இல்லாத காலத்தில் என்ன செய்வது என்று கேட்க

லாம். எந்த நிலைமையில் கள் இறக்கப்படுகிறது என்பதை நான் இன்னும் பரிசீலனை செய்யவில்லை. ஆனால், இது பேசித் தீர்த்துக் கொள்ளவேண்டிய ஒரு சிறு விஷயமாகும்.

—பிஷாவார் போகும் வழியில் - 7—7—39 —'ஹரிஜன்' - 15—7—1939

## 28

# ஒரு சமாதானம்

"ஹரிஜன்'' ஆசிரியருக்கு,

அன்புடையீர்,

பந்தாரி கமிட்டியினர் பம்பாய் பிரதம மந்திரியிடம் சமர்ப்பித்த மகஜரின் கடைசிப் பகுதியைப் பற்றி 1939 ஜுலை 15-ஆம் தேதி 'ஹரிஜன்' பத்திரிகையில்* மகாத்மா காந்தி கண்டித்து எழுதியிருந்தது என் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறது.

அந்த மகஜரில் கையெழுத்திட்டவர்கள், நல்லெண்ணத்துடன் தான் கையெழுத்திட்டார்கள் என்றும், பம்பாய் மந்திரி சபையை பயமுறுத்த வேண்டும் என்ற எண்ணமே அவர்களுக்குக் கிடையாது என்றும் கூற விரும்புகிறேன். அப்போதிருந்த நிலைமையில், மதுவிலக்குக் கொள்கை அமலாக்கப்பட்டால், அதனால் நேரக்கூடிய விளைவுகளைப் பற்றிய தமது கவலையைத்தான் பந்தாரி கமிட்டியார் அந்த மகஜரின் கடைசிப் பகுதியில் ஒளிவு மறைவின்றிக் குறிப்பிட்டிருந்தார்கள்.

உங்களுக்குச் சௌகரியப்படும்போது சீக்கிரமாக இந்தக் கடிதத்தைப் பிரசுரித்தால் நன்றியுள்ளவனாயிருப்பேன்.

பம்பாய், 31—7—1939. தங்களன்புள்ள,
எஸ். கே. பொலெ.

இந்தக் கடிதத்தை மகிழ்ச்சியுடன் பிரசுரிக்கிறேன். அந்த சமாதானத்தையும் ஏற்றுக்கொள்ளுகிறேன். அந்த சமாதானம் இல்லாவிட்டால், மகஜரின் கடைசிப் பகுதியை பயமுறுத்தலாகத்தான் அர்த்தப்படுத்திக்கொள்ள முடியும். மதுவிலக்குத் திட்டத்திற்குப் பந்தாரிகள் அளிக்கும் உதவி, அந்த சமாதானத்தை விடச் சிறந்ததாயிருக்கும். இந்த தேசத்தைச் சுரண்டுவதற்காக வந்த வெளிநாட்டினரான கிழக்கிந்தியக் கம்பெனிக்கு உண்மையான சிப்பாய்களாக இருந்த பந்தாரிகள், காங்கிரஸ் அரசாங்கத்திற்கும் தேசத்திற்கும் உண்மையான சிப்பாய்களாக இருக்கட்டும். கஷ்டமான இந்த வேலையில் அவர்கள் மனப்பூர்வமாக

* முந்தைய கட்டுரையைப் பார்க்கவும்.

அரசாங்கத்திற்கு உதவி செய்தால், அவர்கள் தமக்கே உதவி செய்துகொண்டவர்களாவார்கள்; வேறு விதத்தில் இது சாத்தியமே இல்லை.

— சேவா கிராமம் - 7—8—39 —'ஹரிஜன்' – 12—8—1939

## 29

# அபாயகரமான ஒரு விளையாட்டு

வகுப்புப் பிரச்னையையும், முற்றிலும் தார்மிக சீர்திருத்தத் தன்மை வாய்ந்த மதுவிலக்கையும் ஒன்றோடொன்று இணைத்ததன் மூலம் சுபாஷ் பாபு மிகவும் அபாயமான ஒரு விளையாட்டில் இறங்கியிருக்கிறார். தம்மைவிட அதிருஷ்டக் குறைவான நிலைமையில் உள்ள ஒரு தொழிலாளி, குடிப் பழக்கத்திற்கு இரையாகி விட்டால், அவர் நலன்களைக் கவனிப்பதில் ஹிந்துவுக்கு மட்டுமல்லாமல், முஸ்லிம், பார்ஸி, கிறிஸ்தவருக்கும் அதே அளவு அக்கறை உண்டு. பம்பாயில் சொத்து உள்ளவர்கள், ஒரு கோடி ரூபாய் அதிகப்படியாக வரி செலுத்தவேண்டியிருக்கிறது என்றால், பார்ஸிகள் அல்லது முஸ்லிம்கள் என்ற காரணத்திற்காக அல்ல. அவர்களுக்குச் சொத்து இருக்கிறது என்ற காரணத்தினாலேயே அதிகப்படி வரி செலுத்த வேண்டியிருக்கிறது. குடிப்பழக்கம் இல்லாத வரி கொடுப்போர், குடிகாரனைக் காப்பாற்றுவதற்காக வரி செலுத்தவேண்டியிருக்கிறது என்று கூறுவது தவறாகும். தம்முடைய குழந்தைகளின் கல்விக்காக அவர்கள் வரி கொடுக்கிறார்கள். இதுவரையில் அந்தக் கல்விக்குக் குடிகாரர்கள் கொடுக்கவேண்டியிருந்தது. பணக்காரர்கள் ஏழைகளுக்கு இழைத்துவந்த தவறைத் திருத்துவதற்கு இது காலம்தாழ்ந்த ஒரு சிறு ஈடாகும். ஏழைகளுக்கு வகுப்பு என்று ஒன்றுமே கிடையாது. ஒடுக்கப்பட்ட மக்களுக்கு சாதி, வகுப்பு இல்லை. அவர்களே ஒரு தனி சாதிதான். பரிதாபமான வறுமைதான் அவர்கள்மீது சுமத்தப்பட்டுள்ள வாழ்க்கையாகும்.

பார்ஸிகள், உலகத்தில் பெரிய பரோபகாரிகள். மிகவும் சிறந்ததான இந்தப் பரோபகாரத்தில் அவர்கள், ஏன் பின்தங்கி நிற்கவேண்டும்? அவர்களுடைய உதவியே மிகவும் அதிகமானதாயிருந்தால், அது அவர்களுடைய சிறந்த பாரம்பரியத்தை ஒட்டியதேயாகும். அதற்காக அவர்கள் கடவுளின் அருள் பெறுவார்கள். அவர்களைப்போல் அவ்வளவு அதிருஷ்டசாலிகளாயில்லாத தேச மக்களின் ஒழுக்கத்தையே குலைக்கும் ஒரு வியாபாரத்திலிருந்து, அவர்களில் பலர் வெளியேறிவிடுவார்கள். அவர்களும் குடிப் பழக்கத்திலிருந்து விடுபடுவார்கள். அவர்களுடன் நான் நெருங்கிப் பழகியிருக்கிறேன். ஆகையால், அவர்களுக்கு எவ்வளவு லேசானதாயிருந்தாலும், அழிக்கமுடியாத

முத்திரையைக் குடி அவர்களுக்கு அளித்துவிடுகிறது என்பதை நான் அறிவேன். மூன்ருவதாக, அவர்களிடையே பணக்காரர் களாக உள்ளவர்கள், நீண்ட காலம் தாமதப்படுத்தப்பட்ட ஒரு சீர்திருத்தத்திற்கும் தம் பங்கைச் செலுத்தியிருப்பார்கள். சிறு பான்மையினர் என்ற கூச்சல் வெறும் அவதூருகும். மதுவிலக் கைக் கொண்டுவரும் பாக்கியம், ஒரு பார்ஸி மந்திரிக்குத்தான் கிடைத்திருக்கிறது. டாக்டர் கில்டரின் வேலை, அவருக்குப் பணம் சம்பாதித்துக் கொடுப்பதல்ல. வேலைத் தொல்லையையும், ஏராளமான வைத்திய வருமானத்தை இழப்பதையும்தான் அது அவருக்கு அளிக்கிறது. இதில் லாபமில்லாத மற்ரெரு வைத்தியர் பம்பாய் ஷெரீப்பாக இருக்கிருர். கற்றறிந்த மற்ரெரு பார்ஸி, சர்வகலாசாலை உப அத்யட்சகராக இருக்கிருர். மற்ரெரு வர்த்தகர், பம்பாய் மேயராக இருக்கிருர். பம்பாயின் சரித்திரத் திலேயே இதற்கு முன்பு இவ்வளவு அருமையான சேர்க்கை இருந்ததாக எனக்குத் தெரியவில்லை. பம்பாயிலுள்ள காங்கிரஸ் காரர்களுக்கும், காங்கிரஸ் மந்திரிசபைக்கும் வகுப்புவாத மனப் பான்மை இருந்தால், சிறுபான்மையினர் விஷயத்தில் அவர்கள் அலட்சியமாய் இருப்பவர்கள் என்ருல், இந்த அரிய சம்பவம் நடந்திருக்கவே முடியாது.

பம்பாயிலுள்ள முஸ்லிம்களின் மனப்பூர்வமான ஒத்துழைப் பில்லாமல், பம்பாயில் இந்த இயக்கத்தைக் கொண்டுவந்திருக்க முடியாது என்பதையும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இந்த பம்பாய் திட்டத்திற்கு இந்தியா பூராவிலுமுள்ள சிறந்த முஸ்லிம்களின் ஆதரவு காங்கிரஸுக்கு இருக்கிறது என்று நான் நிச்சயமாக நம்புகிறேன்.

—அப்போட்டாபாத் - 13—7—39 —'ஹரிஜன்' - 22—7—1939

# 30

# செய்ய வேண்டிய வேலைகள்

தேசீய மாகாண அரசாங்கங்கள் இந்தியா பூராவிலும் முழு மூச்சுடன் வேலை செய்து கொண்டிருக்கின்றன. மதுவிலக்கு சம்பந்தப்பட்ட வரையில் காங்கிரஸுக்கும், முஸ்லிம் லீகுக்கு மிடையே எந்தக் கருத்து வேற்றுமையும் இல்லை என்பது மகிழ்ச் சிக்குரிய விஷயமாகும். எல்லோரும் ஒரே மாதிரியான கொள் கையைப் பின்பற்றிஞல், சமஸ்தானங்களும் அதில் சேர்ந்து கொண்டால், இந்தியாவில் வெகு சீக்கிரத்தில் குடி மறைந்து விடும்; அதனுல் லட்சக்கணக்கான குடும்பங்களின் வாழ்த்துக் களையும் பெற முடியும். ஆனல், ராணுவ ஆட்சியின் கீழ் உள்ள மாகாணங்களில் கவர்னர்களும், அவர்களுடைய ஆலோசகர் களும், ஏற்கனவே சில மாகாணங்களில் ஏற்றுக்கொள்ளப்பட்

டுள்ள கொள்கையை மாற்றி, அந்த மாகாணங்கள் ஈட்டிய வருமானத்தைத் துஷ்பிரயோகம் செய்து விட்டார்கள். போதை தரும் மது வகைகள், மற்றும் இதர வஸ்துக்களைத் தடை செய்யும் வேலையை இப்போது அவர்கள் மேற்கொள்ளட்டும். மது விலக்குச் சட்டம் இயற்றுவதுடன் அவர்கள் திருப்தியடைந்து விடவும் கூடாது. குடியினால் ஏற்படும் கெடுதல்களைக் குடிகாரர்களுக்கு உணர்த்துவதற்கு வழி வகைகள் செய்து, ஆரோக்கியமான பானங்களும், சாதாரணப் பொழுதுபோக்கு வசதிகளும் அவர்களுக்குக் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். ஒவ்வொரு மதுக் கடையும், இல்லாவிட்டால் அதற்குப் பக்கத்திலுள்ள வீடும், சாத்தியமானவரையில் பொழுதுபோக்கு, உணவு, பான விடுதியாக உபயோகிக்கப்படவேண்டும். இந்த உருவான வேலையை மேற்கொண்டால், இது அரசாங்கத்திற்கே ஒரு வருமான இனமாக இருக்கும். அத்துடன், மதுவிலக்கினால் சீரழிந்த ஆயிரக்கணக்கான குடும்பங்கள் மறுவாழ்வு பெற்று அனுகூலமடைவதற்கும் உதவியாயிருக்கும்.

மேலும், கள்ளிறக்குவதற்குப் பதிலாக பதனீர் இறக்கவேண்டும். இந்தப் பதனீரை வெல்லமாகக் காய்ச்சுவதே நோக்கமாக இருக்கவேண்டும். தேச மக்களுக்குத் தேவையான சர்க்கரை மலிவாகக் கிடைப்பதற்கு இது உதவியாக இருக்கும். கரும்பினால் செய்யப்படும் சர்க்கரையைவிட, பனைவெல்லமே சிறந்தது என்பது ஏற்கனவே எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது. கிறிஸ்தவப் பெண்கள் குடிஒழிப்பு சங்கத்தின் சார்பில்(பைஜாபாத்ரோடு, லட்சுமணபுரி) பத்திரிகைகளுக்கு அனுப்பப்பட்டுள்ள ஒரு சுற்றுக் கடிதத்திலுள்ள ஒரு பகுதியைப் பார்த்தபோது, இந்த எண்ணங்கள் எழுந்தன. ''இளைஞர்கள் என்ன செய்ய முடியும்?'' என்ற தலைப்பில், அக்கடிதத்தில் மாணவர்களுக்கு விடுக்கப்பட்டுள்ள வேண்டுகோளைக் கீழே தருகிறேன் :

(1) போதை வஸ்துக்கள், பழக்கமாகிவிடக் கூடிய வஸ்துக்கள் முதலியவைகளை அடியோடு விலக்கிவிடுவதாகப் பிரதிக்ஞை செய்து கொள்ளவேண்டும். புகையிலையும் இதில் சேர்ந்ததே. பிரதிக்ஞையில் கையெழுத்திடுவதற்கு இது உதவி செய்கிறது.

(2) பள்ளிக்கூட பாட போதனைத்திட்டத்தில், மது, போதை வஸ்துக்களைப் பற்றிப் பூராவாகப் போதிக்க வேண்டும் என வற்புறுத்த வேண்டும்.

(3) பயிற்சி பெற்றுக்கொண்டிருக்கும்போது, குடி எதிர்ப்புப் பிரசாரம், போதை வஸ்துக்களால் என்ன தீமை நேருகிறது என்பதைப் பற்றி மக்களுக்கு விளங்க வைத்தல் ஆகியவை உள்படச் சமூக சேவையில் ஒரு பங்கெடுத்துக்கொள்ள வாய்ப்பளிக்க வேண்டுமென வற்புறுத்தல்.

(4) கிராம மக்களுக்கான சிறு சேமிப்புத் திட்டத்தில், எந்த விதமான போதைப் பொருள்களையும் அறவே ஒழிக்க வேண்டிய அவசியத்தை வலியுறுத்த வேண்டுமெனச் சிபார்சு செய்தல்.

(5) நல்ல உணவுப் பொருள்கள், சாராயம் காய்ச்சுவதற்காக அநியாயமாக வீணாக்கப்படுவதை எதிர்த்துப் போராடுபவர்களுடன் சேர்ந்து கொள்ளவேண்டும்.

(6) ஏதாவது ஒரு மதுவிலக்குப் பிரசார சங்கத்தில் சேர வேண்டும். இந்தியாவில் சென்ற 59 வருடங்களாக உலக மதுவிலக்குச் சங்கம் இந்தப் போராட்டத்தில் இருந்து வருகிறது. உங்களுடைய ஊக்கமும், ஆதரவும் அதற்குத் தேவை, ''கடவுளுக்காக, இல்லத்திற்காக, எல்லா நாடுகளுக்கும்'' என்பதே அவர்களுடைய குறிக்கோள்.

(7) மது எதிர்ப்புப் பிரசுரங்களைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். வருடத்திற்கு இரண்டு ரூபாய் அனுப்பினால், மாதா மாதம் ஹிந்தி அல்லது உருதுவில் அல்லது வேறு சில இந்திய மொழிகளில் நூறு துண்டுப் பிரசுரங்கள் கிடைக்கும். இவற்றை வினியோகம் செய்யலாம். ''இந்திய குடி ஒழிப்புச் செய்திகள்'' என்ற மாதாந்தர சஞ்சிகை ஒன்றிருக்கிறது. எந்த நூலகத்திலும் இதை வைக்கலாம். இதற்கு வருட சந்தா ஒரு ரூபாய்தான். மாணவர்கள் இதை வரவழைக்க விரும்பினால், அவர்களுக்கும் இதே சலுகை கிடைக்கலாம்.

(8) இந்தச் சேவைக்கு விடுமுறை நாட்கள் நல்ல காலமாகும்.

(9) உண்மையான தேசபக்தர்கள் என்ற முறையில், தேசத்திலிருந்து நாம் என்ன பெறமுடியும் என்பதை, தேசத்திற்கு நாம் எவ்வளவு கொடுக்க முடியும் என்பதைக் கற்றுக் கொள்ள வேண்டும்.

—'ஹரிஜன்' - 19—5—1946

# 31

# குடி விஷயத்தில் தனியார் முயற்சி

குடிப்பழக்கம் சம்பந்தமான வேலையை முக்கியமாக நாமே தான் செய்யவேண்டும். கள்ளுக்கடை லைசென்ஸுகள் வழங்குவதை அரசாங்கம் நிறுத்திவிடலாம், அல்லது நிறுத்தும்படி செய்துவிடலாம். அரசாங்கம் செய்யக் கூடியது இவ்வளவுதான். ஆனால், குடிகாரனை அவனுடைய கெட்ட பழக்கத்திலிருந்து அர

சாங்கம் திருப்பிவிட முடியாது. அந்த வேலையைத் தனிப்பட்டவர்கள்தான் ஏற்றுக்கொள்ளவேண்டும்.

—'எங் இந்தியா' - 13—9—1928

   

குடிகாரனின் வீட்டில் நம் வேலையைப் பரப்பும் வரையில், உண்மையான முன்னேற்றம் எதுவும் அடையமாட்டோம். அவன் ஏன் குடிக்கிறுன் என்பதை நாம் தெரிந்துகொள்ளவேண்டும். அதற்குப் பதிலாக வேறென்ன கொடுக்கலாம் என்பதையும் கண்டுபிடிக்க வேண்டும். இந்தியாவில் மொத்தம் எவ்வளவு குடிகாரர்கள் இருக்கிறுர்கள் என்று கணக்கெடுக்கவேண்டும்.

—'எங் இந்தியா' - 2—3—1922

   

அகிம்சை முறைகளின் மூலம் நமது லட்சியத்தில் நாம் வெற்றி பெறவேண்டுமானுல், போதை, லாகிரி வஸ்துக்களின் சாபக்கேட்டில் சிக்கிக்கொண்டு திணறும் லட்சக்கணக்கான ஆண், பெண்களின் கதியை எதிர்கால அரசாங்கத்தினிடம் நாம் விட்டுவிட முடியாது.

இந்தத் தீமையை அகற்றும் விஷயத்தில் வைத்தியர்கள் மிகவும் பலனளிக்கத் தக்க விதத்தில் உதவி செய்ய முடியும். குடிகாரனையும், அபினி தின்பவனையும் இந்தச் சாபக்கேட்டிலிருந்து மீட்பதற்கு அவர்கள் வழிகண்டு பிடிக்க வேண்டும்.

இந்தச் சீர்திருத்தத்தை வெற்றிபெறச் செய்வதில் பெண்களுக்கும், மாணவர்களுக்கும் ஒரு விசேஷ வாய்ப்பு இருக்கிறது. அன்பு கலந்த பல பணிகளின் மூலம் அவர்கள், குடிப்பழக்கம் உள்ளவர்கள்மீது ஒரு பிடிப்பை ஏற்படுத்திக் கொள்ளமுடியும். இந்தக் கொடிய பழக்கத்தை விட்டுவிடும்படி அவர்கள் வேண்டிக் கொண்டால், அதற்குக் குடிகாரர்கள் செவிசாய்க்காமல் இருக்கமுடியாது.

களைப்புற்ற தொழிலாளி ஓய்வெடுத்துக் கொள்ளவும், போஷாக்குள்ள, மலிவான உணவு, பானங்களைப் பெறவும், தகுந்த விளையாட்டுக்களில் ஈடுபடவும் காங்கிரஸ் கமிட்டிகள் பொழுதுபோக்கு முறைகளை ஆரம்பிக்கலாம். இந்த வேலைகளெல்லாம் கவர்ச்சியளிப்பவைகளாகவும், மனத்திற்கு நிம்மதியளிப்பவைகளாகவும் இருக்கும். அகிம்சை மூலம் சுயராஜ்யம் பெறுவதென்பது ஒரு புது முயற்சியாகும். அதில் பழைய மதிப்பீடுகளுக்குப் பதிலாகப் புதிய மதிப்பீடுகள் இடம்பெறுகின்றன. பலாத்கார வழியில் இத்தகைய சீர்திருத்தங்களுக்கு இடமில்லாமற்போகலாம். அந்த வழியில் நம்பிக்கை உள்ளவர்கள், தமது அவசரத்தினுலும், அறியாமையினுலும் இம்மாதிரி விஷயங்களை விடுதலை வரையில் ஒத்திவைத்துவிடுகிறுர்கள். நிலையான நல்ல

விடுதலை என்பது உள்ளிருந்துதான், அதாவது, ஆன்மசக்தியின் மூலம்தான் வருகிறது என்பதை அவர்கள் மறந்து விடுகிறார்கள். நிர்மாண ஊழியர்கள் மதுவிலக்குக்கு வழி செய்யாவிட்டாலும், சட்டபூர்வமான மதுவிலக்கு சுலபமாகவும், வெற்றிகரமாகவும் நிறைவேறுவதற்கு உதவி செய்கிறார்கள்.

('நிர்மாணவேலைத் திட்டம்—அதன் பொருளும் இடமும்' - பக்கங்கள் 10, 11)

# 32

# மகத்தான ஒரு வேலை

பதவி ஏற்றுக்கொள்ளுவது என்று காங்கிரஸ் தீர்மானித்ததிலிருந்து காந்திஜி, இரவு பகலென்று பாராமல் வேலை செய்துகொண்டிருக்கிறார். மதுவிலக்கு, மக்களுக்கு அறிவூட்டுதல் ஆகிய பிரச்னைகளைப்பற்றியே இப்போது அவர், விழித்துக்கொண்டிருக்கும் நேரம் பூராவும் சிந்தித்துக்கொண்டிருக்கிறார் என்று சொல்லலாம். இந்தப் பிரச்னைகளைப்பற்றி அவரை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகக் கலந்தாலோசிக்கிறார்களோ, அவ்வளவுக்கவ்வளவு புதிய எண்ணங்களையும், யோசனைகளையும் அவர் சலிப்பின்றி வெளியிட்டுக்கொண்டிருக்கிறார்.

"குடிப் பழக்கம் இல்லாத இந்தியாவை ஸ்தாபிப்பதற்கு மிகவும் பலனளிக்கத்தக்க கருவிகள் எவை?"

"இப்போதுள்ள கலால் இலாகாவை, நல்ல முறையில் இதற்குப் பிரயோசனப்படுத்திக் கொள்ளலாமென்று ஏற்கனவே கூறியிருக்கிறேன். ஏதோ ஒரு காலத்தில் கூட அரசாங்கம் உண்மையாகவே மதுவிலக்கை நிறைவேற்றப் போகிறார்கள் என்பதில் இதுவரையில் அவர்களுக்கு நம்பிக்கை இல்லை. மதுவிலக்கை நிறைவேற்றும் வரையில் காங்கிரஸ், தானும் சும்மா இருக்காது, மற்றவர்களையும் சும்மா இருக்கவிடாது என்பது இப்போது அவர்களுக்கு நன்றாகத் தெரியும். புதிய வேலைத் திட்டத்தில் அவர்கள் மகிழ்ச்சியுடன் ஒத்துழைப்பார்கள். ஆனால், தாமாக மனமுவந்து தொண்டு செய்ய முன்வரும் ஸ்தாபனங்கள் நல்ல பலனளிக்கும். பேராசிரியர்கள், பள்ளி ஆசிரியர்கள், கல்லூரி மாணவர்கள் முதலியோர் இருக்கிறார்கள். தினசரி இரண்டு மணி நேரம் இந்த வேலையைச் செய்யும்படி அவர்களைக் கேட்டுக் கொள்ளலாம். குடிகாரர்கள் அடிக்கடி வரும் பிரதேசங்களுக்கு இவர்கள் போகவேண்டும். அவர்களுடன் கலந்து பழகவேண்டும். அவர்களுடன் பேசி, நியாயத்தை எடுத்துச் சொல்லி, விஷயத்தை உணர்த்தும் முறையில் அமைதியாக மறியல் செய்ய வேண்டும். சிலர் ஏன் குடிக்கிறார்கள், அவர்களைக் குடிப்பழக்கத்திலிருந்து எப்படித் திருப்ப முடியும் என்பதை வைத்தியர்களுடன்

கலந்து பேசி ஆராயவேண்டும். குடிக்குப் பதிலாக, பலனளிக்கத் தக்க, ஆரோக்கியமான நல்ல மாற்று என்ன என்பதையும் கண்டுபிடிக்க வேண்டும். நமது சகோதரிகளும் இருக்கிறார்கள். ஒத்துழையாமை நாட்களில் அவர்கள் பிரமாதமாக வேலை செய்தார்கள். இன்னும் சிறந்த தலைமையின் கீழ் அவர்கள் மீண்டும் வேலை செய்வதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். அவர்கள் பிரசன்னமாயிருப்பது குடிகாரர்களுக்கு நிச்சயமான தடையாக இருக்கும்; அவர்களுக்குச் சங்கடங்களும் இரா. முன்பெல்லாம், போலீஸார் அலட்சியமாகப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்; போக்கிரிகளுக்கு உதவியும் செய்து கொண்டிருந்தார்கள். புனிதமான இந்தப் போராட்டத்தில் இப்போது பெண்களும், அவர்களுடைய உதவியை நம்பலாம். குடி ஒழிப்புச் சங்கங்களும் இருக்கின்றன. அவற்றில் பெரும்பாலானவை இதுவரை செயலற்றுச் சோம்பியிருந்தன. அவைகளும் இந்தப் போராட்டத்தில் தீவிரமாகக் கலந்து கொள்ளவேண்டும் என்று இனி நாம் கேட்க வேண்டும். இத்தகைய எல்லா ஸ்தாபனங்களும், முறைப்படி ஒழுங்காக வேலை செய்வதற்கு ஒரு மதுவிலக்குச் சங்கத்தையும் அமைத்துக்கொள்ளலாம். கலால் மூலம் கிடைக்கும் வருமானத்தை மதுவிலக்கு இயக்கத்திற்காக உபயோகிப்பது நியாயமாகவே இருக்கும். மாசடைந்த பணத்தை உபயோகிக்கக் கூடாது என்ற தடை அதற்குப் பொருந்தாது. அசுத்தமான ஒரு கால்வாயைப் புனிதமான கங்கையாக மாற்றி, அதைப் பரிசுத்தப் படுத்துவது போலாகும் இது.

"எல்லாவற்றிற்கும் மேலாக, இந்தக் கொள்ளை நோய்ப் பிரதேசங்களைக் கண்டுபிடிக்க வேண்டும்; முழு கவனத்தையும் அந்த இடங்களில் செலுத்த வேண்டும். கள்ளுக்கடை கண்டிராக்டர்கள், வியாபாரிகள் ஆகியோரைக் கூட்டி, தம்முடைய கள்ளுக் கடைகளைப் பொழுதுபோக்கு விடுதிகளாக மாற்றுவதன் மூலம் எப்படி நாணயமாகச் சம்பாதிக்கலாம் என்பதை அவர்களுக்குக் கற்றுக்கொடுக்க வேண்டும். இந்த இடங்களை எளிய பொழுது போக்கு விடுதிகளாகவும், அறிவூட்டும் இடங்களாகவும்கூட எப்படி மாற்றலாம் என்பதை ஏற்கனவே கூறியிருக்கிறேன்."

தொழிற்சாலைகள் இருந்தால் குடியும் அவசியமாக இருக்க வேண்டுமென்று சொல்லப்படுகிறது. கடினமான, உற்சாகமற்ற எல்லா உழைப்புக்குமே குடி அவசியம் என்று கூறப்படுகிறது. மழையிலோ, ஜலம் தேங்கியுள்ள வயல்களிலோ வேலை செய்யும் விவசாயிகளுக்கும், தம்மை உஷ்ணப்படுத்திக்கொள்ள ஏதாவது வேண்டியிருக்கும் என்று சொல்லப்படுகிறது. இந்தக் கஷ்டங்களையெல்லாம் சமாளிப்பதற்கு வழி வகைகள் கண்டுபிடிக்கக் கூடிய வைத்தியர்கள், மற்றும் பலரின் வேலை கடினமானது தான். ஆனால், சமாளிக்க முடியாதபடி அவ்வளவு கஷ்டமானதாயிருக்க முடியாது. விவசாயத் தொழிலாளர்களிடையே கூட மது அருந்துவது தடை செய்யப்பட்டுள்ள இடங்களில், கால்

ராத்தல் வெல்லமும், அதே அளவு பச்சை வெங்காயமும் மழைக் காலத்தில் மிகச் சிறந்த உணவாகக் கருதப்படுவதை நானே நேரில் பார்த்திருக்கிறேன். இலுப்பைப் பூ நல்ல சத்துள்ள உணவுப் பொருளாகும். கள்ளத்தனமாகச் சாராயம் காய்ச்சும் சபலத்தில் அவர்கள் சிக்கிக் கொள்ளுவதற்கு இடம் கொடுக் காமல், இந்தப் பூவை மக்களுக்கு எப்படிக் கிடைக்கச் செய்ய லாம் என்று நாம் கண்டுபிடிக்க வேண்டும். நகரங்களிலும், கிரா மங்களிலும் தொழிலாளர்களின் வேலை நேரங்களில் மாறுதல்கள் செய்வது பற்றி ஒருவர் யோசனைகள் கூறியிருக்கிருர். இவை பரிசீலனைக்கு உரியவை :

''நகரங்களில் : (1) கடின உழைப்பு சம்பந்தப்பட்ட வரையில் இவ்வளவு மணி நேரம்தான் வேலை செய்யலாம் என்று கட்டுப்பாடு இருக்க வேண்டும். (2) கை வண்டிக்காரர்கள், ரிக் ஷாக்காரர்கள் எவ்வளவு சுமை இழுக்கலாம் என்று கட்டுப்படுத்த வேண்டும். (3) அதிக கனமுள்ள சுமைகளைப் பெரும்பாலும் காலை அல்லது மாலை நேரங்களிலேயே ஏற்ற வேண்டும். (4) கோடை காலத்தில், பகல் 12 மணி முதல் 2 மணி வரையிலாவது ஓய்வும், லேசான வேலையும் இருக்க வேண்டும்.

"கிராமங்களில் அறுவடை காலத்தில் நல்ல வெய்யிலில் விவ சாயிகள் வேலை செய்யும் போது சீக்கிரத்தில் களைத்துவிடுகிருர் கள். அவர்களுக்கு ஏதாவது வேண்டியிருக்கிறது. அவர்கள் எட்டு மணி நேரம்தான் வேலை செய்ய வேண்டுமென்று விதிக்க வேண்டும். அதாவது, காலை 5-30 முதல் 10-30 வரையிலும், மாலை 3 மணி முதல் 6 மணி வரையிலும். மலேயாவில் இப்படித் தான் செய்யப்படுகிறது என்று அறிகிறேன். நாமக்கல்லில் விவசாயிகள் குளுமையான இரவு நேரத்தில் அறுவடைக்குப் போவதை நான் பார்த்திருக்கிறேன். நெல்லைப் போர் அடிக்கும் போது, அவர்கள் வெய்யிலில் இருக்க வேண்டியிருக்கிறது. களத்தில் ஒரு பந்தல் போட்டால் உதவியாக இருக்கும். நெல்லி லிருந்து மண்ணும், மற்றும் பல அசுத்தங்களும் கிளம்புகின்றன. இவை யெல்லாம் உடம்பில் படிந்துவிடுகின்றன. இதனுல் அவர் களுக்கு உடம்பில் தினவெடுக்கிறது. இதை மறப்பதற்காக அவர்கள் குடிக்கிருர்கள். அவர்களைச் சட்டை போட்டுக்கொண்டு வேலை செய்யச் சொல்ல வேண்டும்.

''குடிக்கு ஒரு நல்ல மாற்ருக, பானகம் அருந்தும் பழைய காலத்துப் பழக்கத்தை மீண்டும் ஆரம்பிக்கலாமென்று நினைக் கிறேன். குளிர்ந்த நீர், வெல்லம், எலுமிச்சம் பழச்சாறு, ஸாப்ஜா விதைகள் ஆகியவற்றைக் கொண்டு பானகம் செய்யப்படுகிறது. இதைச் சாப்பிடுவதனுல் ஊக்கம் பிறக்கும்; குளுமையாகவும் இருக்கும். புளித்த மோரையும் சாப்பிடலாம்.''

—'ஹரிஜன்' - 28—8—1937

# 33

# மது விளம்பரங்கள்

லாகூரில் நடைபெற்ற குடி ஒழிப்பு மகாநாட்டில் பின் கண்டவாறு ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது :

"பொது இடங்களிலும், பத்திரிகைகளிலும் மது வகைகளை விளம்பரம் செய்வதற்கு எந்த விதமான நியாயமும் இல்லை என்று இந்த மகாநாடு அபிப்பிராயப்படுகிறது. மது விற்பனையை உடனடியாக நிறுத்துவது சாத்தியமில்லை என்று எக்காரணத்தை முன்னிட்டாவது கருதப்பட்டாலும், இந்த அழைப்புகளை உடனே தடுக்க வேண்டுமென்று இந்த மகாநாடு பலமாக வற்புறுத்துகிறது. மக்களின் நலன்களில் அக்கறை உள்ள பத்திரிகைகள், இதனால் எவ்வளவு பண நஷ்டம் ஏற்பட்டாலும் பொருட்படுத்தாமல், அம்மாதிரி விளம்பரங்களைப் பிரசுரிக்காமலிருக்க வேண்டுமென்று இந்த மகாநாடு கேட்டுக் கொள்ளுகிறது."

குடிப்பது ஒரு கெட்ட பழக்கம் என்று அநேகமாக எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்படும் இந்தியா போன்ற ஒரு நாட்டில், தலையங்கங்களில் பூரண மதுவிலக்கை ஆதரித்து எழுதிவிட்டு, அதே சமயத்தில் மதுபான விளம்பரங்களையும் ஏற்றுக்கொள்ளும் கண்ணியமான பத்திரிகைகள் சில இருப்பது வருந்தத் தக்க விஷயமாகும். இந்த மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின் பலனாக சம்பந்தப்பட்ட பத்திரிகைகள், ஆட்சேபிக்கத் தக்க அந்த விளம்பரங்களை ஏற்றுக் கொள்ளுவதை நிறுத்திவிடும் என்று நம்புகிறேன். விளம்பரக்காரர்களுடன் ஏற்கனவே செய்து கொண்டுள்ள ஒப்பந்தங்கள் இருக்கலாம். இந்த விளம்பரங்களை ஏற்றுக் கொண்டதால், பத்திரிகை சொந்தக்காரர்கள் தேசத்திற்குத் தவறிழைத்திருக்கிறார்கள். ஆகையால், ஒப்பந்த காலம் முடிவதற்கு முன்பே அதை ரத்து செய்வதற்கு ஏதாவது நஷ்ட ஈடு கொடுக்க வேண்டியிருந்தால், தவறான வழியில் கிடைத்த பணத்தில் ஒரு பகுதியை அதற்குக் கொடுக்கக் கூடாதா?

—'எங் இந்தியா' – 9—1—1930

# 34

# மறியல்

மறியல் என்பதே தாற்காலிகமானதுதான்; ஆனால், அது மருந்திலுள்ள விறுவிறுப்பளிக்கும் பொருளைப் போன்றது. குடிப்பது ஒரு கெட்ட பழக்கம் என்பதைவிட, ஒரு வியாதி என்றே, அதைச் சொல்ல வேண்டும். முடிந்தால் குடியை விட்டுவிடக் கூடியவர்கள் கோடிக்கணக்கில் இருக்கிறார்கள் என்று நான்

அறிவேன். இந்தச் சபலத்தைத் தங்களிடமிருந்து அகற்றிவிட வேண்டுமெனச் சிலர் கேட்டிருப்பதை நான் அறிவேன். அவர்களின் விருப்பப்படியே இந்தச் சபலம் அவர்களிடமிருந்து அகற்றப்பட்டிருந்தும் கூட, அவர்கள் திருட்டுத்தனமாகக் குடிப்பதையும் நான் அறிவேன். ஆகையால், சபலத்தை அப்புறப்படுத்தியது தவறு என்று நான் நினைக்கவில்லை. நோயாளிகள் விரும்பாவிட்டால்கூட, அவர்களுக்கு உதவி செய்துதான் ஆக வேண்டும். என்னுடைய மகன் ஒருவன் சூதாடியாக இருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். என்னுடைய மகனை ஆசை காட்டி இழுப்பதற்காக, ஒரு சூதாடிக் கூட்டம் என்னிடம் வருகிறது. நான் என்ன செய்ய வேண்டும்? ஒன்று, அவர்களைப் பலாத்காரமாக அடித்து விரட்ட வேண்டும்; அல்லது, அவர்கள் கூடுமிடத்தில் யாரையாவது காவல் போட வேண்டும். அதைப் பார்த்து அவன் அங்கே போக வெட்கப்படமாட்டானா என்ற எண்ணத்தில் காவல் போட வேண்டும். நான் இருக்குமிடத்திலிருந்து கொஞ்ச தூரம் தள்ளி வேறு சூதாடுமிடங்கள் இருக்கின்றன என்பது உண்மையே. அப்போதும்கூட, அந்த இடத்தில் நான் ஒரு காவலாளியைப் போடுவது சரியானதுதான் என்றே கருதப்படுமென்று நினைக்கிறேன். என்னுடைய மகன் சூதாடுவதை நான் கஷ்டமானதாக்க வேண்டும். அரசாங்கமே மதுவிலக்குச் செய்வது என்ற கொள்கையை 'ரிபார்மர்' பத்திரிகை ஒப்புக் கொண்டால், பொதுஜன அபிப்பிராயத்தை மீறி அரசாங்கம் கொடுமை இழைத்துக் கொண்டிருக்கும் வரையில், மறியலை அதன் இயற்கையான விளைவாகவும் ஒப்புக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு தெருவிலும் அரசாங்கம் விபசார விடுதிகளைக் கட்டி விபசாரிகளுக்கு லைசென்ஸும் வழங்கினால், பொது மக்கள் என்ன செய்ய வேண்டும்? தீமையின் இருப்பிடங்களாகிய இந்த விடுதிகளை அழித்தாலொழிய, மற்றப்படி இந்தச் சபலம் இப்படி நிர்ப்பந்தமாகத் திணிக்கப்படும் அபாயத்திற்கு இரையாகிவிடக் கூடாதென்று மக்களை எச்சரிக்க வேண்டியது பொது ஜனங்களின் கடமையல்லவா? நல்ல சீலமுடைய ஆண்களையும், பெண்களையும்தான் மறியலுக்கு அனுப்ப வேண்டும்; பொதுஜன அபிப்பிராயத்தை மீறிக் குடிப்பவர்கள் மீது பலாத்காரம் பிரயோகிக்கப்படாமலும் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டும் என்பதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். அரசாங்கம் உதவி செய்யாமலிருக்கும் போது, மறியல் செய்வது ஒரு பிரஜையின் கடமையாகிறது. போலீஸ் காவலின் அர்த்தம் என்ன? திருடர்களுக்கெதிரான மறியல்தானே? திருடன் ஒருவருடைய வீட்டுக்குள் நுழைய முயற்சிக்கும் போது, போலீஸார் துப்பாக்கியை உபயோகிக்கிறார்கள். மறியல் செய்பவர் அவமானம் என்ற ஆயுதத்தை உபயோகிக்கிறார். அதாவது, குடியின் தீமையைப் பற்றி இளைத்த சகோதரன் ஒருவனுக்கு எச்சரிக்கும்போது அன்பு முறையைக் கையாளுகிறார்.

—'எங் இந்தியா' –6—7—1921

# 35

# கண்ணில் காயம்

அகமதாபாத்தில் குடி ஒழிப்புப் பிரசார வேலை எவ்வளவு தன்னடக்கத்துடன் செய்யப்பட்டு வருகிறது என்பதைப் பற்றி ஏற்கனவே இப்பத்திரிகையில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. யாரோ ஒருவன், டாக்டர் கனுகா மீது கல்லை எறிந்துவிட்டான். கண்ணையே இழந்திருக்கக் கூடும் என்ற அளவுக்கு அவருக்குக் கண்ணில் பலத்த காயம் ஏற்பட்டுவிட்டது. ஆனால், நல்லவேளை யாக, சில நாட்கள் படுக்கையில் படுத்திருந்ததுடன் சரியாய் விட்டது. காயம் ஏற்பட்டும்கூட, தமக்குப் பதிலாக வேறொருவர் வரும் வரையில் அந்த இடத்திலிருந்து அவர் நகரவில்லை. பீதி யொன்றும் ஏற்படவில்லை. புகாரும் செய்யப்படவில்லை. இதன் பலன் பிரமாதமாயிருந்தது. குடிகாரருக்கு என்ன செய்வ தென்று புரியவில்லை. பதிலுக்கு ஒன்றும் செய்யாததால், கல்லை எறிந்தது பலனில்லாமல் போய்விட்டது. இந்தச் சம்பவத்திற்குப் பிறகு மறுபடியும் கல்லெறியப்படவில்லை என்று அறிகிறேன். கள்ளுக்கடைக்கு வந்தவர்களிடமும் நல்ல பலன் காணப்பட்டது. அகிம்சைக்கும், அதன் உடனடியான பலனுக்கும் இது ஒரு நல்ல உதாரணமென்று நான் நினைக்கிறேன். டாக்டர் கனுகா போலீஸில் புகார் கொடுத்திருந்தால், அல்லது அவருடைய தோழர்கள் பதிலுக்குப் பதில் செய்திருந்தால், பிரச்னைகள் குழப் பப்பட்டிருக்கும். முக்கியமான பிரச்னைக்குச் சம்பந்தமில்லாத பல விஷயங்கள் முளைத்திருக்கும்; வழக்கம்போல், இருதரப்பின ரிடையேயும் உணர்ச்சி வேகம் பெருகியுமிருக்கும். அது மட்டுமா? மதுவிலக்கு இயக்கமே பாதிக்கப்பட்டிருக்கும். டாக்டர் கனுகாவின் தைரியத்தினாலும், தியாகத்தினாலும், தன்னடக்கத் தினாலும், எந்த லட்சியத்திற்காக அவர் ரத்தம் சிந்தினரோ அந்த லட்சியத்திற்கு ஆக்கம் ஏற்பட்டிருக்கிறது. மதுக் கடைக் காரர்களும், அவர்களுடைய நண்பர்களும் மேற்கொண்டு ஆத்திரப்படுவதற்கு இடமில்லாமல் தடுத்ததுடன், புனிதமான குடி ஒழிப்புப் போராட்டத்தையும் ஒரு கண்ணியமான அளவுக்கு உயர்த்திவிட்டது.

—'எங் இந்தியா' - 20—1—1921

## 36

# சொல்லுக்குப் பஞ்சம்

அகமதாபாத்தில் சில போக்கிரிகள், இரண்டு மறியல்காரர்களின் மண்டையை உடைத்துவிட்டதாக அறிகிறேன். தைரியசாலிகளான இவர்கள், தலையில் கட்டுகளுடன் தினமும் மறியல் ஸ்தலத்தில் ஆஜராகிறார்கள். பம்பாயில் ஒரு கூட்டத்தினரின் முன்பு ஒரு தொண்டர் கன்னத்தில் அறையப்பட்டார். அவர் உறுதியாகவே நின்றுகொண்டிருந்தார்; ஆனால், பதிலுக்கு அடிக்கவில்லை. மறியலின் பலனை மதுக் கடைக்காரர்கள் அதிகமாக உணர உணர, இம்மாதிரி சம்பவங்கள் பெருகிக் கொண்டுதான் இருக்கும். தமது கடமையைச் செய்யும்போது மறியல்காரர்கள் தமது உயிர்களை இழக்க நேர்ந்தாலும்கூட, இந்தச் சீர்திருத்தத்தை நிறுத்துவது என்பது சாத்தியமில்லை. மறியல் வேலைக்குத் தயாராக வாலிபர்களும்,வாலிபப் பெண்களும் போதிய அளவில் முன்வந்துகொண்டிருக்கும் வரையில், பதிலுக்குப் பதில் செய்யாமல் தம் உயிர்களையே அபாயத்திற்குட்படுத்திக்கொள்ள இவர்கள் தயாராயிருக்கும்வரையில், இந்த வேலை நடந்துகொண்டுதான் இருக்கவேண்டும். இந்த மாதிரி அபாயம் ஏற்படக் கூடும் என்பது எனக்குத் தெரியும். அதனால்தான், இளைஞர்களான ஆண்களும் பெண்களும், உயிருக்கோ, உடலுக்கோ அபாயம் ஏற்படாமல் பாதுகாக்க வேண்டுமென்ற எண்ணத்துடன், ஒரேயடியாக எல்லா மதுக்கடைகளையும் ஒழித்து விட வேண்டும் என்று தேசபக்தியின் பெயரால் மிதவாதிகளைக் கேட்டுக்கொண்டேன்.

—'எங் இந்தியா' - 22—6—1921

## 37

# மறியல் உரிமை

மதுக்கடைக்காரர் மீதோ, குடிகாரர் மீதோ பலாத்காரம் அல்லது துவேஷம் இல்லாமல் மறியல் செய்ய முடியும் என்றால், அப்படிச் செய்ய வேண்டியது ஒரு தார்மிகக் கடமையாகிறது. வேறு எந்த முறையையும்விட இது குடி ஒழிப்பு லட்சியத்திற்கு உதவி செய்திருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. மறியலின் பலனாகத் தங்களிடையேயிருந்து குடியை ஒழித்து விட்டதாகக் கிறிஸ்தவர்களும், ஹிந்துக்களும் சரம்ஸாதில் நன்றியுணர்ச்சியுடன் என்னிடம் கூறினார்கள். ஆனால், இப்போதைக்கு மறியல் உரிமையை பம்பாய் இழந்துவிட்டது. பார்ஸி மதுக்கடைகளை அவர்கள் வேண்டுமென்று அழித்ததும், அந்த நவம்பர் 17

தேதியன்றும், அடுத்த இரண்டு நாட்களிலும், பார்ஸிகளிடமும் கிறிஸ்தவர்களிடமும் அவர்கள் நடந்துகொண்டவிதமுமே இதற்குக் காரணமாகும். ஆயினும், எங்கெங்கே மறியல் செய்யப்படுகிறதோ அங்கெல்லாம், உயர்ந்த சீலமுடையவர்களிடம் இந்த வேலை ஒப்படைக்கப்படும் என்றும், மிகவும் நேசபாவமான உணர்ச்சியுடன் மறியல் செய்யப்படுமென்றும் நம்புகிறேன். பலாத்காரத்தின் மூலம் மனிதர்களை நல்லவர்களாக்க நாம் விரும்பவில்லை.

—'எங் இந்தியா' – 22—12—1921

# 38

# குடியின்மையைவிட விடுதலையே வேண்டும்

இதை நான் எழுத ஆரம்பிக்கும்போது, 'லீடர்' பத்திரிகையில் வந்துள்ள ஒரு செய்தியை என்னுடைய உதவியாளர் என்னிடம் கொடுத்திருக்கிறார். பண்டித கோபிநாத குன்ஸ்ருவின் கடிதம் அப்பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. ஒரு நோயாளிக்கு உடலில் தேய்ப்பதற்கு ஆக்ராவில் ஒரு கடையில் பிராந்தி வாங்கும்போது தமக்கும், தம் நண்பருக்கும் என்ன நேர்ந்தது என்பதை அவர் மிகவும் நிதானமாக வருணித்திருக்கிறார். பிராந்தி வாங்கும் காரணத்தைப்பற்றி பண்டித குன்ஸ்ரு எவ்வளவோ உறுதி கூறியும் கூட, அதை எடுத்துச் செல்லத் தொண்டர்கள் அவரை அனுமதிக்கவில்லை. இது அகிம்சை அல்ல என்பதோடு மட்டுமில்லை; இது கலப்பற்ற பலாத்காரமேயாகும். பலாத்காரச் செயலில் ஈடுபடாமல், வேறு எல்லாவிதமான நிர்ப்பந்தங்களையும் உபயோகிக்கலாம் என்பது அமைதியான மறியலின் அர்த்தமல்ல. அந்தத் தொண்டர்கள், தம்முடைய பிரதிக்ஞைப்படி உண்மையாக நடந்திருந்தால், பண்டித குன்ஸ்ருவும், அவருடைய நண்பரும் எந்தத் தொந்தரவும் இல்லாமல் போக அனுமதித்திருப்பார்கள். குடியின் தீமையைப் பற்றிக் குடிகாரர்களை எச்சரிப்பதுதான் மறியல்காரர்களின் கடமையாகும். அவர்களைத் தொந்தரவு செய்வதோ, சொன்னதை அவர்கள் கேட்காவிட்டால் வேறு வழிகளில் அவர்களை நிர்ப்பந்தப்படுத்துவதோ அவர்கள் வேலை அல்ல. அவர்களுக்கு நல்லது என்று நம்புபவர்கள் அவர்கள்மீது குடி ஒழிப்பை நிர்ப்பந்தமாகச் சுமத்தலாமென்றால், ஆங்கிலேய நிர்வாகிகளும் அவர்களுடைய இந்திய ஆதரவாளர்களும், அதே மாதிரியான காரியத்தைத்தான் செய்து கொண்டிருக்கிறார்கள். இப்போதுள்ள முறை நமக்கு நல்லது என்ற நம்பிக்கையில்தான் அவர்களும்

அதை நிர்ப்பந்தமாகச் சுமத்திக் கொண்டிருக்கிறார்கள். பண்டித கோபிநாத குன்ஸ்ருவிடம் நடந்து கொண்டது போல் சுயராஜ்யத் தொண்டர்கள் தம்மிஷ்டப்படி நடக்கலாமென்றால், அவர்கள் முறையை மாற்ற முயற்சி செய்யவில்லை, எஜமானர்களை மாற்றவே முயற்சி செய்கிறார்கள். குடிப் பழக்கமின்மையை வாங்குவதற்காக சுதந்திரத்தை விலை கூற வேண்டியிருக்குமென்றால், இந்தியா குடியொழிந்த நாடாயிருப்பதைவிட சுதந்திர நாடாக இருப்பதையே நான் விரும்புவேன்.

—'எங் இந்தியா' – 23—2—1922

# 39

# எப்படிச் செய்வது?

குடித் தீமையை எப்படி எதிர்த்துப் போராடுவது என்று வங்காள சேவா சங்கம் கேட்டுள்ள கேள்விக்கு ஸ்ரீ ஆண்டுருஸ் பதில் சொல்ல முயற்சித்திருக்கிறார். புஸ்ஸிபுட் ஜான்ஸனின் அடிச்சுவட்டைப் பின்பற்ற வேண்டும் என்பதே அவருடைய பதிலாகும். அவர் சில ஆங்கிலேய மாணவர்களைத் திருப்ப முயன்று கொண்டிருந்தபோது, அவர் கல்லாலடிக்கப்பட்டார். இதனால் முடிவில் அவர் ஒரு கண்ணை இழக்க நேர்ந்தது. இந்தக் குற்றமிழைத்தவர்களை அவர் மன்னித்துவிட்டார். அவர்கள் மீது வழக்குத் தொடரவோ, பிரிட்டிஷ் சர்க்கார் அளித்த நஷ்ட ஈட்டைப் பெற்றுக்கொள்ளவோ அவர் மறுத்துவிட்டார். சிந்தனை, சொல், செயல் மூன்றிலும் அகிம்சைக்கு அது ஒரு உதாரணமாகும். அத்தகைய அகிம்சையை இங்கே பின்பற்ற முடியுமென்றால், மீண்டும் கள்ளுக்கடை மறியலை ஆரம்பிப்பதற்கு நான் தயங்கமாட்டேன். ஆனால், நாம் தோல்வியடைந்திருக்கிறோம். *1921*-இல் பல இடங்களில் நம்முடைய மறியல் அகிம்சை முறையில் இல்லை. அரசாங்கத்திற்கு தருமசங்கடமான நிலைமையை உண்டு பண்ண வேண்டுமென்ற ராஜீய எண்ணமே நம் மனத்தில் மேவியிருந்தது. குடிகாரனைத் திருத்த வேண்டுமென்பது இரண்டாம் பட்சமாகத்தான் இருந்தது. ஒத்துழையாமைப் போராட்டத்தில், ராஜீயம் தார்மிக நோக்கத்திற்கு ஏற்றதாயிருக்கும்படி செய்யப்பட்டது. குடிகாரனை நாம் திருத்த முடிந்தால், நிர்வாகத்தையும், நிர்வாகிகளையும்கூட நாம் திருத்துகிறோம். ஆனால்,குடிகாரனைப் பலாத்காரமாக அடக்கினால், கொஞ்ச காலத்திற்கு அரசாங்கம் தன்னுடைய வருமானத்தை இழக்கும்படி நாம் செய்யலாம். ஆனால், இறுதியில் அடக்கி வைக்கப்பட்டுள்ள குடிகாரன் தலைதூக்க ஆரம்பித்துவிடுவான். அப்போது அரசாங்கத்தின் வருமானமும் அதிகமாகும். தம்முடைய உயிரைக்கூடப் பொருட்படுத்தாமல், குடிகாரனிடம் உள்ள அன்பு காரண

மாக மறியல் செய்வதற்குப் போதிய ஆண்களும், பெண்களும் கிடைக்கும் வரையில், மீண்டும் மறியலை ஆரம்பிப்பதென்று கனவுகூடக் காண முடியாது.

—'எங் இந்தியா' – 17—4—1924

# 40

# மறியலுக்கு எதிராக

தெற்கேயுள்ள ஓய்வு பெற்ற அரசாங்க அதிகாரி ஒருவர் பின்வருமாறு எழுதுகிறார் :

''மதுக் கடைகள், வெளிநாட்டுத் துணிக்கடைகளை மறியல் செய்வதற்கு நீங்கள் இப்புதிய விதிகளை வகுத்து, மறியல் விஷயத்தில் வாசகர்களுக்கு வேறு ஏதாவது விதிகள் தோன்றினல் அனுப்பும்படியும் 'எங் இந்தியா' பத்திரிகையில் நீங்கள் எழுதியிருப்பதாக, சென்னை 'ஹிந்து' பத்திரிகை மூலம் அறிந்தேன். இது சம்பந்தமாக 'பஞ்ச்' பத்திரிகையில் கூறப்பட்ட ஒரு பிரசித்தமான யோசனையை நான் கூறலாமா? 'வேண்டாம்' என்பதே அந்த யோசனை. சமாதான ஒப்பந்தத்தின் ஷரத்துக்களை விளக்கி பத்திரிகைக்காரர் களிடையே நீங்கள் செய்த அருமையான பிரசங்கத்தில், தவறிழைப்பதற்கும். பாவம் செய்வதற்கும்கூட சுதந்திரம் இல்லாவிட்டால், அந்தச் சுதந்திரத்தினல் பிரயோசனமே இல்லை என்று சொன்னீர்கள். வல்லமை மிக்க கடவுளே, மிகவும் எளியவனுக்குக் கூடப் பாவம் செய்யும் முழு உரிமை அளித்திருக்கும் போது, எந்த மனிதனும் மற்றவர்களுக்கு அதே உரிமையை மறுக்கத் துணிவான் என்று நினைத்துக்கூடப் பார்க்க முடியாது என்றும் எடுத்துக் காட்டினீர்கள். அப்படியானல், இஷ்டப்படுபவர்கள் குடிப்பதைத் தடுக்கவும் வெளிநாட்டுத் துணிகளை அணியாமல் தடுக்கவும், ஏன் இரவு, பகலாக உழைக்கிறீர்கள் என்று பணிவுடன் கேட்க விரும்புகிறேன். 'பஞ்ச்' பத்திரிகை கூறிய யோசனையை நீங்கள் பின்பற்ற விரும்பினல், உங்களுடைய பேச்சிலும், செய்கையிலும் இவ்வளவு முரண்பாடுகள் இல்லாமல் பார்த்துக்கொள்ளமாட்டீர்களா? மேலும், மற்றொரு முக்கியமான விஷயத்தையும் மறந்துவிடக்கூடாது. மறியல் செய்வது சட்ட சம்மதமானதாக்கப்பட்டால், அல்லது நீங்கள் கூறும் மறியல் முறை சட்டபூர்வமானதென்று அங்கீகரிக்கப்பட்டால், பல துறைகளில் அந்த முறை பின்பற்றப்படலாம். இதன் விளைவுகள் எப்படி இருக்கும் என்று நினைத்தாலே பயமாயிருக்கிறது. ஒரே ஒரு உதாரணத்தை மட்டும் சொல்லுகிறேன். மதப் பிரசாரகர்கள், மனிதர்களை மதமாற்றம் செய்ய இப்போதுமுயற்சி செய்துகொண்டிருக்கிறர்கள். தம்முடைய நோக்கத்தில் வெற்றி பெறுவதற்காக, கிறிஸ்தவர்கள் அல்லது முஸ்லிம்கள் ஹிந்துக் கோயில்களின் முன்பு மறியல் செய்ய ஆரம்பித்தால், இந்தியாவின் நிலைமை என்னவாயிருக்கும்? மத சம்பந்தமான விஷயங்களில் மறியல் கூடாதென்று நீங்கள் விதிக்கக்கூடும். அப்படிச் செய்வது, கொள்கை என்ற முறையில் மறியலில் வலு இல்லை என்பதை ஒப்புக்கொள்ளுவதாகாதா? மேலும், மதத்தைத் தவிர, உங்க

ளுடைய விதிகளைக் கொஞ்சமும் மீருமல் மற்றும் பல துறைகளிலும் சுலபமாக மறியல் செய்ய முடியும். அதன் விளைவு முற்றிலும் தருமசங்கடமானதாகவே இருக்கும். இந்த விஷயத்தை ஆழ்ந்து சிந்தித்துப் பார்ப்பீர்களென்றும், மறியலுக்கு ஆதரவு அளிப்பதன் மூலம் நீங்கள் வீண விதைக்கவில்லை யென்று உறுதியாகத் தீர்மானப்படுத்திக் கொள்ளுவீர்கள் என்றும் நம்புகிறேன்."

இவருடைய வாதம் நன்ருய்த் தானிருக்கிறது. ஆனல், மனத்தில் பதியவைப்பதாய் இல்லை. காலத்தைப் போலவே மறியலும் அவ்வளவு பழமையானது என்பதை அவர் மறந்துவிடுகிருர். இதற்குச் சட்ட சம்மதம் அவசியமில்லை. முன்பு சட்ட விரோதமானதாக இருந்த ஒன்றை, ஒப்பந்தம்* சட்ட பூர்வமானதாக்கவில்லை. மறியல் செய்வது சீர்திருத்தவாதியின் உரிமையாகும். லட்சியத்தையே கைவிடுவதாயிருந்தாலொழிய, சீர்திருத்தவாதி அதைக் கைவிட முடியாது.

தவறிழைப்பதற்கு, அல்லது பாவம் செய்வதற்கு மனிதனுக்கு உரிமை இருப்பதால், பாவம் செய்யக்கூடாதென எச்சரிப்பது சுதந்திரத்தில் தலையிடுவதாகுமென்று பொதுவாக ஒரு தவருன எண்ணம் இருக்கிறது. அதே தவறை இந்த நண்பரும் செய்திருக்கிருர். தனிப்பட்டவர்கள் பாவம் செய்வதற்கு உரிமை இருப்பதைப் போலவே, அந்தப் பாவத்திலிருந்து அவர்களைத் திருப்புவதற்கும், அதற்கெதிராகச் சட்டம் செய்வதற்கும் கூடப் பொதுமக்களுக்கு உரிமை இருக்கிறது. ''பாவத்தின் கூலி சாவுதான்.'' யாரும் நினைத்தபடி தவறிழைக்கவோ, பாவம் செய்யவோ முடியாது. மக்களுடைய விருப்பத்திற்கு விரோதமாக அரசாங்கம் தங்களுக்கு எல்லாம் தெரியும் என்ற அகம்பாவத்துடன், மக்களை 'நல்லவர்களாக்க' நிர்ப்பந்தம் செய்வதையும், எது நல்லது, எது கெட்டது என்பதற்கான தங்களுடைய அளவுகோல் எப்போதும் தவருது என்று கூறுவதையும்தான் நான் ஆட்சேபித்திருக்கிறேன்; உலகமும் எப்போதும் அதைத்தான் ஆட்சேபித்து வந்திருக்கிறது. ஆனல், அமைதியான முறையில் மறியல் செய்வது, தவருனது என்று ஒரு சீர்திருத்தவாதி நினைக்கும் ஒன்றைப் பற்றி நேசபாவமான முறையில் எச்சரிக்கை செய்வதாகும். அது அந்த அளவைத் தாண்டி பலாத்காரத்தில் இறங்கும்போது, சட்டம் குறுக்கிட்டு, மனிதர்களுடைய உரிமையில் அவர் தலையிடுவதைத் தடுக்கிறது. சில நிலைமைகளில் மறியல் செய்வதால் ஏற்படக்கூடிய அபாயங்களைப்பற்றி அந்த நண்பர் கற்பனை செய்திருக்கிருர். அவர் கொடுத்துள்ள உதாரணங்கள்கூடப் புதியவையல்ல. இதற்கு முன்பு கோவில்கள் மறியல் செய்யப்பட்டிருக்கின்றன. இந்த முயற்சி பலனளிக்காததால் கைவிடப்பட்டுவிட்டது. விதிகளுக்குட்பட்டும், பொதுஜனக் கண்டனத்தைப் பொருட்படுத்தாமலும் இருக்கும் வரையில், யாரும் மீண்டும் மறியல் செய்

* 1931-இல் சட்டமறுப்பு இயக்கத்திற்குப் பிறகு ஏற்பட்ட காந்தி - இர்வின் ஒப்பந்தம்.

வதைத் தடுக்க முடியாது. மதுக்கடைகள், வெளிநாட்டுத் துணிக் கடைகளுக் கெதிராகப் பொதுஜன அபிப்பிராயம் இருப்பதால் தான் அவற்றை மறியல் செய்வதும், பெரும் அளவு வெற்றி பெறுவதும் சாத்தியமாயிருந்தது. ஆகவே, காங்கிரஸ் வினைவிதைத்து விடுமோ என்ற அபாயம் இல்லை. அறிவூட்டும் முறையில் மறியல் செய்வது பலனளிக்கத் தக்கதே என்பது ருசுவாகிவிட்டதால், அது நிலைத்துவிட்டது.

—'எங் இந்தியா' - 31—4—1931

# 41

# மறியலுக்குப் பெண்கள்

குடி ஒழிப்பு இயக்கம் சம்பந்தமாக, குஜராத் பெண்கள் அதற்கு உதவி செய்ய வேண்டுமென்று காந்திஜி கேட்டுக் கொண்டிருக்கிறார். கள்ளுக்கடைகள் இருக்கும் இடங்களுக்கு அவர்கள் விஜயம் செய்து, மது விற்பவர்களை வேண்டிக் கேட்டுக்கொள்ள வேண்டும். அவர்கள் வழிக்கு வரவில்லையென்றால், பிறகு குடிப்பவர்களை அணுக வேண்டும். கடுமையான வார்த்தைகளை உபயோகிப்பதைக் கண்டிப்பாகத் தவிர்க்க வேண்டும். "நீங்கள் எங்களுடைய சகோதரர்கள். எங்களுடைய சகோதரர்கள் குடிக்க மாட்டார்கள். கடவுளின் மீது ஆணை, குடியை விட்டுவிடுங்கள்." அவர்கள் இவ்வளவு மட்டும் சொன்னால் போதும். "குடிப்பவர்கள் வெட்கமடைந்து கடைகளுக்குள் நுழையாமல் போய்விடுவார்களென்று நான் நிச்சயமாக நம்புகிறேன். அப்படி அவர்கள் போகாமல், தொண்டர்களிடம் முறைதவறி நடந்தால் கூட, தேசத்திற்காக அதைப் பொறுத்துக்கொள்ள வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளுகிறேன்" என்று காந்திஜி கூறுகிறார்.

—'எங் இந்தியா' - 30—3—1921

  

மறியலில் பலாத்கார அபாயம் இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. அதனால் இந்திய சகோதரிகள் இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டுமெனக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். படித்தவர்கள், தம் பயத்தையும் அவநம்பிக்கையையும் மட்டும் விட்டொழித்துவிட்டால், மற்ற சகோதரிகளும் நிச்சயமாக அவர்களைப் பின்பற்றுவார்கள்.

—'எங் இந்தியா' - 24—6—1930

# 42

# குடியின் சாபக்கேடு

ஒரு சகோதரி பின்வருமாறு எழுதுகிறார் :

''மக்களிடையே குடிப்பழக்கம் எவ்வளவு விபரீதத்தை ஏற்படுத்துகிறது என்பதை, கிராமங்களுக்குப் போயிருந்தபோது கேள்விப்பட்டேன். அங்குள்ள பெண்களில் சிலர் கண்ணீர்விட்டழுதார்கள். அவர்கள் என்ன செய்ய முடியும்? நம்மிடையே யிருந்து என்றென்றைக்கும் மதுவை ஒழிக்க விரும்பாத பெண்கள் யாருமே இருக்கமாட்டார்கள். குடும்பங்களில் பல துன்பங்களுக்கும், வறுமைக்கும், உடல் நலிவுக்கும், வியாதிக்கும் அதுவே காரணமாயிருக்கிறது. வழக்கம்போல், ஆணின் இந்தக் கெட்ட பழக்கத்தினால் ஏற்படும் சுமையைப் பெண்கள்தான் ஏற்றுக்கொள்ளவேண்டி யிருக்கிறது. பெண்கள் என்ன செய்யவேண்டுமென்று நான் என்ன யோசனை கூறக்கூடும்? கோபத்தையும், சில சமயங்களில் கொடுமையையும்கூடச் சமாளிப்பது என்பது எவ்வளவு கஷ்டமான காரியம்? இந்த மாகாணத்திலுள்ள தலைவர்கள், தம்முடைய நேரத்தையும் சக்தியையும், மூளையையும் வகுப்புத் தீர்ப்பின் அநீதி விஷயத்தில் செலவிடுவதைவிட, இந்தத் தீமையை அகற்றுவதில் செலவிட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்? நம்முடைய மக்களின் தார்மிக அந்தஸ்து உயர்ந்தால், சில சில்லறை விஷயங்கள் தாமாகவே சரிப்பட்டுவிடும். ஆனால், இவற்றில் கவனம் செலுத்திவிட்டு, உண்மையிலேயே முக்கியமான விஷயங்களை நாம் புறக்கணித்துவிடக் கூடும். குடியைப்பற்றி மக்களுக்கு நீங்கள் ஒரு வேண்டுகோள் வெளியிடக் கூடாதா? இந்தச் சாபத்தினால் மக்கள் நரகத்திலேயே போய் விழுவதைப் பார்க்க மிகவும் பரிதாபமாய் இருக்கிறது.''

குடிப்பவர்களுக்கு நான் வேண்டுகோள் விடுப்பதில் பலனிருக்காது. அப்படித்தானிருக்க முடியும். அவர்கள் 'ஹரிஜன்' பத்திரிகை படிப்பதில்லை. அப்படிப் படித்தாலும், கேலி செய்வதற்காகவே படிக்கிறார்கள். குடிப் பழக்கத்தின் தீமையைப் பற்றித் தெரிந்துகொள்ளுவதில் அவர்களுக்கு அக்கறை இருக்க முடியாது. அந்தத் தீமையை அவர்கள் விடாமல் பற்றிக் கொண்டிருப்பவர்கள். ஆனால், இந்தச் சகோதரியின் மூலம், இந்தியாவிலுள்ள எல்லாப் பெண்களுக்கும் ஒரு விஷயத்தை ஞாபகப்படுத்த விரும்புகிறேன். டண்டி யாத்திரையின் போது, இந்தியப் பெண்கள் நான் சொன்னதைக் கேட்டார்கள். குடி எதிர்ப்பையும், கைராட்டினத்தையும் தங்களுடைய விசேஷப் பணிகளாக மேற்கொண்டார்கள். ஆயிரக்கணக்கான பெண்கள் பயமே இல்லாமல் கள்ளுக்கடைகளைச் சூழ்ந்துகொண்டு, குடிகாரர்களைத் திருப்புவதில் பல சமயங்களில் வெற்றி பெற்றார்கள் என்பதும் ஞாபகமிருக்கும். தமக்குத் தாமே அவர்கள் பணித்துக்கொண்ட அந்த வேலையில் அவர்கள் ஈடுபட்ட போது, குடிகாரர்கள் திட்டினார்கள்; சில சமயங்களில் தாக்கவும் செய்தார்கள். அவற்றை யெல்லாம் அவர்கள் பொறுத்துக் கொண்டார்கள். கள்ளுக் கடைகளை மறியல் செய்த குற்றத்திற்காக

நூற்றுக்கணக்கானவர்கள் சிறை சென்ருர்கள். அவர்களுடைய ஆர்வமிக்க வேலையினுல் தேசம் பூராவிலுமே பிரமாதமான விழிப்பு ஏற்பட்டது. ஆனல், துரதிருஷ்ட வசமாக, சட்ட மறுப்பு இயக்கம் நின்றவுடன், அது நிற்பதற்கு முன்பே கூட, இந்த வேலை தளர்ச்சி பெற்றுவிட்டது. இந்தத் தளர்ச் சிக்குக் காரணம் என்ன என்பதை நான் பரிசீலனை செய்ய வேண்டிய அவசியமில்லை. ஆனல், அந்த வேலை ஊழியர்களுக் காக இன்னும் காத்துக் கொண்டிருக்கிறது. பெண்களின் பிரதிக்ஞை நிறைவேருமலே இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட காலத்திற்கென்று மட்டும் அது மேற்கொள்ளப்படவில்லை. இந்தியா பூராவிலும் மது விலக்கு வரும் வரையில், அந்தப் பிரதிக்ஞை நிறைவேறியதாகாது. இதில் பெண்களின் பங்கு தான் உயர்வானது. மனிதனிடம் உள்ள சிறந்த இயல்புகளை ஊக்கிவிட்டு, கள்ளுக் கடைகளைக் காலி செய்வதே அவர்களு டைய பணி. அவர்கள் தொடர்ந்து அந்த வேலையைச் செய்ய முடிந்திருந்தால், அவர்களுடைய மென்மையும், உண்மையும், குடிகாரர்களை நிச்சயமாக அந்தப் பழக்கத்திலிருந்து திருப்பி யிருக்கும்.

ஆனல், ஒன்றும் முழுகிப் போய்விடவில்லை. பெண்கள் அந்த இயக்கத்தை மீண்டும் ஆரம்பிப்பதற்கு இன்னும் அவ காசமிருக்கிறது. இந்தப் பெண் சிலரைக் குறிப்பிட்டிருக் கிருரல்லவா? அவர்களுடைய மனைவிமார்கள் உண்மையாக முயற்சி செய்தால், தம் கணவன்மார்களை நிச்சயமாகத் திருப்பி விட முடியும். தம் கணவன்மார்களை நல்வழிப்படுத்துவதற்குத் தமக்கு எவ்வளவு சக்தி இருக்கிறது என்பது பெண்களுக்குத் தெரியாது. தம்மை யறியாமலேயே அந்தச் சக்தியை அவர்கள் உபயோகிக்கிருர்கள். ஆனல், அது போதாது. அந்த உணர் வுடன் அவர்கள் அதை உபயோகிக்கவேண்டும். அந்த உணர்வு இருந்தால் அதனுல் அவர்களுக்கு ஒரு பலம் பிறக்கும். தம் முடைய கணவன்மார்களை எப்படிச் சமாளிப்பதென்றும் அவர் களுக்குப் புலப்படும். தம்முடைய கணவன்மார்கள் என்ன செய்கிருர்களென்பதில் பெரும்பாலான மனைவிகள் அக்கறை எடுத்துக் கொள்ளுவதில்லை என்பதே இதிலுள்ள பரிதாபம். அதற்குத் தமக்கு உரிமை இல்லை யென்று அவர்கள் நினைக் கிருர்கள். தம்முடைய மனைவிமார்களின் ஒழுக்கத்திற்குக் காவ லர்களாயிருப்பது கணவன்மார்களின் கடமையாகும். அதே மாதிரி கணவன்மார்களின் ஒழுக்கத்திற்கு 'கார்டியன்'களா யிருப்பது தம்முடைய கடமையுமாகும் என்பது பெண்களுக்குத் தோன்றுவதில்லை. கணவன், மனைவி இருவரின் சீலத்திலும், தீய பழக்கங்களிலும் இருவருக்குமே சம பங்கு உண்டு என்பதில் என்ன சந்தேகம் இருக்க முடியும்? மனைவிமார்கள் தமது சக்தி களையும் கடமையையும் உணரச் செய்யும் வேலையைப் பெண்ணைத் தவிர வேறு யார் அவ்வளவு திறமையுடன் செய்ய முடியும்.

குடிக்கு எதிரான இயக்கத்தில் பெண்களுக்குள்ள பங்கில் இது ஒரு பகுதியேயாகும்.

குடி பற்றிய புள்ளி விவரங்களைச் சேகரித்து, அந்தப் பழக்கம் ஏற்படுவதன் காரணம், அதை ஒழிப்பதற்கு வழிகள் முதலியவற்றை ஆராய்வதற்கு நல்ல பயிற்சி உள்ள பெண்கள் போதிய அளவில் இருக்க வேண்டும். சென்ற காலத்தின் படிப்பினையை அவர்கள் உணர வேண்டும். குடியை விட்டுவிடும்படி குடிகாரர்களைக் கேட்டுக் கொள்ளுவதால் மட்டும் நிலையான பலன் ஏற்பட முடியாது என்பதையும் அவர்கள் அறிய வேண்டும். இந்தப் பழக்கத்தை ஒரு வியாதியாக மதித்து, அதற்கேற்றவாறு சிகிச்சை அளிக்க வேண்டும். அதாவது, சில பெண்கள் ஆராய்ச்சியாளர்களாக மாறி, பல துறைகளிலும் ஆராய்ச்சி செய்ய வேண்டும். எந்தச் சீர்திருத்தத்திலுமே அந்த விஷயத்தைப் பற்றிய எல்லா விவரங்களையும் அடிக்கடி பரிசீலனை செய்து கொண்டே இருப்பது அவசியமாகும். நியாயமானவை என்று ஒப்புக்கொள்ளப்படும் சீர்திருத்தங்கள் பூராவாகவோ, அரைகுறையாகவோ தோல்வியடைவதற்கு மூலகாரணம், அறியாமை தான். ஏனெனில், சீர்திருத்தம் என்ற பெயரில் உலாவும் யாவுமே சீர்திருத்த இயக்கங்கள் என்று சொல்லத் தகுதி வாய்ந்தவைகளாயிருக்க வேண்டும் என்ற அவசியமில்லை.

—'ஹரிஜன்' - 24—4—1937

# 43

# குடிபற்றி மதங்கள்

மது என்பது சைத்தான் கண்டுபிடித்த ஒன்றாகும். இப்படி நாம் சொல்லுகிறோம். ஆண்களையும், பெண்களையும் சைத்தான் ஆசைகாட்டி இழுக்க முயன்ற போது, அவர்கள் எதிரில் ''சிகப்பு நீரை''க் காட்டியதாக இஸ்லாமிய மதத்தில் கூறப்பட்டிருக்கிறது.

—'எங் இந்தியா' - 14—1—1932

  

யூதர்களின் உபயோகத்திற்கு மது வகைகளை அனுமதிக்க வேண்டுமென்ற ஒரு கோரிக்கையை டாக்டர் கில்டர் ஏற்றுக் கொண்டதைப் பார்த்த போது எனக்குச் சங்கடமா யிருந்தது. ஜொஹன்னஸ்பர்க்கில் எனக்குப் பல யூத நண்பர்கள் இருந்தார்கள். அங்கே யூதர்களைப் பற்றி எனக்கேற்பட்டிருந்த அனுபவம் பம்பாய் கோரிக்கைக்கு முற்றிலும் விரோதமானதாயிருந்தது. ஆகையால், ஜொஹன்னஸ்பர்க்கிலுள்ள பிரதம யூத

மதகுருவைக் கேட்டு அதிகார பூர்வமான அபிப்பிராயத்தை எனக்கு அனுப்புமாறு எனது நண்பர் எச். காலன்பாக்குக்கு ஒரு கடிதம் எழுதினேன். டாக்டர் லாண்டோ அனுப்பியுள்ள அபிப்பிராயம் பின்வருமாறு :

"ஸப்பாத் அல்லது இதர புனித தினங்களில் பிரார்த்தனைக்குப் பிறகும், வீடுகளில் சாப்பாட்டுக்கு முன்பும், 'பாஸ்ஓவர்' திருநாளுக்கு முன்பு இரு சந்தர்ப்பங்களிலும் விசேஷமாகத் தயாரிக்கப்பட்ட ஒயின்களை மட்டுமே யூதர்கள் உபயோகிக்கலாம்.

"இந்த ஒயின் போதையளிப்பதா யிருக்க வேண்டியதில்லை. ஒயினை உபயோகிப்பது மதத்தில் விதிக்கப்பட்டுள்ள ஒரு சட்டமல்ல. யூதர்களின் வேத புஸ்தகத்திலும், யூத சட்ட நியதிகளிலும் இது பிரஸ்தாபிக்கப்பட்டிருப்பதால், வைதிக மனப்பான்மையுள்ள யூதர்கள் இந்த சம்பிரதாயத்தைப் போற்றிப் பின்பற்றுகிறார்கள்."

இந்த அபிப்பிராயம் அதிகார பூர்வமானது தானென்று பம்பாயிலுள்ள யூதர்கள் ஒப்புக்கொண்டால், அவர்கள் தம்முடைய கோரிக்கையை வாபஸ் பெற்றுக்கொள்ள வேண்டும். புதிய திராட்சை ரசத்துடனேயே அவர்கள் திருப்தி யடைய வேண்டும். ஒயின் என்ற வார்த்தைக்கு ஆரம்பத்தில் இதுதான் அர்த்தம் என்று அறிகிறேன். ஆனால், இதற்குக்கூட யூத மத புஸ்தகங்களில் சம்மதம் கிடையாதென்பதும், சம்பிரதாயமே இதற்குக் காரணமென்பதும் குறிப்பிடத் தக்கது.

—'ஹரிஜன்' 16—6—1939

# 44

# பார்ஸிகளுக்கு

குடிப்பதற்கு விரோதமான உணர்ச்சி இந்தியா முழுவதும் அலைபோல் அடித்துக்கொண்டிருக்கிறது. மக்கள் தாமாகவே குடியை விட்டுவிட விரும்புகிறார்கள். குடிப்பது மன்னிக்க முடியாத ஒரு தீமை என்ற பொதுஜன அபிப்பிராயம் வேகமாக உருவாகிக்கொண்டு வருகிறது. பல பார்ஸிகள் மதுக் கடைகளின்மூலம் ஜீவனம் நடத்திவருகிறார்கள். நீங்கள் மனப்பூர்வமாக ஒத்துழைத்தால், பம்பாய் ராஜதானியிலுள்ள இத்தகைய பல பிளேக் பகுதிகளை இருந்த இடம் தெரியாமல் செய்துவிடலாம். கலால் வருமானத்தை அடியோடு அழித்துவிடக்கூடிய விதத்தில், இந்த இயக்கம் அவ்வளவு வெற்றிகரமாக இருக்கிறது. ஆனால், அநேகமாக இந்தியா பூராவிலுமுள்ள மாகாண அரசாங்கங்கள் இந்த இயக்கத்தைச் சீரழிப்பதற்கு மானக்கேடான முறையில் முயற்சி செய்து வருகின்றன. நீங்கள்

அரசாங்கத்துக்கு உதவி செய்யப் போகிறீர்களா, மக்களுக்கு உதவி செய்யப்போகிறீர்களா? பம்பாய் அரசாங்கம் இன்னும் பீதிக்கு உட்பட்டுவிடவில்லை. ஆனால், குடிவருமானத்தை விட்டுக் கொடுக்கும் அளவுக்கு அவர்களுக்குத் தைரியமும், விவேகமும் இருக்குமென்று எனக்குத் தோன்றவில்லை. நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள் என்பதை உடனடியாக முடிவு செய்ய வேண்டும். குடியைப் பற்றி உங்களுடைய மத புஸ்தகங்கள் என்ன கூறுகின்றன என்று எனக்குத் தெரியாது. ஆனால், தீமையிலிருந்து, நன்மையைப் பிரித்து, அதன் வெற்றியைக் குறித்துப் பாடிய முகமது நபிகள் என்ன சொல்லியிருப்பார் என்று நான் ஊகிக்கக்கூடும். உங்களுடைய சொந்த மத நம்பிக்கை ஒருபுறமிருக்க, குடி ஒழிப்பு இயக்கத்திற்கு முழுமனத்துடன் ஒத்துழைப்பு அளிக்கப் போகிறீர்களா, அல்லது நடப்பது நடக்கட்டுமென்று கையைக் கட்டிக்கொண்டு, பார்த்துக்கொண்டிருக்கப் போகிறீர்களா? இதைப்பற்றி நீங்கள் ஒரு முடிவுக்கு வரவேண்டும். இந்தியாவிலுள்ள பல்வேறு வகுப்பினரில் நீங்கள் அனுபவ அறிவுள்ளவர்கள். ஆகவே உலகத்தில் நடந்த இத்தகைய எந்த இயக்கத்தையும் விட வெற்றிகரமாக நடக்கக் கூடுமென்று தோன்றும் இந்தக் குடி எதிர்ப்பு இயக்கத்துடன் நீங்கள் முழுமனத்துடனும், தீவிரமாகவும் ஒத்துழைப்பீர்களென்று நம்புகிறேன்.

—'எங் இந்தியா' - 23—3—1921

# 45

# மிகவும் காலம் கடந்தது

பம்பாயிலிருந்து ஒரு பார்ஸி நண்பர் திலகர் சுயராஜ்ய நிதிக்கு பத்து ரூபாய் அனுப்பிவிட்டுப் பின்வருமாறு எழுதியிருக்கிறார்: "பார்ஸிகளுக்கு நீங்கள் விடுத்துள்ள வேண்டுகோள் மிகவும் காலம் கடந்ததாகும். நீங்கள் ஏதாவது இயக்கத்தை ஆரம்பித்துவிடுவீர்களென்று பயந்து, பம்பாய் அரசாங்கம் இந்தத் தடவை முன்னதாகவே சுமார் ரூ. 23 லட்சத்தை வாங்கிக் கொண்டுவிட்டார்கள். வேறு எந்த வகுப்பினரும் அந்த வியாபாரத்தைப் பிடித்துக்கொண்டுவிட மாட்டார்களென்றும், அந்தத் தீமையை நிரந்தரமாக ஒழித்துவிட முடியுமென்றும் நீங்கள் உறுதி கூறினால், விஷயமறிந்த பள்ளி வகுப்பினர் நிச்சயமாக மனப்பூர்வமான ஆதரவை அளிப்பார்கள்." வருடாந்தரக் குத்தகைப் பணம் பூராவையும் அரசாங்கம் முன்னதாகவே வாங்கிக் கொண்டு விட்டார்களென்றால், மது விலக்கை ஆதரிப்பதற்காகத் தமது கடைகளை மூடுபவர்கள் பின்னர் நல்ல காலம் வரும்போது அந்தப் பணத்தைத் திரும்பப் பெறவேண்டும். கள்ளுக் கடைக்காரர்கள் ஒத்துழையாமைக்காரர்களல்ல என்பது தெளிவானதே. பணத்தை வாபஸ் கொடுக்கும்படி அவர்கள் ஏன்

அரசாங்கத்துக்கு மனுச்செய்து கொள்ளக்கூடாது? இந்த நண்பர் கோரும் உறுதிமொழி சம்பந்தப்பட்ட வரையில், இவர் கூறும் நிபந்தனைக்குட்பட்டு இதுவரையில் எந்தச் சீர்திருத்தமும் நடந்ததில்லை என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். எல்லோரும் நல்லவர்களானாலொழிய, யாரும் நல்லவர்களாகவேண்டியதில்லை என்பதே அவருடைய வாதம். ஆனால், சீர்திருத்தவாதிகள் தனித்துநின்று உதாரணம் காட்டுகிறார்கள். மற்றவர்கள் சேர்ந்தாலும், சேராவிட்டாலும், பார்ஸிகள் இந்த இயக்கத்தில் சேரவேண்டுமென்பதே என்னுடைய வேண்டுகோள். பார்ஸிகளல்லாதாரில் பலர் கள்ளு வியாபாரத்தைக் கைவிட்டு விட்டார்கள்.

—'எங் இந்தியா' - 27—2—1921

## 46

# தாமதத்திற்கு இடமில்லை

கள்ளுக் கடை மறியலுடன் பார்ஸிகளுக்கு நெருங்கிய சம்பந்தம் உண்டு. நம் நாட்டிலுள்ள பார்ஸிகள் விஷயத்தில் நாம் பொறுமையாக இருக்க வேண்டும். மறியலை நாம் அடியோடு நிறுத்திவிட முடியாது. ஆயினும் மது வியாபாரம் செய்பவர்களின் மகாநாடு ஒன்றைக் கூட்டி, அவர்களுடைய கஷ்டங்களை நாம் உணரவேண்டும்; நம்முடைய கஷ்டங்களையும் அவர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். ஸ்ரீ கோத்ரேஜ் தம்முடைய நன்கொடையை மது விலக்குக்காகவும், ஒடுக்கப்பட்ட மக்களின் அபிவிருத்திக்காகவும் ஒதுக்கியிருக்கிறார். ஆகையால் எல்லாப் பார்ஸிகளுமே மகத்தான மதுவிலக்கு இயக்கத்தை எதிர்க்கிறார்கள் என்று நான் நினைக்கக் கூடாது. மிதவாதிகளான மந்திரிகள் துணிந்து, ஏலத்தில் கிடைத்த பணத்தையெல்லாம் வாபஸ் செய்து, கள்ளுக்கடைகளை மூடினாலொழிய, மதுவிலக்கு இயக்கத்தில் பலாத்காரம் ஏற்பட்டுவிடுமோ என்பதே இப்போது நாம் அதிகமாகப் பயப்பட வேண்டிய விஷயமாகும். இந்த இயக்கத்தைச் சீர்படுத்தத்தான் முடியுமே யொழிய அதை நிறுத்த முடியாதென்பது நிச்சயம். கள்ளுக்கடைகளை ஒழித்து விடுவதென்று மக்கள் உறுதிகொண் டிருக்கிறார்கள். மருந்து கடைகளில் இதை மருந்தாக விற்பதைத் தவிர, மற்றப்படி மதுவிற்பனையை ஒரு குற்றமாகக் கருதுகிறார்கள். இதில் தாமதத்திற்கு இடமேயில்லை.

—'எங் இந்தியா' - 29—6—1921

# 47

# மதுவும் பார்ஸிகளும்

பார்ஸிகளால் நடத்தப்படும் கள்ளுக்கடைகள் மட்டும்தான் மறியல் செய்யப்படுமென்று பார்ஸி நண்பர்கள் தவருக நினைத்துக்கொண் டிருக்கிருர்கள். இது முற்றிலும் தவருன எண்ணமாகும். இப்போது இந்தியா பூராவிலுமே, அநேகமாக கட்டுப்பாடான முறையில் மறியல் நடந்துகொண்டிருக்கிறது. குஜராத்தைத் தவிர மற்ற பகுதிகளில், பார்ஸிகளை விட ஹிந்துக் கடைக்காரர்களே அதிகமாயிருக்கிருர்கள். குஜராத்தில்கூட வெட்டி எறியப்படும் ஆயிரக்கணக்கான கள்ளுமரங்கள் ஹிந்துக்களுக்குச் சொந்தமானவை. ஹிந்துக்கள் நடத்தும் கள்ளுக்கடைகளையும் மிகவும் விரிவான முறையில் மறியல் செய்யத்தான் வேண்டும். கட்டுப்பாடான மறியல் இப்போதுதான் ஆரம்பமாகியிருக்கிறது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். என்னுடைய பிரசங்கங்களில், முக்கியமாக பார்ஸிகளைக் குறிப்பிட்டே வேண்டுகோள் விடுத்திருக்கிறேன். ஏனெனில், அவர்களுக்கும், எனக்குமிடையே அறுக்கமுடியாத பிணைப்புகள் இருக்கின்றன. இந்தியாவிலேயே மிகவும் முன்னேற்ற மடைந்ததும் கட்டுப்பாடுள்ளதுமான வகுப்பு அதுதான்; ஆகையால், அவர்கள் சுலபமாக நியாயத்திற்குக் கட்டுப்படுவார்கள். அவர்கள் பத்திரிகைகளைப் படிக்கிருர்கள். பார்ஸி மது வியாபாரிகள் நான் பேசும் கூட்டங்களுக்கு வருகிருர்கள். ஆனல், ஹிந்து கடைக்காரர்களுக்கு அவ்வளவு அறிவில்லை. ஹிந்துக்களை அவர்களுடைய கடைகளிலோ, வீடுகளிலோதான் போய்ப் பார்க்கவேண்டும். பார்ஸிகளிடமிருந்து எனக்குக் கிடைத்து வரும் ஆதரவு போதிய அளவில் இல்லை என்ருலும், நம்பிக்கையளிப்பதாயிருக்கிறது. ஒரு பார்ஸி வக்கீலுடன் சேர்ந்து, மிதுபாய் பெடிட் என்ற ஒரு பார்ஸி சகோதரிதான் சூரத் ஜில்லாவில் மறியலுக்கு ஏற்பாடு செய்துகொண்டிருக்கிருள். பெஹ்ராம் மேதாவும், தன்ஜிஷாதர்பாரியும் இதற்காகச் சிறைவாசம் அனுபவித்திருக்கிருர்கள். உப்புச் சட்டத்தை மீறினர்கள் என்ற காரணத்திற்காக அவர்கள் கைதுசெய்யப்பட்டார்கள்; ஆனல், அவர்களுடைய செல்வாக்கு கள்ளுக்கடைக்காரர்களிடையே பரவி விடுமோ என்ற பயத்திற்காகவே கைதுசெய்யப்பட்டார்கள் என்று எனக்கு ஒரு சந்தேகம் உண்டு. உப்பு சத்தியாக்கிரகத்துடன் மதுவிலக்கு வேலையிலும் அவர்கள் ஈடுபட்டிருந்தார்கள். என்னைப் பார்ப்பதற்காக ஒரு நாள் சில பார்ஸி மதுக்கடைக்காரர்கள் வந்திருந்தார்கள். மதுக் கடைகளைப் போலவே கள்ளுக்கடைகளையும் மறியல் செய்ய உத்தேசித்திருக்கிறேன் என்பதைக் கேட்டு, அவர்கள் முழுத் திருப்தியுடன் சென்றதைப் பார்த்த போது, எனக்கு மிகவும் சந்தோஷமா யிருந்தது. பக்கத்தி

லுள்ள பரோடாவிலிருக்கும் மதுக் கடைகளை நாம் சும்மா விட்டு வைத்திருக்கிறோம் என்பது புகார்களில் ஒன்ருகும். இந்தப் புகார் உண்மையே. பரோடாவிலும் மறியலை ஆரம்பிப்பதற்கு, அந்த சமஸ்தானத்திலுள்ள மக்கள் ஏற்பாடு செய்வார்களென்று நான் நம்பிக்கொண் டிருக்கிறேன். மதுவிலக்கு என்பது முக்கிய மாக ஒரு தார்மிகச் சீர்திருத்தமாகும். இந்தியாவிலுள்ள மற்றப் பகுதிகளைப் போலவே, சமஸ்தானங்களுக்கும் இதில் அக்கறை உண்டு. சமஸ்தானப் பிரஜைகள் இந்தச் சீர்திருத்த வேலையை மேற்கொண்டாகவேண்டும்.

என்னைச் சந்தித்த நண்பர்கள் தம்முடைய ஜீவனோபாயப் பிரச்னையையும் எழுப்பினார்கள். இங்கேதான் பார்ஸி சமூகத் தினர் தலையிட்டு ஒரு பரிகாரம் கண்டுபிடிக்க வேண்டும். பார்ஸி சங்கங்கள் புள்ளி விவரங்களைத் தயாரிக்க வேண்டும். தம் முடைய ஜீவனோபாயத்திற்கான ஒரே வழியை இழப்பவர் களுக்கு (இதை எப்போதோ இழந்திருக்க வேண்டும்) உதவி தேவையா யிருக்குமல்லவா? அவர்களுக்கு உதவி யளிப்பதற்கும் சங்கங்களை ஆரம்பிக்க வேண்டும். இந்தப் பெரிய வகுப்பைச் சேர்ந்தவர்களால் இவ்வளவு பேர்கள், ஒரு தார்மிக விரோதமான வியாபாரத்தை நம்பிப் பிழைக்க வேண்டி யிருப்பது பெருமை யளிப்பதா யிருக்கமுடியாது.

— 'எங் இந்தியா' – 1—5—1930

## 48

# பார்ஸி ஆட்சேபணை

சென்ற ஆகஸ்டு *10*–ஆம் தேதியன்று ஸ்ரீ அபீத் அலி உள்பட, காங்கிரஸ் மறியல்காரர்கள்மீது உபயோகிக்கப்பட்ட பலாத்காரத்தைக் கண்டித்து *175* பார்ஸிகள் ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கிறார்கள். இந்தக் கண்டனத்தில், பாரிஸ்டர்கள், டாக்டர்கள், ஸொலிஸிட்டர்கள், பேராசிரியர்கள் முதலியோரும் கையெழுத்திட்டிருக்கிறார்கள். இந்தக் கண்டனத்தில் கையெழுத் திட்டவர்களை நான் பாராட்டுகிறேன். ஆனல், அவர்களிடம் ஒரு விஷயம் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இந்தக் காலித்தனத்தை ஏற்பாடு செய்தவர்கள் வெறும் கண்டனத்தைப் பற்றிக் கவலைப்படப் போவதில்லை. மதுக்கடைக்காரர்களுடன் நேரடியாகத் தொடர்பு கொள்ளவேண்டும். அவர்களுக்கு வேறு கண்ணியமான வேலை ஏதாவது கிடைப்பதற்குத் திட்டம் வகுக்க வேண்டும். இந்த வியாபாரத்திற்கெதிராக பார்ஸி வகுப்பினரி டையே ஒரு பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்க வேண்டும். இதுதான் முக்கியம். இந்த வியாபாரத்தை தாங்கள் விட்டுவிட் டால், வேறு யாராவது அதை நடத்த ஆரம்பித்து விடுவார்க

ளென்று மதுக் கடைக்காரர்கள் கூறுகிறார்கள். அவர்கள் அந்த வியாபாரத்தை நடத்தாமலிருப்பது, பார்ஸி சமூகத்திற்கு வெளியேகூட ஒரு பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்கு மென்றும், இதன் பலனாக இந்தத் தார்மிக விரோதமான வியா பாரத்தை மற்றவர்கள் நடத்துவது உண்மையாகவே அசாத்திய மாகி விடுமென்றும் நான் சொல்லியிருக்கிறேன். தங்களுடைய பரம்பரையான இந்தத் தொழிலைக் கைவிட்ட ரத்னகிரி ஜில்லா பண்டாரிகளின் உதாரணத்தை ஏற்கனவே இங்கே நான் எடுத் துக் காட்டியிருக்கிறேன். கோலி பிரிவைச் சேர்ந்த பலரும் அப் படியே செய்திருக்கிறார்கள். ஆகையால், பார்ஸிகளும் இந்தச் சீர்திருத்தத்தை நிறைவேற்றினால், அவர்கள் முதலில் அப்படிச் செய்தவர்களாக மாட்டார்கள்; ஒரு நல்ல உதாரணத்தைப் பின் பற்றியவர்களாவார்கள். அத்துடன், தொழிலாளர்களிடையே ஈடு செய்ய முடியாத தீமையை விளைவிக்கும் ஒரு வியாபாரத்தை ஒழிப்பதற்கு, தேசபக்தி வாய்ந்த உதவி செய்தவர்களு மாவார்கள்.

—'எங் இந்தியா' – 24—9—1931

# 49

# பார்ஸிகளின் எதிர்ப்புக்குப் பதில்

பம்பாயில் மதுவிலக்கு அமலுக்குக் கொண்டுவருவதை ஆட்சேபித்து, பம்பாயில் நடந்த பார்ஸிகளின் பெரிய கூட்டத்தின் நடவடிக்கைகளைப் பார்த்தேன். பார்ஸிப் பெண்களும் இக்கூட் டத்தில் கலந்துகொண்டிருக்கிறார்கள் என்பதையும் கவனித் தேன். சில பார்ஸி நண்பர்களும் எனக்குக் கடிதங்கள் எழுதி யிருக்கிறார்கள். காங்கிரஸ் வேலைத்திட்டத்தில் மதுவிலக்கைச் சேர்ப்பதற்குப் பொறுப்பானவன் என்ற முறையில், பம்பாய் மந்திரி சபை தமது மதுவிலக்குக் கொள்கையை அமல் நடத்தக் கூடாதென அவர்களுக்கு நான் சொல்ல வேண்டுமென அக்கடி தத்தில் எழுதியிருக்கிறார்கள்.

ஆட்சேபணை மதுவிலக்குக்கா, அல்லது புதிய வரிக்கா என் பது தெளிவாயில்லை. பார்ஸிகளுக்கும், எனக்குமிடையே உள்ள நெருங்கிய தொடர்புகளை இந்தியா பூராவுமே அறியும். உலகத் திலேயே மிகுந்த பரோபகார சிந்தனையுள்ள இந்த வகுப்பினர், பரோபகாரத்தையே அடிப்படையாகக் கொண்ட ஓர் இயக்கத் திற்கு விரோதமாக இருப்பது எனக்கு வேதனையளிக்கிறது. பார்ஸிப் பெண்கள்கூட இதில் சேர்ந்திருக்கிறார்கள் என்பதைப் பார்க்கும்போது, இந்த வேதனை இன்னும் அதிகமாகிறது. அந்தக் கூட்டத்தில் முறையற்ற பயமுறுத்தல் உபயோகிக்கப் பட்டது. சிறுபான்மையினரின் உரிமைகளைப்பற்றியும் பேசி

யிருக்கிறார்கள். அந்தக் கூட்டத்தில் காட்டப்பட்ட உஷ்ணத்திற்கெல்லாம், தாற்காலிகமான உணர்ச்சியே காரணம் என்றும்,பார்ஸிகளின் இயற்கையான பரோபகார குணம் முடிவில் மேலோங்கி நிற்கும் என்றும் தான் நான் நம்ப முடியும். மதுவிலக்குக் கொள்கையினால் முதன் முதலில் பயனடைந்தவர்கள் பார்ஸிகளே என்பதை எடுத்துக்காட்ட விரும்புகிறேன். குடிப்பழக்கம் பார்ஸிகளுக்குக் கெடுதல் செய்யவில்லையென்றோ, இன்னமும் செய்து கொண்டிருக்கவில்லை என்றோ சொல்லுவது தவறாகும். பார்ஸி மது வியாபாரிகள் ஜீவனோபாயத்திற்கு வேறு துறைகளில் இறங்கினால், அதனால் லாபமடைபவர்கள் பார்ஸிகளே.

புளிக்க வைக்கப்படாத பதனீரை மதுவிலக்கு பாதிக்கவில்லை என்பதை ஆட்சேபணைக்காரர்களுக்கு ஞாபகப்படுத்துகிறேன். கரும்புச் சாற்றைப் போலவே பதனீரும் போஷாக்கு அளிக்கவல்லது; அதைவிட மலிவானது. ஆனால், மற்ற இனிப்புச் சாறுகளைவிட பதனீர் சீக்கிரத்தில் புளித்துவிடுகிறது. அதைத் தடுப்பதற்கு ஏதாவது வழி கண்டுபிடிக்கப்பட்டால், எந்தப் பார்ஸியும் தன்னுடைய பதனீரை இழக்கவேண்டியிராது.

மதம் தாக்கப்படுகிறது என்று ஆட்சேபணையாளர்கள் கூறியிருப்பது உண்மைக்கு மாறானதாகும். மதுவிலக்கு விதிகளை நான் கவனமாகப் பரிசீலனை செய்தேன். உண்மையான மதச் சடங்குகளுக்கு மது 'பர்மிட்' கொடுக்கலாம் என்று விதிகளில் அனுமதிக்கப்பட்டிருக்கிறது. வைத்திய காரணங்களுக்காகவும் அதை உபயோகிக்கலாம் என்று அனுமதிக்கப்பட்டிருக்கிறது. வரி விதிப்பு சம்பந்தப்பட்டவரையில், ஒன்றுமறியாத பாமர மக்களின் நலன்கள் என்ற உன்னதமான லட்சியத்திற்காக விதிக்கப்படும் வரிகளைப்பற்றி முணுமுணுப்பது பரோபகார சிந்தனையுள்ளவர்களுக்கு அழகல்ல. பார்ஸிகளிடையே உயர்ந்த உள்ளம் படைத்தவர்கள் நிறைய இருக்கிறார்கள். அவர்கள் முன்வந்து, உள்ளங்களையும், உடல்களையும் அழித்துக்கொண்டிருக்கும் ஒரு சாபக்கேட்டிலிருந்து தொழிலாளர்களை விடுவிக்கும் தன்மை வாய்ந்த இந்த மகத்தான இயக்கத்திற்கு உதவி புரிவார்களென்று நம்புகிறேன்.

புது டில்லி - 4—4—39 —'ஹரிஜன்' - 8—4—1939

## 50

# பார்ஸிகளும், மது வியாபாரமும்

பார்ஸிகள் தமது கோபத்தை விட்டொழித்து, காங்கிரஸின் மதுவிலக்குக் கொள்கையை நிதானமாகப் பரிசீலனை செய்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்? மதுக்கடைகளை ஏலம் போடுவ

தற்கோ, மது லைசென்ஸுகளை விற்பதற்கோ மறுக்கும் உரிமை அரசாங்கத்திற்கு இருக்கிறதென்பதில் சந்தேகமில்லை. தம்மிடமுள்ள சக்தி பூராவையும் உபயோகித்து அரசாங்கத்தின் இந்த உரிமையை எதிர்க்கத்தான் போகிறோம் என்று அவர்கள் முடிவு செய்து விட்டார்களென்றால், பின்னர் பேசுவதற்கு ஒன்றுமில்லை. இது ஒரு கொள்கைக்கு எதிராக இன்னொரு கொள்கையை வற்புறுத்துவதாகும். ஆனால், சமரசத்திற்கே இடமில்லையென்ற அத்தகைய நிலை எதையும் அவர்கள் எடுத்துக்கொண்டு விடவில்லை என்றே நம்புகிறேன். மரமேறிகள், லைசென்ஸ்தார்கள் சார்பில் வந்த தூது கோஷ்டியினர் அத்தகைய மனப்பான்மையைக் காட்டவில்லை.

கொள்கை ஒருபுறமிருக்கட்டும். மதுவிலக்கை அமல் நடத்தும் விதம் பற்றியே ஆட்சேபணைகள் எழுப்பப்படுகின்றன. முக்கியமாக அவை பின்வருமாறு:

(1) மதக்காரியங்களுக்காக ஒயின் உபயோகிக்கும் உரிமை.

(2) வைத்திய, அதாவது, உடல்நல காரணங்களுக்காக மதுவை உபயோகிக்கும் உரிமை.

(3) சாதீய வேற்றுமை.

(4) வேலையற்றுப் போகும் மரமேறிகள், கண்டிராக்டர்கள், மதுக் கடைக்காரர்கள் முதலியவர்களுக்கு நஷ்ட ஈடு.

(5) சொத்து வரி காரணமாக தரும சொத்துக்களுக்கு ஏற்படக்கூடிய விளைவுகள்.

இவை யாவும் தெளிவாகப் பதிலளிக்கப்படவேண்டிய சரியான கேள்விகள். மதுவிலக்குக் கொள்கையை அமல் நடத்தும் விஷயத்தில் எழுப்பப்படும் நியாயமான எல்லா ஆட்சேபணைகளையும் அகற்ற மந்திரிகள் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

மதக் காரியங்களுக்காக அல்லது வைத்திய காரணங்களுக்காக மதுவை உபயோகிக்கும் உரிமையை டாக்டர் கில்டர் எப்போதுமே ஒப்புக்கொண்டிருக்கிறார்.

சட்டப்படி சாதீயப் பாகுபாடு எதுவும் இராதென்று அறிகிறேன். சட்டத்தை நிர்வகிக்கும்போது அப்படி இருப்பது போல் தோன்றலாம். யாருக்கும், ஐரோப்பியர்களுக்கும்கூட கேட்ட மாத்திரத்தில் அனுமதிச்சீட்டு கிடைத்துவிடாது. சட்டத்தை ஏமாற்றாமலிருக்க வேண்டுமென்பதற்காகவே இது. ஒவ்வொரு மனுவும் தனித்தனியாகப் பரிசீலனை செய்யப்படும். ஐரோப்பியர்கள்கூட நாட்டின் மதுக்கொள்கைக்கு மரியாதை கொடுக்க வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுவார்கள். முடிந்தால், அனுமதிச் சீட்டு கோராமலிருக்க வேண்டுமென்றும் எதிர்பார்க்கப்படுவார்கள். கள்ளுக்கடைகளை மூடுவதற்கு பம்பாய் ஆர்ச் பிஷப் எழுப்பிய ஆட்சேபணைகள் திருப்திகரமாயில்லை.

இருந்தாலும், தாம் தம் கீழுள்ள மற்றும் பலரும் சொந்த உபயோகத்திற்காக அனுமதிச் சீட்டு கேட்கப்போவதில்லை என்று அறிவித்திருக்கிறார். பிராடஸ்டென்ட் பிரிவைச் சேர்ந்த பல பாதிரிமார்களும் இம்மாதிரியே தன்னல மறுப்பு காட்டியிருக்கிறார்கள் என்று அறிகிறேன். ஐரோப்பிய பாதிரிமார்களின் பாராட்டத்தக்க உதாரணத்தை சாதாரண ஐரோப்பியர்களில் பலர் பின்பற்றினாலும், நான் ஆச்சரியப்பட மாட்டேன். ஆயினும், இந்தச் சட்டத்தை அமல் நடத்தும்போது, பல நூற்றாண்டுகளாக இந்தியாவைத் தாயகமாகக் கொண்டுள்ள பார்ஸிகளைவிட ஐரோப்பியர்களுக்குச் சற்று அதிக சலுகைகள் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், உண்மையான ஒவ்வொரு மனுவும் அனுதாபத்துடன் பரிசீலனை செய்யப்படும் என்பதில் எனக்குக் கொஞ்சமும் சந்தேகம் கிடையாது. இது தொழிலாளர்களின் சமூக, பொருளாதார நலன்களுக்கு ஏற்றதாய் இருக்கிறது என்பதை முன்னிட்டு, பார்ஸிகளும் பொதுவாக மற்ற எல்லோரையும் பின்பற்றி நடக்கக்கூடாதா? காலம் இருக்கும்போதே, குடியின் தீமையைத் தடுக்கவேண்டிய அவசியம் விஷய அறிவுள்ள பார்ஸிகளுக்கு நிச்சயமாகத் தெரிந்திருக்க வேண்டும்.

சம்பந்தப்பட்டவர்களின் மனப்பூர்வமான ஒத்துழைப்பில்லாமல், மேற்கண்ட 4, 5 ஆட்சேபணைகளைத் திருப்திகரமாகத் தீர்க்கவே முடியாது. தருமங்கள் சம்பந்தப்பட்டவரையில் தகுந்த புள்ளி விவரங்களுடன் தமது கட்சியை எடுத்துச் சொல்ல வேண்டியது தருமகர்த்தாக்களின் கடமையாகும். கொஞ்சம் கஷ்டம் இருக்கத்தான் செய்யும். எந்த வரியுமே கஷ்டம்தான்; பம்பாய் நகரத்திலிருந்து இந்த வரியின் மூலம் சுமார் ஒரு கோடி ரூபாய் கிடைக்குமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. இது பலரிடையே பரவியிருப்பதால், எந்த ஒரு தனி நபரையோ அல்லது ஸ்தாபனத்தையோ தாங்கமுடியாத அளவுக்குப் பாதித்து விடாது. ஆனால், அப்படி இல்லையென்று சொல்லுபவர்கள்தான் தம் கட்சியை ருசுப்பிக்க வேண்டும்.

மது வியாபாரிகள் முழு விவரங்களுடன் தம் கட்சியை எடுத்துச் சொல்லவேண்டும். அப்போதுதான் அரசாங்கம் அதைக் கவனிக்க முடியும். ஒயின் கையிருப்பு வைத்திருப்பவர்களில் பெரும்பாலோர் அரசாங்கம் கேட்ட தகவல்களைக்கூடக் கொடுக்கவில்லை என்று அறிகிறேன். அவர்களுக்கு அரசாங்கம் உதவி செய்வதற்கு அவர்களே உதவி செய்ய மறுத்தால், அவர்கள் விஷயத்தில் அரசாங்கம் என்ன செய்யமுடியும்? தவிர்க்கக்கூடிய ஒவ்வொரு கஷ்டத்தையும் நிவர்த்திக்க வேண்டும் என்று அரசாங்கம் முழு முயற்சி செய்துகொண்டிருக்கிறார்கள் என்பதை நான் அறிவேன். 'தவிர்க்கக்கூடிய' என்ற சொல்லை காரணத்துடன்தான் நான் உபயோகிக்கிறேன். டாஜ் மகால் ஹோட்டல் நிச்சயமாகப் பாதிக்கப்படும். மதுக்கடைக்காரர்கள் பாதிக்கப்படுவார்களே என்று சொல்லுவதைப் போன்

றதுதான் அது. டாஜ்மகால் ஹோட்டல்காரர் மிகப் பெரிய மது வியாபாரி. டாடா குடும்பத்தினர் தருமத்திற்குப் பெயர் போனவர்கள். அவர்களுடைய பல தருமங்களைக் காப்பாற்றுவதற்கு வேறு வழிகளைக் கண்டுபிடிப்பதற்கு வேண்டிய சாமர்த்தியம் அவர்களுக்கு உண்டு. மது வியாபாரத்திலிருந்து கிடைக்கும் ஆட்சேபகரமான வருமானம் அகற்றப்பட்டுவிட்டால், அந்த தருமங்களே இன்னும் நன்றாகச் செழிக்கும் என்று நான் சொல்லுவேன்.

பம்பாய் – 4—7—39 —'ஹரிஜன்' - 8—7—1939

பகுதி இரண்டு

# அபினியால் விளையும் தீங்கு

## 1

## அரசாங்கத்தின் அபினிக் கொள்கை

இந்திய அரசாங்கத்தின் அபினிக் கொள்கையைப்பற்றி 'எங் இந்தியா' பத்திரிகையில் தான் எழுதியுள்ளவைகளிலிருந்து ஸ்ரீ. ஸி. எப். ஆண்டுரூஸ் ஒரு பகுதியை என்னிடம் காட்டினர்.* 1923 மே மாதத்தில், ஜெனிவாவில் நடந்த மகாநாட்டிற்கு அரசாங்கப் பிரதிநிதியாகப் போயிருந்த ஸ்ரீ காம்ப்பெல் கூறியதை ஆண்டுரூஸ் அந்தப் பகுதியில் எடுத்துக்காட்டியிருக்கிருர். "ஆரம்பம் முதலே அபினி விஷயத்தில் இந்தியா மிகுந்த நாணயத்துடனேயே நடந்து வந்திருக்கிறது. ஸ்ரீ காந்தி உள்பட, அரசாங்கத்தின் அதிகத் தீவிரமான எதிரிகள்கூட, அதைப்பற்றிக் குறை சொன்னது கிடையாது" என்று ஸ்ரீ காம்பெல் அங்கே பேசினராம். ஸ்ரீ ஆண்டுரூஸ் என்னிடம் காட்டிய கட்டுரை, நான் எராவ்டா சிறையில் கைதியாக இருந்த காலத்தில் எழுதப்பட்டதாகும். அபினி விஷயத்தில் என்னுடைய அபிப்பிராயம் தெரியுமாகையால், ஸ்ரீ காம்ப்பெல் என்மீது சுமத்திய குற்றச்சாட்டை மறுப்பதற்குத் தாம் தயங்கவில்லை என்று ஸ்ரீ ஆண்டுரூஸ் கூறுகிருர். ஆயினும், இது மிகவும் முக்கியமான விஷயமாகையால், இந்திய அரசாங்கத்தின் அபினிக் கொள்கையைப்பற்றி என்னுடைய நிலை என்ன என்பதைத் தெளிவாக்கவேண்டுமென்று அவர் விரும்புகிருர். அந்த வேலையை மகிழ்ச்சியுடன் செய்கிறேன்.

அபினிப் பிரச்னையை மேலெழுந்தவாரியாகத்தான் நான் பரிசீலனை செய்திருக்கிறேன் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனல், 1921-ல் உற்சாகத்துடனும், தீவிரத்துடனும் செய்யப்பட்ட மது ஒழிப்புப் பிரசாரம், குடியை மட்டும் எதிர்த்துச் செய்யப்பட்ட இயக்கமல்ல. போதை தரும் எல்லாப் பொருளுக்கும் எதிரான இயக்கம்தான் அது. அபினியைக் குறிப்பிட்டுச் சொல்லவில்லை என்பதும், அபினிக்கடைகள்

* ஸ்ரீ ஆண்டுரூஸின் கட்டுரையைப் பின் சேர்க்கைப் பகுதியில் காண்க.

மறியல் செய்யப்படவில்லை என்பதும் உண்மையே. அஸ்ஸாமில் மட்டும்தான் மறியல் செய்யப்பட்டது. ஆனால், குடி எதிர்ப்பு இயக்கத்தைப் பற்றிக் கொஞ்சமாவது தெரிந்தவர்களுக்கு, தேநீர் உள்பட எல்லாவிதமான போதைப் பொருள்களுக்கும் எதிராகத் தொடர்ந்து இயக்கம் நடத்தப்பட்டது என்பது தெரியும். நான் அஸ்ஸாமில் சுற்றுப் பிரயாணம் செய்துகொண்டிருந்தபோது, இந்த இயக்கம் அஸ்ஸாமியர்களுக்கு ஒரு வரப் பிரசாதம் போன்றது என்று அஸ்ஸாம் ஒத்துழையாமை இயக்கத் தலைவரான ஸ்ரீ பூக்கன் என்னிடம் சொன்னார். ஏனெனில், இந்தியாவின் மற்றெந்தப் பாகத்தையும்விட, அபினியைப் பல வழிகளிலும் உபயோகிப்பவர்கள் அஸ்ஸாமில் ஏராளமாக இருந்தார்கள். இந்த இயக்கம் நல்ல பலனளித்தது என்றும், இனி அபினியைத் தொடுவதில்லையென்று ஆயிரக்கணக்கானவர்கள் சத்தியம் செய்திருக்கிறார்கள் என்றும் ஸ்ரீ பூக்கன் சொன்னார். அரசாங்கத்தின் மதுக் கொள்கையை நான் அடிக்கடி கடுமையாகக் கண்டித்திருக்கிறேன். போதையளிக்கும் எல்லாப் பொருள்களும் அதில் சேர்ந்ததுதான் என்றே நான் நினைக்கிறேன். அபினி, கஞ்சா முதலியவைகளைப் பற்றித் தனியாகக் கண்டனம் தெரிவிக்க வேண்டியது அவசியமில்லை என்றும் நினைத்தேன். வெளியிலிருந்து வரும் ஆக்கிரமிப்புகளைத் தடுப்பதற்காக அல்லாமல், பிரிட்டனின் நன்மைக்காக இந்தியா சுரண்டப்படுவதற் கெதிரான அதிருப்தியை அடக்குவதற்காக வைக்கப்பட்டிருக்கும் ராணுவத்திற்காக, அழிந்து வரும் அளவுக்குச் செலவு ஏறிக்கொண்டே போகாமலிருந்தால், ஒழுக்கக் கேடான இனங்களிலிருந்து வருமானம் திரட்ட வேண்டிய அவசியமே இராது. அபினிக் கொள்கையில் இந்தியா (இந்திய அரசாங்கம்) முற்றிலும் நாணயத்துடன் நடந்துவந்திருக்கிறது என்று சொல்லும் ஸ்ரீ காம்ப்பெல், வருமானத்தை முன்னிட்டு, ஆயுத பலத்தைக் கொண்டு, அபினி சீனாமீது சுமத்தப்பட்டது என்பதை மறந்துவிட்டார் போலும்!

—'எங் இந்தியா' - 20—3—1924

## 2

# அபினியை எதிர்த்து யுத்தம்

தன்னுடைய உன்னதமான வேலைக்கு வெண் சிலுவை இந்தியாவின் ஒத்துழைப்பை நம்பலாம். இந்திய அரசாங்கத்தின் அபினிக் கொள்கையை வன்மையாகக் கண்டித்து சமீபத்தில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி ஒரு தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது. நாட்டிலுள்ள ஒவ்வொரு அபினிச் செடியையும் பிடுங்கி எறிந்து விட்டால்கூட யாரும் ஆட்சேபிக்கப் போவதில்லை. போதையளிக்கும் பொருள்களின் மூலம்

கிடைக்கும் வருமானம் பூராவும் நின்று, வைத்திய காரணங்களுக்காக மருந்துக் கடைகளில் விற்பதைத் தவிர வேறு யாரும் மது வாங்கக் கூடாதென்றும், கண்டிப்பாகத் தடுக்கப்பட்டுவிட்டால் மக்கள் மகிழ்ச்சியடைவார்கள்.

ஆனால், மக்களுக்குப் பிரதிநிதித்துவம் வகிக்காத ர் அரசாங்கம் இன்று இந்தியாவின் அபிப்பிராயத்திற்குப் பிரதிநிதியாய் இருக்கிறது. இது நமக்கும் உலகத்திற்குமே துரதிருஷ்டமாகும். ஆகையால் வரப்போகும் மகாநாட்டிற்கு வருபவர்கள் இந்திய மக்களின் பிரதிநிதிகளல்ல; இந்தியா மீதுள்ள அந்நிய ஆட்சியின் பிரதிநிதிகள் வந்திருப்பார்கள். மனித வர்க்கத்தின் நலனைவிட, தம்முடைய வருமானத்தையே அவர்கள் முக்கியமாகக் கருதுவார்கள். உண்மையாக மக்களுக்குப் பிரதிநிதித்துவம் வகிக்கும் ஸ்ரீ ஆண்டுரூஸ் போன்ற உத்தியோகப் பற்றற்ற பிரதிநிதியொருவரை அனுப்புவதால், ஏதாவது பிரயோசனம் ஏற்படுமா என்பதை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிதான் கவனிக்கவேண்டும்.

மனிதாபிமானமுள்ள போராட்டத்தின் இறுதி லட்சியம் என்ன என்பதைப் பார்ப்போம். உலகத்தில் உற்பத்தி செய்யப்படும் அபினி, அதனுடைய வைத்தியத் தேவைகளைவிட மிகவும் அதிகமாக இருக்கிறது என்றும், இப்படியிருக்கும் வரையில், என்னதான் முயற்சி செய்தாலும், தார்மிக விரோதமானதும், உள்ளத்தை அழிப்பதுமான இந்த வியாபாரம் நடந்துகொண்டு தானிருக்கும் என்றும், அசைக்கமுடியாத புள்ளி விவரங்களுடன் ஸ்ரீமதி லா மாட்டே ருசுப்பித்திருக்கிறார். இந்த விஷயத்தில் இந்திய அரசாங்கம் மிகப் பெரிய குற்றவாளி என்பதையும் காட்டியிருக்கிறார். நஷ்டத்தைப் பொருட்படுத்தாமல், தன்னுடைய எல்லையிலுள்ள பிரதேசங்களில் அபினிச் செடிகளை வளர்ப்பதை அதிகமாகக் குறைக்கவேண்டும். உலகத்திலுள்ள சிறந்த மனிதர்கள் இதைத்தான் விரும்புகிறார்கள். இந்த விருப்பத்தை இந்திய அரசாங்கம் யோக்கியப் பொறுப்புடன் நிறைவேற்றும்வரையில், இந்த லட்சியத்தை அடைய முடியாது. இந்திய அரசாங்கமே இதற்கு முட்டுக்கட்டையாய் இருக்கிறது. மீண்டும் இது அப்படித்தான் செய்யுமென்றும் அஞ்சப்படுகிறது. இந்தியா விரும்புகிறது என்பதால் அல்ல, இந்தியா நிர்க்கதியாய் இருக்கிறது என்பதனால்தான் அரசாங்கத்தினர் இப்படிச் செய்கிறார்கள்.

—'எங் இந்தியா' - 24—7—1924

## 3

# அஸ்ஸாமில் அபினி

அஸ்ஸாம் மாகாண காங்கிரஸ் கமிட்டியினல் நியமிக்கப் பட்ட அபினி விசாரணைக் கமிட்டி தனது வேலையை ஆரம்பித்து விட்டது. சிவஸாகரில் பல சாட்சிகளும் விசாரிக்கப்பட்டு விட்டார்கள். சாட்சிய மளித்தவர்களில் பலர் அந்த ஜில்லாப் பிரமுகர்கள். பல கட்சிகளையும் சேர்ந்தவர்கள். அபினியை அடியோடு தடுக்கவேண்டுமென்று அவர்கள் ஏகமனதாய் அபிப்பிராயம் தெரிவித்தார்கள். ''கலாஸார் அல்லது மலேரியா ஜுரத்தைத் தடுக்கும் சக்தி அபினிக்கு இருக்கிறது என்று சொல்லுவது அநியாயம்'' என்று அனுபவம் மிக்க சாட்சி யொருவர் கூறினர். சிவஸாகரிலுள்ள அங்கேரா கோவா என்ற கிராமத்தில் அபினி தின்பவர்களிடையேதான் சாவு மிகவும் அதிகமாயிருக்கிறது என்றும் அவர் சொன்னர். ''அபினி தின்னக்கூடாது அல்லது புகைக்கக் கூடாது என்று மக்களைக் கேட்டுக்கொண்ட குற்றத்திற்காக'' குடி எதிர்ப்பு ஊழியர்கள் தொந்தரவு செய்யப்பட்டு, அவர்கள் மீது வழக்குத் தொடரப்பட்டதென்ற சுவாரஸ்யமான தகவல்களை வேறு சில சாட்சிகள் கொடுத்தார்கள். பொதுவாக, அபிப்பிராயங்கள் தெரிவிக்கப்படுவதை வைத்துக்கொண்டு கமிட்டி திருப்தி யடைந்துவிடாது என்றும், அபினிச் செடிகள், அபினிக் கடைகள், அபினி மரங்கள் முதலியவற்றைப் பற்றிய விவரங்களையும் கமிட்டி சேகரிக்கும் என்றும் நம்புகிறேன். அஸ்ஸாமில் மக்களை அபினி எப்படி பாதிக்கிறது என்பது பற்றி, வைத்தியர்களுடைய அபிப் பிராயங்களையும் சேகரிக்கவேண்டும். அபினியை அடியோடு தடை செய்துவிட்டால் ஏற்படக்கூடிய விளைவுகள் என்னவா யிருக்கலாம் என்பதற்கும் சாட்சியம் வேண்டும். இந்தக் கமிட்டியின் அறிக்கை உபயோகமானதா யிருக்க வேண்டுமானல் அது தகவல்கள் நிறைந்த சுரங்கமாக இருக்கவேண்டும்.

—'எங் இந்தியா' – 24—7—1924

## 4

# போதைப் பொருள்கள், குடி, சைத்தான்

போதைப் பொருள்களும், குடியும் சைத்தானின் இரு கைகளாகும். கதியற்ற அடிமைகளைப் போதையி லாழ்த்தி, மதியிழக்கச் செய்வதற்கு, இந்தக் கரங்களைத்தான் சைத்தான்

உபயோகித்துக் கொள்ளுகிறுன். ஜெனிவாவில் நடந்த இரண்டு அபினி மகாநாடுகளைப் பற்றி 'ஸர்வே' என்ற பத்திரிகையில் விளக்கமான கட்டுரை ஒன்று பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. போதைப் பொருள்களுக்குள் முக்கியமான அபினி, அங்கே 'வெற்றி' பெற்றதென்று அந்தக் கட்டுரையில் கூறப்பட்டிருக்கிறது. "முன்னேற்றங்கள், எதிர் முன்னேற்றங்கள், வாளை உருவுதல், மீண்டும் உறையில் போடுதல், தோல்விகள், பிரமாதமான வெற்றிகள் என்பதைப் பற்றிய வதந்திகள் ஆகியவைகளுக்கிடையே அபினி, மற்றும் இதர போதைப் பொருள்களின் வியாபாரத்திற்கு ஒரு புத்துயிர் கிடைத்திருக்கிறது." பற்பல நாடுகள் பற்பல விதமான அறிக்கைகளைச் சமர்ப்பித்தன. இந்தக் குழப்பத்தின் மத்தியில் என்ன நடந்தது என்பதைப் பற்றி அந்தக் கட்டுரையை எழுதியவர் பின்வருமாறு கூறுகிறுர்: "தமக்கு என்ன வேண்டும், என்ன வேண்டாம் என்பதை நன்ருக அறிந்தவர்களும், தமக்குக் கிடைத்ததைக் கொண்டு திருப்தியடைந்தவர்களும், ஏதாவது ஒரு வழியில் போதைப் பொருள்களின் வியாபாரத்தினுல் லாபம்பெற்றவர்கள்தான். முக்கியமாக, உலக யுத்தத்தின்போது, இந்த இயக்கம் கேட்பவரற்றுக் கிடந்தது. இந்த ஐந்து வருடக் கொந்தளிப்பில், போதைப் பொருள்களுக் கெதிரான சர்வதேச இயக்கம் அல்லது நடவடிக்கை சம்பந்தப்பட்ட வரையில் ஒன்றுமே நடக்கவில்லை என்று சொல்லலாம். பார்க்கப்போனுல், யுத்தமே இந்தத் தீமையை இன்னும் தீவிரமாக்கிவிட்டது. ராணுவத்தில் உடல் வேதனைக்கு மாற்ருக, கொக்கேய்னும், மார்பைனும் பரவலாக உபயோகிக்கப்பட்டன. பயங்கரமான காயங்கள், கவலைகள், வெறுப்புகள், யுத்தத்தின் அலுப்புகள் ஆகிய உணர்ச்சிகளிலிருந்து ஓர் அளவுக்கு விடுதலை பெறவும் இந்தப் பொருள்கள் உபயோகிக்கப்பட்டன. இதனுல் யுத்தத்தின் முடிவில் பல நாடுகளில் இந்தப் பழக்கத்திலிருந்து மாற முடியாத பலர் உலாவ ஆரம்பித்து விட்டனர். தம்முடைய பழக்கத்தை இவர்கள் மற்றவர்களிடமும் பரப்ப முடிந்தது. இந்தத் தீமைக்கு ஆளாகியவர்கள், புதிதாக இதற்கு ஆள் சேர்க்கவேண்டும் என்று ஆர்வம் காட்டுவது இதிலுள்ள கோரமான விளைவுகளில் ஒன்ருகும்."

சென்ற யுத்தத்தின் பயங்கரமான விளைவுகளில் இதுவும் ஒன்ருகும். இது லட்சக்கணக்கான உயிர்களை அழித்திருக்கிறதென்ருல், உள்ளத்தை அழிப்பதையும் துரிதப்படுத்தி யிருக்கிறது. ஆனுல், ஹேக் மகாநாட்டில் சர்வதேச ஒப்பந்தம் ஏற்பட்ட 13 வருடங்களில், "இந்தப் பிரச்னையின் தன்மை பெரிதும் மாறிவிட்டது" என்று மேற்கூறிய கட்டுரையை எழுதிய ஸ்ரீ காவிட் எடுத்துக்காட்டியிருக்கிறுர். ஐரோப்பியக் கண்ணேட்டத்துடன்தான் ஸ்ரீ காவிட் அபிப்பிராயம் தெரிவிக்க முடியும். ஆகையால், அவர் கூறுகிறுர்: "இந்தத் தீமை இப்பொழுது தூரக்கிழக்கை மட்டும் பற்றிய பிரச்னையல்ல. அபினியைப்

ச—47

பச்சையாகவும், கலவையாகவும், இந்தியா, சீன மற்றும் கிழக்கத்திய பிரதேசங்களின் சம்பிரதாயமான முறைகளின்படி இதைத் தின்பதோ, புகைப்பதோ தூரக்கிழக்குப் பிரச்னையாக மட்டும் இப்போது இல்லை. ஏராளமான பொருட் செலவில், விஞ்ஞான ரீதியில் ஸ்தாபிக்கப்பட்டுள்ள ரசாயன சாலைகளில், இன்னும் அதிக சக்தியும், அபாயமும் உள்ள போதைப் பொருள்களாக இவை இப்போது தயாரிக்கப்படுகின்றன. 'நாகரிக' நாடுகள் என்று சொல்லிக்கொள்ளுபவைகளே இந்த உற்பத்தியில் ஈடுபட்டிருக்கின்றன. முன் காலத்தில் தூரக் கிழக்கின் அபினியும், அபினிப் பழக்கங்களும் கொஞ்சம் கொஞ்சமாக மேற்கத்தி நாடுகளுக்குள் புகுந்துகொண்டிருந்தன. ஆனால், இப்போது நிலைமை தலைகீழாய்விட்டது. அத்துடன் மட்டுமில்லை. இந்தப் பொருள்கள் யாவுமே அபாயகரமானவை. இவை உற்பத்தி செய்யப்படும் நாடுகளில் மட்டுமின்றி, எல்லையைத் தாண்டி பக்கத்து நாடுகளுக்கும் பரவிக் கொண்டிருக்கின்றன... இது மனித வர்க்கம் பூராவுக்குமே ஏற்பட்டுள்ள ஒரு பயமுறுத்தலாகும். இந்தச் சைத்தானுக்குக் கிடைக்கும் அடிமையின் தோல் கறுப்பாயிருந்தாலும், மஞ்சளாயிருந்தாலும், ஒன்றுதான்...அவனுடைய ராஜ்யத்தில் சூரியன் அஸ்தமிப்பதேயில்லை!'

பிறகு, இந்தத் தீமையின் கருப் பகுதியைப் பற்றி இவர் குறிப்பிடுகிறார். அதாவது, வைத்தியம், விஞ்ஞானம் ஆகியவற்றிற்கு நியாயமாக எவ்வளவு தேவையோ அதற்கு மிகவும் அதிகமாக உற்பத்தி செய்யப்படுகிறது. சராசரி ஒருவருக்கு இந்தத் தேவை பின்வருமாறு :

பச்சை அபினி, 450 மில்லிகிராம் (சுமார் 7 குந்துமணி எடை)

கொக்கேய்ன், 7 மில்லிகிராம் (சுமார் ·11 குந்துமணி எடை)

உலகத்தின் ஜனத்தொகை சுமார் 1,74,70,00,000 என்று கருதப்படுகிறது. இதில் மேல் நாட்டு வைத்திய முறைகளால் பயன்பெறக் கூடியவர்கள் சுமார் 74,40,00,000. இவர்களுடைய மொத்தத் தேவை பின்வருமாறு :

| | | |
|---|---|---|
| வைத்தியத் தேவை அபினி | —— | 100 டன் |
| மார்பைன் | —— | 136 டன் |
| கோடீன் | —— | 84 டன் |
| ஹெராயின் | —— | 15 டன் |
| மொத்த உலகத் தேவை | | 335 டன் |

இந்தக் கணக்குப்படி கொக்கேய்னின் தேவை 12 டன்களுக்குச் சற்று அதிகமாயிருக்கும். ஆனால், மொத்தத்தில் குறைந்த பட்சம் 8600 டன்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. கொக்

கேய்ன் பற்றிய கணக்கு விவரங்கள் கிடைக்கவில்லை. ஆனால், அது 100 டன்களுக்குக் குறைந்ததில்லை. ஆகையால், மிகவும் தாராளமாகக் கணக்குப் போட்டுப் பார்த்தாலும் உலகத்திற்கு எவ்வளவு தேவையாயிருக்குமோ அதைவிடப் பத்து மடங்கு அதிகமாக உற்பத்தி செய்யப்படுகிறது.''

அமெரிக்கா, பிரிட்டன் உள்பட எந்தப் பெரிய வல்லரசுமே இந்தப் பிரச்னையை உண்மையாகக் கவனிக்கவில்லைஎன்பதையும் அவர் எடுத்துக் காட்டியிருக்கிறார். ஹேக் ஒப்பந்தத்தின் 9-வது ஷரத்தின் கீழ் அவர்கள் கொடுத்த வாக்குறுதிகளை மீறி யிருப்பதாகவும் குற்றம் சாட்டுகிறார். ''வைத்திய, விஞ்ஞானத் தேவைகளுக்கு எவ்வளவு வேண்டுமோ அந்த அளவுக்கே இந்தப் பொருள்களின் உற்பத்தியைக் கட்டுப்படுத்துவதாக'' இந்த ஷரத்தின் கீழ் அவர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். பச்சை அபினி, கலவை அபினி, அளவுக்குமீறி உற்பத்தி செய்யப் படுவதைத் தடுப்பதற்கு நாகரிகமடைந்த இந்த நாடுகள் தவறியதோடு மட்டுமில்லாமல், லைஸென்ஸுக்கும், பரிசீலனைக்கும் உட்பட்டவைகளும், மனம் மட்டுமிருந்தால் கட்டுப்படுத்துவது மிகவும் சுலபமுமான பெரிய ரசாயன சாலைகளில் இந்த அபாய கரமான பொருள்கள் உற்பத்தி செய்யப்படுவதைக் கட்டுப் படுத்தவும் தவறிவிட்டது பற்றி வருந்துகிறார்.

காங்கிரஸின் வேண்டுகோளுக்கிணங்க, ஸ்ரீ ஆண்டுரூஸினால் தயாரிக்கப்பட்ட அஸ்ஸாம் அபினி அறிக்கையை வாசித்தவர் களுக்கு, அபினிப் பழக்கத்தினால் எவ்வளவு தீமை ஏற்பட்டிருக் கிறது என்பது நன்றாகத் தெரியும். வளர்ந்து வரும் இந்தத் தீமையைத் தடுப்பதற்கு அரசாங்கம் தவறியதையும், அத்துடன், இதை ஒழிக்க முயற்சி செய்த சீர்திருத்தக்காரர்களுக்குத் தடை கள் விதித்ததையும் வாசகர்கள் அறிவார்கள். ஆகையால், தேசீய வாரத்தின்போது பொதுக் கூட்டங்களில் பேசியவர்களில் பலர், போதைப் பொருள்களை அடியோடு தடை செய்ய வேண்டு மென்று வற்புறுத்தியது மனதிற்கு ஆறுதலாயிருந்தது. இது, வெகுகாலத்திற்கு முன்பே செய்திருக்க வேண்டிய சீர்திருத்த மாகும். சட்டசபைப் பிரவேசத்தில் ஏதாவது பிரயோசனம் இருக்கிறதென்றால், தேர்தல் பிரசாரத்தில் இந்தத் தடை முக்கிய அம்சமாக வற்புறுத்தப்பட வேண்டும். ஒவ்வொரு மெம்பரும் இதை ஆதரிப்பது மட்டும் போதாது. முழுத் தடை இயக்கத்தைத் தானே ஆரம்பித்து நடத்தப் பிரதிக்ஞை எடுத் துக் கொள்ளவேண்டும். பூரண மதுவிலக்கை அமலாக்க வேண்டு மானால், மதுவின் மூலம் எவ்வளவு வருமானம் கிடைக்கிறதோ அந்த அளவுக்கு ராணுவச் செலவைக் குறைப்பது ஒன்றுதான் வழி. சர்வஜன வாக்கெடுப்பு நடத்துவதாகச் சொல்லி இந்தச் சீர்திருத்தத்தைத் தாமதித்துக் கொண்டும் இருக்கக் கூடாது. இந்தியாவில் சர்வஜன வாக்கெடுப்புக்கு அவசியம் இருக்க முடி

யாது. ஏனெனில், குடியும், போதை வஸ்துக்களும் தீய பழக்கங்கள் என்று இங்கே எல்லோராலும் ஒப்புக்கொள்ளப் படுகின்றன.

—'எங் இந்தியா' – 22—4—1926

# 5

# அபினியின் அடிமைகள்

ஒருவர் பின்வருமாறு எழுதியிருக்கிருர் :

"ராஜபுதனத்தில் (மார்வாட்) உள்ளவர்கள் மோசமான அபினிப் பழக்கமுள்ளவர்கள் என்பது உங்களுக்குத் தெரியுமோ, என்னவோ. ஒரு கல்யாணமோ, சாவோ அல்லது வேறு ஏதாவது ஒரு விசேஷமோ நடந்தால், அதற்கு வருபவர்களுக்கு அபினி கொடுக்க வேண்டும் என்பது ஒரு பழக்கம். சாமான்களை அடகு வைத்தோ, சொத்தை அடமானம் வைத்தோ, எப்படியாவது அபினி கொடுத்தாக வேண்டும். ஒருவர் ஒரு நாளைக்கு ஒன்றரை அல்லது இரண்டு தோலா அபினி சாப்பிடுவது மிகவும் சாதாரண விஷயம். சில சமயங்களில் இன்னும் அதிகமாகவும் சாப்பிடலாம். ஐந்து தோலா சாப்பிடுகிறவர்களையும் எனக்குத் தெரியும். என்னுடைய தகப்பனர் இறந்த போது நான் ஊருக்குப் போயிருந்தேன். துக்கம் கேட்பதற்காக ஒரு பிராம்மண நண்பர் வந்திருந்தார். அவருக்கு முதலில் அபினி கொடுக்க வேண்டும். இந்த அபினி தனியாக ஒரு பெட்டியில் வைக்கப்பட்டிருக்கும். அதில் மூன்று தோலா அபினி இருந்தது. தானே வேண்டியதை எடுத்துக் கொள்ளுவதாக அந்த பிராம்மண நண்பர் கூறினர். பெட்டியில் இருந்த அவ்வளவு அபினியையும் அவர் தன் உள்ளங்கையில் கொட்டிக்கொண்டு, அப்படியே விழுங்கிவிட்டதைப் பார்த்தபோது எனக்கு ஆச்சரியமாயிருந்தது. அதை விழுங்கிய பிறகும் தனக்குப் போதவில்லை என்ருர். உங்களுக்கு எவ்வளவு இருந்தால் போதுமானதாக இருக்குமென்று கேட்டேன். நாலு தோலா வேண்டுமென்று அவர் பதில் சொன்னர். அபினி சாப்பிடுகிறவர்களுக்கு வேண்டிய சமயத்தில் அது கிடைக்காவிட்டால், அவர்கள் வெறும் மாமிசப் பிண்டங்களைத் தவிர வேறில்லை. இந்த போதைப் பழக்கம் சமூகத்தில் புறையோடிக் கொண்டிருக்கிறது."

இந்தப் பழக்கத்திற்கு அடிமையானவர்களுக்காக தீனபந்து ஆண்டுரூஸும், பியர்ஸனும் பாடுபட்டார்கள். குடிப்பழக்கம் உள்ளவர்களிடம் நாம் காட்டிய அக்கறையில் பாதிகூட இவர்கள் விஷயத்தில் காட்டவில்லை. சமூகம் சம்பந்தப் பட்டவரையில், அபினியின் விளைவு குடியைப்போல் அப்படி வெளிப்படையாகத் தெரிவதில்லை. ஆனல், இரண்டும் ஒன்றைவிட ஒன்று குறைந்ததில்லை. அபினி அடிமைகளுக்கு மதி மழுங்கி விடுகிறது. தம்முடைய அபினியைத் தவிர வேறு எதிலும் அக்கறை இன்றி நடைப் பிணங்களாக அவர்கள் ஆகிவிடுகிருர்கள். இவர்கள்

விஷயத்தில் என்ன செய்வதென்பது மிகப் பெரிய பிரச்னையாகும். நன்கு பயிற்சியும், அனுபவமும் பெற்ற ஊழியர்கள் கணக்கில்லாமல் இருந்தாலொழிய, சமூகத்திலுள்ள இந்த துர்ப்பாக்கிய சாலிகளைத் திருத்த ஒன்றும் செய்ய முடியாது. வைத்தியத் துறையிலுள்ளவர்கள் இதைப் பற்றி ஆராய்ச்சிகள் செய்து, இந்த சமூக வியாதியைத் தீர்ப்பதற்குப் பரிகாரம் கண்டுபிடிப்பதன் மூலம் நல்ல உதவி செய்யலாம்.

—சேவா கிராமம் – 4—5 —1942 —'ஹரிஜன்' – 10—5—1942

பகுதி மூன்று

# குதிரைப் பந்தயம், சூதாட்டம்

## 1

## பந்தயத்தின் சாபம்

"குதிரைப்பந்தய மைதானங்களில் பந்தயம் கட்டுவதை நீங்கள் நிறுத்தி விட முடிந்தால் ஆயிரக்கணக்கான இந்தியர்களின், ஐரோப்பியர்களுடைய மனைவிமார்களின் நன்றிக்கும், வாழ்த்துக்கும் பாத்திரமாவீர்கள். குதிரைகள் மீது பந்தயம் கட்ட ஆரம்பிக்கும் வரையில் எனது கணவன் ஒரு லட்சியக் கணவனாக இருந்தார். இப்போது நாங்கள் கடன் பட்டுவிட்டோம். அவர் நல்ல சம்பளம் வாங்குகிறார். அவர் குடிப்பதில்லை. ஆயினும், எங்களுக்குக் கஷ்டமாகவே இருக்கிறது. மற்றும் பல மனைவிமார்களின் அனுபவமும் இப்படித்தான் இருக்குமென்று நினைக்கிறேன். குதிரைப் பந்தயத்திற்குப் போகவேண்டாமென்று பல சமயங்களில் அவரிடம் மண்டிபோட்டுக் கெஞ்சியிருக்கிறேன். ஆனால், ஒன்றும் பிரயோசனப்படவில்லை. கணவன்மார்கள் குதிரைப் பந்தயத்திற்குப் போய், பணத்தை இழக்காமலிக்க முடியவில்லை என்பதற்காக, மனைவிமார்களும் குழந்தைகளும் கஷ்டப்படவேண்டியிருப்பது நியாயமா?

"குடிப்பழக்கம் ஆயிரக்கணக்கானவர்களை அழிக்கிறதென்பது உண்மையே. ஆனால், குதிரைகளின்மீது பணம் கட்டுவது பல்லாயிரக்கணக்கானவர்களை அழித்துக்கொண்டிருக்கிறது.

"பொதுஜனங்களை அநேகமாக இப்படிக் கொள்ளையடிப்பதன் மூலம் குதிரைப் பந்தய கிளப் தம்முடைய ஐரோப்பிய சிப்பந்திகளுக்கு நல்ல சம்பளம் கொடுக்க முடிகிறது. உங்களுக்கு மட்டும் விஷயம் தெரிந்தால், குதிரைப் பந்தய கிளப், பல சூதுவாதுகளைச் செய்கிறதென்றும், அதனால் பொது ஜனங்கள் ஏமாற்றப்பட்டு, ஏராளமான பணத்தைப் பறிகொடுக்கிறார்களென்றும் நான் சொல்லுவதை நீங்கள் ஒப்புக்கொள்ளுவீர்கள். தயவு செய்து இதற்கு ஏதாவது செய்யுங்கள். குதிரைப் பந்தய மைதானங்களுக்குள் 'புக்கிகள்' பந்தயம் வாங்க அனுமதிக்கப்பட்டிருந்தபோது நிலைமை எவ்வளவோ தேவலை.

"புதிய சட்டசபைகளுக்கு வந்திருப்பவர்களில் பலரை உங்களுக்குத் தெரியும். அவர்களுடைய உதவியுடன் குதிரைகள் மீது பந்தயம் கட்டுவதை ஒழிப்பதில் நீங்கள் வெற்றி பெறுவீர்களென்றே நம்புகிறேன். இந்தப் பந்

யத்தை சர்க்காரே மேற்கொண்டு நடத்தினுல், இது, நியாயமாகவும் நேர்மையாகவும் நடக்குமென்பதே என்னுடைய நம்பிக்கை. பொது மக்கள் அநேகமாக இழக்கவே செய்கிருர்கள். குதிரைகளின் சொந்தக்காரர்கள், குதிரைகளைப் பழக்குபவர்கள், அவைகளை ஓட்டுபவர்கள் ஆகியோரே ஜெயிக்கின்றனர். தம்முடைய பெரிய அதிகாரிகளில் சிலருக்குக் குதிரைப் பந்தயத்தில் தீவிர அக்கறை இருக்கிறதென்ற காரணத்திற்காக அரசாங்கம் இதற்கு உடந்தையா யிருப்பது வெட்கக்கேடானதல்லவா ?''

''என்னுடைய கணவன் அரசாங்க உத்தியோகத்தில் இருப்பதால் இந்தக் கடிதத்தில் நான் கையெழுத்துப் போடவில்லை. ஆயினும், நான் எழுதியுள்ள விஷயங்களில் நீங்கள் அக்கறை எடுத்துக்கொண்டு, குதிரைகள் மீது பந்தயம் கட்டுவதை நிறுத்துவதில் வெற்றி பெறுவீர்களென்று நம்புகிறேன்."

இந்தக் கடிதம் கொஞ்ச காலமாக என்னுடனேயே பிரயாணம் செய்து கொண்டிருக்கிறது. இது பரிதாபமான கடிதம் என்பதை வாசகர்கள் ஒப்புக் கொள்ளுவார்கள். அனுமதேயக் கடிதங்களுக்கு அநேகமாக மதிப்பே கிடையாது. ஆனுல், இதை எழுதியவர் தன் பெயரை வெளியிடாவிட்டாலும், இந்தக் கடிதம் அதற்கு விதி விலக்கு.

குதிரைப் பந்தயத்தைப் பற்றி எனக்கொன்றும் தெரியாது. அதை எப்போதுமே ஒரு பயங்கரமாக நான் கருதி வந்திருக்கிறேன். பல மனிதர்கள் குதிரைப் பந்தயத்தினுல் அழிந்துவிட்டார்கள் என்பதை நான் அறிவேன்.

ஆனுல், அதற்கெதிராக எதுவும் எழுதுவதற்கு எனக்குத் தைரியம் வரவில்லை என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். ஒரு ஆகாகான், பெரிய பாதிரிமார்கள், வைஸ்ராய்கள், மற்றும் நாட்டில் சிறந்தவர்களென்று கருதப்படுபவர்களெல்லாம் பகிரங்கமாக அதை ஆதரித்து, அதற்காக ஆயிரக்கணக்கில் செலவிடுவதைப் பார்த்த பிறகு, அதைப் பற்றி எழுதுவதில் பிரயோசனமில்லை யென்று எனக்குத் தோன்றிற்று. எந்தத் தீய பழக்கங்களுக்கு எதிராகப் பொதுஜன அபிப்பிராயம் உருவாவது சாத்தியமோ, அவற்றைப் பொதுஜனங்களின் கவனத்திற்குக் கொண்டு வர வேண்டியது ஒரு பத்திரிகையாளன், சீர்திருத்தவாதி என்ற முறையில் என்னுடைய கடமையாகும். அம்மை குத்துவதை நான் ஒப்புக்கொள்ளவில்லைதான். ஆனுல், அந்தத் தீமையைப் பொதுஜனங்களின் கவனத்திற்குக் கொண்டு வருவது வீண் முயற்சி என்றே நான் நினைக்கிறேன். தூய்மைப்படுத்தும் இயக்கத்தில் மதுவிலக்கைக் கொண்டு வருவதற்கு எனக்குத் தைரியமில்லை என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். அது தானுகவே தான் வந்தது. மக்கள் தாமாகவே அதை எடுத்துக் கொண்டார்கள்.

யாரும் வழிகாட்டாமலும், பிரசாரம் செய்யாமலும் பல தீமைகள் மக்களால் அகற்றப்படுகின்றன என்பதே, ஒத்துழையாமை ஒரு சுத்தி இயக்கம் என்பதற்கு நிச்சயமான சூசக

மாகும். குதிரைப் பந்தய விஷயத்திலும் அப்படி நடக்கும் என்ற நம்பிக்கையில் இந்தக் கடிதத்தைப் பிரசுரித்திருக் கிறேன்.

சில மாறுதல்கள் செய்யப்பட்டால், இந்தக் கடிதத்தை எழுதியவர் திருப்தி யடைந்துவிடுவார் என்பதை நான் அறி வேன். ஆனால், இந்தச் சனியனை அடியோடு ஒழித்தாக வேண்டும். குதிரைகள் மீது பந்தயப் பணம் கட்டுவது சூதாட்ட வெறியில் ஓர் அம்சமாகும். மக்கள் மட்டும் ஒத்துழையாமை செய்தால், இத் தீமை தானாகவே செத்து மடிந்துவிடும். குதிரைப் பந்தய மைதானத்திற்குச் செல்லும் ஆயிரக்கணக்கானவர்கள் வேடிக்கைக்காகவே போகிறார்கள். குதிரைகள் மூச்சுத் திணற ஓடுவதைப் பார்க்கப் போகிறார்கள், அல்லது அப்படிப் போவது நவீன மோஸ்தர் என்பதற்காகப் போகிறார்கள். ஆயினும், பல சூதாடிகள் அழிந்து போவதற்கு அவர்கள் உடந்தையாயிருந்து உதவி செய்கிறார்கள்.

ஆனால், குடியைவிடப் பந்தயம் கட்டுவதைச் சமாளிப்பது அதிகக் கஷ்டம் என்று கருதுகிறேன். ஒரு தீமை நாகரிகமான ஒரு செய்கையாகி விட்டால், அதைச் சமாளிப்பது சிக்கலான தாகிவிடுகிறது. குதிரைப் பந்தயம் நாகரிகமானதென்று கருதப் படுவதோடில்லாமல், அது ஒரு தீமையாகவே கருதப்படவில்லை. ஆனால், குடி அப்படியல்ல. நல்ல காலமாக, குடிப்பது ஒரு தீமை இல்லாவிட்டாலும், பலவீனம் என்று கருதுவதே இன்னமும் மோஸ்தராயிருந்து வருகிறது. ஒவ்வொரு மதமும் இதைக் கடுமையாகக் கண்டித்திருக்கிறது. ஆனால், பந்தயம் கட்டுவது அப்படி விசேஷமாகக் கவனிக்கப்படவில்லை, குதிரைப் பந்தயத் திற்குப் போவதைவிட இன்னும் சாதாரணமான ஒரு பொழுது போக்கைப் பொதுமக்கள் கண்டுபிடித்து, குதிரைகள் மீது பணம் கட்டுவதற்குத் தங்களுக்குள்ள ஆட்சேபணையைத் தெரிவிப்பார் களென்று நம்புவோமாக.

—'எங் இந்தியா' – 27—4—1921

## 2

# பந்தயம் பெரும் பாவம்

காசி தேசீய சர்வ கலாசாலையின் அத்தியட்சகரும், அறிஞரு மான பாபு பகவன்தாஸ், பந்தயம் கட்டுவது எவ்வளவு பாவம் என்பது பற்றி மனுஸ்மிருதியில் கூறப்பட்டிருப்பதை எனக்கு அனுப்பியிருக்கிறார். அதைக் கீழே தருகிறேன் :

''சூதாட்டம், பந்தயம் கட்டுதல் ஆகியவை தன் ராஜ்யத்திற்குள் வரமுடி யாமல் அரசன் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். இந்த இரண்டு தீமை களும் அரசனையும், ராஜ்யத்தையுமே அழித்துவிடுகின்றன. (221)

"சூதாட்டமும், பந்தயம் கட்டுதலும் பகற் கொள்ளையைப் போன்றவை. இவற்றை ஒழிப்பதற்கு அரசன் தீவிரமாக முயற்சி செய்ய வேண்டும். (222)

"உயிரற்ற பொருள்கள் உபயோகிக்கப்பட்டால், அது சூதாட்டமாகும். உயிருள்ள பொருள்கள் உபயோகிக்கப்பட்டால் அது பந்தயம் கட்டுவதாகும். (223).

"இவற்றைத் தானே செய்பவனே அல்லது ரகசியமாகவோ, பகிரங்கமாகவோ மற்றவர்களைச் செய்யச் சொல்லுபவனே, அரசனின் யுக்தப்படி மரண தண்டனைக்குட்படுத்தப்படலாம். மோசம் செய்பவர்கள், தாம் செய்யத்தகாத தொழிலைச் செய்பவர்கள்போல் பாசாங்கு செய்பவர்களையும் அரசன் யுக்தம்போல் அப்படி தண்டிக்கலாம். அல்லது சூதாடிகளையும், பந்தயம் கட்டுபவர்களையும் தேசப்பிரஷ்டம் செய்து விடலாம். அதேமாதிரி, நாட்டியம், சங்கீதம், நடனம் என்ற பெயரில் விபசாரம் செய்பவர்களையும், போதை வஸ்துக்களை உற்பத்தி செய்து விற்பவர்களையும், அம்மாதிரி கொடிய மோசக்காரர்களையும், தீமையைப் பரப்புபவர்களையும், பாவமான தொழிலைச் செய்பவர்களையும் தண்டிக்கலாம்."

—'எங் இந்தியா' – 25—5 –1921

# 3

# சூதாடுவதன் தீமை

பம்பாயில் உயர்ந்தவர்களென்று சொல்லப்படுபவர்களிடையே நிலவிவரும் சூதாட்டத்தைப் பற்றி, பகிரங்கமாகச் சொல்ல வேண்டுமென்று ஒரு நண்பர் பிடிவாதமாக வற்புறுத்தி வருகிறார். இந்தத் தீமையைக் கண்டிக்கும் விஷயத்தில் இந்த நண்பர் கூறுவதை முழு மனத்துடன் ஆதரிக்கிறேன். ஆயினும், அதைப் பற்றி எழுதுவதற்கு எனக்குத் தைரியம் வரவில்லை. நான் என்ன எழுதினாலும் அது வீண் முயற்சியாகவே இருக்கும் என்று நான் நினைத்தேன். ஏனெனில், நான் எழுதுவதைத் தொடர்ந்து, அந்தத் தீமையை எதிர்த்துப் போராடுவதற்கு கட்டுப்பாடான முறையில், உருவாக எதுவும் செய்யலாம் என்ற நம்பிக்கை எனக்கில்லை. இதைப் பற்றி எழுதலாமா என்று நான் யோசித்துக் கொண்டிருந்தபோது, சர்தாரிடமிருந்து வந்த அழைப்புக்கிணங்க போர்ஸாதுக்குப் போக வேண்டியிருந்தது. குஜராத் கிராமங்களில் சூதாட்டத்தினால் ஏற்பட்டுள்ள அழிவைப் பற்றிக் கோரமான தகவல்களை சர்தாரும், அவருடைய தொண்டர்களும் போர்ஸாத்தில் என்னிடம் கதை கதையாகச் சொன்னார்கள். காற்றடிக்கும் இரவில் காட்டுத் தீ பரவுவதைப் போல் இது பரவிக்கொண்டிருக்கிறது. வேலை செய்யாமலே எல்லோரும் பணக்காரர்களாவதற்கு அவசரப்படுகிறார்கள். "ஏதாவது ஒரு பொருளின் இன்றைய விலை என்ன என்பதை யாராவது

சரியாக ஊகித்திருப்பார்கள். நானும் ஏன் செய்யக் கூடாது?" என்று சூதாடி தன்னைத் தானே சமாதானம் செய்துகொண்டு தன் அழிவை நோக்கி ஓடுகிறான். ஒரு காலத்தில் அமைதி நிறைந்திருந்த குஜராத் குடும்பங்கள் நாசமாகிக் கொண்டிருக்கின்றன.

காலம் தோன்றிய முதலே இந்தச் சூதாட்டமும் இருந்து வந்திருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. ரூபமும், பெயரும் மாறியிருந்தாலும், சூதாட்டத்தின் தன்மை மாறவேயில்லை.

சட்டம் இந்தச் சூதாட்டத்திற்கு எதிராக இருக்க வேண்டும். ஆனால், இதற்குப் பொதுஜன அபிப்பிராயம் பக்கபலமாக இல்லாவிடில் பிரயோசனமில்லை. ஆகையால், பிளேக் வந்தபோது, அல்லது பூகம்பத்தின் போது, நிவாரண வேலை செய்வதற்குத் தொண்டர்கள் முன்வந்ததைப் போல் தீவிரமாக வேலை செய்ய ஆரம்பிக்க வேண்டும். இந்தத் தீமை வேரோடு களைந்தெறியப்படும் வரையில், அவர்கள் திருப்தியடையக் கூடாது. ஒரு விதத்தில் இது பிளேக்கையும், பூகம்பத்தையும் விட மோசமானது. ஏனெனில், இது உள்ளத்தையே அழித்துவிடுகிறது. உள்ளம் இல்லாத மனிதன் பூமிக்கு பாரமேயாவான். பிளேக் அல்லது பூகம்பக் கொடுமைகளுக்கெதிரான போராட்டத்தைவிட சூதாட்டத்திற்கெதிரான போராட்டம் கஷ்டமானது என்பது உண்மைதான். பிளேக், பூகம்ப காலங்களில் பாதிக்கப்பட்டவர்களின் ஒத்துழைப்பு அநேகமாகக் கிடைக்கிறது. ஆனால், சூதாடிகள் தாமே கஷ்டத்தை வருவித்துக் கொண்டு, அதைப் போற்றுகிறார்கள். சூதாடியை அந்தத் தீமையிலிருந்து திருப்புவது குடிகாரனை அந்தப் பழக்கத்திலிருந்து திருப்புவது போன்றதுதான். ஆகையால், சூதாட்டத்திற் கெதிரான போராட்டம் கஷ்டமானதுதான். ஆனால், இந்தத் தீமையை உரிய காலத்தில் ஒழிக்காவிட்டால், அதை எதிர்த்துப் போராடித்தானாக வேண்டும். பம்பாயிலேயே இது மோசமாய்த் தானிருக்கிறது. கிராமங்களுக்கும் இது பரவியிருப்பது அபாய அறிகுறியாகும். நாட்டில் பற்றுள்ள யாரும் இதை அலட்சியம் செய்யத் துணிய முடியாது.

—'ஹரிஜன்' – 15—6—1935

## 4

## சூதாட்டமில்லாமல் பந்தயம்

மேல் நாடுகளிலிருந்து எவ்வளவோ பழக்கங்கள் இங்கே கொண்டு வரப்பட்டிருக்கின்றன. குதிரைகளின் மீது பணம் கட்டுவதும் அதே மாதிரி மேற்கே இருந்து வந்ததுதான்

என்றே நினைக்கிறேன். என்னிஷ்டப்படி காரியங்கள் செய்யலாமென்ருல், குதிரைப் பந்தய மைதானங்களில் பந்தயம் கட்டுவதற்கு இப்போதுள்ள அந்த அளவு சட்டபூர்வமான பாதுகாப்பையும் எடுத்து விடுவேன். ஆன்ம சுத்தியே காங்கிரஸின் வேலைத் திட்டம். 1920-ஆம் வருடத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்திலேயே இது விளக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், எந்தத் தீமையின் மூலமும் கிடைக்கும் வருமானத்துடன் காங்கிரஸுக்கு எந்த சம்பந்தமும் இருக்க முடியாது. ஆகையால், பொதுஜன அபிப்பிராயத்தைச் சரியான வழியில் உருவாக்குவதற்கும், உயர் வகுப்பினரிடையே சூதாட்டத்தை ஒழிப்பதற்கும் தமக்குக் கிடைத்துள்ள அதிகாரங்களை மந்திரிகள் உபயோகிக்க வேண்டும். உயர்ந்த அந்தஸ்திலிருப்பவர்கள் என்று சொல்லப்படுவோரிடம் உள்ள கெட்ட பழக்கங்களை, விஷய மறியாத சாதாரண ஜனங்கள் பின்பற்ற மாட்டார்கள் என்று எதிர்பார்ப்பதில் பிரயோசனமில்லை. நல்ல குதிரை வளர்ப்புக்குக் குதிரைப் பந்தயம் அவசியம் என்று சொல்லக்கேட்டிருக்கிறேன். இதில் உண்மை இருக்கலாம். சூதாட்டம் இல்லாமல் குதிரைப் பந்தயம் நடத்துவது சாத்தியமில்லையா ? அல்லது நல்ல குதிரை வளர்ப்புக்குச் சூதாட்டமும் ஓர் அவசியமான உதவியா?

—'ஹரிஜன்' - 4—9—1937

## 5

# குதிரைப் பந்தயம்

கேள்வி : முக்கியமான பல நகரங்களில் குதிரைப் பந்தயங்கள் நடந்து கொண்டிருக்கின்றன. உயர்ந்தவர்கள், தாழ்ந்தவர்கள், பணக்காரர்கள், ஏழைகள் எல்லோரையுமே இது வலை வீசி இழுக்கிறது. இதனல் ஒழுக்கச் சீரழிவும், சில சந்தர்ப்பங்களில் வறுமையும் ஏற்படுகின்றன. பல சமஸ்தானுதிபதிகள் லட்சக்கணக்கில் மக்களின் பணத்தைச் செலவிட்டுப் பந்தயக் குதிரைகளை வாங்குகிருர்கள். இந்தத் தீமையைத் தடுப்பதற்கு நமது புதிய அரசாங்கங்கள் என்ன நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டும்?

பதில் : இது தீமைதான் என்பதில் எந்தவிதமான சந்தேகமும் இல்லை. இதனல் ஏதோ நன்மை இருப்பதாகச் சொல்லுகிருர்கள். அது உண்மைதானு என்பது சந்தேகமே. நாட்டில் கஷ்டம் அதிகமாய்க்கொண்டிருக்கும் இந்தக் காலத்தில் இது ஒரு குற்றமே. இந்தத் தீமையைத் தடுப்பதற்குப் புதிய தேசீய அரசாங்கங்கள் எவ்வளவோ செய்யலாம். ஆனல், அவைகளால் எவ்வளவு முடியும் என்பதையும் நாம் உணர

வேண்டும். இவர்கள் மக்களுக்குப் பிரதிநிதித்துவம் வகிப்பவர்களாகையால், பொதுஜன அபிப்பிராயம் எந்த அளவு இருக்கிறதோ, அதற்கு அதிகமாக அவர்கள் போகமுடியாது. அது சீர்திருத்தவாதிகளுக்கே உரிய வேலையாகும். இந்த ஆடம்பரமான சுகானுபவத்திற்குப் பொதுப் பணத்தை வீணடிக்கும் அளவுக்குக்கூட, அதிகாரவர்க்கத்தினர் இதற்கு ஒரு நாகரிக முத்திரை போட்டு வைத்திருக்கிறார்கள். இந்த அரசாங்கங்கள் தமது சொந்த உதாரணத்தின் மூலம் இந்த நாகரிக முத்திரைக்கு மதிப்பில்லாமல் செய்துவிட முடியும். தேசீய அரசாங்கங்கள் காட்டும் நல்வழியை, சமஸ்தானாதிபதிகளும் பின்பற்றுவார்கள்.

—'ஹரிஜன்' – 7—4—1946

# 6

# மக்கள் அரசாங்கத்தின் கடமை

குதிரைப் பந்தயங்களினால் மனிதர்களும், பணமும் அழிவதைப்பற்றி ஏற்கனவே எழுதியிருக்கிறேன். ஆனால், குடியை விடக் குதிரைப் பந்தய மைதானங்களில் பந்தயம் கட்டுவது எந்த விதத்திலும் குறைந்த தீமையல்ல என்று ஒரு நண்பர் கடுமையான ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். அதனால் மறுபடியும் இந்த விஷயத்தைப்பற்றி எழுத வேண்டியிருக்கிறது. அவர் மேலும் கூறுகிறார் :

"குதிரைப் பந்தயங்களுக்காக விசேஷ ரெயில்கள் விடப்படுகின்றன. காந்திக் குல்லாய்களை அணிந்துகொண்டு, தம்மை காங்கிரஸ்காரர்களென்று சொல்லிக் கொள்ளுபவர்கள் தம்முடைய பணத்தை வீணடிப்பதற்காகவே அங்கே போகிறார்கள். இந்தப் பணம் எங்கிருந்து வருகிறது? இப்போது தேர்ந்தெடுக்கப்பட்ட மந்திரி சபைகள் நடந்துகொண்டிருக்கின்றன. ஆனால், அவர்களும் மௌனமாக இந்தத் தீமையை அனுமதித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள்."

மது அருந்துவதைப்போல் குதிரைகள்மீது பணம் கட்டுவது அவ்வளவு பெரிய தீமையல்ல என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். இருந்தாலும், எது பெரிய தீமை என்று ஒப்பிட்டுப் பார்க்கக்கூடாதுதான். சூதாட்டம் அவ்வளவு கெடுதல் இல்லை என்பதற்காக. அது நல்லதாகிவிட முடியாது. குதிரைப்பந்தயத்தைப்பற்றிய நுட்பங்களெல்லாம் எனக்குத் தெரியாது. நான் சொல்லக் கூடியது இது தான்: இந்தத் தீமையை ஒழிப்பது மக்கள் அரசாங்கத்தின் அதிகாரத்திற்குட்பட்டதாயிருந்தால், நிச்சயமாக அதைச் செய்யத்தான் வேண்டும்.

['ஹரிஜன பந்து'விலிருந்து]

—சேவா கிராமம், 9—8—1946 —'ஹரிஜன்' - 18—8—1946

1

# இந்திய ரெயில்வேக்களில் மூன்ரும் வகுப்பு

கீழே காணப்படும் அறிக்கை, காந்தியடிகள் 1917-ஆம் வருடம் செப்டம்பர் 25-ந் தேதி ராஞ்சியிலிருந்து பத்திரிகைகளுக்கு அனுப்பப்பட்டதாகும்:

தென்னுப்பிரிக்காவிலிருந்து திரும்பிய பிறகு, இரண்டரை ஆண்டுகளுக்கு மேலாக நான் இந்தியாவில் இருந்து வருகிறேன். இந்தக் காலத்தில் கால் பகுதியை மூன்ரும் வகுப்பு ரெயிலில் நாளுக விரும்பிப் பிரயாணம் செய்வதில் கழித்திருக்கிறேன். வடக்கே லாகூர் வரையிலும், தெற்கே தரங்கம்பாடி வரையிலும், கராச்சியிலிருந்து கல்கத்தா வரையிலும் பிரயாணம் செய்திருக்கிறேன். வேறு காரணங்கள் இருப்பினும், ரெயிலில் பிரயாணம் செய்யும் மூன்ரும் வகுப்புப் பிரயாணிகளின் நிலையை நன்கு அறிந்துகொள்ளவே நான் இந்த வகுப்புப் பிரயாணத்தை மேற்கொண்டேன். இயற்கையாக, அவர்களின் நிலைமைகளை என்னுல் எவ்வளவு நுட்பமாக முடியுமோ அவ்வளவு நுட்பமாகக் கவனித்துள்ளேன். இந்தக் காலத்தில் ரெயில்வேக்களின் பெரும் பகுதியிலும் நான் பிரயாணம் செய்திருக்கிறேன். என் கவனத்திற்கு வந்த குறைகளைப் பற்றி அப்போதைக்கப்போது பல்வேறு ரெயில்வே நிர்வாகிகளுடன் கடிதப் போக்குவரத்தும் வைத்துக்கொண்டேன். அக்குறைகளில் பலவற்றைக் கஷ்டமின்றித் தீர்க்க முடியும். அப்படியிருந்தும் வெகு காலமாக அவற்றிற்குப் பரிகாரம் ஏற்பட்டபாடில்லை. எனவே, அக்குறைகளைக் கண்டித்து நடத்தும் அறப்போரில் பங்குகொள்ளும்படி, பத்திரிகைகளையும் பொது மக்களையும் நான் அழைக்க வேண்டிய காலம் வந்திருக்கிறதென்று நினைக்கிறேன்.

சென்ற 12-ந்தேதி சென்னைக்கு மெயில் வண்டியில் செல்ல, பம்பாயில் 13 ரூ-9 அணு கொடுத்து ஒரு டிக்கெட் வாங்கினேன். அதில் 22 பிரயாணிகள்தான் செல்லலாம் என்று எழுதப் பட்டிருந்தது. அது உட்காரும் இடத்தையே குறிப்பிடுவதாகும். அபாயமின்றியோ அல்லது வசதியாகவோ படுத்துச் செல்லத்தக்க இடம் அந்த வண்டியில் இல்லை. சென்னைக்குச் செல்லுமுன், இரண்டு இரவுகளை வண்டியில் கழிக்க வேண்டியிருந்தது. புனு வரையில் 22 பிரயாணிகளுக்கு மேல் எங்கள் வண்டியில் இல்லை. அதற்குக் காரணம் என்னவெனில், துணிச்சல் உள்ள சிலர் மாற்றவர்களை உள்ளே வரவிடாமல் தடுத்ததே ஆகும். பிடிவாதமாக இருந்த இருவர், மூவரைத் தவிர மற்றவர்களெல்லாம் உட்கார்ந்த

வண்ணமே உறங்கவேண்டியிருந்தது. ரெய்ச்சூரை அடைந்த பிறகு, நெருக்கடி தாங்க முடியாததாக இருந்தது. பிரயாணிகளின் கூட்டத்தைத் தடுக்க முடியவில்லை. எங்களிடையே இருந்த சண்டைக்காரர்களால்கூட அதைச் சமாளிக்க முடியவில்லை. கார்டுகளும், இதர ரெயில்வே ஊழியர்களும் அங்கே வந்து மேலும் பிரயாணிகளை உள்ளே பிடித்துத் தள்ளிவிட்டுப் போயினர்.

புளிமூட்டைகளை அடைப்பது போல் பிரயாணிகளை அடைப்பதை, அதிகாரிகளை லட்சியம் செய்யாத மெமன் வியாபாரி ஒருவர் எதிர்த்தார். இன்ருேடு சென்ற ஐந்து இரவுகளாகத் தாம் பிரயாணம் செய்வதாகவும் கூறிப் பார்த்தார்; யாரும் செவி சாய்க்கவில்லை. கார்டு அவரை அவமதித்து, இறங்குமிடத்தில் நிர்வாக அதிகாரிகளிடம் சொல்லிக்கொள்ளுங்கள் என்று கூறி விட்டார். இரவில் பெரும் பகுதி 35 பிரயாணிகளுக்கு மேல் வண்டியில் இருந்தனர். சிலர் கீழே குப்பைகளுக்கு மத்தியில் படுத்துக்கொண்டார்கள். சிலர் நின்றுகொண்டே வரவேண்டியிருந்தது. ஒரு சமயம் பிரயாணிகளுக்குள் கடுமையான சண்டை ஏற்படும் போல் இருந்தது. வயோதிகர்களான சில பிரயாணிகள் அதில் தலையிட்டுச் சண்டை மூளாமல் தடுத்தனர். ஏற்கனவே இருந்த இடைஞ்சல்கள் போதாவென்று அவர்கள், கோபாவேசம் கொண்ட பிரயாணிகளாலும் அசௌகரியம் ஏற்படுவதை விரும்பவில்லை.

வழியில் பிரயாணிகள் அசுத்தமான சர்க்கரை கலந்த தேத் தண்ணீர் வாங்கிக் குடிக்க முற்பட்டனர். வெள்ளை நிறமுள்ள தண்ணீரைப் பால் என்று கூறி அதில் கலந்திருந்தனர். எனவே, அதைப் பார்க்க ஏதோ சகதித் தண்ணீர் போல் இருந்தது. இதை நான் நேரில் பார்த்தேன். அதன் ருசியைப் பற்றிப் பிரயாணிகள் கூறியதையே இங்கு குறிப்பிடுகிறேன்.

பிரயாணத்தின்போது ஒரு முறைகூட நாங்கள் இருந்த வண்டியை யாரும் பெருக்கவுமில்லை, சுத்தம் செய்யவுமில்லை. அதன் விளைவு என்னவென்ருல், தரையில் நடக்கும் பொழுதெல்லாம், அல்லது அமர்ந்திருக்கும் பிரயாணிகளைத் தாண்டிக்கொண்டு தட்டுத்தடுமாறிச் செல்லும் பொழுதெல்லாம், குப்பை மீது நடந்துசெல்ல வேண்டியிருந்தது.

பிரயாணத்தின்போது கக்கூஸ்களும் சுத்தம் செய்யப்படவில்லை; நீர்த் தொட்டியிலோவென்ருல், தண்ணீரே இல்லை.

பிரயாணிகளுக்கு விற்கப்பட்ட சிற்றுண்டிகள் அசுத்தமானவையாக, அழுக்கடைந்த கைகளால் புழங்கப்பட்டவையாக, சுகாதாரமற்ற அருவருப்பான பாத்திரங்களில் வைக்கப்பட்டவையாக இருந்தன; அவற்றிற்குத் தகுந்தாற் போல் பண்டங்களை நிறுப்பதும் படுமோசமாக இருந்தன. ஏற்கனவே அவை லட்சக்கணக்கான ஈக்களால் ருசி பார்க்கப்பட்டிருந்தன. இந்த

அற்புதமான தின்பண்டங்களை ஆர்வத்துடன் வாங்கிய பிரயாணிகளிடம் அவற்றைப் பற்றிய அபிப்பிராயத்தைக் கேட்டேன். பலர் அவைகளின் மோசமான தரத்தைப் பற்றி வருணிக்கத் தொடங்கினர். எனினும், அவ்விஷயத்தில் கிடைத்ததைக் கொண்டு திருப்தியடைவதைத் தவிர வேறு வழியில்லையென்றும் கூறினர்.

ஸ்டேஷனை அடைந்ததும், கேட்ட பணத்தைக் கொடுக்க நான் இணங்காததால் குதிரை வண்டிக்காரன் என்னை ஏற்றிக் கொள்ள மறுத்துவிட்டான். அதை நான் சாந்தமாகக் கண்டித்து, உரிய கட்டணமே கொடுப்பதாகக் கூறினேன். அவன் என்னை வண்டியில் ஏற்றிக்கொள்ளும்படி செய்வதற்காக நான் ஒரு சாத்விக எதிர்ப்பாளனுக மாற வேண்டியிருந்தது. 'ஒன்று என்னை வண்டியிலிருந்து பலாத்காரமாக வெளியே தள்ளிவிடு; இல்லாவிடில் போலீஸ்காரரைக் கூப்பிடு' என்றேன்.

திரும்புகால் பிரயாணமும் அதே லட்சணத்தில்தான் இருந்தது. வண்டியில் முன்பே நெரிசல் அதிகமாக இருந்தது. நண்பர் ஒருவரின் உதவி இல்லாதிருந்திருப்பின், அதில் நான் உட்காரக்கூட முடிந்திராது. வண்டியில் என்னுடைய நுழைவு சட்டப்படி குறிப்பிடப்பட்ட நபர்களின் எண்ணிக்கைக்கு அதிகமானது என்பதில் சந்தேகமே இல்லை. 9 பேர் உட்காருவதற்காகத்தான் அவ்வண்டி நிர்மாணிக்கப்பட்டது; ஆனல், அதில் எப்போதும் 12 பேருக்குக் குறையாமல் இருந்துகொண்டே இருந்தனர். ஓரிடத்தில் மேற்கொண்டு பிரயாணிகள் ஏறுவதைத் தடுத்த ஒருவரை, ஒரு முக்கிய ரெயில்வே அதிகாரி தூஷித்து அடித்துவிடுவதாகவும் பயமுறுத்தினர். பிறகு அவர் சிரமப்பட்டுச் சில பிரயாணிகளை உள்ளே திணித்துத் தள்ளிவிட்டு, கதவையும் பூட்டிக்கொண்டு சென்றுவிட்டார். இந்த வண்டியிலும் பெயருக்குக் கக்கூஸ் என்று ஒன்று இருந்தது. அது ஐரோப்பியர்களின் கக்கூஸ் முறையில் அமைக்கப்பட்டிருந்தது. ஆனல், அவ்விதமும் அதை உபயோகிக்க முடியாமல் இருந்தது. உள்ளே குழாய் இருந்தது; ஆனல். அதில் தண்ணீர் இல்லை. அது தொத்து நோய்களை உண்டாக்கும் அளவுக்கு ஆபாசமாக இருந்ததென்பதை எவரும் மறுக்க முடியாதென அஞ்சாமல் கூறுவேன்.

வண்டியின் நிலைமையும் பார்ப்பதற்குச் சகிக்கவில்லை. மரப் பலகைகளின் மீது அழுக்கு படை படையாக ஒட்டிக்கொண்டிருந்தது. அது ஒருபோதும் சோப்பையோ, தண்ணீரையோ பார்த்ததாகத் தெரியவில்லை.

வண்டியில் பல்வேறு தினுசான பிரயாணிகள் இருந்தனர். அதில் வாட்டசாட்டமுள்ள மூன்று பஞ்சாபிய முஸ்லிம்கள் இருந்தனர். கண்ணியமும் நாகரிகமும் வாய்ந்த இரண்டு தமிழர்கள் இருந்தனர். பிறகு இரண்டு முஸ்லிம் வியாபாரிகளும்

வந்து சேர்ந்துகொண்டார்கள். வசதிகள் பெறுவதற்காகத் தாங்கள் லஞ்சம் கொடுக்க வேண்டியிருந்ததைப் பற்றி வியாபாரிகள் விவரித்தார்கள். பஞ்சாபியர்களில் ஒருவர் ஏற்கனவே மூன்று நாட்களாகப் பிரயாணம் செய்து, மிகவும் களைத்தும் சோர்ந்தும் போயிருந்தார். அப்படியிருந்தும், அவரால் காலை நீட்டிப் படுத்துக் கொள்ள முடியவில்லை. சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனில் டிக்கெட்டுகள் வாங்குவதற்காகப் பிரயாணிகள் லஞ்சம் கொடுப்பதை ஒருநாள் முழுவதும் அங்கே உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருந்ததாக அவர் கூறினர். மற்றொருவர் தமக்கு டிக்கெட்டும் இடமும் பெறுவதற்காக ரூ. 5 கொடுக்கவேண்டியிருந்ததென்று கூறினர். இம்மூவரும் லூதியானவுக்குச் சென்று கொண்டிருந்தார்கள். எனவே, அவர்கள் மற்றும் பல இரவுகள் பிரயாணம் செய்தாகவேண்டும்.

நான் விவரித்துள்ளவை எங்கேயோ, எப்போதோ நிகழ்பவையல்ல. வழக்கமாக ரெயில் வண்டிகளில் நிகழ்பவைதான். ரெய்ச்சூர், ஸோன்பூர், சந்திரதர்பூர், பருலியா, அஸன்ஸால் முதலிய பலவிடங்களிலும் நான் இறங்கினேன். ஸ்டேஷன்களைச் சேர்ந்த பிரயாணிகளின் விடுதிகளிலும் தங்கினேன். அவை பார்ப்பதற்கே சகிக்க முடியாதனவாக இருக்கின்றன. அங்கே ஒழுங்கோ, சுத்தமோ எதுவும் இல்லை. ஒரே குழப்பமும், பயங்கரமான சந்தடியும் கூக்குரலுமாக இருக்கின்றன. பிரயாணிகள் உட்காருவதற்குப் பெஞ்சுகள் இல்லை; இருந்தாலும் தாராளமாக உட்காருவதற்குப் போதிய இடமில்லை.

பிரயாணிகள் அழுக்கடைந்த தரையில் உட்கார்ந்து அசுத்தமான உணவைச் சாப்பிடுகின்றனர். அவர்கள் எச்சில் இலைகளை எங்கே வேண்டுமானலும் போடலாம், எங்கேவேண்டுமானலும் துப்பலாம். அவர்கள் இஷ்டப்படி உட்கார்ந்து கொண்டு எங்கே வேண்டுமாயினும் புகை பிடிக்கலாம். அந்த விடுதிகளைச் சேர்ந்த கக்கூஸ்களை வருணிக்கவே முடியாது. கண்ணியமான பாஷையை உபயோகிக்க வேண்டுமென்ற சட்டத்தை மீருமல் அதைப் போதிய அளவு வருணிக்க எனக்குச் சக்தி இல்லை. தொத்து நோயைத் தடுக்கும் மருந்தையோ அல்லது சாம்பலையோ அந்தக் கக்கூஸ் கண்டதேயில்லை. அதைச் சுற்றி ரீங்காரம் செய்யும் ஈக்கள், அதை உபயோகிக்க வேண்டாமென்று எச்சரிக்கின்றன. மூன்ருவது வகுப்புப் பிரயாணி திக்கற்றவர், வாயில்லாப் பூச்சி. அங்கே செல்வது மரணத்தை வரவேற்பதாக இருந்தால்கூட, அவர் புகார்கூற விரும்பவில்லை. ரெயில் வண்டிகளில் பிரயாணம் செய்யும் பிரயாணிகளில் சிலர், அந்தச் சூழ்நிலையின் துன்பத்தைக் குறைத்துக் கொள்ளுவதற்காகப் பட்டினி கிடப்பதை நான் அறிவேன்.

ஈக்களின் எச்சரிக்கை பயன்படாததால், ஸோன்பூரில் குளவிகள் வந்து பொது மக்களையும் அதிகாரிகளையும் எச்சரித்தன. அந்த எச்சரிக்கையும் யாருடைய செவிகளிலும்

ஏறவில்லை. பிரிட்டிஷ் இந்திய சாம்ராஜ்யத்தின் தலைநகரில் மூன்ருவது வகுப்புக்கு டிக்கெட் கொடுக்குமிடம் இருக்கிறது. அதை இருள் சூழ்ந்த ஒரு குகை என்றே சொல்லவேண்டும். அது இடித்துத் தகர்த்து விடுவதற்கே தகுதி வாய்ந்தது.

இந்நிலையில், இந்தியாவில் பிளேக் நோய் சகஜமாகிவிட்டதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? பிரயாணிகள் போகும் இடங்களிலெல்லாம் அழுக்கைக் கொண்டு போகின்றனர். அங்கே இருந்து புறப்படும்போது இன்னும் அதிக அழுக்கை எடுத்துக் கொண்டு போகின்றனர். இந்நிலையில் பிளேக் நோயைத் தவிர, வேறென்ன பலனை எதிர்பார்க்க முடியும்?

இந்திய ரெயில் வண்டிகளில் மாத்திரம்தான், பிரயாணிகள் தண்டனை கிடைக்குமென்ற பயம் எதுவுமின்றிப் புகை பிடிக்கின்றனர். அருகில் பெண்கள் இருப்பதையோ, புகை பிடிக்காத பிரயாணிகள் ஆட்சேபிப்பதையோ புகை பிடிப்பவர்கள் சட்டை செய்வதில்லை. இந்த லட்சணத்தில், வண்டியில் உள்ள மற்ற பிரயாணிகளின் அனுமதியின்றி எந்தப் பிரயாணியும் புகை பிடிக்கக்கூடாதென்று ஒரு சட்டம் இருக்கிறது!

இந்த மகத்தான தீமையை அகற்றும் விஷயமாக, இப்போது நடந்துவரும் பயங்கர யுத்தம் தடையாக இருக்கும்படி விட்டு விடக்கூடாது. வண்டிகளில் அசுத்தத்தையும் ஜனநெருக்கத்தையும் சகித்துக்கொண்டிருப்பதற்கு யுத்தம் காரணமாக இருக்க முடியாது. இதுபோன்ற நெருக்கடியான சமயத்தில், ரெயில் வண்டிகளிலே பிரயாணிகள் போக்குவரத்தை அறவே நிறுத்தி விட்டால்கூடத் தவறில்லை. ஆனல், அனரோக்கியம் அதிகமாவதையும், ஆரோக்கியத்தையும் ஒழுக்கத்தையும் சீர்குலைக்கும் நிலைமையையும் தொடர்ந்து சகித்துக்கொண்டு வருவது எக்காலத்திலும் கூடவே கூடாது.

மூன்ருவது வகுப்புப் பிரயாணிகளின் நிலையையும் முதல் வகுப்புப் பிரயாணிகளின் நிலையையும் ஒப்பிட்டுப் பாருங்கள். மூன்ருவது வகுப்புக் கட்டணத்தைக் காட்டிலும் முதல் வகுப்புக் கட்டணம் ஐந்து மடங்கு அதிகமாக இருக்கிறது. ஆனல், முதல் வகுப்புப் பிரயாணி பெறும் வசதிகளில் ஐந்தில் ஒரு மடங்கு, அல்லது பத்தில் ஒரு மடங்கு வசதிகளையாவது மூன்ருவது வகுப்புப் பிரயாணி பெறுகிருரா? கட்டணத்திற்கும் வசதிக்கும் சிறிதளவாவது சம்பந்தம் இருக்க வேண்டும் என்று கோருவது சாதாரண நீதியல்லவா?

முதல்,இரண்டாவது வகுப்புப் பிரயாணிகளின் சுக வசதிகள் இடைவிடாது அதிகமாகி வருகின்றன. மூன்றும் வகுப்புப் பிரயாணிகளிடமிருந்து கிடைக்கும் அதிக வருமானம் காரணமாகவே, அந்த வசதிகளைச் செய்து கொடுக்க முடிகிறது என்பது எல்லோரும் அறிந்த உண்மை. குறைந்த பட்சம் வாழ்க்கைக்கு

அத்தியாவசியமான வசதிகளையாவது பெற மூன்ருவது வகுப்புப் பிரயாணிகள் நிச்சயமாக உரியவர்களே.

மூன்ருவது வகுப்புப் பிரயாணிகளை அசட்டை செய்வதால், ஒழுங்கு, ஆரோக்கியம், நாகரிகமான கூட்டு வாழ்க்கை. எளிய, சுத்தமான பழக்க வழக்கங்களில் பயிற்சி பெறுதல், இவை போன்ற விஷயங்களில் லட்சக்கணக்கான மக்களுக்கு அற்புதமான கல்வி அளிக்கும் சந்தர்ப்பமும் இழக்கப்பட்டு விடுகிறது. இவ்விஷயங்களில் அனுபவபூர்வமான படிப்பினை ஏற்படுவதற்குப் பதிலாக, மூன்ரும் வகுப்புப் பிரயாணிகளின் தற்போதைய அனுபவமானது,அவர்களுடைய நாகரிக உணர்ச்சியும் சுத்தத்தில் பற்றுதலும் குன்றிவிடும்படி செய்துவிடுகிறது.

இங்கே விவரிக்கப்பட்டுள்ள தீமையைச் சமாளிக்கப் பல யோசனைகள் கூற முடியும். அவற்றுடன் கீழ்க்கண்ட யோசனையையும் சேர்த்துக்கொள்ளும்படி நான் வேண்டிக் கொள்ளுகிறேன்: பொதுவாக உயர்ந்த வகுப்புகளில் பிரயாணம் செய்யும் வைஸ்ராய், பிரதம தளபதி, ராஜாக்கள், மகாராஜாக்கள், இம்பீரியல் கவுன்சில் அங்கத்தினர்கள் முதலிய மற்றும் உயர்ந்த பதவிகள் வகிப்போர், முன்னெச்சரிக்கை எதுவுமின்றி அப்போதைக்கப்போது மூன்ருவது வகுப்புகளில் பிரயாணம் செய்து அனுபவம் பெறட்டும். அப்படியாயின், கூடிய சீக்கிரத்தில் மூன்ருவது வகுப்புப் பிரயாண நிலைமையில் ஆச்சரியப்படத்தக்க மாறுதல் ஏற்படுவதை நாம் பார்க்கலாம். பின்னர் யாதொரு புகாரும் கூருமல் ஓரிடத்திலிருந்து மற்ருேரிடத்திற்குப் பிரயாணம் செய்யும் லட்சக்கணக்கானவர்கள், தாங்கள் கொடுக்கும் கட்டணத்திற்குப் பிரதியாகச் சாதாரண அற்ப வசதிகளையாவது பெறுவார்கள்.

## 2

## சரித்திரப் புகழ்பெற்ற கடிதம்

[1931-32-இல் பிரிட்டிஷ் சர்க்காரில் இந்தியா மந்திரியாக இருந்த சர் சாமுவல் ஹோருக்கு, எராவ்டா சிறையிலிருந்து மகாத்மா காந்தி எழுதிய சரித்திரப் புகழ் பெற்ற கடிதத்தின் விவரம் வருமாறு; ]

எராவ்டா சென்ட்ரல் சிறை,
மார்ச் 11, 1932.

அன்பார்ந்த சர் சாமுவல் அவர்களுக்கு,

வட்டமேஜை மகாநாட்டில், சிறுபான்மையோரின்கோரிக்கை சமர்ப்பிக்கப்பட்டபோது, நான் பேசியது உங்களுக்கு ஒரு வேளை ஞாபகமிருக்கலாம். தாழ்த்தப்பட்டவர்களுக்குத் தனித்

தேர்தல் தொகுதி அளிப்பதை என் உயிரைக் கொடுத்தாவது நான் எதிர்ப்பேன் என்று என் பிரசங்கத்தின் இறுதியில் குறிப்பிட்டேன். திடீரென்று ஏற்பட்ட மனவெழுச்சி காரணமாகவோ, அல்லது மிகவும் சாதுர்யமாகப் பேசும் நோக்கத்துடனே, நான் அவ்விதம் கூறவில்லை. அது மனப்பூர்வமாக விடுக்கப்பட்ட ஓர் அறிக்கையாகும். அந்த அறிக்கையைத் தொடர்ந்து, நான் இந்தியாவிற்குத் திரும்பி வந்ததும் தனித் தேர்தல் தொகுதியை எதிர்த்து,-தாழ்த்தப்பட்டவர்களின் தனித் தேர்தல் தொகுதியை யாவது எதிர்த்து, பொது மக்களின் அபிப்பிராயத்தைத் திரட்டலாமென நம்பியிருந்தேன். ஆனால், அவ்விதம் நடைபெறவில்லை.*

நான் வாசிக்க அனுமதிக்கப்பட்டுள்ள பத்திரிகைகளிலிருந்து, பிரிட்டிஷ் சர்க்கார் எந்த விநாடியிலும் தங்கள் தீர்ப்பைப் பிரகடனம் செய்யலாமென அறிகிறேன். அத்தீர்ப்பு, தாழ்த்தப்பட்டவர்களுக்குத் தனித் தொகுதிகளைச் சிருஷ்டிப்பதாக இருக்குமாயின், எனது பிரதிக்ஞையை அமலுக்குக் கொண்டு வருவதற்கு அவசியமென்று அப்போது நான் கருதும் முறைகளை எடுத்துக்கொள்ள வேண்டுமென முதலில் நினைத்தேன். ஆனால், முன் அறிக்கையின்றி நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவது, பிரிட்டிஷ் சர்க்காரிடம் நியாயமாக நடந்துகொண்டதாகாது என்று எனக்குத் தோன்றுகிறது. என் அறிக்கைக்கு நான் கொடுத்துள்ள முக்கியத்துவம், அவர்களால் கொடுக்க முடியாது என்பது இயற்கையே.

தாழ்த்தப்பட்டவர்களுக்குத் தனித் தொகுதியைச் சிருஷ்டிப்பதில் எனக்குள்ள ஆட்சேபணைகளையெல்லாம் நான் மீண்டும் திருப்பிக் கூறவேண்டிய அவசியமில்லை. என்னை நான் அவர்களில் ஒருவனாகவே கருதுகிறேன். அவர்களுடைய நிலைக்கும் மற்றவர்களுடைய நிலைக்கும் முற்றிலும் வேற்றுமை உண்டு. தாழ்த்தப்பட்டவர்களுக்குச் சட்டசபைகளில் பிரதிநிதித்துவம் அளிப்பதை நான் எதிர்க்கவில்லை. மற்றவர்களுக்கு வாக்குரிமையளிப்பதில் அதிகக் கண்டிப்பாக இருந்தால்கூட, தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த வயதுவந்த ஒவ்வொரு ஆடவரையும் பெண்மணியையும், அவர்களுடைய கல்வி, சொத்து யோக்கியதாம்சங்களையே கவனியாமல், வாக்காளர்களாகப் பதிவு செய்துகொள்ள வேண்டும் என்பதையே நான் ஆதரிக்கிறேன்.

தனித் தொகுதி ராஜீய ரீதியாக எப்படியாயினும், அது தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும் ஹிந்து மதத்திற்கும் அபாயகரமானது என்பதே எனது உறுதியாகும். தனித் தொகுதி அவர்களுக்கு அபாயகரமானது என்பதை நன்கு உணரவேண்டுமாயின், அவர்கள் சாதி ஹிந்துக்களிடையே எவ்விதம் பரவி

*லண்டன் வட்டமேஜை மகாநாட்டிலிருந்து காந்திஜி திரும்பி கப்பலில் பம்பாய்க்கு வந்து இறங்கியதுமே, அவரைப் பிரிட்டிஷ் அதிகாரிகள் கைது செய்து, எராவ்டா சென்ட்ரல் சிறையில் வைத்துவிட்டரர்கள்.

யிருக்கிறார்கள் என்பதையும், சாதி ஹிந்துக்களை அவர்கள் எப்படி அண்டி ஜீவனம் செய்து வருகிறார்கள் என்பதையும் உணர்ந்துகொள்ளவேண்டும். ஹிந்து மதம் சம்பந்தப்பட்ட வரையில், தனித் தொகுதி அதைத் துண்டு துண்டாகப் பிளந்து சின்னபின்னமாக்கிவிடும்.

தாழ்த்தப்பட்டோர் பிரச்னை, என் சம்பந்தப்பட்ட வரையில் ஒழுக்க சம்பந்தமான, மத சம்பந்தமான ஒரு விஷயமே. அதன் ராஜீய அம்சம் முக்கியமானதே என்றாலும், ஒழுக்க, மத சம்பந்த மான அம்சத்துடன் ஒப்பிடும்போது, ராஜீய அம்சத்தின் முக்கி யத்துவம் முற்றிலும் அற்பமாகிவிடுகிறது.

தாழ்த்தப்பட்டோர் நிலை சம்பந்தமாக நான் சிறு வயது முதற்கொண்டே மிகுந்த அக்கறை காட்டி வந்திருக்கிறேன். அவர்களுக்காக ஒரு தடவைக்கு மேலேயே எல்லாவற்றையும் தியாகம் செய்ய முற்பட்டேன். இதை நீங்கள் ஞாபகப்படுத் திக்கொண்டால், இவ்விஷயத்தில் எனக்குள்ள உணர்ச்சிகளை நீங்கள் உணர்ந்திருப்பீர்கள். பெருமைக்காக நான் இதைக் கூற வில்லை. ஹிந்துக்கள், பல நூற்றாண்டுகளாகத் தாழ்த்தப்பட்ட வகுப்பினரை மனமறிந்து வேண்டுமென்றே இழிவுபடுத்தி வந்திருக்கிறார்கள். ஹிந்துக்கள் செய்யும் எந்தத் தவமும், எவ்விதத்திலும், அதற்கு ஈடுசெய்ய முடியாது என எனக்குத் தோன்றுகிறது.

தனித் தொகுதி ஒரு தவமும் அல்ல, அவமதிப்பால் நசுக் குண்டு வந்துள்ளவர்களுக்கு ஒரு பரிகாரமும் அல்ல என்பதை நான் அறிவேன். எனவே, தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குத் தனித் தொகுதியைச் சிருஷ்டித்துப் பிரிட்டிஷ் சர்க்கார் தீர்ப்பு அளிப்பார்களாயின், நான் இறக்கும் வரையில் உண்ணாவிரதம் இருக்கவேண்டும் என்பதை, அவர்களுக்கு மரியாதையுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

நான் கைதியாக இருக்கும்போது அத்தகைய ஒரு முறை யைக் கைக்கொள்ளுவது, பிரிட்டிஷ் சர்க்காருக்கு மிகுந்த தரும சங்கடமான நிலைமையை உண்டுபண்ணும் என்ற உண்மையை நான் அறிந்துள்ளேன். எனது நிலைமையில் உள்ள ஒருவர் ராஜீயத் துறையில் அவ்வித முறைகளைக் கைக்கொள்ளுவது முற்றிலும் நியாயமற்றதென்று பலரும் கருதுவார்கள் என்பதை யும் நான் அறிந்திருக்கிறேன். அதுபோன்ற முறையை இன்னும் அதிக மோசமாக வருணிக்காவிடினும், தன்னை மறந்து உணர்ச்சி வசப்பட்ட ஒரு கூற்று என்றாவது அவர்கள் வருணிப்பார்கள். என்றால் உத்தேசிக்கப்பட்டுள்ள நடவடிக்கை பற்றிய அத்தகைய குற்றச்சாட்டுக்கு நான் சொல்லும் சமாதானம் என்னவெனில், அது சாதாரணமான ஒரு நடவடிக்கையல்ல, அது என் உயிரின் ஓர் அம்சமேயாகும் என்று வற்புறுத்திக் கூறுவதுதான். அது மனச்சாட்சியின் அழைப்பாகும். எனக்குள்ள சித்த சுவாதீ

னத்தில் பிறருக்கு இருக்கும் நம்பிக்கையை நான் இழப்பதாக இருந்தால்கூட, அந்த அழைப்பை மறுக்க நான் துணிய மாட்டேன்.

இப்போது எனக்குத் தெரிந்த வரையில், சிறையிலிருந்து என் விடுதலேகூட உண்ணுவிரதம் இருக்க வேண்டுமென்ற கடமையின் அவசியத்தை எவ்விதத்திலும் குறைத்துவிடாது. எனினும், எனது பீதிக்கெல்லாம் சிறிதும் நியாயமில்லையென்றும், தாழ்த்தப்பட்டோருக்குத் தனித் தொகுதியைச் சிருஷ்டிக்கும் நோக்கம் பிரிட்டிஷ் சர்க்காருக்கு இல்லையென்றுமே நான் நம்பிக்கொண்டிருக்கிறேன்.

என்னைக் கலங்கும்படி செய்து வரும் மற்ருெரு விஷயத்தையும் நான் குறிப்பிடுவது நலமாகும். அதுவும் என்னை, இறக்கும் வரையில் உண்ணுவிரதம் இருக்கும்படி நிர்ப்பந்தப்படுத்தலாம். அடக்குமுறையின் போக்கே அவ்விஷயமாகும். அத்தகைய தியாகத்தை மேற்கொள்ளும்படி வற்புறுத்தும் அதிர்ச்சி, எனக்கு எப்போது ஏற்படும் என்பது பற்றி நான் எதுவும் அறியேன். அடக்குமுறை நியாயமான எல்லையைக் கடந்து வருகிறதென்று எனக்குத் தோன்றுகிறது. சர்க்காரின் பயங்கர ஆட்சி நாடு முழுதும் பரவி வருகிறது. ஆங்கில, இந்திய அதிகாரிகள் காட்டுமிராண்டிகளைப் போல் இரக்கமற்றவர்களாகச் செய்யப்பட்டு வருகிருர்கள். மக்களிடம் விசுவாசமின்மையையும், தங்கள் சொந்த மக்களிடத்தில் மனிதத் தன்மையற்று நடந்துகொள்ளுவதையும் போற்றத்தக்க செய்கையாகச் சர்க்கார் கருதுவதால், மேலதிகாரிகள், கீழதிகாரிகள் யாவருடைய நிலையும் சீர்கெட்டிருக்கிறது. பீதியினுல் மக்கள் அடங்கி ஒடுங்கி வருகிருர்கள். பேச்சுச் சுதந்திரம் நசுக்கப்பட்டிருக்கிறது. சட்டம், ஒழுங்கு என்ற பெயரால் போக்கிரித்தனமாக காரியங்கள் செய்யப்பட்டு வருகின்றன. பொது மக்களுக்குத் தொண்டு புரிய முன் வந்துள்ள பெண்கள், தங்களுக்கு மானஹானி ஏற்படுமோ என்று அஞ்சுகிருர்கள்.

இதெல்லாம் காங்கிரஸ் உருவாக்கியுள்ள விடுதலை உணர்ச்சியை நசுக்கவே செய்யப்பட்டு வருகின்றன என்று எனக்குத் தோன்றுகிறது. சாதாரண சட்டத்தை மரியாதையாக மீறுவோரைத் தண்டிப்பதுடன் அடக்குமுறை நிற்கவில்லை. அது, பெரிதும் மக்களை அவமதிக்கும் நோக்கத்துடன் கொடுங்கோன்மை சர்க்கார் புதிதாக விடுக்கும் உத்தரவுகளை மக்கள் மீறும்படியும் தூண்டுகிறது.

நான் கவனிக்கும் இந்தச் செயல்களிலெல்லாம் நான் ஜன நாயகத் தத்துவத்தைக் காணவில்லை. உண்மையில், உங்கள் ஜனநாயகம் மேலெழுந்தவாரியானது, குறுகிய எல்லைக்கு உட்பட்டது என்ற எனது அபிப்பிராயத்தை, இங்கிலாந்திற்கு என்னுடைய சமீபகால விஜயமானது உறுதிபடுத்தியிருக்

கிறது. மிகவும் முக்கியமான விஷயங்களில்கூட, பார்லிமெண்டைக் கலந்து ஆலோசிக்காமலேயே தனி நபர்களோ, அல்லது சிறு கோஷ்டியினரோ முடிவுகள் செய்துவிடுகிறார்கள். அவை, தாங்கள் என்ன செய்கிறோம் என்பது பற்றி அரைகுறையாகவே தெரிந்துகொண்டுள்ள பார்லிமெண்டு அங்கத்தினர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டு விடுகின்றன. எகிப்து விஷயத்திலும், *1914*-ஆம் வருட யுத்த சம்பந்தமாகவும் அப்படித்தான் நடந்தது. இந்தியா விஷயத்திலும் அப்படியேதான் நடந்து வருகிறது.

ஜனநாயகம் என்று கூறப்படும் ஒரு முறையில், பண்டைய பெருமை வாய்ந்த முப்பது கோடிக்கு மேற்பட்ட மக்களின் விதியைப் பாதிக்கும் தங்கு தடையற்ற அதிகாரம் ஒரு தனி மனிதருக்கு இருப்பதையும், நாசகரமான பயங்கர சக்திகள் ஒன்று திரட்டப்பட்டு அவரது தீர்மானங்களை வற்புறுத்தி அமலுக்குக் கொண்டுவருவது சாத்தியமாக இருப்பதையும் காணும் போது எனது உடலும் உள்ளமும் வெதும்புகின்றன. இது ஜனநாயகத்திற்கு நேர்மாறானது என்பதே எனது கருத்தாகும்.

இந்திய, பிரிட்டிஷ் மக்களிடையே ஏற்கனவேயே மனக்கசப்பும் வெறுப்பும் தாண்டவமாடுகின்றன. இந்த அடக்கு முறை நீடித்தால், அந்த மனக்கசப்பும் வெறுப்பும் மேற்கொண்டு இன்னும் அதிகமாகும். என் பொறுப்பு சம்பந்தப்பட்ட வரையில், நான் அதைத் தடுக்கக் கூடுமாயின், அந்தப் போக்கை எப்படித் தடுப்பது? அதற்காகச் சட்ட மறுப்பை நிறுத்துவது முடியாத காரியம். சட்ட மறுப்பு, எனக்கு நம்பிக்கையைப் பொறுத்த ஒரு சித்தாந்தமாகும்.

நான் என்னை இயற்கையில் ஒரு ஜனநாயகவாதி என்றே கருதுகிறேன். ஜனநாயகம் அதன் விருப்பத்தை அமலுக்குக் கொண்டு வர ஸ்தூல பலாத்காரத்தை உபயோகிக்கக் கூடாது. அவ்விதம் உபயோகிப்பது, நான் உருவகப்படுத்திக்கொண்டுள்ள ஜனநாயகத்திற்கு முற்றிலும் முரணாகும். ஸ்தூல பலாத்காரம் அவசியமென்றோ அல்லது நியாயமென்றோ கருதுமிடங்களில், அதன் ஸ்தானத்தில் அதற்கு நியாயமான பிரதியாகவே சட்ட மறுப்பு உருவாக்கப்பட்டிருக்கிறது. அது, தானே துன்பத்திற்கு உள்ளாகும் ஒரு முறையாகும். அத்திட்டத்தின் ஓர் அம்சம் என்னவென்றால், குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் சட்ட மறுப்புவாதி இறுதிவரையில் உண்ணாவிரதம் இருந்துகூடத் தம்மைத் தாமே தியாகம் செய்ய வேண்டும். அத்தகைய நேரம் இன்னும் எனக்கு வரவில்லை. அத்தகைய முறையைக் கைக்கொள்ளும்படி, என் உள்ளத்திலிருந்து மறுக்கமுடியாத அழைப்பு இன்னும் வரவில்லை. ஆனால், வெளியே நிகழ்ந்து வரும் சம்பவங்கள், என்னை அடியோடு கலங்க வைப்பதற்குப் போதிய அளவு அபாயகரமாக இருக்கின்றன. ஆகையால், தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சம்பந்தமாக ஓர் உண்ணாவிரதத்தின் சாத்தியக் கூறுபற்றி

உங்களுக்கு எழுதியுள்ள நான், சமீபத்திலேயே அத்தகைய மற்ளொரு உண்ணுவிரதம் இருக்கும்படியான நிலைமை ஏற்படலாம் என்பது பற்றியும் உங்களுக்குக் கூற வேண்டும். அவ்விதம் கூருவிடில், நான் உங்களிடம் உண்மையுடன் நடந்துகொண்டவனுகமாட்டேன்.

நான் உங்களுடன் நடத்திய கடிதப் போக்குவரத்து யாவும், எங்கள் பக்கத்தில் முற்றிலும் ரகசியமாக இருக்கிறதென்பதை நான் சொல்ல வேண்டிய அவசியமில்லை. சர்தார் வல்லபாய் பட்டேலும், எங்களுடன் சேர்ந்துகொள்ளுவதற்காக இப்போது அனுப்பப்பட்டுள்ள மகாதேவ தேசாயும் மாத்திரம் அதையெல்லாம் பற்றி அறிவார்கள். ஆனுல், இந்தக் கடிதத்தை எப்படி உபயோகிக்க வேண்டுமென்று நீங்கள் விரும்பினுலும், சந்தேகமின்றி அப்படியே உபயோகித்துக்கொள்ளலாம்.

உங்கள் உண்மையுள்ள,
எம். கே. காந்தி.

3

## பிரிட்டிஷ் பிரதம மந்திரிக்கு எச்சரிக்கை

[தாழ்த்தப்பட்டோருக்குத் தனித் தொகுதி அளிப்பதெனப் பிரிட்டிஷ் சர்க்கார் செய்த முடிவைக் கண்டித்தும், தாழ்த்தப்பட்டோருக்கு இழைக்கப்பட்டுள்ள அந்த அநீதியை எதிர்த்து இறக்கும்வரையில் உண்ணுவிரதம் இருக்கப் போவதென்ற தீர்மானத்தை அப்போது பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்த ஜேம்ஸ் ராம்ஸே மெக்டொனுல்டுக்கு அறிவித்தும், காந்திஜி அவருக்கு எழுதிய சரித்திரப் புகழ்பெற்ற மற்ளொரு கடிதத்தின் விவரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :]

எராவ்டா சென்ட்ரல் சிறை,
ஆகஸ்டு 18, 1932

அன்பார்ந்த நண்பர் அவர்களுக்கு,

தாழ்த்தப்பட்டவர்களின் பிரதிநிதித்துவப் பிரச்னைபற்றி நான் சென்ற மார்ச் மாதம் 11-ஆம் தேதி சர் சாமுவல் ஹோருக்கு எழுதிய கடிதத்தை, அவர் உங்களுக்கும் மந்திரி சபைக்கும் காட்டியிருப்பார் என்பதில் சந்தேகம் இருக்கமுடியாது. அந்தக் கடிதத்தை இந்தக் கடிதத்தின் ஒரு பகுதியாகவே எண்ணி, அத்துடன் சேர்த்தே இதை வாசிக்க வேண்டும்.

சிறுபான்மையோர் பிரதிநிதித்துவ சம்பந்தமாகப் பிரிட்டிஷ் சர்க்காரின் தீர்மானத்தை நான் வாசித்தேன். அவ்விஷயமாகப்

பிறகு ஆலோசித்துக் கொள்ளலாமென்று இருந்தேன். சர் சாமுவல் ஹோருக்கு நான் எழுதிய கடிதத்தையும், செயின்ட் ஜேம்ஸ் மாளிகையில் 1931 நவம்பர் மாதம் 13-ஆம் தேதி நடந்த லண்டன் வட்ட மேஜை மகாநாட்டின் சிறுபான்மையோர் கமிட்டியில் நான் செய்த பிரகடனத்தையும் தொடர்ந்து, உங்கள் தீர்மானத்தை நான் என் உயிரைக் கொடுத்து எதிர்க்க வேண்டியவனாக இருக்கிறேன். அவ்விதம் செய்வதற்கான ஒரே வழி இறக்கும் வரையில் உண்ணுவிரதம் இருப்பதாகப் பிரகடனம் செய்வதே யாகும். உண்ணுவிரதத்தின் போது, உப்புடனே அல்லது உப்பில்லாமலோ தண்ணீரையும் சோடாவையும் தவிர வேறெதுவும் சாப்பிடப் போவதில்லை.

உண்ணுவிரதத்தின் போது, பிரிட்டிஷார் தாங்களாகவோ அல்லது பொதுஜன அபிப்பிராயத்தின் நிர்ப்பந்தத்தாலோ தங்கள் தீர்மானத்தை மாற்றிக்கொண்டு, தாழ்த்தப்பட்டவர்களுக்கு வகுப்பு வாரித் தேர்தல் தொகுதி திட்டத்தை வாபஸ் செய்வார்களாயின், உண்ணுவிரதம் நின்றுவிடும். தாழ்த்தப்பட்டோரின் பிரதிநிதிகள், பொது வாக்குரிமையின் கீழ், அது எவ்வளவு பரந்த முறையில் இருப்பினும், பொதுத் தேர்தல் தொகுதியிலேயே தேர்ந்தெடுக்கப்படவேண்டும்.

மேலே கூறப்பட்ட விதமாகப் பிரஸ்தாபத் தீர்மானம் மாற்றப்பட்டாலொழிய, உத்தேசிக்கப்பட்டுள்ள உண்ணுவிரதம் அடுத்த செப்டம்பர் மாதம் 20-ஆம் தேதி மத்தியானத்திலிருந்து அமலுக்கு வரும். முன்னதாகவே உங்களுக்கு நிறைய அவகாசம் கொடுப்பதற்காக, இந்தக் கடிதத்தின் நகலை உங்களுக்குத் தந்தி மூலம் அறிவிக்கும்படி இங்கேயுள்ள அதிகாரிகளைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். எப்படியாயினும், மிக மிக மெதுவான வழியின் மூலம் இந்தக் கடிதம் வந்தால்கூட, உற்ற காலத்தில் இக்கடிதம் உங்களுக்குக் கிடைக்கும்படியாக இதைப் போதிய அளவு முன்னதாகவே அனுப்பியுள்ளேன்.

இந்தக் கடிதத்தையும், ஏற்கனவே நான் குறிப்பிட்டுள்ளபடி சர் சாமுவல் ஹோருக்கு நான் எழுதிய கடிதத்தையும் அதி சீக்கிரத்தில் பிரசுரிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். என் சம்பந்தப்பட்டவரையில், நான் இம்மியளவும் வழுவின்றிச் சிறை விதிகளின்படி நடந்து வருகின்றேன். எனது நண்பர்களான சர்தார் வல்லபாய் பட்டேல், ஸ்ரீ மகாதேவ தேசாய் இவ்விருவரையும் தவிர, வேறு எவருக்கும் எனது விருப்பத்தையோ அல்லது அந்த இரண்டு கடிதங்களில் உள்ள விவரங்களையோ நான் வெளியிடவில்லை. இதுதான், அவற்றைச் சீக்கிரமாக வெளியிட வேண்டுமென்ற எனது வேண்டுகோளுக்குக் காரணம்.

நான் எடுத்துக்கொண்டுள்ள தீர்மானத்தைக் குறித்து வருந்துகிறேன். என்னை நான் மதப்பற்றுள்ளவன் என்று கூறிக் கொள்ளுகிறேன். எனவே. அத்தீர்மானத்தைத்

தவிர, எனக்கு வேறொரு வழியும் இல்லை. சர் சாமுவல் ஹோருக்கு நான் எழுதியுள்ள கடிதத்தில் குறிப்பிட்டிருப்பது போல், தரும சங்கடமான நிலைமையிலிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்காகப் பிரிட்டிஷ் சர்க்கார் என்னை விடுதலை செய்யத் தீர்மானித்தாலுங்கூட, எனது உண்ணாவிரதம் தொடர்ந்து நடைபெறும். வேறு எந்த முறையைக் கொண்டும், நான் அத்தீர்மானத்தை எதிர்ப்பதில் நம்பிக்கை வைக்க முடியாது. கௌரவமற்ற எந்த முறையைக் கொண்டும் விடுதலை பெற நான் விரும்பவில்லை.

எனது தீர்மானம் நேர் பாதையிலிருந்து தவறிவிட்டதாக இருக்கலாம். தாழ்த்தப்பட்டவர்களுக்குத் தனித் தொகுதி ஏற்படுத்துவது, அவர்களுக்கோ அல்லது ஹிந்து மதத்திற்கோ அபாயகரமானது என்று நான் கருதுவது முற்றிலும் தவறாக இருக்கலாம். அது அப்படியாயின், எனது வாழ்க்கைத் தத்துவத்தின் மற்ற அம்சங்கள் சரியாக இருக்க முடியாது. அந்நிலையில், உண்ணாவிரதத்தின் மூலம் என்னுடைய மரணமானது நான் செய்த தவறுக்கு ஒரு பிராயச்சித்தமாக இருப்பதுடன், என்னுடைய விவேகத்தில் குழந்தையைப் போல் மிகுந்த நம்பிக்கை வைத்துள்ள எண்ணிக்கையற்ற ஆடவர்கள், பெண்கள் முதலியோரின் பளுவையும் அகற்றியதாக இருக்கும். அதற்கு மாறாக, எனது தீர்மானம் சரியாக இருக்குமாயின், – அது சரி என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை – நான் உத்தேசித்துள்ள முறை, சென்ற கால் நூற்றாண்டுக்கு மேலாக நான் மிகுந்த வெற்றியுடன் முயற்சித்து வந்துள்ள வாழ்க்கைத் திட்டத்தின் பூர்த்தியையே காட்டுவதாகும்.

தங்கள் நம்பிக்கையுள்ள நண்பன்,

எம். கே. காந்தி.

## 4

# வைக்கம் சத்தியாக்கிரகம்

[இந்தியாவின் தென்கோடியில் யாருக்கும் தெரியாத ஒரு சிறு ஊரான வைக்கம், திடீரென்று இந்தியாவெங்கும் மிகுந்த பரபரப்பை உண்டாக்கியதுடன், உலகத்தின் கவனத்தையும் இழுத்தது. அதுபற்றிய விவரங்களைக் கீழே காணலாம்.]

1925-ஆம் ஆண்டில் காந்திஜி வட இந்தியாவில் தமது சுற்றுப்பிரயாணம் முடிந்த பின், தென்னிந்தியாவில் யாத்திரை செய்ய முற்பட்டார். அவ்வருடம் மார்ச் மாதம் 7-ஆம் தேதி அவர் சென்னைக்கு விஜயம் செய்தார். வடக்கே ஹிந்து - முஸ்லிம்

பிரச்னையை அவர் சமாளிக்க வேண்டியிருந்ததெனில், வைதிகர்களின் பலம் பொருந்திய கோட்டையாக விளங்கிய தென்னிந்தியாவில், அவர் தீண்டாமைப் பிரச்னையைச் சமாளிக்க வேண்டியிருந்தது. மார்ச் 9-ஆம் தேதி அவர் வைக்கத்திற்குச் சென்ருர். அப்போது அங்கே ஒரு வருட காலமாகச் சத்தியாக்கிரகம் நடந்து கொண்டிருந்தது.

வைக்கம் சத்தியாக்கிரகத்திலிருந்துதான், தீண்டாமைத் தீமையின் கொடுமையை முதன் முதலாக எல்லோரும் அறிந்து கொண்டனர். தீண்டாதார் எனப்படுவோர் கோவில்களுக்குச் செல்லும் ரஸ்தாக்களிலோ, கோவில்களைச் சுற்றியுள்ள ரஸ்தாக்களிலோ சென்ருல் கோவில்கள் தீட்டாகிவிடும் என்ருர்கள் சாதி ஹிந்துக்கள். பிறகு, தீண்டாதாரின் நிழல் பட்டால் கோவில்களுக்குச் செல்லும் பக்தர்கள் தீட்டாகிவிடுவார்கள் என்றனர். தீண்டாதார்களிடையே ஈழவர் சாதியைச் சேர்ந்த சுமார் பத்து லட்சம் பேர் இருந்தனர்; கல்வியிலோ, பண்பாட்டிலோ அவர்கள் வேறெவருக்கும் குறைந்தவர்கள் அல்ல. விவசாயத் தொழிலாளர்களான மூன்று லட்சம் புலையர்களும் தீண்டாதவராகவே கருதப்பட்டனர். அவர்களுடைய ஊழியம் இன்றேல், சாதி ஹிந்துக்கள் ஒரு நாள்கூட வாழ முடியாது. இவர்களைத் தவிர அங்கிருந்த மூன்று லட்சம் பறையர்களையும் தீண்டாதாராகவே கருதினர். எல்லாச் சமூகத்தினருக்கும் உபயோகமான வெல்லம் உற்பத்தி செய்வதற்கு இன்றியமையாத சாணர்களும் தீண்டாதவராகவே இருந்தனர். ஆனல், வைக்கத்தில் நடந்த சத்தியாக்கிரகத்தின் உடனடியான நோக்கம், கோயில்களைச் சுற்றியுள்ள சாலைகளில் செல்ல சாதி ஹிந்துக்களைப் போல் தீண்டாதாருக்கு சம உரிமை அளிக்க வேண்டும் என்பதே. அந்தச் சாலைகளில் செல்ல ஹிந்துக்கள் அல்லாதாருக்கும் உரிமை இருந்தது. அப்படியிருக்க ஹிந்து சமுகத்தைச் சேர்ந்த தீண்டாதாருக்கு அந்த சாலைகளில் செல்ல ஏன் உரிமை மறுக்கப்படவேண்டும் என்பதே சத்தியாக்கிரகிகளின் கேள்வியாகும்.

திருவாங்கூர் சம்பந்தப்பட்ட வரையில், மலையாளம் சம்பந்தப்பட்டவரையில் வைக்கத்தில் நடந்த இயக்கம் ஒரு பரிசோதனையே. சாலைகளில் செல்வதற்கு, திருவாங்கூரிலுள்ள ஆறில் ஒரு பகுதி மக்களான தீண்டாதாருக்குத் தடை விதிக்கப்பட்டிருந்தது. அந்தத் தடையை எதிர்த்தே பின்னர் புகழ் பெற்ற வைக்கம் சத்தியாக்கிரகம் நடந்தது.

அதையொட்டி காந்தி திருவாங்கூருக்கு விஜயம் செய்தார். வைதிகர்களான நம்பூத்ரிகளையும் மகாராணியையும் பேட்டி கண்டு பேசினர். வைக்கம் சத்தியாக்கிரகம் இந்தியாவெங்கும் பரபரப்பை உண்டாக்கியது. அங்கே பல மாதங்கள் வரையில் சத்தியாக்கிரகம் நடந்த பிறகு, அதிகாரிகள் பிடிவாதத்தைக் கைவிட்டு, கோவிலைச் சுற்றி மூன்று புறங்களில் உள்ள சாலைகளைத் தீண்டாதாருக்குத் திறந்து விட்டனர். இவ்விதமாக, வைக்கம்

சத்தியாக்கிரகிகளின் தியாகமும், காந்திஜியின் ஆதரவும் இறுதியில் வெற்றி யளித்தன; மலையாளத்தில் நிலவி வந்த தீண்டாமைத் தீமையின் கொடுமையும் தணியத் தொடங்கியது.

# 5

# மூன்று வருந்தத்தக்க சம்பவங்கள்

[இந்தத் தலைப்பின் கீழ் 1934 மே மாதம் 4-ஆம் தேதி 'ஹரிஜனி'ல் மகாத்மா காந்தி எழுதிய கட்டுரை கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

ஏப்ரல் மாதம் 25-ஆம் தேதி பீகாரில் ஹரிஜன சுற்றுப் பிரயாணத்தை ஆரம்பித்தேன். முதல் இடமாக அர்ராவுக்குச் சென்றேன். வழியில் ஒரு ஜமீன்தாரின் கோவிலுக்குச் செல்ல வேண்டி யிருந்தது. அந்த ஜமீன்தார் ஹரிஜனங்களுக்குக் கோவிலைத் திறந்து விட்டவர். அவரிடமிருந்து ஒரு பண முடிப்பைப் பெறவே அங்கே சென்றேன். சனாதனிகள் கருப்புக்கொடிகளைக் காட்டித் தடை செய்வார்கள் என்று பயந்த வரவேற்புக் குழுவினர், நான் ஒரு லாரியில் செல்ல வேண்டுமென்று யோசனை கூறினர். அவ்விதம் என்னை ஒருவருக்கும் தெரியாமல் கொண்டு சென்றால் சனாதனிகளுக்குச் சந்தேகம் ஏற்படாதென்றும்,எனவே அவர்களால் தடை ஏற்படாமல் லாரி தப்பலாமென்றும் அவர்கள் நம்பினர். ஆனால், எங்கள் துரதிர்ஷ்ட வசமாக கருப்புக் கொடிகாரர்கள் அத்தந்திரத்தை எதிர்பார்த்தவர்களாய், நாங்கள் இருந்த லாரி நெருக்கமான கூட்டத்தினிடையே வந்ததும், அதை நோக்கிப் பாய்ந்து வந்தார்கள். எனினும், சமுத்திரத்தில் ஒரு துளிபோல் அந்த மாபெரும் கூட்டத்தில் அவர்கள் எம்மாத்திரம்? மற்றவர்கள் அவர்களை அடக்கி, சக்கரங்களைப் பிடித்துத் தொங்கிக்கொண்டிருந்த அவர்களை அப்பால் இழுத்துக்கொண்டு போய் விட்டார்கள். அந்தக் காட்சியை என்னால் சகிக்க முடியவில்லை. ஏதோ அதிர்ஷ்டத்தினால்தான் எவருக்கும் கடுமையான காயம் ஏற்படவில்லை.

கூட்டத்தினர், சனாதனிகளின் தடையைச் சகிக்கக்கூடிய மன நிலையில் இல்லை என்பது நிச்சயமாகத் தெரிந்தது. 'பக்டோ' (பிடியுங்கள், பிடியுங்கள்) என்ற பயங்கரமான கூக்குரல்கள் வானளாவின. சனாதனிகளால் கையாளப்பட்ட முறையும் சாந்தமானதாக இல்லை. கருப்புக் கொடிகாரர்களும் தாங்கள் காயமடைந்தே தீருவதென உறுதி கொண்டனர். ஏனெனில், சனாதனிகளின் தலைவர், தங்களுடைய முட்டுக்கட்டைத் திட்டத்தை ஆரம்பித்தபோதே, தாங்கள் காயமடைந்தாலும் லட்சியம் செய்யப் போவதில்லையென்று என்னிடம் வீம்பு பேசினார்கள். எனவே, மற்றவர்கள் தங்களைப் பிடித்து அப்பால் கொண்டுபோவதை அவர்கள் எதிர்த்தனர்.

சோககரமான இந்தக் காட்சியை நான் திக்கற்ற நிலையில் பார்த்துக் கொண்டிருந்தேன். நான் என் லட்சியத்தைவிட்டு வந்த வழியே திரும்பிச் செல்லுவதாக இருந்தாலொழிய, அந்த நிலைமையைச் சமாளிக்கத் தாற்காலிகமான முறை எதுவும் எனக்குத் தோன்றவில்லை. எனவே, கருப்புக்கொடிகாரர்களைத் தூக்கி அப்பால் கொண்டு செல்லுவதற்கு நான் இசைய வேண்டியிருந்தது. அங்கே போலீசாரும் இருந்தனர். அவர்களும், தடை செய்வோருக்கு எவ்விதக் காயமுமின்றி அவர்களை அப்புறப் படுத்த முயற்சித்துக் கொண்டிருந்தார்கள். யாருக்கும் கடுமையான காயம் எதுவும் இல்லையென்றாலும், என் உடலில் ஊடுருவிப் பாய்ந்து என்னை உருக வைப்பதற்கு அந்தக் காட்சி போதுமானதாக இருந்தது. விவரிக்க முடியாத ஓர் உணர்ச்சி என்னை ஆட்கொண்டது. மூர்ச்சையாக வருவதுபோல் எனக்குத் தோன்றியது. என்னையறியாமலேயே என் உள்ளம் இடைவிடாது ஜபித்துக் கொண்டிருக்கும் ராமநாமத்தை, மனமறிந்து அப்போது ஜபிக்க ஆரம்பித்தேன். அது என்னை ஒரு நிலைப்படுத்தியது. எனக்கு என்ன நேர்ந்தது என்பதையோ, அல்லது என் இதயம் என்ன பாடுபடுகிறது என்பதையோ யாரும் அறிந்து கொள்ளாமலேயே, நான் அன்றைய அலுவல்களைச் செய்து முடிப்பது சாத்தியமாயிற்று.

நாங்கள் கோவிலுக்குச் சென்று, பண முடிப்பைப் பெற்றுக்கொண்டோம். பிறகு அர்ராவில் நடக்கும் கூட்டத்திற்கு மோட்டாரில் சென்றோம். அங்கே சந்தடியும் கூக்குரலும் அதிகமாக இருந்ததால், உபசாரப் பத்திரத்திற்கும் பணமுடிப்பிற்கும் பதிலாக ஒரு சில வார்த்தைகளுக்குமேல் எதுவும் சொல்ல சாத்தியப்படவில்லை. அர்ராவிலிருந்து நாங்கள் ரெயில் வண்டியில் புறப்பட்டு, மத்தியானம் பக்ஸாருக்குச் சென்றோம். பக்ஸாரிலும் கொடி ஆர்ப்பாட்டம் இருந்தது. எனினும், என் மோட்டார் அந்த இடத்தைப் பத்திரமாகக் கடந்துவிட்டது. ஆனால், மீரா பென் மோட்டாரின்மீது ஒரு தடியடி விழுந்தது. நான் அங்கே சென்ற 15 நிமிஷங்களுக்குள், வரவேற்புத் தொண்டர்களுக்கும் கருப்புக்கொடிகாரர்களுக்கும் சச்சரவு நடந்ததாகக் கேள்விப் பட்டேன். அவ்வளவு பெரிய ஜனக் கூட்டத்தில் கருப்புக் கொடிகாரர்களின் தொகை முப்பதுக்குமேல் இராது. அச்செய்தியைத் தொடர்ந்து மூன்று தொண்டர்கள் உள்ளே வந்தார்கள். அவர்களில் இருவருக்கு மண்டையில் காயம் ஏற்பட்டிருந்தது. மூன்றாவது நபருக்குக் கை வீங்கியிருந்தது. சனாதனிகளின் அடிகளைத் தடுத்தபோது தாங்கள் காயமடைந்ததாக அவர்கள் கூறினர். ஆர்ப்பாட்டக்காரர்களின் அமளியைக் கண்டு கோபாவேசம் கொண்ட கூட்டத்தினரை, வரவேற்புத் தொண்டர்கள் சமாதானம் செய்து கொண்டிருந்தார்களாம். சில சனாதனிகளுக்கும் காயம் ஏற்பட்டது நிச்சயமென்றும் அவர்கள் என்னிடம் கூறினர்.

பொதுக்கூட்டத்திற்குச் செல்ல வேண்டிய நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. நான் சஞ்சலப்பட்டுக்கொண்டிருந்தேன். அந்தச் சம்பவம் என் மனத்தில் பசுமையாக இருந்தது. சிவப்புக் கந்தல் துணியைக் கண்டு காளை வெறிப்பது போல், என் மோட்டாரைக் கண்டு கருப்புக் கொடிகாரர்கள் வெறிக்கலாமென்று எனக்குத் தோன்றியது. எனவே, தக்கர் பாபாவுடனும் விந்தியா பாபுவுடனும் கலந்தாலோசித்து, நான் கூட்டத்திற்கு நடந்து செல்லுவதென்று தீர்மானித்தேன். நான் நடந்து செல்லுவது கருப்புக் கொடிகாரர்களின் கோபத்தைத் தணித்து, அனுதாபிகளும் ஆதரவாளர்களும் அடங்கிய கூட்டத்தினரையும் சாந்தப் படுத்தலாமென்று கருதினேன். விந்தியா பாபு முன்சென்று, நான் கூட்டத்திற்கு நடந்து செல்ல உத்தேசித்திருப்பதாயும், எனவே யாரும் கூக்குரலிடவோ, என் கால்களைத் தொட முயற்சிக்கவோ, கருப்புக் கொடிகாரர்களைத் தொந்தரவு செய்யவோ கூடாதென்றும் கூட்ட ஜனங்களிடம் கூறினர். கூட்டம் நடந்த இடம் ஒரு மைல் தூரத்திற்குக் குறைவாகவே இருக்கும். வழி நெடுக, இரு வரிசைகளிலும் ஏராளமான மக்கள் நின்று கொண்டிருந்தார்கள். நடுவில், நான் செல்லுவதற்குத் தாராளமாக இடமும் விட்டிருந்தார்கள். அந்த நடை எனக்கு ஒரு ஸ்தல யாத்திரையாக இருந்தது. தக்கர் பாபாவும் விந்தியா பாபுவும் என்னுடன் கூட வந்தார்கள். கூட்டம் மிகவும் வெற்றிகரமாக நடந்தது. ஏராளமான ஜனங்களும் நான் பேசியதை. சிறிதும் சந்தடி செய்யாமல் மௌனமாகக் கவனித்துக் கேட்டார்கள். நான் கேள்விப்பட்டதையும் பார்த்ததையும் விவரித்துக் கூறினேன். வரவேற்புத் தொண்டர்களால் ஏதாவது காயமேற்பட்டிருக்குமாயின், நான் அதற்காக ஆர்ப்பாட்டக்காரர்களின் மன்னிப்பைக் கோருவதாகக் கூறினேன். அச்சம்பவங்களைக் குறித்து மேற்கொண்டு விசாரிப்பதாகவும் உறுதி கூறினேன்.

கூட்டம் முடிந்ததும், நான் என் ஜாகைக்குத் திரும்பவும் நடந்தே சென்றேன். ஜாகைக்குச் சென்ற உடனே அங்கே ஒரு சனாதனியைக் கண்டேன். அவர் தமது மண்டையில் ஏற்பட்ட ஒரு காயத்தைக் காட்டியதுடன், மற்றும் சிலரும் காயமடைந்துள்ளனர் என்றும், அவர்களில் ஒருவர் நிச்சயமாக இறந்துவிடுவார் என்றும் என்னிடம் கூறினர். அவர்கள் யாவரும் ஆஸ்பத்திரியில் இருந்தனர். நான் தக்கர் பாபாவை ஆஸ்பத்திரிக்கு அனுப்பினேன். அதன் மத்தியில் நான் ஸ்டேஷனுக்குச் செல்ல ஆயத்தம் செய்து கொண்டிருந்தேன். பிரயாண ஏற்பாடுகள் முடிந்ததும், நானும் தக்கர் பாபாவைப் பின்தொடர்ந்து ஆஸ்பத்திரிக்குச் சென்று, காயமடைந்தவர்களைப் பார்வையிட்டேன். மொத்தம் அங்கே நால்வரே இருந்தனர். அவர்களில் எவர் இறந்துவிடுவார் என்று சனாதனி கூறினரோ, அவர் அப்படியொன்றும் மோசமான நிலையில் இல்லவே இல்லை. அவருக்குத் தலையில் காயம் பட்டிருந்தது. அவர் தம்மைப் பரிசோதிப்பதற்காக

டாக்டரின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அவரால் என்னுடன் எவ்விதத் தடுமாற்றமுமின்றி நீண்ட நேரம் பேச முடிந்தது. அவர் முற்றிலும் சுயப்பிரக்ஞையுடனேயே இருந்தார். அவருக்கு ஏற்பட்ட காயங்களைக் கடுமையானவை என்று நான் வருணிக்க முடியாது. அவரது நிலைமை பற்றி டாக்டரும் பயப் படவில்லை. மற்ற மூவருக்கும் அதிகக் காயமில்லை. தங்களை அடித்தவர்களில் ஒருவரைத் தாங்கள் அடையாளம் கூற முடியு மென்றும், அவர் வரவேற்புக் குழுவிற்குரிய ரிப்பனை அணிந்து கொண்டிருந்ததாயும் காயமடைந்திருந்த நால்வரும் கூறினர்.

அங்கே எல்லாவற்றையும் விவரமாக விசாரிக்க என்னால் இயலாததால், அடித்தவர்களின் பெயர்களையும் அல்லது அடை யாளங்களையும், அங்கே நிகழ்ந்த முழு விவரங்களையும் எனக்கு எழுதியனுப்பும்படி அவர்களைக் கேட்டேன். காயமடைந்த வர வேற்புத் தொண்டர்கள் என்னிடம் சொன்னதையும் அவர்களிடம் கூறினேன். அத் தொண்டர்கள் சனாதனிகளை அடித்திருந்தாலோ அல்லது அடிக்கும்படி மற்றவர்களைத் தூண்டியிருந்தாலோ, என்னால் சாத்தியமான பிராயச்சித்தத்தைச் செய்வதாயும் அவர் களுக்கு உறுதி கூறினேன். வரவேற்புத் தொண்டர்களைப் போல் சனாதனிகளிடமும் எனக்கு அவ்வளவு அன்பு உண் டென்றும் அவர்களிடம் கூறினேன். நான் ஆஸ்பத்திரிக்கு அவசர அவசரமாகச் சென்று திரும்ப வேண்டியிருந்தது. ஜாஸிடிக்குச் செல்லும் ரெயில் வண்டியைப் பிடிப்பதற்காக நாங்கள் ஸ்டே ஷனுக்கு விரைந்து செல்ல வேண்டியிருந்தது. 26-ஆம் தேதி விடியற்காலம் 2-10 மணிக்கு அந்த வண்டி ஜாஸிடி போய்ச் சேர்ந்தது.

எங்களுடன் ரெயிலில் பிரயாணம் செய்த பண்டிதலால் நாத்தும் அவரது கோஷ்டியினரும் இரவில் தொந்தரவு கொடுத் துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் ஒவ்வொரு ஸ்டேஷனிலும் கீழே இறங்கி, 'அவரது லட்சியத்தை நிறைவேற்றுவதற்காகத் தொடர்ந்து செல்ல அவரை நாங்கள் அனுமதிக்கமாட்டோம்' என்றும், மற்றும் சில சுலோகங்களையும் பலம் கொண்டவரையில் உரக்கக் கூவினர். அவர்கள் அவ்விதம் கூக்குரலிட்ட போது, எனக்குத் தெரிந்த வரையில் அவர்களை யாரும் எவ்விதத்திலும் தொந்தரவு செய்யவில்லை.

அநேகமாக ஒவ்வொரு ஸ்டேஷனிலும் என்னை வரவேற்பதற் காக ஜனக் கூட்டம் வந்தது. எனது பிரயாணத்தை நிறுத்தி விடும்படி செய்வதற்கோ, அவரையும் அவரது கோஷ்டியினரையும் பொதுமக்கள் ஆத்திர மடைந்து கடுமையாக தாக்கும்படி செய்வ தற்கோ சனாதனிகள் முயற்சித்துக் கொண்டிருக்கையில், பொது மக்கள் பேசாமல் இருந்தனர். இவ்விதமாக, நாங்கள் ஜாஸிடி போய்ச் சேர்ந்தோம். ஜாஸிடி ஸ்டேஷனில் கூட்டம் ஜன சமுத்திரம் போல் இருந்தது. ஸ்டேஷனில் போதிய விளக்குகள் இல்லை. எனவே, நான் ஜனங்களின் முகங்களைப் பார்க்க முடிய

வில்லை. போலீசாரும் இருக்கத்தான் செய்தார்கள். போலீசாரும் தொண்டர்களுக்குப் பக்கத்தில் நின்று என்னை அழைத்துச் செல்லுவதில் பங்கு எடுத்துக் கொண்டார்கள்.

நாங்கள் சிரமப்பட்டு, பிரயாணிகளிடமிருந்து டிக்கெட்டுகளை வாங்கும் ஸ்டேஷன் கதவிற்கு அருகில் வந்தோம். மூச்சுத் திணறும்படி செய்யும் கூட்டத்தினிடையே நாங்கள் செல்ல வேண்டியிருந்தது. கூட்டத்தின் நடுவே ஆங்காங்கு ஏராளமான கருப்புக் கொடி ஆர்ப்பாட்டக்காரர்களும் இருந்தனர். போலீஸ் அதிகாரிகளும் தொண்டர்களும் மிகவும் கஷ்டப்பட்டு என்னை மோட்டார் இருந்த இடத்திற்கு அழைத்துச் சென்றார்கள். என்னுடன் கூட மோட்டாரில் ஏறிக்கொள்ள இருந்த தக்கர் பாபாவினால், ஜன நெருக்கம் காரணமாக அவ்விதம் செய்ய முடியவில்லை. அவருக்காக மோட்டாரை நிறுத்திக் கொண்டிருப்பது அபாயகரமாகத் தோன்றியது. எனவே, மோட்டார் கூட்டத்தினூடே மிகவும் மெதுவாக நகரத் தொடங்கியது மோட்டாரின் மேற்புறத்தில் கடுமையான அடிகள் விழுந்தன. மேற்புறம் எங்கே சிதல் சிதலாகி விடுமோவென நான் ஒவ்வொரு விநாடியும் எதிர் பார்த்துக் கொண்டிருந்தேன். இதன் மத்தியில் பின்புறமுள்ள கண்ணாடியின் மீது ஓர் அடி விழுந்தது. உடைந்த கண்ணாடித் துண்டுகள் என் பக்கத்தில் விழுந்தன. மோட்டாரின் முன்புற ஆசனத்தில் உட்கார்ந்திருந்த சசிபாபு, கண்ணாடியைக் குறி வைத்து யாரோ ஒரு கல்லை விட்டெறிந்திருக்கிறார் என்று நிச்சயமாகக் கூறினார். எனக்கு அது நிச்சயமாகத் தெரியவில்லை. எனினும், உயிருக்கு ஆபத்து ஏற்படாவிட்டாலும், நான் படுகாயத்திலிருந்து தப்பினேன் என்பதை அறிந்தேன்.

சனாதன தருமத்தின் பிரதிநிதிகள் அவ்வளவு இழிவாகவும் மூர்க்கத்தனமாகவும் நடந்து கொண்டதைக் காண நான் வருந்துவதுடன், வெட்கமும் அடைகிறேன். வர்ணாச்சிரம சுயராஜ்ய சங்கத்தின் பெயரால் இந்த ஆர்ப்பாட்டங்களை உருவாக்கிய சில மனிதர்களின் நடத்தைக்கு, எவ்வித நியாயமும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.

## 6

# மதுவிலக்கின் சமூகநல அம்சம்

[ஜான் பார்னபாஸ்]

குடியை நாம் எவ்வளவுதான் வெறுத்தாலும், அதை ஒழிப்பதற்கு முயற்சி செய்தாலும், குடிப்பவர்களின் நிலைமையை நாம் நியாயமாக அனுதாபத்துடன் கவனித்து, அவர்களுடைய சங்க

டங்களைப் புரிந்துகொள்ள முயற்சிக்கலாம். இந்தப் பிரச்னையின் சமூக நல அம்சத்தை கவனிக்காமல் தயாரிக்கப்படும் எந்த மது விலக்குத் திட்டமும், ஒருவருக்கு உதவி செய்யும் முயற்சியிலேயே அவருக்குக் கெடுதல் விளைவித்துவிடும்.

## குடிக்கு அவசியம்

மனிதனின் பல்வேறு விதமான தேவைகளுக்குப் பல்வேறு விதமான காரணங்களிருக்கின்றன. குடிப்பழக்கமே கூடாது என்று நாம் அடியோடு கண்டிக்கும்போது, சமூகத்தில் ஒரு பகுதியினருக்கு அதனுல் ஏற்படும் நன்மையையும் நாம் ஒப்புக் கொள்ள வேண்டும். சாதாரணமாக ஒருவன் வேண்டுமென்றே குடிப்பதில்லை. ஏதோ சில வெளிக்காரணங்களினுலேயே அவன் குடிக்கிருன். இந்தியாவில் கள்ளுக்கடையை ''ஏழைகள் கிளப்'' என்றே சொல்லலாம். வசதி உள்ளவர்களுக்கு வில்லிங்டன் கிளப்புகளும், ஜிம்கான கிளப்புகளும், இன்னும் பலவிதமான கிளப்புகளும் இருக்கின்றன. அவர்கள் மற்றவர்களுடன் கலந்து பழகுவதற்கும், தேவையில்லாதபோது கூடப் பொழுது போக்கு வதற்கும் அவை உதவி செய்கின்றன. அதே மாதிரி ஏழைகளுக் குக் கள்ளுக்கடைகள் பயன்படுகின்றன. நாள் பூராவும் தொழிற் சாலையின் புழுதியிலும், சப்தத்திலும் வேலை செய்துவிட்டுக் கொஞ்ச நேரம் அங்கே அவனுக்குப் பொழுது போகிறது. அவன் வீடு என்று சொல்லிக்கொள்ளும் நெருக்கமான, அசுத்தமான அவனுடைய அறைகளில் அதற்கு வாய்ப்புக் கிடைக்காது. குழந் தைகளின் அழுகையிலிருந்து அங்கே அவன் தப்பித்துக்கொள்ள முடிகிறது. தன்னைப்போல் அதே விஷயங்களில் அக்கறை உள்ள மற்றவர்களுடன் கலந்து உறவாடவும் முடிகிறது. கள்ளுக் கடை ஒரு ஜனநாயக ஸ்தாபனம். ஜாதி, மத பேதமில்லாமல் எல்லோரும் அங்கே வரலாம். அங்கே சென்றவுடன் எல்லோரும் சமநிலைக்கு வந்துவிடுகிருர்கள். மனித உணர்ச்சிகளைத் தாண்டி அங்கே ஒரு கனவு வாழ்க்கையில் இருக்க முடிகிறது!! அதனுல் தான் மதுவிலக்கு என்பது வசதியுள்ளவர்கள் ஏழைகளைத் தாக்கும் ஒரு முயற்சி என்று ஆட்சேபிக்கப்படுகிறது!! பல ருடன் கூடிப் பழக வேண்டும் என்ற உணர்ச்சிக்குக் கள்ளுக்கடை வாய்ப்பளிக்கிறது.

பணக்காரன் செல்வத்தில் புரளுகிருன்; சுகங்களை அனுப விக்கிருன். துக்கம், கவலைகள், வறுமை, மாறுதலே இல்லாத ஒரே மாதிரியான வாழ்க்கை ஆகியவைகளே ஏழையின் விதியாக இருக்கிறது. ஆனுல், அவன் குடிக்கும்போது தாற்காலிகமாக வாவது அதையெல்லாம் மறந்துவிடுகிருன். அது க்ஷணநேர சுகமாயிருந்தாலும், குடிப்பதற்கு அது நியாயமான ஒரு காரண மேயாகும். தன்னுடைய மனநிலையை மாற்றிக் கொள்ளுவதற்கு அதை அவன் ஒரு மந்திரக் கோலாக வைத்துக் கொண்டிருக் கிருன்.

அவனுடைய அன்றாட வேலையில் எவ்வளவோ தோல்விகள், ஏமாற்றங்கள் ஏற்படுகின்றன. தன் வேலையிலும், அன்றாட மாமூல் வாழ்க்கையிலும் கிடைக்காத திருப்திக்கு ஈடாகக் குடிக்கிறான். தன்னிடமுள்ள ஒரு அளவுக்குட்பட்ட வசதிகளைக் கொண்டு வாழ்க்கையின் மேடுகளை அவன் தாண்ட முடிவதில்லை. அதனால் குடியில் ஒளிந்து கொள்ளுகிறான். பிரத்தியட்ச உண்மைகளிலிருந்து தப்பித்துக் கொள்ளும் முயற்சியே அது. மறப்பதற்காகக் குடிக்கிறான்; அதன் மூலம், தான் மறக்க விரும்புவதை இன்னும் அதிகமாக்கிக் கொள்ளுகிறான். இவ்வாறு அவன் தன்னை ஒரு விஷச் சுழலில் சிக்கவைத்துக் கொள்ளுகிறான். சிலருடைய "சிறுமை உணர்ச்சிக்கும், அவமானத்திற்கும்" அது ஆறுதல் அளிக்கிறது. குடி என்பது ஒரு 'சர்வரோக சஞ்சீவி' என்று நினைத்துக் கொள்ளுகிறான். அவன் விரும்புவது சாதாரண போதையல்ல. விறுவிறுப்பையும், ஆறுதலையும் தேடிக் கண்டு பிடிக்கிறான். அதில் அவனுக்குக் கிடைக்கும் திருப்தி மறு நாள் உழவு மாட்டு வேலைக்கு அவனுக்குப் பலமளிக்கிறது.

குடியின் தேவை மனப்பான்மையை மட்டும் பொறுத்ததல்ல; உடலும் அதை நாடுகிறது. 'ஹோ' வென்று அலறும் இயந்திரங்களின் சப்தத்தின் நடுவில் தொழிற்சாலைகளில் தினம் ஆறு மணி முதல் எட்டு மணி வரையில் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. அவர்களை ஊக்கிவிடுவதற்கு ஒன்றுமில்லையென்றால், அவர்களுக்கு நிச்சயமாக நரம்புத் தளர்ச்சி ஏற்பட்டுவிடும். அந்த சுகம் எவ்வளவு தாற்காலிகமானதாயிருந்தாலும், குடிப்பதன் மூலம் அவர்களுக்குப் புதிய ஒரு சுதந்திர உணர்ச்சி ஏற்படுகிறது. பொழுது சாயும்போது சோர்வடைந்துள்ள அவனது நரம்புகளுக்குக் குடி ஒரு ஊக்கமளிக்கும் சக்தியாயிருக்கிறது. அவனுடைய கவலைகளையும், வறுமையைப் பற்றிய நினைவையும் மறக்கடித்து விடுகிறது. மாலையில் வேலையிலிருந்து திரும்பும் போது இதைப் பற்றியே அவன் நினைத்துக் கொண்டிருந்தால் அவனுடைய உள்ளமும், உடலும் சீரழிந்துவிடும்.

புள்ளி விவரங்களுக்குத் தனி அர்த்தமுண்டு. இந்தியாவைப் பற்றிய போதிய புள்ளி விவரங்கள் கிடைக்காததால் சில அமெரிக்கப் புள்ளி விவரங்களைக் கொடுக்கிறேன். மனித சுபாவம் என்பது, எல்லா இடங்களிலுமே ஒரே மாதிரியானதுதான். ஆகையால், இந்திய நிலைமைக்கும் அது பொருத்தமாயிருக்கலாம். "நீங்கள் ஏன் குடிக்க ஆரம்பித்தீர்கள்?" என்று நியூயார்க்கில் 246 நோயாளிகளிடம் கேட்கப்பட்டது. கிடைத்த பதில்கள் பின்வருமாறு: பலருடன் கலந்து பழகுவதற்காக—52.5%; சங்கடங்கள்—13%; வைத்திய காரணங்கள்—9.3%; தொழில்—7%; பெரியவர்கள் கற்றுக் கொடுத்தார்கள்—7%; வேலையில்லை—5%; தெரியாது—5%; குஷால் பேர் வழி என்று கருதப்பட வேண்டுமென்பதற்காக—1.2%.

## குடியின் தீமைகள்

பொதுவாகப் பார்க்குமிடத்து, குடிக்கு அடிமையானவன் தன்னுடைய பொறுப்புகளை லட்சியம் செய்வதில்லை; முன்னுக்கு வரவேண்டும் என்ற ஆசையை இழந்து விடுகிறான். அவனுடைய அன்பும் குறைந்து விடுகிறது. "அவன் சமூகத்திற்கு அபாயமாயிருந்தாலும், சாதாரணமாக பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குப் போகாமல் தப்பி விடுகிறான்."

மன உறுதி இல்லாத பலவீனர்களே சுலபமாகக் குடிக்கு இரையாகி விடுகிறார்களென்பது பல ஆராய்ச்சிகளிலிருந்து தெரிகிறது. உறுதியான மனம் இல்லாததால் குடிப்பழக்கம் ஏற்படுகிறது. குடிப்பழக்கத்தினால் மனஉறுதி தளர்ந்து விடுகிறது. இது ஒரு விஷச்சுழல். மனஉறுதியுள்ள ஒருவனுக்கு எவ்வளவோ இதர அக்கறைகள் இருக்கும்; அவன் கவனிக்க வேண்டிய வேறு பல விஷயங்கள் இருக்கும். பொழுது போக்குக்கும், தன்னைத் தானே திருப்தி செய்து கொள்ளுவதற்கும் அவனுக்கு வேறு வாய்ப்புகளிருக்கின்றன. ஆகையால், அவன் சுலபமாக போதையின் கவர்ச்சிக்கு இரையாகிவிட மாட்டான். வழக்கமாகக் குடிக்கும் 100 பேர்களை டாக்டர் ஆண்டர்ஸன் பரிசோதனை செய்தார். இவர்களில் 37 பேர் மனஉறுதி இல்லாதவர்கள்; 7 பேர் புத்தி சுவாதீனமில்லாதவர்கள்; 7 பேர் வலிப்புக்காரர்கள்; 32 பேர்களுடைய மனோபாவத்திலேயே கோளாறுகள். இங்கிலாந்தில் மூளைக் கோளாறுக்கும், குடிப்பழக்கத்திற்கும் உள்ள சம்பந்தம் .70 முதல் .80 வரை என்று பாரிங்டன் கண்டுபிடித்திருக்கிறார்.

குடித்தீமை குடிப்பவருடன் நின்றுவிடுவதில்லை. அது கொஞ்சம் கொஞ்சமாக அவனுடைய குழந்தைகளுக்குப் பரவுகிறது. குடும்பத்தில் ஸ்திரமற்ற ஒரு நிலைமை ஏற்படுகிறது. அவனுடைய பொருளாதாரத்தையே அது குலைத்து விடுகிறது. குழந்தைகள் ஒன்று, கருவிலேயே பாதிக்கப்பட்டு விடுகின்றன, அல்லது சிசுவாயிருக்கும் காலத்தில் சரியாக கவனிப்பு இல்லாமல் பாதிக்கப்பட்டு விடுகின்றன. இவர்களுக்குச் சரியான கவனிப்போ, பராமரிப்போ இல்லை என்பது பிரசித்தம். சிகாகோவிலுள்ள சிறுவர்கள் கோர்ட்டு முன்பு வந்தவர்களில் 75 சதவிகிதத்தினரின் குற்றங்களுக்குக் காரணம் கவனக் குறைவும், பெற்றோர்கள் குடிகாரர்களாயிருந்ததுமே யொழிய, அவர்களுடைய துரதிருஷ்டம் அல்ல என்பது தெரிந்தது. அவர்களில் 13 பேர்களுடைய வறுமைக்குக் காரணம், தாயாரின் ஒழுக்கக் குறைவாகும்; 160 பேர்களுடைய தகப்பனார்கள் குடிகாரர்களாயிருந்தார்கள்; 92 பேர்களின் தாயார்கள் குடிகாரிகளாயிருந்தார்கள்; 63 பேர்களுடைய தாய், தகப்பன்மார்கள் இருவருமே குடிகாரர்களாயிருந்தார்கள்.

குழந்தைகள் கஷ்டப்படுகிறுர்கள் என்பதோடு மட்டுமில்லை. குடும்ப வாழ்வின் அமைப்புக்கே ஆபத்து வந்துவிடுகிறது. மதுபானத்தினுல் வறுமை ஏற்படுகிறது. வறுமையினுல் குற்றங்கள் ஏற்படுகின்றன. குற்றங்களினுல் குடும்பங்கள் சீரழிகின்றன. 1887 முதல் 1906 வரையில் அமெரிக்காவில் கணவன் அல்லது மனைவியின் குடிப்பழக்கம் காரணமாக 184, 568 விவாக ரத்துகள் ஏற்பட்டன. அமெரிக்க ஜனக்கணக்கு இலாகா வெளியிட்டுள்ள விவரங்களின்படி, விவாக ரத்துக்களில் ஐந்தில் ஒன்றுக்குக் காரணம் குடிப்பழக்கமே. தங்கள் முன்பு வந்த வழக்குகளில் 45 சத விகிதம் குடிப்பழக்கம் சம்பந்தமானவை என்றும், வேறு எந்தத் தனிப்பட்ட காரணத்திற்காகவும் வந்த வழக்குகள் 14 சத விகிதத்திற்கு அதிகமாக இல்லை என்றும், குடும்ப உறவுகள் பற்றிய வழக்குகளை விசாரிக்கும் நீதிபதிகள் கூறுகிறுர்கள். குடியினல் காம இச்சை எவ்வளவு அதிகமாகி விடுகிறது என்பதை இப்போது மதுவிலக்கை எதிர்ப்பவர்கள் உணரவில்லை போல் தோன்றுகிறது. இதனுல் மேகநீர் வியாதிகள் அதிகமாகின்றன. தேக அசௌக்கியம், வீரியக்குறைவு, வேலை செய்யும் சக்தி ஆகியவைகளால் தேகத்திற்கு எவ்வளவு நஷ்டம் ஏற்படுகிறது என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

தன்னுடைய ஒழுக்கத்தைப் பற்றிப் பெருமை கொள்ளும் இந்தியா போன்ற ஒரு நாடு, குடியினுல் ஒழுக்கக் குறைவு எவ்வளவு அதிகமாகிறது என்பதை உணரவேண்டும். 1909-ஆம் வருடத்தில் பிரிட்டிஷ் மீட்சி விடுதிகளில் இருந்த 865 ஒழுக்கக் குறைவான பெண்களில், 40 சத விகிதத்தினர் குடியின் காரணமாகவே ஒழுக்கமிழந்தார்கள் என்று அரசாங்க இன்ஸ்பெக்டரின் அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது. ஒழுக்கமிழந்த 2,000 பெண்களில், 82·5 சத விகிதத்தினர் குடிப்பழக்க முள்ளவர்கள்; 46·5 சத விகிதத்தினருடைய தாயார்கள் குடிப்பழக்க முடையவர்களாயிருந்தார்கள்; 61·5 சத விகிதத்தினரின் தகப்பனர்கள் குடிகாரர்களாயிருந்தார்கள் என்று பிளாக்வெல் தீவைச் சேர்ந்த டாக்டர் ஸாங்கர் கூறுகிறுர். விபசாரத் தொழிலில் உள்ளவர்களிடையேதான் குடி மிகவும் அதிகமாயிருக்கிறது.

இந்தியாவின் வறுமையைப் பார்க்கும்போது, இதற்காகச் செலவிடப்படும் பணம், நகரில் தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்கள், கிராமங்களிலுள்ள விவசாயிகள் இருவரையுமே அழித்து விடுகிறது. குடிக்காக எல்லைப்புற மாகாணத்தில் சராசரி செலவு ரூ. 0—3—8; பம்பாய் ராஜதானியில் ரூ. 2—5—1; மற்ற மாகாணங்களில் இவ்விரண்டுக்குமிடையே ஒரு தொகை என்று கடைசியாக வெளியான கலால் அறிக்கையில் காணப்படுகிறது. விட்லி கமிஷன் அறிக்கையின்படி, ஷோலாப்பூரில் ஒரு தொழிலாளி குடிக்காக சராசரி ரூ. 1—7—5 செலவிடுகிறுன். அவனுடைய மொத்த வருமானம்

ரூ. 39—5—8. 2,473 தொழிலாளர் குடும்பங்களில் 71·6 சத விகித குடும்பங்கள் குடிக்காகப் பணம் செலவிடுகின்றன என்று 1932 ஜூன் மாதத்தில் வெளியான 'பம்பாய் லேபர் கெஜட்' கூறுகிறது. குடும்பம் என்று இல்லாத 601 பேர்களில் 91·1 சத விகிதத்தினர் குடிக்காகப் பணம் செலவிட்டனர். பஞ்சாபைச் சேர்ந்த பேராசிரியர் குல்ஷான்ராய் பின்வருமாறு கூறுகிறார்: "நாட்டுச்சாராயம் ஒரு புட்டி ஆறு அல்லது எட்டணவுக்குக் கிடைத்தாலும் (அது மலிவுதான் என்றே நினைக்கிறேன்), அடிக்கடி அதை வாங்கிக்கொண்டிருந்தால், ஏழைத் தொழிலாளியின் அன்றாட ஊதியத்தின் பெரும் பகுதியை அது விழுங்கிவிடுகிறது. ..............வருமானத்தில் மூன்றில் ஒரு பாகத்தையோ, சரி பாதியையோ குடிவகைகளுக்காகச் செலவிடுவது யாரையும் சீர்குலைத்துவிடும்." சூரத் ஜில்லாவில் பெரும்பாலான விவசாயிகள் குடி காரணமாகவே தம் நிலங்களை இழந்தார்கள் என்றும், குடி காரணமாக அவர்களுடைய கடன் அதிகமாயிற்று என்றும் 1928-இல் டாக்டர் எம். எச். மான் எடுத்துக் காட்டியிருக்கிறார். கொங்கண் கூட்டுறவு விசாரணைக் கமிட்டி, தொழிற்தகராறுகள் கமிட்டி ஆகியவற்றின் புள்ளி விவரங்களும் அவ்வாறே கூறுகின்றன. ஆனால், "கள் நல்லது. அது ஆரஞ்சு ரசத்தைப் போன்றதாகும். ஆகையால், கள்ளுக்கடைகளை மூடாதீர்கள்" என்று டாக்டர் கொலாகோ அசெம்பிளியில் கூறுகிறார்.

## குடிக்கு மாற்று

குடியினால் ஏற்படும் இந்த மகத்தான தீமைகளை யெல்லாம் பார்க்கும்போது, மதுவிலக்கு இயக்கத்தை ஆரம்பித்ததற்காக காங்கிரஸுக்கு நன்றி செலுத்தாமலிருக்க முடியாது. மதுவிலக்கு ஏற்படத்தான் வேண்டும்; ஆனால், அது புத்திசாலித்தனமானதாய் இருக்க வேண்டும். இந்தியாவில் குடியின் தேவை, குடிப்பதற்கான காரணம் ஆகியவைகளைப் பற்றி ஆரம்பத்தில் நான் எடுத்துக் காட்டியிருக்கிறேன். மதுவிலக்கு வெற்றி பெற வேண்டுமானால், எந்தத் தேவைகளைக் குடிவகைகள் பூர்த்தி செய்கின்றனவோ அந்தத் தேவைகளுக்கு வேறு ஏதாவது வழி செய்ய வேண்டும். அமெரிக்க சமூக நிலைமைக்கும், இந்திய நிலைமைக்கும் மையமாக உள்ள வித்தியாசத்தைச் சிலர் புரிந்து கொள்ளாமல், அமெரிக்காவில் மதுவிலக்கு தோல்வியடைந்து விட்டதென்பதைக் காட்டி எச்சரிக்கிறார்கள். "பிரபுக்களைப் போல் குடிப்பதில்" அமெரிக்க சமூகம் பெருமையடைகிறது. ஆனால், இந்திய சமூகம் குடிகாரனை ஒதுக்கித்தள்ளுகிறது. ஆகையால், வெளி தடங்கல்களைச் சமாளிக்க முடிந்தால் இங்கே மதுவிலக்கு வெற்றி பெற்றுத்தான் ஆக வேண்டும். கள்ளுக் கடைகளை அரசாங்கமே நடத்த வேண்டும் என்று பேராசிரியர் குல்ஷான்ராய் கூறுகிறார். உடனடியான மதுவிலக்கின் அபாயங்களைக் குறைப்பதற்காகப் பனைமரங்களை வளர்க்க வேண்டுமென்று சர் சோக்ஸி கருதுகிறார். ஆனால், வழக்கமான

குடிகாரர்களுக்குப் பொழுதுபோக்குக்காக வேறு மாற்று வசதிகள் அளிக்க வேண்டுமென்று நான் கருதுகிறேன்.

சமூக சீர்திருத்த இயக்கங்கள் ஒன்றை அழிப்பதற்கான முறைகளைப் பின்பற்றும்போது அத்துடன் உருவான காரியங்களையும் தொடர்ந்து செய்ய வேண்டும். எதற்காக மனிதர்கள் கள்ளுக் கடைகளுக்குப் போகிறார்கள் என்பதைக் கண்டுபிடித்து, அதற்கு மாற்றாக விரிவான, அனுபவசாத்தியமான வழிகளை அரசாங்கம் கண்டுபிடிக்க வேண்டும். குடியை எதிர்த்துப் போராடும்போது ஒரு விஷயத்தில் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். அதாவது, மனிதர்கள் மற்றவர்களுடன் கலந்து பழகி உறவாடவேண்டும் என்ற தன்மையைப் பறித்துவிடக் கூடிய விதத்தில் எதையும் செய்து விடக்கூடாது. நண்பர்களிடம் அன்பு, மற்றவர்களுடன் கலந்து உறவாடுவது ஆகிய உணர்ச்சிகளுக்குக் குடி வாய்ப்பளித்திருக்கிறது.

## மாற்றுக்கான சில யோசனைகள்

(1) ஒவ்வொரு மில்லிலும் உடனடியாக ஒரு பயிற்சி பெற்ற சமூக ஊழியரின் மேல்பார்வையில், சாத்தியமான அளவு விரிவான முறையில் சமூக நல வேலைகளுக்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென (அரசாங்கம்) விதிக்க வேண்டும். (அ) மலிவான விலையில் புஷ்டியுள்ள உணவுப் பொருள்கள் வழங்கும் விடுதிகள் (ஆ) படிப்பதற்கும், பொழுதுபோக்குவதற்கும் விடுதிகள் (இ) நன்கு அமைக்கப்பட்ட விளையாட்டு மைதானங்கள், விளையாட்டுச் சங்கங்கள் (ஈ) பெண்களுக்குப் போதிய அளவில் தனியாக ஏற்பாடுகள் ஆகியவைகளைச் செய்ய வேண்டும்.

(2) அதிகமான நெருக்கம் உள்ள பிரதேசங்களில், எங்கெங்கே கொஞ்சமாவது இடம் கிடைக்கிறதோ அங்கெல்லாம் பூங்காக்களையும், விளையாட்டு மைதானங்களையும் அதிகமாக நகரசபை ஏற்பாடு செய்ய வேண்டும். இவை இரண்டு வகைகளாக இருக்க வேண்டும். (அ) மில் பகுதிகளுக்குப் பக்கத்திலிருப்பவை. (ஆ) தீய பழக்கங்கள் உள்ள இடங்களைச் சுற்றி இருப்பவை. இவ்விரண்டிலுமே இரவு ஒன்பது மணி வரையில் நல்ல பொழுதுபோக்குக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். அதனுடைய வெற்றி, எம்மாதிரி தலைமை அதற்குக் கிடைக்கிறது என்பதையே பெரிதும் பொறுத்திருக்கும்.

(3) ஜன நெருக்கமுள்ள தீமைப் பிரதேசங்களில் சமூக நலக் குடியிருப்பு ஒன்று இருக்க வேண்டும்.

(4) மதுவிலக்கைப் பற்றிய படங்களைத் தயாரித்து, விசேஷ தினங்களில் தொழிலாளர்களுக்கு இலவசமாக இல்லாவிட்டாலும், விசேஷக் காட்சிகள் நடத்த வேண்டும்.

(5) கிராமங்களில் சினிமாப் படங்கள் காட்ட ஏற்பாடு செய்வது மிகவும் அத்தியாவசியமானதாகும்.

(6) மாலை நேரத்தில் கிராமவாசிகள் நிறைய ரேடியோ நிகழ்ச்சிகளைக் கேட்பதற்கு வசதி செய்ய வேண்டும். அதனால் அவர்களுக்கு விஷய அறிவும் ஏற்படக்கூடும்.

(7) பயிற்சி பெற்ற உடற்பயிற்சி போதகர்கள், சமூக ஊழியர்களின் உதவியுடன், உள்நாட்டு விளையாட்டுப் போட்டிகளுக்கு ஆதரவு அளிக்க வேண்டும். இதற்கென்று தனியாக தளவாடங்கள் அவசியமில்லாத விளையாட்டுகளே கிராமவாசிகளுக்குப் போதுமானவைகளாயிருக்கும். இதனால் பழைய நாட்டுப் பாடல்கள், கிராம நாடகங்கள், தமாஷாக்கள் புத்துயிர் பெறுவது சாத்தியமாயிருக்கக் கூடும். கிராமவாசி வேலையில்லாமல் சும்மா இருக்கும் நேரத்தில் இது நல்ல பொழுது போக்காகவும் இருக்கும்.

இவையெல்லாம் உடனே ஏற்பாடு செய்யப்படக்கூடிய சில யோசனைகளேயாகும். வருமானம் குறைந்து விடுவதால், மாகாணங்களுக்கு ஏற்படக் கூடிய பொருளாதார, நிர்வாகச் சங்கடங்களை நான் உணராமலில்லை. ஆனால், இடையூறுகளை அகற்றுவதற்குத் தீவிரமாக முயற்சிகள் செய்யாமல் எந்த முன்னேற்றமுமே சாத்தியமில்லை. சமூகத்திற்கு எது சிறந்தது என்பது பற்றிப் பொதுஜனங்கள் யோசனைகள் கூறலாம். இந்த யோசனைகளையும், மற்ற யோசனைகளையும் நிறைவேற்றுவதற்கு வேண்டிய பணத்தையும், ஊழியர்களையும் கண்டுபிடிப்பது நிதிமந்திரி, மற்றும் நிர்வாக அதிகாரிகளின் பொறுப்பாகும்.

மதுவிலக்கு நமக்கு அவசியம் வேண்டும். ஆனால், போதிய மாற்றுகளுக்கு ஏற்பாடு செய்யாமல், மதுவிலக்கைக் கொண்டு வந்தால் சமூகத் தீமைகள் அகலுவதற்கு பதிலாக இன்னும் அதிகமாகத்தான் செய்யும். தெருவில் திரியும் மனிதன் உபயோகமான வேலை ஏதாவது செய்வதற்கு வகை பண்ண வேண்டும். மதுவிலக்கினால் மிச்சப்படும் நேரத்தையும், சக்தியையும் பயன்படுத்திக் கொள்ளுவதற்கு ஒன்றும் ஏற்பாடு செய்யாவிட்டால், சூன்ய மனத்தில் சைத்தான் புகுந்துகொண்டு வேலை செய்ய ஆரம்பித்துவிடுவான்.

(மதுவிலக்குக் கொள்கையை வெற்றிகரமாக அமல் நடத்த விரும்பும் ஒவ்வொரு கலால் இலாகா மந்திரியும் இந்த அருமையான கட்டுரையைப் படிக்க வேண்டும். ஒவ்வொரு கள்ளுக்கடையும் ஓர் உணவு விடுதியாக மாற்றப்பட வேண்டும். இடைக் காலத்தில் கிடைக்கும் கலால் வருமானப் பணம் இருக்கிறது. மோ. க. காந்தி.)

—'ஹரிஜன்' –18—9—1937

# 7

# அபினி வியாபாரம்

(ஸி. எப். ஆண்டுரூஸ்)

பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் உண்மையில் என்ன நடக்கிறது என்பதை,அரசாங்கத்தின் புள்ளி விவரங்களிலிருந்தே மிஸ். லா மாட்டே எடுத்துக் காட்டியிருக்கிருர். மலேயா சர்க்கார் 190 லட்சம் டாலர்களுக்கு வரவு செலவுத் திட்டம் தயாரித்திருக்கிருர்கள். இதில் 90 லட்சம் டாலர் (அல்லது அவர்கள் மொத்த வருமானத்தில் சுமார் சரிபாதி), இந்தியாவில் உற்பத்தி செய்யப்பட்டு, பிரிட்டிஷ் சர்க்காரால் ஏற்றுமதி செய்யப்படும் அபினியின் மூலம் கிடைக்கிறது.

பிரிட்டிஷாரின் கீழுள்ள மற்ரொரு இடம் ஹாங்காங். உலகத்திலுள்ள மிகவும் செழிப்பான துறைமுகங்களில் இது ஒன்று. இந்தக் காலனியின் மொத்த வருமானத்தில் மூன்றில் ஒரு பகுதி அபினியிலிருந்து கிடைக்கிறது. இதையும்கூட ஒரு ஐந்து வருட ஒப்பந்தத்தின் கீழ் இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் சர்க்கார்தான் உற்பத்தி செய்து, ஏற்றுமதி செய்கிருர்கள்.

மிஸ். லா மாட்டேயின் புஸ்தகத்தில் மேலும் பல உண்மைகளும் வெளியிடப் பட்டிருக்கின்றன. (இந்த விவரங்களெல்லாம் சர்க்கார் அறிக்கைகளிலிருந்தும், தஸ்தாவேஜுகளிலிருந்தும் சேகரிக்கப்பட்டவை.) இந்தியாவிலிருந்து சீனுவுக்கு அபினி அனுப்புவதற்கு 'வாசற்பக்கத்துக் கதவு' அடைக்கப்பட்டுவிட்டாலும், மீண்டும் சீனுவுக்குள் அபினியைக் கொண்டு போய்க் குவிப்பதற்கு எல்லாப் 'புழக்கடைக் கதவுகளும்' பயன்படுத்திக் கொள்ளப்படுகின்றன என்பது அந்தப் புஸ்தகத்திலிருந்து சந்தேகமில்லாமல் தெரிகிறது. புதிய கள்ளத்தனமான வழிகளில், இன்னும் அதிக லாபத்தில் இவை அனுப்பப்படுகின்றன. இதில் வெறுக்கத்தக்கதும், பரிதாபப்படத்தக்கதுமான விஷயம் என்னவென்ருல், யுத்தம் நடந்துகொண்டிருந்த போதும், அதற்குப் பிறகும் சீனுவில் இப்படி அபினி விஷத்தைப் பரப்புவதற்கு இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் சர்க்கார் உடந்தையாக இருக்கிருர்கள் என்பதே. பீகிங்கிலுள்ள சர்வதேச அபினி ஒழிப்புச் சங்கத்திலிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது. இந்திய சர்க்கார் இவ்வளவு பெரும் அளவில் அபினியை உற்பத்தி செய்வதுதான், சீனுவில் அபினியை ஒழிப்பதற்குப் பெரிய தடையாக இருக்கிறதென்று, விஷயத்தை நன்கறிந்த காரியதரிசி அக்கடிதத்தில் எழுதியிருக்கிருர்.

சில முக்கியமான விஷயங்களைக் கவனிப்போம். ஹாங்காங்கின் ஜனத்தொகை 5 லட்சம்தான். ஆனுல், 15 கோடி பேர்

களின் வைத்திய தேவைகளைத் திருப்தி செய்வதற்குப் போதுமான அவ்வளவு அபினி ஹாங்காங்குக்கு அனுப்பப்பட்டு வந்திருக்கிறது. இதில் பெரும் பகுதி எங்கே போகிறது? சீனவுக்குள் இது கள்ளத்தனமாகக் கொண்டு போகப்படுகிறது. சுமார் 80,000 ஜனத்தொகையுள்ள மகாவோவுக்கு இன்னும் அதிக விகிதாசாரத்தில் அபினி அனுப்பப்பட்டிருக்கிறது. இதுவும் கள்ளக் கடத்தலுக்கே உபயோகிக்கப்படுகிறது. மாதா மாதம் நிறைய அபினி அனுப்புவதாக சமீபத்தில் இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் சர்க்கார், ஹாங்காங்கிலுள்ள பிரிட்டிஷ் சர்க்காருடன் மற்றொரு ஐந்து வருடங்களுக்கு ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிருர்கள். இது காமன்ஸ் சபையிலேயே ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது. பெரும் அளவில் கள்ளக் கடத்தல் நடக்கிறது என்பதை ஹாங்காங் சர்க்கார் மறுக்கவில்லை. ஆயினும், தம்முடைய வைத்திய தேவைகளைவிட மிகவும் அதிகமான அளவில் உள்ள இந்த ஒப்பந்தத்தைச் செய்து கொண்டிருக்கிருர்கள். ஏன்? ஏனெனில், தம்முடைய முக்கிய வருமான ஆதாரங்களில் ஒன்ருக இந்த அபினி ஏகபோகத்தை அவர்கள் நம்பியிருக்கிருர்கள். ஹாங்காங்கிலுள்ள பணக்கார பிரிட்டிஷ் வர்த்தகர்கள் (அவர்கள் நினைத்தால் நாளைக்கே இந்த வியாபாரத்தை நிறுத்தி விடமுடியும்) அந்தத் தீவின் தேவைகளுக்கு ஏற்ற அளவுக்குத் தமக்கு வரி விதித்துக் கொள்ளுவதற்குப் பதிலாகத் தமக்குக் குறைவாக வரி விதித்துக் கொண்டு, பற்ருக் குறையை அபினி வருமானத்தின் மூலம் ஈடு செய்து கொள்ளுகிருர்கள். சிங்கப்பூர் தீவில் நிலைமை இன்னும் படுமோசமானதாகும். இந்த விஷயத்தில் ஷாங்காயிலுள்ள ஐரோப்பியப் பகுதியிலுள்ள நிலைமையும் மானக் கேடானதேயாகும்.

சிங்கப்பூர் விஷயத்தில் தன் அனுபவத்தைப் பற்றி மிஸ். லாமாட்டே கூறுவதை அப்படியே கீழே தருகிறேன்:

அவர் கூறுகிருர்: ''சர்க்காரின் உதவியுடன் சிங்கப்பூரில் அபினி வியாபாரம் தங்கு தடையின்றிச் செய்யப்படுவதாக அறிந்தோம். சிங்கப்பூர் சுமார் 3,00,000 ஜனத்தொகையுள்ள ஒரு பெரிய நகரம். இங்கிருப்பவர்களில் பெரும்பாலோர் சீனர்கள். அங்கே விசாலமான அழகிய தெருக்களும், அருமையான கப்பல் துறைகளும் இருக்கின்றன. இது கீழ்த்திசையின் கோடியிலுள்ள அற்புதமான ஓர் ஐரோப்பிய நகரமாகும். இதன் வருமானத்தில் பெரும் பகுதி அபினி வியாபாரத்திலிருந்து கிடைக்கிறது என்பதை அறிந்தோம்; அதாவது அபினி விற்பனை, அபினி விற்பனைக் கடைகளுக்கு லைசென்ஸ் கட்டணம், அபினியைப் புகைக்கக் கூடிய இடங்களுக்கு லைசென்ஸ் கட்டணம் முதலிய இனங்களிலிருந்து இது கிடைக்கிறது. வாடிக்கைக்காரர்களில் பெரும்பாலோர் சீனர்கள்.

''சர்க்கார் லைசென்ஸ் பெற்ற அபினிக் கடைகளுக்கும், அபினி மடங்களுக்கும் நான் போய் பார்க்க விரும்பினேன். என் நண்பர் ஒருவர் எனக்கு வழி காட்டிகளாக இரண்டு வேலைக்காரர்களை அனுப்பினர். நாங்கள் மூன்று பேர்களும் ரிக்ஷாக்களில் ஏறிக்கொண்டு, இம்மாதிரி மடங்கள் நூற்றுக் கணக்கில்

இருக்கும் சீனர் வாழ் பகுதிக்குச் சென்ரேம். இந்த மடங்களிலெல்லாம் பிரமாதமாகத் தொழில் நடக்கிறது. நாங்கள் போனது பிற்பகலில்தா னென்ருலும் அப்போதே வியாபாரம் ஜரூராக நடந்துகொண்டிருந்தது. யாவ ரும் உள்ளே சென்றவுடன் அபினியை வாங்கிக் கொண்டார்கள். ஒவ்வொரு பொட்டலத்திலும் "ஏகபோக உரிமையுள்ள" அபினி என்று சீட்டு ஒட்டப் பட்டிருந்தது.

"ஒரு அபினி மடத்தில் ஒரு கிழவன் இருந்தான். ஆனல், இந்தப் பழக்கத் திற்கு அடிமைப்பட்டவன் வயதானவன இல்லையா என்பதைக் கண்டுபிடிக்க முடியாது. எல்லோரையும் போலவே அவனும் வெளுத்து, மெலிந்து இருந் தான். நான் பார்க்கிறேன் என்பதைக் கண்டவுடன் அவன் தன்னுடைய ஊதியைக் கீழே வைத்தான். தன்னுடைய அபினியை அதில் கலக்கத் தயாரா யிருந்தவன், அதைக் கீழே வைத்துவிட்டு வேறு பக்கமாகத் திரும்பிக் கொண்டான்.

"அவன் ஏன் அபினியைப் புகைக்கவில்லை?" என்று என்னுடன் வந் திருந்தவரைக் கேட்டேன்.

"நீங்கள் அவனைப் பார்ப்பது அவனுக்கு வெட்கமாக யிருக்கிறது" என்று அவர் பதிலளித்தார்.

"எதற்காக வெட்கப்பட வேண்டும்? அவனுக்கு அபினி விற்பனை செய் வதற்கு பிரிட்டிஷ் சர்க்கார் வெட்கப்படவில்லையே. இவன் ஏன் வெட்கப்பட வேண்டும்?"

"என்னவோ, அவன் வெட்கப்படுகிருன். அவன் எப்படி ஆகிவிட்டான், எப்படி இருக்கிருன் என்பதைப் பாருங்கள். மற்றவர்களைப்போல் அவனுக்கு இன்னும் அவ்வளவாக போதை ஏறவில்லை. தன்னுடைய மானக்கேட்டைப் பற்றி இன்னும் அவனுக்குத் தெரிகிறது. கொஞ்சம் பொறுத்து, அவர்களில் பெரும்பாலோருக்கு அந்த மாதிரி உணர்ச்சி ஏற்படுவதில்லை."

"திரும்பித் தெருவுக்கு வந்தோம். இது சகிக்கமுடியாதபடி ஒரே மாதிரி யானதாகவே இருந்தது. எந்த வீட்டில் பார்த்தாலும் திராணியற்ற பலஹீனர்கள் ஏகபோக உரிமை அபினியைப் புகைத்துக் கொண்டிருந் தார்கள். தம்முடைய இந்த மானக்கேடான செய்கையின் மூலம் வல்லமை மிக்க பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்குத் தம்மாலியன்ற உதவியைச் செய்துகொண் டிருந்தார்கள்!"

"அன்று மாலை நான் தங்கி யிருந்த ஹோட்டலின் விசாலமான தாழ்வாரத் தில் உட்கார்ந்து கொண்டு 'ஸ்டிரெயிட்ஸ் டைம்ஸ்' பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்தேன். லண்டன் செய்தி யொன்று என் கண்ணில் பட்டது. "லிவர்பூலில் சீனர்கள்—ராய்ட்டர் தந்தி - லண்டன், ஜனவரி, 17, 1917 லிவர்பூலில் அபினி மடங்களைப் போலீஸார் சோதனை போட்டபோது நேற்றிரவு 31 சீனர்கள் கைது செய்யப்பட்டார்கள்."

"சிங்கப்பூரிலுள்ள அபினி மடங்களைப் பார்த்து விட்டு அப்போதுதான் நான் வந்திருந்தேன். ஆகையால், இந்தச் செய்தி எனக்குச் சற்று மனக்குழப் பத்தை விளைவித்தது என்றே சொல்ல வேண்டும். சீனர்களுக்கும் இது புதிராயிருந்திருக்க வேண்டும். அபினி புகைப்பது தாராளமாக அனுமதிக்கப் படும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியிலிருந்து பிரிட்டனுக்கே வந்த

தால், அங்கே இம்மாதிரி வழக்கங்கள் அனுமதிக்கப்படவில்லை என்பதைப் பார்க்கும்போது, சீனர்கள் என்ன நினைப்பார்கள்? வெள்ளைத் தோலுள்ளவர்களை மட்டும் ஏன் இவ்வளவு ஜாக்கிரதையாகக் காப்பாற்ற வேண்டும்? அடிமைப்பட்ட வகுப்பினரை ஏன் இவ்வளவு ஆவலுடன் ஊக்கிவிட வேண்டும் என்று அவர்கள் தம்மைத்தாமே கேட்டுக்கொண்டிருப்பார்கள். வெள்ளைச் சாதியினர் உயர்ந்தவர்களாதலால் அவர்களைக் காப்பாற்ற வேண்டும்; அடிமை நாடுகளின் மக்கள் அப்படிக் காப்பாற்றத் தகுந்தவர்களல்ல என்று அவர்களுக்குத் தோன்றக் கூடும்!''

இந்தியாவிலுள்ள நமக்கு மிகுந்த அக்கறையுள்ள மற்றொரு பகுதியை மிஸ். லா மாட்டேயின் புஸ்தகத்திலிருந்து எடுத்துக் கொடுக்கிறேன். மோரீஸ் தீவு ஒரு சிறிய தீவு. ஒப்பந்தச் சீட்டு எழுதிக்கொடுத்து ஏராளமான இந்தியர்கள் அங்கே போயிருக்கிறார்கள். இப்படி இந்தியத் தொழிலாளர்களைச் சேர்க்கும் முறை, எந்த இடத்தில் பின்பற்றப்பட்டாலும், மிகவும் மோசமான பலனை அளித்திருக்கிறது என்பதை நாமெல்லோரும் அறிவோம். மோரீஸில் இந்த முறையின் கீழ் போன இந்தியர்களின் மானக்கேடு ஏற்கனவே ஆரம்பமாகி விட்டது. ஆனால், இப்போது மிஸ். லா மாட்டே அதிகப்படியாகப் பின்கண்ட விவரங்களைக் கொடுக்கிறார்.

“மோரீஸின் ஜனத்தொகை சுமார் 3,77,000. இவர்களில் 2,58,000 பேர் இந்தியர்கள், 3000 பேர் சீனர்கள்......பிரிட்டிஷ் இந்தியா பற்றிய புள்ளி விவரங்கள் என்ற வெளியீட்டின் எட்டாவது பாகத்தில் பின்கண்ட விவரங்கள் காணப்படுகின்றன:

இந்தியாவிலிருந்து மோரீஸுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட அபினி:

| | | |
|---|---|---|
| 1912-13 | ... | 10 பெட்டிகள் |
| 1913-14 | ... | 19 ,, |
| 1914-15 | ... | 23 ,, |
| 1915-16 | ... | 65 ,, |
| 1916-17 | ... | 120 ,, |

மானக்கேடான ஒப்பந்தச் சீட்டு முறைப்படி குறைந்த கூலியில் இந்தியர்களை வெளியே அனுப்புவதுடன், இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் சர்க்கார் வரவர, இந்த அபினி விஷத்தை அதிகமான அளவில் அனுப்பிக்கொண்டேயிருப்பதின் மூலம் அவர்களை மேலும் சீர்குலையச் செய்கிறார்கள்! இந்தியாவிலுள்ள ராணுவத்தைப் பராமரிப்பதற்கு வருமானம் பெறுவதற்காக இப்படியெல்லாம் செய்யப்படுகிறது!

பிரிட்டிஷ் இந்தியாவைப் பற்றிய புள்ளி விவரங்கள் என்ற புஸ்தகத்திலிருந்து மிஸ். லா மாட்டே, இந்தியாவைப்பற்றியே மற்றொரு பகுதியையும் எடுத்துக் கொடுத்திருக்கிறார். அது பின்வருமாறு:

''1916-17 உடன் முடிவடைந்து பத்து வருடங்களில், இந்தியாவில் உபயோகிக்கப்பட்ட அபினியிலிருந்து கிடைத்த வருமானம் 44 சதவிகிதம் அதிக

மாயிருக்கிறது. இந்தியாவில் உபயோகிக்கப்பட்ட போதைப் பொருள்களி லிருந்து (அபினி நீங்கலாக) கிடைத்த வருமானம் பத்து வருடங்களில் 67 சத விகிதம் உயர்ந்திருக்கிறது.''

இதைப்பற்றி மிஸ். லா மாட்டே தன் சொந்த அபிப்பிராயத் தையும் தெரிவித்திருக்கிறார். விருப்பு, வெறுப்பில்லாமல் எழுதப்பட்டுள்ளது அந்தப் புத்தகம். ஆயினும், அவர் ஆத்திரத் துடன் தெரிவித்துள்ள அபிப்ராயத்தைத் தவிர வேறு விதமாக எதுவும் சொல்லியிருக்க முடியாது. அனல் கக்கும் ஆத்திரத் துடன் அவர் பின் வருமாறு கூறுகிறார்:

"கதியற்ற 30,00,00,000 மக்களை அடிமைத்தனத்தில் வைத்துக்கொண்டு, வருமானத்திற்காக அவர்களை போதைப் பொருள்களின் அடிமைகளாகவும் ஆக்கக்கூடிய ஒரு நாடு, யுத்த வெறியில்கூட இழைக்கப்படாத அவ்வளவு ஈடிணையற்ற ஒரு பயங்கரமான கொடுமையை இழைக்கும் நாடாகும்.''

—'எங் இந்தியா' - 18—5—1921

# 8

# அபினி பற்றிய குறிப்பு

(ஸி. எப். ஆண்ட்ரூஸ்)

[டில்லியிலுள்ள ராஜாங்க சபை, மத்ய சட்டசபை மெம் பர்களுக்காக எழுதப்பட்டது.]

உலகத்திலுள்ள பல நாடுகள், அபினி விஷத்தை எதிர்த்து நடத்தப்படும் போராட்டத்தில் மனித வர்க்கத்தை ஆதரித்து நிற்கின்றன. உலகத்தில் வைத்திய தேவைகளுக்காக எவ்வளவு அபினி வேண்டுமோ, அந்த அளவுக்கு மட்டுமே அபினிச் செடிகள் வளர்ப்பதைக் கட்டுப்படுத்திவிட்டு, கள்ளத்தனமான உபயோ கத்திற்கு அபினி கிடைக்காமல் செய்ய வேண்டுமென்பதே இந்த உலக சீர்திருத்த இயக்கத்தின் நோக்கமாகும். இந்தியாவும் இதை ஆதரிக்கத் தயாராயில்லாவிட்டால், அந்த நாடுகளின் நட்பை இழக்கக்கூடும் என்ற அபாயம் இப்போது ஏற்பட் டிருக்கிறது.

ஜெனிவாவில் இதுவே பெரிய பிரச்னையாக இருந்தது. அமெரிக்கா, ஜப்பான், சீனா ஆகிய நாடுகள், இந்த உலக சீர் திருத்த இயக்கத்தை ஆதரித்தன. பல சிறு நாடுகள் இதற்குத் தமது அனுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டன. அபினிச் செடி வளர்ப்பதைக் கட்டுப்படுத்த வேண்டும் என்ற இந்த சர்வ தேசப் பரிகாரத்தை பிரிட்டனும், இந்திய சர்க்காரும் பிடிவாத மாக எதிர்த்தன. அதற்குப் பதிலாக அவர்கள் வேறு யோசனை களைக் கூறினார்கள். அபினி புகைப்பதைக் கொஞ்சம் கொஞ்ச-

மாகக் குறைப்பது, லைசென்ஸ் பெருத வியாபாரிகளிடம் மார்பியா, ஹெராயின் போன்ற பக்குவப்படுத்தப்பட்ட அபினிப் பொருள்கள் கிடைக்காமல் செய்வதற்காக இவைகளின் மீது கண்காணிப்பைக் கடுமைப்படுத்துதல் ஆகியவைகளே அவர்களுடைய யோசனைகளாகும். அபினியை மார்பைன், ஹெராயின் போன்ற பொருள்களாகப் பக்குவப்படுத்தி விற்பனை செய்வதில் அக்கறை உள்ள நாடுகள் அவர்களை ஆதரித்தன.

இந்த போதைப் பொருள்களை உற்பத்தி செய்துவிட்டால், அவை ரகசியமாக விற்பனை செய்யப்படுவதை நிறுத்துவது அசாத்தியம் என்பதே அபினி சீர்திருத்தக்காரர்களின் வாதமாகும். ஆனல், வெண் மலர் உள்ள அபினிச் செடிகள் எவ்வளவு வளர்க்கப்படுகின்றன என்பதைச் சுலபமாகக் கண்டு பிடிக்க முடியும். "அளவுக்கு மீறி அபினிச் செடிகள் வளர்ப்பதை நிறுத்திவிட்டால், இந்த விஷமத்தின் வேரையே கெல்லியதாகும். ஆனல், அந்தச் சிறு அபினி மாத்திரைகளை உலகத்தில் நடமாட விட்டுவிட்டால் யாராவது அவற்றை உபயோகிக்கத்தான் செய்வார்கள். அவை கள்ளத்தனமாகக் கொண்டுபோகப்படும். அவர்களை யாரும் கண்டுபிடிக்க முடியாது" என்று சீர்திருத்தவாதிகள் கூறுகிருர்கள்.

அபினி சீர்திருத்தக்காரர்களின் திட்டத்தை இந்திய சர்க்காரும், பிரிட்டிஷ் சர்க்காரும் நிராகரித்தபோது, ஜனதிபதி கூலிட்ஜ் அமெரிக்கப் பிரதிநிதிகளை வாபஸ் பெற்ருர்; இடைவிடாத மூன்று மாதத் தடங்கல்களுக்கும், தடைகளுக்கும் பிறகு சீனப் பிரதிநிதிகளும் மகாநாட்டிலிருந்து வெளியேறினர்கள். இத்தகைய ஒரு முட்டுக்கட்டை உலக முக்கியத்துவம் வாய்ந்த ஒரு சம்பவமாகும். இறுதியில் அமெரிக்கா சர்வதேச சங்கத்தில் சேருவதை இது தடை செய்யக்கூடும். "அபினிக் குறைப்பு போன்ற முற்றிலும் மனிதாபிமானத் தன்மை வாய்ந்த ஒரு பிரச்னையில் நமக்கு கருத்து ஒற்றுமை யில்லையென்ருல், அரசியல் விஷயங்களில் எப்படிக் கருத்தொற்றுமை காணப் போகிறேம்?" என்று அமெரிக்கா கேட்கிறது.

இரண்டு முக்கியமான விஷயங்களில் ஏற்பட்ட தகராறினல் தான் இந்த முட்டுக்கட்டையும், முறிவும் ஏற்பட்டன. துரதிர்ஷ்டவசமாக இவ்விரண்டிலுமே இந்தியா சம்பந்தப்பட்டிருந்தது. அவை பின்வருமாறு:

(1) இந்தியாவுக்குள் செலவாகும் அபினி.

(2) இந்தியாவின் அபினி ஏற்றுமதி.

இந்த இரண்டு தகராறுகளையும் அந்த வரிசையில் எடுத்துக்கொண்டு, தனித் தனியாக கவனிப்போம். ஒவ்வொன்றுக்குமான வாதங்கள் கீழே தரப்படுகின்றன:

## உள்நாட்டில் செலவாகும் அபினி
## (1)

இந்தியாவின் வைத்தியத் தேவைக்கு எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு டன் மட்டும், உள்நாட்டில் அபினி செலவாவதைக் கட்டுப்படுத்த முடியாதென்று இந்திய சர்க்கார் ஜெனிவாவில் அறிவித்தார்கள். சர்வதேச சங்கத்தின் புள்ளி விவரங்களின்படி பத்தாயிரம் பேர்களுக்கு 6 சேர் என்ற அளவில் உள்நாட்டில் அபினி உபயோகத்தை இந்திய சர்க்கார் கட்டுப்படுத்திக் கொள்ளச் சம்மதித்திருந்தால், அமெரிக்கா உட்பட, அபினி சீர்திருத்த நாடுகள் யாவும் திருப்தியடைந்திருக்கும். ஜாக்கிரதையாகக் கணக்குப் போட்டுப் பார்த்து பத்தாயிரம் ஜனத் தொகைக்கு 6 சேர் என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது; நாகரிகமடைந்த மக்களின் முழு வைத்தியத் தேவைகளுக்கும் இது தாராளமாகப் போதுமானது என்றும் கருதப்படுகிறது. இன்று இந்தியாவில் பத்தாயிரம் ஜனத் தொகைக்கு 12 சேர் என்ற அளவில் அபினி செலவாகிறது; அதாவது, சர்வதேச சங்கத்தின் மதிப்பீட்டைவிட இரண்டு மடங்கு அதிகமாகிறது. இந்தியாவில் அபினிப் பழக்கம் அதிகமாயுள்ள பிரதேசங்களில், அபினி உபயோகம் மிகவும் அதிகமாயிருக்கிறது; ஆனால், பல மாகாணங்களில் சர்வதேச சங்கத்தின் மதிப்பீடு தாண்டப்படுவதுகூட இல்லை. உதாரணமாக, ஐக்கிய மாகாணம் இந்த ஜாப்தாவில் கடைசியில் இருக்கிறது. இங்கே அபினியின் உபயோகம், சர்வதேச சங்க மதிப்பீட்டின் படியே, பத்தாயிரத்திற்கு 6 சேர் வீதம் தான் இருக்கிறது. வங்காளம், பீகார், சென்னை ஆகிய மாகாணங்கள் அடுத்தபடியாக இருக்கின்றன. இங்கே பத்தாயிரம் ஜனத் தொகைக்கு 8 சேர் செலவாகிறது. பஞ்சாப் மத்தியில் இருக்கிறது. இங்கே பத்தாயிரம் ஜனத் தொகைக்கு 11 சேர். பம்பாயில் இதைவிட இரண்டு பங்கு. அதாவது, பத்தாயிரத்திற்கு 22 சேர். பர்மாவில் 28. அஸ்ஸாம்தான் எல்லாவற்றையும்விட மோசம். அங்குள்ள அபினிச் செலவு பயமாயிருக்கிறது. அதாவது, பத்தாயிரத்திற்கு 52 சேர். அஸ்ஸாமியர் பெரும்பாலோராக இருக்கும் சில இடங்களில், பத்தாயிரத்திற்கு 173 சேர், 189 சேர் என்று கூட இருக்கின்றன. ஒரு இடத்தில் 237 சேராகக்கூட இருக்கிறது. இதுதான் இந்தியா, பர்மா இரண்டிலுமே மிக மோசமான இடம். பர்மாவில் சீனர்கள் இருப்பதன் காரணமாக அங்கே சராசரி உபயோகம் அதிகமாயிருக்கிறது. மெர்குயியிலுள்ள தகரச் சுரங்கங்களில் சீனத் தொழிலாளர்கள் வேலை செய்கிறார்கள். இங்கே பத்தாயிரம் ஜனத் தொகைக்கு 147 சேர் செலவாகிறது. டவாயில் 66, கத்தாவில் 55. அபினி புகைப்பவர்களான சீனர்கள் இருப்பதால்தான் பர்மாவில் இவ்வளவு அதிகமாக அபினி செலவாகிறது.

ஆனால், இந்தியாவிலுள்ள நவீன கைத்தொழில் பிரதேசங்களில்தான் அபினியின் உபயோகம் மிகவும் பயங்கரமான

அளவில் இருக்கிறது என்று சொல்லலாம். அங்கே அபினிச் செலவு குறிப்பிடத்தக்கவிதத்தில் உயர்வாயிருக்கிறது. தாய்மார்கள் இளம் குழந்தைகளுக்கு இதை எவ்வளவு கொடுக்கிறுர்களென்பதை பம்பாய், அகமதாபாத், கல்கத்தா ஆகிய நகரங்களின் புள்ளிவிவரங்களிலிருந்து நாம் அறிந்திருக்கிறேம். இந்த விவரங்கள் பின்வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| கல்கத்தா | 10,000 பேருக்கு | 144 | சேர் |
| ரங்கூன் | ,, | 108 | ,, |
| பிரோஸ்பூர் | ,, | 60 | ,, |
| லூதியானு | ,, | 49 | ,, |
| லாகூர் | ,, | 40 | ,, |
| அமிருதசரஸ் | ,, | 28 | ,, |
| கான்பூர் | ,, | 29 | ,, |
| அகமதாபாத் | ,, | 42 | ,, |
| பம்பாய் | ,, | 43 | ,, |
| புரோச் | ,, | 51 | ,, |
| ஷோலாப்பூர் | ,, | 35 | ,, |
| கராச்சி | ,, | 46 | ,, |
| ஹைதராபாத் (ஸிந்து) | ,, | 52 | ,, |
| சென்னை | ,, | 26 | ,, |
| கட்டாக் | ,, | 25 | ,, |
| பலாஸோர் | ,, | 56 | ,, |

கல்கத்தாவிலும், ரங்கூனிலும் அபினியின் உபயோகம் இவ்வளவு அதிகமாக இருப்பதற்கு ஒருக்கால் அங்கே சீனர்கள் இருப்பது காரணமாயிருக்கலாம். மொத்தத்தில் இந்திய கிராமங்களிலுள்ள மக்கள் (அஸ்ஸாம் பர்மா தவிர) அதிக அளவில் அபினி உபயோகிக்கவே இல்லை என்பதை இதிலிருந்து தெரிந்து கொள்ளுவது கஷ்டமல்ல. ஆனுல், மதபயம் குலைந்துபோய்விட்ட நகரமக்கள், இந்த அபினிப் பழக்கத்திற்கு உட்பட ஆரம்பித்து விட்டார்கள். இந்தத் தீய அபினிப் பழக்கம் இன்னும் பெருமளவு அதிகமாகிவிடக்கூடும் என்ற அபாயமும் நிறைய இருக்கிறது. குழந்தைகளுக்கு தினசரி இந்தப் போதை அளிக்கப்படுபதைப்பற்றி ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறேன். இதனுல் தீராத மலச்சிக்கல் ஏற்படுகிறது. வழக்கமாக இந்தப் போதை ஊட்டப்படும் குழந்தைகள் சோகை பிடித்து, ஆயுள் பூராவும் குடல் கோளாறினுல் கஷ்டப்படுகின்றன. தொழிலாளர் வர்க்கத்தின் சந்ததிகள் பலமில்லாத, சோகைகளாகப் பிறக்கக்கூடும் என்ற ஆபத்து இருக்கிறது. இந்தியாவின் எதிர்கால சுபிட்சத்திற்கு இது பெரிய கால் கட்டாயிருக்கும்.

பல்வேறு மாகாணங்கள், பிரதேசங்களில் எவ்வளவு அபினி செலவாகிறது என்ற விவரங்களை இந்தச் சந்தர்ப்பத்தில் கூற விரும்புகிறேன்.

| | | |
|---|---|---|
| ஐக்கிய மாகாணம் | 10,000-க்கு | 6·6 |
| வங்காளம் | ,, | 8·1 |
| பீஹார், ஒரிஸ்ஸா | ,, | 8·3 |
| சென்னை | ,, | 8·5 |
| வடமேற்கு எல்லைப்புற மாகாணம் | ,, | 10·2 |
| பஞ்சாப் | ,, | 12·0 |
| மத்யமாகாணம் | ,, | 16·1 |
| பம்பாய் | ,, | 22·2 |
| பர்மா | ,, | 28·7 |
| அஸ்ஸாம் | ,, | 52·1 |
| பலுசிஸ்தானம் | ,, | 6·0 |
| ஆஜ்மீர் | ,, | 52·7 |
| குடகு | ,, | 2·3 |
| டில்லி | | தெரியவில்லை. |
| சராசரி 10,000 பேருக்கு | | 12·0 |

இந்தப் புள்ளி விவரங்களைக் கவனமாகப் பரிசீலனை செய்தால், அதிக ஜன நெருக்கமுள்ள விவசாய மாகாணங்களில் தான் பொதுவில், அபினி உபயோகம் மிகக் குறைவாய் இருக்கிறது என்பது தெரியும். முதல் நான்கு மாகாணங்களில் அபினி உபயோகத்தின் அளவு சர்வதேச சங்கத்தின் '10,000 பேருக்கு 6' என்ற அளவிலேயேதான் இருக்கிறது. இந்த மாகாணங்களின் மொத்த ஜனத்தொகை 17,00,00,000 ஆகையால், மோசமானவை என்று சொல்லப்படக் கூடிய அஸ்ஸாமிலும், கைத்தொழில் பிரதேசங்களிலும் நாம் முழுமையாகவும், தீவிரமாகவும் வேலைசெய்யவேண்டுமானால், இரண்டு காரியங்களைச் செய்யவேண்டும்.

(1) இந்தியாவிலுள்ள பெரும் ஜனத்தொகையில் பெரும்பான்மையோரிடையேயும் இந்தப் பழக்கம் பரவிவிடுமோ என்ற பயங்கரமான அபாய நிலையை நெருங்கிக்கொண்டிருக்கிறது—சீனாவிற்கு ஏற்கனவே இந்தக் கதி ஏற்பட்டுவிட்டது.

(2) சர்வதேச சங்கம் நிர்ணயித்துள்ள அளவைவிட இப்போது இந்தியாவில் அபினி உபயோகம் இரண்டு மடங்காயிருக்கிறது. இந்தியா பூராவிலுமாக இதை இன்னும் பெரும் அளவு குறைக்கவேண்டும். வைத்தியத் தேவைகளுக்கு எவ்வளவு வேண்டும் என்று சர்வதேச சங்கமே அங்கீகரித்திருக்கிறதோ, அந்த அளவுக்குட்பட்டு அகில இந்திய அபினி உபயோகத்தைக் குறைக்கவேண்டும்.

அகில இந்திய அளவை 12 என்பதற்குப் பதிலாக 8 என்று குறைத்துவிட்டால், ஜெனிவாவிலுள்ள சர்வதேச சங்கம் திருப்தி யடையுமென்று தயக்கமின்றிச் சொல்லலாம். அமெரிக்காவில் இன்று தலா 8 குந்துமணி அளவு எடைதான் அபினி செல வாகிறது. அதாவது, பத்தாயிரத்திற்கு 4 சேர். ஆனால், ஸ்விட்ஜர்லாந்தில் அபாயகரமான போதைப் பொருள்கள் சட்டம் ஒன்றிருந்தும்கூட, அங்கே இப்போது இந்தியாவிலிருப் பதைப் போலவே அபினி உபயோகம் 12 சேர் என்று உயர் வாகவே இருக்கிறது. வைத்தியர்கள் கொடுக்கும் அனுமதிச் சீட்டுடன்தான் அபினி வாங்க முடியும் என்று உள்ள மேல்நாடு களில்கூட, பெரிய வைத்தியசாலைகள் இருக்கின்றன என்பதைக் காட்டுவதற்காகவே இந்தப் புள்ளி விவரங்களைக் கொடுத்திருக் கிறேன்.

இந்தியாவில் செலவாகும் அபினி விஷயத்தில், இப்போது மூன்று பெரிய தீமைகள் இருக்கின்றன. அதாவது:

(1) பர்மாவிலும், கல்கத்தாவிலுமுள்ள சீனர்கள் தீமை.

(2) அஸ்ஸாமியர்கள் இதற்கு அடிமைப்பட்டிருப்பது.

(3) கைத்தொழில் பிரதேசங்களில் இந்தத் தீமை அதிகரித் திருப்பது.

இந்த மூன்றையும் நாம் தீவிரமாகச் சமாளித்தால், அபாயகரமான போதைப் பொருள்கள் சட்டமே இல்லாமல் (இந்தியாவில் அதை அமல் நடத்துவதும் மிகக் கஷ்டமா யிருக்கும்) இப்போதுள்ளதைவிட மிகக் குறைந்த அளவுக்கு அபினி உபயோகத்தைக் குறைத்துவிட முடியும்; ஜப்பான், மற்றும் இதர மேற்கத்தி நாடுகளுக்குச் சமானமாகவும் நாம் இருக்கமுடியும் என்பதையே இந்த விவரங்கள் காட்டுகின்றன. ஆனால், இந்தத் தீவிரமான மாறுதல் பலனளிக்கத் தக்கதா யிருக்கவேண்டுமானால், அகில இந்திய விசாரணைக் கமிட்டி ஒன்றை நியமிக்கவேண்டும். உள்ளூரில் விசாரணை நடத்தினால் மட்டும் திருப்திகரமாயிராது. ஏனெனில், இந்தப் பிரச்னையை முழுமையாகக் கவனிக்கவேண்டும் என்பதை மேற்கண்ட விவரங் களிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

வைத்தியத் தேவைகளுக்கு அதிகமாக அபினி உபயோ கிப்பது, தேச மக்கள் அனைவருடைய ஆரோக்கியம், பலம், தார்மிக உறுதி ஆகியவற்றை அடியோடு அழித்துவிடுகிறது. இதை அறிந்திருப்பதால் ஜப்பானும், அமெரிக்காவும், மற்றும் அநேகமாக எல்லா மேல்நாடுகளுமே அபினியிலிருந்து வருமானம் பெற மறுத்துவிட்டன என்பதைத் தெளிவாக்கவேண்டும். ரஸ்கின் அழகாக எடுத்துக் காட்டியிருப்பதுபோல், இறுதியில் ஒரு நாட்டின் செல்வம் என்பது அங்குள்ள மக்களின் சுபிட்சம் தான். தேகாரோக்கியத்தையும், ஒழுக்க உறுதியையும் இழந்து விட்டால், எந்தப் பணவருவாயும் அதை ஈடு செய்ய முடியாது.

ஆகையால், அபினி வருமானத்தில் குறையும் ஒவ்வொரு ரூபாயும், மக்களின் சுகாதாரத்திலும் திறமையிலும் பல மடங்கு ரூபாய் அதிகமாக மிச்சப்பட்டதற்குச் சமமாகும்.

## (2)

## வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி

அபினி புகைப்பதற்காக, இந்தியாவிலிருந்து தூரக்கிழக்கிலுள்ள நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும் அபினியைப் பற்றி இனி கவனிக்கவேண்டியது அவசியமாகும். அமெரிக்கா முடிவாக ஜெனிவா மகாநாட்டிலிருந்து முறித்துக்கொண்டு வெளியேறியதற்கு தரும வைத்தியத் தேவைகளுக்கு அதிகமாக இந்தியாவில் அபினி செலவாகிறது என்பது காரணமல்ல. வெளிநாடுகளுக்கு, ஏற்றுமதி செய்யப்படுவதை ஆட்சேபித்தே அவர்கள் வெளியேறினார்கள். *1912-13*-இல் ஹேக் மகாநாட்டில் கையெழுத்திடப்பட்ட ஒரு புனிதமான ஒப்பந்தம் மீறப்படுவதற்கு, இந்தியா உடந்தையாயிருந்தது என்று அமெரிக்கா பகிரங்கமாக இந்திய சர்க்கார் மீது குற்றம் சாட்டியது. மிகத் தெளிவானதும், ராஜதந்திர சம்பிரதாயங்களுக்கு முரணானதுமான பாஷையில், பிரிட்டனும், இந்தியாவும் ஒப்பந்தத்தை மீறியதாக சர்வதேச சங்கத்தின் முன்பு குற்றம் சாட்டப்பட்டன. இந்த நிலைமையைச் சமாதானமாக்குவதற்காக லார்ட் ராபர்ட் ஸீஸில் பின்னர் எவ்வளவோ சமாதானம் சொன்னார். சமரசத்திற்கும், அமெரிக்கா தூதுகோஷ்டி கூறிய கடுமையான வார்த்தைகளை வாபஸ் பெறச்செய்வதற்கும் எவ்வளவோ முயற்சிகள் செய்யப்பட்டன; ஆயினும், கடுமையான, பட்டவர்த்தனமான, நேருக்கு நேரான அந்தக் குற்றச்சாட்டு ரத்து செய்யப்படாமலும், திருத்தப்படாமலும் அப்படியேதானிருந்தது.

இந்த முறிவு எந்த இடத்தில் ஏற்பட்டது; பொறுப்புள்ள, நாகரிகமடைந்துள்ள நாடுகள் என்ற முறையில் பிரிட்டன், இந்திய சர்க்கார் மீது என்ன குற்றம் சுமத்தப்பட்டது என்பதை ஜாக்கிரதையாகப் பரிசீலனை செய்வோம்.

*1912-13*-ல் செய்துகொள்ளப்பட்ட ஹேக் ஒப்பந்தத்தின் 7-வது ஷரத்து பின்வருமாறு கூறுகிறது:

"இந்த ஒப்பந்தத்தில் கையெழுத்திடும் நாடுகள் பக்குவம் செய்யப்பட்ட அபினியின் ஏற்றுமதியைத் தடை செய்யும். பக்குவம் செய்யப்பட்ட அபினியின் ஏற்றுமதியை உடனடியாகத் தடை செய்ய இன்னும் தயாராக இல்லாத நாடுகள், கூடிய சீக்கிரத்தில் அப்படிச் செய்ய வேண்டும்."

இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் அபினியில் பெரும் பகுதி தூரக்கிழக்கில் பிரிட்டிஷ் உடைமைகளாக உள்ள நாடுகளுக்கே போகிறது. அங்குள்ள சர்க்கார்கள் உடனே அதைப் புகைக்கும் அபினியாகப் பக்குவப்படுத்தி, சர்க்காரின்

ஏகபோக உரிமையின் கீழ் அபினி மடங்களில் விற்பனை செய்கிறார்கள். தாங்கள் 'பக்குவம்' செய்யப்பட்ட அபினியை அனுப்ப வில்லையென்றும், 'பச்சை' அபினியையே அனுப்புவதாகவும் சொல்லி, இந்திய சர்க்கார்தான் கையெழுத்திட்ட ஒப்பந்தத்திலிருந்து தப்பித்துக்கொள்ளுகிறார்கள். இது வெறும் செப்படி வித்தை என்று அமெரிக்க தூதுகோஷ்டி கூறியது. ஓர் ஒப்பந்தத்தை மீறுவதற்கு இரு தரப்பினரும் உடந்தையாயிருக்கும் முயற்சியே இது; ஏனெனில், இந்தியாவிலிருந்து தூரக்கிழக்குக்கு அனுப்பப்படும் அபினி பூராவும் புகைப்பதற்காகவே உபயோகிக்கப்படுகிறது, என்பது யாவரு மறிந்ததே.

இந்த இந்திய அபினியை இறக்குமதி செய்யும் தூரக்கிழக்கிலுள்ள பிரிட்டிஷ் உடைமை நாடுகள், "கூடிய சீக்கிரத்தில் அதைத் தடை செய்ய வேண்டும்" என்ற வார்த்தைகளுக்குள் ஒளிந்து கொள்ளுகின்றன. இந்தப் பழக்கத்தை நிறுத்துவதற்குத் தங்களுக்கு அவகாசம் வேண்டுமென்று அந்த நாடுகள் கூறுகின்றன. *1912* ஜனவரி *23*-ஆம் தேதியன்று இந்த ஒப்பந்தம் கையெழுத்தான பிறகு, ஏற்கனவே *13* வருடங்கள் கழிந்துவிட்டனவே என்று அமெரிக்க தூதுகோஷ்டி எடுத்துக் காட்டியது. ஒப்பந்தத்திற்குச் சம்மதித்த நாடுகளுக்கு இன்னும் எவ்வளவு அவகாசம் வேண்டும்? உலகம் முடியும் வரையில் அவர்கள் தாமதித்துக்கொண்டே யிருக்கமுடியுமா?

பிறகு, பிரிட்டன், இந்தியா சார்பாக லார்டு ராபர்ட் ஸீஸில் ஒரு பிரேரணை கொண்டு வந்தார். சீனாவிலிருந்து கள்ளத்தனமாக அபினி கடத்தப்படவில்லை என்பதை முதலில் ஒரு சர்வதேச கமிஷனின் மூலம் நிச்சயமாகத் தெரிந்துகொள்ள வேண்டும். அந்தத் தேதிக்குப் பிறகு *15* வருடங்கள் கழிய அனுமதிக்க வேண்டும். அதன் முடிவில் ஒப்பந்தத்தில் கையெழுத்திடும் நாடுகள், அபினி புகைப்பதைத் தடுக்கச் சம்மதிக்க வேண்டும். இதுவே லார்டு ஸீஸிலின் பிரேரணையாகும்.

இதுவும் மற்றொரு முடிவில்லாத தாமதமாகவே ஆகிவிடும் என்று அமெரிக்கா பதிலளித்தது. இத்தகைய காலம் கடத்தும் நடவடிக்கையினால், அபினி புகைப்பது *1950* வாக்கில் நிறுத்தப்படும். அப்போதும்கூட, ஏற்கனவே, ஹேக் ஒப்பந்தம் கையெழுத்தானதிலிருந்து *13*-வருடங்கள் காலதாமதம் ஆனதைப் போலவே, மேற்கொண்டும் இது ஒத்திவைக்கப்படலாம்.

பிறகு, அமெரிக்கா கடைசியாக ஒன்று கூறியது. அன்றைய தேதியிலிருந்து *15* வருடங்கள் வரை அல்லது ஹேக் ஒப்பந்தம் கையெழுத்தான தேதியிலிருந்து *28* வருட காலம் வரை, இதைத் தாமதப்படுத்த அமெரிக்கா சம்மதித்தது. இது போதுமானதல்லவா?

பிரிட்டனும், இந்தியாவும் இதற்கு மறுத்துவிட்டன. 'சீனாவிலிருந்து கள்ளத்தனமாக அபினி கடத்தப்படவில்லை என்பதை

முதலில் ஒரு சர்வதேச கமிஷனின் மூலம் நிச்சயமாகத் தெரிந்து கொண்ட தற்குப் பிறகு 15 வருடங்கள் வரையில்' என்ற தன்னுடைய பிரேரணையை லார்டு ஸீஸில் வற்புறுத்தினர். அந்த கட்டத்திலிருந்து முட்டுக்கட்டை முடிவானதாகி விட்டது.

ஒப்பந்தத்தின் 7-வது ஷரத்தில் கையெழுத்திட்ட பிறகு, கூடிய சீக்கிரத்தில் தூரக்கிழக்குக்கு நாம் ஏற்றுமதி செய்யும் அபினியை சர்வதேச சங்கத்தினல் அனுமதிக்கப்பட்ட அளவுக்கு அதாவது, பத்தாயிரம் ஜனத்தொகைக்கு 6 முதல் 8 சேர் வரை என்ற அளவுக்கு, இந்தியா குறைத்திருக்க வேண்டும். இப்போது மலேயாவில் இந்திய அபினி புகைக்கப்படுவது பத்தாயிரம் ஜனத்தொகைக்கு ஆயிரம் பேருக்கு அதிகமாகவே இருக்கிறது. இந்தோ–சீனு, மகாவோ, மற்றும் இதர தூரக் கிழக்கு நாடுகளிலும் நிலைமை இப்படித்தானிருக்கிறது.

—'எங் இந்தியா' - 23—4—1925

# பொருட் குறிப்பு அகரவரிசை

(எண் - பக்கத்தைக் குறிக்கும்)